உ

ஓம்

கணபதி துணை.

# பார்க்கவபுராணமென்னும்

# விநாயகபுராணம்.

இது

திருக்கைலாயபரம்பரைத்

திருவாவடுதுறைஆதீனத்துக்

கச்சியப்பமுனிவரர் அருளிச்செய்தது.

முத்தமிழ்ரத்நாகரம்,

ம. தி. பானுகவியவர்களால்

எட்டுப்பிரதிகளைக்கொண்டு

பரிசோதித்து,

சென்னைப் புரசை இந்துமதபாலிகா தருமபாடசாலையின்

தருமபரிபாலனர்

நே. முனிசாமிமுதலியா ரவர்கள்ால்

தமது

கணேச அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

1910

நெ. 11, வெங்கடாசலமுதலிதெரு, வேப்பேரி, சென்னை.



முதற்பதிப்பு.

Price Rs. 3-8-0] [விலை ரூபா 3-8-0.

உ

கணபதி துணை.

# நூலாசிரியர் வரலாறு.

இந்நூலாசிரியராகிய கச்சியப்பமுனிவர்; இற்றைக்கு நூற்றெண்பது வருடங்களுக்குமுன் அபிஷேகத்தர்மரபில் திருத்தணிகை க்ஷேத்திரத்தி லவதரித்துத் திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப் பின் வேலப்பதேசிகரிடஞ் சைவசன்னியாசம்பெற்று மேற்படி ஆதீனத்துச் சிவஞான யோகிகளிடங் கல்விபயின்று காஞ்சி, தணிகை, பூவாளூர், ஆனைக்கா, பேரூர் முதலிய தலங்களின் புராணங்களை இயற்றிப் புகழ்பெற்றவர்.

வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, பிள்ளைத்தமிழ் முதலிய அனேகஞ் சிறுகாப்பியங்களையும் இயற்றி யுலகினருக் குபகரித்தவர். இவ்வாசிரியர் சென்னை நகரிலிருந்த காலத்து வடமொழியிலுள்ள விநாயகப்புராணத்தினைத் தென்மொழியிற் பாரகாவியமாக இயற்றி அந்நகரிலுள்ள பிரசன்ன விநாயகர் சன்னிதியி லரங்கேற்றினர்.

இங்ஙனம் அநேகநூல்களை யியற்றியருளிய முனிவர்பெருமான் காஞ்சிபுரத்திலுள்ள திருவாவடுதுறை மடத்தில் வெகுவருஷகாலம் எழுந்தருளியிருந்து அனேக நன்மாணுக்கர்களுக்குக் கல்விபயிற்றிச் சிவத்தியானத்திலெழுந்தருளியிருந்து சாலிவாகனசகம் ௧௭௨௮க்குச் சரியான சாதாரண வருடம் சித்திரைமாதம் ௧௧௨ புனர்பூச நட்சத்திரத்திற் பரிபூரண தசையடைந்தனர்.

கச்சியப்பமுனிவன் கழலிணைவாழ்க.

---

உ

சிவமயம்.

# பதிப்புரை.

உபாசனாகாண்டம் லீலாகாண்டமென விரண்டு பாகமாகவுள்ள இவ் விநாயகபுராணத்தின் முதற்பகுதிமாத்திரம் அச்சிடப்பட்டதேயன்றி இரண்டாம்பகுதியான லீலாகாண்டம் அச்சிடப்படா திருந்தமையானும் வெளிவந்த முதற்பகுதி மிகுந்த அச்சுப்பிழையுட னிருத்தலானும் இரண்டு காண்டங்களையு மொன்றாக எட்டுப்பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து அச்சிடுவித்தேன்; இதனி லெங்கேனும் அச்சுப்பிழைகள் காணப்படி னறிஞர்மன்னிப்பாராக.

இங்ஙனம்,

ம. தி. பானுகவி.

உ

கணபதிதுணை.

# விநாயகபுராண மூலம்.



இந்நூல் நியமத்துடன் பாராயணஞ்செய்பவர்களை ரோகதாரித்திரியங்களினின்றும் விடுவித்து இம்மை மறுமைகளுக்குவேண்டிய சகல நன்மைகளையுங் கொடுக்கத்தக்க ஒரு அருமையான நூல்.

பிள்ளையார் பூசைசெய்யு மொவ்வொருவரும் படிக்கவுங் கேட்கவுந் தக்க சிறந்த இந்தநூல் முற்றிலும் அழகிய ஒரேபுத்தகரூபமாக வெளிவந்திருத்தலா லொவ்வொரு குடும்பத்தவரும் இப்பெரிய நூலுக்கமைத்துள்ள சிறிய விலையைப் பொருட்படுத்தாது ஒவ்வொரு புத்தகம் வாங்கி யவசியம் பூசித்துப் படிக்க வேண்டுமென நினைப்பூட்டுகின்றோம்.

இதுகாறும் படித்துங் கேட்டுமிராத அனேக வரிய பெரிய விஷயங்களை யுட்கொண்டு விளங்கு மிந்நூல் தமிழ்ப்புலவ ரனைவருக்கு மிகவு முபயோகமான வரியதொரு நூலென்பதனை இந்நூலினைப் பன்முறையாய்ந் தறிமையா லுரைக்கப் பின்னிடேம்.

தேனினுமினிய செந்தமிழ்ப்பாக்களா
லானவிந்நூலின் குறைந்தவிலை ரூபா—**2 8 0.**

வி. பி. சார்ஜ்பிரத்யேகம்.

வேண்டுவோர் எமக்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

நே. முனிசாமிமுதலியார்,
மானேஜர்,
கணேசப்ரேஸ், வேப்பேரி,
மதிராஸ்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# விநாயகபுராணம்.

## காப்பு.

திங்களணிசடைப்பெருமான்பூசையாற்றித்திரிமதிலுங்கடந்திடமுன்னின்றான்யாவன்
தங்குகடற்புவிவரைப்பினெடியோனுதிசகலருக்குமூறுதவிர்க்கின்றான்யாவன்
அங்கவன்மெய்ச்சரிதமொழிபெயர்ப்பவேண்டியவனடியேசரணாகவடுத்துளோர்க்கு
மங்கலசின்மயமதுரத்தமிழ்ச்செம்பாடல்வாரிமடைமடையுடைத்துவளருமன்றே.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர்.

அகரமெனவறிவாகியுலகமெங்குமமர்ந்தகரவுகரமகரங்கடம்மாற்
பகருமொருமுதலாகிவேறுமாகிப்பலவேறுதிருமேனிதரித்துக்கொண்டு
புகரில்பொருணான்கினையுமிடர்தீர்ந்தெய்தப்போற்றுநருக்கறக்கருணைபுரிந்தல்லார்க்கு
நிகரின்மறக்கருணைபுரிந்தாண்டுகொள்ளுநிருமலனைக்கணபதியைநினைந்துவாழ்வாம். (௧)

### சித்திபுத்தி.

வேறு.

கருணைமதம்பொழிமுகத்துக்கணேசரவர்தமக்கறிவுந்தொழிலுமான
அருளெனுமுண்மையையெவருமறியவவருமையினவதரித்தஞான்றும்
ஒருமுனியோம்பியதழலினவதரித்தஞான்றுமுடனாகித்தோன்றித்
திருவுளத்தின்வழிநிற்குஞ்சித்திபுத்தியெனுமிவர்தாள்சென்னிசேர்ப்பாம். ()

### பரசிவம்.

பூமாதுதனைமணந்தபுயல்வண்ணப்பெருமாளும்புலவர்போற்று
நாமாதுதனைமணந்தநான்முகனும்போர்மாதுநயக்குமெண்டோட்
கோமானுந்தானேயென்றுணர்த்துதற்கேபிரணவகுஞ்சரமாய்த்தோன்றி
மாமாவின்முகத்தானையுயிர்த்தானைநினைந்திறைஞ்சிவழுத்துவாமே. (௩)

தேரேறிவரும்பரிதிமண்டிலத்துஞ்செழுமதிமண்டிலத்துஞ்சீர்கொண்
டேரேறிவருங்கனன்மண்டிலஞ்சத்திமண்டிலத்துமெண்கணனும்
நீரேறிவருமரியுமுருத்திரனுமகேச்சுரனுநிலவச்செய்து
நாரேறிவருமவர்தமுளத்தமரெண்குணத்தானைநயந்துவாழ்வாம். (௪)

### சிற்சத்தி.

வேறு.

சத்தியாய்விந்துவாய்மனோன்மணியாய்த்தயங்கியமகேசையாயுமையாய்
நித்திலவடந்தாழ்முகிழ்முலைத்திருவாய்நெடும்புகழ்வாணியாய்வேறாய்
எத்திறமிறைவனின்றனனவனுக்கியைதரவத்திறநின்று
மெத்தியவுயிரின்மலவிருள்கெடுத்துவிளங்குபூரணியையேத்தெடுப்பாம். (௫)

## நடேசர்.

வேறு.

மூத்தமகனிடத்தார்வமின்றெடுத்தபிதாமகற்குமுதிருமாற்றுற்
பூத்தபொழிற்சென்னைநகர்ப்புகுந்துபிரசன்னமுகப்புத்தேளன்பர்
ஏத்தெடுப்பப்பிரசன்னமாயிருக்குமாலையத்துளெய்திமன்றுள்
கூத்தியற்றுமிளைப்பாறுஞ்சிதம்பரேசுரர்மலர்த்தாள்குறித்துவாழ்வாம். (சு)

## சிவகாமசுந்தரி.

சீதளசந்திரகலையுந்தினகரன்வெம்மையுங்கனலிற்செறிந்ததேசும்
போதளவுநயனமும்போலிறைவன்குணமானபுனிதைவேறாய்க்
கோதளவுமுயிர்சிவத்தைக்காமுறவேசிவகாமங்கொண்டுநின்ற
காதளவுங்கருந்தடங்கட்சிவகாமசுந்தரியைக்கருத்துள்வைப்பாம். (எ)

## சென்னமல்லீசுரர்.

ஒன்றாகிப்பலவாகியுருவாகியருவாகியுபயமாகி
நன்றாகித்தீதாகிநான்மறைக்குமெட்டாதநலத்ததாகித்
தொன்றாகிப்புதிதாகிச்சுடராகியிருளாகித்துகடீர்ந்தன்பர்
சென்றாடுஞ்சுவைக்கடலாஞ்சென்னமல்லீசுரர்மலர்த்தாள்சேர்ந்துவாழ்வாம்.

## பிரமராம்பிகை.

ஆரணனுமாரணனுமாரணத்துக்கெட்டாதவரனுமென்னும்
காரணர்கண்மூவரையுந்தரித்துயிர்த்தவடையாளங்காட்டுமாபோல்
சீரணவுந்திருவயிற்றின்மூவரைவார்ந்தழகெறிக்குஞ்செல்வத்தாயைப்
பேரணவுஞ்சென்னைநகர்ப்பிரமராம்பிகைமயிலைப்பேசிவாழ்வாம். (கூ)

## பிரசந்நவிநாயகர்.

முருகோடுமதுப்பிலிற்றுநறுங்கடுக்கைமுடிக்கணிந்தமுதல்வற்காமைக்
கருகோடுபறித்தணிந்தகணபதியையொருகோடுகரத்தில்வாங்கி
ஒருகோடுமுகத்தணிந்தபிரசன்னவிநாயகனையூற்றுந்தானம்
அருகோடுமணிமார்பத்தராவணிந்தநிராமயனையகத்துள்வைப்பாம். (க௦)

## குமரவேள்.

மரந்துளைத்தகணையானுஞ்சோவெறிந்ததிறலானுமதிக்குந்தோறும்
சிரந்துளக்கவலைகடலுஞ்சேணிகந்தபெருவரையுந்திறத்திற்குன்றக்
கரந்துளக்குங்குறுமுனிக்குங்கருத்தின்மயல்பூட்டியகைதவஞ்சால்வெற்பின்
உரந்துளைத்தசெயிலைவேல்வலனுயர்த்தவிளையவனையுளத்துள்வைப்பாம். ()

## சேய்ஞலூர்ப்பிள்ளையார்.

மறைநெறியிற்பிறழாதவேதியரான்பால்கறந்துவவ்வுந்தீங்கு
முறைபுரியத்தக்கதெனவடுத்தடித்துப்பாற்கலத்தைமுனிந்ததாதை
பொறையுடன்மண்ணிடைப்புரளவிருதாளுமறவெறிந்தபொல்லாத்தீங்கும்
இறையவன்மெய்ப்பணியாகவிரும்பதத்தையடைந்தவரையிறைஞ்சிவாழ்வாம்.

## திருநந்திதேவர்.

வேறு.

வெள்ளிமால்வரைவிமலனூர்விளம்பியவேதம்
தெள்ளுமாகமபுராணங்கள்செழுங்கலைபிறவும்
உள்ளவாறுதேர்ந்துலகெலாம்வழங்கமுன்னுரைத்த
வள்ளலாகியநந்தியங்குரவனைமதிப்பாம். (கங)

சமயகுரவர்.

பருவமேதுமிலார்புகும்பரமதப்பொருள்கள்
கருதியோம்பவொண்ணுதெனக்கண்ணுதற்பெருமான்
அருளினுற்பலவதிசயச்செந்தமிழ்பாடிப்
பொருளிதாமெனத்தெரித்தநால்வர்களையும்புகழ்வாம். (கச)

மெய்கண்டதேவர்.

சிறியவாடியிற்பெரியமால்வரைப்பொருள்செறிந்தாங்
கறிவுநூல்களின்முடிவெலாமகப்படுத்தவற்றின்
நெறியெலாம்விளக்கியசிவஞானபோதத்தைக்
குறிசெய்தீந்தமிழாலுரைகுரவனைப்பணிவாம். (கரு)

நமச்சிவாயதேசிகர்.

வேறு.

இருவினையறுதிசிற்றற்கேதுவுமிருளறுதி
மருவியசெயலுநீங்கும்வண்ணமுமற்றுந்தேற்றி
அருள்பதித்தெனையுமாட்கொண்டாவடுதுறைக்கண்வாழும்
திருவளர்நமச்சிவாயதேசிகன்மலர்த்தாள்போற்றி. (கசு)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

# அவையடக்கம்.

சிற்பநூல்வழியிற்செய்தவுருவெனச்சிற்பஞ்சாராப்
புற்பொருளுருவுமைங்கைப்புண்ணியன்புணர்ந்துநிற்பின்
அற்புதப்பூசைகொள்ளுமவன்புகழ்நிறைதலாலே
நற்பதம்புணர்தராவென்பாடலுநலத்ததாமே. (க)

ஒருபொருண்முழுதுங்காணுருப்பொருளியல்புகூறக்
கருதுவரல்லர்மேனுட்கண்ணுதற்பெருமான்றானும்
மருவிடையூறுகண்டுவணங்கினுனென்றலந்தப்
பொருவிலிகதையான்கூறப்புகுந்ததுநகையதாமே. (உ)

# சிறப்புப்பாயிரம்.

வீறுபெறுமாவடுதண்டுறைநமச்சிவாயனருண்மெய்ஞ்ஞானத்தின்
கூறுதெரிகச்சியப்பமுனிவரன்றன்கோதிலெழுத்தாதியென்னும்
ஊறுசுவைப்பாறயிர்நெய்தேன்கழைநீராழிகடைந்துலகிற்செய்யுள்
ஏறுசுவையமுதளித்தான்விநாயகமான்மியவிரதமினிப்பமாதோ. (க)

வேறு

சொல்லார்ந்தபுகழ்த்தொண்டைவளநாட்டிற்சிறந்ததுளுவர்குலசிகாமணி யாங்சந்தப்பனருளும், வல்லாண்மைத்தடம்புயத்கோன்குளத்தூர்வள்ளன்மாமேருகாவலனும்வரம்பில்பெரும்புகழோன், வில்லார்ந்தவருட்சிவபுண்ணியக்கொழுந்தாயுலகில்விளங்குசிதம்பரபூபன்விநாயகமான்மியத்தை, எல்லாருமுயத்தமிழாலருளுகெனத்தந்தானிருந்துறைசைக்கச்சியப்பவெல்லையின்மாதவனே. (உ)

ஆகத்திருவிருத்தம் உ௦.

# திருநாட்டுப்படலம்.



அடுத்தவிக்கனைபிரசந்நவிநாயகனருளாற்
தொடுத்தலாலவளுடனுந்தொண்டைநாட்டினையும்
விடுத்திடாவவன்சென்னைமாநகரையுமேன்மை
மடுத்தநாவலர்வியத்தகமுந்துறவகுப்பாம். (க)

வேறு.

அண்டரும்புகழ்துண்டீரனுண்டுதுண்டீரநாடாய்த்
தண்டகன்பின்னராண்டுதண்டகநாடாய்ப்பின்னர்த்
தொண்டைமானுண்டுதொண்டைநாடெனத்துலங்கிற்றென்ப
பண்டயன்படைப்புத்தொட்டுப்பயிலுமித்தொல்லைநாடு. (உ.)

கயிலையிலிழைத்தகுற்றங்கழுவுதல்வேண்டிப்போந்த
மயிலியலுமையாளாறுநகரையும்வழியிற்போக்கி
உயரியநகரிதென்றேயுற்றமாகாஞ்சிமூதூர்
செயிரறத்தன்பாற்கொண்டுசிறந்ததுதொண்டைநாடு. (ங)

நாட்டினுக்கியல்புகூறப்புகுந்தநாவலர்களெல்லாம்
நாட்டினிற்சிறந்ததொண்டைநாட்டினைநோக்கிப்போலும்
வாட்டமிலிருநீர்வாய்ந்தமலையரண்வருநீராதி
கோட்டமில்பொருள்களெல்லாங்குறித்தெடுத்துரைத்தவாறு. (ச)

மழைவளம்வறந்தபோதுமணலகழ்ந்துழவரெல்லாம்
விழைபுனல்கொள்ளுமாறுவேறுவேறுழுகுமேனும்
தழைபுனற்பாலிதேனுத்தருபயத்தொழுகுஞ்சீரால்
பழையதுண்டீரநாட்டைப்பாலிநாடெனவுஞ்சொல்வார். (ரு)

வேறு.

மாலெனப்படுமேகமால்வாரிதியடுத்துச்
சீலமெய்ந்நிறம்வேறுமாய்த்தேவருக்கமுதம்
சாலநல்கினன்சார்ந்துருவேறுமாய்நாமும்
ஞாலநல்குதுமமுதெனநரலைநோக்கினவே. (சு)

திருவுமற்றவுமுந்துறச்செறிந்துயிர்தேம்ப
வுருவவல்விடமுதவியபாற்கடன்மறந்து
மருவிலேமெனவொழித்தொருமாதவற்குணவாய்ப்
பொருதிரைப்பெருங்கங்கைதோய்புணரிசார்ந்தனவே. (எ)

எம்மையூர்தருமிந்திரனினமலைச்சிறகு
தம்மையீர்ந்தநாட்டப்பிவந்தொளித்தமைநாக
விம்மலோங்கலைவெளிசெய்வாமெனவிழைந்தனபோற்
சும்மைமாகடல்குழிபடத்தோயம்வாய்மடுத்த. (அ)

வெளிப்படுத்தினும்வெருவிவந்தொளித்தமால்வரையை
அளிப்பதல்லதுமானவேலிந்திரனடுத்து
விளிப்பதின்மையைநினைந்துவெண்டிரைப்புனன்முழுதும்
களிப்பவுண்டிடாதெழுந்தனகறுத்துமாமேகம். (கூ)

வெளிறுநீரரும்பெரியரைமேவிடினவர்தம்
ஒளிறுநீரெலாமுறுவரென்பதுதிடமுவரி
குளிருநீரும்வண்ணமுங்குரூஉத்தழலும்பேரொலியும்
துளிசெய்மாட்சியும்பெற்றனதோய்ந்தவெண்மேகம். (க0)

குங்குமங்குலாஞ்சிலைநுதலோடுகோமளமார்
அங்கமெங்கணும்பசப்புறச்சூற்பொறையாற்றாத்
தங்குமின்னிடைநுடங்கவாயரற்றொலிதழங்க
மங்குன்மங்கைநீரெனுமகப்பயப்பவான்பரந்தாள். (கக)

கவர்பொருட்படுநூல்களின்கரிசெலாமகற்றி
இவர்பொருட்டிறமிதுவெனவியம்புமாரியர்போல்
உவரகற்றியொண்டீம்புனலுயிரெலாம்பருகத்
துவருவெப்பறச்சொரிந்தனசுரந்துகாரெழிலி. (கஉ)

திரையடங்கலுஞ்சொரிந்தனதேமலர்ப்பண்ணைத்
தரையடங்கலுஞ்சொரிந்தனதண்ணிழற்கான
நிரையடங்கலுஞ்சொரிந்தனநெடும்புனலருவி
வரையடங்கலுஞ்சொரிந்தனவள்ளியோர்போல. (கங)

உரியதாகியபருவமிவ்வாறொழிந்ததற்பின்
கரியவார்கடனீர்நசைகதித்தகாரணத்தாற்
பரியுமாமழைமதிதொறுமும்முறைபருகிச்
சொரியுமாகடன்பூண்டனசுரர்களுங்களிப்ப. (கச)

மாயைகாரியப்பொருள்களையடியர்பால்வழங்கித்
தூயவான்பொருளெளிதுறுஞ்சுகுணரேபோலத்
தீயதாம்புனற்செழுமுகிற்களித்திருங்கடலும்
பாயதீம்புனனதிகளாற்பருகினமாதோ. (கரு)

அருவிவீங்கினமலைகள்கான்யாறுமிக்கார்த்த
பொருவில்கானகம்பூம்பணைபொய்கைகாலாறு
மருவுமேரிகணிறைந்தனமருதவைப்பிடங்கள்
பெருகவூறினகேணிகள்பெருங்கடற்கரைக்கே. (கசு)

மலர்தலைப்புவியுயிர்களும்வானவர்குழுவும்
அலகிலின்புறவுதவிசெய்தருளுமாமழையின்
நலனுரைத்தனநலத்தகுநானிலவரைப்பில்
குலவுமைந்திணைவளமினிக்கூறுதுமுறையால். (கஎ)

குறிஞ்சி. வேறு

வெள்ளிவெற்பிறையைத்தாங்கிவிளங்கியதுமையைத்தாங்கித்
தெள்ளியவிமையவெற்புச்சிறந்ததுமூவர்த்தாங்கி
ஒள்ளியமேருவெற்புமுயர்ந்ததென்றோங்கலெல்லாம்
அள்ளிலைவேலற்றாங்கியரும்பயன்படைத்துநிற்கும். (கஅ)

பன்றியைத்தொடர்ந்தவேடன்பயந்தசேயிவனுமாய
வன்றியைவேட்டையாடிமருப்பொன்றுவாங்கும்வேடன்
என்றறுமுகவன்வைகுமிறும்புசூழ்பசும்பொற்சாரல்
குன்றகமென்றுமெங்குங்குடிகொளும்வேடச்சாதி. (ககூ)

மலைவருமுமையாண்முன்கைவளர்கிளியினமாமென்றே
அலைசிறைக்கிளியுமென்றுமணிவரைக்கிழவனூர்தி
உலைவறுமயிலாமென்றேயுலப்பிலாமயிலுமீண்டி
இலைவளர்சாரற்சோலையினத்தொடும்பயிலாநிற்கும். (உ0)

மாயையில்வல்லசிங்கமதமலைபன்றிவென்ற
தூயவன்சூழல்வைகிற்றோல்வியில்வலியுண்டாமென்
றாயினகருத்திற்றேமெடுத்திருந்தனவேபோன்ற
மேயினமடங்கல்வேழம்பன்றியும்வேங்கைமற்றும். (உக)

வெறிகமழ்நாகச்சூழல்வெறிமதநாகந்துஞ்சும்
முறிவளர்வேங்கைசூழல்முதிர்சினவேங்கைதுஞ்சும்
செறியிலைச்சேவின்சூழற்றிரிதருசேக்கடுஞ்சும்
கறிவளரில்லஞ்சூழலகானவரில்லந்துஞ்சும். (௨௨)

முருகவேள்வழிபெயல்சொல்தேன்முந்துறப்பணியும்வேடர்
திருகுவார்முகத்தோமஞ்செஞ்சொருகணையாற்சிங்கம்
அருவிபாய்மதமால்யானையடல்கெழுகேழல்வேங்கை
வெருவவேவேட்டையாடிமீள்குவர்நாளுநாளும். (௨௩)

சந்தனமகில்கர்பூரங்குங்குமத்தருக்கள்சாடிச்
செந்தினைவித்துவார்கள்செழுங்கனன்மடுக்குந்தோறும்
கொந்துகொண்டெழுந்ததூமங்குன்றகமுழுதும்போர்த்திட்
டந்தரத்தமரர்தூயவாக்கையுங்கமழப்போர்க்கும். (௨௪)

ஆரமுமகிலுமற்றுமாருயிர்மடிந்துங்கந்தம்
சேரவிண்ணவர்க்குநல்குஞ்செய்கையுந்தமக்கவ்வாறு
கூரறமிலாதவாறுங்குருத்தெழுஞ்சமழ்ப்பான்முற்றும்
வேரல்களுரிஞ்சித்தாமேவெந்தழன்மூழ்காநிற்கும். (௨௫)

இரும்பனைவெளிற்றின்புன்காயெனமலிமயிரிஞுக்கைக்
கரும்பெருங்கரடிவேய்கால்கனலினையஞ்சிச்சாரத்
தரும்பசுந்தேறற்பூங்காத்தன்பெயர்குறித்துவானம்
வரும்புயல்வளைத்துச்சீதமலிந்ததனுயிரைக்காக்கும். (௨௬)

தரையகமுழுதும்விற்குஞ்சந்தனப்பொதும்பருள்ளால்
விரைநுகர்விருப்பாற்சாலமேவியவராவினுச்சி
நிரைமணியிருள்கால்சீத்துநீடொளிவிரிக்குங்காட்சி
வரையரமகளிர்வைத்தவிளக்கமேமானுமன்றே. (௨௭)

வெந்திறலவுணர்த்தாக்கிவிண்ணரசளித்தநம்பி
சிந்தையின்மகிழ்ச்சிகூரச்சேர்ந்தவன்செவ்விநோக்கி
மந்தணமானவெல்லாம்வகுத்துரைத்திருத்தியாலென்
றிந்திரனேவப்போந்தாங்கினமுகிறவழாநிற்கும். (௨௮)

பைத்தபாவடியின்கேழும்பரிவறமடங்கனேர்ந்து
மத்தகங்கிழியத்தாக்கிமருப்பின்வேரருந்தச்சிந்து
நித்திலமூங்கின்முத்தநிரந்தனவறுமீன்பாலன்
உத்தமன்கருணைவேண்டியுடுத்திரளடுத்தபோலும். (௨௯)

நெருப்பவிர்ந்தனையகாந்தளிணரைநிரைமலர்ந்துநிற்பச்
சுருப்பினநெருப்பென்றெண்ணித்தூரத்தேயகலுங்காட்சி
பருப்பதச்சிலைக்கைநாதன்பயந்தவன்முடிக்கணேற
இருப்பனவென்றுமூசாதிடையொழிந்தகல்வபோன்ற. (௩௦)

தத்தமக்கியன்றசெய்கைபிறர்க்கெலாந்தகாததேனு
உத்தமமாவதென்றேயுணர்த்துமோர்சான்றதாகச்
சித்திரத்துருவுநேராததிருத்தகுமகளிர்தம்மை
வைத்தனர்குறநாடர்வளர்தினைகாக்குமாறே. (௩௧)

மயில்களுங்கிளியுந்தம்மைவளரியன்மொழியால்வாட்டும்
அயிலொடுபகைத்தவாட்கணணங்கனார்க்கணங்குசெய்யப்
பயிலியதொழிலேபோன்றபன்முறைபுனத்துச்சேறல்
உயிரினையோம்பவேறுமுணவுகளிருப்பவிட்டே. (௩௨)

கற்பினுக்கெதிர்நில்லாதகதிர்த்தவச்சிரமுமூரல்
பொற்பினுக்கெதிர்நில்லாதபொழிகதிர்முத்துஞ்செங்கை
உற்பலவிரலிற்றாங்குமுறுகவண்வைத்துச்சுற்றிப்
பற்பலபுள்ளுமோட்டும்பாவையர்பண்ணையெங்கும். (௩௩)

மணிபலவிமைக்குங்குன்றவாணர்கள்விளைத்தவேனல்
தணிவில்பல்வளனுங்கொய்யத்தகவறுகாலத்தோடும்
அணிபலவணிந்துமன்றலாற்றுறுகாலங்காட்டிக்
கணியெனநின்றவேங்கைகற்பகநிகரப்பூக்கும். (௩௪)

மெல்லெனத்தவழுந்தெண்ணீர்வீங்கிவாரருவிபாய்ந்து
கல்லையுங்குழிப்பக்கல்லுட்கதுவியதேரைபாங்கர்
ஒல்லைபாய்ந்துழலாநிற்குமுற்றகேவலத்தினீங்கி
வல்லவனருளாலாவிசகலத்தின்வழங்குமாபோல். (௩௫)

சண்பகநறும்பூந்தாதுதைந்தத்தண்டலைப்பாலாவின்
மண்பகமுதிர்ந்தவேர்க்கோட்பழத்துறுவாசம்வீச
நண்பகந்துணியினீடுநாயகிசெவ்விநோக்கும்
பண்பகமுடையான்போலப்பமரங்களணுகாநீங்கா. (௩௬)

இருப்பதுதோலினுண்பதிருங்கனிகந்தமூலம்
விருப்பொடுவிளைத்தவேனன்மிகுந்தவைவனமேதோரை
பருப்பதம்வாழ்வதென்றும்பருகுவதருவித்தூநீர்
பொருப்பரைப்புகழாதியாரும்புல்லியரென்பதென்னே. (௩௭)

பெருங்களத்திரத்தைக்காணான்பேதுறுமிராமன்போல
வறுங்களத்தெய்திமாழ்கிமாதரையில்லின்பாங்கர்
உறுங்களத்தியாமத்தெய்துமுத்தமர்நுகருமின்பம்
நறுங்களம்புயற்குமாற்கும்வலாரிக்குநணணுறாதே. (௩௮)

கைக்கிளைபொருந்தாக்காமங்காதலைந்திணையில்மூன்றுள்
தொக்கவைந்திணையுமேலாச்சொல்லுவரிவற்றினுள்ளும்
மிக்கதாம்புணர்ச்சியின்பம்வியத்தகவெவருமெய்தித்
தக்கவாறொழுகும்வெற்பின்றகுதியார்முழுதுஞ்சொல்வார். (௩௯)

அலர்மணித்தவிசினானையடித்தருஞ்சிறையிலிட்டு
மலர்தலையுலகம்பூத்தவரதனுக்கிடமாயென்றும்
நிலவியகுறிஞ்சிசொற்றநின்மலக்குமரிநாளும்
நலமுறவிருக்கும்பாலைவளமினிநவிற்றுவாமால். (௪௰)

பாலை. வேறு.

கொற்றங்குறித்தமறக்கோபங்கொதிக்குமுகத்தாள்பல்படையும்
பற்றுங்கரத்தாளெனையாண்டபண்ணம்பணத்திபிறநிலங்கள்
சற்றுநிலையாவலிகுறித்துத்தழல்கொப்புளிக்கும்பரன்முரம்பு
முற்றுஞ்சுரமேயிடமாகமுடித்தாள்வினையையிடித்தாளே. (௪௧)

தண்ணம்பணத்தினராவளைத்ததவளமதிக்கீற்றொளிர்சடிலப்
பண்ணம்பணத்திதிருமுன்னர்ப்பயிலுமாற்றறயக்கெய்தும்
வண்ணம்பணைத்ததிறத்தானேவருந்துஞ்சுரத்துக்காளையர்கள்
கண்ணம்பணைத்தமாதரொடுங்கலந்துவாழுங்கடன்பூண்டார். (௪௨)

தாராயணியாயெதிர்பொருநர்தசைகளெமக்குமுணவாக்க
வாராயணியாய்மலர்த்தும்பைவார்ந்துதிருகுமருப்பிரலைத்
தேராயணியாயெனச்செந்நாய்சேணங்கழுகென்றிவைபலவும்
நாராயணியையடுத்தனபோனண்ணிவாழுஞ்சுரத்திடையே. (௪௩)

பொருள்கள்விளைப்பாரீங்கில்லைப்பொருந்திவாழுநிலத்தெயினர்
மருவுநெறியினடப்பாரைவருத்திப்பறித்தேயுயிர்வாழும்
திருவையுடையாரெனமதித்துத்தினமுஞ்சிறுகல்லிரைதேரும்
கருவிமுகில்கள்வழங்காதகனல்சேர்சுரத்துப்புறவினமே. (சச)

நெறியினியங்கிவருவாரைநெடுந்தூரத்தேயெதிர்நோக்கி
மறியுமிடும்பைத்திந்நிலத்தின்வருதல்வேண்டாமெனவியம்பி
உறுதிகாட்டிநிற்பனபோலுயர்வானோங்குஞ்சினைகடொறும்
முறுகவுலர்நெற்றினிதொலிக்குமுருகுவிரிமென்மலர்வாகை. (சரு)

அருப்புமுலைமாதரினெயினரமர்தற்கீந்தின்வேய்ந்தமைத்த
கருப்பைசிறிதுமூடாடாக்காமர்குரம்பைக்குறும்புதொறும்
சுருப்பினினமுந்தேனினமுஞ்சுழன்றுதுதைந்துதாதருந்தும்
இருப்பைமலரினறுவாசமினிதுகமழுமியல்பினதே. (சசு)

இரும்பொனுருகுஞ்சுரத்திடைநின்றென்றூழ்வெயிலிற்புரிதவத்தின்
வரும்புண்ணியத்தாலெயிற்றியர்தமணிநித்திலந்தாழ்குவிமுலைபோல்
அரும்புமவர்தமிளமுலைமேலலர்ந்ததிதலைநிறமேபோல்
விரும்புமலரிற்றாநிறமும்விரவிவிளங்குமுயர்கோங்கு. (சஎ)

ஆற்றினியங்கிப்பெருந்தாகமடுத்துளார்கண்முகந்துண்ணச்
சேற்றுமணமேமிகவீசுஞ்சின்னீர்முழுதஞ்செழும்பைந்தேன்
ஊற்றுமலர்கள்சொரிந்துமணமூட்டித்தருமமுறச்செய்யும்
தோற்றுமலராற்காய்கனிகடோன்றக்குறித்தபாடலமே. (சஅ)

ஒருபான்மரவமரம்பூப்பவுயர்செவ்வணிகாட்டுவவில்வம்
ஒருபாற்பாவைகுரவுயிர்ப்பவொளிர்வெள்ளணிகாட்டுவமுருங்கை
ஒருபால்விரவிநறுங்கோங்கமுறுபொன்வழங்கமதுமாந்தி
ஒருபால்வண்டுபண்பாடவொருபால்வேம்புமணக்குமே. (சகூ)

பிரிந்துகணவனுடனேகும்பெரியமழைக்கண்மடவார்க்குப்
பரிந்துபசிநோய்தணிப்பதற்குப்பாலைநறியகனிவழங்கும்
விரிந்ததாகந்தணிப்பதற்குவியன்மென்சினையினுமலகம்
தெரிந்தகனிகண்மிகவழங்குஞ்சேர்ந்தசுரமுமிசைபிறவே. (ருo)

செவிலித்தாயுநற்றாயுந்தீரத்துறந்தபெருந்துயரும்
சுவலிற்றாழுமணிக்குதம்பைத்தோகைமடவாரிசைமொழியாற்
கவலைத்துறையிற்படிவித்தாக்கலக்குந்துயருமாற்றாமல்
அவலித்தரற்றவிடமிதுவென்றடுத்தபோன்றகூக்குயிலே. (ருக)

வரையும்வனமும்வயனிலமும்வளைகண்முரலுங்கடலுமென
உரைசெய்நிலநான்கினுங்காலத்துதிக்கும்பாலைவளமுழுதும்
வரைசெய்துரைப்பாரெவர்தெரிந்தவாறுசிறிதுவகுத்துரைத்தாம்
புரையில்வனப்பின்வளர்முல்லைப்பொருளிற்றெரிந்துசிலபுகல்வாம். (ருஉ)

முல்லை. வேறு.

சுரந்தவார்நறும்பானிறைசுவைமுலைச்சுரபி
நிரந்துநாடொறும்வாழ்தருநெடியபடுகானத்
தரந்தைதீர்தரவாழ்வதேயறமெனத்துணிந்து
பரந்தபாற்கடற்பள்ளியான்றெய்வமாய்ப்படர்ந்தான். (ருங)

கமுகைவென்றொளிர்கந்தரக்கருங்கயனெடுங்கண்
குமுதம்வென்றசெவ்வாயினரோடுகோப்புரக்கும்
அமுதர்வானவரமுதராம்படியமுதளித்தவ்
வமுதன்வாழிடம்பொருந்துவதாமெனவமர்ந்தார். (ருச)

புடைவிராவியவிடையொடுபழகியபொலிவால்
விடையுமாயினன்விரைநறுந்துளவமாலிகையான்
இடையரோடுறப்பழகலாலிடையனுமாகித்
தடையிலாவகைகாத்தனன்றக்கவானிரைகள். (ருரு)

அண்டவாணருமண்டர்களரையனுமவரைக்
கண்டநான்முகக்கடவுளுங்கைதொழுதிறைஞ்சுங்
கொண்டன்மேனியான்குடிகொளுமிருக்கையில்வாழ்வோர்
அண்டரேயெனத்தெரிப்பதாலாயர்தமொருபேர். (ருசு)

செய்யதீயிடுமான்றசைதின்னுந்தேவருக்கும்
பொய்யிலான்வயிற்றூறும்புத்தமுதம்பொங்கெரிவைத்
துய்யவேநுகராயர்க்குமண்டரென்றுரைப்பர்
ஐயவான்கொலையமருக்காயருக்களித்தல். (ருஎ)

மருவிநின்றொளிர்மணிக்கெதிர்மணியெனமருமத்
திருவுமன்பனோடுடனிருங்கானகத்திருக்கும்
திருவினாயகிமானொடும்பழகியசிறப்பாற்
பொருவிலாதபொன்மானுமாய்ப்பூத்தனளொருபெண். (ருஅ)

குரங்குளைப்பரியாகுநாட்கொள்ளுமைங்கதியுள்
வரங்கொளுஞ்சசகதியினில்வல்லுதற்பொருட்டே
இரங்குதெண்கடற்பாயலானினமுயலுகளும்
மரங்கடுன்றியவனத்திடைவதிதருஞ்செயலே. (ருகூ)

வற்றமங்கையர்காய்த்தொறும்பால்சுவைமலிந்து
பெற்றிவேறுசெய்காலையும்பெருஞ்சுவைத்தாய்மத்
துற்றுழக்கநெய்திரண்டெரியுறுதொறுந்தெளியும்
முற்றிடும்பையாற்குணங்கெடாமுதுக்குறைவினர்போல். (சு0)

கங்கைநாயகியூடவுங்கதிர்பொழியிமைய
மங்கைநாயகியூடவும்வள்ளல்பானுமும்
தங்கிவாழ்வதோதகவெனத்தணந்தநாயகியாம்
செங்கண்மாலுயிர்தாங்கவேதிகழ்ந்ததாங்கிதழி. (சுக)

பிரணவப்பொருளயனெனவரியெனப்பெரிது
முரணையுற்றவர்முகங்கவிழ்தரமதின்மூன்றும்
திரணமொப்புறச்செற்றவர்தெரியலாங்கடுக்கை
தரணிநின்றுபல்பிரணவவுருச்சமைப்பனவே. (சுஉ)

உண்மைநாயகன்புணர்ந்தின்பமுதவிடாப்பதத்துப்
பெண்மையோடுறிற்பிழைவருமென்பதேபேணி
வண்மையானெனவனத்தமர்வளைக்கையாள்கற்புத்
திண்மைநாடியேசெறிந்தனகற்பெலாமாங்கே. (சுங)

நிரந்தமாதவிப்பந்தர்மென்னீழலிற்சவரி
சுரந்தநீண்முலைசுவைத்துணுங்கன்றின்வாய்க்கடையில்
பரந்துவார்ந்திழிபாலினைப்பருகிவான்கோழி
அரந்தைதீர்த்ததென்றதனெதிர்சிறைவிரித்தாடும். (சுச)

புழுகின்வாசமும்பொருவில்கத்தூரியின்மணமும்
ஒழுகுபூமதுவாசமுமுடன்விராய்ப்புதர்கள்
எழுதுபூண்முலைமாதர்மெய்யெனக்கமழ்தலினான்
முழுதுமாடவர்மையலின்மூழ்குவர்தேரார். (சுரு)

நீரினின்றலால்விளைதராநெல்லினைவிடுத்துக்
காரினன்றுறவிளைதருங்கம்புடனிறுங்கு
சீரினின்றிடுஞ்செழும்பயறாதிகளெல்லாம்
ஏரினன்றுறவிளைத்திடமிலாவகைநிறைப்பார். (௬௬)

பறையொலித்திடப்பலர்குழீஇப்பார்த்திடவொருநாள்
நிறைசினத்தெதிர்விடையினைத்தழுவியநீரார்
பிறைமறைத்தவாணுதலினார்பெருமுலைதினமும்
நறைமலர்த்தொடர்மார்புறத்தழுவிநண்ணுவரால். (௬௭)

கொம்பையென்றமெல்லிடையவர்குழையணிசெவியில்
உம்பருக்கிறையூர்தியினொலியுறுகாலும்
நம்புமன்பனார்தேரொலிநண்ணியகாலும்
அம்பையென்றகண்ணாறுதனவருவிநீரொழுக்கம். (௬௮)

குருந்துகூவிளங்கொன்றைபைந்துழாய்குளவிகளும்
திருந்துமெல்லிலையிற்சிவபிரான்பூசைசெய்முனிவர்
வருந்துநீர்மைகண்டிரங்கியானினஞ்சொரிமலிபால்
பொருந்துதண்பணைப்பாலிபோற்றவழ்ந்துபோய்ப்புகுமால். (௬௯)

மழைவளந்தருகற்பினர்மாலையாங்கற்பின்
குழைமலர்க்கொடிமுகையவிழ்கொல்லைசேர்முல்லைத்
தழைபெரும்பொருண்முழுவதுஞ்சாற்றுவாரெவரே
விழைவயற்பெருவளத்தினுட்சிலவினிவிரிப்பாம். (௭௦)

மருதம். வேறு.

திப்பியபோகமேதிளைக்குமிந்திரன்
ஒப்பறுபோகமேயுகக்குநீர்ப்பணை
வைப்பினுக்கமரனாய்வதிதன்மேதகு
துப்பெனவைகலுஞ்சூழ்ந்துகாக்குமே. (௭௧)

அரைக்கணமாயினுமறலினீங்குறா
மரைக்கணம்பயிரெலாம்வளர்ப்பவெண்ணியே
திரைக்கடன்முகந்தெழுஞ்செல்லுமூர்ந்தனன்
விரைக்குமும்மதம்பொழிவேழத்தண்ணலே. (௭௨)

முந்துதங்குலத்திடைவந்தமொய்ம்புடை
இந்திரக்கடவுளுக்கினியவைப்பிடைத்
தந்தொழில்புரிவதேதக்கதாமென
வெந்திறற்களமர்கள்வினைஞராயினார். (௭௩)

திருமகள்கலைமகள்சிறந்துவாழ்வது
பெருகுநம்பசிகெடப்பேணுநீரது
குருமலர்த்தாமரைகுழீஇயவைப்பெலாம்
மருவுவதியல்பெனவாழுமன்னமே. (௭௪)

அம்புயத்தவிசிடையரசவோதிமம்
பம்புவதாமெனிற்பாற்றுநீரதோ
வம்பவிழ்வயனிலமெனவண்டானமும்
கம்புளுமெனவுங்கலந்துவாழுமே. (௭௫)

கொலையுழுதொழிலினாற்கூடுமாயினும்
தலையளிகாலனுஞ்செய்யுந்தன்மையால்
உலைவறுமவனுடையூர்தியின்குலம்
நிலைபெறுமெருமைகணிரந்தரித்தன. (௭௬)

செழுமலர்த்தருவினுட்சிறந்தகற்பகப்
பொழில்வளர்நகரிறைபோற்றும்பண்ணையில்
கழிசிறப்புறுமெனக்கலந்துவாழுமே
வழிமதுக்காஞ்சியுமருதும்வஞ்சியும். (எஎ)

அரையருக்கரையனுமமரன்காப்பது
தரைபதிக்கரையனுநகரஞ்சார்வது
விரைமலர்க்கரையனுநாமுமேவுதல்
புரையெனத்தாமரைப்பலவும்பூக்குமே. (எஅ)

பங்கயவரசினைப்பாங்கிற்சூழ்ந்தெனக்
கொங்குயிர்குமுதமுங்குவளைக்கூட்டமுந்
தங்கியவனிச்சமுந்தழைத்தவள்ளையும்
மங்கலவனப்புறமலருமெங்கணும். (எகூ)

வேறு.

பெரும்பொருளுடையபெரியவர்தினமும்பேரறம்வளர்த்திடுதிறனும்
இரும்பயனுறுவார்பெரும்பொருளெய்தாராயினுமேன்றமாத்திரமே
அரும்பொருளளிக்கும்வண்ணமுங்காட்டுமெகன்வயல்வளர்க்குமேரிகளும்
விரும்பினர்குடைந்துமுகந்துணநிற்கும்வெறிகமழ்பொய்கையாதிகளும். ()

அறிதருமறைகளாகமபுராணமனைத்துமுன்னருளியவிறைவன்
நெறியுளியுலகின்முத்தொழிலுனேநிகழ்த்திடும்வண்ணமுமடுத்த
வெறிகமழ்மலரோனுதியர்வழியால்விளைத்திடும்வண்ணமுங்காட்டும்
செறிபொருடாமேவளர்த்துமேரிகளாற்றிகழ்தரவளர்த்தும்வார்நதிகள். (அக)

வேறு.

துன்னியஞானமாடித்தொலைவிலாவேதமோதி
மன்னியதானமாக்கள்வந்துகைநீட்டவோடி
முன்னுறச்செந்தீயோம்பிமுதல்வரையடியிற்சூழ்ந்து
பன்னருமறையோர்போலப்பதிதொறும்படரும்வெள்ளம். (அஉ)

மணிமுடியணிந்துதண்டமருவிமால்யானையுந்தி
யணிபடுமாரந்தாங்கியருங்களிகுமரியெய்தப்
பிணியவிழ்வெட்சியாதிபேணிமண்முழுதுங்காத்துப்
பணிதருமொழுக்கிற்சென்றுபார்த்திபர்புரையும்வெள்ளம். (அங)

பல்வகைமணியும்பொன்னும்பாழிமால்யானைக்கோடும்
நில்வகைநியமத்தீட்டிநிறைதருவகையேற்போர்க்குச்
சொல்வகைசுருங்கும்வண்ணந்துகளறவிசைத்துநல்கி
நல்வகைவணிகர்போன்றுநடப்பதுநதியின்வெள்ளம். (அச)

புரவலனேவலாற்றுற்போர்க்களம்பலவுங்குத்தி
இரவலரோடுமேனைப்பகலலரின்பமெய்த
விரவளியாங்குக்காட்டிவிசைத்தகுமிசைமிக்கீட்டிச்
சுரர்மகிழன்னமல்கச்சூத்திரர்நிகரும்வெள்ளம். (அரு)

பலவுயிராக்கலானும்பலவுயிர்காத்தலானும்
பலவுயிர்போக்கலானும்பலவுயிர்மறைத்தலானும்
பலவுயிர்நுகர்ச்சிமுற்றப்பலவுமுய்த்தருளலானும்
அலரவனாதியானவைவரும்புரையும்வெள்ளம். (அசு)

ஆற்றல்சான்மச்சங்கூர்மமடக்கிவன்கேழல்வென்று
தோற்றஞ்சான்மடங்கல்சாய்த்துத்தன்னும்வாமனரைமோதிப்
போற்றலாற்சாத்தனங்கைப்புண்ணியன்முருகன்வீரன்
மாற்றருமதுகைக்காரியையவருமானும்வெள்ளம். (அஎ)

அன்னமேகருடன்மஞ்ஞையரிகரிவிடையும்பாங்கர்
மன்னுபோதியின்வாழ்பேயுங்காட்டுபுவள்ளைக்காது
பொன்னுருமுத்தமூரற்பூங்கைகோங்கரும்புக்கொங்கை
துன்னிவார்நதிகண்மாதரெழுவருந்தொக்கதொக்கும். (அஅ)

விண்ணவருளமுங்காதல்வேசையருளமுங்காமம்
நண்ணினருளமுமுக்கணாயகருளமுமேபோல்
திண்ணியதடையொன்றின்றிச்செழுங்கரையுடைத்துவெள்ளம்
தண்ணடைபலவுமஞ்சத்தலைத்தலைபரந்ததன்றே. (அகூ)

முனிவரர்சாபம்போன்றுமுடிவில்செல்வத்தர்போன்றும்
கனிமொழிமாதர்தம்முட்காரிகைமிக்கார்போன்றும்
பணிவருமலர்க்கணன்பர்பயில்பெரும்பத்திபோன்றும்
நணிமகிழ்களமரெல்லாநண்ணினருடைப்புத்தோறும். (கூ0)

உடைகரையடைக்குமள்ளருரப்பியபறையினோதை
அடைகரைகுத்திச்செல்லுமழிபுனலார்க்குமோதை
இடையிடைப்புதுநீராடவெய்துநர்களிக்குமோதை
கடையெழுகடலேயென்னக்கடவுளரயிர்ப்பநீடும். (கூக)

பூம்பொழிற்பண்ணையாடிப்பொய்கையினாடிவாசத்
தேம்பொழிமலர்கள்கொய்துதிரிதருநீத்தக்கன்னி
கூம்பொழிகிழமையாளர்கூடினர்வரைந்துநல்க
ஓம்பெழிற்புணரியன்பனுவக்குமாறெழுகாநிற்கும். (கூஉ)

எம்பிரானிடத்தினீங்கியிமையவெற்படுத்துமீண்டு
தம்பிரானிடமேசார்ந்ததையல்போற்கடலினீங்கி
உம்பர்சூழ்வரையினெய்தியுறுகடன்மீண்டுசாரும்
பம்பியவுயிர்களோம்பிப்படர்தருநதியிற்றூநீர். (கூங)

வண்டினைவிளைப்பதேனும்வரம்பிலாப்புனத்தினீங்கிக்
கண்டனபுல்லேயன்றிக்காலுறப்பணியாவன்மை
கொண்டகொல்லையுங்கைவிட்டுக்குலாவியவரம்பிற்செம்மை
விண்டிடாவயல்களோம்பவெள்ளங்கால்கொண்டவாறே. (கூச)

தத்துவமாயைநல்கத்தத்துவமொன்றினொன்று
கொத்துறத்தோற்றுமாபோற்குலநதியினிதுநல்க
ஒத்தெழுந்திரைநீர்க்கால்களொன்றினொன்றனந்தமாகி
வித்தகமாகப்பண்ணைவிளைத்திடுங்கடன்மைபூண்ட. (கூரு)

வலன்மிகுமொருவன்மாதர்பலர்தமைமணக்குமாபோல்
பலவயற்கொருகாலாகப்பாய்புனல்வழங்காநிற்கும்
அலர்புகழ்க்கண்ணனொப்பவாய்க்குடிதொறுநின்றாங்குச்
சிலவயன்மடைகளொப்பத்திறந்துநீர்வழங்காநிற்கும். (கூசா)

சுந்தரமதுரைமூதூர்ச்சோமசுந்தரனாரேவச்
சிந்துவாய்மடுக்குந்தோறுந்தீம்புனல்வழங்கும்வையை
உந்தியுமெச்சப்பண்ணையுறுவிடர்மடுக்குந்தோறும்
தந்திரும்புனலினார்வந்தணிப்பனகால்களெல்லாம். (கூஎ)

வேறு.

கண்ணனுக்கொருகாதலிமார்பகம்
புண்ணுறுத்தலப்புண்ணியன்முன்வரும்
அண்ணல்கைப்படையல்லதில்லாமையை
எண்ணிமள்ளரலப்படையீட்டினார். (கூஅ)

நடுவனூர்தியினல்லினம்பூட்டுபு
நடுநுகத்தினலப்படைநண்ணுறீஇ
நடுநிறுத்தியநல்லவராயினும்
நடுவவர்க்கிலைநன்றழுங்காலையே. (௯௯)

மேழிவைத்தகைபோனடுமேவுறா
வாழிமற்றைவலக்கையொருபுடை
தாழினுஞ்சமன்செய்திருபூணியும்
ஊழினுந்தமுழவருளம்பொர. (௧௦௦)

வடக்குந்தெற்குநடத்திவளாவியுங்
குடக்குமற்றைக்குணக்குநடத்தியும்
இடக்குமள்ளரெழுப்பியபாட்டினால்
நடக்கும்பூணிகணன்றுகளிக்குமே. (௧௦௧)

நெல்லின்வித்திலைநித்தலுங்குற்றுணும்
நல்லசெல்வத்தினண்ணியமள்ளர்கள்
புல்லுறாமலுழுதபின்பூணியைச்
செல்லவுய்த்தனர்தீம்புனலாட்டியே. (௧௦௨)

உழுதசேற்றினையாடியினொத்திடப்
பழுதின்மள்ளர்பயிற்றிவலாரியைத்
தொழுதுவெண்முளைதூவித்தெளிந்தபின்
முழுதுநீரைக்கவிழ்ப்பர்முறைமையால். (௧௦௩)

குருவிவெண்முளைகூட்டுணப்போந்தவை
வெருவியோடவெருட்டுநர்வேறிலைத்
திருவின்மள்ளர்சிறார்பந்தடித்திடும்
பொருவிலோதையப்புள்ளினமோட்டுமே. (௧௦௪)

முளைகள்சேற்றிற்பதிந்துமுதிர்ந்திடும்
தளைநெடும்பணைசார்ந்துநற்றாயென
அளவினுக்கமைவுற்றவளவையில்
களமர்மென்புனல்காறிறந்தூட்டுவார். (௧௦௫)

வெள்ளைமேகம்விழுப்புனலுண்டுமுன்
கொள்ளும்வண்ணம்பசந்தெழுகொள்கைபோல்
அள்ளல்வெண்முளையார்ந்தறலுண்ணலும்
உள்ளவண்ணமொழிந்துபசந்தன. (௧௦௬)

சேறுசெய்யுஞ்செயலினரோர்புறம்
நாறுவாங்கிநடுபவரோர்புறம்
வேறுவெண்முளைவித்துநரோர்புறம்
மாறில்பைங்கூழ்வளர்க்குநரோர்புறம். (௧௦௭)

வேறு

காமவேள்சிலைகோலிக்கணைப்பொழுதுமொழியாமே
நாமவாளிகளாக்கிநமையலைப்பக்காரணமாய்த்
தாமறாதிருப்பவெனத்தண்பயிரைநெருக்குவபோல்
ஏமமார்மலர்பலவுமெழுந்துமலர்வனபணையின். (௧௦௮)

உந்தியந்தாமரையொன்றேயுடையவரிதனைநோக்கி
எந்தமைநேராயென்றேயெழுந்தபசும்பயிர்ப்பண்ணை
சந்தமலிபலகமலந்தாமலர்ந்துவளையுயிர்த்த
கொந்தொளிநித்திலவொழுங்காற்குறுநகைசெய்திடுமன்றே. (௧௦௯)

இடையிடையேசெழுங்கமலமெழுந்துமலர்பசும்பண்ணை
அடையலர்தமுயிர்குடிக்குமழலுமிழ்வச்சிரப்படைக்கை
உடையவனையுளத்திருத்தியோங்குமவன்சாரூபம்
தடையறப்பெற்றாயிரங்கண்டகவிழித்ததிறங்காட்டும். (௧௧௦)

தாமாக்கும்பொருட்குதவிதனைப்புரிவரதற்கிடரும்
தாமாக்கினவர்தம்மைத்தணவாமேயிடர்களைவார்
தாமாக்கும்பயிர்க்கூறாய்த்ததைகளையுகிலநீரும்
தாமாக்கவவைமுனியார்களைமுனிவார்தகுமுழவர். (௧௧௧)

மங்கையர்களவயவத்தின்வளங்கவரிந்தீவரமும்
பங்கயமுங்கயிரவமும்பலவுமடனமக்காகா
தங்கவர்க்கேதக்கதெனவகத்தெண்ணிக்களைகளையத்
தங்கும்வயற்றொழின்மள்ளர்தையலரைச்செலவிடுத்தார். (௧௧௨)

தமதுறுப்பினெழில்கரவிற்றாங்கவரும்பிழையானும்
சமரமதன்றொழில்வளர்க்குந்தண்பயிரைத்தெறலானும்
அமரிடைவந்தெதிராதவலர்ப்பகையைத்தாந்தொடர்ந்தே
குமரியுயிர்குடிப்பதற்குக்குறுகினார்வயன்மாதர். (௧௧௩)

எங்களுக்குப்பகையாகியிலஞ்சிமுதலாமிடத்தில்
தங்கியிருப்பதற்கேதுஞ்சாற்றிலமற்றதுபொறுத்தேம்
எங்கள்கணவரைப்பகைத்திங்கிருந்திடவொட்டேமென்று
மங்கையர்பங்கயமுதலாமலர்களையத்தொடங்கினார். (௧௧௪)

வேறுவேறுளத்தெண்ணிவேறுபடுங்கயவர்களால்
ஊறுறுதெனிலவரையொறுப்பாராருறுப்பொடெதிர்
கூறுமோதிமம்பணிலங்கூர்மம்வரால்கயன்ஞெண்டும்
சீறுமாறிலரொளிக்குஞ்செயலானுந்தொடர்ந்திலரால். (௧௧௫)

சைவலந்தாமரைகுவளைதண்குமுதங்கொடிவள்ளை
தெய்வமணங்கமழ்நீலந்திகழனிச்சமெனும்பகைகட்
குய்வகைசெய்யாதவர்களுடனிருந்தபெரும்பிழையால்
கைவலத்திற்பறித்தெறிந்தார்கதுவியபுல்லாதிகளும். (௧௧௬)

சிரஞ்செவிதோள்கண்முன்கைதிணிமுலைமெல்லிடைபாதம்
வரஞ்செறிமென்மலர்பலவும்வகுத்தணிந்துமீண்டவர்கள்
உரஞ்செறியும்பகைசவட்டியொண்டலையாதிகளணிந்த
புரஞ்சிரித்தபுண்ணியரேபோன்றனர்மள்ளர்கள்புகழ. (௧௧௭)

சீரறிவாறையுமுடையதேவர்முதலனையோர்க்கும்
வாரறிபூண்முலைமாதர்மகிழ்செய்வததிசயமோ
வோரறிவாகியபயிருமுழத்தியர்கைத்தலந்தோயப்
பாரறியமிகத்தெளிந்துபரந்தெழுந்துவளர்வனவால். (௧௧௮)

அரவமலிநறுந்தெண்ணீராறுதினமுறப்பாய்த்திப்
புரவுபுரிதரவுழவர்புரையறவோங்கியபயிரின்
விரவுமடல்கிழித்தெழுந்துவெண்கதிர்கள்வளர்தோற்றம்
மரகதப்பாறையின்முளைத்துவளர்வயிரக்கொழுந்தனைய. (௧௧௯)

தயங்கியதன்னிறங்காட்டித்தனக்கதிபனெனத்தன்னுள்
வயங்குமரிநிறம்பின்னர்மருவுபயிர்க்கருள்சுரந்து
பயங்கதவுமமுதுறுத்திப்பணிக்கதிரோன்றினம்வளர்ப்ப
இயங்கியவெண்கதிர்முதற்போலெழுந்துபசந்தனபெரிதும். (௧௨௦)

விண்ணிவந்துமதிக்கடவுள்விளங்குகதிர்கரத்தணைப்ப
உண்ணெகிழ்ந்துகருத்தரித்திட்டுருப்பசந்தகதிர்ச்சாலி
பெண்ணினினந்தமைத்தாங்கும்பெற்றியினர்தாயரென
மண்ணறலென்றிரண்டினையுமன்றவெதிர்நோக்கினவே. (கஉக)

மகளிரிடையொவ்வொருத்திவந்தியெனநிற்பதுபோல்
தகவுறுமாசிரியனருடாங்குமுபதேசத்தின்
இகவிலருளொவ்வொருத்தனிழுதையெனநிற்பதுபோல்
உகலரும்பற்செயலொத்துமொரோவொன்றுபதரான. (கஉஉ)

சாத்துவிதநிறமுன்னாய்த்தாமதத்தினிறம்பின்னாய்
ஏத்தும்வகையிருந்தபடியெதிர்நோக்கியிராசதந்தான்
நீத்தலருநிறஞ்சாலநிரப்பியதுபோற்கதிர்கள்
காத்திடுநீர்ப்பண்ணைதொறுங்கதிர்த்துமிகச்சிவந்தனவே. (கஉ௩)

மண்புனல்கால்வெளிபரிதிமதிமள்ளரெனவீசர்க்
கொண்படிவமெனுந்தானமோம்பவழல்குளிர்ந்தடுத்த
பண்பெனவுமுதிர்விளைவின்பசையீரம்வாங்கவுறு
நண்பெனவும்வயன்மீட்டுநெளினமொடாம்பலுமலர்ந்த (கஉ௪)

முறுகவிளைந்தவனிமிசைமுடிசாய்த்துக்கிடக்கின்ற
மறுவில்விளைவினைநோக்கிவயல்வினைஞர்மகிழ்வெய்திக்
குறுகினார்தண்ணுமையியம்பக்குயமேந்தித்தலைகுனிந்தார்
உறுபலங்கொள்ளுநர்வணக்கமோம்புவதுமரிதேயோ. (கஉரு)

எல்லார்க்கும்பயன்படுவாரென்செயினும்பொறுப்பரெனும்
நல்லார்களுரைப்பொருளைநாட்டியதுகதிர்ச்செந்நெல்
ஒல்லாரின்வளர்த்தவரேயொறுத்துவரிந்தெடுத்தேகி
வெல்லாதகளத்திட்டுமிதித்திரும்போர்செயப்பட்டே. (கஉ௬)

கையினாற்பிடித்தடித்துங்கடாவடியிற்படுத்திட்டும்
வையெலாந்தணப்பித்துமருவுபதர்நவைநீக்கிச்
செய்யெலாமிகக்குவிக்குஞ்செந்நெல்வளநோக்குதற்கே
மெய்யெலாம்விழிபடைத்தான்விண்ணவனாமிந்திரனே. (கஉஎ)

தென்புலத்தார்தேவர்விருந்தினர்சேர்சுற்றமுந்தாமென்
றைம்புலத்தாறினிதோம்பலவங்கூறுகொண்டுழவர்
இன்புறநானிலம்புரக்குமேந்தலுக்கோர்பகுப்பாக்கித்
தம்பகுப்பால்விழைந்தேனைத்தருமமுஞ்செய்வார்முணமும். (கஉஅ)

தொறுவியர்மத்தான்மொத்தித்தூணத்தினுறப்பிணித்த
மறுவுடையானென்னமாலைவணங்காதாரெவர்களமர்
தெறுவினையிற்பட்டதெனச்செந்நெலொழிப்பாரில்லை
உறுவர்முதலியவுலகமுகந்தளிக்குங்காரணத்தால். (கஉகூ)

கன்னனறுஞ்செழும்பாகுங்காய்கனிபாறயிரிழுதும்
செந்நெலமுதொடுமிசைந்துசெறிவாசப்பாகடைதுய்த்
துன்னலருங்களிப்பெய்தியும்பர்களுநறுமொறுப்ப
நன்னலத்தின்வாழ்குநரேநகர்தோறுமூர்தோறும். (க௩0)

வேள்விபுரிசடங்குகளும்வியத்தகுமங்கலவினையும்
நாள்விழவுமதிவிழவுநலத்தகுமாண்டின்விழவும்
ஆள்வினையாடவர்மகளிரருந்துணிதீர்த்துறவாக்கும்
தாள்வினையுமருவெனவேதயங்கியதண்ணடைதோறும். (க௩க)

உண்ணுவதுமருந்தொருநாளுடுப்பதுவுந்தருவினதே
நண்ணுவதுமந்தரமேநல்குவதும்வாய்மொழியாம்
பண்ணவர்வைப்பினைப்புரந்தும்பயன்பெரிதின்மையைக்குறித்தே
மண்ணகருக்கமரனெனவானவர்கோனமர்ந்ததுவே. (கரு௨)

போகமிகுவிண்ணுலகம்புரப்பவனேதெய்வதமாய்
மேகமிகுபுனல்வழங்கவிருப்பினொடுங்காக்கின்ற
பூகமலிவயல்வளமும்புகன்மொழியினளவைத்தோ
நாகமலிபொழினெய்தனலந்தெரிந்தவாறுரைப்பாம். (கருரு)

நெய்தல். வேறு.

இரும்புனற்கதிபதியென்னும்வானவன்
சுரும்புளர்நெய்தல்வாழ்கழிகடேற்றிய
பெரும்புனற்கடனிலம்பேணத்தக்கதென்
றரும்பியவிருப்பினுங்கமர்தன்மேயினான். (கருச)

கும்பமாமுனியுணுங்கொள்கைத்தாயது
பம்புமாநதிபலபடியுந்தூயதென்
றம்புராசியின்மருங்கடுத்துவாழுமால்
கொம்பனாளுமைவளர்கோதில்சாதியே. (கருரு)

வருணனுக்கூர்தியாமகரமீனுந்தம்
ஒருகுலமென்றவனுறையும்வைப்பெலாம்
செருமலிதிமிங்கிலகிலந்திமிங்கிலம்
பொருமகரம்பலமீனும்புல்லுமே. (கருசு)

பிணக்குவைப்படும்பெருமன்னர்போரிடை
நிணக்குவையுண்ணவுநீலக்கண்ணினர்
உணக்குறுமீனெளிதுணவுமோங்குமைங்
குணக்கருங்கொடியினங்குழுமிவாழுமே. (கருஎ)

பரத்தியருறுப்பினைப்பயந்தொளித்தமீன்
அரத்தவித்துருமமுத்தனைத்தும்பேணியும்
உரத்தினையுளத்துறுப்பயத்தினோதமும்
வரத்தினையுறரெனமறுகுமெங்குமே. (கருஅ)

உருநலமிலாதவருதவுநன்பொருள்
ஒருவுநரிலையுவர்நாற்றக்கார்க்கடன்
மருவுறுதீர்த்தமாய்வானும்பற்பல
பொருள்களும்யாவரும்போற்றநல்குமே. (கருகூ)

அடுத்திடப்பட்டவர்பெரியராயினும்
அடுத்தவர்சிலர்குணமவர்குணத்தியல்
மடுக்குமோவளர்கழிமலர்ந்தநெய்தல்கள்
விடுத்திலநறுமணம்வீசுங்காதமே. (கச0)

சேரியின்புறமெலாந்தீயநாற்றமே
ஆரினும்புன்னையுமலர்ந்தகைதையும்
வேரியின்ஞாழலும்வீசுமாமணம்
மூரியம்புரத்தினின்றுய்த்தமூவர்போல். (கசக)

வலையினன்மீன்பலவாருஞ்செய்கையர்
குலைவிலாமணிபலகுளித்துவாழ்வர்கள்
உலைவிலாதொற்றினொலொற்றிநுண்பொருள்
மலைவிலாவொற்றுமாயொற்றுமன்னர்போல். (கச௨)

விழியினாற்பரத்தியர்வெல்லப்பட்டதோர்
செழிகடறிரைக்கையாற்றிறைகளாகவே
பொழிகதிர்மணிகளும்புலவுமீன்களுங்
கழியவர்சேரிமுன்கலந்துவீசுமே. (௧௪௩)

அளவர்களுப்பமைத்தளக்குமோதையும்
நுளையர்கள்கலன்கடனூக்குமோதையும்
வளைமணிமீன்விலைமதிக்குமோதையும்
களமலிகடலெதிர்கடல்கள்போன்றவே. (௧௪௪)

சுரங்கடந்தவர்தமைத்துன்னுறுமையால்
இரங்குறுமாதரோடிரங்கிவெள்வளை
தரங்கமென்கரங்களிற்றள்ளிவேலையும்
மரங்கிளர்கரைவருமறிந்துபோதுமே. (௧௪௫)

பற்பலதேயமும்படர்ந்துபல்கலத்
தற்புதப்பொருளெலாமடங்கவாரிவந்
துற்பவத்திழிநருமும்பர்போகத்தின்
நிற்பவருயர்ந்தவர்நீர்மையென்சொல்கேன். (௧௪௬)

அளக்கரைநீந்தினுமளக்கர்நல்கிய
துளக்கமில்பொருளெலாஞ்சொல்லுவாரெவர்
விளக்கினமைந்திணைவிளம்புநானிலத்
துளப்படுமயக்கமுஞ்சிலவுரைத்துமால். (௧௪௭)

திணைமயக்கம். வேறு.

வரகுபோரிடைவரைவளர்மந்திகள்பாய
விரவுமாதவிநிழல்வளர்வாரணம்வெருவி
உரகம்வாழ்மலைமுழையிடையுறும்பயந்துயிரைப்
புரவுபூணுவார்புகுதருமிடமறியார்போல். (௧௪௮)

காலையாய்ச்சியர்தயிர்கடையோதையைக்கழனிச்
சோலைவானரம்வேங்கையின்குரலெனத்துளங்கும்
ஆலையோதையைமழையெனவண்டர்கடொழுவின்
மாலையானிரைபுகுத்துவர்வழக்கமுண்மையினால். (௧௪௯)

கோழியோச்சியவுழத்தியர்குழைபரத்தியர்கள்
ஆழிவேலையிலுணக்குமீன்பரப்பினையழிக்கும்
வீழிவாய்ப்பரத்தியர்கொடிவீசியவளைபோய்ப்
பாழியூருழத்தியர்கணெற்பரப்பினையழிக்கும். (௧௫௦)

ஊட்டுகன்றுறுவயிற்றினைநிரப்பியுமொழுகுங்
கோட்டிருங்கவையத்திளம்பாலுணக்குறிஞ்சி
மாட்டனம்புகும்வரைவளர்யூகமாலைகளின்
ஆட்டிருங்கழைப்புனலுணவயலினையடுக்கும். (௧௫௧)

அருவிதூவும்வெண்ணித்திலமலைகடற்கரையின்
மருவும்வார்திரைக்கடலெறிநித்திலமலையின்
பொருவில்சாரலிற்பொலிதரும்பூவையர்பிறந்த
திருவினார்மனையொழிந்தயற்சேர்ந்துவாழ்வதுபோல். (௧௫௨)

கொல்லைமானிளங்குழவியையிடைச்சிறார்கொடுப்ப
மெல்லென்மீன்களைநுளைச்சிறார்விழைந்தெதிர்கொடுப்பார்
முல்லைநீண்முகைமுல்லைவாழ்சிறுமியர்கொடுப்ப
நல்லவாரநேர்நுளைச்சிறுமியர்கணல்குவரால். (௧௫௩)

தொல்லைநாவலரனைவருந்தொடுத்தெடுத்துரைத்தும்
எல்லைகாணருவ்வளநிறைதொண்டைநாட்டியல்பின்
வல்லவாசிறிதுரைத்தனமினிவகுத்துரைப்பாம்
செல்வநீடியசென்னைமாநகர்வளந்தெரிந்தே. (கருச)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருச.



## திருநகரப்படலம்.



திருத்தகுதொண்டைநாட்டிற்றேவர்கணாட்டின்மேலாம்
விருத்திரனுயிரைமாட்டும்விண்ணவனகருநாண
உருத்தகுகாஞ்சிமூதூரெல்லையினுளதாயும்பர்
வருத்தமுந்தவிர்க்குஞ்சென்னைமாநகர்சிறந்துவாழும். (க)

தம்பிரானருளாலென்பைத்தளிரியன்மடந்தையாக்கும்
உம்பர்சூழ்நகருமேட்டினூறுவரிநெருக்கியிட்ட
எம்பிரானகருந்தெற்கும்வடக்குமென்றிரண்டுபோலு
நம்பிவாழ்தரவேநாப்பணயக்குமந்நகரமென்றும். (உ)

தன்னினந்தளராவண்ணந்தாங்குதறருமமென்றே
நன்னகர்பலவும்வாழநயந்துதன்னிடத்தில்வாழ்வு
மன்னியசெல்வர்தம்பால்வளமிகக்கொடுத்துத்தன்பால்
எந்நகர்வளமுங்காட்டியிருப்பதந்நகரநாளும். (ங)

இத்தகுநகர்போல்வாழ்வார்க்கிரும்பொருள்கொடாதவாற்றால்
அத்தகுதுறக்கவாணரலைகடலமுதுமிங்கே
யுத்தமருதவும்வேள்வியுணவுங்கொண்டொருவன்செய்து
வைத்திடும்பழையவில்லின்வாழ்தருங்கடன்மைபூண்டார். (ச)

தாங்குமிந்நகர்வாழ்வார்போற்றருமங்கள்புரியாத்தாழ்வால்
ஆங்குளவமரரெல்லாமருமகப்பேறுகாணார்
தேங்கமழ்மாலைவேறுசேர்தராதென்றுவாட்டார்
பாங்குசெய்வாரில்லென்றேபடமழுக்குறாமற்சூழ்வார். (ரு)

வார்வளர்மலைமென்கொங்கைவளைகடலுடுக்கைச்செல்வப்
பார்மகண்முகமேயாகும்பரவுமுத்தமிழ்சேர்நாடு
சோர்வறுநுதலேயாகுந்துலங்கியதொண்டைநாடு
சீர்வளர்திலகமேயாஞ்சென்னைமாநகரமாதோ. (சா)

தத்தமக்குரியவிண்ணோர்தமக்கிடமாவதன்றி
இத்தகுநகரம்போலவிண்டுமானிடர்யாவர்க்கும்
முத்தலைச்சூலத்தண்ணன்முகுந்தனோங்கரன்வேளாதி
உத்தமர்தமக்கும்வைப்பாயுறுவதோதுறக்கவைப்பு. (எ)

தேவர்கண்முனிவர்சித்தர்சிறந்தவேதியர்களேனை
மூவருபிறருமென்றுமொய்த்துடன்வாழுமாறு
மாவளரிடங்கணல்கும்வளநகர்யாவரேனும்
மேவுறினிடமாமுத்திவீடலானிகராதன்றே. (அ)

வளமணிமழையுஞ்செம்பொன்மழையுங்கைம்மாறுவேண்டா
தளவிலவாரிச்சென்னையாநகர்மாந்தரெல்லாம்
உளமகிழ்சிறப்பினாளுமுதவுதனோக்கிநோக்கி
விளர்நிறம்படைக்குந்தெண்ணீரல்லதுவீசாமேகம். (கூ)

மருங்குறுகடலின்மொண்டுமழைக்குலமகளிரைம்பாற்
கருங்குழனிகர்ப்பவெண்ணிப்பன்முறைகறுத்துப்பார்க்கும்
ஒருங்கிரவலர்க்குநாளுமுதவுமிந்நகரின்மாந்தர்
பெருங்கொடைநிகர்ப்பவெண்ணிப்பன்முறைபெய்துபார்க்கும். (க0)

அருமைகண்டுவப்புச்செய்யாரமர்ந்துவாழ்மலையிற்கானின்
மருவியென்பயனென்றெண்ணிமணங்கமழகிலுஞ்சந்தும்
குருமலர்ச்சண்பகங்கள்கொன்றைமல்லிகையுமற்றும்
திருநகர்ப்புறத்தினெங்குஞ்செறிந்தெழில்காட்டாநிற்கும். (கக)

இயலினைக்கற்கவெண்ணியினத்தொடுமயிலுஞ்சால
நயமொழிகற்கவெண்ணிநன்கிளிகுயிலும்போந்து
செயலையந்தளிரனார்தஞ்செவ்விபார்த்துறையாநிற்கும்
வயல்புறமுடுத்தசோலைவளர்ந்தவுய்யானமெங்கும். (கஉ)

சுந்தரமிகுந்தவிந்தத்தொன்னகர்விடாதுநோக்கச்
சிந்தையினார்வங்கொண்டுந்தினந்தமைப்பூசைசெய்வார்க்
கந்தமில்வரங்கணல்கியளிப்பதுகுறித்துந்தேவர்
வந்தனர்மலர்கடோறும்வதியுமாராமமெங்கும். (கங)

முத்தலைச்சூலத்தார்போன்மூன்றுகண்படைத்துமாதர்
முத்தலைமுலைநேராமன்முடிகவிழ்குரும்பைத்தாழைக்
கொத்தொடுகமுகங்காடுமொதளைகுழலொப்பாம்பூ
வைத்திடும்வாழைக்காட்டின்மருங்களவளாவிநிற்கும். (கச)

நகருறைமைந்தரெல்லாநல்லுருக்காமரென்றே
யசமுறநினைத்துக்கன்னலவர்கள்கைச்சிலைகளாகப்
புகரறுவயல்களெங்கும்பொதுளுமவ்வாறேயெண்ணிப்
பகழிகளாகநீலம்பங்கயம்பலவும்பூக்கும். (கரு)

நீரளவாகிநிற்றனெடுங்கொடியளவேயன்றிச்
சீரமரிலையும்பூவுந்தினந்தொறுமொப்பக்காட்டுஞ்
சாரினப்பொருளுக்கேற்பவாழ்ந்துதண்கவிகையொப்பப்
பாரிடையளிக்குமிந்தப்பதியொடும்பழகுங்கஞ்சம். (கசு)

பாளையந்தாழைபூகம்பசுங்கழைகதலியென்னும்
கோளறுவனங்கள்காணக்குறித்தொருபாங்கர்க்காடு
மாளிகைவரைகள்காணமதித்தொருபாங்கர்க்குன்று
நீளிடைவந்துநிற்பநெடுநகர்செல்வமல்கும். (கஎ)

பொருள்பலவிளைத்துநாளும்பொலிதலாற்கதிர்ச்செஞ்சாலிப்
பெருநிலநகரினோர்பாற்பெட்டொடுசூழ்ந்துநிற்கும்
கருதியபொருள்களெல்லாங்கவர்தொறுங்கொடுத்துச்செல்வம்
அருகுவதின்மையாலேயலையுமோர்பாங்கர்ச்சூழும். (கஅ)

கொடையொடுபயிலுமின்பக்குளிர்நகரெல்லையுள்ளே
மிடைதருவளத்துட்சில்லவிளம்பினம்பொதுமைதன்னால்
அடைதருவளத்தைவேறுவகைமையினறையப்புக்குப்
புடைநகர்வளத்தைமுன்னர்ப்புகலுதும்புலவர்தேர. (ககூ)

புறநகர். வேறு.

இரிசரக்களிறுநதிசரக்களிறுங்கிளர்ந்தெழும்வனசரக்களிறும்
உரிமையிற்பயிலும்பற்பலதேயத்துளவளர்சுவற்பரிமாவும்
புரிமணியிரதவுறுப்புகள்பலவும்புரையறுதானையும்படையும்
தரியலர்பணிப்பச்சுமந்துவந்தளிக்குந்தண்டுறைதொறுங்கலம்பலவும். (உ0)

அலப்படையனையதூங்குவாய்நெடுங்கையலைசெவிவாரணம்பழக்கும்
நலப்பெருவனப்பின்மைந்தர்கடமதுநவையறுபோர்த்திறவலிக்கு
வலப்படுமதமால்யானையுநிகராவாய்மையைத்தெரிப்பதேபோலப்
புலப்படப்புகன்றுமொறுத்துமண்டிலமாப்போக்கிநேர்நடத்துவர்பலரும். ()

குழியிடைப்படுத்துஞ்சிலபகலுணவுகொடாமலுமினத்தொடுசேர்த்தும்
கழிபெருநிகளங்காலுறயாத்துக்கதந்தணித்தணிநகர்புகுத்தும்
பொழிமதக்களிற்றைவினைஞர்கள்பழக்கும்போர்த்தொழின்முன்னமேமதித்துச்
செழிதருமுளத்துப்பயத்தினுற்போலுந்திசைக்கரிபுறங்கொடுத்ததுவே. உஉ

இருப்புநெட்டெழுக்கண்முசலங்கள்வாங்கியெதிரெதிர்தாக்குபுதெழித்து
மருப்புடல்புதையவொன்றினையொன்றுமறுகுறக்குத்துபுதெழித்தும்
செருப்படுமிருப்புத்தொடர்கரஞ்சுழற்றிச்சென்றெதிரோச்சுபுதெழித்தும்
பொருப்பினமலைந்தாலெனக்கரியினங்கள்போர்த்தொழில்பழகிடம்பலவால்.

இருபுடையொழுகும்பருமணியிரட்டவிழிமதக்கலுழியங்கரடக்
கருஞ்சிமிறிரைப்பச்சென்றுநீர்முகக்குங்களிற்றினந்துளைக்கைநீர்வீசி
மருவியவினத்தோடாட்டயர்வனப்புவாரிதிமடுத்தெழுமுகிலும்
உருவுகள்பலவாய்த்தம்முளேநெடும்போருவப்புறப்புரிதல்போன்றனவே. ()

தண்டமுஞ்செண்டுவெளியுஞ்சேவகமுந்தளைத்திடுங்கூடமும்பலவும்
மண்டியதாரைமதப்பெருமழையால்வைகலுஞ்சேதகமாக்கும்
திண்டிறற்களிறும்பிடிகளுங்கன்றுஞ்செறிதருமொட்டகக்குழாமும்
தண்டலைமருங்கும்வயற்களமருங்குந்தண்கடன்மருங்குமெண்ணிலவே. ()

வேறு.

இந்திரனுலகமுமிரவிலோகமும்
சந்திரதிசையினுலகுந்தாமெலாம்
வந்தொருநகரெனமருவினும்பரிப்
பந்தியின்புடைநகர்ப்பாதமொக்குமோ. (உசு)

வரையறுபோரிடைவாவிச்சென்றுமீண்
டரையருக்குவப்பினையாக்குமாவொடு
கரைவருந்தொறுமுருக்கரைந்துமீள்கலாக்
குரைகடற்பெருந்திரைக்குலமுமொக்குமோ. (உஎ)

முகங்கவிழ்ந்தனவெனமுனிவுசெய்கலா
தகங்களிசிறப்பொடுமரையரச்சுவம்
சகம்புகழ்தரமிகத்தளைப்பரொட்டலர்
முகங்கவிழ்தரச்சமர்முடிப்பதெண்ணியே. (உஅ)

விசையொடுமைங்கதிவிளைக்குங்கொய்யுளை
திசைகளுங்கடந்திடுஞ்செலவுநோக்கியே
திசைகளைப்புரந்தனர்தேவரெண்மரும்
அசைவிலெண்கரிகளுமரவொரெட்டுமே. (உகூ)

வந்திடும்வழியிடைமறித்துமீள்வகை
சிந்தையிற்றேர்கலாத்தினகரன்பரி
நொந்திடத்திசையெலாநொடிக்குமுன்செலும்
சுந்தரப்புரவியின்றேர்கள்சூழ்ந்தவே. (௩0)

நித்தலும்பன்முறைநேருந்தானவ
வித்தகரறச்சமர்விளைத்திடாக்கதிர்
உத்தமன்றேரைவிண்ணேட்டுநேர்ந்தவர்
கொத்தொடுமுறைமையிற்குமைக்குந்தேர்களே. (ருக)

ஒருமுறையடைந்திடினென்னலாருயிர்
பருகுமித்தேரெனப்பாயிருட்பகை
கருவொடுமறப்பொராக்ககனத்தேர்மிசை
வருபவன்மறையுருவாயினனரோ. (ருஉ)

தெழித்துமண்ணிடைப்படைபயிற்றுஞ்செல்வர்முன்
அழித்திமைப்புறுமெனவறிந்துநான்முகன்
விழித்தகண்ணகவேவிதித்திட்டானரோ
பழித்தலெய்தாவகைபண்ணவர்க்கெலாம். (ருரு)

தெய்வதப்படையினற்றெவ்வராற்றலைக்
கொய்வதுதகாதெனவவைகுறித்திடாக்
கைவளர்வெற்றியேகருதித்தானைகள்
எய்வதுமெறிவதுமினிதுகற்குமே. (ருச)

உரைத்திடும்படைகளுக்குறுப்பெலாமிகத்
தரைத்தலைவிளங்குறச்சமைத்துநல்குபு
புரைத்தபுவினைஞர்கள்பொருந்திவாழ்தர
நிரைத்திடுஞ்சேரிகணிலவுமெங்கணும். (ருரு)

விலங்கலும்வனங்களும்விரிந்தபண்ணையும்
சலங்கொடுத்தளித்திடுந்தலைமைநாடியே
நலங்கிளர்பொருள்பலநல்கக்கார்க்கடல்
கலங்களிற்சுமந்திருங்கரைக்கணுய்க்குமே. (ருசு)

மடுவுறும்வலாரியையழைப்பவானவர்
தொடுகரையடுத்தமைசூழ்ந்துவெற்பெலாம்
படுகடலொளித்தவப்பறம்பைக்கூவுவான்
புடையடுத்தனபொரும்பொருளின்குப்பையே. (ருஎ)

பல்கியபடைகளும்பற்பல்பண்டமு
மல்கியபுடைநகர்வகுத்துமுற்றுமோ
வெல்கழலாடவர்மின்னனாரொடு
புல்குறுமிடைநகர்புகலுவாமரோ. (ருஅ)

இடைநகர். வேறு.

புளினத்திரளொடுசெய்தொளிர்பொற்குன்றுகள்பலவும்
வளியுற்றுளர்மணிமேடையும்வருநீர்நிறைதடமும்
அளிமொய்த்திடுமுய்யானமுமலர்பங்கயமடுவும்
களிமுற்றுறவெதிர்வோரிருகண்ணுந்திறைகொள்ளும். (ருகூ)

சுடுபாலையிலுறுவோர்வயறுன்னும்பதிசேர்ந்தாங்
கடுபோர்நிறைபுடைமாநகரதிர்வன்குரனுழையப்
படுவார்செவிகிளிபூவைகள்பமரங்குயின்மயில்க
ளொடுகூவியகுரலின்னிசையுணருங்களிபுணரும். (சo)

வண்டாடுவமலரும்பலமலரிற்கருமேகம்
கண்டாடுவகளிமாமயில்கதிர்மாமணிமேடை
கொண்டாடுவகிளிபூவைகள்கூறும்பனிமொழியைத்
தண்டாதுடனுறையுங்குயிறமதின்னிசையோர்ந்தே. (சக)

கொந்தாடியமலர்மென்குழல்குலையக்கலைகலையச்
சந்தாடியமுலைமேல்வளர்தரளத்தொடையலைய
வந்தாடவர்விழியுங்களிமனமுந்திறைநல்க
பந்தாடுவர்கழலம்மனைபலவாடுவர்மடவார். (சஉ)

கழுமாமணியனையார்கமுகிடுமூசலினுடைச்
செழுமாமணியொளிருங்குழைசெவியூசலினுடும்
குழுவானரநோக்கிச்சிறுகொடியூசலினுடும்
எழுகாளையர்மனமாமயலெனுமூசலினுடும். (சங)

வெள்ளோதிமமலர்மேல்விளையாடுங்கயமாடி
முள்ளோடெழுகொடியம்புயமுருகார்மலர்குவளை
கள்ளோடலர்குமுதங்கொடுகண்டார்மனமறுகாற்
புள்ளோடணிதொடைசெய்குவர்புனமாமயிலனையார். (சச)

வண்ணந்தருகனகத்தொடுமணியுங்கறைபெய்து
திண்ணந்தருமுசலங்கொடுசெங்கைத்தொடியுழலச்
சுண்ணஞ்செயுமடவாரிடுதகினீங்குபுகொங்கைக்
கிண்ணம்விழிபடவாடவர்கிண்ணந்தனநேர்வார். (சரு)

கிள்ளைத்திரள்பூவைத்திரள்கிளர்கூட்டிடையுய்த்து
வள்ளத்தனமான்பாலொடுவைத்தூட்டுபுமறைபோன்
மெள்ளப்பயில்வித்தின்னிசைமென்சொற்களைமாதர்
எள்ளற்றிறமினியின்றெமதின்சொற்கெனமகிழ்வார். (சசு)

சிலைவாணுதன்மடவார்திலகமும்வார்குழன்மலரும்
முலைமேலணிகளபங்களுமுன்னுங்களிசெய்யும்
கலைநீவியகலவித்தொழில்கதுவித்தமதியல்பு
குலைவாகியபின்னுங்களிசெய்யுங்குணமிகுந்தே. (சஎ)

ஊடிச்செலுமடவார்தமதொளிர்மேகலைபற்றி
வாடித்தளர்வுறுமைந்தர்கள்வாங்கக்கமழ்சுண்ணம்
நீடிக்கிளர்தீபங்கெடநேரோச்சியும்விழிகண்
மூடித்தலைகுனிவார்மணிமுற்றுந்திவண்மாடம். (சஅ)

வேறு.

மலர்ந்தமகிழ்வாலாடவர்தம்வடிவம்வரிப்பான்படமெடுப்ப
கலந்தபரத்தையொருத்தியுருக்கவினத்தீட்டமுயன்றீரென்
றலர்ந்தகமலச்சீறடியொன்றணிபூங்குஞ்சிமுடிசூட்டிப்
புலந்துபோவார்மேகலையும்பொன்னஞ்சிலம்புமோலிடுமே. (சகூ)

கலவியிடத்துநீராடுங்கருமத்திடத்துங்கழிக்கின்ற
கலனுமுடையும்போலாதகையில்வளைசோர்வனநோக்கிப்
பலரைமணந்தெம்போலிவர்க்குப்பகைத்தீரோவென்றுடவர்கள்
பலநன்குரைத்துத்துனிதிருத்தும்பாவையனையார்குழுவெங்கும். (ரு0)

ஊடும்பொழுதுமடவார்களுணர்த்தவுணர்ந்தைந்தமளியின்மேற்
கூடும்பொழுதுமலர்ப்பொய்கைகுடையும்பொழுதும்பசும்பொழிலி
னாடும்பொழுதுஞ்சிதர்ந்துவிழுமணங்களோர்தங்கலனிரவு
நீடும்பொழுதுமிருள்பருகிநெடுவான்புரையுமிடைநகரே. (ருக)

தண்ணந்தரளங்கலந்தமணறதைந்தபொழிலும்பலநீரும்
வண்ணந்தழைசந்திரகாந்தமணிமாடமுமல்குதலானும்
திண்ணந்தகுசூரியகாந்தத்திரண்மேடையுமல்குதலானும்
விண்ணந்தகவேயறுபருவம்விளைக்குந்துயருறிலதலவே. (ருஉ)

நாகமணைக்குநாகமுழைநண்ணிநவைதீர்முனிவோர்கள்
யோகமுழக்குமாறேபோல்யோகமிகுந்தவிளையார்கள்
போகமுழக்குமிடைநகரம்புகன்றாமினியுண்ணகரகழி
மாகநிவக்குமதின்முதலாவரிசையாகவுரைசெய்வாம். (௫௩)

உண்ணகர். வேறு.

நெய்கலந்தவோதிமாதர்நெஞ்சினூர்ந்தவஞ்சமும்
மெய்கலந்தஞானயோகமேவினோர்களுள்ளமும்
கைகலந்துமுக்கணன்கடைக்கணிக்கும்வண்ணமு
மைகலந்தளக்கினுமளக்கொணாக்கிடங்கரே. (௫௪)

உறுப்பெதிர்ந்தகஞ்சமாம்பலுற்பலங்கள்வள்ளைகண்
மறுப்படாவனிச்சமோடுமற்றுமாதரேவலால்
இறுப்பவேற்கைமள்ளர்சூழ்ந்ததென்னமென்மலர்க்குலம்
வெறுத்ததண்கிடங்கின்மாடுவேழம்பூத்துநிற்குமே. (௫௫)

தெளிந்ததண்கிடங்குமாதர்சேர்ந்திடுஞ்செயற்கையால்
குளிர்ந்தினிக்குநீரதாய்க்கொழுங்கண்மாமணத்தினோ
டொளிர்ந்தலர்ந்தபூவதாயுலாவும்வண்டினோசையால்
விளிந்திடாமலைம்பொறிக்கும்வேணவாவிளைக்குமே. (௫௬)

துள்ளுகெண்டைவாளைமுட்சுறாவரான்மலங்குமீன்
எள்ளுஞெண்டிடங்கர்கூர்மமெண்ணிலாவுயிர்த்தொகை
உள்ளுலாவமேலெலாமுவக்குமாண்பின்வைகலால்
வெள்ளநீர்க்கிடங்குமன்றவேசைமாதர்போலுமே. (௫௭)

அளக்கரொத்ததண்கிடங்ககன்றநொச்சியோடுதான்
விளக்கமுற்றுநீக்கமின்றிமேவுநட்பினோர்தமைத்
துளக்கலின்றியொட்டலர்த்துளங்கவென்றுநிற்றலால்
இளக்குறாமதிற்குவாய்த்தவில்லின்மாதுபோலுமே. (௫௮)

நாகர்வாழும்வைப்புமும்பர்நண்ணிவாழும்வைப்புமிப்
போகபூமியொக்குமேற்புகுந்துகாண்குமென்றுசென்
றோகையோடுகீழுமேலுமொண்கிடங்குநொச்சியும்
ஈகையாளர்கீர்த்தியென்னவென்றுநின்றிலங்குமே. (௫௯)

எண்மைமாதிரத்தினோரிமைத்திடாதபார்வையால்
திண்மையாகவூறுவந்துசேருமிந்நகர்க்கெனா
உண்மைநாடியெயமைத்ததொக்குநொச்சிவிண்ணுளார்
வண்மைநோக்கமாற்றவேமலிந்ததெங்கும்வார்கொடி. (௬௰)

மாறுகொண்டமன்னர்போர்க்குவந்திடாமுன்சென்றவர்க்
கீறுகண்டுமீளும்வீரரெண்ணிலார்துவன்றுற
நீறுதீற்றுமாடமூடுநிற்றலானுமிந்நகர்க்
கூறுதீர்ப்பவேயிழைத்ததாகுமோங்குமாமதில். (௬௧)

நொச்சியுச்சிவேய்ந்துநீண்டநொச்சியோடுபோர்செய
இச்சையுற்றுமன்னர்வந்தெதிர்க்கும்வண்ணமுண்டெனின்
நச்சுமிந்நகர்க்கண்வாழுநல்லவீரர்வேண்டுமோ
மெச்சவெந்திரங்களேவிரைந்துபோர்விளைக்குமே. (௬௨)

வந்துமன்னர்நொச்சிமுற்றின்வார்ந்ததண்டமோச்சியே
எந்திரக்கடாக்களிற்றினங்கதிர்த்ததேரடு
முந்தவோடிமாமடங்கன்முற்றும்வேழமட்டெழும்
குந்தமள்ளர்வாம்பரிக்குலஞ்சவட்டும்வேங்கையே. (௬௩)

எழுக்கள்கப்பணங்கள்வேலிருப்புலக்கைநாந்தகம்
கழுக்கடைக்குலங்குயங்கதைக்குலங்கலப்பைகள்
மழுக்கள்பிண்டிபாலம்வார்வில்வாளிசூலநேமிகள்
முழுக்கவுய்க்குமோடுநீளுமொய்ம்பினெந்திரங்களே. (சுச)

செருப்புகன்றுவந்தமன்னர்சேனைமேலுருக்கிய
விருப்புநீர்கள்செப்புநீர்களீயமோடிறைப்பன
நெருப்பினோடுகல்லுலோகநீளிடைச்செலுத்துவ
உருப்பமிக்குயாவுமங்குலப்பிலாதமல்குமே. (சுரு)

மாசையைக்குறித்தவிந்தமாநகர்க்கணும்பர்காள்
பூசையைக்குறித்தலாதுபோர்குறித்துறேன்மினென்
றூசையைக்குறித்தநொச்சியங்கையான்மறித்தல்போல்
ஓசையைக்குறித்துநீடுமொண்பதாகையாடுமே. (சுசு)

எண்ணில்பட்டினங்களுக்குமேந்தன்மன்னனாகவே
பண்ணியிந்தவொப்பிலாதபட்டினத்தைமற்றிதன்
உண்மையாருமோர்ந்துகொள்ளவோங்குமோலிசூட்டிய
வண்மைகாட்டிநிற்கும்விண்வளர்ந்தொளிர்ந்தகோபுரம். (சுஎ)

உடுக்கள்கோள்களுள்கண்மற்றையும்பராரும்வான்வழி
விடுக்கினும்விடாதுநாளுமேவுமாறுகாலமும்
அடுக்குநாற்குலத்தருமடர்ந்தெழுந்துசெல்லவே
தடுக்குமாறிலாதுறுந்தயங்குவாய்தல்யாவுமே. (சுஅ)

வந்தெதிர்த்ததெவ்வின்மன்னர்மாமணிமுடித்தலை
மூந்துறப்பணித்திரும்பொன்முற்றும்வாங்குநொச்சியின்
சந்தமின்னதுற்றமைந்தர்தம்பொருள்கவர்ந்தவர்
சிந்தையும்பணிக்குமாதர்சேரிவண்மைசெப்புவாம். (சுகூ)

வேறு.

போர்த்தொழிலிற்றமைவென்றுபொருள்கொளவெண்ணுநர்க்கதுசெய்
பார்த்திபருங்குழையவிழிப்படைவிடுத்துள்ளுயிரோடு
கூர்த்தபொருணிலமுழுதுங்கொள்ளைகொண்டுமவர்குறித்த
சீர்த்தசுகமளித்துவப்புச்செய்பவர்சேரிகள்பலவால். (எ0)

இந்திரனூர்புலோமசையோடினிதமர்பள்ளியுநாண
வந்திளங்காறவழ்ந்தசையமலர்மாலைபலதூங்கச்
சந்தனங்குங்குமம்புழுகாற்றரைவழித்துமணிப்பந்தர்
சுந்தரமாயெவர்விழிக்குஞ்சுகம்விளைக்கும்வாய்தரெறும். (எக)

தாமத்தினறுங்கூந்தற்றெடிக்கைமடவாரிடத்துக்
காமத்தைவிழையாதகருத்தினராரைம்பொறிக்குந்
தாமத்தினருங்களியிற்றவழிளந்தென்றலிற்கிளியின்
வாமத்தினிருஞ்சுகமேவளர்ப்பதவர்மாடமுமே. (எஉ)

மாடகத்தின்யாழெடுத்துவார்நரம்புதகப்பண்ணி
ஆடகப்பன்மணியாழியங்குலியினிசையெழுப்பும்
பாடகத்தினடிமடவார்பயிலரங்கினுட்டயரும்
நாடகத்தைக்கண்டவர்கணல்லுளமுமரங்காமே. (எங)

புளகமெழமுலைவருடிப்புயத்திலணைத்திதழ்பருகி
வளர்நுதறைவரலாதிபுறத்தொழிலுமணியல்குல்
உளநெகிழுங்கரிகரலீலைகளாதியுட்டொழிலும்
அளவிலவுஞ்சித்திரத்தினமைத்தனராவணமேபோல். (எச)

சித்திரத்தினவர்தொழிலைச்சென்றெதிர்நோக்கினுமறிவு
பொத்தியமெய்யுளத்தினரும்பொறியைந்துநிலைகலங்கப்
பித்தினராகுவரென்றாற்பெருமழைக்கட்பரத்தையர்தம்
நித்திலப்பூண்முலைபுணர்ந்தோர்நீங்கினுயிர்வாழ்வர்களே. (எரு)

குலமகளிர்தமைமணந்தகொண்கனையலாற்பிறர்பால்
கலவியுறினவர்தம்மைக்கறுத்தடக்குமரையர்களும்
பலரைமணந்தனரென்றேபாற்றிலராய்ச்சிறப்பருளம்
நிலவுமரசவையடுப்பர்நித்தியமங்கலமடவார். (எசு)

உறுப்பினாற்பெருவனப்பாலொள்ளணியாலிளமையினால்
மறுப்படாக்குலமகளிர்வழியொழுகித்தருஞ்சுகமும்
வெறுப்பவேகாளையர்க்குமிகுபோகம்விளைக்கின்ற
சிறப்பினாற்பொருண்முழுதுந்திறைகொள்வர்விலைமாதர். (எஎ)

முன்னொன்றப்பொருள்கொடுத்துமுயங்கினவர்கண்ணெதிரே
மின்னொன்றுமிடைமாதர்விலைசெய்தமுலைமீட்டும்
பொன்னொன்றுதசஞ்சதமாயிரமாதிபுகன்றெவர்க்கும்
பின்னொன்றவிலைசெய்தும்பிழையுமிலர்பழியுமிலர். (எஅ)

விலைகொடுத்தாவணத்தெழுதும்வினைஞருஞ்செய்யாரென்னே
தலையளியாற்பொருள்கொடுத்துத்தமைவிற்குங்காளையர்கள்
கலைதிருத்தியணியணிந்துகான்மலருந்தைவந்து
நிலைதருவாய்த்தம்பலமும்நித்தலும்வாயாற்கவர்வார். (எகூ)

தொடியணிகைப்பொருணிறைத்துஞ்சூழுளத்தைநிறையார்க்குக்
கடிதவிலாவேவலர்கள்காமமிகுங்காளையரே
படியகமுமவர்வாயேபள்ளியுமற்றவர்மார்பே
வடிவுபுறந்தோன்றாமல்வைப்பிடமுமவர்மனமே. (அ0)

ஆடலினாற்பாடலினாலவிநயத்தாற்பனிமொழியால்
மாடகநல்யாழிசையால்வல்லுவிளையாடலினால்
ஊடலினாற்கூடலினாலொன்றானுங்குறைவின்றி
நாடரியபொருள்பலவுநாணாளுமீட்டுவரால். (அக)

துறந்தவர்க்குமுடன்முழுதுந்தோறிரைந்தமுதுமையர்க்கும்
அறந்தலைநின்றாக்குநர்க்குமழிபிணியிலுழக்குநர்க்கும்
சிறந்தபரத்தையர்கலவிசெய்யாமையுறுமேனும்
மறந்தழையுமவர்விழிக்குவாடாதமனமில்லை. (அஉ)

அருங்கலமாகியமானமறவிட்டுச்சுகப்பொருளே
மருங்ககலார்க்கினிதுதவும்வரைவிலர்சேரிகள்புகன்றாம்
ஒருங்களவிலாப்பொருளுமோவாமேவிலைசெய்தும்
பெருங்கலமாகியமானம்பேணுநராவணம்புகல்வாம். (அங)

வேறு.

காவணமருங்கிட்டுக்கடிமலர்பலசிந்தித்
தூவணமணிமாலைதூக்கினர்விரையூட்டிப்
பூவணர்க்குலைவாழைபூகமுமுறநாட்டும்
ஆவணநோக்குநர்களமரரின்வேறலரே. (அச)

வரையவும்வனத்தனவும்வயலவுங்கடலனவும்
விரைசெலற்கலன்பலவும்விண்ணிடைவெளிமாயத்
திரைதவழ்கடற்பாங்கர்ச்சேர்த்திடவெயின்மழையிற்
புரையறுதவமாற்றிப்புகப்படுமாவணமே. (அரு)

தொகையறுபொருள்பலவுந்தூக்குபுவரைவுசெயும்
தகைபெறுதராசினொடுந்தங்கலின்வணிகரெலாம்
பகையெனவுறவென்னப்படர்தருநோதுமலென
வகைவகைவிலைசெய்யார்வழங்குவரொருவிலையால். (அசு)

தினையளவைப்பொருளுஞ்சிதறுவதிலையாக
வினைபுகழ்வணிகர்பொருள்வைகலுமீட்டிடினும்
இனையவரிரவலர்பாலிமையவராதியர்பால்
பனையளவைப்பொருளும்பயோதரமெனப்பொழிவார். (அஎ)

கொடுப்பதுகுறையின்றிக்கொள்வதுமிகையின்றித்
தொடுப்பவர்தமக்கெல்லாஞ்சுருக்கியவிடைநல்கி
விடுப்பதுங்கலனின்றுவிழுப்பொருள்கொணர்ந்தில்லின்
மடுப்பதுமல்லாதுவணிகர்கண்மற்றறியார். (அஅ)

ஈட்டியபொருண்முழுதுமீட்டநெறியினலாற்
கோட்டமிலிமையவருங்குறித்தறிதரமாட்டார்
நாட்டியபாவலர்களுவலர்தொடுத்ததெல்லாந்
தீட்டுதற்கமைவுபெறுசெறிபலபணையிலையும். (அகூ)

உடுப்பனசுற்றுவனவுடலுறப்போர்ப்பனகள்
படுப்பனவெனப்பலவும்பன்னிறத்துகிளமுடை
யடுப்பனவொருபாலாமவிர்முடிகுழையாரந்
தொடுப்பனவளைமற்றுந்துதைவனவொருபாலாம். (கூ0)

உண்பனபருகுவனவுவப்பொடுநக்குவன
நண்பொடுகடிப்பனவுநலத்தகச்சுவைப்பனவும்
கண்படுமுனஞ்சேய்க்கட்கடிவிடுத்துறுவோர்தம்
ஒண்படுமனம்வாங்கியீண்டுவவொருபாலாம். (கூக)

வருக்கையின்கனிவாழைவண்கனிமாங்கனிகள்
உருக்கிளர்பேரீந்தினொண்கனிமுந்திரிகைத்
தருக்கிளர்கனிதாழைத்தண்கனியெலுமிச்சைத்
திருக்கிளர்கனிபலவுஞ்செறிவனவொருபாலாம். (கூஉ)

கிழங்கெனப்படும்யாவுங்கிளர்கொடிதருப்புதர்கள்
வழங்குபல்காயடகுமலிவனவொருபாலாம்
தழங்குதண்புனன்மலருந்தரைமலர்கொடிமலரும்
முழங்களிதருமலருமொய்ப்பனவொருபாலாம். (கூங)

குங்குமங்கத்தூரிகுரவமல்கியபுழுகு
பொங்கியநறுவாசப்புதுப்பனிநீர்சாந்து
தங்கியபொற்சுண்ணந்தழைத்திடும்விரைச்சுண்ணம்
எங்கணுமணம்வீசியீண்டுவவொருபாலாம். (கூச)

பொன்னினும்வெள்ளியினும்புகழ்நவமணிகளினும்
மன்னியசெம்பினிலும்வயங்குகஞ்சங்களினும்
மின்னுபித்தளைகளினும்வேறுவேறுறச்செய்த
கன்னலொண்குடமாதிகளுலுவவொருபாலாம். (கூரு)

தோளொடுதோண்முட்டத்துடையொடுதுடைமுட்டத்
தாளொடுதாண்முட்டத்தலையொடுதலைமுட்ட
ஆளொடுவாண்முட்டவாணும்பெண்ணொடுமுட்ட
நீளொளிமணிவீதிநிரந்தரித்தனசனமே. (கூசு)

பூசியசந்தனமும்புதுப்பனிநீரோடு
வீசியவிரைப்பொடியுமேவியவாடவர்தம்
தேசிகமணிமார்பஞ்செறிந்தவரூர்தப்பிப்
பேசிடவிலதாயும்பெருமணங்கமழ்கிற்கும். (௯எ)

வழுத்தபவருநீறுமஞ்சளுமுடன்கூடி
விழுத்தகவேற்றுருவாய்விளங்கியவாறேபோல்
எழுத்தொலியுரைவேறுமெழுத்தொலியுரைகூடி
முழுந்தலின்கடலேபோன்முழங்குவவாவணமே. (௯அ)

அரிப்பவரொருநாளைக்காயிரத்தோரிரட்டி
தெரிப்புறக்கைக்கொள்வர்சிந்தியவிழுக்கலனும்
பரிப்பவர்கைவழுக்கிப்பாரிடைவிழும்பொன்னும்
விரிப்புறுமொளிமணியும்வேறுபல்பொருள்களுமே. (௯௯)

தணிவில்பல்பொருள்விற்றுத்தமணியவிலைகொள்வார்
அணிவளர்நியமத்தையறைந்தனமறத்தாற்றுன்
மணிமுதலியநல்கிவானவர்கதிகொள்ளும்
துணிவினர்தொகும்வீதித்தொல்வளமினிச்சொல்வாம். (௧00)

வேறு.

குண்டகரேகோளகரேகானீனர்குலவியசீரந்தராளர்
மண்டுவிராத்தியர்பிரதிலோமரநுலோமரிவர்வகுப்புவெவ்வே
றெண்டகுதத்தமக்கியன்றதொழிலாற்றியிந்திரனைக்கழுத்தங்குன்ற
அண்டர்களுநறுமுறுப்பவமர்ந்துவாழ்தருமறுகுமனந்தமாகும். (௧0௧)

அளகையர்கோன்பொன்வெள்ளியடுக்கலுரத்தார்வுமடாவேனுந்தாமே
வளர்கனகக்கிழிகொடுப்பமதியாமலறங்களெலாம்வளர்ப்பத்தேவிக்
குளமகிழுமேகம்பரிருநாழிநெற்கொடுக்குமுயர்வுபூண்டு
களமிலுழுதொழிற்குரியகாராளர்வீதிகணக்கின்றிமல்கும். (௧0௨)

வேறு.

பொருள்வருவாயினைப்புரியுமாட்சியும்
இருநிலங்காவலுமிருவர்வேந்தரை
மருவுறுச்சந்துசெய்மறுவில்வண்ணமுங்
கருதியமன்னராற்கைக்கொள்வாரரோ. (௧0௩)

மந்திரித்தலைமையுமருவிவாழ்குவர்
வெந்திறற்படைத்தொழில்வீறும்பூணுவர்
தந்தொழிலுழவினுஞ்சாலச்செல்லுவர்
பிந்தியவருணத்துப்பிறந்தமைந்தரே. (௧0௪)

களமலியெருமையுங்களத்துச்செந்நெலும்
களமலியொட்டலர்கனகமாதியும்
வளமெனக்கொண்டுபின்வந்தமைந்தர்கள்
அளவிலவரங்களுமளிக்குநீர்மையால். (௧0௫)

வணிகர்கண்மனைவியர்மைந்தர்தம்மொடும்
தணிவில்பல்வளத்தொடுந்தங்கிவாழ்தரும்
துணிகதிர்மணிபலதுலங்குமாளிகை
அணிவளர்வீதியுமனந்தமாகுமால். (௧0௬)

வேறு.

ஒருவனுயிரைப்பிறர்செகுப்பினூழியூழியவர்நரகின்
மருவியழிவர்பழியுமிகவளருங்களத்துமருவலரைக்

கருவிகொடுகொன்றுயிரவித்துக்கதியிற்ருழுமினிதெய்தும்
திருவினரசர்குடிதுவன்றுஞ்செல்வவீதிபலவாகும். (கoஎ)

வேறு.

உயிரொடுவதைத்துப்பெற்றமொள்ளெரிவாயிற்பெய்தும்
செயிரொடுபழியுமின்றிச்சிறந்தபுண்ணியமுமேலாம்
இயல்புறுபுகழுங்கொண்டேயாவரும்வணங்கிப்போற்றப்
பயிலுறுமறையோர்வீதிபற்பலவாகுமன்றே. (கo௮)

காலங்கடொறுந்தப்பாமற்கடவுளர்க்கவியூணல்கி
ஞாலங்கொண்டாடவந்தநல்விருந்தினரையோம்பி
ஆலங்கொண்மிடற்றுநாதராதியர்தமைப்பூசித்துச்
சீலங்கொண்மறையோர்வீதிசெழுமறைமுழக்கருதால். (கoகூ)

நயத்தகுவேதமோதிநல்லவாகமங்கடேற்றிப்
புயத்தலைச்சூலம்வைத்தபுனிதர்பூசனையாற்பேறு
வயத்துறுதமக்குமேனைவையகத்தெவர்க்குமாக்கும்
வியத்தகுமாதிசைவர்வீதியுமாங்காங்குண்டால். (ககo)

இருண்மலப்பந்தநீங்கியிருமையுங்கான்றசோற்றின்
அருவருத்தகலத்தள்ளியருளொடுமௌவளாவிப்
பருதியிற்கலந்துநிற்கும்பாயொளிவிழியேபோலத்
தெருளொடுங்கலந்துநிற்குஞ்செல்வர்தம்மடமுமுண்டால். (ககக)

எழுத்திலக்கணமுன்னைவிலக்கணமைந்துந்தேர்ந்து
வழுத்தபவிளங்குமற்றைக்கலைகளும்வல்லநல்லோர்
குழுத்தகவிருந்துநாளுங்கோதறுநூல்களாயும்
விழுத்தகுகழகநால்வர்வீதிகடோறுமேவும். (ககஉ)

எங்கணும்புராணஞ்சொல்வோரெங்கணும்புராணங்கேட்போர்
எங்கணுந்தருமச்சாலையெங்கணும்வேள்விச்சாலை
எங்கணுந்தானமீவோரெங்கணுந்தானமேற்போர்
எங்குமங்கலங்கள்செய்வோரெங்குமங்கலங்கள்காண்போர். (ககங)

பூரணகும்பம்வைத்தபுதுமலர்ப்பந்தரெங்கும்
தோரணநிரையிற்றூக்குஞ்சுடர்மணிக்கோவையெங்கும்
வாரணநிரையில்வைத்தவார்கொடித்திரள்களெங்கும்
சாரணரிருந்தெய்ப்பாறுந்தமணியமாடமெங்கும். (ககச)

சிவிகையுங்களிறுமாவுஞ்செழுமணிச்சகடுவட்டக்
கவிகையுங்கருவிமள்ளர்கணங்களுமருதவீதி
அவிர்மணிமாடத்தோடுமெவிர்வனவாழியோடு
புவிபுகழ்மலைகள்போர்க்குப்புக்கபாசறையேபோலும். (ககரு)

பம்பியமாடந்தோறும்பரிசனமருங்குசூழக்
கம்பலம்விரித்துமேலாற்கதிர்மணிவிதானஞ்செய்து
கொம்பனாராடல்பாடல்குலாவுறவிருக்கின்ருர்தாம்
உம்பர்நாடாள்வோரெல்லாமொருங்குவந்திருந்தாரொத்தார். (ககசு)

நஞ்செழுமுன்னர்த்தீம்பானரலையிலெழுந்தோர்வானே
தஞ்சமென்றிருப்பத்தூயதண்ணமிழ்தெழுந்தபின்னர்
விஞ்சுறுவனப்பிற்றோன்றிமேதினியுரித்தென்பார்போல்
மஞ்சணிமாடமெங்கும்வதிகுவர்மங்கைநல்லார். (ககஎ)

ஒருங்கிலாரமாடத்துள்ளுறப்புகைத்துப்பின்னர்
சுருங்கைகடிறப்பநீளுந்தூநறும்புகையினோடும்
மருங்குறத்தவழுநீலமழைக்குலம்வேறுகாட்டா
நெருங்கியமாடங்கற்பினேரிழையவரைக்காட்டும். (கக அ)

மேனிலைமாடத்திட்டவிளக்கொடுசலனமின்றேல்
வானிடையுடுவைவேறுவகுத்தறிதரவொண்ணாது
கானிவர்திலகமுண்டேற்கன்னியர்நுதலினோடு
கூனிளந்திங்கள்வேறுகுறித்தறிதரவொண்ணாதே. (ககக)

வதுவைசெய்காலையன்பன்மருவுமுன்றம்பாற்போகப்
புதுநலநுகர்வித்தாரப்பூரித்துவிட்டபண்பால்
விதுவிளக்கிரண்டின்முன்னும்வெய்யவன்றிருமுன்போலக்
கதுமெனநாணுக்கொள்ளார்கலவியிற்றிளைக்குமாதர். (கஉ0)

கலவியிற்றிளைக்குமாதர்கதிர்பொழிவதனச்செவ்வி
நிலவினைக்கரந்துவௌவிநித்தலுநீங்குமாற்றால்
மலர்தலையுலகமெள்ளமறுவொடுபயின்றுதிங்கள்
இலகியவுருவுந்தேய்வதீச்சுரன்சார்புபெற்றும். (கஉக)

கற்றைமென்குழலினார்கள்கன்னிமைப்பருவந்தன்னில்
பொற்றொடிக்கரங்கள்கூப்பும்புந்திபாவகத்தினானும்
ஒற்றைநாள்வதுவைக்காலத்துவப்பினிதளித்தலானும்
அற்றவாற்றுமற்றிங்களாக்கமும்பயின்றதன்றே. (கஉஉ)

கலவிசெய்காலத்தானுங்கதிர்நகைமுறுவனல்லார்
புலவிசெய்காலத்தானும்பொருக்கெனச்சிதர்ந்தகோவை
இலகொளிமணிவீழ்ந்திட்டவிணையடிவருத்தநோக்கி
நிலனுறநடப்போர்வீதிநெடுங்கழறொடர்ந்துசெல்லார். (கஉங)

ஒருவர்மேலொருவர்வீசுமொள்ளியவாசச்சுண்ணம்
பெருகியபுழுதியானும்பேதையர்சிவிறித்தூநீர்
அருவிபாய்ந்தொழுகலானுமள்ளலுற்றடர்பொன்வீதி
மருவியகழற்காலார்க்குவருத்தஞ்செய்தூர்தியேற்றும். (கஉச)

குழுமியசெம்பொன்மாடக்குடம்பைவாழ்குருவிக்கூட்டம்
வழுவறுமணியாற்பொன்னூல்வன்னிலம்படுத்தமுற்றம்
புழுதிவேறின்மையாலேபூவையபாட்டிற்சிந்தும்
விழுமியசுண்ணப்பூழ்திமிகக்குடைந்தாடிச்சேக்கும். (கஉரு)

மகிழ்நர்தம்புணர்ப்பினின்பவாரியிற்படியும்பெற்றி
முகிளிதங்கொண்டுவாட்கண்மொழிதராவியர்வுமெய்யின்
நெகிழுளந்தனக்கங்கேற்கநிகழ்ந்துகாட்டாதுபொற்பூண்
நகிலரமாதரெவ்வாறெப்பரிந்நகர்நல்லாரை. (கஉசு)

சுந்தரமகளிர்தங்கடொடிக்கையாற்பனிநீர்வாக்கிச்
சந்தனமெருப்பெய்தோம்பத்தளிர்த்தரும்பீன்றதென்னுஞ்
சிந்தையின்மகிழ்வான்மன்றல்செயப்படுமுல்லைசெல்வ
மைந்துறுநிறையுள்ளார்பால்வளர்கொடியாருஞ்சார்வார். (கஉஎ)

அந்தரநெறிகளாகவவிர்கதிர்முதலாங்கோளும்
முந்தொளிநாளுமற்றுமுற்றெழிலுளுநோக்கி
நந்தனமுறுவதிந்நகரமேதுறக்கமன்று
வந்திடுங்கதியுமந்தவான்பொருட்டவற்றுக்கின்றே. (கஉஅ)

தடங்கையினடங்கும்பூவுந்தனங்கள்பாய்ந்தளந்தமார்பும்
இடங்கொளுஞ்செல்வமங்கையிச்சையாறிருந்துவாழ
அடங்கருவனப்புச்செய்தவாடகமாடந்தோறும்
குடங்கையினகன்றவாட்கட்கோதையர்விழாவறாதால். (௧௨௯)

ஐந்துமூன்றடுக்கியிட்டவமளியிற்றுயிலுறாத
மைந்தர்களில்லையாங்குமாதருமனையராறல்
எந்தரத்தடங்குங்கொல்லோவெழினகர்வளங்களங்கு
மந்திரமியற்றிச்சென்னைமல்லீசர்வாழ்கின்றாரால். (௧௩௦)

புண்ணியம்புரிந்தோர்வேறாய்ப்புகப்படுஞ்சிவலோகந்தான்
புண்ணியவுருவுங்காணப்போந்திருந்தனையதாகும்
அண்ணலாலயமவ்வாறேயடுத்துவைகுந்தந்தானு
நண்ணியதனையதாகுநாரணன்கோயிலாங்கே. (௧௩௧)

சென்னைமல்லீசர்சென்னைகேசவரிவரையப்பன்
அன்னையென்றறிந்துபத்தியாற்பணிபுரிகின்றாரும்
முன்னுறப்பணிகின்றாருமுறைமுறைதுதிக்கின்றாரும்
இன்னராய்வாழ்தலுற்றாரிருநிலமாந்தரெல்லாம். (௧௩௨)

அத்தகுகோயிற்பாங்கரவிர்மணிக்கோயில்கொண்டு
சித்திபுத்திகள்வேட்டோர்க்குஞ்சேர்க்குந்தன்னருளேதன்பால்
சித்திபுத்திகளாய்வைகத்திகழ்பிரசந்நவைங்கை
உத்தமனிருந்தான்மும்மையுலகமும்போற்றியுய்ய. (௧௩௩)

வேறு.

ஈங்கார்வத்திருந்தருளும்பிரசந்நவிநாயகர்தாமிறைஞ்சுமன்பர்க்
காங்காங்குவரங்கொடுத்துவிளையாடுங்கதைமுழுதுமகிலந்தேரப்
பாங்கானவடமொழியிற்றொடைசெய்தபிருகுமுனிபரமற்போற்றி
நீங்காமனெடுங்காலமிருந்துமகிழ்ந்ததுமிந்தநகரில்வைப்பாம். (௧௩௪)

மாதர்மணிமுலைச்சுவடும்வளைத்தழும்புமினிதணிந்துமாவின்மூலத்
தேதமுயிர்த்தொகைக்ககற்றவிருந்தருளுமேகம்பரெதிரேவைகி
மாதவமுற்றியகும்பமாதவனற்றமிழ்விரித்துவழங்குங்காஞ்சிக்
கோதியிடுங்குணக்கெல்லையாய்ச்சிறந்துவாழ்வதுமிவ்வுரைத்தவைப்பாம். ()

இயம்புமிருதொடர்பானுமீங்கிருந்தபிரசந்நவிறைவர்நல்கும்
நயம்புணரின்னருளானுநவையறுக்கும்வடமொழியுணடைபெற்றுள்ள
வயம்புணரும்பார்க்கவத்தைச்செந்தமிழாற்புனைந்திந்தவள்ளறண்மேற்
பயம்புணர்வையகம்போற்றச்சாத்திடநின்றேன்வினையைப்பாற்றநின்றேன்

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௪௦.



## நைமிசப்படலம்.



திருத்தகுமார்பன்வேதன்சிவபிரான்மூவரோடு
விருத்திரனுவியுண்டோன்விண்ணவர்பலருமேவி
இருத்தலின்முனிவர்வேள்வியிலங்குநைமிசமாங்கானம்
உருத்தகுமேருவொக்குமுருவமாத்திரமேவேறு. (௧)

ஒருதனுவிடத்தேசாலவிருபிறப்பெய்திமுத்தி
மருவினான்மறையுமோம்பிவளருமைம்பொறியும்வாட்டித்
திருவளர்செயல்களாறுஞ்செய்தெழுபிறப்புமோட்டிப்
பொருவிலட்டாங்கயோகம்பூண்டபுங்கவராங்குள்ளார். (௨)

மணிமுடியமரர்தாழவளர்சடைமோலிதாங்கி
யணிசெய்கற்பகமுஞ்சூழவரையில்வற்கலைகள்சூழ்ந்து
பிணிசெயும்வினைகணீறப்பிறங்கொளிநீறுபூசித்
துணியருட்கண்ணராகத்துலங்குகண்மணிகள்பூண்டார். (௩)

வேறு.

செந்தீவளர்க்கும்பெருஞ்சிறப்பாற்றேவர்க்கவியும்புவியுயிர்கள்
நந்தாதளிக்குமழைவளமுநாளுமுனிவர்கொடுத்ததினால்
சிந்தாகுலம்விட்டலைகடலிற்சிறந்தபகலுமிரவேபோல்
அந்தாமரைக்கண்வளர்கின்றானகிலம்புரக்குமச்சுதனே. (௪)

அவிகண்மிகவுமார்தலினானமலன்விளையாட்டயர்கின்றான்
புவியுண்டவன்கண்வளர்கின்றான்பூவன்மறைகணுவல்கின்றான்
சவிவிண்ணவர்கோனவுணருயிர்தாக்கப்போர்க்குநடக்கின்றான்
குவிபொற்சிகரக்கூவிரத்தேர்க்கோமான்முதலோர்திரிகின்றார். (௫)

படுக்கும்பசுக்களொருபாலாம்பரிந்துசுரக்கும்பால்கறந்து
விடுக்கும்பசுக்களொருபாலாம்வேள்விமுடித்துமறையோர்க்குக்
கொடுக்கும்பசுக்களொருபாலாங்கோலமகளிர்மன்றலுக்குத்
தொடுக்கும்பசுக்களொருபாலாந்தூயமுனிவரிடந்தோறும். (௬)

மறையோதுநருமாகமத்தின்வழிதேர்குநருமங்கத்தின்
துறைநாடுநருங்கற்பத்திற்றொகுத்தவினையிற்சாருநரும்
முறையார்புராணமூவாறுமொழிசெய்குநருங்கேட்குநரும்
குறையாவேள்விமுடிக்குநருங்குழீஇயகுழுவேயெவ்விடனும். (௭)

மதவேள்குடங்கைக்கணையானவழுக்கால்வழுக்கின்முன்விழுந்தாம்
இதமேபுரியுமுனிவரிடமெய்தினமையுஞ்சிவபெருமான்
பதமேவிடுவரெனக்குறித்துப்பனிநீர்த்தடந்தோறுற்பலமும்
சதவாயிரமெல்லிதழ்விரிந்ததண்டாமரையுந்ததையுமே. (௮)

கிழங்குகனிகாய்மதுமலர்கள்கேழ்த்ததளிர்மெல்லிலைசமிதை
வழங்கிமுனிவர்க்குவப்பாக்குமாசிலாதபெருந்தவத்தால்
பழங்கண்சிறிதுமறியாமற்படர்தங்கிளைகளுடன்றுவன்றும்
தழங்குபுகழ்நைமிசவனத்துத்தருவுங்கொடியும்பலவுமே. (௯)

தரங்கக்கடலிற்புத்தமுதுந்தவளமதியிற்சுவையமுதும்
புரங்கள்கடந்தபுண்ணியனூற்புசிக்குமமரர்க்கவியுணவும்
இரங்கியவனேகொடுப்பினலாலியாவர்கொடுப்பாரவனுருவாய்
வரங்கொளழன்மாதவர்கொடுப்பவாங்கிச்சுரர்க்குவழங்குமே. (௧௰)

தவத்தால்வேள்வியாற்றுதலாற்றாங்கண்மிகவுமுடல்வருந்தி
அவத்தாலுலகமனைத்தினையுமழியாதளிக்குமுனிவரர்கள்
சிவத்தான்மலமற்றுயர்வீட்டிற்சேர்ந்துவாழ்வதலதுதவந்
துவத்தான்மயங்குமமரர்கதிதுன்னநினையாரொருகாலும். (௧௧)

பொற்றாமரையோன்மனத்தெழுந்துபோந்தோர்நேமிதவம்புரிய
நற்றாரணிவேறின்றெனவேநாட்டியமர்ந்தநைமிசத்து
வற்றாவளமும்பெருமையுமார்வகுப்பாரந்தவனத்திருந்து
முற்றாவிழைவிற்சவுனகமாமுனிவன்வேள்விதொடங்கினான். (௧௨)

வேறு.

வெண்டிருநீற்றினர்விளங்குகண்டிகை
கொண்டொளிருரத்தினர்குடங்கைக்குண்டிகைத்
தண்டினரனைவருஞ்சார்ந்துநைமிச
மண்டினர்சவுனகன்மகத்தைக்காணவே. (௧௩)

ஏதநீற்றிடும்பதினெண்புராணமும்
காதலாலுணர்ந்தவன்காலகாலன்றன்
பாதமேயல்லதுபணிதராதவன்
சூதமாமுனிவனுந்துன்னினனரோ. (௧௪)

சயமலிநைமிசஞ்சார்ந்துளார்களும்
அயனிலத்திருந்துசென்றடுத்துளார்களும்
புயலெதிர்மயிலெனப்பொங்குமோகையின்
நயமொழிமுனியெதிர்நண்ணிச்சூழ்ந்தனர். (௧௫)

திருத்தியவாதனச்சேக்கைமீமிசை
இருத்தினர்பூசனையியற்றிக்காதையின்
அருத்திமிக்கவனிருந்தயர்வுயிர்த்தபின்
கருத்துறுவிழைவினாற்கரைதன்மேயினார். (௧௬)

பண்டுறுதவந்தொறும்பண்ணிமுற்றிய
மண்டுபுண்ணியத்தினால்வரம்பின்மாதவ
அண்டரும்வியத்தகுமடிகளும்மையாம்
கண்டனங்கடந்தனங்கலந்தமாயையே. (௧௭)

வேறு.

ஓதியமறைகடம்மாலுறுபயனெளிதுபெற்றும்
நீதியின்யாங்கணிற்குநிலைகளும்வழுவிற்றீர்ந்த
மோதியவினையராகிப்பிதிரருமுத்தரானார்
காதியைம்பொறிவென்றுயைக்கண்ணுறக்காண்டலாலே. (௧௮)

எந்தமைப்பயந்தபேறுமிருமுதுகுரவர்பெற்றார்
வெந்துயர்விளைக்குமாயவினையுடல்விடுத்துமண்மேல்
வந்திடுபயனும்யாங்கண்மருவினம்பெறும்பேறெல்லாம்
மைந்துறவுடையோம்யாமேமன்னுமாதவர்களேறே. (௧௯)

எங்களுக்கும்மைப்போலவிராறுடனாறுகூட்டித்
தங்கியபுராணமுற்றுஞ்சாற்றவல்லவர்கள்யாவர்
அங்கவையனைத்துமுன்னரருளினலருளிச்செய்தீர்
புங்கவரேறேவேறுபுராணமுங்கூறல்வேண்டும். (௨௦)

தவவலிச்சவுனகன்செய்சத்திரவேள்விக்கோதும்
அவதியின்பன்னீராண்டுமடிகள்பாற்புராணக்கேள்வி
உவகையிலமுதமாந்தியுறுசுகம்பெறுவதன்றிக்
கவர்மனத்தடியேஞ்செய்யுங்கடப்பாடுவேறொன்றில்லை. (௨௧)

பத்தியினிவ்வாறெல்லாம்பகர்ந்தமாதவரைநோக்கி
முத்தியைவிழைந்தசூதமுனிவரன்மகிழ்ந்துசொல்வான்
வித்தினைவித்தியல்லால்விளைபயன்கொள்வார்யாவர்
பொத்தியவிறைவன்மாண்பும்புகன்றிடார்புரையினீங்கார். (௨௨)

நடுநிலைபிழைத்தலின்றிநண்ணறிவுடையராகிக்
கொடுவினைபலவுநீக்கிக்கொழுந்தெழுமன்பராகிப்
படுமனத்துறுதியோடுபெண்பினர்கேட்கப்புக்கால்
விடுவதுபுரியாதெந்தவிதத்தையும்விளம்பவேண்டும். (௨௩)

குலத்திழுக்கின்றிப்புத்திகூர்மையினிகர்ப்பாரின்றி
நலத்தகுதவந்தானங்கணாடொறுமினிதுபோற்றி
அலத்தகமணிந்தபாதத்தம்பிகைபாகர்பத்திக்
கலத்திணையிகந்தீர்கேள்விக்கடல்கடவாமையுண்டோ. (௨௪)

பகைநகைநொதுமலின்றிப்பல்லுயிர்மாட்டுமொத்த
தகைபெறுமுளத்தினார்கடாம்விழைகாரியங்கள்
மிகைபடர்ந்துலகுக்கெல்லாம்விழுப்பயன்பயந்தேநிற்கும்
வகையறிமுனிவிர்நீயிர்நல்லதேமதித்திட்டீரால். (௨௫)

கரும்புதின்பார்க்குக்கூலிகையிடைக்கொடுப்பார்போல
விரும்பியவெமக்குமேலும்விழைவினைவிளைத்தீர்நும்பால்
அரும்பியகாதன்முற்றவறைகுதுமென்றுமுன்னர்ப்
பெரும்பயனளிப்பதோர்ந்துபேசுவானிதனைச்சொன்னான். (௨௬)

நைமிசப்படலம் முற்றிற்று. ஆகத்திருவிருத்தம்-௩௩௬.

## புராணவரலாற்றுப்படலம்.

பகர்பிரமம்பதுமம்வயிணவமேசைவம்பாகவதம்பவுடிகநாரதமார்க்கண்டம்
திகழ்ந்தபண்ணவர்க்குரியவாக்கிநேயஞ்செறிபிரமகைவர்த்தமிலிங்கம்யார்க்கு
மகிழ்வுபுரிவராகமேகாந்தமோடுவாமனமேகூர்மமச்சியங்காருடம்
புகரில்பிரமாண்டமெனுமிவைமூவாறும்புகல்கிரந்தநாலிலக்கம்புகலக்கேட்டீர்.

இத்தகையபுராணமூவாறுமேனாளிலங்குகைலாயவரையிறைவன்பாதப்
பத்திபுரிநந்திசனற்குமாரற்கோதப்பணிந்தவன்பால்வியாதமுனிபரிவாற்கேட்டு
மெத்தியதீவினையோடப்பார்மேற்சாலவிளக்கியதுபோன்முனிவர்வேறுவேறு
புத்திமகிழ்வொடும்வழியேகேட்டுச்செய்தபுகரிலுபபுராணமூவாறுண்டாமால்

சாற்றுசனற்குமாரமேநாரசிங்கந்தகுகாந்தஞ்சிவதருமந்தழைதுர்வாசம்
போற்றியநாரதமேகாபிலமெல்லோரும்புகழுசனஞ்சவுனகமாம்பிரமாண்டஞ்சீர்
மாற்றரும்வாருணங்காளிபுராணமேத்தும்வாசிட்டமிலிங்கமொடுசவுரம்பாவம்
பாற்றியபாராசரியமாரீசம்பார்பகர்சாம்பம்பார்க்கவமென்றவற்றின்பேராம்.

வேறு.

விலக்கருமுனிவர்தம்மால்விளங்கியவுபபுராணம்
துலக்கியகிரந்தமெல்லாந்தொகையொரிலக்கமாகும்
அலக்கணையறுக்குமந்தப்புராணமூவாறனுள்ளும்
நலக்கும்பார்க்கவபுராணநாயகமாகிநிற்கும். (௪)

பிரணவப்பொருளாய்ப்பேதமபேதமேபேதாபேதம்
வரமலிபொருளாயொன்றாய்வரம்பிலாவின்பமாகும்
பரவியவைங்கைப்புத்தேண்மான்மியம்பகருநீரால்
விரவியபார்க்கவத்தைவிநாயகபுராணமென்பார். (௫)

புண்ணியந்தருங்கணேசபுராணமுன்கைலைவெற்பில்
நண்ணியவெண்டோண்முக்கணாதனருளிச்செய்யப்
பண்ணியதவத்தால்வேதன்பணிந்துறக்கேட்டுப்பின்னர்
எண்ணியவியாதமேலோனிறைஞ்சிடவியம்பினானே. (௬)

வேரியங்கமலப்புத்தேள்விளம்பியமுறைமையோடே
சீரியவியாதமேலோன்றெளித்திடத்தவங்கள்சான்ற
கூரியபிருகுவென்பான்குரைகடலமிழ்தமென்ன
ஆரியமொழியாற்செய்யுளாக்கினனகிலமுய்ய. (௭)

கருதுபாசனையேலீலாகாண்டமென்றப்புராணத்
திருவகையாகுங்காண்டமிருநூற்றைம்பதுகாண்டத்துள்
மருவியவத்தியாயமற்றிவையெல்லாங்கூறும்
பொருவருகிரந்தம்பன்னீராயிரம்பொருந்தாநிற்கும். (அ)

பாடியதலைவன்பேராற்பார்க்கவபுராணமென்றும்
பாடியசெய்யுட்கொள்ளும்பாட்டுடைத்தலைவன்பேரால்
பாடியல்கின்றகாணபத்தியமென்றும்யாரும்
பாடியவாயராகிப்பயன்மிகப்பெற்றுநின்றார். (௯)

புரையறவிளங்குமிந்தப்புராணத்தைச்செம்பொன்மேரு
வரையெனக்குணமேம்பட்டமாதவப்பிருகுவென்பான்
அரையருக்கரையன்சோமகாந்தனுதரவிற்கேட்பக்
கரையறுகாதல்பொங்கக்கட்டுரைத்திட்டானன்றே. (௧0)

வேறு.

நித்தியமாய்நிர்க்குணமாய்நின்மலமாய்நிரஞ்சனமாய்நினைவுக்கெட்டாச்
சத்தியமாய்த்தற்பரமாய்த்தத்துவமாய்ச்சச்சிதானந்தமாகி
அத்துவிதப்பொருளாகியகண்டபரிபூரணமாயமலஞானம்
மெத்தியவுள்ளகத்தமர்ந்தவிநாயகமான்மியந்தவத்தோர்விரும்பிக்கேட்பார்.

விருத்திரனைக்கொன்றுனான்முகனுமதுவுயிரைவீட்டினானும்
உருத்திரனும்வழிபடுமாறேங்குமொருதனிமுதலாயுலகுக்கெல்லாம்
கருத்தனுமாய்விளையாடுங்கணபதிமான்மியங்கணக்கில்பிறவிதோறும்
பொருத்தமுறத்தவம்புரியார்விரும்பினுமற்றவர்செவியிற்புகாதோர்நாளும்.

எவனுடையவாணையினுற்பிரமனுக்குச்சிருட்டியுமெவ்வுயிரும்வாழ
உவணமுயர்த்தவற்களிப்புமுருத்திரனுக்குலகமெலாமொடுக்கும்வீறும்
பவனனுக்குவீசுதலும்பாற்கரற்குச்சரித்தலும்பன்னாளும்வைகும்
அவனுடையமான்மியத்தைநாத்திகர்பாதகர்முதலோரறியமாட்டார். (௧௩)

மறையிடத்துமரியயனிந்திரனதியமரர்மதியிடத்துந்தோன்று
துறையுமொருபொருடன்னைவழிபடுவோர்தமக்கருளாலுருவுகொண்டு
நிறையவரங்கொடுத்தசரித்திரமனைத்தும்விளக்கிநிலைபேறுசெய்த
குறைவிலமிப்புராணத்தைக்குறித்தவர்க்குநாற்பயனுங்கூடுமென்றே. (௧௪)

தங்குபெரும்புண்ணியத்தாற்கேட்டவர்க்குப்பந்தமெலாந்தகரநூறும்
ஐங்கைமதகுஞ்சரத்தின்சரித்திரமெல்லாம்பிரமனுதிசேடன்
இங்கிவர்க்குமுரைப்பரிதாயினுந்தொகுத்துவியாதமுனியியம்புமாறே
நுங்களுக்குமொழிவலெனநோற்றவருந்தவச்சூதனுவலப்புக்கான். (௧௫)

புராணவரலாற்றுப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௯௫௧.



## பதிகம்.



மதிமிகுஞ்சோமகாந்தன்வனம்புகத்துணிந்தவாறும்
கதிதருமகற்குநீதிகடைப்பிடித்துரைத்தவாறும்
விதியுளியபிடேகித்துவேந்தவற்களித்தவாறும்
பதியகன்றில்லாளோடும்படர்ந்துகான்புகுந்தவாறும். (௧)

ஆங்குறைபிருகுவென்னுமமைவனையடுத்தவாறும்
தீங்கருமுனிவன்பண்டுசெய்வினையிரண்டும்வெவ்வே
றாங்குவற்குரைத்தவாறுமொளிர்மணிமோலிவேந்தன்
தாங்கியபிரமசாயையொடும்பிணிதவிர்த்தவாறும். (௨)

மறைதெரிவியாதன்புந்திமயங்கினாண்மலரின்வைகும்
இறைவனையடுத்தவாறுமிபமுகன்மனுவைவேதன்
முறையுளிவியாதன்காதின்மொழிந்ததுங்கணேசன்பாத
நறைமலர்மூவருந்தாநயந்துபாசித்தவாறும். (௩)

முத்தொழின்மூவருக்குமுன்னவனளித்தவாறும்
மெத்தியவிசுவமெல்லாம்விளங்குதன்னகட்டன்னோரை
உய்த்தனன்றெரித்தவாறுமுலகயன்படைத்தவாறும்
சித்திபுத்திகளைநாதன்றிருமணம்புரிந்தவாறும். (௪)

மாறுயர்மதுகைத்திண்டோண்மதுகயிடவரைக்கொல்ல
வாறெழுத்தரவப்பள்ளியமரனாதரித்தவாறும்
வீறுபுத்திரனிலாமல்வெறிவனமடுத்தவீமன்
தேறியவிச்சுவாமித்திரன்கழல்சேர்ந்தவாறும். (௫)

புக்கவேல்வீமனுக்குப்புகன்முனியவன்குலத்துத்
தக்கனோய்தீர்ந்தவண்ணஞ்சாற்றியவாறுந்தக்கன்
முக்கலருபதேசங்கொண்முறைதெரித்திட்டவாறும்
தக்கன்முற்பிறப்பிற்சாபந்தாங்கியதுரைத்தவாறும். (௬)

உற்றவித்தக்கன்பண்டைச்சனனத்திலுயிர்த்தமைந்தன்
பற்றிலனாகிமுத்திபடர்ந்தமையுரைத்தவாறும்
கொற்றவனாகவேழங்கோதையைச்சூட்டத்தக்கன்
அற்றமில்விதர்ப்பதேயமாண்டமையுரைத்தவாறும். (௭)

அந்தமாதவனவ்வீமற்கருண்மனுப்புகன்றவாறும்
மைந்தனாகியவுருக்குமாங்கதன்முகுந்தைசாபம்
தந்திடமெலிந்தவாறுஞ்சார்ந்துநாரதனன்னாற்கு
வெந்திறற்சாபத்தீர்வுமேதகவுரைத்தவாறும். (௮)

இந்திரன்சாபம்பெற்றதியம்பியவாறுந்தேவர்
மந்திரிகவுதமன்பான்மனுப்பெற்றதுரைத்தவாறும்
இந்திரற்கதனையன்னானியம்பியதறைந்தவாறும்
இந்திரன்பூசையாற்றிவிண்ணின்மேலிருந்தவாறும். (௯)

உருக்குமாங்கதன்பின்முத்திகிளையொடுமுற்றவாறும்
திருக்கறுதந்தைபான்மந்திரங்கிருச்சமதனென்பான்
உருக்கமொடுற்றவாறுமுவன்வரம்பெற்றவாறும்
பெருக்குறுவரங்கனோற்றுத்திரிபுரன்பெற்றவாறும். (௧௦)

திரிபுரனுலகமூன்றுஞ்சென்றரசாண்டவாறும்
அரிமுதற்றேவரன்னானறவரம்பெற்றவாறும்
உரியநல்வரநஞ்சுண்டவொருவனும்பெற்றவாறும்
அரியயற்கரியானந்தமுப்புரமழித்தவாறும். (௧௧)

இமையவெற்பரையன்பாங்கரோம்பன்சதுர்த்திநோன்பை
உமையவள்கேட்டவாறுமுவந்தவனோற்றவாறும்
கமைபெறுபிருகுசொல்லக்கருத்தமனோற்றவாறும்
அமைகவுதமனாங்கோதானமனுட்டித்தவாறும். (௧௨)

சுந்தரமனைவிநோற்பத்தொக்கபாதலத்தினீங்கிச்
சந்திராங்கதன்மண்வந்துதானுநோற்றிருந்தவாறும்
மைந்துறுமவுணர்த்தாக்கமயிலூர்திநோற்றவாறும்
வெந்ததன்னுருவம்வேண்டிவேண்மதனோற்றவாறும். (௧௩)

மாதொருபாகர்சீறவலியழியாதிசேடன்
கோதறநோற்றவாறுங்கொற்றவன்சூரசேனன்
பூதலம்விமானத்தோடுபொருக்கெனவிழிந்துநின்ற
மேதகுமகவான்றன்னைவியப்புறவினையவாறும். (௧௪)

மருவுசங்கடசதுர்த்திவாளந்தன்பிதிரர்சேரப்
புருசுண்டிநோற்றவாறும்புத்திரப்பேறுவேண்டிக்
கிருதவீரியன்கானத்துக்கெழீஇத்தவம்புரிந்தவாறும்
கருதுகோளாகவேயங்காரகனோற்றவாறும். (௧௫)

எள்ளியேரம்பன்பாங்கரெய்தியசாபஞ்சோமன்
தள்ளுறநோற்றவாறுஞ்சங்கடசதுர்த்திநாளில்
கொள்ளுறும்புத்தியின்றிக்குளிராறுகிறைவற்கிட்டுத்
துள்விடைகரம்புலைச்சிதூயவீடடைந்தவாறும். (௧௬)

குறுகனலாசுரப்பேர்க்கொடியனைவிழுங்கும்வெம்மை
யறுகருச்சனையான்முக்கணங்கரனீத்தவாறும்
வறியவன்செல்வமெய்தவளராறுகொன்றுவாங்கி
இறையவனுகர்ந்துபல்வேறதிசயமிழைத்தவாறும். (௧௭)

வரக்கவுண்டின்னியன்றன்மனைவியோராறுதூக்கித்
தரக்கனகங்கண்மூவர்சகலமுநிகராவாறும்
அரக்கனேகிராதனென்னுமவர்வன்னியிலையொன்றர்ச்சித்
திரக்கமிக்குறுமேரம்பனெழிலுலகடைந்தவாறும். (௧௮)

இரணியகசிபைத்தாக்கவிந்திரைமணாளற்காற்ற
வரமினிதளித்தவிண்டுவிநாயகர்மலர்த்தாள்போற்றிக்
கரவின்மாவலியைவென்றுவாமனன்களித்தவாறும்
அரவகலல்குற்கீர்த்தியருமகப்பயந்தவாறும். (௧௯)

வன்னியின்பூசைப்பேற்றால்வல்விடத்தவிந்தகீர்த்தித்
தன்மகனுய்ந்தவாறுஞ்சமியுமந்தாரன்றானும்
வன்னிமந்தாரமானவாறும்வானவர்கள்சாபம்
அன்னவர்மனைவிமார்களருச்சிப்பத்தீர்ந்தவாறும். (௨0)

கிப்பிரப்பிரசாதன்றன்கிளர்வரம்பெற்றவாறும்
ஒப்பறுகிருதவீரியன்மகவுயிர்த்தவாறும்
வெற்பிலிந்திரவிமானம்விண்ணிடையெழுந்தவாறும்
தப்பறுசூரசேனன்முத்தியிற்சார்ந்தவாறும். (௨௧)

பராவியபரசுராமன்பல்வரம்பெற்றவாறும்
இராவணன்பணிந்தவாறுமகத்தியனிறைஞ்சுமாறும்
விராவுகாசிபன்முன்னோனோர்பூசனைவிளைத்தவாறும்
அராவகட்டைசைத்தோனுமமாயிரம்புகன்றவாறும். (௨௨)

கணனெனுமரசனேனாற்கபிலமாதவன்கைச்சிந்தா
மணிகவர்ந்தரம்புசெய்யமாதவன்போற்றிச்செய்த
இணரெரிவேள்வினின்றுமெம்பிரானவதாரஞ்செய்
தணிவகுத்தமர்ந்தன்னைனையழித்ததுமீட்டவாறும். (௨௩)

அம்புயக்கிழவன்மேனாளாவிப்பவதனிற்றோன்றி
உம்பர்கண்முதலோர்க்கின்னலுறுத்துசிந்தூரன்றன்னை
அம்பிகையிடத்திற்றோன்றியடற்கரிமுகவனாகித்
தம்பிரான்கொன்றெல்லோர்க்குந்தண்ணருள்புரிந்தவாறும். (௨௪)

வேந்தபிநந்தனன்றன்வேள்வியோடேனையோர்தங்
காந்தெரிவேள்வியாதிகருமமுங்கெடுத்துத்துன்பே
ஈந்தவிக்கினனாதனிருடிபார்சுவர்பாற்றோன்றிப்
போந்தமாத்திரத்திற்றாழ்த்திப்புவனங்கள்காத்தவாறும். (௨௫)

தூமறைகவரச்சங்காசுரனிறைமறையோனாகி
மாமறைவழக்கஞ்செய்துவருங்கமலாசுரன்றன்
ஏமவல்லுயிரைவேள்வியிடத்தினின்றெழுந்தமஞ்ஞைக்
காமருபறவையூர்ந்துகறுத்தருள்புரிந்தவாறும். (௨௬)

சிந்துரவென்றுரைக்குந்தீயோன்றேவரைச்சிறையில்வைப்ப
அந்தரியிடத்தேரம்பனவதரித்தவுணர்செய்த
வெந்திறன்மாயையெல்லாம்வென்றவன்றனையுங்கொன்று
நந்தியவேதநீதிவழங்கநன்றளித்தவாறும். (௨௭)

மாதவனென்னுமன்னன்மணமகள்சுமுதையென்பாள்
மாதவம்புரியவனாண்மருங்கொருபாலனாகி
ஏதமற்றவட்குச்செய்தவெறுழ்வலித்தூமன்றன்னைப்
பாதலத்தவிந்துவீழப்பராபரன்முனிந்தவாறும். (௨௮)

பெருமறைக்காதியானபிரணவமனுவினின்றும்
பொருகளிறீசனாகப்பொருந்துமைபிடியாய்க்கூடித்
தருமொருதோன்றலாகித்தந்திமாமுகனைச்சாய்த்து
வெருவுறுமாயன்சாபம்விநாயகன்றீர்த்தவாறும். (௨௯)

கருதியதருளேரம்பன்கசியபனதிதியோடு
பொருவறுதவங்களாற்றப்புத்திரனவர்கட்காகித்
திருகியமனத்துத்தேவாந்தகனராந்தகனைச்செற்று
மருவுதனுலகங்காசிமன்னனுக்களித்தவாறும். (௩௰)

சுரர்துயரகற்றிவெற்பின்றோகையானனத்திற்றோன்றி
விரவருள்வழங்குந்துண்டிவிநாயகனானதேவன்
அரவணிவிசுவநாதனணிநகர்க்காசியெய்த
வரமலிதிவோதாணன்மெய்மனத்தினைத்திரித்தவாறும். (௩௧)

விடமணிமிடற்றினானேவிநாயகனாகிச்சென்று
மடமறுமரீசிதன்பால்வல்லபையாகிவைகும்
தடவரைமாதைவேட்டத்தழலெதிர்மாயோனீன்ற
இடர்தபுமாதரார்பன்னிருவரைமணந்தவாறும். (௩௨)

மாயவன்விநாயகன்பான்மற்றவன்கீதைகேட்டுத்
தூயமெய்ஞ்ஞானானந்தத்தொல்லியல்புணர்ந்தவாறும்
மேயவிப்புராணங்கேட்டவியாசரேரம்பற்போற்றி
ஆயுமிப்புராணமெல்லாமணிபெறவிரித்தவாறும். (௩௩)

பன்னியபிருகுதன்பாற்பார்க்கவபுராணங்கேட்ட
மன்னவன்சோமகாந்தன்மழைமதக்களிற்றுத்தேவன்
தன்னுலகடுத்தவாறுஞ்சாற்றினன்சூதமேலோன்
அன்னவனுரைத்தவாறேயவையெலாம்புகலப்புக்கேன். (௩௪)

பதிகம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம்—௩௮௫.



உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# விநாயகபுராணம்.

## முதலாவது உபாசனுகாண்டம்.

### க-வது சோமகாந்தன்வனம்புகத்துணிந்தபடலம்.

கன்னியிளவாளைகயநின்றுமிசைவாவத்
துன்னியபசுங்கமுகின்மீதுவளர்தாவி
அன்னமெதிர்பாய்ந்தலகின்வவ்வியமர்தேயம்
தன்னிகரிலாதசவுராட்டிரமென்றுண்டே. (க)

நாவலர்களுவினிடைநாட்டியவந்நாட்டில்
ஏவலரமாதருமியற்றவெழின்மிக்க
ஓவமனையார்புரியுமோரைமலிசோலைத்
தேவநகரென்றுதிசைபோமிசையதுண்டே. (உ)

மாந்தர்மகிழ்கூரவளமாநகரிருந்தே
ஏந்துதிணிதோளினிருமாநிலனிறுத்தும்
போந்தமரின்வேந்தர்புறங்கண்டுவெருஞ்சோம
காந்தனெனுமன்னனருளாற்கடலைவென்றான். (ங)

தக்கவறிவாலமரர்தங்குருவைவென்றான்
மிக்கபொறையானெடியமேதினியைவென்றான்
தொக்கவொளியாலிலகுசூரியனைவென்றான்
நக்கபுகழாலுவவுநாண்மதியைவென்றான். (ச)

ஆணையதனல்வடவையங்கியினைவென்றான்
கோணைவலியாற்குலவுமேருவரைவென்றான்
ஏனையுறுமூள்வலியினேரிமையம்வென்றான்
வீணைவினையான்மிதுனகின்னரமும்வென்றான். (ரு)

கைக்கொடையினுலெழுகரும்புயலைவென்றான்
மெய்க்கணழகாலுருவவேண்மதனைவென்றான்
வைக்குநிதியாவளகைமன்னவனைவென்றான்
எக்குமிகுபோகமதிலிந்திரனைவென்றான். (சு)

தெள்ளுகலையாற்பெரியசேடனையும்வென்றான்
உள்ளமகிழ்நான்மறையுமோதியதிறத்தால்
தள்ளரியநீதிபுகல்சாத்திரமறிந்தான்
தொள்ளையறுதத்துவசொரூபமுமுணர்ந்தான். (எ)

வேறு.

உருவவானேதீவினையையொறுக்கும்வித்தியாதீசன்
மருவுகேமங்கரனன்மைவளர்க்குஞானகெம்மியனே
பொருவில்சுபலனெனவைவர்புரைதீரமைச்சருளர்பகைஞர்
குருதிபருகித்தசைதெவிட்டுங்கூர்வேற்சோமகாந்தனுக்கே. (அ)

ஓதியுணர்ந்தமதியொளியாற்குடையபொறிபோற்பயப்படலான்
நீதியுணர்ந்துவழிநிற்குநிகரிலமைச்சர்தமைக்கூட்டிக்
கோதிலுலகம்பொறிபத்தாக்கூறக்கோமான்பணிமுடித்திட்
டேதிலரையர்நிலங்கொள்ளவெண்ணுமெண்ணம்பெரிதுடையார். (௯)

கிரணமெறிக்குமணிக்கொடிஞ்சிக்கிளர்தேர்மூவாயிரத்திரட்டி
கரடமதங்கொப்பளித்திழியுங்களிறுபதினாயிரமாகும்
விரவுநிறத்துப்பலபரியும்விளம்பிற்பதினாயிரத்திரட்டி
அரவமலியும்படைத்தானைக்களவின்றுகுமவன்றனக்கே. (௧௦)

கற்பால்வடமீன்புறங்கண்டாள்கவினாலிரதிசசிகமலை
பொற்பாரரம்பைதிலோத்தமையைப்பொருதுபுறங்கண்டாளரையன்
இற்பாற்கிழமைபூண்டறங்களெடுத்தாள்சுதன்மையெனும்பெயராள்
நற்பார்சோமகாந்தனுயிரிரண்டாமென்ன நண்ணினாள். (௧௧)

இன்னசுதன்மைவயிற்றுதித்தானேமகண்டனெனும்பெயரான்
கொன்னும்பதினாயிரம்யானைக்கோணைவலியான்பகைத்தெதிர்ந்த
மன்னர்நடுங்கப்புகையுயிர்க்குமடங்கலனையானிவர்பலரும்
துன்னவளர்செங்கோலோச்சிச்சோமகாந்தன்வாழ்ந்திடுநாள். (௧௨)

பண்டுபுரிந்ததீவினையாற்பாழியுடம்பிற்குட்டநோய்
மண்டியெழுந்துநிணங்குருதிவழியுமுடைநீர்சீயனைத்துங்
கொண்டுமணிமந்திரமருந்துகுறித்துப்புரியுந்தொறுமந்தோ
மிண்டிவளரவெய்துயிர்த்துவேந்தன்வெறுத்தங்கிதுசெய்தான். (௧௩)

வேறு.

வயமலிமடங்கலேற்றணையின்வைகியே
வியவரினமைச்சரைவிளிப்பமற்றவர்
பயனுறவந்தடிபணிந்தெழுந்தபின்
நயமொழியாலுளைநைந்துகூறினான். (௧௪)

பொருந்தலர்பகைகெடப்பொருதுவென்றனென்
திருந்தியவுலகெலாஞ்சிறப்பிற்காத்தனென்
மருந்துணுமமரர்க்குமகமுமாற்றினென்
விருந்தினர்முகமலர்விளக்கங்கண்டனென். (௧௫)

சோலையோடறக்குளந்தொட்டுமோதனச்
சாலையோடனைத்துளதருமமாக்கியும்
ஆலைவாய்க்கரும்பெனவடர்க்குநோய்தவிர்
நூலையானறிந்திலனுனித்தகேள்வியீர். (௧௬)

சோமனேயெனவொளிதுலங்குமாட்சியாற்
சோமகாந்தப்பெயர்துன்னினேனுடல்
நாமநோயழிக்கவுநாட்டினீங்குறுத்
தோமறுவுளத்தையுஞ்சுடுதல்வேண்டுமோல். (௧௭)

ஐந்துமூன்றடுக்கியவமளிமீமிசை
இந்திரனணவீற்றிருந்ததேசற
நொந்தும்வாழ்ந்திருக்கவேநோக்குமென்னுடல்
சிந்தவேவாளினாற்சிதர்த்தல்வேண்டுமோல். (௧௮)

பலபலவுரைப்பதென்பண்டைநீர்மையும்
குலவியிப்பொழுதுநோய்குமைக்குநீர்மையும்
புலமையின்மிகுந்துளீர்புந்திசெய்மினோ
நலவழியினிவனநாடிச்சேறலே. (கக)

என்னினுமேம்படுமேமகண்டனை
மன்னிநும்மோடுமோநிலத்தைக்காக்குமா
பன்னிநம்பொறையவன்பாங்கராக்குதும்
தன்னினுமென்னினுஞ்சார்மினென்றனன். (உ0)

ஆர்ந்தவுள்ளகத்துயரலைப்பவங்ஙனே
சோர்ந்தனனணைமிசைச்சூழ்ந்துளாரெலாம்
ஈர்ந்தவுள்ளத்தராயேங்கியண்மையிற்
சார்ந்தவன்படுந்துயர்தாமுமெய்தினர். (உக)

கண்டவர்சிலருளங்கரைந்துகண்கணீர்
கொண்டனர்சிலர்கரங்குலைத்திட்டார்சிலர்
துண்டமேற்சுட்டுவார்விரல்வைத்தாருடன்
மண்டியநோயினைவைதிட்டார்சிலர். (உஉ)

தெய்வநொந்தனர்சிலர்சிலர்நெரித்திரு
கைவருந்தினர்சிலர்கையினொற்றுபு
மெய்வருந்தினரினிவியாதிதீர்ந்திவர்க்
குய்வுமுண்டோவெனவுழிதந்தார்சிலர். (உங)

கல்வியிற்கேள்வியிற்காக்குநீதியின்
வல்லவர்க்குறுங்கொலிவ்வருத்தமென்குவர்
தொல்வினைப்பயனெவர்துடைப்பரென்குவர்
அல்லலுற்றிவ்வகையழுங்கினொரெலாம். (உச)

அக்கணமவர்தமையமைச்சர்கையமைத்
துக்கணைகிடந்தவனுழைச்சென்றொண்செவி
சுக்குவைத்தூதினர்துலங்குமாணெழின்
மிக்கசார்ந்தாற்றியால்வீசுவித்தனர். (உரு)

சோகமங்கொழிதரச்சோமகாந்தனும்
நாகணையுறங்கியநாமச்சக்கர
மேகமங்கெழுந்தெனமெல்லவேயெழுந்
தேகனதிணையடியிதையத்தெண்ணினன். (உசு)

வெந்திறலானுளவிளைவுநோக்கிய
மந்திரத்தலைவர்கள்வணங்கிக்கூறுவார்
இந்திரன்போலவேயிகல்கடந்தெமைத்
தந்தைதாயினுமிகத்தாங்கினின்றனை. (உஎ)

அனையநீயழிபிணியடர்க்குஞ்செவ்வியின்
இனைதருவனத்திடையேகவிட்டுநன்
மனையிடைவாழ்துமேன்மதியின்மிக்குளேம்
தனைநிகர்தருமமுநகைக்குஞ்சாலவே. (உஅ)

இருவகையறம்பொருளீட்டியாணையாம்
உருகெழுதிகிரிநன்குருட்டிநீதிநூல்
கருதியவாறுநின்காதற்புத்திரன்
ஒருவனேயுலகெலாமோம்பவல்லனே. (உகூ)

வகைபெறுமுலகவன் மதித்தூக்காக்குமேற்
புகையுயிர்த்தழலுமிழ்புலவுவேலினோய்
தகையுநின்றுணையாலீங்குத்தங்கினு
மிகையலால்யாமெலாம்வேண்டுமொறிலை. (௩௦)

ஆகையானின்னுடனரியகானகம்
போகுமாதுணிந்தனம்பொருவின் மன்னவ
வாகைமென் மணிப்புயத்தேமகண்டனை
ஓகையாலரசினுக்குரிமைசெய்கென்றார். (௩௧)

வேறு

இன்னவாறுநிகழ்ந்தயாவுமியம்பவுண்மனைவைகிய
தன்னைநேரெழிலாள்சுதன்மைதரித்திலாதுளெரேலெனப்
பொன்னின்மேகலைநூபுரத்துணைபொங்கியார்ப்பநடந்துபோய்
முன்னர்நின்றுவணங்கிமன்னன் முகத்தைநோக்கிவிளம்புவாள். (௩௨)

இருதலைப்புளினுற்றவோருயிரென்ன நும்முடனாகியே
மருவுதுன்பமுமின்பமும்வழுவாதுதுய்த்திடுமோட்சியேன்
வெருவுகானகநும்மையேகவிடுத்திருந்துயிர்வாழ்வனோ
கருதலார்கள்வணங்கவெய்துகடைக்கணோக்கியகாவலோய். (௩௩)

ஒத்தவன்பினராகிமங்கையருற்றநாதலன்வாழவாழ்ந்
தித்தராதலமீதிறப்பவிறப்பராயினிருங்கதி
மெத்துபோகவிதங்கொள்வாரெனவென்றமாதவரோதலால்
அத்தவத்தமுநின்னொடேகுவதல்லதிங்கமரேனென்றாள். (௩௪)

சூறையாற்பொருதப்படுந்துணர்துன்றிளங்கொடிபோலவும்
பாறுசூழயில்வேல்கள்பாய்ந்துபதைக்குமான்பிணைபோலவும்
வீறுமாய்ந்துசுதன்மைகட்புனல்வீழநொந்திதுவிள்ளலும்
ஏறுபோலமருங்கிருந்திடுமேமகண்டனியம்புவான். (௩௫)

திங்கள்செங்கதிர்நீத்தவானமுந்தீயொடாறொழிவேள்வியு
மங்கைபற்றியநாதனோடருமைந்தனீங்கியமாதருந்
தங்கமைச்சரினோடுவேந்தர்தணந்ததேயமுமென்னவே
இங்கணின்றுநுமைப்பிரிந்தரசாளுமெண்ணமிசைந்திலேன். (௩௬)

புத்திரன்கடனீன்றெடுத்தவர்பூசையாற்றியிறந்தபின்
பத்தியாற்பிதிரர்க்குநல்லவைபண்பினுற்றுவதேயலால்
அத்தமுய்த்தரசாட்சிசெய்தழிபோகமூழ்குவதல்லவே
வைத்தசெல்வமதித்திலேனுடன்மால்வனத்துறுவேனென்றான். (௩௭)

தோமகன்றவமைச்சருந்துணையாவியன்னசுதன்மையு
மேமகண்டனும்வேறுவேறினிதோதும்வார்த்தையெனுஞ்சுதை
நாமவச்சிரவேலின் மன்னவனன்றுதுய்த்துளமுங்குளிர்ந்
தேமகண்டனைவேறுநோக்கியெடுத்திரும்பொருள்கூறுவான். (௩௮)

பிள்ளைமைப்பருவத்துளாயலைபேதுகொண்டெவன்பேசினை
தள்ளரும்பனுவற்றிறத்தொடுதந்தைதாயரையோம்பிநின்
றெள்ளரும்பலதானமாதியியற்றியேகயபூமியின்
விள்ளரும்பலிபிண்டமிட்டவன்மெச்சுபுத்திரனாயினும். (௩௯)

தாயர்தந்தையர்வார்த்தையிற்றவறாதுநின்றிடலேமுத
லாயதன்மமறிந்தபுத்திரனாணவற்கருமைந்தனே
மேயவென்னுரைகொண்டமைச்சரினோடுமேதினிகாத்தியென்
றேயும்வண்ணமியம்பியுண்மனையேமகண்டனொடெய்தினான். (௪௦)

ஒருவரெய்தியிருப்பினும்பலருற்றுவைகினரோவென
மருளும்வண்ணநீழற்றிருங்கதிர்மாமணித்திரண்மாளிகைக்
கருதலர்க்குருமேறனானொருகாமருந்தவிசெய்தினான்
அருமைமைந்தனைமுன்னிருத்தியவற்குநீதியுரைக்குமே. (௪௧)

சோமகாந்தன்வனம் புகுந்துணிந்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-௪௨௬.

## ௨ - வது அரசியற்கைப்படலம்.

இருணிறப்பெருங்கடன் மருங்குடுத்தொளிரிருநிலத்தவர்க்கெல்லாம்
வருணமேநிலையெனுமிரண்டொடுந்தகவகுத்திடுமாசாரந்
தருமமென்பனவளவிலவவையெலாஞ்சாற்றிலமைநிற்க
அருமைமைந்தனேயுனக்குரித்தாகியவரசியலினிக்கேண்மோ. (௧)

விடியன்முந்துறக்கடிகையைந்தெனத்துயில்விடுத்துடற்சுசிசெய்து
கடிமலர்த்திரளமளிசேர்பள்ளியைக்கடிந்துவேறிடம்வைகிக்
கொடியவல்வினைக்குழாத்தினைப்பொடிசெயுங்கோமளப்பொடிபூசி
யடிகளாகியகுரவனைவழிபடுமமலனையகத்தெண்ணி. (௨)

பரந்தபூமியையெதிருறநோக்குபுபாரெனப்படுந்தாயே
அரந்தையின்றியான்றிரிதருந்தொறுமெனதடியுனதுருமீதே
நிரந்தரித்துறப்படும்பிழைபொறுவெனநெகிழ்ந்தவுள்ளகத்தோடும்
இரந்துபின்னிருமதப்பெருங்களிற்றினையினிதுறத்தியானித்து. (௩)

எண்ணிலாகமமறைக்கெலாமுடிவெனவிருந்திடுமிறைதன்னைக்
கண்ணனாதிவிண்ணவர்களாயிருந்திடுங்கணேசனைமனமாதி
நண்ணொணாதநாயகனைநாற்பொருளையுநண்ணினர்க்கருள்வானை
யண்ணலாகியவனாதியையனந்தரூபியையருட்கடலானை. (௪)

சகலலோகமுமளித்திடுங்காரணமானதத்துவன்றன்னை
யகலுறாதவிக்கினங்களேயாயினுமடுத்தவர்க்கறுப்பானைப்
புகல்விநாயகக்கடவுளைப்புலரியின்வணங்குகின்றேனென்று
மிகல்செய்காதலின்வழுத்திமற்றமரரைவேறுவேறுறநோக்கி. (௫)

உரகமாலையான்சந்திரசேகரனுழுவையினுரிசூழ்ந்த
பரமன்பேரழகினன்பெருங்கருணையன்பண்ணவரனைவோர்க்கும்
வரமெலாங்கொடுத்தருள்பவன்பார்ப்பதிமணாளனல்வழிவாராப்
புரநிலாவகையழித்தபுண்ணியன்றனைப்புலரியிற்றொழுகின்றேன். (௬)

பெத்தமுத்தியும்பரப்புபெண்ணரசியைப்பிறழுமுக்கண்ணாளைத்
தத்துவத்தினுக்காதிகாரணியையத்தத்துவங்கடந்தாளைச்
சித்தர்தேவர்கடுதிகொளுமிறைவியைத்திகழ்சமுசாரத்தின்
புத்திநீங்குமாறருளும்பார்ப்பதிதனைப்புலரியிற்றொழுகின்றேன். (௭)

தொக்கபாவத்தைச்சத்துருக்குழாத்தினைத்தொடர்ந்துசென்றிறுப்பானைத்
தக்கபூமகண்மணாளனைப்பாற்கடற்றனித்துயிலமர்வானை
மிக்கவீரனாய்வேதியரிடர்தபவேறுவேறுருக்கொண்டு
புக்கமாயனையிந்திரனிளவலைப்புலரியிற்றொழுகின்றேன். (௮)

பெருமைதங்குமெண்ணத்தினையுடையவன்பேணறிவொடுகன்ம
மருவுதற்குறுகாரணமானவன்மறையுருவினனித்த
மிருளுந்தானவர்மாயையுந்துரப்பவனியாவருந்தொழுதேத்தும்
பொருவிலாதபேரொளிவளர்பருதியைப்புலரியிற்றொழுகின்றேன். (௯)

முறையினிவ்வகைவழுத்தியேயேனையமுடிகொள்வானவர்தம்மைக்
கறையிலாமுனிவோர்களையன்பினற்கருத்துறத்தொழுதேத்தி
யறையுநாட்கடன்விதிப்படிமுடித்தபினரங்களின்வழுவாமே
நிறையும்வேதியரமைச்சராதியரொடுநிலம்புரப்பதுமாண்பால். (கo)

வேறு.

ஒருப்படுமறத்தினாலேயொண்பொருளின்பஞ்செம்பொற்
பருப்பதம்கடல்போல்வந்துபயப்படுமதனைக்கேண்மோ
விருப்பொடுவெறுப்பிலாதமிக்கவெண்குணத்தோடொன்றா
யிருப்பவன்யாவனன்னானிணையடிவணங்கல்வேண்டும். (கக)

வேறு.

அறமுதற்பொருளுலகமலனிணையா
னிறவுதற்கேதுவாய்நிகழுமாமறை
வறுமையெய்தாவகைவயங்குவேள்வியை
யுறுதருமங்களையுஞற்றல்வேண்டுமால். (கஉ)

விழுப்பொருணன்கையும்விளங்கத்தெள்ளுபு
முழுப்பவைம்பொறியையுமுனிந்துநீத்தவர்
வழுப்படாமறையவர்மற்றைக்கல்வியோர்
குழுப்புறத்தாதரங்கூர்தல்வேண்டுமால். (கங)

நீத்தவராகியோர்நெருப்புயிர்த்திடிற்
காத்திடுங்கடவுளுங்கலங்குமாதலா
லேத்துவதேகடனென்றுமைந்தனே
யாத்தர்கள்பொறுப்பரென்றவமதித்திடேல். (கச)

குரவரைப்பெரியரைக்கூறுமாகம
விரவுறுமறைகளைமேதகும்படி
பரவுதலலதவர்பாங்கர்நீந்தனை
கரவுறவுளத்தினுங்கருதொணாததே. (கரு)

தேங்குவிண்போகமுஞ்சிறந்தமுத்தியு
மீங்குறுமாக்கமுமினிதுநல்கலா
லோங்கியவறத்தினையுளமுன்மூன்றினும்
பாங்குறகித்தலும்பரிந்துசெய்தியால். (கசு)

வழுக்கறுமறத்தினைமற்றுச்செய்துமென்
றொழுக்கிடாதொல்லுறும்வகையினுஞ்சொலு
மழுக்கெனுமுளத்தழுக்காறவாமுத
விழுக்கொடுவெகுளியுமின்றிச்செய்கலே. (கஎ)

அன்புறுமறத்தினலடுக்குமின்பமே
யின்பெனத்தக்கதாலேனையின்பெலாந்
துன்பமும்பழியையுந்தோற்றுமாதலால்
வன்புறுமறத்தினைமறப்பிற்கேடுறும். (கஅ)

வேறு.

பிரமசாரிவனத்துறைவோன்பேணுந்துறவிதென்புலத்தார்
குரவர்தேவர்விருந்தொக்கல்கோக்கண்மறையோரிறந்தோர்க
ளிரவலாளருறுப்பிலர்களெய்தும்பிணியாளர்கண்முதியோர்
விரவுபாலர்சிசுதமதுமிசையாரிவரையோம்புகவே. (க௯)

வருவாய்க்கியையவாழ்தலுறுமறுவில்கற்பின்மனையாள்போற்
பொருள்யாவுளவாமதுவன்றிப்புகழும்பயனுமிகவுண்டாங்
கருதாரெதிரேயிமிலேற்றுக்காமர்நடையுமுறுமதனு
லொருவாதவளோடுவப்புறவேயுற்றுவாழ்தலறனாகும். (உ0)

எழுமைப்பிறப்புந்தீவினைவந்தெய்தாச்சிறப்புந்தென்புலத்தார்
முழுதுமுவக்குங்கடன்சாலமுடிக்குமாண்பும்பெறுதலினுற்
பழுதிறவங்கண்மிகப்புரிந்தும்பயந்துமைந்தர்தமையவர்க்குக்
குழுமுமவையின்முந்திருப்பவறிவுகொளுத்தல்வேண்டுமால். (உக)

இடனும்பொருளுமேவலருமிருந்தும்பயனென்னேவந்த
வுடலின்பயனாகியவன்பையுறுதவிடத்துநொதுமலரும்
படர்செய்பகையுமுறவாக்கும்பற்றுமளிக்குமனைமைந்தர்
தொடர்பின்வளர்க்குமன்பதனுற்சோர்ந்துமன்பின்வழுவற்க. (உஉ)

வந்தவிருந்துமலராதவதனநோக்குமுன்குழையு
மந்தமடைவாலகத்தன்பையலர்ந்தமுகத்தால்வெளிப்படுத்திச்
சந்தமணிவாயினுந்தோன்றச்சற்றும்வஞ்சங்கலவாமே
யுந்துஞ்சுவையின்மொழியென்றுமுரைத்தல்வேண்டும்பயன்வேண்டின்.

பயன்காரணத்தைக்குறியாமற்பரிந்துகாலத்தாற்செய்த
நயன்சேர்நன்றிசிறிதேனுநாடினதற்கோரளவில்லை
பயன்காரணத்தைக்குறித்தினையும்பதத்திற்புரிந்தநன்றியையும்
வியன்பூதலத்திற்பெரிதாகவிரும்பிமதித்தல்வேண்டுமால். (உச)

நன்றிபுரிந்தோர்மற்றொருகானவைகள்புரிந்தாராயிடினு
மொன்றுமுதவியேமதித்திட்டோம்பாநவையைமறந்தவரை
யென்றுமறவாதிருந்திடுகவிகப்பிற்கருவான்மறையோரைக்
கொன்றுதிரிவோர்பிழைசிறுகக்குன்றமெனவேபிழைபெருகும். (உரு)

ஆக்கமொடுமைந்தரையளிக்குமவற்றைமருமான்வழிக்குநிலை
யாக்குமனையநடுநிலையையடுத்தோர்முதன்மூவரினைப்ப
நோக்குமதுசெய்யாதிகப்பினுனித்துக்கருவினைமைத்தபயன்
போக்கியிடையேபயன்வேறுபொருந்தாபொருந்தும்பெரும்பிழையே.

இல்வினிருந்தேயைம்பொறியுமெல்லாநுகருங்காலத்துஞ்
செல்லும்வழிமெய்மொழிமனத்தைச்செல்லாதடக்கினெழுபிறப்பு
நல்லபயனேயாமேனைநல்லவினைதீவினையாகா
வல்லலறுக்குமறக்கடவுளடுக்குமமருலகுறுமே. (உஎ)

தாழ்ந்தவருணத்துதித்தவருந்தக்கோராவரொழுக்கத்தால்
வீழ்ந்தவொழுக்கத்தாரிழிவர்மேலாம்வருணத்துதித்திடினுஞ்
சூழ்ந்துதுணையாஞ்சிறப்பின்பஞ்சுரக்குமதனாலுயிர்தனினும்
வாழ்ந்தவொழுக்கமோம்பிடுகவழுக்கினிடும்பையேதருமே. (உஅ)

காமங்குறித்துப்பாவத்திற்கலந்தபேதையாருள்ளும்
வாமங்கனிந்தபிறன்மனையைமதிக்கும்பேதையோர்பயத்தாற்
றுமங்கிழிக்குமறம்பொருள்போற்சற்றுமின்பமுறாரதனாற்
றேமங்குறிப்பப்பிறன்மனைவிதோள்காமுறுதல்சூழலே. (உகூ)

பகையேபழியேபாவமேபயமேநான்குந்தினங்கொடுக்குந்
தகையார்பெருமைமுழுதழிக்குஞ்சார்ந்தபிறனில்விழைவொழிந்தோர்
தொகையாரறமேபொருளின்பந்தோலாப்பெருமையொடும்வாழ்வர்
நகையாலதனைக்கனவிடத்துநவிற்றியிடினுந்தீங்காமே. (௩0)

வெறுப்பவொருவன்காரணத்தான்மிக்கமடத்தாற்புரிபிழையைப்
பொறுப்பினதுவேபேரறமாம்புகழுநிறையுமிகவளருங்
கறுப்பொன்றறியாவறிவினர்கள்கருத்தின்மகிழ்ச்சியுளவாகு
மொறுப்பின்வருவதொன்றில்லையதனாற்பொறுமையுயிர்த்துணையாம்.

ஒழுக்காறொழிக்கும்பொருளனைத்துமொழிக்குமிம்மைமறுமையினும்
வழுக்காறனைத்துமுறுவிக்குமருங்குளார்க்குங்கேடுறக்கு
மிழுக்காறுடையவெரிபிரையத்தேய்க்குமிதனாலேமகண்டா
வழுக்காறுயபெரும்பகையையமராரிடத்தும்புரியற்க. (௩௨)

படுமுன்பொருட்குப்புதுவெள்ளம்பழையநீரையுடைப்பதுபோற்
கெடுதிபயக்குங்குடிகெடுக்குங்கெடாதபெருந்துன்பமும்விளைக்கும்
வடுமிக்கியன்றபழியென்றும்வளர்க்குமதனான்மறுமையினு
நடுவுநிலையிற்றிரிந்தொருவர்நன்பொன்கவரக்கருத்தெண்ணேல். (௩௩)

கேளிர்பிரிவர்நட்பினராய்க்கெழுமுவாருமிலராவர்
மூளும்வடுச்சொனோராகமொழிவரெவருமாதலினு
ளுமறத்தைக்கொன்றனந்தநவைகள்செயினுமெதிர்நின்று
மாளவுரைசெய்யினுஞ்செய்யேல்மைந்தாமறந்தும்புறங்கூறல். (௩௪)

தகைமையுடையவறிவினர்கள்சாலவெறுப்பச்செயுமன்றி
நகையும்விளைக்கும்வெளிற்றறிவைநவிற்றுநன்குமதிப்பொழிக்கு
மிகைசெய்விழுப்பந்தபுமதனால்விழையுமறமாதிகள்பயவா
வகையினுவைக்கும்பயனிலசொன்மைந்தாவுரையேலுரையேலே. (௩௫)

வேறு.

பாயபல்பகைக்குந்தப்பிப்பாரிடையுய்யலாகு
மேயவெக்கதிசென்றாலும்விளிதரா துடங்குசென்றே
யாயநன்றனைத்துங்கொன்றங்கருந்துயர்பலவுநல்குந்
தீயவல்வினையின்யாதுஞ்செய்யற்கவேமகண்டா. (௩௬)

ஊருணிநடுவூர்நின்றவொண்பழத்தருவும்போலப்
பேருறுமுயற்சிதன்னாற்பெருக்கியபொருள்களெல்லாஞ்
சீருறயாவர்மாட்டுஞ்செலுத்தியொப்புரவினிற்றி
யாருமொப்புரவாற்கேடுண்டாயினுமதுவுநன்றே. (௩௭)

இரப்பவன்வாளாதேகவிலனெனுமெவ்வங்கூறு
திரப்பினையிரப்பனன்றாமிதனினன்றுவதாகு
மிரப்பவனிலனென்றாவியம்பியவெவ்வஞ்சொல்லென்
றிரப்பினும்பிறர்பாற்கூறுதிரக்கமொடீதன்மைந்தா. (௩௮)

அருத்தியினிலனென்னாமுனளித்தலுமிலனென்றப்பா
லுரைத்திலனாகச்சாலவுதவலுமேற்கின்றானும்
வருத்துறவிலனென்னாமைவழங்கிடவரைவில்செல்வம்
பொருத்தலுமொன்றினொன்றுபுகழ்மிகவிளங்கிநிற்கும். (௩௯)

நலமிகுசெல்வம்பெற்றுநல்குரவினரைக்காத்த
லிலனறமாதிசீர்த்தியிலனெனப்பிறர்சொலெவ்வ
வலனுரைக்கஞ்சியேனும்வறியனையிலனென்றெள்ளா
தலர்புகழ்பயனும்வேண்டினக்கையுமளிக்கமைந்தா. (௪௦)

சாதல்வந்தடுத்தக்காலுந்தனக்கொருசாதலின்றிப்
பூதலமிறக்குங்காறும்புகழுடம்பிருக்குமந்தக்
கோதறுபுகழின்யாக்கைகொடையினாற்செல்வங்கூர
வாழ்தலையுடையாரன்றேவானமும்வணக்குநீரார். (௪௧)

உரைசெயுமறத்தினாற்றாலொருகுடைநிழற்றமுந்நீர்த்
தரைமுழுதாளவேண்டிற்றகைபெறுமமைச்சுநாடு
புரையறுமரணேமிக்கபொருள்படைநட்பென்றாறும்
வரைசெயப்படாதயாக்கையுறுப்பெனமதித்துக்கோடி. (௪௨)

வினையினஞ்சாமைநிற்றல்வினைஞருக்களித்தல்செய்யும்
வினையிடைமனமேற்சேறல்விளங்கியவறிவுவல்லே
வினையினைமுடித்தலாண்மைவெங்கொலையாதிநீக்கல்
வினைவளர்மானமற்றும்வேந்தருக்கியல்புமைந்தா. (சங)

குடிதளர்வற்றகாலைக்கொள்பொருளாறிலொன்றும்
விடுவதுசெய்துதங்கள்விழுக்குறைமுறைசொல்வார்க்குத்
தடையறக்காட்சிநல்கித்தண்ணியவின்சொல்காட்டி
வடுவறவிடித்துச்சொல்வார்வன்மொழிபொறுத்தல்வேண்டும். (சச)

செருவினொட்டலரைக்கொன்றுதிறைகொண்டுநாடுகாத்துப்
பொருளினையீட்டிக்கள்வர்புல்லலர்சுற்றமாதி
பருகுதலிலாமைக்காத்துப்பயிலறமாதிமூன்றின்
மருவுறவிடுத்துச்செங்கோல்வளர்ப்பதுமாட்சியாமே. (சரு)

ஐயமேதிரிவேயென்னுமவையறவறநூனீதி
வையமால்யானைபாய்மாவன்படைத்தொழினூலாதி
பையவேகற்றுக்கற்றபண்பினரோடுநாளு
முய்யவேயளவளாவியுரைத்தவாநிற்றல்வேண்டும். (சசு)

உடல்வயத்தாகுஞ்சாதியுயர்ந்தவர்சாதிதாழ்ந்தோர்
திடமுறவுயிரினோடுசெல்லுறுங்கல்விதம்மா
லடர்தரும்பெருமையெய்தாராதலாலகக்கண்ணுகித்
தொடர்புறுங்கல்விகல்லாத்தொழிலினைவிடவேவேண்டும். (சஎ)

வறுமையான்மடமைதன்னால்வருந்திநெஞ்சழியுங்காலை
யுறுதிசெய்துணையாங்கற்றவுணர்வினைவளர்க்குமென்று
மிறுதியில்லாதவின்பமீட்டுமாதலினாற்கற்று
மறுவறுமொழுக்கமுள்ளார்வாய்மொழிகேட்டல்வேண்டும். (சஅ)

இழிந்தவனுயர்ந்ததொன்றையியம்பினுமுயர்ந்தோன்வாயி
னிழிந்ததொன்றுறினுமுள்ளவியல்பறிந்தோம்பிநீக்கிப்
பொழிந்தெனப்பிறர்தாங்கூறும்புலப்படாப்பொருளுந்தெள்ளி
வழிந்தெனத்தெளியக்கேட்போர்மனங்கொளப்புகறல்வேண்டும். ()

எவ்வகையுலகத்துள்ளாரியல்புடனொழுகுகின்றா
ரவ்வகையொழுக்கினின்றேயழிவனவருமுன்காத்துத்
தவ்வெனும்பழிபாவங்கடபுதியெய்தாமையஞ்சிச்
செவ்வியநெறியினாளுஞ்செலுத்துகபொறிகளைந்தும். (ருo)

நலமிகவுயர்ந்தோர்தம்மைநண்புறத்தழுவிக்கொள்க
நிலவியகயத்துப்பூவைநிகர்தராதுயர்ந்தகோட்டி
னலரெனவவர்பானிற்கவாக்கமிக்கடுத்தகாலை
மலர்வதும்வறங்கூர்காலைக்கூம்பலுமொழிகமைந்தா. (ருக)

அருந்தவர்குரவர்முன்னோரந்தணருயர்ந்தோர்தம்பாற்
றிருந்தியவணக்கமின்மைசெருக்குவேண்டியபக்கத்தும்
பொருந்தியபொருள்கொடாமைபொங்கியவெகுளிகாமம்
விருந்துசெய்சழிகண்ணோட்டமிவையெலாம்விடுகமைந்தா. (ருஉ)

வேறு.

குற்றம்புரியாதிருந்துபிறர்குற்றங்களைகசிறிதேனுங்
குற்றம்புரியிற்சிற்றெரிவைக்குவையையழிக்குமாறேபோற்
பற்றும்பெருவாழ்வினையழிக்கும்பகைவர்க்காக்கமிகப்பெருக்கு
முற்றும்பெருநோயுழப்பிக்குமுனியாராலுமுனிவிக்கும். (ருங)

கன்றுமினியபொருள்பலவுங்காதல்பசைவறியாமே
நன்றுநுகர்கநினையென்றுநன்குமதித்துவியவற்க
நன்றிபயவாவினையினையுநண்ணுமதத்தான்முடியற்க
வென்றிவிளங்கப்புகழ்விளங்கவிழுப்பம்விளங்கவேண்டிடினே. (ருச)

நுண்மையறனுமிகத்தெளிந்துநூலினியல்புமுலகியல்பும்
வண்மையுறத்தேற்றிடுமாற்றல்வல்லராகிவளர்சீலந்
திண்மையறிவாயுளின்முதிர்ந்தோர்சேரநன்குமதித்திடுக
வெண்மைபுரியாதுயர்த்திடுகவியம்பும்வழியேநின்றிடுக. (ருரு)

மழையின்மிகுதிமழையின்மைவளிதீப்பிணியால்வந்ததுயர்
குழைவிலமரர்தக்கோரைக்குறித்துச்சாந்தியாற்கடியா
விழைவில்பகைவர்கள்வர்வினைசெய்வார்சுற்றமிவர்களினும்
பிழையையுபாயநான்கானும்பெயர்க்கும்பெரியரெனுந்துணையே. (ருசா)

நற்பான்மையினாற்றேவர்களானண்ணலாகுமெதிர்வினையை
யுற்பாதங்களானறிந்தேயொழிப்பர்மனிதரால்வருவ
பொற்பாரவரிங்கிதங்குணமாசாரஞ்செயலாற்புக்கறிந்து
பிற்பாலுறச்செய்குவரதனாற்பெரியோர்துணையேதுணையாகும். (ருஎ)

நல்லவினைக்குநற்பயனுந்தீயவினைக்குத்தீப்பயனு
மில்லையெனும்வல்லிழுதையருமெள்ளும்விடருந்தூர்த்தர்களுஞ்
சொல்லுநடருமுதலாகத்தொக்ககுழுவைச்சேர்ந்தொழுகின்
புல்லுமறிவைத்திரித்திருமைப்பொருளுங்கெடுக்கும்புகழோடே. (ருஅ)

செய்யும்பொழுதேயழிபொருளிற்சிறப்பதொப்பதிரண்டினுளொன்
றுய்யவுதவிவழிபயக்குமொண்மைவினையைத்தேர்ந்துளத்தி
னையமகன்றவினத்தோடுமாய்ந்துதனித்தும்புரிந்திடுக
வெய்யவாக்கங்கருதிமுதல்விளிக்கும்வினையைப்புரியற்க. (ருகூ)

வலியேகாலம்வினையிவற்றுன்மாற்றான்றனக்குமுனக்குமுள
பலவாநிலையும்வினைதொடங்கும்பண்புமதற்காமிடையூறும்
விலகாதவனைவிலக்குவதும்வெல்லுமாறும்வென்றதனா
லுலவாப்பயனுமுதலனைத்துமோர்ந்துதெளிந்தேவினைசெய்க. (சுo)

பெரியமுயற்சிவினைபயனைப்பேணுவினையேபயன்சிறிதா
மரியவினையேபின்றுயரமாக்குவினையேபுரிந்தாலும்
பெரியமுயற்சிமுதலாகப்பேசும்வினைக்குமறுதலையா
முரியவினையைவிடுத்தாலுமுலவாப்பெருமையொழியுமே. (சுக)

கொடுத்தல்பொருள்வேட்கையனிடத்துங்குளிர்சொற்செவ்வியான்மடிய
னடுத்துப்பிறரோடமராற்றியயர்ந்தானிவர்பாங்கினும்வேறு
படுத்தறுணையாம்படையினனின்பகுதியொடுசேரானிவர்க
ளிடத்துமொறுத்தலிவற்றின்வராவிவர்கீழ்மக்களிடத்தினுமாம். (சுஉ)

வலியாரானகாலத்துவழங்கலாதிமூன்றனையு
மெலியாரிடத்துச்செய்திடலுமெலியாரானகாலத்து
வலியாரிடத்தினொறுத்தலையும்வகுக்கின்வேந்தர்க்கவைமைந்தா
நலிவாமதனாலவரவர்பானடத்துமுறைதேர்ந்தியற்றிடுக. (சுங)

வினையின்வலியாதிகணான்கும்வேறுவேறுசீர்தூக்கி
நினைதுவலிமிக்குழிவினையைநிகழ்த்துநிகர்த்தகாலத்துப்
புனையும்வென்றியுருவிழுக்கும்பொருந்துமதனாலவ்விடத்து
வினையுந்தோல்வியுறுங்குறைந்தவிடத்தும்வினையையெண்ணற்க. (சுச)

குறைந்தவலியராயிடினுங்கொற்றமைந்தர்பலர்கூடி
னிறைந்தவலியென்னுமதனானேராதொழிகபலபொருளைத்
துறைந்தவூக்கந்தனைக்கொண்டேயுற்றநினதுவலியளவி
னிறந்தும்வினைமேனடவற்கவிறவாவென்றிவேண்டிடினே. (சுரு)

வந்தபொருளிற்காற்கூறுவருமேலிடர்நீக்குதற்கமைத்து
மைந்தவிருகானினக்காக்கிமற்றைக்காலேவழங்கிடுக
சிந்துநெறிகளகலாமற்சேருநெறிகள்சுருங்கிடினு
நந்தலிலதாமொப்பினுமாநாடினதிகச்செலவிழுக்காம். (சுசு)

ஆற்றன்மூன்றுமுபாயங்களான்குமிடத்தோடமைந்திடினும்
போற்றினினக்குவென்றியுறும்பொழுதுதேர்ந்தேவினைபுரிக
வேற்றகாலம்வருமளவுமெண்ணியிருக்கவதுமைந்தா
வீற்றுச்சமர்க்குப்பின்வாங்கும்வெற்றித்தகரேயாகுமால். (சுஎ)

மிகைமிக்கியற்றித்திரிந்திடினும்வெல்லுங்காலம்வருமளவும்
பகைமைபுறத்திற்றோற்றாமற்பகைவர்தம்மைப்பண்போடு
நகைசெய்தமர்போற்சுமந்திடுகநாடுங்காலம்வந்துவிடின்
றகைசெய்வினையையவ்வளவிற்றப்பாவண்ணமுடித்திடுக. (சுஅ)

வாயினூழில்வழக்கமறமதிலைவளைத்தொன்றற்கொன்று
மேயதுணையாய்ப்பலபடையுமெலிவற்றிருப்பமதிலகழி
யேயவியற்றியரசிருக்கவேற்றகிடக்கைநிலத்தோடு
பாயபுனலுமுடையதுவேபகையையழிக்குமிடனாகும். (சுகூ)

ஊக்கமிலனாயினுமிடத்தோடுற்றவினைசெய்குவனாயி
னூக்கமுடையார்க்கிடனின்றியொழியுமூக்கமிலாதவனுக்
கூக்கமுடையானாயிடினுமுற்றபடையும்பலவேனு
மூக்கமழிவனிடத்தோடுமுற்றுவினைசெய்யாவிடினே. (எ0)

பிறப்புங்குணமுமறிவுமெனப்பேணுமிவையுஞ்செயல்களையுஞ்
சிறக்குங்காட்சியொடுகருத்தேசெயிரினாலென்றிவைதம்மா
னிறுக்குமமைச்சர்முதலோரைநின்றாராய்ந்துதெளிந்திடுக
வறுக்கும்வினையாற்றுதற்பொருட்டுமறைபோகாமைப்பொருட்டுமே. ()

அறவோர்புரோகிதரைவிடுத்திட்டவராலிந்தவரசன்றா
னறவோனல்லனிவற்போக்கியறனோடுரிமையுடையானை
யுறவேவைத்தற்கெண்ணினமீதொத்ததெவர்க்குநின்கருத்தென்
னுறவோதெனச்சூளுறவோடுமோர்ந்தேயொருவன்றனைத்தெளிக. ()

சேனைத்தலைவனொடுமவனைச்சேர்ந்தாரையும்விட்டிவ்வரச
னீனப்பொருளாசையனிவனையிழுக்கிக்கொடையொடுரிமையுடை
யானைப்புரத்தற்கெண்ணினமீதமைந்ததெவர்க்குநின்கருத்தென்
னூனப்படாமையுரைத்தியெனச்சூளொடுரைப்பித்தேதெளிக. (எங)

தொன்றுதொட்டவுரிமையொடுசூழ்ந்ததவமூதாட்டியைவிட்
டொன்றுமுரிமைதனிலிந்நாளுனைக்கண்டுயங்கியெனைவிடுத்தாள்
சென்றங்கவளைக்கூடுதியேற்சிறந்தபொருளுங்கூடுநினக்
கென்றுதெளியச்சூளுறவோடிசைப்பித்திதனானுந்தெளிக. (எச)

வேறு.

ஒருநிமித்தமேலிட்டேயோரமச்சாலவன்மனையிலேனையோரை
யொருமையுறவழைப்பித்திங்கிவர்பிழைப்பக்குழீஇயினரென்றுறுத்திக்காவ
லொருவனிவ்வரசனமையொறுக்கமுயன்றானிவனையொறுத்துவேறே
யொருவனைவைப்பதற்கிசைந்தேமுன்கருத்தென்னெனச்சூளொடுரைப்பித்தோர்க.

வே று.

நல்லகுடியிற்பிறந்தாறுநவையுமறப்புமடிபிழைப்பென்
றல்லலுறுக்குமிவைமுதலாமனைத்துநீக்கிப்பழிக்கஞ்சி
யொல்லலுறுநாணுடையானேயோர்ந்துதெளியப்படுமைந்தா
வல்லகலைதேர்ந்தாசற்றூர்மாட்டும்வெளிறுமருவிடுமே. (எசு)

சுற்றமிலரானவர்தம்மைச்சூழேல்பழிபாவமுநாணூர்
பற்றுமிலராகுவர்விடுகபண்பார்தருநற்குணங்களே
முற்றுமுடையாரிலரதனுன்முனியுங்குற்றங்குணமிவற்றைத்
தெற்றென்றுணர்ந்துகுணமிகுந்தசெம்மையுடையார்தமைத்தெளிக. ()

பெருமைசிறுமையளந்துகொளப்பேணுங்கருவிதத்தமது
கருமமதுபோற்பிறகருவிகழியச்சிறந்தவல்வறிக
மருவுகாதலாலறியார்மாட்டுவினையைவையற்க
வொருவர்தமையுந்தேராமேயொருகாலத்துந்தெளியற்க. (எஅ)

தேர்ந்துதெளியப்பட்டவன்பாற்றேர்ந்தேவினையுந்தகவிடுக்க
தேர்ந்துதெளியப்பட்டவனைத்தீதுகாணுதயிரற்க
தேர்ந்துதெளியப்பட்டவவன்றீரவினையைவிடுமதனைத்
தேர்ந்துபகைவர்பிரித்திடுவர்தேரான்றெளிவேபோற்கேடாம். (எகூ)

முன்னர்ப்பொதுவாகியவினையின்மூளவிடுத்துத்தீதகற்றி
நன்மைபுரிந்துவருமாயினுடியவனைச்சிறந்தவினை
தன்னில்விடுக்கசிறந்தவினைசார்ந்துபுரிவானிடைதிரியின்
பின்னரவனைப்பொதுவினையிற்பெயர்த்துநழுவவிட்டிடுக. (அ0)

ஆளுமரசன்பாலன்புமவனுக்காவதறியறிவு
நாளுமவற்றைக்கலங்காமன்றுமுடிக்குமுளத்துணிவு
மூளும்வினைக்குத்தன்கரத்தின்மொய்த்தபொருளின்விழையாத
கோளுமுடையான்புரிவினையிற்குற்றமுறாதுகுணமேயாம். (அக)

தெளிந்தவினையிற்றெளிந்தவனைச்சிறந்தகாலத்தொடும்விடுக்க
விளைந்தவறிவாற்றலுமிலையேன்மிக்கவுரிமைநின்பாலே
தளைந்தமனத்தானுயிடினுந்தன்பால்வினையைச்சார்த்தற்க
வளைந்துவினையில்விடுத்தவனையதற்குத்தகுமாறுரிமைசெய்க. (அஉ)

வினைக்கண்முயற்சிதவறாதவினையன்கேண்மைவேறாக
நினைக்கினவன்மற்றவ்வினையினீங்கும்பிறருமதினேரார்
முனைக்கும்வினைஞன்கோடாதேமுதிர்நீருலகங்கோடாது
தனைப்பின்வைகறொறுநாடிச்சாரும்வினையுநாடுகவே. (அங)

பற்றும்வெறுக்கையொழிந்துழியும்பழைமையெடுத்துப்பாராட்டுஞ்
சுற்றமதனைப்பெருங்கொடையாற்றாயமொழியாற்றழுவலுறி
னற்றமவனுக்கொருகாலுமணுகாதாக்கமிகப்பெருகு
முற்றநினைக்கும்பகைவர்தொழின்முற்றாதேமகண்டனே. (அச)

வே று.

பெருமிதம்பெரியசெல்வம்பேரெழில்பெரியவின்பந்
தருமிகுகளிப்பின்மூழ்கித்தங்குறினேமகண்டா
வருமிகுபொச்சாப்பந்தமறவியானின்னைக்காத்துப்
பொருமிகுபகையைவெல்லும்பொருளெலாமிழப்பதாகும். (அரு)

உற்றிடுமாற்றன்மூன்றுமுபாயங்கணுன்குநன்மை
பற்றியதொழில்களைந்தும்பண்புறுகுணங்களாறு
மற்றையவனைத்துங்கேடாம்வளர்பிறப்பேழன்காறும்
பற்றியநன்மையின்றும்பாழ்த்தபொச்சாப்புச்சாரின். (அசு)

நெகிழ்ச்சியொன்றின்றிச்செய்யநினைந்தகாரியத்திற்சென்று
புகழ்ச்சிசெய்முயற்சிசெய்யிற்பொருள்பயவாமையில்லை
யிகழ்ச்சியிற்கெட்டார்தம்மையெண்ணுதல்செய்வையாயின்
மகிழ்ச்சியின்மைந்தூறுதவண்மைவந்தடுக்குமைந்தா. (௮௭)

எய்தியகுற்றத்தோர்கள்யாவராயினுங்கண்ணோடா
தைதெனநாடிநீதியறந்தலைப்பிழையாத்தண்டஞ்
செய்தலேசெங்கோலாகுஞ்செய்யகோலின்றேலென்னு
முய்திசெய்மழையான்மக்களுறுபயனுற்றபோதும். (௮௮)

மழைவளஞ்சுரக்குமாறும்வயனிலம்விளையுமாறும்
விழையறம்வளருமாறும்வேதநூல்விளங்குமாறுந்
தழைபொருளீட்டுமாறுஞ்சமரிடைவெல்லுமாறும்
பிழைதபவாழுமாறும்பிறழ்தராக்கோலினாகும். (௮௯)

கருவிநஞ்சாதிதம்மாற்காமராருயிரைக்கொல்வோர்
வெருவரச்சூறைகொள்வோர்மேவியாறலைப்போர்கள்வ
ருருவளர்பிறனில்வேட்போருவர்முதலோரைக்கோறல்
பருவருபாவமன்றுபயிர்க்களைகளைதல்போலாம். (௯௦)

பரிசனம்பகைவர்கள்வர்படர்தருமுயிர்கடாமென்
றுரைசெயைந்திடத்தினுமுலகிடையிடையூறெய்தா
வரிசையிற்காத்துநீதிவழுக்கினார்தம்மையொத்திக்
கரிசறப்பொருளுங்கோடல்காவலர்தருமமைந்தா. (௯௧)

முறைமைமுட்டாதுசெய்துமுழுநிலங்காப்பினந்த
விறைவனைச்செங்கோல்காக்குமெளியசெவ்வியனுமாகான்
குறைவளர்குற்றமோரான்குணத்தொடுமுறைசெய்யானை
நிறைதருபாவந்தேய்க்குநெடும்பகையின்றாமேனும். (௯௨)

அறுதொழிலாளர்நூல்களயர்ப்பரான்பயனின்றாகு
முறைபெயலொழியுங்கூழுங்குடிகளுமொருங்குநீங்கும்
பெறுபயனாட்டிற்குன்றும்பிறங்கொளிநிலைபெறாது
கறையின்மேற்பொருள்கைக்கொண்டுகாவலைவிடுப்பின்மைந்தா. (௯௩)

கடுமொழிகண்ணோடாமைகையிகந்திட்டதண்ட
நடுநிலையின்மைசெவ்வியின்மைநன்முகமுறாமை
யுடனுறச்சூழ்ந்துசெய்யாதுறுபிழையமைச்சர்க்கேற்றல்
படுசமர்ச்சிறைசெய்யாமைபலவுந்தீங்காக்குமைந்தா. (௯௪)

பயின்றவர்தம்மாற்கூறப்பட்டனமறுக்கமாட்டா
வியன்றநற்குணங்கண்ணோட்டமித்தகுகண்ணோட்டந்தா
முயன்றுசெய்முறைக்குக்கேடுமுன்னுநர்மாட்டுக்கூடா
நயந்தபனினக்குத்தீங்குநாட்டினார்தம்பானாட்டல். (௯௫)

வேறு.

உளக்கணீதிநூலாகவொற்றேவெளிக்கண்ணெனவிடுத்து
விளக்குஞ்செயலான்மொழிதன்னால்வேண்டார்சுற்றம்வினைஞரையு
மளக்கமைந்தவொற்றாவதையுறாதவுருவோடு
துளக்கமின்றியென்செயினுஞ்சோர்விலாததெனவறிக. (௯௬)

ஒருவரொருவர்தமையறியாதொருமைவினைக்கண்மூவர்தமை
மருவவிடுக்கமூவர்களும்வந்துமொழிவதொத்துவிடிற்
கருமமதனைமிகத்தெளிககருமமறைப்பவேண்டுதியேற்
பொருவிலவர்தம்பாற்சிறப்புப்புறந்தோன்றாமற்செய்திடுக. (௯௭)

ஊக்கமுடையார்கைப்பொருளையொழிந்தாரேனுமொழிவில்லா
வாக்கமுடையரேயாவராக்கமிருந்துமசைவில்லா
வூக்கமிலரேலேதுமிலருளுற்றுமுயற்சிபொருள்கொடைக
டேக்கும்புகழ்நற்செருக்கிவைபின்சேராவேமகண்டனே. (கூஅ)

மடியொன்றுளதேல்வல்விரைந்துவகுக்குந்தொழிலைநீட்டிக்குங்
கடியுமறவிதுயில்விளைக்குங்கலதிதனைச்சேர்த்திடும்பகைவர்க்
கடிமைபுகுத்துங்குடிகெடுக்குமதனைவிடுப்பினுண்மையினுங்
குடிமையிடத்தும்வேறுளவாங்குற்றம்பலவுமொழிக்குமே. (கூகூ)

விடாதுதனுவிற்செயுமுயற்சிமென்மேற்பொருளைமிகவளர்க்குங்
கெடாதுசுற்றநட்பினர்தங்கிளையுந்தாங்கும்யாவர்க்குந்
தடாதவுபகாரமும்புரியுந்தடந்தாமரையாளையுஞ்சேர்க்கும்
படாதவூழ்வந்திடுகாலும்பயனேவிளைக்கும்பழியின்றாம். (க00)

எடுத்தகருமமுடிவதன்முனெய்துந்தெய்வத்தானாக
தொடுத்தமுயற்சியாலுடலிற்றோன்றும்வருத்தத்தானாக
மடுத்தபொருளின்மையினாகமைந்தாவடுக்கிவந்திடினு
மிடுக்கண்டனக்குளழியற்கவின்பமதுவேயெனத்தெளிக. (க0க)

வேறு

நனிபயன்பயப்பச்சிறுமுயற்சியினானலத்தகுவினையுமற்றனைய
வினையினைத்தொடங்குங்காலதுதனக்குவேண்டியபொருள்களும்படையு
மினிதுறுபொழுதமுபாயமுஞ்செயலுமிடைப்படுமூறுகணீக்கித்
துணிவறமுடிவுபோக்கிடுமாறுஞ்சூழ்தரவல்லவனமைச்சன். (க0உ)

மிகைவினைவரினுமசைவுறாவன்கண்விழுக்குடிகாத்தலாள்வினைநூல்
வகையுறச்சூழ்ந்துவிடுவனவிடுத்துவகுப்பனவகுத்திடல்வேண்டிற்
பகைவர்தந்துணையைப்பிரித்தறம்மிடத்துப்பயின்றவர்பகைவர்பாற்புகாமற்
றகையுறச்செய்தல்பிரிந்தவர்தம்மைத்தம்மொடுபொருத்தலுமமைச்சாம். ()

அறிவதுஞ்செயலுமொழிவதுமரசர்க்காக்கமேகுறித்தனவாகுந்
திறனுநன்றறியாவரசருக்குறுதிசெப்பலுஞ்செய்வனவேனு
முறுமுலகியற்கைக்கொத்திடிற்செயலுமொருவினைக்கியைந்தபல்செயலு
நிறுவுவதொன்றால்வாய்ப்பவெஞ்ஞான்றுநிகழ்த்தலுமமைச்சருக்கியல்பாம்.

முறையுறச்சூழுமாத்திரமன்றிமுடிக்கமாட்டாதமந்திரியு
மிறைவனுக்ககிதமெண்ணுமந்திரியுமெழுதுசித்திரத்தினுமாகா
வுறுவரிற்பிரிக்கப்பட்டவர்முதலோருளத்தினைப்பிணித்துருளமு
மறுவறப்பிணிக்குமொழிதிறனறிந்துவழங்கன்மந்திரிகணற்குணமே. (க0ரு)

சுருக்கிமெய்விளக்கியினிமையும்பயனுந்தொகுத்தயலார்மொழிக்கிடையாத்
திருக்கிளர்மொழியைச்சோர்வறலவைக்கட்செல்லுமாறஞ்சுதலின்றி
யுரைக்கவல்லவரேயமைச்சர்களாவருறுமுறைபிறழ்தரப்பலவாய்
விரிக்கவல்லவருங்கற்றதுவிளங்கவிரிக்கமாட்டாருமெல்லியரே. (க0சு)

பொருள்பயந்திடினுமறம்புகழ்பயவாப்புரைபடுவினையென்றும்புரியார்
மருளின்மற்றொருகாற்புரியினுமிரங்கார்வையகத்தேனையோர்போல
விருமுதுகுரவர்கற்புடைமகளிரிளமகவிவர்பசித்திடினும்
பெருமிதப்படாதவினைசெய்யாருலகுபேணுநர்க்கேமஞ்செயமைச்சர். (க0எ)

ஊறுசேர்வினையைப்புரிதராரூழாலூறுவந்தடுப்பினுங்கலங்கார்
தேறுகாரியத்தைமுடிப்புழியன்றிச்செயன்மொழியாதியாலிடையே
வேறுபோமாறுவிளக்குறார்துணிந்தவினைதளங்காதுவல்விரைவார்
வீறுசேரிவரையுருவுகண்டெள்ளாவேந்தனேவேந்தனாமைந்தா. (க0அ)

துணிவுறுமளவுஞ்சூழ்ந்துபினிராதுசூழ்வினைபொருந்தும்வாயெல்லாந்
தணிவறமுடித்தலஃதகாதாயிற்றகுபொருள்வினையிடங்கால
மணியுறுகருவியைந்துமாய்ந்திகலையடர்த்தலொட்டார்க்கழிவுறுங்காற்
பணிவுசெய்தேனுங்காத்தன்முத்தொழிலும்பண்புடையமைச்சர்தந்தொழிலே.

குடிப்பிறந்திருநூல்கற்றறிந்தமைச்சர்குணங்களுமுடையனாய்ச்சுற்றங்
கடப்படுமரசனிடத்துறுமன்புங்கருதுவேற்றரசவாம்பண்பும்
விடப்படாவின்சொல்வன்மையுமுருவும்வெருவுறாத்திண்மையுமருவி
யிடத்தொடுசெவ்வியறிந்துகாலத்துக்கேற்றவுமுரைப்பவன்றூதன். (௧௧௦)

உறுபொருள்காமம்விரும்புறாத்தூய்மையுயிர்க்கழிவுறினுமஞ்சாமை
மறுபுலத்தமைச்சர்துணைமையாந்தன்மைவாய்மைசொற்சோர்வுறாத்துணிவு
மறவறவுடையனாய்வழியுரைப்பான்மத்திமத்தூதனாமுடங்கல்
குறுகுபுகொடுப்பான்கடைப்படுந்தூதன்கூறியவிவரையுந்தழீஇக்கொள். ()

இறைசிறப்பாகவணிவனநுகர்வினிதுறுமேன்மையாதிகடா
முறலறைபோதலுரிமையின்மருவலொண்பொருள்வெளவன்மன்னவன்முன்
பிறர்செவிமொழிதல்பிறரொடுநகைத்தல்பேணுறாப்பண்புவேந்திளமை
முறைமதித்திகழ்தல்விரும்புறாவினையைமுடித்தலுஞ்சேர்ந்தவற்காகா. ()

குறிப்பொடுகாலமறிந்திறைவிரும்பக்கோதறுபயன்மிகப்பயக்கும்
வெறுப்பிலவினையைவிளம்பிவேண்டாதவினையினைக்கேட்பினும்விளம்பார்
சிறப்புறவோர்வதாயினுமறைதான்செப்பிடிற்கேட்பினல்லாது
மறப்பினுந்தொடராரோர்தாரணுகார்மருங்ககலார்வினைவலித்தார். ()

அகத்திடைக்குறித்தகாரியமதனையையுறாதவரவர்விழியான்
முகத்தினாலறியவல்லவனாகிமுகம்விழியிரண்டினுமன்றி
யகத்திடைத்தனக்குநிகழ்ந்திடுங்குறிப்பாலவரவரகக்குறிப்பறிந்து
மிகத்தெளிபவனைக்கரிமுதலுறுப்புள்விழைவனகொடுத்துங்கொண்மைந்தா.

தொகைபடுசெஞ்சொலிலக்கணச்சொல்லேசூழ்ந்திடுங்குறிப்புச்சொன்மூன்றின்
வகையறிந்துயர்ந்தோரொத்தவர்தாழ்ந்தோர்மருவுமூன்றவையுமாராய்ந்து
தகையுறவுயர்ந்தோரவையின்முந்துரையார்சமத்தினெவ்வாற்றினுங்கிளப்பார்
நகைபடுதாழ்வினொன்றையுமொழியார்நவைபடாச்சொற்பொருளாய்ந்தோர்.

வல்லவரவையுட்கற்றதஞ்சாதுவகுத்துரைத்தவருண்மிக்கான
நல்லவைகேட்பார்கற்றவர்தம்முணன்குறமதித்திடப்படுவார்
சொல்லவையஞ்சிக்கற்றனசெலுத்தாச்சோர்வினர்கற்றுங்கல்லாத
புல்லியரிருந்தும்பொன்றினரதனாற்போற்றுகவவையஞ்சாதவரை. (௧௧௬)

இருபுனல்வாய்ந்தமலைவருபுனலுமிடவியநகர்களுமுடைத்தாய்ப்
பெருகவெப்பொருளுமொழிவறவிளைக்கும்பெருங்குடிகளுங்கலங்காலாற்
பொருள்பலவீட்டுஞ்செல்வருமறையோர்புரையறுதவத்தினர்துறவோர்
மருளறுகலைஞராதியோர்பலருமன்னிவாழ்ந்திருப்பதுநாடு. (௧௧௭)

பழுதுசீர்நாட்டுக்கமரர்கள்சாதிபற்றுசங்கேதத்தினீண்டுங்
குழுவுமாறலைக்குங்கள்வர்பொய்குறளைகூறுவோர்பன்றிமான்முதலாய்க்
கெழுவுமுட்பகையுமளவுபார்த்தரசைக்கெடுக்குங்கொல்குறும்பருமிக்க
மழைமழையின்மையெலிகிளிவிட்டின்மன்னராங்கோளுமாமைந்தா. (௧௧௮)

ஆதலிற்குடிகளாதியோர்தொகவுமழிவுசெய்குழுமுதலகன்று
போதவுங்காவல்புரிபிணியின்மைபுகழ்திருவிளைவின்பமனைத்துங்
கோதறநாளுமிகவுளதாகுங்குலைந்தயனாடுகளுறினு
மேதகத்தாங்கும்வருந்துறாதெவையும்வேண்டுழியளித்திடுமைந்தா. (௧௧௯)

மருங்குநீர்க்கிடங்குவெள்ளிடைகானமலையுறவகன் றுயர்ந்தரங்கொண்
டொருங்குபல்பொறியுமணிந்துபேரிடத்தாயுறுசிறுகாப்பினல்வீரர்
நெருங்குபல்பொருளுந்தழுவியெத்திறத்துநேரலர்கொளப்படாதாகிச்
சுருங்கையாதிகளும்பொதிந்தகத்துறைவோர்தொழிலினிதாற்றுவதரணே.

அருள்கொடுபுரக்கப்படுங்குடியன்போடளித்திடுமாறினிலொன்று
மிருநிலத்தெடுத்தபழம்பொருளுரிமையின் றியேயிறந்தவர்பொருளு
மருவியசுங்கப்பொருளுமொட்டலரைமாட்டியபொருளுமீட்டுகவிப்
பொருளறமின்பம்புகழ்தரும்பகையைப்புரட்டுமெவ்வினைகளுமுடிக்கும். ()

கரிபரியிரதந்தானையுமமைந்துகருதமூறஞ்சுருதிகல்வேந்
திரிதரப்பொருதுவெல்வதேபடைதானெய்துகூலிப்படைநாட்டுப்
பரிபடைகாட்டுப்படைதுணைப்படைகைப்படைமூலப்படையெனவாறுந்
தெரிபடையிவற்றுட்சிறந்ததுமூலப்படையிதிற்சிறந்தவர்வீரர். (கஉஉ)

விரையவன்பகையைவெல்லும்வன்கண்மைவேந்துதாழாவகைகாக்கும்
புரையறுமானம்போரினஞ்சினரைப்பொருதடாவொளியறைபோகா
வரையறுதேற்றமுடையரேயானும்வறுமையுஞ்சிறுமையும்வெறுப்பு
நிரைதரின்வெல்வார்தலைவரில்வழியுநேர்ந்திரும்பகைவரைவெல்வார். (கஉ௩)

வேலெதிர்வரினும்விழித்தகண்ணிமையாவீறுமெய்யூறுகாணுமே
யாலியசினத்தினூழிலாட்டயருமாண்மையுமழியினல்லாது
சீலவஞ்சினஞ்செய்யாதமையாததீரமும்வேந்துசீறினுஞ்செல்
வாலியமறமுமன்கணீருகுப்பமடிதலும்படைச்செருக்காகும். (கஉ௪)

அழிதருநெறியிற்செலவினைவிலக்கியாம்வழிச்செலுத்தியூழ்வினையா
லழிவுவந்தடுப்பினதற்குடனல்லாந்தாக்கைவேறன்றியாருயிர்க
ளொழிவகையின்றியுணர்ச்சியொத்தருநூலுணர்தொறுமுறுநயம்போலக்
கழிமகிழ்நாளும்பயிற்றொறும்வளரக்கலப்பதேநட்பெனப்படுமால். (கஉ௫)

நன்மதியுடைமைகுடிகுணங்குற்றநல்லினத்தானுமெத்திறத்தும்
பன்முறையாய்ந்துநட்பினைக்கொள்கபாம்பொடும்பழகினும்பிரித
லின்மையாமதனாலாய்ந்தலாலொருவரிடத்துநட்புறேலுறினவர்செய்
புன்மையும்பழியும்புணர்ந்திருபயனும்போக்குவதுண்மைபுத்திரனே. (கஉ௬)

கெடுதியிலுதவவல்லவர்நட்பாற்கிளந்திடாதொன்றனைச்செயினுங்
கெடும்வகைசெய்தல்வேண்டினதாமேகெழுவுதல்பணிவச்சமின்மை
படுதருமூழிற்புரியினுமவற்றைப்பழமையென்றறிந்துளமுவப்பி
னெடுநிலமுழுதுங்கேண்மையாமைந்தாநேரலார்தாமுங்கேளாவார். (கஉ௭)

காதலரேனும்விடுவிலைமாதர்கள்வரிற்றமக்குறல்குறிப்போர்
பேதையர்கெடுதியுற்றுழியுதவார்பெரும்பொருணகுவித்துப்பறிப்பா
ராதருகருமந்தம்மினாகாததாகவேநடிப்பவருளமு
மோதலுமொவ்வார்மனைக்கெழீஇமன்றினுறப்பழிப்பாரிவர்தமையே. (கஉ௮)

நல்லனபலநூல்கற்பினுங்கூடாநட்பினர்மனநலனெய்தார்
சொல்லின்முன்வணங்கும்வணக்கமுந்தொழலுஞ்சொரிந்தகண்ணீருந்தப்பாது
கொல்லும்வன்படை.யாமாதலிற்பகையுட்கொண்டவர்க்கவரெனநீயு
மொல்லுகவதுவுநீக்குறுக்காலமுற்றுழியல்லதுவேண்டா. (கஉ௯)

பழிமுதனாணுர்செய்வனதவிர்வபார்த்திடார்குடிப்பிறப்பொழுக்க
மெழில்வளர்கல்வியாதிகள்பேணாரெவரையுமுறிக்குஞ்சொற்செயலார்
கழிமகிழ்வுடையார்கெடுதிகொண்டாக்கங்கைவிடுவார்செல்வமுறினுங்
கொழிபயனெய்தார்பிறர்க்கலாற்றமர்க்குக்கொடாரிவர்பேதையரொழிக.

தன்னையெப்பொருளுமறிந்தவனாகத்தான்மிகமதிக்கும்புல்லறிவின்
வன்மையையுடையானுறுதிசொற்கேளான்வல்லதல்லாதுங்கொண்டுரைத்து
புன்மையைத்தெரிப்பானவைபுரிந்துலகோர்போனடிப்பான்றனையுணர்த்து
நன்மதியினரையறிவிலராகநாட்டுவானிவனையுநண்ணேல். (௧௩௧)

வேறு.

இகலைமதித்தின்னாமைபிழையியற்றினார்க்கும்புரியாயேற்
பகையுமுறவாம்பெருஞ்செல்வம்பலிக்குங்கெடாதபுகழுண்டா
மிகலின்மிகுந்தின்னாங்கியற்றினினியதமருமேதிலராய்ப்
பகைமைவளரும்வலிதொலையும்பாழ்க்கும்பாழாவாழ்க்கையுமே. (௧௩௨)

வலியார்பகைகொள்ளேல்சுற்றம்வலிகள்பொருணட்பேபடையின்
மெலியாரச்சமறியாமைமேவாத்தன்மைகொடையின்மை
நலியாவெகுளிமறையின்மைநணியாங்காமங்கல்லாமை
யொலியார்பழிநோக்காமைமறவுடையாரிவர்மேற்பகையுறுக. (௧௩௩)

பாரம்பரிக்கவேண்டினுறுபகைநட்பாகக்கொண்டொழுகல்
வீரந்தணியாரொடுபொரினும்விதிநூலினரோடிகலாமை
சாருந்துணைநிற்பினும்பலரைப்பகையாக்காமைதனிமையுறி
னேருந்துணையாவிருபகையுணீக்கியொன்றையுறவாக்கல். (௧௩௪)

மெலியதெனவெள்ளியபகையேமிகுந்துகெடுக்குமிகுந்திடுமு
னலிகவினைதாழ்வுறிற்றெளிந்தநல்லாரெனவுந்தெளியாத
மலினரெனவுநொதுமலரைமருவலொழிதல்புரியற்க
வலிசெய்படையாதிகள்பெருக்கிவகையாய்ந்திருக்கபகைமையற. (௧௩௫)

தமராயிருந்துபுறப்பகைமைச்சார்பாங்காலம்வருமளவு
மமராநிற்குமுட்பகையையஞ்சிக்காக்கவுறிற்கடிக
நமராமெனவேகண்ணோடினல்லவமைச்சாதியைத்தேய்க்கு
நுமராமினத்தைத்தணப்பிக்குநுன்னைக்குடியோடெளிதழிக்கும். (௧௩௬)

ஆற்றன்மிகுந்தவேந்தரையுமரியதவத்துமுனிவரையும்
போற்றியொழுகினெப்பொருளும்போற்றலாகுமவமதிப்பிற்
றோற்றமிகுஞ்சார்பினரேனுஞ்சிதைவர்திகழ்முப்புரர்சூரன்
சாற்றிந்திரன்மாலாதியருந்தளர்ந்தாரெனிற்சாற்றுவதென்னே. (௧௩௭)

தன்னாலாளப்படுமனைவிதன்னாலாளப்படுவானே
லன்னாற்கறனும்பொருளுமுளவாகாதொல்லைப்பொருளானு
மன்னுபயன்கள்வினைமுடியாமறுமையணுகாதெப்பிழையு
முன்னும்பின்னும்பெருநாணுமூவாப்பழியுமறிமைந்தா. (௧௩௮)

எழிலாற்பாடலாடலினாலிச்சைபெருக்கியுளமொவ்வா
மொழியாற்செயலால்வயமாக்கிமுற்றும்பொருளைப்பறித்துவிடும்
பழிநாணாதபரத்தையரைப்பற்றாராய்ந்தபண்புடையா
ரொழியாரவரைப்பேதைமையிலொழியாரேமகண்டனே. (௧௩௯)

அறிவையழிக்குஞ்செயலழிக்குமழியாமானந்தனையழிக்குஞ்
செறியுமறிஞர்மதியாதசெருக்கைவிளைக்குமீன்றாளு
முறியும்வெறுப்புமிகவிளைக்குமுனிவுவிளைக்கும்பகையஞ்சாக்
குறிகள்விளைக்குநகைவிளைக்குங்கொள்ளேல்கள்ளுண்டலைமைந்தா. (௧௪௦)

வென்றிவரினுமதனான்முன்மேவுமொன்றற்காயிரம்பின்
மன்றவிழக்குமதுவன்றிவைத்தபொருளும்வருவாயு
மன்றியனைத்தும்பகைகொள்ளுமமைச்சராதியுறுப்பொழியு
மொன்றுமொளிகல்விகண்மறுமையுறுதியிலையாஞ்சூதாடேல். (௧௪௧)

மனமெய்ம்மொழிகள்வருந்தாமல்வகுத்துத்தொழிலைமாறுபடா
வினியவுணவைமிகப்பசித்தவிடத்தினுடற்குப்பொருந்தவுணின்
முனிசெய்பிணிகட்கிடனின்றுமுறைகள்பிறழ்ந்துவந்துவிடிற்
புனிதமுடையவயித்தியரால்வழிநின்றவற்றைப்போக்குகவே. (கசஉ)

உன்னன்மொழிதல்செயன்மூன்றுந்தொடக்கம்வாய்மைநாணிழுக்கார்
மன்னுமனையிற்பிறந்தார்கண்மலர்தலீகையிசழாமை
நன்னர்மொழியுமவர்க்கேயாநன்மையபயவாவினைவறுமை
யின்னலிடத்தும்புரியார்களேமகண்டாவினியறிமோ. (கசங)

பெருக்கத்துயர்வாம்பணிவொழியல்பேணுப்பணிவுசுருக்கத்திற்
செருக்கலின்றியமையாதசிறப்பிற்றேனுமுயர்மான
முருக்கும்வினையைச்செயநினையன்மொய்ம்பார்மானங்கெடவூழ்வந்
துருக்குமெனிற்சாமரைமானையுன்னலேமகண்டனே. (கசச)

ஐதுகுடியிற்பிறந்தருநூலாய்ந்துசெல்வத்துயர்ந்ததனு
லெய்தலரிதுபெருமையஃதெய்துங்கொடையொப்புரவாதி
செய்தற்கரியசெய்துபிறர்செயிர்கூறுமற்றருக்காம
லுய்திநெறியிற்பிறழாமலொழுகுவார்க்குள்ளுதிமைந்தா. (கசரு)

அன்பொப்புரவுகண்ணோட்டமழியாவாய்மைநாணுதி
யின்பம்பெருக்குநற்குணங்களெல்லாநிறைந்தசான்றோர்க
டுன்புற்றவர்க்குமினியனவேசூழ்வர்துணையின்வினைமுடிப்பர்
வன்பிற்றளராநட்டார்க்குமடங்கித்தோற்றனுணரே. (கசசா)

ஆன்றகுடியன்பெண்பதநல்லறநீதிகளின்வழுவாமை
சான்றமக்கட்பண்பாகுந்தன்னையுடையார்நகையானு
மான்றுமிகழார்பகையிடத்துமதியாரவர்தநற்குணமே
யேன்றவுலகம்பாராட்டுமெல்லாப்பயனுமவர்மாட்டாம். (கசஎ)

வைத்துப்பொருளைத்தானுகரான்வழங்கானிருந்துஞ்செத்தானே
செத்தபின்னரென்செய்வான்றீயார்கொள்வரீட்டுதலான்
மெத்தும்வருத்தமேயன்றிவேறொன்றில்லையாதலினாற்
பொத்தும்வெறுக்கைநன்றியுறல்புசித்துவழங்கலேயாகும். (கசஅ)

இழிந்ததொழிலினணுவதேயெய்தற்கரியநாணென்ப
ரொழிந்தமனவாக்குடலொடுக்கமொளிவாணுதலார்நாணேயாங்
கழிந்துவிடநாண்மண்கோடல்கருதார்கலமெல்லாம்வளர்ப்பா
ரழிந்துநாண்மற்றுயிர்வாழாராவியழிந்துநாணுள்வார். (கசகூ)

எடுத்தகருமமுற்றுமையெய்தின்முடித்தேவிடுவலெனத்
தொடுத்தமுயற்சியறிவிரண்டிற்றோலாதுயர்வார்குடிசெய்வா
ரடுத்தபருவங்குறித்துமடியாக்கிமானங்கருதுவார்
கெடுத்தல்புரிந்தாராதலினாற்கிளரக்குடியூன்றலின்மைந்தா. (கடுo)

உழுவித்திருவரிருவருழுவித்துமுழுதுமுணலாகு
முழுதுண்பவரேதமக்குரியருபகாரியரென்பாரவரே
தொழுதுண்பவரேபிறர்க்குரியார்தொழின்முற்றுழந்துமுழவினர்பான்
முழுதுமடுப்பவேண்டுதலின்மூதன்மைத்துழவென்றறிமைந்தா. (கடுக)

வறுமைபோலவின்னாதவறுமையன்றிவேறில்லை
மறுவின்மொழிகள்சோர்வுபடும்வாய்த்தகுடிநற்செயன்மொழிக
ளிறுதிபடுமற்றிரப்பாதியெல்லாத்துயருமுடனுறும்
பிறனினேக்குமீன்றுளும்பிள்ளாயதுவந்திடினிறத்தல். (கடுஉ)

குறிப்பினுணர்ந்துமொழியாமுன்கொடுப்பார்முன்னின்றிரந்துயிரைத்
துறப்பதின்றிச்சிலர்வாழ்வர்தூய்மைமானங்கெடாமையினு
லிறப்பவுயர்ந்தகொடைமையரேயெனினுமிரப்பாரில்லாக்காற்
சிறப்பென்பெறுவரவரானேசிறப்பர்கரவாதவர்மைந்தா. (கருங)

கண்ணிற்சிறந்தார்தம்மிடத்துங்காழ்த்தமானங்கெடநாவாற்
பண்ணற்குரியவறங்குறித்தும்படர்ந்தொன்றிரவார்பெருமையினு
லெண்ணிற்சிறந்தார்முயற்சியினுலேலாவுப்பில்வறும்புற்கை
யுண்ணற்கமைந்ததமைத்ததெனவுவப்பரேமகண்டனே. (கருச)

அழுக்கற்றெவர்க்கும்வடுக்காண்பாரச்சமாசையாலன்றி
யொழுக்கம்புரியார்மறைபிறர்பாலுய்த்துமொழிவார்தம்போல
விழுக்குக்கேதுங்கவலார்முனேற்றமாகிச்செம்மாப்பார்
மழுக்குளார்க்கேபயன்படுவார்வறிதும்வறியார்க்கிடார்கயவர். (கருரு)

அறத்தோடரசநீதிபுரிந்தகிலம்புரந்துபொருளீட்டித்
திறத்தால்வாழும்வகையெல்லாஞ்செல்வக்குமரற்கிவ்வாறங்
குறத்தானியம்பித்திறற்சோமகாந்தனுலகபாரமவ
னுறழ்த்தோட்பெயர்த்துக்கொடுப்பான்பினிதனைப்புரிந்தான்புலவீர்காள்.

அரசியற்கைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஅங.



## ங-வது பட்டாபிடேகப்படலம்.



அத்தனுஞ்சோமகாந்தனகன்மனைநீங்கிப்போந்து
பைத்தவேத்தவையின்வைகிப்பண்பொடுங்கணிதர்க்கூவி
யொத்தநாளபிடேகத்துக்குரைக்கெனவவருந்தெள்ளி
யுத்தராயணத்தினுதியுறுமதிப்பூசமென்றார். (க)

அமைச்சரைமுகத்தினேக்கியணிமுடிகவிப்பவெல்லா
மிமைக்குமுனியற்றுவீரென்றேவினன்முடங்கனல்கிக்
குமைக்கும்வைவேற்கைமன்னர்கோதறுமுனிவர்சேய்மைத்
தமர்க்குமற்றெவர்க்குந்தூதர்தங்களைவிடுத்திட்டானே. (உ)

கருணையங்குரவற்கூவிக்கைதொழுதிறைஞ்சிமைந்தற்
கிருநிலங்காவனல்கவியைந்தனெனபிடேகத்துக்
கொருவில்வண்பொருள்கள்யாவையுணர்த்துகவென்னவன்னுன்
பொருளெலாமோலம்போழிற்பொறித்தளித்திதுவுஞ்சொன்னன்.(ங)

புண்ணியபூமிமுக்கட்புண்ணியன்சந்நிதானந்
தண்ணியநதியின்றீரந்ததைந்தவுய்யானந்தன்னி
லெண்ணுமைந்திடத்திலொன்றுமிடமிடத்துளுமீசான
மண்ணுறுகிழக்குதீசியாமபிடேகத்தானம். (ச)

ஐம்முழமாதியைம்பத்தைம்முழத்தளவின்காறு
மைம்முகிறவழவாக்குமண்டபத்தகற்சியாகுஞ்
செம்மணித்தூணீராறுசேர்பதினுறுறும்
பொய்ம்முதல்கடிந்துகாவல்புரிதரும்புலவுவேலோய். (ரு)

அரசுவீற்றிருத்தற்கொன்றுமபிடேகஞ்செய்தற்கொன்றும்
விரசுபன்மணியாற்பொன்னுல்வெள்ளியாற்றும்பிரத்தாற்
பரசுபத்திரபீடந்தாம்பண்ணுவதாம்யாகத்துக்
குரைசெயுமரமுமாகுமுற்றபான்மரமுமாகும். (சு)

ஒருமுழமுயர்ந்துசெவ்வேயொன்றரையகன்றுமுன்பி
னிருபடியிணங்கிநான்குபதத்தொடுமிருப்பச்சொன்ன
பொருள்களினொன்றாற்செய்துபொருந்தியநிலைதற்றிக்கிற்
குருமணிமண்டபத்தைக்குயிற்றுமாறியற்றுகென்றான். (௭)

அம்மொழிகேட்டுமன்னனழைத்துவந்திறைஞ்சிநின்ற
கம்மியர்தம்மைநோக்கிக்கதிர்பொழிமணியும்பொன்னு
மிம்மெனுமுன்னர்நல்கியிரண்டுபீடஞ்செய்தீங்குத்
தம்பினென்றியல்புங்கூறிமற்றதுஞ்சாற்றுகின்றான். (௮)

பணைமுழக்கறாதவாய்தற்பகட்டெழின்மதிறலத்தி
லணைதருகுணக்குத்திக்கிலம்பத்தைம்முழத்தினெல்லை
துணையறுதூண்கண்முப்பத்தாறொடுதுலங்கவிண்ணு
மிணைதராமண்டபந்தானொன்றுறவிழைக்கவென்றான். (௯)

நம்பனேபுத்தியென்றுநலத்தகுசிற்பர்போந்து
செம்பொனையுருக்கிவார்த்துத்திவளொளிமணிக்கால்யாத்துப்
பம்பெழிற்பீடமாக்கிப்படிகளும்பயிலச்சேர்த்து
வெம்புறுமடங்கற்றிண்கால்வெள்ளியாலியற்றியிட்டார். (௧௦)

வேறு.

இருநிலமகழ்ந்துமணல்சொரிந்திடியாவெழில்கொளநீலங்கீழ்ப்படுத்து
மருவுவித்துருமமிடைப்படுத்ததன்மேன்மரகதம்படுத்தவன்குறட்டிற்
குருமணிப்பதுமராகஞ்செய்தூண்கோமேதஞ்செய்போதிகைகூட்டிப்
பருமணிப்புட்பராகவுத்திரத்தில்வச்சிரப்பலகையும்பரப்பி. (௧௧)

கொடுங்கைகள்வயிடூரியத்தினும்யாளிவரிகுளிர்மதிச்சிலையானுங்
கொடுங்கையிற்றூக்குங்கோவைநித்திலத்துங்குலாவுபித்திகைபளிக்கானு
நெடுங்களிபயப்பவமைத்துநாற்புறத்துநிரைமணிவாய்தல்கள்விடுத்துப்
படுங்கதிர்க்கனகத்தசடகம்படுத்துப்பன்மணிமண்டபஞ்செய்தார். (௧௨)

வேறு.

நீண்டதூண்டொறுநீள்குலைவாழையு
மாண்டபூகமும்வார்கழைவேழமு
மீண்டயாத்துவிதானத்திடையிடைத்
தூண்டுறாதவிளக்குந்துறுத்தனர். (௧௩)

அரும்புபேரொளிமாலையுமாடியுஞ்
சுரும்பறாமலர்மாலையுந்தூக்கினார்
விரும்புநாரந்தமென்கனியாதிகோத்
தொருங்குநாட்டினரோவியந்தீட்டினார். (௧௪)

காமர்பன்மணித்தோரணங்கட்டினார்
வாமமண்டபமாடிருங்காவணஞ்
சோமமண்டிலந்துன்னவெடுத்தனர்
சேமமென்னச்செழுங்கவின்செய்தனர். (௧௫)

அரசன்முன்னரடுத்திருங்கம்மிய
ரரதனத்திழையாதனமுன்னர்வைத்
தரவப்பூங்கழலாயணிமண்டப
மரனுக்கேற்பநன்றாக்கினமென்றனர். (௧௬)

அகிலங்காக்குமரசனிரும்பொனுந்
துகிலும்பூணுஞ்சொரிந்தவர்ப்போக்கினான்
முகிலுரிஞ்சியமொய்ம்மணிமண்டபஞ்
செகிலினூல்புணர்தேசிகனண்ணினான். (௧௭)

ஐம்பத்தைந்துமுழத்தகத்தெல்லையு
நம்புநூல்பதினன்கிட்டெனன்பதம்
பம்புநூற்றறுபத்தொன்பதாக்கினன்
மொய்ம்பின்வீதிபன்மூன்றுபன்மூன்றற. (கஅ)

நாப்பணின்றபதத்தொருநான்முழத்
தாப்பின்சென்றவனலறியானொடு
மூப்பிலாதமுலேயுமையாளுற
நீப்பிலாமணிவேதிநிகழ்த்தினன். (கசு)

அத்தைச்சூழவடுத்தவெண்கோட்டமும்
வித்தியேசுரர்வேதிகையிட்டன
னித்தைச்சூழ்பதமீரெட்டுந்தாதுவின்
சொத்துக்கென்றுகுயிற்றினன்வேதிகை. (உ0)

அடுத்துச்சூழ்ந்தபதமறுநான்கையும்
விடுத்தெலாரும்வழங்குறவீதியாத்
தொடுத்துநேர்பதமூன்றுதுவாரமாப்
படுத்தனன்றிசைநான்கினும்பண்புற. (உக)

ஒழிந்தநூற்றெண்பதத்துமுருத்திரர்க்
கிழிந்திடாமணிவேதியியற்றினன்
மொழிந்தவீதியுண்முற்றமுறைமையா
லழிந்திடாநவகுண்டமுமாக்கினன். (உஉ)

ஆங்குநீங்கியடுத்தனன்மன்னவன்
றீங்கிலாய்முனந்தீட்டியயாவையு
மீங்கணுய்த்தனெனென்றலுநோக்கினன்
பாங்குளார்க்குப்பணிபணிக்கின்றனன். (உங)

வேறு.

முக்கணாற்குரியகும்பமூன்றிழைநூலும்வெற்பின்
மைக்கணாட்கிரண்டுசேர்த்தநூலுமற்றேனையோர்க்குத்
தொக்கரும்பங்கட்கொவ்வொன்றாகவேசூழ்கதொக்கு
மிக்கபல்சமிதையாதிவேறுவேறாய்கவென்றான். (உச)

தருப்பைகளாய்ந்துசெய்யத்தக்கனகுரவன்செய்தங்
கிருப்பவனாகமுன்னரிறைவனாலேவப்பட்ட
திருப்பொலியமைச்சர்யார்க்குஞ்செய்பணிசெப்பிவிட்டார்
விருப்பொடுபணிந்தெல்லோரும்வேறுவேறியற்றப்புக்கார். (உரு)

தெள்ளியவேவலாளர்செப்பலுமகிழ்ந்துபோற்றி
வள்ளுவனுண்டுபூசிவாலியவணிந்துவீர
வெள்ளியவேற்றுப்போர்வைவிசிமுரசெடுத்துவல்லே
கள்ளிவர்மாலைநெற்றிக்களிற்றினிட்டேறிச்சொல்வான். (உசு)

வாழியெஞ்ஞான்றுமெங்கும்வைகியதேவதேவன்
வாழியவேதநீதிமனுநெறிச்செங்கோல்வாழி
வாழியசோமகாந்தமன்னவன்கிளைகளோடு
வாழியவுலகமெல்லாம்வாழியிந்நகரமென்றான். (உஎ)

கலைமகள்வீரச்செல்விமுன்னரேகாணிகொண்ட
மலைநிகர்தோளினாற்குமண்மகளோடுசெல்வத்
தலைமகளிவரைநாளைத்தக்கவர்புணர்த்தநின்றா
ரிலைமுகப்பூணீரெல்லாமிருநகர்புனைகவென்றான். (உஅ)

பண்டையதினத்தின்மேலும்பாரிக்கவறம்பாரிக்க
மண்டியபொருள்கையில்லோர்மன்னவனிதிப்பண்டாரம்
விண்டனவாய்தல்சென்றுவேண்டுவகொண்டுசெய்க
வுண்டெனில்வெறுப்புத்தெய்வத்துளத்தஃதொழிகவென்றான். (உகூ)

இனியனநுகர்ந்துபூசியெழில்கொளவணிந்துமென்றீங்
கனியெனமொழிந்துளின்பங்கனிதரவளவளாவிப்
புனிதவிண்ணவர்க்குப்பூசைபோற்றுகபோற்றுகென்னு
நனிபலபொருளுஞ்சொல்லிநளிமுரசெருக்கினனே. (ஙo)

அறைபறைவகுத்துச்சொன்னவரும்பொருளுணர்ந்தன்போடு
நிறைதருமங்களாற்றிநெடுநகர்முழுதுங்கோடித்
துறையுநாகரிகரெல்லாமுவந்தனர்தத்தமைந்தர்க்
கிறைமைவந்தடுத்தாங்குள்ளமாதிகளினியரானார். (ஙக)

சேனைகட்கிறைவனேவச்சேவடிபணிந்துபோந்து
யானைகட்கரசையாதோரணருணல்லரசன்மண்ணித்
தேனிவர்மதமருததிருமுகமெழுதியோடை
பூகிறநுதலின்வீக்கிப்பொற்புறப்பண்ணினனே. (ஙஉ)

வலவருளிறைவன்சென்றுவார்கொடியுயர்த்தித்தூசுங்
கலனுநன்கணிந்துபூட்டுங்கவனமாம்பரியும்பண்ணிக்
குலவியகொற்றவைவாள்கொடுமரம்பகழியாதி
பலவுமுண்ணிறைத்துவைத்துப்பாழித்தேர்பண்ணினனே. (ஙங)

வாதுவர்க்கிறைவன்சென்றுவாசநீர்முழுதுமாட்டிக்
கோதுமுற்றொழிந்துநல்லகுணத்ததாய்ப்பகைவருள்ளம்
பேதுசெய்கலினப்பாய்மாப்பேரொளிக்கலன்கள்பூட்டிக்
காதடிமயிர்களார்த்துக்கவின்மிகப்பண்ணினனே. (ஙச)

சாரணரடுத்துநின்றுதகுதியினளித்தவோலை
போரணவியகையேந்திப்பொருடெரிந்தரசராதிச்
சீரணவியவெல்லாருஞ்செறிந்தவங்கத்தராகிப்
பூரணவனப்பின்வாய்ந்தபூவையரோடுஞ்சார்ந்தார். (ஙரு)

வாரணமுழக்கமோர்பால்வாம்பரிமுழக்கமோர்பாற்
றேரணிமுழக்கமோர்பாற்செறிபடைமுழக்கமோர்பா
லாரணமுழக்கமோர்பாலாடலின்முழக்கமோர்பாற்
றோரணமாடவீதிதொறுநிறைந்திட்டவன்றே. (ஙசு)

பூம்புனலாடுவாரும்பொழில்விளையாடுவாருந்
தேம்பிழிமாந்துவாருஞ்செறிந்துவாதாடுவாருங்
கூம்புறுமாடவீதிக்கோடணைநோக்குவாரு
மாம்பலவினையின்வெவ்வேறுயினரடுத்தோரெல்லாம். (ஙஎ)

அனைவருமினையராகவமைத்தநாளடுத்தவோடும்
புனைகழலரசனேவப்புரையறுவிதியினூசான்
வினைமுடிநாட்குமுன்னேமேவியமூன்றுநாளின்
வனைகலத்துறுமணிட்டுவண்முளைவித்தினனே. (ஙஅ)

வழிவருநாளிற்கந்தமலர்பொரியரிசிசந்து
பொழிதயிரளவளாவிப்பூசித்துப்பலிமுனிட்டுக்
கழிபெருமகிழ்வினோடுகடவுளரானரெல்லா
மொழிவிலராகவிண்டையுறுகெனவிளித்திட்டானே. (சகூ)

ஏந்திலைவேலான்மைந்தனே மகண்டற்குநல்ல
சாந்தியின்பொருட்டுப்பாகர்சமைத்தமான்களிறுபொற்றேர்
காந்தொளிப்படையுமன்றேகடன்முறைபூசையாற்றி
யீந்தனன்மறையோர்தக்கோரிரவலர்தமக்குமன்னம். (௪0)

அற்றைநாளிரவிற்றான்முண்டகப்புரிநாண்டாங்கிக்
கொற்றவன்மகற்குமைந்தன்கோற்றொடிமனைக்குநேரே
பொற்றகங்கணங்கையாத்துப்புதிதியலங்கமைந்தும்
பற்றினனணிந்துபூசைபண்ணுதல்வலித்தானன்றே. (௪௧)

பல்லியமியம்பாநிற்பப்பாவையராடாநிற்ப
வல்லவர்தியானத்தோடுமந்திரங்கணியாநிற்பச்
சொல்லிசைமறைகணான்குஞ்சோதகரோதாநிற்ப
நல்லவர்பல்லோர்கேட்டநன்பொருணீட்டாநிற்ப. (௪௨)

பித்தியிற்சிற்பன்முன்னர்ப்பேரெழில்வாய்ப்பச்செய்த
சித்திரத்துருவின்முக்கட்செருமதக்களிற்றைநாட்டிப்
பத்தியிற்பூசையாற்றிப்பலவகையுணவுமூட்டி
வித்தகவிடையூறின்றிவினைமுடித்திடுகவென்றான். (௪௩)

சூரியனாதியாகத்தூயசண்டேசனீறா
நேருறநூலிற்சொன்னநிலந்தொறுங்கலையந்தாவித்
தாருநற்பூசையாற்றியவரவர்தம்மைவெவ்வே
றேருறுபூசைக்கூறெய்தாவகைகாக்கவென்றான். (௪௪)

பரப்பினன்சாலிதூணிப்பதக்கரியதனிற்பாதி
விரிப்புறுமரியிற்பாதிவெற்றவெள்ளதிற்காற்கூறு
கரப்பிறானியமொன்பானுங்கலந்ததன்மேலேவைத்தான்
சுரப்புறுமன்புபொங்கத்துலங்குபொற்சிவகும்பத்தை. (௪௫)

மங்கலவியங்கள்விம்மவார்நதிமுகந்துசெம்பொற்
றுங்கவொண்குடத்தின்யானைச்சுவற்றலைவரிசையோடு
மங்குவந்தடுத்ததூநீராடையில்வடித்துமெல்லப்
பங்கமுற்றறனலெட்டும்படியுறப்பூரித்தானே. (௪௬)

பொன்னவமணிகோட்டங்கற்பூரமேயகருவாசந்
துன்னுசந்தனமேவெட்டிவேர்தொகுவிரைகள்பல்பூ
மின்னுபல்பழங்கள்பற்பல்வியன்கொடுபஞ்சகௌய
மின்னவுஞ்சொரிந்துகூர்ச்சமிலையிருங்கனிமேல்வைத்தான். (௪௭)

அடிப்பரப்பிருநீர்சொன்னவளவினிற்பாதியீச
னிடப்புறக்கரகத்துக்குமிதற்குறுமளவிற்பாதி
கடப்படவிருத்துமெல்லாக்கலையங்கடமக்குமாக்கிச்
சுடர்ப்பசுஞ்செழும்பொனாதிசொரிந்தனைத்தினுக்கும்வைத்தான். ()

இருகலைவெவ்வேறெல்லாக்கும்பத்துமெய்தச்செய்து
கருவிறும்வித்தியேசர்கலையமோரெட்டினுள்ளும்
பெருகுபொன்வெள்ளிசெம்புபித்தளையியங்கார்ப்பொன்
றிருபுவெண்கலமிவ்வெட்டுமொவ்வொன்றாச்சேர்த்தினானே. (௪௯)

வேறு.

அருகுசூழ்கலையமெட்டிரட்டியினுமகருகெந்தகமரிதார
மருவுமாட்சிதமேமனசிலையிரதம்வழங்கிரண்டப்பிரங்கெட்டுத்
தெருளுறுங்கவுரிகாஞ்சனஞ்சாதிலிங்கமேசிந்தூரந்துத்த
மருளறுமிரண்டுவிமலைகள்காந்தம்வகுத்தவீரெட்டையுமிட்டான். (௫0)

சோதியின்மரமேசோதியின்கொடியேசோதியின்றிரணமேபயையே
மேதகும்பாரசிதைவளர்சீவைவினச்சுரிசமங்கையேவிசையை
பூதிசெய்சபையேபுகழ்சகதேவைபூரணேகேசையேயட்டை
தீதினையறுக்குஞ்சதாவரிசிவபத்திரையுமவ்வீரெட்டினிட்டான். (ருக)

குணக்குறுதுவாரமிருமருங்கடுத்தகும்பமீராறனுட்பலாசு
துணர்க்கருங்காலியாம்பிரங்கல்லால்சுத்தவால்கூவிளம்வன்னி
மணக்குநல்வாகைபிப்பிலமத்திமல்குநாரத்தைமாதளையென்
றுணக்கல்செய்யாதபட்டைபன்னிரண்டுமுறுமுறையெடுத்தெடுத்திட்டான்.

அங்கியின்றிசையினென்பதுகும்பத்தாற்றுமண்ணுனிலையுறுமண்
பங்கமில்புற்றுமண்ணிபக்கோடுபட்டமண்பாய்திரைக்கடன்மண்
பொங்குநீர்மடுமண்புண்ணியதலத்துப்புனிதமண்விலங்கன்மண்ணரசிற்
றங்குமணிந்தவொன்பதுமாய்ந்துதனித்தனியுறுமுறையிட்டான். (ருங)

தென்றிசைத்துவாரத்திருமருங்கடுப்பச்சேர்ந்தபன்னிரண்டுகும்பத்தூண்
மன்றலங்கழுநீர்நீலமேவெண்டாமரைசெந்தாமரைமகிழலரி
யொன்றுபாதிரியேகுரவமாலதியினெண்மலர்முனிபுட்பம்வண்டு
சென்றுதேன்மாந்துநந்தியாவட்டஞ்செண்பகமிராறுநேரிட்டான். (ருச)

நிருதியின்றிசையிற்கும்பமொன்பதனுணெகிழ்ந்தசந்தனம்வெட்டிவேரே
மருமிகுபுழுகுகுங்குமம்வாசமல்குகத்தூரிதக்கோலந்
திருகறுமகருசெழுமணச்சாபத்திரியிலவங்கமேயென்ன
வருவிரைப்பொருள்களொன்பதுஞ்சாலவரிசையினெடுத்துறவிட்டான். ()

மேற்றிசைத்துவாரமிருமருங்கடுப்பமேவியகும்பமீராறுட்
கூற்றுறுமூங்கிலரிசியொடுழுந்துகுளநெற்கோதுமையேயவையே
தேற்றுநாவுரியினரிசியெள்பயறுதினைசெழுங்கடுகுமென்சாமை
தோற்றியவரகென்றுரைத்தபன்னிரண்டுஞ்சுத்திசெய்தெடுத்தினிதிட்டான்.

வளிவளர்திசையிற்கும்பமொன்பதனுண்மன்னிலக்குமிசங்கபுட்பி
யொளிவளர்விண்டுகாந்தியஞ்சனிதேனூற்றியதுழாய்சகதேவி
துளிமதுவாருமிந்திரவல்லிசூரியாவருத்தம்பன்மினியென்
றளியினருரைத்தவருஞ்சிறுதூரேரொன்பதுமாதரத்திட்டான். (ருஎ)

வடக்குறுதுவாரமிருமருங்கடுப்பவதிந்தபன்னிரண்டுகும்பத்துட்
டொடக்கெலாமறுக்கும்பாறயிரிழுதுதூயகோசலமயமிளநீர்
விடற்கருஞ்சுவையின்மாதளைநரந்தம்வில்வமாத்தாடிமம்பலாவின்
றடக்கனியிரதமாயபன்னிரண்டுந்தழைத்தகாதலின்மிகச்சொரிந்தான்.(ருஅ)

வடுவிலீசானதிசையிலொன்பதிற்றுமாசைகும்பங்களுள்வேறு
படுவனவில்லையாதலான்முன்னர்ப்பாய்த்தியகந்தநீரேயா
மிடையிடைமும்மூன்றெண்டிசையினுமீங்கிரும்பொருளிடப்படாதொழிந்த
தடமணிக்கும்பந்தமக்குமுன்சொரிந்ததண்புனலாதியென்றெழிந்தான். ()

மேருமால்வரையேயிடையினையைந்துவியன்பதமிளாவிரதந்தான்
சேரும்யான்வீதியிடையிடைப்பொருள்கள்சேர்த்துறுப்பதவரிசைகளே
வாருமால்வரைகளவற்றிடைப்பதங்கண்மன்னியகண்டங்களெனக்கொண்
டாருநாவலந்தண்டீவெனவியற்றுமம்பொன்மண்டபந்தியானித்தான். (சுO)

செம்பொன்மால்விலங்கலெனத்தியானித்தசெறிபதத்திடைப்பதமுச்சி
பம்புபாலிரண்டுவரிசையிற்சூழ்ந்தபதங்கொடுமுடிகளாப்பாவித்
தெம்பிரான்றேவிவித்தியேச்சுரர்தாதெண்மர்சேர்நூற்றுவர்தமையும்
வம்பறுமலர்களாதிகைக்கொண்டுவரிசையார்பூசனைபுரிந்தான். (சுக)

பதினொருமனுவான்மூலமந்திரத்தாற்பகர்மிருத்துஞ்சயமனுவா
விதமருளிறைவர்தமையுந்தத்தமதுமனுவினாலேனையோர்தமையும்
விதமுறவருச்சித்துணவுமிக்கூட்டிவிரைப்புகைதீபமாதிகளு
மதமறக்காட்டிப்பாடலொடாடல்வரிசையின்முற்றுவித்ததன்பின். (௬௨)

மதியுருக்குண்டமடுத்திருஞ்சுத்திவகைபுரிந்தங்கிதாபித்து
மதுமலர்ப்பலாசஞ்சமிதையுமற்றைப்பொருள்களுமடுத்திடத்தொடங்கிக்
கதுமெனத்தனைநேரெண்மரைவிளித்துக்காதணியாதிகளுதவி
முதுமனுவங்கிகொடுத்திருநான்குகுண்டமுமுற்றுகவென்றான். (௬௩)

குணக்குமுன்னான்குதிக்குறுங்குண்டங்கூடினோரத்தியாலரசு
துணர்த்தகல்லாலுமெரிதிசைமுதலாச்சூழ்ந்திடும்விதுக்குறுகுண்டத்
திணக்கமுற்றவர்கள்வன்னியேகதிரமியம்புமாயூரங்கூவிளமும்
பிணக்கறத்தழுவிச்சருவமுன்மனுவாற்பேணினராகுதிபுரிந்தார். (௬௪)

திவாகரன்மழுங்கவலஞ்சுழித்தெழுந்ததீயிடைமுதன்மையாசிரியன்
றவாதமூலத்தினூறும்பூசனைக்குச்சாற்றியமனுக்களாற்பப்பத்
தவாவின்வெவ்வேறுமாச்சியத்தியற்றியனைத்தையுமெடுத்தெரிசொரியா
வுவாமதிமுகத்தாளோடுகூடாமையுறங்குமாபணித்தனன்மகனை. (௬௫)

விடிந்தபின்றானுஞ்சுசியினைமருவிமேவியகனவினைவினாவி
முடிந்ததுநன்றேயாதலான்மகிழ்ந்துமுடித்திடுந்தீக்கையைக்குறித்துப்
படிந்தவாகுதிகணூறுநூறியற்றிப்பரிவொடுபல்லியம்வான
மிடிந்தெனவியம்பமந்திரமிருவரிருஞ்செவியியம்பினன்முறையால். (௬௬)

வஞ்சியுமேமகண்டனும்பின்புமலர்களாலஞ்சலிநிறைத்து
விஞ்செழிற்கும்பங்குண்டமென்றிவற்றின்மேவுறவருச்சனைபுரிந்து
நெஞ்சுறுமன்பால்வலம்புரிந்திறைஞ்சிநிகழ்த்தியங்கதுபுரிந்ததன்பின்
செஞ்சவேயடுப்பக்கோடணைமுனமேசெய்தமண்டபத்தினைச்சார்ந்தார். ()

முன்னரேயாறுமுழமகன்றிரண்டுமுழமுயர்ந்திருந்தவேதிகையிற்
செந்நெலாதிகளைப்பரப்பிவெள்ளேறுசிங்கம்வன்புலிகலையுரித்த
வன்னதோனான்கும்விரித்துமென்மணியாலமைத்தபீடத்துளொன்றிருத்தி
யின்னபீடத்திற்காஞ்சனக்கமலமிணக்கிமேல்வத்திரம்விரித்தான். (௬௮)

கொற்றவாள்கவிகைகொடிமுதன்மருங்குகொளச்செய்துதண்டிலமுதலாச்
சொற்றயாவையும்வெவ்வேறுறவாற்றனொருமிருத்தஞ்சயத்தருச்சித்
துற்றநேரெதிரேதண்டிலம்வேறொன்றுறுத்ததிற்கனகமுள்ளிட்ட
பொற்றதேன்குடமுஞ்சகலதானியமும்பொருத்துபல்கலன்களுநிறைத்தான்.

தணிவறவிடையேயெழினிகால்வாங்கிச்சமைத்தவொள்ளணைவலப்புறத்திற்
றுணிகதிரெறிக்குமற்றொருபீடந்தன்னையுஞ்சுத்திசெய்திட்டு
மணிமுடியாரம்வத்திரம்பிறவுமணிப்படலிகையின்வந்தவற்றைப்
பிணியறப்பூசைபுரிந்தகும்பத்துப்பிறங்குநீராற்புரோக்கித்தான். (௭௦)

அதர்வணவேதமந்திரம்பல்வேறுருத்திரமாதியுமகற்றி
யிதமருண்மகாரோகினியொடுகுபேரவிருதையமிரணியவருணம்
பதமுறுமாபோயிட்டங்கூர்மாண்டம்பலவுமுன்கணித்துயர்மூலங்
கதமுறுமகோரமிருத்தறுமனுவாற்கடப்படவாட்டுதற்கெழுந்தான். (௭௧)

அல்லிவார்கூந்தலொடுமிறைமைந்தனானனங்கிழக்குறத்தவிசின்
மெல்லவேயிருப்பவிளம்பியெண்ணிறந்தவிண்ணவர்முனிவரரவர்த
நல்லமாதர்களுமொருங்குதாமாட்டுநலத்தினராகவேபாவித்
தில்லியாயிரமிட்டிழைத்தபொன்வட்டிலெடுத்தனனியம்பினவியங்கள். ()

வேறு.

மாமறைமுழக்கமோங்கமங்கலவாழ்த்துவிம்மத்
தூமணிக்கும்பமெல்லாஞ்சொன்முறையெடுத்துத்தாங்கச்
சோமகாந்தனுமாங்கெய்தித்துணையொடுமெகிழ்ச்சிபூப்ப
நாமவேலரசர்மெச்சநன்றபிடேகஞ்செய்தான். (எரு)

சகத்திரதாரையாலேதாழ்குழன்மடநல்லாட்கும்
வகுத்தவத்தனிநீராட்டிமகிழ்ந்தனன்குரவர்கோமா
னகத்துறுமன்புபொங்கவனைவருமாட்டிற்றுக
மிகத்தியாணித்துச்செய்தமேதகுபண்பினாலே. (எசு)

வேறு.

சம்புதிருமால்வேதன்பழையசித்தர்சாத்தியரேயச்சுவனிதேவர்சாலப்
பம்புமருத்துவர்வசுக்கள்பருதிச்செல்வர்பரவுமுருத்திரர்வைமாநசர்கள்யாரு
நம்பலுறுசுரர்கணமுமேனைத்தேவுநகமாதுமலர்மாதுகலையின்மாது
செம்பதுமக்கரத்ததிதிசுவாகாதேவிசினிவாலிசித்தியிலக்குமிகளெண்மர். ()

குருநாள்கண்முகூர்த்தங்கள்கலையேகாட்டைகுலவிலவங்கணஞ்சந்திபகலிராக்கள்
பகுவாரமதியாண்டுமுதலாந்தேவப்பாவையருந்திதிசுரசைவினதைதேவ
வதிதேவமாதர்கள்கத்துருமுன்னாகவழங்குமாமகளிருந்தண்பொய்கைவேலை
நதிநாகங்கின்னரர்கிம்புருடர்வைகானசர்பிரமமுனிவரெழுமுனிவர்தாமும்.

துருவனுறுமண்டிலத்துக்கண்மரீசிதுருவாசன்புலகன்புலத்தியன்சாபாலி
துருவினிதன்காத்தியாயனன்மார்க்கண்டன்றுவிதியகன்சைடவியனனலனேகன்
றிருகனங்கிராதேவராதன்றக்கன்றீர்க்கதவனத்திரிகண்ணுவன்விருத்தன்
கருணன்விதூரதன்றுவைபாயனன்கைவல்யன்கவுதமன்காவலன்பிருகுபரத்துவாசன்.

சனகர்சனதனர்சனந்தர்சனக்குமாரர்சத்திபராசரன்சவுனன்கபிலன்காண
ணனகமுறுமிவர்முதலாமுனிவர்தாமுமருந்ததிமுன்முனிமடவார்பலருமெல்லாம்
புனிதமுறுமிறைமகனைத்தாமேயாங்குப்போந்தபிடேகம்புரிந்தாராகிச்சால
மனமகிழ்ந்தார்பின்னேமகண்டனேடுமடவாலுமெய்யீரம்புலர்த்தினாால்.

வேறு.

பருத்தியிவ்விரண்டிடைகிழியாதனபணிப்ப
விரித்துடுத்தினர்விரிகதிர்மணிமுடிகலன்கண்
மருத்தசந்தனக்கலவைமாலைகளணிபலவுந்
தரித்துவாலுளைமடங்கலாதனத்துவீற்றிருந்தார். (எக)

மாலைவெண்குடைநிழற்றவார்கவரிகளிரட்ட
வாலவட்டநின்றசைதரக்கொடியுடையடுப்பச்
சீலமல்கியவிருதுகள்சிலரெடுத்திசைப்பக்
கோலமல்கியவெழினியைக்கொம்மெனநீத்தார். (அ0)

தண்டிலத்துறுபொருளெலாந்தகவெதிர்நோக்கி
யண்டரேயுருவாம்பசுக்கன்றொடுமெடுப்புக்
கண்டுகண்டுவெள்ளேறுகண்டீரமுன்பல்லோர்
கொண்டுநின்றதுங்கண்டனன்கொற்றவர்பெருமான். (அக)

தமர்களாயினர்தமனியவாழிபூணுதி
விமலமல்கியகையுறைவியந்தனர்கொடுத்தா
ரமரின்மேம்படுமரையர்களனைவருந்திறையிட்
டிமிழுமன்பொடுமெதிர்பணிந்தெழுந்தனர்நின்றார். (அஉ)

பண்ணிநின்றமால்களிற்றினைப்பாகன்முன்னுறப்ப
நண்ணியேறினனுயகிசிவிகையினடந்தா

ளெண்ணில்வார்கொடிசுவிகைபிச்சங்களீண்டினவான்
மண்ணும்விண்ணமுமதிர்தரவதிர்ந்தவார்முரசம். (அ௩)

அரசர்தத்தமவரிசையொடொருபுடையடுத்தார்
பரசுதேர்பரிமாபலயானைதானைகளும்
விரசியோர்புடைமிடைந்தனவிண்ணவரிறைபோற்
புரசைமால்களிறூர்ந்துலாப்போந்துமீண்டடுத்தான். (அ௪)

கோயில்வாய்தலினிழிந்தனன்கோடணைபுரிந்து
பாயவெல்லையிற்படுத்தபொற்பலகைமேலிவர்ந்து
மேயமாதொடுநின்றனன்மின்னிடைமடவார்
தூயபாலடிசொரிந்துநீராற்கழீஇத்துடைத்தார். (அ௫)

அங்குரங்கிளர்பாலிகையவிர்மணிவிளக்குப்
பொங்குபூரணகும்பமும்பூங்கரத்தேந்தித்
தங்குமாசையங்கரகநீர்த்தாரைமிக்கொழுக்கி
மங்கலத்தொடுமும்முறைவலஞ்செய்துபெயர்ந்தார். (அ௬)

மணியிழைத்தபாதுகையெதிர்வைப்பமேலிவர்ந்து
பிணியிழைத்துவைத்தனையவேற்பெருந்தகைக்குரிசி
றுணியிழைத்திரள்சுமந்தனன்றுணைவியுந்தானு
மணியிழைத்தவுண்மனையடுத்தாதனத்திருந்தான். (அ௭)

தேசிகப்பிரான்செல்வனையுடன்கொண்டுசென்று
பூசைமண்டபம்புகுந்துபின்கிரியையும்புரிந்து
நேசமல்கிபவிண்ணவர்தமையெலாநினைந்து
௬சிநின்றலரஞ்சலிகொண்டெதிர்தூவி. (அ௮)

வேந்தன்மைந்தனைவிதியுளிமனுப்புனலாட்டப்
போந்தயாவருந்தத்தமதிடமினிபுகுந்திங்
கேந்தலின்னமும்வேண்டுழியெய்துகவென்னுச்
சாந்தமென்மொழியாலவர்தமைவிடுத்திருந்தான். (அ௯)

சோமகாந்தனுந்துணைப்புயச்சுமையொழிந்தனமென்
றேமமார்ந்தனனேமகண்டனுமினிதெழுந்தங்
கோமமாதிசெய்குரவனையுவந்துபூசித்துக்
காமம்யாவையுங்கைகவிதரமிகக்கொடுத்தான். (௯0)

பெரியமாதவர்பேணுநல்குரவினர்மறையோர்க்
குரியயாவையுந்தானமுமுளமமைதரவுய்த்
தரியஞாதியர்குரவர்வேற்றரையர்களோடும்
பரிவுதீர்தரப்பலவகையடிசில்கைதொட்டான். (௯௧)

துகிலும்பூண்களுந்துரகமும்வேழமுந்தேரு
மகிலங்காவலராகியவரையர்களமைச்சர்
புகலும்பாவலர்நாவலர்பொருநராதியர்க்கு
முகிலுநாணுறப்பொழிந்துகாத்தனன்புவிமுழுதும். (௯௨)

இன்னவாறபிடேகமன்னவரினிதெய்தி
னன்னர்தாமறநீதிபேராயுணன்மனைவி
தன்னுகான்முளைதுவன்றிருஞ்செல்வம்வான்கதியு
மென்னகாமமுமெண்ணியாங்கெய்திவாழ்குவரால். (௯௩)

அனையமன்னராலரசுசெய்திடப்படுநாடு
மினையவன்பிணிநல்குரவிடரிவையின்றி

மனைதொறும்பசுப்பான்மிகுத்திட மதிதோறுங்
கனைமழைப்பெயலுறப்பெருவளத்தொடுகவினும். (௯௪)

மறுவிலந்தணீரேமகண்டப்பெயர்மைந்தன்
பொறுமைமண்மடமாதினைப்புல்லியதுரைத்தா
முறுதியெய்தியமதியொளிப்பெயரினனுவனை
நிறுவிவல்வனம்புகுந்தவாவினிநிகழ்த்துதுமால். (௯௫)

பட்டாபிடேகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - சுளஎ.



# ௪ - வது சோமகாந்தன்வனம்புகுபடலம்.



மதியொளிப்பெயரினன்வனத்திற்செல்லுவான்
கதிதருமைந்தனைக்கனிவினேக்குபு
நிதியினுமுன்னர்யானிகழ்த்துநீதியைப்
பொதிவதுன்கடன்வனம்புகுவதென்கடன். (௧)

பதியுளபடையுளபாங்கிற்றேர்தரு
மதியுளவமைச்சுளமனுசெய்நூலுள
நிதியுளபலவுளநினக்கிருந்துனை
விதியுளதெனக்கெனவிரைந்தெழுந்தனன். (௨)

கதழுமிழ்வேலினன்கடையினீங்குமுன்
சுதன்மையுமமைச்சருந்துவன்றுசுற்றமு
மதநகர்மாக்களும்வந்தமன்னரு
மிதமுறுமைந்தருமெவருமீண்டினர். (௩)

திரண்டவர்புடைவரத்திகழ்குரோசமீ
ரிரண்டுசென்றிளமரக்காவுஞ்சூழ்ந்திடைக்
கரண்டமுங்கம்புளுங்கலந்தபொய்கையை
முரண்டபுசிந்தையான்முன்னிவைகினன். (௪)

அருந்தவத்தோர்களையந்தணாளரைத்
திருந்துறவணங்குபுதிரளைநோக்கியே
யிருந்திடவேண்டுமாலெவருமென்றனன்
வருந்திநின்றவரெலாம்வணங்கிச்சொல்லுவார். (௫)

அங்கியின்வெம்மையுமறலின்றண்மையுஞ்
செங்கதிரிடையொளிச்செறிவுமாக்கையிற்
றங்கியவாவியுந்தகையவெங்கள்பாற்
பொங்கியகருணையைபுடையினீங்கிலேம். (௬)

நீங்கினமாயினுநிலவைநீத்திரு
ளோங்கியவிரவெனவுன்னைநீத்துமுன்
றுங்கியவனப்பெலாந்தளருமாநகர்
யாங்களெவ்வாறுவாழ்ந்திருத்துமேந்தலே. (௭)

வேறு.

முந்தப்புண்ணியமெண்ணிலமுயன்றனையதனு
லெந்தத்தீர்த்தமோவெப்பெருந்தவத்தரோவுடம்பிற்
பந்தித்தாருயிர்பருகுநோய்பாற்றுவர்வனம்யாம்
வந்தப்போதுடன்மாநகர்வருகுதுமென்றார். (௮)

திங்கடங்கியபெயரினன் செப்புவனகரீர்
தங்கியில்லறங்காத்தபின் றனிவனத்தேகத்
தூங்கநன் மறைமொழிந்ததைத்துகளறமுடிப்ப
விங்குவன்பிணியெய்தியதிரக்கலீர்நீயிர். (௯)

பரந்ததொன்மரம்பாடுறும்பதத்துவீழ்போல
வரந்தைவந்துழியருமகன்ருங்குதற்காறன்
புரந்துநுங்களையெம்மினும்புகழ்பெறும்போமி
னிரந்துளேன்வரம்யானனம்போவதற்கென்ருன். (௧0)

இறைவனாணையைமறுப்பதற்கஞ்சினரிருந்தா
ருறையுமாநகர்மாந்தர்களொளிவிழியுறைப்ப
நிறையுமார்வநோயலைத்திடுநெஞ்சொடுநின்ருன்
முறையினற்புவிதாங்கியமுழவுத்தோண்மைந்தன். (௧௧)

கவலைமைந்தனைக்கலைமதிப்பெயரினனேக்கிச்
சவலைநெஞ்சினைதசரதன்மொழிதவருது
குவலையம்புகழிராமனுங்குறுகினன்கான
மவலமெற்றினுக்கதுவனவிதுவனமன்றே. (௧௨)

சுகமடுப்பினுந்துன்பமேவினுப்பினுங்குரவர்
புகலிருஞ்சொலினிற்பதேபுத்திரர்தரும
மகலிரும்பதியேகெனவடியிணைபணிந்து
மகன்மருங்குறுமன்னையைவல்விரைந்தடுத்தான். (௧௩)

ஒழுகுகட்புனலுகளபாதத்துறுதுகளைக்
கழுவிமேல்விழுந்தரற்றினன்கனிவுளத்தன்னை
தழுவிமைந்தனையெடுத்துமைதயங்குகட்புனலான்
மெழுகுசந்தனப்புயத்தினைக்கழீஇயினள்விளம்பும். (௧௪)

தொடுத்தவூழினைச்சுரர்களுநீக்குவாரில்லை
யடுத்தவூழினுக்கரற்றியென்னுவதுமைந்தா
விடுத்தியின்னலைவிக்கினந்தீர்த்துவேண்டுவன
கொடுத்தல்செய்வதுகுஞ்சரத்தனிமுகத்தெய்வம். (௧௫)

ஆதலாற்கணபதியையாராதனைபுரியா
வேதநீங்கியென்னிருமுதுகுரவர்கண்மீண்டு
போதவேண்டுமென்றிரந்துகொள்புகுநகரிடையென்
ருேதவோமென்றுவிடைகொண்டானுலகினைப்புரப்போன். (௧௬)

மீண்டெல்லோர்களும்புடைவரவியனகரெய்தி
யாண்டுமாநிலங்கணபதிபூசையுமாற்றி
வேண்டிவாழ்ந்தனன்விண்ணவர்க்கரசனேயென்ன
மாண்டகேள்வியினேமகண்டப்பெயர்மன்னன். (௧௭)

சோமகாந்தனுஞ்சுதன்மையும்வனம்புகத்துணிந்தார்
நாமவேற்கரச்சுலபனுஞானகெம்மியனுந்
தாமுமாங்குடன்சார்ந்தனர்நால்வருந்தழைத்த
காமர்மால்வனங்கலந்தனர்சிலபகல்கழித்தார். (௧௮)

சூழ்ச்சிமுற்றியவமைச்சர்களிருவருஞ்சுவைத்தேன்
வீழ்ச்சிமுற்றியகிழங்குகாய்மென்கனிகொணரா
வாழ்ச்சிமுற்றியமன்னனேடணைவருங்கைதொட்
டாழ்ச்சிமுற்றியவுளந்திரியாரதர்நடந்தார். (௧௯)

இன்னவாறவரிடைவனத்தியங்குழிவேந்தன்
முன்னரீட்டியதவப்பயன்முழுவதுமடுப்பத்
தன்னைநேர்வருந்தாபதப்பிருகுநோற்றிருக்கு
நன்னராச்சிரமத்தினுக்கடுப்பநண்ணினரால். (உ0)

பருதிநாயகனுருப்பவிர்வெப்பினும்பரிவுங்
கருதினுருளந்தனக்குநோய்காட்டும்வன்பால்கண்
மருவியேற்றிழிவாகியவழியியலினைப்பு
மொருவவாங்கொருதடாகத்தினீள்கரையுற்ருர். (உக)

வேறு.

வண்டுவரிபாடமதுவிண்டொழுகும்வாசப்
புண்டரிகமோடுபலபூத்திரளணிந்து
கண்டவர்கணெஞ்சுகடவாதவொர்வனப்புக்
கொண்டுகுளிர்தூங்குதடங்கண்டுமகிழ்கூர்ந்தார். (உஉ)

அன்புவிரவின்சொலினரும்பயன்விளைத்துத்
தன்புடையடுத்தவர்தமைத்தழுவியன்னோர்க்
கென்புமுரியாரின்மணமீர்க்குளிரிளங்கா
றுன்பமறவந்துதவுதோயநிறைகண்டார். (உஙு)

தெளிந்துகுளிர்கூர்ந்தினிமைசேர்ந்துறுபயத்தோ
டளந்தறியொணுதவரினுர்க்குமுபகாரம்
வளர்ந்திடுமெனும்பனுவல்வாய்மையெனமாவு
முளர்ந்துதிரிபுள்ளுமறலுண்டெழுவகண்டார். (உச)

பழங்கணுறவன்பசிபடுப்பமுனிவோர்கள்
கிழங்குகொடுநீத்தகிளர்தாமரைகரைக்கண்
வழங்குசுடரோன்கதிரின்வாடிநிலைநீத்தோர்
சழங்குவர்களென்றுகரிசாற்றுவதுகண்டார். (உரு)

திரண்டுகரைசேரவருசேல்கவரவாடுங்
குரண்டமெதிராழ்ந்துகயல்கொண்டுமிசைவந்துண்
கரண்டம்வறியோர்க்குதவுறுதுகளித்துண்ணு
மிரண்டுமறியார்செயலியம்புவதுகண்டார். (உசு)

அன்றிலுமகன்றிலுமருந்துணையினீங்கா
தொன்றியமுயங்குசிறையோடிரைகடேர்ந்து
மன்றல்கமழ்கோட்டிடைவதிந்துமுதிர்காமம்
சுன்றினவரன்பினிலைகாட்டவெதிர்கண்டார். (உஎ)

திங்களைவிழைந்துமலர்தேங்குமுதம்வாடப்
பங்கயமலர்ந்தொளிபரம்பவொருசீராய்த்
தங்கியவனிச்சமெவர்தம்மினும்வருந்தாத்
துங்கமுனிவோர்நிலைமைதோற்றவெதிர்கண்டார். (உஅ)

மிக்கதிறனுன்மெலியர்தம்மின்மிறைசெய்தங்
கொக்கவழியுங்கயவரொப்பவுறுமீன்க
டக்கசிறுமீனுடறழைப்பவினிதுண்ணு
வெக்கரிவர்புட்கிரைகளாவதெதிர்கண்டார். (உகூ)

அன்னமொடுநேமிகுருகாரனுகர்தாரா
மன்னுசிரல்கம்புள்வளர்நாரைமலிபோதா
வென்னவுமடுப்பவிரையீந்துசிவனேரு
நன்னர்நறுநீர்க்கரையினண்ணுபொழில்கண்டார். (௩0)

வேறு.

மயிலாலுவகுயில்கூவுவவரிவண்டிசைமுரல்வ
பயில்பூவைகள்கிளியோடிசைபலவாதுகள்புரிவ
வயில்வாள்விழிமடவாரெனவலர்பூங்கொடியசைவ
வெயிலாதவர்புறமேகுறவிரிபூஞ்சினைமிடைவ. (௩க)

குழைவாய்ஞெமிர்முகைவாயவிழ்குளிர்தேனுறைசிந்த
மழையாமெனவளர்சாதகம்வாய்விண்டிடைபருக
வுழையார்மலரொழிதேனதனுறுவாயிருகடைவார்
விழைதேனுகர்வனவேசையின்மிகுகாமுகரனைய. (௩உ)

வெள்ளத்திரளிடுவெண்டலின்விரிவெண்மணலெக்கர்
கொள்ளச்செழுமதுநுண்டுளிகொட்டிக்குருமலர்மேற்
றள்ளித்தழைமகரந்தமுந்தளிருந்தகவிரவி
நள்ளிற்பிரியாநந்தனவனமென்னநலக்கும். (௩௩)

வேறு.

இனையபொழில்கண்டவர்களெய்தினரிருந்து
புனையுமனையெழிலுமிதுபோல்வதலதென்றார்
நனையவிழுமென்மலர்நடந்துவருதென்றல்
கனைவெயிலுழந்ததுயர்காற்றியதையன்றே. (௩௪)

வேயனையதோளிபுடைமேயினளிருந்தாள்
காயிலையவேலரசன்கண்படைகொள்கின்றா
னுயிடையமைச்சர்களகன்றுணவுநாடிப்
போயினர்களாங்கொருசிறானினிதுபுக்கான் (௩௫)

கண்டனள்சுதன்மைவருகாமருசிறானைக்
கொண்டனண்மகிழ்ச்சிகுலவேற்குமரனேபோன்
மண்டியதவச்சிறுவன்வந்திடுநலத்தால்
விண்டதுவருத்தமெனவேண்டியிதுவிண்டாள். (௩௬)

புண்டரிகமெண்குபுழைவார்கைமதவேழங்
கண்டிரவமுந்தழையுங்கானனமிதன்க
ணண்டரினமுந்தனியடைப்பவரிதாகு
மிண்டுதிறலாளரெனமேவினைநீயாரே. (௩௭)

நின்னுடையநாமமெதுநின்னையினிதீன்ற
வன்னையவள்யாவண்மகிழையனவன்யாவ
னின்னவனமெய்தியதெதற்கிவையனைத்து
முன்னையுரையென்னலுமுனிச்சிறுவனோதும். (௩௮)

இருமையுமளந்துதவமீட்டுகுலத்துள்ளே
ழொருமைவரும்யான்சிவனனுற்றபெயரம்மை
பொருவரியகற்புறுபுலோமையெனையீன்றான்
பிருகுமுனிவன்வரவுபேணுபுனற்காகும். (௩௯)

என்சரிதமின்னதலதில்லையினியன்ற
யுன்சரிதமோதுவனத்தூடுபிணியாளன்
றன்புடையிருக்கவருதன்மையெவன்பொன்னைப்
பின்புடையிருத்துமெழிற்பெண்ணரசிக்கென்றான். (௪௦)

என்றவுடனேசுதன்மையென்பவடனுள்ளத்
தொன்றுதுயரத்தனையுமொன்றுமொழியாமே
நன்றுமொழிசெய்துநயனம்புனறுளிப்பத்
துன்றுமவலப்புணரிதோய்ந்தருகினளால். (௪க)

வந்திடுமுனிச்சிறுவன் மல்லலறிவானு
மந்தணர்குலத்தில்வருமான் றசிறப்பானு
முந்துமருளாலுளமுடைந்துருகிநீங்கிக்
கந்தமலிதண்புனல்கவர்ந்துகடுகிட்டான் (௪௨)

வாழ்ந்தபுகழ்நைமிசவனத்துறவிர்சோம
காந்தன்வனமேயதுகரைந்தனமறிந்தீர்
வேந்தனவனற்பிருகுமெய்த்தவனழைப்பப்
போந்தபடிகேண்மினெனவேபுகலுஞ்சூதன். (௪௩)

சோமகாந்தன்வனம்புகுபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-௭௨௦.



## ௫ - வது சோமகாந்தன்பிருகுமுனியையடுத்தபடலம்.

காதலரும்புந்தனிமைந்தன்காலங்கழித்துக்கடுகியதுஞ்
சோதிவதனம்பராதுக்கதுக்கவுளத்தால்வாடியதுங்
கோதிறவத்துப்பிருகுமுனிகுறித்துநோக்கியிவனென்னோ
வேதமுழந்தான்வினையறிதுமென்றுசிவனன்முகம்பாரா. (௧)

பாணித்தடுத்தாயதுவன்றிப்பருவந்திருந்ததுன்முகமு
நாணிச்சிறிதுங்கரவாமனடந்தசெய்திமொழியென்றான்
கோனைத்தவத்தான்குறிப்பறிந்துகுளிர்பூங்கமலத்தாளிறைஞ்சி
மாணச்சிறந்தபணிமொழியான்மைந்தன்முழுதும்வகுத்துரைப்பான். (௨)

நறுமென்புனலுக்கிறந்தேனைநாறும்பொழிலிற்றுணைவனொடு
முறுதல்புரிந்தங்கிருந்தொருத்தியுறுமென்பெயராதிகள்வினவ
மறுவிலவட்குவிடுத்தவடன்வரவுவினவியறிந்தனனு
லிறைவபொழுதுநீடித்ததெளியேன்றளர்வுமினிக்கேளாய். (௩)

சவுராட்டிரத்துத்தேவநகர்தனில்வாழ்சோமகாந்தனுயிர்
கவர்நோய்வருத்தப்பெருஞ்செல்வங்கழித்துச்சுதன்மையெனுமனையு
மிவர்சூழ்ச்சியினிருவரும்பினெய்தவடுத்தானுல்வருந்தா
மவிர்வானுகர்ந்துநரகுழந்தாரனையரதற்கேமுகம்புலந்தேன். (௪)

கனிகாய்கிழங்குகொணர்ந்தளிப்பக்காதலமைச்சர்புறம்போந்தார்
நனிபூவணையுமாற்றாதானவியுமணன்மேற்கண்படுத்தா
னினியார்துணைநோய்க்கெனச்சுதன்மையிகந்தசுகமும்பெறுந்துயரும்
புனிதாநினைந்துநினைந்துருகிப்பொருமியெனைக்கண்டுரைத்தழுதாள். (௫)

தீம்பாலடிசிறரும்பாகஞ்சிதையாதமைத்துப்பொற்கலத்தி
லாம்பான்மையினுலினிதூட்டவதுவுமிசைவின்றெனுங்கோமா
னோம்பாதென்றகாய்கனிநீருண்ணும்பாவம்பாவமிது
கூம்பாதிடும்பையனைத்துமெமைக்கொள்வதோவென்றாற்றினுள். (௬)

மதிபோலொளியும்பெருவலியும்வரையாவனப்பும்விரவுடலம்
பொதிதாதவிழ்ந்தமலர்மாலைபூஞ்சந்தனமாதிகளணிந்து
துதிவானிறையும்பெறுதழுங்கச்சுகவாரிதியின்மூழ்கினேன்
முதிர்நோய்வருத்துந்துயர்க்கடலின்மூழ்கினனென்றழுதினைந்தாள். (௭)

மைந்தர்மகளிர்பெருஞ்சுற்றமற்றுமடுத்தோரொடுங்கலந்து
சிந்தைகளிப்பவைம்பொறியுந்தெவிட்டவினியவேநுகர்ந்தே
மந்தநகரம்விடுத்திந்தவருங்கானடுத்துவிலங்கோடு
மெந்தநிலத்துமிருந்திலையமானேமென்றுமெடுத்துரைத்தாள். (௮)

வேறு.

இங்ஙனநிகழ்ந்ததெனயாவையுமதித்திட்
டுங்ஙனமிருந்தமுனியொள்ளருள்சுரந்தே
யெங்ஙனமிருந்தனரியம்புசிறுவாநீ
யங்ஙனமடுத்தவரையிங்ஙனழையென்றான். (௯)

தந்தையருள்கொண்டவர்கடங்குபொழினண்ணி
யெந்தையருள்கூர்ந்தனரெழுந்துவருவீரென்
றுந்தும்விழைவாற்சிறுவனோதிமுனடந்தான்
மந்திரிகண்முன்பின்வரமற்றவர்நடந்தார். (௧0)

இற்றைவரையேபிணியிறந்ததெனவெண்ணி
யுற்றமகிழ்வான்முகமுளத்தொடுமலர்ந்து
சற்றுநெறியேகிவளர்தண்டலைவளைந்த
பொற்றவெழிலாச்சிரமம்புக்கனர்களன்றே. (௧௧)

வேறு.

புலிமுலைபுல்வாயுண்ணப்புழைக்கையான்மதமால்வேழம்
வலிகொள்கண்டீரவத்தின்வார்சுவற்கேசநீவ
மெலிவுகண்டிருஞ்சூற்பாம்புவிழுங்கிரைமயில்கணல்க
நலிபகைவயிரமின்றிநண்ணினவுயிர்களெல்லாம். (௧௨)

பருவம்வந்தடுத்தகாலும்பயோதரப்பெயன்மிகாது
பருவமில்லாதகாலும்பஃறுளிமழைதாழாது
பருதியோரியல்பினென்றும்பயில்வெயில்பரப்புந்தென்ற
லொருவிவன்காலும்வீசாவுகுபனிமிகையும்வீறா. (௧௩)

இருதுவேற்றுமைகளின்றியிருத்தலிற்பலவேறான
தருவும்வார்கொடியும்புல்லுஞ்சகலமுந்தளிர்த்துப்பூத்து
மருவிராய்வளங்கண்முற்றுமன்னிவான்புரையுமந்தப்
பிருகுவாச்சிரமநோக்கிப்பெருகுவிம்மிதத்தரானார். (௧௪)

வனம்படுபுண்டரீகமலர்த்தவிசகற்றிவேதன்
வனம்படுபுண்டரீகமணித்தவிசிருந்தாற்போல
வினம்படுமுனிவர்சூழவெரிவிழிவேங்கைத்தோலிற்
றனம்பெருந்தவமாக்கொண்டதாபதனிருப்பக்கண்டார். (௧௫)

தம்பிரான்முகத்துளொன்றுசண்முகராறற்போல
வம்பறுக்கமலவாழ்க்கைவானவன்முகத்துளொன்றிங்
கும்பர்சூழ்பிருகுவாகியுறைவதையறியாரெல்லா
மெம்பிரானறுத்தானென்பரெனவியந்தடுப்பச்சார்ந்தார். (௧௬)

கண்டவர்கண்ணான்மீட்டுங்காணவுங்கூசநீர்சோர்
புண்டகுகுட்டயாக்கைப்புரவலன்முதலெல்லோருங்
கொண்டதம்பெயர்வெவ்வேறுகூறியெட்டுறுப்புமைந்து
மண்டனிற்படியவீழ்ந்துமலர்க்கரங்கூப்பிநின்றார். (௧௭)

அவரவர்க்காசீர்வாதமருந்தவப்பிருகுகூறக்
கவர்கயிற்கழலானுள்ளக்கரையறுமன்புபொங்க
வுவரியுண்டெழுந்தகார்போலொளிவிழியுறைப்பமெய்யி
னிவர்மயிர்பொடிப்பவேர்ப்பவிழுதெனவுருகிச்சொல்வான். (௧௮)

வேறு.

பண்டுபுரிதீவினையின்பயனாகியுடலிடமாக்
கொண்டெழுந்தெனலமுழுதுங்குமைத்தபெருநோய்முகத்தாற்

றெண்டுபுரிநல்வினையூழ்சூழ்ந்து பிடர்பிடித்துந்தப்
புண்டரிகமலர்ப்பாதம்போற்றலுறும்பயன்பெற்றேன். (கக)

சென்றபலபிறவிகளுஞ்சேருமெதிர்பிறவிகளு
மொன்றியவிப்பிறவியொடுமுறவிழுப்பம்படைத்தனவா
மின்றுனதுமலர்ப்பாதமிறைஞ்சலினென்றவமாதி
நன்றுபுரிவினைப்பயனுநண்ணியதென்பாலெலந்தாய். (உ0)

எளியேன்கல்வியுங்குலமுமீண்டறிவும்பயன்பட்ட
வளியேனையுயிர்த்தவருமரும்பெருப்பேறுடையவரே
களியார்ந்தகற்பகத்தைக்கலந்தவர்க்குக்குறைவின்றே
யொளியார்ந்தநினதடியையுற்றேற்குக்குறையுண்டோ. (உக)

இம்மையிலேபாவவினையாதுமிழைத்தேனல்லே
னம்மையிலேபெரும்பாவமாற்றினேனுதலினு
லும்மையிலேபெருங்கதிக்காமுறுதியுமிங்கேயழியச்
செம்மையிலாக்கொடும்பிணியென்றேகமடர்த்தெழுந்ததுவே. (உஉ)

அருந்தவத்தாற்றானத்தாலவுடதமந்திரங்களினுல்
வருந்தியவிப்பிணிவருந்தவருந்தியுந்தான்வருந்தாம
லிருந்தவையெலாமெருநீரெனவளர்ந்துவிளைந்ததினிப்
பெருந்தவநின்னருளன்றிப்பெயர்க்குமொருமருந்தில்லை. (உ௩)

விலங்குபறவைகண்மற்றும்விழுத்தவநின்னுச்சிரமத்
திலங்குபகைவயிரமுறாதின்பமுறக்காண்டலினுற்
றுலங்கவரும்பிணிப்பகையுந்தொழுதகையேன்றனைவருத்தா
தலங்கியினியழியுமெனக்கையமிலையையமிலை. (உச)

எனவுரைப்பப்பிருகுவெனுமிருந்தவத்தோனருள்கூர்ந்து
தனதுளத்துத்தியானித்துச்சார்ந்தபிணிமுதனுடி
நினதுவிழைவினைமன்னுநின்மலனுரருள்கூட்டு
மனமுளைந்துதளராதிவருமிளைப்பாறுதியென்றான். (உரு)

உழையிருந்தோர்பிருகுமுனியுரைத்தகுறிப்பினையுணர்ந்து
விழைவிரைப்பூந்தைலாதிமிகவாட்டியறுசுவையுந்
தழைதருநால்வகையுணவுந்தகவூட்டியுபசரிப்பக்
கழைசுளியுங்களியானைக்காவலனுதியர்மகிழ்ந்தார். (உசு)

என்றுமாதவர்கேட்பவிருந்தவத்துப்பிருகுவின்பா
லன்றுவேற்கரத்தரசனடுத்ததுரைத்தவனவற்குத்
துன்றுதீவினைநன்மைசூழ்ந்துரைத்தவவ்விரண்டு
மின்றுகூறுவன்முறையேயெனச்சூதமுனியியம்பும். (உஎ)

சோமகாந்தன்பிருகுமுனியையடுத்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - எசஎ.



## ௬ - வது சோமகாந்தன்றீவினைப்படலம்.



கருவினைவேரொடுங்களைந்தமாதவப்
பிருகுவின்பேரருள்பெற்றமன்னவன்
றிருவியலத்தினஞ்சென்றமர்றைநாட்
பருதிவந்தெழுமுனம்படுக்கைநீங்கினான். (க)

நாட்கடன்முடித்தனனுடைமைவகை
வேட்கையும்விடுத்தருள்விரவுமெய்த்தவன்
றாட்கமலங்களைச்சார்ந்துதாழ்ந்தவன்
வாட்கடைக்கண்டரமருங்குவைகினான். (௨)

வேட்டனவேட்டவாவிளைக்குமைங்கரன்
சேட்டொளிப்பதமலர்சேர்ந்தமாதவன்
வாட்டுமிப்பிணியினைவாட்டலாமென
வீட்டியபழவினையெடுத்துக்கூறுவான். (௩)

ஒன்னலர்மணிமுடியுரிஞ்சுந்தாளினோய்
மன்னியவிந்தமால்வரையினோர்புறங்
கொன்னெடுநகரங்கொல்லாரமென்றுள
தந்நகர்நாய்கனல்லறிவின்மிக்குளான். (௪)

சித்துருவப்பெயர்சிவணிவாழ்தரு
மத்தகுவணிகனுக்கான்றகற்பினாண்
மெத்தெழிற்சுலோசனைமெய்த்தவத்தினாற்
புத்திரனெனவுனைப்பொற்பவீன்றனள். (௫)

காமந்தனெனும்பெயர்கலந்துபாலனா
யேமுறுதருணம்வந்தெய்துசெவ்வியிற்
றேமறுகுடும்பினியென்னுந்தோகையைத்
தீமுனர்வரைந்துடன்சேர்த்தினனரோ. (௬)

இடும்பெயர்க்கேற்புறவெழுவர்மைந்தரை
யடும்படைவாட்கணினையர்மாதரைக்
குடும்பினியீன்றனள்குலவிவாழுநாள்
கடும்பழநுந்தைவான்கதியிற்சென்றனன். (௭)

வருந்தியன்னையுமனுமரணஞ்செய்தன
டிருந்தியகாவலர்தீரப்பட்டியாய்
முருந்திளமுறுவல்வேசையரின்முன்னிநீ
யருந்தனமனைத்தையுமழிவுசெய்தனை. (௮)

தருமமன்றனக்கெனத்தாரஞ்சாற்றவும்
பொருள்வருவாய்கலம்புவியில்லாதியை
யிருமனப்பெண்டிரினிழந்தில்லாமையை
மருவிமிக்கிரந்துசின்னாள்வழங்கினை. (௯)

வேறு.

பொய்ச்சூளுரைத்தும்பொய்யுரைத்துங்குறளையுரைத்தும்பொருளீட்டி
மைச்சூழ்படைக்கட்பொதுமாதர்மகிழச்சிலநாள்வழங்கினைபின்
கைச்சூடகம்பாடகங்குழைபூண்கலமாதிகளுங்களவாண்டு
மெய்ச்சூழ்மகளிர்கற்பழித்தும்விடரிற்சிறந்தோனாயினையால். (௧0)

மைந்தர்மகளிரொடும்பசியால்வருந்திநாளுஞ்சரணின்றிச்
சிந்தைதளர்ந்துகுடும்பினிபோய்ச்சேர்ந்தாள்பிறந்தமனைபின்னு
மந்தநகரிலிருந்துமதுவார்ந்துகளித்துமுறைதிறம்பிப்
புந்திவிழைந்தபடியெந்தப்பொல்லாவினையும்புரிந்தனையால். (௧௧)

வேந்தனறிந்துகடிந்தகற்றவெய்யவனத்திற்கள்வரொடு
போந்துபதிகருயிர்கொன்றுபொருள்கைக்கவர்ந்துவிலங்காதி
யேந்துபடையாலழித்துமருந்திட்டாறலைப்போரையுங்கொன்று
மாய்ந்தவவர்தம்பொருண்மாதர்மற்றுங்கவர்ந்துநுகர்ந்தனையால். (௧௨)

காதல்வேதமுழுதுணர்ந்தகணவர்த்தனனென்றொருமறையோன்
போதவாற்றினெதிர்நோக்கிப்பொருக்கென்றடுத்துக்கரம்பிடித்தாய்
மோதுகாலதூதெனவேமுன்னிவெருவிநெட்டுயிர்த்திட்
டாதகாதிங்கெனக்கோறலரியபொருள்கொண்டொழியென்றான். (கங)

முன்னேயொருத்திதனைமணந்தேன்முடிந்தாள்பிதிரர்கடன்முடிப்பப்
பின்னேயொருத்திதனைமணந்தேன்பிள்ளையுயிராப்பருவத்தா
ளன்னாடனக்கோர்சரணில்லையதனாலளியேனுனக்கபயங்
கொன்னேகோறல்புரியாதுகுலவும்பொருள்கொண்டொழியென்றான்.(கச)

கள்ளேகாமங்கொலைகளவுட்கலந்ததொன்றாயினுமிழுதை
கொள்ளாதுயர்ந்தோர்கொளுத்தறிவைக்கூறுமவைநான்கினுமென்றும்
விள்ளாவொருநீபனவன்மொழிவியன்பாறையிற்கொட்டியதறிபோற்
றள்ளாநினைத்தபடிமுடித்தாய்பிரமசாயைசார்ந்ததுவே. (கரு)

பன்னாளுழந்தும்பயன்சிறிதுபயப்பதேனுநல்வினையே
யின்னாமையையஞ்சுநர்புரிவரிழுதைசிறிதும்பெறப்பழியைச்
சின்னாழிகையிற்புரிந்தூழிசென்றுநரகத்துயருழப்பர்
மன்னாவினிப்புண்ணியங்கேண்மோவென்றுபிருகுவகுத்துரைப்பான். (கசு)

சோமகாந்தன்றீவினைப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-எசுங.



## எ - வது சோமகாந்தன்நல்வினைப்படலம்.



சொன்னவாறுநீ, துன்னுகானிடை
மன்னிவாழுநா, ளின்னலெய்தினாய். (க)

நடுக்கந்தந்திரி, யடுக்கும்வன்சப
மெடுக்குஞ்சந்தியுந், தொடுக்குங்காசமும். (உ)

மூப்புமுற்றுறக், காப்புங்கைவிட
நீப்பருந்துயர்க், கோப்புக்கொள்ளலும். (ங)

வேறு.

சாதற்றுயர்சார்ந்ததுபொருப்பென்
றோதத்தகுமொண்பொருளும்யானும்
போதக்கடியாதியெனவில்லின்
மாதுக்கொருதூதினைவிடுத்தாய். (ச)

இனையாதிருளேகிமொழிதூதை
மனைமாதொடுமெற்றையருநோக்கிக்
கனைபூங்கழற்காவலனொறுக்கு
நினையாதகவென்றுமிகநீத்தார். (ரு)

இனியாதுசெய்வாமெனவிருந்து
தனியாமனமோடுதகவெண்ணி
நனிபோனபிறப்பிலுறுநன்மை
முனியாதுனைமுற்றவிதுசெய்தாய். (சு)

உலகோரறியாதுனையிரந்து
கலனாடைபொன்னாதிகவர்ந்தேகும்
விலகானொருவேதியனைநோக்கிக்
குலவேதியரைக்கொணர்கவென்றாய். (எ)

அன்னான் பலவாச்சிரமநண்ணி
மன்னாதரவான் முனிவர்வம்மி
னன்னாய்கனயந்தினிதளிக்கும்
பொன்னுடைபொற்பூண்பெறுதற்கென்றான். (௮)

உன்றீதுணராதவரடுத்தா
ரன்றாதரவாலடிவணங்கி
நின்றாய்நினைநோக்கிமுனிவோர்க
ணன்றேயெனநக்கிதுமொழிந்தார். (௯)

வேறு.

பாவியென்றறியாதீங்குப்படர்ந்தனம்பாவியுன்னை
மேவினர்கண்டோர்கேட்டோர்விளம்பினோரிரந்தோரெல்லாந்
தீவினைச்சிமிழ்ப்பிற்பட்டுச்செறிநரகுழப்பரற்றாற்
றாவிலுன்பொருளையெல்லாந்தருமநீவிழைந்தாயாயின். (௧௦)

நெடிபடுவனத்திலோர்சார்நின்மலக்கணேசன்கோயி
லடிமுதன்முடியின்காறுமலர்செழுந்தருவன்மாக்கள்
குடிகொளுமதனைநன்குகுயிற்றுதியென்றுநீங்கிக்
கடியறன்மனுக்கண்மூழ்கிக்கணித்துளந்தூயரானார். (௧௧)

கடும்புகைவிட்டவாறுங்கரிசிலர்கரைந்தவாறு
மிடும்பைவந்தழிக்குமாறுமெண்ணியெப்பொருளுமன்றப்
படும்பயப்பாலவாகப்பண்ணுவதைங்கைப்புத்தே
ணெடும்பெருங்கோயிலன்றியிலையெனநினைவுட்கொண்டாய். (௧௨)

ஈட்டியபொருளினோடுமிடம்படுகோயில்சார்ந்து
கோட்டமிலாதவன்புகுடிகொளவனுதியான
சேட்டொளிக்கணேசர்கோலத்திருவுருவிருப்பக்கண்டு
வாட்டமுற்றொழிந்துதாழ்ந்துமருங்குசூழ்ந்தாடிப்பாடி. (௧௩)

கம்மியராதியோரைக்கருவியோடடுப்பக்கூவி
விம்மொளிப்பொன்னாற்கற்பக்கிருகத்தைவிளங்கச்செய்து
செம்மணியாதிசெம்பொற்றகட்டிடைச்செறித்துமுன்னே
கொம்மெனப்படுத்துநான்குகோபுரந்திசைதொறாக்கி. (௧௪)

மண்டபமாடமேடைமடைப்பள்ளியாகசாலை
விண்டொடுபுரிசையாதிவெள்ளியாதிகளாற்கல்லாற்
கண்டவிட்டிகையாற்காழ்த்துக்கடிமிகுமரத்தால்வெவ்வே
றண்டர்கம்மியருநாணவழகுறச்சிற்பத்தாக்கி. (௧௫)

வாயில்கணான்கின்முன்னுமணிப்புனற்றடாகந்தொட்டுக்
கோயிறன்புறத்துமுற்றக்குலவுமாராமமாக்கித்
தாயினுமினியார்க்கானதமனியப்பாத்திராதி
யாயினபின்னராதிசைவரிற்பூசையாற்றி. (௧௬)

நாடகக்கணிகைமாதர்நல்லியமியம்புவோர்கண்
மாடகயாழின்வல்லோர்வாகனங்கவிகையாதி
யாடகமணியிற்செய்தவணிகலம்பிறவுமல்கச்
சேடகம்பொலிந்தோர்போற்றத்திருவிழாப்பலவுஞ்செய்தாய். (௧௭)

இன்னணஞ்சிறப்புப்பூசையியற்றியேசிலநாட்செல்லத்
துன்னியவாழ்க்கைநாளுந்தொலைந்ததுகாலதூதர்
முன்னினர்பிடித்துவீக்கிமுறைபுரிந்தீர்த்துச்சென்று
கன்னவில்புயத்துச்செங்கோற்காவலன்முன்னர்விட்டார். (௧௮)

சினம்பொழிதருமவேந்தன்சித்திரகுத்தற்கூவி
யினம்பிரிந்தடுத்தவின்னனிருவினையின்றுகாறுந்
தினந்தினஞ்செய்தவெல்லாஞ்செப்புதியென்னவன்றன்
கனம்பொழிந்தாங்குமுற்றுங்கரைந்துபின்னிதுவுஞ்சொன்னான். (கக)

பிறந்தநாட்டொடங்கியின்னன்பேணியதனைத்தும்பாவ
மிறந்திடுநாளிற்பாவத்தீட்டியபொருள்களெல்லாஞ்
சிறந்தவைங்கரனுக்காக்கித்திருப்பணிசெய்தானென்றான்
மறந்தழைதருமவேந்தன்மதித்திதுவகுக்கலுற்றான். (உ0)

பஞ்சியின்மலைகளெல்லாம்படுதழற்பொறிபட்டென்ன
விஞ்சியபாவமெல்லாம்விநாயகன்பணியான்மாய்ந்த
தெஞ்சியதுளதுதானுமிருநிலத்தலதில்லென்று
நெஞ்சுறமதித்துநின்னைநேரேலெனமுகத்திநோக்கி. (உக)

அளவறுபாவஞ்செய்தக்கற்பமேநன்மைசெய்தா
யுளவிருபயனுமுன்னருருப்பதுநுகர்திகொல்லோ
வளமலிநன்மைமுன்னர்மருவுதிகொல்லோவென்றா
னிளகியநெஞ்சினீயங்கின்பமேமுன்னரென்றாய். (உஉ)

அப்படியாகவென்றேயகற்றினனீயும்வேந்தா
யிப்படிமீதுமுன்னரெய்தரும்போகமூழ்கி
யுப்படியின்னநோய்பின்னுழக்கின்றாயிதுவுந்தீரக்
கைப்படிகனிபோலைங்கைக்கடவுளைப்போற்றுகென்றான். (உங)

காமந்தனெனும்பேர்க்கேற்பக்காமதனுகிநாளுந்
தோமந்தமின்றியாற்றித்துரிசுறுபொருள்கள்கொண்டே
சாமந்தப்பொழுதிற்செய்ததருமத்தாலியமனீப்பிற்
சேமந்தன்பதந்தரான்கொல்சேர்ந்தவர்தமக்கேரம்பன். (உச)

இருவினைபிருகுவென்போனெடுத்தியம்பியதுசொற்றா
முருவவார்சடையீர்மன்னனுருக்கிளர்குட்டநோயை
யருளினன்முனிவன்சிறியகற்றியதறிகவென்னத்
தெருளுறுசூதமேலோன்சிந்தையின்மகிழ்ந்துகூறும். (உரு)

சோமகாந்தன்நல்வினைப்படல முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-எஅஅ.

## அ-வது சோமகாந்தனேய்தீர்ந்தபடலம்.

பிருகுமாதவன்பேணுங்கருணையா
லருளுமுண்மையையம்புலித்தேசினன்
றெருளுறாதயிர்த்தானவன்றேகநின்
றுருவவான்புளோராயிரந்தோன்றின. (க)

வச்சிரத்தின்வடித்துவைத்தன்னதோர்
நச்சுதுண்டத்தினண்ணியமன்னவ
னச்சையீர்ந்தெழுந்தார்ந்துவருத்தலு
மச்சமுற்றவலங்கொண்டுகூறுவான். (உ)

ஓலவோலவுயர்தவவேதியா
வோலவோலவுனைச்சரணெய்தினே
னேலவோலவுறுதுணைவேறிலே
யோலவோலவொழிக்கினுநீங்குறேன். (ங)

மாதவப்பெருமாமலையையவோ
சீதளக்கருணைக்கடற்செம்மலோ
காதரக்கருங்கானங்கடத்திமெய்ப்
போதமுய்த்தருள்புண்ணியமூர்த்தியோ. (ச)

நின்னையுன்னினர்நீளிடைவைகினு
மன்னர்பாலணுகானடற்காலனு
மென்னைநின்னெதிரேயிருட்புட்குழாஞ்
சின்னபின்னஞ்செய்கின்றனகாண்டியால். (ரு)

நின்னதாச்சிரமத்துநிறந்தரித்
தின்னலின்றியிருஞ்சிறைப்புட்களு
மன்னுமாவும்வளம்பெறநின்னடி
துன்னினேனரித்துயருறனீதியோ. (சா)

மேருநண்ணும்விழுப்பமில்காக்கையு
மாரும்பொன்னிறமையநின்சேவடி
சாருமென்றுயரைத்தணியாயெனி
லோருநின்னருளுக்கியல்போவென்றான். (எ)

தாலிப்பிச்சைதருகெனத்தானையைக்
கோலிப்பார்த்திபன்றேவிகைகூப்பினு
ளாலிப்புள்ளடுமேயென்றமைச்சரு
மோலிப்போடுமொண்டாளிணைவீழ்ந்தனர். (அ)

ஆவவென்னையென்னேபுள்ளடர்ப்பது
பாவமிப்பழிபார்ப்பரிதாமெனத்
தாவிலாதமுனிக்கணத்தார்களு
மோவிலாவருளாற்றுயருற்றனர். (கூ)

வேறு.

இன்னதன்மையர்யாருமேங்குறப்
பின்னல்வார்சடைப்பிருகுமாமுனி
மன்னவென்மொழிவாய்மையெண்ணிலை
யன்னதீதினிவ்வல்லலுற்றனை. (க0)

இனியென்வாய்மொழியாதுமையுறேல்
புனிதனுகுதியென்றுபொள்ளெனக்
கனிவினோடுமுங்காரஞ்செய்தனன்
பனிவிசும்பிடைப்பறவைமாய்ந்தவே. (கக)

மீண்டுபுள்ளறவேந்தனுணவன்
பண்டைவல்வினைபலவுமுள்ளவென்
றுண்டவண்டெனவோகைபொங்கினன்
கண்டுளோரெலாங்கவலைநீங்கினர். (கஉ)

புவனம்பொற்கரகத்துப்பூரியாக்
கவலைநோயெலாங்காற்றுமைங்கர
னிவருநூற்றின்மேலெட்டுமெந்திரந்
தவறுதீர்ந்தமாதவனியம்பியே. (கங)

செறிந்தவப்புனல்செங்கைகொண்டுமெய்
யெறிந்துரப்பினுளிறைவனுசியான்
முறிந்துபாதகமுற்றுருக்கொடு
பறிந்துமுன்னுறப்படியினின்றதே. (கச)

வேறு.

சிவந்துதிரிந்துசரணீண்டுசெறிந்துபரந்தமயிர்ச்சடையும்
மிவந்துவளைந்தவெள்ளெயிறுநெடியவடியுங்குழிவிழியு
மவந்தந்திடுங்காரிருணிறமுமாழ்ந்தவயிறும்பனையேழி
னுவந்தவுயர்வுமதற்கேற்றவுருவம்பலவுந்தோற்றியதே. (கரு)

வேறு.

கறிக்கும்பற்களைக்கட்புருவங்கண்மே
னெறிக்குங்கண்ணினெருப்புகநோக்குறு
மெறிக்குந்தீப்படையேந்தலைத்தின்னிய
குறிக்குநக்குக்குனிக்குஞ்சுலாவுமே. (கசு)

தோள்புடைக்குமிடிக்குரற்றேற்றுமுன்
னுள்படைத்திறங்காட்டியிந்நாளுநின்
வாள்படைத்தகைவன்மைமுன்காட்டெனத்
தாள்பெயர்த்துத்தருக்கியடுத்ததே. (கஎ)

பூதமின்னணம்பூபதியைத்தொடர்ந்
தேதமெண்ணவுங்காரமெழுப்பிமெய்ம்
மாதவன்கைமறித்துநீயார்கொலா
மோதுநன்றெனப்பூதமுரைக்குமால். (கஅ)

வேந்தன்மெய்யில்விரவியசாயையா
னேந்தனின்கையெறிந்ததண்ணீரினாற்
போந்துளேன்வெளிபுல்லியவெம்பசி
காந்துகின்றதுன்கண்ணருளுண்டெனில். (க௯)

கோனைமாதினைக்கூறுமமைச்சரை
யூனையுண்டொழிவேனென்றிரத்தலும்
யானைமாமுகத்தேந்தல்செந்தாண்மலர்த்
தேனையுண்டுசெம்மாந்தவன்கூறுவான். (உ0)

மைந்துமிக்கவண்பூதமஞ்சற்கநின்
சிந்தையின்புறஞ்செய்தியேசெய்துமாற்
பொந்தினுள்புகுவென்றெதிர்நின்றமாப்
பொந்துகாட்டினன்புக்கதுபூதமே. (உக)

புக்கபூதமும்பொந்துறுசூதமு
மொக்கவெந்தனபூதத்தினுள்ளுயிர்
மிக்கபேரெழில்விண்ணவனாகியே
தக்கமாதவன்றாள்பணிந்தோதுமால். (உஉ)

வேறு

பாவியின்னவன்பழுவத்தென்னைமுன்
னாவிமாய்த்தனனனையதீமையா
லோவில்வெந்துயருற்றுளேற்குநின்
சேவையானலஞ்சேர்ந்ததென்றனன். (உ௩)

வேறு.

ஆயகாலையிலங்கரனேவலாற்
றூயமானந்துளைந்துமுன்போந்தது
மேயினானதில்விண்ணறுத்தேகினான்
சாயைநீர்மைதணந்துயர்தேவனே. (உ௪)

கண்டயாவருங்கண்களிகூர்ந்துளங்
கொண்டவோகையர்கூத்துநவிற்றினர்
மண்டுதீவினைமாற்றியமாதவன்
புண்டரீகப்பொற்றாண்மலர்போற்றினார். (௨௫)

வரநிலாவியமாதவனோதுவா
னரசனேயுனையண்மியடுத்திடும்
பிரமசாயைபெயர்ந்ததுகண்டனை
யுரவுநோயுமொழிதிறங்கேண்மதி. (௨௬)

வேறு.

முக்கண்வேழமுகப்பிரானெனைமுற்றுமாளுமடிப்பிரான்
பொக்கமுற்றுமகற்றவல்லபுராணமன்னவகேட்டுளே
னக்கணேசர்புராணமேன்மையினாலகன்றதுன்வல்வினை
தொக்கநோய்க்குமருந்துநீயதுசூழ்ந்துகேட்பினலாதிலை. (௨௭)

கோதனுங்கியவேதனங்கிகுடங்கையேந்தியதம்பிரான்
பாதகஞ்சம்வணங்கியன்றுபரித்தமேன்மையதாமது
மாதவங்கள்புரிந்துவேதம்வரம்புகண்டவியாதனும்
போதமர்ந்தவனோதவோர்ந்துபுகன்றதாகுமெனக்குமுன். (௨௮)

முந்துசெய்திடுவேள்விவீரன்முடிப்பமாழ்கியதக்கனுஞ்
சிந்தையைந்துமடக்கிநின்றதிருந்திருந்தவமுக்கல
வந்தணன்புகலப்பணிந்தளியார்ந்துகேட்டடர்தீதுதீர்ந்
திந்துசேகரனின்னருட்குமிலக்கமாய்மகிழ்கூர்ந்தனன். (௨௯)

பவங்களேழினுமீட்டுபாவம்பறிப்பதும்பயில்யாக்கையி
னவங்கணோய்முதலானதீமையறுத்துவேட்டதளிப்பது
நவங்களாசவிருங்கதிச்சுகநாளுநாளுமுறுப்பதுந்
தவங்களாதிவளர்த்துமுத்திதரிப்பதும்மதன்கேள்வியே. (௩0)

வருணமாச்சிரமத்தொழுக்கின்வழாதமாண்புடையார்களே
யருள்விநாயகர்பத்தியோடவர்காதைகேள்வியிலார்வமு
மருவுவார்களொழுக்கிலார்மருவார்கள்சாதிபிறப்பினு
மொருவுசாங்கரர்நன்மைசெய்யினுமுற்றதீமையரென்பவே. (௩௧)

ஆதலாலுயர்மாதவம்பலவாற்றியாச்சிரமத்தொடு
கோதிலாவருணத்தினின்றுகுழைந்தவன்பின்விநாயகர்
பாததாமரைபோற்றுபண்பினர்பாங்கினல்லதுமான்மிய
மோதுநீர்மையதன்றுபண்புளையாதலாலுனக்கோதுதும். (௩௨)

அருளெனக்குளிர்தூங்குநீர்த்தடமாடிவம்மெனமன்னவன்
பிருகுதீர்த்தமணைந்துதாழ்ந்துபிறங்கிரும்புனறோய்ந்தெழுந்
துருவின்மல்கியவீரமொற்றியுடுத்துலர்ந்ததுபூசிமெய்
மருவுகின்றசங்கற்பமோதிவகுத்தனன்பிணிமாய்ந்ததே. (௩௩)

நோயினீங்கியயாக்கையன்முறைநோக்கிநோக்கியிராவெலாந்
தீயசொற்பனமார்ந்துகண்கடிறந்துளானெனவுண்மகிழ்ந்
தாயுநூலருமாதவன்புடையண்மியன்பொடுதாழ்ந்தெழுந்
தேயுநின்னருளெய்தினேன்மிகவெய்தரும்பயனெய்தினேன். (௩௪)

காதலாரும்புராணகேள்வியிற்கற்பமாத்திரமேசெய
வேதமானபெரும்பிணித்தொடர்யாவுநீங்கினவென்சொல்கே
ணாதனேயுனைநண்ணினார்க்குநண்ணாதமேதகுநண்பொருண்
மாதராதலநாகர்பாதலமாகர்வைப்பினுமில்லையே. (௩௫)

ஆருமற்றுறையூருமற்றெழிலாக்கமற்றரும்போகமற்
றேருமற்றியல்பாகவூங்கிருந்தேனைவம்மெனவேயழைத்
தோருமாநலமுய்த்துளாய்க்குதவப்படும்பொருணாயினேன்
சாருமாவியலாதிலையினிச்சாற்றல்வேண்டும்புராணமே. (௩௬)

என்னமன்னனியம்பிசிற்பவிரங்கியோகைமலர்ந்தழைத்
தன்னையன்னவனன்னமன்னவனுக்கையங்கையிற்றைவராத்
தன்னதாதனமொன்றுநல்கினன்சார்ந்துவைகலுமுன்னொளி
தன்னமும்புரையாதபேரொளிதாங்கினான்றரையாண்டவன். (௩௭)

கண்டயாரும்வியந்துளார்கவலைப்பெருங்கடன்மூழ்கிய
தொண்டைவாயசுதன்மையும்பொருள்சூழமைச்சரும்வானமிழ்
துண்டுளாரினுவந்துகாதையொருங்குகேட்பவிரும்பினார்
மீண்டுநோய்முனிவேந்தனிற்பிரிவித்தவண்ணமிதாகுமே. (௩௮)

என்றுசாலமொழிந்தசூதன்வியாதனென்னுமிருந்தவற்
கன்றுவேதனுரைத்தவாறறிவாயெனப்பிருகுப்பெய
ரொன்றுமாமுனிசோமகாந்தனுவப்பவோதியவண்ணமே
நன்றுறும்வரலாற்றினோதுதனாடினானருணீடினான். (௩௯)

சோமகாந்தனோய்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௮௨௭,



## ௫-வது வியாசர்பிரமதேவனையடுத்தபடலம்.



பண்ணியபெருந்தவன்பராசரப்பெயர்
நண்ணியமுனிவரனயக்குமைந்தனாய்த்
திண்ணியவிண்டுவேசிறப்பத்தோன்றினான்
விண்ணவர்வியத்தகுவியாதனென்னவே. (௧)

சுருதியைவரம்புறத்தொகுத்துச்செய்தபின்
சுருதியின்பொருள்களைமிருதிபோலவே
பொருள்படவிளக்கியபுராணமுந்தொகுத்
தருளொடுமொழிவதற்காரம்பித்தனன். (௨)

மருக்கமழ்கொன்றையார்மணிப்பொற்றேர்முரித்
திருக்கவும்யாருமுன்னிறைஞ்சியேத்தவு
முருக்கிளரைங்கரத்தொருவன்சேவடி
தருக்கியசிந்தையாற்றாழ்ந்துபோற்றிலன். (௩)

வழிபடுகடவுளைமதித்தெடுத்திடுஞ்
செழிபொருட்கேற்புடைத்தாயதெய்வமு
மழிவினுக்கழிவுசெய்தருளுமாமதம்
பொழிமுகத்தவனெனப்புந்திதேர்ந்திலன். (௪)

ஆகையானொருமருப்பைங்கைவார்செவி
யேகநாயகனருளெய்துமாறில
னோகையாலெடுத்தவொண்பொருளிற்சிந்தனை
மூகையாய்த்தளர்ந்தனன்முடிவுதேர்ந்திலன். (௫)

வேறு.

ஊர்ந்தாநின்றசெம்மணிநாகஞ்சென்றேற
நீந்தாநின்றுமந்திரவல்லேலகிலைசெய்தாங்

சேந்தாகின்றவோருலவைக்கோனினியாமே
காந்தாகின்றகாரணமுள்ளங்கடிசெய்ய. (௬)

மடியோபித்தோவன்றென துள்ளமயல்செய்த
படியாதென்றேயையமுழந்தான்பருவந்தான்
பிடியாதொன்றுங்கண்டிலன்வல்லேபெயர்வுற்றுக்
கடியார்கஞ்சப்பூவணையான்பொற்கழல்சார்ந்தான். (௭)

அன்புதளும்பத்தண்டெனவீழ்ந்தாரணமோதித்
துன்பகிறைந்தவுள்ளமுகத்திற்சுடர்கிற்ப
முன்புறவிட்டவாதனம்வைகிமுனிவேந்த
னென்பெறவந்தாய்சொல்லெனவேதற்கிதுசொன்னன். (௮)

நாத்திகரேயாய்நான்மறைநிந்தைநவில்வாரா
யாத்தனுரைத்ததத்தமொழுக்காசாரங்க
ணீத்தவரேயாய்நீடுலகத்தோர்கிறையின்றிப்
போத்துகிறைந்தாரன்னதுதீர்க்கும்பொருளுடி. (௯)

செய்வனசெய்யாதொழிவனவன்னோர்தெரிவெய்தி
யுய்வனநாடியோங்குகதிக்கணுறுமாறே
பொய்வகைதீர்ந்தபுராணமனைத்தும்புரையில்லோய்
கைவளர்நெல்லிபோலெளிதாக்குங்கடன்பூண்டேன். (௧0)

நித்தியமேநைமித்தியம்யாககிகழ்மன்ற
லித்தகுகன்மம்யாவும்கிறைந்தவெழில்வேதக்
கொத்தினுண்மேன்மேற்கைவளர்புந்திகுழைவுற்றுப்
பித்தினனேனென்னினிசெய்கேன்பிழைகாணேன். (௧௧)

பூரணமானவென்னறியாமைபொடிசெய்யுங்
காரணமோதுவேறெவர்வல்லார்கருதென்று
நாரணனவியாதனுரைப்பநன்றுள்ளி
யாரணனுன்னேன்புன்னகைகொண்டீதறைகின்றான். (௧௨)

வேறு.

அனுதியேயமலமாகியழிவினுக்கழிவுசெய்யும்
விநாயகனருளின்றாயின்மெல்லியகருமமேனுந்
தனுதுகைகூடலின்றித்தளர்குவன்புத்திகூர்மை
மனுதியின்வலிமிக்குள்ளவரம்பெறுதலைவனேனும். (௧௩)

பறவைகட்கரசன்மேனுட்பனிவிசும்பமுதங்கொண்மார்
செறன்மிகுவலியாலேங்கைச்செம்மலைவணங்காதேகி
நறவுமிழ்துளபத்தண்டார்நாயகன்மொழியால்வெல்ல
வறநினைந்தூர்தியானுனகிறைதருக்குக்கொண்டு. (௧௪)

உருத்திரக்குரிசில்பாங்கருற்றவீரியத்திற்றேன்றிக்
கருத்தினுங்கடத்தன்முற்றாக்கருங்கடல்கடக்குமாற்றல்
செருத்தகுமனுமான்மண்மேற்சிலையிராகவனைத்தாங்கிப்
பெருத்தவுட்டருக்கினுலேபீழைநோய்பல்காலுற்றான். (௧௫)

திருமறுமார்பனுனதிரண்டவார்சிலையிராமன்
பொருவலிவாலிமுன்னர்ப்போர்த்திறத்தெளியனுனு
னிருநிலத்தனேகரின்னும்லகியவொற்றைக்கோட்டுத்
தருவினையடுத்தலின்றித்தருக்கினுற்றெருமந்தாரே. (௧௬)

பிரணவமுன்னர்வைகும்பெருமறைதொகுத்தகாலை
பிரணவமுன்னோதாமற்பேசுதலின்மையாலே
பிரணவமொழியாற்றன்னைப்பேசினையெனவுட்கொண்டு
பிரணவப்பொருளாயுள்ளான்பேரிடர்காத்தானன்றே. (௧௭)

சுருதிகளுலகுக்கோதத்துணிந்தநாண்மயேசன்றானுங்
கருதாதன்முற்றுவிக்குங்காரணக்குறித்தன்றேகொல்
சுருதியின்முன்னரந்தத்தொன்மனுவைத்தான்போலு
முருவமுமிடர்தீர்ப்பானுக்கோமெனுமொழியேயாமால். (௧௮)

எத்தகுதொழிற்குமுன்னர்யாவருமிறைஞ்சநிற்கு
மத்தகுதேவதேவர்க்காலயமாகையாலே
யுத்தமவோங்காரத்தையுரைக்குமந்திரங்கடோறும்
வைத்தனர்முன்னர்த்தொன்னூன்மரபறிந்தோர்களெல்லாம். (௧௯)

அவனவளதுவாய்நின்றேயனைத்தையுமுடிக்கின்றானு
மவரவர்தியானித்தேத்தவவரவர்க்கருள்செய்வானு
மவரவர்மனுதிக்கெட்டாவரும்பொருளாயினானு
மவிர்மறையின்னுமன்மைமொழியினாலளக்கின்றானும். (௨௦)

இந்திரனன்னவூர்தியிலக்குமிமார்பன்கீற்றுச்
சந்திரன்முடியில்வேய்ந்ததழ்லுமிழ்சூலத்திண்கை
யந்தணனேனைத்தேவரனைவருமாணைநீவார்
சுந்தரமலர்த்தாள்போற்றித்தொழுமுதலாயினானும். (௨௧)

ஒன்றனைச்செய்கின்றானுமொன்றனையொழிக்கின்றானு
மொன்றனைவிடுத்துவேறேயொன்றனைமுடிக்கின்றானு
மன்றினர்க்கிடர்செய்வானுமைந்தொழிற்கரனுர்போலத்
துன்றினர்க்கிடர்கடீர்ப்பத்தோன்றியகணேசனென்ப. (௨௨)

அன்னவன்பாதப்போதையாக்கையேமொழியேநெஞ்சே
யின்னவற்றொன்றினானுமிதமுறப்பணிந்தாயல்லைத்
தன்னிகரில்லாவித்தைத்தருக்கினாற்சுயம்பாவித்த
வுன்னவமதிப்பினாலேயுறுதுயருழந்தாயங்கே. (௨௩)

ஆயிரங்கோடிகற்பமார்வமோடேக்கினாலும்
பாயிரந்தானுமுற்றப்பண்ணுதல்கூடாதாகு
மாயிரும்புவனம்போற்றும்வாரணமுகப்பிரானைப்
போயிரந்தருளும்வண்ணம்பூசனைபுரிந்திடாயேல். (௨௪)

வேறு.

சுமுகரேயேகதந்தரேகபிலர்சூழ்கெசகன்னரேநாக
மிமிழ்தருமிலம்போதரரெழில்விகடரிலகியவிக்கினராச
ரமைவர்சூழ்ந்தேத்துங்கணாதிபர்தூமகேதுநன்றருள்கணாத்தியக்க
ருமிழொளிப்பாலசந்திரர்தானமூற்றிருந்தெழுங்கசானனரே. (௨௫)

வக்கிரதுண்டர்வயங்கியசூர்ப்பகன்னரேரம்பர்வான்வரங்க
டொக்கருள்கந்தபூர்வசரெனவேசொல்லியபெயர்பதினாறு
மிக்குரைத்திடினுங்கேட்பினும்வித்தைவிவாகம்வேட்டெழும்பிரவேச
நிக்கமமுபோர்யாகமாதிகளுநினைக்குமுன்முற்றுறும்பிள்ளாய். (௨௬)

ஆதலாலவனைப்பூசனையாற்றியறிவினையழித்திடுமைய
லேதநீத்தெண்ணமினிதுறமுடியாவிரும்புகழெய்துகவென்றான்
வேதனீதோதவுள்ளதேயென்றுவியாதமாதவனுளமகிழ்ந்து
போதமேவடிவாங்கணேசரைப்பூசைபுரிவதெவ்வாறெனவிரந்தான். (௨௭)

இதுமலர்த்தவிசின்வீற்றிருந்தருளுமிறைவனைவியாதமாமுனிமுன்
கதுமெனவணைத்தவாறினிச்சோமகாந்தனேயயன்முனிதனக்கு
விதுவணிசடிலத்தைங்கரப்பெருமான்வியத்தகுமந்திரஞ்செவியின்
வதிதரப்புகன்றமரபுகேளென்றுவழங்குவன்பிருகுமாதவனே. (உ௮)

வியாசர் பிரமதேவனையடுத்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-அ௫௫.

## ௧௦ - வது வியாசருபதேசம்பெற்றபடலம்.

புயாசலத்தரவமாலைபூண்டபுண்ணியன்போரேற்ற
கயாசுரனுவியுண்டகண்ணுதற்பெருமானீன்ற
தயாநிருகணேசனென்னுஞ்சாமியாமகத்திற்றூய
வியாதனேசத்தகோடிவியன்மனுவிளம்பப்பட்ட. (௧)

அவற்றுளுஞ்சிறந்ததாகுமாறெழுத்ததனுண்மேலாந்
தவற்றினையறுக்குமேகாக்கரமிதுதன்னைநின்னைக்
கவற்றியமம்மர்தீரக்கரைகுதும்வாசத்தீந்தேன்
றுவற்றுபூந்தடத்துளாடித்துனைந்திவண்வருதியென்றான். (உ)

விதிப்படிநறுநீராடிமேவியவியாதன்காதிற்
றுதிப்பவர்க்கின்பநல்குந்தோடவிழ்மலரான்கங்கை
நதிப்புனல்வேணிவைத்தநான்றவாய்க்களிற்றின்பாதம்
பதிப்பறுமுளத்தாற்றீக்கைபண்ணிமந்திரத்தைச்சொன்னான். (௩)

சத்தியவதிக்குமைந்தசாற்றுமந்திரத்தையெண்ணு
மத்தகுமுறையுங்கேண்மோவடரிடரியாதுமெய்தா
வுத்தமதலத்தைநண்ணியுறுமனுப்புனல்புரோக்கித்
தொத்திடும்பூதசுத்தியாதிகளூழிற்செய்து. (௪)

புந்திசெய்யுளத்தின்கண்ணும்புறத்தினுநியாசம்பண்ணி
மைந்துறுபிராணயாமம்வகுத்துமந்திரத்தையெண்ணு
மந்திரஞ்சித்திசெய்தவள்ளலாருருவமுற்றுஞ்
சிந்தையிற்றியானஞ்செய்துசெய்கவந்தரியாகத்தை. (௫)

நித்தலுமிவ்வாறாகநின்னுடைச்சத்திக்கேற்ப
வுத்தமமனுவையெண்ணிலொருமருப்பிருமதங்கொள்
வித்தகனெதிரேகோடிவெய்யவருதையமென்னப்
பொத்தியவொளியிற்றோன்றும்புணர்விழியொளிமையாப்ப. (௬)

வந்தனன்சாமியென்றேமதித்துளத்துறுதியோடு
வந்தனைபுரிந்துநாயேன்மதியிடைவதிகவென்னின்
வந்திதான்வருந்தியீன்றமகவினுக்கிரங்குமாபோல்
வந்துவந்துலவுங்காதின்வள்ளலெவ்வரமுநல்கும். (௭)

இவ்வகைமடங்கலூருமேரம்பன்பூசையாற்றிற்
செவ்வியசித்தியெட்டுஞ்செங்கையினெல்லியாகுங்
கௌவைநோய்பலவுநீங்குங்கருதியகருமமுற்று
மவ்வியமகன்றுசிந்தையறங்கொளுமதுவேயன்றி. (௮)

தங்கியமலங்கால்சீத்துச்சார்ந்தபேரருளினன்றே
முங்கியொன்றாகிச்சீவன்முத்தராம்பெரும்பேறெய்திப்
புங்கவர்வணங்கமேலாய்ப்பொலிவர்கள்பூசைசெய்யார்க்
கெங்குளவிடருஞ்சூழ்வுற்றின்னலேபுரியாநிற்கும். (௯)

கணபதிபூசையாற்றுங்காதலர்தம்மைக்கண்டோர்
குணமெடுத்துரைப்போர்பண்பிற்கூடுவோருவப்போரெல்லா
மணவுறுமும்மைப்பேறுமடைகுவரதுசெய்யாத
பிணமெதிர்கண்டோர்தாமும்பெறுகுவர்தீமையெல்லாம். (கO)

நாத்திகரொழுக்கம்விட்டோர்நவைபிறர்க்குரைப்போர்சோரர்
அத்தகுநெஞ்சமில்லாத்துட்டர்களாதியோர்க
ளேத்தினர்சரணஞ்சார்ந்தவிடத்துமிம்மனுவோதாமை
நீத்திடல்வேண்டுஞ்சொல்லினெடுநரகனைத்துந்தோய்வார். (கக)

வணக்கமன்பருளாசாரமறைநெறியொழுக்கநல்லோ
ரிணக்கமந்திரத்திஞர்வமிவைமுதலுடையோர்க்காயிற்
பிணக்கறுதீக்கையாற்றிப்பேசுகவிருவர்தாமுங்
கணக்கில்பேரின்பவீடுங்கைக்கொள்வர்காணியாக. (கஉ)

சந்திரன்முடியில்வேய்ந்ததம்பிரான்கருணைகூர்ந்து
முந்தெனக்கருளிச்செய்தமுறையுனக்குரைத்தேனென்ன
வெந்துயர்முழுதுநீங்கிவியாதனீதனுட்டித்தோரை
யெந்தையீங்கொழியாவண்ணமியம்புகவென்றுதாழ்ந்தான். (கங)

கொற்றவெண்குடையினீழற்குவலயமுழுதுங்காத்த
வெற்றிவேன்மன்னவேதன்வியாதனுக்குபதேசித்த
திற்றெனலாகுமூவரினிதுபாசித்தவாறு
தெற்றெனத்தெளிகவென்றுசெப்புவன்பிருகுமேலோன். (கச)

வியாசருபதேசம்பெற்றபடலமுற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-அசுசு.



## கக-வது மூவருமுபாசித்தபடலம்.

விரும்பித்தாழ்ந்தவியாதனைநோக்கியே
யரும்புவிண்டலரம்புயச்சேக்கையான்
கரும்புந்தேனுங்கலந்தெனக்கல்லொடு
மிரும்புமுண்ணெக்கிளகவுரைப்பனால். (க)

தேவர்தானவர்சித்தர்முனிவர
ரோவிலாதவுரகரியக்கர்கண்
மேவுசாரணர்விஞ்சையர்கின்னரர்
பாவுமானிடர்பல்வகையோர்களும். (உ)

வேறு.

ஐங்கரன்பூசனையன்பிஞற்றுபு
பங்கமில்கதிகளிற்படர்ந்துளோர்பல
ரங்கவர்தம்மில்யானறிந்தவாற்றிஞ
லிங்குறச்சிலர்தமையியம்பக்கேட்டியால். (ங)

பண்டொருபிரளையம்படர்ந்தசெவ்வியி
னண்டருமறிவருமமலநாயகன்
கொண்டதத்துவங்களைக்குறித்தொடுக்கிஞன்
மண்டியவுயிரினைப்பாறும்வண்ணமே. (ச)

நீடியபிரளையநீங்கமுன்புபோற்
கூடியமுத்தொழில்குயிற்றவெண்ணுபு
நாடியவறிவுருநயந்தெடுத்தநின்
றீடியன்முக்குணத்தெம்மைநல்கிஞன். (ரு)

இகலறுமறைகளுமிருளினீங்கிய
தகலுறுபெரியவர்தாமுமெங்களைத்
தொகலுறத்தோற்றியதூயமூர்த்தியைத்
துகளறுவக்கிரதுண்டனென்பரே. (எ)

அரனரியயனெனவானயாங்களும்
பிரமமின்னதுவெனப்பேணிக்காணிய
விரவியவெறுவெளிவிரிவுமுற்றுறப்
பரவினந்தேடினம்பயன்பெற்றேமலேம். (எ)

அருந்தவந்தேவர்களாண்டினுயிரம்
புரிந்தனம்புரிதலும்பொற்பத்தோன்றினன்
திருந்தியவடியவர்சென்றுதோய்தொறும்
விருந்துறப்பெருஞ்சுகம்விளைக்குமெம்பிரான். (அ)

வேறு.

கோடிசூரியவுதையமுங்குருட்டிருளென்ன
நீடுபேரொளிவெளியெலாநிரந்தரித்தொளிரச்
சூடுமாமணிமுடியுங்குண்டலமுந்தோள்வளையும்
பீடுசேர்தருபேரணிகலமுநூபுரமும். (கூ)

பெருத்துவார்புழைக்கரமுமேந்தியபிறைமருப்பும்
விருத்துமாமுரன்மதம்பொழிவேழத்தின்முகமுஞ்
செருத்துழாவுவாள்கேடகமயில்சிலைசெறிந்த
தருத்துழாவியகரங்களுந்தாண்மலர்த்துணையும். (க0)

கீற்றுவான்மதிக்கண்ணியுங்கேழ்கிளரகலத்
தூற்றுதேமலர்க்கொன்றையுமுலகெலாநொடியி
னீற்றுதீவிழிப்பாலமுநிறைந்தபேரழகுந்
தோற்றிநேரெதிர்நின்றவச்சொருபனைக்கண்டாம். (கக)

அச்சமோடெழுமன்பினுலகந்தமொற
வுச்சிமேலிருகரங்குவித்தொய்யெனவெழுந்திட்
டிச்சையாற்றினிற்பன்முறையிறைஞ்சினஞ்சூழ்ந்து
நச்சியாடினம்பாடினநயத்தகுதிகள். (கஉ)

நிருவிகற்பமாய்நிறைந்தவானந்தபூரணமாய்
நிருவிகாரமாய்நிற்குணமாயத்துவிதமாய்
நிருவிசேடமாய்நிரஞ்சனமாகியொன்றுலு
நிருமிதப்படாக்கணேசநின்னீள்கழற்றொழுதாம். (கந)

பிரமமாயொளியாய்நிராகாரமாய்ப்பெரிதாய்த்
தரணியாதிதத்துவமெலாங்கடந்ததத்துவமாய்
வரமெலாந்தரும்வள்ளலாயேகமாய்வதியும்
பரமனுகியகணேசநின்பதமலர்தொழுதாம். (கச)

என்றுநீங்குரூத்திருவுருவுடையதாயெங்கு
மொன்றிநின்றுணர்ந்திடுமறிவானந்தவுருவாய்த்
துன்றும்யோகினர்தியானிக்கப்படுஞ்சுகமாகிச்
சென்றுசேர்தராக்கணேசநின்றிருவடிதொழுதாம். (கரு)

உலககாரணகாரணமாயுயிர்க்குயிரா
யிலகுஞானியர்தமையிழந்தெய்துநற்பேறாய்ப்
பலவுமாய்ப்பரப்பிரமமாய்ப்பரேசமாய்ப்பரமாய்த்
திலகமாகியகணேசநின்றிருவடிதொழுதாம். (கசு)

சகலலோகமும்படைத்தளித்தழிக்குந்தற்பரமா
யகிலலோகத்தும்புகலிடந்தனக்கிலாவமைவாய்ப்
புகலுலோகங்களனைத்துக்கும்புகலிடந்தானும்
பகவனாகியகணேசநின்பதமலர்தொழுதாம். (கஎ)

உகத்துக்காதியாய்த்தேவருக்காதியாயுலவாச்
சுகத்துக்காதியாய்ச்சுரர்களுக்கீசராய்ச்சுடரு
மகத்துக்கீசராய்க்கணங்களுக்கீசராய்மதிப்போ
ரகத்துக்கூடியகணேசநின்னடியிணைதொழுதாம். (கஅ)

இராசதத்தொழிலாகியசிருட்டியையியற்ற
விராவிராசதத்துருக்கொடுபிரமனாய்மேலாய்ப்
பராவுவித்தைகளனைத்திற்கும்பயில்பிறப்பிடமா
யொராதுநின்றருள்கணேசநின்னொளிர்பதந்தொழுதாம். (கக)

சோர்விலாதசாத்துவிதநற்றொழிலெனுந்திதிக்குச்
சார்வதானதாமதந்தனிலுருவுகொண்டரியாய்த்
தீர்விலாப்பகையசுரரைச்செகுத்திருந்தேவர்க்
கார்வமேயருள்கணேசநின்னருட்பதந்தொழுதாம். (உ0)

தாமதத்தொழிலானசங்காரமாற்றுதற்குத்
தோமகற்றுசாத்துவிதத்திற்றோன்றுருத்திரனா
யேமமுற்றிமையார்முனிவோரெலாமிறைஞ்சச்
சேமவைப்பதாங்கணேசநின்சேவடிதொழுதாம். (உக)

கிரணபந்தியாற்பயிரையுங்கிளர்சுவைப்பெருக்காற்
பரவுதேவர்கடம்மையுமகிழ்வித்துப்பார்ப்பார்க்
கரசனாயுலகத்துவைப்பறுத்திடுந்திங்கட்
சொருவமாகியகணேசநின்றுணையடிதொழுதாம். (உஉ)

ஒளிப்பிழம்பதாய்மேகவாயுவினுருவாகி
விளிப்பில்காலங்கடெரிப்பதாய்த்தொழிலெலாம்விளைத்துக்
களிப்பதாய்ப்பலசத்தியதானசெங்கதிராய்த்
தெளிப்பநின்றருள்கணேசநின்சேவடிதொழுதாம். (உங)

நிரப்பிறன்மமாய்த்துறக்கமாய்நிரந்ததத்துவமாய்த்
தரைச்சொரூபமாய்ச்சமுத்திரமாய்த்திசைச்சுரராய்க்
கரப்பிலாவுலகனைத்துமாய்க்கலந்துநின்றருளும்
பரப்பிரமமாங்கணேசநின்பாதங்கடொழுதாம். (உச)

சாமிநின்னிருதாண்மலர்சார்ந்தவரெல்லா
நாமவெம்பிணிநலிவொரீஇநற்சுகமடைவ
ராமிதைத்தெரிந்தியாங்களுமுனைச்சரணடைந்தே
மேமமல்குறக்காத்தியென்றேத்தினமிரந்தேம். (உரு)

என்றுமூவருபாசித்தவியல்பிதுவாமென்
றன்றுநான்முகன்வியாதனுக்கருளியதாக
நன்றுதேர்ந்தனையினியவர்பெற்றநல்வரமு
நின்றுகேளெனநிகழ்த்துவன்பிருகுமாதவனே. (உசா)

**மூவரு முபாசித்தபடலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் - அகூரு.



## கஉ-வது மூவரும்வரம்பெறுபடலம்.

மூவரும்வழிபடுமுறைமையோதலு
மேவியகாதலின்வியாதமாமுனி
தேவநுங்களுக்கிறைசெய்தநன்றியை
யோவறமொழிகெனவுரைக்கும்வேதனே. (க)

துதித்திரங்கெதிருறத்தொழுதுநிற்றலுங்
கதித்தவைங்கரப்பிரான்கருணைகூர்ந்துநுந்
துதிக்கிரங்கினமிதுதுதிக்கின்றாருக்கு
மதித்தனவழங்குதும்வரமுங்கொள்கென்றான். (உ)

இரங்குபொன்னூபுரப்பதத்தினெம்பிரா
னுரங்கொளும்பத்திமையுதவிக்காப்பதே
வரங்கடைக்கணித்தொருபணிவழங்கினுஞ்
சிரங்கொடுசெய்குதுமென்றுசெப்பினும். (ந)

முக்குணத்துதித்துளிர்முடிவில்பத்தியும்
விக்கினமின்மையுமிதப்பநல்கினுந்
தக்கநம்பணிகளுந்தருதுங்கேண்மினென்
றக்கணமுக்கணெம்மடிகள்சாற்றுமே. (௪)

வேறு.

இராசதத்துருவாயயன்யாவையும்படைக்க
வொராதுகாக்கசாத்துவிதமாயொளிமணிவண்ணன்
மராதுடைக்கதாமதத்துருவாயுருத்திரனென்
றராவணைத்தபூங்குழையினனைந்திவையளித்தான். (ரு)

வேதசாத்திரபுராணங்கண்மிருகலைசிருட்டிக்
கேதநீங்கியவலியொடுமெனக்கினிதளித்துக்
காதல்யோகத்தின்வேண்டுருக்கைக்கொளுஞ்சத்தி
யோதுகாவல்செய்வலியொடுமோயனுக்குதவி. (சு)

ஏகமாகியவக்கரசடக்கரமனுவு
மேகனுயுலகனைத்தையுமிறுத்திடும்வலியு
மேகநாயகனுருத்திரற்கருளினனென்னு
வேகமாகியபூவினன்வியாதனுக்கிறுத்தான். (எ)

இன்னவாவரமூவரும்பெற்றதென்றெறிவேன்
மன்னர்மன்னவன்மகிழ்கொளவுரைத்தருள்வரதன்
றன்னுளேயுலகனைத்தையுங்காட்டுதன்மையையு
முன்னியோதுதருடங்கினன்முதிர்புகழ்ப்பிருகு. (அ)

மூவரும்வரம்பெறுபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கூ0ரு.



## கநு-வது விசுவரூபங்காட்டியபடலம்.



கறங்குவெண்டிரைப்பாற்கடற்கண்படைகொள்ளு
மறங்கொள்சக்கரவானவனுகியவியாத
வுறங்கலின்றிநன்றுணர்மதியெனமதுவொழுகு
திறங்கொளம்புயச்சேக்கையானிதுநிகழ்த்தினனல் (க)

தேவதேவருமறிவருந்தேவதேவனைப்பின்
மேவுமார்வமோடடுத்திடுவியாதநானிறைஞ்சி
மூவுருதவவுலகினைப்படையெனமொழிந்தா
யாவதாக்குமாறிதனையுமியம்பெனவிரந்தேன். (உ)

கருணைநாயகன்கடைக்கணித்தெனையெதிர்நோக்கிப்
பொருவிலாதவென்வயிற்றினுட்புகுந்துலகனைத்து
மொருவுருவகைநோக்கவேயுயிரெனவென்னை
யுருவவார்கரப்புழைவழியுள்ளுறவிடுத்தான். (ங)

தடங்கையுள்ளுறயான்புகும்பொழுதுதாள்வணங்கிக்
கடங்கவிழ்க்குமானனப்பிரான்கண்ணருள்வாங்கி
யுடங்குநின்றமற்றிருவருமுள்ளுறப்புகுந்தா
ரடங்கநோக்கினமவன்வயிற்றகிலலோகமுமே. (ச)

வேறு.

அகட்டிடையேயளவிறந்தவண்டங்களுறக்கிடந்த
பகட்டெழில்சேரவற்றொன்றனுட்புகுந்துபார்ப்பளவிற்
றகட்டுவராலுகள்கடல்சூழ்தரைநடுவுமதன்கீழ்மேன்
முகட்டளவும்பலவுலகுமுதிர்வளத்தினிரந்தனவால். (ரு)

நாதங்களோரிரண்டாய்நலமருளுஞ்சதாசிவமாய்ப்
பாதங்களொருநான்கும்பதநான்கும்பயில்வித்த
வேதங்களறியாதவிநாயகர்தந்திருவருளாற்
பூதங்களோரைந்தும்புரையின்றியெதிர்கண்டாம். (சு)

பண்டையூழிகடோறும்படைத்தவரும்பரித்தவரு
மண்டுபேருலகனைத்தும்வருத்தமறத்துடைத்தவருங்
கொண்டபேரதிகாரங்கொள்ளாதுவிடுத்தருளே
கண்டுபேரானந்தக்கடன்முழுகவெதிர்கண்டாம். (எ)

அதிகாரம்புரிகின்றவலரவனுமாயவனு
நதிபாயுஞ்சடைமவுலிநாயகனுமெண்டிசையின்
வதிவோருமருக்கருருத்திரர்வசுக்கண்மருத்துவருங்
கதிசேருநவகோளுங்காதலிப்பவெதிர்கண்டாம். (அ)

கின்னரர்கந்திருவர்கருடர்களியக்கர்கிம்புருடர்
தங்கிகர்விஞ்சையர்சித்தர்சாத்தியர்பன்னகருரகர்
துன்னியமற்றமரரையுந்தொகுமசுரரரக்கரையு
மன்னியவன்னவர்க்குரியமாதரையுமெதிர்கண்டாம். (கூ)

ஓவிலருட்சனகாதியோகியர்நாரதராதி
தேவர்முனிவரர்வசிட்டர்முதலாகச்செப்பலுறும்
பாவுபுகழ்பிரமமுனிவரர்பயின்மானிடர்தமையுந்
தாவின்மலைகடலாறுதடமிவையுமெதிர்கண்டாம். (கo)

சிங்கமுதன்மிருகங்கடிகழ்கலுழன்முதற்பறவை
தங்கியகற்பகமாதிதருகாமவல்லிமுதல்
கொங்கிணர்ப்பூம்பசுங்கொடியம்புயமாதிபலமலரும்
பங்கமறுசராசரமாம்பரப்பனைத்துமெதிர்கண்டாம். (கக)

வேறு.

நாற்பிறப்பினெழுவகைத்தோற்றத்தெண்பத்துநான்குநூறாயிரமாம்யோனிபேத, மேற்புடையபலபொருளுமண்டந்தோறு மிவ்வகையே யெதிர்நோக்கியெண்ணில்கால,நோற்பவருமெய்தரியபரமானந்தநொண்டருந்திப்புறத்

தேகநோக்கினேமங், காற்றலிலமாதலினுலென்னசெய்கேமவனடியேபர
சினமாலளவில்வேதம். (கஉ)

கறங்குதிரைப்பெருங்கடல்சூழ்நெடியவேலைக் கதுவுமணலளவிடினும
ளவுகாணுத், திறங்குலவுமண்டமெலாமகட்டிற்ருேற்றுந்தேவர்கடந்தேவேச
கணேசநின்பொற், பிறங்குபதமடுத்தோர்கண்முத்தியெய்திற்பேணுமடியே
ங்களுக்குப்பேருகாத, வறங்குலவுபொருள்காமமுளவோவென்னுமருந்துதி
கேட்டருள்கூர்ந்தங்கமலநாதன். (கரு)

புகுந்தவழியேயென்னைப்புறத்துப்போக்கிப்பொலங்குழைசேரிருகாதி
ன்வழியேபைந்தேன், றெகிழ்ந்தொழுகுமலர்த்துளவவிதழிமாலைத்தேவரை
யும்புறம்விடுத்தானென்றுவேத, னெகிழ்ந்தவுளவியாதனுக்குப்புகன்ருனெ
ன்றுநெடியதவப்பிருகுமுனிசோமகாந்த, னகந்தழையவுவைத்தயனுருலக
மீளாவருந்தவஞ்செய்தாக்கியதுமறையப்புக்கான். (கச)

விசுவ நுபங்காட்டியபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கூகஎ.



## கச-வது பிரமசிருட்டிப்படலம்.



மதமிக்கொழுகுங்கவுண்மாமுகவ
னுதரத்தினெழிந்தபினீபுரியு
மதனைப்புகல்வாயெனவங்கைகுவித்
திதமிக்கவியாதனிரந்தனனே. (க)

முருகாலுமலர்ப்பிரமன்முரல்வண்
டருகாலுமதக்கவுளானைமுக
னிருகாலுமிறஞ்சியிரும்பிறவி
யொருகாலுமுருக்கதையோதுவனுல். (உ)

வேறு.

இருக்காதியினுலறியாவிறைவ
னுருக்காதலினுனினையாதுளமார்
தருக்காலுலகந்தரவேமுயல
வெருக்காணவெழுந்ததுவிக்கினமே. (ந)

முடியொன்றிருநீண்முகமூன்றுவிழி
கடியொன்றியநாற்சிகைகாதுகளைந்
தடியாறுகையேழொடுமெச்சமுற
நெடிதாக்கையினின்றனபற்பலவே. (ச)

இவ்வாறெழிலின்றியுறப்பெவையு
மொவ்வாதனவாயெதிருற்றவைதாந்
துவ்வானமிழ்தந்தொடர்தேவரினென்
னைவாயறிவுங்கெடவார்த்தனவே. (ரு)

எள்ளுஞ்சிலவெற்றவெழுஞ்சிலவாய்
விள்ளுஞ்சிலவெய்துறுபார்வைவிழிக்
கொள்ளுஞ்சிலகூடியலைத்துவிழத்
தள்ளுஞ்சிலதாக்கினசிற்சிலவே. (சு)

இவ்விக்கினமென்கொலெழுந்தநமைக்
கவ்விக்கடிகின்றதெனக்கவலுஞ்
செவ்விக்கணெழுந்ததொர்சிந்தையெனக்
கவ்விக்கினராசனருட்டிறனல். (எ)

ழுக்கட்களியானைமுகன்கழலைக்
கைக்குட்கனிபோற்கருதாதுசுய
மிக்குப்படைப்புக்குவிழைந்தமையாற்
றெக்குத்துயர்செய்ததுசூழ்ந்திடரே. (அ)

இனிமென்புனலாடியெழுந்துமிகப்
புனிதங்கொடுபூழ்க்கைமுகன்மனுவை
நனியெண்ணினலாதுநமைத்தொடருந்
துனிதீர்வரிதென்றுதுணிந்திடுநான். (கூ)

வேறு.

விதியுளிமென்புனலாடிவெண்ணீறுமெய்யணிந்து
கதியருளுமேரம்பன்காமர்திருவுருவனைத்து
மதியினுறத்தியானித்துவளர்யோகத்தினிருந்தேன்
பொதிதருமவ்வியோகத்துப்போந்ததெனக்கொருகாட்சி. (க0)

எழுகடலும்வரம்புகடந்தெங்குநிமிர்புனலிடையோர்
பழுமரத்தினிலையொன்றிற்பாலனொருவன்றுயிலக்
கழுமலறவடுத்தவனைக்கையெறிந்துதயிலெடுத்தே
னெழுகுமதமுகத்தொடுதன்னுருவுதெரித்தருளினன். (கக)

ஆங்கவனையடிவணங்கியடியேற்குச்சிருட்டிமுனந்
தாங்குகவென்றருள்புரிந்தாய்தமியேனுமதுகொண்டு
பாங்குபெறமுயல்வுற்றேன்பலவிடருமலைப்பவது
நீங்கினேனினிப்படைக்குநிலையருளென்றேனெனலும். (கஉ)

என்னருளாலாவதெனவெண்ணுதுநின்வலியா
லுன்னியிடருழந்தனைமற்றுநின்றிமுடிவெய்தப்
பன்னுதுமோரக்கரத்தைப்பத்திலக்கங்கணிமுடிவின்
முன்னுதுமென்றம்மனுவைமொழிந்தருளினிறைவன். (கங)

யோகத்தினருள்செய்தவுறுதிபிடித்தேவன்ன
வேகத்திணுமனுவையிராறுவருடத்தெல்லைத்
தாகத்திற்கமலத்தோர்தாளுன்றிநின்றெண்ண
நாகத்தைவயிற்றசைத்தநம்பெருமானெதிர்நின்றான். (கச)

ஒருகரத்தின்மழுப்படையுமொருகரத்திற்கமண்டலமு
மிருகரத்தினபயவரதமுந்தாங்கியெதிர்நின்ற
பொருவிலியைவேதங்கட்கெட்டாதபூரணனைக்
கருவிலியைக்கதியிலியைக்கைதொழுதுவணங்கினேன். (கரு)

தோற்றமேயுலகனைத்துந்தோற்றியளியாதளித்துப்
பாற்றமேபாற்றியிடும்பண்ணவநின்பதம்போற்றி
தேற்றமேயுயிரனைத்துந்தேற்றிமலமாயைகன்ம
நீற்றமேநீற்றியருணின்மலநின்பதம்போற்றி. (கசு)

உரையானுமுணர்வானுமுடலானுமறிவரியாய்
வரைமார்புந்திணிதோளுமதிமுடியுமலர்ப்பதமும்
விரையார்குங்குமக்கலவைமெய்யணிந்தகோலமுமாய்க்
கரையாநெஞ்சமுங்கரையக்கண்ணெதிர்நின்றனைபோற்றி. (கஎ)

இன்னவாறேத்தெடுத்தேற்கேரம்பனருள்கூர்ந்தே
யுன்னிநீகொளவரங்களுரையென்னவெதிர்வணங்கி
நின்னதாண்மறவாதநிலையருளிவிக்கினங்க
டுன்னுருவகையுலகந்தோற்றவரமருளென்றேன். (கஅ)

வரமருளியேரம்பன் மகிழ்கூர்ந்துநந்தமக்குப்
பரவலுறுஞ்சத்திகளும்பலவவற்றுண்ஞானமென
விரவலுறுங்கிரியையென மிக்குளசத்திகடம்மைக்
கரவிலுளங்கொண்டுலகங்காண்கவென மறைந்தனனால். (கசு)

கொடுத்தவரஞ்சிரமீதுகொண்டுளத்திற்றியானித்தேன்
மடுத்தவிருசத்திகளுமற்றொருருவர்நிகரின்றித்
தொடுத்தபெருவனப்பினராய்த்தொல்லுலகமந்திரமா
வெடுத்துரைக்கும்பெயர்சித்திபுத்தியெனவெதிர்போந்தார். (உ0)

எதிர்போந்தமாதரைநானினிதிறைஞ்சித்தவம்வாளா
துதிராமையெனைக்காப்பவுற்றருளுமன்னைமீர்
முதிர்காதலொடுமெனக்குமூவாதமகளிர்களாய்ப்
பிதிராதவரமருளிப்பேணுகவென்றிரந்திட்டேன். (உக)

சத்தியிருவருமதற்குத்தாமிசைந்துவரங்கொடுப்ப
முத்தியெளிதடுத்தாரின்முகமலர்ந்துவிநாயகனைச்
சித்தியொடும்புத்தியொடுஞ்சேர்ந்திருக்குங்காட்சிதகப்
பத்திமிகத்தியானித்துப்படைத்திடுமாதொடங்கினேன். (உஉ)

வேறு.

வழுவின்றியெனதுமனத்தொழிலா
லெழுமைந்தரைமுந்துறவீன்றவரைப்
பழுதின்றுபடைத்திடுவீரெனலுந்
தொழுதங்கவரேகினர்சூழ்துறவில். (உங)

இசையாதவரேகியிருந்தவமுற்
றசையாவருளாலருள்வீடுறலு
நசையார்பினுநானெழுமைந்தர்தமை
வசைதீரவுயிர்த்துவகுத்தனனே. (உச)

அன்னோருமுன்னோரினகன்றிடலும்
பின்னுன்சனகாதியர்பேருள்சேர்
நன்னாரதர்தம்மையுநன்றுதவி
யென்னுக்கையின்யாவையுமீன்றனனே. (உரு)

வேறு.

அந்தணர்குலமுமங்கியுமுகத்திலரசரைப்புயத்தில்வார்துடையிற்
சுந்தரவணிகர்குலத்தினைப்பதத்திற்சூத்திரர்தமையுமுன்படைத்துச்
சந்திரன்மனதிற்றழற்கதிர்விழியிற்சாற்றியமுகத்தினிந்திரனை
மந்தணமாகுஞ்செவியினிற்பிராணமருத்துகளுந்தியில்வானம். (உசு)

முடியினிற்றுறக்கமாதியாமும்பர்மொய்த்துவாழ்பதங்கண்முன்மொழிந்த
வடியினிற்பூமியறைந்திடுகாதிலாசையோரெட்டையுமாக்கி
நெடியகுன்றாதிசராசரமனைத்துநிலைபெறவளித்தனனென்னப்
படியறுதவத்துவியாதனுக்குரைத்தான்பங்கயநாண்மலர்ப்பிரமன். (உஎ)

உருத்திரன்மாயனயன்கனனீர்மண்ணுற்றவான்காறிசைப்பாலர்
திருத்துறுமனுக்கண்முனிகளெண்வசுக்கள்செறிந்திடுமியக்கர்கள்கணங்கள்
கருத்துறுதிசைகணதிகடறுக்கள்கள்வலியபறவைகள்பசுக்கள்
பொருத்துயிர்வருக்கமெனவிருபத்தோர்சருக்கமாய்ப்பொலிந்ததிவ்வுலகம்.

எறிந்துதாதருந்திவண்டுசூழ்கமலத்திருந்தவன்வையகம்படைத்த
தறிந்தவாபுகன்றமன்றினோர்நடுங்கவழலுயிர்வேற்கரத்தரச
செறிந்தபூங்கூந்தற்சித்திபுத்திகடந்திருமணஞ்செப்புதும்வினைகள்
பறிந்துபாழாகக்கேண்மதியென்றுபன்னுவன்பிருகுமாதவனே. (௨௯)

பிரமசிருட்டிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௯௪௯.



## ௧௫-வது திருமணப்படலம்.

தொழுகுலமாகிமுன்னர்த்தோன்றியமகளிர்பின்னர்
பழுதறுதேவயாங்குப்படர்ந்தனர்தெரிக்கவென்ன
விழுமியவியாதன்கேட்பவேதனுண்மகிழ்ந்தன்னோர்தஞ்
செழுவியதிருக்கல்யாணத்திறத்தினைச்செப்பலுற்றான். (௧)

உலகெலாம்படைத்தபின்றையுயிர்த்தொகைபலவுமோங்கி
நிலவிவாழ்கின்றநாளினின்மலக்கணேசர்பாத
நலமெலாநிறைந்துநின்றநாரதமுனிவன்போற்றக்
குலவுமாதரவிற்சென்றான்கோதறுகயிலாயத்தில். (௨)

அரியணைமீதுவைகுமைங்கரன்பாதம்போற்றிப்
புரிநரம்புளர்ந்துவீணைப்புத்தமுதினிதுதேக்கி
விரிபுகழ்பாடிச்சாலமெய்யருள்பெற்றுப்பின்னர்
தெரிவதொன்றுண்டுநாயேன்செப்புகேன்கேட்கவென்றான். (௩)

முள்ளரைக்கமலச்சேக்கைமுன்னவன்றியாளித்திட்ட
வுள்ளகத்திருந்துபோந்தாரோரிருமாதரந்த
வள்ளெழின்மாதர்மன்றலாற்றினின்பாலராகத்
தெள்ளியமனத்திலெண்ணஞ்செய்தனனனையசெல்வன். (௪)

இலக்கணமான்றமைந்தர்க்கினிதுறவமைக்குங்காலை
மலக்குறும்பகற்றுநின்மெய்வடிவினையெண்ணும்வேதன்
விலக்கறுமடவார்க்காயின்விளம்புமம்மடவார்தங்கள்
கலக்கமில்வடிவமுற்றுங்கருதுவன்வேறென்சொல்கேன். (௫)

பெருத்திடல்சுருங்கலின்றிப்பெய்தமெல்லனிச்சம்பூமே
லிருத்தினுங்குழைந்துவெம்மையெய்துவார்கொடிமின்னேயு
முருத்தகுகவிகைசங்கமுறழ்வரைபலவுந்தாங்கித்
திருத்தகுகமலம்வென்றுசிவந்தவுள்ளடிகண்மாதோ. (௬)

நடுவிரலளவுநேரேநடந்தொருவரைமேனோக்கு
மடுவிரலொன்றொன்றின்மேலேறுறாவறவுநீங்கா
நெடுகுதலகற்சியின்றிப்பெருவிரறிரண்டுநிற்கு
மடுவிரனீளாதீற்றுவிரனிலத்தமர்ந்துவைகும். (௭)

உறுகடைவிரல்கள்பாங்கருற்றமெல்விரல்கணீளா
குறுகிடாநேர்ந்துநில்லாகூறியவிரல்களைந்தும்
பெறுமிலக்கணத்தவாகிப்பிறங்கொளிப்பவளத்துண்டஞ்
சிறுமையுற்றழியத்தேசுதிகழ்ந்தனதேவதேவே. (௮)

பொங்கொளியுமிழ்ந்துவட்டமாய்ப்புரையின்றிச்சற்றே
தங்கியசிவப்பிற்றாகித்தயங்குகானகத்தின்கூட்டஞ்
செங்கழுநீரைமுத்தைத்திங்களைச்சினந்துவென்று
பங்கமுற்றிடையறாதபயம்புகப்பணிக்குமன்றே. (௯)

அளவினிற்பருத்துமெல்லென் றணிநரம்புரோமங்கோல்போல்
வளர்தன்மிக்குயர்தல்கோடல்வழுவிலாப்புறந்தாணுேக்கிக்
கவிவளர்கமடந்தன்னைக்கரந்திடுங்கல்விசான்றோ
ரொளிவளர்புத்தகங்களூறுத்துவர்சேமந்தன்னில். (க0)

மிகப்பருத்திடுதன்மிக்கவுயர்ச்சியென் றிவற்றினீங்கித்
தகப்பருத்தெழுந்துமென்மைதங்கியகுதியின்வண்ண
மிகப்பருந்தவத்தோராருதாரத்துமெய்தவாடி
யகப்படுத்திடும்பொற்பந்தாமடிகள்கைப்பந்துமாகும். (கக)

நரம்பெழலுயர்தலின் றிநலத்தகத்தசைந்துசெம்பொன்
வரம்புசெய்சிறுதராசின்வட்டமாம்பரட்டின்வண்ண
நரம்பொடுமயிர்தோற்றுதநலுந்துடைகணைக்கானேரே
யரம்பையும்வருந்திச்செய்தவாவநாழிகையும்போலும். (கஉ)

வற்றுதலின் றித்தாளவட்டமாய்த்தசைந்துஞெண்டை
முற்றவுங்கடியாகிற்குமொய்யெழின்முழந்தாண்முன்னர்ச்
சொற்றமென்குறங்குசேர்ந்துதுணைசெறிந்திடுநாலாறென்
றூற்றிடும்விரலினெல்லையுறுவதுநிதம்பமன்றே. (கந)

பெருகியமதமால்யானைப்பிடரொடுகமடம்வென்று
மருவியநிதம்பத்தல்குன்மயிருறுச்சதுரமாகா
துருவமிக்குயராநீளாதாழ்தராதுயர்ந்தபோதித்
தருவளரிலைசிற்றுலவட்டமுந்தாழ்த்திவைக்கும். (கச)

வாரிசமராவின்மானின்குளம்படிமருட்டித்தேசாய்ச்
சீரெலிமயிரேபோலச்செறிந்துமேன்மயிருள்ளோங்கி
யாரெழின்மணிகொண்டாகாமடிப்புமிக்ககற்சிவாமத்
தேருறுபள்ளமானசுழியிவையிலதுசெவ்வாய். (கரு)

பருத்துயர்ந்தறவுமென்மைபயின்றனசகனங்கொங்கை
வருத்திடவறுமையெய்தியிருந்ததுமருங்குலுந்தி
யுருத்தகவகன்றுதாழ்ந்துவலஞ்சுழித்துயருரோமஞ்
செருத்தகுநரம்புநீங்கித்திகழ்ந்தொளிபயிலாநிற்கும். (கசு)

பல்வகைச்சுழியுரோமம்பருத்துநீண்மடிப்புமின் றி
நல்வரைமூன்றுதாங்கிநரியவாலிலைபோல்வாய்ந்து
சொல்வரைகடந்ததேசிற்றுலங்கியவயிற்றுநாப்ப
ணல்வரைந்தொழுகிற்றென்னவணிந்ததாலுரோமவல்லி. (கஎ)

என்பொடுநரம்புரோமமிவைகடோற்றுதுமெல்லென்
றின்புறத்தசைந்துசீர்கொண்டிருந்தனவிலாப்புறங்க
ளன்புறுமிதையமாழாதங்குலமறுமூன்றாகி
மின்படைத்தசைந்துரோமம்விரவுறாதிருந்ததன்றே. (கஅ)

புடைபரந்தெழுந்துசீலம்புணர்த்தியதெனக்கண்வாய்ந்து
மிடையறமிடைந்துமார்பின்வியனிடமுற்றுமாய்ந்து
தடையறப்பணைத்துவிம்மித்தம்முளேயிரண்டுமொத்திட்
டிடையினைவருத்தியண்ணாந்திருந்தனமுலைகளம்மா. (கக)

கண்ணிணைபருத்தனீடல்கவினுதியாழ்தல்கொங்கை
திண்ணியதிரிகையேபோற்றிகழ்ந்தடிகனத்துமேலே
நண்ணுருநேர்தனீங்கனலமறவொவ்வாவாத
வெண்ணியகடினநண்ணலிவையடுத்தோர்க்குமெய்தா. (உ0)

கழுத்தடியெழுதருழ்தல்கவினறவென்புதோற்றன்
முழுத்தவிக்குற்றமின்றிமொய்யழகெறிக்குந்தோள்கள்
பழுத்தபத்திரண்டுவேய்போற்பணைத்தனபெருத்தவென்பு
குழுத்தகரம்புரோமங்கூடினோர்தோட்குமெய்தா. (௨௧)

சந்துகடசைந்துதோன்றுவாயினதடவுமுன்கை
மைந்துறுமகரம்போன்றவார்நரம்புரோமந்தோற்று
செந்தளிரங்கைகாணிற்செறிமுயல்வயிற்றின்மெல்லென்
றுந்தெழிற்கவிகையாமையூர்வளைவரையின்வாய்ந்த. (௨௨)

செங்கயல்கமலஞ்சேர்சோத்திகம்வலம்புரிதுலாக்கோ
றங்கியநுகமேவாய்ந்தசகடுறழ்வரைகைத்தாங்கித்
துங்கநால்வருணத்துள்ளுந்துலைவில்செல்வத்தராஞே
ரங்கவர்தமைமுன்பூசையாற்றியதவத்தோர்போலும். (௨௩)

விடைகரிபரிமாதோட்டிவீசுசாமரையேநேமி
வடுவில்வச்சிரம்போற்கீற்றுமருவிமன்னவர்பாலாஞே
ரடுகதைசூலம்வேல்வாளவைபொருவரைகடாங்கிக்
கொடைநனிவழங்குவோரக்கோதையர்கரங்கும்பிட்டோர். (௨௪)

நிரந்துபல்வரைகடம்முணெருங்குதலறவுநீங்கல்
பரந்தெழுநரம்புவீங்கல்பதுமநேரங்கைமாட்டு
மரந்தைசெய்நரம்புரோமமாருதல்புறங்கைமாட்டும்
வரந்தருமன்னோர்செங்கைவணங்கினோர்தமக்குமெய்தா. (௨௫)

ஒட்டகந்தவளைசெந்நாயுரகந்தேள்கழுகுபூனை
கட்டியகழுதையோரிகடுத்திடும்வரைகையுற்று
முட்டுறவருந்துவோருமொய்வரையீட்டிபோலங்
குட்டமுற்றவருமந்தக்கோதையர்கரந்தாழாதோர். (௨௬)

கயிரவமணையசெவ்வாய்க்கன்னியாங்கைநெற்றிப்
பயில்பெருவிரல்கள்வென்றபங்கயமுகையைநீலச்
செயிரறுமுகையைவென்றுசிவந்துநல்வரைகள்வாய்ந்த
வுயிரினுளுயிராய்நின்றோயொழிந்தபல்விரலுமாதோ. (௨௭)

விளைந்தழகெறிக்குமங்கைவிரலினஞ்சிவத்தலின்றி
வளைந்திடலிடையினீங்கன்மயிர்நரம்பணிதனேர்த
லளைந்திடுமென்மையின்றியறவும்வல்லென்றலந்தத்
தளைந்தமெய்வனப்பினுரைசார்ந்தவர்தாமுங்காணார். (௨௮)

வள்ளுகிர்கிளியின்வாய்போல்வார்ந்துசேந்தொளிர்ந்தசொன்ன
வொள்ளிழைமகளிர்க்கன்னோரொள்ளுகிர்கண்டோர்க்கும்
பள்ளமாய்விடல்வெள்ளென்றல்பண்பறச்சரசரத்தல்
புள்ளியாய்வெண்மைதோற்றல்பொற்கெனல்புணர்தராவே. (௨௯)

வெரிந்தலைக்கிடந்தவென்புமென்றசைமூடப்பட்டு
வரிந்திடற்கரியநல்லவனப்புளமடநல்லார்க்குத்
தெரிந்திடனரம்புரோமஞ்சேர்ந்துதாழ்ந்துயர்ந்துகூனி
யிருந்திடலவரைத்தாழ்ந்தவிட்டிடையவர்க்குநண்ணு. (௩0)

கோணுதனரம்புதோற்றல்குருமயிர்கிளைத்தனீளல்
மாணறவற்றலின்றிவண்சுவல்வனப்புவாய்ந்த
பேணுமங்குலங்கணுன்கிற்பிறங்குபுதிரண்டுபூக
நாணுறவரைகண்மூன்றுநண்ணியதெழில்சேர்கண்டம். (௩௧)

குறுகியமிட றுநெட்டைக்கொழுங்களம்பெருத்தகண்ட
முறுமயிர்க்கழுத்துநேர்ந்தவொண்களமடிப்புக்கண்டம்
பெறுமடவார்களெல்லாம்பிரமஞர்மகளீரான
சிறுநுதன்மாதர்கண்டந்தியானஞ்செய்யாததீயோர். (௩௨)

இருபகுப்பாதல்பள்ளமியைந்திடனரம்புரோம
மருவுதல்குறுகனீளல்வளைதல்வற்றுதலுமின்றி
யிருவிரலளவின்வட்டமாய்த்தசைந்தெழில்கொண்டின்பந்
தருவனபிரமனீன்றதையலார்சுபுகமாதோ. (௩௩)

செந்துகிர்க்கடிகைபோலத்திரண்டிருபுடையுங்கூம்பிச்
சுந்தரவரையொன்றெய்திக்கீழிதழ்துலங்காநிற்ப
வந்தின்மேலதரஞ்சற்றேயுயர்ந்தழகெறிக்குமென்ப
பைந்தொடிமுன்கைச்செவ்வாய்ப்பணிமொழிப்பாவைமார்க்கே. (௩௪)

இதழிரண்டென்னநாப்பணிரேகையாழ்ந்திருத்தல்வீங்கன்
மதரறக்கருகல்வெண்மைமருவனுலுதல்கீழ்வாய்ந்த
வதரமேலிதழுரோமமணிந்தகன்றிடலுமெய்தா
பதமருளனையமாதர்பவளவாய்தெரிசித்தோர்க்கே. (௩௫)

முருந்துவெண்முத்தமுல்லைமுகையினெண்ணான்குவெண்பற்
றிருந்திரண்டொழுங்குமொத்தசேயரிக்கண்ணிஞர்க்குப்
பரந்துயர்ந்தகன்றுநீண்டுபசுமையாய்ப்பொன்மையாகிக்
கரிந்துதன்புறத்துமூரல்கண்டவர்தமக்குமெய்தா. (௩௬)

திண்ணியகற்புச்சான்றசித்திபுத்திகட்குச்செய்ய
வண்ணமாய்மென்மையாகிவயங்கினமணிநாவன்மை
வெண்ணிறங்கருமைநீண்டுவீங்குதலகலலாதி
நண்ணுநாவன்னோர்செந்நாநாடினேர்தமக்குமெய்தா. (௩௭)

இழுதெனமென்மையெய்தியிங்குலிகத்திற்சேர்ந்த
செழுவியவுண்ணுவந்தத்தேவியர்க்கமைந்தவெண்மை
யொழுகுதல்கருமைவன்மையோங்குதலுற்றலாதி
வழுவுறுமுண்ணுவன்னோர்மருங்குளார்தமக்குமெய்தா. (௩௮)

கண்ணிணையிடுகெல்செல்லாகவுட்டுணைசுரித்தல்செல்லா
வண்ணவெண்பற்கடோற்றுவறிதன்றிநகைமிகாது
புண்ணியநிலத்தினன்குபொருள்களுமெழுந்துபூப்ப
நண்ணியகொடியேபோலுநங்கைமார்நகைக்குங்காலே. (௩௯)

துளைசிறுத்திரண்டுபொலுங்தொகுபுடஞ்சற்றேயோங்கி
வளர்கொடிநாசியெள்ளின்மலர்பொருமாதரார்க்கு
வளைதலேகருமைசெம்மைநுனியின்மற்றிடையிற்பள்ள
மளவினிற்குறுகலாதியடுத்துளோர்மூக்குமெய்தா. (௪0)

மெல்லெனவிருகான்முக்கால்வியப்புறத்தும்மலன்றிக்
கல்லெனப்பலகாற்றும்மல்கண்டிலேன்கவுளின்வண்ணம்
வல்லனல்பள்ளமாதன்மயிருறலின்றியாடி
யல்லதுநிகராவட்டமாய்த்தசைந்தமைந்தமாதோ. (௪௧)

தெளிமணிநீலம்போலச்சிறந்திடைக்கறுத்துவெள்ளென்
றொளிகொடுகடையிற்சேந்தவோடரித்தடங்கணென்ப
வெளியிடையுறுதலன்றிமென்மயிர்கறுப்பவாய்ந்த
வளியெலாமுருக்கொண்டன்னவணங்கனர்க்கிமைகண்மாதோ. (௪௨)

முதிர்சுவைத்தேனின்வண்ணமொய்த்தகணான்கணோத்து
வதிதருகண்களூற்றுவரம்பிலாநிதிபெற்றோரும்
பொதிதருகாமச்செவ்விப்புந்தியராகின்றோரும்
விதிதருகன்னிமார்தம்விழியருள்வழங்கப்பெற்றோர். (௪௩)

கறையடிமேடமேதிக்கண்பொருகண்கள்வட்டம்
பெறுவிழியுயர்ந்தநாட்டம்பிறழ்ந்திடநோக்குநோக்கு
மறுவுறவலஞ்செல்பார்வைமாறுகண்புறாவின்வண்ண
முறுநயனங்களன்னோருரினாற்றவர்க்குமில்லை. (௪௪)

வாரிமையிரண்டுமார்ந்தமயிரிடைநீங்கிநிற்றல்
சீரியபொன்மையெய்தநிண்ணிதிற்பருத்தல்சால
நேரியதாதலின்னநிகழ்தராபிரமனீன்ற
வேரியங்கூந்தன்மாதர்விழியிமைநோக்குவோர்க்கே. (௪௫)

ஒண்மணிப்புருவமொன்றோடொன்றுறாதடுவிற்போன்று
தண்மயிர்ப்பருத்தனீடறமணியநிறத்ததாதல்
வண்மையின்வனப்புநீங்கவிடையிடையகற்சிமன்றே
பெண்மையிற்சிறந்தவந்தப்பெதும்பையாம்பருவத்தார்க்கே. (௪௬)

வள்ளையின்வார்ந்துதாழ்ந்துமடற்சுழிநலத்துமுன்னர்த்
தள்ளியவமுதமன்னார்தடஞ்செவிமுரிப்பினீங்கி
யெள்ளியநரம்புரோமமெழுந்துமேல்வளைந்துயர்ந்து
நள்ளியகாதினோரந்நங்கையர்ப்பணியாதோரே. (௪௭)

மூவிரலகலம்வாய்ந்துமுழுமதியிடைப்போழ்ந்தொப்ப
மேவியவடிவமாகிமிளிர்நரம்புரோமநீத்த
தூவியன்னத்தையொத்தோர்சுடர்நுதல்சுவத்திகம்போற்
பாவியவிரேகைநெற்றிப்பாவையரவரைத்தாழ்ந்தோர். (௪௮)

மதியெனவொளிர்ந்துசீதமருவிவான்கங்கைபூத்த
பொதியவிழ்புதியகஞ்சம்போன்மெனமலர்ந்தமாதர்
கதிருமிழ்முகஞ்சீமந்தவிரேகைகள்கவின்றுவார்ந்து
துதிசெயவொளிர்ந்தவென்பதொழுதவர்தாமுமுய்ய. (௪௯)

கட்டழகெறிக்கும்வேதன்கன்னியர்தமைச்சார்ந்தோர்க்கு
மொட்டுசீமந்தரேகையொருத்தன்மத்தகநேர்சென்னி
முட்டறவுயர்ந்துவட்டமாயெழின்மொய்க்குந்தேசு
விட்டறவீங்கனீளல்விரிதலன்னவையெய்தாவே. (௫௦)

வண்டினந்தொடர்ந்தாலென்னமைகொடுநூற்றாலென்னக்
கொண்டல்கண்படுத்தாலென்னக்கூந்தலங்கமுகார்ந்தென்னக்
கண்டவர்வியப்பவார்ந்துகமழ்ந்துநெய்த்திருண்டுதாழ்வுற்
றுண்டொருகறுப்புமிக்கென்றுரைகொடாவணர்மென்கூந்தல். (௫௧)

இடையிடைவெளிகடோற்றலிறப்பவுங்குறுகனீளல்
கடைபிளந்திருத்தல்செம்மைகாஞ்சனநிறத்தவாத
லடைவறவுலறல்வன்மையணுகுதல்குழைதலின்மை
சடைபடலினையகூந்தல்சார்ந்தவர்தமக்குஞ்சாரா. (௫௨)

சுடர்நுதற்புருவநாப்பண்டுண்டத்தினுதியிற்சேர்ந்த
விடலறுமறுப்பெற்றோரும்விழுத்தகவிடப்பாற்புள்ளி
வடிவினதாகிச்சேந்தமறுவினர்தாமுஞ்செம்பொற்
குடநிகர்வலப்பாற்கொங்கையம்மறுக்கூடினோரும். (௫௩)

கடிப்புறத்தலர்மென்கையிற்கழுத்திலஞ்செவியிற்காமர்
கொடிற்றினின்மறுப்பெற்றோருங்குவவுவாணுதலினைது
வடித்தமுத்தலையசூலவரையுறப்பெற்றோர்தாமுந்
தடக்கைமார்புந்திதன்னிற்சார்வலஞ்சுழியினோரும். (௫௪)

வலஞ்சுழிமுதுகினொன்றுவலம்படக்கிடக்கின்றோரும்
வலஞ்சுழியிரண்டுசொன்னவெரிந்தலைவதிகின்றோரும்
வலஞ்சுழியகன்றவல்குலடிப்புறமருவினோரு
நலஞ்செறிபாண்டில்போலுநற்சுழியாங்குற்றோரும். (௫௫)

ஒருசுழிமூக்கிற்பெற்றவொண்டொடியோருமேனைக்
கருதுநன்மறிவிரேகைகாமருசுழியுற்றோரு
மருமலர்ப்பொகுட்டுவாழ்க்கைவானவன்வளர்க்கலுற்ற
விருவர்தம்பாதப்போதுமிறைஞ்சிமுன்னருள்பெற்றோரே. (௫௬)

கருநிறமறுவார்மூக்கினுதியுறக்கலந்துளோருங்
கருதுமெட்கொசுவேபோலும்வடுப்புறங்காலைப்பற்றிப்
பெருகியவல்குலந்தம்பிறங்குறத்திகழ்கின்றோரு
மொருசுழிகடிதொட்டல்குலளவுமுற்றொளிர்கின்றோரும். (௫௭)

கடிமுதல்வயிற்றின்காறுமொருசுழிகதுவினோருங்
கடிமுதல்வயிற்றின்காறுமிருசுழிகதுவினோரும்
வடிபொருகுவளைக்கண்ணின்மருவியசுழியினோரு
நெடியவொண்ணுதல்மேற்சாலநிகழ்வலஞ்சுழியினோரும். (௫௮)

சுழிவலமிடமாய்க்கூந்தறுவள்பிடர்க்கதுவினோரு
மழகியவரையினுப்பணள்ளொழிற்செவிகள்மீதிற்
குழல்வளர்ச்சியினுச்சிக்கட்கூடியசுழியினோரும்
விழிதுயிலுற்றகாலைவிளங்குபற்கறிக்கின்றோரும். (௫௯)

இலக்கணநெறியினீங்குமினையனபிறவும்பெற்றுக்
கலக்கணுருறுதலாதிக்கரிசினைப்பெற்றோரெல்லா
நலக்குநாண்மலரின்மேலோனற்றவப்பேறாய்த்தோன்றி
யலக்கண்வையகத்தினீக்குமந்நலார்வடிவுகாணார். (௬௦)

மனமொழிவடிவுக்கெட்டாவரம்பிலின்பத்தைக்கற்றோர்
மனமொழிவடிவுக்கெட்டுஞ்சுவையொடுமானச்சொற்றாங்
கனகனேநிகரின்மாதராரெழிலியல்பிற்றென்றே
நினதுமுன்னுரைத்தேனுள்ளவாறெவர்நிகழ்த்தவல்லார். (௬௧)

வேறு.

என்றுவீணைகையேந்தியநாரதன்
மன்றலோதியர்வண்மையுரைத்தலு
நன்றுகேட்டுமகிழ்ந்தருணல்கினான்
கொன்றைவேணிக்குழகன்குமாரனே. (௬௨)

ஐயன்மெய்யருள்கொண்டடிதாழ்ந்துபோய்க்
கையில்வீணைகதுவியமாதவ
னையுநுண்ணிடைநங்கையரின்புற
வையமுய்யமதித்திஃதோதினான். (௬௩)

பொன்றயங்கியபூணிளங்கொங்கையீர்
மின்றயங்குவிநாயகர்மென்பத
மொன்றுமன்பினுவந்துபணிந்தனெ
னின்றுநுங்கள்வனப்புநிகழ்த்தினேன். (௬௪)

விதுவணிந்தவிநாயகனெம்பிரான்
பதுமநேர்முகப்பாவையீர்நுங்களை
வதுவையாற்றமதித்திருக்கின்றன
னிதுநிகழ்ந்தபடியென்றியம்பினான். (௬௫)

வேறு

இன்னணமுனித்தலைவனேற்புறவியம்பக்
கன்னியருமன்றல்புரிகாதலினிருந்தார்
நன்னர்வரைவாலவரைநாயகன்மருங்கு
மன்னுவதுசெய்திடமதித்தனனெழுந்தேன். (௬௬)

முக்கண்முகமைந்துடையமுன்னவனைமூவாத்
தக்கன்மகமீறுபுரிசங்கரனைவிண்ணோர்
தொக்கனர்தொழுங்கயிலைதன்னினனைவக்கட்
புக்கடிவணங்குபுகழ்ந்தினிதுநின்றேன். (௬௭)

வந்தவரவென்கொலெனுமங்கையுமைபங்கர்க்
கெந்தைநின தின்னருளினெங்களையுயிர்த்தோற்
கிந்திரையுநாணுமெழின்மங்கையரையீதற்
கந்தணநின்சிந்தையறிதற்கெனவிசைத்தேன். (௬௮)

திங்கண்முடிவேய்ந்தசிவனார்கருணைகூர்ந்து
நங்கைமுகநோக்கவுமைநங்கையெனைநோக்கி
யைங்கரனயக்குமருண்மன்றலனையோர்க்கு
மங்கலமதாமதுவயக்குகடிதென்றாள். (௬௯)

குரவரிசையக்கருணைகொட்டுமுகவேழ
வரதனையடுத்தெதிர்வணங்கியடிகேண்முன்
பரவிருசத்திகள்பணித்தனையன்றேயவ்
விரவுமலரோதியரைவேட்டருள்கவென்றேன். (௭௰)

நின்னுருவில்யாதுநிகழ்கின்றததுவன்றி
மன்னுலகில்வேறுநிகழாமரபினாலக்
கன்னியரைநீவதுவைகாணினலதின்பந்
துன்னுதலுறாதுலகமென்றிதுவுஞ்சொன்னேன். (௭௧)

நீடுலகமாண்களொடுபெண்களிணைவொத்துக்
கூடினதுவென்றெழின்மைகோதறவளர்த்துப்
பீடுதரலால்வரைவுபேணுதல்புரிந்து
நாடுமெனையாண்டருள்கவென்றுநவிலுற்றேன். (௭௨)

வேறு.

அட்டமூர்த்தியதற்கிசைவுற்றுநீ
பெட்டமன்றல்பிறக்குமுயற்சிசெ
யிட்டமாகியயாவர்களோடுநாஞ்
சட்டவெய்துதுந்தாழ்க்கலையேகென்றான். (௭௩)

கருணைநாயகன்கண்ணருள்கொண்டுபோய்த்
திருவினாயகன்சேவடிதாழ்ந்துநான்
மருவின்வார்குழலார்மணமோதிப்பின்
பொருவில்சத்தியலோகம்புகுந்தனென். (௭௪)

வேறு.

முனிவரெழுவரைமுடிகொள்வேந்தரைப்
புனிதவிண்ணவர்களைப்புலவர்மன்னனைக்

கனிமொழியவரொடுங்கடுகவம்மினென்
றினியமங்கலம்பொறித்தெய்தவுய்த்தனென். (எரு)

மாதவவசிட்டன்முன் மாதவத்தருஞ்
சீதரன்முதலியதேவர்கூட்டமும்
பாதலத்தவரும்பார்த்திவரும்யாவருங்
காதலிமாரொடுங்களித்துநண்ணினார். (எசு)

நிதிமணித்தருக்களுநீடுதேனுவுங்
கதிர்மணியிழைகளுங்கருத்தின்வேட்டவு
முதிர்சுவையுண்டியுமுன்னினுரொடு
பதியினர்கைக்கொளப்பணிப்பச்செய்தனென் (எஎ)

நச்சியமயன்றிருநகரங்கோடணை
யிச்சையினியற்றினனியற்றுமன்றலுக்
கச்செழுமண்டபமகத்திஞக்கினுன்
விச்சுவகன்மனென்றுரைக்குமேதையோன். (எஅ)

வனப்பினைமுழுவதும்வடித்துநான்முகன்
மனப்பெருமுயற்சியின்வகுத்தமாநகர்க்
கனப்பெருமயன்கடிமணத்துக்காக்கிய
வினப்படுமெழிலெவரியம்பவல்லவர். (எகூ)

வேறு.

முத்தின்றோரணப்பத்தியுமுதிர்குலைவாழைக்
கொத்தும்பூகமுங்குளிர்மணிப்பந்தருங்கொடியும்
பித்தியோவியப்பிறக்கமும்பிறங்குவேதிகையின்
வைத்தபூரணகும்பமும்வயின்வயின்விளங்கும். (அ0)

வடாதுமால்வரைமருட்டியமாற்றுயர்பொன்னுற்
றடாதபேரொளிமணிகளாற்சமைத்தமாநகரின்
விடாதபேரெழினேக்கவிண்காவலனளவிற்
படாதவாள்விழிபடைத்திலேனெனப்பரிவுழந்தான். (அக)

இந்திராதியர்வேறெருநுறக்கமெய்தினர்போ
லந்திலோகையிலமுந்தினரந்நகரவரு
மெந்தையார்கடிக்கியற்றுபுத்தெழில்வளர்களிப்பான்
முந்துநோக்குருவுயர்கதிமுற்றினாரனையார். (அஉ)

ஆறிரட்டியகோடியென்றூழுமம்புலியுங்
கூறுடுத்திரண்முழுவதுங்கூடவந்நகரம்
வீறுபெற்றவந்நாளினும்விளங்குகாலத்தால்
வேறுபட்டிலதவையெலாமொருங்கியவிளைவால். (அங)

காமதேனுவினுண்டியுங்கற்பகத்திழையும்
வாமமேகலைமகளிருமைந்தரும்பெறலாற்
றமெலாமுருவொத்தலிற்றம்முள்வேறில்லை
நாமமாத்திரம்வேறுபாடுகணவிற்றுவன. (அச)

பாரிசாதமந்தாரங்கற்பகம்பசுந்தேவ
தாரமேவுசந்தானமென்றிவைபொலாந்ததைந்த
வேரிதாழ்பொழில்விம்மிதம்பற்பலவிளைப்ப
யாருநோக்கினரவ்வயினவ்வயினகலார். (அரு)

வேட்டவேட்டவர்கற்பகமாதிகள்வீச
வேட்டைதீர்தரவேற்றிளமகளிருமிலகுஞ்

சேட்டுமாமுடிமைந்தருந்திகழ்விளையாட்டுக்
கோட்டிமேயினர்குரூஉமலர்ப்பொதும்பருநகரும். (அசு)

வாசமென்புனலாடியுமலர்ந்தபூம்பொழிவி
னூசலம்மனைகந்துகமாடியுமுவந்து
நேசமல்கியவன்பரிநாடியுநெடுங்கட்
காசலம்பியமுலையினர்சிலருளங்களித்தார். (அஎ)

கிள்ளைமென்சொலாற்பூவையின்கிளவியைக்கீழ்ந்துங்
கிள்ளைமென்சொலைப்பூவையின்கிளவியாற்கீழ்ந்து
நள்ளுமென்பிடியாடலையன்னத்தானலிந்துங்
கள்ளுண்கோதையர்தம்முளேசிலருளங்களித்தார். (அஅ)

களிசெய்வேழத்தின்வென்றியுங்கவனவாம்பரியின்
விளிவில்வென்றியுமேழகஞ்சிவல்கவுதாரி
யொளிறுசூட்டுடைவாரணம்போரிடையுறுத்து
வெளிறில்வென்றியும்வேந்தருட்சிலர்கொடுவியந்தார். (அகூ)

சுருதியாதிகடுகளறவுணர்ந்தருசூழ்வினையை
யொருவுமாதவவசிட்டராதியருறுவார்க
டருமவாதமுமருத்தவாதமுந்தகுகாமப்
பொருளின்வாதமுமுத்திவாதமும்புகன்றிருந்தார். (கூ0)

சனகராதியாம்யோகியர்தத்துவன்மொழிந்த
வனகமாகியவாகமத்தளவையாலருளாற்
புனிதமாகியபூரணப்பொருளியலுயிர்ச்சீர்
நனிவிராவுபாசத்தியனவின்றணரிருந்தார். (கூக)

சித்தியெட்டையுங்காட்டுபுசித்தர்கடம்மு
ளொத்திடார்களைவணக்கினருவந்தனரிருந்தார்
சுத்தவானவரினத்தவர்தம்மொடுதொக்குத்
தத்தமாற்றலைத்தோற்றுபுதருக்கினரிருந்தார். (கூஉ)

பதுமமாநிதித்தொங்கலும்பணிலமாநிதியிற்
புதுவதாமணித்தொடலையும்பொற்பமர்கற்ப
மதுவருமலர்த்தொடையலுமாடையுமற்றுங்
கதுவுமாமணமண்டபக்கவினுரைக்கடங்கா. (கூங)

மணிப்பொற்றூண்டொறுநாட்டியமரகதவாழை
தணிப்புறுதபூகதந்தகுகன்னலுந்தழையா
வணிப்பொற்பூண்டுகிலமுதுசிற்றுண்டிகளனைத்துங்
கணிப்பிலாதனவழங்குவகண்டவர்வியப்ப. (கூச)

விண்ணின்வேறுவேறாகியவுலகின்விம்மிதமு
மண்ணின்வேறுவேறாகியதீவின்வான்பொருளுந்
திண்ணமாகியபித்தியிற்சித்திரமரபு
நண்ணுவார்க்கெலாந்தொழில்கொடுநற்பயன்விளக்கும். (கூரு)

காமதேனுவாதிகளெனக்கடிசெய்காவணத்துச்
சேமமாமுருவுகள்பலசெறிப்பதேயன்றிக்
காமதேனுவாதிகளையும்பன்முறைகான்றங்
கேமமாகியவிம்மிதமெண்ணிலபுரிவ. (கூசு)

அழல்செய்பல்கதிர்ச்சூரியரவிரொளிமழுங்க
நிழல்செய்பல்கதிர்நிதிமணியிழைத்தமண்டபத்தி

னுழல்செய்தேவர்கணிழல்செயாதொளிர்தமதுருவங்
கழல்செயாநிழல்காட்டவிதென்னெனக்கடுத்தார். (கூஎ)

வரைவுவேட்கையின் மண்டபமாதிமுற்றியபின்
விரையநாரதன்வெள்ளிமால்வரைபுகுந்திறைவ
வரையர்தேவர்களனைவருமடுத்தனரெழுகென்
றுரைசெய்தானதுகேட்டுமைபாகனுருவந்து. (கூஅ)

அத்திவத்திரத்தமலனையழைத்தயன்வளர்த்த
சித்திபுத்தியைத்திருமணஞ்செய்திடல்வேண்டு
மொத்தகோலநீகொள்கெனவுரைத்தனர்கேட்ட
சுத்ததத்துவன் றூயநீர்தோய்ந்தணியணிவான். (கூகூ)

வேறு

உம்பர்களிமையாநாட்டமோவறவிமைப்பச்செய்யும்
பம்பியவனப்பின்மேனிப்படரொளிதணித்தாலென்னச்
செம்பொனம்பரங்கைவாங்கித்திருவரையிசையச்சாத்தி
வம்பவிழ்கலவைச்செச்சைமருமந்தோள்பூசினனே. (௪00)

திங்களைமுடியில்வேய்ந்தசெய்தியையறிந்துதாமு
மங்கினிதேறவெண்ணியருந்தவமாற்றவானிற்
றங்கியகோளுநாளுமொருங்குறத்தரித்ததேய்ப்பப்
பொங்கொளிமணிகால்யாத்தபொன்முடிசூட்டினனே. (௪0௧)

அருந்தவத்துரியதென்றேயவிர்சடைமறைத்துநின்ற
திருந்துபொன்முடியின்மீதுதிருமணக்காட்சியின்மேல்
வருந்துமென்றெண்ணினன்போல்வளர்சடைமதிவெண்டிங்கள்
பொருந்துறவணிந்துகொன்றைமாலிகைபொற்பச்சூழ்ந்தான். (௪0௨)

அண்டகோடிகளையெல்லாமரைக்கணத்தழற்றிநீற்று
மண்டுபேரழற்கண்மன்றன்மத்தியின்வரம்புநீங்கி
மிண்டலுங்கூடுமென்றுவெய்துமுன்காத்தாலென்னக்
கண்டவர்வியப்பநெற்றிக்கதிர்மணியோடைசேர்த்தான். (௪0௩)

ஏற்றியமணிப்பொன்மோலியிடத்தினிதணியப்பட்ட
கீற்றிளந்திங்கள்கான்றகேழ்கிளர்நிலவோவென்ன
நீற்றொளிபழுத்தநெற்றிநிகரருவாசஞ்சாலத்
தீற்றியநறுஞ்சிந்தூரத்திலகமும்பொறித்துவைத்தான். (௪0௪)

காமவேளவியவன்றன்கைத்தலக்கொடியின்மீனுஞ்
சேமவான்கொடியின்மீனுந்திருமுகக்கருணைவெள்ளத்
தேமமார்ந்திருப்பவெண்ணிமருங்குறவெய்தியாங்கு
வாமமார்மணியிற்செய்தமகரகுண்டலங்காதிட்டான். (௪0௫)

முகநிதிக்கமலங்கண்டமெனுநிதிமூரிச்சங்கந்
தகவுமிழ்மணிகளென்னத்தரளமாலிகைபொற்பூண்க
ளுகுகதிர்க்கடகமாழியுதரபந்தனங்கேயூர
நகைமணிச்சிலம்புமற்றுநலத்தகவணிந்தானன்றே. (௪0௬)

திருமணக்கோலங்கொள்ளச்சிவபிரானினிதுநோக்கி
வருமயிராவணத்தைவழங்குபுதானுமாதும்
பொருவிடையிவர்ந்தான்கார்போற்பொழிமதக்களிநல்யானை
யிருவருக்கரியவைங்கையெம்பிரானேறினனே. (௪0௭)

அலைவளர்புணரிசூழ்ந்தவவனியைத்தரிக்குஞ்சேட
னுலைவுறமூக்கிற்கொத்தியொய்யெனத்தூக்குமஞ்ஞை

கலைவளர்மலயச்செல்வன்கரிசுதீர்த்துபதேசித்த
விலைவளரயில்வேற்செங்கையெம்பிரானேறிச்சார்ந்தான். (௧௦௮)

ஈசுரதத்துவத்துமிருந்தருளனந்தராதி
யேசறும்வித்தியேசரெண்மருமெவருமுன்னர்ப்
பேசுறுமுதன்மைத்தானபிரணவமனுவுந்தத்தந்
தேசுறுமுறுப்பினோடுந்திரண்டனர்மருங்குசூழ்ந்தார். (௧௦௯)

வேறு

சுத்தவித்தையில்வாழ்நந்திமுன்னானதொல்கணநாதரெண்மர்களு
முத்தமமானவிந்திரனாதியுலகபாலருமவர்கரத்தில்
வைத்தவச்சிரமுன்னானவெண்படையுமந்திரஞ்சத்தகோடிகளும்
பத்திரட்டியினெட்டடுத்தவாகமமும்பாங்குறமுறைமுறைசூழ்ந்தார். (௧௧௦)

வீழ்ந்திடுங்கலைமத்தகத்தில்வாழெண்மர்மிகுபிரகிருதிதத்துவத்தில்
வாழ்ந்திடுமெண்மர்பஞ்சபௌதிகமாய்வதிபிரமாண்டங்களைத்துந்
தாழ்ந்திடாதளிக்குநூற்றுவர்குணதத்துவத்தில்வாழ்சீகண்டரவரோ
டேய்ந்துவாழ்வீரபத்திரரென்னுமுருத்திரரனைவருஞ்சூழ்ந்தார். (௧௧௧)

வேறு.

பூதருமேனைப்பூதத்தலைவரும்புறத்திற்சூழ
மாதவர்மறைகளோதமாகதர்விருதுகூறச்
சீதவெண்கவிகைமொய்ப்பச்சேண்வெளிகொடிகடூர்ப்ப
மேதகுகவரிதுள்ளவியன்முரசியம்பச்சென்றார். (௧௧௨)

விண்ணெறிநீந்தியைங்கைவிநாயகனோடுமெண்டோ
ளண்ணலாரடுப்பநோக்கியகத்தெழுமுவகைபொங்கக்
கண்ணனும்யானுந்தேவகணங்களுமெதிரேபோந்து
வண்ணமென்மலர்கடூவிமலரடிவணங்கியேத்தி. (௧௧௩)

மணிநகரரசவீதிவலமுறக்கொண்டுபோகி
யணிவளர்மண்டபத்தையடுத்தனமடுத்தலோடும்
பிணிமலர்க்கூந்தல்வாணிபிறங்குபொற்கலநீர்வார்ப்பப்
பணிவொடுங்கணேசர்பாதபங்கயம்விளக்கினேனால். (௧௧௪)

அண்டர்கள்பெருமான்மாதோடாதனத்திருந்தபின்னை
மண்டபநாப்பணிட்டமணித்தவிசிருந்துமஞ்ஞை
கொண்டவனாதியோர்கள்குருமணித்தவிசின்வைக
விண்டருள்கணேசன்பாடலாடலின்விழைந்துநின்றான். (௧௧௫)

கள்ளிவர்கொன்றைமாலைக்கணேசர்வீற்றிருப்பவிப்பால்
வெள்ளிலைபாகுவாழைவிழுக்கனிநாளிகேரந்
தெள்ளொளிக்கலன்பூமாலைசித்திரப்பட்டுமற்றுங்
கொள்ளுறவமைத்தசெம்பொற்படலிகைகுடங்கையேந்தி. (௧௧௬)

பல்லியமியம்பச்சொத்திவாசகம்படர்ந்துவிம்ம
மெல்லியன்மகளிர்பல்லோர்வீதிசூழ்போந்துநண்ணி
மல்லலம்வேதியட்டமங்கலத்தோடுமுன்னர்ச்
சொல்லியபொருளையெல்லாந்தொகுப்புறவைத்தபின்னர். (௧௧௭)

செம்பொனுதனமுன்னிட்டுச்சித்திபுத்திகளையேற்றி
யும்பரார்வியப்பவென்கையுறுபலம்வழங்கியென்பா
னம்புசீரிசைவுபெற்றுநல்விழைமடவார்மூவர்
பம்பொளிக்கலனுந்தூசும்பாவையர்க்கணிதல்செய்தார். (௧௧௮)

முன்னுறவிருத்தூந்தூசுமுதிரொளிக்கலனுமற்றுங்
கன்னியர்க்கினிதுவீசிக்கனியும்பாகடையுமாங்குத்
துன்னினரெவர்க்கும்வேறுதொடிக்கரமிதப்பநல்கி
யன்னமென்னடையினாரையரும்புனலாட்டப்புக்கார். (௧௧௯)

வேறு.

புழுகுசட்டங்கோட்டமாரியக்கோட்டநாகப்பூமுத்தக்காசுசயிலேகம் விலாமிசசம், பழுதிலிருவேரிமலையிருவேரிமாஞ்சில்பச்சிலைகச்சோலமதிமதுரந்தக்கோலம், மழைமலர்நன்னாரிதீம்பூவெண்ணெய்கண்டில்வகுளப்பூத்தாவரிசியேலஞ்சாதிக்காய், தழைசரளமிலவங்கநாகணமஞ்சட்டிசண்பகமொட்டரத்தைநறும்பிசின்றகரங்குக்கல். (௧௨௦)

கூறியவோமாலிகையெண்ணான்கொடுகத்தூரிகுங்குமங்கற்பூரமகில்சந்தனமைவிரையும், வீறியபான்மரநான்குதிரிபலைமாநாவன்மிக்ககருங்காலியெனுந்துவர்பத்துநல்லோர், தேறுவெள்ளிலோத்திரப்பூம்பொருக்கரைத்தசாந்துஞ்சேர்த்துநறுநெய்பூசித்திமிர்ந்தருவிபோல, வூறியமாமதக்களிற்றுப்பிடரின்வருகங்கையுவந்தாட்டித்திருமேனியொற்றுடைபுரிந்தார். (௧௨௧)

வேறு.

பெண்ணெனப்பிறக்கும்போதேபேசடையாளமாகி
நண்ணுறப்பினுக்குமுன்னர்நயத்தகுசிறப்புச்செய்தாங்
கொண்ணிறப்பட்டுச்சாத்தியுடன்செயத்தக்கதென்று
திண்ணியமுலைக்குஞ்சாந்தஞ்செங்கையாற்கொட்டினாரே. (௧௨௨)

இயற்கையாற்றண்மைவெம்மையெய்தியமுலைக்குத்தாமுஞ்
செயற்கையாற்றண்மைவெம்மைசேர்த்துவார்சாந்துங்கொட்டிப்
பயிற்புறச்செய்தமாதர்பல்விரைபுகைப்பவந்தச்
சயப்படுதூமமேருத்தவழ்முகிலெனப்போர்த்தன்றே. (௧௨௩)

நெருங்கலர்பூத்தகானநிகர்ப்பவுநீண்டவானி
னொருங்குடுப்பூத்தகங்குலொப்பவுஞ்சீப்பின்வாரிக்
கருங்குழற்பரப்பிற்பூந்தார்கதிர்மணித்தார்பொற்றாரு
மிருங்கவினெறிப்பச்சேர்த்தேற்றிமிலெனக்கொண்டைசெய்தார். ()

மதம்பொழிகளிநல்யானைமருப்புக்கைசூழ்ந்தாலென்ன
மதம்பொழிமுச்சிமுல்லைமாலிகைவளையஞ்சூழ்ந்திட்
டிதம்பொழிகொண்டலாலியினஞ்சொரிந்தாங்குக்கார்மேற்
கதம்பொழிமுச்சியுச்சிக்கதிர்முத்தந்தூக்கினாரே. (௧௨௫)

அந்தரர்க்கரசன்றன்கையடுசிலைவைப்பவூர்திக்
கந்தரந்தனிநின்றன்னகருங்குழன்மருங்குசூழ்ந்த
சுந்தரநுதன்மேலந்தத்தொடுசிலைதொடுத்ததார்போ
லிந்திரைமுதலோர்நாணவிலம்பகஞ்சூட்டினாரே. (௧௨௬)

ஊற்றிருந்தொழுகுந்தானத்தொளிர்முகத்திறைவன்சென்னி
யேற்றியபிறையுங்கையினேந்துவார்கொடியின்மஞ்ஞைத்
தோற்றமுமனைவிமாருஞ்சுமப்பதுமுறையாமென்றே
கீற்றிளந்திங்கண்மஞ்ஞைக்கிளர்மணிமுடியின்வேய்ந்தார். (௧௨௭)

கருமுகிற்படலையன்றுகாமர்சைவலமேகூந்த
றிருமுகந்திங்களன்றுதேமலர்ப்பதுமமேயென்
றுருவளர்நாகந்தீரவொண்மணிமகரப்பேழ்வாய்
குருமலிநுதலிற்றாழ்ந்துகோமளங்கொழிப்பச்சேர்த்தார். (௧௨௮)

அத்திரம்படைக்கண்மாலையயனைத்தினும்வல்லோரானு
மெத்திறத்தானுந்தாழ்க்கப்படாதவேரம்பன்றன்னை
வைத்தவம்பொருநாணின்றிவணக்குவானுதல்விற்பாங்கர்ப்
பொத்தியபிரதாபம்போற்பொறித்தனர்திலகஞ்சேப்ப. (கஉகூ)

செவ்வரிபவளமாயன்றிகழ்மணிமதர்க்கண்டம்பாற்
பவ்வமந்தரமென்கொங்கைபணிப்பதியல்குலென்றே
யிவ்வணமமுதுண்போர்களேக்கருதினிதுகாப்ப
வவ்வடையாளமாகவஞ்சனந்தீட்டினாரே. (கூO)

சுரந்தவாலாலத்தோடுசுவையுமிழுருக்கணன்று
பரந்தபாற்கடலேயாங்குப்பரவுமஞ்சனமுங்காரென்
றரந்தைதீர்சான்றுகூறவக்கடற்பணிலமீன்ற
வரந்தவாமுத்தம்வார்ந்தநாசியின்வயக்கினாரே. (கூக)

திங்களென்றமுதமுண்ணச்சேர்ந்தொளிர்சகோரமொப்பப்
பங்கயமுகத்துவைகும்படைக்கணீலோற்பலத்துத்
தங்கியவனப்பைவவ்வச்சார்ந்திடம்பிடித்ததென்னப்
பொங்கொளிச்செவியினீலப்புத்தலரேற்றினாரே. (கூஉ)

தந்தைதாய்வளர்த்தவென்னச்சார்ந்துவாழ்தூவியன்ன
மந்தணங்காதிற்கூறமருங்கடுத்திருப்பதேபோற்
கொந்தொளிமணிகால்யாத்துக்குயிற்றியவன்னக்கொப்புக்
கந்தமென்குழலினார்மேற்காதுறத்தூக்கினாரே. (கூகூ)

ஒளிவளர்முகத்தைநோக்கியொள்ளியதிங்களென்று
களியொடுமுரோணியோர்பாற்காதலினடுத்ததேபோற்
குளிர்மணிமுத்திற்செய்தகோலமார்மணியையந்த
வளர்செவிநாப்பண்வைக்கும்வயினுறத்திருத்தினாரே. (கூச)

மதுவுமிழ்கமலமென்னமலர்ந்தமிர்தொழுக்குஞ்சீத
விதுவெனக்குளிர்ந்துநம்போல்வெயிலொளிபரப்பாநின்ற
திதுமுகமென்றுவெய்யோனிறைஞ்சவந்தடுத்ததேபோற்
பதுமராகத்திற்செய்தபைங்குழைத்தோடுசேர்த்தார். (கூரு)

பூவிரியாதபாளைபொதிந்தபைங்கமுகின்வண்மை
மேவியகண்டங்காண்போர்விழிகளானூறெய்தாமைப்
பாவியகாப்பேயென்னப்பல்கதிர்மணியிற்செய்த
மாவியல்வனப்பின்கட்டுவடத்தினைவனைதல்செய்தார். (கூசு)

மன்றலின்மகிழ்வாற்கொங்கைவார்ந்ததோள்வீங்கின்வையத்
தொன்றிடமின்றுமென்றேயுறுதடையியற்றுவார்போற்
றுன்றொளிமுலைக்கச்சார்த்துத்தோளிலங்கதங்கண்முன்கைக்
கன்றுவார்விரலினாழிகவின்செய்வபலவுஞ்சேர்த்தார். (கூஎ)

பெருங்களிதருங்கொங்கைக்குப்பெருஞ்சிறப்பளிப்பார்போல
மருங்கெலாங்கிரணம்வீசுமாணிக்கம்பவளமுத்துத்
தருங்கதிர்வயிரங்கோமேதகமுதல்கோத்தகோவை
யொருங்குபேரணிபூமாலையொடுமெழகெறிப்பப்பூண்டார். (கூஅ)

நதம்பெருநதியிற்கொங்கைநகைமணிவடங்கடாழு
நிதம்பமாகடற்குக்காசுநிருமிப்பார்போலப்பற்பல்
விதம்படத்தெரிந்துகோத்தவிரிசிகைகலாபமாதி
யிதம்படமுறையிற்சூழ்ந்தாரினவண்டிற்புலம்பமாதோ. (கூகூ)

எடகந்தாங்காவேதமெட்டுதற்கரியபாதம்
பீடகஞ்சிறப்பத்தாங்கள்பிடித்திட்டவடையாளம்போற்
பாடகஞ்சதங்கைதண்டைபரிபுரபாத்சால
மாடகத்திழைத்தவாழியலத்தகம்பலவுஞ்சேர்த்தார். (கசo)

மெல்லிழையாடையொன்றுவிரித்தரைதொடுத்துத்தோண்மேற்
புல்லுறவிசைத்தாராடைபுல்லியும்பொலங்கலங்க
ளெல்லொளிவிரித்தவெம்மையேற்றருளிவரேனேரிற்
சொல்லுருக்கொளினுர்தாழார்தொல்லியலென்பபோன்றே. (கசக)

திருமகளதிதிபோகந்திகழயிராணிமூவர்
பொருவில்சித்திக்கும்விண்ணோர்புகழனசூயைகற்பிற்
பெருமிதசாலிகீர்த்திபிறங்கியவிரதிமூவர்
மருவுபுத்திக்குமிங்ஙன்மன்றலங்கவின்செய்தாரால். (கசஉ)

தண்ணருட்கடைக்கணேக்கிச்சதாசிவப்பெருமானேடு
நண்ணியமனேன்மணிப்பேர்நங்கைநன்றேவப்பட்டுப்
பண்ணுமுற்றவத்தானுங்கள்பணிவிடைபுரிந்தாம்யாமென்
றெண்ணியகமலையாதியறுவருமிறைஞ்சினரே. (கசங)

ஆங்கவரோடுவிண்ணினணங்கினர்பலருநீங்காப்
பாங்கியர்பலருமேனைப்பலபரிசனமுஞ்சூழ
வோங்கவெண்கவிகைபிச்சமொண்கொடியியமியம்பத்
தீங்கறுநங்கைமார்கடிருமணக்கோலஞ்சென்றார். (கசச)

புனிதமென்மடவார்வீதிப்போதலுமாசாணுகி
முனிவிலங்குரமுன்னனமுறையெலாந்தொடுத்துச்செய்த
சனகன்மண்டபத்துட்புக்குத்தருப்பைவெண்பொரியுமற்றை
யினியபல்பொருளுமீட்டியேல்வைபார்த்திருந்தானன்றே. (கசரு)

ஒருவரையொருவரொப்பதன்றிவேறொருவரொவ்வா
விருவரும்வீதிசூழ்போந்தெய்திமண்டபத்துநாப்பட்
குருமணித்தவிசின்வைகுங்கோமளக்கணேசர்பாங்கிற்
றருவிருபுடைசேர்காமவல்லியிற்றங்கினரே. (கசசு)

மண்ணிடைவழுக்கிவீழ்ந்தவானவர்மீட்டுந்தாம்வாழ்
விண்ணிடைபுகுந்தாலென்னவியோகத்தான்மெலிந்தநீலக்
கண்ணியர்கணேசர்பாங்கிற்கலத்தலும்விளர்த்தபண்டை
வண்ணமும்வேறதாகிவடிவெலாமலிந்தாரன்றே. (கசஎ)

துங்கவாகமத்தினூற்றுற்றாத்தவன்சனகனென்போன்
சங்கற்பம்புரிந்துபுண்ணியாகமுந்தழையச்செய்திட்
டங்குறுபொருள்கடூய்மையாக்கியாரணமுழங்க
மங்கலவுருவினூர்குமதுபருக்கத்தைநல்கி. (கசஅ)

பாத்தியமாதிமூன்றும்பன்னுமந்திரத்தோடீந்து
பூத்தொகுகுழலினூற்குப்பூந்துகில்கலன்கணல்கிச்
சாத்தினரணியச்செய்துதகவெனேநோக்கிநின்று
னேத்தினர்முனிவரெல்லாவியங்களுமியம்பாநின்ற. (கசகூ)

அனுதியேயடிமையானவாவியுமுடைமையான
மனுதியும்பொருளும்பின்னர்வரதன்பால்வழங்குமாபோ
லனுதியேநீங்காச்சத்தியாகியகன்னிமாரைப்
பினுதிபானீரிற்றென்மைபேசுபுகொடுத்திட்டேனல். (கருo)

மடுப்பரும்பொருள்களெல்லாம்வயக்குநல்வினைகட்கேற்பக்
கொடுப்பவன்றானாவேற்குங்கோளினவுயிர்களாக
வடுப்பதிற்பிறழ்ந்துபெண்களளிப்பவனாக்கியென்னைத்
தொடுப்புறுவிழைவினேற்குந்தொழின்மையைத்தானாற்றானல். (௧௫௧)

பாகடைசிறார்கள்கையிற்பரிப்பித்துவாயின்வவ்வி
யோகைசெய்குரவர்போலவொண்டொடிமாரையென்பா
லீகவென்றேற்றுச்சாலவிரங்கியன்றெனையுமாண்ட
வேகனதருளையாரேயிற்றெனக்கிளக்குநீரார். (௧௫௨)

உலகவர்பொருள்களாதியுதவலுமவற்றையேற்றுப்
பலமிறைவழங்குமாறும்பார்க்கினவ்வாறேயாகு
மலர்புகழ்வியாதநாதனருளையாவணத்தினீங்கு
நலவர்களறியினல்லானவையினரறிவர்கொல்லோ. (௧௫௩)

நீரொடுங்கன்னிமாரைநிருமலனேற்றபின்னை
நாரொடுநெகிழ்ந்தசிந்தைநற்றவச்சனகனென்போன்
சீரொடுகுண்டமாதிதிகழ்தருசுத்திசெய்தங்
கேரொடுந்தெய்வச்செந்தீயெழுதரவோமஞ்செய்தான். (௧௫௪)

விம்மொளிக்கனல்களார்ப்பவிநாயகனெழுந்துமாதர்
தம்மடிதூக்கித்தூக்கித்தலத்தினிட்ட்டகியேற்றி
னம்மியினிருத்திமீண்டங்காகுதிவளர்த்துச்சென்று
மும்முறைபொரிகள்வீணைமுனியிடவட்டுவித்தான். (௧௫௫)

எரிவலஞ்சூழ்ந்துபீடத்திருந்துபின்னாங்குச்செய்தற்
குரியனபலவுமுற்றவொய்யெனவெழுந்துதாதை
விரிமலர்ப்பதத்திற்றாழ்ந்துவிமலையைவணங்கிநின்றான்
கரியவாட்டடங்கட்செவ்வாய்க்காதலிமார்களோடும். (௧௫௬)

இருமுதுகுரவர்பூரித்தெழுபெருங்கருணைநல்கிக்
குருமணித்தவிசின்வைகக்கூறிநாரணனைநோக்கத்
திருமறுமார்பன்றாழ்ந்துதேவர்கோனெடுத்துநீட்டப்
பொருவிறாம்பூலமாதிமுறையினாற்பொற்பவீந்தான். (௧௫௭)

வத்திரங்கலன்கண்மற்றுமல்கியவனந்தராதி
யுத்தமத்தலைவரானவுருத்திரக்கணமீறாகப்
பத்தியின்விண்டுநல்கப்பரமனாரருளாற்றேவக்
கொத்துறுமுனிவர்யார்க்குங்கொடுத்தனகற்பகாதி. (௧௫௮)

குறைவறப்பொருள்களன்றிக்குறித்தபல்வரமும்யார்க்கு
நிறைதரவருளிச்செய்துநேரிழையோடுமெண்டோ
ளிறைவனாங்ககன்றுவேறாரிடத்தினிதிருந்தானாக
வறைகழற்பெருமான்வீதியடுத்திடும்விழாமேற்கொண்டான். (௧௫௯)

வேறு.

அருப்புமாமுலைத்தேவியரணிமணிச்சிவிகை
விருப்பினேறினர்விநாயகப்பண்ணவனெழுந்து
மருப்பிராயிரமேந்தயிராவணமென்னும்
பொருப்பினேறினன்பொழிந்தனரமரர்பூமாரி. (௧௬0)

அடைநெடுங்கடலுடைந்தெனவார்த்தபல்லியமு
மடையுடைந்தெனமங்கலவாழ்த்துடனெழுந்த
குடைகவித்தனமிடைந்தனகொடிநிரைகவரி
புடையிரட்டினவசைந்தனபொருவில்சாந்தாற்றி. (௧௬௧)

கின்னரத்திசையெழுப்பினர்கின்னரரெதிரே
யன்னமென்னடையரம்பையராடினர்பிரம்பிற்
றுன்னிருஞ்சனம்விலக்கினன்றுகளறுநந்தி
யென்னையாளுடைநாயகனெழுந்தனன்வீதி. (௧௬௨)

புரக்குநாயகனுதியோர்போற்றிடமதநீர்
பரக்குமானனத்தெம்பிரான்பைப்பயக்கடவுங்
கரக்குன்றேகியவீதியிற்கன்னியர்பலரு
மரக்குநீர்கொடுமுந்துறச்சுழற்றினரகன்றார். (௧௬௩)

கன்னலின்செழுங்கடிகையுங்கதலிமுன்னான
வன்னமென்கனித்திரள்களுமலர்களும்பொரியு
மின்னொளிப்பலமணிகளுமெல்லியன்மடவார்
முன்னர்வீசினர்வணங்கினர்மோகமுற்றனரால். (௧௬௪)

இந்தக்காளையையொப்பவரில்லையென்றொருத்தி
மந்தக்காலினுலசையிளவல்லியிற்றுவண்டாண்
முந்தக்கேட்டொருமாதுநான்முயங்குமாறினைந்த
வந்தக்காளைக்கூறுகநோக்கினைகொலென்றழன்றாள். (௧௬௫)

ஐதுநாயகனணிதலாலணிகள்பேரழகு
செய்தவாலெனவொருத்திமற்றொருத்திநேர்சீறி
யுய்தல்வேண்டுமேலொருத்தனைநினைப்பொழிமுன்னே
வெய்துதாதுபோய்நின்றதென்மனமெனவிதித்தாள். (௧௬௬)

சித்திபுத்திதந்திருமுகநோக்கியமுலைக
ளத்தனங்கையாலணைக்குமாறருந்தவம்புரிந்தார்
முத்தமென்முலைகாளவர்முலையினென்முகம்பார்த்
தொத்துமென்பயன்றவமிலேமென்றனளொருத்தி. (௧௬௭)

அருவிபாய்மதர்விழிகளாலமர்ந்துநோக்கிடந்தோ
றுருவந்தோற்றலினுயர்மதக்களிற்றின்மேல்வருவா
ரொருவரோபலரோவெனவொழிதராவைய
மருவினுள்கலைசோர்வதுமதித்திலாளொருத்தி. (௧௬௮)

தொழுதுநின்றவர்கைகளேதொடியொடுஞ்சிறந்த
கொழுகொம்பின்றியேகுழையிளங்கொடியெனவிறைஞ்சி
யெழுதலில்லவர்நிதம்பமேகலையொடுமிருந்த
விழுமமையல்கொண்டடுத்திடுமெல்லியர்குழாத்துள். (௧௬௯)

அண்ணன்மார்பகமணைக்கமாட்டாதகைத்துணையி
னண்ணிலேமெனநகைவளைநழுவினசிலர்க்கு
வண்ணவார்குழன்மனநெகிழ்ந்தமைதெரிப்பதுபோற்
றிண்ணென்யாப்பினிற்றீர்ந்தறநெகிழ்ந்தனசிலர்க்கு. (௧௭0)

ஆடினார்சிலரவிநயத்தாலகந்தெரித்துப்
பாடினார்சிலர்பரிவொடுகுறிஞ்சிப்பண்ணமைத்து
நீடினார்சிலர்நிமலனைக்கூடுபாவனையி
னூடினார்சிலருன்னியபாவனைக்கலப்பின். (௧௭௧)

இனையவாறுபன்மாதருமேத்ினர்மயங்க
வினையெலாந்தபுவித்தகன்விரைமதசலத்தா
னனையுமாமுகத்தொருத்தலைநலத்தகவுந்திப்
புனையும்வீதிகள்வலம்வந்துகோயிலுட்புகுந்தான். (௧௭௨)

தருவுந்தேனுவுஞ்சங்கமுந்தாமரைநிதியுந்
திருவினீடுசிந்தாமணித்திரள்களும்வெவ்வே
றுருவுதாங்கிநின்றவரவருவக்குமாவிருந்து
பருவமாமழைபோன்மெனப்பண்பொடும்பகர்ந்த. (௧௭௩)

வரைந்தநாடொறுமன்றன்மங்கலவினைசாலப்
புரிந்துசாறுமுற்றியவழிநாட்பொலந்தவிசிற்
றெரிந்தபூணிழைமாதொடுஞ்சிவபிரானிருப்ப
வரந்தைதீர்தரவனைவருமடுத்திறைஞ்சினரால். (௧௭௪)

மாயன்மாதிரத்தலைவர்கள்பதினொருமூவர்
மேயசாரணர்கின்னரர்மேதகுசித்தர்
தூயமாதவர்தொல்புவியரசர்களெவரு
மேயுமாறருள்கொண்டுதம்முலகமெய்தினரால். (௧௭௫)

கந்தராதிமுன்னுடன்வருங்காரணரெவரு
மைந்தராகியகணேசருமணமகளிர்களுங்
கொந்துலாமலர்க்குழன்மனோன்மணியொடுஞ்சூழ
வெந்தையாரெழுந்தருளினாரிருங்கயிலாயம். (௧௭௬)

அங்குவீற்றிருந்தைம்முகரைந்தொழில்புரிய
வெங்கணாயகனாகியவேரம்பனிருபாற்
றங்குமாதராரோடுதன்னுலகினையடுத்துப்
பொங்குகாதலினளவளாய்ப்போகமுற்றிருந்தான். (௧௭௭)

அன்றுமன்றலினுடனிருந்துய்ந்தனனதனை
யின்றுசொல்லியுமுய்ந்தனனெனவியாதனுக்கு
மன்றன்மென்மலர்வாழ்க்கையான்வகுத்தனனென்னா
நன்றுரைத்தனன்பிருகுமாதவனராதிபற்கு. (௧௭௮)

சித்திபுத்திகடிருமணஞ்செப்பினும்வியாத
பைத்தபன்னகப்பள்ளியான்கணேசனைப்பரவி
மெத்துவண்டிறன்மதுகயிடவருயிர்வீத்த
வத்திறத்தினைக்கேளெனவறைகுவன்மலரோன். (௧௭௯)

திருமணப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௧௨௫.



## ௧௯ - வது விண்டுசடக்கரமனுட்டித்தபடலம்.



பண்டொருகாலந்தன்னிற்பாற்கடலரவப்பள்ளி
விண்டுகண்டுயிலும்போதவ்விண்டுவின்காதினின்று
மண்டியமதுகைசான்றமதுகயிடவர்களென்ன
வண்டர்களிடக்கணுடவசுரர்கடோன்றினாரே. (௧)

வேறு.

வெருக்குவிழியுமிடிக்குரலும்வெருக்கொளுருவும்பிறையெயிறுந்
திருக்கிவிடுத்தமுகமயிருஞ்செங்குஞ்சியுநன்றுடையவராய்த்
தருக்கியுறங்குநெடுமாயன்றனையுநிந்தித்தருந்தவத்தி
லிருக்குமுனிவர்பெரியவர்களெல்லார்தமையுமவமதித்தார். (௨)

வடிக்குமறையினெறியொழுக்கமாற்றிப்புவியினுயிரலைத்து
முடிக்குமுடிவைத்துயருலகின்முடியாதமருமிமையாரை
யடிக்கநினைந்தவ்விருவோருமலர்மீதிருக்குமெனைமுன்னர்ப்
பிடிக்கவடுத்தாரவர்க்கஞ்சிப்பேதுற்றுருவங்கரந்தேனால். (௩)

உருமுக்குரல்வேங்கையினகம்போலுருக்கொள்பகன்றைமலர்த்தொடையன்
மருமக்குரிசின்மதக்களிற்றுவதனப்பெருமாடிருவருளாற்
கருமைக்கடல்போனிறத்தவரைக்கமலத்தடங்கட்புயல்வண்ண
னிருமைப்பயனுங்கெடவழிக்குமென்றுதிருப்பாற்கடலடுத்தேன். (௪)

உறங்குமவரையிடையெழுப்பவுயர்மாமறையோதாமையினுன்
மறங்கொப்பளிக்குமரவணையின்மலர்க்கண்படுக்குநெடுமாயன்
றிறங்கொப்பளிக்குநித்திரையாந்தேவியவனைவிட்டொழிய
வறங்கொண்மனத்துவியாதனெனுமந்தணுளவழுத்தினேன். (௫)

சாவித்திரியாய்ச்சந்தியாய்த்தக்கசுவாகாசுவதாவாய்ப்
பாவித்திடுமுத்தொழிலாகிப்பண்ணுவோராய்ப்பார்ப்பதியாய்
மேவுற்றிடுநற்கலையாதிவெவ்வேறானகாலமா
யாவித்தயரும்பசிதாகமாகிப்பரையாமாமாயி. (௬)

இருளுமிருளுமிரவாதியிருக்காதிகளாமறையாதி
மருவுமலகிலுயிர்களொடுறும்வளர்சத்திகளும்பலவாதி
பருகுமமுதமயமாதிபாவாய்நின்சீர்பகர்வாரியார்
பொருவிலாதாய்க்கினிதடியேன்புகலப்படுவதொன்றுளதால். (௭)

அரக்கரவுணர்முதலானவரட்டர்முடிசெங்களத்துருட்டிப்
புரக்கும்பெருமாளுலகளந்தபுலவர்பெருமாளன்பர்கலி
துரக்கும்பெருமாளுன்வயத்தாய்த்துயில்கின்றான்மற்றவன்விழிப்ப
விரக்கம்புரிந்துபுறத்தேகாயெற்றுக்கெனினீங்குரைப்பக்கேள். (௮)

தொக்கதவத்தான்முற்பிறப்பிற்றோலாவரமென்பாற்பெற்றார்
மிக்கமதுகையுடையவராய்விண்டுசெவியிலிப்பிறப்பின்
மக்கணடுங்கச்சுரர்நடுங்கவந்தார்மாயன்கரத்தன்றித்
தக்கவுயிர்சாம்பாரென்னைத்தாக்கமுயன்றாரீங்கடுத்தேன். (௯)

அதனுற்றிருமால்கண்படைநீத்தவுணராவிதமைச்செகுப்பக்
கதமார்திகிரிப்படையானைக்கழன்றுநீங்கவேண்டுமென
விதமார்மொழியாற்றோத்திரித்தவெனக்கன்றிரங்கிநித்திரையாற்
புதமார்தரவேவிலகியதுபுருடோத்தமனுமெழுந்திருந்தான். (௧0)

ஆயபதத்தினவுணர்களாலலைப்புண்டமருமந்தரருந்
தூயதிருப்பாற்கடலடுத்துத்தொழுதுமுறையிட்டார்நெடியோன்
மேயவெனைப்பார்த்திங்கடுப்பவிளைந்தகருமம்யாதென்னப்
பாயபரவைத்திருப்பாயற்பகவகேளென்றிதுசொன்னேன். (௧௧)

வேறு.

மாயைமிக்கவர்மதுகயிடவரெனவிருவர்
தூயைநின்செவியழுக்கினிற்றோன்றினரவர்க்குத்
தாயைதந்தையையெனநினைப்பிறர்கள்சாற்றுது
சேயையென்னுமாறவர்களைச்செகுத்திடாயென்றேன். (௧௨)

நஞ்சமன்னதானவர்திறமுழுவதுநாடி
யஞ்சலீரெனவமரருக்குரைத்தமரார்க
ணெஞ்சுதுண்ணெனுநெடும்படைபலவுங்கொண்டெழுந்து
கஞ்சம்வென்றகைவலம்புரிசேர்த்தினன்கனிவாய். (௧௩)

ஊழிநாளையிலாழிபோலுரப்பியசங்கம்
வாழிவார்செவிநுழைதலுமதுகயிடவர்க
டாழிலாதவிவ்வளையொலியெழுப்பியதகையான்
பாழியானவனொடுபொரல்பாழியென்றெதிர்த்தார். (௧௪)

ஒற்றைமாமலைவரவெதிரோங்கிருமலைபோ
யுற்றதாமெனவுவணவார்கொடியனையடுத்துக்
கொற்றமேவியதானவர்குவவுத்தோட்டினவு
முற்றினேமதுதீருமாமுன்னினையென்றார். (௧௫)

கொடியரின்னணங்கூறலுங்குவலயமுண்டோ
னொடிவதுண்மையேநுங்கடோட்டினவொருகாலு
மடைவதன்றியேயடக்குதுமஞ்சலீரென்றான்
படைவழங்கினர்பாவமேயுருக்கொண்டபதகர். (௧௬)

கூளிவான்படைக்கொற்றவையெழுந்துகூத்தாட
வாளிதூர்ப்பர்கண்மாற்றுவர்வச்சிரமெறிவா
ராளியேறெனவார்ப்பர்களயிலெதிர்விடுப்பார்
தூளிபோர்த்தெழச்சுற்றுவர்வாளமர்தொடங்கி. (௧௭)

அண்டம்வாய்விடவடுக்கல்களகநெகிழ்ந்துடையக்
கொண்டனீருகக்குரைகடல்வரம்பினைக்கடப்பத்
தண்டமேந்தினரெதிரெதிர்தாக்குபுபாசங்
கண்டுநேருறவீசுவர்கடிவர்கைப்படையால். (௧௮)

முடியையன்னதான்மொய்ம்பமர்தோளினையதனாற்
கடிகொண்மார்பினையன்னதாற்கவானைமற்றதனா
லடியையன்னதாலங்கையையங்கையாற்றாக்கிப்
படியிலாதமற்போரையும்பன்முறைபுரிந்தார். (௧௯)

இன்னவாறமர்பன்னெடுங்காலமேற்றியற்றிப்
பொன்னைமார்பகத்திருத்தியபொன்னுடைப்பெருமா
னன்னதானவர்க்காற்றிலனுடைந்துகந்திருவ
னென்னவேகரந்தெய்தினனிருங்கயிலாயம். (௨0)

வெள்ளியங்கிரிச்சாரலின்விரிமலர்ப்பொதும்ப
ருள்ளிருந்திடந்தழுவியாழுறுநரம்புளர்ந்தான்
றெள்ளுமின்னிசைத்திவவியாழ்த்தலைவருக்கிடமாய்
நள்ளிருஞ்செவியேறலுநாதனாரறிந்து. (௨௧)

பிருட்டிதந்தனைநிகும்பனையழைத்திரும்பிரச
மருட்டுமெல்லிசையாழெழூஉம்வானவனெளியா
லிருட்டனுக்குசெங்கவுத்துவமார்பினனென்னாத்
தெருட்டிமற்றவற்கொணர்கெனச்செப்பினர்விடுத்தார். (௨௨)

கிருத்திமத்தலைவோரதுகேட்டுடனேகி
மருத்தபைந்துழாய்மார்பமுப்புரநொடிவரையி
னுருத்தவெம்பிரானருளிப்பாடென்றனருவந்து
கருத்தின்முந்தினனெடியவன்காமருகோயில். (௨௩)

காவனந்தியைக்கைதொழுதிறைஞ்சியுள்புகுந்து
தேவர்தம்பிரான்றிருமுன்புசென்றடிவணங்கி
யோவில்கண்ணருள்பெற்றனனொருமருங்கிருந்து
தாவில்கைத்தலத்திருந்தயாழ்தனைத்தொடங்கினனால். (௨௪)

வேறு.

பிள்ளைமதியணிந்தபெம்மான்றிருவடியை
யுள்ளுமவர்கட்குறுதபொருளுண்டே
மெள்ளநறுநெய்விழைந்துவிளக்குந்துங்
கள்ளவெலியுங்கடலுலகங்காத்ததே. (௨௫)

ஆத்தியணிந்தவமலன்றிருவடியை
யேத்துபவர்கட்கிசையாப்பொருளுண்டே
சாத்தியவில்வந்தனக்குத்தளர்முசுவு
மூத்தவறிவின்முசுகுந்தனாயதே. (௨௬)

பேயினத்தோடாடும்பெருமான்றிருவடியைக்
காயமுறத்தாழ்வோர்கள்காணுப்பொருளுண்டே
வாயிழையாற்கோயில்வகுத்தசிலம்பியுமோர்
தூயகுலச்சோழனாய்த்தொல்லுலகங்காத்ததே. (௨௭)

வேறு.

எனவேத்தலுமெம்பெருமா
னினதார்வநிகழ்த்துகென
வனமாலிமனங்குளிராத்
தனதுள்ளுறைசாற்றுவனால். (௨௮)

ஒருவாவொருவென்செவியி
லிருதானவரெய்திமிகப்
பொருதாரவர்போரிடைநான்
வெருவாமையைவிட்டனனே. (௨௯)

முத்தாமுனையார்செருவி
லத்தானவராவியுண
வைத்தேன்மனமாண்டவலி
யைத்தாவெனவேத்தினனே. (௩0)

வேறு.

கொன்றையின்மலர்வேய்ந்தகொற்றவரருள்செய்வார்
மன்றலந்துளவோய்நீவஞ்சமர்க்குறுகாலை
வென்றியங்குசமேந்தும்விநாயகன்வழிபாட்டி
னென்றினையலையதனுலொன்னலர்க்குடைந்தனையால். (௩௧)

பாசமங்குசமேந்தும்பண்ணவன்வழிபாட்டி
னேசமுற்றினியந்தநேரலர்தமைவென்று
மாசறுமொளியோடுவாழ்குதிமணிவண்ணா
தேசவிர்வழிபாடுஞ்செப்புதுமுறக்கேளாய். (௩௨)

சிந்துரமொளிர்மேனிச்சிந்துரமுகச்செம்மன்
மந்திரம்பலவுள்ளுமாயவநினக்கொத்த
மந்திரமெழுத்தாறுய்வருமனுவாமதனைச்
சிந்தையின்மகிழ்கொள்ளச்செப்புதுநின்செவியில். (௩௩)

வேறு.

கங்கையிற்படிந்துமாயன்கடுகவம்மென்றுகூறி
யங்கவன்றேய்ந்துகண்ணவாகமமுறையாற்றீக்கை
மங்கலந்தழையச்செய்துவக்கிரதுண்டற்கோகை
தங்குமாறெழுத்தையோதியனுட்டிப்புஞ்சாற்றினனே. (௩௪)

அண்ணலாரருளிச்செய்தவருடலைக்கொண்டுதொழ்ந்து
மண்ணெலாம்வாரியுண்டமாதவன்விடைபெற்றேகித்
திண்ணமாரன்பிஞேடுசித்திகேத்திரத்தைவல்லே
நண்ணியாங்கிருந்துநாளுநன்மனுக்கணித்தல்செய்தான். (கரு)

பூம்புனல்படிந்துபூதிதிருவுருப்பொலியப்பூசி
யோம்புமந்திரத்தைச்சொல்லியுறையிடஞ்சுத்தியாகத்
தேம்புனலங்கைதன்னூற்புரோக்கணஞ்சிறப்பச்செய்து
சாம்பியவேங்கைத்தோன்மேற்றவளவத்திரமுமிட்டு. (ஙசு)

வடகிழக்கென்னுந்திக்குவத்திரனுகவைகிக்
கடகரிப்பாகன்போலக்கதழ்பொறியைந்துமோம்பி
யிடவியபுறம்புமுள்ளுமிருபதுமுப்பத்தொன்று
மடைவுறநிசித்துப்பூதமாதியுஞ்சுத்திசெய்து. (ஙஎ)

மூலமாமனுவையுன்னிமுற்றுறப்பிராணயாமஞ்
சாலவேயியற்றியுள்ளந்தழைதாத்தியானித்தின்பச்
சீலமார்கணேசன்றன்னைத்தேவர்கட்கிறையயன்பாற்
கோலியவாகனுதிபத்தினுங்கொளப்பூசித்து. (ஙஅ)

மந்திரமானவாறுவன்னமும்வருடநூறு
பிந்துறக்கணித்தலோடும்பிறைமருப்பொழுகுந்தானச்
சிந்துரமுகவன்றேன்றித்தெரிசனங்கொடுத்தானுகச்
சுந்தரநெடுமொருழ்ந்தசூழ்ந்துகைதொழுதுநின்ருன். (ஙகூ)

நின்றவன்முகத்தைநோக்கிநிருமலனருளுமுன்பே
யொன்றனம்பூசையாற்றினுன்னலரெதிர்த்தபோரின்
வன்றிறலுடைவதின்றேமற்றதுகிடக்கமாய
வின்றுனக்கெய்தவேண்டிற்றியம்புதிதருதுமென்ருன். (சo)

சிறுமதியொளிர்ந்தவேணிச்சிந்துரக்கடவுள்கூற
மறுவலும்வணங்கிக்கண்ணன்மலர்க்கைவாய்புதைத்துச்சொல்வா
னறுவிரைக்கற்பகத்தைநண்ணினல்குரவுமுண்டோ
விறைவனையெதிரேகண்டவெனக்கொருகுறையுமுண்டோ. (சக)

ஆயினுமடியேன்றுஞ்சுமளவிலென்செவியின்வந்த
மாயிரும்புவனமஞ்சுமதுகயிடவரைக்கொல்ல
மீயுயர்மதுகைவேண்டும்விளம்பியவிவரேயன்றித்
தீயர்மற்றெவரேயேனுமென்கையாற்சிந்தவேண்டும். (சஉ)

கடையனேற்குன்பாலென்றுங்கையகலாதபத்தி
யடைவதும்வேண்டுங்குற்றமாற்றினும்பொறுத்தல்வேண்டு
முடையவவென்ருன்கேட்டவும்பன்மாமுகத்துவள்ள
ளுடைசெய்பல்வரமுநல்கிச்சூழ்ந்துமேலிதுவுஞ்சொன்னுன். (சங)

வலிபுகழ்தேசுநெஞ்சின்மதித்தவர்முடித்தன்மற்று
நலிவறநினக்குத்தந்தாநாமவேலவுணரிப்போ
தொலிகெழுமாயைதன்னுலுருக்கரந்திருக்கின்ருர்நங்
கலிகெழுமந்திரத்தைக்கருதிச்செல்லவரைக்காண்பை. (சச)

என்றிவையனைத்துங்கூறியெம்பிரான்மறையமாயன்
வென்றனம்பகையையென்றுவிநாயகன்கருணைபோற்றி
கன்றொளிர்பளிக்கானுன்குவாயில்களுடையகோயி
லொன்றுசெய்ததிலேரம்பனுருவங்கண்டகியினுக்கி. (சரு)

திவ்வியபொருள்கைக்கொண்டுசிறப்புறப்பூசையாற்றி
யெவ்வம்விட்டகலச்சித்தியீதலானம்மூர்த்திக்கு
வெவ்வினைதீர்க்குஞ்சித்திவிநாயகனெனப்பேரிட்டா
னவ்விதியானுஞ்சித்திகேத்திரமாமத்தானம். (சசு)

நாயகனெனத்தாங்கொண்டநாரணர்தமக்குமேலா
நாயகனுதிவேட்டநல்வரங்கொடுத்தமாண்பான்
மேயவங்குசத்தினுற்குவிநாயகனென்னுநாமந்
தூயவிண்ணவர்களெல்லாந்தொடுத்தெதிர்துதித்துத்தாழ்ந்தார். (சஎ)

கடங்கவிழ்முகத்தினானைக்கருத்தினுளிருத்திக்கொண்டு
விடங்கலுழ்திகிரிச்செம்மல்வெளிக்கொடுசென்றாக
வடங்கலாரானவந்தவவுணர்கண்டடுபோர்வேண்டி
யுடங்குவந்தெதிரேநின்றுநகைத்திஃதுரைக்கலுற்றார். (சஅ)

சேர்ந்துமுன்பொருதபோதுசிறுமுத்திகொடுப்பக்கொண்டு
தீர்ந்தனைநாணிலாமற்றிரும்பிவந்தனைவந்தாய்க்கிங்
கோர்ந்திடும்பெரியமுத்தியுதவுதுங்கொள்கவென்றார்
பேர்ந்தெதிர்தகரென்றெண்ணீர்பேதையீரென்றான்மாயன். (சகூ)

அவ்வுரைகேட்டலோடுமழலெனவெகுண்டுமாயோய்
செவ்வியநான்குதோளிற்சிறந்தனையிருவோமுக்கு
மிவ்விருதோளேயற்றாலிருவர்மற்றொருவனோடு
தெவ்வினரென்னல்வேண்டாசெருச்செய்கவென்றுநேர்ந்தார். (ருo)

எற்றுவர்கதையால்வேலாலெறிவரோச்சுவர்வைவாளாற்
பற்றுவர்பாசம்விட்டுப்பாற்றுவரதனையெஃகாற்
புற்றரவனையவாளிபுதைபடத்தொடுப்பர்வீழ்ப்பர்
முற்றுவர்மல்லுப்போரின்முழக்குவர்வீரவார்த்தை. (ருக)

இன்னணம்நெடும்போராற்றுமேல்வையிலெழுந்தசெங்கேழ்க்
கன்னலைத்துணித்தாலென்னக்கதழெரிநேமிதூண்டி
யன்னதானவர்களாவியராவணைப்பெருமானுண்டான்
மின்னவிர்விசும்பிற்றேவர்விரைமலர்மாரிதூர்த்தார். (ரு௨)

பங்கயத்தவிசின்வாழ்க்கைப்பண்ணவனெனப்பட்டேனு
மங்கவனடியிற்றாழ்ந்தேனவனெனக்குரைக்கலுற்றான்
றுங்கவல்லவுணரோடுதொக்கபோர்நெடுநாளாற்றிப்
பங்கமுற்றகன்றுவெள்ளிப்பறம்பினைச்சார்ந்துதாழ்ந்து. (ருங)

மாடகத்திவவுநல்யாழ்வார்நரம்பமிழ்தந்தேக்கிப்
பாடகத்தளிர்மென்பாதப்பாவையைமுதலானோர்க
ணூடகத்தலைவனோடுநயந்துளமகிழ்ந்தபின்றை
யேடகக்கொன்றையான்சொலேரம்பன்மனுவுட்கொண்டு. (ருச)

சித்திகேத்திரத்தினண்ணித்தீதறுமனுவையெண்ணி
யத்திமாமுகவன்றோன்றியருளியவரத்தான்மீண்டு
வைத்தவாளவுணராவிமாய்த்தனெனதனுலந்த
வுத்தமன்றன்னைப்பூசையுஞற்றுதிநீயுமென்றான். (ருரு)

செங்கண்மால்கூறயானுஞ்சித்திகேத்திரத்தையெய்தி
வெங்கண்வாளரவங்கொண்டுவீக்கியவுதரத்தானைப்
பொங்குகாதலினுற்பூசைபுரிந்தனெனமரர்தாமு
மங்கணர்கணேசர்மாயனம்பிகையெனையுந்தாழ்ந்தார். (ருசு)

இக்கதைகேட்டோர்க்கெந்தவிடர்களுமகலுநன்மை
தொக்குறும்வியாதவென்றுதோடவிழ்மலரோன்சொன்ன
னுக்கிரவேலோய்காணென்றுணர்த்தினன்பிருகுவென்போன்
கைக்கொடைசிறந்தசோமகாந்தனென்றரசற்கம்மா. (௫எ)

ஆறெழுத்தாழியேந்தியனுட்டித்தவாறுதேர்ந்தே
னீறிலிகாதையின்னுமியம்பெனவியாதன்வேண்ட
வீறுயர்விச்சுவாமித்திரனைவேல்வீமன்சார்ந்து
பேறுபெற்றதனைமுற்றப்பேசுவன்வாசக்கஞ்சன். (௫அ)

விண்டுசடக்கரமனுட்டித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-ககஅரு.

## கஎ - வது விசுவாமித்திரனைவீமனடுத்தபடலம்.

கஞ்சப்பொகுட்டினரிதேறிக்கமஞ்சுல்வளையீன்றொளிர்முத்து
மஞ்சமுயிர்த்ததன்சினையுமறியாதிரண்டும்விரிசிறையுட்
டுஞ்சப்பொதிந்திட்டடைகிடக்குந்துறைசூழ்நறும்பூந்தடமருதம்
விஞ்சவளந்தந்துயர்நாடுவிதற்பநாடென்றுளதாமால். (க)

வள்ளைச்செவியின்மடமாதர்வள்ளைக்குறங்குமலர்ப்பொழிற்பைங்
கிள்ளைப்பறழையெழுவாளைகெண்டைக்குலங்கடியிலெடுப்ப
வள்ளிச்சொரியுமணித்தரங்கவகழிபுடைசூழ்நகர்ப்புரிசை
கள்ளப்பொறியாற்பகைகடக்குங்கவுண்டினியமென்றோங்கியதால். (உ)

அந்தநகரத்திருந்துலகமாளுமரசன்றவசிலன்
சந்தமறையின்முறைபிறழான்றானஞ்சொரியுமலர்க்கரத்தான்
மைந்துமிகுந்ததிணிதோளான்மாறுத்தருமச்சிந்தையான்
வெந்தமதவேளெழுந்தனையவிளங்குவனப்பினுருவத்தான். (௩)

ஓராயிரமாமறையவருமொருபான்கோடிச்சேனைகளுந்
தீராதுடன்சூழ்தரவெங்குஞ்செல்லுஞ்சூரன்ஞாதியரும்
பாராள்வேற்றுமன்னவரும்பணியும்பதத்தான்பணியாரை
வேரோடறுக்குஞ்சிற்றத்தான்வீமனென்னுமியற்பெயரான். (௪)

வேறு.

வீரவேன்மன்னவன்விழையுங்கற்பினுண்
மூரறோற்றுவகைமுறுவல்செய்தலாற்
சாருகாசினியெனச்சாற்றுநாமத்தா
ளோருமாநலமெலாந்திரண்டவுள்ளத்தாள். (௫)

முதுக்குறைவாளர்கண்மொழிதப்பாதுகோன்
பொதுக்கடிந்திருநிலம்புயத்தினேந்துபு
விதுக்குறைவாணுதல்விளங்குவெண்ணகை
மதுக்குழன்மனைவியின்வாழுநாளையில். (௬)

புத்திரனின்மையாற்புலர்ந்தநெஞ்சினன்
பத்தியிற்றேவர்கள்பணிகளாற்றினன்
மெத்தியதானங்கள்விதியிற்செய்தன
னெத்திறத்தருமமுமினிதியற்றினன். (எ)

செவ்வியவேள்விகள்சிறப்பச்செய்தன
னிவ்வகைநல்வினையெவையுமீட்டியு
மெவ்வமில்புத்திரனெய்தப்பெற்றிலன்
கொவ்வைவாய்மனைவியையழைத்துக்கூறுவான். (அ)

கொம்மைவெம்முலையினுய்கோதில்புத்திரர்
தம்மையெய்தாதவர்தரணியாளினு
மிம்மையுமறுமையுமெய்திடாரெனி
னம்முடைவாழ்க்கையுநன்றிப்பாலதோ. (௯)

வேறு.

அமரர்பிதிர்த்தேவரிவரவ்வியகவ்வியமேலார்
கமலமுகத்தாய்நமதுகட்டழகும்பெருந்திருவும்
விமலமுறுங்குடிப்பிறப்பும்வியனில்வாட்சியும்வலியுந்
தமமறுநூற்பயிற்சிகளுஞ்சகலமும்வீணாயினவே. (௧0)

நெடிபடுகானகத்தேகினேரிழையாயொருவாற்றாற்
குடிவளர்கான்முளைவந்துகூடலுமாமதுவின்றேற்
படியறுவான்கதிசேரும்பயப்பாட்டிலையமிலை
முடிவிதுவேயாகுமெனமொழிந்தமைச்சர்க்கிதுசொன்னான். (௧௧)

சூழ்ச்சிமிகுமந்திரிகாடொல்பவத்தில்யான்செய்த
வூழ்ச்செய்பயனோமனைவியுஞற்றியதீவினைப்பயனோ
வாழ்ச்சிதனக்கிதம்புரியுமக்கட்பேறெமக்கின்மை
தாழ்ச்சியிதனுன்மனைவிதன்னொடுகான்புகுகின்றேன். (௧௨)

ஈண்டுபொருளுநிலமனைத்துமிருவீரும்பகுத்தாள்க
மீண்டுவரினெனன்பாலேவிடுத்திடுகமீளேனேற்
காண்டகுநும்வழிவழியுங்கைக்கொள்கவெனச்செப்பி
மூண்டபெருங்காதலினன்மொய்குழலாளொடுமெழுந்தான். (௧௩)

சுமந்துவெனுமந்திரியுஞ்சூழ்ச்சிமனோரஞ்சிதனு
மமைந்தவுளத்திருவோருமமையாததுயர்விழிநீ
ருமிழ்ந்தனராய்மிகவாடியுயிரனையானுணையின்
விமிழ்ந்திடப்பட்டிருந்தனர்களிறைவன்வனத்தேகினன். (௧௪)

தொக்கவனத்தலமருங்காற்றொல்லைவினைதலைக்கூட்ட
மிக்கதவவிச்சுவாமித்திரன்வாழாச்சிரமம்
புக்கனன்மாணுக்கருக்குப்பொருவின்மறைப்பொருள்விரிக்குந்
தக்கமுனிவரன்பதத்தைச்சார்ந்துமனையொடுந்தாழ்ந்தான். (௧௫)

வணங்குமணிவேற்கரத்துமன்னனுக்குமாமுனிவ
னிணங்குறவாசீர்வதிப்பானெச்சமுனக்காகவெனப்
பிணங்குதலில்லாவுளத்திற்பேசியெழுந்திருவென்ன
வணங்கினொடுமனங்குளிர்ப்பவரசனெழுந்தெதிர்நின்றான். (௧௬)

வேந்தர்களேறேநீயார்விளங்கியவெம்மாச்சிரமம்
போந்தவருட்பயனின்றிப்போனவர்கடாமில்லை
யாய்ந்தநினதுளத்தார்வமறைகுதியேற்றருதுமென
வாய்ந்ததவவிச்சுவாமித்திரனார்மகிழ்ந்துரைத்தார். (௧௭)

விச்சுவாமித்திரனார்விளம்பியசொல்லமுதருந்தி
யெச்சமின்றவன்போலவிதையமொடுமுகமலர்ந்து
நச்சுமாதரவொடுநராதிபன்சொல்வானடியேன்
மெச்சியசீர்க்கவுண்டினியவியனகர்வாழ்தரும்வீமன். (௧௮)

இவள்சாருகாசினியென்பாளெனக்குமனைமாது
தவமாதிபலபுரிந்துந்தனையனுறாமையின்வருந்தி
யவமானவாழ்க்கையினையறத்துறந்தாரணியத்துக்
கவல்வேற்குத்தவம்யாதோகைகூடநினைக்கண்டேன். (௧௯)

கனகவரையடுத்தோர்க்குங்கற்பகத்தையடுத்தோர்க்கு
யனவிழைவுமுற்றாதமரபுளதோவையகத்தி
லனகநினையடுத்தேனுமருமகவுண்டெனத்துணிந்தேன்
புனிதநினதருளுரையாற்புத்திரனின்றேபயந்தேன். (௨௦)

தக்கதவத்தால்வேதசாத்திரவிசாரணையான்
மிக்கதயவாற்பொறுமைவிரதத்தால்வேள்வியினாற்
பொக்கமறும்வித்தையினாற்புகழ்தானதருமத்தா
லொக்குநரில்லாயுரைத்தவுயர்மொழிவீணாகாதே. (௨௧)

எனவழுத்தியடியேன்முனியற்றியதீவினைதெரிந்து
பணவவுரைத்ததுதீர்த்துப்பரிசுத்தனாகும்வகை
யினியவுபாயமுமியம்பவேண்டுமெனவிரத்தலொடு
முனிவன்மகிழ்ந்துளத்தெண்ணிமுடிவேந்தற்குரைசெய்வான். (௨௨)

நின்குலத்தோர்விநாயகரைநித்தலும்பூசனைபுரிந்து
நன்குமிகப்பெற்றார்கணாதிபனேநீயிந்த
மின்கொடிபோலிடைமனைவியிழைவினதுவிடுத்தலினா
லின்குதலைமழலைமொழியெச்சமிழந்தாயம்மா. (௨௩)

விதர்ப்பமெனுநாடாளும்வீமவினிவிநாயகரை
மதர்ப்பின்விழிமாதோடுமகிழ்விமகவெனுமணியைக்
கதிர்ப்பவுயிர்ப்பாய்நுமக்குக்கணேசர்குலதெய்வதமா
யதிர்ப்புளத்திற்றுயரகற்றியாண்டதுங்கேளெனமொழிவான். (௨௪)

விசுவாமித்திரனைவீமனடுத்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௨௦௭.



## ௧௮ - வது தக்கன்பிணிநீங்குபடலம்.



கொழிபுகழ்வீமநுங்குலத்துளோர்கண்முன்
வழிவழியரசுசெய்மறுவிலாததேம்
பொழிமழைமதிதொறும்பூக்குமாட்சியார்
கழிமகிழ்தருங்கருநாடதேயமே. (௧)

கடவுளர்புகழ்கருநாடதேயத்தி
லடையலர்திறையிடவவர்கள்வாழ்பதி
படர்புகழ்ப்பொருடரும்பானுமாநக
ரிடர்கெடவரசுசெய்திருந்தகாலத்தில். (௨)

வழுவில்வல்லவனெனுமன்னனின்றனக்
கெழுதலைமுறையின்வந்திறைமைசெய்யுநாட்
கழுமியகற்பினள்கமலையென்பவள்
பழுதுறுமொருமகப்பயந்துநோக்கினாள். (௩)

விழியிலன்செவியிலன்விளம்புவாக்கிலன்
கழியமெய்விரவியகறைசெய்புண்ணுளன்
பழிதருங்குறளனென்பாலன்பாலனென்
றழிதுயருழந்தனளவலநீங்கிலாள். (௪)

மறுபுலமன்னவர்வசைகள்கூறுபு
முறுவல்செய்திடவருமுடைகொண்மைந்தனைப்
பெறுதலினின்மையேபெரிதின்பாமென
வுறுவிழிநெடும்புனலுகுத்துமாழ்கினாள். (௫)

பாவமிப்பிள்ளையின் பரிவுபார்த்திடப்
பூவினு னென்றலைப்பொறித்ததென்கொலோ
மேவியபிணியினுன் மெலியுமைந்தனுஞ்
சாவதுவாழ்தலிற்றக்கதென்றனள். (சு)

வில்லெதிர்நுதலினுள் வெதும்பினைதலும்
வல்லவனடுத்துறுமகனைநோக்கினு
னல்லதுநல்லதெனற்றவப்பயன்
சொல்லுவதன்றெனத்தானுஞ்சோர்ந்தனன். (எ)

ஊழினுல்வந்ததற்குளைந்தென்னுவதென்
ருழிமாலனையவனகத்திற்றேறினுன்
வீழிவாய்க்கமலைநீவெதும்பலென்றுதன்
வாழிமாமனையையும்வருட்டித்தேற்றுவான். (அ)

துன்பொருகாலத்துத்துளைந்துளார்களே
யின்பொருகாலத்தினெளிதினெய்துவார்
நன்பொறியிழந்தவிந்நவைகொள்பிள்ளையே
யன்புறுநன்மகவாகுமாதராய். (கூ)

மணிகண்மந்திரமருந்திவற்றின்மாற்றுவாந்
தணிவிலதாயிடிற்றவங்கடானங்க
ளணிவிரதங்களாதிகளினீக்குவாம்
பிணிமலர்க்குழலிநீபேணுகென்றனன். (க0)

அவலமென்கடலிடையழுந்துமாதராள்
கவலையிற்சிறிதுகையகன்றுகண்ணெனுங்
குவலயநீரொடுகுளிர்ந்தநீரினுற்
றவலருமைந்தனைச்சாலவாட்டினுள். (கக)

போதகமனையவன்பொருவினுல்வழிச்
சாதகமாதிகடழையச்செய்துபின்
மேதகுகணிதரைவினவித்தக்கனென்
ரேருதகவழைத்தனனெருமகன்றனை. (கஉ)

வெள்ளணியணிந்தநாட்டொடங்கிவேந்தர்கோன்
பிள்ளையைக்குறித்தறமாதிபேணியும்
விள்ளுதல்கண்டிலன்விழுமவெம்பிணி
தெள்ளியவாண்டுபன்னிரண்டுசென்றவே. (கங)

வல்லவன்மனைவியையழைத்துக்கூறுவா
னெல்லையில்பொருளெலாமிழந்துமென்னுட
லல்லொடுபகலருந்தவத்தின்வாடியுஞ்
செல்லல்செய்மகன்பிணிதீரக்கண்டிலேன். (கச)

மற்றுளபொருள்களுமாயுமுன்மக
னுற்றிருந்தனனெனிலொழியக்கொண்டுபோ
சற்றினித்தாழ்க்கலையென்னத்தையலாள்
பெற்றவத்தினத்தினும்பெருந்துன்பெய்தினுள். (கரு)

வேறு.

அன்னுவன்னுமன்னவனெஞ்சத்தழலாகி
யென்னுவானேலென்னினிச்செய்வேனெனநொந்து
கொன்னுய்கொண்டமைந்தனைவல்லேகொண்டாவா
மின்னேயன்னநுண்ணிடைவாடவெளிக்கொண்டாள். (கசு)

பற்றார்யாரேபண்டுசெய்நல்லூழ்படர்காலை
யுற்றார்யாரேயோங்கியதீயூழுறுகாலை
யெற்றேயென்னவிரங்கலிமென்னுமிடமாதைப்
பெற்றேனல்லாற்காப்பிலையென்றேபெயர்குற்றாள். (கஎ)

வெள்ளிடைநீந்திக்கல்லதரத்தமிகுபேய்த்தேர்
துள்ளுறுமானின்கன்றெனவோடுஞ்சுரநீந்தக்
கள்ளர்கள்சூழ்ந்துநில்லெனவார்த்துக்கலன்கொள்ளை
கொள்ளவுள்வாடிமென்மெலவோரூர்குறுகுற்றாள். (கஅ)

பொருளினையேநற்பொருளெனவேட்டுப்புவிகாப்போ
னருளினையில்லானும்மனைமைந்தனவர்தம்மை
யொருவினனென்னினெண்கலம்வவ்வாதொழிவாரோ
கருவினைமாக்களென்றஞருக்கோர்கரைகாணாள். (கக)

வன்பசிதாகமல்கிவருத்தமசஞேடு
முன்பசிதாகங்கண்டறியாதாண்முகம்வாடித்
தன்பழவாழ்வும்வந்தவெறுப்புந்தகநாடி
யென்புரிவாநாமென்புரிவாமென்றிதுதேர்ந்தாள். (உ0)

மைந்தனைநாடிவாழ்க்கையைவிட்டேவனம்வந்தாம்
வந்துழியாவிமாய்ந்தனமாயின்மகனுய்த
லெந்தவுபாயந்தன்னினுமில்லையிரந்தேனு
நைந்துயிர்போகாதோம்புதுமென்றுணவையில்லாள். (உக)

குறுகியசிற்றூரதனிடையோர்பாற்குளிர்கங்கை
நிறுவியவேணிநின்மலர்கோயினிலையெய்திச்
சிறுவனைவைத்துச்சேரணிமைக்கட்டிகழ்கின்ற
வுறுநகரெய்திப்பலிகொடுமீண்டேட்டினளுண்டாள். (உஉ)

வேறு.

அண்டர்கள்பெருமான்கோயிலமர்ந்தவூர்க்கடுப்பவைகுங்
குண்டினபுரத்தைநாளுங்குறுகிவண்பலிதேர்ந்தூட்டி
யுண்டனள்வசிக்குநாளிலொருதினமகனேடவ்வூர்ப்
பண்டைநல்வினைவந்தெய்தப்படர்ந்தனள்பலிகடோ. (உ௩)

வீதியிற்செல்லும்போதுவியனகர்க்கடுத்தகானிற்
சாதியின்வயிரமின்றித்ததைந்துபல்லுயிரும்வாழும்
போதியல்சோலைசூழ்ந்தபொருவிலாச்சிரமம்வைகு
மூதியல்சிவமேநாடுமுக்கலரெதிரேபோந்தார். (உச)

முனிவகல்கணேசபத்திமுக்கலமுனிமெய்க்காற்று
நனியுடம்பெங்குந்தோயநலிபிணிதீர்ந்துதக்க
னினியனமொழிந்தான்கேட்டான்யாவையுங்கண்டானீண்டான்
புனிதனுய்நடந்தானந்தப்பூசுரனியல்பென்சொல்வேன். (உ௫)

முருகனேகாமவேளோமுகுந்தனேயென்னத்தக்கன்
பெருகொளியழகனுகியுறுப்பெலாம்பிறங்கநற்று
யிருவிழிகளிப்பநோக்கியெடுத்தணைத்துச்சிமோந்து
ளுருகியவார்வக்கண்ணீரொழுகமெய்பூரித்தாளே. (உசு)

நாயகன்முனிவாலன்றேநாமிங்குப்போதப்பெற்றுத்
தூயவனொருவன்மெய்யிற்றோன்றியகாற்றான்மைந்தன்
றீயவன்பிணியினீங்கிச்சிறந்தனனென்றுமாது
மேயதன்னிறைபால்வைத்தவெறுப்புவிட்டுவந்திட்டாளே. (உஎ)

அச்செயனகரினுள்ளாரனைவருமறிந்துநாளு
நச்சியின்னடிசிலாடைநல்கவேற்றிருக்குநாளிற்
கச்சரவணிந்தவெண்டோட்கண்ணுதல்பூசையாற்றும்
பொச்சமின்மறையோன்பாதமிருவரும்போற்றினாரே. (உஅ)

குருபரன்கருணைகூர்ந்துகோதறுதீக்கையாற்றி
திருமலக்கணேசருண்மைநிகழ்த்துமெட்டெழுத்தையோதி
மருவுறக்கணிக்குமாறும்வகுத்தனன்வகுத்தவாறே
யிருவருமனுவையெண்ணியிருந்தவமினிதுசெய்தார். (உகூ)

வருந்துமெய்த்தவத்தினார்க்குவரந்தரவரதனெண்ணி
முருந்துழற்முறுவன்மாதுமுன்னுறமுன்னர்த்தோன்றித்
திருந்தியவரங்கணல்கிச்சிந்தையிற்றிறம்யாப்பத்தி
பொருந்தியதக்கன்முன்னர்ப்பொற்புறத்தோன்றிநின்றார். (௩0)

ஒருமுழந்தாளிற்செங்கேழொருபதம்வைத்தகோலத்
தொருமருப்பிரண்டுகோதுமுக்கணுநான்குதோளும்
பொருவில்பொன்னுடையுமேனைப்பொலங்கலம்பலவுந்தோன்ற
விருவருக்கரியானிற்பவிணைவிழிமலரக்கண்டான். (௩க)

அச்சமுமன்புந்தோன்றவடியிணைபணிந்துசூழ்போந்
துச்சியிற்கரங்களேறவொளிவிழியருவிதாழ
விச்சுவரூபனானவிநாயகப்பெருமான்றன்னை
முச்சகமுழுதும்போற்றுமுதல்வனைத்துதிக்கின்றானல். (௩உ)

வேறு.

வேதகாரணமுநீவேதமோர்நான்குநீ
பாதமோர்நான்குநீபதங்களோர்நான்குநீ
போதலைமலையமர்புவனகாரணனுநீ
நாதநின்பெருமையைநவிலவல்லாரெவர். (௩௩)

புராதனப்பொருளுநீபுறம்பினுமுள்ளினும்
விராவுமெய்க்கரியுநீமிகுமுபநிடதநீ
சராசரவுருவுநீதத்துவமுழுதுநீ
பராபரநினதியல்பகரவல்லாரெவர். (௩௪)

மூவர்காரணருநீமூன்றுகாரணமுநீ
மூவகையுலகுநீமொழியுமுச்சுடருநீ
மூவகையுயிருநீமூவகையுருவுநீ
தேவனேநினதருடெளியவல்லாரெவர். (௩௫)

இந்திரியங்களினிசையதிதெய்வநீ
யிந்திரன்முதலியவெண்டிசைத்தேவர்நீ
யந்திநண்பகலுநீயறுவகைப்பருவநீ
யெந்தைநின்னுருவினையியம்பவல்லாரெவர். (௩௬)

ஏகனீயனேகனீயிருளுநீயொளியுநீ
போகிநீயோகிநீபுலவரெல்லாருநீ
சாகரமேழுநீதடவரைக்குலமுநீ
மாகநின்னடிமலர்மருவவல்லாரெவர். (௩எ)

அறைபிரமேயநீயப்பிரமேயநீ
பறையும்பாவனையுநீபாவனாதீதநீ
நிறைபரப்பிரமநீநிலமுதலைந்துநீ
யிறைவநின்னருளினையெய்தவல்லாரெவர். (௩அ)

மிருதிநீபுராணநீவேறுபல்கலையுநீ
வருணமோர்நான்குநீவனமுபவனமுநீ
தருவொடுகொடியுநீசகலசெந்துக்கணீ
யொருவநின்றன்னியலுணரவல்லாரெவர். (௩௯)

காமமாதிகளுநீகடும்பசிதாகநீ
நாமநித்திரையுநீநகுவினோதங்கணீ
யேமமார்பொறையுநீயின்பநீதுன்பநீ
வாமனேநின்கழன்மதிக்கவல்லாரெவர். (௪௦)

அருளுநீமறமுநீயன்புநீவன்புநீ
தெருளுநீமருளுநீசெல்வநீவறுமைநீ
வெருளுநீதேற்றநீவேறுநீயொன்றுநீ
குருவநின்குணங்களைக்குறிக்கவல்லாரெவர். (௪௧)

புண்ணியதலங்கணீபொருவிறீர்த்தங்கணீ
வண்ணமூர்த்திகளுநீவரந்தரும்வள்ளணீ
பண்ணியம்பலவுநீபரமதப்பொருளுநீ
யண்ணலேநின்செயலறியவல்லாரெவர். (௪௨)

செய்வினைமுதலுநீசெயப்படுபொருளுநீ
செய்வினைத்தொழிலுநீசெய்கருமப்பய
னுய்வகையவரவர்க்குதவவல்லவனுநீ
மெய்வலாய்நினதியல்விளக்கவல்லாரெவர். (௪௩)

குணமொடுகுறிபலகொள்கைகொள்ளாயெனி
னணிமலர்மணமெனவாக்கையினுயிரெனப்
பணியுயிரறிவெனப்பயிலுமத்துவிதமாங்
கணபதிநினதியல்காணவல்லாரெவர். (௪௪)

என்றுதோத்திரம்பலவியம்பியதக்கன்மு
னன்றுதன்னுருவமேநான்மறையாளனு
மன்றநேர்காட்டுபுமதமழைக்கயமுக
ஞென்றுநின்றுதிகளுக்குவந்தனனென்றனன். (௪௫)

தம்பிரானருளலுந்தக்கன்மீட்டும்பணிந்
தெம்பிரானடியனேனில்லினெண்டிருவுமுற்
றும்பரார்புகழ்தரவோங்கிநான்வாழுமா
நம்பிரான்றருகெனநாதனுமோதுவான். (௪௬)

வேறு.

முக்கலனெனும்பெயர்முன்னெம்மாற்பெறுந்
தக்கவனவனுருச்சார்ந்தநம்முடை
மிக்கவிவ்வுருவுகாண்விளம்புமன்னவன்
பொக்கமற்றெமதடிபோற்றும்பத்தியான். (௪௭)

அவனுயிர்நமக்குருவானபெற்றியா
லவனுருநமதுருவதனைத்தேற்றுவா
னவனுருவாகியுமளித்துங்காட்சியை
யவனுருக்காற்றினின்னரிட்டந்தீர்த்தனெம். (௪௮)

அன்னவன்றனைச்சரணடைதிதக்கனே
நின்னுளவிழைவெலாநிரப்புவானுயர்
பொன்னகரரசெனப்பொலிவைபோகெனா
முன்னவன்மறைந்தனன்முடிகொள்வீமனே. (௪௯)

தக்கன்பிணிநீங்குபடலம் முற்றிற்று. ஆகத்திருவிருத்தம் - ௧௨௫௬.



## க௯ - வது முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம்.

கற்றைச்சடிலத்தேரம்பன்காட்சிகொடுத்துமறைதலோடும்
பெற்றம்பிரிந்தகன்றெனவும்பெருந்தாய்பிரிந்தமகவெனவும்
பற்றும்பொருள்கைப்பெற்றிழந்தபடர்கூர்வறுமையானெனவுஞ்
சற்றுந்தரியாதுளங்கரையத்தக்கனிலமேல்வீழ்ந்தெழுந்தான். (௧)

சென்றதிசையையெதிர்நோக்குந்திசைகடொறுந்துரீஇச்செல்லு
நின்றுபெருமானருள்புரிந்தநிலத்திற்கிடந்துபுரண்டலறு
மன்றல்கமழ்ந்தமுடிமலைந்தமாலையெனவேமலர்ந்ததுணர்க்
கொன்றைமரத்தையெதிர்வணங்குங்குறுகித்தழுவிநனிமோக்கும். (௨)

காளைச்சுரும்புநறைபருகுங்கமலத்தடமேபுள்ளினமே
வாளைக்கயமேமகன்றில்களேமாடநிரையேகபோதகமே
பாளைக்கமுகேமடற்பனையேபயிலுமன்றிற்குருகினமே
தாளைக்கருதார்க்கருளாதசாமிவரவுங்கண்டீரே. (௩)

ஐயன்மலர்ந்தகருணைமுகமனையமுகம்பெற்றீரென்று
வெய்யகளிற்றினடிதாழும்விளங்குமுருவினிறத்ததெனச்
செய்யதளிரைக்கரங்கூப்புந்தேவனடிபோன்மலர்ந்ததெனப்
பெய்யுமதுப்பங்கயமலரைப்பெரிதுமிறைஞ்சிப்பழிச்சுமால். (௪)

மெழுகாரழலுற்றெனவிளகிமெய்வேறாகியிவ்வாறே
யெழுபேரரவமந்தரத்தாலிலகுமருளாழியைக்கலக்கி
முழுதானந்தச்சுவையமுதமொண்டுபருகிமாணாக்கர்
குழுவாதரிக்குமுக்கலனார்கோதிலிருக்கைசென்றடுத்தான். (௫)

தாவில்வேதமுதலானசகலபொருளுமிகத்தெளிந்து
தேவதேவன்றிருவடியைச்சிறப்பவுணர்ந்தவருந்தவத்தான்
மேவியோகப்பெருவலியால்வேண்டுமுருவங்கொளத்தக்கான்
பூவில்வேறுகதிரவன்போற்பொலிமுக்கலனையெதிர்கண்டான். (௬)

மன்னுங்கருணைவிழிமூன்றுமலர்க்கைநான்கும்பேரழகு
துன்னுமேனையவயவமுந்துலங்கச்சிறப்பினாழாமே
பொன்னின்மணியினுருக்கொண்டுபூசைபுரியுங்கணபதியி
னன்னர்மலர்ச்சேவடித்துணையுநயப்பநோக்கியெதிர்பணிந்தான். (௭)

தண்டமெனவேவிழுந்தபடிதரையினெடிதுகிடந்தெழுந்து
கொண்டன்மழையின்விழிபொழியக்கோடையெனநெட்டுயிர்ப்பெறியத்
தொண்டுபுரிந்துபரவசனாய்த்தொழுதுநிற்பவனையெதிர்
கண்டுபெருகன்பினைவியந்துகருணைகூர்ந்துமுனிச்செல்வன். (௮)

வேறு.

பெயர்நினைக்கியாதுபிள்ளாய்பேணிவாழ்நகரம்யாது
நயமுறமனத்தின்வேட்டநன்பொருளெதுசொல்லென்றான்
றயவுறுமுனிவன்செஞ்சொற்றண்ணமிழ்துண்டுதக்க
னயர்வுதீர்ந்தங்கைகூப்பியனைத்தையுஞ்செப்பலுற்றான். (௯)

வேறு.

தேனொழுகுசோலைவளர்தேயங்கருநாடம்
பானுபுரம்வாழ்பதிபதிக்கணரசாளும்
வானுயர்சிறப்புடையவல்லவனென்றந்தை
கானொழுகுகூந்தலுடையாள்கமலைநற்றாய். (௧0)

காட்சியொடுகண்ணுமுறைகேள்வியொடுகொது
மாட்சிபுரிவாக்குமறவன்குறளனாகி
மூட்சிசெய்பெரும்பிணியின்மூழ்கிமுடைநாற
நாட்செய்பவமாம்பொழுதேநாயடியேனுற்றேன். (௧௧)

பன்னிருபிராயம்வரைபல்வகைதிறத்து
மின்னலொழிவிப்பலெனவெந்தைமுயல்வுற்றுப்
பின்னர்முனிவுற்றிடலும்பெற்றவள்கொணர்ந்திக்
கொன்னகரின்வண்பலிகள்கொள்ளுமொருநாளின். (௧௨)

வீதியிடைநீயிர்வரமெய்யினெழுகாற்று
லேதமுழுதும்பறியவிவ்வுருவனானேன்
போதகனொருத்தனருள்போக்கின்மனுவெண்ணச்
சோதியெதிர்தோன்றியெனைத்தூண்டநினையுற்றேன். (௧௩)

மழுக்கமலமாலைமலிமோதகமுமேந்தி
வழுக்கறுதனாதுருவின்வந்தவிறைபின்பு
முழுக்கநுமதிவ்வுருவின்முற்றியெதிர்நின்று
னொழுக்கமுடையீர்க்குமிறைவற்குமுருவொன்றே. (௧௪)

அத்தகையநும்மருளினாலகிலவாழ்வு
மெத்தவிழைவுற்றனன்விழிக்கருணைநல்கிப்
பத்தியுமளித்தருள்கவென்றுபணிந்தானப்
புத்திரனைநோக்கியுயர்பூசுரன்விளம்பும். (௧௫)

வேறு.

நீயேபெரும்பாக்கியமுடையைநீயேயுடம்பின்பயன்பெற்றாய்
நீயேவேண்டுங்காரியத்தைமுடித்துக்கொண்டநிறைதவத்தோ
னீயேமுக்கண்விநாயகன்பானிகரிலாதவன்புடையை
நீயேமுற்றத்துறந்தோனுநீயேசீவன்முத்தனுமே. (௧௬)

தேவவருடமாயிரம்பின்செல்லவரியதவமுடித்தும்
பாவமகலத்தியானித்தும்பல்வேறானபணிபுரிந்து
மேவவெனக்குத்தெரிசனந்தானீந்தானில்லையிமிர்சுருப்புப்
பூவரிதழித்தொடைவேய்ந்தபொலம்பூஞ்சடிலத்தேரம்பன். (௧௭)

வேறு.

மூவர்களுலகத்தார்க்குமுத்தொழில்புரியுமாபோன்
மூவர்கடமக்குத்தானேமுத்தொழில்புரியாநின்ற
மூவர்கண்முதல்வனானமுதலிலாமுதல்வன்பாத
மூவகைக்கரணத்தானுமுயங்கினைநினையாரொப்பார். (௧௮)

அந்தணர்க்கழலின்வண்ணமாகியோகுழப்போர்க்கெல்லா
மந்திரவண்ணமானவள்ளலென்கண்ணுற்றாங்குன்
முந்துறத்தோற்றிற்றெல்லாமொழிந்தனையுதவுங்கைமா
றெந்தெனத்தழுவிக்கொண்டங்கிலகுடறைவந்திட்டான். (௧௯)

அளவளாயிருந்தபின்றையக்கரமொன்றேயாகி
வளமெலாமருளேரம்பன்மந்திரந்தக்கன்காதிற்
கொளவுபதேசித்தெண்ணுங்கொள்கையுமருளிச்செய்தா
னிளவலைக்கானாடியெய்தினாள்கமலைதானும். (௨௦)

வணங்கினண்முனிவன்பாதம்வழுத்தினளிருடிநோக்கி
யணங்கனையிவனுநீயுமருமறையளந்துமெட்டாக்

குணங்குறிகடந்தநாதன்கொழியருட்கிலக்கமானீர்
பிணங்குபல்வினையும்வென்றீர்பெறுவதென்னினிமேலென்றான். (௨௧)

மந்திரமானவேகவன்னநின்மகற்குச்சொன்னேஞ்
சிந்தையிற்கணித்துமுற்றிற்றிகிரியொன்றுருட்டிமண்மே
லிந்திரன்முதலோரெண்ணவிருந்தரசாளும்வாழ்க்கை
தந்திடுமிறைவனென்றுசாற்றினனிதுவுமேலோன். (௨௨)

என்றுரையாடும்வேலையிலங்குவேல்வீமன்றாழ்ந்து
கன்றுநோய்முனிவன்மெய்யிற்காற்றினன்முழுதுந்தீர
வன்றுவல்விரைந்தேரம்பனவனெதிர்தோன்றவன்றான்
றென்றுசெய்தவம்யாதென்னச்சொல்லுவான்காதிமைந்தன். (௨௩)

முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-௧௨௭௯.



## ௨௦ - வது வல்லாளன்வேதனைநீக்குபடலம்.

மந்தியுகளமலர்ச்செழுந்தேன்மழையிற்பொழியும்பொழிலுடுத்த
சிந்துதேயந்தனில்வளத்தாற்சிறந்தபல்லியெனும்புரத்தில்
வந்தவசியன்கலியாணனென்னும்பெயரான்மனைகற்பி
னிந்துமதியோடறம்பலவுமியற்றியினிதுவாழ்நாளில். (௧)

இந்துமதியென்பாள்வயிற்றினீட்டுந்தொல்லைத்தவக்குறையான்
மைந்தனொருவன்வந்துதித்தான்வணிகன்சாலவினைபலவுஞ்
சிந்தைமகிழவினிதாற்றிச்செம்பொன்முதலாம்பலபொருளு
மந்தணாளர்க்குளந்தழைப்பவளித்துநாளும்வினைபுரிந்தான். (௨)

நன்றுமனையினலங்கரித்துநாண்மூன்றானநற்றினத்தி
லொன்றுங்கணிதர்வல்லவனென்றுரைப்பக்கேட்டுவல்லாள
னென்றுபெயரிட்டான்வசியனிருந்துதவழ்ந்துநடந்தறிவு
துன்றவெழில்சேர்வல்லாளன்சுடர்வெண்மதிபோல்வளர்நாளில். (௩)

வேறு.

புறாவினமல்கியபொன்னணிமாடஞ்
சிறாருடனொட்டயர்செவ்வியினீங்கிச்
சுறாமலிபூந்தடந்துன்னவெழுந்த
விறான்மலிசோலையிலெய்தினனோர்நாள். (௪)

நலங்கிளர்முன்வினைநண்ணலுமாங்கோ
ருலங்கொடுவைத்தொருகொம்பினனென்றே
யலங்கியதீம்புனலாட்டிநறுந்தே
னிலங்கலர்தூய்ப்பணிந்தேத்தியகன்றான். (௫)

மற்றையநாளுமகாருடனேகிப்
பற்றின்மலர்ப்பசும்பந்தருமிட்டு
முற்றினமென்னமுடித்தனனண்ணாற்
கற்றமிலாவிளையாட்டரும்பூசை. (௬)

வேறு.

இன்னவாறுவல்லாளன்பூசையியற்றுநாளினிலோர்தினந்
தன்னைநேருமகாரின்வாழ்வுதயங்கிரும்பதிநின்றுபோ
யன்னமாடுமலர்த்தடங்களணிந்துசீதளமார்ந்துகார்
மின்னளாவியசோலையெய்திமிகுஞ்சிறார்களையேவினான். (௭)

பலர்கள்காவணநாட்டினார்பலர்பல்லியங்களியம்பினார்
சிலர்செழுங்கனியீட்டினார்சிலர்தேமலர்த்தொடையாக்கினா
ரலர்செழும்புனனல்கினார்சிலரானினைத்துழுய்த்தார்சில
ரிலகுசாந்தமுரிஞ்ஞினார்சிலரின்னராயினர்யாவரும். (அ)

நிறைகயப்புனலாடிமெய்யில்வெண்ணீறுபூசிவல்லாளனு
நறைமலர்த்தழையாலயத்தினைநண்ணிநாதனையன்பினான்
முறையின்மென்புனலாட்டிவண்டுமுயங்குமாலையணிந்துபின்
குறைவிலுண்டிகணல்கியங்கைகுவித்திறைஞ்சியிருந்தனன். (கூ)

காலையுண்டியொடுச்சியுண்டிகடிந்துவெங்கதிர்சாய்ந்திடும்
வேலையுங்கிருகத்தின்மைந்தர்கண்மேவுறாமையிலீன்றவ
ராலமென்னவழன்றுபோய்க்கலியாணனுக்கறைவார்கணின்
சீலமைந்தனெம்மைந்தரைக்கொடுசென்றுமீண்டிலனின்னமும். (கo)

உனக்குமைந்தனைநீயொறுத்தியொறுத்திடாயெனில்யாங்களே
நினக்குமின்னலுறப்பிடித்துஞேரேலெனத்தெறுவாமல
தனற்கொழும்படைமன்னவற்கறிவித்துநின்னையகன்பதி
தனக்கயற்புலத்தோட்டுவாமிதுசரதமென்னுகலாய்த்தனர். (கக)

நகருளாரனைவோருமின்னணையவோதலுமொய்யென
வகனிலாவியகோபமூளவழன்றுகண்கள்சிவப்பெழ
மிகவுநீளொருதண்டமேந்துபுவேகமோடுநடந்துபோய்ப்
புகரிலானிறைபூசையாற்றுபுலத்தைமுட்டினனெட்டியே. (கஉ)

விண்டுதேன்வழிமென்மலர்த்தழைமேய்ந்தபந்தரைவீட்டினா
னண்டராலறியாவிநாயகவண்ணலாரமர்மூர்த்தியை
மிண்டினோடுமெடுத்தெறிந்துவெருக்கொண்மைந்தனையன்பறத்
தண்டினாற்கறைசோரமொத்தினன்சண்டனேர்வருகாட்சியான். (கங)

அடித்தும்வெப்பமறாமையாற்கலியாணனஞ்சும்வல்லாளனைப்
பிடித்திறுக்கிமரத்தினோடுபிணித்தனன்பிழைதீர்மகன்
விடுத்திடெந்தையெனப்பணிந்தனன்வெய்யபாவியிரங்கிலன்
மடித்துவாயிதழ்தின்றுநின்றுமலங்கவன்சொனிகழ்த்தினான். (கச)

முட்டிலாமல்விநாயகன்பணிமுற்றினாய்க்கவனேயினிக்
கட்டவிழ்த்திடுஞ்சோறுநீருங்கரத்தின்வேட்டவுநல்கிடு
மொட்டியுன்னுயிர்காக்குமில்லினுறுதொழிந்திடினுய்ந்தனை
யெட்டின்மாண்டனையென்றுகூறினனேதிலானினகன்றனன். (கரு)

முக்கண்யானைமுகத்தவாநினைமுற்றுநம்பியநாயினேன்
றுக்கமார்ந்திடின்விக்கினங்கடுக்குநாதனெனும்பெயர்
தக்கதோசுடர்காலமாறினுஞ்சார்ந்தவன்பர்தமக்கெலாந்
தொக்கபேரருண்மாறிலாயெனச்சொல்லிமைந்தனிதோதுவான். (கசு)

வேறு.

யாவனொருவனாலயத்தையிறுத்தான்கணேசர்திருவுருவை
யாவனொருவனெடுத்தெறிந்தானெளியேனுடனெய்த்தோர்பெருக
யாவனொருவன்பிணித்திட்டானிறைவன்றனக்குநிந்தைகள்
யாவனொருவனெண்ணமலிசைத்தானந்தக்கொடும்பாவி. (களை)

குருடாய்மூகையாய்வெதிராய்க்குறளாயுருவிற்கறைசியும்
பெருகாநிற்கும்புண்ணனுமாய்ப்பீழையுறுகபெருகுமதத்
தொருதேவனுக்குநானடிமையுண்மையாமேலெனச்சபித்திட்
டொருகாநின்றதனதுளத்திலுலவைமுகனையுறப்பிணித்தான். (கஅ)

உடலேகயிற்றாற்கட்டுண்டதுளத்துக்கதுவின்றேயதனாற்
படர்தீரமரர்பெருமானைப்பற்றிப்பிணிப்பாமெனவன்பின்
மிடலாற்பிணித்துத்தன துயிரைவிளிப்பமுயன்றசிறுவனெதிர்
கடமாமுகவன்றரியாதோர்காமர்மறையோனெனப்போந்தான். (கசு)

பருதியெழலும்வல்லிருளும்பனியுமுடைந்தாலெனமுன்னூன்
மருமம்புரளவருமறையோன்வடிவுநோக்கிவல்லாள
னிருகைப்பிணிப்புமுடற்புண்ணுமிமைக்குமளவின்விட்டகலப்
பொருவிலிறையேயிவனென்றுபொருக்கென்றிறைஞ்சியிதுசொன்னான். ()

வேறு.

தந்தைதாய்சுற்றமுற்றுந்தமியனேற்கடிகளன்றி
யிந்தவையகத்தில்வேறேயிலையென்பதின்றுகண்டேன்
மூந்துலகனைத்துந்தோற்றிமுடித்தருண்முதல்வமூவா
வந்தணவென்றான்மைந்தனந்தணன்றழுவிச்சொல்வான். (உக)

நமக்கபராதஞ்செய்தநவையினர்நமக்குப்பத்தர்
தமக்கபராதஞ்செய்ததறுகணரிவர்களெல்லாங்
குமைக்கும்வெந்நிரையத்துன்பங்கூர்வர்கண்மறுமையிம்மை
யிமைக்குமுன்முடிவுகாணுவிடும்பைநோயுழப்பரற்றால். (உஉ)

இருவர்களிடத்துங்குற்றமிழைத்தகல்யாணற்கின்னே
வெருவரவிட்டசாபமெய்ப்பயன்விளைத்தாமைந்தா
பொருமுதலொழிந்துநீயும்போக்கறுவரங்கள்கேளாய்
தருகுதுமென்றான்கேட்டுத்தழைந்துவல்லாளன்சொல்வான். (உங)

தாமரைபழித்தநின்பொற்றாளிணைநீங்காவன்பு
வேமுறுமடியேற்கீகவெம்பிரானெந்தநாளுந்
தோமறவிங்கேவைகதொழுபவர்க்கெல்லாம்வேண்டும்
காமமுமளிக்கவென்றான்கருணையின்மறையோன்சொல்வான். (உச)

உனக்குநம்பாதப்போதிலொழிதராவன்புதந்தா
மெனக்குநின்பெயர்முன்னாகப்பெயரிட்டிவ்வுலகம்போற்றித்
தனக்குறுவரங்கள்கொள்ளத்தங்கியிங்கிருத்துங்கண்டாய்
மனக்களிப்பொடுமெண்விண்ணும்வந்தெமைப்பூசைசெய்க. (உரு)

இங்குறுநமதுமூர்த்தியாவரேதெரிசித்தாலு
மங்கவர்தமக்குவேட்டவரும்பொருளெளிதுண்டாகத்
திங்கணல்விழாவேயாட்டைவிழாத்தினவிழாவுமீங்கே
மங்கலமாகவுண்டாமைந்தனேயறியென்றோதி. (உசு)

வேதியனுகப்போந்தவிநாயகர்மூர்த்தியாகி
மூதுலகனைத்தும்போற்றமுகிழ்பெருங்கருணையோடு
மேதகவிருந்தாரங்குவிளம்புமிக்காதைகேட்டோர்
கோதறப்படித்தோரெல்லாங்குறைவில்செல்வத்தராவார். (உஎ)

வெற்றிவேல்வீமதக்கன்மேவுமுற்பிறவிசொற்றா
முற்றவப்பிறப்பின்மைந்தனேநுங்கும்வல்லாளனென்போன்
முற்றியகணேசர்தம்மான்முத்திசேர்ந்ததுவுங்கேளென்
றற்றமில்விச்சுவாமித்திரனவற்கறையலுற்றான். (உஅ)

வல்லாளன்வேதனைநீக்குபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கங0எ.



# உக - வது வல்லாளன்முத்தியடைந்தபடலம்.

சொல்லாதியினாற்றொடரொணாதா
னெல்லையொருமூர்த்திகொடிருப்ப
வல்லாளன்மகிழ்ந்துமுனமேபோ
னல்லாதரவாற்பணிநயந்தான். (க)

பூம்பந்தர்புதுக்கியறன்மூழ்கித்
தேம்பைம்புனறீங்கனிநறுங்கா
யாம்பன்மலராதிபலவீட்டி
யாம்பன்முகனர்ச்சனைதொடுத்தான். (உ)

இவ்வாறவன்பூசைசெய்திருப்ப
வவ்வாறிடர்செய்தகலுநாய்கன்
றுவ்வாதகலாதசுடுசாபத்
தெவ்வாலுறுநோய்கொடுதிகைத்தான். (ங)

வேறு.

மைந்தனுடனாடியமகாரிரியலுற்றா
ரிந்துமதிகேள்வணிகனெய்தியலைசெய்து
பந்தமுறவீக்கிமகனைப்பரிவிலானாய்
வந்தனனெனச்சொலவுண்மாழ்குமனையாண்முன். (ச)

கண்ணறிவுவாக்கறிவுகாதறிவுநீங்கிப்
புண்ணுருவனாகிவளர்புந்தியும்புண்ணாகி
நண்ணினனவைக்கடனயந்துவிழுநாய்கன்
பண்ணின்மொழியிந்துமதிபார்த்துமிகவாடி. (ரு)

என்னையிதுவந்தபடியென்னிறைவனுக்கென்
றுன்னியுளநைந்துருகியுண்கணறல்சோர
வன்னிமிசைவன்னிவளையப்படுநர்வெந்நோய்
துன்னுமிசைவேறுபிணிதுன்னுநருமொத்தாள். (சு)

செல்வமொடுநல்லிளமைசேர்ந்தபொழுதானு
மில்வரையிரத்தலறியாதவியல்பானைப்
பல்வகையறங்கள்பரிவோடுபுரிவானைப்
புல்வினையிலாவிவனைப்புல்லுவதுமீதோ. (எ)

பண்டுபுரிதீவினைபடர்ந்ததிஃதென்கோ
மிண்டின்மகனைப்படரின்வீழ்த்ததிஃதென்கோ
தண்டமகனைப்புரிதறக்கதிறனேயென்
றொண்டொடிபுலம்பிமகனுற்றுழிநடப்பாள். (அ)

வேறு.

இடவியவயன்மனையேழைமார்சில
ருடன்வரநகர்ப்புறத்தொய்யென்றேகியாங்
கடவிபமுகப்பிரானடிகள்பூசனை
நடவுதன்மைந்தனைநயப்பநோக்கினாள். (கூ)

கட்டப்பட்டிருகையுங்காதப்பட்டுடல்
சொட்டப்புண்ணீர்மகன்றுயருற்றானென
விட்டப்பட்டிளஞ்சிறாரியம்பிற்றுண்மையி
னொட்டப்பட்டிலதெனவுழையர்க்கோதினாள். (கo)

உழைவருமாதருமுவப்பநோக்கியிம்
மழைமதக்களிற்றினைவணக்கஞ்செய்திவன்
விழைவொடுபூசனைவிளைக்கும்பேற்றினாற்
குழைவிலனுடலமென்றேதுக்கூறினர். (கக)

கையணிமுகவனைக்கருணையாளனைச்
செய்யதண்சாந்தணிதிகழ்ந்ததேசுடை
மெய்யனைவழிபடுமிக்கபத்தியி
னையனுக்கிணையிலையகிலத்தென்றனர். (கஉ)

வேறு.

சந்திரன்பெயரிரண்டுடன்றரித்துவாழ்நற்றாய்
மைந்தனைங்கரன்பூசனைவளர்ப்பதுநோக்கிச்
சிந்தைநின்றெழுமன்பொடுதிதலைமென்முலையின்
வந்ததண்பயம்பாய்தரத்தழீஇக்கொடுவெருப்பாள். (கங)

பிள்ளைமைப்பருவத்துநீபெருமதக்களிற்று
வள்ளலைப்பணிவாய்மைகைக்கோடலின்மைந்தா
துள்ளலைப்பெருங்கடல்புடையுடுத்ததொல்லுலகி
னள்ளுடற்பயன்பெற்றனநானுநுந்தையுமே. (கச)

காலமொன்றிடைக்கணபதிக்கருச்சனையாற்றி
ஞாலமொப்புறவில்லிடைநண்ணலாகாதோ
கோலவில்லிடைப்பூசனைகுயிற்றலாகாதோ
சாலவிட்டெமைப்புறநகரேயுறத்தகுமோ. (கரு)

வேறு.

காறணங்களுங்கண்டிலேம்வியத்தகுநுந்தை
யூறுசேருடற்புண்ணனூமையாய்க்குருடாய்க்
கூறுவார்த்தைகேளாவெதிராயுளங்குழைந்தா
னீறுகாணருந்துயரினேனியம்பவந்தடுத்தேன். (கசு)

வேதசாத்திரம்யாவையுமீன்றவர்வெகுண்டு
மோதிநீதியின்மைந்தரைநிறுவுதன்மொழியு
மாதலாலுனைநுந்தைதண்டித்ததுமறமே
யேதுதாதைசெய்யினுமகன்காப்பதுமியல்பே. (கஎ)

மைந்தபுத்திரதருமநீமதித்துவெப்பகன்று
நுந்தைவெம்பிணிதீருமாறுவலுமந்திரங்கள்
சந்தமாமணிமருந்திவைதம்முள்யாதியைவ
தந்தநல்லுபாயத்தினையாற்றுதல்வேண்டும். (கஅ)

கேண்மைமைந்தர்கடந்தைதாய்வார்த்தைகீழாத
வாண்மையேயறமென்பராரணமுதலுணர்ந்தோர்
காண்மையாத்தவென்முகத்தையென்கட்டுரைகேளென்
றேண்மையாத்தவளியம்பவல்லாளன்பார்த்திசைக்கும். (ககூ)

வேறு.

கருவாய்வளர்தருகாலுமகட்டிற்கழன்றுபுறத்
துருவாய்வளர்தருகாலுமுயிர்க்குயிராயெவையுந்
தருவானுமாய்த்தந்தைதாயருமாமொருதந்தனலா
லிருமாநிலத்தினைவாரோவெனக்கப்பனன்னையுமே. (உ0)

ஆமேயொருவரொருவர்க்கிடரையகற்றுவது
மாமேயொருவரொருவற்கிடைநன்மையாக்குவதுந்

தாமேசெய்தனரன்னதுதாமேபுசிப்பதன்றிப்
போமேதலையிற்பொறித்தான்பிறந்துநினைப்பினுமே. (உக)

கொற்றவர்காரியந்தம்மிசைவின்றிக்குமரர்செய்தங்
குற்றனரேனுமொறுக்கவல்லார்கொலுயிர்த்தவர்கண்
மற்றவர்தம்மையொறுத்துயிர்வாழினுமன்னர்பணிக்
கற்றமெலாம்புரிந்தாலுயிர்கூடுங்கொலாரணங்கே. (உஉ)

வெந்தவெண்ணீறணிவானும்விழிக்கடைநோக்கிநிற்கு
மந்தவிநாயகராலையந்தள்ளியதுக்கியெனை
யெந்தைபிரானுருவத்தையுங்கையாலெடுத்தெறிந்தான்
வந்ததுகாணதனுல்வழுவாததோர்வன்பிணியே. (உஙு)

இம்மையின்மாத்திரமேயன்றியிந்நோயுழப்பன்கண்டாய்
செம்மைசெய்கோலுடைவல்லவன்கற்பிற்றிருந்திழையா
யும்மையினீயுங்கமலையென்ருகுவையுன்வயிற்றி
னம்மகல்யாணனென்பான்றக்கனென்னவந்தல்லலுற்றே. (உச)

பன்னிரண்டாண்டினளவும்பலபரிகாரஞ்செய்துந்
துன்னியநோய்தொலையாமையினுற்றுனிகூர்ந்துயிர்த்த
மன்னவனின்னுடுநீக்கிடமுக்கலமாதவனுற்
பின்னலமெய்துவிர்செல்லினியென்றுபெயர்த்தனனே. (உரு)

நற்றுயகலவுரைத்தவன்மீட்டுநற்பூசையிடை
வற்றுதவன்பினிருப்பவுறுநிமதித்தருள்கூர்ந்
தற்றூர்கட்கற்றவமலவிநாயகனுங்கருள
வுற்றூர்கணத்தர்விமானங்கைக்கொண்டவனுற்றுழியே. (உசு)

வேறு.

விண்ணிழிகின்றவிமானமடுத்துக்
கண்ணெதிர்நின்றுகதிர்த்தலுநோக்கி
யண்ணலருட்கடியேன்பொருளோவென்
றெண்ணியிறைஞ்சியெழுந்துகும்பிட்டான். (உஎ)

இந்துமிலைந்தவரேவவிமானந்
தந்தனமன்பதழீஇயிவர்கென்று
வந்தவர்கூறவல்லாளனிவர்ந்தா
னந்தரதுந்துமியார்த்தனவன்றே. (உஅ)

திங்களிருங்குடைசென்னிநிழற்ற
மங்கையர்சாமரைவாங்கியிரட்டப்
பொங்கொளியாலவட்டம்புடைநண்ண
வெங்கணும்வெள்ளையெழுந்துதயங்க. (உகூ)

வானவர்பூமழைவாரியிறைப்பத்
தேனலர்கோதையர்சேர்ந்தெதிராட
வேனவில்வீரர்விராய்ப்புடைநிற்பக்
கானமெழுப்பினர்கந்திருவத்தோர். (௩0)

வரிசைகளின்னணம்வந்தவர்செய்யப்
பரிசனர்சூழ்ந்திருபாலுநெருங்க
விரசியமென்மைவிமானமொடேகிப்
புரிசெய்கணேசர்புரத்திலமர்ந்தான். (௩க)

இந்திரன்மண்ணவரின்பம்வெறுத்தாங்
கிந்திரனின்பமெனைத்தும்வெறுக்கு

மந்தமில்போகமருந்திவருந்தா
தெந்தையிருங்கழலெய்தியொன்றானன். (நஉ)

வேறு.

அதிசயம்பலவுநோக்கியந்நகரத்தோர்யாரும்
விதுவணிசடிலத்தெந்தைவிநாயகர்தமக்குக்கோயின்
முதிரழகெறிப்பவாக்கிமுறையுளிபூசையாற்றிக்
கதிவளர்விழாவுமற்றுங்கடைப்பிடித்தியற்றினாரே. (நந)

மேதகுவரங்கள்சான்றவிநாயகசதுர்த்திதோறு
மூதுலகனைத்துமெய்திமுறைமுறைபூசையாற்றிக்
காதலிற்பணியுஞ்செய்துகருதியவரங்கண்முற்றிப்
போதவங்கருளாநின்றான்புகர்முகக்களிற்றுப்பெம்மான். (நச)

வேதனைமுழுதுநீக்கிவிழைந்தவல்லாளற்கன்றே
கோதறுமுத்தியீந்தகுஞ்சரமுகவனுர்க்கு
மாதவர்முதலோர்போற்றிவல்லாளகணேசனென்ன
வோதினர்நாமந்தன்னையுரைத்தவர்க்கிடும்பையின்றே. (நரு)

பெரும்பிணிகொண்டநாய்கன்பேரிடருழந்தேயந்த
வரும்பவமறவல்லாளனன்றுரைத்திட்டவாறே
விரும்பியமனைதாயாகவெறுத்தகுமகன்றானாக
வரும்பவத்துற்றுத்தக்கனெனும்பெயர்வழங்கப்பட்டான். (நசு)

அருந்தவந்தானமாதியப்பவத்தியற்றலானுந்
திருந்துமெய்ஞ்ஞானம்பிள்ளைகணேசனுற்சேர்தலானும்
வருந்துநோய்மறையோன்காற்றான்மாய்ந்ததுவளர்பேரன்பு
பொருந்தலிற்கணேசர்காட்சிப்பொருக்கெனக்கொடுத்திட்டாரே. ()

அவர்பெருங்கருணைப்பேற்றாலத்தகுதக்கனென்பான்
றவநிறைமுனிவன்பாதஞ்சார்ந்துபல்பவமுந்தீர்க்குஞ்
சிவமலிமனுவும்பெற்றான்றெவ்வடுவேலோயன்னு
னவனிகாவலனுய்வாழ்ந்தவடைவுமீங்குரைத்துங்கேண்மோ. (ந௮)

வல்லாளன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கந௪ரு.



## உஉ - வது தக்கனரசாட்சிபெற்றபடலம்.



மிக்கருள்வழங்குமந்திரங்கொடுத்தமேதகுமுக்கலமுனியைப்
பொக்கமிலன்பாற்பூசனைபுரிந்துபுறவிடைகொண்டுதாயோடு
தக்கனங்ககன்றுதக்கவர்வாழ்த்தத்தகுகவுண்டின்னியநகர்பாற்
றொக்கவப்புறவத்தெவ்வகைவளனுந்துவன்றுமோர்சூழலையடுத்தான். (க)

அளிந்ததீங்கனியின்றேறல்வார்ந்தொழுகியசும்புமச்சூழலினிடையே
தெளிந்தநீர்த்தடத்துச்செழுமணிக்கரையிற்றிப்பியமாய்ப்புராதனமாய்க்
குளிர்ந்தவான்றிங்கண்மிலைந்தருள்கணேசர்கோயிலொன்றிருப்பநேர்கண்டு
முளிந்ததீவினையான்மகிழ்வொடுமதனைமுற்றியாங்கிருந்தனன்கணித்தான்.

பன்னிரண்டாண்டுதிருந்தனுட்டானம்பண்ணியேகாக்கரமனுவைத்
தன்னிகரில்லான்றாளிணைநினைந்துதகவுறக்கணித்தனன்பின்பு
மன்னியங்கிருந்தவிநாயகர்தம்மைமகிழ்ந்திருபத்தொருதிவசந்
துன்னுபல்பொருளுஞ்சோர்வறக்கொண்டுதூயபூசனைபுரிந்திருந்தான். ()

இருபதின்மேலாமொருதினத்தியாமமிறந்திடுவைகறைப்பொழுதி
னொருகரத்திருகோட்டொழுகுமும்மதத்தினொளிர்ந்தசிந்தூரமத்தகத்தின்
வருமொருவேழமரதனமாலைவயங்குதன்கழுத்திலிட்டெடுத்துப்
பொருவருபிடர்மேற்கொண்டொருநகரிற்போதரக்கனவுகண்டனனே. ( )

விடிந்தபின்னெழுந்துநாட்கடன்முடித்துவிருப்பினாற்கமலையைவணங்கி
முடிந்தவென்கனவைக்கேளெனமொழிந்தான்முகமலர்ந்தன்னையுங்கேளாக்
கடிந்தனநந்தங்கலியையின்னேமண்காவலனாகுவையென்று
நொடிந்தனளிவ்வாறளவளாயிவர்கணோற்றனர்முன்புபோலிருப்ப. (ரு)

வேறு.

கற்றார்புனைபுகழ்மல்கியகவுண்டின்னியநகரிற்
செற்றார்திறையிடுசந்திரசேனன்றனுநீங்கி
யுற்றான்கதியுற்றாரொடுமுரிமைத்திருமனையாள்
பொற்றாரினள்சுலபைப்பெயர்பூண்டாளவலித்தாள். (சு)

என்னாருயிரனையாயொளிரிருகண்மணியனையாய்
மன்னாபுவிதாங்கும்பொறைமாற்றிச்சுரருலகம்
பொன்னார்திணிதோள்வெஃகியபுக்காயெனைநீத்தா
யன்னாயிதுதகுமோவிதுதகுமோவமிழ்தனையாய். (எ)

கொழுகொம்பறுகொடிபோன்மிகுகுளிர்நீரறுகயல்போ
லிழுதங்கறுசுடர்போலொளியெல்லேயறுநாள்போன்
முழுதுந்துயர்பெருகுங்கடன்முழுகும்படியெனைநீத்
தொழுகுங்குழலரமாதரையுற்றாயிதுதகுமோ. (அ)

வேழ்வித்தழலெதிரோம்படைமெய்யேயிதுகாறும்
வாழ்வித்தனையிப்போதுநல்வழிபாட்டினுள்யாது
தாழ்வித்தனனடியேனதுதகவுண்டெனிலுரையாய்
சூழ்வித்தகவென்பாலிடர்சூழ்வித்தனைதகுமோ. (கூ)

அந்நாளுறுமன்போடலர்மனதோவகல்வுற்ற
திந்நாளதுபோலேயயலேகுற்றிலைநின்றா
யென்னேதுயர்வேனென்னுடலின்பார்தரவருடா
யொன்னாரிடையுறுபாவனையுற்றாயுருகாமே. (க0)

ஆவாவினியென்செய்குதுமந்தோவெனவிவ்வா
றோவாதுரைமொழிவாள்விழியுறைசிந்திடவுருகித்
தீவாய்விழுதளிர்போலொளிதீரத்தனுவேறாய்க்
காவாதுளமானம்படுகணவன்மிசைவிழுவாள். (கக)

முகமெற்றுவடலையெற்றுவண்முருகார்கரமலராற்
றகவெற்றுவள்கனிவாயிருதனமுங்குழைவெய்த
மிகவெற்றுவள்வயிறெற்றுவண்மின்னைப்பொதிமுகிலி
னுகுமைக்குழல்பொதியத்தளிருருவந்துவளுற்றாள். (கஉ)

இவ்வாறவன்மனையாளொடுமினைவோர்களுமினைய
வொவ்வாதவரல்லால்வயமொப்பாருலகில்லா
வவ்வாண்மையினரசன்படியகலுற்றனனென்னாத்
தெவ்வேலமைச்சர்களுந்துயர்தேக்கித்தெருமந்தார். (கங)

வேறு.

கலங்கவிழ்த்தநாய்கன்போற்கையற்றுமிகத்தளர்ந்து
புலம்புநரையெதிர்நோக்கிப்புரோகிதன்மற்றிதுசொன்னான்
புலம்புவதெல்லாநுமக்குப்புணர்சுகத்தைக்குறித்தன்றே
யுலந்தவனுக்குறுசுகத்தையுன்னலீர்புலம்பொழிமின். (கச)

காவலனுக்கினிச்செய்யுங்காரியத்தைப்புரிமின்கள்
பூவுலகிற்பிறந்தவருட்பொன்றாதாருளரேயோ
வாவியிறந்தவருடனேயாவியிறந்தவர்யாரே
மேவியவாணுளலப்பின்விண்ணவரும்வீடுநரே. (கரு)

செய்தக்ககாரியத்தைச்செய்துதனுவிறந்தவரை
யுய்தக்கநற்கதியிலுறுத்துநரேயவர்க்காத்தர்
பொய்தக்கபொருட்கிரங்கிப்புலம்புநர்களெஞ்ஞான்று
மெய்தக்கபொருளறியார்வீணரெனவிளம்புதலும். (கசு)

சூழுமனோரஞ்சிதனேசுமந்துவெனவின்றுன்பால்
வாழமைச்சரிருவருளுமன்னவனேர்சுமந்துவெனும்
பாழியமைச்சன்னிறைக்குப்பாலனிலனுகையினு
லூழினுறுகாரியங்களுஞற்றினுனுலகேத்த. (கஎ)

சுலபைநீர்படிந்தாடித்துணர்வேம்பினிலைதின்று
குலவுமனையுட்புகுந்தாள்கோதிறருப்பணமாற்றிப்
பலருமவரிடம்புகுந்தார்பதின்மூன்றுநாளளவு
மிலகுகிரியைகள்பலவுமியற்றிமுடிந்தனபின்பு. (கஅ)

அமைச்சர்புரோகிதர்கணிதரந்தணர்கணுகரிகர்
தமைச்செறிவித்துயர்சுலபைசாற்றுவாளினிநீவிர்
சுமைச்சயிலப்புவிதாங்குந்தோளனைத்தேர்ந்திடுமின்க
ணமைச்செறுநர்நலியாதவாறென்றுநவிற்றினளால். (ககூ)

தொக்கவர்களனைவோருஞ்சூழ்ந்திருக்குமமையத்தின்
முக்கலர்வந்துரைசெய்வார்முழங்குமதமால்களிற்றை
யிக்கணமேயலங்கரித்திட்டிலகுமரதனத்திழைத்த
செக்கமலமலர்மாலைதிண்கரத்திற்கொளக்கொடுத்து. (உ0)

தளைவிடுத்துவிடுமின்கள்சார்ந்தெவனையதுவெடுத்துத்
திளைமகிழ்வின்வருமந்தச்செம்மலையேமரபினெடு
வளைகடன்மண்ணுலகளிக்குமன்னவனுக்குகவென்று
களைகண்மொழிந்தனர்போந்தாரெல்லோருங்களித்தனரால். (உக)

ககனமெனும்பெயருடையகளிற்றரசையலங்கரிப்பித்
திகலயில்வேற்றன்கணவனினிதுமருமத்தணிந்த
புகலிலரசினுக்குரியபொன்மலர்த்தாமரைத்தொடையன்
மகிழவிதன்கைக்கொடுத்தாண்மன்னனைக்கொள்கெனச்சுலபை. (உஉ)

இந்நகரினிதாளுமியல்புடையனுமாறுஞ்
சிந்தைதனக்கிசைந்தவொருசெம்மலைக்கொண்டுறுகவெனத்
தந்தமொழியுட்கொண்டுதறுகண்மதமால்வேழஞ்
சுந்தரவெற்பொன்றெழுந்துதுனைவதுபோனடந்தன்றே. (உங)

அன்றுமலரோன்விடுத்தவாழியின்பின்முனிவரர்க
ளொன்றுதவம்புரிதானமுரிமைகொளச்சென்றதுபோ
னன்றமைச்சர்முதலானோர்நடக்குமதவேழம்பின்
றுன்றினர்சென்றனர்தமக்குத்தோன்றலைக்கொள்வான்விழைந்தே. (உச)

கற்புடையமடமாதர்கணவனையேயல்லாது
பொற்புடையாரிரந்துறினும்புல்லாதவாறேபோற்
பற்பலருந்தொழினீங்கிப்பரிவினெடுமெதிர்போதச்
சற்பமெனச்சீறியவர்தமைவிலக்கிற்றுயர்வேழம். (உரு)

வேறு.

வரைசெய்மணித்தோண்மன்னவனைவல்லேதருவிப்புணர்தருமிப்
புரைசெய்வயவெங்களிறென்றுபொங்குமகிழ்ச்சிதலைசிறப்பத்
திரைசெய்கடல்போற்றிரண்டெவருந்தேம்பெய்புனலாற்றுகளவித்து
விரைசெய்மலர்த்தோரணமாதிவீதிதோறுமலங்கரித்தார். (உசு)

உருவிற்சிறந்தபொலங்கோயிலோங்குமணிவாய்தலினீங்கித்
தெருவினடந்துநகர்கடந்துசென்றவேழம்வனம்புகுந்து
பொருவிறவத்துமுக்கலனார்பொருந்தாச்சிரமக்கணித்தாக
மருவியிருந்ததக்கனுக்குமணிமாலிகையைத்தரித்ததே. (உஎ)

மூவர்பெருமானெனையாண்டமுக்கட்பெருமானரியாதி
தேவர்பெருமானொருகோட்டுச்செல்வப்பெருமானடியார்கட்
கியாவையரியவிருந்தாங்கேயிருந்துதக்கனரசுரிமை
மேவுமெனின்வேல்கரத்தேந்தும்வீமமேலும்விளம்புதுங்கேள். (உஅ)

வேறு.

பஞ்சதுந்துபிமுழங்கினபண்ணவர்பசுந்தேன்
விஞ்சுபொன்மலர்பொழிந்தனர்வேழம்பின்னடுத்தோர்
நெஞ்சின்மல்கியபரிவொடீங்கியோகையராய்
மஞ்சனுக்கணியாதிகள்வழங்கினர்மரபால். (உகூ)

வாசமென்மலர்வத்திரமணியணிந்தன்பி
னாசியந்தணரறைந்தனரொருபுடையமர்ந்தார்
கூசமைச்சர்களாதியோர்குரைகழல்வணங்கித்
தேசின்மன்னவனேவலாற்றிருத்தகவிருந்தார். (ஙo)

தக்கனக்கணந்தந்திமாமுகனடிதாழ்ந்து
தொக்கவந்தணர்க்காடகமாதிகவேவி
மிக்கவன்னையைவியத்தகுசிவிகையிலேற்றிக்
கைக்களிற்றின்மேலிவர்ந்தனன்காலைவெங்கதிர்போல். (ஙக)

கயனவாம்பரியமைச்சர்களிவர்ந்தனர்கடவக்
குவளைவாள்விழிமாதரார்குழுவெதிர்நடிப்ப
வுவவுவாரிதிமுழக்கெனவொலிமுரசார்ப்ப
வவனிகாவலனனவனடுகளிறுகைத்தான். (ஙஉ)

மலையின்மேலெழுமதியெனவார்மதயானைத்
தலையின்மேலெழுவெண்குடைநீழலிற்றங்கு
முலைவிலாவரத்தொருவனூர்புகுந்துலாப்போந்து
கலைவலாரொடுக்கதிர்மணிக்கோயிலுட்புகுந்தான். (ஙங)

பேரத்தாணியிற்பிறழெயிற்றரியணைபொலிய
வாரத்தாழ்வடமகனுரந்துயல்வரவிருந்து
வாரத்தாலுறுமந்திரத்தலைவரைநோக்கி
யீரத்தீஞ்சொலினிசைத்தனனிரும்புகழ்த்தக்கன். (ஙச)

என்னையாளுடைமுக்கலமுனிவனுங்கிருந்தா
னன்னமாதவன்றனைப்பலவரிசையினழைத்தென்
முன்னரேவிடுமின்களென்றுரைத்தனன்முடிசாய்த்
துன்னுசூழ்ச்சியரன்னதேயுஞற்றினர்கடிதின். (ஙரு)

மண்ணிருந்தவம்வடிவெடுத்தனையமாதவனும்
விண்ணுரிஞ்சியகூவிரத்தேர்மிசைமேவிப்
பண்ணமைத்தெழுபாடலோடாடல்கள்பயில
நண்ணினன்பெருங்கோயிலினகர்களிசிறப்ப. (ஙசு)

விலகிவில்லுமிழ்பூணினன் விரைந்தெழுந்தெதிர்போந்
தலகிலன்பொடுமற்றவனையாதனத்திருத்திப்
பலவிரும்பொருள்கொண்டுபூசனையுறப்பயிற்றி
யிலகுபூண்டுகில்கனியெதிரிட்டடிபணிந்தான். (௩௭)

முடிகொண்மன்னவர்புடையெலாமொய்ப்பமுன்வைகி
யடிகளோநினதருளினலசினைப்பெற்றேன்
கடவுளர்தொழுங்கணபதியெனக்குநீயல்லாற்
படியில்வேறில்லைபாணியென்சிரத்துவையென்றான். (௩௮)

கனிவினின்னணங்கூறியகாவலன்சிரத்தின்
முனிவனங்கையைவைத்தருண்முகிழ்த்துமூதறிவோய்
துனிவுறும்பகையுனக்கிலைபொருளெலாந்துவன்று
மினிதின்வாழ்தியென்றிசைத்தறத்தியல்பையுமிசைத்தான். (௩௯)

கன்னலஞ்செழுங்காடறுத்தண்ணடையாதி
முன்னர்முக்கலமுனிவனுக்களித்துமூதறிவின்
மன்னுமந்தணர்பெரியவர்மற்றையர்தமக்குந்
துன்னிரும்பொருணிலமிவைசொரிந்தனன்மழைபோல். (௪௦)

வேதனிந்திரன்விண்டுவேமுதலியவிண்ணோர்
மாதர்மென்களமங்கிலியத்தொடுவயங்கச்
சாதனஞ்சொடுதயங்கியகண்டனார்கோயி
லாதிசைவர்க்குமளித்தனன்பூசையாதிகளே. (௪௧)

சேனைகாவலர்திருந்தியவமைச்சர்களிவர்க்கு
யானைவாம்பரியிருநிலமாதிகளிசைத்துத்
தேனைமாரியினிதழியான்றிருப்பணிபலவு
மூனையேந்தியவேலினனுஞற்றிடப்பணித்தான். (௪௨)

பொளிந்துதிண்சிலைபொற்புறுகோயிலொன்றாக்கி
யளிந்தவன்பினற்கணேசரையாங்குறவிருத்தித்
தெளிந்தமுக்கலன்செப்பியவிதிப்படிதீமை
விளிந்துவெந்திடநித்தலும்பூசனைவிளைத்தான். (௪௩)

பெறுதுபெற்றதாயாகியசுலபைதன்பதமு
மறுதகாதல்செய்கமலைதன்பதமும்வைகலுந்தாழ்ந்
துறுரிலாவகையொருகுடைநீழலினுலக
மறுதநீதியினளித்தனனமரர்காவலன்போல். (௪௪)

தோயநீடியவாவிகள்சூழ்கருநாட
தேயமாண்டுவாழ்வல்லவன்சிறுவனேய்தீர்ந்து
மேயசீர்த்தியின்விதர்ப்பநாடாள்வதுவினவிப்
பாயசீர்ப்பரிசனத்தொடும்படர்ந்துவந்தடுத்தான். (௪௫)

வாரமாயனைவோர்களுமளவளாய்வாழ்நாள்
வீரசேனனென்றியற்பெயர்மேவுமன்னவற்குப்
பேரவாவியபுகர்முகக்களிறெனும்பெருமான்
காரளாவியவிரவுறுகனவிலீதுரைக்கும். (௪௬)

பெண்மைமுற்றியநின்மகள்பெருகியதவத்தால்
வண்மைமுற்றியதக்கனன்மணந்திடப்படுவ
டிண்மைமுற்றியமன்னவதெளிகெனச்செப்ப
வுண்மைமுற்றியவவனுமவ்வாறுதவினனால். (௪௭)

வேறு.

பேமவடிவேற்றக்கனுக்குப்பிரகற்பானுவவன்றனக்குத்
தோமில்கட்கரதனவற்குச்சுபாலனவர்க்குக்கெதாகரனே
யாமவ்விறைக்குவபுத்திரத்தனவற்கானுன்சித்திரசேனன்
வீமவவற்குநீபிறந்தாய்விளங்குங்கணேசர்திருவருளால். (சஅ)

வடிவேற்றக்கன்முதலாகமன்னுநுந்தையீறாகக்
கடியாதன்பினனைவோருங்கணேசர்மலர்த்தாள்பூசித்தா
ரொடியாவிழைவினினிநீயுமுனுற்றபூசையுன்கருத்து
முடியாநிற்குமெனவிளம்பிமுனிவனிதுவும்புரிந்திட்டான். (சக)

தக்கனரசாட்சிபெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கரு௧ச.

## உரு - வது வீமனுபதேசம்பெற்றபடலம்.

விச்சுவாமித்திரன்வீமனைநோக்கிநின்
றிச்சையானுரைசெய்வானெரிந்திலங்கெஃகினாய்
மச்சமானுனுமலரயன்காண்கிலா
வச்சனுண்மலரடிக்கன்புசெய்மரபுகேள். (க)

எம்பிரான்கருணைகூரேகவக்கரமனுப்
பம்புபாவங்களைப்பாற்றுவதெண்ணிய
திம்பரேநல்குவதீகுதுமெறிதிரை
வம்புநீராடிபுவருகவிங்கென்றனன். (உ)

நாமவேன்மன்னவனனஞ்செய்தண்மினான்
காமவேளெரியெழக்கண்டவன்சேவடிக்
கேமமாரன்புசெய்யிருடியேகாக்கர
மோமமாதிகள்புரிந்தொண்செவியோதினான். (ங)

எண்ணிமுறைமையுமியம்பிநும்பதிபுகுந்
தண்ணலந்தக்கன்முன்னாக்கியவாலய
நண்ணிவைகுபுதினநன்மனுக்கணியென
வுண்ணெகிழ்கருணையினோதினன்முனிவனே. (ச)

வீமனும்விச்சுவாமித்திரன்விடைகொடு
காமருபூண்முலைக்காதலியுடனவன்
வாமறிமான்பயில்வனங்கடந்தெய்தினான்
ருமரையோடைசூழ்தன்பதியெல்லையின். (ரு)

மந்திரத்தலைவர்கள்வரவுகேட்டெதிர்கொடு
தந்திமால்வேழமுந்தமனியச்சிவிகையு
முந்துறவுய்த்தனர்முடியடிநீட்டினார்
தந்தைதாய்காணிளந்தனையர்போலாயினார். (சு)

இருவருமூர்தியூர்ந்தியமுதல்வரிசையோ
டொருகெழுநகரினுளோங்குதங்கோயிலை
மருவிவண்பொருள்பலமறையவர்க்குதவினா
ரருளினாற்பலரொடுமளவளாய்வைகினார். (எ)

பண்டுபோலமைச்சரைப்பார்புரியப்பணித்
தொண்டிறற்றக்கன்முனாற்றியவாலயம்
விண்டவர்க்கேறனான்மேவியேகாக்கரந்
துண்டவெண்கோட்டனைச்சூழ்ந்துளத்தெண்ணினான். (அ)

வேறு.

விநாயகர்தமையும்பூசைவிதியுளியியற்றியெல்லாம்
விநாயகருருவமென்றேமெய்யுறக்கண்டோவாமை
விநாயகர்மனுவையெண்ணிவீமனேற்றிருக்குநாளில்
விநாயகர்கருணைகூர்ந்துவிழியெதிர்தோன்றிநின்றார். (௯)

வணங்கலர்க்கணங்குசெய்யும்வயப்படைவீமன்றாழ்ந்து
கணங்களுக்கதிபனான கணேசநின்பாதத்தார்வ
மிணங்குதல்வேண்டுநல்லவெச்சமொன்றெய்தல்வேண்டு
முணங்குதலில்லாமுத்தியுதவுதல்வேண்டுமென்றான். (௧0)

பூரணரவனைநோக்கிப்பொருவினம்பாதத்தன்பு
மேரணிகனகமேனியெச்சமுநினக்குத்தந்தாஞ்
சீரணிமுத்திபின்னர்ச்சேர்த்துமில்லிற்செல்லென்
றாரணமுரைத்தவாயாலறைந்தனர்மறைந்துபோந்தார். (௧௧)

விற்றழும்பிலங்குமங்கைவீமனில்லகத்திற்சென்று
செற்றவர்புரமூன்றட்டதேவனைக்கணேசரோடு
மற்றுமில்பூசையாற்றியந்தணர்க்காடையாதி
முற்றுறக்கொடுத்துவந்தான்முகிற்குழாம்விளர்ப்பநாணி. (௧௨)

வேறு.

யாருநேர்வரியானருளெய்தலாற்
சாருகாசினிதன்வயினேமமே
யோருமோருருக்கொண்டுதித்தாலெனப்
பாருமேத்தவோர்பாலன்வந்தானரோ. (௧௩)

திருக்கிலாதவன்செய்வனசெய்துபின்
றருக்கிலாரணர்தம்மைவிளைப்பெய
ருருக்குமாங்கத்தொளிர்தருமைந்தனுக்
குருக்குமாங்கதனென்றுரைத்தானரோ. (௧௪)

பிள்ளைமைப்பருவம்பெயர்காலையின்
கள்ளவைம்பொறிகாற்றுங்கபிலர்பாற்
றெள்ளுமைந்தனைச்சேரவிடுத்தன
னள்ளிலைப்படையங்கையின்வீமனே. (௧௫)

புகலுமாதவன்பொன்னடிப்பத்தியாற்
சகலவித்தையுந்தாங்கியப்புத்திர
னுகலிலாதவுவப்பருடன்தைபா
லகலிரும்புவியாட்சியுந்தாங்கினான். (௧௬)

வீமன்பின்புவிநாயகன்மந்திர
மேமமல்கவியம்பினனெண்ணுபு
காமனன்னவக்காளைபிதாவினுஞ்
சேமவன்புசெலுத்தினன்றேவன்பால். (௧௭)

இன்னவாறிவனேரம்பனன்புசெய்
தொன்னலாரையுருட்டித்திசைதொறுந்
தன்னதாணைச்சகடமுருட்டினான்
பொன்னும்வாணியும்பூவுங்களிக்கவே. (௧௮)

வீமனுபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௪௧௨.



# உச - வது உருக்குமாங்கதன்சாபம்பெற்றபடலம்.



அருக்கன்வேறுமண்ணிருந்தெனவவிரொளியாதனத்தினிலேறி
யுருக்குமாங்கதனுலகுயிர்க்குளத்திருளுறுவகைமுறைசெய்தங்
கிருக்குநாளையின்மிருகங்கள்வனத்திடையீண்டிவண்பயிராதி
முருக்குகின்றனவெனச்சிலரடுத்தெதிர்முடிபணிந்துரைசெய்தார். (௧)

எட்டைதீர்மனத்துருக்குமாங்கதனவரியம்பியமொழிகேளா
வேட்டையாடுதுமெனவெழுந்திருந்தனன்வெய்யபோர்ப்படைத்தானை
கேட்டுமேவினவலைஞர்களீண்டினர்கிளர்பரிசனத்தோடுங்
காட்டைமேயினன்கரியரிகுயவரிகரடியாதிகள்கொன்றான். (௨)

கைவளர்ந்திடும்வேட்டையிற்கதித்தெழுங்கருத்தொடுங்கலைசெந்நா
யெய்வளர்ந்திடுமிடம்பலதுரீஇத்துரீஇயெதிர்படுமான்கொன்று
மொய்வளர்ந்திடுமுழையருந்தணப்புறமுன்னுவான்றளர்வெய்தி
மெய்வளர்ந்திடுகவியெனுமாதவன்மேவுகானகஞ்சேர்ந்தான். (௩)

விழியெதிர்ப்படுமாச்சிரமந்தனையிகுந்தெழுநீர்வேட்கை
யழிவுசெய்தலினடுத்தருந்தவன்புனலாடுவான்செலவாங்கே
கழிமகிழ்ச்சியிற்றனியிருந்திட்டவக்கவிமுனிமனையாளைப்
பழியையஞ்சுவானன்னைநீர்தருகெனப்பணிவொடுமிரந்தானால். (௪)

புகுந்தமன்னவன்றிருவுருவெழிலினைப்பொள்ளெனவெதிர்நோக்கி
முகுந்தையென்பவண்முரிசிலைக்காமவேண்மொய்கணைநிறைபோழ
மிகுந்தநீர்நசையான்மிகவாடியமெலிவையுமுணராதே
நெகுந்தனுள்ளமுங்காதலுந்தோன்றமுனின்றிதுமொழிகுற்றாள். (௫)

வேறு.

காவலநின்னைப்போலுங்காமருவடிவினானைத்
தேவர்கள்குழாத்தினுள்ளுஞ்சிறியனேன்கண்டதில்லை
மேவினவிலக்கணங்கண்முழுதுநின்மெய்யிலென்றாற்
பாவையர்யாவரேநின்படிவங்கண்டுள்ளஞ்சோரார். (௬)

பேரிகைமுழக்கறாதபெருங்கடைவாய்தன்மன்னா
சாரிகைமொழியினல்லார்தங்களுக்கிளமைமைந்தர்
காரிகைகண்டாலன்னோர்கலவியிற்றிளைப்பினல்லால்
வேரிகைசெய்தாலன்னமிகுமயக்கொழிவதின்றே. (௭)

வதையவல்விடமுன்கான்றவாருதிமீட்டுமுய்யச்
சுதையமிழ்துமிழ்ந்ததேபோற்றோன்றனின்வனப்பிற்றோன்றித்
துதைதருகாமத்தீயுன்றோளிலென்முலைகள்பாய்ந்து
புதைதருகலப்பினல்லாற்போக்கிலையென்றுகூறி. (௮)

கலைநலநெகிழ்ந்துசோரக்கருங்குழல்குலைந்துசாய
முலைவளர்முத்தநீறமுன்கையிற்றொடிமண்வீழ
வலைவிழிபருகுமாபோலவனுருவனப்பின்மூழ்க
விலையினியுய்தியென்னுமியல்பொடுமுகுந்தைநின்றாள். (௯)

திருமகள்பெண்மைநோக்கித்தெருமரவனப்பிற்சான்ற
வுருவினள்காமச்செவ்வியூற்றெழவலிந்துதானே
மருவுதன்முயன்றபோதுமன்னவன்கலங்கானாகி
முருகுகொப்பளிக்குங்கோதைமுகுந்தையைநோக்கிச்சொல்வான். ()

அந்தணர்குலத்துளோர்க்குமருந்தவன்பாலநீயும்
வெந்திறல்வேந்தன்மன்யான்மேதினிமுறையிற்காப்பேன்
சுந்தரியதுவேயன்றிச்சுமுகர்தாளிறைஞ்சுமன்பன்
சிந்தைவேற்றணங்கனார்பாற்றெருமந்துஞ்செல்லாதன்றே. (கக)

அரைக்கணத்தளவையின்பாமவரவர்துணையிற்கூடின்
விரைக்குழன்முகுந்தாய்வேறுதுணையொடுமேவப்பெற்றாற்
றரைக்கண்மற்றதுவுமின்றாமச்சமேசாருநீரா
லுரைக்கடங்காதவள்ளலுறுதுயரொழிவின்றாமே. (கஉ)

வேறு.

அன்றுகாண்குதுநரகெனிலன்னைகேள்பிழைத்த
வின்றுதீமொழியெங்கணுநிமிருமேதிலர்மு
னன்றுசேர்பெருமிதமுமுன்னுயகன்றனக்கும்
பொன்றுமாதலிற்போற்றுநின்மனத்தினிலென்றான். (கங)

கற்புனைதிணிதோண்மன்னன்கலங்குதல்சிறிதுமின்றிக்
கற்புரையுளத்தனுகிக்கடிந்துரைத்திடுதலோடுங்
கற்பினைநீங்கிநின்றகவிமனையிதுகேளென்று
கற்பகமனையான்முன்கைக்கதுமெனப்பற்றிச்சொல்வாள். (கச)

முள்ளரைக்கமலத்தண்ணன்முதலுகமிரண்டன்மாட்டுந்
துள்ளுமீன்விழியினார்க்குச்சுதந்திரம்வைத்தானற்றால்
வள்ளலேபிறனிற்பட்டமாதரேயானுந்தாமே
நள்ளுறநினைந்துகூடினவையுமின்றழிவுமின்றே. (கரு)

மைந்தர்கள்வலிதிற்பற்றின்மறுமையுமின்றுமாறா
வெந்துயர்நரகுமுண்டுவேந்தயான்விழைந்தேனற்றாற்
சிந்தையிற்கவலைவேண்டாசேர்ந்திடிற்றவங்கள்கல்வி
யுந்திரும்புகழ்களாதியொழியுமென்றெண்ணிற்கேளாய். (கசு)

சேர்தராதொழிந்தபோதுந்தெவ்வடுமன்னநின்னைப்
பார்தனினீறுசெய்வேனன்றெனிற்படிவம்வேறா
யார்தருதேயநீங்கியரியகானடுத்துக்கொட்ப
வூர்தருஞ்சாபஞ்செய்வேனுணர்மதியென்றுபின்னர். (கஎ)

வெள்ளமுமணையினிற்கும்வெந்தழலரவமாதி
பொள்ளெனத்தடையினிற்கும்புலனிலார்க்கெழுந்தகாமம்
பள்ளமென்மடையில்வெள்ளம்பாய்வதேபோலுமந்தக்
கள்ளியக்காளைமார்பங்கதுமெனத்தழுவினாளே. (கஅ)

கொல்லியவொருபேய்வந்துகொம்மெனத்தழுவலோடு
மெல்லியர்நெஞ்சுபோலவேந்தனங்கச்சமெய்தி
நல்லிழைமாதுசெய்திநன்றுநன்றென்னநக்குற்
றொல்லெனத்திணிந்ததோளாலுகைத்துமண்ணிலத்தில்வீழ்த்தான். (ககூ)

கால்பொருகொழுகொம்பற்றகாமருகொடிபோல்வீழ்ந்த
வேல்பொருவிழியினாட்குவெற்றிவேற்குமரன்கூறுஞ்
சால்பொருவியநின்செய்திசற்றுமுன்னறிந்தேனாயிற்
பால்பொருமொழியாயீங்குப்படர்தரேன்படர்தரேனே. (உ0)

மாதவமுனிவனில்லின்மாதராளென்றுநின்பாற்
சீதளநறுநீர்வேண்டிச்சேர்ந்திடுமெனக்கிஞ்ஞான்று
பாதகநிரையத்தாழும்பரிசினைவிளைத்தாய்வாளான்
மோதுவலஞ்சினேனன்முனிவனையென்றுமீண்டான். (உக)

மீண்டவன்றன்னைநோக்கிவெய்தெனமுகுந்தைசீறித்
தீண்டுதற்கரியதாமென்றிருத்தகுகற்புஞ்சிந்த
வீண்டுபேரழகிற்போந்தாயின்பழுங்கொடுத்தாயில்லை
மாண்டநின்னுடலிற்குட்டமருவுகவல்லையென்றாள். (உஉ)

வேட்டதுபெருதுசாலவெதும்பினளாதலாலே
கோட்டமின்றாகித்தீர்வுகூறுதல்செய்யாளன்றி
யோட்டைநெஞ்சுடையமாதினுண்முகம்பாரேனென்று
நீட்டியபுகழான்வாளாசென்றனன்றிரும்பிப்பாரான். (உங)

பெண்ணிருங்கொலையேபோலப்பெண்ணிடுஞ்சாபந்தானு
மண்ணிடைக்கொடிதுபோலுமாதவளிடுசாபத்தால்
வெண்ணிறக்குட்டமெய்யில்விரவியதரசனுக்கிக்
கண்ணியகருத்துண்மாழ்கிக்கணேசனைநினைத்துச்சொல்வான். (உச)

அறிந்துநின்றொழும்பிற்சற்றுமடியனேன்பிழைத்ததில்லை
சிறந்தவன்புடையார்மாட்டுன்றிருவருடளர்வதில்லை
சிறந்தநின்னருளுண்டாயிற்றீதெனையடர்வதில்லை
யறிந்திடாப்பிழையுண்டாயினதுபொறுத்தருளல்வேண்டும். (உரு)

சிட்டரைக்காப்பாயென்றுந்துட்டரைத்தெறுப்பாயென்று
முட்டறுவேதமெல்லாமொழிவதுமெய்யேயானுற்
பெட்டவம்முகுந்தைமாழ்கப்பிரிந்ததுந்தருமமாக
விட்டவன்சாபத்தாலேயெனக்குநோயடுப்பதாமே. (உசா)

தூயவிஞ்சையருநாணுஞ்சுடரொளிவனப்புநீங்கித்
தாயருமிகழக்குட்டஞ்சார்ந்தவென்னுடலையிந்தக்
காயழற்கடத்தின்மாய்ப்பதல்லதுகைக்கொண்டேற்
போயரசாட்சிசெய்யேன்புனிதனேயென்றுரைந்தான். (உஎ)

காவலனிவ்வாறெண்ணிக்காட்டிடைச்செல்வானங்கோர்
பாவியவாலைக்கண்டுபடர்ந்தத்னிழல்வைகுற்றான்
மேவியவேட்டைக்கானின்வேந்தனைத்தேடிக்காணு
தோவியசிந்தையோடுமுடன்வந்தார்நகர்க்குச்சென்றார். (உஅ)

உருக்குமாங்கதன்சாபம்பெற்றபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-கசசo.



## உரு - வது நாரதருருக்குமாங்கதனுக்குச் சாபத்தீர்வுகூறியபடலம்.



குட்டவேந்தனைநோக்கியசோதிஞல்
வட்டவானில்வழுக்கிவிழுந்தென
வட்டுபேரொளியாதவனீடுதேர்
பட்டதன்றுபனிக்குடவேலையின். (க)

நாட்டினுள்ளவர்காணுறினுணுவான்
வாட்டுவேற்படைமன்னவனென்றொரு
கோட்டுமாமுகன்கூட்டியமாயையி
னீட்டமென்னவிருள்பரந்திட்டதே. (உ)

இரவலாளரிடத்திலிராவகைக்
கரவுசெய்யுமிக்காளையயின்றுநாம்

விரவுவாமெனவீழ்பசிதாகமும்
பரவுசோகமும்பற்றவிருந்தனன். (ங)

உண்டியின்றியுறங்குதலின்றிமுன்
கொண்டிடாத்துயர்கொண்டிடுமென்னவன்
மண்டுமின்னலைமாற்றவந்தானெனத்
தெண்டிரைக்கடற்செங்கதிர்பூத்ததே. (ச)

காலமுற்றுங்கடன்முடித்துள்ளமென்
ஞாலயத்தினருட்கணநாதனை
மாலையன்பின்மதித்துவழிபடும்
வேலைவிண்ணிடைநாரதன்மேயினான். (ரு)

அருக்கன்வேறகன்வானியக்குற்றெனப்
பொருக்கெனச்செல்புத்தேளிர்முனிவனை
யுருக்குமாங்கதனெய்யெனநோக்கினா
னுருக்கமோடுமெங்கோலிடுவானரோ. (சு)

வேறு.

அடிகளேயோலவோலமமரர்கண்முனிவாவோலம்
வடியிசையமுதந்தேக்குமகதியாழ்த்தலைவவோல
நெடியவன்முதலோர்துன்பநீக்குவாயோலவோலம்
படிமிசையடியேன்றுன்பம்பற்றுவாயோலவோலம். (எ)

அருட்பெருங்கடலேயுன்றனடைக்கலநாயேன்கண்டாய்
மருட்கடல்கடந்தோய்வீமன்மகனடியேனென்னும
முருக்குமாங்கதனீங்கெய்தியுன்னருள்வழங்குகென்னா
வெருக்கொளுமம்மர்நீங்கிவிளித்தெதிர்தொழுதுநின்றான். (அ)

கனைத்ததன்கன்றைநோக்கிக்கரைந்துசெல்புனிற்றாப்போல
வனைத்தையுமுணர்ந்தமேலோனவன்விளிகேளாமுன்ன
நினைத்துறவினையினீங்கிஞரேலெனவெதிரேபோந்தான்
றனைச்சரண்வணங்கிப்போற்றித்தராபதிசாற்றலுற்றான். (கூ)

வேறு.

வேட்டையின்வந்தநான்மிகுந்ததாகநோய்
வாட்டலின்வனத்திடைவனத்தைநாடியே
கோட்டமில்சிந்தையிற்கொட்புற்றெய்தினேன்
மூட்டியவினையினான்முகுந்தைவாழிடம். (க0)

உடலழிதாகநோய்க்குதகம்வேண்டினேன்
கடல்விழியுயிரழிகாமதாகநோய்
படர்தரவென்னிடைப்பற்றிலாமைகண்
டடருமிந்நோய்சபித்தடைவித்தாளரோ. (கக)

பயில்பதியினிச்செலப்பற்றுவைத்திலே
னுயிரினைவிடுப்பதேயுளந்துணிந்துளேன்
செயிரறுதவம்பலகாலஞ்செய்தெனை
யயர்வறத்தந்தவர்க்காகத்தாங்கினேன். (கஉ)

வழிமதுவெனவிசைவடிக்கும்வீணையோய்
செழிமலர்சேவடிசேர்த்திநாளுநான்
வழிபடுகணபதியருளின்வண்மையால்
விழியெதிர்காணுமாவிசும்பிற்றோற்றினை. (கங)

நாரதமுனிவநின்னளினச்சேவடி
சாரநான்பெறுதலிற்றள்ளருங்குட்டநோய்
தீரவேபெற்றுளேன்செம்மல்வீமனிவ்
வாரமேமலட்டினைமாற்றும்வாரமே. (கச)

இனையனபலவுமங்கியம்பியெம்பிரான்
வினையிதுதீருமாவிளம்புகென்றனன்
முனைவளர்வேளனுன்முகத்தைநோக்குபு
தனைநிகர்நாரதன்சாற்றன்மேயினான். (கரு)

வேறு.

குதம்பைநான்றெருத்திற்றுயல்வருங்காதிற்கொற்றவநின்குடைநிழலி
னிதம்பெறுவிதற்பதேயமென்றோங்குமிந்தநாட்டின்றுநான்வருங்காற்
கதம்பமாநகரினதிசயமொன்றுகண்டனனஃதியாதென்னின்
மதம்பொழிகளிநல்யானைமாமுகவன்மந்திரமுள்ளதந்நகரின். (கசு)

மந்திரமதனுளமர்ந்தருள்சிந்தாமணியெனும்பெயர்விநாயகரை
முந்துறவணங்கியவரவர்வேட்டமுனிவிலாவரம்பெறுகின்றார்
கொந்தொளிக்கோயின்முன்புறக்கணேசகுண்டமென்றொருபெருந்தீர்த்த
மந்தரத்தவரும்வியத்தகுபெருமையணிந்திருக்கின்றதாங்கதனில். (கஎ)

அடங்கருங்குட்டநோயினன்முதியனல்லல்சேர்சூத்திரனொருவ
னிடங்கர்களுலவுந்தீம்புனற்றீர்த்தயாத்திரைக்கேகுவானடுத்து
மடங்கருமகிழ்விஞடினனெழுந்தான்வல்வினையொடும்பிணிதீர
விடங்கமெய்யினனாய்விநாயகனுருவுமேவினன்விண்ணுமேக்கறவே. (கஅ)

உமாபதியுயிர்த்தமுன்னவனருளாலொலிபுகழ்க்கணங்கண்முன்னுறுத்த
விமானமேல்கொண்டுவிநாயகருலகமேவினனனையவனதனு
விமாசலமனையதோளினாய்நீயுமெய்திநீராடியேரம்பர்
தமாதுபூசைகளுந்தருமமாதிகளுஞ்சமைமதிதணக்குமிப்பெருநோய். (க௯)

முரிதிரைசுருட்டும்விரிகடற்பரப்பின்மொய்த்துறுமருந்தெலாஞ்செயினுங்
கரிபரியிரதமாதிகடானங்காதலித்தியல்புளிசெயினுந்
தரியலர்க்கிடியேறனையவேற்கரத்தாய்தாங்குநின்சாபநோய்கதம்ப
புரிவளர்சிந்தாமணிவிநாயகராலல்லதுபொன்றுறாதென்றான். (உ0)

நாரதநருக்குமாங்கதனுக்குச்சாபத்தீர்வுகூறியபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கசகூ0.



## உசு - வது இந்திரன்சாபம்பெற்றபடலம்.



மாடகமுறுக்கியிசைபாடுமுனிநீடுபிணிமாற்றுமுறைமை
நாடியுரைசெய்தலுமகிழ்ந்துகழன்மன்னவனயந்துபணியாக்
கூடியநல்லன்பினிதுகூறுவனருந்தவகதம்பநகரிற்
பீடுறவிருந்தபெருமானையெவர்பூசனைகள்பேணினர்களே. (க)

வீறுமழைவெய்யசுடர்வீசுவளியென்றிவைதமக்குதவுகைம்
மாறுமுளதோபுவியின்மன்னுயிர்களுய்யவருமாதவநினக்
கேறிடுகைமாறுமடியேன்புரிவதென்னுளதிரங்கியருள்க
சீறியருளேலெனவிரந்திடமகிழ்ந்துமுனிசெப்பலுறுவான். (உ)

முந்தையொருகாலமுடிவானவரிறைஞ்சமுகிலூர்திசுதன்மைச்
சந்தமணியாதனமிருந்தரசுசெய்தொளிதழைக்குமளவி

லந்திலுறுமென்னையெதிர்வந்தடிபணிந்துதொழுதாதனமளித்
தெந்தவுலகுந்திரியுமெந்தையுளதேலதிசயம்புகலெனா. (ரு)

இந்திரனைநோக்கியிதுகூறுதலிசைந்தனனிலங்குகுலிச
வெந்திறலினுய்வளருமேதினியடுத்தனனம்மேதினியிடை
யந்தணர்களேத்தரியமாதவமியற்றியருள்சேர்கவுதமன்
மந்திரவழற்கடவுண்முன்வதுவைசெய்தமடமாதகலிகை. (சு)

அன்னவடனக்கழகினுலகினெப்பவர்கள்யாவருமிலை
பொன்னுடையினன்மருமமாதுகலைமாதுசசிபொற்பினிரதி
நன்னரநுசூயைதிதிநாடியதிலோத்தமைசலங்கொளதிதி
யின்னவரும்வெங்கிடுதலன்றியவண்முன்னரெதிர்வார்களிலரே. (எ)

இரும்பிரசதங்கநகமென்னுமதின்மூன்றுமெரிமூளமுறுவ
லரும்பியபிரான்சரணமல்லதுமதித்தலறியாவென்மனமும்
விரும்பியதுகண்டவுடனெண்ணிலவடன்னைவிரவாதநகரம்
பெரும்புலவராற்புகழ்வதன்றெனமொழிந்துபெயர்குற்றொருவினேன். ()

வேறு.

சுந்தரவகலிகைதொகுமிசைநுவல
விந்திரனிணர்விடுமெரிபடுமெழுகிற்
சிந்தையுளுருகினன்செறிதுயரகலக்
கந்தெனமருவினன்கவுதமனுருவம். (எ)

பொய்கழிகவுதமர்பூம்புனலாட
வைகறைநீங்கினர்மற்றதுபோழ்தின்
மெய்கழிமனமொடுமேவியமகவா
னெய்கனிகூந்தன்முனின்றிதுமொழிவான். (அ)

சுடர்விடுமிளநகைத்துவரிதழ்க்கனிவாய்க்
குடநிகர்வனமுலைக்கொடிபுரையிடையின்
மடவரல்கலவியின்மருவுதற்கமளி
யிடுகெடிதெனவவளெதிரிதுமொழிவாள். (கூ)

வேறு.

ஒருநாளுமொழுகாதவொழுக்கமருந்தவவென்னேயொழுகப்புக்காய்
முருகாருமலர்ப்பொய்கைப்புனலாடிச்சந்திசெபமுறையினாற்றிப்
பெருகார்வத்தொடுங்கடவுட்பூசைபுரிகாலத்துப்பிழையேசாலத்
தருகாமப்பொருள்விழைதறக்கதேநுமக்கென்னச்சாற்றினாளால். (கO)

பட்டிமையிற்கவுதமனார்வடிவெடுத்துப்படர்ந்தபெரும்பாவிசெய்கை
கட்டழகியறியாதுதன்கணவனெனவிதனைக்கரைந்தவெல்லைச்
சட்டமகவான்மொழிவான்றையலாய்நீராடச்சார்ந்தேனங்கு
வட்டமுலையொருமாதுகிலின்றிநீராடும்வனப்புக்கண்டேன். (கக)

உள்ளமழிந்தெழுந்தபெருங்காமத்தாலுஞற்றலுறுங்கருமந்தன்னி
லெள்ளளவுமனஞ்செல்லவில்லையினியுயிர்வாழ்வுமெய்தாதாகுங்
கள்ளொழுகுமலர்க்கோதாய்கலவிதரல்வேண்டுமெதுகடிந்தாயாகிற்
பொள்ளெனநின்னுயிர்மாழ்கச்சபிப்பனென்றான்கேட்டபூவையன்னாள். ()

கைப்பிடித்துக்கனல்வளர்ந்தகாதன்மிகுங்கணவர்மனங்களிக்குமாக்க
மெய்ப்படியோவப்படியேயிசைந்திடுதலேமழையர்க்காமியல்பையெண்ணி
யப்படியேயாகவெனவிசைந்தமளிதனையடுத்தாளமரர்கோமான்
மைப்படிகின்விழிக்கடையாலுய்ந்தேனென்றுடனுவந்துமருங்குசார்ந்தான்.

வேறு.

செம்பொன்மணிக்கட்டிலினிதிருந்துசிறுபுன்முறுவன்முகத்தரும்பப்
பம்புமணிமேகலைகதிர்ப்பப்பவளக்கனிவாயிதழ்துடிப்ப
வம்புகிழியத்திதலைமுலைவளர்ந்துவிம்மவிடைநுடங்கக்
கொம்பின்மருங்குநின்றாளைக்குடங்கைபற்றியிருத்தினான். (௧௪)

அங்கைத்தலத்தான்முலைவருடியாடைநெகிழ்த்துப்புறம்போக்கிப்
பொங்குநிதம்பத்தடம்வருடிப்புகலுங்கரலீலையும்புரிந்து
தொங்கலொடும்வார்குழல்சோரச்சுடர்வாணுதலுநனிநீவித்
திங்கண்முகத்தின்முத்தாடித்திகழ்தாடனமும்பலசெய்தான். (௧௫)

கோலத்தொடையாற்றொடைநெருக்கிக்கூன்கையெருத்தமுறச்சாய்த்துச்
சாலக்கனிவாயிதழ்பருகித்தந்தக்குறியுமாங்குறுத்தி
நீலத்தடங்கண்முதலமுதநிலவுமிடங்கள்பலசுவைத்துச்
சீலக்குறிமூடிகமாதிபலவுந்திகழச்செறித்திட்டான். (௧௬)

கொங்கைஞெமுங்கவிருகரத்தாற்குவவுமணித்தோளுறவிறுக்கிச்
சங்கநெரியச்சிலம்பொலிப்பத்தடங்கண்சிவப்பவிதழ்விளர்ப்பத்
திங்கணுதலின்வியர்வரும்பத்திகழ்புட்குரல்கண்மிடற்றொலிப்ப
மங்கையவளுங்கற்பகஞ்சூழ்வல்லிக்கொடிபோன்முயங்கினாள். (௧௭)

கந்துநிலையேபன்னகமேகாதலரும்புங்குக்குடமே
பிந்தும்வெருகேயிவையாதிபிறங்குகரணமுறவியற்றிச்
சிந்தைகரையவுடல்கரையச்செறியுமுயிர்கள்கலந்தொன்றாய்
முந்தையறியாப்பெரும்போகமுழுகிக்கருத்துமுற்றினான். (௧௮)

கடலிற்பிறவாச்சுவையமிழ்தேகரும்பிற்பிறவாக்கொழும்பாகே
மடன்மென்மலரிற்பிறவாதவாசங்கமழுஞ்செழுந்தேனே
யுடலமிரண்டேயலதெனக்குமுனக்குமுயிரொன்றேயன்றே
யடர்மெய்த்தவத்தாலுனைப்பெற்றேற்காவதினியென்னெனப்புகழ்ந்தான்.

நன்னர்முறுவல்வறிதரும்பநயனஞ்சிறிதேமுகுளிப்ப
மன்னுமமளிமிசையின்பவசமாய்க்கிடந்தமடமாது
மின்னினுடங்கியிடைதளரமெல்லவெழுந்துதுகிலுடுத்திட்
டன்னமலர்நீத்தெனக்கட்டிலகன்றங்கிதனைத்துணிந்துரைத்தாள். (௨௦)

வடிவேமுனிவன்போன்றதிவன்வடிவிற்கமழுமியன்மணமுங்
கடியாவின்பக்கலைத்தொழிலுங்கருதின்வேறேயிவன்கள்ள
முடிவாசவனேயெனத்துணிந்துமுனிபோலடுத்தோய்நீயாரே
நொடிவாய்திறவாவிடிற்சபிப்பேனென்றாள்புருவநுதலேற. (௨௧)

மாதுவினவிக்கேட்டலினான்மற்றும்பெறலாமின்பமெனத்
தீதுவிளைவதறியாதேதிகழ்தன்னுருவமெதிர்தோற்றிப்
போதுசெருகுநறுங்கூந்தற்புணர்பூண்முலையாயான்றுறக்க
மீதுபொலம்பூந்தவிசிருக்கும்வேந்தனெனவின்னதும்புகல்வான். (௨௨)

அன்னப்பெடையேநினதெழில்கேட்டயிராணியைநற்பொன்னுலகுந்
துன்னுங்கலைமாதினைச்செல்வச்சுடர்ப்பூண்மாதையிருமலரு
மன்னும்வெறுத்துநினைத்தாங்கமதியாநின்றமற்றியானு
நன்னர்மனத்தாமரையிருத்திநயந்தாட்செய்யநினையடுத்தேன். (௨௩)

இன்றுபொருதமதவீரனின்னும்பகழிவிடுந்தோறும்
பொன்றுஞ்சியதண்களபமுலைப்பூவாய்நினதுவிழிக்கருணை
மன்றவழங்கியெனைத்தாங்குமனமுமுயிருமொன்றான
பின்றைவேறுநினைவதெல்லாம்பிழையேயன்றோவெனவிரந்தான். ௨௪)

பதியினடுத்தகொடும்பாவிபகரக்கேட்டமாதழன்று
மதியிற்களங்கமெனவென்றுமாறாக்களங்கமென்குலத்துப்
பொதிவித்தெனதுகற்பினையும்பொதிர்த்தாய்முனிவன்றிருவுள்ளங்
கொதிவித்தெனையுங்கெடுத்தாய்நீகோவேயென்னுமமையத்தில். (௨௫)

வேறு.

புலரியின்மனையகல்கவுதமனும்பொழிமதுமலர்நறும்புனலாடிக்
குலவியசெபமுதலியவாற்றிக்கோதறுவிடியலின்மீண்டெய்தி
நிலவியவாய்தலினிடைநின்றுநேரிழையவள்புனல்கொணர்கென்றா
னிலவிதழகலிகைபுனலேந்தியீந்தனள்பண்டுறுமியல்பின்றி. (௨௬)

கண்டதுமுனிவரன்மடமானேகலைநிறைமுழுமதிமுகம்வேறு
கொண்டதெனாதனமிடவில்லைக்கொம்மெனவறல்கொடுவரவில்லை
மண்டிசைவசனமுந்தரவில்லைமற்றுநின்னுடலமுஞ்சுசியில்லை
பண்டையளலையுளதுரையென்றான்பனிமொழிமடவரலிதுசெய்தாள். (௨௭)

உள்ளமொடுடலமுநடுநடுங்கவுயிர்த்துணைநாயகன்கழறாழ்ந்து
வெள்ளுறுநாணினண்முகங்கோட்டிமென்மொழிகுழறிடநிலங்கிளையா
வள்ளனின்வடிவுகொண்டிமையவர்கோன்வந்தெனதணிநலமருவுண்டா
னெள்ளளவடியன்முன்னறிகல்லேனெனவுறுசெயன்முழுதுரைசெய்தாள்.

உருகியமனமொடுமனைநல்லாளுரைசெயுமுன்முனிகதமூள
விருபுருவமுநனிநுதலேறவிணர்படுமெரியெனவிழிசேப்பக்
கருவியுமுடலமுமெனவென்றுங்கலவியநமதுளமறியாயா
வெருவுதலறவொருவனிலின்பமேவினைசிலையுருவாகென்றான். (௨௯)

வனம்வளர்தழலெனவளைசாபம்வருதலுமகலிகைவிழிமல்கு
புனலொடுகணவனையெதிர்நோக்கிப்புணர்பிழையொருவுதல்செயவன்றே
பினமொருவருமுரைசெயுமுன்னம்பெருமநின்செவியுறவறிவித்தே
னுனதருள்கொடுபிழையொடுசாபமொழிவகையுரையெனமுனிசொல்வான்.

வேறு.

இக்குவாகுவின்குலத்திடையிராமனென்றணங்கே
யக்கராசலங்காத்தவனவதரித்திடுமத்
தக்ககாவலன்றாள்படும்பொழுதுவெஞ்சாபத்
துக்கநீங்கிமுன்போலெனைத்தோய்வையென்றொழித்தான். (௩௧)

அங்குவன்சிலையாயினளகலிகையந்த
நங்கைதன்செயல்கேட்டனரிருந்துநானிலத்தி
லங்கிமுன்கரம்பற்றுமாடவர்தமைப்பிழைக்கு
மங்கையர்க்குநன்றுரைத்துமென்னாகும்வண்பயனே. (௩௨)

அடம்புவேய்ந்தவர்க்கன்பனாமருந்தவன்மனையை
யிடும்பைமூழ்குமாசபித்தமையில்லிருந்தறிந்த
கடம்பெய்வாரணன்செய்வினைகருத்தினையாப்பக்
குடம்பையாப்புறுமுலண்டெனப்புகலிடங்காணான். (௩௩)

கடலின்மூழ்கினுங்குன்றிடையொளிப்பினுங்காம
முடல்விராயுயிர்சுடுவதேபோலும்வன்சினமு
மடலையாக்குமேயெனவழிகின்றவனாங்கு
முடலையாக்கையின்பூனையாய்வெளிக்கொளமுயன்றான். (௩௪)

ஆற்றன்மாதவனலமரும்விலாளத்தைப்பார்த்தித்
தோற்றமானவனிந்திரனெனத்துணிந்தியார்நீ
சாற்றுபோகலையென்றலுந்தன்னுருக்காட்டி
யேற்றமாகியவுரமெலாமிழந்துநின்றனனால். (௩௫)

நின்றவாசவன்முகத்தினைநெடுந்தவனோக்கி
யின்றுசாம்பல்செய்திடுகுவனிந்திரனை
யொன்றுவேட்டுவந்தாய்க்குடன்முழுவதும்யோனி
நன்றுமேவுகவெனப்பெருஞ்சாபநாட்டினனால். (௩௬)

அளிந்ததீங்கனிவளிபொரவவனிவீழ்ந்தாங்குத்
தெளிந்தமாதவன்செப்பியசாபமேவுதலும்
விளிந்தவாவியன்விளைவினைநினைதொறுநெஞ்ச
நெளிந்துதாங்குறுத்துயரொடுநீங்கியவலாரி. (௩௭)

கற்றகல்வியுமவுணர்கள்கருந்தலையுருட்டிப்
பெற்றசெல்வமும்விண்ணரசாட்சியும்பிறவு
முற்றகாமத்தினொருதழற்பொறியினாலவிந்தாங்
கற்றவோவெனவழிந்தனன்கரைந்தனனழுதான். (௩௮)

ஒற்றையோனியருடுத்தும்வேற்றுடவருழையே
நிற்றனுணுவரதுபலவாகிநீக்கறவே
முற்றுமாக்கையைமுழுவதுங்காப்பதேமுறையென்
றுற்றுமாமடுத்தாமரைநாளத்திலொளித்தான். (௩௯)

அளவில்பாதகத்தாலொருபெண்ணுருவாமே
லளவில்பெண்ணுருவாவதற்காக்குபாதகமே
யளவில்காதலிற்பிறன்மனையணிநலநுகர்த
லளவில்யோனிமெய்யமரர்கோனடுத்தலினம்மா. (௪0)

பொற்றநல்லெழிற்புலோமசையாதியோரிருப்பக்
கற்றைமென்குழலொருத்தியாற்காவலன்கரந்தான்
பெற்றதைச்சிறிதாக்கியேபெறுதலிச்சை
முற்றுவிக்குமாணவவலியாவரேமொழிவார். (௪க)

இன்பமாதரார்போகமென்றியம்புவரறியார்
துன்பமாக்குமோவின்பமுஞ்சுரர்பிரானொருமா
தன்பினாலழியாத்துயருழந்தனன்கணேசன்
றன்பதாம்புயமலதுவேறின்பெனத்தகுமோ. (௪௨)

இந்திரன்சாபம்பெற்றபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-கருoஉ.



## உஎ-வது கடவுளர்குருவுக்குக்கவுதமருபதேசித்தபடலம்.



இந்திரனெய்தியசெயலிது
வந்தரரவணடிவழிபட
முந்தையினரசவைமுற்றினர்
கந்தணைகரியனைக்கண்டிலார். (க)

தவளவெண்ணகைமுகிழ்ச்சியொடு
முவளகமுறைபவனுமெனத்
திவள்வைநெடிதமர்தேவர்க
ளவளவனிலையெனவஞ்சினர். (௨)

படிநிலமுழுவதும்பரவையுந்
தடவரைநிரைகளுஞ்சதுமுக
னெடியவனுலகமுநேடினர்
கடவுளரிறைவனைக்கண்டிலார். (௩)

இன்னணமமரர்களினைவழிப்
பொன்னுலகொருதினம்புக்கனம்
பொன்னொடுநமதடிபோற்றினர்
மன்னவன்மரபுவினாயினர். (ச)

வேறு.

வினவியவமரர்கடெரிவுறவெடிபடுகுரலிடியுயரிய
சினமுமிழ்குலிசியினாறுதுயர்செப்பினமனைவருமோர்ந்தன
ரினியெவரசுரர்கண்முதுகுகண்டெழின்மிகுசசியுயிரோம்புவா
ரனைவரும்வழிபடுமிந்திரற்கதுதகுமோவெனமாழ்கினார். (ரு)

இந்திரனெய்தியசாபநோயெவ்வகையெவரெவர்முயலினுந்
தந்தவர்கருணையினல்லதுதாழ்த்திடலரிதுதம்மனையையுங்
கந்துறுகல்லெனவாக்கினார்காற்றுதலிசைகலாயினும்
வந்தனைமுன்செய்திரத்துநாம்வம்மெனவெனையுமழைத்தனர். (சு)

நானுமங்கவரொடுநண்ணினேனவையறுமதிமிகுகுரவனுந்
தேனிவர்கற்பகமாலிகைத்தேவர்களனைவருங்கவுதமர்
கானிவர்மலரடிமுறைமுறைகடிமலர்தூவிவணங்கிநின்
றானொடுமனமுநெகிழ்ந்துகவொலிகெழுதுதிபலவுரைசெய்வார். (எ)

வேறு.

செம்பொன்மால்வரையிமயமெண்சிலம்புடைக்கணமு
மம்புராசியினடைகரைமணலும்வானுடுவும்
பம்புவான்மழைத்தாரையும்பார்த்தளவிடினும்
வம்பிலாய்குணப்பெருமையாரளவிடவல்லார். (அ)

எங்கும்வற்கடமெய்தியபொழுதிளங்காலைத்
தங்கவித்தியதுச்சிமுன்விளைத்தெவர்தமக்கும்
பொங்கிருஞ்சுவையடிசில்கணித்தமும்பொழிந்த
செங்கையாளநின்பெருமையார்தெரிக்கவல்லுநரே. (கூ)

வேலையுண்டனன்குறுமுனியுலகமும்வேறே
சாலவிச்சுவாமித்திரன்சமைத்தனன்சிவனர்
கோலவிந்திரனோச்சியகொலைபழுத்தொழுகுஞ்
சீலவச்சிரத்தோடுகைத்தம்பனஞ்செய்தார். (க0)

வாலகில்லியர்வலாரியைவேறுறவகுத்தா
ரேலுமுத்தமவாகையாலிருந்தவமிகுத்த
சீலமல்குறுந்தெரிசனம்பரிசனம்வசன
ஞாலவைப்பிடைபாவங்கணலிவனவன்றே. (கக)

பரர்தமக்குபகாரமேசெய்வதுபயின்றீர்
சரணடைந்தவர்தமைமிகத்தாங்குவீரென்று
புரவலன்பொருட்டுமைச்சரணடைந்தனம்புகல்வே
றொருவரில்லெனவுவப்புறுமின்சொலாலிரந்தார். (கஉ)

இரந்தவானவர்முகத்தினைநோக்கிநின்றிருடி
பரந்தஞானநேத்திரங்களாற்பார்த்திடப்படுவீர்
சுரந்தவாட்டமோடெதிருறப்போந்தனீர்சுரர்காள்
கரந்திடாதுமக்காவனகரைமின்களென்றான். (கங)

உறுவரன்றிருவார்த்தைகேட்டும்பரார்பலரு
முறுகுவெந்துயர்முழுவதுமுருக்கினாமென்னா
மறுவில்சிந்தைகண்மதியெதிர்கடலெனமகிழ்ந்து
சிறுமையுண்டுகொல்சேர்ந்தவர்க்கென்றுசெப்புவரால். (கச)

நீற்றுமேனியர்மாரனை நீற்றினற்போல
வாற்றன்மாதவவரும்பிழைபுரிந்தவாசவனைக்
கூற்றம்வாய்மடுத்துணக்கொழுஞ்சாம்பராக்காது
போற்றிவைத்ததம்புண்ணியாவெம்பொருட்டன்றே. (கரு)

அடிகள்சிந்தையினினைத்தவாறேயெமக்காக
முடிகொள்வாசவன்முதிரெழிற்பொன்னகரிருந்து
வடிகொள்வாளவுணக்குறும்பறுத்தரசியற்றப்
படியிலாதசாபத்தினைப்பாற்றுகவென்றார். (கசு)

அறிவிலாதவன்வஞ்சகன்றுட்டனுசாரக்
குறியிலாதவன்கொண்டதன்னுயிர்பிறவுயிர்க்குஞ்
செறியுமாதரவிரக்கமில்லாதவன்செப்புந்
தறுகணாளனைச்சாற்றலுநினைத்தலுமாகா. (கஎ)

தீயனவனொருவன்மேற்பலாருள்செலுத்திற்
றூயனுகுவனீவிர்கள்தொக்கருள்செயலாற்
பாயபாதகக்குலிசியும்பற்றினன்புனித
மாயதாலவற்கருளுதுமெனமுனியவையும். (கஅ)

தமனியப்பெயர்க்குரவனைத்தனித்துறவழையா
வமலமுத்தொழினடவுறமூவராயமர்ந்த
விமலமல்கியவிநாயகன்சடக்கரநினைக்குச்
சமலவல்வினைவிடைகொளச்சாற்றுதுந்தனித்து. (கசு)

தடித்திரும்புயலூர்தியான்றனக்கிருந்தீக்கை
முடித்துரைத்தியிம்முதிர்மனுமுற்றியசாப
மிடித்தியோனியெலாம்விழியெனச்செயும்பவமும்
பொடித்திடும்பதந்தருமெனவருளொடும்புகன்று. (உ0)

சிவமெலாந்தருஞ்சடக்கரந்தீக்கையோடுதவி
யவமெலாந்தெறுமனுட்டிக்குமுறைமையுமறைந்தான்
பவமெலாந்தெறக்கேட்டவன்பண்ணவரோடுந்
தவமெலாநிறைமுனிவனைத்தாழ்ந்தனன்போந்தான். (உக)

வேட்டோர்க்செலாம்வரமருள்விண்ணவர்கோமா
னீட்டுதீவினையிமையவரெனைவருமுயன்று
வாட்டுவாரெனின்மண்மிசைவைகலும்பாவ
மீட்டுவார்க்கதுநீங்குமோவெழுமையுநிருபா. (உஉ)

**கடவுளர்குருவுக்குக் கவுதமருபதேசித்தபடலம் முற்றிற்று.**
ஆகத் திருவிருத்தம் - கருஉசு.

## உஅ - வது இந்திரனுபதேசம்பெற்றபடலம்.

கவுதமனருள்பெறுங்கடவுளார்களுஞ்
சவலையின்மதிமிகுதமனியப்பெய
ரவனுமென்மொழிப்படியடுத்துமேருவைத்
தவழ்திரைமாமடுச்சார்ந்துகூவுவார். (க)

ஓஓசதக்கிருதுவேயும்பர்வேந்தனே
யோஓவயிராணியின்னுயிர்க்குத்தோழனே
யோஓதயித்தியர்குலமொறுக்கும்வீரனே
யோஓமகவான்வெளியுறுதல்வேண்டுமே. (உ)

வெச்செனச்சபித்தூனவிடுத்தமாதவன்
பொச்சமில்கழன்மலர்போற்றிகின்னுளத்
தச்சமதறுமவனருளோடெய்தினு
நச்சியநாரதர்தாமுநண்ணினர். (௫)

அவரவர்புரிபிழையகத்திராவகைத்
தவவெளியுரைத்திடிற்றக்கமேதையோர்
கவலையுமுடனறக்கழுவுவாரஃ
துவவுவதுரைத்திடாதொளிப்பின்மன்னனே. (௬)

புரிநரம்புளர்ந்திசைபொழியும்வீணையின்
விரிபுகழ்நாரதமுனிவர்வேறறும்
பெரியவரிவர்முனம்பேசிநின்பிழை
பிரிவதுசெயலினிப்பேணத்தக்கதே. (௭)

உருத்திரன்மன்றலினுமைதன்சீறடி
யுருத்தகுபெருவிரலுவந்துநான்முக
னுருத்தெழுபாவமுநானுமோம்பினு
னுருத்திரன்றிருவருளுதவப்பட்டரோ. (௮)

ஆதலானீயுமின்றகத்தினீங்கிடப்
போதுவாயீங்கெனப்புலவர்கூறலுஞ்
சீதநீர்த்தாம்ரைச்செறிமுட்டாளினின்
றேதமோடிந்திரனிம்மென்றெய்தினன். (௯)

விண்குடிவாழ்க்கையர்வேந்தன்முந்துறப்
பெண்குறிநோக்குதல்பிழையென்றேசிலர்
கண்களைப்புதைத்தனர்கவிழ்ந்திட்டார்சில
ரொண்கரநாசியினுறுவித்தார்சிலர். (௧௦)

வலாரியுஞ்செய்பிழைவகுத்துமந்திரத்
துலாவுமெஃகறிவினுனுரைத்தமந்திரங்
கலாநிதிகண்டதோர்கயிரவம்பொரக்
குலாவியவிதியுளிகொண்டுவந்தனன். (௧௧)

திருத்தகுமந்திரஞ்செவியினேறலும்
வருத்தியசாபமுன்மருவினுலெனப்
பொருத்தியபயனதாய்ப்புரையினெல்லைதீர்ந்
திருத்தகும்யோனிகளொளிர்கண்ணாயினன். (௧௦)

அருந்தவரென்னுடுமயில்கொள்வேலனே
திருந்தியவாசிகள்செப்பவிண்ணவர்
சொரிந்தனர்மலர்கடுந்துமிமுழங்கின
வரம்பையர்நிரைநிரையாகியாடினர். (௧௧)

கின்னரர்பாடினர்கிளர்ந்தமாகத
ரின்னிசைபுகழ்ந்தனரிறைஞ்சியேனையோர்
நின்னையில்லாதயாகிலவிலாவிர
வன்னையிலாமகவாயினேமென்றார். (௧௨)

ஒளவியமகன்றநெஞ்சறிவர்தங்களை
யொவ்வொருமுனிவரேயுலப்பிலும்பரா
ரெவ்வகைப்பெருமையுமியைந்துளீரெனத்
தெவ்வடுவெச்சிரன்செப்பித்தாழ்ந்தனன். (௧௩)

தேவரைநோக்கியேசெப்பலுற்றனன்
றுவறுகவுதமன்சாபந்தீர்வகை
யாவதுபுரிந்தனீரஃதறிந்திலே
மேவுகைம்மாறுமக்கில்லைவிண்ணினும். (கச)

பண்டையமுகவிழிபாயிருட்பட
முண்டகநாளத்தின்முழுகினேற்கொளி
மண்டியவாயிரமலர்க்கணல்கினீர்
கொண்டனனலமெலாங்குளிர்ந்தவானுளீர். (கரு)

இன்னுமேரம்பனின்னருள்பெற்றின்புற
நன்னர்மாதவங்கணற்றலத்திஞற்றிய
பின்னர்வானுலகினைப்பேணுவேனலான்
முன்னர்நான்பேணுதன்முன்னிலேனரோ. (கசு)

நீயிர்களனைவருநெடியவானிடை
மேயினர்வதிமினேவிரைத்தகற்பக
மாயிரும்பொருள்சிலர்வந்தநல்குகென்
றுயிரம்விழியினனவரைப்போக்கினன். (கஎ)

இந்திரனுபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - கருசக.

## உகூ - வது இந்திரன்பூசித்தபடலம்.

இதம்புரியுந்தேவர்களுமிருடியருநீங்கியபின்
கதம்பவனத்திடையேகிக்காவல்புரிவிண்ணவர்கோ
னதம்பலவுந்தீபலவுமொன்றுறுற்போனவையின்
சிதம்புதெறுமொருதீர்த்தந்திகழ்தரக்கண்டதையடுத்தான். (க)

அத்தடத்திலமரர்தருமாகாயகங்கையுஞ்சேர்த்
துத்தமனத்தடக்கரையினெளிர்பளிக்காலையநிருமித்
தத்தனையங்கைக்களிற்றையாகமத்தின்வழிநிறுவி
யெத்தகையபொருள்களினுமினிதுறப்பூசைகளாற்றி. (உ)

வாயிலினிந்தியம்வழங்காவகையடக்கிநாசிநுனி
காயொளிக்கட்கடைநிறுவிக்கவின்றருமாதனம்வைகி
யாயிரமாண்டாறெழுத்தையனுட்டிப்பினெடுங்கணித்தான்
மாயிருமாமறையறியாமதக்கைமுகனடிநினைந்தே. (ங)

நித்தலும்பூசனையியற்றிநிராகாரத்தொடுவைகிப்
பத்தியினுற்றியானித்துப்பயன்றருமந்திரங்கணித்துச்
சுத்தவுளத்தினனுகிச்சுரராசன்றவம்புரிய
வத்திமுகன்பேரருள்கூர்ந்தவனெதிர்தோன்றினன்மாதோ. (ச)

தவளமதிபுரைநிறமுந்தசதிசைபோர்த்தொளிர்தேசுங்
கவளமதகரிமுகமுங்கதிர்மணிமாலிகைவளைத்துத்
துவளுமொருபுழைக்கரமுந்தோனுன்குமணித்தண்டைத்
திவள்சதங்கைநூபுரப்பொற்சேவடியுமரைஞாணும். (ரு)

அங்கதமும்வரைமார்பிணணிதருமுப்புரிநூலும்
பொங்கொளிசித்திலவடமும்பொலிந்தவரதனத்தொடையுஞ்
செங்கதிரினிருள்சீக்குங்குண்டலமுந்திகழ்முடியுந்
தங்குருவினெதிர்நின்றதலைவனைவாசவன்கண்டான். (சு)

மிக்கபெருங்கருத்தன்பும்வெருவுதலுமுடன்றோன்றத்
தொக்கிருகைசிரமேறத்தண்ணெனவாதனத்தெழுந்து
தக்கமுறையால்வணங்கித்தட்டமுமிட்டெதிர்நடித்துப்
பொக்கமறவலம்வந்துபுகழெடுத்துப்பாடினான். (௭)

வேறு.

அறிவாய்விளங்குமொளியாகியெங்குமசைவற்றுநின்றநிறைவாய்க்
குறியாதியின்பமுதலீறிலாதகுறைவற்றவின்பமயமாய்ச்
செறிவானநீரினிழல்போலநின்றதிறலோயையானும்வளைவேன்
வெறுஞானமானதிருமேனிகொண்டென்விழிகாணமுன்னர்வரலால். (௮)

இருண்மூழ்குகண்ணின்மலகேவலத்தினிதமின்றிநின்றவுயிர்கட்
குருவாதிமூன்றுமுனமுய்த்தவற்றினுளதாம்விகாரவகையா
லிருவேறுகன்மமிசைவித்தருத்துமிறையோயையானுமொழிவேன்
வெருண்மாயைநீத்ததிருமேனிகொண்டென்விழிகாணமுன்னர்வரலால். (௯)

வாதங்கடந்துபலமாயைகன்மவகையுங்கடந்தவைசெயு
மேதங்கடந்துபொருளொன்றுமின்றியெழுகின்றமம்மருயிரின்
போதங்கடந்துதுரியங்கடந்தபொருளோயையானுமுணர்வேன்
வேதங்கடந்ததிருமேனிகொண்டென்விழிகாணமுன்னர்வரலால். (௧௦)

வெங்கட்களிற்றின்மகவான்றுதித்துவிழிநீருகுத்துள்ளுருகா
சிங்கஞ்செலுத்தியெதிர்வந்துநின்றதிகழ்மூக்கண்வேழமுகவ
னிங்குற்றுநீசெய்செபமாதியானம்மிதயங்களித்தனமினிப்
பொங்குற்றகாதல்வரம்வேட்டதின்றுபுகலென்னவோதுமவனே. (௧௧)

யோகத்தினாலுமுணரப்படாமையுயர்ஞானயோகநிலையோர்
பாகத்தினொன்றுபடுகின்றபாதபதுமங்கெடாதுபுரியும்
யாகத்தினானபயனுந்துறக்கமெளியேற்களித்தியதுவும்
போகத்தின்மல்கவிடரின்றிநின்றுபுகழோடுமாளும்வகையில். (௧௨)

முன்னேயெனக்குமறையோனுமிந்தமொழியாறெழுத்துமனுவைத்
தன்னாதரத்தினுரைசெய்துநீயித்தனிமந்திரத்தையொழியின்
மன்னாதுவிண்ணினரசாட்சியென்றுவழிவற்புறுத்துமதனைப்
பின்னேமறந்துபிழையிற்படர்ந்துபெரிதானதுன்பணவினேன். (௧௩)

பொன்னோனுரைப்பவிடர்முற்றகன்றுபுகழாயிரங்களுடையே
னின்னாறெழுத்தையுரைசெய்துபூசைநெடிதாற்றிவந்தபரிசா
லுன்னாததாகியுரையாததாகியுறலிற்படாதபொருணீ
முன்னாகிநின்றவருளாலெனக்குமுடியாமையாவதுளதோ. (௧௪)

கேடாமெவைக்குமுறுகாரணங்கள்கிழவோய்பதத்தினிறையன்
பாடாமையாகுமதனாலெனக்குனடிவாரிசத்திலுழுவல்
வீடாமைவேண்டுமதுவன்றியுள்ளவிழைவுய்க்குமிங்குன்வடிவுக்
கோடாதசிந்தாமணியென்னுநாமமுறல்வேண்டுமோர்க்குமுறுக. (௧௫)

தீர்த்தந்தனக்குமிடுபேர்சிறக்கதிகழூர்க்கதன்றியெவரு
மோர்க்குங்கதம்பநகரென்றபேருமுறுகிற்கவூரில்வதிவோ
ரார்க்குந்தடத்தினறலாடுவோருன்னடியிங்கிறைஞ்சலுறுவோர்
பார்க்கட்சிறந்தபயனான்குமார்கபகவாவெனப்பகர்தலும். (௧௬)

இறைவன்புகன்றவரமுந்துறக்கமிடரின்றியாளும்வரமு
நிறையக்கொடுத்துமறையக்கதிர்க்குநெடுவச்சிரக்கைம்மகவான்
குறையற்றுமீட்டுமுயர்பூசையாதிகுலவிப்புரிந்துவிடைபெற்
றறையுந்துறக்கநகரெய்தியன்போடரசாட்சிசெய்தருளினான். (௧௭)

அவ்வாறுபூசைபெயரோடுகொண்டவமலன்பதங்கள்சரணு
வெவ்வாறுமெய்திவழிபாடுசெய்யினிடரானதீரவரமுஞ்
செவ்வாய்மையோடுபெறுகிற்றியென்றுதிவவுற்றவீணைமுனிவன்
றெவ்வாடுவேற்கையரசற்குநன்குதெரிவித்தகன்றனனரோ. (கஅ)

இந்திரன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கடுடுகூ.



## ௩௦ - வது உருக்குமாங்கதன்முத்தியடைந்தபடலம்.

திருக்கிலாமுனிசெல்லுமுன்
றருக்கிவாழ்தமராயினுர்
தருக்கமாதிதூரிஇத்தூரிஇ
யுருக்குமாங்கனையுற்றனர். (க)

கவட்டுக்கானிற்கதழ்ந்தமான்
சுவட்டுத்தாரிதரீஇயது
சவட்டிஞய்க்கிதுசார்ந்ததென்
குவட்டுத்தோளவகூறென்றூர். (உ)

வெற்றிவீமன்விறன்மக
ஹற்றதற்றவர்க்கோதிஞ
னற்றமில்பொருளாங்குறப்
பற்றியேகினன்பான்மையால். (௩)

பொதும்புசூழ்ந்துபுகைந்தெரி
வெதும்புவெங்கடர்விண்டுதேன்
றதும்புபூம்பொழில்சார்ந்தவக்
கதம்பமாநகர்கண்டனன். (ச)

தீர்த்தர்போற்றுஞ்சிந்தாமணித்
தீர்த்தனைத்தெரிசித்துநோய்
தீர்த்தல்செய்யுஞ்சிந்தாமணித்
தீர்த்தநீர்படிந்தாடினன். (ரு)

கருக்கிவெண்ணிறங்காட்டிமெய்
முருக்குநோய்கெடமுன்பெய
ரிருக்கநல்வெழிலெய்திஞ
னுருக்குமாங்கதவுத்தமன். (சு)

செயிறுக்குஞ்சிந்தாமணிப்
பெயர்விநாயகர்பெய்கழற்
கயர்விலாதமெய்யன்பனுய்
மயரில்பூசைவயக்கினன். (எ)

அந்தணாளர்க்கரும்பொருள்
சிந்திஞனதுசெவ்வியின்
வந்துளார்கள்விமானமோ
டுக்தெழிற்கணத்தோர்சிலர். (அ)

வேறு.

அத்தலைநின்றவேந்தற்கருங்கணத்தலைவர்சொல்வா
ரித்தலைக்கணேசகுண்டத்திரும்புனறேய்ந்துமுக்கண்

வித்தகக்களிற்றின்பூசைவிளக்கினையாதலாலே
யுத்தமவுனதுமேன்மையொருவர்க்குமுரைக்கொணாதே. (கூ)

கொங்கவிர்மாலைத்தெய்வக்கோலமார்விமானமேறி
யைங்கரனுலகமெம்மேமாடடைமதியென்றார்கேட்டுச்
சிங்கவல்லேற்றினென்னார்செருக்களமுழக்குந்திண்டோட்
பைங்கழலரற்றுநோன்றாட்பார்த்திபன்பணிந்துசொல்வான். (சO)

வேறு

சின்மயசிற்குணவகண்டாகாரசச்சிதானந்தன்சேர்ந்தோர்தம்மைத்
தன்மயமாக்கிடுமுதல்வன்காரணாதீதனவன்றலைமைசான்ற
நன்மைதருமருளெங்கேநானெங்கேநான்புரிந்ததவங்களெங்கே
யென்மனமெங்கேயெனதுபிறப்பெங்கேயென்னுடையபத்தியெங்கே. (கக)

பண்டுபுரிதவத்தானுமித்தடத்தினீராடும்பலத்தினானு
மண்டர்தொழும்பெருங்கணத்தீர்நுங்கடெரிசனமடியேற்காயிற்றென்னை
மண்டுபெருந்தவமாற்றிச்சாருகாசினியோடுமருவிவீம
னெண்டரையிலுயிர்த்தனன்வேறிலைபவரையொழித்தெவ்வாறுறுவேனென்றான்.

அறங்கிளரும்பெருங்கணத்தோரதுகேட்டுத்திருவுள்ளத்தலர்ச்சிகாட்டிக்
கறங்குதிரைப்பெருங்கடல்சூழ்கண்ணகன்ஞாலம்புரக்குங்காவலோய்கே
ணிறங்கிளர்பன்மலரணிந்தவித்தீர்த்தத்தவர்தம்மைநினைந்துதோய்ந்து
பிறங்குதருப்பணம்புரியினவருமுடன்வருவரெனப்பேசினாரால். (கங)

கணங்களுரைத்தமைகேட்டுக்காவலனுமுடிந்தபசுந்தருப்பைவைத்திட்
டிணங்குதருப்பையுமாணய்தருப்பைமகனுமிருக்கின்றாய்வேத
னணங்கறுப்பப்படைத்திடப்பட்டாயாரைக்குறித்துன்னையாட்டினாலும்
பிணங்கறுநற்பயனவர்க்குக்கொடுக்கின்றாயெனப்பேசிப்பெருநீராட்டி. ()

தந்தைதாய்முதலோரைக்குறித்துநறும்புனற்றீர்த்தந்தானுமாடிச்
சிந்தையறாமகிழ்வோடுங்கரையேறியருள்செய்ததிவவுநல்யா
ழுந்தணாளனைவியந்துதீர்த்தத்தைமிகப்போற்றியமலமுற்றான்
வந்துளார்தாமுமதினுடனாடித்தெய்வவுருமருவினாரால். (கடு)

மறுவலுமங்கினிதிருந்தகணேசர்திருவடிப்பூசைவயக்கித்தேசு
முறுகுவிமானத்தடுத்தசேனையொடுமொருங்கேறிமுடிகொண்மன்ன
னுறுதியொடுகவுண்டினியநகர்ச்சார்ந்துதானபலனுயிர்த்தோராதி
பெறுமுறையிற்கொளக்கொடுத்தான்சேனைகளுமவரவர்க்குப்பேணியீந்தார்.

எம்பெருமான்றிருவருளால்வெவ்வேறுவிமானங்களெய்தவந்தப்
பம்புநகராசாளும்வீமன்முதலோரெவரும்பணிந்தங்கெய்தி
யும்பர்தொழவுருக்குமாங்கதனோடுங்கணேசர்திருவுலகஞ்சேர்ந்தார்
நம்பியசீர்வியாதமுனியறிவாயென்றலரிருந்தோனவிற்றினானல். (கஎ)

அருந்தவத்துவிச்சுவாமித்திரனைவீமனுறலாதியாகத்
திருந்துமகனோடுமுத்திசேர்ந்திடுதலீறாகத்திகழாநின்ற
பொருந்துபலசரிதமுங்கேட்டனைசோமகாந்தவினிப்புகலக்கேளாய்
பெருந்தவத்துக்கிருச்சமதனுபாசனையென்றுரைசெய்வான்பிருகுமேலோன்.

உருக்குமாங்கதன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கடுஎஎ.



## ௫௧ - வது திருச்சமதருபதேசம்பெற்றபடலம்.

மருக்கொண்மாமலரினானைமுகநோக்கிமடமை
முருக்கிமேதகுவியாதமுனிமுன்னவன்முன
முருக்குமாங்கதனொழிந்தபின்முகுந்தையுறுநோய்ப்
பெருக்கமெங்ஙனமொழிந்ததுபேசுகவென. (௧)

முள்ளரைக்கமலநாண்மலரினான்மொழிகுவான்
றள்ளுமெல்லிடைமுகுந்தையவள்சாபமரசன்
கொள்ளவுய்த்தபினுமம்மர்குடிகொண்டெழமெழு
கொள்ளெரிக்கதவியாங்குளநெகிழ்ந்துருகினாள். (௨)

வண்டிரைக்குமலர்நந்தனவனத்துலவுவர்
டண்டிரைக்குளிர்தடாகமுறுவாள்பிணைபுறங்
கொண்டிரைக்குவிரைமான்கலைகள்கண்டுகுழைவாள்
பண்டிரைக்குமணிவேய்ங்குழல்பரப்பவழிவாள். (௩)

மந்தமாருதமருங்கசையவன்னிவிரவி
வந்ததென்கொல்வளியேயெனமருண்டுமுனிவா
ளந்திலான்மணிதழங்கவடுகாலனொலியோ
சிந்துகின்றதுயிரென்றுதெருமந்துகவல்வாள். (௪)

சிறுமையாளர்கள்பிறர்க்குவிளைதீங்குபெருமை
யுறுநர்செய்கலரொலிக்கடன்மணிக்குழலென
முறுகுவெந்துயரமூட்டுவதுனக்குமுறையோ
குறுமுனிக்குரிசில்குன்றுளனெனக்குழறுவாள். (௫)

வட்டிகைப்பலகைமீதிலவன்மானுருவெலா
மொட்டியொட்டினள்வரைந்துறுகரத்தினணையு
மொட்டிளங்கதிர்முலைத்துணைமுயங்கும்வதனந்
தொட்டுமுத்தமிடுமாலையெனவேதுவளுறும். (௬)

நெட்டுயிர்ப்பெறியுநேர்தளிர்துவண்டுகருகப்
பட்டபட்டவிடமெங்குமுயர்கொப்புள்பரவக்
கட்டுணைப்புனல்கவிழ்க்குமுருவெம்மைவெருவி
விட்டகன்றதெனமேகலையொதுங்கவிழுமால். (௭)

உற்றுழந்தவவடன்னினுமுரைக்கவரிதாய்
முற்றும்வெந்துயரின்மூழ்கிநிலமீதுமுடிசாய்த்
தற்றமுற்றவசமாயினளனைத்துமறியாப்
பொற்றவிந்திரன்விழைந்துமயல்பூண்டுவருவான். (௮)

வேறு.

கழல்படுத்திறுக்கியகமலபாதமுங்
கழலொலிசெயுங்கணைக்காலுநெஞ்செலாங்
கழலவேள்சரங்களிற்கதுவிமாதராள்
கழலிளங்காய்பொரக்கவின்செய்கச்சுமே. (௯)

விரற்றலைப்புட்டிலும்விளங்குசெங்கையி
னரற்றெற்றூழ்நாணடுசிலையுமார்பத
மிரைத்துமென்மலர்த்தொடையிசைந்தமார்பமு
நிரைத்தடங்கணைப்புதைநிலவுதோள்களும். (௧௦)

பொற்புரியாற்புறஞ்சூழ்ந்தகுஞ்சியும்
பொற்பவேயுருக்குமாங்கதன்மெய்ப்புல்லிய

பொற்பெலாந்தழீஇக்கொடுபுலம்பிச்சோர்ந்தவப்
பொற்பினண்மருங்குறப்பொருக்கென்றெய்தினன். (கக)

மருக்குழன்மாதராண்மறித்துப்போந்தவவ்
வுருக்குமாங்கதனுமீண்டுற்றுளானெனப்
பொருக்கெனவெழுந்தனள்புக்கவஞ்சனுந்
தருக்கறுநயமொழிதழுவிக்கூறினான். (கஉ)

ஏந்திளவனமுலையிரண்டும்பாய்ந்துதண்
சாந்தகங்கிழிதரத்தழுவிக்கைகளான்
மோந்தனன்புட்குரன்முழக்கங்கேட்டனன்
மாந்தினனிதழ்நறுமருவிப்புல்லினான். (கங)

வாட்டடங்கண்ணியுமறிந்தன்னனுரங்
கோட்டிளங்குவிமுலைகோட்டுமண்கொள
மூட்டியகாதலின்முயங்கிச்செய்யவா
யோட்டமும்பருகினளுவப்புற்றாளரோ. (கச)

துடக்கினனிந்திரனென்றுசூர்த்தவேண்
முடக்கியதடக்கையின்முனைகொளம்பெலா
மடக்கினனிமிர்த்தகைவரிவிற்றாழ்த்தின
னடக்கினன்முகுந்தையோடமர்த்தபோரினை. (கரு)

தகுந்தனிக்கலவியாற்றழைத்தநெஞ்சொடு
முகுந்தைதன்முனிப்பணிமுடிப்பச்சென்றனள்
புகுந்தகைதவவுருப்போக்கிப்போந்தன
னகுந்தழல்வயிரவேனுதன்விண்ணமே. (கசு)

முற்றிழைமுகுந்தைதன்மோட்டினிந்திரற்
கற்றைநாட்கருத்தரித்தையிரண்டெனச்
சொற்றகுமதியிடைத்தோன்றலீன்றனள்
பற்றியகருங்கடல்பருதிகான்றென. (கஎ)

அண்டமுநடுக்குறவார்த்துவந்துவீழ்ந்
தொண்டரைக்கிடந்தொளிர்கின்றமைந்தனைக்
கொண்டலூர்ந்தவனுக்கங்குரித்ததோர்கலா
மண்டியபெருந்தவன்மகிழ்ந்தெடுத்தனன். (கஅ)

கவியெனப்பட்டவக்கருணைமாதவன்
சவிமணிமைந்தற்குச்சாதகாதிக
ளவிசொரிந்தமரருக்கன்புசெய்திரும்
புவியவர்புகழ்தரப்போற்றிச்செய்தனன். (ககூ)

வேறு.

குருச்சந்திரனைவென்றமுகக்கோலமுகுந்தைதனிமைந்த
னுருச்சந்தவரிசனவிழுதும்பிறவுந்திமிர்ந்தொண்புனலாட்டித்
தருச்சந்தொடுகாரகில்புகைத்துத்தனப்பாலூட்டப்பன்னிருநாள்
கிருச்சமதனென்றொருநாமங்கிளந்தான்மகற்குக்கிளர்தவத்தோன். (உ0)

கருப்பநிலைக்காறுமாண்டிற்கரிசின்முறையாலுபநயனம்
விருப்பினியற்றியமறையாதிவிளங்கத்தெரித்தான்கவியென்பான்
கிருச்சமதனுமொருமுறையிற்கேட்டுமுழுதுந்தெரிந்துணர்ந்து
வெருச்செய்பவத்தின்வேரறுக்கும்வெற்றிப்படைபோலாயினான். (உக)

ஒழுக்கமுதலாகியநெறியினுறழாதொழுகக்கவிமகிழ்ந்து
வழுக்கிலாதகணனாந்துவாவென்மனுவையுபதேசித்

தழுக்கிலாதாயிம்மனுவையனுட்டிப்போடுங்கணிவிழைவு
முழுக்கவருள்வர்கணேசரெனமொழிந்தானவனுமதுவேற்றான். (௨௨)

நாளுநியதிக்கடன்முடித்துநாமவினைகடுரந்தென்னை
யாளுமைங்கைக்கணேசர்திருவடித்தாமரைகளுளத்திருத்தி
மூளுமன்பிலவர்மனுவைமுறையினனுட்டிப்பொடுங்கணித்துக்
கேளும்பிறக்கென்றிடவுலகங்கேண்மைகொள்ளவிளங்குநாள். (௨௩)

துள்ளிக்கயல்வானிடைத்தாவத்துடுமென்றிரங்கியிளநாகு
வள்ளைக்குதட்டுந்தடமுடுத்தமகதநாட்டிற்கோனெவர்க்குந்
தள்ளையனையான்பெருங்கொடையான்றானசூரனெனும்பெயரான்
றொள்ளையகன்றவுள்ளகத்துத்தொடுத்ததருமச்சிந்தனையான். (௨௪)

அன்னமருட்டுநடைக்கற்பினான்றமனைவியம்பிகையும்
பொன்னைவெள்ளிதனைமருட்டும்புந்தியமைந்தவமைச்சர்களுந்
தன்னதுடலுமுயிருமெனத்தக்கமரபால்வழியொழுக
வின்னலறச்செங்கோலோச்சியிருந்துமகிழுங்காலத்தில். (௨௫)

பெற்றகுரவன்றனைக்குறித்துப்பிதிரர்க்கூட்டுநாளெய்த
முற்றவுணர்ந்தவசிட்டனையுமுழுத்ததவவத்திரிதனையு
மற்றுமுயர்ந்தமுனிவரையும்வருவித்தான்மற்றவரோடுங்
கற்றுமிகுந்தகிருச்சமதன்கலந்துகலைப்போராற்றினான். (௨௬)

வாதினேற்றவத்திரியவ்வாதின்வெல்லமாட்டாது
சாதலனையகொடுங்கோபத்தழல்கொப்புளிப்பவெதிர்நோக்கிப்
பேதைநினதுபிறப்பினையும்பெருமையனைத்துஞ்சுடுசுடுநீ
யோதுமுனிவன்மகனல்லையுருக்குமாங்கன்மகனென்றான். (௨௭)

இந்தச்சபையினுடங்கிருத்தலேலாதெங்களோடொப்பச்
சிந்தைக்கினியபூசனையுஞ்செய்யக்கூடாதெழுந்தொல்லை
யந்தப்புடையேகுதியென்றேயழன்றத்திரிகைமறித்துரைப்பச்
சந்தப்பொடியினொளிர்மேனித்தவஞ்சால்கிருச்சமதன்வெகுண்டு. (௨௮)

விழிகள்சிவப்பவிதழ்துடிப்பவிளங்குபுருவநுதலேற
வழிவுமருவிற்றெனச்சிலரங்கஞ்சியகலமூன்றுலகும்
பொழிகட்டழலாலவிப்பான்போற்பொங்கியெழுந்துசபைதன்னிற்
குழியவசிட்டன்முதலானகுழுவினோர்முனிதுசொன்னான். (௨௯)

அரசன்மகன்யானலனீயிரவமானத்தாலவமதித்தீர்
பரவுதவத்துக்கவியென்பான்பாலனானேயானக்கால்
விரவியிருந்தநும்மையெலாம்விழித்துப்பார்க்குமுனமவித்துச்
சுரர்கள்வியப்பப்புகழ்நடுவேனென்றுதுணுக்கென்றேகினான். (௩0)

மிகுந்தகோபந்தணியாமைவேகத்தொடும்போயீன்றாளை
முகுந்தாய்மிகுந்ததூர்த்தாயென்முன்னேவாவென்பிதாவாரே
நிகழ்ந்ததுள்ளபடியிங்கேநிகழ்த்துவாயென்றான்முகுந்தை
நெகிழ்ந்துநெஞ்சநடுநடுங்கிநிகழ்ந்தபடியேயுரைசெய்தாள். (௩௧)

வேறு.

மிருகவேட்டையின்மேவியவுருக்குமாங்கதனீர்
பருகவந்தனன்படியிலாவழகுகண்டவனுக்
குருகியுன்றனையுயிர்த்தனனேனுண்கணார்க்கார்வம்
பெருகினிச்சையாறொழுகநூல்பேசியமுறையால். (௩௨)

விருப்பின்மைந்தனேயுள்ளவாறிதுவெனவிளம்ப
நெருப்பின்மேலொருநெருப்பினைநெடிதுபெய்தாங்குப்

பொருப்புநேர்தவன்புகைந்துபுள்ளின நுகராத
வருப்பமார்வனத்திலந்தையாகுகவெனச்சபித்தான். (ருரு)

ஒடுங்கிநின்றதாயொருமகனுரைத்தமைகேட்டு
நெடுங்குணத்தவதாயெனநினைந்திலையென்னை
நடுங்கச்செய்தனையாதலினீயுமுண்ணடுங்கக்
கொடுங்குணச்சிருன்கூடுகநினக்கெனச்சபித்தாள். (ருச)

கலந்தைவந்தொளிர்முலையவள்கடுகுசாபத்தா
லிலந்தைவந்தெழுவனத்திடையிலந்தையாயிருந்தாள்
வலந்தைவந்ததோண்மன்னவன்மகன்மையைக்குறித்து
நலந்தைவந்தமாதவனுளநாணியங்கிருந்தான். (ருரு)

அழிந்தமானத்தின்வாழ்தலிணுக்கையையொறுத்துக்
கழிந்துபோதலேநன்றெனக்கருதிடுமளவில்
வழிந்தமாமதமுகத்தவனருளின்வான்வாக்குப்
பொழிந்ததேனெனப்புரந்தரன்மகனெனக்கேட்டான். (ருசு)

சிறிதுசிந்தையைத்தேற்றினனவமதிசெய்த
வுறுவராதியோரனைவருமுற்றடிவணங்க
மறுவினல்வரம்பெறுகுதுமெனமதித்தந்தக்
குறுவனத்தினைவிடுத்தொருகொடுவனமடுத்தான். (ருஎ)

இதுமுகுந்தையின்சரிதமென்றிதழ்முருக்கவிழ்ந்த
பதுமமென்மலர்ச்சேக்கையான்பகர்ந்தனன்செய்ய
மதுமலர்த்திருமார்பினின்றகற்றிமண்போந்து
முதுதவம்புரிவியாதனுமுனிவரன்மகிழ. (ருஅ)

எந்தையைங்கரற்கினியமந்திரவுபதேசந்
தந்தைதந்திடமுகுந்தைதன்மகன்பெற்றதுரைத்தா
மந்தமெய்த்தவன்வரம்பெறலறிகெனப்பிருகு
சுந்தரம்பெறுசோமகாந்தனுக்குரைதொகுப்பான். (ருகு)

கிருச்சமதருபதேசம்பெற்ற படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கசுகசு.



## ருஉ - வது கிருச்சமதர்வரம்பெறுபடலம்.



உலகங்களனைத்துநொடிக்குமுனமுண்டாக்கியவெம்பெருமானிறைநூல்
பலவுந்தெளிகின்றகிருச்சமதன்படருற்றவனுற்றவரத்தினையு
மிலகும்படிசொல்லுகவென்றுதவவெழிலாரும்வியாதன்விணுவலுமம்
மலர்மெல்லணையான்மகிழ்கூர்ந்தவன்முன்வரம்பெற்றதுமோதவலித்தனனே.

பழிமல்கியகானமொழிந்தயலேபடுகானமடுத்தகிருச்சமதன்
வழிதண்மதுமல்லிகைமுல்லையிளமயிலைக்கொடிமாதவிபந்தரிடும்
பொழிலும்புதுமாமலரோடைகளும்பொங்கும்புனல்வாவியும்வேள்விமறை
மொழியும்படிசெய்யுமுனிக்கணமுமுடிவானவர்வாழ்க்கையுநோக்கினனே.

அங்குற்றமர்மாதவர்தம்மையடுத்தவர்தாடொழவாங்கவர்நல்வரவேற்
றிங்குற்றிருவென்னமகிழ்ந்துதினமெழிலார்புவியின்வலமானபதந்
தங்கும்பெருமெல்விரலூன்றியொருதந்தப்பெருமானுருவங்கருதி
மூங்கும்பொறியைந்துமடக்கிமனுமொழிகின்றனன்முற்றுதவத்திறனும். ()

ஓராயிரதேவர்களாண்டுதமக்கொருகால்விழிவிட்டவனிங்ஙனமை
யீராயிரமோடுமையாயிரமாண்டெங்குந்தவவங்கியெழுந்துசுடத்
தாரார்முலைவானர மங்கையருந்தனிவானவருந்தகுவோரெவரு
நீரார்குளிர்கங்கைநெடும்பொழிலுநிலவத்தவமாற்றியிருந்தளவில். (௪)

மனவாக்குறுகாயமுமெட்டரியவளர்பேரொளியாய்ப்பரிபூரணமா
யினமாமலர்தூவியிறைஞ்சியெனதியானென்னுமகந்தையிரித்தெனதுந்
தனதேயெனுமெய்யடியாரவரேதாமாகியிருந்தவிநாயகனார்
நனவேயவனுக்குவரம்புரியநகுபேரருளாலெதிர்நண்ணினரே. (ரு)

காலைக்கதிர்கோடியுதித்தனையகதிர்செய்திருமேனியும்வாரிசமென்
மாலைக்குவனப்பமர்மார்பும்விரைமலிகுங்குமமாதிமட்டித்துமிரு
சீலப்பனிநீரினரைத்தநறுந்தேய்வப்பியதோளொருபத்துமிரு
பாலுற்றொளிர்சித்தியும்புத்தியும்வெண்பாலொத்திடுசிங்கநல்வாகனமும். ()

அலைகாதுமதம்பொழியானனமுமணியாரொருகோடும்விளங்கியிட
நிலமாதிரமெங்குநிமிர்ந்தொளிருநிகழுந்திருமேனியொளிக்கணுடு
மலையாமதியின்னொளிசூரியனின்மாய்ந்தாலெனவைகுகிருச்சமத
னுலையாததனல்லொளிமாயவெதிருற்றனைவிழித்துறநோக்கினனே. (எ)

ஒளிபாலிறைவன்றிருமேனியெழில்யாதுந்தெரியாவிழிகூசவுளந்
தெளியாதிதுவென்னெனமம்மர்கொடுதியானித்தவுளத்துவிநாயகரை
யளியோடெதிர்நோக்கியொர்விக்கினமிங்கணுகுற்றதுதீர்த்ததுசெய்தவமு
மெளியேன்வயின்முற்றவிருங்கருணையிசைவித்தருளெம்பெருமானெனலும்.

வெளிக்கண்வினைசிந்தவெழுந்தபிரான்மிகுபேரருள்கூர்ந்துமெய்ஞ்ஞானவிழி
யளிக்கத்தளர்வுற்றகிருச்சமதனன்போடுமெழுந்துபணிந்துமறைக்
கொளிக்குந்திருமேனியென்கண்ணெதிரேயொளிர்வித்தனனென்றுளநெக்குருகித்
துளிக்கும்விழிநீர்கள்பரந்துநிலத்துகண்மாற்றிடநின்றிதுசொல்லுவனால். ()

வேறு.

நித்தியமாய்நின்மலமாய்நிற்குணமாய்நீடொளியாய்த்
தத்துவமாய்த்தத்துவத்துக்கப்பாலாயப்பாலு
மத்துவிதமானவரும்பொருளேநீயடியேன்
சித்தமுவப்பத்திருக்காட்சிதந்தனையே. (௧௦)

தண்ணார்மதியந்தயங்குஞ்சடாதாரி
யுண்ணாரமுதேயுலவாச்சுகக்கடலே
விண்ணோரறியாதவித்தகாநீயடியேன்
கண்ணாரக்காணுமாகாட்சிகொடுத்தனையே. (௧௧)

ஆக்காமேயாக்கியளியாதளித்தெவையும்
போக்காமேபோக்கிமலம்பொன்றுவித்துமொன்றானுந்
தாக்காதுநின்றதனிமுதலேநீயடியேன்
வாக்காரக்கூறுமாவந்தெதிரேநின்றனையே. (௧௨)

என்றுகிருச்சமதனேத்தெடுப்பத்தேனொழுகுங்
கொன்றையலங்கற்குழகன்முடிதுளக்கி
யொன்றுதவத்துக்குவந்தோமினிவரங்க
ணன்றுகிளத்திநனிதருதுமென்றனனால். (௧௩)

சிங்கமுதுகிற்சிறந்தமகளிரொடு
மங்கணெழுந்தவமலனருள்கேளாப்
பொங்குமுழுவற்புணரிப்புணையானன்
செங்கைகுவித்துத்திருந்தவிதுகூறுவான். (௧௪)

காண்டல்கருதலுரையிவற்ருற்காணுயைக்
காண்டல்கருதலுரையானுங்கண்டேற்கு
வேண்டும்பொருளின்னுமுண்டேவிமலாநீ
வேண்டுகெனும்மருளைத்தள்ளாதுவேண்டுகேன். (கடு)

எண்பத்துநான்குநூறுயிரமாயியல்பிறப்பிற்
பண்புற்றமானிடமாம்பவமரிதுமானிடத்து
மெண்பெற்றநால்வருணத்தியைந்திடலரிதவற்று
ணண்புற்றவந்தணராய்நண்ணுவதுமரிதாமால். (கசு)

அந்தணருளறிவுடையராதலரிதறிவருளுஞ்
சிந்தைமகிழனுட்டானஞ்செய்குநராகுவதரிது
சிந்தைமகிழனுட்டானஞ்செய்பவருட்டிரிவிதமாம்
பந்தமறச்சிவஞானப்பற்றுடையாரரியர்களே. (கஎ)

அத்தகையசிவஞானமடிகடிருவடியினுறும்
பத்தியிஞவதையன்றிப்பயில்வேள்விதவந்தான
மெத்திறத்துமுயற்சியினுமெய்துவதில்லாமையினல்
வித்தகநின்மலர்ப்பதத்தில்வீடாதவன்பருள்க. (கஅ)

எம்பெருமானித்தலத்திலெழுந்தருளியெஞ்ஞான்று
மும்பர்முதலனைவோர்க்குமுவப்பவரம்வழங்கிடுக
நம்பியபுட்பகவனமும்புட்பகமாநகருமென
விம்பரினிவ்வனந்தனக்குமிந்நகர்க்கும்பெயருறுக. (கக)

தேவர்முனிவரசுரர்சித்தர்கள்சாத்தியர்முதலா
யாவர்களுமென்வழியினெனதாணைகடவாமை
மேவுவதும்வேண்டுமெனவிழைந்திரப்பப்பொன்ஞாழற்
பூவலங்கன்மணிமார்பிற்புண்ணியன்மற்றிதுபுகலும். (உ0)

இக்கிரேதாயுகத்தினிந்நகரம்புட்பகமா
மிக்கதிரேதாயுகத்தில்விளங்குமணிபூரகமாந்
தொக்கதுவாபரயுகத்திற்றுரிசகற்றும்பானகமாம்
பக்கவெழிற்கலியுகத்திற்பத்திரகமாகுமால். (உக)

நற்றவநீவிழைந்தவெலாநல்கினமுன்பாற்சிறுவ
னற்றமிலாமிகுவலியோடரனொருவாளியினன்றி
மற்றையராலழியாதவரத்தினனுய்நமதடியன்
புற்றவனுயொருவனுறுமோங்குநமதின்னருளால். (உஉ)

வேறு.

பெருந்திறன்மகனுமந்தப்பெலியினுநினக்குக்கீர்த்தி
திருந்தமூவுலகத்துண்டாந்திருத்தகுமுனிவநம்மைப்
பொருந்துகாரியங்கடம்மின்முந்துறநினைந்துபூசி
வருந்துதலின்றிவேட்டவரமெலாம்பெறுவைமாதோ. (உங)

நினைத்தெமைப்பூசையாவர்நிகழ்த்தினுமவர்கள்பொல்லா
வினைத்தொடர்பனைத்துநீங்கிவிழுத்தவநினைந்தநன்மை
யனைத்தையுமெளிதின்வல்லேயடைகுவரெமைத்தொழாரே
லெனைத்துளவிடரும்பொல்லாவினைகளுமெய்துவாரே. (உச)

அருமறையளந்துங்காணுவமலனுர்வரங்கணல்கி
யிருவினைமலங்கண்மூன்றுமிரித்தவருள்ளக்கோயின்
மருவுவான்மறைந்துபோந்தார்வரம்பெறுமுனிவனுங்கோர்
குருமணிக்கோயிலொன்றுகுயிற்றியக்கோயிலுள்ளால். (உடு)

வேறு.

சரதமலிபத்தியினற்சார்ந்தவருள்ளகவரங்கிற்
பரதமிகப்புரிவானைப்பரானந்தபூரணனை
வரதகணபதியென்றுவைத்தொருதீர்த்தமுந்தொட்டு
விரதமொடப்புனலாட்டிமேதகப்பூசித்திருந்தான். (உசு)

வேறு.

கணேசர்மேனியிலாட்டுமக்காமருதீர்த்தங்
கணேசதீர்த்தமென்றொருபெயர்கலந்ததந்நகருங்
கணேசர்பேரருளாற்கலந்திருந்தகாரணத்தாற்
கணேசமாநகரெனும்பெயர்கதுவியதம்மா. (உஎ)

சித்தியாவையும்யாவர்க்குஞ்செறித்திடுந்திறத்தாற்
சித்திமாநகரென்னவுஞ்சிறந்ததந்நகரஞ்
சித்தர்மாதவர்தேவர்கண்முதலியோர்தம்முட்
சித்திமேவினரளவிலர்சிறந்தவந்நகரில். (உஅ)

கவியுயிர்த்தருள்காமருகிருச்சமதன்முன்
புவிவியத்தகப்புகர்முகக்களிற்றிறையருளா
லவிர்வரம்பெறலிதுபடராணவவலியிற்
றவிர்வியாதவென்றுரைத்தனன்சதுமுகப்பிரமன். (உகூ)

சோமகாந்தனேதூத்தகுகவிமகன்பெற்ற
சேமவான்வரமறிந்தனையினியவன்சிறுவன்
வாமமாவொருமருப்பினன்மந்திரங்கணித்த
தேமமார்தரவறிதியென்றியம்புவன்பிருகு. (ஙo)

கிருச்சமதர்வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கசுசசு.



## ங௩ - வது திரிபுரன்வரம்பெறுபடலம்.



கருவிமுகில்கணிரைநிரையாய்க்கவிழ்த்தநெடியதடஞ்சிலம்பி
னருவியெனமும்மதம்பொழியுமானைமுகவனருள்வரத்தாற்
பொருவிலமரர்முனிவரெலாம்போந்துவணங்கிப்பணிபுரிய
மருவுமவிவேள்விக்கிறையாய்வதிந்தானனையகிருச்சமதன். (க)

மடங்கலுகைக்குங்களிற்றுமுகவரதன்பாதமலர்த்துணையின்
முடங்குமறுகாற்சுரும்பினங்கண்முரலும்பனிமென்மலராதி
குடங்கைகொடுபூசித்தவன்மெய்க்கோலமனுவங்கணித்துள்ள
மடங்கத்தவஞ்செய்பவனொருநாளமர்ந்தானரியயோகத்தில். (உ)

நெடிதுயோகமுழந்தன்பினிகரிறவத்துக்கிருச்சமதன்
கொடிதுவிழித்துப்பார்த்தானக்கொடியபார்வைதனினின்றும்
படியும்விசும்பும்பாதலமும்பறம்புநடுங்கக்கடைநாளி
னிடியும்வணங்கமிகவார்த்திட்டெழுந்தான்வலியனொருமைந்தன். (ங)

செய்யநிறமும்பேரழகுந்திவளுமுடியுங்குண்டலமும்
பெய்யுந்திணிதோளங்கதமும்பிறங்குமரைஞாண்முதற்பலவும்
வெய்யகதிரினொளிமழுங்கவிளங்குமொளியுமுடையானைப்
பொய்யிறவத்துக்கிருச்சமதன்பொற்பநோக்கிநடுங்கினன். (ச)

யாவனிவனென்றலமந்தேயிறைவனருளால்வருமைந்த
னுவனெனப்பின்றெளிந்துமுனியார்நீயென்னப்பலிசொல்வான்
மேவுதவத்தோயறியாமைவியப்பிற்றேரின்விழிபார்த்த
வோவில்பார்வையிடையுதித்தேனுனக்குமகனேனெனப்பா. (௬)

அன்னைநீயேபிதாநீயேயனைத்துநீயேயெனைச்சிலநாண்
மன்னவளர்ப்பின்யான்மும்மைவையமொருங்குதாட்படுப்பேன்
பின்னரறிதியென்வலியையென்றுபேசப்பெறுமுனிவன்
றன்னுணடுங்கியதுமறைத்துத்தனையற்கிதனைச்சாற்றுவான். (௭)

ஆதியந்தநடுவின்றியகண்டாகாரமாயொன்றாஞ்
சோதியானவிநாயகர்தந்தொன்மைமனுநாமனெஞ்ஞான்று
நீதியாகக்கணித்துவருநிகரிலதனையுரைசெய்கேன்
றீதிலாதுகணியுனக்குச்சித்தியனைத்தும்வருமென்று. (௮)

தந்தைதானேமகனுகிச்சாருமென்னுமுறையானு
மெந்தைபெருமானருள்செய்தவியல்பினுனுங்கிருச்சமதன்
மைந்தன்றனக்குக்காணுநுவாவென்மனுவையுபதேசித்
தந்தண்மறைநூல்விதியானேயனுட்டிப்பனைத்தும்புகன்றொழித்தான். (௯)

நீற்றுமேனிக்கிருச்சமதனடியமலர்த்தாள்பணிந்தேத்தி
யாற்றல்சான்றபலியென்பானுங்கோர்பாங்கர்தந்தையைப்போற்
போற்றியொருதாணிலத்தூன்றிப்பொறிகளடக்கியுணவாதி
பாற்றித்தவஞ்செய்தெனன்வருடம்பதினுயிரத்தோடதிற்பாதி. (௧௦)

கொடியதவத்தினெழுந்துகனற்கொழுந்துபரந்துமிகச்சுடலு
நெடியவிசும்பினமரரெல்லாநெடிதுணடுங்கிமுறையிட்டார்
படியில்கருணைவிநாயகனுர்பரிந்துபலனுக்கருள்கொடுப்ப
விடியற்கதிராயிரகோடிவிரவியெனமுன்றோன்றினுர். (௧௦)

அழல்கொப்புளிக்குங்கதிர்ப்பருதியமரன்விழியுமொளிமழுங்கக்
கழல்கொப்புளிக்கும்பேரரவக்காமர்மலர்த்தாள்விநாயகனுர்
நிழல்கொப்புளிக்குந்திருமேனிநிகழ்ந்துபரந்தவொளிக்கஞ்சான்
றழல்கொப்புளிக்குங்கொடுந்தவத்துத்தகைசால்பலிகண்மலர்த்தினுன். ()

திணிச்சித்திரத்தோளொருநான்குஞ்செந்தாமரையுங்கழுமுள்ளுங்
கணிச்சிப்படையுமோதகமுங்கணேசருருவமுழுவதும்பார்த்
தணிச்சித்திரம்போனின்றபலியற்றமரம்போலெதிர்வீழ்ந்து
பணிச்சித்திரநாகத்தொடையற்பரமாவருளென்றுரைசெய்வான். (௧௨)

இமைக்குமளவிற்பேரண்டமெனைத்தும்புருவச்சிறுநெறிப்பாற்
குமைக்கும்பெருமானடியேன்பாற்கோபமின்றிப்பெருங்கருணை
யமைக்கவேண்டுமதுவன்றியடியேன்பிழைத்தேனுயினுநீ
கமைக்கவேண்டுமெனவிரந்தான்கணேசர்கருணைகூர்ந்தருள்வார். (௧௩)

தண்டாமரைக்கணமரிருவர்தம்மாற்றழற்கணுருத்திரனுற்
பண்டாரணத்தாலளந்தறியப்படாதவொருநாம்பேரன்பு
கொண்டீர்த்திடநீபுரிந்தவக்கோணைக்கயிற்றுலிறுகுறக்கட்
டுண்டேங்கடுத்தாம்வரங்கேளென்றுரைப்பபலியும்வரங்கொள்வான். (௧௪)

மருள்கால்வினைகள்கால்சீத்துவளர்மெய்ஞ்ஞானப்பேரொளியே
யருள்காணினதுதிருமேனியலங்குமொளியிளிரேணுவினு
லிருள்கால்சீத்துவையகத்திலிலகாநின்றூர்மழையாதிப்
பொருள்கால்பரிதிமதியங்கியெனப்பேர்பூண்டபுலவர்களே. (௧௫)

வரையாப்பெருமைப்புகழோயிவ்வையமுழுதுமற்றுனது
விரையாக்கலியானடக்கின்றதன்றேவேதசாத்திரமு
முரையாநின்றவுலகனைத்துமுனதுசொரூபமெனவந்த
வரையாநினதுதெரிசனமேயனைத்துவரமுமடியேற்கே. (௧௬)

மூவாமுதல்வன்றிருக்காட்சிமுகிழ்த்தகருணையால்யானே
தாவாப்பெரும்பேறுடையேனென்றந்தையவனும்பேறுடையா
னோவாத்தவமும்பயன்பட்டதொன்றுமறியாச்சிறியேனிங்
காவாநின்சீர்யாதறிந்திட்டறைகேனறையமாட்டேனே. (௧௭)

மெய்யாயெனக்குவரந்தருதன்மெய்யேயானுன்மூன்றுலகும்
பொய்யாதெனக்குவசமாகப்புணர்கவலாரிமுதற்றேவர்
கையாப்புடையமரபினராய்க்கடைகாத்தடியேனிடுமேவ
ணையாதாற்றிச்சேவிக்குநவைதீர்கொற்றமெனையுறுக. (௧௮)

எந்தப்பொருளையெந்தெந்தவேலையெளியேன்விழைந்தாலு
மந்தப்பொருளேயந்தந்தவமயத்தளியேற்கெளிதுறுக
சந்தப்பதுமமலர்புரைநின்றாளிலன்புமிகவுறுக
பந்தப்பவம்விட்டந்தத்திற்பரநானுறுகவென்றிரந்தான். (௧௯)

ஆராவமுதாயடிநினையுமடியாருள்ளத்தள்ளூறும்
பேரானந்தப்பெருக்கானபெரியபெருமானருள்செய்வார்
வாராய்சிறுவாநீவிழைந்தவரங்கள்கொடுத்தாநினதேவ
நீராதியற்றிமூவுலகுஞ்சேவைபுரியுமெஞ்ஞான்றும். (௨௦)

இரும்புவெள்ளியிரணியத்தாலியன்றமூன்றுபுரமுனக்கு
விரும்பிக்கொடுத்தாமவற்றினுக்குவிளம்புநாமந்திரிபுரமே
யரும்புபுகழோய்க்குலகனைத்துமறையுநாமந்திரிபுரனே
கரும்பனெரியவிழித்தவனோர்கணையாலன்றியழியாவே. (௨௧)

நினைத்தவிடத்திற்றிரிபுரமுநினைக்குமுன்னஞ்செலும்வண்டு
கனைத்துமதுவுண்டெதிரெடுக்குங்கடுக்கைச்சடையானொருகணையா
லனைத்துமழிக்குமஞ்ஞான்றேயழியாமுத்தியுறுவையென
வெனைத்துமருளியேரம்பனீம்மென்றாங்குமறைந்தனனால். (௨௨)

பமரமடுக்குங்கரடமதப்பனைக்கைமுகவனருள்வரங்கேட்
டமரர்நடுங்கிப்பெருங்கவலையாழிபடிந்தார்திரிபுரனும்
விமலத்தவத்துக்கிருச்சமதன்விரைத்தாளிறைஞ்சிப்பேறுரைத்துச்
சமரிற்கிளருங்கருத்தினொடுதங்கினான்புட்பகவனத்தில். (௨௩)

புள்ளூறறியாவிதழ்பரந்துபொகுட்டுவாய்ந்ததெய்வமணக்
கள்ளூறியதாமரைக்கடவுள்கணேசர்கமலத்தாண்மலர்த்தே
னள்ளூறுளத்துவியாதனெனுமறவோய்பலியேதிரிபுரனுத்
தெள்ளூறியமெய்வரம்பெற்றசெய்தியிதுவாமெனப்புகன்றான். (௨௪)

அன்றுபலிமாதவமாற்றியமலனருள்சேர்புட்பகத்தை
யின்றுபுவியோர்வங்காளமென்பரவன்கொள்வரமுரைப்ப
நன்றுதெரிந்தாயினிச்சோமகாந்தவவன்கோனடத்தியது
மன்றவறிவாயெனக்கிளப்பான்மறுவில்பிருகுமாதவனே. (௨௫)

**திரிபுரன்வரம்பெறுபடலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம்-௧௯௭௧.



## ௩௪ - வது திரிபுரனரசாட்சிப்படலம்.

அரியுகைத்தருளுநால்வாயைங்கையாறனையதானக்
கரிமுகன்கருணைபெற்றுக்களித்தபினாற்றல்சான்ற
திரிபுரன்யாதுசெய்தான்செப்பெனவியாதன்கேட்பப்
பெரியகுண்டிகைசேரங்கைப்பிரமன்மேலுரைக்கப்புக்கான். (௧)

கண்டவர்வியக்குமந்தக்கணேசமாபுரத்திலன்னான்
கண்டகச்சிலையாற்கோயில்கண்டலங்கரித்தூக்கண்ணாற்
கண்டதெவ்வண்ணமந்தவண்ணமேகணேசமூர்த்தி
கண்டகச்சிலையாற்செய்துகாதலாற்பதிட்டைசெய்தான். (௨)

நித்தலும்பூசையாற்றிச்சிலபகனீங்கிப்பின்னர்ப்
பைத்தவாரிதிசூழ்மண்ணிற்பார்த்திபர்தம்மோடேற்றுப்
பத்தியினிறைஞ்சினார்க்குப்பணிகொடுத்திறைஞ்சாதாரைச்
செத்துவேற்றுருவினோடும்விண்கொளச்செலுத்தினானே. (௩)

இடங்கொள்பாதலத்தினேகியெரிமணிச்சூட்டுப்பேழ்வாய்
விடங்கொள்வாலெயிற்றினோர்கள்விடங்களிலவர்களாக்கி
மடங்கவன்போரின்வென்றுமணிமுதலானசெல்வ
மடங்கலுங்கவர்ந்துகைக்கொண்டவனியின்மீண்டுபோந்தான். (௪)

திக்கினும்பாதலத்துஞ்சிறந்தவானிலத்துஞ்சாலத்
தொக்கதானவர்களெல்லாந்துன்னினர்வணங்கிப்போற்ற
மிக்கருட்பார்வைநல்கிவேண்டியசிறப்புச்செய்து
தக்கதன்பதாதியாக்கிக்கொண்டனன்றறுகண்வீரன். (௫)

விசிமுரசியம்பவேலும்விசிகமுமழுவுந்தண்டு
மசியுமற்றெவையுமேந்தியவுணர்கடிங்களில்லா
நிசியெனமருங்குமொய்ப்பவெனாரேலெனப்புவிநின்றேகிப்
பசியபொன்னகரிற்கற்பப்பணிமலர்ச்சோலைபுக்கான். (௬)

மைந்துறுவீரராங்குவைகியசிலதரோடு
நந்தனவனத்தைச்சாடநவையறுதேவதூத
ரிந்திரற்கோடிச்சொன்னாரெய்தியவவுணர்கோனு
முந்திவன்றூதர்தம்மையவரும்போயுரைக்கலுற்றார். (௭)

எரியுமிழ்குலிசவேற்கையிந்திரவெங்கள்கோமான்
திரிபுரனிங்குப்போந்தான்றெரிசனஞ்செய்யவம்மோ
புரிவொடும்வாராயாகிற்பொன்னுலகாட்சிநீக்கிப்
பரிவுறத்தருமலோகம்புகுந்துவான்படர்ந்துநின்றான். (௮)

அல்லதூஉமடுபோராற்றுமாற்றலுண்டாயின்வல்லே
வல்லபல்படையினோடும்வருகவென்றுரைத்தான்யாது
சொல்லுவதென்றார்கேட்டுத்தொடிக்கரந்தூணிற்றாக்கி
நல்லதென்றிலங்கநக்குநாமவேற்குலிசவேந்தன். (௯)

கடிமலர்க்கமலம்பூத்தகாடெனக்கண்கள்சேப்ப
முடிவதுதோரானாகிமுற்றுபோர்க்கடுத்தேனென்னா
விடியிடித்தெனவன்சொல்லாலியம்பிமற்றவரைப்போக்கிக்
கொடிநகர்முரசிற்சாற்றிக்கொடும்படையெழுகவென்றான். (௧௦)

விடுத்திடுந்தூதர்மீண்டுவிண்ணவர்கோமான்போர்க்கிங்
கடுத்தலேகருதிநின்றானையவென்றிறைஞ்சிச்சொன்னார்

தொடுத்தபூங்கழற்கால்வீரன் றுணர்படுமெரியினெய்யை
மடுத்தெனவெகுளிபொங்கவரவினைநோக்கிநின்றான். (கக)

படையொடுபடைகளுன்கும்பாங்குறமணிப்பொற்கோயிற்
கடைகழன்றமரர்கோமான்களிற்றரசிவர்ந்துகொற்றக்
குடைகொடிமிடையவார்ந்தகுருமயிர்க்கவரிதுள்ள
வுடைகடலோதையென்னவொலிமுரசியம்பச்சென்றான். (கஉ)

சரணங்களுயிர்க்குவாய்ந்தகாட்சியிற்றனக்குவாய்ந்த
வரணங்கள்விசித்தவாக்கையமரர்கண்மருங்குசூழ
விரணங்கொள்வயிரவெள்வேலிந்திரனெய்தலோடுந்
திரணங்கண்டனையனுகித்திரிபுரனமரினேற்றான். (கங)

புண்ணியமோடுபாவம்பொருதெனவவுணர்சேனை
விண்ணவரொடுபோராற்றிமிடல்சிறிதொழியநோக்கிப்
புண்ணிடைவேலிட்டென்னப்பொருதெழுமனத்தனுகித்
திண்ணியவாமாவூர்ந்துதிரிபுரனூழில்செய்தான். (கச)

அற்றனபடையோடங்கையறுந்தனதாரோடாக
மிற்றனகழலோடொண்டாளிறந்தனமுடியோடுச்சி
செற்றினகுடரோடீரல்சிந்தினவலியோடேக்க
முற்றியவமரர்சேனைமுரிந்தனவவுணன்றாக்க. (கரு)

மந்தரங்கலக்கப்பட்டவாருதியனையசேனை
யிந்திரனோக்கிநோனுனெரியெழவிழித்துச்சீறிக்
கந்தடுகளிநல்யானைகாலெனக்கடுகவுந்தி
வெந்திறலவுணனோடுவெய்யபோர்விளைத்தானன்றே. (கசு)

தொடுத்தபல்வாளிவிட்டதோமரங்குந்தநேமி
விடுத்திடும்பாசமோச்சும்வெய்யவாண்முசலந்தண்டுந்
தடுத்தறுமத்திரங்கடமையுநேர்விடுத்துத்தள்ளி
யுடுத்திரள்சிந்தவார்த்திட்டுந்தினன்பரியைத்தீயோன். (கஎ)

பாய்பரிதனதுமுன்கால்பனைக்கைமால்யானைநெற்றி
தோய்தராநாட்டலோடுந்துண்ணெனவவுணர்கோமான்
காய்கதிர்வாளாலோச்சிக்கடவுளர்கோமான்செங்கை
வாய்தருவயிரவேலுமானமுநிலத்தில்வீழ்த்தான். (கஅ)

கந்துகங்கடுகமீட்டக்கந்துகநெளிந்துதாழ
வுந்திநீணிலத்தில்வீழ்ந்தவுருப்பவிர்குலிசங்கைக்கொண்
டுந்தின்மேல்வந்தவேழமத்தகத்தடித்துவீரஞ்
சிந்தினன்றீயோன்வல்லேதேவர்கோனிலத்திற்பாய்ந்தான். (ககூ)

உழுந்துகண்ணடியின்மேலாவுருளுமுனெழுந்துதாவிக்
கொழுந்துகொள்வீரத்தோடுங்குதிரைமேலிருந்தான்றன்னைச்
செழுந்தனிக்கடகக்கையாற்சென்னியிற்புடைத்தான்றேவர்
விழுந்துவந்தனைசெய்நோன்றாள்வேந்தன்மூர்ச்சித்தான்றீயோன். (உ0)

மூர்ச்சைவிட்டொழிந்தபின்னர்முடிகெழுமமரர்வேந்தன்
றூர்ச்சிறைமார்பத்தோடித்தாக்கினனவனுமூர்ச்சித்
தோர்ச்சியுற்றனியென்னோடுமொண்படையொழித்துமல்லுப்
போர்ச்செயல்விளைக்கவென்றான்பொருக்கெனவவுணன்சொல்வான்.

பதங்கமோவடவைத்தீயைப்படர்சிறைக்காலிற்சிந்துங்
கதங்கடாஅமெனக்குநீமன்கருத்தினுளழிந்தாயஞ்சே

விதங்கெடாதிருக்கவேண்டினிருநிலத்திருக்கையிந்தேன்
மதங்கொளாதாங்குச்சென்றுவாழ்கநின்கிளையோடென்ருன். (உஉ)

கூறுதானவனைவானிற்கொற்றவனேக்கியுன்னை
வேறுபோர்க்கழைத்தல்பற்றிமெலிந்துளேனுகக்கொண்டிவ்
வாறுநீயுரைத்தாயுன்றன்வடிவெலாமீர்ந்துசுற்றும்
பாறுணவளிப்பேனென்றுபகர்ந்துதோள்புடைத்தார்த்திட்டான். (உங)

செருவினிற்கிளருந்திண்டோட்டிரிபுரன்மல்லுநேர்ந்து
குருதிகொப்புளிப்பத்தானுங்கோவமர்கோவைத்தாக்கி
பொருதழித்தானைப்பற்றிப்பொருக்கெனக்கரத்தாற்றூக்கி
யிருவிசும்பிடைவட்டித்துவிட்டனனிமைக்குமுன்னர். (உச)

அந்தரநிவந்தசோலையலர்பசுங்கோட்டிருல்கண்
மந்திகளுகளுந்தோறுங்கிழிந்துவார்மதுநீர்பாய்ந்து
செந்தினைவிளைக்குஞ்சாரற்சிலம்புசூழிமையப்பாங்க
ரிந்திரன்வீழ்ந்துமூர்ச்சித்திறந்தவன்போற்கிடந்தான். (உரு)

தெம்முனைசாய்க்குந்தன்கோன்றிரிபுரற்குடைதல்கேட்டுப்
பொம்மன்மென்குழல்கள்சோரப்புலோமிசைநிலத்தில்வீழா
வம்மவோவம்மவோவென்றழுதுமாழாந்துதேவர்
தம்மொடுமிரியல்போனுடமனியவுலகநீத்து. (உசு)

நிலைப்பொழியமரரெல்லாநேரிழைச்சசிதன்னேடு
மிலைப்புரைகிளைத்துப்போகியிந்திரன்கிடப்பக்கண்டு
தலைப்படுமெழுத்தோவென்றுதளர்வுதீர்த்தவனேடந்த
மலைப்புழைமுழைகடோறும்வைகினர்கரந்துமாதோ. (உஎ)

செங்களநீங்கியந்தத்திரிபுரனுன்குகோட்டு
வெங்கயத்திவர்ந்துவெற்றிமுரசொடுவளைகள்விம்மப்
பொங்கெழின்மாடமேடைப்பொன்னகர்புகுந்துவேந்தன்
றங்கியகோயில்சார்ந்துதவிசின்வீற்றிருந்தானன்றே. (உஅ)

நிரம்பியகளியனுகிநீடுவான்குடிகளெல்லாம்
பரம்புதன்னுணைக்குள்ளேபயிலுமாமுரசிற்சாற்றி
யரம்பையர்நடனஞ்செய்யவமைத்துக்கின்னரர்கள்வீணை
நரம்புளர்ந்திசைகடேக்கநலத்தகவரசுசெய்தான். (உகூ)

சிலபகல்கழித்தபின்னர்த்திசைமுகனுலகஞ்சார்ந்தா
னலரவன்வருவதெண்ணியாழியானுலகம்புக்கான்
மலரவன்றன்னைக்கொண்டுமாலும்வைகுந்தநீங்கிப்
புலவர்கள்கரந்துவைகும்பொன்னிமையத்தைச்சார்ந்தான். (கூ0)

சார்ந்தவன்பிரமனில்லாச்சத்தியவுலகைநோக்கி
யார்ந்ததன்னுணையங்குமமைத்துவைகுந்தத்தெய்தி
யூர்ந்திடுமணையினுனுமொழிந்தமையுணர்ந்திட்டாங்குங்
கூர்ந்ததன்னுணைவைத்துக்குவலயத்திறங்கினனே. (கூக)

வரம்பலகொடுத்தவைங்கைவள்ளலைப்பூசையாற்றிப்
பரம்பரவரமுன்றந்தபாழியம்புரிசைமூன்று
முரம்பெறவின்றுநாயேற்குதவுகவென்றுநின்ருன்
புரம்பலவளத்தினேடும்பூத்தனவிசும்பினம்மா. (கூஉ)

வேறு.

கற்பகப்பொதும்பருங்காமதேனுவும்
பொற்பமர்நிதிகளும்பொருவிலாதபல்

லற்புதப்பொருள்களுமளவில்செல்வமு
முற்பவித்தனவுறுபுரங்கண்மூன்றுமே. (கரு)

இந்திரனுலகமுமெனைத்துமாக்கிய
வந்தணனுலகமுமாழியேந்திய
சுந்தரனுலகமுந்துணையுறுவெளின்
பின்றொருபுரநிகர்பேசற்பாலதோ. (கசு)

தடையறவெங்கணுஞ்சாரவல்லவா
யுடையவன்முத்தியையுறுமப்போதலா
லிடையழிவின்மையினெயில்கண்மூன்றுமுன்
னடைதருசுக்குமவாக்கைபோன்றவே. (கஎ)

கரும்பொனின்வெண்பொனிற்காமர்செம்பொனிற்
றரும்பெருமுப்புரமுயிர்தமக்கெலாம்
விரும்பியபோகங்கள்விளைத்துநல்லித
மரும்புதல்செய்யுமூன்றாக்கையும்பொரூஉம். (கஅ)

திண்டிறலுடையவன்றிரிபுரப்பெயர்
கொண்டவன்றிரிபுரங்குலவிநின்றமை
கண்டனன்கரையறுகளிப்பினீடினு
னண்டர்கள்பிரான்றிருவருள்வழுத்தினான். (கஎ)

தனையர்கண்மூவரைத்தன்மனத்தினு
னினையுமுன்றோற்றினனவர்க்குநீடிய
வனையமுப்புரமுமூன்றாகவைகிய
வனைபுகழுலகமும்வழங்கினனரோ. (கஅ)

வச்சிரதமிட்டிரன்மருவலார்தமை
வெச்செனத்தாக்கிடும்வீமகாயனே
கச்சமில்பெருவலிக்காளகூடனென்
றச்சிறுமைந்தருக்கறைவர்நாமமே. (கக)

மானமிக்குடையதன்மைந்தர்மூவர்க்கும்
வானவர்முதலியமற்றையாவர்க்குந்
தானொருமுதல்வனுய்த்தந்திமாமுகற்
கானபூசனைபுரிந்தமர்ந்துவாழ்ந்தனன். (௪0)

சுகிலமேசுபிலமேசுவிர்த்தியேயெனப்
பகர்வர்கண்முறையினப்பாழிநொச்சியைச்
சுகிலமண்சுபிலமந்தரஞ்சுவிர்த்திசேர்
மிகுதுறக்கத்தினுமேவிவைகின. (௪க)

வேறு.

காமெருவார்க்கருள்வச்சிரதமிட்டிரன்வீமகாயன்காள
கூடனிவர்முறையானேசுகிலமுதன்முப்புரத்துங்கூடிவாழ்ந்து
நீமெரசாட்சிபுரிந்திருந்தனர்கடிரிபுரன்சொன்னெறியாலென்றும்
பாடியன்முப்புரமொருசாராயிரமாண்டினுக்கொருகாற்பண்பிற்கூடும்.(௪உ)

முப்புரமுந்தனித்தனியேநூறுயோசனையுயரமொழிவிசால
மப்படியேயமைந்துதன்பாலமர்ந்தரசுபுரிவோர்களகத்தின்வேண்டு
மெப்பொருளும்வழங்கியவரேகநினைந்துழியேகியிருந்துமாறுத்
துப்பினர்கள்குலத்தோமெழியவழித்திருந்தனவான்சுரர்களஞ்ச. (௪௩)

மீட்டுமிருவரைச்சண்டன்பிரசண்டனெனமனத்தின்வேறுண்டாக்கிக்
கோட்டமில்சண்டனைப்பிரமவுலகத்துமாதவன்வைகுந்தந்தன்னி
லீட்டுபுகழ்ப்பிரசண்டன்றனையுமவர்போலிருப்பவேவிப்பின்னர்
மோட்டிளமென்முலைமனைமாதுடன்கூடியொருமகனைமுகிழ்த்தானன்றே.

திரிபுரனிவ்வாறுலகமுழுவதுந்தாட்படுத்துமிகுசெல்வமல்க
வரிமதர்க்கண்மடமாதர்பெரும்போகக்கடலழுந்தியறங்கள்பேணி
விரிபுகழெண்டிசைபோர்ப்பவிநாயகர்பூசனையோடுவிமலைபாக
ருரிமைகொளுஞ்சிவலிங்கபூசனையும்புரிந்துலப்பில்காலம்வாழ்ந்தான். (சரு)

தேக்குபுகழ்த்திரிபுரன்முன்னரசாட்சிபுரிந்ததிதுதெளிகநீயென்
றாக்கமிகுவியாதமுனிக்குரைத்தனனுன்முகனதனையுனக்குச்சொன்னேம்
வீக்கியபூங்கழற்சோமகாந்தவினிவிண்ணோர்கள்விமலற்போற்றிப்
பாக்கியஞ்சேர்வரம்பெற்றததிகவெனப்பிருகுமுனிபகரலுற்றான். (சசு)

திரிபுரனரசாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ளஎளஎ.



## ருடு - வது தேவர்கள்வரம்பெறுபடலம்.

இமையமால்வரைக்கந்தரத்தெய்திய
வமரர்யாதுசெய்தாரருளாயெனுந்
திமிலமாமறைசெய்தவியாதனுக்
கிமிழுமார்வத்தியம்புவனுன்முகன். (க)

புகலிடம்பிறிதின்றிப்பொருப்பினு
ளகனுடைந்தழிவெய்துமமரர்முன்
மகதியாழ்முரன்மாதவனண்ணினன்
முகமலர்ந்தவர்தாழ்ந்துமொழிகுவார். (உ)

வெய்யமுப்புரன்வெற்றிமிகுந்தனன்
வையமூன்றுந்தன்னாணைவயக்கினு
னையனேயவனாலலையுண்டியா
நையுநெஞ்சொடுநாளுமினைந்துளேம். (ங)

யாவனால்வரமெய்தினனன்னவன்
யாவனாலிறும்யாங்களினிச்செயல்
யாவதோதுகவென்றனர்நாரதன்
யாவதுந்தெளிந்தேயினிதோதுவான். (ச)

மோக்குங்கையுடைமுன்னவன்பூசையா
லாக்கிக்கொண்டனனாற்றலொடியாவையு
மூக்கமிக்கவன்றனையோரம்பினாற்
றாக்கவல்லவன்சங்கரனேயரோ. (ரு)

அந்தவீசனவனெடுமுப்புரஞ்
சிந்துதற்குந்திருக்கரமைந்துடை
மைந்தன்சூட்சியும்வேண்டுமெதக்களிற்
றெந்தையைச்சரணெய்துகநீயிரே. (சு)

சேட்டைத்தேவர்தந்தேவர்பிரான்கழ
லோட்டைநெஞ்சுடையேமுறல்யாதென
வேட்டையெய்தியிரங்கலீர்மந்திரங்
கேட்டுநன்குகிளந்தனுட்டிக்கவே. (எ)

வாசநீர்படிந்தாடிவருகெனப்
பேசினான்பெருந்தேவர்கள்யாவரும்
வீசுதெண்டிரைமென்புனலாடினார்
பூசிவெண்பொடிபோந்துவணங்கினார். (அ)

வணங்குதேவர்க்குமாதவநாரத
னிணங்கவோரெழுத்தாலியைமந்திர
மணங்குதீர்தரவஞ்செவியோதினான்
குணங்கொண்டன்னவர்கூறவிட்டேகினான். (கூ)

ஒற்றைத்தாளினின்றும்பர்களன்பினால்
வெற்றியானைமுகத்துவிநாயகன்
பொற்றசேவடிபுந்திவைத்துத்தவ
முற்றுமாமனுவோதினர்பல்பகல். (க0)

அன்பினர்க்கவர்தம்மினுமன்பின
னென்பணிக்குமிரங்கும்பராபரன்
வன்புநெஞ்சுடையார்க்கொருவைகலு
முன்புறுதவன்முன்புநின்றானரோ. (கக)

வேறு.

பொன்முடியுமதனருகேபொழிகிரணவிளமதியும்
பன்மணிச்செய்குண்டலமும்பணைத்தோளினங்கதமு
மின்மறியுந்திருமேனிவிளங்கொளியுமரைநாணும்
வன்மருப்பினிடைச்சுற்றும்வார்ந்துதிரள்புழைக்கரமும். (கஉ)

பாசத்தைமிகப்பறிக்கும்பாசமுந்தோட்டியுமழுவும்
வாசத்தினறுங்கமலமலருமணிநாற்கரமுந்
தேசத்தினில்லாததிருவழகுந்திகழ்வெய்த
நேசத்தினெதிர்நின்றநிமலனையாவருங்கண்டார். (கங)

பருதியெதிர்வரமலர்ந்தபங்கயம்போன்முகமலர்ந்து
வெருவுதலோடன்புளத்தில்விரவவமரர்கள்வல்லே
திருவடியினெதிர்வீழ்ந்துசென்னியிருகரமேற
வருவிழித்துணைகாட்டவள்ளுறப்பழிச்சுவார். (கச)

வேறு.

தத்துவாதீதபோற்றிதத்துவப்பொருளேபோற்றி
தத்துவமுதலேபோற்றிதத்துவசொரூபபோற்றி
தத்துவத்தியன்றதாத்துவிதக்களுமானாய்போற்றி
தத்துவவறிவுக்கெட்டாத்தயங்குபேரறிவேபோற்றி. (கரு)

உடலினுக்குயிரேபோலவுயிர்க்குயிரானாய்போற்றி
யுடலுயிர்க்கறிவுநல்கியுடலினைச்சுழிப்பாய்போற்றி
யுடலுயிரெனப்பினீங்காவொற்றுமைப்பொருளேபோற்றி
யுடனுறையுயிர்க்குமெட்டாவொளிர்பெருஞ்சோதிபோற்றி. (கசு)

விரவுதத்துவத்தினீங்கிமேலெனநின்றவாவி
வரமுறவுருவுகொண்டுவந்தருள்குரவபோற்றி
பரவுமைந்தொழிலைநீக்கியுயிரினைப்பணிப்பாய்போற்றி
துரியத்தினுயிரைவாங்குஞ்சுடர்ப்பெருங்கடலேபோற்றி. (கஎ)

பத்தர்கள்வழங்காநின்றபலவுங்கைக்கொள்வாய்போற்றி
புத்திகள்போகத்தார்க்குப்புணர்த்தருள்போகிபோற்றி
முத்தியையோகத்தார்க்குமுடித்தருள்யோகிபோற்றி
யெத்தொழிலவர்க்குமந்தப்பயனருளிறைவபோற்றி. (கஅ)

வேண்டியவடியார்க்கெல்லாம்விக்கினங்கெடுப்பாய்போற்றி
வேண்டிவந்தனைசெய்யார்க்குவிக்கினங்கொடுப்பாய்போற்றி
வேண்டுவார்வேண்டிற்றெல்லாம்விளைத்தருள்விமலபோற்றி
மாண்டதுட்டர்களைக்கொல்லுமறமிகுமள்ளபோற்றி. (௧௯)

வழுத்தியதுதிகள்கேட்டுவள்ளலார்சுரரைநோக்கி
விழுத்தகுவரங்கள்யாவைவிளம்புகதருதுமென்றான்
பழுத்தவன்புடையராயபண்ணவர்பணிந்துசொல்வார்
தொழுத்தையேந்துயரமெல்லாந்தோன்றல்காணாதன்றே. (௨௰)

செம்மனின்வரத்தான்மாறாத்தீங்கெமக்கிழைத்துவைய
மும்மையுந்தன்கைக்கொண்டுமுடிவிலாவாற்றல்சான்ற
கொம்மைமுப்புரத்தினானைக்கொம்மெனக்கொன்றுபின்னர்
விம்மனேயெமக்குத்தீர்க்கவேண்டுமென்றிரந்துநின்றார். (௨௧)

அஞ்சியதேவர்நுங்களல்லலோடழிவிலாற்றல்
விஞ்சுமுப்புரத்தினானைவிளித்திடுஞ்சூழ்ச்சிசெய்து
மஞ்சணிமிடற்றினானைவல்விரைந்தடைமினென்று
செஞ்சொலினியம்பியைங்கைச்செம்மலாரிதுவுஞ்சொல்வார். (௨௨)

அந்தரத்தமரர்நீயிரறைந்ததோத்திரத்தைமும்மைச்
சந்தியினியம்புவார்க்குச்சகலவிக்கினமுந்தீருஞ்
சிந்தையின்விழைந்தவெல்லாஞ்சேருமென்றருளியல்லே
வெந்திறலவுணர்கோமான்மேவும்வங்காளஞ்சார்வார். (௨௩)

இருபிறப்பாளர்தம்முளிலகொருதிலகமென்னத்
திருவுருவுடையராகித்தேவியுமருங்குநண்ண
வருமறைமுனிவர்சூழவடுத்துவங்காளமென்னுந்
திருநகர்வீதியூடுசென்றவன்கோயில்புக்கார். (௨௪)

அரியணைபொலிபவைகியரசுவீற்றிருக்குமாண்மைத்
திரிபுரனோக்கியன்புதிளைத்தெழவெதிரேசென்று
தரியலர்பலரைத்தேய்த்துத்தழும்பியதாளினானை
யுரிமையின்வணங்கிப்போதந்தொளிர்தவிசிருத்திச்சொல்வான். (௨௫)

ஐயரேநீயிர்யாவரடுத்ததெக்கருமம்வேண்டிச்
செய்யவாய்மலர்த்தல்வேண்டுந்திரிபுரன்றனக்கெய்தாத
வெய்யதாம்பொருளொன்றில்லைவிழைந்ததுதருதுமும்மை
வையமுமெனதுசெங்கோன்மருவியததனாலென்றான். (௨௬)

திரிபுரனுரைப்பக்கேட்டுத்தெள்ளியமறையோர்சொல்வார்
கரிசறுமெம்மையாருங்கலாதரரென்றுசொல்வா
ரரிவளருலகமாதியனைத்துலகெழிலுநோக்கி
வரிசையிற்றிரியாநிற்குமாதவமுனிவரேயாம். (௨௭)

கொடையினாற்புகழாற்சீராற்கோமளவனப்பால்வீரப்
படையினால்வலியாற்றேசாற்பலவகைப்பொருளாலெங்கை
யுடையவன்பாதப்பூசையுஞற்றபத்திமையினானு
மடையலர்பணிக்குநின்னைக்காணியவடுத்தாமீங்கு. (௨௮)

மூவர்களுலகம்வேண்டேமுறைசெயுன்னரசும்வேண்டேங்
காவலவிரந்ததீயுங்கடப்பாடுநினக்குண்டாமேற்
பூவையைமருங்குவைத்தபுண்ணியன்கயிலையைங்கைத்
தேவனதுருவஞ்சிந்தாமணியெனத்திகழ்ந்துவைகும். (௩௧)

முத்தலைச்சூலத்தண்ணன் முறையுளிவழிபாடாற்ற
நித்தலும்பூசைகொண்டுநின் மலக்கணேசர்வைகு
மத்தகுமூர்த்திதன்னையளித்திடல்வேண்டுமென் றங்
குத்தமமறையோன்சொல்லவுவந்தவனுரைக்கலுற்றான். (௫௦)

அங்கநான்மறைகடேர்ந்தவந்தணுவந்தமூர்த்தி
சங்கரன்பாலதென்றுதளரலையதனையந்தச்
சங்கரன்விண்டுவாதிசகலவிண்ணவர்களோடு
மிங்குநின்முன்னருய்ப்பேனென்வலியறிகவென்று. (௫௧)

தண்ணடைபத்துந்தூசுந்தமனியக்குவையுமென்று
மண்ணுதல்புரியாத்தேசுவளர்மணிபலவுநல்கி
யண்ணலேசிலநாட்குள்ளேயழைப்பித்துத்தருதுமிங்கே
நண்ணிவாழ்ந்திருக்கவென்றுநயந்துகைகுவித்துநின்றான். (௫௨)

முப்புரன்மொழியக்கேட்டுமுகமலர்ந்தந்தணாள
ணிப்புரந்தனக்குப்பாங்கரிளகியவனத்துவாழ்து
மொப்பிலாமூர்த்திதன்னையொய்யெனத்தருகவென்று
செப்பினனுசீர்வாதஞ்செய்தனனெழுந்துபோந்தான். (௫௩)

திறந்திகழ்தூதர்தம்மைத்திரிபுரனழைத்துநீயி
ரறந்திகழ்கயிலாயத்தையடுத்தரன்பாதந்தாழ்ந்து
சிறந்திருக்கின்றசிந்தாமணியெனுந்தேவையெங்கண்
மறந்திகழ்மன்னனும்பால்வாங்கிவந்திடுகவென்றான். (௫௪)

பலியெனும்பெயரானன்றேபண்பொடுமுதவாயாயின்
வலியினிற்கொள்வன்பின்னர்மலிதுயருழத்தியென்று
நலிவறவுரைத்துவாங்கிநண்ணுதிர்வல்லையென்றான்
மெலிவறுதூதரன்னானேவலின்மேவினாரே. (௫௫)

கடவுளர்கணேசர்பாதங்கருத்துறவிருத்திப்போற்றி
யிடர்தபுவரங்கள்பெற்றதிதுவெனவியாதன்கேட்பக்
கடல்விளையமிழ்தமென்னக்கட்டுரைத்திட்டான்றெய்வ
மடலவிழ்கமலச்சேக்கைமருவியவெண்கணனே. (௫௬)

கருங்கழல்புனைந்தசோமகாந்தனேவரங்கள்விண்ணோ
ரொருங்கருட்கணேசர்பாங்கருற்றமையுணர்ந்தாயன்னோர்
மருங்குசென்றிரப்பச்சூலவள்ளலும்வரங்கள்பெற்ற
பெருங்கதையினிக்கேளென்றுபேசுவன்பிருகுவென்பான். (௫௭)

தேவர்கள்வரப்பேறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௭௫௪.



## ௫௯-வது விமலன்விநாயகரருள்பெறுபடலம்.



வரங்கள்பெற்றபின்வானவரென்செய்தா
ரிரங்குகென்றுவியாதனிரத்தலுங்
கரங்களிற்கதிர்க்குண்டிகைபாசந்தீ
தாங்கவேந்தியவாரணனோதுவான். (௧)

ஊழ்ந்தநெஞ்சுடையும்பர்கள்யாவரும்
போழ்ந்தவெண்மதிப்பொற்சடையாரருள்
வீழ்ந்திரங்கிடமேவுதும்யாமெனச்
சூழ்ந்துளத்துத்துணிந்திதுசெய்தனர், (௨)

பருதிவெண்மதிபல்லருளாகவு
மிருதவற்றினிடுங்கதிராகவு
மருவுகின்றமதங்களுள்ளாகவு
மருளுமாளெனுமாயைசூட்டாகவும். (ங)

காட்டைமூர்த்தமுன்காலமச்சாகவும்
வாட்டமில்புவிவைகுதட்டாகவுங்
கோட்டமில்குளிர்வான்றவிசாகவு
மீட்டுபல்கலையோர்முளையாகவும். (ச)

மந்தரம்மிசைவட்டமதாகவு
மந்தரந்தொடுமாண்மையிமகிரி
கொந்தொளிப்பொற்கொடுஞ்சிகளாகவு
முந்துகூம்புதயாசலமாகவும். (ரு)

வழுவிலேனையமால்வரையாவையுந்
தழுவுதூணிரையாகவுந்தத்துவங்
குழிசியாகவுங்கொண்டற்குழாமெலாங்
கெழுமுகின்றகிடுகுகளாகவும். (சு)

காமமாதியுங்கன்மேந்தியங்களு
மேமமார்ந்தஞானேந்தியமென்பவுஞ்
சேமவாபரணத்திரளாகவும்
வாமவண்டங்கண்மாலைகளாகவும். (எ)

புராணமங்கம்புணர்மணியாகவும்
விராவுடுக்கள்விதானங்களாகவு
முராவுமேழ்கடலொண்டிரையாகவும்
பராமருத்துவர்தாம்படியாகவும். (அ)

கங்கையாதிக்கடவுணதியெலாம்
பொங்குசாமரைவீசிடும்பூவைய
ரங்கஞகவுமற்றையவாறெலாம்
பங்கமில்லாப்பதாகைகளாகவும். (கூ)

திதியும்வாரமுஞ்சேர்ந்தபன்னுள்களுங்
கதுவுவேகக்கடும்பெணவாகவு
மதிமுடிச்சடைவள்ளலுக்கேற்புற
வெதிரிலாதவிரதமொன்ருக்கிஞர். (க0)

படரும்வேதம்பரியெனப்பண்ணினர்
சுடர்வசுக்கயிறுகத்தொடுத்தனர்
மடனிலாரணமார்க்கமிரண்டுமே
தடவுவாணுகமாகத்தளைத்தனர். (கக)

விளவிலாதவிழுப்பரிகட்குப
நிடதந்தார்நிரையாக்கிநிரைத்தனர்
குடிலைமத்திகையாம்வகைகொண்டுநான்
கடவுபாகனெனக்கலித்தேனரோ. (கஉ)

மேருவில்விறல்வாசுகிநாணகணை
சாரும்விண்டுவலகுசமனிற
கூருமொண்வளியோங்கும்வடவையே
கூருமாயினகொற்றஞ்சிறப்பவே. (கங)

வேறு.

செய்ததேரொடும்படையொடுந்தேவர்கள்பலரும்
வெய்துவான்றொடுங்கயிலைமால்வரைதனைமேவிக்
கொய்தமாமலர்குடங்கையிற்கொண்டுதூயிறைஞ்சி
யைதுபோற்றிநின்றமலனூர்க்கன்பொடுமொழிவார். (கச)

ஊருமூர்தியுமூர்களேயாகியவொருத்தற்
காருமாழ்கினேமடிகளாரவனுயிரடர்ப்பச்
சேரும்வையமேவையமாத்திணிசிலைசிலையாச்
சாருமாறுசெய்தாமவைதழுவுகவென்றார். (கரு)

உரைத்ததேவர்களொள்ளியவாசகங்கேளா
விரைத்தபூங்குழன்மாதொடும்விமலனுரெழுந்து
நிரைத்தமாமணிநீடுகோபுரத்தலைநீங்கிக்
குரைத்தமணித்தேர்விழிகுளிர்ப்பநோக்கினரால். (கசு)

உவகைபூத்தனரும்பரார்முகத்தினைநோக்கிக்
கவலைதீர்ந்தினிக்களிப்பொடுமிருமினோவுங்கட்
கவலமாக்குமுப்புரத்தையுமரைக்கணத்தவித்துச்
சிவமெலாந்தருவாமெனக்கோயிலுட்சென்றார். (கஎ)

ஆயகாலையிற்றிரிபுரன்விடுத்தவத்தூதர்
மேயினூரவன்விளம்பியவுரையெலாம்விரிப்பச்
சீயிராதவனமர்க்குறச்செப்புகென்றவரை
யேயினூர்புரமிறுப்பதற்குபாயமெண்ணினரால். (கஅ)

தனித்திருந்தலர்விழிகளுஞ்சரங்கண்மூன்றொடுத்துக்
குனித்தவில்லியைக்குழைத்தகண்பொரத்தியானித்து
மனித்தர்தேவர்காணன்மனுவானவோரெழுத்தை
யினித்தகாதலாவெண்ணிமாதவஞ்செய்தீதறைவார். (ககூ)

சயசர்வேசனேசகலமுமறியுந்தத்துவனே
யயர்விலாப்படைப்பளிப்பழிப்பருளுங்காரணனே
மயரிலாதவவானவரனைவர்க்குமிறைவ
வுயரனுதநீயாதலாலுன்னையானிரக்கேன். (உ0)

எம்பிரானுனதியற்கையாகியவெழிலுருவ
நம்பினேற்கெதிர்காட்டுகநாரணன்முதலா
வும்பரார்திரிபுரன்றனக்குடைந்துபோய்க்கரந்து
செம்பொன்மேருவிற்றெருமந்தாரிற்றைநாள்காறும். (உக)

தெளிக்கத்தக்கவர்க்கருள்செயுந்தேவநின்னருளா
லளிக்கத்தக்கவரவரிடரகன்றுபோய்த்தத்தங்
களிக்கத்தக்கவாழ்பதவிகள்கைக்கொளப்புரத்தை
விளிக்கத்தக்கசூழ்ச்சியுமெனக்கருளுதல்வேண்டும். (உஉ)

ஐந்துபூதமுமடிகளாணையினசைகின்ற
விந்தவையகமிலகுகின்றதுநினதிடத்திற்
சிந்தையாழியினகிலமுஞ்செய்வினைக்கெல்லா
மைந்துமேவுமுட்சாட்சியாய்வயங்குகின்றனையால். (உங)

மாயையாகியபடலத்தினுன்மறைப்புண்டு
தீயதாஞ்சமுசாரமாகியசெறிவனத்து
மேயினுரெலாந்தனுத்தொறுமிகுதவம்விளைத்துத்
தூயஞானத்தினுலுனைத்தொடர்ந்துவக்கின்றார். (உச)

உரியமாதவம்புரிந்தியோகுழப்பவர்க்குளத்தின்
விரியும்வானொளியேயகம்வெளியிவைவிலக்கித்
தெரியுஞானியர்க்கெங்குமாய்ச்செறிந்தபேரொளியே
யரியவான்பொருளேயெனப்பராயகத்திரந்தார். (உரு)

இரந்ததம்பிரான்முகத்தினின்றெம்பிரான்தோன்றிப்
பரந்ததேசுமைவதனமும்பத்திருங்கரமுஞ்
சுரந்தபேரொளிமுத்துமாலையுஞ்சுடரணியு
மரந்தைதீர்த்திடுமருளுங்கொண்டாங்கெதிர்நின்றார். (உசு)

அங்குநின்றருள்கணேசரையமலனார்நோக்கி
யெங்கிருந்தெழுந்தருளினீரிறைவரேநுமக்குத்
தங்குகின்றநற்பெயரெவன்சாற்றுகவென்றார்
பொங்குகின்றதண்கருணையின்விநாயகர்புகல்வார். (உஎ)

எம்மைநாடிநீயிருந்தவம்பலபகலிழைத்த
செம்மையாலுனதானனத்திருமலர்நின்று
மும்மைவையகத்துயிரெலாங்காப்பமுன்வந்தா
மம்மநம்பெயர்கணேசனென்றறிகநஞ்சயின்றோய். (உஅ)

முக்குணத்திராப்பகன்முழுவதும்விளையாடு
மக்குணத்தினேமருந்தவத்தாலடுத்தமையான்
மிக்குளத்துறுவிழைவெலாம்விரைந்துவேண்டிடுக
விக்கணத்தருள்வாமெனவீசனுருரைப்பார். (உகூ)

அல்லலுற்றிடுமமரர்கண்மகிழமுப்புரனைக்
கொல்லுஞ்சத்தியைக்கொடுக்கநான்மறைக்குமுன்னுக
வொல்லும்பீசத்தினோடெனக்குன்பெயராகச்
சொல்லுமுன்பெயர்மந்திரந்தொடுத்தருள்புரிக. (௩0)

அந்தமந்திரவலியினலாற்றன்முப்புரமும்
வெந்திடப்புரிவேனெனவிநாயகரருள்வார்
நந்தம்பீசதானத்தினனைவையிலாநாம
மைந்துகொண்டநின்றனக்குளதாவதுமதியாய். (௩க)

அதனில்வேறுமோர்பீசத்தைக்கூட்டியம்மனுவை
யிதமொடுங்கவொன்றுபின்னிதனையுஞ்சொல்வார்
கதிசெய்பீசங்கடமக்குமுன்கதுவியபீச
மதுமிகுந்துழாய்வாசுதேவனைவழங்குவதே. (௩உ)

தீதிலாயறிகெனத்திகம்பரனுமவ்வாறே
கோதிலாவகைகொள்ளுகேனென்றனன்கணேச
ராதிபீசத்தைக்கணேசமந்திரத்தொடுமருளி
யோதுநாமமுமரன்றனக்குரைப்பவரானார். (௩௩)

பேசுமாமனுவேற்றலாற்பெருவலியினையாய்த்
தேசுலாவியதேவர்கள்செறிகணங்களுக்கு
மீசனுகையாற்கணேசனென்றிரும்பெயர்நினக்கு
மாசிலாய்மிகவழங்கிடப்பட்டதுமாதோ. (௩ச)

புகலுமானிடக்கணம்புயங்கக்கணமுதலாச்
சகலமாகணங்களுக்குமீசத்துவமுனக்கு
மிகுதலானுமப்பெயர்விளங்கியதெனவிரிப்ப
வகிலவீசரனவர்க்கெதிர்வரம்வழங்குவரால், (௩ரு)

வேதமூவறுபுராணங்கண்மிருதியாகமங்க
ளோதுபோதுமுன்யாவருமுனையுபசரிக்கத்
தீதிலாதவைதிகந்திகழ்சைவமென்றிவற்றுள்
யாதுயாதுசெய்யினுமங்குமிறைஞ்சிட்ப்படுக. (௩௬)

வசியமாதியாவுலககாரியங்கண்மற்றெவையு
நசிவிலாவகையியற்றினுநாரணன்முதலாக்
கசியுமானிடாந்தமாக்கலித்தவரெவரு
நொசிவிலாதபூசனையியற்றிடுகநூன்முறையால். (௩௭)

யாவராயினுநினையிறைஞ்சாதுசெய்கருமம்
யாவதாயினும்பயமின்றியிறுகவான்சைவ
மோவிலாவயிணவமிவையுற்றவர்தாமும்
பரவகாரிகளாகுகநினைப்பணியாரேல். (௩௮)

வரங்களின்னணமயேச்சுரர்வழங்கலுமகிழ்ந்து
கரங்களேந்துடைக்கணேசர்கட்டுரைப்பர்தீயார்தம்
புரங்கள்கொல்லநாம்புகன்மனுகணேயிடத்தாக
வரங்கள்கொல்லுஞ்சூலத்திடத்தாகமந்திரிக்க. (௩௯)

விடுக்குங்காலையிற்சதமுறைவிளம்புகமீள
மடுக்குங்காலைநம்முறைமந்திரித்திடுகென்
றெடுக்குமின்னருளாலியம்புதலுமீச்சுரனார்
தொடுக்குமன்பினனன்றெனச்சுரர்தமைக்கூவி. (௪௦)

பாவனைக்குமெட்டாப்பரிபூரணபரமது
பாவனைக்கெளிதாப்பயின்றிதோவிருக்கின்றார்
பூவலர்த்தொடையாதியாற்பூசனைபுரிந்து
மேவுமந்திரமாயிரம்விரித்தலரிடுமின். (௪௧)

நுமதுபீழைகளொடிக்குமுனூறுமென்றருளக்
கமலநேத்திரனாதியோர்கண்ணுதலருள்பெற்
றமலனாகியகணேசனையாகமவிதியாற்
றமமெலாமறப்பூசித்தோதினர்சகத்திரமும். (௪௨)

முக்கணைங்கரமுன்னவனவர்க்குமொய்யருள்செய்
தக்கணீங்கினனரன்வரம்பெற்றதீதென்று
புக்கமெய்த்தவவியாதன்முன்கேட்டிடப்புகன்றான்
றொக்கபல்லிதழ்த்தாமரைத்தொல்லையாதனத்தோன். (௪௩)

படையெலாம்பணிபவர்க்கருள்பரனுமைங்கரன்பாற்
படைகொள்வான்கதைகேட்டனைபார்த்திபவினிமே
லடையலார்புரமவ்வரனழித்ததுங்கேளென்
றிடையறுதுரைப்பானெழின்மாதவப்பிருகு. (௪௪)

விமலன்விநாயகரருள்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - களகூஅ.



## ௩௭ - வது திரிபுரதகனப்படலம்.



அன்பர்களுள்ளமேயாலையங்கொளும்
வன்பணிப்பூணினார்மற்றென்செய்தனர்
முன்பகராயெனுமுனிவியாதனுக்
கின்புறான்முகனியம்பன்மேயினன். (க)

எம்பிரான் மறுப்பமீண்டேகுந்தூதர்க
டம்பிரானுகியதானவற்பணிந்
தும்பர்சூழ்மூர்த்தியையுதவிலானமன்
சிம்புள்போல்வெகுண்டனன் றிரும்பினேமென்றார். (உ)

கேட்டனன்வெள்ளொளிகிளரநக்கன
னீட்டியதவப்பயனிறுதியண்மலிற்
சூட்டணிந்திலகியசூலத்தண்ணல்பாற்
கோட்டமுற்றமர்செயக்குறித்திட்டானவன். (ங)

பெருவலிச்சண்டனேபிரசண்டன்முதல்
வெருவருந்தானவவீரர்யாவரும்
பொருவறுவரத்தமுப்புரமுமிவ்வயின்
மருவுகவெனவவர்வந்துதொக்கனர். (ச)

போருளதாயதுபுயகண்டேதியைத்
தீருமினினியெனச்செப்பிவீரர்க்குச்
சீருறுபல்வகைச்சிறப்புஞ்செய்தனன்
காருடைக்கொடைப்பெருங்கரத்துத்தானவன். (ரு)

ஊருறுநாளினுமுவகையெண்மடங்
காருறப்பூங்கழலார்த்தவீரர்கள்
போருறுநாளினைப்புகழ்ந்துநின்றன
ரேருறுதிரிபுரனெழுதலூக்கினுன். (சு)

திரிபுரன்படையெழூஉஞ்செய்தியுன்னியவ்
வரியயனறியொணுவமலநாயக
னுரியநந்தியையழைத்துலப்பிலாதநம்
மெரிசினப்படையெலாமெழுகவென்றனன். (எ)

கூற்றுயிர்குடித்தநங்குழகன்போரினை
யேற்றனனுதலாலிண்டுநம்முடை
யாற்றல்சால்பெரும்படையனைத்துஞ்சேர்கெனச்
சாற்றினன்முரசினிற்றழங்கநந்தியே. (அ)

முரசொலிகேட்டலுமொய்ம்பின்வீரர்கள்
பரசணிகரத்தினர்பைம்பொற்கோயின்முன்
விரசினர்தேவர்கள்வியூகந்தன்னெடு
மரசனுமவ்வுழியடுத்துநின்றனன். (கூ)

வேறு.

நந்திநாயகனண்ணியபடையினைநோக்கி
யந்திவண்ணர்தந்திருமுன்னரடுத்தடிவணங்கி
யெந்தைதானையந்தலைவருமெறுழ்ப்படைபலவும்
வந்துவானெழுங்கோயில்வாய்தலின்மருவினரால். (க0)

பூண்டவாம்பரித்தேரினைப்பூவணைக்கிழவன்
தூண்டியுய்த்தனனென்றலுஞ்சுரரிடர்தமிப்ப
மூண்டகாதலின்முன்னவன்முருந்திளமுறுவ
னீண்டவார்குழலுமையொடுனேரேலெனவெழுந்தான். (கக)

அணிப்பொற்பாதுகையடிமலரிரண்டினுந்தொடக்கிப்
பணிப்பொற்பூணுரந்துயல்வரப்பலகடைகடந்து
மணிப்பொற்கோபுரவாய்தன்முன்வந்துவானளக்கு
நணிப்பொற்றேரினையிவர்ந்தனனரன்றனசங்கம். (கஉ)

வெற்றிவானவர்முழுவதும்விளங்குதேருருவா
யுற்றமாட்சிமைக்கொப்புறவொளிர்கலைமுழுது
முற்றுநாண்மதிமுடித்ததேபோன்மெனமுடிமேற்
கற்றையீர்ங்கதிர்கான்றதுகவித்தவெண்கவிகை. (கரு)

மானமானின்பின்னேகிடந்தலைந்தநாயின்று
மானவாவெனதிர்மருவுதல்பெற்றனமேயென்
றூனவோகையாலெழுந்தெழுந்தாடுவபோன்ற
கானவார்குழன்மாதராரிரட்டுவெண்கவரி. (கசு)

அழுந்துபட்டவேழாழியினகன்றதன்கருணை
கொழுந்துபட்டிகலவுணன்பாற்கூடலுமாமென்
றெழுந்துபட்டபுன்சினவெரியீட்டுவார்போலச்
செழுந்துபட்டசாந்தாற்றிகள்சிலரெடுத்தசைத்தார். (கரு)

முளைத்தெழுந்ததேபோன்றொளிர்மொய்மணித்தேரின்
வளைத்தவார்திரையாகியவாருதிநின்றுந்
திளைத்தெழுந்திடுதிரைகளேயாமெனச்சிலரால்
விளைத்தவெள்ளொளிவெள்ளைகள்வீசிடப்படுவ. (கசு)

மிண்டுமுப்புரநீற்றிடவிமலன்மேவுதலாற்
பண்டைநம்பதகாமினிப்படர்குதுமெனவுட்
கொண்டவோகையின்வாளராக்குலங்களாடுவபோ
லண்டர்போற்றநின்றசைவனவாலவட்டங்கள். (கஎ)

உடையநாயகனொருகணையாலழித்திடுமு
னடையலாரெயிலகத்தெழிறேக்குதுமென்னுத்
தொடைவிராந்தனிக்கொடிமிசைச்சுரர்கொடிபோற்ற
விடைவிராவிநின்றசைந்தவிண்ணிடைவிளங்க. (கஅ)

படகமாகுளிசல்லரிபணைகிணைகல்ல
வடமுழாக்குடப்பறைகரடிகைமணிமுரசந்
துடிதடாரிதண்ணுமைகுளிர்துந்துமிதக்கை
கடிசெய்மொந்தைதொண்டகமிடக்கைதகுணிச்சம். (கக)

பம்மைதூரியம்பாண்டில்கைப்படலிகைபணிலந்
தும்புதீர்நரம்புடையயாழ்துளைபடுகருவி
கம்பியாதெழுவங்கியங்காகளம்பீலி
யிம்பரார்பலவியங்களுமியம்பினகணங்கள். (உ0)

கழுக்கடைப்படைமுசுண்டிசக்கரம்பிண்டிபால
மெழுக்குயங்கதைமுசலங்கப்பணமிலைஞாங்கர்
மழுக்கள்வச்சிரங்கேடகம்வாள்சிலையம்பு
கொழுக்கலப்பைவேதினங்கவண்குளிரிநீள்சலாகை. (உக)

பாசமங்குசமுசலஞ்சூலம்பலகுந்தம்
பூசன்மல்கியசுரிகையாயுதம்புள்ளமீட்டி
வீசுதண்டமென்றுரைத்திடுவெய்யபல்படையும்
பேசருந்திறற்பூதர்கள்பிடித்தனரார்த்தார். (உஉ)

வேறு.

இலகியவெழுபத்தெண்ணுயிரமெனுங்கோடிவெள்ள
வலிகெழுபூதர்சூழவார்சிலையிலக்கனென்னு
மொலிகெழுவீரனங்கையொருவனுலருள்பெற்றுங்குப்
பலபடைதமக்குமுன்னேபடர்ந்தனன்கொடிஞ்சித்தேர்மேல். (உரு)

ஏதமிலாதவெண்ணுயிரமெனுங்கோடிவெள்ளப்
பூதர்கண்மருங்குசூழப்பொறித்தழறும்மாகிற்கும்
கோதைவண்சிலேக்கைவீரபத்திரன்கோபமூள
மாதிரநடுங்கவாமான்மணிப்பொலன்றேரிற்சென்ருன். (உச)

கூரயிலேந்திநாலாயிரமெனுங்கோடிவெள்ளச்
சாரதர்மருங்குசூழச்சண்முகப்பெருமானீலப்
பாரசலத்தின்மீதுபருதிவந்தெழுந்தாலென்னப்
போரணிசிறகர்ப்பேழ்வாய்ப்பொறிமயிலிவர்ந்துசென்ருன். (உரு)

வேறு.

சிறந்ததேசின்முப்பத்துமுக்கோடிதேவர்களும்
விறந்தவேனைவானவர்கள்விஞ்சையர்முதற்பலரும்
புறந்தொடர்ந்தெழப்பூரணனருள்கொடிந்திரனு
மறந்தழைத்தநாற்கோட்டுவாரணங்கடாய்நடந்தான். (உசா)

கண்டனந்திமாகாளன்குண்டோதரன்கொற்றங்
கொண்டமுண்டிகோகன்னனேகசகன்னன்முதலா
மண்டுவீரர்கண்மலிபெரும்பூதர்களோடு
மண்டர்நாயகனணிமணித்தேர்ப்புறஞ்சூழ்ந்தார். (உஎ)

உமைமணுளரொள்ளருளினுலுற்றுநான்கடவ
விமையவோங்கல்பல்வரையொடுமெழுந்துசெல்வதுபோற்
சுமைவிராவுபஃறேரிடைத்துனேந்துசென்றன்று
லமையுமாமறைப்புரவிபூட்டியவவிர்மணித்தேர். (உஅ)

புண்ணியன்பொலந்தேர்மணிக்காலொடுபுனித
நண்ணிருங்குறட்பூதர்கணலத்தகுகாலு
மண்ணுபுண்ணியத்தாலணுவடிவமாயவனி
விண்ணமேறுவதொத்ததுவிரைந்தெழுபூழி. (உகூ)

தேவர்யாவருந்திரண்டொருதேரெனநம்பான்
மேவினுரவரிடங்கணுமேவலுமாமென்
ருேவிலாவிழைவால்விரைந்தெழுந்ததுமொக்கும்
பாவுபாருருவாகியபரந்தெழுதூளி. (௩௦)

குடையும்பிச்சமும்பேனம்பாசடையெனக்குலவ
மிடையும்வாள்கதிர்வேலிவைமீனங்களாக
வடையுங்கேடகமாமைகளாகவாத்தியவார்ப்
புடையசேனைகளொலிகடலேழுமொத்தனவே. (௩க)

சேனையம்பெருங்கடலிடைத்திரைத்தெழுதிரைபோன்
மானமல்கியபதாகைகள்வயின்வயினசைந்த
மேனிவந்தெழுதூளிநீர்முகந்தெழுமேக
மானவிண்ணவர்சொரிமலரவைமழைபோன்ற. (௩உ)

மேக்குயர்த்தியவிழுக்கொடிகூம்பதன்மீது
தாக்குவல்விடைசார்ந்தமீகாமனுப்புறத்தி
னூக்கமிக்கெழுதேர்களுேர்தொள்ளமாதிகளா
மாக்கலம்பொரவள்ளறேரோடியதம்மா. (௩௩)

மனமும்பின்னிடவயப்பரிவீரர்கண்மணித்தே
ரினமும்பின்னிடவெம்பிரானிரதஞ்சென்றடுப்பக்
கனமும்பின்னிடுங்கனேகுரற்றிரிபுரனறிந்து
சனமும்பின்னிடத்தனிநெடுந்தேர்மிசையிவர்ந்தான். (௩ச)

வேறுவேறுசென் றமரினை விளைமின்களென்று
வீறுசேர் தருமைந்தர்க்கும்விளங்குமுப்புரர்க்குங்
கூறியேறுதன்கொடிஞ்சியந்தேரினைக்குழக
னேறுதேரினுக்கெதிருறவிடுத்தனனிமைப்பில். (ருரு)

அண்டம்யாவையுமரைக்கணத்தவித்திடுமாண்மை
கொண்டதானவக்குழாம்படைகுடங்கைகொண்டார்ப்பக்
கண்டையாதிகண்முழங்கவெண்கவிகையாதிகளு
மண்டமண்டினன்வரவினைவள்ளலார்பார்த்தார். (ருசு)

நிணத்தின்மூழ்குவேலேந்துதம்வீரர்கணெடுந்தோண்
மணத்தல்செய்தகண்டுதியைமாற்றுதற்பொருட்டோர்
கணத்தினீற்றுறும்படைகரத்திருந்துங்கண்ணுதலார்
குணத்தின்மேம்படுந்திரிபுரனேடும்போர்குறித்தார். (ருஎ)

வாரமாகியகணேசரைமதித்தமரேசர்
பாரமேருவில்பங்கயச்செங்கையிற்பிடித்தார்
தீரனுனமுப்புரனுமத்தேவரைத்தொழுது
கோரமாகியகொடுமரங்குடங்கையிலெடுத்தான். (ருஅ)

விரைதுதைந்தவெண்டும்பைசூடினரிருவோருங்
குரைதுதைந்தவார்சிலைபடுநாணொலிகொளுத்த
வரைதுளங்கின துளும்பினவாருதியேழுந்
தரைகிழிந்தனகிழிந்துசாய்ந்தனவண்டமுகடு. (ருகூ)

தருக்கள்வீழ்ந்தனவீழ்ந்தனதடஞ்சிறைப்பறவை
கருக்கரைந்தனவுதிர்ந்தனககனவானுடுக்க
ளிருக்குமெண்டிசையிருவகைநாகமுமினைந்த
முருக்குவண்சிலைமூட்டுநாண்முழங்கியவொலியால். (சு0)

பின்கொடுத்தவார்தூணியிற்பெய்தபல்கணையு
முன்கொடுத்திடமுடங்கியதொருகைமற்றொருகை
முன்கொடுத்தவில்பின்கொடுத்திடமுன்னேநிமிர்ந்த
வென்கொடுத்துமாற்றரியபோரிருவருமிழைத்தார். (சுக)

முருகனேடுவந்தெதிர்த்தனன்முதிர்பிரசண்டன்
பொருவினந்தியோடமர்த்தனன்பொருதிறற்சண்டன்
செருவலாரியோடேற்றனன்றிரிபுரனமைச்சன்
வருசயந்தனேடுருத்தனன்மதனெனுமைந்தன். (சுஉ)

ஆலமேயெனவழன்றுபொன்னிஞ்சியையூர்ந்து
காலகூடன்புட்பதந்தனைக்கலந்தமர்புரிந்தான்
சீலவீரபத்திரனெடுமிருப்பெயில்செலுத்திக்
கோலவச்சிரதமிட்டிரன்குயிற்றினனெடும்போர். (சுரு)

மள்ளர்போற்றிடவீமகாயப்பெயர்மன்னன்
வெள்ளிமாமதிலூர்ந்துபோய்விநாயகர்மைந்தன்
றள்ளுறுவிறலிலக்கனைச்சார்ந்தனனவன்பா
லுள்ளவீரருட்புருசண்டியுருத்துமேலடர்ந்தான். (சுச)

கண்டனுதியாங்கண்ணுதலார்படைத்தலைவர்
மிண்டுதானவன்விறற்படைத்தலைவரோடெதிர்த்தார்
மண்டுபூதர்கண்மற்றவன்வயவர்களோடு
தண்டமாதிக்குத்தண்டமாதிகளொடுசமர்த்தார். (சுரு)

வேறு.

வாளோச்சுவர்கணையுந்துவர்வடிவேல்பலவெறிவா
ராளோடறவேழத்திரளவெவார்பரிதெறுவார்.
தாளோடறவிரதத்தொகைதடிவாரெதிர்தானை
கேளோடறவெறிவார்விறல்கிளர்பூதர்கடலைவர். (சசு)

பார்ப்பார்விழிவெகுளித்தழல்படுவாரிமைதீயத்
தீர்ப்பார்பலருயிரைப்பலதேர்ப்பாகரையடுவா
ரார்ப்பார்கொடிமுடிவார்சிலையறவாளிகடுண்டித்
தூர்ப்பார்நெடுமொழிவெஞ்சினஞ்சொல்வார்தயித்தியரே. (சஎ)

தாளற்றனரரையற்றனர்சடரங்குடர்சொரிய
நாளற்றனருரமற்றனர்நகையற்றனர்மதுகைத்
தோளற்றனர்முடியற்றனர்சொல்லற்றனர்வீரக்
கோளற்றனர்படையிற்படுகொலைவெங்களிறனையார். (சஅ)

நிணமுக்கனதடியுக்கனநிகழ்மூளைகளுக்க
வணர்மென்குரன்மயிருக்கனமலியுங்கொழுவுக்க
வணலுக்கனசெவியுக்கனவழலும்விழியுக்க
பிணமுக்கனகறையுக்கனபெரிதீரலுமுக்க. (சகூ)

ஆடுற்றனயூபம்பலவாடுற்றனபேய்கள்
கூடுற்றனசேனங்கொடிகூடுற்றனநரிநா
யோடுற்றனகுருதிப்புனலுந்திக்குலம்விசையை
பீடுற்றனள்வாடுற்றனள்பிணமேந்திமண்மகளே. (ரு0)

இவ்வாறமர்புரிகாலையிலெதிர்பூதர்கள்படையாற்
றெவ்வாகியவவுணன்படைமுழுதுஞ்சிதைவுற்ற
வவ்வாறிருகையோன்முதலானோர்புரியமரின்
செவ்வாய்மையுமிறைவன்புரிதெறலுற்றதுமினிக்கேள். (ருக)

வேறு.

தாரகாசுரன்சிங்கமாமுகன்றனிச்சூரன்
வீரர்மூவரும்வேறுமோர்வடிவுகொண்டனையான்
கோரனாகியபிரசண்டன்குமரவேள்பாங்கர்
வாரமாகியபடையெலாமுலைதரமலைந்தான். (ருஉ)

கண்டுகெந்தவேள்கதுமெனக்கலவமாமயிலை
மண்டிலங்கொளக்கடவிவார்சிலைக்கணைகடைநாட்
கொண்டல்போற்சொரிந்தரைக்கணத்தளவையிற்கொடியோன்
மண்டுசேனையையழித்தவன்வதனநேரடுத்தான். (ருங)

நேர்ந்திடும்பிரசண்டன்வாளிகணிலத்தாக்கி
வார்ந்தவில்லினைத்தேரினைவழங்குபல்படையை
யீர்ந்துவானவப்படைகளுமிறுத்தவன்செய்யும்
கூர்ந்தமாயையோடவனையுங்கணையினாற்கொன்றான். (ருச)

சண்டமாருதமெனப்பொருஞ்சண்டன்சேனைகளைக்
கண்டதுண்டங்களாக்கியோர்கடிகையினந்தி
கொண்டகொண்டபல்போரையுங்குமைத்துமுக்கணையா
லண்டரார்த்திடச்சண்டனதுயிரையுமழித்தான். (ருரு)

புட்பறந்தெனப்பறக்கும்பொன்மதிலினோர்தும்பைக்
கட்பசுந்தொடைக்காலகூடன்படைவிலக்கி
விட்புலந்தடந்தேர்திரிதரவிடுத்தமர்த்துப்
புட்பதந்தனைங்கணையினாலவனுடல்பொடித்தான். (ருசு)

வெள்ளியிஞ்சியோடெதிர்த்திடும்வீமகாயனைநேர்ந்
தெள்ளலில்பலபோரெலாமியற்றிமெய்யிரத்தந்
துள்ளிவீழ்ந்துவார்தரப்புருசுண்டிநாற்கணையா
லள்ளியுண்டனனத்தகுமவுணனாருயிரை. (ருஎ)

இருப்புநொச்சியோடெதிர்ந்தவச்சிரதமிட்டிரனைப்
பொருப்புநேர்பொலந்தேரொடுபொருதுநாற்கணையாற்
செருப்பினேதெனவவுணர்கடெருமரச்செகுத்தான்
விருப்பின்வேள்வியினமரராருயிருண்டவீரன். (ருஅ)

வச்சிரத்தினாலிந்திரனவுணன்மந்திரியைக்
கைச்சிரத்தையோடளவில்போர்கண்டுபுள்ளொருவை
நச்சிரத்தநீரொழுகிடநகைமணிமுடிசே
ரச்சிரத்தினையரிந்தனனணிந்தனன்வாகை. (ருகூ)

சயந்தன்முப்புரன்றனையனோடெதிர்ந்தவன்சமர்த்து
வயந்தயங்கிடக்கைப்படைபோக்கிமெய்வதிவேல்
புயந்துமேல்வரும்பொருநர்கள்சிரங்களும்புரட்டி
வியந்துவிண்ணவர்போற்றிடவவனுயிர்விளித்தான். (சுo)

சிலைவளைத்தமர்புரிதருந்திரிபுரனோடு
மலைவளைத்தவர்வண்சமராடிமற்றவன்கைக்
கொலைவளைத்தவன்கொடுமரந்துமித்துடன்குழுமு
மலைவளைத்தவாருதிபொரூஉஞ்சேனையுமழித்தார். (சுக)

வேறுகார்முகம்வாங்கினன்வெடிபடவார்த்து
நூறுவாளிகணூறுநூறாயிரகொடிப்பி
னேறுமேறுமாலாக்கியவிறைவனார்கடவுங்
கூறுதேர்மிசைத்தூண்டினன்கொடியபாதகனே. (சுஉ)

விடுத்தபத்திரமிமைக்குமுன்விலக்கிவெங்கணைக
டொடுத்துநன்முடிகவயந்தூணிகடொடர்மான்றே
ரடுத்தசேமத்தேரனைத்தையுமறுத்தனனமலன்
படுத்தவேனிலினுதியெனநின்றனன்பதகன். (சுஙு)

முன்னர்நாணியமுப்புரன்முகத்தினைநோக்கி
யென்னையாளுடையானின்னுமெச்சமர்வல்லை
யன்னதாற்றுதியகன்றுவாவென்றருள்புரிய
முன்னர்மைந்தர்களனைவருமுடிந்தவாகேட்டான். (சுச)

வாரத்தாலெழுமவலத்தைமாற்றினன்மாறா
வீரத்தாலெழுமுளத்தினால்விழுமதின்மூன்றுஞ்
சாரத்தாணினைந்தானவைசார்ந்தனவற்றிற்
கோரத்தானொருமூவராய்க்குறுகிநின்றெதிர்த்தான். (சுரு)

திண்ணிதாகியசெருப்புரிந்தெயில்களைச்செலுத்தி
விண்ணிற்பாய்குவன்வேலையிற்பாய்குவன்றிசையின்
மண்ணிற்பாய்குவன்பாதலம்பாய்குவன்மாற்றார்
கண்ணிற்பாய்குவன்கருத்தினுட்பாய்ந்தநீத்திறலோன். (சுசு)

உலகநான்கினைத்தலைப்பெயும்பத்துமுள்ளுநடைந்த
வலகிலண்டமுநடுங்கினநடுங்கினரமரர்
வலனவிந்தனமாதிரத்திரண்டுநாகமும்வான்
குலவுமிஞ்சியோடவுணன்வன்போர்குறித்தளவில். (சுஎ)

எம்பிரானும்வண்டேர்வலமிடமுறவியக்கி
யும்பர்மாதிரமுதலவனுற்றுழியுற்றுக்
கம்பமாகவன்ஞன்புரிமாயையுங்கடந்து
பம்புபோரினுற்பன்னெடுங்காலம்பாணித்தான். (சுஅ)

இரக்துதாழ்ந்தவர்க்கிமைக்குமுன்றம்மையுமீயுங்
கரந்தைசூடியகடவுளார்கழல்பணிந்தவுணன்
வரந்தராயெனவாங்கலுஞ்செய்யுமென்றஞ்சி
யரந்தைவானவரமலர்தாள்பணிந்தெழுந்தறைவார். (சுகூ)

நொடிக்குமுன்னுலகனைத்தையுநுண்பொடியாக
முடிக்குநீயிர்முப்புரனொடுமூண்டுபல்காலம்
வடிக்கும்வான்படையாற்சமர்புரிமனவெழுச்சி
பிடிக்குமோர்விளையாட்டலாற்பேசின்வேறின்றே. (எ0)

எம்பிரான்விளையாட்டினையாவரேயறிவார்
வம்பிலாதபோரவுணனேமாதவமுடையா
னும்பர்தாதையின்சிரமதனமர்வருவேய
வெம்புநின்னெதிர்நின்றுபல்போர்விளைத்தலினல். (எக)

யாங்கணீபுரிபோரினைநோக்கலுமாற்றேந்
தேங்கொள்கொன்றையாய்சிறுவரையவுணனைச்செகுத்து
வீங்குவாகையைமிலைத்தருளாயெனவிரந்தார்
பாங்குநின்றவடானுமப்படிசெய்கவென்றாள். (எஉ)

வாதினுலொருகாளிபோற்போரினல்வலிய
கோதைவார்சிலைமுப்புரன்கொற்றநீகாணப்
போதவாரமர்புரிந்தனமினிப்புரம்பொடிப்பா
மாதுகாண்டியென்றுரைத்துவாருதிவிடமயின்றோன். (எங)

மாயனுதியோர்மனத்தையுமளவையுங்கடந்த
தூயனாகியகணேசமந்திரத்தினைச்சொல்லிக்
காயுமுத்தலைச்சூலத்தைவிடுத்தமைகாணார்
மேயமுப்புரம்பலியொடும்வெந்தமைகண்டார். (எச)

ஆற்றல்சான்றவராயினுந்தம்மின்மேலான
வாற்றலாளரோடெதிர்ந்துமுய்வார்கொலோவமரர்
தோற்றவாண்மையன்புரத்தொடுசூலியின்சினத்தா
னீற்றப்பட்டனனென்றிடினிலவுவையகத்தே. (எரு)

கணங்களார்த்தனசலித்ததுவிடைக்கொடிதேர்மேன்
மணங்கொள்கற்பகமலர்மழைசொரிந்தனர்வானோர்
துணங்கையாடினபேயினந்தொகுகளம்பாடி
யணங்குதீர்ந்தனரரிமுதலானவரெவரும். (எசு)

எரித்தசூலமீண்டெய்துமுன்முப்புரனிறைவன்
வரித்தபூங்கழற்பதத்திடைவந்தொடுங்கினனல்
விரித்ததிக்குடைவிமலனர்க்கன்றுதொட்டெவருந்
தரித்துளார்திரிபுராரியென்றுயர்தவத்தனிப்பேர். (எஎ)

யோகியாயிருந்தியோகமுத்தியையினிதுதவிப்
போகியாய்ப்பலபோகமும்புரிந்தருள்புனித
வேகன்போர்புரிந்தறிவியானெனிலெவர்போரின்
யூகமாதிகளறிந்துபோருஞற்றுவார்முறையின். (எஅ)

விழுந்துசோர்ந்தவன்பூதமேல்விழிக்கடைவழங்கி
யெழுந்துவந்தவர்வணங்கிடவெம்பிரான்மீண்டு
கொழுந்துகொண்டெழுவெண்கதிர்க்கயிலையைக்குறுகித்
தொழுந்தொறுங்கடவுளர்க்கருள்சுரந்துவீற்றிருந்தார். (எகூ)

எரியிடத்துநின்றுட்டயரெம்பிரான்றனக்குத்
திரிபுரத்தவனவிந்தவந்நாட்டிருவிழாவும்
பரிவுறப்புரிந்தரிமுதற்பண்ணவர்பலரு
முரியதத்தமதிருங்கதியுற்றுவாழ்ந்தனரால். (அ0)

கன்னிமாமதிப்பூரணைக்காமர்முப்புரத்தோன்
மன்னுமாருயிர்மாய்ந்துவானவர்மிகுபயனைத்
துன்னலாலதைப்பாகுளியென்றுசொல்கின்று
ரன்னநாளையில்விழாச்செய்வாரரும்பயன்பெறுவார். (அக)

அந்தநாளையிற்றத்தமதாற்றலுக்கேற்ப
வெந்தையார்தமக்கருச்சனையாதிகளியற்றிக்
கந்தமார்ந்தநெய்தயிலமொன்றூற்கதிர்விளக்கிட்
டேந்துமன்பினுற்போற்றுவார்க்குறுறுதீவினையே. (அஉ)

அனையகன்னிமாமதிவருபூரணையதனிற்
கனையும்வார்கடற்கருவிடமயின்றவன்பூசை
தனையியற்றிடார்தாமெலாமுப்புரன்றன்னு
லெனையுமும்பாரெனவிடருழப்பர்கண்மெய்யே. (ஈஅ)

காலையெம்பிரான்பூசனையாற்றிடிற்கங்குற்
சாலவாற்றியபாதகஞ்சாயுநண்பகலின்
வேலைபூசனையாற்றிடின்மேவுமச்சனனத்
தேலுமெவ்வகைப்பாவமுமெரிப்படுதுய்யாம். (அச)

மாலையந்தநாள்வள்ளலார்பூசனையாற்றின்
ஞாலவைப்பிடைப்பிறவியேழினுநணியாற்றும்
தாலவன்பெரும்பாவமுந்தொலைதருந்தொலையாச்
சீலநன்பொருண்முழுவதுஞ்சேர்தருமாதோ. (அரு)

ஈதுநாயகன்றிரிபுரமழித்திமையார்க்கு
மீதுவைப்பினைக்கொடுத்தவாவிளம்பினேமென்று
போதுமேவியநான்முகன்புகன்றனன்றவத்தாற்
றீதுதீர்ந்துயர்வியாதமாமுனிவரன்றெளிய. (அசு)

அமைவன்முப்புரம்பலியொடுமழித்தவாறிதுவாங்
குமையயிற்படைச்சோமகாந்தப்பெயர்க்கோவே
யுமைவிநாயகர்சதுர்த்தியின்விரதக்கேட்டுணர
யிமையமன்னவனிசைத்ததோரெனச்சொலும்பிருகு. (அஎ)

திரிபுரதகனப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஅஅரு.



## ௩அ-வது உமையம்மை விநாயகசதுர்த்திவிரதங்கேட்டபடலம்.



காதலின்விநாயகர்கதைகளின்னுநீ
யோதுதல்வேண்டுமென்றுயர்வியாதனு
மாதவனிரத்தலுமகிழ்ந்துதாமரைப்
போதமர்நான்முகப்புனிதனோதுவான். (க)

அங்கணரிடத்தினின்றகன்றுதக்கனூர்
பொங்கெரிவேள்வியிற்புகுந்ததீதறச்
சங்கரியிமகிரிதனக்குப்பிள்ளையாய்
மங்கலம்வளர்தரவளருநாளையில். (உ)

முந்துறத்தோன்றியமுறைமைக்கங்கைக்கு
முந்துறத்தனைமணமுதல்வன்செய்யுமா
புந்தியில்விழைந்தனள்பொருப்பின்மன்னனை
யெந்தைநீவிரதமொன்றியம்புகென்றனள். (௩)

தன்மகளிரத்தலுந்தயங்குபேரொளிப்
பொன்மலைமன்னவன்புந்திநாடியே
யின்மையென்றுதருளீயுமைங்கர
னன்மைகொள்விரதத்தைநயந்துகூறுவான். (௪)

மந்தணமாவதுவல்லைநாற்பயன்
றந்திடவல்லதுசாபந்தீர்தர
விந்திராறற்றியதிறைமைழுவரு
ஙமைந்துறவாற்றியேமருவுநீரது. (௫)

அரும்பியவிடரெலாமறுக்கத்தக்கது
பெரும்பிணிமுழுவதும்பெயர்க்கத்தக்கது
பொரும்பகைவலிகளும்போக்கத்தக்கது
விரும்பியபொருளெலாம்விளைக்கத்தக்கது. (௬)

தேவர்கடேவன்சிந்துரமுகத்தவன்
மூவர்கண்முதல்வன்முத்தொழிற்குங்காரணன்
மேவரமகிழ்வதுவிளம்புநாமமுந்
தாவறுவிநாயகசதுர்த்தியென்பரால். (௭)

அத்தகுவிரதநீயனுட்டித்தன்புசெய்
புத்தியின்விழைந்தபல்பொருளுமொய்யெனச்
சித்தியெய்திடுமெதுசெய்யும்வண்ணமு
முத்தமிகேட்டியெவ்வுலகுமுய்யவே. (அ)

மனுதியொத்தவ்விரதத்தைவௌவுவோர்
விநாயகசதுர்த்தியிற்றொடங்கல்வேண்டுமா
லனுதியையன்றுவைகறையினுதரித்
தினுதறீர்நாட்கடனினிதுசெய்தபின். (௯)

ஆட்டுதற்கானவுமருச்சிக்கத்தகும்
வாட்டமின்மலர்முதலாம்வளங்களு
மூட்டுதற்கானபல்லுணவுமுன்னுறக்
காட்டுதற்கானவுங்கதிப்பவீட்டுக. (௧0)

மண்டபங்கவினுறவயக்கிநல்லமண்
கொண்டுவேர்சென்றுகற்கோதிலாவகை
கண்டுறப்பிசைந்ததிற்கணேசமூர்த்தியை
மிண்டறுசிற்பநூல்விதியிற்செய்கவே. (௧௧)

மண்ணினிற்செய்வதேயன்றிமாமணி
யொண்ணிறக்கனகமற்றுலோகந்தம்மினுந்
திண்ணமாஞ்சிலையினுஞ்செய்யத்தக்கதே
வண்மைசெய்கணேசனூர்வடிவமாதராய். (௧உ)

பார்த்திபமூர்த்தியினொடுபைம்பொனாற்
சீர்த்தவோர்மூர்த்தியுஞ்செய்துதண்டுல
மார்த்ததன்மீதிழைசூழ்ந்தவாடக
நீர்த்தசும்பழகுறநிலவுவிக்கவே. (கங)

திருவினையுறுதவன்றேவன்மூர்த்தியை
யொருபலப்பொன்னினாலுறவியற்றுக
வருமையேலரைப்பலத்ததுவுமின்றெனிற்
கருதுறுகாற்பலத்தானுங்காண்கவே. (கச)

குரவனதிசைவினாற்குளிர்ந்தகங்கைமுன்
விரவியதீர்த்தநீர்விழைந்துதோய்ந்துருப்
புரவுசெய்நீற்றினைப்பூசிக்கண்மணி
சிரமிடறுரங்கரஞ்செவியும்பூணுக. (கரு)

வேறு.

மிக்கவாகமத்தாற்பூசைவிளைத்தெழுத்தொன்றிரண்டு
தக்கநான்கைந்தாறெட்டுதசமிராறிருபத்தெட்டிற்
றொக்கமந்திரங்களாதிபலவுளசொல்லிவற்றுள்
பொக்கமிக்கறுமாறொன்றைப்போற்றியேகணித்தல்வேண்டும். (கசு)

இயலுமோரெழுத்திரண்டுநான்கிவையிலக்கஞ்சொல்க
வயர்வுறினதனிற்பாதியாயினுங்கணிக்கவைந்தா
றுயரிருநான்கீரைந்தீராறொருநியுதஞ்சொல்க
வயுதமாயினுங்கணிக்கவயுதமோதுகநாலேழை. (கஎ)

உரைத்திடுஞ்செபங்கள்பத்துக்கொன்றுதர்ப்பணஞ்செய்தந்த
விரைத்தநீரிறைத்தல்பத்துக்கொன்றோமம்விளைத்தவ்வோம
நிரைத்திடும்பத்துக்கொன்றுநிறைசுவையுண்டிநல்கி
வரைத்தநாண்முடிவிற்பொன்பூமற்றதும்வழங்கல்வேண்டும். (கஅ)

அடுத்தமாதத்தினந்தச்சுக்கிலசதுர்த்திகாறு
முடித்திரும்பூசையந்தமூர்த்தியைவரிசையோடு
தொடுத்தபல்லியங்களார்ப்பத்தோகையர்நடனஞ்செய்ய
மடுத்தடநதியிலொன்றின்வதிவித்தன்முறைமையாமே. (ககூ)

அடங்கமுப்பதிற்றுநாளுமாகாரமுறக்கமின்றி
யடங்கியபொறியினொடுமனுட்டிக்கவதுமுற்றாதேற்
றொடங்குநாளேனுமுண்டிதுயிலிவைதுறக்கபின்னாண்
மடங்கலில்விருந்தேயொக்கன்மற்றவரோடுமுண்க. (உ0)

உப்பிலிபழம்பாலொன்றையுண்டுமுப்பதிற்றுநாளுந்
தப்பிலாவிரதஞ்சாதித்திடுதலுந்தக்கதாகும்
வைப்பிலானாற்றற்கேற்பவழங்குகதானமன்னா
னெப்படியானுமுண்டியிருபதிற்றொருவற்கீக. (உக)

உம்பரார்வணங்குமைமங்கையுத்தமன்மூர்த்தியொன்று
நம்பியாதரவிற்பூசைநடத்தினோர்நகைசால்செம்பொன்
பம்புதானியங்கண்மைந்தர்பவுத்திரர்பலருமல்க
வம்புவியிடத்துப்பன்னாளருங்கிளையோடும்வாழ்வார். (உஉ)

இருவரைப்பூசையாற்றினியற்றுதற்கரியவான
கருமங்களனைத்துஞ்சாதித்திடுதலாங்காதலுள்ள
மருவிமூவரைப்பூசித்துவழிபடின்மாசிலாத
பெருகொளிமணியொன்பானும்பிறங்கல்போற்குவியுமன்றே. (உங)

நால்வரைப்பூசையாற்றினால்வகைப்பயனுமுண்டா
மேல்வருமைவர்பூசையியற்றிடினிடையூறின்றி
யால்வருஞ்சர்வபூமனாகுவனறுவர்பூசைச்
சால்வரவியற்றினன்னான்றன்னைமுத்தொழிலுஞ்சாரும். (௨௪)

ஓதியவெழுவரெண்மரொன்பதின்மரைப்பூசிப்பின்
கேதமிலாதசர்வக்கினம்வரும்பதின்மர்தம்மைத்
தீதறப்பூசையாற்றிற்றிரிகாலஞானமெய்துங்
கோதறப்பதின்மர்தம்மைக்குயிற்றியபூசைப்பேற்றால். (௨௫)

தேவர்கள்சனகராதிதிருத்தகுமுனிவர்மேலா
மூவர்களிவர்களெல்லாமுன்னதிகாரம்பெற்றார்
பாவியபூசையாற்றிற்பதினொருவரையவ்வெண்ணின்
மேவியவுருத்திரர்க்குமேன்மைசேரதிபனாவன். (௨௬)

பன்னிருவர்கண்முன்னாகப்பயிலுநூற்றெண்மர்காறுந்
துன்னுவித்தருச்சனாதிசூழ்ந்திடினொன்றாக்கொன்று
மன்னியபயன்கண்மென்மேல்வளரும்பன்னிருவர்பூசை
பன்னருஞ்சங்கடத்திற்பருவரும்போதுஞ்செய்க. (௨௭)

ஆயிரமூர்த்திபூசையாற்றினோனருள்கைக்கொண்டு
மாயையையுதறிமுன்னேமலவிருளிரியல்போக்கித்
தூயமெய்ஞ்ஞானானந்தத்தொல்லைவீடெய்துமன்னான்
மேயவண்குலத்துமூவேழ்சுற்றமுமுத்திசேரும். (௨௮)

நித்தலுமேழுமூர்த்திநீடுமையாண்டுபூசை
பத்தியிலியற்றுவோர்க்குப்பாதகமைந்துந்தீரு
மத்தியில்விடுதலின்றிமரணாந்தம்பூசையாற்றில்
வித்தகனாவிக்கினேச்சுரனவனேயாவன். (௨௯)

அன்புறவிவற்றைப்பூசைமூன்றுநாளாற்றிப்போற்றிற்
றுன்புறுபிணியுந்தீராத்தொல்லிடர்பலவுந்தீரு
மொன்பதுநாள்கள்பூசையுஞற்றுவோன்பீடையெல்லாந்
தன்புறத்தகலக்காண்பன்சகலசித்தியுங்கைக்கொள்வான். (௩0)

ஆற்றலுக்கேற்பமூர்த்தியமைத்தருச்சிப்போரெல்லா
மேற்றமார்மூலமேகாக்கரஞ்சடக்கரமிம்மூன்றுட்
சாற்றுகவொன்றையீற்றிற்றம்பதிபூசைசெய்க
வீற்றுறுதருப்பணாதிவிளைக்கமுன்விதித்தவாறு. (௩௨)

வேறு.

விமலமாகியவிநாயகசதுர்த்தியின்விரதந்
தமமெலாமறச்சாற்றினந்தையலாயறியென்
றிமையவேந்தனோதலுமிதையனுட்டித்தோர்தமையு
மமையவோதுகவென்றனளுமையவனறைவான். (௩௨)

கயிலைநாயகனொருதினங்காமருதவிசிற்
பயிலுமேல்வையிற்பண்ணவர்முனிவரர்சூழ
வயில்கொள்வேல்வலத்தேந்தியவமலனங்கடுத்துச்
செயிரிலாவழிபாடுகள்செய்திருந்ததன்பின். (௩௩)

முப்புரங்களைநீற்றியமுதல்வனைநோக்கி
யப்பணிந்தவவளவிலாவிரதங்கட்மு
ளொப்பிலாததாயுறுபயன்விரைவினல்குவதாய்ச்
செப்பமுள்ளதாயிருப்பதோர்விரதஞ்செப்பென்றான். (௩௪)

செய்யமென்மொழிமழலைவாய்ச்சிறுவனை நோக்கி
மெய்யனைங்கரன்விநாயகசதுர்த்தியின்விரத
முய்யலாம்பலவிரதத்துமுயர்ந்ததாமென்று
கையின்மான்மழுவேந்தியகடவுளாருரைத்தார். (௬௫)

இறைவரோதியதேந்திலைவேல்வலன்கேளா
வறைகுவானடிகேளடியேன்சிறுனென்று
மறைசெய்தொன்றனையுரைத்ததோவாய்மையேதானோ
பிறைமருப்பினன்விரதமேபெரிதெனும்பேச்சு. (௬௬)

முதலிலாமுதலாகியமுதல்வநீநின து
பதம்விராவுறும்விரதங்கள்பலவுளவவற்று
ளிதமெலாந்தரும்விரதமொன்றனையியம்பாது
மதம்விராவியமுகத்தவன்விரதத்தைவகுத்தாய். (௬௭)

எனக்குமுன்னவனுயினுமிறைவவெம்பெருமான்
றனக்குமைந்தனே தானவன்றம்பிரானுன
நினக்குமேலெனநிற்பினன்றேயவன்விரதந்
தனக்குமேன்மையெய்துறும்பலவிரதங்கடம்முள். (௬௮)

அமரநாயகவடியனேனகத்துறுமல்லற்
றிமிரந்தீர்தரச்செய்யவாய்மலர்த்துகவென்று
குமரவேள்பணிந்திரத்தலுங்குழகனுருரைப்பார்
சமரவேலவசரதமேநினக்குரைத்தனமால். (௬௯)

ஒன்றதாய்ப்பலவாயருவாயுருவாகி
நின்றெலாவுலகத்தினுநீக்கமிலாத
துன்றுசோதியேகணபதியெனச்சொலுநாம
நன்றுதாங்கியதறிமதிநாமெலாமுய்ய. (௭௦)

பிரணவத்தினின்றுருக்கொடுபிரவஞ்சந்தனது
சரணபங்கயந்தொழவருடந்திமாமுகத்தோ
னரணமட்டநாணமக்குமந்திரமறைந்தனன்முன்
முரணுமுத்தொழின்முகிழ்த்தெம்மோடிருவர்க்குங்கொடுத்தான். ()

கலதிசெய்திடுங்காழகமனத்தவர்தம்மைக்
குலனொடுங்கெடுத்தடியவர்க்கருள்செயக்குறித்தே
யுலகமீதுபல்வேறவதாரங்கொண்டுற்றான்
புலவுவேலவநமக்குமோர்மகனெனப்புகுந்தான். (௭௨)

உருவுமுள்ளுறுமுயிருமேயெனவிருவேமு
மருவிநிற்றலின்மற்றிருவேங்களைவேறாய்ச்
சுருதியாகமபுராணங்கள்சொலாதொன்றேயென்னுங்
கருதும்யோகியர்தாங்களுமன்னதேகரைவார். (௭௩)

ஆதலாலவனனைவர்க்குமேலவனவன்மெய்ப்
பாதநாடியவிரதமுமேலெனப்படுமோ
லோதலாகுமவ்விரதமேயன்றியுமொன்றுண்
டேதநீத்திடுஞ்சங்கடசதுர்த்தியென்றிளையோய். (௭௪)

எந்தநன்மையுமிணக்குமிவ்விரதங்களானு
மந்தநம்பனேகாக்கரமந்திரமாதி
மந்திரங்களினானும்வந்தருளவதாரச்
சுந்தரந்திகழ்மூர்த்திபூசனைத்தொழிலானும். (௭௫)

வணக்கஞ்செய்தலினானுமற்றவனுருமனத்தி
லிணக்கஞ்செய்தலினானுமேத்தெடுத்தலினானும்
பிணக்கஞ்செய்தபல்விடரெலாம்பெயர்த்திருண்மலமு
முணக்கஞ்செய்தூநாற்பயனையுமுற்றவர்பலரே. (௪௬)

என்றுமுத்தலைவேலவனிலைகொள்வேலவனுக்
கன்றுரைத்தனனைங்கரன்விரதமாதிகளை
யின்றுனக்கவையியம்பினமெனவரையரையன்
மன்றலங்குழற்குமரிக்குவகுத்துரைத்திட்டான். (௪௭)

அரியமாதவமாற்றியவியாதவைங்கரத்தோற்
குரியதாகியசதுர்த்தியின்விரதமுன்னுமைக்கு
விரியமால்வரைவேந்தனோதியதிறம்விரித்தாம்
பரிவுதீர்மதியென்றனன்பங்கயத்தலைவன். (௪௮)

சூழிரும்புகழ்ச்சோமகாந்தப்பெயர்த்தோன்றல்
வாழியைங்கரன்சதுர்த்தியாம்விரதத்தின்வளமீ
தாழினவ்விரதத்தினையுமையவள்புரிந்த
கேழில்செய்கையுங்கேளெனக்கிளக்குவன்பிருகு. (௪௯)

உமையம்மைவிநாயகசதுர்த்திவிரதங்கேட்டபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௧௩௪.



## ௩௯ - வது உமையம்மை விநாயகசதுர்த்திவிரத மனுட்டித்தபடலம்.



விரதங்கேட்டவிளங்கிழையென்செய்தாள்
குரவவோதெனுங்கோதில்வியாதனுக்
குரவுத்தேன்கமழோள்ளியகஞ்சமேல்
வரதன்கூறவலித்தனனென்பவே. (௧)

உரைத்ததந்தையைநோக்கியுமையவள்
வரைத்தடம்புயமன்னன்விரதநான்
றரைத்தலைச்செயத்தக்கபொருளெலா
நிரைத்திடென்றுநிகழ்த்தினள்மென்மொழி. (௨)

ஏறுவெற்பிறையேவலர்க்கூவினான்
வேறுவேறுபணிகள்விளம்பினான்
கூறுமவ்வணங்கொண்டுசெய்வாமெனத்
தேறுமேவலர்யாவருஞ்சென்றனர். (௩)

விற்பொலிந்தவிண்ணோர்பதியேகுபு
கற்பகத்திழையுங்கமழ்பூக்களும்
பற்பமென்றளிரும்பலவுண்டியு
மற்பினாற்கவர்ந்தாங்கடுத்தார்சிலர். (௪)

தீவினுள்ளசெழும்பொருள்யாவையும்
பூவினுள்ளபொற்பார்ந்தபொருள்களும்
பாவுபாதலத்துள்ளபல்பண்டமுங்
காவிவந்துகளுற்றினரோர்சிலர். (௫)

உப்புறைக்கடலொண்புனலொன்றுநீத்
தப்புறக்கடனீர்களுமாழிவெற்
பிப்புறப்படவெய்தியவேலையுந்
துப்புடன்கொடுதுன்னினரோர்சிலர். (௬)

கங்கையுந்தவழ்காவிரிநீத்தமும்
பொங்குதண்பொருனைத்துறைநீத்தமு
மங்கங்குள்ளவரும்புனற்றீர்த்தமு
மங்கலத்தொடும்வவ்விவந்தார்சிலர். (௭)

மறுவினீக்கிவெவ்வேறுவரிசையின்
முறுகுவாசமுகையபல்வீக்களு
நறுவிரைத்தளிர்நல்லனயாவையு
மறுகும்வன்னியுமாய்குநரோர்சிலர். (௮)

படலையும்பனிமாமலர்க்கண்ணியுந்
தொடலையுஞ்சுருக்குந்தொடர்தாமமு
மடருந்தார்களுமல்லவுங்கட்டுபு
பிடகைகொண்டதிற்பெய்குநரோர்சிலர். (௯)

மணிகளானும்பொன்னானுமோர்மண்டபந்
தணிவிலாதுசமைத்ததிலுள்ளெலா
மணியின்கோவையுமாமலர்த்தாமமு
மணிவிராவவலங்கரித்தார்சிலர். (௧௦)

வாழைபூகதய்வார்கழைநாட்டுபு
தாழைநீள்குலைதாடிமநாரத்தைக்
கோழிருங்கனியாதிகள்கோத்தன
சூழினெங்கணுந்தூக்கினரோர்சிலர். (௧௧)

விதானமிட்டுறைவீக்கிவண்டேண்டொறு
நிதானம்வந்துநிறைந்தனவோவெனப்
பதாகைமீமிசைபற்பலவுந்தொடுத்
துதாசனற்குறைகுண்டமிட்டார்சிலர். (௧௨)

புழுகுசந்தனம்பூம்பனிநீர்விராய்
மெழுகிநல்விரையும்புகைத்தெங்கணு
மெழுதுசித்திரமெண்ணிலபித்திகண்
முழுதுமாக்கிமுடித்தனரோர்சிலர். (௧௩)

சாந்துகொண்டுதளநக்குநிலத்திடை
வாய்ந்தவையவிவாலியசாலிநெ
லாய்ந்தமென்மலர்பாசறுகானவுஞ்
சேர்ந்தகைக்கொடுசிந்தினர்சிற்சிலர். (௧௪)

தரங்கவேலைத்தரளமுந்துப்புமிக்
குரங்கொணீலமுமொண்ணிறப்பச்சையும்
வரங்கொள்செம்பொனுமற்றும்பொடித்தெடுத்
தரங்கவல்லியமைத்தனரோர்சிலர். (௧௫)

வைத்திடும்பலமாமணிபாத்திர
மெத்துகின்றவிழுப்பொருள்யாவையுஞ்
சுத்திசெய்தவிடங்களிற்சொன்முறை
சுத்திசெய்துதொகுத்தனரோர்சிலர். (௧௬)

இன்னவாறெவரும்பணிசெய்திட
வன்னமென்னடையம்பிகைகங்கைநீர்
துன்னியாடித்துலங்குவெண்ணீறணிந்
துன்னிநாதனையுற்றனண்மண்டபம். (௧௭)

சிற்பமல்கியதேவர்கள்கம்மியன்
பொற்பின்மல்கியபொன்னினோர்மூர்த்தியு
மற்பிறங்கியமண்ணினோர்மூர்த்தியுஞ்
சொற்பிறங்கிடத்தோற்றியளித்தனன். (கஅ)

ஐந்துசுத்தியுமாரவமைத்தனள்
சந்தவேதியிற்றண்டுலமிட்டனள்
சுந்தரத்தநுகிலதன்மேல்விரித்
துந்துபேரொளிக்கும்பமுறுத்தினள். (கக)

குளிருநீர்பெய்துகும்பத்துளேவகைத்
தளிருமாமணியைந்தையுஞ்சாத்திமேற்
களிசெய்யெந்திரங்காமுறவைத்ததின்
விளிவிலாதபொன்விம்பமிருத்தினள். (உ0)

வேறு.

நவமணியிழைத்தசெம்பொனருகதிர்த்தவிசொன்றிட்டுத்
தவறறமண்ணாற்செய்ததந்திமாமுகவன்விம்ப
மூவகையுள்ளகத்துப்பொங்கவதன்மிசையொளிரவைத்திட்
டவமறமறையினூற்றூலருச்சனைசெய்யப்புக்காள். (உக)

கங்கைமுன்னனதீர்த்தங்கலங்களுள்வந்தவற்றுட்
குங்குமம்பசுங்கற்பூரங்குருமலரறுகுவாசம்
பொங்குபல்பொருளும்பெய்துபுகரின்மஞ்சனங்களாக்கி
யங்கலுழ்மணியார்செய்தவட்டகையனைத்தும்வைத்து. (உஉ)

தண்புனலரிசிதீம்பாற்றருப்பையினுனிமென்போது
வெண்கடுயெனைநெல்லெள்ளுவிதியுளியிவற்றுட்பெய்து
பண்புறுமந்திரத்தாற்பாத்தியமாதியாக்கிக்
கண்பொதிநுதலினைங்கைக்கணபதிமனுவையோதி. (உ௩)

தத்துவமனைத்தும்பீடந்தகப்படுத்தமளிமேலே
பொத்துமாணவமகன்றபுல்லறிவாக்கிமூர்த்தி
யுத்தமச்சத்தியாக்கியுயர்ந்தொளிர்மூலமின்பச்
சித்துருவானவேகச்செம்மலாம்படியர்ச்சித்தாள். (உச)

முதிரொளிப்பரசுபாசமங்குசமோதகந்தான்
பதியுநாற்கரத்தினோடுபொங்குறுசித்திபுத்தி
மதிமுகத்திருவரோடும்வைகிடநினைக்கப்பட்டா
ரெதிர்முகமாகவல்லேயெடுத்தருக்கியமுன்னீந்தாள். (உரு)

இருபதத்தலர்கவேியெழில்வளர்தூபதீபந்
திருமுகத்தெதிரேகாட்டித்திகழ்ந்தபாத்தியமுன்மூன்று
மருவினையறுக்கும்பாதமானனஞ்சிரமிம்மூன்று
மருவுறக்கொடுத்துத்தூநீர்மணிக்கரகத்தாலாட்டி. (உசு)

மல்லிகைசெயலைமௌவல்வகுளஞ்செண்பகப்பூவாதி
புல்லியவாசவெண்ணெய்புணருமாநெல்லிமஞ்சள்
சொல்லுமைமங்கவ்வியம்பால்சுவைத்தயிர்நறுநெய்தீந்தே
னல்லநீர்கருப்பஞ்சாறைந்தமுதமைந்திரதவெள்ளம். (உஎ)

மருக்கிளர்வாழையாதிவண்கனிபலவுந்தாழைப்
பெருக்கிளநீரும்வில்வம்பிசைந்தமைத்தெடுத்தநீரு
முருக்கிளர்சந்தனப்பூங்குழம்புமொண்மந்திரத்தா
மருக்கியநீருமெல்லாமாட்டினள்பாவகத்தால். (உஅ)

செய்யபட்டிரண்டுசாத்தித்தீம்பனிநீரைவாக்கிப்
பையவன்குறடுதேய்த்துப்பசியகற்புரங்கத்தூரி
மையறுபுழுகுவாசவுரோசனை மற்றுமட்டித்
தையுறவெடுத்ததேய்வையழகுறவெங்குமப்பி. (உகூ)

தண்ணியமலர்மென்சுண்ணந்தமனியச்சுண்ணம்வாச
வண்ணமென்சுண்ணமற்றும்வனப்புறவதன்மேலட்டிக்
கண்ணிகளாதிசாத்திக்கதிர்படுமணியின்மோலி
நண்ணியகுதம்பையாதிநயந்தினிதெடுத்தணிந்தாள். (௩0)

வேறு.

அடியினிற்கணேசனணிமுழந்தாளிலழகியவிக்கினராசன்
றுடையினிலாகுவாகனன்கடியிற்றுலங்கியவேரம்பனுதர
வடிவினிலம்போதரனிதையத்தின் மகிழ்கணநாதன்கண்டத்திற்
படியறுதாலகண்டன்வார்தோளிற்பகர்கந்தாக்கிரசனைச்சாற்றி. (௩க)

அங்கையிற்பாசவத்தனனத்திலடலிபவத்திரன்வாயின்
வெங்களிவாசப்பதிவிழிமலரின்விக்கினகத்திரனுதலிற்
றங்குறவேகதந்தன்பொன்மோலித்தலையிற்சர்வேச்சுரனென்னப்
பொங்கியவன்பாற்புகன்றங்கபூசைபுரிந்துமேலிதனையுஞ்செய்தாள். (௩உ)

பெருமணமாசிப்பத்திரம்சுமுகன்பிருங்கராசங்கணநாதன்
றிருவளர்வில்வக்குறுந்தளிருமாபுத்திரனறுகவைகெசானனன்முட்
டருவளரிலந்தைப்பத்திரமிலம்போதரன் மத்தந்தகுமரகுரு
மருவளர்துளபங்கெசகர்னன்வளர்நாயுருவிமன்னியகுகாக்கிரசன். (௩௩)

சிறுவழுதிலையின்செழுந்தளிரேகதந்தன்சிறிலைப்பசுவன்னி
மறுவறுமிபவத்திரன்றேவதாருவரமருள்சுராக்கிரகண்ணியன்
கறிபயில்வண்டார்மருவகம்பாலசந்திரன்கரவீரம்விகடன்
வெறியசுமரதம்விநாயகனருக்கமேதகவிளங்கியகபிலன். (௩௪)

மருதமேபின்னதந்தன்மால்காந்திவயங்கியபத்தினிபின்னன்
சருவுதீர்தாடிமந்தனிவடுவென்சாதிசீர்தகுசூர்ப்பகன்னன்
முருக்விழ்கின்றகேந்தளித்தளிர்கண்மூடிகவாகனன்செழுந்தேன்
விரிமலர்தளிர்களனைத்திற்குஞ்சித்திவிநாயகனுகவர்ச்சித்தாள். (௩௫)

ஐவகைப்புகையுமொளியுமாசமனமருக்கியமிவையுநன்களித்து
நெய்விரவன்னஞ்சுத்தவெண்சொன்றிநிகழ்ததியோதனம்பாற்சோ
றைவளர்மிளகின்வல்சிமென்கடுகினமலைதண்ணிலவங்கப்பொம்மல்
செய்வளரெள்ளுப்போனகங்கட்டிச்செழும்பதமாதிமூரல்களும். (௩௬)

சீரகமுழுந்துசெழும்பெருங்காயஞ்செறித்தமைபூசனியாண
மேரமரேனைக்காய்கனிபூத்தண்டிலைகிழங்கிவற்றின்வெவ்வேறு
கூர்தருஞ்சுவையின்குயிற்றுபல்பாகுங்குய்கமழ்கருனையுந்துவட்டுந்
நீரமர்ந்தூறுகாய்களுந்துவையுநிரந்தபல்வறையலும்பருப்பும். (௩எ)

வேறு.

பிட்டவலிடியிலாசம்பேதமாகியபல்சுண்ட
லட்டுதேங்கரும்புதீம்பாகரிசிதீயடர்பருப்புங்
கட்டியும்பயறுமெள்ளுங்கந்தியுந்தெங்கின்காயு
முட்படப்பொதிந்துசெய்தவுண்டைமோதகம்பல்வேறும். (௩அ)

அடைமுறுக்கபூபங்கஞ்சமமைத்ததேன்குழலுக்காரி
வடையிலட்டுகமென்றேசைமற்றையமிதவையூணு
முடைநறுந்தெங்குவெள்ளிலொழுகுவெள்ளரிக்காய்நாவன்
மிடைசுளைவருக்கைசூதமென்கனியரம்பைமற்றும். (௩௯)

இழுதுபாறயிர்மோர்நீர்மோரிளநீர்வெந்நீரேதண்ணீர்
பழுதில்சர்க்கரைநீர்கன்னல்படுத்தநீர்பழநீர்தீந்தேன்
முழுவதுங்கிரணக்சுற்றைமுதிர்படலிகைசால்கிண்ணம்
விழுமியகரகமாதிவேறுபல்கலத்துஞ்சேர்த்து. (சO)

நித்திலத்தாமப்பந்தர்நீழலிற்கவரிதுள்ளச்
சத்திரங்கவிப்பப்பல்வேறியவொலிதழைப்பப்போந்த
வத்தகையுணவையெல்லாமருமறைமனுவாலூட்டிச்
சுத்தநீரளித்துப்பாத்தியாதியுந்துலங்கநல்கி. (சக)

வேறு.

எடுத்தமென்வாசப்பாகடை நுகர்வித்தெழின்முகவாசமுங்கொடுத்திட்
டடுக்கியதட்டமுதலியதீபமனைத்தையுஞ்சுழற்றிநல்லாடி
யடுத்தபுகுடைசாமரைகொடியாலவட்டம்வார்விசிறியும்வழங்கித்
தொடுத்துடுகணுநந்துவாவெனுமனுவைச்சொல்லிமந்திரபுட்பஞ்சாத்தி.()

பவமறுஞ்சியசாதமந்திரத்தால்பளிதநீராஞ்சனஞ்சுற்றி
யவமறவலம்வந்தடிமலர்வணங்கியறுகினையெடுத்தருச்சிப்பாள்
சிவமுறுமன்பாலிவ்விரண்டாகச்செங்கையிற்கொண்டருட்கணனே
யுவமையிலுமாபுத்திரனகநாசனும்பருநமெல்லாமும்விநாயகனே. (சங)

வேறு

பிழையறுக்குமீசுரபுத்திரன்சர்வசித்திப்பிரதனேயேகதந்தன்பேணிபவ
த்திரனே, சுழியுமூடிகவாகனன்குமரகுருவேசுமுகன்சுராக்கிரகண்ணியன்
சூர்ப்பகன்னன்விகடன், றழுவலுறுந்தூலகண்டன்குகாக்கிரசனிலம்போத
ரன்பின்னதந்தனேவிசாலாக்கன்றனே, விழையுமுருக்கொளுங்காமரூபி
வளர்சித்திவிநாயகனிவ்வெழுமூன்றும்விளம்பியருச்சித்தாள். (சச)

இயம்பலவுமியம்பவமரரும் புறஞ்சூழ்ந்தேதத்தவிவ்வாறுபூசையெலாமி
னிதுமுடித்ததன்பின், வியந்தொருசாரிருந்துவிதிப்படிநியாசந்தியானம்விரி
[illegible]சய்தேரம்பன்விழுத்தகுமந்திரத்து, ளுயர்ந்தனவாகியமூலமோரெழு
[illegible]றழுத்துமவந்தெண்ணியொருதிங்களுேணுறக்கம்விடுத்து, நயந்தனுட்
டித்திரனன்போற்பூசனைமிக்காற்றிநன்குதருப்பணமோமநடாயுணவுங்
கொடுத்தாள். (சரு)

காணமணிப்பூணுடைமுதற்றனம் பலவுங்கரிசறுவேதியர்க்களித்துக்
கணேசனையுள்ளொடுக்கிப், பேணுமிரணியத்திழைத்தமூர்த்தியைக்கும்பத்
தைப்பெருகுபொருளொடுந்தங்கள்புரோகிதனுக்குதவி, மாணவுறுமண்ணி
னிற்செய்மூர்த்தியைப்பல்லியத்துமங்கலத்தும் வரிசையொடும்வார்நதியின்
வதிவித்,தூனுறுதன்சுற்றமொடுநுகர்ந்துபரிவகன்றளுயிராமேயுலகமெலா
முயிர்த்தருளும்பிராட்டி. (சசு)

வேறு.

இன்னவாறனுட்டித்தலுமேரம்பன்
றன்னதின்னருளாற்றவளப்பொடி
மின்னுமேனிவிகிர்தனக்கங்கைக்கு
முன்னர்மன்றன்முடித்தனனென்பவே. (சஎ)

ஈதுகாண்டியிறைவன்சதுர்த்தியை
யோதிமாதனுட்டித்ததென்றேதினன்
மாதவத்துவியாதன்மகிழ்கொளக்
கோதனுக்கியகுண்டிகைக்கையனே. (சஅ)

வேறு

துன்னலருக்குருமனையசோமகாந்தர்விமைய
மன்னவனார்மகன்றற்றமரபறிந்தாயவ்விரதந்
தன்னையாதரித்தோர்கள்தம்முளேசிலர்தம்மைப்
பன்னுவாங்கேளென்றாயகர்தருமாற்பிருகுமுனி. (சகூ)

உமையம்மை விநாயகசதுர்த்திவிரதமனுட்டித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-ககூஅகூ.



## ச௦ - வது கர்த்தமன்விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம்.



கொல்லைப்பூங்குருந்தொசித்தகொல்லேற்றுப்பாகர்தருஞ்
செல்வப்போர்களிற்றுமுகச்செம்மல்சதுர்த்தியின்விரத
மெல்லைப்பூதலத்திழைத்தார்தமையின்னும்விளம்பெனலு
மல்லிப்பூவணைக்கிழவன்வியாதமுனிக்கருளுமால். (க)

கருதலரைப்புறங்கண்டகருத்தமனென்றொருவேந்த
னொருகவிகைமிசைநிழற்றவொருதிகிரிநிலையுநட்டி
யிருநிலமுள்ளளங்களிப்பவிருந்தாசுபுரிநாளிற்
பிருகுமுனிவந்தடுப்பப்பெருமகிழ்வினெதிர்கொண்டான். (உ)

ஆதனத்தினினிருத்தியாதரமார்பூசித்து
மேதகுகையுறைகொடுத்துவிசிறிகொடுவியர்மாற்றி
சீதளமென்மொழிமுகமன்செப்பிமுனியயர்வுயிர்த்துப்
போதவிழ்ந்தநறுமலர்போற்பொலிந்ததன்பினிதுவினவும். (ங)

பெருந்தேவர்பணிகேட்கும்பீடுடையமாதவனே
வருந்தாமனாயடியேன்மாநிலங்காவலிற்பொலிந்து
திருந்தார்களிறையிறுப்பச்செல்வமெலாமிகவுடையேன்
பொருந்தாக்கமிதற்கேதுப்புந்திகொளப்புகலென்றான். (ச)

மண்ணவர்மன்னவன்வினவமாதவமன்னவனிறுப்பா
னண்ணன்மதக்களியானையரசநீமுற்பவத்துந்
தண்ணளிமன்னவர்குலத்துச்சார்ந்தனைதற்பலனாகித்
திண்ணியநின்குலதருமஞ்செய்யாமைவறங்கூர்ந்தாய். (ரு)

உடும்பெனப்பற்றொழியாதவுள்ளன்புமிகத்திறம்பக்
கடும்புநினைக்குறைகூறக்காதிரண்டுங்கைத்தலினாற்
கொடும்பழுவத்திறந்துயிரைக்குழைத்துமெனமனைதுறந்து
நெடும்புறவம்புகுகாலைநேர்ந்தனையோராச்சிரமம். (சு)

நேர்கண்டவாச்சிரமநின்மலமாதவர்குழுமிச்
சீர்கண்டபுராணங்கள்செப்புநருங்கேட்குநரும்
பேர்கொண்டபலதவங்கள்பேணுநருமாய்ச்சூழ
நார்கண்டசவுபரியங்கிருப்பநீநண்ணினையால். (எ)

தாழ்ந்தெழுந்துமுன்னின்றாய்சவுபரிநின்முகநோக்கி
யூழ்ந்தகருத்தினையிங்கேயுற்றதெவனுரையென்னச்
சூழ்ந்தபெருநல்குரவாற்சுற்றம்வெறுத்திடப்போந்தேன்
வாழ்ந்திடுமுற்றவத்துன்னைமாதவகண்டேனென்றாய். (அ)

இரக்கமிகுசவுபரிநின்னின்னலுக்கின்னலனாகிப்
பரக்குமருளாலங்கைப்பண்ணவன்மந்திரம்பாவ

மரக்குமொருதீக்கைபுரிந்தறைந்துவிநாயகசதுர்த்தி
வரக்கடனுலவ்விரதமுடனிருந்துவகுப்பித்தான். (௯)

விரதமதுமுற்றுதலும்வெறிகமழ்மும்மதக்களிற்று
வரதனருளானினதுமனைமுழுதுஞ்செம்பொன்னு
மரதனமுமற்றனைத்துமளகையெனநிறைந்தனவச்
சரதமுரைத்துனையந்தச்சவுபரிபோகெனவிடுத்தான். (௧௦)

விடுத்தமுனியடிவணங்கிவியனகரிற்சென்றுவளந்
தொடுத்தமனையகம்புகுந்துசுற்றமெலாமெதிர்கொள்ள
வடுத்தபெருமகிழ்ச்சியினலளவளாய்ப்பெரும்போக
மடுத்தனையம்மையினிம்மையினும்போகமடுத்தனையால். (௧௧)

ஏரம்பனெனுங்கடவுட்கினியசதுர்த்தியின்விரத
மாரம்பஞ்செயமுன்னமார்வமெலாநிறைவிக்கும்
வாரம்பெற்றெனத்தூயமாதவனும்பிருகுமுனி
கூரம்பிற்சிலையாற்குக்கூறிவிடைகொடுபோந்தான். (௧௨)

வேறு.

கத்தமன்மகிழ்ந்துபின்னர்கணேசனுர்க்கினியவான
உத்தமசதுர்த்திநோன்பையுறுமுறையாண்டுதோறும்
பத்தியிற்புரிந்துநீர்சூழ்பாரினைமைந்தன்றேளில்
வைத்துலவாதமுத்திமருவிவாழ்ந்திருந்தானன்றே. (௧௩)

**கர்த்தமன்விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம்-ககககூ.



## ௪௧- வது நளன்விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம்.



அளிபரந்திசைகள்பாடவகநெகிழ்ந்தலர்களெல்லாங்
களிமதுப்பழையர்போலக்காலங்கடோறும்வாக்குந்
தளிரியல்சோலைசூழ்ந்துதயங்கியநிடதநாட்டில்
வளியதாமாடமேடைமாவிந்தநகராண்மன்னன். (௧)

விளரியஞ்சொல்லினல்லார்வேள்கணைக்கிலக்கமாக
வளவறுமழகன்யாதுமார்வலர்க்களிக்கும்வள்ளல்
வளமையிலளகைவேந்தைமருட்டியவாழ்க்கையாள
னளனெனுமியற்பேர்பூண்டானண்ணலர்க்கிடியேறொத்தான். (௨)

நிறைமுறையாய்ந்தவாங்கீரசுவெனநிறைந்தவந்த
விறையவன்பதுமவத்தனெனப்படுமமைச்சனோடு
பொறைசெயும்புவிக்குத்தானோர்பொறையனுயுயிர்களோம்பி
யறைதமயந்திகொங்கையணைந்துவாழ்ந்திருக்குநாளில். (௩)

நூற்றுப்பத்தடுக்குங்கண்கணூறுகோடியின்கையானுக்
காற்றலினளித்தசீர்த்தியருந்தவனடுப்பத்தாழா
வேற்றியாதனத்திற்பூசையியற்றியோர்விரதந்தன்னைச்
சாற்றுகவென்றுன்கேட்டதவமுனிசாற்றப்புக்கான். (௪)

கற்றவர்நாவினேறுங்கவுடதேயத்திற்பல்சீர்
பெற்றுயரின்பநீடும்பீடியல்நகரமாளு
மற்றமிலரசன்முந்தைப்பவத்துநீயரசரேறே
பற்றலர்தேயங்கொள்ளப்பலரொடுங்கானிற்புக்காய். (௫)

தேனுடைத்தொழுகும்வாசத்தேமலர்ப்பொதிம்பர்சூழ்ந்த
கானுடைச்சூழல்வைகுங்கவுசிகமுனியைச்சார்ந்து
வானுடைத்தெழுந்தகீர்த்திமலரடியிரண்டுமொன்று
ரூனுடைத்தோடும்வேற்கையுறத்தழீஇவணங்கினின்றாய். (சு)

கறவைகன்றடுப்பநோக்குங்காட்சியிற்கருணைநாட்டந்
துறவைமிக்குடையவந்தத்தொன்முனிவழங்கிப்பின்ன
ரறவைநின்வரவையெல்லாமறிந்தருட்கணேசர்பாதத்
துறவையுற்றிடுஞ்சதுர்த்திவிரதத்தையுஞற்றுவித்தான். (எ)

பின்னருந்தவத்தோனேவப்பெற்றுநின்னாட்டுளேகி
யொன்னலர்முடிகள்வேலாலுருட்டிமன்பெற்றுவாழ்ந்தா
யன்னபுண்ணியத்தின்பேற்றாலடுத்தவிப்பிறப்பினுள்ளுந்
துன்னரும்போகவெள்ளந்துளைகின்றாயாதலாலே. (அ)

பாட்டளிமுரலுங்கொன்றைப்பசுந்தொடைமிலைத்தவொற்றைக்
கோட்டினன்விரதமேலாக்கோடியென்றியம்பித்தன்சீர்
காட்டியகாட்டுவிண்ணிற்காவலனாகத்திக்குந்
தீட்டியபுகழ்சான்மேன்மைத்திருமுனியெழுந்துபோனான். (கூ)

நஞ்சுமிழ்தடற்றுவெள்வாணளன்மகிழ்ந்தாண்டுதோறும்
மஞ்சனேரம்பனுள்ளமகிழ்ந்தருள்சதுர்த்திநோன்பு
தஞ்சமொன்றின்றியாற்றித்தத்துவப்பிணியினீங்கி
விஞ்சியபரமானந்தவெள்ளத்துளழுந்தினானே. (கய)

நளன் விநாயகசதுர்த்தியனுட்டித்த படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ00சு.



## ௪உ - வது சந்திராங்கதன் விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம்.



மகரநீரோடைசூழ்ந்தமாளவதேயந்தன்னி
னகரினுட்சிறந்தகன்னநகரெனும்பட்டினத்து
ளிகல்கடந்திலகுவைவேலிறையவன்சந்திராங்க
னகமகிழ்சிறப்பவிந்துமதியொடுமமர்ந்துவாழ்நாள். (க)

மந்திரத்தலைவர்சார்ந்துமலரடிவணங்கிக்கானில்
வெந்திறன்மிருகமிக்கவேட்டைசெய்தருள்கவென்றார்
சந்தமாமறையில்வேட்டைதரணிகாவலருக்கோது
மந்தநீர்மையினையெண்ணியதற்கிசைந்தெழுந்துபோனான். (உ)

வலைசுரிதோகைஞாளிவவ்வியமள்ளர்சூழச்
சிலைவளர்குன்றச்சாரற்செறிவனமடுத்துவேங்கை
கலைமரைகரடிபன்றிகவயஞ்சல்லியங்கள்சாடிக்
கொலைமுகத்தியமன்போலக்கொற்றவன்கொட்டும்வேலை. (௩)

அரக்கர்கள்சிலர்வந்தேற்பவாடமர்புரிந்தன்னோர்மெய்
யரக்குநீர்நிலத்திற்பாயவங்கையுந்தாளுந்தோளு
மரக்கியாருயிரையுண்டானதுதெரிந்துடன்வந்தாளோ
ரரக்கிநேர்ந்தழன்றுபோர்செய்தங்கையாற்பற்றச்சார்ந்தாள். (ச)

வலியுடைந்தருகேநின்றமடுவினுட்பாய்ந்தானங்கே
யொலிபுனலாடப்போந்தவுரகநாட்டந்நலார்கண்
மலிபெருஞ்செல்வமின்றுவந்ததுவந்ததென்று
கலிமகிழ்சிறப்பக்கொண்டுகாமர்தம்பதியைச்சார்ந்தார். (ரு)

பூணுடையமிழ்தநல்கிப்புணர்ச்சியைக்கருதிநாகர்
மாணிழைமகளிர்வேண்டமறுத்தனன்சந்திராங்க
னேணுடையேமகந்தனீன்றருண்மைந்தனுனே
நாணுடைமனையையல்லாலண்ணலென்பிறரையென்றே. (சு)

வெறுத்தவன்மறுத்தபோதும்வெறுத்திலருரகமாதர்
கறுத்திலர்கைக்கொள்கின்றகாமமேசாலநல்கி
மறுத்தமார்பதியையொத்தமன்னனையாங்குத்தானே
நிறுத்தினரிப்பாற்கூடிநெடுவனம்வேட்டைபுக்கோர். (எ)

மடுத்தலைபாய்ந்துமன்னன்மாய்ந்தனனென்றுசெப்பக்
கடுத்தலைக்கொண்டாலென்னக்காமருமில்லாண்மாழ்கி
யுடுத்திரளென்னமார்பினொண்முத்தமாலைசிந்திப்
படுத்தமெல்லணைமேற்சோர்ந்துபருவரலுழந்தபின்னர். (அ)

கலங்கவிழ்நாய்கன்போலக்கவலையங்கரையைக்காணுள்
கலங்கழித்தியற்றத்தக்ககருமங்கள்பலவுமாற்றிக்
கலங்களுரோடும்வைகுங்காலையின்மகதியாழோன்
கலங்கள்செய்திகிரிபோலக்கறங்குவானுங்குப்போந்தான். (கூ)

வந்தனைபுரிந்திட்டிந்துமதியெதிர்நிற்பவீணை
யந்தணன்சொல்வானெஞ்சத்தவலநோயகற்றுவெள்வேன்
மைந்துடைச்சந்திராங்கனவாளராவுலகத்துள்ளா
னந்திடநீங்கியிங்கேயடுக்குமாறறைதுங்கேளாய். (க0)

சந்திரன்முடியில்வேய்ந்ததாழ்பெருந்துளைக்கைநாதன்
சந்தநீறணிந்தமார்பன்சதுர்த்தியின்விரதமாதே
சிந்தைவேட்டியற்றுகென்றுசெப்பியோரெழுத்தினுன
மந்திரஞ்செவியிற்கூறியனுட்டிப்பும்வகுத்துப்போனுன். (கக)

அற்றைவைகறையேதோழனணிப்புயம்பெற்றாள்போல
வுற்றவுள்ளுவகைபொங்கவிருந்துயர்சதுர்த்தியெய்தப்
பற்றியவனப்பினங்கைப்பண்ணவன்விரதநோற்றாண்
மற்றதுபொழுதீராறுவருடமங்கொழிந்தமாதோ. (கஉ)

எரிவனத்தாடல்பேணியிரந்துணுந்தலைவனுர்க்குத்
திரிபுரதகனனென்னுந்திருப்பெயர்கொடுத்தசெம்மல்
பரிவுறுகருணைவெள்ளம்பரத்தலினுகநாட்டி
னரிமதர்மழைக்கண்மாதரகங்கணிந்திதனைச்செய்தார். (கங)

கற்புடைமகளிர்போன்றகாவலற்கிவுளியொன்றும்
பொற்புடையணியுமற்றும்புந்தியின்விழைந்துநல்கி
முற்புகுந்தாடிக்கண்டமுழங்குநீர்மடுவினுய்த்துப்
பற்பகல்பயின்றவுள்ளமவனிடைபதித்துப்போனுர். (கச)

குரங்குளைசுவலிற்பொங்கக்குரமிடும்பரிமான்றூண்டி
யிரங்கியகழற்கால்வேந்தனெய்தினுனென்றுதேர்ந்து
புரங்கலையமைச்சரெல்லாம்பொருக்கெனவெதிர்கொண்டின்பப்
பரங்கிடைத்தவரேபோன்றுபருவரன்முழுதுநீத்தார். (கரு)

கழைசுளிகளிநல்யானைகாவலனிவர்ந்துநீல
மழைமுகில்கடவும்வானோர்மன்னவன்போலவூர்ந்து
தழைமணிநகரவீதிதனில்வலமாகப்போந்து
இழையணிமாடக்கோயிலெய்தியாதனத்திருந்தான். (கசு)

ஈசுரனிங்குச்சார்ந்தார்க்கியம்பியமறையினீதி
பூசுரர்கூறக்கேட்டுப்பொற்புறவதனைச்செய்து
காசும்வெண்டுகிலுமற்றுங்காதலின்மறையோர்க்கீந்து
தேசுறுமனையாளின்பக்கலவியிற்றிளைத்துவாழ்ந்தான். (கஎ)

கணபதியருளினாலேகணவனைப்பெற்றநங்கை
மணவறையிருக்கும்போதுமற்றவன்முகத்தைநோக்கி
யணவியவீணைக்கையனறைந்திடச்சதுர்த்திநோன்பு
குணனொடுபுரிந்தவாறுகூறினள்குளிர்ந்தசொல்லாள். (கஅ)

தரியலர்க்கடந்ததிண்டோட்சந்திராங்கதன்பின்னந்தக்
கரிமுகத்திறைவற்போற்றிக்காதலின்மனைவியோடும்
விரிபொருள்பலவுநல்கும்விநாயகசதுர்த்திநோற்றங்
குரியபேரின்பவீட்டினந்தத்தினுற்றுவாழ்ந்தான். (கக)

சந்திராங்கதன் விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-உ0உரு.



## சரு - வது சண்முகரனுட்டித்தபடலம்.



நீருகளுங்கயலோவெனும்வாட்கண்ணெடுங்கூந்தல்
வாருகவீங்குதனத்துமைமாதுமணாளன்பாற்
சேருகநூற்றினொடெட்டரசாளுந்திறனுற்றான்
றாருகனென்றொருதானவன்முன்புதழைத்துள்ளான். (க)

எண்ணியவிண்ணிறைபுண்ணியபாவமிரண்டான்மெய்க்
கண்ணுறுகண்ணுறுமெண்ணொடுமெண்ணெண்கதுவுற்ற
திண்ணியவண்டமொர்வெண்குடைநீழற்றிகழ்வித்தான்
விண்ணவர்தம்மைவிடாதுசிறைக்கண்மெலிவித்தான். (உ)

அடாதனசெய்திடுமன்னவன்காராகிருகத்திற்
படாதவர்தம்மொடுமிந்திரன்மாயன்பகர்நானும்
விடாதகவற்சியின்மேருவரைக்கண்மெலிவெய்திக்
கடாசலவீருரிபோர்த்தவர்பாதங்கருதிட்டாம். (ங)

கண்ணுதலாரருளாலொருவாக்குக்ககனத்தே
நண்ணியதும்பர்களின்னலேவீட்டிநலமெய்த
வெண்ணுதிரேலெழிலார்தருகந்தன்றனையெண்டோ
ளண்ணலளித்திடுமேதெதுவதுநாடுதிரென்றே. (ச)

கேட்டுமகிழ்ந்தாங்கேழ்கிளர்வெள்ளிக்கிரியுற்றுஞ்
சேட்டொளிமாடக்கோயிலினெங்கள்சிவனுரை
நாட்டநயப்பக்கண்டிலமேங்கிநலிகாலே
யேட்டைகடீரமாதுமையாளங்கெதிர்நின்றாள். (ரு)

ஆரணிகாரணிபூரணிநாரணியரனூர்தஞ்
சீரணிதாரணிநாயகிதீயோன்சிலர்தம்மை
யோரணுவுங்கழலாதசிறைக்கணுறுவித்தான்
றாரணிமீதுறும்யாங்கள்கரந்தேதளர்கின்றாம். (சு)

எங்களிடும்பையைமுற்றுமகற்றியெமைவிண்மேற்
றங்கவிருத்துதனின்கடனுகுந்தளர்சேய்க்குப்
பொங்கருடாயேயல்லதுவேறும்புகலுண்டோ
நங்கையிரங்காயென்றுபணிந்துநவின்றேமால். (எ)

வேறு.

அரிபரந்தகன்றவாட்கணலர்முலைத்திதலேவேய்த்தோட்
டிரிபுரைகருணைகூர்ந்துசெப்புவாள்கயிலேசூழ்ந்த
கிரியொருநான்கனுள்ளுங்கிளருமாமதகிரிக்கண்
கரியமாயவற்கும்புட்பகிரியிலெண்கண்ணினுற்கும். (அ)

சந்தானகிரியில்வானோர்தமக்குமுன்னருளினுற்போற்
கொந்தாரும்பொழில்சூழ்கோளகிரியினிற்குழகனின்று
வந்தாருமுனிவர்க்குண்மைவழங்கியோகத்திருக்கு
நுந்தாகந்தீரவங்கேசெல்கெனநுவன்றுபோனுள். (௯)

குன்றிடையுயர்ந்தகோளகிரியினைக்குறுகுநாங்க
ளன்றிடைநெறிக்கட்சூழ்ந்தேயைங்கணைமதனையேவி
நின்றனமவனுநேர்ந்துநிகழ்தரவிருதுவாறு
மொன்றியவசந்தனுதியுறுப்பொடுமெடுப்பச்சார்ந்தான். (௧0)

ஏற்றியசுருப்புநாண்விலிடம்பிடித்தம்போரைந்துந்
தூற்றினனிறையும்வில்லேத்தூற்றிடுநுதற்கட்டீயா
னீற்றினன்மதவேள்வெந்துநெருப்பதுபரப்பநோக்கிக்
கோற்றொடியுமையாள்சென்றுகுளிர்மொழிபணிந்துசொல்வாள். (௧௧)

நாரகஞ்சிறிதுமின்றிநமனுநெஞ்சஞ்சத்தாக்குந்
தாரகற்குடைந்துவானோர்தம்பதிநீங்கிமேருப்
பாரகங்கரந்துவைகும்பரிசுமற்றுயிர்கட்கெல்லாஞ்
சேரகங்கழிக்குநீயேசரணெனச்சேர்ந்துநின்றார். (௧௨)

சங்கரநினதுஞானஞ்சார்தராமடமையாலே
யங்கவர்தமைப்போலெண்ணியைங்கணைவேளைவிட்டார்
நுங்கினனவனுமெம்மானுதல்விழித்தழலாலந்தச்
செங்கனறணித்தன்னோர்க்குத்திருவருள்செய்கவென்றாள். (௧௩)

மருப்பொலிகடுக்கைவேணிவள்ளலார்கருணைகூர்ந்தங்
குருப்பொலிநுதற்கட்பார்வையுருப்பினைத்தணித்தியோகத்
திருப்பதையொழிந்துகோளகிரியினையினிதுநீங்கித்
திருப்பொலிகயிலேக்கோயில்சேர்ந்துவளகத்தைச்சார்ந்தார். (௧௪)

வேறு.

அமரர்களாண்டினுளறுபதினுயிர
முமையொடுகலவியினுத்தமனுறுதலுங்
குமைதுயர்குமைதரக்குழகனென்றருளுமென்
றமைவிலஞ்சூழ்ந்துபினங்கியையேவினும். (௧௫)

இச்சையாற்பாவகனேகியோர்துறவியாய்ப்
பொச்சமிலாலேயப்புறம்புநின்றம்மையே
பிச்சைநல்காயெனப்பேசினன்மும்முறை
யச்சனுமன்னேயுமங்கியென்றோர்ந்தனர். (௧௬)

கலவியினீங்கினர்கண்ணுதற்றலேவனு
ரிலவிதழுமையவளிமையவரிடர்கெடக்
குலவருள்புரிகெனக்கூறினுளிறைவரு
நிலவுவீரியந்தனைநிமலைகைவார்த்தனர். (௧எ)

வாக்கியவீரியமலைமகளேந்திநும்
பாக்கியமிதுதனைப்பற்றிநின்னகட்டினுட்
டேக்குதிசிந்திடிற்றிரிபுவனம்பொடி
யாக்குமென்றீந்தனளழலவன்பருகினன். (கஅ)

ஒப்பிலான்வீரியமுதாம்போய்த்தங்கலும்
வெப்பமாற்றாதழல்விண்ணவன்விரைந்துபோய்த்
தப்பிலாச்சரவணப்பொய்கையிற்சார்த்தினன்
றுப்புறும்பாலுடுத்தோகையரூட்டினர். (கக)

காரலமந்தெழுங்ககனவானெறிக்கொளு
மாரலந்தோகையரன்புசெய்தெய்துநாட்
சாரலங்கயிலையைச்சார்ந்துகையாழினன்
போரலங்கெரிவிழிப்புனிதனுக்கோதுவான். (௨௦)

இமவரைச்சாரலினெறிதிரைக்கங்கையி
னிமிர்பசுஞ்சரவணநிரல்படுஞ்சூழலின்
குமரனைக்கண்டனன்குறுகிவவ்வாததே
னமரருக்கமரவென்றறைந்துதாழ்ந்தேகினன். (௨க)

பார்ப்பதிநாயகன்பதம்பணிந்தேகியச்
சீர்ப்பொலிமைந்தனைச்செங்கையாற்றழுவினள்
வார்ப்பொலிகொங்கையின்வளரமிழ்தூட்டின
டார்ப்பொலிகொன்றையான்றன்கையினல்கினள். (௨௨)

செச்சைமென்மலர்புரைதிருவுருப்பிள்ளையை
யச்சனுமன்னையுமாகியவண்ணலா
ருச்சிமோந்துள்ளகமுவகையிற்றிளைத்தபின்
முச்சகமுய்ந்திடமொழிந்தனர்நாமமே. (௨௩)

வேறு.

கார்த்திகைமதியிற்பிறத்தலினனுங்கமழ்நறும்பாலினிதூட்டிக்
கார்த்திகைமாதர்வளர்த்தலினனுங்கார்த்திகேயன்பலவரங்க
ளார்த்திடுமறுமீன்காதலனென்றுமணிவிசாகத்தினிற்பிறந்த
சீர்த்தியால்விசாகனென்றுந்தீயேற்றசெயலினக்கினிபுவேயென்றும். (௨௪)

சங்கரியங்கைத்தழல்கங்கையிவற்றிற்சார்ந்திடுங்கதியதனுனுங்
கங்கையைச்சுவற்றிவிடுதலினனுங்கந்தனென்றும்முகமாறு
தங்கியசிறப்பாற்சண்முகனென்றுஞ்சகலர்க்குஞ்சாமியாந்தனக்கும்
பொங்கியசாதனுதனுதலினற்புகழ்சாமிநாதனேயென்றும். (௨௫)

வேறு.

தேவரார்வசிரப்புதற்குச்சேனுபதியாந்திறத்தினற்
றேவசேனுபதியென்றுந்திகழ்மாசேனனென்றுஞ்சீர்
பாவுஞானமயமேயாம்பகட்டுமெணிவேற்றித்தலின
னுவலோர்கள்புகழ்ந்தேத்துஞ்ஞானசத்திதரனென்றும். (௨௬)

அசுரர்குலத்தைவேரோடுமெடுபோராற்றியறுத்தலின
லசுரர்குலகலகனென்றுமசைத்துமயின்மேற்சேவலுயர்த்
திசைகொண்டிடலான்மயூரேசனென்றுஞ்சேவற்கொடியனென்றும்
வசையிலுயிருள்ளமுங்குகையும்வதியுமியல்பாற்குகனென்றும். (௨௭)

என்றுமிளமைதழுவுதலாலிளையோன்முருகன்சேயென்று
மொன்றுந்தனக்கோருரியமகனைவுவப்பாற்குமரனென்றுங்
கொன்றைமிலைத்தமழுவாளிகுறித்துப்பெயரிட்டருளின
னன்றுநெடுமான்முதற்றேவரிந்துமகிழ்ந்துகடிதணைந்தார். (௨அ)

செய்யசிறியமென்மலர்த்தாடிவண்மாமணிப்பொன்முடிசூடி
யையதாருகாசுரனேடடியேங்கவலைக்கடன்முடித்து
வையமுழுதுமுய்யவருள்வழங்காயென்றுதுதிமொழிந்து
வெய்யசேனுபதியாகவிரைநீராட்டிப்பூசித்தார். (உகூ)

வேறு.

வளையாழியிடைத்துயிலுமணிமார்பன்முதலோர்கட்
கிளையாதகருணைமொழியிசைத்தருளியவ்விளையோன்
விளையாடும்பருவத்தில்விரிபுனற்கிட்டிணைவடபாற்
றுளையாடுவேய்ங்குழலின்சுதிபரக்குங்கானடுத்தான். (௩0)

ஆங்கிருந்துகணேசர்திருவடிமலரைத்தியானித்துப்
பாங்குபெறுசடக்கரத்தைப்பகர்ந்துசிலநாட்கழிப்பத்
தாங்குபெருங்கடமுகத்துத்தமையனுரெதிர்தோன்றி
வீங்குவரங்கொடுத்தருளிவிழைந்திதுவுஞ்செய்தனரால். (௩க)

போரேற்குந்தமதூர்திப்போத்துமயிலளித்தவுணச்
சூரேற்குநினக்குமயிற்றுவசனெனப்பெயராக
காரேற்குங்கொடைக்கரத்துக்காளாயென்றருள்செய்து
சீரேற்குங்கணத்தோடுஞ்சேண்வெளியினிடைமறைந்தார். (௩உ)

இலக்கமாயனுட்டிப்புக்கெதிர்நின்றூர்தமையிருத்தி
யிலக்கமாமலராறுகுமிட்டினியமோதகங்க
ளிலக்கமேதகவூட்டியிலக்கவிநாயகனென்று
ணிலக்கவீரரையிளையோரெனத்தழுவுமிளையோனே. (௩௩)

கயிலாயவரைக்கேகிக்கண்ணுதலார்திருவருள்பெற்
றயிலாதிப்படையேந்தியமரர்கணம்புடைசூழ
மயிலாரவூர்ந்தடுத்துவந்தெதிர்த்ததாருகன்ற
னுயிராரப்பருகிநலமுலகமெலாம்பரப்பினன். (௩ச)

இலக்கவிநாயகர்ப்போற்றினிரும்பயனென்றிலக்கமா
மலக்கண்முழுவதுமகலுமவர்க்கடரும்பகையில்லை
துலக்கமுறுமத்தானஞ்சூழ்மாயூரேசமென
நலக்குமொருபெயர்பூண்டுநானிலத்திற்சிறந்ததே. (௩ரு)

சண்முகரனுட்டித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-உ0சு0.



## சச - வது மன்மதனுருவம்பெற்றபடலம்.



அரத்தகமணிந்தபாதத்தணங்குமைபாகர்கண்ணுற்
சரத்தினிற்சிறந்தமாரன்றவளநீறானபின்னர்ப்
பரத்தினிற்றணந்தவாவிப்பண்பெனவிரதிமாழ்கி
வரத்தினிற்சிறந்தவெண்டோள்வள்ளலைச்சரணஞ்சார்ந்தாள். (க)

வணங்கினளெழுந்துவாட்கண்மல்குநீருறைகள்சிந்த
நுணங்கிடைகுழையநின்றுநுவலரும்பொருளேயாரு
மிணங்குமங்கலத்தாராகயான்கொலோகைமையாவேன்
கணங்கெழுசுருப்புநாரிக்காளையைத்தருகவென்றாள். (உ)

தரையெனுநெடுந்தேரூர்ந்ததம்பிரான்கருணைகூர்ந்து
விரையவிழ்குழலாய்நம்மால்விளிந்தவேணினக்கென்றும்
புரையறுமுருவனுவன்புவனத்தார்க்கருவனுவன்
கரையலையென்றவட்குக்காமனையெழுப்பித்தந்தான். (௩)

கனங்கிளர்சடைகடாழ்ந்துககனமுந்திசையும்போர்ப்ப
வினங்கிளர்பூதத்தோடுமெரிவனத்தாடுவார்முன்
னனங்கவேளடுத்துக்கஞ்சவடியிணைமுடிகடீட்டி
மனங்கரைந்துருகச்சூழ்ந்துமருங்குநின்றேத்தலுற்றான். (ச)

வேறு.

ஆறுடியவேணியனேசரணமரவாடியவாபரணசரண
மேறுடியவார்கொடியாய்சரணமெரியாடியபாணியினாய்சரணங்
கூறுடியமாதுடையாய்சரணங்குரையாடியபூங்கழலாய்சரண
நீறுடியமேனியனேசரணநிகராருமிலாதவனேசரணம். (ரு)

கன்றால்விளவீழ்கணையாய்சரணங்கதழ்வாசுகிநாரியினாய்சரணங்
குன்றாகியவார்சிலையாய்சரணங்குரைமாமறைவாசியினாய்சரண
மொன்றார்புரநீறுசெய்தாய்சரணமுற்றார்தமைவீறுசெய்தாய்சரண
நின்றாடுபொன்மன்றுடையாய்சரணநிகராருமிலாதவனேசரணம். (சு)

வடிவார்தலைமாலையனேசரணம்வாளாடர்களென்பணியாய்சரணங்
கடியேனவெண்கோடுடையாய்சரணங்கடலாமையினோடுடையாய்சரணந்
துடிமீன்விழியாழியினாய்சரணஞ்சுடர்கேசரியீருரியாய்சரண
நெடியோன்விழிசேரடியாய்சரணநிகராருமிலாதவனேசரணம். (எ)

வேறு.

மாரவேடுதித்திதுவகுக்கத்தேவர்கள்
வீரவேலனையகண்விமலைதோளைநீ
சேரவேயேயெனச்செப்பியேயவர்
தாரநான்பிழைத்துளேனதுபொறுத்தியால். (அ)

தொன்றுபோல்யாரையுஞ்சுவைக்கரும்பினால்
வென்றதிகாரத்தின்மேவுமாறெனக்
கின்றருளாயெனவிரந்துநின்றன
னன்றுவார்சடையினாவற்கிதோதுவார். (கூ)

அந்தரத்தவர்தொழுமைங்கைச்செம்மலே
தந்திடுமுனக்கதிகாரந்தன்னைநீ
வந்தனைபுரியெனவகுத்தோரக்கர
மந்திரங்கொடுத்தருள்வழங்கிவிட்டனர். (கo)

வேறு.

விடையவன்பாதம்போற்றிவிடைகொண்டுமாரன்மின்னே
ரிடையினவளைக்கைவாட்கணிரதியினோடுமேகி
யடையலர்பணிக்கும்வைவேலறுமுகனனுட்டித்திட்ட
மிடையெழின்மாயூரேசம்விழியெதிர்கண்டுபுக்கான். (கக)

ஆயிரம்வருடம்வைகியன்பினாற்கணேசர்செய்ய
மாயிரும்பாதமுன்னிமந்திரங்கணிப்பவந்தப்
பாயிரும்கடத்துவேழப்பண்ணவனெதிரேதோன்றி
நீயிவண்விழைந்தவெல்லாநிகழ்த்துதிதருதுமென்றான். (கஉ)

கடைவருநாளிலண்டகடாகங்களனைத்துமுண்ணும்
படைமழுவேந்துசெங்கைப்பண்ணவனுதற்கட்டீக்கங்
கிடையிளைப்பாறத்தன்மெய்யினிதுணவாக்குந்தூயோன்
றடையறுமன்புபொங்கத்தாழ்ந்துவிண்ணப்பஞ்செய்தான். (கங)

பொருநர்கள்படையெடாதபூவையர்தம்மைவென்றும்
பெருகொளிதாங்கியின்பம்பேணுமென்னதிகாரத்தை
யொருவனேமுன்புபோனானுற்றுதல்வேண்டுநல்ல
வுருவமும்வேண்டுநல்காயும்பராயென்றிரந்தான். (கச)

கடிமலர்ப்பகழிதூண்டிக்கண்ணகனுலகுக்கெல்லா
முடிவிலாவின்பநல்குமுழுமதிக்குடையோய்மேலே
நெடியவன்கண்ணனுங்காளீமகனுவையங்கே
வடிவுனக்குறுகவென்றுமறைந்தனன்றேவதேவன். (௧௫)

ஆலயமாங்கொன்றாக்கியமலனைப்பதிட்டைசெய்து
மாலயனறியாதார்க்குமகோற்கடனெனும்பேர்நாட்டிக்
காலையுமாலைப்போதுங்காதலினாட்டிச்சாத்தி
நோலையுநவணமற்றுநுகர்வித்துப்பூசைசெய்தான். (௧௬)

சிலபகல்பூசையாற்றித்தேவர்தேவிசைவுபெற்று
வலனுயர்கருப்புவில்லுமலர்க்கணையைந்தும்பற்றி
யுலகங்களேழுமுன்போலொருசகடுருட்டிக்கோலங்
குலவியவிரதியோடுகூடிவாழ்ந்திருந்தானன்றே. (௧௭)

வாழ்தருகாலந்தன்னில்வாருதிச்சேக்கைமாயோன்
றாழ்புவியிடத்துக்கண்ணனாயினான்றனக்கெல்லாருஞ்
சூழ்பிரத்துமனனென்னவுருவொடுந்தோன்றிச்சான்றோர்
வீழ்பலகலையுமாய்ந்துவீரனாய்வயங்கினானே. (௧௮)

வம்பலர்க்கணையோன்கண்ணன்மைந்தனாய்வைகுநாளிற்
சம்பரனெனும்பேர்பூண்டதானவன்வலியின்மிக்கா
னிம்பரினில்லாத்தோட்டியிரதியையும்பரெய்திக்
கம்பமுற்றிடக்கைக்கொண்டுககனமேவழியாச்சென்றான். (௧௯)

சென்றிடும்போதுதப்பிச்செறிபுனற்கடலுள்வீழ்ந்தாள்
வன்றிறன்மீனமொன்றுவல்லைவாய்மடுத்ததன்னான்
றன்றிறன்முழுதுங்கொண்டுதடங்கடற்றுருவிக்காணா
னென்றியதனதுவைப்பினுற்றனனொழிந்தசின்னாள். (௨0)

கார்வளர்குழலினாளைக்கருவெனத்தரித்தமீனம்
வார்வலைப்படலுஞ்சேர்ப்பன்வைகுசம்பரன்முன்னுய்த்தான்
சீர்வளரதனைக்கீழ்ந்துதெரிவையுள்ளிருப்பக்கண்டு
ஆர்வளர்விழைவுபொங்கவுவண்மகளெனக்கைக்கொண்டான். (௨௧)

கழாமணியனையமாதுகாய்சினத்தவுணன்பாங்கர்
வழாதநற்சிறப்பின்வைகுமரபெலாமறிந்துபோந்த
வெழாலுளர்வீணைக்கையனிசைத்தலுங்கண்ணன்மைந்தன்
றழாலுறுவிழைவாலன்னாடனைக்கொள்வானெழுந்துபோனான். (௨௨)

தருக்குசம்பரனைநண்ணித்தகவுரைகூவிப்பன்னாட்
செருக்களத்தடுத்துவன்போர்செய்தவனிருந்தானாக
மருக்கமழ்குழலுருக்குமணிமகன்வரவுகாணாள்
வெருக்கொடுதெளிந்துசெய்தாள்விநாயகசதுர்த்திநோன்பு. (௨௩)

வரத்துயர்விரதத்தோடுமற்றவட்கறுநாள்செல்ல
வுரத்துயர்சம்பரன்றனுயிர்தனைக்குடித்துமாதை
கரத்தமர்நெல்லியென்னக்கவர்ந்துமீண்டடுத்தானென்ப
பிரத்தியுமன்னென்றாரும்பேசிடப்பட்டகாமன். (௨௪)

தாயுருக்குமணிநோக்கித்தழைத்தபேருவகைபொங்கச்
சேயுருக்காணப்பெற்றாமெனச்சிறந்தெழுந்தவன்பான்
மீயுருக்கணேசர்பூசைவிரதமுமுற்றச்செய்து
காயுருக்கியபொன்னாதிகரிசறுதானஞ்செய்தாள். (௨௫)

மாதவன்யாதவன்பால்வருமலர்க்கணையோன்பின்னர்ச்
சீதளமதியம்வென்றதிருமுகத்திரதியோடு
மாதரத்தமர்ந்துவாழ்நாளனுருத்தன்றன்னையீன்று
ஞேதனுருத்தன்காளைப்பருவத்தையுற்றகாலை. (உகூ)

எத்திசையவருந்தாழவெரிமதிலிருக்கும்வாணன்
பத்தியினுயிர்த்தெடுத்தபணிமொழியுடையென்பாடன்
சித்திரலேகைதேரத்திகழ்ந்திடுங்கனவினந்த
வுத்தமவனுருத்தன்றனுருவெழில்விழைந்துசொன்னுள். (உஎ)

இரவினுட்பாங்கியேகித்துயிலொடுமெடுத்துவந்தாள்
கரவினுலுவளகத்திற்கலந்தவன்போகந்துய்த்தாள்
விரவியதகட்டுச்சூலும்வெய்யவேல்வாணன்றேர்ந்து
புரவலனவனைப்பற்றிப்போக்கருஞ்சிறையிலிட்டான். (உஅ)

தருவியெங்கணுங்காணுதுதுயர்பிரத்துமனற்கூவித்
திருவுருக்குமணியென்பாள்செப்புவாள்மைந்தாநீமுன்
செருமலிசம்பரன்பாற்சென்றுழிநினையான்காணத்
தருநிகர்கணேசர்பொய்யாச்சதுர்த்தியின்விரதநோற்றேன். (உகூ)

நீயுமவ்விரதநோற்பினின்மகனரியதான
தேயநின்றுழியும்வல்லேதிரும்பிவந்தடுப்பனென்று
டாயுரையுவந்துகேட்டுத்தகுபிரத்துமனன்றனு
மாயிரநாமத்தண்ணலருள்விரதத்தைச்செய்தான். (௩0)

விரதநாண்முற்றுமுன்னர்வீணைமாதவனங்கேகி
யுரைசெயக்கேட்டுக்கண்ணனுருத்தெழுந்தடுபோராற்றி
யெரிமதிலானைவென்றவ்வேழையைமருமானேடு
தரியலர்நடுங்கக்கொண்டுதன்பதியடுத்துவாழ்ந்தான். (௩க)

தென்மதிக்கீற்றுப்போலத்திகழுமோர்மருப்பினனைத்
தன்மதியிருத்திநோன்புதகச்செய்துவடிவிலாத
மன்மதனுருவம்பெற்றுவாழ்ந்திடுங்கதையீதாகு
நன்மையெய்திடமாசேடனவிற்றியவாறுங்கேளாய். (௩உ)

மன்மதனுருவம்பெற்றபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-உ0கூஉ.



## சரு - வது ஆதிசேடனனுட்டித்தபடலம்.



கமலைநாயகன்காணருநாயகன்
றிமிலமாமறைசெப்பருநாயகன்
விமலமாகியவெள்ளிப்பொருப்பிடை
யமலையோடரியாதனம்வைகினன். (க)

சுந்தரத்திருமால்சுரர்வேந்தனு
மந்தரத்தனைவோர்களும்யோகரும்
வெந்தநீறணிமெய்த்தவர்யாவரும்
வந்துதாழ்ந்துவரங்கொளநின்றனர். (உ)

அன்னசெவ்வியினங்கணர்வார்சடை
மன்னுசேடனெல்லாரும்வணங்கநாஞ்
சென்னிமீதுதிகழ்ந்திருந்தாமென
வுன்னியுள்ளத்தருக்கினையுற்றனன். (௩)

ஆதிசேடனகத்துத்தருக்கினைப்
பூதிமேனிப்புனிதரறிந்துதன்
சோதியங்கையிற்றுண்ணெனவாங்குபு
மோதினார்நிலமீதவன்மொய்ம்பற. (௪)

வாய்ந்தவெள்ளிவரையடிச்சாரலின்
வீழ்ந்தசேடன்விளங்குமணித்தலை
போழ்ந்துவைத்ததுபோலப்பிளந்ததா
லாழ்ந்துதன்புறவாயிரமாகவே. (௫)

வையந்தாங்குமதுகையுமற்றனன்
பொய்யிலாதபொலிவுமிழந்தனன்
மெய்யன்சார்புமுன்போலவிரவிடச்
செய்யுமாறுந்தெரிந்திலன்சேடனே. (௬)

உயிர்ப்புமற்றுயிருண்டிலையென்னவுங்
கயிர்ப்பினாழ்ந்தவச்சேடனைநாரதன்
செயிர்ப்பின்முப்புரஞ்செற்றவனைத்தொழப்
பயிர்ப்பினெஞ்சிற்படர்ந்தவன்கண்டனன். (௭)

ஆவவென்னவடுத்ததுனக்கென
மேவருந்தவன்மெல்லவினவலும்
போவதாகியபுல்லுயிர்தாங்கினான்
றேவனாணினாற்செப்பிலனென்றுமே. (௮)

உருக்கமுள்ளவுயர்தவனோதுவான்
றருக்கினாதன்றன்சார்புவிட்டித்துயர்
பெருக்கியாழ்ந்தனைசேடவிப்பீழையை
நெருக்குமாறுநிகழ்த்துதுங்கேட்டியால். (௯)

பேறெனைத்தையும்பேணுநர்க்கீபவன்
வீறெருக்கணிவித்தகனைங்கர
னாறெழுத்தையனுட்டியெனச்சொலி
யாறெழுத்தையவற்குபதேசித்தான். (௧0)

மந்திரம்பெருமாட்சியிற்சற்றுரு
வைந்துபெற்றுவழிக்கொண்டுசோலையின்
மந்திபாய்பிரவாளநகர்தனின்
மந்தநீங்குளச்சேடன்மருவினான். (௧௧)

விதுத்தவன்பின்விளம்பிச்சடக்கரஞ்
சதுர்த்தியின்விரதந்தனைத்தாங்கினான்
செதுத்தனுச்சிறுசேடற்கருளுவான்
மதுத்தனாழலின்மாலையன்றோன்றினான். (௧௨)

துணிந்தகோடுசுடர்கரத்தேகொள
வணிந்தவித்தகவானைமுகத்தவ
திணிந்தவென்றுயர்தீர்த்தருளென்றெதிர்
பணிந்தெழுந்துபரவினன்சேடனே. (௧௩)

பத்துக்கைகளும்பத்துப்படைகளுஞ்
சித்திபுத்தியுஞ்சிங்கநல்லூர்தியு
மத்திமாமுகத்தோடுமங்கெய்திய
வுத்தமன்னவன்பத்திக்குவந்துபின். (௧௪)

முதிர்ந்தபேரொளிமூரிமணித்தலை
பிதிர்ந்ததாயிரம்பீடுறுசெனனியாய்
வதிந்துமற்றவைதோறுமிவ்வையகம்
பதிந்துதாங்குநற்பாழிவழங்கினன். (கரு)

எந்தையெம்பெருமான்சடைக்காட்டிடை
யைந்திருந்தலையோடமர்வாயினி
யிந்தமாணுருவோடுமுதரமா
பந்தனந்தகவேபயில்சென்றபின். (கசு)

அண்டகோடியனைத்துமடங்குற
மண்டுபேருருவல்லையெடுத்தனர்
கொண்டுசேடனைக்குக்கியிற்சூழ்ந்தனர்
பண்டுதேவர்பனிமலர்தூற்றினர். (கஎ)

உதரபந்தனமாயொருகூற்றினல்
வதிதலுற்றொளிமாமணிச்சேடன்பின்
கதிவழங்குமக்காமருவைப்பிடை
விதியிணலையமேவரச்செய்தனன். (கஅ)

செய்தசெம்பொற்சினகரத்துள்ளுறக்
கைதயங்கியகாமர்முகத்தனை
யைதுவைத்தலராதிகைக்கொண்டுளப்
பொய்தவிர்த்திடும்பூசனையாற்றினன். (கசு)

கையின்மோக்குங்கணேசரருளிய
வுய்யுநல்வரத்தாலுமைபாகனார்
செய்யவார்சடைச்சேர்வுபெற்றன்பனாய்
வையந்தாங்கினன்வாழ்ந்திருந்தானரோ. (உ0)

ஆதிசேடனருள்பெறுவண்ணமு
மோதினமுணர்ந்தாயெனவோதினன்
வேதமோதும்வியாதன்வியப்புற
வாதிவண்டொரொண்மலர்க்கஞ்சனே. (உக)

வேறு.

விநாயகனுக்குரியவிநாயகசதுர்த்தியனுட்டித்தோர்விழுப்பங்கேட்டாய்
கணவிரதத்தோரெனவேயுலகமெலாங்கண்டுகெழித்தவர்கட்கெல்லாந்
தணதருளைத்தருந்தந்திமுகற்குரியசங்கட்டசதுர்த்திமேன்மை
நினதரவிற்கேளென்றுபிருகுமுனிமதிக்காந்திகிருபற்கோதும். (உஉ)

ஆதிசேடனனுட்டித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உககச.



## சகூ - வது சங்கட்டசதுர்த்திவிரதம்

# இந்திரவிமானமண்ணிழிபடலம்.



தொத்தியல்குழையுந்தோடுந்தூலங்கத்தேன்மலர்வாயூற
மெத்தியவிருநாற்புள்ளின்வியத்தகுகுரல்கடோற்றிக்
கத்திகைக்குழலார்போலக்கவின்றவர்கண்போல்வண்டு
மத்தியினுலாவும்பொங்கர்மத்தியதேயந்தன்னில். (க)

மகத்திரவியின்வாரத்துக்கேழெனும்வாரப்புத்தேள்
புகத்திரவியமுமற்றும்பொன்றுமப்பொழுதுஞ்சென்றே
ரிகத்திரவாதுசாலவின்புறவளங்கணல்குஞ்
சகத்திரபுரியின்வாழ்க்கைத்தராபதிசூரசேனன். (௨)

சத்திகண்மூன்றுநன்குதகச்செயுங்குணங்களாறுஞ்
சித்திகண்மூன்றுஞ்சாலத்திகழ்தருவுதையமூன்றும்
பொத்தியவுபாயநான்கும்போக்கரும்பொருள்கணான்கு
மெத்தினத்தினுநீங்காதானிகல்சடந்திலகும்வேலான். (௩)

பொதுக்கடிந்துலகுகாத்துப்பூசுரர்சுரரைப்பேணு
முதுக்குறைவுடையசீலன்மொய்த்திடும்பெருஞ்செல்வத்தன்
விதுக்குறைநுதலார்வீழவேளெனச்சிறந்தமெய்ய
னுதுக்குநல்குரவோர்க்கின்னனுதுக்குந்தண்கவிகைவள்ளல். (௪)

தண்ணெனக்குளிர்செங்கோலான்றழலெனத்தழற்றியெங்கு
நண்ணுறுந்திகிரியுள்ளானவிற்றுமிவ்வரசன்மண்ணின்
விண்ணினுமுவமையில்லாள்விளங்கியகற்புமிக்க
புண்ணியசீலையென்னுமனையொடும்பொருந்திவாழ்நாள். (௫)

ஒருதினம்பேரத்தாணியொளிர்மணித்தவிசின்வைகிப்
பொருடெரியமைச்சர்சான்றபுரோகிதர்பலருஞ்சூழ
மருவியகுறைசொல்வார்க்குமன்னியமுறைசொல்வார்க்கு
மருள்செயுமளவிலாங்கோரந்தரவிமானங்கண்டான். (௬)

விண்ணெழுபரிதிப்பொற்றேர்விளங்குதன்மார்க்கநீங்கி
மண்ணினுக்கணிமைத்தாகவழிக்கொண்டதென்னவாங்கே
நண்ணியவிமானமந்நகரிலோர்குட்டன்பார்க்கத்
திண்ணியநிலத்தின்வந்துசேர்ந்ததுகதியிற்றப்பி. (௭)

தூதர்கடம்மைக்கூவிச்சுடருமிழ்விமானம்வந்து
பூதலத்திறங்கிற்றோடிப்பொற்புறவறிமினென்று
மேதகவிடுத்துமுன்னர்வேந்தனுமமைச்சர்சூழ
வாதரமகத்துட்பொங்கவாடன்மாவுகைத்துச்சென்றான். (௮)

அடுத்தனன்விமானப்பாங்கராடலம்பரிமான்றன்னை
விடுத்தனனடந்துமுன்போய்விமானத்தினுப்பண்வைகுங்
கடுத்தவழ்வயிரவேற்கைக்காவலன்றன்னைக்கண்டு
மடுத்தபேரன்புபொங்கவணங்கிநின்றிதனைச்சொன்னான். (௯)

வேள்வியாற்றவந்தானத்தால்வீரத்தான்மற்றுநல்ல
வாள்வினைத்திறங்களானுமறியொணாவமரரேறே
மூள்வினைநன்மைப்பேற்றான்மூன்றுறக்கண்டேனின்னைக்
கேள்வியுமடியேன்கல்விக்கேண்மையும்பயன்பெற்றன்றே. (௰)

மண்ணிடையீங்குப்போந்தவரவினையுணர்த்துகென்னத்
திண்ணியவெழுத்தோட்சூரசேனன்வேண்டுதலுநோக்கிப்
பண்ணவர்பணிந்துபோற்றப்பசும்பொன்மாநகரமாளு
மண்ணறன்வரவுதன்னையவன்கொளவுணர்த்தலுற்றான். (௧௧)

மாடகமுறுக்கியாழின்வார்நரம்புளர்ந்துபாடும்
பீடகஞ்சிறந்தநோன்பிற்பெருந்தகுமுனிவன்விண்மே
லாடகநகரிற்றேவரனைவருஞ்சூழவைகும்
பாடகமகிழப்போந்தான்பரிந்தெனக்கிதனைச்சொன்னான். (௧௨)

இருநிலந்தனிலோரன்பனேரம்பனருளாலன்னோ
னொருவருந்தெய்வத்தன்மையுதவுசாரூபந்தானு
மருவியவுடலிற்றானேவரப்புருசுண்டியாகித்
தெருளினர்போற்றநின்றான்றெரிசனஞ்செய்தேனென்றான். (௧௩)

அம்மொழிகேட்டலோடுமோர்வமென்பிடரினுந்த
விம்மெனவெழுந்துமண்மேலிருந்துழியெய்தியன்னான்
செம்மலர்ப்பாதம்போற்றித்தெரிசித்துவிடைகொண்டின்பம்
விம்மியதுறக்கத்தெய்தவிண்வழிக்கொண்டுசார்ந்தேன். (௧௪)

ஈங்குநேரடுக்கும்வேலையிந்நகர்வணிகன்மைந்த
னோங்கியகுட்டநோயனுலப்பிலாப்பாவியன்னான்
வீங்கியபார்வைபட்டுவிண்கதிவழுக்கிப்பூமி
தாங்கிடவிறங்கிற்றிந்ததயங்கொளிவிமானமன்னா. (௧௫)

இங்கட்டவொளிவிமானமிருந்ததிந்நகரந்தன்னுட்
சங்கட்டசதுர்த்திநோன்புதகச்செயுமொருவனுள்ளான்
கொங்கட்டமணக்குந்தார்வேற்கொற்றவவவனல்வல்லே
யங்கட்டதிசையும்போற்றவடுத்திடுமினிமேலென்றான். (௧௬)

வரவினையுரைத்தலோடுமானவேற்சூரசேனன்
பரவியபுகழோய்நீயும்பணிபுருசுண்டியென்பான்
விரவியகுலத்துள்யாவன்விளைத்தமாதவங்கள்யாவை
கரவறத்தெருட்டுகென்னக்கடவுளர்கோமான்சொல்வான். (௧௭)

வேறு.

முண்டகநிரந்துழுவைமோழல்கரியாளி
மண்டகமறத்தின்வலிமற்றுமுளமாவுங்
கொண்டகல்வனப்பொடுகுளிர்ந்துவிண்ணளக்குந்
தண்டகவனத்துளதுதக்கவொருமூதூர். (௧௮)

நந்தூரமெனும்பெயரினண்ணியவம்மூதூர்
செந்திருவிருந்துவிளையாடுறுசிறப்பி
னந்தமில்வளத்தொடமருற்றததன்மாடே
வெந்திறலின்வேடரொருசேரியதுமேவும். (௧௯)

அப்பழையசேரியிடையாலமெனவுற்றான்
விப்பிரதனென்றெவரும்விள்ளுமொருபேரா
னெப்பொழுதுமெவ்விடனுமெய்திவழிசெல்வோர்
தப்பும்வகையின்றியவர்தம்பொருள்பறிப்பான். (௨௦)

ஆறலைசெய்கள்வனவனாங்கொருதினத்தோர்
வீறுமலிவேதியன்விரைந்துசெலநோக்கிப்
பேறுளதெனக்கடிதுபின்றொடரலுற்றா
னீறுளதெனக்கருதிவேதியனிரிந்தான். (௨௧)

ஓடுமொருவேதியனையோடினன்பிடிப்ப
நீடுநெறியூடுநெடுநாழிகைகழித்துங்
கூடும்வகையின்றியுள்குழைந்துவழிமீண்டான்
பேடுமயிலோடுவிளையாடுபெருவெங்கான். (௨௨)

வேறு.

விப்பிரதப்பெயர்வேடன்மீண்டுழி
யப்பெருவனத்திடையாள்விநாயகன்
மைப்பொருதீர்த்தமுமல்லற்கோயிலுங்
துப்புறமரீஇயெதிர்தோன்றக்கண்டனன். (௨௩)

அத்தகுசூழலையடுத்துவார்திரை
முத்தலைத்தெறியுமத்தீர்த்தமூரிநீர்
மெத்தியவிளைப்பறவெஃகியாடினான்
பைத்தெழுதாகமும்பருகிப்பாற்றினான். (உ௪)

திரைதவழ்ந்தலரொடுதிகழ்ந்தபொய்கையின்
கரைவளரொருதருக்காமர்நீழலி
னிரையிடம்விழைமிகவேங்கும்வேங்கைபோ
னிரைகுறையுள்ளகநிலவவைகினான். (உ௫)

அக்குளங்கரையிருந்தயர்வுயிர்த்தழி
முக்கலமுனிவரனாங்குமுன்னினான்
மிக்கெழுவேகத்தின்வேடன்போந்துவாள்
கைக்கொடுமுனியுயிர்காற்றவோங்கினான். (உ௬)

வேர்த்துமேல்வந்திடும்வேடன்றன்னைநேர்
பார்த்தனன்முக்கலனென்னும்பண்ணவன்
கூர்த்தவாளொடுமறியாமைகுன்றுபோ
லார்த்தபல்பாவமுமவணிவீழ்ந்தன. (உ௭)

விப்பிரதப்பெயர்வேடற்கவ்வழி
யொப்பறுமெய்யறிவுதிப்பக்கூறுவான்
முப்புரிநூலுரமுயங்குமாதவ
செப்பியவென்மொழிசெவிமடுத்தருள். (உ௮)

இந்தநீர்த்தடம்படிந்தெழுதலானுநீ
வந்துநற்றெரிசனம்வழங்கலானுமெய்
தந்திடுநன்னெறிச்சாரும்புத்தியு
நந்தியதளவிலாப்பவமுநந்தின. (உ௯)

பெரியவர்துட்டரைப்பேணுமாறிலை
பெரியவர்தெரிசனம்பிறங்குதுட்டர்க்கு
முரியநற்பயன்றராதொழியுமாறிலை
விரிபுகழ்முனிவர்கள்வேந்தவாகையால். (௩0)

கருணைவைத்தெனையினிக்காத்தல்வேண்டுமிவ்
விருநிலவாழ்க்கையினெனக்குப்பற்றிலை
குருபரவெனவுளங்குழைந்துகூறுபு
திருவடிமலர்களிற்சென்னிவைத்தனன். (௩௧)

பற்றியவுடம்புபோற்பாதப்போதினை
யுற்றிருநிலத்தெழாதுறக்கிடந்திடு
மற்றமில்வேடனன்பினையறிந்தருண்
முற்றியமுக்கலமுனிவனெண்ணுவான். (௩உ)

துட்டராயினுஞ்சரணென்றுதுன்னிடில்
விட்டலோவறமெனவிளம்பிடப்படா
துட்டுழாவன்பினாலுற்றவிண்ணவர்க்
கிட்டமேகொளநலமீதல்வேண்டுமே. (௩௩)

வேறு.

விதியுளியுபதேசித்தல்வேடனாகையினாற்கூடா
மதிதருங்கணேசர்நாயமந்திரந்தக்கதென்று
கதிதருமனத்திற்றெள்ளிக்கமழ்புனற்றோய்ந்துவாவென்
றெதிரறுமுனிவன்சொன்னானெழுந்தவன்றோய்ந்துசார்ந்தான். (௩௪)

முக்கலமுனிவனன்புமூண்டவிப்பிரதன்சென்னிச்
செக்கமலக்கைவைத்துச்சிந்தையினினைந்தவெல்லா
மொக்கவுய்த்திடுங்கணேசாயநமவென்றுபதேசித்து
மிக்கவுட்கருணைதன்னாலிதனையும்விளம்பலுற்றான். (௩௫)

ஆங்கொருதண்டைநாட்டியன்பனையிதற்குநாளும்
வீங்குநீர்காலந்தோறும்விட்டிதுதளிர்க்குங்காலும்
பாங்குறவிருந்தேரம்பன்பதமலர்மனத்துட்கொண்டு
தீங்கறுமந்திரத்தைச்செபித்திடுசித்தியெய்தும். (௩௬)

ஈண்டுநாமீண்டும்போதுமென்றருள்செய்துவாய்மை
மாண்டமுக்கலனுந்தீர்ந்தான்மற்றவிப்பிரதன்றானு
மாண்டவனட்டதண்டுக்கறல்கண்முப்போதும்வாக்கி
நீண்டவனறியாவைங்கைநிமலன்மந்திரங்கணித்தான். (௩௭)

வருடமாயிரங்கள்செல்லமந்திரங்கணித்தலோடு
முருகுகொப்புளிப்பத்தண்டுமொய்தளிர்பரப்பிப்பூத்த
தருளுமுக்கலருமந்தச்செவ்வியினாங்குப்போந்து
திருவுளமகிழ்ச்சிபொங்கத்திருந்தியசெய்கைகண்டார். (௩௮)

முற்றுறத்துறந்தமேன்மைமுனிவர்க்குமுறுதியீது
பற்றுதலரியதென்றுபற்பல்கால்வியந்துநோக்கிப்
பொற்றகுண்டிகையினீரைப்பொருக்கெனமந்திரித்திட்
டற்றமிலாதவன்பனாக்கையினள்ளித்தூர்த்தான். (௩௯)

கல்லெறிக்கொண்டபோதேகாமருதருவினுள்ள
பல்லினப்பறவைக்கூட்டம்பறந்திடுமாறுபோல
நல்லமுக்கலவன்வீசுநறும்புனல்பட்டபோதே
வல்லபல்பிறவியீட்டும்வழுக்கெலாமிரிந்தமாதோ. (௪0)

மொண்டுநீர்வாக்கப்பட்டுமொய்தளிரீன்றுநின்ற
தண்டுபோற்குரவன்வீசுந்தக்கமந்திரநன்னீராற்
சுண்டந்தன்புருவநாப்பட்டோன்றிடவொற்றைக்கொம்பி
னண்டனாருருவம்பெற்றானங்குவிப்பிரதனம்மா. (௪௧)

கவ்வியவுள்ளவன்பாற்கணேசன்மந்திரத்தைச்செப்பித்
திவ்வியவுருவம்பெற்றுத்திகழ்ந்தபுத்திரனைநோக்கி
யவ்வியமகன்றசிந்தையருந்தவன்றழுவிக்கொண்டாங்
கெவ்வமிலாதவேகாக்கரத்தையுமுபதேசித்தான். (௪௨)

கற்பமொன்றளவுமைந்தாகதவுமிவ்வுடலின்வாழ்வை
கற்பகமாகவிந்தக்கதைமரமென்றுதூயோன்
கற்பனைபுரிந்துபோனான்கதைமரஞ்சொல்லுமுன்னங்
கற்பகமாகிவேட்டகாமங்கள்சுரந்துநிற்கும். (௪௩)

இன்புருவானமுக்கணேரம்பன்மலர்ப்பொற்றாளை
யன்புருவாகிப்போற்றியான்றவிப்பிரதனம்மா
தன்புருசுண்டந்தாங்குந்தன்மையாலவனையாரு
நன்புருசுண்டியென்னநவிற்றினர்நாவிற்றீட்டி. (௪௪)

புண்ணியவாசானேகப்புருசுண்டியெழுத்தொன்றானாந்
திண்ணியமனுவைமுன்போற்செப்பியாயிரமாண்டேக
நண்ணியாங்கிருந்துநோர்பநாயகனெதிரேதோன்றி
விண்ணிடையிருந்துகாட்சிவியத்தகக்கொடுத்தானன்றே. (௪௫)

கண்டெழுந்தாடிப்பாடிக்கையிணைசிரமேலேற
வண்டனேபோற்றியாண்டவமலனேபோற்றிவார்ந்த
சுண்டமொன்றெனக்குமீந்தசுண்டனேபோற்றியென்று
விண்டெதிர்வணங்கிநின்றான்மிகுபுருசுண்டியென்பான். (௪௬)

வேட்டதென்னுரையாய்வல்லேவீசுதுமென்றானொற்றைக்
கோட்டினனதனைக்கேட்டுக்குளிர்புருசுண்டிசொல்வா
னாட்டுநின்னருளானாயேனயத்தகுதேவரானு
மீட்டருஞ்செல்வத்தோடுமின்பமும்பெற்றேனன்றே. (௪௭)

நின்னுருப்பெற்றுமூவாநிறைபெருஞ்செல்வத்தேற்குப்
பின்னுறுபேறுநின்றன்பெய்கழற்பாதஞ்சேரு
மன்னதேயன்றிவேறென்னுவதிங்கதனைநல்கா
யென்னுயிர்த்துணையேயேகநாதனேயென்றிரந்தான். (௪௮)

தத்துவப்பிணிப்பினீக்கித்தம்பிரான்பொருள்கண்மூன்று
முத்திறவுணர்வினானுமொழிந்தருள்செய்துபோனான்
பொத்தியவன்பிற்கேட்டபுருசுண்டிதெளிந்துசீவன்
முத்தனாயிருக்கின்றானென்றுரைத்தனன்முடிவலாரி. (௪௯)

பொற்றதார்ச்சூரசேனன்புருசுண்டிமேன்மைகேட்ட
பிற்றையிந்திரனைமீட்டும்பெட்பொடுவணங்கிச்சொல்வான்
சற்றுமாடாவிமானஞ்சங்கட்டசதுர்த்திநோற்றிங்
குற்றவனொருவனால்விண்ணுறுமெனவுரைத்தாயன்றே. (௫0)

சாற்றுமிவ்விரதமேன்மைதமியனேற்கருளவேண்டு
நாற்றடமருப்புவேழநம்பியேயென்றான்கேட்ட
வேற்றுரிப்போர்வைவள்வாரிடிக்குரன்முரசமார்ப்ப
மாற்றலராவியுண்ணும்வச்சிரப்படையோன்சொல்வான். (௫௧)

**சங்கட்டசதுர்த்திவிரதம்; இந்திரவிமானமண்ணிழிபடலம் முற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம் - ௨௧௬௫.



## ௪௭ - வது புருசுண்டி
## சங்கட்டசதுர்த்திவிரதமனுட்டித்தபடலம்.



கவையடிக்கயவாய்ப்பணைவகிர்ந்தனையகருமருப்பெருமையூர்ந்துலகி
னவைபுரிந்தவரையிறுகுறப்பிணித்துநரகநாலேழுகோடியினு
மிவையிவைபுரிந்தாயெனக்கொடும்பாவமியம்பிவன்றுயர்செயுந்தரும
னவையினையன்னானுலகெழிலோனுக்கவடுத்தனனாரதமுனிவன். (௧)

அறமுழந்தடுத்தவிவர்தமைவிண்ணத்தணிநகர்புகவிடுமின்கண்
மறமுழந்தடுத்தவிவர்தமைநரகின்மடுமின்களெனநடுநிலைமை
யுறமுறைசெலுத்துஞ்சோடையினீங்கியொய்யெனநமனெதிர்கொண்டு
நறவுகொப்புளிக்குமலர்களாதிகளானலத்தகுபூசனைபுரிந்தான். (௨)

அடிகளிங்கடுத்தகாரியமடியேற்கருளுகவென்றனனியமன்
வடிநரம்புளரும்வீணைகைக்கொண்டமாதவனவன்முகநோக்கி
நெடியநின்னுலகின்வளங்களைநோக்கநினைந்துவந்தனமெனவுரைத்தான்
கொடியவெந்நிரையமாதியல்வளனுங்காட்டினன்குலவுசெங்கோலான். (௩)

பம்புமாநரகினவரவருழக்கும்பல்பெருந்துன்பமும்பார்த்தா
னும்பரார்வணங்கும்புருசுண்டியென்னுமுயர்ந்தமாதவத்தினன்றமருங்
கும்பிபாகத்தில்வீழ்ந்தருந்துன்பங்கூர்ந்திடுங்கொள்கையும்பார்த்தான்
றம்பிரான்பாதநினைந்துகொண்டியமன்றனைவிடைகொண்டுமீண்டடுத்தான்.

அடுத்தயாழ்முனிவன்பெருங்கருணையினலமர்புருசுண்டியையண்மித்
தொடுத்தபேரருளின்விநாயகருருவந்துலங்குறப்பெற்றுநீயிருத்தி
மடுத்தநீநரகினுமரெலாமழுந்திமறுகுகின்றாரவர்தம்மை
யெடுத்துவான்கதியில்விடுமதிநீயென்றியம்பினனேகினன்விண்மேல்.　　(௫)

இற்றைநாள்காறுமறிந்திலநாமென்றினைந்திதற்கியாதுநீர்வென்று
பற்றொருடுதியானம்புரிந்தறிந்தெவரும்பணிபுருசுண்டிபல்பொருளு
முற்றுறக்கொண்டுசங்கட்டசதுர்த்திமுறைமையிற்செய்ததன்பயனை
மற்றவர்தம்மைக்குறித்தருட்கணேசர்மலர்க்கையினீரொடுங்கொடுத்தான்.

எம்பிரானேகதந்தன்மென்மலர்க்கையிரும்பயன்புனலொடேற்றிடுமுன்
கும்பிபாகத்திலுழந்தவரெல்லாங்கோலமார்விமானங்களேறி
யும்பர்வானடுத்தாரொருதினமாற்றுமொள்ளியவிரதமீதானு
னம்புநாண்முழுதுமாற்றுவார்க்கெய்துநலத்தினையாரளவிடுவார்.　　(௭)

சங்கட்டசதுர்த்திபுருசுண்டியனுட்டித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-௨௧௬௧.



## ௪௮ - வது கிருதவீரியன்றவம்புரிபடலம்.

வையமுழுதுமெடுத்தேத்தமருவுகாலந்தப்பாமே
யுய்யுநறுநீர்சுரந்தளிக்குமுயர்காவிரிக்கோராகரமாஞ்
சையவரைச்சாரலின்வளங்கடகுமாநகரில்வாழ்மன்ன
னையராசனெனச்சிறந்தானகிலமுழுதுந்தாட்படுத்தான்.　　(௧)

வயப்போர்மன்னர்க்கேறனையான்வழங்குகிருதவீரியனென்
றியற்பேருடையான்சுகந்தையெனவியம்பப்படுந்தன்மனைவியொடு
நயப்போடமர்ந்துவாழ்நாளினைதீர்கதியுற்றிடுமக்கட்
பயப்பாடின்றிமனங்கவன்றுபடர்ந்துவனத்திற்றவம்புரிந்தான்.　　(௨)

சருகுவளியென்றிவைநுகர்ந்துதானுந்தாளநகைமுறுவற்
றிருவன்னளுந்தவம்புரிந்துசெங்கோல்மன்னனுடல்வருந்தப்
பெருகுமிசையாழ்முனியறிந்துபிதிருலகிற்சென்றாங்கு
மருவுங்கிருதவீரியனைவழங்கினனுக்கிதுசொன்னான்.　　(௩)

தெள்ளுமறையின்முறையொழுகிச்செங்கோல்செலுத்தியரசாணின்
பிள்ளைகிருதவீரியன்றன்பிள்ளைபயவாப்பெருந்துயரான்
நள்ளுநகரந்தனைவிடுத்தூநாமவனம்புக்கருந்தவத்தி
னுள்ளம்வருந்தவுடல்வருந்தவுயிரும்வருந்தவுழக்கின்றான்.　　(௪)

செவ்வாய்மழலைச்சிறுமதலைத்திருவனுடன்வயிற்றுதிப்பி
னுய்வானின்றேலுயிர்விடுப்பானுனதுகுலமுமுடனறுமென்
றிவ்வாறுரைத்துத்தெய்வமுனியேகக்கிருதவீரியனைத்
துவ்வாவமிழ்தினுயிர்த்தெடுத்ததோன்றல்பிரமனுலகடுத்தான்.　　(௫)

தாட்டாமரைமென்மலர்த்தவிசிற்றங்கும்பிதாவையடிவணங்கி
யீட்டாநின்றபெரும்பொருள்களெல்லாமறத்தின்வழிவிடுத்துத்
தீட்டாநின்றபுகழானென்செல்வமைந்தற்கொருமைந்தன்
காட்டாதிருக்குங்காரணமென்கரையாயென்றுகடாயினன்.　　(௬)

தோடுவிரிந்தநறுங்கமலத்தோன்றனுரைப்பானின்மகன்முன்
கூடும்பவத்துமிப்பொழுதுகுடிகொண்டிருக்குமாநகரின
பீடுவளருமறையர்குலம்பிறந்தான்சாமனெனும்பெயரா
னீடுவறுமைக்கோட்பட்டானிகரிலாததுயருழந்தான். (எ)

இருநாண்மூந்நாட்பட்டினிவிட்டிடையிற்கிடைத்ததுண்டுசில
வருநாட்கழிப்பியலமருங்காலதுவுங்கிடைத்தலின்மையினாற்
பெருகாநின்றபசியாற்றான்பிறழ்ந்தாறலைத்துமுணவெண்ணித்
திருகாநின்றவுளத்தோடுசென்றான்செறிந்தநெடுங்கானம். (அ)

அருப்பத்திடையேபன்னிருவரந்தணாளர்செலநோக்கி
யிருப்புத்தடியாலவருயிரையெற்றிவிசும்பினுடன்முழுதும்
பொருப்புக்குகையிற்புகப்பெய்துபொன்னுந்துகிலுமற்றனைத்தும்
விருப்பிற்கவர்ந்துகங்குலின்வாய்வீடுசென்றுசேர்ந்தனனால். (கூ)

கதவந்தாழிட்டிருத்தலினாற்கணேசகணேசகணேசவென
மதலைதனைக்கூவினனந்தமதலையற்றைநாண்முழுதும்
பதமுமறலுங்கிடையாதுபரிந்தாருயிர்போய்த்தனிக்கிடப்பப்
புதவுதிறந்திட்டில்லகத்துப்புக்குநோக்கித்துயருழந்தான். (க௦)

பிறங்காநின்றபசியானும்பிள்ளைமரித்ததுயரானு
மறங்கால்கொலைப்பாதகம்வந்துவளைதலானுமன்றிரவி
னுறங்காதிருந்துதன்னியல்பினெண்கேழ்பரிதியுதயத்திற்
றிறங்கால்காலனாணையினாற்றேகமெனுந்துச்சிலினகன்றான். (கக)

அற்றைத்தினந்தான்சங்கட்டசதுர்த்தியாகவமைந்ததனான்
மற்றைத்தினத்துக்கணேசனெனுமைந்தனுண்டிநீரொன்றும்
பற்றுற்றிலனாயுயிரிறந்தபரிசால்விமானம்வரவேறி
வெற்றிக்களிற்றுமுகத்திறைவன்மேலாமுலகிற்போய்வாழ்ந்தான். (க௨)

சாமனெனுமப்பார்த்திபனுந்தனக்குமகனைக்கணேசனெனு
நாமநவின்றுகூவியதோர்நன்மையானுமிம்மையிடைக்
காமனெனும்பேரழகினனாய்க்கடல்சூழுலகந்தாட்படுத்தா
னேமமுறுத்துங்கொலைப்பாவவெச்சத்திறனாலெச்சமிலை. (க௩)

எச்சம்விழையின்பாதகத்தினெச்சங்கழியமத்தகத்தின்
செச்சைநிறத்துச்சிந்தூரன்றேகங்குழைத்தசெஞ்சாந்தின்
சச்சையணிந்தான்சங்கட்டசதுர்த்திவிரதமவன்புரிக.
வச்சமகற்றுமவ்விரதமாற்றுமுறைகேள்பிதிர்த்தேவா. (க௪)

மாசிமதியின்பின்பக்கம்வந்தசெவ்வாய்க்கிழமைதனின்
மூசிநின்றசதுர்த்தியினன்முகூர்த்தந்தனின்முந்துறத்தொடங்கி
யாசினகன்றவன்றுதயத்தறலாட்டாதிக்கடன்முடித்துப்
பூசிமிளிர்நீறக்கமணிபூண்டுபுனிதநிலத்திருந்து. (க௫)

தேகாக்கிரந்தொட்டடியளவுந்திகழக்கரங்கண்முறைநிசித்து
மோகாக்கினியாதியைத்தணித்துமுன்னோன்பாதமனத்திருத்தி
யேகாக்கரமேசடக்கரமேயியம்புநாமமந்திரமே
பாகாக்கரவன்பான்மூன்றும்பசியோடிருந்துநனிகணித்து. (க௬)

திங்களுதயமாம்பொழுதுதேவதேவன்றனையிருத்திப்
பொங்குவிழைவாற்பலபொருளும்பொற்பத்தழுவிப்பூசித்திட்
டங்கணெவான்றிங்களையுமருச்சித்தான்றமறையோர்க்குத்
தங்குசுவைநாலுண்டிகளுந்தழைப்பவூட்டிநிசிவிழித்து. (க௭)

அறுகுமிலைத்தசடைமவுலியைங்கைக்களிற்றுச்சரித்திரங்கண்
முறுகுவிழைவினன்றிரவுமுழுதுங்கேட்டல்விதியாகும்
பெறுதற்கரியவிவ்விரதம்பேணுஞ்சதுர்த்திதொறுமாண்டொன்
றுறுதியொடுமொற்றுநர்க்கம்மாவுண்டாமகவுமனைத்துமே. (கஅ)

வன்னியடியிலன்றிருந்துமனுக்கள்கணித்தாற்குருவேமை
யுன்னும்வெதிரென்றிவையாதியுறுப்பீனமுநோயொடுதீரு
மென்னபொருளும்விழைந்தாங்கேயெய்துமென்றுபிதிர்த்தேவ
னன்னர்மகிழ்ச்சிதலைக்கொள்ளநவின்றானளினச்சேக்கையான். (கசு)

மங்காவிசையின்பிதிர்த்தேவன்வணங்கியிறைவர்விநாயகனுக்
கங்காரகனற்சதுர்த்திவிழைவானதெதனாலதுதன்னை
யிங்காதரவிற்றெரித்தருளாயென்றுகுழைந்தான்குழைதவொடுங்
கொங்காதரிக்குமலர்ச்சேக்கைக்குரிசிறெரியவிரித்துரைப்பான். (உ0)

கிருதவீரியன்றவம்புரிபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - உகஅக.



## சகூ - வது அங்காரகனுட்டித்தபடலம்.

உரத்துவாளராவணிந்தவர்க்குவந்தபேரன்பன்
பரத்துவாசனென்றருந்தவன்பண்டொருகால
மரத்தவான்றுவர்நித்திலமலைத்தெறிந்தலைக
ணிரத்துபூம்புனனிருமதைதீரத்திலிருந்தான். (க)

பொருவிறந்தவன்பூம்புனலாடிடப்புகுந்தா
னிருமதைப்புனலாடவோர்நேரிழைதானு
மிருவிசும்பரமகள்கொலோவெனுங்கவினெறிப்ப
மருவினத்தொடுவந்துவான்கரைத்தலைநின்றாள். (உ)

கூற்றமோகொடும்பகழியோவெனக்குளிர்முகத்துத்
தோற்றுவாள்விழிகொட்புறுதொழிலினைநோக்கி
யாற்றல்சான்றதன்னெஞ்சமுமலமரமுனிவன்
மாற்றினானெழுவிழைவினைமாற்றிடுமுன்னர். (ங)

ஊறிவீரியமண்ணிடைவிழுந்ததுள்வெள்கித்
தேறிமாதவனிருக்கையிற்சென்றுநோற்றிருந்தா
னீறில்வீரியம்விழுந்துழியிளமகவாகப்
பேறிதாமெனப்பூமகள்பேணினள்வளர்த்தாள். (ச)

செக்கர்மெய்ந்நிறத்தொடுமிகத்திகழ்ந்திடுசிறப்பா
லக்குழந்தையங்காரகனெனவும்வீரியமாய்ப்
புக்குமண்ணிடைப்பிறத்தலாற்பூமகனெனவுந்
தக்கவையகஞ்சாற்றிடப்பட்டதுவியப்ப. (ரு)

சிறானெனத்திருவீதிசென்றாட்டயர்தினத்தி
னறாதசேயொளியாக்கையங்காரகன்றாதுண்
புறாவைவென்றொளிர்பொற்புடைப்பூமகளனுந்தாய்
மறாதவாய்மையினொருமொழிவணங்கினன்வினவும். (சு)

அடியனைப்பயந்தளித்திடுமன்னைநீயானாய்
முடிவிலென்னுடைத்தாதையார்மொழிமதியென்றான்
படியெனும்பொறைமாதராள்பகருவாளினிநீ
பிடிபரத்துவாசனுக்கொருபிள்ளையாம்பெற்றி. (எ)

27

செப்பியின்னணஞ்சிறுவனையுடன்கொடுசென்றே
யப்பெருந்தவனிருந்துழியடுத்தடிவணங்கி
யிப்பசுஞ்சிறானினதுவீரியத்தினின்றெழுந்தா
னப்பனேயினிக்கைக்கொளென்றறைந்துமீண்டகன்றாள். (௮)

நச்சியாவரும்புகழ்ந்திடுநற்றவமுனிவ
னச்சிறான்றனையங்கையாலார்வமோடணைத்திட்
டுச்சிமோந்தனனுவந்தனனுபநயனம்பின்
றுச்சிலாமுடற்சுசியுறத்தளக்கறமுடித்தான். (௯)

வேதமோதுவித்தளவில்பலகலைகளும்விளம்பி
யேதநாடருங்கணேசர்மந்திரத்தையுமியம்பிக்
காதலோடதுகணித்திடுமுறைமையுங்கரைந்து
போதவேவினன்மாதவம்புரியெனப்புகன்று. (௧௦)

அனையவைப்பினையகன்றொருபெருவனமடுத்துத்
தனையொப்பில்லவன்றாட்டுணைக்கமலமேசார்வா
னினைவினுள்ளுறீஇநித்தலுமந்திரங்கணித்தா
னினையசெய்கையோடாயிரவருடமேகினவே. (௧௧)

வாக்குமாமதக்கரடமுமடைதிறந்தருளைத்
தேக்குவாள்விழிப்பார்வையுந்திகழ்தசபுயமுந்
தூக்கினாலெனமுகத்தொருகரமுஞ்சூழொளிமிக்
காக்குமேனியுந்தோற்றிநேர்நின்றனனமலன். (௧௨)

விரைந்துதாழ்ந்தெழுந்தாடினன்வேதங்கள்விரித்தான்
கரைந்துகண்கணீர்சொரிந்தனன்காசினிமைந்த
னிரைந்துவண்டுசூழிதழியந்தொங்கலஞ்சடையிற்
றிரைந்தகங்கையான்வேட்டதென்செப்புகவென்றான். (௧௩)

இறைவநின்னிடையிடைவிடாப்பத்தியும்விசும்பி
னுறையுமும்பரார்தம்முடனமுதுணுமுறவு
மறைவில்கோளொடுகோளெனவதிதரும்பேறு
நிறையவீந்தருள்கென்றனனெருப்புறழ்நிறத்தோன். (௧௪)

அற்றமாதவர்க்காணந்தவீடருளமல
விற்றைநாளிருஞ்சதுர்த்தியாதலினிந்தத்திதியி
னுற்றநாயினேன்வாரத்திலுனைத்தொழுவார்க்குப்
பற்றுதீவினைமுழுதும்பாற்றுகவெனப்பணிந்தான். (௧௫)

ஐங்கையண்ணலாரவையவர்க்களித்தனர்மறைந்தார்
மங்கலந்திகழ்காட்சிநாம்வந்தருள்வனப்பாற்
றங்குவையகமங்கலமெனவுனைச்சாற்று
மிங்கணின்னுமெம்பூசனையியற்றெனவருளி. (௧௬)

பாருயிர்த்தவனுங்கொருபசும்பொனாலயஞ்செய்
தேருயிர்த்தவக்கோயிலினெதிரெழுந்தருளிச்
சீருயிர்த்தருடேவதேவன்றிருவுருவ
நாருயிர்த்தநெஞ்சொடுமரீஇநயந்துபூசித்தான். (௧௭)

செய்யும்பூசனைதன்னொடுஞ்சில்பகல்கழிய
வையன்பேரருளாலவிர்விமானமண்ணியதால்
வெய்யபூமகன்விண்ணவனாயதிலிவர்ந்து
பொய்யில்வான்புகுந்தமுதுண்டுகோளெனப்பொலிந்தான். (௪௮)

ஆகையாலவன்வாரத்திலடுத்திடுஞ்சதுர்த்தி
யேகநாயகரேனையசதுர்த்தியின்மேலா
மோகைசெய்வதாய்ப்பணிந்தவர்க்குவகைசங்கட்டம்
போகநல்கலாற்சங்கட்டசதுர்த்தியாய்ப்பொலியும். (கசு)

பூவின்மாமகன்பூசித்தபுண்ணியனிணைத்த
தியாவதாயினுமதுதனையினிதருள்சிறப்பாற்
றேவர்சூழ்ந்துசிந்தாமணிவிநாயகரென்று
பாவநீற்றிடும்பெயரவர்க்கணிந்தனர்பணிந்தார். (உ0)

அவந்திமாநகர்மேற்புறத்தவனருட்பிரானை
யுவந்துபூசித்ததலத்தினுக்கொருபெயர்கீர்த்தி
நிவந்தகாமதமென்பர்கணித்தலுமயக்கந்
தவந்தயோகியர்சித்தராதியருந்தாழ்கின்றார். (உக)

போற்றுகின்றவங்காரகசதுர்த்தியின்பொலிவைச்
சாற்றிநிற்றலும்பிதிரனனவன்றகத்தொழுது
தோற்றுசந்திரவுதயத்திற்பூசிக்கச்சொன்ன
மாற்றமென்னஃதுரையெனமலரவன்கிளப்பான். (உஉ)

அங்காரகனனுட்டித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-உஉ0ரு.

## ரு0 - வது சந்திரனனுட்டித்தபடலம்.

அண்டர்கணுயகனமலநாயகன்
முண்டகமலர்ப்பதமுறையிற்போற்றுநான்
பண்டொருகாலத்துப்படர்ந்தபேரொளி
கொண்டவான்கயிலையங்கோயில்புக்குளேன். (க)

கைப்பெருங்கரிமுகக்கடவுள்சூரனுந்
துப்பறவயில்விடுஞ்சூரன்பாங்குற
முப்புரம்பொடித்தவெம்முதல்வன்வைகினு
னப்பொழுதடுத்தனனமரர்மாதவன். (உ)

கையுறையாகவோர்கனியைக்கண்ணுத
லையன்முன்வைத்தடிவணங்கியாழினைச்
செய்யமென்போர்வையிற்றீர்த்துத்தேன்மழை
பெய்யுறுமுகிலெனப்பெருக்கினனிசை. (௩)

தகவிசையிருசெவிச்சார்த்தியெம்பிரான்
மகதியாழ்முனியுளமகிழ்ச்சிசெய்தபின்
றிகழ்சுவைக்கனியினைச்செங்கைக்கொண்டன
னிகழ்வறுமென்முகமினிதுநோக்கினன். (௪)

சுப்பிரமணியனுந்துதிக்கைச்செம்மலு
மிப்புடையிருந்தனரிவருள்யாவனுக்
கொப்பறுமிக்கனியுதவத்தக்கது
செப்புதியெனத்திருவாய்மலர்ந்தனன். (ரு)

தளையவிழ்கடம்பணிசண்முகத்தவ
னிளையவனுகையாலிவனுக்கீதலே
திளைதருமுறையெனச்செப்பினேனதை
யளையரவணிந்தவனவனுக்கீந்தனன். (௬)

கண்டனர்கணேசர்வேள்கையிற்றீங்கனி
கொண்டமையெனைத்தழல்கொதிப்பநோக்கினா
னண்டர்நாயகன்சிரமறுத்தனான்றினா
மண்டியபெரும்பயமனத்திற்றாங்கினேன். (எ)

என்புடையிருங்கணத்தீட்டமோடுநான்
முன்புடையடுத்தடிமுறையிற்றாழ்ந்தெழுந்
தன்புடைத்தோத்திரமறைந்தென்றீங்குதீர்த்
துன்புடையருளெனக்குதவென்றேனரோ. (அ)

ஆங்கவரெனக்கருளுமெல்லையிற்
றேங்கொளிபரப்பியதிங்கட்பண்ணவன்
றாங்கவமதியினாற்றந்தங்காட்டினா
னேங்கொருதந்தனாமுருத்திதோதினான். (௯)

ஆன்றவரவையிடையடங்கும்புன்னகை
தோன்றலினவர்முனந்தோன்றுசோமனீ
மான்றினியுலகிடைமறைகநின்னுரு
வேன்றவர்காணினுமிடரின்மூழ்கவே. (க0)

சந்திரனரும்பெருஞ்சாபந்தாங்கலி
னந்தரத்துலாவுதலற்றுத்தன்னுருச்
சுந்தரமுழுவதுந்தொலையவில்வயிற்
புந்தியிற்றுயர்கொடுபுழுங்கிவைகினான். (கக)

எள்ளலினகையெவரிடத்துச்செய்யினுந்
தொள்ளையினாமதுதுன்பஞ்செய்வதே
யொள்ளியர்முன்புரிந்துய்குவாரெவர்
தெள்ளியதிங்களுந்தீதுழத்தலால். (கஉ)

மருந்துணவிழத்தலின்வருந்திவானவர்
திருந்தியவிந்திரன்றேத்துச்சென்றன
ரருந்துயரவனுங்கொண்டாய்ந்ததேறினான்
பொருந்தவைங்கரனடிபோற்றியுய்வகை. (கங)

மூறிவளர்கற்பகமூரித்தாரினார்
செறிவொடுமிந்திரன்சென்றுமுன்புற
மறிதருமுறஞ்செவிமாமுகத்தம
ரறிவனையடிபணிந்தறைதன்மேயினான். (க௪)

எங்களுக்கமிழ்தமுமிருநிலத்தவர்
தங்களுக்கிரும்பயிர்தனைவளர்த்தலுந்
திங்களின்வைத்தனைதேவதேவனே
யங்கவனின்மையினகிலமாழ்கின. (கரு)

சிறியவர்செய்தனதீங்குமேதகு
மறிவினர்பொறையவர்கடன்மையாதலாற்
பொறியிலிமதிப்பிழைபொறுத்துநீவிடிற்
பொறையெவரிடத்தினிற்புல்லற்பாலஃதோ. (கசா)

ஆக்கலும்விக்கினமவற்றையொய்யெனப்
போக்கலும்வல்லைநீபுராணவன்றுயர்
தேக்கியசந்திரன்செறிந்தசாபநோய்
நீக்குதல்வேண்டுமென்றிரந்துநின்றனன். (கஎ)

சலாவியமனத்துயர்ச்சுரர்கடம்மொடும்
வலாரிவந்திரத்தலுமகிழ்ச்சியுட்கொளாக்
கலாபியைக்கடாய்க்கமலாசுரன்றனை
யிலாவகைபொருதவேரம்பன்கூறுவான். (கஅ)

நெருப்புருக்குளிரினுநீண்டவானிரு
ளுருப்பவிர்பரிதியையுண்டதாயினும்
பொருப்பினந்தாங்குமண்பொறையின்றாயினுந்
திருப்பொலிநமதுரைதிறம்பலில்லையே. (கக)

நன்மையின்வந்தெமைநயந்துபோற்றுவா
ரின்மையையெய்தலுமில்லையிந்திரா
தன்மையீதாதலிற்சந்திரன்றனைப்
புன்மைசெய்சாபத்தின்போக்குஞ்செய்துமால். (உ0)

சிங்கமாமதியிடைச்சேர்முன்பக்கத்துத்
தங்குநஞ்சதுர்த்தியிற்றன்னைக்காணற்க
மங்குல்வான்முன்புபோன்மற்றைநாளெலா
மங்கவனுருவினையாருங்காண்கவே. (உக)

அத்தினந்திங்களையயர்ந்துபார்த்திடிற்
கொத்துறும்பாதகக்குழிசியாயவன்
மெத்தியவிடும்பையின்விழுந்தெழுந்திரான்
புத்தியின்மதித்தினிப்போகவென்றனன். (உஉ)

உய்ந்தனமெனச்சுரருவந்துதுள்ளினு
ரிந்திரன்சந்திரனிருந்தவெல்லையின்
முந்துறச்சென்றனன்முதல்வனின்னரு
டந்தமையுரைத்துமேலிதுவுஞ்சாற்றுவான். (உங)

கணனுயிர்குடித்தருள்கணேசர்பாதமே
யணவுறுசரணமென்றடைந்துவாழ்கெனக்
குணமொடேகாக்கரங்கூறிப்போந்தனன்
றணவருஞ்சுரரொடுதெமனியப்புரம். (உச)

வரும்புருகூதனுன்மகிழ்ந்துசந்திர
னிரும்பதிதனைவிடுத்தேகிவார்திரை
பொரும்புனற்கங்கையம்புனிதமாநதிக்
கரும்பெழிற்றெக்கணதீரத்தண்மினன். (உரு)

வேறு.

சறுவசித்தியுந்தந்திடுந்தன்மையாற்
சறுவசித்திகரமெனத்தக்கதாய்
மறுவலாதவச்சூழலின்மன்னினு
னுறுதியான்மனுவோதுதன்மேயினன். (உசு)

இருபதிற்றிரண்டாண்டுகணித்தலு
மொருமருப்புடையாரெதிருற்றன
ருவிதத்துக்கண்ணெழுந்தம்புலி
பெருவிருப்பிற்பணிந்திதுபேசுவான். (உஎ)

இழுதையேன்மதியாதிழைவன்பிழை
முழுதுமெங்கண்முதல்வபொறுத்தெனைக்
குழுமிநின்றரிக்குங்கொடுந்துன்பநோய்
விழுவதாக்கிநின்மெய்யருணல்கென்றான். (உஅ)

அன்னவாறவனன்புடனேதலு
மென்னையாளுடையோம்பன்கூறுவான்
முன்னமேவரமுற்றவளித்தன
மின்னுமோர்வரமீகுதுங்கொண்மதி. (௨௯)

வேறு.

சாற்றுமங்காரகசதுர்த்திதோறுநீ
தோற்றுறுமமையத்துச்சூழ்ந்தெம்பூசனை
யாற்றியேநின்னையுமருச்சித்தேத்துக
மாற்றருஞ்சங்கடமாறறவேண்டினோர். (௩0)

மருவியகலைகளுள்வையகந்தொழ
வொருகலைநமதாளிர்முடியின்வைகுக
விருவிசும்பேகுகவென்றுவெண்மதிக்
கருளினனகன்றனனாதிநாயகன். (௩௧)

விரவுமெய்ம்மலினம்விட்டகலவெண்ணிலாக்
கிரணமெங்கணுமொளிகிளரப்பாய்தர
வரவுமுன்னொளியினுமொளிமிக்கார்ந்தன
பரவுமுண்மலினமும்பாறச்சோமனே. (௩௨)

கோலவண்கோயிலொன்றியற்றிக்கோயிலிற்
சீலவைங்கரன்றிருவுருவந்தாபியாப்
பாலசந்திரனெனப்பகர்ந்துபூசனை
யாலுமன்புடன்புரிந்தண்டத்தேகினான். (௩௩)

ஐங்கரன்றிருமுடிக்கணியுமாகினன்
றங்கியபாலசந்திரகணேசனைப்
புங்கவர்முனிவரர்போந்தங்கன்றுதொட்
டொங்கியபூசனையுஞற்றுகின்றனர். (௨௪)

சகலருமத்தலஞ்சார்ந்துபூசித்துச்
சகலசித்தியும்பெறுந்தன்மையாலது
சகலசித்தித்தலமென்னத்தக்கதாற்
சகலவைப்பினும்பெருந்தலைமைதாங்கியே. (௩௫)

மறந்துவாய்சோர்ந்தமெய்வழுக்கியுஞ்சுகத்
திறம்பெறவேண்டுவோர்தேவதேவன்பா
லறந்தகாதனபுரியற்கவாற்றுவோ
ரிறந்தபேரிடர்நரகிவற்றினீங்குறார். (௩௬)

ஆகையாற்சங்கட்டசதுர்த்திக்கம்புலி
யோகையோடெழுந்திடுமுதயமுக்கிய
மாகியதமராமனையவனசித்திடர்
மூழ்கினுமொனிலிறைமுதன்மையென்சொல்கேன். (௩௭)

மறுவறவிநாயகன்மலர்ப்பதங்களி
னுறுமுறைபூசனையுஞற்றுவோரெலா
மறுகுகொண்டருச்சனையாற்றல்வேண்டுமால்
முறுகியவன்பினோடெனமொழிந்தனன். (௩௮)

மொழிந்திடப்பிரிறனுமுகமலர்ந்தூதேன்
பிழிந்தபன்மலரினும்பெருமையென்கொலாங்
கழிந்திடுமெறுகினுக்கெனக்கடாவினன்
வழிந்தருகுதேமலர்வள்ளல்செப்புவான். (நக)

சந்திரனனுட்டித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உஉசஉ.



## ருக - வது விடைகரம்புலைச்சிவீடுறுபடலம்.

## தூர்வைமகத்துவம்.



எழிலாருமவந்தியெனும்பதியில்
வழியாலரசாளொருமன்னனுள
னொழியாதலகோதவன்பேர்சுலபன்
றெழிலார்மனைமாதுசுபத்திரையே. (க)

பொதுநீங்கநெடும்புவிபோற்றியொளிர்
விதவாணுதன்மாதொடுமேவிடுநாண்
மதசூதனனென்றொருமாமறையோன்
முதுவான்வறுமைக்கடன்மூழ்கினவன். (உ)

எரியாடியவெம்பெருமானடியிற்
பிரியாதமனத்தவன்பேணுகரை
விரிநீரினெலித்துவெளுப்பவிழை
தரியாதசிதாருடைதாங்கினவன். (ந)

அப்பூசுரனையமெனப்புகுதர்
வெப்போதுமிரந்தவரின்பமுறுந்
துப்பாதரவான்சுலபன்பழைய
வெப்பார்வினைமேவநகைத்தனனே. (ச)

கடிஞைக்கதைகையிணைவைத்துளம்விண்
குடிஞைத்தலையானடிவைத்துடையா
னிடுஞ்சில்பொருளுக்கிவர்வேதியனு
நெடுஞ்சில்வினைநேரவெகுண்டிடுவான். (ரு)

வல்விற்புயமன்னவநீசிறிதுங்
கல்வித்துறைகண்டிலகாண்கனவாஞ்
செல்வத்தின்மகிழ்ந்துசிரித்தியது
கொல்வித்ததெனுள்ளமுநின்குலமும். (சு)

ஆப்பின்புறமோர்ந்தலையானெனநீ
கோப்பின்மணிவாய்நகைகோட்டிதலால்
யாப்புச்செயுமேரினுழப்பெரிதாய்த்
தூப்புல்லுணவென்றுசுளித்தனனே. (எ)

வேறு.

கண்ணிணைநெருப்புச்சிந்தக்கடிஞையோனிட்டசாபந்
துண்ணெனக்கேட்டுமொழ்கிச்சுபத்திரையிதனைச்சொன்னாள்
புண்ணியநீறுமெய்யிற்பூசினையதனுக்கேற்பத்
தண்ணியவருள்சற்றேனுந்தாங்கினையல்லைகண்டாய். (அ)

அறிந்தறியாமையாரேயாயினும்பிழைப்புச்செய்தாற்
செறிந்திடுமறிவினோர்கள்செயிர்த்திடார்பொறுத்தல்செய்வார்
சிறந்தவர்சிறவாரென்னாதெறியுந்திண்கழுதைபோல
மறிந்திடாதுலகாள்வேந்தைமதியாதுசபித்தாயன்றே. (கூ)

கத்தவமாகியாண்டகழுவுவார்கையிற்பட்டு
மெத்தியதூசின்மூட்டைவெரிந்புறநெளியத்தாங்கி
நித்தலும்வருந்துகென்றுநிகழ்த்தினள்கொடியசாப
மத்திறங்கேட்டன்னாட்குமந்தணன்சாபமிட்டான். (க0)

குற்றநும்பாலதாகக்குறையிரந்ததனைநீக்கும்
பெற்றிசற்றின்றிக்கீழ்மைப்பேதையர்போலவென்னை
யுற்றெதிர்சபித்தலாலேயொய்யெனப்புலைச்சியாகிப்
பற்றுமுன்கிடைத்தலின்றிப்பருவரலுறுகவென்றான். (கக)

பாவமென்றுள்ளவெல்லாம்படர்தருகொழுகொம்பாகுந்
தாவறுவெகுளியுண்டேற்சங்கடம்வறுமையின்றே
மூவருந்தம்முட்டாமேமுனிவினான்முடித்துக்கொண்ட
மேவரும்சாபத்தாகும்விழுப்பயன்விளைதலோடும். (கஉ)

நிலப்பொறையாற்றுந்தோளானெடும்புகழ்ச்சுலபனென்பா
னலப்பொறையாற்றுமேறாயந்நகருழவன்பாற்சென்
றுலப்பறுதுன்பத்தாழ்ந்தானொருகரமாகிநல்ல
குலப்படுமறையோனீரங்கொல்லிபாலிடுக்கணுற்றான். (கந)

தொடிநிறைமுன்கைவேய்த்தோட்சுபத்திரைபுலைச்சியாகிக்
கடிநகரதற்குப்பாங்கர்க்கருங்களமர்கள்வாழ்சேரி
மிடியொடுவதிந்துவிள்ளாவெம்பசியுடையளாகி
பிடிபுரிந்திடுவாரையமேற்றுண்டுதுயரத்தாழ்ந்தாள். (கச)

பன்னெடுங்காலஞ்செல்லப்பயிலொருதினத்திற்கொல்லை
தன்னிடையுழவனேரிற்றகைப்புண்டுவளாவிற்றேறு
வெண்ணெலும்புளையத்தூசுமேலிடச்சுமந்துசென்று
கொன்னெடுந்துறையிற்றள்ளிக்கொழும்புன்மேய்ந்ததுவன்கோகு.

முனிகுளிர்தீயிற்காயமுளிபுல்லையரிக்கவேண்டித்
துனியுறுபுலைச்சிசென்றாடொழிலிவைமூன்றுமெய்தப்
பனிவிசும்பிருளமேகம்படர்ந்தொளிமின்னுக்கான்று
குனிசிலைமருங்குவாங்கிக்குமுறிநீர்பொழிந்ததம்மா. (கசு)

பூட்டினைத்தறித்துவிட்டுப்போதலுமுழவன்றப்பிக்
கோட்டெருதாங்குப்பாங்கர்க்குஞ்சரமுகத்தான்வைகுஞ்
சேட்டொளிமாடக்கோயிற்சென்றதுமுன்பேகோயின்
மாட்டுமேய்ந்திருந்தகோகும்வல்லையுட்புகுந்ததன்றே. (கஎ)

கையரிக்கொண்டபுல்லைக்கட்டினளெடுத்துக்கொண்டு
பொய்யுடைப்புலைச்சிதானும்பொலிந்தகோயிலின்பின்வாய்த
லுய்யவேபுகுந்தாண்மாலையுற்றதுகரமுமேறும்
பையவேசென்றுபுல்லைப்பறித்துவாய்குதட்டாநின்ற. (கஅ)

புல்லினைநிலத்திலிட்டுப்பொருக்கெனப்புலைச்சிதண்டான்
மெல்லிரைவாயின்மொத்தவீங்குதன்குயலைக்காட்டி
வல்லெறுழேற்றைக்காலான்மறுகுறக்கரந்தாக்கிற்று
சொல்லிமிலேறுமந்தக்கோகினைக்குத்திற்றன்றே. (ககூ)

இன்னணமிவைகண்மூன்றுமிருங்கலாம்விளக்குமோதை
யன்னவைகலுமேரம்பனருள்புரிசதுர்த்தியாக
முன்னவன்மாலைப்பூசைமுடித்தவன்முன்னர்வைகி
நன்னர்மந்திரங்கணிக்குநற்றவர்கேட்டாரன்றே. (உ0)

தடியொடுமுடக்கினர்கடண்ணியவாடையானு
மிடியொடுமழையுமின்னுமீண்டிருளானுநீங்கா
தடியினுக்கஞ்சியஞ்சியாலயம்பலகாற்சுற்றிக்
கடிதயலகற்றப்பட்டகாளைமுன்னைமூன்றும். (உக)

சுற்றுறுகாலைமாக்கடுவக்கியவாயிற்புல்லும்
பற்றியபுலைச்சிகையிற்பசும்புல்லுந்திருமுன்வீழ
முற்றியசூறையேற்றமூன்றுபுல்லவற்றுணோர்சென்
றற்றவர்க்கற்றபெம்மானவிர்திருமேனிசார்ந்த. (உஉ)

புலைமகள்கரத்தினுக்கபுல்லறுகுச்சிமீது
மலைவிடைவாயினுக்கவறுகுவார்துதிக்கைமீதுந்
துலையும்வேசரிவாயுக்கதூர்வைபாதத்தின்மீதுந்
தலைமயக்குற்றபின்னர்த்தாபதரிதனைச்செய்தார். (உ௩)

இழுக்குவந்தடுத்ததேயென்றியாவருமிருநீராடி
முழுக்கவாலயத்திற்சுத்திமுடித்துநீர்கலயந்தாபித்
தழுக்கறுபொருள்களெல்லாமமைத்துகந்தமலர்பூசை
பழுத்தமெய்யன்புபொங்கப்பண்ணியுட்பரிவுதீர்ந்தார். (உச)

புறத்தடித்தகற்றப்பட்டபுல்லமுன்னைமூன்று
மறத்தினுன்முனிவர்தண்டால்வருத்தியவருத்தத்தானும்
வெறுத்தவல்லிருளினானுமிகுமழைக்காற்றினானுஞ்
சிறுத்திடுமுணர்வினானுஞ்செலவறியாதுமாய்ந்த. (உ௫)

அருச்சனைபுரிந்தவென்றுமாலயஞ்சூழ்ந்தவென்றுந்
தருச்செழுமலர்களாதிசகலமுந்தழுவிச்சால
வுருச்சிறப்புறநம்பூசையுத்தமர்மீட்டுமாற்றுந்
திருச்செயல்விளைத்தவென்றுந்தேவனார்கருணைகூர்ந்தார். (உ௬)

பணங்கிளர்சேடன்றன்னைப்பண்டியினிறுக்குநாத
னிணங்குளக்கருணைதன்னாலெறிகதிர்விமானங்கொண்டு
கணங்கள்வந்தடுத்துத்தெய்வக்காமருதேகநல்கி
யணங்கினர்பாடவாடவதனின்மூவரையுஞ்சேர்த்தார். (உ௭)

அதிசயமுறவாங்குள்ளவருந்தவமுனிவர்கண்டு
துதிசெய்துவணங்கிவந்தசுரர்தொழுகணத்தைநோக்கி
விதிசிறிதறியாமூவர்விமானமேறுவதென்னென்றார்
கதிசிறுபொழுதுதாழ்த்துக்கணமவர்க்கினிதுகூறும். (உ௮)

காய்சினங்கரந்ததந்தக்கப்புடைநாவினாகந்
தேசிழையாகக்கொண்டசெம்மலார்பூசையின்னோர்
பாசினவறுகாற்செய்துபாதகவுடலினீங்கி
வீசியவொளிகான்மெய்யின்விமானமேறினரென்றென்றே. (உ௯)

மிக்கிழிபவத்தினின்றார்மிக்குயருலகஞ்சேரத்
தக்கபுண்ணியத்தைத்தந்ததோரறுகென்றாற்றன்னைத்
தொக்கருச்சிக்குமேன்மைசொல்லுகவென்றார்தூயோர்
நக்குளமகிழ்ந்துதேவநற்கணமவர்க்குக்கூறும். (௩0)

விடைகரம்புலைச்சி வீடுறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உஉ௭உ.

## ௫௨-வது பாலசந்திராவதாரம் தூர்வையர்ச்சனைப்படலம்.

தருவார்பொழில்சூழ்தருதாபரமென்
றொருமாநகருற்றதெனாதுதிசைப்
பருதாலவனத்தலைபம்பிமலர்
மருவோடையின்மாட்டுளதாச்சிரமம். (௧)

சவண்டின்னியயாழ்முரரூர்மனையா
டிவண்டின்னியமப்பணிசெய்துவரத்
துவண்டின்னலுறாதருள்சூழ்தவமார்
கவுண்டின்னியனங்குகலந்தமர்நாள். (௨)

விதியால்வியனாச்சிரமத்திடைவைத்
துதியாவிறவாவொழியாநணுகாப்
பதியானபனைக்கைமுகத்திறையைத்
துதியார்தருபூசனைசூழ்ந்துசெய்வான். (௩)

நித்தம்பதினாயிரநீளறுகு
பத்திக்கெழுவேலையும்பன்னரிதாஞ்
சித்தத்தொடுதீதறவாய்ந்துதெரிந்
தத்தற்கணியந்நியமந்தவறான். (௪)

இவ்வாறிவன்பூசையியற்றிவர
வவ்வாள்விழியாசிரையைமனைவி
யொவ்வாததவத்துறமுத்தனெதிர்
செவ்வாய்மையினாலிதுசெப்பினளால். (௫)

வேறு.

வெறிகமழும்பலமலர்கள்வேண்டுவனகொளவிருப்ப
வறிவவவைபறித்தணியாதறுகளவில்லனபறித்துச்
செறிதரநாயகனுருவிற்சேர்த்திவருகின்றனையந்
நெறியடியேற்கருளென்றாணெடுந்தவத்தோனுரைசெய்வான். (௬)

பைந்தொடிச்செவ்வாய்க்கருங்கட்பணைப்பெருந்தோட்சிற்றிடையாய்
மந்தணமாமதுநினக்குவகுத்துரைத்துமுரிமையிற்கேண்
முந்தொருகாலத்தியமன்மொய்த்தவெழில்விழாவாய்ந்து
சந்தமணிப்பொலந்தவிசிற்றகவினொடுவீற்றிருந்தான். (௭)

விண்ணவர்கின்னரர்கருடர்விஞ்சையர்சாரணர்தவத்துப்
பண்ணவராதியர்பலரும்பணிந்தெழுந்துமருங்கிருந்தார்
வண்ணமலர்ச்செங்கனிவாய்வானரமங்கையருள்ளங்
கண்ணின்வழிநடப்பவதுகைவழியிற்செலநடித்தார். (௮)

ஆட்டயர்மாதர்கள்குழுவினழகுமிகுதிலோத்தமைதன்
மோட்டிளமென்முலைத்தலத்துமூடியபூந்துகில்விலகக்
கோட்டியசென்னியளாகிக்கூர்ந்துளத்தைநாணலைப்ப
மாட்டிருந்தாரறியாதவகைமறைந்துபுறம்போந்தாள். (௯)

தருமனென்னுந்தென்றிசைக்கோன்றனதுமலர்த்தடங்கணவ
ளிருமுலையும்புகநோக்கியெழுந்தபெருங்காமத்தா
லுருகியுளம்விரகமெனுமோங்கியசெங்கனல்கொளுந்தப்
பொருவில்சபையொழிந்தந்தப்புரத்தடைப்பச்செல்கின்றான். (௧௦)

வதிமனைக்குச்செல்லுமுனம்வன்னிலம்வீரியம்விழுந்த
ததிலொருவன்வந்தெழுந்தானவனனலாசுரனென்பான்
கொதிவடவைத்தழலனையகொடுமையானலம்போன்று
கதிருமிழும்வெள்ளெயிறுகடைவாயிற்பரித்துள்ளான். (௧௧)

திருகிநெடுகியமுகத்துச்செம்மயிரான்செங்கண்ணன்
பெருகியொளிர்தழற்கொழுந்திற்பிறங்கிமிர்பங்கியான்
வெருவியமரரும்பனிக்கும்வீமவுருவான்வலியா
னொருவனுதித்தலுங்கண்டங்குள்ளவரெலாமிரிந்தார். (கஉ)

முச்சகமுந்துயர்கூரமுந்நீரிலெழுவிடம்போல்
வெச்சென்த்தோன்றியசிறுவன்வெய்யவுருக்காணுமுனங்
கச்சமிலாவுளக்காமக்கடல்கரப்பமனைபுகுந்து
பொச்சமில்செங்கோற்கடவுள்பொருந்துகதவடைத்ததே. (கங)

குரவனெனவியமன்வழிக்குறுகாதுவெளிக்கொண்டு
பரவைநெடும்புவியுயிர்கள்பலவுமெடுத்தினிதருந்திப்
புரவலனுதியர்தமையும்பொள்ளெனவாய்மடுத்துமெனச்
சுரர்பயில்வானகத்தெழுந்தான்சூர்த்தவனலாசுரனே. (கச)

மருத்துவனுதியர்வெருவிமாமறுத்தமணிமார்ப
னொருத்தனடிசரணடைந்தாருவணமுயர்த்தவன்றானுங்
கருத்தினவன்வலியறிந்துகணேசர்கரத்தாலன்றி
வருத்திவருமிவனுவிவருத்தமுறாதெனத்தெளிந்து. (கரு)

கடவுளர்களொருசேரக்கடிதேகிக்குழீஇயிருந்து
படவரவமரைக்கசைத்தபனைக்கைமதக்களிற்றிறைவ
னடலையிலாத்திருவுருவைநயந்துதியாணித்திறைஞ்சித்
தொடர்மறையின்விழுத்துதிகள்சொல்லியிரந்தனராக. (கசு)

வேறு.

ஆன்றோரறிவுங்கடந்தொளிருமறிவனைங்கைத்தலத்தமலன்
மான்றோற்பிணித்தமுப்புரிநூன்மார்பின்வயங்கமறைநூலிற்
சான்றோர்குலம்வந்திடுபிரமசாரிபோலமுன்சென்று
னூன்றோற்பிணித்தவுடல்பெற்றவுறுதிபெறயாவருங்கண்டார். (களஎ)

வளரோங்காரத்துருக்கொண்டவள்ளலிவனேயெனத்துணிந்து
விளராவன்பின்விண்டுமுதல்விண்ணோர்பலரும்பணிந்தெழுந்து
தளராதெம்மையினிக்காத்துத்தழலின்பெயர்பூண்டானவனை
யுளராதழிக்கவெனவிரந்தாரும்பர்பெருமானதற்கிசைந்தான். (கஅ)

அருள்செய்திறைவனிசையுமுனமனலாசுரன்விண்ணுடைச்சுரரைத்
துருவிக்காணுதழிதருவான்றுக்கவிடந்தேர்ந்தெதிரடுத்தான்
வெருவிமுனிவரோட்டெடுத்தார்விண்ணோர்பலருநடுநடுங்கி
யொருவன்முதுகின்புறத்தடுத்தாருயிரில்லாதவுடல்போன்றார். (கக)

பஞ்சேரடிச்சிற்றிடையுமையாள்பவளச்சடிலக்குழகனிவர்
தஞ்சேயெனவந்தருண்மூவர்தலைவனமரர்தமைநோக்கி
யஞ்சேன்மின்களெனச்செங்கையமைத்தச்சுரர்களைவோரு
முஞ்சேமுஞ்சேமெனவுவப்பவுற்றானனலாசுரன்றனையே. (உ0)

சந்தப்பொதியவரைமுனிவன்றனக்குத்தரங்கக்கடல்போன்று
மந்தமதியமிலைத்தசடையழகற்கலைவாய்விடம்போன்றும்
வந்தவனலாசுரன்றனக்குவல்லையடங்கக்கரத்தெடுத்து
முந்தைமறையுமறியாதமுதல்வன்பவளவாய்மடுத்தான். (உக)

பவளத்திருவாய்மடுத்திட்டபாழியனலாசுரன்றனைத்
துவளும்படியிவ்வுலகலைத்தாய்தொல்லையுலகமதகட்டிற்
றிவளும்படிகாணுதியென்றுசெலுத்தியிடுமத்திறமெனவுங்
கவளமெனவும்விழுங்கினன்கண்டோரெல்லாமதிசயித்தார். (உஉ)

அண்டர்பெருமான்றிருவயிற்றிலனலாசுரன்போயடங்குதலு
மண்டநிறைந்தசராசரங்களனைத்தும்வயிற்றிற்றழலழற்ற
மண்டுதுயரக்கடல்குளித்தவானோர்தமக்குமதுவாகப்
பண்டைமறைகளறியாதபரமனுருவங்குளிர்விப்பார். (௨௩)

வேறு.

பைந்துணர்க்கற்பகத்தின்பசும்பொன்மாநகரமாளு
மிந்திரன்றன்னால்வல்லேயேவிடப்பட்டுச்சீதச்
சந்திரன்றம்பிரானார்தலைமிசையிருந்தமுற்றுஞ்
சுந்தரவமுததாரைசொரிந்தருவாட்டாநின்றான். (௨௪)

அம்புலியமுததாரையாட்டியும்வெப்பறாமை
யம்புயக்கிழவனோக்கியன்பின்விண்ணப்பஞ்செய்ய
நம்பியசித்திபுத்திநங்கையர்குளிர்ந்ததங்கள்
பம்பியவுறுப்புத்தம்மாற்பரிசித்துப்பாங்கிருந்தார். (௨௫)

சீதளமுலையாற்கையாற்றேவிமார்தழுவல்செய்தும்
பாதகவெப்பறாதபரிசினைவிண்டுகண்டு
மாதர்மென்கமலப்போதுமலர்க்கரநீட்டவையன்
மேதகவுருவமெல்லாம்வியத்தகவொற்றிக்கொண்டான். (௨௬)

உருமலரொற்றிக்கொண்டுமுருப்பநீங்காமைநோக்கி
வருணன்சீதளநீராட்டிவணங்கினனதற்குந்தீராப்
பெருமைகண்டுரிமைதன்னாற்பெரும்புனல்வேணியார்தந்
திருவுருவணிந்தவாதிசேடனைத்தரித்தாரன்றே. (௨௭)

அவரவர்குளிர்ச்சிசெய்துமழலுருப்பறாதுநிற்ப
விவர்தருமெண்பத்தெண்ணாயிரமுனிவருமூவே
ழுவமையிலறுகுவெவ்வேறுறத்தழீஇயுச்சிதொட்டுத்
துவர்மலப்பாதங்காறுஞ்சொரிந்தனர்தணிந்ததம்மா. (௨௮)

வேறு.

பூரணனார்திருமேனிபொருந்தியவெப்பறுதலொடு
நாரணனாதியருடலினண்ணியவெப்பந்தணிந்த
தாரணமாயிரமோதியாடினாரலர்தூர்த்தார்
தாரணிவானுலகனைத்துந்தழைத்துமகிழ்பூத்தனவே. (௨௯)

முனிவரரையெதிர்நோக்கிமுதல்வனாரருள்செய்வார்
நனியழற்றும்பெருவெப்புநாடியமரர்கள்புரிந்த
புனிதவுபசாரத்தாற்பொன்றாதுநின்றுங்கள்
பணியறுகினருச்சனையாற்பசையறப்பாறியததனால். (௩௦)

பலவுபசாரமும்பரிந்துபண்ணினும்பாசறுகின்றே
னலமுறுமப்பூசனைக்குநாம்பயனைக்கொடுப்பதிலை
சிலவுபசாரமுமின்றிச்செய்ததாயினுமதற்கு
நிலவறுகுகூடுமெனினெடும்பயனைவிரைந்தளிப்போம். (௩௧)

கோழறுகுமிகச்சாத்தக்கூடாதவலியினர்மூ
வேழறுகாயினுமதுவுமிசையாதாரொன்றேனும்
வாழியருச்சிக்கவெனவகுத்துவரங்களுங்கொடுத்து
ஆழியினுமழியாதவொருமுதல்வர்மறைந்தனரால். (௩௨)

வேறு.

வானவர்முனிவராங்கொருகோயில்வகுத்ததிற்கணேசனையிருத்தித்
தேனலராதித்திரவியத்தோடுந்திகழ்பலவறுகுகைத்தலங்கொண்
டூனமில்பூசைபுரிந்தபின்காலற்குதித்ததீயசுரனையுண்டாற்
றீனமினுமழியாவருங்காலானலப்பிரசமனனென்றிசைத்தார். (௩௩)

பாலநல்லுருவாய்வருதலினுனும்படர்பெருவடவயங்கனலு
மாலமுஞ்சமழ்ப்பவழற்றியவனலாசுரன்றனையருந்தியெவ்வுயிர்க்குங்
கோலவெண்மதிபோற்குளிர்செயலானுங்கோமளந்தழைந்தவவ்விறையைச்
சாலவையகத்தோரனைவரும்பாலசந்திரனென்றுஞ்சாற்றுவரால். (௩௪)

மன்றலந்துளபன்முதலனைவருந்தம்மைப்பினையடுத்துவாழ்ந்திருந்தா
ரன்றுதொட்டறுகுவிநாயகர்பூசைக்கனைத்துளபொருளினுஞ்சிறந்த
தென்றுதன்மனையாசிரியைநன்கறியவிருங்கவுண்டின்னியனிசைத்தா
னென்றியமுனிவீரொருகதையின்னுமுணர்மினென்றுரைப்பரக்கணத்தோர்.

தூர்வையர்ச்சனைப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௩௧.



## ௫௩ - வது தூர்வையாசகப்படலம்.

அருளானறமேமிகவீட்டியுள்ளான்றசான்றோர்
பொருளாலறமாதிகண்மூன்றையும்போற்றுமில்லோர்
தெருளான்வதியப்பலசெல்வமுஞ்சேர்ந்தமூதூ
ரிருளார்பொழில்சூழ்மிதுலாபுரியென்பர்தக்கோர். (௧)

அன்புங்கலைத்தேர்ச்சியுமீகையுமான்றபோரின்
வன்புந்தணவாதவொழுக்கும்வழாதவில்லி
லின்பும்பலவுந்தனக்கேவல்செய்தக்கநீரான்
றன்பொற்புறுபேர்சனகன்றரையாளுமன்னன். (௨)

அன்னான்மிதுலாபுரிவாழ்ந்தரசாளுநாளிற்
றன்னேரரியான்றரைவானகமெங்குஞ்சார்வான்
மின்னேர்சடைகட்டியமெய்த்தவன்வீணைவல்லா
னன்னாரதனென்பவனுங்குடந்தடுத்தான். (௩)

அனகன்பரதத்துவவுண்மையறிந்திடாமே
மனவிந்தியமாதிகளால்வினைமாந்துந்தானே
யினமில்பரமென்றுமதித்திருக்கின்றமாலாற்
சனகன்வழிபாடுசெய்தானிலனாரதற்கு. (௪)

வேறு.

உய்யவெண்ணியுய்யாநெறியேர்டிய
மையலுள்ளசனகன்மதிப்பினைக்
கையில்வீணையன்கண்டுகருத்தினுட்
குய்யம்வைத்திதுகூறுதன்மேயினான். (௫)

வெள்ளைநீற்றுவிமலன்கருணையால்
வள்ளலேபெருவாழ்க்கைமருவினு
யள்ளியாடகமாதிகளார்வலர்
கொள்ளவீசுங்கொடையும்பரித்துளாய். (௬)

மன்னுநன்மைமதித்தனையாதலா
லின்னும்வேண்டியதீச்சுரனீகுவ
னென்னுநாரதனின்மொழிகேட்டலுங்
கொன்னும்வேற்சனகன்குறித்தோதுவான். (௭)

வேறுதெய்வமுண்டேலதுவேண்டிய
பேறுநல்குமிப்பேதமறிவிலார்
கூறுகின்றதபேதங்குறித்தவர்
வேறும்பேறும்விளம்புவதில்லையே. (௮)

கொடுக்கும்வள்ளலுநான்கொடுக்கின்றதேற்
றடுக்குநல்குரவாளியுநானெலா
மடுக்கும்போகியுநான்மறுவென்றவை
விடுக்கும்யோகியும்நானன்றிவேறிலை. (௯)

தெள்ளுநாரததெய்வமுனிவவென்
றெள்ளியன்னானியம்பியநல்லுரை
தள்ளியின்னணஞ்சாற்றினனென்பவே
தொள்ளையுள்ளந்துறத்தசனகனே. (௧௦)

ஈசனின்மையியம்பினைபேதைமேற்
பேசல்வேறுபிரானுளனென்பதைக்
கூசநின்னெதிர்காட்டுதுங்கொள்ளெனப்
பாசம்வென்றபடிமத்தனீங்கினான். (௧௧)

ஏதமீத்தவிருங்கவுண்டின்னிய
மாதவன்புடைபோந்தனன்மற்றவன்
காதலோடெதிர்கொண்டுகலந்துசென்
றாதனங்கொடுத்தாற்றினன்பூசனை. (௧௨)

அளவளாவியயர்வுயிர்த்திட்டபின்
னுளமெலாமுருகக்கவுண்டின்னியன்
பளகுதீரப்பணிந்திடுநாயகன்
வளநிலாவுமலர்ப்பதந்தாழ்ந்தனன். (௧௩)

வரம்பிலானந்தவாரியைவையகத்
தரம்புசெய்வார்க்கரம்புசெயண்ணலைப்
புரம்பொடித்தபுராணன்முன்றோன்றலை
நரம்புதைவந்துநன்றுதுதித்தனன். (௧௪)

ஊக்கமிக்கவுளத்தொடுமின்னிசை
தேக்கிநாதன்றிருவருள்கண்டுமால்
போக்கியாக்கையிற்புல்லும்வினையையுந்
தாக்குநாரததாபதனோதுவான் (௧௫)

சாமிநீயருளாற்சனகற்கிரும்
பூமியாட்சியும்போக்கறுசெல்வமுந்
தோமிலாமைதொகுத்தனைமுத்தியிற்
காமியென்றுங்கரையப்பட்டானரோ. (௧௬)

அனையநின்னருளாலவைபெற்றமை
நினைகிலான்பரநீயென்றுணர்ந்திலான்
றனைமதித்தனன்சான்றவராதியோர்க்
கினைதலில்லாவணக்கமியற்றிலான். (௧௭)

முத்தனேமுதல்வாமுனிவில்லருள்
வித்தகாவதுவிண்ணப்பஞ்செய்யவே
யித்தலைப்புகுந்தேனென்றியம்பினான்
பத்தியோடுபடர்ந்தனன்வானகம். (௧௮)

எங்கணாயகனின்னருள்செய்திட
வங்கொரந்தணனுமெனக்குட்டநோய்
தங்குமெய்கொடுசார்ந்துசனகன்வாழ்
துங்கக்கோயிற்றுவாரமடுத்தனன். (௧௯)

நன்னர்வாய்தலர்நன்முகநோக்குபு
மன்னவர்க்கென்வரவுரைக்கென்றனை
னன்னரோடியணிமுடிப்பார்த்திபன்
முன்னர்நின்றுமொழிகுவராயினர். (உ0)

நர்தநின்கடைவாய்நெருநல்வரைப்
போதவாருட்புணர்ந்தவறுமையா
லேதமுற்றவர்யாரையுங்கண்டிலே
மோதுமின்றொருவன்புகக்கண்டுளேம். (உக)

தூயவந்தணன்றுன்பஞ்செய்குட்டநோய்
மேயவாக்கையன்வீங்குபசியினன்
கோயில்வாய்தற்குறுகினனென்றனர்
சீயமன்னுன்றருகெனச்செப்பினன். (உஉ)

வருகவென்றவர்மன்னன்முனுய்த்தன
ரருவருப்புருவோடுமடுத்தவப்
பொருவிலாதவன்போனகமென்பசி
யொருவுமாறுமிக்கூட்டுகவென்றனன். (உங)

வேறு.

கொற்றவெண்குடைநீழலிற்குவலயம்புரப்போன்
பெற்றதன்னுடைமைந்தனைப்பெட்பினுற்கூவி
யுற்றவிப்பனவற்குறுபசிமுழுதொழிய
முற்றுமின்சுவையடிசில்கண்முறையினீகென்றான். (உச)

எந்தைசெப்பியவாறுசெய்கேனெனவிசைந்து
வந்தவந்தணன்றனையகமனைகொடுபோந்து
கந்தமென்மலர்ப்புனலினுற்கழலிணைவிளக்கிச்
சுந்தரத்தவிசிட்டதிற்றொழுதிருத்தினனால். (உரு)

குருத்துவாழையினெட்டிலையிரண்டினைக்கூட்டித்
திருத்துதீஞ்சுவையடிசில்களிடமறச்செறித்துக்
கருத்தனேயினியடிசில்கைதொடுவெனக்கரைந்து
விருத்தமாகியவிசிறியின்வீசியதிளங்கோ. (உசு)

இட்டபல்வகையுண்டியுமிறைவனீர்வளைத்துத்
தொட்டனன்விழிக்கண்டிலர்சூழ்ந்திருந்தவர்கள்
சட்டுவங்கரந்தாங்கியமடையரைநோக்கி
யட்டயாவையுமிடுமென்றானரசிளங்குமரன். (உஎ)

தேசணிந்தபொற்படலிகைபற்பலசெறித்து
வாசவுண்டிகண்மடையர்களிடுந்தொறுமன்னர்
கூசவுண்டனன்குறுநகைகொண்டவர்சமைத்த
பாசனத்தொடும்பாகமானவையெலாஞ்சொரிந்தார். (உஅ)

மடையர்மன்னவன்குமாரனைநோக்கினர்வகுப்பார்
மிடையவட்டனயாவையும்விளக்கினமிவர்க்கே
யிடையறாக்கணந்தாழ்த்திடினின்னுமூணட்டுக்
கொடையின்மிக்கவகுறைவறக்கொடுத்துமென்றனரால். (உகூ)

அந்தணன்படிவந்தனனாகியவமலன்
முந்துநின்றவர்மொழிதலுமுடிநனிதுளக்கி
வெந்துபின்புநீர்விளக்குவவிளக்குமின்வேவா
வெந்தஎன்பொருளாயினுமிடுமின்களென்றான். (ஙo)

சுமந்துவந்திவற்கிடுந்தொழிலரிதெனச்சூழ்ந்து
நிமந்தமல்கியநெடும்பொருளறையெலாந்திறந்தங்
கமர்ந்தயாவையுமார்கவென்றனரசின்றே
னிமந்தழால்வரையின்றவண்மகனெடுத்தயின்றான். (௩க)

சனகனத்திறங்கேட்டனன்பொள்ளெனச்சார்ந்தா
னனவதன்றிதுகனவன்றேனண்ணுமோர்மாயை
யெனமதித்திரும்புரத்தனநாட்டனவெவ்வையு
மனமெனக்கொடுவெருகெனத்தூதரைவிடுத்தான். (௩உ)

வேறு.

தூதுவருரைத்தலுந்தொக்கயாவரு
மோதனமுதலியவுண்டியாவையு
மாதர்வெள்ளரிசிவண்பொருள்கண்மற்றவு
மேதகக்கொண்டுபோய்விலங்கினிட்டனர். (௩௩)

எனைத்துளவுலகமுமீண்டிரும்பொரு
ளனைத்தும்பல்லுயிர்களுமந்தவீற்றுநா
ணினைக்குமுன்கரந்திடுநிமலன்யாவையுங்
கனைக்கும்வண்கழலினான்காணவுண்டனன். (௩௪)

கண்டவர்வெருவினர்காழ்த்தவெம்பசி
விண்டிலதாயிடின்விரவுநம்மையுங்
கொண்டுவாய்மடுக்குமிக்குட்டநோயனென்
றெண்டகுதிசைதொறுமிரியல்போயினார். (௩௫)

அண்டனோவசுரனோவரக்கனோவுள
மிண்டியபூதனோவேறுமேோவிவன்
மண்டகுமானிடனாயினிவ்வகை
யுண்டிலனெனவமைச்சோர்ந்துநின்றதே. (௩௬)

ஆலவாயிடையமலேசர்மன்றலிற்
கூலமோடமலையுண்குறட்கணங்கொலோ
சீலமார்வடவையோசிவனுதற்கணோ
நூலனுமிவனெனவரசுநொந்ததே. (௩௭)

கடம்பொழிகளிறுணுங்கவித்தம்போலவு
முடம்படுமுயிரொழியுடம்புபோலவுந்
தடம்புவிப்பொருளெலாந்தவிர்ந்தும்வேதிய
னிடம்படுமெம்பசிக்கிறுதியில்லையே. (௩௮)

இனித்தனிப்பனவன்பாலீண்டும்வெம்பசிக்
கனித்தஞ்செய்துளமகிழ்வாருநீரவர்
மனித்தருளில்லைவானவர்குழாத்துளு
நுனித்திடினிலரெனநுவலத்தக்கதே. (௩௯)

வேறினிச்செய்வதென்விழையநன்மொழி
கூறியந்தணன்வெளிக்கொள்ளச்செய்வதெவ்
வாறெனச்சனகனுமரசனுய்ந்துளந்
தேறியமொழிகளாற்செப்பன்மேயினான். (௪0)

மறையவன்மண்ணிடைவறியனுமென
நிறையுணவீகுவானினக்குநேர்ந்துளே
னுறைபொருளனைத்தையுமுவந்துநல்கினேன்
குறையினியிரப்பவர்பாங்கிற்கூடென்றான். (௪க)

என்றலுஞ்சனகனையினையநோக்குபு
தொன்றுருமறைத்தவச்சுமுகன்கூறுவா
னன்றுநன்றுன்செயனாட்டிலுள்ளவர்
மன்றமன்னவநினைவள்ளலென்றனர். (௪௨)

மெய்ப்படுவள்ளனீயென்றுமேவுமென்
பொய்ப்பசிகளைதரப்புகுந்துளேன்வயிற்
றெய்ப்புறுபசியினையெரிநெய்தூவியாங்
குய்ப்புணவற்பமீந்தோங்கச்செய்தனை. (௪௩)

பொருளெலாங்கொடுத்துளேனென்றும்போனகந்
தருகுவாரிடையினிச்சார்கவென்றுநீ
யொருவினைவாய்மையுமுயர்ந்தகீர்த்தியு
மருளுநின்பெருமையுமழகுமேயின. (௪௪)

வேறு.

பிரமநீயென்றும்வேறுபிரமமொன்றில்லையென்றும்
வரமுறக்கொடுத்தலேற்றலனைத்துநின்வயத்தவென்றும்
விரவுறக்கொண்டநீயென்வெம்பசிநீக்ககில்லாய்
கரவுசெய்திடுதிபோலுங்கண்டின்னுமளிக்கொணாதோ. (௪௫)

எல்லையில்பொருள்களெல்லாமிமைக்குமுன்னாக்கிப்போக்க
வல்லதோர்பிரமநீயேல்வந்தவென்பசியைநீக்கா
தில்லைபோவென்பையல்லையீவதற்கிடமில்லாம
லல்லலுற்றுளையுநீயோவரும்பெரும்பிரமமாவாய். (௪௬)

இன்பமேவிழைந்தும்வேட்டாங்கெய்தவேமுயன்றமூடே
துன்பமேவிடவல்லார்ந்துதுளங்குமோபிரமம்வேத
மன்புறுமொழுக்கஞ்செய்வோனரும்பயனளிப்போன்கூறு
நின்பிரமத்தைமன்னாநெருப்பிடாயென்றுநீத்தான். (௪௭)

இம்மெனவிறைவனீங்கவேந்திலைவேலானோக்கிச்
செம்மொழிபலவுஞ்சொன்னான்செயலுந்திப்பியமேகாட்டிற்
றம்மவோவிவனைத்தேறலரிதெனவகத்துட்சூழ்ந்து
விம்மலோடிருந்தான்றான்கொள்விழுப்பொருளயிர்த்துநாணி. (௪௮)

வீதியிற்புகுந்தநாதன்வியன்பதியதனில்வாழ்வான்
றீதறுமறைவலாளன்றிரிசிரசென்னும்பேரான்
மேதகுகற்பினில்லாள்விரோசனையென்பாளின்ன
லார்தருவறுமைமிக்கானவன்மனைகடிதுசென்றான். (௪௯)

விரவியமலர்மென்கூந்தல்விரோசனையேவல்செய்யத்
திரிசிரசென்னுந்தூயோன்றிருந்தியகணேசர்பூசை
பாவியங்கியற்றாநின்றபணியிடையொழிந்துவல்லே
யிரவலனானநாதற்கெதிர்கொண்டுவணங்கிநின்றான். (௫0)

நல்குரவுடையான்றன்னைநம்பிரானோக்கிச்செல்வம்
பல்கியசனகனில்லிற்படர்ந்தனெனன்னானென்பான்
மல்கியபசியுட்சற்றுமாற்றினன்முற்றுமாற்றிச்
செல்குவானின்பால்வந்தேனெனச்சிறுநகையிற்சொன்னான். (௫௧)

விளம்புரைகேட்டலோடும்விரோசனைபணிந்துசொல்வாள்
குளம்பயினறுநீர்முற்றுங்குடித்துநீங்காதுநின்ற
வளம்பயில்பெரியதாகமடுத்திடுந்தோறுநில்லா
வுளம்பயிலில்லித்தூதையுதகத்தினொழியுங்கொல்லோ. (௫௨)

அண்ணலேநெருநல்காறும்யாசகமாகவெம்பா
னண்ணிய துண்டுவாழ்ந்தேமின்றென் றுநண்ணிற்றில்லை
பண்ணவன்பூசையாற்றிப்பாசறுகொன் றுநின்ற
தெண்ணுறும்பொருள்வேறென் றுமெங்கள்பாலில்லையென்றாள். (௫௩)

மாதுபட்டாங்குகூறவ ரதனுண் மகிழ்ந்துசொல்வான்
கோதுறுமுளத்துச்செல்வர்கொடுத்திடுக்கோடிதம்மின்
யாதுமில்லாதாரன்பினெள்ளளவெதுவீந்தாலு
மீதுறுபயனுங்கீர்த்திவிரவுமேற்பவர்க்குங்கோதாய். (௫௪)

யோக்கியமில்லாப்புல்லையுதவலெவ்வாறென்றெண்ணல்
பாக்கியமதுவேயாகும்பத்தியினளிக்கவென்றான்
மாக்குழன் மடந்தைநீட்டவாங்கிவாய்மடுத்துமென்று
தேக்கெறிந்திட்டானையன்செறிந்ததன்னவர்க்குச்செல்வம். (௫௫)

புகாறுமிதுலையோடுபொற்புடையந்தநாடுந்
தகமுனமிழந்தசெல்வஞ்சதமடங்கதிகமெய்திற்
றகனுறுவிருப்பினோக்கியனைவருமகிழ்ந்தாரிப்பாற்
றிகழ்திரிசிரசினோடுவிரோசனைதிகைத்துத்தேர்ந்தாள். (௫௬)

வேறு.

சழங்கலுறுபழங்கூரைதமனியமாளிகையாகத்தன் னுளெங்கும்
பழங்கணறுத்திடுமென்ன மாதியபல்லுண்டிகளும்பசும்பொன்வெள்ளி
வழங்கலுறுநென்முதலாம்பொருடாசர்தாசியருமலியக்கண்டார்
குழங்கனறுந்தொடைக்கொன்றைக்கணேசர்திருவருளானல்குரவுநீத்தார்.

வறுமையினான்மிகத்தளர்ந்தாராயினுமன்பாற்றளராவாய்மைதன்னான்
முறுகுதுயரொளிதொழிந்ததிரிசிரசும்விரோசனையுமுழுதுமுய்ய
வறுகிரந்துநின்றபிணியந்தணனுமலகணிந்தவவிர்பொன்வேணிச்
சிறுகுமதிமிலைத்தருடன்றெய்வவுருவெதிர்காட்டித்திகழநின்றான். (௫௮)

வடியேறுமழுப்படையுங்கமலமுமாலையுமருப்புவதிந்தகையு
முடியேறுமணிமுடியுங்குண்டலமுமங்கதமுமுந்நூன்மார்பு
மடியேறுமறைச்சிலம்புமனைத்துருவுமெதிர்தோற்றயமலனுரைக்
கடியேறுமலர்தூவிக்கழல்வணங்கித்துதிராப்பிக்களித்துச்சொல்வார். (௫௯)

எண்ணரியபவந்தோறுமீட்டியமாதவத்தானுமெய்தவொண்ணு
வண்ணனின தருளொளிதிற்பெற்றனமாலினியடியேமகிலவாழ்வி
னண்ணுதல்வேண்டிலநின துநளினமலர்த்தாளிருக்கைநல்குகென்றார்
புண்ணியனங்கதுகேட்டுமெற்றதுமக்கீற்றினில்யாம்புணர்த்துமென்றான். ()

நிரப்பகற்றிப்பெருஞ்செல்வநிரப்பியிவ்வாறருள்புரிந்துநிற்குமெல்லை
பரப்பமைதன்கோயிலினும்பதியினுமெங்கணுஞ்செல்வம்பல்கநோக்கி
யிரப்பன்வருமந்தணனுமீச்சுரனேயெனத்தெளிந்தங்கெழுந்துநாடிப்
புரப்புமிகுசனகனுமப்பூசுரன்மாளிகையடுத்துப்புக்குக்கண்டான். (௬௧)

வேறு.

தோற்றிருக்குமறியாதசுமுகனையன்பர்களுளத்து
வீற்றிருக்கும்பெருமானைவிநாயகனையெதிர்நோக்கி
யூற்றிருக்கும்பேரன்பினுள்ளமெலாநெக்குடைய
மேற்றிருக்குவினைமாறவிரைமலர்த்தாள்பணிந்துரைப்பான். (௬௨)

அறிவுபோலடர்ந்தெழுந்தவறியாமைப்பெருவலியாற்
சிறியனேனகம்பிரமஞ்சிந்தித்துமிகத்தருக்கி
மறியுமாபவக்கடலின்மறியாமைக்கரைசேர்க்கு
நெறியிதாமெனக்காட்டுநின்மலநின்னருள்போற்றி. (௬௩)

நாரதமாமுனிவந்துநவைதீரவுரைத்திட்ட
சீர்தருமமதியாதசிறியேனுங்கரைசேர
வாரதளையணிந்தபிரான்மதில்கடப்பவரங்கொடுத்த
வீரதயவாலிங்குமேவியநின்னருள்போற்றி. (சு௪)

அடியனேனளவன்றியடியனேன்பெருங்கிளையும்
படியிலாநெடும்பொருளும்பதியவருமவர்பொருளு
நெடியநீர்க்குளிர்நாடுநின்மலமாய்நினதுதிரு
முடிவிலாப்பதஞ்சேரமுன்னினைநின்னருள்போற்றி. (சு௫)

தருவியுநாரணனறியாச்சுடர்மலர்த்தாளுந்தையிடைத்
திருகுமனத்தொடுமெதிர்ந்துதென்றிசைக்கோன்பெற்றதுபோற்
பொருள்பிறழக்கொண்டினதுபூங்கழல்பெற்றேனினிநின்
னிருமலஞானந்தெளியநிகழ்த்துகெனவிரந்திட்டான். (சுசு)

செயிர்படுதத்துவசுத்திதிகழ்ந்தொழியச்சனகன்பா
லுயிர்பிறந்தநிலைநோக்கியொருமருப்புக்களிற்றுமுக
னயிர்பிறவாவாகமத்தினருள்வழித்தீக்கையும்புரிந்து
தயிர்படுநெய்யெனக்கொள்ளத்தக்கமுறையாலருள்வான். (சுஎ)

வேறு.

பதிபசுபாசமென்னப்படும்பொருண்மூன்றவற்றுட்
பதியிருபொருளின்மேலாய்ப்படர்ந்தபேறிவாயாவி
பதிமலமூலநீங்கப்பந்தமும்வீடுநல்கும்
பதியிதுயாதென்றெண்ணல்படர்ந்துனக்கருளுநாமே. (சுஅ)

எண்ணரிதாகியென்றுமுள்ளதாயிருளினன்றே
நண்ணியதாகிநம்மானலத்தகுதேகத்தெய்திக்
கண்ணதுவதுவாய்ச்சார்ந்துகருமங்களாற்றிமேலாம்
புண்ணியவலியானம்மைப்புணர்வதுபசுவென்றோர்தி. (சுகூ)

அறிவித்தாலறியுமாவியதினன்றிப்பதியிற்சாராச்
செறிவுற்றஞ்ஞானமென்றுந்தெரிக்குமாணவத்திறேடு
குறிபெற்றமாயைகன்மங்கூடிமூன்றாகிநின்று
நெறியுற்றெம்மருளானீக்கப்படுவதுநீண்டபாசம். (எ௦)

ஆகையாற்பிரமநீயோவல்லையப்பிரமநின்னு
ளேகமாயறிவித்தக்காலியைந்தறியாவியாவை
தேகநீயாணுய்பின்புதெரிந்துவேறுனைக்கண்டாற்போற்
பாகமார்காலத்தன்றிப்பதியிடைநின்னைக்காணாய். (எக)

பிரமநீயென்பையாகிற்பேணுறும்வாயிலேற்றங்
குரவுசீர்ச்சாக்கிராதியவத்தைகளுறுவதென்னே
கரவிலாவினைப்போகங்கள்கருதியாங்குறுமைசொல்லாய்
விரவியோர்ந்ததும்பொச்சாகும்விளைவுநீவிளம்பல்வேண்டும். (எ௨)

இனியெமதருளின்வேறற்றேகமாய்ப்பாவமாகிப்
புனிதவத்துவிதமாகிப்புணர்சுகமயமாய்முன்பு
தனிமலவாணவத்திற்றங்கியாங்கிருக்கவென்று
நனியருண்ஞானநல்கிநம்பிரான்மறைந்துபோனான்; (எ௩)

தெருளுறக்கேட்டவெல்லாஞ்சிந்தித்துத்தெளிந்துநிட்டை
மருவியசனகனிந்தவாழ்வுநாரதன்றந்தானென்
றுருகியம்முனியையுன்னியுருவருஞானியென்ன
விருநிலம்புரந்துசீவன்முத்தனாயிருந்தானன்றே. (எ௪)

துத்தவமுனிவீரொற்றைத்தூர்வையால்வறுமைநீங்கி
யேத்தருஞ்செல்வம்பெற்றானிருந்திரிசிரசுவென்பான்
சாத்துமவ்வறுகின்மேன்மைதனையினனுங்கேண்மினென்று
நாத்திகம்பயிலாநாவினன்கணத்தவர்கள்சொல்வார். (எசு)

தூர்வையாசகப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உங்கூஉ.



## ருச - வது தூர்வைதுலையேற்றுபடலம்.

மொழிகவுண்டின்னியமுனிவனைங்கரற்
கொழிவறுபூசனையுஞற்றிவாழுநாட்
செழிமனைவாழ்க்கையாசிரையையென்பவள்
கழிமகிழ்வாலொருகதைசொல்கென்றனள். (க)

அருந்தவனுளமகிழ்ந்தைங்கைப்பண்ணவன்
றிருந்தியமிதிலையிற்சென்றுதூர்வையின்
விருந்துதுய்த்தன்பர்க்குவெறுக்கைநல்கிய
பொருந்துமாகாதையைப்புகன்றிட்டானரோ. (உ)

அக்கதைகேட்டவாசிரையையென்பவ
டக்கவப்பூசனைதன்னிற்றூர்வைநா
மிக்கருச்சனைசெயவிநாயகன்பொரு
டொக்கநம்பாலிடாத்தோடம்யாதென்றாள். (௩)

இனியனநினையுமுனெய்துமாயினு
முனிவரன்றூர்வையின்முடிவின்மேன்மையை
நனியறிந்துலகெலாநவையினீங்கிமெய்ப்
புனிதமெய்தறவிதுபோற்றிச்செய்தனன். (௪)

தையலாயறுகொன்றுதருதுந்தாங்கிநீ
பொய்யில்வாசவனிடைப்புகுந்துநின்றவன்
கையகத்தளித்திதுகண்டபாரமே
செய்யபொன்றரக்கொடுதிரும்பிவாவென. (௫)

பூசனைபுரிந்தபுல்லறுகொன்றீந்தனன்
வாசமென்குழலினுள்வாங்கிவான்புகுந்
தேசறுமிந்திரனிடத்திற்சென்றனள்
கூசறமுனிவரன்கூறிற்றோதினாள். (௬)

பூவலர்கற்பகப்பொதும்பர்ப்பொன்னகர்க்
காவல்செய்யாயிரக்கண்ணன்மாதராள்
சேவடிவணங்கினன்றிருந்துபூசனை
மேவாவியற்றினனிதனைவிண்டனன். (௭)

அளகையர்கோனிடையடுத்தெனம்மைநீ
வளநிதிகொள்கெனவகுத்தடங்குற
விளரருந்தூதரைவிடுத்துப்போக்கினான்
பளகறுமருந்தவன்பன்னிசென்றனள். (அ)

வடதிசைத்தலைவனையடுப்பமற்றவன்
மடமறுமுனிவரன்மனைவியாமெனக்
கடனறுபூசனைகண்டுநின்றன
னுடனுறுதூதுவருரைத்தன்மேயினார். (௯)

இருநிதிக்கிழவகேளிந்திரப்பிரான்
வருமிவட்கிவள்சரமலரிற்றூங்கிய
வொருசிறுதூர்வையினளவையுற்றபொ
னருளுமாறறைந்தனனளிக்கவென்றனர். (௧௦)

தூதுரைகயிலையான்றோழன்கேட்டன
னீதுகொல்வந்தவாறென்றுநக்கனன்
மாதுநின்விழைவறவெளவுகென்றுசெந்
தாதுமுன்குவித்தனன்சயிலமென்னவே. (௧௧)

அவமறுகற்பினளதனைநோக்கியென்
றவமுனியிதனிறைதரக்கொளென்றன
ளிவரிதழ்த்தூர்வையையிட்டுநேர்துலை
யுவவுபொன்றருகெனவுவப்பினோதினள். (௧௨)

இயக்கர்கோன்றராசினையெடுத்துத்தூக்கினன்
கயற்கணாளறுகினைக்கதுவவிட்டனண்
மயக்கமிலேலவலர்மற்றோர்தட்டிடை
னயக்கவேளிம்மியினன்பொனிட்டனர். (௧௩)

நிலத்திடையறுகமர்தட்டுநிற்பவான்
றலத்திடைப்பொன்னிடுந்தட்டுநின்றது
புலத்துயர்தனதனப்பொற்புநோக்கினன்
வலத்துயர்வயவரின்மாட்டுக்கூறுவான். (௧௪)

மன்னிறையறுகிதுவளர்பண்டாரத்தின்
பொன்னிறைகொள்வதேயன்றுபோற்றுநந்
துன்னிறைகொள்வதும்போலுந்தொக்கபொன்
றன்னிறையிட்டுநேர்சமன்செய்கென்றனன். (௧௫)

ஒருதொடிதூக்குறுதுலாவிவ்வாதியா
வருநிறைமாடைகள்வரிசையாகவே
யிருநிலத்தட்டெழவெழுந்ததட்டிடை
யிருவினர்வயவர்நேரெய்தக்கண்டிலார். (௧௬)

கொடுந்தமிழ்நிரப்புறக்குளிர்ந்தசெந்தமிழ்ப்
படுந்திறப்புலவர்சேர்பலகைபோன்மென
விடுந்தொறுமிடுந்தொறுமிடங்கொடுத்தது
கடுந்தொழின்முற்றியகாமர்வண்டுலா. (௧௭)

மன்னியநிகேதனம்வளர்நிதித்திர
ளென்னவுமிட்டனரெதிருறுமையிற்
றன்னகர்ப்பொருளெலாந்தழைப்பவிட்டன
னன்னதும்பொருமையினளகைமன்னவன். (௧௮)

மனைவிதன்னொடுந்துலைவணங்கியேறினு
னினையுநெஞ்சொழிந்திலனிதனைக்கேட்டலுங்
கனைகழல்வலாரியுங்காமர்தன்னகர்
புனைவளமுழுதொடுபுகுந்திட்டேறினன். (௧௯)

அவனுளத்தெண்ணமுமமைவுறுமையிற்
சிவனொடுமூவரைச்சேரவுன்னினன்
பவனொடுமூவரும்படர்ந்துதத்தம
துவமையில்பரிசனத்தோடுமேறினர். (௨௦)

சிறுவரத்தினர்பெருஞ்செல்வக்குப்பையுஞ்
சிறுவரர்பலர்களுஞ்சென்றுகூடினு
முறுவரன்சிறுபொருளொன்றையொக்குமோ
வறுகிடுதட்டுமுன்போலமர்ந்ததே. (உக)

முறஞ்செவிவாரணமுகத்துத்தம்பிரா
னறஞ்செறிமலர்ப்பதத்தணிந்துவந்ததித்
திறஞ்செறியறுகெனத்தேர்ந்தியாவரு
நிறஞ்செறிபொற்றுலைநின்றிறங்கினர். (உஉ)

மூவருமுப்பத்துமூவர்தேவரும்
யாவரும்புடைவரவெழில்கொளூர்தியின்
மேவினரிருநிலமீதுவிண்ணெலாம்
பாவினர்தவமுனிபார்க்கும்வண்ணமே. (உ௩)

ஒருங்குவிண்ணவரெலாமுறுதனோக்கிய
விருங்கவுண்டின்னியனெழுந்துதாழ்ந்தனன்
பெருங்களிதுளும்பினன்பெரிதுமாடினன்
வருங்கண்ணீர்துளித்திடவலம்வந்தானரோ. (உ௪)

விழுத்தவப்பயனெலாமேவினேனென
வழுத்தினன்மறுவறுமறைகளாயிரந்
தொழுத்தையேனிடைப்பிழைதுவன்றிற்றாயினு
முழுத்தபேரருளினீர்முனியிலீரென்றான். (உ௫)

அடியவர்க்கடிமைசெய்யடியனும்பர்காள்
படியறுதூர்வையின்பரிசிதாமென
முடிவினைக்கண்டிலேன்முன்புகண்டுளே
னெடியவிண்ணிடையெதிர்நீவிர்நின்றபின். (உ௬)

என்றுரையாடியவிருடியானனைங்
கொன்றையஞ்சடைமுடிக்குழகர்நோக்குபு
நின்றவிப்பெருமையினிற்பதன்றறு
சொன்றியபெருமையாருரைப்பரென்றனர். (உ௭)

அறுகணிசெஞ்சடையைங்கரப்பிராற்
குறுபெரும்பத்தியினுன்னையொப்பவர்
நிறுவுலகிடையிலையெனநிகழ்த்துபு
பெறுவரங்களும்பலபேணிநல்கினர். (உ௮)

விண்ணவர்பலரும்வெவ்வேறுதாம்வர
முண்ணெகிழ்முனிவனுக்குதவிநீங்கினர்
கண்ணுதலருளினாற்காமதேனுவும்
பண்ணவர்தருமுதற்பலவுஞ்சார்ந்தவே. (உ௯)

கண்டவாசிரையைதன்கணவனைத்தொழு
தண்டனார்பெருமையுமறுகின்மேன்மையு
மண்டுபேரன்புசெய்நினதுவாய்மையுந்
தொண்டனேனறிந்துளேனெனத்துதித்தனள். (௩0)

அற்றைநாண்முதற்றினமந்தமாதரு
மொற்றைவார்மருப்பினனுவக்கும்பூசனை
பற்றுநீளறுகினாற்பயிற்றிவாழ்ந்தனண்
முற்றுபேரின்பமுமுகிழ்க்கும்வண்ணமே. (௩க)

ஆதலிற்றூர்வையங்குரத்துமேன்மையை
மேதகுவிநாயகவிமலரேயலான்
மூதகிலத்தெவர்முன்னிக்காண்பவர்
மாதவமியற்றிடுமறைவல்லாளரே. (௩௨)

நீயிருந்தூர்வையங்குரத்தினின்மலற்
கேயும்வண்பூசனையியற்றுவீரென
மாயிருங்கணத்தவர்வகுத்துவிண்ணிடைப்
போயினர்விநாயகருலகம்புக்கனர். (௩௩)

விடைகரம்புலையெனவிளம்பப்பட்டவக்
கடையயில்பவத்தினைக்கழித்தமூவரு
முடையவனருளினாலுலப்பில்போகங்கள்
தடையறநுகர்ந்துபின்சரணஞ்சார்ந்தனர். (௩௪)

முருந்தொடுமூன்றிதழ்முதலின்வாங்கிய
திருந்தறுகருச்சனைசெய்துவேறுவே
றிருந்தமணியவிமானங்களெய்திட
வருந்தவரமலனாருலகத்தண்மினார். (௩௫)

அப்பதிவாணருமறிந்துதூர்வையா
லொப்பறுபூசனையுஞற்றிவான்பெரு
வைப்பிடைப்பெருஞ்சுகமருவிவாழ்ந்தன
ரிப்பெருமேன்மையதீண்டுதூர்வையே. (௩௬)

பெறுவரப்பிதிரகேள்பேணுநின்மகன்
கிறுதவீரியன்கிளராறுகுதன்னொடு
முறுமுறைசங்கடசதுர்த்தியோம்புமா
றிறுவுகென்றியம்பினனெடியவன்மகன். (௩௭)

ஓராறுகாயினுமுதவுறுவிடிற்
பூரணன்பூசையைப்போற்றுமாறெவன்
சீரணவுறவினித்தெரிக்கவென்றனு
மாரணன்பிதிரனுக்கறிவிப்பாணரோ. (௩௮)

தூர்வைதுலையேற்றுபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - ௨௪௩௦.



## ௫௫ - வது வன்னிமகத்துவப்படலம்.

துன்னுபலதிரவியமுந்துகளறக்கொண்டியற்றிடினு
நன்னரறுகெனலின்றியமையாதநலத்தனவா
யென்னையுமாட்கொண்டருளுமேரம்பன்பூசனைக்கு
வன்னியுமந்தாரநறுமலருமிகச்சிறந்தனவால். (௧)

நெருங்கிலைவன்னியையன்றிநிகழ்த்தலுறும்பூசனைக்குப்
பெருங்கருணையேரம்பன்பெட்பின்வரங்கொடுப்பதில்லை
யொருங்குதிரவியமுழுதுமொழிந்தாலுஞ்சமியொன்றா
லிருங்கழற்பூசனைபுரியினெப்பயனுங்கொடுத்திடுமே. (௨)

மெல்லறுகுதனையின்றிவிளைத்தாலும்பூசனையை
நல்லசமிகூடுமெனினவையிலதன்பயனுமுறும்
வல்லசமிக்குறுபயனைவழங்குமொருபொருளில்லை
சொல்லியவன்னியினன்மைதொக்கவரைச்சொல்லுதுங்கேள். (௩)

பழங்கணுறுதுயிர்பலவும்பயில்விதர்ப்பதேயத்திற்
புழங்கலுறும்பொருண்முழுதும்பொலிந்துதிசையோரெட்டுந்
தழங்குபுகழ்சென்றேறுந்தனிநகராதேயமென
வழங்குபெயரொடுமொன்றுமன்னியதப்பதியதனில். (௪)

வீமனெனும்பெயருடையவேட்டுவன்றோன்றினனன்னான்
றோமலனுநலஞ்சிறிதுஞ்சூழ்ந்தறியான்வனமடுத்துப்
போமவரையாறலைத்துப்பொருள்கவர்ந்துமிருகங்க
டாமலறக்கொன்றுவிலைதரவிற்றுவாழுநாள். (௫)

அப்பதியிலமர்ந்தருளுமமலருக்குநாகரிக
ரொப்பரியவிழாவெடுத்தாருதுகண்டுபோற்றிசைப்பத்
தப்பறுமாமறையவர்கள்சார்வாரைக்கொலைசெய்து
பப்புவளம்பொருள்கொண்டுபதிக்கேகலுக்கினான். (௬)

கொலைச்சாயைதொடர்ந்ததுபோற்கொலைமலிந்தவோரரக்கன்
மலைச்சாரற்களிறனையவலியினனம்பிங்காக்கன்
கலைச்சாரும்புலிப்போலக்கடுகிமுடுக்கலும்வீம
னிலைச்சாகைவன்னியினையிரிபவன்கண்டேறினான். (௭)

அன்றவனேறியவிசையினதிர்ந்தமரத்திடைநின்று
மொன்றுகுறுமுறிநிழலினுற்றருளுமோரம்ப
னன்றடியினுகுந்ததுடனண்ணியரக்கனுமிவரப்
பின்றையொருதழையன்னான்பிறைமுடிமேல்விழுந்ததே. (௮)

ஒருவரொருவரைக்கையாலுறப்பிணித்துநிலத்திடைவீழ்ந்
திருவரும்பாதகவுடலினிறந்திறைவன்றிருவருளால்
வருமணிப்பொன்விமானத்தின்மருவியவனுலகடுத்தார்
பொருவில்பிதிர்த்தேவவிவர்பூருவஞ்செய்வினையுங்கேள். (௯)

வேறு.

விண்ணவர்வியப்பவந்தவிதற்பதேயத்தையாளும்
புண்ணியகீர்த்தியென்பான்புரைதபமறைகடேர்ந்தான்
றண்ணியகுடையான்வேள்விதகப்பலமுடித்தான்வேலா
னண்ணலாராவியுண்டுநாட்டியதுவசத்தானே. (௧௦)

வளர்மதனாவதிப்பேர்மருவியமனைவியோடு
தளர்வறவிரதியோடுதங்கியகாமன்போல
வுளமகிழ்ந்துறையுநாளிலுற்றிடும்வாணாளற்றா
னளவறுகாதன்மாதுமநுமரணத்தையுற்றாள். (௧௧)

பொங்கருட்கதியிற்சேர்க்கும்புத்திரனின்மையாலே
யங்கவர்கடன்கண்முற்றவமைச்சர்களாற்றிப்பின்பு
திங்களொன்றிறப்பச்சீர்த்ததிங்கள்வெண்கவிகைநீழற்
றங்கியவுலகங்காக்குந்தராபதியாரென்றாய்ந்தார். (௧௨)

புண்ணியகீர்த்தியென்னும்பூபதிஞாதியாக
நண்ணுதித்திரிடனென்னுநாமவேலரசன்மைந்த
னெண்ணியவலியான்சாம்பனென்பவன்றன்னைவேறே
யண்ணினுந்தெறுகிற்பானென்றவன்பிறப்புணராராகி. (௧௩)

விதிப்படியபிடேகித்துவியன்மணித்தவிசிலேற்றி
மதிப்பருஞ்சிறப்புச்செய்துமன்னவனாக்கிக்கொண்டார்
துதிப்பரும்பதியுநாடுந்துப்புநின்றேவல்செய்ய
நிதிப்பெருங்கிழவனென்னநீடிவாழ்நாளிற்சாம்பன். (௧௪)

அரியன்மிக்கார்ந்துநித்தமாருயிர்க்கொலையூன்றின்று
முரியதன்செங்கோல்கோடியுறுபொருள்கவர்ந்துவேற்றுத்
தெரியிழைமதர்க்கண்மாதர்திருநலநுகர்ந்துமிவ்வா
றெரிதவழ்ந்துண்டகானமெனவுலகத்தைச்செய்தான். (௧௫)

முறைவழிப்பிறழ்தல்செல்லாமுதுக்குறையமைச்சர்தம்மைச்
சிறையிடைப்படுத்துத்தன்போற்றிறம்புதுற்புத்தியென்ன
வறைதருபெயரினானுக்கமைச்சளித்துனக்கொவ்வாரை
மிறைபுரியென்றுவைத்துமெல்லியர்போகத்தாழ்ந்தான். (௧௬)

கோட்டத்துளமைச்சர்தாழக்குவிமுலைமாதரின்ப
நாட்டத்துட்சாம்பனாழ்ந்தானண்ணுதுற்புத்திபாவ
வீட்டத்துட்டாழ்ந்துநாளுமிடும்பெயர்க்கேற்பத்தானும்
வாட்டத்துட்டாழ்த்தான்வையமருவியவுயிரையெல்லாம். (௧௭)

இன்னணமுரைக்கும்வேலையிறைஞ்சுபுபிதிரனாவா
னன்னவன்பிறப்புத்தேராதரசினுக்கமைத்தாரென்றாய்
தன்னுறுபிறவியாதுசாற்றெனத்தவளக்கஞ்ச
மன்னியபிரமன்றேவன்மயக்கறத்தெருட்டலுற்றான். (௧௮)

தந்தைதுத்திரிடனென்பான்றனையனையுயிர்த்தல்வேண்டி
முந்தைநற்றவந்தானங்கண்முயன்றும்புல்லவுணர்ச்சார்ந்து
வெந்தொழில்புரிதலாலேவினைப்பயனெய்தானாகப்
பிந்தவன்மனைசோரத்தால்வலைஞனுக்கவனைப்பெற்றாள். (௧௯)

வலைஞன்வீரியத்திற்றோன்றும்வழுக்கினாற்சாம்பனல்ல
கலைஞரையொழுக்கத்தோரைக்காய்ந்துதுன்னெறியிற்சென்றா
னலைஞெமிர்கானத்தோர்நாளமைச்சனுந்தானும்பூந்தொத்
திலைஞெமிர்கானில்வேட்டைக்கெய்தினனாடிமீண்டான். (௨௰)

மீண்டுதன்பதிக்குச்செல்லும்வேலையிலிடையேயென்னை
யாண்டருள்வழங்குமைங்கையமலனார்கோயிலொன்று
நீண்டுவானளக்குந்தூவிநிலையதாயறுகுசூழ்ந்து
காண்டகுவளத்தினோங்கிக்கவினொடுமிருப்பக்கண்டான். (௨௧)

அத்தகுசெம்பொன்கோயிலமர்ந்தருள்கணேசமூர்த்தி
பத்தியின்வசிட்டன்மேனாள்பதிட்டைசெய்திட்டதிப்பாற்
பத்தெழுத்தெண்ணிச்சாலப்பகர்தசரதன்பூசித்துப்
புத்திரப்பேறுபெற்றுப்புகழொடுபொலிந்ததாகும். (௨௨)

வேறு.

பரவுமமரரும்புவியிற்பயிலுநருந்தினம்போற்ற
வரமருளுமவர்தம்மைவரதகணபதியென்பர்
தரணிபுகழவர்கோயிற்றனைக்கண்டுவருஞ்சாம்பன்
விரவுபரிசனமமைச்சினொடுமதனுண்மேவினான். (௨௩)

குலவியவப்பதிவாழ்வார்குழீஇச்சென்றுபணிவாருட்
சிலரொருபாற்பொங்கலிடச்சிலர்தாழைக்கனிதகர்ப்பச்
சிலர்தயிலமுதற்பலவுந்திருமுடியினெடுத்தாட்டச்
சிலர்துதிப்பச்சிலர்நடித்துச்சேவைசெயவெதிர்கண்டான். (௨௪)

தானுமமைச்சனுமாங்குத்தக்கவொருவிளையாட்டாற்
றேனுநறுங்கனிகாயுஞ்செறிவனத்தினிடைக்கவர்ந்து
கூனுறுதிண்சிலைமள்ளர்கொணர்ந்தவெலாமெதிர்வைத்து
நானுமுனக்கடிமையெனநவின்றுசூழ்ந்தேகினான். (௨௫)

பொருப்பெனவுங்கடலெனவும்புவியெனவுநெடுங்காலம்
விருப்பினொடுபாவமெலாமிகவீட்டிவாழ்நாளிற்
குருப்பயில்செங்கட்கயவாய்க்குழிவிழியானிடிக்குரலான்
மருப்படல்வன்பகட்டேர்திமறலியின்றூதுவரார்த்தார். (உசு)

வேறு.

இறுக்கினார்சிலர்கயிற்றினாலிருவர்தம்மிருகரம்புறஞ்சேர்த்து
முறுக்குமூசியார்சிலர்செவியண்ணநாமுன்கையாண்குறியங்கை
சிறுக்குமெல்லிதழ்களமிவைதளைத்திடுஞ்செறிதொடர்பிடித்தீர்த்தா
ருறுக்குமாறுவார்கதைகொடுசிலர்நெறியுய்த்தனரெறிந்தம்மா. (உஎ)

படையுமங்கியுஞ்சிலைகளுஞ்சொரிந்தடுபடர்மழைக்குலத்தானு
மிடையும்யாளிவன்புலிகரிமுதலியமிருகஞ்செய்மிறையானு
மடையுமுண்டகநிரம்பியவிடந்தொறுமடிபெயர்த்திடலானு
முடையுநெஞ்சிருவரும்பலதுன்பமுமுழந்தருநெறிச்சென்றார். (உஅ)

கொடுமையென்பனமுழுவதுந்தன்னிடைக்குழுமுறத்தழீஇக்கொண்டு
நெடுகிநின்றிடுநெறியிடைத்தூதுவர்நெஞ்சுவகைந்துகநோக்கி
யடுமிடும்பைகளனைத்தையுமுழந்துபோயரியணைமிசைவைகுங்
கடுவுமிழ்ந்தெரிதும்முவெஞ்சினவிழிக்காலன்சந்நிதிசார்ந்தார். (உகூ)

சீறுவன்புலிப்போத்துமுனண்ணியசிறுகலைமான்போன்றும்
வீறுதுன்றியகலுழன்முனண்ணியவிடமுமிழ்பணிபோன்று
மாறுகொண்டடுமடங்கன்முனண்ணியமதப்பெருங்கரிபோன்றும்
பாறுநச்சுவேற்காலன்முன்னிருவரும்பதைபதைத்துளமாய்ந்தார். (௩0)

திருந்துசித்திரகுத்தனைக்கூயிவர்செய்தபுண்ணியபாவம்
பொருந்தவோதுதியென்றனனியமன்முன்போந்தவன்கணக்கோர்ந்து
வருந்துபாவமேசெய்தனர்முழுவதுமற்றொருவிளையாட்டா
லிருந்தவைங்கரற்கொருதினமவந்தனையியற்றினர்சிறிதென்றான். ()

அந்தப்புண்ணியமுந்துறப்பயனதாயடாமையும்பெரும்பாவ
முந்திப்புக்கிரும்பயனதாய்முற்றியமுறைமையுஞ்சீர்தூக்கி
யுந்திக்கொண்டுபோயிவர்தமைநரகெலாமுறத்தொலைத்திடுமென்னாச்
சந்தக்கண்ணிணைநெருப்புறத்தூதரைச்சாற்றினன்செங்கோலான். ()

குறைபடாப்பெருந்தறுகணர்வடவையுங்குளிர்செயுஞ்சீற்றத்தார்
பிறைசெய்பாணியிற்பிடர்பிடித்துந்தினர்பெருநிலத்தவர்வீழ
நிறையமோதினர்காலினாற்றுகைத்தனர்நெடும்புவியோர்தம்மை
முறைசெய்யாதலைசெய்துளீர்யாம்புரிமுறைமையிற்படுமென்றார். ()

வேறு.

வள்ளயிற்படைநிரைத்தநிலமீதுமறுகத்
தள்ளிமுள்ளுநடையதண்டினுடல்பொள்ளவெறிவா
ருள்ளடித்துணையினூசிநிமிரக்கடவுவார்
துள்ளவெண்பொரியெனச்சுடுநிலத்திலிடுவார். (௩ச)

ஊறுசெங்குருதிமூளைதசையூண்கள்சிதற
நாறுமொத்துவதெனத்தறியினன்றெறிகுவார்
பாறுபல்கழுகுகாகநரிநாய்பசிகெடக்
கூறுசெய்துடலருந்தவவைமுன்கொளுவுவார். (௩ரு)

உச்சிநின்றுகுதவாயள்வுமூடுருவிட
வச்சிரத்தினிழைமுட்டறிகள்வைத்திருவுவார்
நச்செயிற்றரவின்வாயினலியக்கடவுவார்
வெச்செனத்தசையரிந்துமிசையப்புரிகுவார். (௩சு)

நுங்குகுன் றிடுவதென்ன விருநோக்கமகழ்வா
ரங்கைதுள்ளிவிழவாய்தமதனுற்றறிசெய்வார்
கங்கபத்திரமிளங்கழல்கடுப்பவுடவிற்
புங்கமட்டுகிமிரப்பொரிவிலேற்றிவிடுவார். (௫௭)

முடக்கிரும்பணரியூடுருவமூட்டியுயர்விற்
றொடக்கிநாற்றியழல்சூழ்ந்துக துவத்துயர்செய்வார்
கடக்கருங்களிறுகாலின்முடியெற்றவிடுவார்
மடக்கிவார்கதையின்வன்முசலமோச்சியடுவார். (௫௮)

கிருமிகிண்டவதுமல்கியகிடங்கினிடுவார்
குருதிசீயொடுகுழம்பியகிணற்றினிடுவா
ரிருபிளப்புடலமாகவிருபாலுமிருவர்
மருவிவேதினமடுத்துமிகவாங்கியரிவார். (௫௯)

உருக்குசெம்புதுளையொன்பதுமொழுக்குதல்செய்வார்
நெருக்குமாலையினெடுங்கழையெனச்செருகுவார்
திருக்குசெக்கினிடுவார்செதிளெடுப்பவுடல
முருக்குவாச்சிகொடுசெத்தியழலிட்டுமுனிவார். (௬௦)

குட்டமிட்டுடலம்வங்கமொடுகூடியகிலி
னிட்டுவெங்கனலினெற்றியடுவார்மணல்கள்கற்
கொட்டியிட்டுடன்வறுப்பர்கொதிநெய்யின்முழுகி
முட்டிலாதுமறுகக்கனலிமூட்டிவிடுவார். (௬௧)

ஊசியாண்குறியும்வார்விரலுகிர்க்கணுமுறக்
கூசுறாதுபலவேற்றுவர்குடங்கையிடையே
வீசுசோதியழன்மூழ்குமயம்மேவவிடுவார்
பூசுவாருருகுசெம்பொனவர்பூட்சிமுழுதும். (௬௨)

ஆசிலாவியமதூதர்பலராசொழிதரப்
பேசுமாநரகவேதனைபிறக்கியிடலும்
பூசைவாய்ப்படுபுறாக்கிளிகளென்னவுமரா
மூசுவாய்த்தவளையாமெனவுமூற்றுமழிவார். (௬௩)

ஆண்டொராயிரமதன்பதின்மடங்குவருட
மாண்டுநின் றகியுதம்வளரிலக்கமுமுற
நீண்டதூதுவர்களோவ்வொருநெடுந்தழனர
கீண்டுவெந்துயரிணக்கினர்கணக்கின்முறையே. (௬௪)

வேறு.

அன்னவாறவ, ரின்னலெய்துபு
துன்னுதொல்வினை, மன்னுமண்ணினர். (௬௫)

விஞ்சுவெவ்வினைப், புஞ்சம்போதலு
மெஞ்சுபாவமுந், துஞ்சத்தோன்றுவார். (௬௬)

காகங்காவல, னாகவாற்றல்சால்
கூகையாகினன், மாழ்குமந்திரி. (௬௭)

வேறு.

ஒந்தியோடுவல்லூறுமாயினர், சீந்துநாகமுந்தேளுமாயினர்
போந்துநாயொடுபூனையாயின, ரேந்துகீரியொடேனமாயினர். (௬௮)

நரியினோடுசெந்நாயுமாயினர், பரியினோடுவேசரியுமாயினர்
விரவுமொட்டகம்வேழமாயினர், கரவின்மச்சமுங்கராவுமாயினர். (௬௯)

காயும்வேங்கையுங்கலையுமாயினர், பாயும்பெற்றமும்பகடுமாயின
ரேயுமிம்முறையிழிந்தயோனிக, ளாயபல்பவமடைவின்வந்தபின்.(ருo)

அடுகொலைத்திறலரக்கனாகியுங், கெடுதிமுற்றியகிராதனாகியு
நெடுநிலத்திடைசிரப்பின்முற்றினர்,வடுவில்வன்னியின்வானமுற்றவர்.

வேறு.

வரதகணபதிதன்னையொருநாட்போற்றும்வழுவாதபெரும்பயனாற்பிற
விதோறும், பரவுபெருந்தீவினையேபுரிந்துமன்னோர்பச்சிலைவன்னியினேறிப்
ப்பாங்கர்வைகு, மரவமகட்டசைத்தருள்வாமனகணேசரவர்க்கபுத்தியாற்
பூசையாற்றினர்கள், விரவியசீர்வாமனர்பூசித்தவந்தவிநாயகர்பூசனையின்
முத்திமேவினரால். (ருஉ)

வேறு.

தாமரைக்கிழவனீதுசாற்றலும்பிதிரன்றாழ்ந்து
வாமனர்யாவரந்தவன்னிமென்னிழலிலங்கைச்
சாமியைப்பூசையாற்றுந்தன்மையென்சாற்றுகென்றான்
றேமறப்பிதிரன்கேட்கத்தொல்லைநான்முகவன்சொல்வான். (ருங)

வன்னிமகத்துவப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உசஅங.



## ருச - வது வாமனர்வரம்பெறுபடலம்.



வாசியின்மதிவைத்தார்க்குவரம்பிலானந்தநல்குந்
தேசிகன்றேவதேவன்றிகம்பரனெழுத்தஞ்சுன்னிப்
பூசிவெண்ணீறுகண்டிபுனைந்தருந்தவங்களாற்றுங்
காசிபன்மாதரோடுகலந்துமுன்னிருக்குநாளில். (க)

அன்புறுமனைவிமாருளதிதியென்பவடான்பெற்ற
வின்புறுமகவானாதியிமையவர்க்குதவியாகப்
பொன்புணர்மாலைதன்பாற்புத்திரனாகவேண்டி
மன்பெருங்காதல்பொங்கமாதவமியற்றுகின்றாள். (உ)

மாற்றவள்புரியுமேன்மைவளர்திதியறிந்துமுன்னர்
வீற்றுவிண்ணவர்க்குமேலாய்விளங்குமுச்சகமுங்காக்கு
மாற்றன்மிக்குடையமைந்தரவர்தமைப்பெறுதலுன்னித்
தோற்றியமாலைப்போதிற்றுணைவனைத்தொழுதுசொல்வாள். (ங)

என்னுயிர்த்தலைவகேளாயென்னகாரணமோதேறேன்
றுன்னியகாமவெங்நோய்சுடுகின்றதுளத்தையற்றா
லின்னினியின்பநல்காயெனிலுயிர்வாழ்வதில்லை
பின்னையென்றருளவேண்டாபெருமகண்பார்க்கவென்றாள். (ச)

அரணியிலெழுந்ததீப்போலகத்தெழுந்ததனைக்காயு
முரணியகாமநோக்கிமுனியவள்போகந்துய்ப்ப
விரணியகசிபுதன்னோடிரணியவிழியன்வந்தான்
றரணியும்விசும்புமஞ்சத்தானவர்குலஞ்செம்மாப்ப. (ரு)

அத்திரசத்திரங்களகம்புறம்வான்மண்ணல்லெல்
கொத்துறுதிணையிரண்டென்றிவற்றினாற்கொலையுறாமை
பொத்துதன்னுடலிரத்தம்புவ்விழிற்றன்போலாதன்
மெத்தூடல்காட்சிபெற்றான்விகிர்தன்பாற்பொன்பேர்பெற்றான். (சு)

மறைநெறிபிறழ்ந்ததீயோன்வையகமூன்றுமாண்டு
குறைவறுசெல்வமென்னுங்குன்றின்வீற்றிருக்குமெல்லை
யுறைபயிறரங்கவேலையுறங்குவானிவனைக்கொல்லு
முறையினையறியமுன்னிமுன்னினனந்தச்சூழல். (எ)

அடக்கியைம்பொறியுந்தக்கவாதனத்திருந்துசாலச்
சடக்கரங்கணித்தவன்னித்தருநிழன்மூலந்தன்னிற்
கடக்கரிமுகத்தினனைக்காழறப்பதிட்டைசெய்து
முடக்கரும்பூசைமுற்றமுறையுளிசெய்துவந்தான். (அ)

கரங்களைந்துடையநாதன்ககனத்தினேரேநின்றான்
றரங்கவெண்புணரிப்பாயற்றமனியவுடையான்போற்றி
யிரங்கவெவ்வுலகுமாளுமிரணியனுயிரைவாட்ட
வரங்களைத்தருகவென்றான்வரதனார்வழங்குகின்றார். (௯)

விரவியதிணையாய்வாய்தல்வியன்படியிருந்துபார்ப்பார்
பரவுறுமந்திப்போதிற்பயிலுமுன்மடியில்வைத்திட்
டிரனுறுநகத்தாற்கீறியுதிரம்வாய்மடுக்கவென்று
கரவறுவலியுநல்கிக்கணேசனார்மறைந்துபோனார். (௧0)

இயம்பியசூழ்ச்சியான்மாலிரணியகசிபைக்கொன்றான்
வயம்புணரிரணியாக்கன்வையகம்பின்னராண்டான்
சயம்புணர்வராகமாகித்தன்னையுங்கொன்றானீளங்
குயம்புணர்குடங்கைமுக்கட்குஞ்சரனருளினாலே. (௧௧)

அண்டர்நாயகனாரங்கணமர்ந்தவைகுந்தவாழ்க்கை
விண்டுவுக்கருளிவிண்டுநாயகனென்னுநாமங்
கொண்டனரன்னான்பின்புகுறளுருவாகிப்போற்றி
மண்டியவரங்கொண்மாண்பால்வாமனகணேசரானார். (௧௨)

மழைமுகிலனையமேனிவாமனன்வழிபாடுங்கேள்
குழைபடுவராகந்தாக்கக்கொலைபடுமிரணியாக்கன்
விழைதகுமுரியமைந்தன்விரோசனனென்னும்பேரான்
றழைதவம்பருதிப்புத்தேடனைக்குறித்தியற்றினனே. (௧௩)

பன்னெடுங்காலஞ்செல்லப்பகலவனெதிரேதோன்றிப்
பொன்னெடுமோலியொன்றுபூங்கரத்தினிதுநீட்டி
யின்னதுன்முடியிற்சூடியிருமதியுலகமூன்று
நின்னடியேவல்கேட்குநினக்கிடர்வருவதில்லை. (௧௪)

பேணுநின்சென்னிமன்னுபிறர்கரந்தீண்டப்பட்டாற்
காணுறுநூறுபின்னமாயுயிர்கழியுங்கண்டாய்
பூணிதுமனத்துளென்றுபுகன்றுதன்பதியிற்சென்றான்
மாணுறுவிரோசனன்பின்வையகமூன்றுமாண்டான். (௧௫)

மாவலியவற்குத்தோன்றிவளர்ந்தனனிவ்வாறாகக்
காவளர்கற்பநாட்டுக்காவலன்முதலோர்சென்று
தேவனேயவுணற்காய்ந்துதிருவருள்செய்கவென்றார்
பூவளர்மாதுகேள்வன்பொற்பமோகினியாய்ப்போந்தான். (௧௬)

பூவையராணவாவும்பொற்பின்மோகினியாய்ப்போந்த
பூவையைமருட்டுமேனிப்புண்ணியன்புணர்ப்புநோக்கான்
பூவைவன்றோளிற்பூவிற்பொறுத்ததானவன்மைநீலப்
பூவைவாள்விழியாளென்றேபொருவறுகாதல்கொண்டான். (௧எ)

நோக்கியபார்வையானுநுவலுமென்கிளவியானும்
பூக்குழலசைத்தலாதிபொருவறுதொழிலினானு
மூக்குழுள்ளுடைந்துமோகமுறுவிரோசனன்பின்சென்றான்
றாக்கியதையலாகிச்சார்ந்தமாலிதனைச்சொன்னான். (௧௮)

கயிலுறுகழற்கால்வீக்குங்காவலமிகுந்தசெல்வம்
பயிலுநின்கலவிவேட்டுப்படர்ந்துளேனெனதுநீர்மை
தயிலமாடாதார்தோளைச்சார்வதெஞ்ஞான்றுமில்லை
தயிலநீயாடினென்பொற்றனங்கணின்கையவாமே. (௧௯)

வருவிபூந்தயிலமென்கைமலரினாற்றேய்ப்பலென்றாள்
பொருவின்மோகத்தின்மூழ்கும்புந்தியான்வரம்பொச்சாந்தே
யொருவியன்வள்ளத்தெண்ணெயுழையரைக்கொணர்கவென்றா
னிருவினன்முடியைவாங்கியிருநிலந்தன்னின்மாதோ. (௨௦)

வந்தபூந்தைலந்தன்னைவாய்த்ததுசூழ்ச்சியென்று
சிந்தையின்மகிட்சிபொங்கத்திருமறுமார்பனள்ளி
முந்துறநின்றுசென்னிமுடங்குதன்னொருகைப்பற்றிச்
சுந்தரவொருகைதன்னாற்சொரிந்துபின்னுரைத்திட்டானே. (௨௧)

நீறுசுண்ணாம்புக்கல்லுநீர்படவிரிந்தாலென்ன
நூறுபின்னங்களாய்த்துநொடிக்குமுன்னவுணன்சென்னி
வீறுகொண்டமரர்போற்றவிண்டுவைகுந்தம்புக்கான்
பேறுதன்றந்தைபெற்றபின்புமாவலிமேம்பட்டான். (௨௨)

வேறு.

வாடற்றலையொன்றேந்திவன்னித்தலைநின்றாடு
மாடலழகர்செம்பொனடியினிரவும்பகலும்
வீடலரியசிந்தைமேவுமனையான்கடல்சூழ்
நீடுலகமுழுதுநேமியுருட்டியாண்டான். (௨௩)

அங்கமறையின்முறையினனுவும்பிரமாவண்ணந்
தங்கியரசுபுரிநாட்டனக்குக்குரவனான
துங்கப்புகரைவிளித்துத்தொழுதுவணங்கியிருத்திப்
பங்கமகலப்பூசைபயிற்றியிதனைவினவும். (௨௪)

விண்ணினரசுபுரியும்வேந்தனெனக்குஞாதி
எண்ணிலரியபோகமென்றுமவன்கைத்தாகி
நண்ணவெனக்கின்றானநவையெனவிலுகென்றான்
வண்ணமழையின்கோளான்வாய்மையவனுக்கறைவான். (௨௫)

இன்பம்வளரும்போகமெனைத்துந்தருமம்வளர்த்தோர்
துன்பமொழியநுகருந்தொன்மையியற்கையுடைய
வன்புபிறவியிவற்றாற்கவரின்மன்னிநில்லா
வன்பவரசன்மகநூறாற்றியவைகைக்கொண்டான். (௨௬)

வேறு.

அந்தவிந்திரன்பொரவைந்திரட்டியொருபது
சந்தவேள்வியாற்றிவாழ்தருமமின்றியெண்ணிலார்
வந்துபற்றியொய்யெனமாய்ந்துளார்கணீநுகர்
புந்திகொள்ளினரிமகம்போற்றுகடுகவென்றனன். (௨௭)

வெள்ளியுண்மைகூறலும்விழைந்துமாவலிப்பெயர்
வள்ளன்மாதவப்பெருவசிட்டனாதியோர்வரத்
தள்ளுறாதபரிமகமொன்றிலாதசதமுடித்
தெள்ளலின்றிமற்றதும்மியற்றவேயிருக்குநாள். (௨௮)

வேறு.

இந்திரன்றேர்ந்துளத்தெண்ணுவானென்செய்வா
மந்தமில்போகமுமரசுமின்றொழிந்தனஞ்
சந்தவேள்விகள்பலசமைத்தனன்மாவலி
மைந்துளானவனைநாம்வாட்டவல்லேமரோ. (உ௯)

பண்டுமிப்பதிகவர்பதகரெல்லாரையுங்
கண்டதுண்டம்புரிகமலவாள்விழியினா
னுண்டெனத்தேறினானெல்லையுற்றொலிகடற்
கொண்டுநாகணைவளர்கொண்டலைக்கண்டனன். (௩0)

செய்யதாமரைமலர்ச்சேவடிதாழ்ந்தன
னையனேயெனத்துதியறைந்தனனிதுசொல்வான்
வெய்யதானவர்தமைவென்றிதுகாறுநீ
நையுறுதெளியனைநாகமேநாட்டினாய். (௩௧)

இன்றுநான்பொன்னகரினிதுவாழ்ந்திருப்பநீ
மன்றவென்பதவியைமருவவேவேள்விக
ணன்றுசெய்மாவலிநல்லுயிர்குடியென
நின்றனன்முறுவலினெடியவன்கூறுவான். (௩௨)

வேறு.

நன்றுநன்றுவேந்தனேநவைபுரிந்துமாமறைத்
துன்றுகின்றமுறைமையைச்சூழுறுதமுனிவரை
நின்றவிண்ணுளார்களைநெருக்கினாரைவென்றுகொன்
றின்றுகாறுநின்முறைக்கேதமின்றியொன்றினும். (௩௩)

மனறயினோதுநீதியின்வாய்மைகொண்டுமாவலி
முறையின்வேள்விபுரிகின்றான்முடிவிலாதசீர்த்தியா
னிறைவனேகனருளினாலிறுதியில்லாவாயுளான்
குறைவிலாக்குணத்தனைக்கொல்லுமாறதெங்ஙனே. (௩௪)

எம்மைவந்திரத்தலாலீண்டிநின்றநின்பதஞ்
செம்மையிந்திராவுனைத்தீர்தராமைசெய்துநாம்
விம்முளக்கவற்சியைவீட்டுகோவெனச்சொலி
மும்மைவையகந்தொழுமுகுந்தனீதுதேர்குவான். (௩௫)

வேறு.

நீதியாலுயர்ந்துளான்செய்நிகரிலாவேள்விக்காறு
ஞாதியாவடுப்பினன்றிநால்வகையுபாயத்தானுங்
கோதிலாவேலைவெவ்வேறேதுவினானுங்கூடா
தீதியாம்புரியத்தக்கதெனவுளத்தினிதுசூழ்ந்தான். (௩௬)

அதிதிமுன்பெரிதுநோற்றவருந்தவப்பயனுமுற்ற
மதிமுகத்ததிதியென்பாள்வயிற்றில்வாமனனாய்த்தங்கிக்
கதிதருகாங்கணான்குங்காசையினிறமும்பொன்னுக்
கதிபனுமிவனென்றோதவவதரித்திட்டான்மாயன். (௩௭)

சாதகன்மங்களாதிகாசிபன்றகவிற்செய்து
மேதகுசவுளந்தன்னைவிளம்புமூவாண்டினாற்றிக்
கோதறவைந்தாமாண்டிற்குலவுபநயனமுஞ்செய்
தோதல்செய்வித்தானென்பவொலிகெழுதெய்வவேதம். (௩௮)

அங்கநான் மறைகளாதியனைத்தையுமுணர்ந்தபின்றை
தங்குவாமனனுரீன்றதாதைகாசிபனைச்சார்ந்து
பங்கமிலன்பிற்றாழ்ந்துபயிலுமாவலியையென்று
மங்குல்வாசவற்கெஞ்ஞான்றுமருவிக்கும்வழியாதென்றார். (௩௯)

பெருமுனிகேட்டுமைந்தாபிறங்கியகணத்தியக்கன்
றிருவருளன்றியந்தச்செய்கைகூடாதுகண்டா
யருளதுபெறுதற்கன்னானெழுத்தனுட்டியென்று
பொருவறுதீக்கையாற்றிப்புகன்றனன்சடக்கரத்தை. (௪0)

வாமனனுங்குநீங்கிவளங்கெழுவிதற்பநாட்டி
னேமுறவளராதேயமெனுநகரதற்குத்தென்பால்
வீமலிவன்னிநீழல்வீற்றிருந்தெனையுமாளக்
காமுறுமந்தவிண்டுகணேசனைச்சரணஞ்சார்ந்தான். (௪௧)

நித்தலும்பூசையாற்றிநிகழொருவருடங்காறும்
பத்தியினனுட்டிப்போடுபகர்ந்தனன்சடக்கரத்தை
யுத்தமவடியாருள்ளத்தொளிக்கொளியானசோதி
வித்தகனெதிரேநின்றான்வியத்தகுகணங்கள்சூழ. (௪௨)

மையறுநீலவெற்பின்மாணிக்கமணிக்குன்றேறி
யையெனநின்றாலென்னவணிமயிற்போத்தின்மீது
கையொருபத்தும்வேழக்காமருமுகமுந்தோற்றி
யுய்யவந்தடுத்தநாதனுருவினைமாயன்கண்டான். (௪௩)

விழுந்திடத்தீமையெல்லாம்வியனிலத்தெதிரேவீழ்ந்தா
னெழுந்திடநன்மையெல்லாமெழுந்தனன்கூத்துமிட்டான்
கொழுந்துகொண்டெழுந்தவன்பாற்குடங்கையிற்றட்டமிட்டான்
செழுந்துதிமறைகளோதித்திருமுன்புகுடந்தம்பட்டான். (௪௪)

பட்டினியுடனோராண்டுபல்விதத்தானுநம்பா
லுட்டிகழன்புபொங்கவுறுவழிபாடுசெய்தாய்
மட்டலர்த்துளவமாலைவாமனவரங்கள்யாது
பெட்டனைக்கேட்கவென்றான்பெருந்தகைமாயன்கேட்பான். (௪௫)

எளியனேற்கடிகள்பாதத்திடைவிடாவன்பும்வேந்த
னளிசெயத்தக்காவன்னாற்கரசுநீங்காதவாறு
மொளியுறுநினக்குநாயேனுறுபெயர்வழங்குமாறுந்
தெளியநானினைந்தவெல்லாஞ்சிறப்புறமுடியுமாறும். (௪௬)

அறிந்தறியாமைநாயேனடிகள்பாற்பிழைசெய்தாலும்
சிறந்தநின்னடிமையென்றுதிருவுளம்பொறுக்குமாறுந்
திறந்தகக்கொடுக்கவென்றுசெப்பினனவற்றையெல்லாஞ்
செறிந்திடவழங்கிச்சென்றான்றேவர்கடேவதேவன். (௪௭)

மறுவலும்பூசையாற்றிவாமனன்றந்தையான
வுறுவரனிருக்கைநண்ணியொருமருப்பிறைவன்பாங்கர்ப்
பெறுவரமனைத்துங்கூறிப்பெட்பினோடுளவளாவி
நிறுவுமந்திரத்தைமுன்போனித்தலுங்கணித்திருந்தான். (௪௮)

வேறு.

அற்றமின்மாவலியென்னுமாண்டகை
மற்றொருவேள்வியும்வகுத்துச்செய்துழி
யுற்றனன்வாமனனுவந்தம்மன்னவன்
பற்றொடுமெதிர்கொடுபணிந்துபோற்றினான். (௪௯)

அருந்தவயாவனீயலர்ந்தசேவடி
வருந்தவிங்கடுத்தநின்வரவென்கூறென
விருந்தெதிர்மாவலிவிழைவுநோக்குபு
திருந்தியவாமனனிதனைச்செப்பினான். (௫௦)

மாவலிகசியபன்மைந்தன்யானிருந்
தோவறுதவஞ்செயவுஞற்றுவேள்வியின்
மூவடிநிலம்பெறமுன்னிவந்துளே
னீவதுன்கடனெனவிரந்திட்டானரோ. (௫௧)

கொடுத்தனெனென்றனன்கோதின்மாவலி
தடுத்தனன்சுக்கிரன்றானமேற்பவிங்
கடுத்தவன்முனியலனரிவஞ்சித்துனைக்
கெடுத்துலகங்கொளக்கெழுமினானென. (௫௨)

கொடுத்தலிற்கேடுறினதுகொடாமையா
லடுத்திடுஞ்செல்வத்தினதிகவாழ்வெனத்
தடுத்தவன்றனையெதிர்தடுத்துமாவலி
யெடுத்திருங்கரகநீரினிதுவாக்கினான். (௫௩)

கரகமூக்கடைத்தனன்கரந்துசுங்கனவ்
வுரனுறுவாமனனொருதருப்பையுள்
விரவவிட்டவனொருவிழியைப்போக்கினான்
பரவியகொடைத்தடைப்பயனிதாமென. (௫௪)

எற்றனனிரும்புனலெழில்கொள்வாமன
னுற்றியகொடைப்பயனளவைபோன்மெனத்
தோற்றினன்பேருருத்துலங்கவீரடி
சாற்றுமூவுலகமுந்தகப்படுத்தனன். (௫௫)

மற்றையோரடிக்கவன்வயங்கொள்சென்னியின்
பொற்றடந்தாளினைப்பொருத்திப்பாதலத்
துற்றிடவிருத்தியொண்சிறையிலிட்டனன்
முற்றியவஞ்சகமுறைமைதோற்றினான். (௫௬)

எரிதிரிநுந்தியெண்டோளர்பாலுல
குரிமைகொளரசுமொண்வாழ்வும்பெற்றனன்
றிரிபுவனமுமரிசெங்கைநல்கிப்போ
யரியவன்சிறையமர்ந்தானம்மாவலி. (௫௭)

இன்னணம்வாமனனேரம்பன்பத
முன்னியவரத்தினாலுயர்ந்தமாவலி
தன்னையுமடக்கிவாசவற்குவானிடை
மன்னியவரசியன்மன்னச்செய்தனன். (௫௮)

வேறு.

வன்னிவிநாயகர்விண்டுவிநாயகர்வாமனவிநாயகரென்றியாவ
ருன்னினுமேத்தினும்பூசையுஞற்றினுமன்னவர்க்கந்தவும்பர்நாத
ரென்னபெருவரமுமளித்தெவ்விடருங்கெடுத்தருள்வாரென்றுவேதன்
வன்னியதன்பெருமையினைமற்றுமுரைப்பான்பிதிர்வானவனுக்கம்மா. (௫௯)

வாமனன்வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௨௫௪௪.



## ருஎ - வது கீர்த்திமகப் பெறுபடலம்.

அயில்கொள்சூலத்தரப்பணிவேணியார்
கயிலையோங்கலிற்காமரணைத்தலைப்
பயிலுமேல்வையிற்பாங்கரிருந்திடுஞ்
சயிலநாயகிதாழ்ந்துவினவுவாள். (௧)

என்னையாளுடையாயிலம்போதரன்
வன்னிமெல்லிலைமாட்டுவிழைவுறுந்
தன்மையென்னதுசாற்றுகவென்றனள்
பன்னகப்பணிமார்பினர்பன்னுவார். (௨)

வேறு.

உரியதருமம்பலதானமோவாதியற்றிவறியோர்கள்
பரிவுதொலைத்துத்தரியலரைப்பணித்துக்குணத்தின்மேம்பட்ட
பிரியவிரதனெனுமரசன்பெட்பின்வரைந்தமனைமாதர்
தெரிமெல்லிழைபூண்டிறுமாந்ததிதலைமுலையாயிருவருளர். (௩)

முந்தவரையப்பட்டமுகிழ்முலையாடனக்குப்பெயர்கீர்த்தி
பிந்தவரையப்பட்டவட்குப்பேசுநாமம்பிரபையென்ப
ரந்தப்பிரியவிரதனெனுமரசனிளையமனைவிபாற்
சிந்தைபெரிதும்விழைந்தவட்கேதிருந்துங்கலவிநலங்கொடுத்தான்.

மோகமிளையாளிடத்தழுத்திமுற்றுஞ்சிறப்பெல்லாங்கொடுத்துப்
போகமுழுதுமவள்பாங்கேபொருந்திநுகர்ந்தானாயிடினும்
வேகவெகுளிமனங்கொள்ளாள்விழுக்கற்புடைமையாள்மூத்தாள்
பாகமடுத்தன்பனுக்கானபணிகள்பலவும்புரிகிற்பாள். (௫)

புதுமையார்வந்திணங்கணவன்புந்தியூடுமிகப்பெருக்கி
முதுமையார்ந்தகுழற்பிரபைமுயங்கிக்கலவிதிளைக்குநாள்
விதுமையாகநுதல்பசப்பவிளங்குமொருமைந்தனைப்பயந்தாள்
பதுமநாபனெனுநாமம்பகர்ந்தாரவனும்வளர்ந்தெழுந்தான். (௬)

தருணமடுத்தபருவத்துத்தகும்பாஞ்சாலனெனுமரையன்
றிருவின்மகளைமைந்தனுக்குச்சிறப்பவதுவைசெய்தளித்தான்
மருவுமினையதிறத்தானுமாற்றாளென்னுமூத்தாளைக்
கிருமிதனிலுங்கீழ்ப்படுத்தாள்கெண்டைத்தடங்கட்பிரபையே. (௭)

கற்புக்கயிற்றின்யாப்புண்டகருத்தினமைந்தவுயர்கீர்த்தி
பொற்புமிகுந்தவிளையாள்பாற்பொருந்துங்கணவன்பணிசெய்ய
வற்பினடுத்தாளிளையவளிங்கடுத்ததெவனென்றெழுந்துதைத்தாண்
மற்பொற்றிணிதோண்மன்னவனும்வாளாங்கிருந்தானதுநோக்கி. ()

வேறு.

இளையவளுதைத்ததுமேதிலாரெனத்
திளைமகிழ்காதலிற்செல்வநாயகன்
விளைவெவனெனவினவாதிருந்தது
முளையநெஞ்சுன்னினளுயங்கிநீங்கினள். (௯)

முழுவதுமுணக்கிமெய்முடிப்பதொன்றெரி
யொழுகுநஞ்சயின்றுயிருலைப்பதொன்றுடல்
பழுதுறவரைகுளம்பாய்தலொன்றுசெய்
திழுதைசெய்யிழிவினையிரித்துமென்றெணி. (௧௦)

அழுங்கியவெழுந்தவெப்பருதுமல்கலாற்
புழுங்கியநெஞ்சினள்புணர்க்கண்ணீருகச்

செழுங்கலைமதிமுகந்தேசழிந்திட
விழுங்கியதுயரொடும்வெளிக்கொள்வேலையில். (கக)

செய்தவப்பயத்தினாற்றெய்வத்தன்மையன்
கைதவமிலாதவன்கவின்புரோகித
னைதுதன்னியல்பினாங்கடுத்துளானவள்
வெய்தெரியுளந்தெரிந்திதனைவிள்ளுவான். (கஉ)

தையலாய்கவலையிற்றளர்ந்துளாயினி
நையலைபெருநலநண்ணுமாறுகே
ளையனைக்கணேசனையமலமூர்த்தியைப்
பொய்யறுபூசனைபுரிதிவல்லையே. (கங)

மன்னவன்மாற்றவள்வயத்தனுகியின்
றென்னணமிருந்தனனன்னணங்கொடி
மின்னிடைமெல்லிடைவிளங்கரிக்கணாய்
நின்னதுவயத்தனாய்நிற்பன்மேலெனு. (கச)

அருச்சனைமுறைமையுமறைந்துநீங்கினன்
கருச்சிறைநீத்தவக்கணிதன்பேரன்பி
னுருச்சினக்கவலையினொழிந்துகீர்த்தியு
மருச்செழுந்தீம்புனன்மரபினாடினாள். (கரு)

நித்தலும்பூசனைநிகழ்த்தநீவிரும்
பத்திசெய்வீரெனப்பாங்கிமார்களை
வைத்தனளவருமஞ்சனமுந்தூர்வையுந்
தொத்தலராதியுந்துறுமுவித்தனர். (கசு)

தொன்றுநாரணனயன்சுரர்களாதியோர்
நன்றுபூசித்துறுநன்மையெய்திய
மன்றலார்மலரின்மந்தாரநீழலி
னென்றுமேரம்பனையுகந்துபூசித்தாள். (கஎ)

நைகரமொழிந்துநல்லன்பின்மாதராள்
பொய்கழிபூசனைபுரியுநாளிலோர்
வைகலிலறுகெங்குமருவக்கண்டிலர்
செய்கடன்யாதெனத்திகைத்துப்பாங்கியர். (கஅ)

எதிருறவன்னியொன்றிருப்பக்கண்டன
ரெதிரிதனிலைகள்கொண்டேகுவாமென
முதிர்தருகாலையின்முன்னிக்கொய்துபோ
யதிரிடையவிரிழையணங்குக்கோதுவார். (ககூ)

எங்கணுமறுகினையெய்தக்கண்டிலே
நங்கையீதாதலாகாமைநாடிலே
மங்கதற்கெதிர்சமியடைகொய்துற்றன
மைங்கரன்மலர்ப்பதத்தருச்சியென்றனர். (உ0)

அறுகிடுதியின்றழிந்ததேயென
மறுகினள்வன்னியான்வரதன்சேவடி
யுறுமுறைபூசனையுஞற்றிமுற்றியும்
பெறுமுணவொழிந்தனள்பிழையிற்றீரவே. (உக)

அற்றைநாள்வைகறையவள்கனவிடை
யொற்றைநீண்மருப்பினானொளிர்பொன்வேணிமேற்

றுற்றபாசிலேச்சமிதோன்றகின்றெதிர்
முற்றிழாய்கேளெனமொழியலுற்றனர். (உஉ)

நீயிடும்வன்னிகணீண்டநஞ்சடை
மேயினகாண்டிநின்விழுப்பரீக்குதி
தூயநின்பூசனைத்தொழிற்குவந்தன
மாயிருவரங்களைவகுத்துக்கேளென்றார். (உங)

நாணிவாய்திறந்திலனன்றுதாழ்ந்தொரு
தூணின்பாலடுத்திளந்தோகைநிற்றலும்
பூணராவணிந்தருள்புனிதனுக்குபு
மாணவான்வரங்களைவழங்கன்மேயினர். (உச)

தொடிக்கையாயிற்றைநாட்டொடங்கிநின்னிடைப்
படிக்கெலாங்காவலனுனபார்த்திபன்
பிடிக்குமார்வத்தொடுபெரிதுவாழ்குவ
னிடிக்குமாற்றவளோநோயெனுமிடர்க்குழாம். (உரு)

அகலரவல்குலாயாண்டொன்றேவுமு
னிகலறநின்வயிற்றிளவறேன்றுவான்
றகைகொள்கிப்பிரப்பிரசாதனென்றொரு
புகரறுபெயரையப்புத்திரற்கிடு. (உசு)

ஈரிருவருடத்துன்னிளவனஞ்சொடு
சேரிரும்போனகஞ்செய்யவாய்மடுத்
தாரிடறுவன்பின்னதுவுந்தீர்குவன்
றூரிடுங்குழல்கிருச்சமதன்சேவையால். (உஎ)

எனப்பலவரங்களுமீந்துமெய்யர்தம்
மனப்பெருங்கோயிலின்வதியச்சென்றனன்
கனப்பெருமாமழைகாட்டுமும்மதச்
சினப்பொறிவிழிநுதற்சிந்துரப்பிரான். (உஅ)

விழித்தனள்கனவியவிளைவையோர்ந்தனள்
கழித்தனள்கீர்த்திதன்கவலைவேலையைக்
கொழித்தனண்மகிழ்ச்சிமெய்குளிர்ந்துவைகினு
டெழித்ததுசங்கிராத்தீர்ந்ததென்பவே. (உகூ)

காலையிற்புரிந்திடுங்கடன்களாற்றியவ்
வேலையின்மாதரார்விழைவினீட்டிய
மாலையுஞ்சாந்தமுமற்றுங்கொண்டுபுக்
காலயத்தமர்ந்தவைங்கரனைப்பூசிப்பாள். (௩0)

அனாதியாகியபரனமலைமால்கதிர்
விஞயகனெனமறைவிளம்புமைவருங்
கனவிடைத்தோற்றியகடவுளேயென
மனுவொளிரல்குலாள்வகுத்துப்பூசித்தாள். (௩க)

அகிலமுநீயதன்காரணங்கணீ
சகலதத்துவமுநீசாமிநீயெனக்
கிகலருந்தந்தைதாயெவருநீயென
வுகலரும்பெருந்துதியோதிப்போற்றினள். (௩உ)

விக்கினராசன்மெய்ப்பூசைசெய்துபின்
றக்கதன்மனையிடைச்சார்ந்துவைகினு
ளக்கணபதிதிருவருளின்மாற்றவண்
மிக்குறுவெப்புநோய்விரவப்பட்டனள். (௩௩)

அன்னதன்மூலமாயனைத்துநோய்களு
மன்னிமாணெழினலம்பிரபைமாய்ந்தன
டன்னிகரிலாதவன்றழைத்தபூசையான்
மின்னிடைக்கீர்த்திமெய்விளக்கமேயினள். (௩௪)

முரசதிர்நெடுங்கடைமுனையயிற்படை
யரசனப்பிரபைபாலாசைவிட்டனன்
பரசுறுதிருவெனும்பாவைகீர்த்திபால்
விரசியவன்பொடுமேவிவாழ்ந்தனன். (௩௫)

கீர்த்திபாலொருமகன்கெழுமித்தோன்றினு
ஞர்த்தினர்மறையவர்க்காடையாதிகள்
சார்த்துகிப்பிரப்பிரசாதனென்றொரு
சீர்த்தகுபெயரையச்சிறுவற்கிட்டனர். (௩௬)

மதியெனவிளஞ்சிறுன்வளரக்கீர்த்தியு
முதிர்பெருமகிழ்ச்சியின்மூழ்கிவாழ்ந்தனள்
கதிருமிழிளநகைக்கவுரியச்சிறுன்
விதியினிக்கேளெனவிளம்புமீசனே. (௩௭)

கீர்த்திமகப்பேறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௫அக.



## ௫௮ - வது விடநீங்குபடலம்.

கீர்த்திவயிற்றுதித்திடுகிப்பிரப்பிரசாதனன்வளருஞ்
சீர்த்திநமக்கில்லையெனத்திகழ்தருநாலாமாண்டி
லார்த்திமிகுந்தன்மைந்தனரசுகொளக்குறித்துவிடஞ்
சார்த்தியபோனகங்கொடுத்தாடறுகண்மனப்பிரபையே. (௧)

முடியேறிவிடவேகமுருக்குதலுமிளமைந்தன்
படிமீதுவிழுந்தயர்ந்தான்பார்த்தரசனடுங்கியது
கடிபாக்குப்பலமுயன்றுங்கையகலாமையிற்கீர்த்தி
யடிநாளில்விநாயகனாருளியதுமதித்தெழுந்தாள். (௨)

அருச்சனைநம்பாலேற்றவயலனுளனவனருளுங்
கிருச்சமதனுளனென்னேகிளர்ந்தழிகின்றுயென்று
வெருச்சிறுநெஞ்சினைத்தேற்றிவிழுந்தசிறுவனைக்கொண்டு
தருச்செறியும்வனத்தந்தத்தவமுனிபாற்புகச்சென்றாள். (௩)

சுளகுபுரையலைகாதிற்றுளைக்கரத்துமதவேழங்
குளகுநுகர்தரவொருபாற்குராலினுடுபொட்டிரட்டு
மளகுபயினெடுங்கானத்தடுக்கின்றாளிடைவழியி
னிளகுமுளந்துயர்கூரவேந்தலிறந்தமைகண்டாள். (௪)

கைத்தலமார்பிடைவைத்துங்கான்முளைமூக்கிடைவைத்தும்
பைத்தமலர்க்கரத்தினுடுபதமலரினிடைவைத்து
முத்துறழும்பற்கரிந்துமுழுதும்விழிபஞ்சடைந்த
வத்தகுதிக்குறிபார்த்துமழுகின்றாளென்செய்வாள். (௫)

வேறு

ஒன்னார்வசையுமுற்றார்நகையுமொழிவித்த
மன்னுவெளியேன்வளர்கண்மணியேமழவேறே
நின்னுதரவான்மும்மைப்பயனுநெடிதார
முன்னுவிருந்தேன்றன்கருத்தழியமுடிவாயோ. (௬)

மாற்றாந்தாயேகூற்றாமென்னும்வசனத்தைத்
தேற்றாநின்றாய்சிறுவாசிறியேன்றவப்பேறே
நீற்றாமுன்னநின்னைத்தமியேனெஞ்சத்தை
நீற்றாநின்றாய்நீற்றாநின்றாய்நிறைகொன்றே. (௭)

நஞ்சிட்டுன்னைத்துயர்வித்திடுமந்நலமில்லா
டுஞ்சக்கண்டுநெஞ்சத்துவகைதொகவீழ்கண்
வஞ்சப்புலையினுருவத்தணுகாவகைதேர்ந்தோ
விஞ்சக்கொடுமைவளர்கானிடையேவிளிவுற்றாய். (௮)

வேறு

இன்னவாறிரங்கலோடுமிரங்கினமாவும்புள்ளுங்
கன்னிமாமரமுங்கண்ணீர்கவிழ்த்துவண்டிரங்கநின்ற
தன்னையேயனையநாதனகமுமங்கிரங்கிற்றாக
வன்னமாதவனும்யோகத்தறிந்துளத்திரங்கினானே. (௯)

பொள்ளெனவெழுந்துசென்றுபொருவறுமுனிவனண்மி
முள்ளெயிறிலங்கக்கண்ணீர்முகிலெனக்கவிழ்ப்பச்செத்த
பிள்ளையைமடியிலிட்டுப்பிறர்வரவறியாளாகி
நள்ளுறுமவலத்தாழ்ந்தநங்கையைவிளித்திட்டானே. (௧௦)

தனையனைநிலத்திலிட்டுச்சார்கிருச்சமதன்பாத
நினைதருநெஞ்சினோடுமிறைஞ்சினள்கீர்த்தியன்றன்
புனைமலர்க்குழலாய்நீயார்பொருமிநின்றழுகின்றாய்நின்
கனைதுயர்யாதோதென்றான்கவலைதீர்ந்தணங்குகூறும். (௧௧)

வேறு.

பிரியவிரதன்மனையடியேன்பெரியதவத்தாலீன்றெடுத்த
வுரியமைந்தனிவன்மாற்றாளூட்டும்விடத்தாலுணர்வழிந்தா
னரியவரந்தந்திடும்போதேயமலனுரைத்தானனுகுவிடங்
கிரியினுயர்ந்தமாதவத்துக்கிருச்சமதன்றீர்த்திடுமென்றே. (௧௨)

அந்தவருளைத்தலைமேற்கொண்டாவியழியுமைந்தனைக்கொண்
டிந்தவனத்தினினைச்சாரவெய்துமிடையேயுயிர்மரித்தான்
மைந்தனிறந்ததுயர்மூடவரதனருளுமறந்தெழுந்தே
னெந்தைபெருமானீயேயிங்கெளியேற்கிரங்கிவந்தனையால். (௧௩)

நச்சுப்பெரும்போனகத்தழிந்துநமனார்கையினகப்பட்ட
வெச்சத்துயிரையினியெழுப்பியெளியேன்றனையுமாட்கொள்ளா
யெச்சத்துயர்ந்தபெருங்கீர்த்தியிறைவாவெனமீட்டும்பணிந்தா
ளச்சத்தழியேலெனவணங்குக்கரியபெரியதவனுரைப்பான். (௧௪)

வன்னிமுறியான்முன்னொருநாள்வரதன்றனைப்பூசித்திருந்தா
யன்னபயனைநின்மைந்தனங்கைத்தலத்துக்கொடுவென்றா
னின்னதரிதோவெனவியந்தங்கீந்தானுயங்கிவீழ்ந்தான்போ
னன்னர்ச்சிறுவனெழுந்துமுனிநற்றாள்வணங்கியருள்பெற்றான். ()

கடவுட்கொருநாளதன்பெருமைகாணாதருச்சித்திடமைந்தன்
விடம்விட்டகலவெழுந்திருந்தான்மெய்ம்மைத்தவத்தோயத்தகைய
வடருமிலைவன்னியின்பெருமையறையல்வேண்டுமெனவிரந்தா
னுடலம்வெறுத்தகிருச்சமதனுவந்துகீர்த்திக்குரைசெய்வான். (௧௬)

**விடநீங்குபடலம் முற்றிற்று.**

**ஆகத் திருவிருத்தம் - ௨௫௯௱.**



# ௫௬ - வது சமிமந்தாரவுற்பத்திப்படலம்.

மல்லல்வரையைமருட்டும்பெருந்தவத்தோர்மனத்தினும்
புல்லற்கரியபுனிதனடிக்கன்புபூண்டகோதாய்
சொல்லிற்சமியென்றொருகாற்பவந்தொறுந்தொக்கவாக்கி
னல்லற்பிழைகளனைத்துமழலிட்டபஞ்சேயாமால். (௧)

சிந்தித்திடின்முன்செறிந்தபவந்தொறுஞ்சேர்ந்துநின்ற
விந்தப்பவத்துப்புரிந்தமனப்பாவமெல்லாந்தீரு
மந்தச்சமியைவலஞ்சூழநேர்காணவங்கைகூப்பப்
பந்தப்பரிசமுறக்காயத்தாந்தீங்குபாறும்பாறும். (௨)

ஐந்துதழலினரியதவநெடுநாளாற்றும்பேறுஞ்
சந்தத்துகில்கனகமாதிகொடுக்கின்றதானப்பேறு
முந்தும்விரதமகமாதிநல்வினைகளுக்கும்பேறு
மந்திற்சமியொன்றருச்சனையினும்பயனுப்பாகாமாதே. (௩)

இம்மைப்பெரும்போகமெல்லாமரைக்கணத்திலீண்டவாக்கு
மம்மைத்திருநெடுமாலாதியோர்தம்பதங்களாரவுய்க்குஞ்
செம்மைத்துறவிற்சிறந்தார்க்குமும்மலமுந்தீர்மெய்ஞ்ஞானம்
விம்மக்கொடுத்துவிநாயகனூர்தம்முலகமேவச்செய்யும். (௪)

ஒருகோடிகற்பமுரைப்பினுமுற்றாவுலப்பின்மேன்மைத்
திருவாரும்வன்னிமான்மியத்தைநாரதன்முன்றேவர்வேந்தர்க்
குருகார்வத்தோடுமுரைத்தானதனையுமோதுகேன்கேண்
மருவாரும்பூங்கோதைப்பொற்றொடித்தோட்சிற்றிடைவண்மதர்க்கணல்லாய்.

வேறு.

வீதிகோத்திரன்மகன்வேதமாதிக
ளோதியோர்ந்தவன்குணவோங்கல்போன்றவ
னேதிலாவவுரவனென்னுநாமத்தான்
சூதுநேர்முலைமலைசுமேதையென்பவள். (௫)

இருவரும்வாழுநாளிவர்வயிற்றிடை
யொருமகள்சமியெனவுதித்திட்டாண்மணப்
பருவம்வந்தடுத்தலும்பயந்ததந்தைதாய்
பொருவறுசணவனைப்புணர்த்தநாடினர். (௬)

மவுனமெய்த்தவர்களுண்மடங்கலேறெனுஞ்
சவுனகமுனிவனைச்சார்ந்தங்கேவல்செய்
தவநனியாற்றுமந்தாரனங்கையிற்
புவனமொடளித்தனர்பூவைதன்னையே. (௭)

தவமலிகின்றமந்தாரன்மன்றல்செய்
தவளையங்கின்றவாகத்துள்வைத்தனன்
றவலருஞ்சவுனகன்றன்னைச்சார்ந்தனன்
கவலையில்பணிவிடைக்கடன்மைபூண்டனன். (௮)

கவுரவமொடுசிலகாலஞ்சென்றபின்
சவுரருந்தொழுசவுனகனிற்றீர்ந்துமான்
பவுரடமொடுபெரும்பழுவநீந்திப்போ
யவுரவனுச்சிரமத்தையண்மினான். (௯)

ஏந்திள்முலையள்பூப்பெய்திவைகலுஞ்
சாந்திசெய்கடன்கொடுதந்தையாதியோர்
வாழ்ந்திடுமாச்சிரமத்தைநண்ணிய
போந்தனனெறிக்கொடுபொருவில்கானகம். (௧௦)

விண்டிடாத்தொல்வினைவினைவிரண்டையுங்
கொண்டிடுங்காலங்கள்குறுகலாற்புரு
சுண்டிநேரடுத்தனன்றுளைக்கையும்பெரும்
பண்டியுமெதிருறப்பார்த்துநக்கனர். (கஉ)

சயப்புருசுண்டிமாதவனறிந்தன
னயப்படாவெள்ளலினகைத்தநீவிர்க
ளுயப்படுமூலகிலோருயிர்க்குமன்றவே
பயப்படாமரங்களாய்ப்பயில்கவீங்கென்ருன். (கங)

சமியுமங்கவளுடன்சார்மந்தாரனு
மெமியராயிணையடியிறைஞ்சியெம்பிழை
கமியெனவிரந்தனர்காழ்த்தமும்மலந்
துமிபெறுந்தவப்புருசுண்டிகூறுவான். (கச)

எம்முடைத்துளைக்கையுமெழுந்தபண்டியுங்
கொம்மெனநோக்கிமெய்குலுங்கநக்கனீ
ரம்மவித்துளைக்கையுமகடுந்தாங்கிய
செம்மனும்பாலுறிற்சிறந்துநீவிர்கள். (கரு)

தாங்கியமரவுருத்தம்மினீங்குரு
தாங்கவர்க்குரிமையராவிரன்றுதொட்
டோங்கியவுலகமுள்ளளவும்யாவரும்
பாங்கொடுநுங்களைப்பணிந்துபோற்றுவார். (கசு)

அந்தமின்முத்தியுமந்தத்தெய்துவீ
ரிந்தநல்வனத்திடையிருமினென்றுதன்
சுந்தரவனத்தினைத்துன்னப்போயினன்
பந்தநோயகற்றியபடிமமாதவன். (கஎ)

வயங்குமந்தாரன்மந்தாரமாயினன்
றயங்கிளமுலைச்சமிசமியதாயினள்
பயங்கிளர்நாள்பலபாறமாதவ
நயங்கிளர்சவுனகனன்றிதெண்ணினன். (கஅ)

மணந்தவடனைக்கொடுவருவல்யானெனத்
தணந்தவனென்கொலோமீண்டுஞ்சார்ந்திலன்
குணந்தனிலுயர்ந்தவன்கோதினம்பணி
புணர்ந்தவனிடரின்றிப்புறத்துத்தங்குமன். (கக)

அனைத்தையுந்தூதராலறிதும்யாமென
நினைத்தனன்றூதரைநேடவிட்டனன்
மனத்தினுமுந்தியமறுவிறூதர்நல்
வினத்துயரவுரவனிருக்கைசார்ந்தனர். (உ௦)

அந்தணனவுரவனடியிற்றுழ்ந்தனர்
வந்தமந்தாரனெம்மாட்டுளானென
முந்துறவினவினர்முனிவனேதுவான்
சுந்தரமனையொடுதோன்றல்மீண்டனன். (உக)

இற்றைநாள்வரையுமங்கெய்திலான்கொலோ
முற்றநாடுதிரெனமொழிந்துதானும்பெண்
பற்றினற்றூதர்கள்பலரையேவினன்
மற்றவர்வனமெலாமருவநாடினர். (உஉ)

துருவியுங்கண்டிலமென்றுதூதர்போய்
மருவியசவுனகன்மாட்டுரைத்தன
ரருண்மலியம்முனியமலயோகத்தாற்
றெருளுறவிருவர்தஞ்செயலுமோர்ந்தனன். (உங)

அடுபுருசுண்டியையவமதித்தது
நெடுமரமானதுநிமலமாதவன்
முடுகுமும்மதக்கரிமுகவன்காட்சியாற்
படுநலமுறுமென்றபரிசுந்தேர்ந்தபின். (உச)

கூறுமந்தாரனைக்குறித்தம்மாதவன்
வீறுயர்கணேசனைவிளங்கவுள்ளுறீஇ
யாறெழுத்தருண்மனுவறைந்துபல்பக
றேறியவருந்தவஞ்செய்திருந்தனன். (உரு)

அவுரவமுனிவனுமறிந்துதன்மக
ளெரிதழ்ச்சமிநலந்துறுமவெண்ணுபு
தவநெடிதுழந்தனன்சடக்கரந்தனைக்
கவலையினூன்மூறைகைக்கொண்டன்பினால். (உசு)

தவுமியனெனுமவன்றுதைதானறிந்
தவலமிக்குழந்துநல்லாவிமாய்ந்தன
னிவர்தவத்தாண்டுபன்னிரண்டுசென்றுழி
சவுனகமுனியெதிர்தலைவன்றோன்றினான். (உஎ)

வேறு.

மடங்கலூர்தியினையிருமலர்க்கரம்வயங்கக்
கடங்களூற்றியமுகத்தொடுநின்றருள்கணேசர்
தடங்கொடாமரைத்தாளினைச்சவுனகன்பணிந்து
ளிடங்கொளாதபேரன்பினாலிருந்துதிமொழிந்தான். (உஅ)

நெகிழ்ந்தவுள்ளமூநெடும்புனலொழுகியவிழியு
முகிழ்ந்தகையிணையேறியமுடியுமாய்நின்ற
தெகிழ்ந்தமாதவத்தேசினான்செயலினைநோக்கி
மகிழ்ந்துதேவனீவேட்டதென்னெனவவன்வகுப்பான். (உகூ)

நாதனேபுருசுண்டியென்றுரைத்திடுநலத்தோன்
றீதிலாதவன்செயிர்த்திடுசாபத்தாலொழுக்கிற்
கோதிலாதமந்தாரனுங்குளிர்மொழிச்சமியா
மாதுமேவுதம்பெயரொடுமரங்களாயிருந்தார். (௩0)

அறிவிலாதவர்புரிபிழையனைத்தையும்பொறுத்து
நெறியின்மானிடராம்வரநிகழ்த்துகவென்றான்
வெறிநிலாவியகொன்றையும்வன்னியுமிலைத்த
சிறியவாண்மதிவேணியர்செய்யவாய்மலர்வார். (௩௧)

நமதுசாபநம்மருளினாற்றீரினுமன்பர்
தமதுசாபந்தீராதுகாண்சவுனகமுனியே
விமலமாகியபுருசுண்டிவிளம்பியசாப
மமரர்யாவருங்கூடியுமகற்றிடப்படாதால். (௩௨)

அன்னதாயினுநீயெமக்கன்புசெய்தமையாற்
கன்னிமாமரமாமிவர்கலித்தவாறிருந்தே
யென்னமேன்மையுமெய்தாமவற்றிடுநிழலின்
மன்னிவாழ்குதும்யாவருமவற்றையும்வணங்க. (௩௩)

அறங்களாதியாநால்வகையருத்தம்வேண்டினரு
மறங்குலாவுதீவினையினல்வருமிடையூறும்
பிறங்குநோய்களுமிடும்பையும்பெயர்க்கவேண்டினரு
நிறங்குலாவுமந்நீழலினைமைவழிபடுக. (ருச)

பத்தியில்லவராய்ப்பலதிரவியமிலரா
யுத்தமக்குலத்துதித்திலராயினுமுரைத்த
வத்தகுந்தருமலரிலையாலருச்சிப்பின்
மெத்துநற்பயன்வேட்டனநாமவர்க்களிப்பாம். (ருரு)

அரியமாதவச்சவுனகமுனிவனேயறியென்
னுரிமையாலுரைத்தொருமருப்பிருசெவிமுக்கட்
பெரியநான்குதோள்விநாயகன்பேணுமத்தருக்கள்
விரியுநீழலின்வீற்றிருந்தருளினன்மேனாள். (ருசு)

மல்குமாதவச்சவுனகனுதியோர்மலர்கள்
புல்குசாகைமந்தாரத்தின்புதுநிழலிடத்து
மல்குமாசடைவன்னியினடியினுமவைதா
நல்குபூவினுமிலையினுநயந்துபூசித்தார். (ருஎ)

வன்னிமென்மொழிவன்னியையீன்றநற்றாயு
மன்னநீழலிலமலனையருச்சனையாற்றிக்
கொன்னுமாணவப்பகையினைக்கூட்டொடுந்துமித்திட்
டென்னையாளுடையானுலகெய்திவாழ்ந்திருந்தாள். (ருஅ)

தாதையாகியவவுரவன்றண்ணியமதுப்பூங்
கோதைவார்குழற்சமியிடைக்கூர்ந்தபேரன்பா
லூதைவேகத்தையடர்த்திடும்யோகத்தின்வலியான்
மேதையாதிகண்மிடைந்ததேகத்தினைவிடுத்து. (ருகூ)

வாய்ந்தசுக்குமவுருவொடுவன்னியின்கருப்பத்
தேய்ந்துநின்றவிபெற்றுவிண்ணவர்க்கிடுந்தொழின்மை
சாய்ந்திலானதனாற்சமிகருப்பனென்றவனை
யாய்ந்துளாரெலாமறைந்தனராரணங்கனையாய். (சo)

பல்லிதழ்ச்சிறுபாசறுகிலாக்குறைநிரப்பு
மல்லலங்குளிர்நீழன்மந்தாரத்தின்மலர்கள்
சொல்லுகின்றனவிரண்டியில்வழித்தொகுகுறையு
நல்லவன்னியின்மெல்லிலைநலத்தகநிரப்பும். (சக)

ஆகையானுமைந்தொழில்புரியாவொருகூறு
யோகைமாமகந்தனக்குரித்தானவொள்ளழலே
சாகைதோறுநின்றமர்தலினானுமச்சமிதான்
றோகைநேர்மடவாயெவற்றினுநலந்துறக்கும். (சஉ)

கொன்னுமாணவமாயைகாரியங்களைக்குமைத்து
மன்னும்வீடருண்மழவிளங்களிற்றிறைமுடியிற்
றுன்னுபாசடைவன்னியின்றுகளறுமேன்மை
யின்னுங்கேளெனவியம்புவானிருங்கிருச்சமதன். (சஙு)

சமிமந்தாரவுற்பத்திப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உகூசo.



## ௩௰ - வது தேவர்கள்சாபந்தீர்த்தபடலம்.

காவித்தடங்கட்பணைபொருதோட்காயத்திரியையுடன்கொண்டு
சாவித்திரியைமனையிருத்திசசையவரைச்சாரலினண்மி
யாவித்துணையாகியவெண்டோளமலானந்தப்பெருவாழ்வைப்
பாவித்தினியமகமொன்றுபண்ணத்தொடங்கினான் மறையோன். (௧)

பிள்ளைமதியும்வெள்ளறுகும்பிணைந்தசடிலத்தேரம்ப
வள்ளல்கமலமலர்த்தாள்கள்வழிபாடாற்றாதியற்றுதலாற்
றள்ளுமிடைப்பூணிளங்கொங்கைச்சாவித்திரிகேட்டுளமழுங்கி
விள்ளற்கரியவெகுளியொடுவேள்விச்சாலைசென்றடுத்தாள். (௨)

செந்தாமரைக்கண்ணரிமகவான்றேவர்முதலாங்குழுவினர்த
நந்தாமகிழ்ச்சிமுகநோக்கிநறைகொப்பளிக்குமிதழ்நாளத்
தந்தாமரையானெனைநீக்கியாற்றும்வேள்விக்குடனிருந்தீ
ருந்தாகின்றநீர்வடிவாயுறுவீர்வெவ்வேறெனச்சபித்தாள். (௩)

செழித்தமுனிவர்மணிமோலித்தேவர்முதலாவனைவோருங்
கொழித்தவெகுளிச்சாபத்தாற்குளிர்நீராகிவெவ்வேறாய்ச்
சுழித்துத்தரங்கத்திரள்பரப்பித்துடவையிழுதுசொரீஇவேள்வி
யழித்தங்குள்ளபலபொருளுமங்கத்தழுவியொழுகினரால். (௪)

உரிமைத்தலைவர்புனல்வடிவாயொழுகுஞ்செயல்கேட்டுளம்பதறி
யரிமைத்தடங்கட்கமலைமுதலமரர்மகளிரனைவோருங்
கரிமத்தகத்தினரிதாக்கக்கலங்கலெனவீழ்ந்திளநிலவு
விரிமுத்திறையும்பொழிற்சையவெற்பின்விரிஞ்சன்றனையடுத்தார். (௫)

குண்டத்திடைதீவளர்ப்பாய்போற்கொதித்துத்தணியாவெகுளித்தீ
மண்டக்குடிமாதிருவிழியின்வளர்த்துத்தமியேமுதரத்தீக்
கெண்டிக்கெழுமவளர்த்திட்டாய்கேடிலாதாயதுவன்றி
யண்டர்க்கரியபுனல்வடிவமளித்தாயினிப்போக்குரையென்றார். (௬)

இனியமொழியங்கவர்க்கெல்லாமியம்பியினிச்சற்றிருமின்கள்
புனிதமகளிர்காணுங்கள்புலம்புதீர்த்துமெனநாடிக்
கனிமென்மொழியாள்பாகத்துக்கடவுளாரையுளத்திருத்தி
நனிமெய்த்தவத்தினினிதிருந்தானாதரவன்முன்றோன்றினார். (௭)

திமிலமறைகண்முறையிட்டுந்தேடித்திரிந்துங்காணாதா
ரிமிலின்விடையேற்றிடையுமையோடெதிரேநிற்பக்கண்டெழுந்து
சிமிலித்துயிர்க்கங்காந்திவருந்தேவன்மகன்மென்மலர்தூவித்
துமிலப்படைப்போர்க்காலனுயிர்தொலைத்தமலர்த்தாள்பணிந்திரந்தான். ()

ஆபவடிவமமரருக்கிங்ககலவருளாயெனும்பதும
நாபன்மகனைமுகநோக்கிநங்கைபாகரைங்கரத்தோன்
கோபமகலப்பூசைபுரிகுயிற்றிற்பூசைமுன்பிறந்த
சாபம்வருவதிலைவேள்விசழங்கலிலையென்றுரைத்தொழிந்தான். (௯)

நட்டப்பெருமானருள்வணங்கிநலியுமிடும்பைக்கடனீந்தி
வட்டக்கமலத்தவிசிருந்தோன்மகளிர்தமைப்பார்த்திருஞ்சாபம்
விட்டுப்பறியநுங்கணவர்மேவுங்காலமடுத்ததளத்
தொட்டிக்கணேசர்பூசனையையுஞற்றுவீரென்றுரைத்தொழிந்தான். (௧௰)

கவலையொழிந்தாமெனமகிழ்ந்துகடவுண்மகளீர்பொழினறுந்தேன்
றிவலைபொழியுங்கருநாடதேயத்திலோர்மந்தாரத்திற்
சவலையனந்தீர்தாசரதிதாபித்தரக்கர்தமைசெய்தோர்த்
துவலைபொழியப்பொருதழிப்பத்தொழும்வக்கிரதுண்டனையடுத்தார். (௧௧)

கனிகணுகர்ந்துமிலைநுகர்ந்துங்கமழ்நீர்நுகர்ந்தும்வளிநுகர்ந்தும்
பணிமென்புனலினைந்தழலிற்பயின்றுஞ்சிலர்மாதவம்புரிந்தார்
புனிதமலராதிகளீட்டிப்பூசைபுரிந்தார்சிலர்சில்லோர்
துனியிலிறைவன்பெயர்கணித்தார்தொழுதார்சிலர்கள்சிலர்துதித்தார். (௧௨)

இவ்வாறாகிப்பணிவிடைசெய்திணர்மந்தாரத்தடியிருந்த
வவ்வானவர்தம்பெருமானுக்கன்புபுரிந்துவருநாளிற்
செவ்வாய்மகளிரனைவோருந்திரண்டுபலநாள்கழிந்துமருள்
பைவாளரவமரைக்கசைத்தார்பகர்ந்தாரிலையென்னெனத்தளர்ந்தார். (௧௩)

தளர்ந்துவருந்துமமையத்துத்தனிவானிடையேயொருவாக்குக்
கிளர்ந்தசமியின்பச்சிலையாற்கேடிலாதவிநாயகர்க்கு
வளர்ந்தவுழுவலாற்பூசைவகுத்துப்புரிமினெனக்கேட்ட
வுளர்ந்துசுரும்புநறவருந்தாவொலியற்குழலாரதுபுரிந்தார். (௧௪)

சின்னாட்சமிபத்திரங்கொண்டுதிருத்தாண்மலரிற்பூசிப்ப
வென்னாணவத்தின்குறும்பெறிந்தவிறைவன்பெருஞ்சாளியைக்கடவி
முன்னாயெதிர்நின்றடித்தலத்தின்முடிசாய்த்திறைஞ்சுமகளிருக்குத்
தன்னாதரவின்வரமுதவிச்சலமாம்வடிவஞ்சுரர்க்கொழித்தார். (௧௫)

வரங்கள்கொடுத்தவிநாயகனார்மறைந்தபின்புவானவர்க
ளிரங்குங்களிவண்டுளர்ந்துழக்குமிரைமந்தாரத்தருநீழலிற்
றிரங்கவரும்பல்லிடர்களையுந்தேவனுருவந்தாபித்துக்
குரங்குமிணர்ச்சாகையின்வன்னிக்குளிர்மென்றளிராலருச்சித்தார். (௧௬)

முந்தைமறையின்பலதுதிகண்மொழிந்துதாங்கள்பூசித்த
வெந்தைபெருமாற்கேரம்பனெனும்பேர்நாட்டிவானவர்க
டந்தமுலகம்புக்கிருந்தார்தவளக்களிற்றுப்பெரும்பாக
னந்தவுலகின்மந்தாரத்தடியுமிருத்திப்பூசித்தான். (௧௭)

தத்தமனையின்மந்தாரந்தழையவளர்த்தாங்கதனிழலின்
மத்தமதமால்களிற்றுமுகவரதனுருவந்தாபித்துப்
பொத்துமுளத்தன்பாலேனைப்புலவோர்பலரும்பூசித்தார்
பத்தியொடும்பன்னிரண்டாண்டுபரமேட்டியும்பூசனைபுரிந்தான். (௧௮)

நறைபில்கிணர்மந்தாரத்தினாட்டிச்சமியாற்பூசித்த
விறைவனருளாற்றன்மனைவியென்னுஞ்சாவித்திரியுள்ளக்
குறையைநிரப்பியுடன்கொண்டுகோதிலாதபெருவேள்வி
நிறையவியற்றிக்களிகூர்ந்துநீடுந்தனதுபதியடுத்தான். (௧௯)

பாலைநிகர்த்தமொழியாயிப்பரிசாஞ்சமியின்பெருமைபல
நூலையறிந்தமாதவர்கணுவலுந்தோறுமிகவளருங்
காலையெழுந்துபுலையர்களுங்காணினதனைமறுபிறப்பின்
வேலையனையபாதகமும்வீட்டிமறையோர்குலத்துதிப்பார். (௨0)

மறையோர்காணின்வேதாந்தவாய்மைப்பொருளைமிகத்தெளிவர்
முறையாள்வேந்தரெதிர்காணின்முற்றுமுலகந்தாட்படுப்பர்
நிறையார்வணிகர்தாங்காணினிறைந்தசெல்வக்கடற்குளிப்பர்
கறைதீர்நாலாம்வருணத்தோர்காணின்மேலாங்கதியடைவர். (௨௧)

வன்னித்தளிரானீயின்னும்வாதனடியினருச்சனைசெய்
தன்னிச்சிறந்தவிழைவனைத்துமுறுவாயென்றுகிருச்சமதன்
பன்னிப்பிரியுமமையத்திற்பரிவான்மீட்டுமெதிர்வணங்கிக்
கன்னிக்கடவுட்கற்புடையகாமர்கீர்த்தியிதுசொன்னாள். (௨௨)

அடியேன்சிறுவனிவர்கிடையூறடராதிருப்பவெவ்வுலகுங்
கடியாதேவல்புரிகிற்பக்கணேசர்திருமந்திரமொன்றை
யொடியாக்கருணைமாதவத்தோயுரைத்தற்கெளிதாப்பயன்விரைவிற்
றொடியார்கரத்தினருளுவதாசசொல்லவேண்டுமெனவிரந்தாள். (௨௩)

மதுரப்புனலினினிதாடிமைந்தன்வருமாபுரிந்தவற்குச்
சதுரக்கரத்தைமொழிந்துமுறைதனையுங்கிளந்துகிருச்சமதன்
கதுவப்பவந்தீரவிமுத்தக்காமர்தலத்தின்வீற்றிருந்த
விதுவைச்சடைவைத்தருடுண்டிவிமலர்ப்பணிந்தெண்ணுகவென்றான். ()

அருளுந்துண்டிவிநாயகனாரமர்ந்தகாசித்தனிநகரின்
பெருமையருளவேண்டுமெனப்பெயர்த்துங்கீர்த்திவணங்கினா
ளொருவிப்பொறியைந்தையுந்தவமேயுஞற்றுங்கிருச்சமதனவட்குப்
பொருவிலந்தநகர்ப்பெருமைபொற்பத்தொகுத்துத்தெருட்டுவான். (௨௫)

தேவகர்ள்சாபந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௨௬௬௫.



## ௬௧ - வது கிப்பிரப்பிரசாதனன் வரம்பெறுபடலம்.



பிறப்புநான்கவற்றெழுவகைத்தோற்றமப்பேதத்
திறப்பவெண்பத்துநான்குநூறாயிரமென்ன
விறக்கும்யோனிபேதங்களன்னவற்றுண்மெல்லியலாய்
சிறப்பமானிடப்பிறவியிற்சிவனாதலரிதே. (௧)

செப்புமானிடமாய்த்திகழ்கின்றபல்பவத்து
ளொப்பிலாதநால்வருணத்திலுதித்திடலரிதே
பப்புநால்வருணத்துளும்பனவராய்ப்பிறத்த
றுப்புநேரிதழ்த்தூமணிமுறுவலாயரிதே. (௨)

அந்தணாளர்கடம்முளுமறிவுடையவராய்
வந்துதோன்றுதலரிதுவாலறிவுடையவருட்
பந்தபாசங்கணீத்திடும்பரமஞானத்தா
லெந்தைபாதத்திலிணங்குநராகுவதரிதே. (௩)

இன்னவாறுதித்துயரியல்பாளரேயன்றிச்
சொன்னயோனிகளனைத்துநோயாளர்துன்மதியான்
மன்னுதீநெறிநடப்பவருறுப்பிலார்மற்று
நன்னர்வீடுறவிச்சுவநாதனார்நாடி. (௪)

அனந்தமூர்த்தியாய்த்தீர்த்தமாயளவிலாத்தலமா
யனந்தனேந்தியவுலகெலாமமர்ந்தனர்தாமே
யனந்தமாமவைமூவகையுளுமரும்பயனான்
றனந்தமாகவோர்மூர்த்திதீர்த்தந்தலமானார். (௫)

சிறந்தமூன்றுமாவனதிகழ்விச்சுவலிங்கம்
வறந்திடாமணிகன்னிகையவிமுத்தமென்னப்
பிறந்தநானிலத்தவரெலாம்பேசிடப்படுவ
மறந்தவாதவேன்மருட்டியமதர்நெடுவிழியாய். (௬)

அந்தவிச்சுவலிங்கரையயனரியரனும்
வந்துபத்தியிற்பூசித்தவணங்கியெவ்வுலகுந்
தந்திடுந்தொழிலளித்திடல்சங்கரித்திடுத
லிந்தமுத்தொழிலொடுவரம்யாவையும்பெற்றார். (எ)

இந்திரன்முதலெண்மருமேனைவானவரும்
வெந்திறத்தவல்லரக்கரும்வெய்யதானவருஞ்
சுந்தரச்சுடிகையின்மணியுரகருந்தொழுது
தந்தமக்குறுபதங்களிற்சார்ந்தனர்மேனாள். (அ)

அண்ணலாகியவிச்சுவநாதனையடுத்தங்
கெண்ணின்மாதவமுன்னொருகாலத்திலியற்றி
நண்ணுமாதவனம்பிரான்றிருமுடியாட்டத்
தண்ணெனீர்படுதடாகமொன்றகழ்ந்துறச்சமைத்தான். (௯)

உரகர்பாதலமளவுமாழ்ந்தொளிருமத்தடாகம்
விரவுதீர்த்தத்தின்விச்சுவநாதரையாட்டிப்
பரவிநாரணனத்தடங்கோட்டினிற்பயின்று
கரவிலாதமாதவம்புரிந்திருக்குங்காலத்தில். (௧௦)

மாயையென்றவர்மனத்திடைமாறியேநடிக்கும்
வேயையென்றதோட்குவிமுலைவிமலைதன்னொடுமால்
சேயையென்றவன்சேவின்மேற்றிகழ்ந்தலர்பூவை
வீயையென்றவற்கருளியவிண்ணிடைநின்றான். (௧௧)

செம்மலாரெதிர்நின்றமைதெரிந்துளநெகிழ
விம்முவால்வளைக்கையினன்மெய்தெழுந்தொன்றுந்
தம்மைநேர்வருந்தாட்டுணைத்தலத்திடைவீழ்ந்து
சும்மைமாமறைதுதித்தனன்சோனைமாமழைபோல். (௧௨)

உழுவலன்பையுந்தவத்தையுமொருங்குறநோக்கித்
தழுவுதண்ணருட்டலைவனர்சடைமுடியசைத்தார்
வழுவில்செஞ்செவியுரககுண்டலத்தொளிர்மணிவிட்
டழுவமென்புனற்றடாகத்தின்விழுந்தழுந்தியதே. (௧௩)

ஆதலான்மணிகன்னிகையெனும்பெயரதற்காந்
தீதிலாதவத்தீர்த்தம்பின்பகீரதன்றேர்ப்பின்
போதுவான்பெருங்கங்கைபாய்ந்தேகமாய்ப்புவனத்
தேதநீத்திடும்பகீரதியெனவிலகியதே. (௧௪)

அழுந்துபட்டவத்தீர்த்தத்தினமர்பலவுயிருங்
கொழுந்துபட்டமென்கொடிகளுந்தருக்களுமதனில்
விழுந்தபட்டவென்புடையபல்லுயிர்களும்விரிநீ
ரெழுந்துபட்டவெவ்வுயிர்களுமிருங்கதியடையும். (௧௫)

எங்குமாகியவிறைவனீங்காதமர்தலினு
லங்குவானவர்முனிவரரமர்ந்திருக்கின்றார்
திங்கள்சூடிநேர்தெய்வதங்கங்கைநேர்தீர்த்தந்
தங்குகாசிநேர்தலங்களுமில்லைதாழ்குழலாய். (௧௬)

சாற்றுகாசியில்விச்சுவநாதர்சந்நிதியிற்
றோற்றிநின்றருடுண்டிவிநாயகர்மலர்த்தாள்
போற்றிவானவர்வன்னிமந்தாரம்புல்லறுகு
மேற்றிநீண்முடிப்பண்முறைவரங்கள்பெற்றிருந்தார். (௧௭)

இந்தநல்விதியாசமுன்னேந்திலைவேலான்
விந்தவெற்படக்கியமுனிகேட்டிடவிரித்தான்
பிந்தைநாரணன்காசிபற்குரைத்தனன்பெண்ணே
சிந்தைதூயைநீயாதலிற்செப்பினாநினக்கே. (கஅ)

ஆங்கடுத்துமந்தாரத்தாலறுகினாற்சமியாற்
றாங்குநீள்கரத்தண்டிவிநாயகன்பதத்தி
லோங்குபூசனைபுரிந்துநாலெழுத்தையுமுரைத்துத்
தாங்கிநல்வரஞ்செல்கெனச்சாற்றினன்போனான். (க௯)

அப்பெருந்தவனகறலுமகமகிழ்கீர்த்தி
கிப்பிரப்பிரசாதனனொடுகிளரான்பின்
முப்புரம்பொடிபடுத்தவன்முதுநகர்க்காசி
வைப்பினிற்புகுந்திரைக்குமந்தாகினியாடி. (உ0)

நன்றுதண்டிவிநாயகனற்பதம்வணங்கி
யன்றுபட்டினியாய்த்துயினீத்தங்குச்சிலநாண்
மன்றவைகுழிமாசிமாமதியிற்பின்பக்க
மொன்றங்காரகசதுர்த்தியாமொருதினமடுப்ப. (உக)

தூயவத்தினங்காலையிர்சூழ்கடன்முடித்துப்
பாயவன்னிமென்னிழலிருந்தருண்மனுப்பகர்ந்து
மேயசந்திரவுதையத்தின்விநாயகபூசை
யாயவன்னையோடாற்றினனரசிளங்குமரன். (உஉ)

தூர்வைவன்னிமந்தாரமுந்துகளில்பல்பொருளு
நார்வளர்ந்திடுமுளத்தொடுநன்குறவீட்டிச்
சீர்வளர்ந்திடுபூசனைசெய்துமுற்றியபி
னேர்வளர்ந்திடுதியானஞ்செய்திருந்திடுமளவில். (உங)

சிங்கவூர்தியிற்றேசுமிழ்திருமுகமைந்துந்
துங்கமாகியவையிருபுயங்களுந்துலங்க
வெங்கணாயகனெதிருறத்தோன்றினனெழுந்து
தங்குகீர்த்திதன்மகனொடுஞ்சார்ந்திதுசாற்றும். (உச)

தேவர்நாயகதண்டிவிநாயகதிகழ்ந்த
மூவர்நாயகமுதலிலாமுதல்வநின்காட்சி
மேவலாலடியேங்களேவிழுத்தவமுடையேம்
பாவம்யாவையுநீங்கினம்பயனெலாம்பெற்றேம். (உரு)

நினதுபேரருட்டிறத்தினானிலைபெறவுதித்த
வெனதுகான்முளையாகியவிவனுக்கென்மாற்றா
டனதுசூட்சியாலூட்டியதழல்விடமுனிவ
னுனதுபேரருளாலொழித்துயிரினைக்கொடுத்தான். (உசு)

எற்றைஞான்றுமிவ்விளவலோரிடருமெய்தாமன்
முற்றுமாயுளுங்கல்வியுஞ்செல்வமுமுதன்மை
பற்றுமேன்மையும்பகைக்குலமேவல்செய்பரிசுந்
துற்றுபோகமுந்தவன்றிவாழ்வரந்தருகென்றாள். (உஎ)

ஆள்விநாயகராயிரம்வருடமண்ணிருந்து
வேள்வியாயிரம்புரிந்துநீவேண்டியவரமுந்
தாள்விடாதுபெற்றந்தத்திற்றத்துவஞானங்
கேள்வியாலவனமையடைவாயெனக்கிளந்து. (உஅ)

அரசர்தானவர்வானவர்வெருள்பரசளித்துப்
பரசுபாணியென்றொருபெயர்சிறுவர்க்குப்பகர்ந்து
கரசரோருகத்தங்குசங்கலந்தருணுதன்
விரசுமூர்த்தியின்முன்புபோய்மேவிவீற்றிருந்தான். (௨௯)

மைந்தனோடுபின்கீர்த்திவைகறைப்பொழுதெழுந்து
கந்தமென்மலர்க்கங்கைநீர்களிப்புறத்தோய்ந்து
முந்துதுண்டிவிநாயகன்முளரிமெல்லடியிற்
சிந்தையன்பொடுபூசனைமறுவலுஞ்செய்தாள். (௩0)

விடைபெற்றந்நகர்க்காசியையரிதுவிட்டேகி
யடையும்பல்வகைக்கானமரருநெறிநீந்தி
யுடையதன்னுயிர்நாயகனுறைகன்னபுரியின்
புடையடுத்தனள்பொருவிலாப்புத்திரனோடு. (௩௧)

முழவுகண்படாக்கடைத்தலைமன்னன்முன்னறிந்து
மழவிளங்களிறனையதன்மகனொடுங்கீர்த்தி
விழவுமல்கவிந்நகரிடைமேவுமாபுரிகென்
றழகுமல்கியவமைச்சராதியர்தமைவிடுத்தான். (௩௨)

தரைசெய்புண்ணியப்பயனிங்குச்சார்ந்ததென்றவர்கள்
விரைசெய்பூமணியாதியால்வீதிகள்புனைய
வுரைசெய்தெண்ணில்பல்வரிசையினொடுமெதிர்கொள்ளப்
புரைசைமால்கரிச்சிவிகையூர்ந்திருவரும்போந்தார். (௩௩)

கனகமாளிகைக்கோயிலையடுத்தனர்களிப்பி
னனகனாகியவரசனையடிமலர்பணிந்தார்
வனசநேர்கையின்மைந்தனைத்தழீஇக்கொடுமன்னன்
வினவினானுறுகீர்த்தியைவிளைந்தனமுழுதும். (௩௪)

அளவளாவியங்கனைவருமுடங்குவாழ்ந்தமர்நாள்
விளரிலாதவேன்மன்னவன்விளங்குதன்மகன்றோள்
வளநிலாவியநிலப்பொறைநிறீஇவனத்திடைப்புக்
குளமெலாம்பரிசுத்தமாமுறுதவம்புரிந்தான். (௩௫)

சவிசிரப்புநன்மணியினாற்கணேசனைச்சமைத்துச்
செவிசிரப்பியகேள்வியான்றிகழ்களத்தணிந்திட்
டவிசிரப்புறும்வேள்வியாயிரம்புரிந்தொளிகள்
புவிசிரப்பியாண்டாயிரம்பொற்பவாழ்ந்திருந்தான். (௩௬)

இறுதிமேவலுமேரம்பன்றிருவருட்டிறத்தான்
மறுவிலாதபொன்விமானம்வந்திடவதினிவர்ந்தங்
குறுவிநாயகனுலகமுற்றனேககற்பங்கண்
முறுகுபோகத்தின்மூழ்கிமுத்தியுமடைந்தனனால். (௩௭)

வன்னியைங்கரற்குரிமையானதுமதன்வரமும்
பன்னினுமலைமாதராய்பரவுறுங்கணேசன்
றன்னொடெம்மைநீவேறெனச்சற்றினிநினைய
லன்னவற்குரித்தாமதுநாமுமேலணிந்தாம். (௩௮)

மறைவலாளர்சாயுச்சியமன்னர்சாரூப
முறையுநாய்கர்சாமீபமொண்சூத்திரர்வளங்க
ணிறையநின்றசாலோகமுநீடுறவடைவா
ரறையும்வன்னியாலருச்சனையாற்றினரணங்கே. (௩௯)

என்றுநாயகன்வன்னியினியல்பினையுமையாட்
கன்றுகூறினனுதலாலறுகுதவாதே
னன்றுவன்னிமந்தாரத்தானுதனுர்தமக்கங்
கொன்றுபூசனைபுரிகவென்றுரைத்தனன்பிரமன். (௪0)

க்ஷிப்பிரப்பிரசாதனன் வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௭0௫.

## ௯௨ - வது கிருதவீரியன்மகப்பெறுபடலம்.

மடலவிழ்பங்கயத்தவிசின்வானவன்சங்கடசதுர்த்தித்
திடமுறுமேன்மைகள்பலவுந்தெளியவுரைத்திடக்கேட்ட
கடவுளனுமொருபிதிரன்கைதொழுதுவிரதத்தை
நடவியபின்முடிக்கும்வகைநவிற்றுகெனவவனவில்வான். (௧)

தொடங்கியதிங்களினுதன்முடங்கியதிங்களுக்கைந்தா
மிடங்கொளுந்திங்களினுதன்மேலெழாந்திங்களினுத
லடங்குசதுர்த்தியிற்கலசமறைந்தபடிதாபித்துத்
தடங்கலசமிசைத்தட்டந்தனையிருத்தித்துகில்விரித்து. (௨)

எந்திரம்வைத்ததன்மேலேயேரம்பன்றிருவுருவஞ்
சந்திரத்தார்சித்திபுத்திதங்களுடன்சமைத்திருத்திப்
பந்தமறப்பூசித்தப்பரிந்துகுரவனுக்குவந்த
வெந்திரமூர்த்தியையுமீந்திடுதல்விதியாகும். (௩)

ஒருபதினாயிரமையாயிரமோராயிரநூற்றெட்
டிருளறுக்குமாகுதியுளென்றனமாதிரம்புரிந்து
கருமையுறுமெட்குறுணிகாதலொடுந்தகக்கொடுத்துப்
பொருவில்பசுமுதலானபொருளுடையோன்கொடுத்திடுக. (௪)

எழுமூவரந்தணருக்கின்னடிசிலினிதூட்டி
முழுதாளுமேரம்பமுன்னவனைத்தியானித்து
வழுவாதவவர்சேடம்வாஞ்சையொடுநுகர்ந்திடுக
பழுதோடவிரதத்தின்பயன்றருநன்முடிவிதுவாம். (௫)

நண்ணியவிவ்விரதத்தைநகமடந்தையறுதிங்க
ளெண்ணமுறப்புரிந்திறைவரிடப்பாகதொன்றானு
டிண்ணியவெற்படக்குமுனிதிங்களொருமூன்றாற்றிக்
கண்ணியதண்கடன்முழுதுங்கையடக்கியாய்மடுத்தான். (௬)

மதிநான்குதகச்செய்துவனத்தொழித்தநளன்மீண்டு
பதிபோகத்தமயந்திபருவரற்றுன்பினைநீத்தாள்
விதியோடொருவைகலவியதக்குகண்ணன்புரிந்து
துதியாருந்திறல்வாணன்றோல்வியுறப்பொருதழித்தான். (௭)

இடையூறுவருந்தோறுமிறந்திடுமுன்காலத்தும்
விடையாகியீச்சுரனைவெரிந்புறந்தாங்கியமாலுந்
தொடையார்வச்சிரத்தடக்கைத்தோன்றலும்யாவரும்யானு
முடையான்சங்கட்டசதுர்த்தியுஞற்றிநலமுற்றேமால். (௮)

கள்ளாறுகான்மடுக்குங்கடுக்கைமலர்த்தொடைநாளுந்
தள்ளாதுமுடிக்கணியுந்தந்திமுகன்விரதம்போல்
விள்ளாதபெரும்பயனைவிளைக்குமொருவிரதமில்லை
பிள்ளாய்நன்றறியென்றுபேசினனான்முகப்பெருமான். (௯)

என்குலமுமெளியேனுமினிதுய்ந்தேமெனத்தாழ்ந்து
நன்குளத்தப்பிதிர்ந்தேவனல்விடைபெற்றேரம்பன்
றன்குலச்சங்கடசதுர்த்திமுதலாகச்சதுமுகத்தோன்
கொன்குலவவுரைத்தவெலாங்கொண்டொருபுத்தகத்தெழுதி. (௧0)

சினவத்தியினந்திரியுஞ்செறிகானத்திருந்துதவ
மனவத்திமடக்குறச்செய்மகன்கிருதவீரியன்பாற்
கனவத்தினடுத்திருந்துகாதலொடுமளவளாய்
நனவத்திற்பயனாகநல்கியதையிதைச்சொன்னான். (௧௧)

இத்தகுபுத்தகந்தன்னுளேரம்பனொருவிரதம்
வைத்திருக்குமிதுதன்னைவல்லமறையோர்வாயாற்
பத்தியொடுங்கட்டிருந்தபடிவிரதமனுட்டிப்பிற்
புத்திரனுண்டாமுனக்குப்புதல்வவெனப்புகன்றகன்றான். (௧௨)

விழித்தனன்றந்தையைக்காணான்மெலிந்தனனங்கேகரத்திற்
செழித்தமணிப்புத்தகத்தைத்தப்பியமோடெதிர்கண்டான்
கழித்தனன்றன்னுளமழித்தகவலையும்பாதகத்தொடக்கும்
பழித்தபகைஞர்கள்பழியும்பரிவும்வருத்தமுமனைத்தும். (௧௩)

ஒருங்கிருந்தமனைமாதுக்குற்றதனையுமுரைத்து
நெருங்கியகானகநீங்கிநீண்டபதியினிதேகி
மருங்கடுத்தவமைச்சருக்கும்வாய்மைதெரிந்தந்தணர்பா
லிருங்கடவுட்புத்தகத்தையீந்தரசன்வினயினான். (௧௪)

பூப்பசுந்தண்டளிர்கொண்டுபூசித்தப்புத்தகத்தின்
காப்பொருவிவாசித்துக்காவலனேயிதுதன்னின்
மூப்பிளமையில்லாதான்மூத்தமகன்விரதத்தின்
கோப்பனைத்துமிருந்ததிதுகூறினனான்முகனென்றார். (௧௫)

எவ்விடத்துமிதுகாறுமிவ்விரதங்கேட்டிலே
செவ்வியநின்றவலியாற்றெரிந்தனம்யாங்களுமின்றென்
றவ்வியமிலுளத்தொடுமாங்கமுகவர்மனுங்கலந்து
கவ்வியமெய்யன்புளத்துக்காவலன்கைக்கொடுத்தகன்றார். (௧௬)

கத்திரிநேர்வடிகாதிற்கார்முகநீணுதற்சங்கின்
முத்திரிவாணகையுமையாண்முதல்வனாரடித்தொழும்பி
னத்திரிமாதவனென்னுமாசிரியன்றனையழைத்துப்
பொத்திரிகாதவினரசன்போற்றினன்சங்கடசதுர்த்தி. (௧௭)

வேறு.

அருத்தியினேழாந்திங்களடைவுறமுடித்தவீங்குஞ்
செருத்தலானையுதமேனைச்செறிபொருள்பலவர்தூய்மைக்
கருத்துறுமறையோர்க்கீந்துகாவலன்வாழுநாளி
லருத்தகுமனையாள்கற்பினோண்டொடிகருப்பமுற்றாள். (௧அ)

திங்களொன்பானுஞ்செல்லச்சிறுவனையீன்றமாது
சங்கமுங்கரமுமில்லாத்தனையன்மேலானவேனை
யங்கங்கணிரம்பிச்சாலவழகெறித்திடுதனோக்கிப்
பங்குவந்தெமதுடங்கிற்பலித்ததோவென்றுளைந்தாள். (௧௯)

புரந்திடுங்காவன்மன்னன்பொள்ளெனவடுத்துநோக்கி
யரந்தையுற்றழுங்கிப்பின்னரைங்கரன்விரதமாற்றி
யிரந்திடலுந்தமைந்தனிவனிடரவனைதீர்க்கும்
பரந்தழியாதியென்றுபாரியையினிதுதேற்றி. (௨0)

விழைவொடுசாதகன்மம்விதியினாலியற்றிவேதந்
தழைதருமந்தணாளர்தடங்கையின்மணியும்பொன்னு
மழையெனச்சொரிந்துதாம்மாதரைவாட்டும்வார்விற்
கழையவனிகருஞ்சேய்க்குக்கார்த்தவீரியனென்றிட்டான். (௨௧)

பருவரலுழக்குஞ்சேய்க்குப்பன்னிரண்டாண்டுமேவத்
திருமலிமனையிற்றத்தாத்திரியன்வந்தடுத்தலோடுங்
கிருதவீரியன்மெய்யன்புகிளர்தரவெதிரேசென்று
மருமலர்ப்பதத்திற்றாழ்ந்துவணங்கிவிண்ணப்பஞ்செய்வான். (௨௨)

உடையவவடியேன்பன்னாறுபெருந்தவங்களாற்றிக்
கடைவயிற்பெற்றமைந்தன்காலொடுகரங்களின்றி
யடையலர்நகைக்கவந்தானாற்றியவிரதந்தன்னு
ளிடைவருகுற்றம்யாதோவின்னதென்றறிந்திலேனே. (௨௩)

மைந்தனில்லாமற்பன்னாள்வருந்தினேன்மைந்தன்வந்துஞ்
சிந்தையின்வருத்தஞ்சற்றுந்தீர்ந்திலதென்னசெய்கே
னந்தணகருணைவைத்திங்கவன்முடநீங்குபாயந்
தந்திடல்வேண்டுமென்றுதளர்வொடுமிரந்துநின்றான். (௨௪)

முனைவனங்குவந்துபார்த்துமுடிசெழுவேந்தனேநின்
றனையனைப்பார்க்கவேநாஞ்சார்ந்தனங்கொணர்கவென்றா
னனையனுமுன்னருய்த்தானறிவனைச்சிறானைநோக்கி
யினையலையிறைவநாவனெனத்தெளித்திதனைச்செய்தான். (௨௫)

மறுவிலாவெழுத்தினாயமந்திரத்தீக்கையாற்றிச்
சிறுவனஞ்செவியிலோதித்தீர்த்தனன்முனிவர்கோமான்
கிருதவீரியனைநோக்கிக்கிளர்மைந்தன்வனத்திலென்னை
யுறுவிமந்திரத்தையெண்ணியுயர்வரம்பெறுதற்கென்றான். (௨௬)

பரிசனத்தவரைக்கூட்டிப்படர்பெருங்கானிற்செல்ல
வரிசையின்விடுத்தான்றனைமைந்தனும்வனத்தின்வைகிக்
கரிசறவுணவுவிட்டுக்கணேசனைக்கருத்தானுன்னித்
தருசிறுபொறிகளோம்பித்தனிமனுக்கணித்தல்செய்தான். (௨௭)

பன்னிரண்டாண்டுசெல்லப்பணைக்கைமாமுகத்துச்செம்மன்
மன்னவக்குமாரனோற்கும்வைப்புறந்தடாகத்தண்ணீர்
தன்னிடைநின்றுந்தேவர்தம்புடைசூழத்தோன்றி
முன்னெதிர்நின்றான்கண்டுமுடவனுள்ளகத்தாற்றாழ்ந்தான். (௨௮)

கடவுளர்பெருமானோக்கிக்கருதியவரங்கேளென்றான்
முடவனென்முகத்தைநோக்கிமுற்றுநீகாக்கவென்றான்
மிடல்படுமிரண்டுதாளும்வியன்கையாயிரமுமேனைத்
திடமுறுவரமுநல்கித்தேவர்கடேவன்சென்றான். (௨௯)

எம்பிரானோடங்குற்றவிதழ்விரிகமலனாதி
யும்பராரவனைநோக்கியொருகற்பகாலமாயுள்
பம்பவாழ்ந்திதமேயார்க்கும்பயிற்றியொன்னாரையெல்லாம்
வெம்புவாளிகளானூற்றால்வெல்கவென்றருளிப்போனார். (௩௦)

வரங்கள்வந்தருளினாதன்மறையுமுன்மன்னன்மைந்தன்
கரங்களாயிரமுங்காலுங்கதுவரநோக்கிநோக்கி
யிரங்கியகருணையுன்னிப்புளகிநெஞ்சுருகக்கண்ணீ
ருகக்கலந்தொழுதவாக்கியுலப்பிலானன்பிற்றாழ்ந்தான். (௩௧)

அணங்குறுமிப்புலைமாதையணங்குறக்கிவிமானத்தி
லிணங்குறவேற்றினையென்றும்பரம்பனேவல்புரி
கணங்களுரைத்தமைகேட்டுக்கைதொழுதுகாவலன்றன்
குணங்கடவாதேவல்புரிகொள்கையினிதுசொன்னார். (கஎ)

புத்தேளிருலகாளும்புரவலனேயினன்பார்வை
தைத்தேகுங்கதிவழுக்கிக்கமலையமார்விமானத்தோ
டித்தேயத்திடைவந்தானிநங்காட்சிகொடுமின்கண்
முத்தேவரறியாதமுதல்வாசணத்தீதென்றார். (கஅ)

தூதுவரைமுகநோக்கித்தொக்ககணத்தவரிறைவன்
யாதுபணியருள்செய்தானதுவன்றிபாதொன்றும்
பேதுவருமாயிடினும்பெறுதல்செய்யோமினிநாம்
போதுவமென்றுரைத்தருளிப்பொருக்கெனவிண்ணிடையெழுந்தார்.

அலைசிறகர்மலைபோல்விண்ணுறத்தேகும்விமானத்திற்
புலையுருவநீத்திருந்தாள்பண்விழிநோக்கவனிநிசை
நிலமலைபோலிருந்தநெடுவிமானத்திலுறவதுவுந்
தலையன்விழியான்மலத்திற்றணந்தவர்போலெழுந்ததே. (உ0)

இக்கிரணர்விமானமும்விண்ணிடைபோதுமமையத்தில்
வந்திருதூதுவர்சூரசேனன்மலரடிவணங்கி
யந்தரகின்றெருமானமகித்தபடிநீண்டபடி
யெந்தவிதமுந்தெரிபவினிதெடுத்துவிளம்பினர். (உக)

கேட்டரசன்மகிழ்கூர்ந்துகிளர்தவிநமானமுந்தண்
டோட்டலங்கரறிணிநெடுந்தோட்டுணைநிலத்திலுறவணங்கி
வாட்டமுறுநல்குரவமாறிடவநணிகியமெலா
மீட்டினவர்போற்களிப்பிலனைப்கிமனைபகத்திருந்தான். (உஉ)

என்றுமலர்த்தவிசாளியிறைஞ்சிபசீர்விபாகமுனிக்
கன்றுபுவிவிமானத்தோடேத்தகையான்மீட்டு
மொன்றுவிசும்பெழுவளவுமுற்றபலகதைமுழுதுந்
தொன்றுதொடுமுறையாசச்சுவையாநிழ்தமெனவிரித்தான். (உங)

இந்திரவிமானம்விண்ணெழுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உஎகூரு.

## கூச - வது சூரசேனன் முத்திப்படலம்.

வயந்தருசூரசேனன்செட்டனுக்குரவர்கூவி
நயந்தருமாசிதகிங்கணண்ணியசெய்வாய்வாரம்
வியந்திடுஞ்சதுர்த்திதன்னின்விநாயகர்பாதமுன்னிப்
பயந்திடுவிரதநூலிற்பண்ணியாங்கியற்றினானே. (க)

மதிவருஞ்சதுர்த்திதோறுமல்கியவிரதநோற்று
விதியுளிவாழுநாளில்விநாயகர்கருணைகூர்ந்து
முதிரொளிவிமானத்தோடுகணங்களைமுடுக்கவந்தப்
பதிவயிற்கணங்கள்போந்தார்பார்த்திபனுவகைபூத்தான். (உ)

மின்மலிவிமானநோக்கிவியந்துசூழ்போந்துநேரே
பன்முறைவணங்கிநின்றான்பார்த்திபன்கணத்தார்நோக்கி
நின்மலக்கணேசனெம்மைநின்னைக்கொண்டுடுக்குமாறு
நன்மையின்விடுத்தான்மன்னாநங்குறுதவிமானமென்றார். (ங)

திருபனுங்கவரைநோக்கிநீங்கிப்பதியாரொன்னை
யொருபகலேனும்வாழாருடன்கொண்டுபோகல்வேண்டும்
வருபெருநகருணைநோக்கின்வரதர்காளென்றனன்றே
யிருபலரோடுமென்றுநெய்தியகணத்தோரம்மா. (௪)

பெரும்பதிவாணரெல்லாம்பெட்புடனேறினார்கள்
சுரும்புளரலங்கன்மார்பிற்சூரசேனனுந்தன்சுற்றத்
திரும்பரிசனத்தினோடேறினன்வணிகனானை
வரும்பெருநோயினானுமவருடனேறினானே. (௫)

பாதகநிறைந்தநோயின்வணிகனும்பயின்றவாற்றான்
மேதகுவிமானம்விண்ணுள்ளேர்ந்தனோர்விமானம்போன்ற
தீதகன்லத்தினின்றுபெயர்மையென்னென்றுதேர்ந்து
போதகமனையமன்னன்புலமைகொளக்கணத்தோர்சொல்வார். (௬)

குட்டநோய்வணிகன்வந்தகூடியதீங்குதன்னா
லட்டொளிவிமானஞ்சற்றுமசைந்திலதனையான்முன்னர்ப்
பட்டதோர்பவத்திற்சாலப்பாவமேபுரிந்தானாற்றான்
முட்டியநோயிற்பட்டானதனையுமொழியக்கேண்மோ. (௭)

காமருகவுடதேயங்கலந்தமர்வாழ்க்கையாளன்
மாமறைக்குலத்திற்றோன்றியவனர்தவசீலனென்பான்
றாமமென்குழலினில்லாள்சாகினியென்பாளின்னோர்
தோமறவாழுநாளிற்றோன்றலொன்றுதித்ததன்றே. (௮)

புத்திரன்சாதநோக்கிப்புதனெனப்பெயரிட்டார்க
ளத்தகுபெயருக்கேற்பவரும்பெருமைந்தன்வீறிச்
சொத்தறமறைகளாக்கோதிக்கலைகளாய்ந்து
மெத்தியவறிஞரெல்லாம்வியத்தகுமேதையானான். (௯)

தருணம்வந்தடுத்தலோடுந்தந்தைதாய்மகிழ்ந்துநோக்கி
வருணமுங்குலமுமாண்பும்வண்மையுமற்றுநாடிப்
பொருணமக்கிதுவாமென்றுபுதல்வற்குவதுவையாற்றாற்
றெருணவின்மனத்துச்சாவித்திரியெனுமாதைச்சேர்த்தார். (௧௦)

அரத்தமெல்லடியுங்கையுமதரமும்நாவும்வீங்கி
யுரத்தமர்முலையுந்தோளுமேனையவுறுப்புமம்பர்
புரத்தினுநில்லையென்னும்பூவையைப்பொருந்திவாழ்நாள்
பரத்தையிற்பிரிந்தான்பண்டைப்பாவத்தாற்புதனென்றுள்ளான். (௧௧)

மதுநுகர்மாந்தர்போல்மயங்கியாதியனுகிப்
பொதுமடமாதைநீங்கான்பொம்மலுமாங்கேதய்த்துக்
கதுவினன்புதனன்னானைக்காதலங்குரவர்காணார்
முதுமையின்முன்றினீங்கார்முனிதயருழந்தாசின்னாள். (௧௨)

உண்டியுந்துயிலுநீங்கியறுதுயருழந்ததந்தை
தண்டமொன்றூன்றிமெல்லத்தடந்தெருவூடேதேடிக்
கொண்டுசெல்சாலைநேரேகுறுகுமோர்வீடனென்பான்
கண்டுநின்மைந்தன்வேசைக்காதலனானனென்றான். (௧௩)

பையவேயாங்குச்சென்றுபரத்தையின்வாயினின்று
மெய்யெலாநரைத்தமூத்தவேதியன்மகனைக்கூவிப்
பொய்யெலாநிறைந்தசெய்வாய்ப்பூவையர்சேரிநண்ணி
யுய்யலாநெறிகைக்கொண்டாயுன்னையொப்பார்களாரே. (௧௪)

நலங்கிளரொழுக்கம்விட்டாய்நான்மறையோதல்விட்டாய்
குலங்கிளர்மயின்மென்சாயற்கோற்றொடியார்வம்விட்டா
யிலங்கியவாழ்க்கைச்செய்கையெனைத்தையும்விட்டாயேனுந்
துலங்கியவெமையும்விட்டுத்துன்னூற்றிருக்கலாமோ. (கரு)

நின்மனமரமோகல்லோநெகிழ்தராவிரும்போசொல்லாய்
வன்மனப்பேதையோரும்வயதின்மூத்தவரைநீங்க
றன்மமன்றென்றுகாத்திற்றங்குவர்சகலநூலு
நன்மையினுணர்ந்தநீமனங்களைத்துறந்தாயென்றான். (கசு)

எனக்குநீபுத்திசொல்லவிங்குவந்தனையோவென்று
மனக்கொடும்பதகன்கையால்வண்கவுட்புடைத்தான்வல்லே
தனக்கொருசார்புமின்றித்தவசீலனுவிமாய்ந்தா
னினக்கிதுதக்கதென்றுநிலங்கிழித்தடக்கியிட்டான். (கஎ)

பல்வகைப்பொருளுங்கொண்டுபரத்தைபாலளிப்பவெண்ணி
யில்வயிற்சென்றானில்லினிருந்தநற்றாயுங்கூடி
நல்வரவென்றுபுல்லிநம்பனேயாங்குச்சென்றாய்
செல்வவிவ்விடத்துக்கென்றாற்சிந்துமோவாயின்மூத்தம். (கஅ)

இங்குனைக்காணுனாகியிராப்பகலுணவுமற்றுத்
தங்கியதளர்விஞ்னுடுதளர்வுற்றிருப்பானுந்தை
யெங்கணுநின்னைத்தேடியெய்தினன்யாங்குற்றானோ
வங்கவன்றன்னைநாடியழைத்துவாவப்பாவென்றாள். (கக)

சென்றவன்றன்னைநாடிச்செல்லவோவிருக்கின்றேனு
னன்றநன்றென்றுசீறிநமனெனவெத்தண்டான்மொததிக்
கொன்றனைதனையுமாங்கேகுப்பையைக்கீண்டிட்டெய்தான்
மன்றலங்கூந்தற்செவ்வாய்மனையவள்கண்டுசொல்வாள். (உ0)

ஆவவென்செய்தாயந்தோவளித்தவர்தமைக்கொல்வாரோ
பாவமும்பழியும்பாராய்பரத்தையர்நலமேபார்த்தாய்
காவலனறியினின்னைக்கழுத்தறியேற்றுவானே
சாவதுபெற்றால்வேசைதனிநலமபெறுவதெங்கே. (உக)

எற்றெனவிராங்குந்தீமையிழைத்தனையென்னசெய்கேன்
மற்றினியுய்யுமாறும்வண்சுகநுகருமாறு
முற்றுறவுரைப்பன்கேளாய்முதல்வனேபரத்தையார்வம்
பற்றுமுன்னில்லினுள்ளபாக்கியமனைத்துந்தோற்றாய். (உஉ)

இருமுதுகுரவர்தம்மையிழந்தனையிருந்துவாழுந்
திருநிலமின்றேநாளைத்தினங்கொலோநம்மிற்றீரும்
பருவருவனமோவேற்றுப்பைதிரமோநாஞ்சென்று
மருவிடமாவதோராய்வறைவிலாரார்வப்பேற்றை. (உங)

மன்னவன்வெகுளாவண்ணம்வரைவிலாளிடஞ்செல்வார்க்குப்
பொன்னெடுமலையுண்டேனும்பொய்யினர்புகழ்ப்பான்யாயு
நன்னிதியிறந்தபின்றைநாயினுங்கடையாயெண்ணித்
தன்னடியேவலொன்றேதகக்கொள்வாளின்பந்தாராள். (உச)

உயிரெலாமுருக்கித்தீராவுறுபெருநோயுஞ்சென்னுட்
பயிலுறவந்துமூளும்பண்புளார்வெறுக்கத்தக்க
செயிரெலாமிவ்வாறெய்துந்தீங்குசெய்நின்போல்வார்க்கு
முயினியுங்கிடைக்குங்கொல்லோவசத்திலன்பிலைத்தோயின். (உரு)

இளமையால்வனப்பாற்கற்பாலேகமாகியவுள்ளன்பின்
வளமையாலெனக்கொப்பானமகளிருமுளரோசொல்லா
யளவிலாப்போகமெல்லாமவரெனநினக்கிங்கேற்பத்
தளர்வுறுதீவலென்பாற்றங்கிநீநுகர்திகண்டாய். (உசு)

ஆண்டுகடோறுங்கூடற்கறைதராத்திங்கணான்கும்
வேண்டியதிங்களெட்டின்விலக்கியபருவமைந்துந்
தீண்டுதற்காகாமுந்நாள்செலவழுக்கானவேளைக்
காண்டகநாளுங்கூடக்கருதினுமிசைவேன்கண்டாய். (உஎ)

என்னிடையெவ்வாறாகியிருப்பினும்பழிபாவங்க
டன்னமுஞ்சாராநல்லதருமமும்புகழுமாகுங்
கன்னவிறோளாய்வேற்றோர்கடைத்தலைமிதித்திட்டாலு
மன்னுவபழியினோடுவழுக்கெலாமொருங்கேயென்றாள். (உஅ)

உள்ளுறவெகுளிமூளவுடன்பட்டுக்கேட்பான்போன்று
தெள்ளியவுளத்துச்சாவித்திரியுரைமுழுதுங்கேட்டு
மெள்ளவேயெனக்குப்புத்திவிளம்பவந்தனைகொலென்று
தள்ளினனிலத்துமாதைத்தாளினாலுதைத்துக்கொன்றான். (உகூ)

மன்னவனறிந்துநம்மைவருத்துமென்றஞ்சித்தீயோன்
முன்னுறவணியும்பொன்னுமுழுவதுமெடுத்துக்கொண்டு
நன்னகரிரவினீங்கிநசையுறுபரத்தையோடு
துன்னருங்கானிற்செல்வான்றூத்தவவனமொன்றுற்றான். (௩0)

தவவனமதனில்வாழ்வான்றக்ஷதாலவனச்செம்ம
லிவர்புனலாடச்சென்றானில்லவள்சுலபையென்பாள்
கவலையொன்றின்றிவைகக்கண்டவளெழில்காமுற்றங்
கவமுறுபதகனோடியணிவளைமுன்கைதொட்டான். (௩க)

நிகழ்பெயர்சுலபையல்லானினக்குநான்சுலபையல்லேன்
புகழுடனறத்தைக்கொன்றபொறியிலியென்கைபற்றத்
தகவுகொனினக்கென்றங்கிதடவிழித்துணைகள்கால
வகலுறக்கையிற்றள்ளியையெனச்சாபமிட்டாள். (௩உ)

காளையாம்பருவத்தானுங்காயத்தின்வலிமையானும்
வேளைநேர்வனப்பினானுமெல்லியர்நலந்துய்க்கின்றாய்
வாளைநேர்விழியாரின்பமறந்துநீநுகராவண்ண
மூளைவாயிடவன்குட்டநோயினையுறுகவென்றாள். (௩௩)

வைத்தடிபெயர்க்குமுன்னமாமைமெய்கருகிநைந்து
கைத்தலத்தோடுகாலுங்கரைசொரிசிணங்களாகிப்
பைத்தமென்முகமும்வேறாய்ப்பார்த்தவர்வெருவமீண்டா
ணத்திறமறிந்துவேசைகைத்தொடுமகன்றுபோனாள். (௩ச)

பாதுகாப்பாளரின்றிப்பழுவத்தினலைந்துசெத்தான்
காதுவேலியமதூதர்கட்டினர்கொண்டுசென்றார்
கோதுதீரளவுங்கோரக்கும்பியினிடுகவென்றா
னோதுநூல்வழியின்வந்தார்க்கும்பர்நாடளிக்குநாதன். (௩ரு)

அரகரவென்னசொல்கேளறெலாமழுத்திவிட்டார்
விரவுமுற்பாவசேடமேவுதலானுங்கற்பி
னுரமிகுசுலபைசாபவெச்சமுமுறுதலானும்
பரவுமிப்பவத்துங்குட்டநோயனாய்ப்பரிணமித்தான். (௩சு)

அறன்கடையஞ்சாதாரவாற்றுமிவ்வணிகன்றன்னைப்
பிறன்கடைநின்றார்தம்மைப்பேணுறுதொழிப்பார்போல
மறன்கடைபடாதவேலோய்மண்ணிடைவீடின்விமானந்
திறன்கடைபடாமல்விண்ணிற்செல்லுமீதுண்மையென்றார். (ஙஎ)

உற்றதுகணத்தோர்கூறவுள்ளதென்றுளத்திற்றெள்ளி
யற்றமிலரசனென்னையாளவந்தடுத்தீர்குட்டி
பற்றியபாவந்தீரும்பரிசுசெய்துடன்கொண்டேகும்
பெற்றியேசூழ்கவென்றுபெரிதடியிறைஞ்சிநின்றான். (ஙஅ)

வழிபடுமரசர்க்காகவணிகனைக்கணத்துத்தேவர்
கழியருள்விழியினோக்கிக்கண்பதியென்றுமுக்காற்
செழிபவமுழுதுநீங்கச்செவியிடையுரைத்தாரன்று
னழிதுயராக்கைநீங்கியமரனுய்விளங்கினானே. (ஙகூ)

பலரிடைவிழுந்தபொல்லாப்பாம்புமாருயிர்மாயாதென்
றுலகவருரைக்கும்வார்த்தையுண்மையேபோலுமென்று
நலமுறுபல்லோர்நாப்பணண்ணியபாவக்குட்டி
நிலமிசைவிழாதுவானினெடுங்கதிக்கருகனானன். (சo)

தேவரும்வணங்கச்சூரசேனனுநகரினுள்ளார்
யாவரும்விமானத்தோடுமெழுந்துவான்முழுதுநீந்தி
மேவருவளங்கள்சான்றவிநாயகருலகநண்ணித்
தாவறுபோகந்துய்த்துத்தத்துவனடிக்கீழ்வாழ்ந்தார். (சக)

தெவ்வரைவணக்குஞ்சூரசேனனென்றரசனுற்றி
யவ்வுலகடைந்தவாய்மையறைந்தனன்பரசுராமன்
கவ்வியவன்பினுற்றுங்காதையுங்கேட்கவென்று
வவ்வியவியாதன்கேட்பமலரணைக்கிழவன்சொல்வான். (சஉ)

சூரசேனன் முத்திப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - உஅ0டு.



## கூடு - வது பரசுராமன்வரம்பெறுபடலம்.



பவளவனத்திடைமுன்புபகர்கார்த்தவீரியன்றான்
பவளமணித்திருவுருவிற்பதிட்டைபுரியைங்கரனைப்
பவளநிறச்சடையானைப்பராபரனைநிராமயனைப்
பவளவிநாயகனென்னும்பண்ணவனைத்தொழுததன்பின். (க)

கிருதவீரியனென்னுங்கெழுதகைமைத்தந்தைபான்
மருவுகாதலிற்சென்றுவணங்கினன்மற்றவனோக்கிப்
பெருகுகாதலிற்றழுவிப்பேரின்பமுற்றான்போ
லொருவிநாயகனருளேயுன்னியுளமகிழ்கூர்ந்தான். (உ)

வரம்பெற்றுச்சரம்பெற்றுவயங்கியவாயிரமென்னுங்
கரம்பெற்றுச்சரண்பெற்றகாதலனுக்குலகளித்துத்
திரம்பெற்றபேரருளிற்செம்மலாரடித்தொண்டி
னுரம்பெற்றுவாழ்ந்திருந்தானுறுங்கிருதவீரியனே. (ங)

ஆணுகப்பெண்ணுகவடிதொழுவார்க்கருள்சுரக்குங்
கோணுகமரைக்கசைத்தகுஞ்சரமாமுகனருளா
ணுகமுறும்வரைபோனலஞ்சிறந்தவிமானமொடு
பூணுகத்திடைதயங்கும்பொருவில்கணம்புடையடுத்த. (ச)

அரிசிவன்பங்கயனறியாவகண்டபரிபூரணனு
மரிசிமகடனைமணந்தமனுளனருளுருவெய்தித்
துரிசின்மனைமாதோடுந்தொக்கபரிசனத்தோடும்
பரிசிலர்கள்புகழ்மன்னன்பணிந்துவிமானத்திவர்ந்தான். (௫)

நெய்யொடுகூடியபெயரினெடுந்தகையானெடும்புகழான்
மெய்யொடுகூடியகணமூர்விமானத்தினிடையேகிப்
பையொடுவாளரவணிந்தபரமனுருலகடுத்துப்
பொய்யொடுகூடாவின்பப்புணரியிடைத்துளைந்தனனால். (௬)

காவலர்கடொழுதேத்துங்கார்த்தவீரியன்கடல்சூழ்
பூவலயந்தாட்படுத்துப்பொருதவரையைஞ்ஞூற்றி
னேவலத்தின்பொருதழித்திட்டிந்திரனுநறுமொறுப்ப
நாவலர்கள்புகழ்ந்தேத்தநன்றரசாட்சியினிருந்தான். (௭)

கடவுளரும்பணிகேட்பக்கார்த்தவீரியன்வாழ்நாட்
டடநெடுஞ்சோலைகள்புடைசூழ்சையவரைச்சாரலிடை
யடர்பொறிவென்றருந்தவத்தினன்றசமதக்கினித
ணிடனகலாப்பெருங்கற்பினிரேணுகையோடினிதமர்ந்தான். (௮)

துழாயணிந்தமணிமார்பன்றொல்லையொருகாலத்து
வழாதபெருந்தவப்பிருகுவகுத்தகொடுஞ்சாபத்தாற்
றழாலுறுமோர்மகனாகித்தக்கவவர்பாலுதித்துக்
குழாமுனிவர்புகழ்ந்தேத்தக்குவலயத்தில்விளங்கினான். (௯)

இராமனெனும்பெயருடையவேந்தலவன்றந்தைபாற்
றராதலத்திலொருவர்களுந்தனையொப்பாரில்லையென்
விராவியமெய்யன்பினொடுமிக்கபணிவிடையாற்றிப்
பராவுதல்செய்வானொருகாற்படர்ந்தனனைமிசவனமே. (௧௦)

அன்னவனைமிசவனத்திலமர்ந்திருக்குங்காலத்திற்
றன்னியல்பிற்கார்த்தவீரியன்வேட்டைதனைக்குறித்துப்
பொன்னசும்புஞ்சையவரைப்புறஞ்சூழ்ந்தகானகத்துக்
கொன்னவில்பல்படையேந்திக்குழாத்தினொடுஞ்சென்றடுத்தான்.(௧௧)

விருகங்களறவேட்டைவிளைத்துமீண்டேகுவா
னருகங்குத்தவச்சூழலதுநோக்கியாதிதுவென்
றுருகங்கமொடும்வினவவுழையர்சமதக்கினியாம்
பெருகங்கமறையாளன்பேணியவாச்சிரமமென. (௧௨)

படைவீரர்தமைநிறுத்திப்பயிலமைச்சர்நால்வர்கடன்
புடைசூழவாச்சிரமம்புகுந்துமுனிகழல்வணங்கி
விடையூர்திபோலிருந்தீர்மெய்த்தவத்தீருமைக்கண்ட
கடையேனும்பெருந்தூய்மைகைக்கொண்டேனெனத்துதித்தான். ()

சீர்த்தவாதனத்திருத்தித்திருமுனிவன்யாரென்னக்
கார்த்தவீரியனடியேன்கார்த்தவீரியனிங்குச்
சூர்த்தமானினம்வேட்டைதொடர்ந்தடுத்தேன்முற்றவத்தாற்
கீர்த்திமாதவத்தோய்நின்கேண்மையும்பெற்றேனென்றான். (௧௪)

பொதுநீக்கியுலகாளும்புகழ்க்கார்த்தவீரியனை
யிதுகாறும்புகழுடம்பையியம்பிடக்கேட்டறிந்திருந்தா
முதுமாமைதிகழ்பூதவுடம்பையுமுன்னுறக்கண்டா
மதுமாந்திற்றெனவின்றுமகிழ்ந்ததுளநின்வரத்தால், (௧௫)

வெய்யவனுமிடைவானமேவினன்வேட்டையினீயு
மெய்யயர்ந்துபோந்தனையால்வேந்தனேயமுதயின்று
பையநினதிரும்பதிக்குப்படர்தியெனமுனியருளக்
கையமருங்கூரிலைவேற்கார்த்தவீரியனுரைப்பான். (கசு)

அண்ணலேபாத்திரங்களாகியநும்போல்வார்பாற்
றண்ணீராயினும்வாங்கித்தகப்பருகலேவேண்டு
நண்ணினேனொருவனலனுடனுய்வந்தவர்க
ளெண்ணிலாரெனதிருப்புமணித்தேகவிடுமென்றான். (கஎ)

வானைவேண்டினுமண்ணில்வரவழைக்குமுனிநோக்கிச்
சேனைகாவலவதற்குச்சிந்தனைநீசெயல்வேண்டா
தானையாவையுநுகரத்தருவாமின்னடிசில்போய்க்
கானவாறெழுகுமதன்கரையிளைப்பாறுதியென்றார். (கஅ)

திருந்தியமன்னவனதியின்றீரத்திற்சென்றிருந்தா
னருந்தவனுமிரேணுகையையழைத்ததிலமன்னவனே
விருந்தெனப்போந்தனனவற்குவிருந்துசெய்வாமெனக்கூறி
வருந்தலறத்தேனுவினைமதித்தனன்வந்ததுதேனு. (கசு)

இருவரும்பூசித்திறைஞ்சியினிதியம்பவத்தேனு
கருதிடுமுன்விண்ணுலகங்கவலையுறநகராக்கிக்
குருமணிமாளிகைதெற்றிகூடகோபுரமாட
மருவிடுமம்பலமாதிவகைபலவுநிருமித்து. (உ0)

வாசமலியறுசுவைநால்வகையுண்டிவிதம்பலவுந்
தாசரொடுதாசியருந்தமனியப்பாத்திரம்பலவுந்
தேசமருமனைதோறுஞ்செறித்துமுனிக்கறிவித்த
தாசகலுமுனியந்தவரசனைக்கூவுகவென்றான். (உக)

மாணாக்கரழைப்பவுடன்மணிவீதிபுகும்வேந்தன்
பாணுக்குமிசையொருபாற்பாவையராடல்களொருபாற்
பேணுக்குப்புனலூறப்பெருகடிசின்மணமொருபாற்
காணுக்கற்பனையொருபாற்கண்டுமகிழ்ந்தேகினான். (உஉ)

முனிவனைக்கண்டடிவணங்கிமொழிந்தவவனேவலினா
லினியசுவைவானடிசில்யாவரொடுமிகவுண்டு
புனிதமுறக்கரம்பூசிப்பொசித்தவயர்வுயிர்த்ததன்பின்
றனியிருந்தமுனிவரனைச்சார்ந்தபசனிதுசொல்வான். (உந)

வேறு.

காடுனையாள்முனங்கண்டபோதிது
நாடுமுன்னகரமாய்நண்ணிற்றென்கொலாந்
தேடுதற்கரியவான்செல்வம்யாவையுந்
தோடுகொண்டெங்கணுந்துதைந்ததென்கொலோ. (உச)

ஒருவனுக்கொருத்திநின்றுபசரித்தென
வருபவரனைவர்க்குமனத்திற்கேற்புற
விருநிலத்தில்லவாமிருஞ்சுவைத்தன
கருணையினூட்டுநற்கணமெங்குள்ளன. (உரு)

மாயையோவிதுதவமான்மியங்கொலோ
தாயைநீயருளெனத்தூயமாதவன்
மாயையன்றிதுதவமான்மியத்தினன்
மேயநற்றேனுவால்விளைந்ததென்றனன். (உசு)

கட்டியசடைமுனிகரையக்கேட்டலு
நெட்டுயிர்ப்பெறிந்தனனினைவிற்கோட்டமே
பட்டனன்பசுவினைப்பற்றிச்செல்லுமா
றொட்டினன்பார்த்திபனுரைத்தன்மேயினான். (௨௭)

காட்டினுளருந்தவங்காத்துக்காய்கனி
யீட்டிவன்பசியினையிரிக்குநீர்மையை
தீட்டரும்புகழினோய்செருத்தற்றேனுநின்
மாட்டிருந்தென்பயன்மருவத்தக்கதே. (௨௮)

உலகெலாந்திகிரியொன்றுருட்டிக்காத்திடும்
விலகரும்பாரநான்மேவினேனெனக்
கிலகியதேனுவையீந்திட்டாயெனி
லலகிலபயன்படுமறமுமாமரோ. (௨௯)

நலிவறநயந்துநீநல்கிடாயெனில்
வலிதினிற்கொள்வதேமதித்துளேனெனப்
பலியினன்பெண்டினைப்பற்றவுன்னியாங்
கொலிகெழுகழலினானாக்கிச்சொற்றனன். (௩௦)

நன்றுநன்றெனமுனிநகைத்துக்கூறுவான்
வென்றிகொண்டுலகெலாம்விதியிற்காத்திடும்
வன்றிறலரசர்க்குமனுச்சொனீதியிற்
குன்றியும்பிறன்பொருள்கொள்ளச்சொல்வதோ. (௩௧)

ஓதியகல்வியினுணர்வுமாமனு
நீதியுமொழுக்கத்தினிலையுமெய்திய
கோதிலாயெனநினைக்குறித்துளேமிராப்
போதியினிழலெனப்புன்மையெய்தினாய். (௩௨)

என்வயத்தாகியவெழில்கொடேனுவை
நின்வயத்தாக்கிடுநெறியுண்டாமெனி
லென்வயினிரப்பதென்னிழுதைவேந்தனே
நின்வயத்தாக்குதிநீட்டியாதென்றான். (௩௩)

மறுப்பயிலாதமாதவனுரைத்தலுங்
கறுப்பொடுகார்த்தவீரியன்கண்காட்டினா
னுறுப்பெனப்பயின்றவேவலர்களுற்றனர்
தொறுப்பயிலாதவான்சுரபிப்பக்கமே. (௩௪)

மட்டவிழ்தாரினான்மாதவற்கிகல்
பட்டமையுணர்ந்துளப்பரிவின்வான்பசு
நெட்டுயிர்ப்பெறிந்ததுநெருங்கும்வீரர்கள்
விட்டநெட்டுயிர்ப்பினால்விளிந்துநீறினார். (௩௫)

திண்ணியகாவலன்செயிர்த்துநோக்குபு
பண்ணியநால்வகைப்படையுமேவினா
னண்ணியபெரும்படையவற்றைநோக்கிய
வண்ணநற்றேனுவுமயிர்சிலிர்த்ததே. (௩௬)

மயிர்தொறும்யவனர்கண்மலர்க்கையேந்திய
வயில்படுபடையொடுமனேகர்தோன்றினார்
செயிரறுதுரகமுஞ்சினக்கண்வேழமும்
பயிலிரதங்களும்பல்லதோன்றின. (௩௭)

எதிர்ந்தளவிருவகைப்படையுமீண்டிகன்
முதிர்ந்தமராடுழிவேந்தன்மொய்படை
பிதிர்ந்ததுசோரிநீர்பெயர்ந்ததுந்தியி
லுதிர்ந்தனதடித்திரளொழிந்ததாருயிர். (௩அ)

எஞ்சியதானைகளெதிர்நின்றூற்றுதற்
கஞ்சினவிரிந்தனவரசனேக்குபு
தஞ்சநம்பால்வரத்தக்கதோவெனக்
கஞ்சமென்கரத்தினலமைவுகாட்டினன். (௩௯)

ஊழிவாயுருமெனவுரற்றும்வால்வளை
வீழிவாய்மடுத்தொலிவிம்மவூக்கின
னூழிவாய்த்திரைவரையடக்கமத்தெறி
தாழிவாய்த்தயிரெனச்சகந்தளர்ந்ததே. (௪0)

கொடுங்கொலைவேலவன்குறித்தசங்கின
னெடுங்கடலுலகெலாநிலைமைகுன்றியு
நடுங்கிலர்யவனர்கணன்றுவென்றியென்
றடுங்கொடுமரத்தினையங்கைவாங்கினன். (௪௧)

தொடைதொறும்வாளியைஞ்ஞூறுதூண்டினன்
கடைவருமூழியிற்கலந்தமேகமு
முடைதருசரமழையொதுக்கிவேந்தன்மேற்
படைபலதூண்டினர்பசுவின்வீரரே. (௪௨)

கலந்தமராடுழிக்கார்த்தவீரிய
னுலந்தனன்வலியெலாமொடுங்கியோடின
னலந்தருமுனிவனைநலிதுநாமெனச்
சலந்தருமுளந்தனில்வயிரந்தாங்கினன். (௪௩)

அழிந்தனன்வேந்தனென்றமரர்தேனுவங்
கொழிந்ததுமுனிவரனுவகைகண்டுவான்
கழிந்தனபடைகளுங்கரிசின்மாதவன்
மொழிந்துபஞ்சாக்கரந்தவத்தின்முன்னினன். (௪௪)

கழிவுறச்சிலபகல்கார்த்தவீரியன்
விழியினைமூடிமெய்த்தவத்தின்மேவிய
வொழிவறுமுனிவனையுற்றுவாளியா
லிழிவுசெய்துயிரினைவிண்ணிலேற்றினன். (௪௫)

கண்டிரேணுகையெனுங்காதலில்லவ
ளுண்டவில்லினுக்குறுகேடுசெய்வதின்
மண்டனிலுன்றனைமானுவாரிலை
கொண்டநின்குலத்தையுக்குமைத்துளாயென்றாள். (௪௬)

கவளவன்களிறனகார்த்தவீரிய
னவளையுமிருபத்தோரம்பிற்சாய்த்தனன்
குவளையுண்விழிப்புனல்கொழிப்பமண்ணிடைத்
துவளிடைமுரிதரச்சோர்ந்துவீழ்ந்தவள். (௪௭)

கணவனைநினைந்துதன்காதற்புத்திர
னணவுறுமளவுமாருயிரைத்தாங்கின
டணவிராமனுந்தனதியல்பிற்சார்ந்தனன்
றுணமுயரிருமுதுகுரவர்வாழிடம். (௪அ)

வேறு.

நீருமூணுமில்லாநெடும்பாக்கமு
மேருநீங்கியமேதினியுஞ்சுரர்
சாரும்வேந்தனிலாதசுதன்மையு
மோருமாதவச்சூழலொப்பாயதே. (௪௯)

வேதவோசையும்வேள்வியின்றூமமுங்
காதலாலடியார்கழல்போற்றிடப்
போதன்மீளலுநீங்கிப்புல்லென்றலா
லேதமென்கொலெனக்கவன்றெய்தினான். (௫௦)

ஞாளிபட்டுநலியமறங்கிள
ராளிபட்டுயிராங்கொழிந்தாலென
வாளிபட்டுமறிந்தபிதாவினைத்
தூளிபட்டமட்சூழலிற்கண்டனன். (௫௧)

ஈன்றதாயுமெறுழ்க்கணையேறுண்டு
மான்றுசோர்ந்துமறிந்ததுங்கண்டனன்
சான்றெனுங்குரவர்க்கிதுசாருமா
றேன்றுசெய்தவர்யாரென்றினைந்தனன் (௫௨)

அழுதமோதியவனியில்வீழ்ந்தனன்
புழுதிமெய்த்தலம்போர்ப்பப்புரண்டன
னெழுதுசித்திரமென்னக்கிடந்தவர்த்
தொழுதுதுன்பத்தொடுகடன்மூழ்கினான். (௫௩)

கற்பகப்பொழிற்காவலனுந்தொழு
மற்புதத்தவவாற்றலும்வீறிய
கற்பினாற்றலும்யாங்குக்கரந்தன
பொற்பினாருயிர்போக்கவென்றேங்கினான். (௫௪)

புலம்பிச்சற்றுயிர்தாங்கிப்புணர்ந்தமை
யலம்பித்தாழ்புனற்கண்ணினளாகிய
நலம்பற்றாய்புடைநண்ணித்தன்வான்கவான்
றலம்பற்றாகத்தலையெடுத்திட்டனன். (௫௫)

அன்னையோவெனையீன்றருளன்னையோ
வென்னையோநுமக்கிங்குற்றகாரியந்
தன்னையோதெனத்தன்கையினீவினான்
பொன்னையோட்டியபொற்பினளோதுவாள். (௫௬)

கார்த்தவீரியன்வேட்டைகழித்தபின்
பார்த்துவந்துபணிந்துவிருந்துதுய்த்
தார்த்ததேனுவுக்காரமர்செய்துடைந்
தோர்த்துவந்துயிர்கொன்றொழிந்தானரோ. (௫௭)

அன்னசெய்கைநினக்கறிவிப்பவே
யென்னதாவியிருவகைதாங்கினேன்
மன்னன்மூவெழுவாளிகளென்னுடற்
றுன்னவாங்கித்தொடுத்தனனாதலால். (௫௮)

வேறு.

மூவெழுமுறையுறமுடிகொண்மன்னரைப்
பூவெழுதொழுமுடல்புரளச்சாடுதி
நாவெழுமறையவர்நற்குலங்களே
மேவெழுகுலமெனச்சிறப்பச்செய்மதி. (௫௯)

வேறு.

எத்தாபதருங்கரில்லாவெழிலார்சீலத்தினிதுயர்ந்த
தெத்தாத்திரியன் றனைவிளித்துச்சிறப்பக்கிரியைமுடித்திடுக
புத்தாரமுதமுண்டாற்போற்புதல்வாநினைக்கண்டுளமகிழ்ந்தேன்
பத்தாவிடைச்செல்குவலென்றுபகர்ந்துதாங்குமுயிர்விடுத்தாள். (௬0)

உள்ளமுடைந்துதாய்மொழிந்தவுரைகள்செவியிலேறுதலுந்
துள்ளியெழுந்ததழற்கொழுந்தேதுனையவெகுளிதலைக்கொள்ள
வெள்ளைவிழிகள்சிவப்பூரவிரிநீருலகுமெவ்வுலகு
மள்ளிவிழுங்குவோன்போலவழன்றருளொன்றுறுத்தினன். (௬௧)

ஆற்றுந்தவத்துமறையோரையரசனிறுத்தானெனுமிழிவை
மாற்றிமறையோர்தவவலியேவலியென்றுலகினிலைநிறுத்தக்
கூற்றமெனவென்குரவர்களைக்கொன்றகொடியோன்குலமன்றி
யேற்றமுறுமன்னவர்குலங்களெல்லாமறுப்பேனெனத்துணிந்தான். ()

அடுத்தவனத்தினுங்கிருந்தவருள்சேர்தெத்தாத்திரியனைப்போய்த்
தொடுத்தகருமமனைத்தினையுஞ்சொல்லிப்போதந்திருவருக்கு
மடுத்தமறையின்விதியாற்றான்மறுமைக்கானகிரியையெலா
மெடுத்துப்புரிந்துவருநாளிலியைந்தவைந்தாந்தினத்தன்னான். (௬௩)

கங்குற்பொழுதினித்திரையிற்கனவிற்கயவாய்க்குயவரியின்
வெங்கட்புலியொன்றுருத்தெழுந்துவிரைந்துபாயவாய்வெருவி
யங்கநடுங்கவிழிக்கின்றானம்மாவம்மாவெனவிளித்தான்
றங்குமவனையீன்றெடுத்ததாயாகியநல்லிரேணுகைதான் (௬௪)

இடையேயழைத்தகாரணத்தாலிருண்டுசுருண்டுநெய்த்தொழுகித்
தொடையார்குழலும்வாணுதலுஞ்சுடர்விட்டிலகுங்குழைக்காதும்
படையார்விழியுங்குமிழ்மூக்கும்பவளவாயுமிவையுடைத்தாய்த்
தடையாதொளிருமுகமொன்றேதயங்கவெளியேதோற்றினள். (௬௫)

திருவார்வதனமெதிர்தோன்றத்தெத்தாத்திரியர்தாமுமறிந்
தொருவாவன்பினிராமனைப்பார்த்துரைப்பார்பதின்மூன்றாந்தினத்தில்
வெருவாதழைப்பதொழிந்திடையேவிளித்தாயதனாலிரேணுகையா
மருவார்நினக்குத்தாய்வதனமாங்குவெளித்தோற்றினளன்றே. (௬௬)

அதனாலொன்றுங்குற்றமிலையாற்றுங்கருமமனைத்தினையு
மிதமார்தரநன்றுறச்செய்யினெல்லாவுருவுந்தகத்தோற்றி
மதவார்மனிதரெஞ்ஞான்றும்வழிபாடாற்றுமணங்காயற்
புதமாயிந்தப்புவியிடத்தேபொருந்திவாழ்வாளெனக்கிளந்தார். (௬௭)

மற்றைத்தினமும்புரிவினைகள்வழுவாதாற்றிமுடித்திட்டா
ரற்றமகலப்பிரமனுலகடுத்துச்சமதக்கினியிருந்தான்
முற்றவுருவமெதிர்தோற்றிமுந்நீருலகம்பேரன்பிற்
பற்றிவணங்குந்தெய்வதமாய்ப்பயின்றுவாழ்ந்தாளிரேணுகையே. (௬௮)

சிறந்ததனதாச்சிரமத்திற்றெத்தாத்திரியன்சென்றிருந்தான்
விறந்தபடையினரசர்குலம்வேரோடறுப்பச்சூளுற்றான்
மறந்தங்கியவேல்விழியன்னைவருமாறுளத்துத்தியானித்தா
னறந்தங்கியவன்னவளெதிரேயன்னைதோன்றியுரைசெய்வாள். (௬௯)

இராமநினதுமனத்தெண்ணமெய்த்தேனதனைமுடிப்பக்கே
ளராவுமதியுமுடிக்கணிந்தவழகர்கயிலைவரையடுத்துப்
பராவிப்பணிந்துதோத்திரங்கள்பண்ணியவர்மெய்யருள்கொண்டு
விராவுமரசர்குலமுழுதும்வீட்டாயென்றுகிளந்தொழிந்தாள். (௭0)

மெய்ஞ்ஞானவளமும்வளமொழியமிழ்தற்றுங்கிளவிச்செங்கனிவா
யஞ்ஞானயுரைத்தமொழிதலைகொண்டலங்குங்கயிலைவரைநண்ணி
மஞ்ஞையுகைப்பான்றனையுயிர்த்தவரதன்றனைவானவர்நஞ்ஞை
பிஞ்ஞையெனவேவழிமொழியும்பிரானைவணங்கித்துதிசெய்தான். ()

சங்கக்குழையின்வடிகாதர்தண்ணங்கருணைவிழிக்கடைதந்
தங்குற்றிறைஞ்சித்துதித்தானுக்காறக்கரமந்திரநவின்று
துங்கக்களிற்றின்முகத்திறைவன்றனைத்தாள்வணங்கியனுட்டித்தா
லிங்குற்றிடுநின்கருமமெலாமெளிதின்முடியுமெனவிடுத்தார். (எஉ)

மீளுமனத்தான்விமலரடிமீட்டும்வணங்கிவிடைகொண்டு
மாளுமுடலின்பயனுதவுமாயூரேசத்தலத்தெய்தி
யாளுமமலர்விநாயகனாரடித்தாமரைகள்பூசித்து
மூளும்விழைவிற்சடக்கரத்தைமுறையாற்கணித்துத்தவம்புரிந்தான். ()

செய்யுந்தவத்துக்குளமிரங்கித்திகழ்மும்மதத்துக்களிற்றுமுகத்
தையன்பரசுமம்புயமுமலங்குமருப்புமோதகமுங்
கையிலணிந்துபூமாலைகவினவளைத்ததுளைக்கையொடு
மெய்யன்விழியினெதிர்நின்றான்விண்ணோர்மலர்தூய்ச்சயசயென. ()

பொருக்கென்றெழுந்துகண்ணருவிபொழியவுழுவலன்புளத்தை
யுருக்கமிடறுதழுதழுப்பவுரைதள்ளாடவாணவதைகை
முருக்குங்கமலமலர்ப்பதத்தின்முறையின்வணங்கிவலஞ்சூழ்ந்து
செருக்கைக்களையுந்தெய்வமறைத்தேனைமாரியெனச்சொரிந்தான். ()

வேண்டும்வரங்கேளெனவிறைவர்விளம்பமகிழ்ந்திராமனெதிர்
மீண்டும்வணங்கிக்கார்த்தவீரியனைவேந்தர்குலத்தோடு
மீண்டும்மருளாற்களைந்தொழிப்பவெறுழ்தந்தருளவேண்டுமென
வாண்டபெருமான்றிருவருள்கூர்ந்தவனுக்கருளைவழங்குவார். (எசு)

மாறுவலியுமழுப்படையுமரியாதிருக்குநித்தியமும்
பேறுவருளிமற்றவற்குப்பெயராப்பரசுராமனெனும்
வீறும்பெயருங்கொடுத்தடியர்மிக்கபிழைகள்விளைத்தாலுஞ்
சீறுதடிமைபுரியென்றுசெப்பிமறைந்தார்விநாயகனார். (எஎ)

மல்லற்கார்த்தவீரியனுமன்னனோடுமரசர்குல
மல்லற்படுமாறறுத்தவர்களாண்டபுவிகளந்தணர்பாற்
செல்லக்கொடுத்துவெகுளியினிற்றீர்ந்துதீராகித்தியனாய்ச்
சொல்லற்கரியபெருந்தவங்கடொடங்கியின்னுமிருக்கின்றான். (எஅ)

படியில்சமதக்கினிமைந்தன்பரசுராமனனுட்டித்து
முடிவில்வரங்கள்பெற்றிருந்தமுறைமைதொடுத்தாமறிகவென
நெடியவுருவாய்ப்படியளந்தரிகரின்மாலாம்வியாதனுக்குக்
கடிகொள்கமலத்தவிசிருந்தகரகக்கரத்தோன்மிகத்தெரித்தான். (எகூ)

அங்காரகநற்சதுர்த்தியொடுமறுகுசமிமந்தாரமுமெய்த்
தங்காதரவினனுட்டித்தோர்தமையும்விளங்கத்தெரிந்தனையால்
கங்காசுகவிற்படைச்சோமகாந்தாவின்னுஞ்சிலகாதை
யிங்காதரவிற்கேட்டியெனவியம்பும்பிருகுமாதவனே. (அ0)

பரசுராமன் வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உஅஅரு.



## ௬௬ - வது இராவணன் பூசித்தபடலம்.

விள்ளரும்பத்திபூண்டவியாதமாதவன்கைகூப்பித்
தெள்ளியவமுதம்போலத்தெவிட்டுதலில்லையென்றாய்
கள்ளவிழ்கடுக்கைவேணிக்கணபதிசரிதமின்னு
முள்ளனவுரைக்கவென்னவோதுவன்வேதநாவான். (௧)

விசும்பினையளந்துநின்றவெள்ளியங்கிரியினோர்சா
ரிசும்பினிலிலங்கைவேந்தனெய்திமாதவங்களாற்ற
வசும்பியதேனுந்தாதுமரிக்கணமரிக்குங்கொன்றை
பசும்புலோடணிந்தவேணிப்பரமனாரெதிரேநின்றார். (௨)

உட்டிகழன்புபொங்கவொய்யெனவெழுந்துதாழ்ந்து
தட்டமிட்டாடிப்பாடிச்சயசயபோற்றியென்று
கட்டுளிபனிப்பவென்புகரைந்துநெக்குடையநின்றா
னெட்டினையிரட்டியோடுமியைந்தநாற்றோளினானே. (௩)

அலங்கலங்கொன்றைவேணியமலனாரவனைநோக்கி
நலங்கிளர்காதலென்னேநவிற்றுதிதருதுமென்றார்
துலங்கியநாலைந்தோளான்சுரரழிபதத்துநாயே
னிலங்கையங்கழியாவண்ணமினிதருள்சுரக்கவென்றான். (௪)

இருட்கறைமிடற்றுச்செம்மலினிதருள்கூர்ந்தன்னான்கை
யருட்குறியொன்றுநல்கியந்தநும்பதியில்வைத்துத்
தெருட்குணத்தோடும்பூசைசெய்திதுகொண்டுபோங்கான்
மருட்குணமகற்றியூர்திமாற்றியேசெல்லவேண்டும். (௫)

நெறியிடைவைப்பினிந்தநின்மலக்குறியின்வாரா
தறியெனவருளினீங்கவரக்கன்கைத்தலத்தினேந்திச்
செறிதருவரையுங்காணுந்திகழ்பதிபலவுநீந்தி
யெறிதிரைக்கடலின்வைகுமிலங்கையிற்செல்லப்புக்கான். (௬)

அச்செயலறிந்தெஞ்ஞான்றுமழிதரானிலங்கைமூதூ
ரிச்சிவலிங்கந்தன்னையிருத்திடினரக்கனென்று
முச்சகங்காக்கும்விண்ணின்முடிகெழுவேந்தனஞ்சிக்
கச்சமிலமரர்சூழக்கயிலைமால்வரையைச்சார்ந்தான். (௭)

மாகத்துமலர்ந்தகற்பமலர்நறுங்கங்கைபுக்கா
ராகத்துக்கழிவிலாதவமிழ்துமற்றனைத்துங்கொண்டு
நாகத்துமுகத்தினானைநாற்றடந்தோளினானைப்
பாகத்தின்முதிர்ந்தநெஞ்சாற்பயன்பெறப்பூசித்தானே. (௮)

இந்திராவேட்டதென்னென்றிறையவர்வினவவன்னா
னந்திராவணன்மானேந்திமலர்க்கரத்திலிங்கம்வாங்கி
யந்தில்வானிலங்கைநாட்டவாற்றிடைச்செல்லாநின்றான்
முந்தியாங்குறுமுனூறுமுடித்தெமைக்காக்கவென்றான். (௯)

வருணனையிலங்கைமன்னன்வயிற்றுணீர்சுரப்பியென்று
கருணையினேவியன்னான்கற்பித்தபடியேசெய்யத்
தருணமெய்தாதமுந்நூறங்கியமறைச்சிறானா
யருணமென்கமலபாதமவனிதோய்தரமுன்சென்றான். (௧௦)

உளைதருவயிற்றினேடுமுறுமிராவணனும்வீரன்
களைகணுமிறைவன்சொன்னகடப்பாடுகடவான்சூழ்ச்சி
விளைவையோராதுமுன்னேமேவியமறைச்சிறுர்க்குத்
தளைபடுமன்பாலின்சொற்சாற்றிமற்றிதனைச்சொல்வான். (கக)

நீர்மிகுந்தகட்டைவாட்டிநெடுந்துயர்ப்படுத்தாநின்ற
தூர்மிகுதூரத்துள்ளதொருவரும்வேறுகாணேன்
சீர்மிகுசிவலிங்கத்தைச்செங்கையிற்றாங்குநான்போ
யேர்மிகுதோயந்தொட்டிங்கெய்திடும்வரையுமென்றான். (கஉ)

மெல்லியவாக்கையேனுன்விழுச்சிவலிங்கந்தாங்கும்
வல்லமையுடையேனல்லேன்வலிதினீதருதிதந்தா
னல்லதேமுக்காற்கூவநண்ணிடாயாயின்மண்மேற்
செல்லுறவிடுப்பலென்றான்றேவர்கடேவதேவன். (கங)

அப்படியாகவென்றேயங்கையிற்கொடுத்துச்சென்று
துப்புடையரக்கனன்னீர்தொடுமுனமுக்காற்கூவி
யொப்பிலானிலத்திலிட்டானுற்றவனேக்கிவல்லே
கைப்பெருவரைகடம்மாற்கல்லியங்கெடுக்கலுற்றான். (கச)

நெடியவனேடநீண்டநிமலனார்பாதமேபோற்
படிமுழுதுருவச்சென்றுபார்நயப்பேதுங்கொள்ளாக்
கடியவிழ்மலர்மென்கூந்தற்கற்பினருள்ளம்போலத்
தொடிபொலிதடக்கைவாட்டிச்சுடர்ந்ததவ்விலிங்கமம்மா. (கரு)

இருபதுகரங்களானுமெடுத்திடமுயன்றபோதங்
கருவெனவுருவமென்னவமர்ந்திடுமமலனார்தங்
திருவுருப்பசுவின்காதிற்றிகழ்தலாற்செறிந்தமண்ணுங்
குருமலர்க்காவினேடுகோகன்னமென்றுகூறும். (கசா)

வலிமிகுமரக்கனேக்கிமாபலமென்றானந்த
நலிவறுசிவலிங்கந்தானண்ணுமப்பெயர்பூண்டன்று
கலிகெழுவெகுளிமூளக்கையினற்குட்டியிட்டா
னொலிகெழுமறைச்சிறுன்போலுற்றநாயகனைமன்னே. (கஎ)

குட்டலுமறைச்சிறுன்போற்குறுகியநாதன்வல்லே
யட்டுமும்மதமால்யானையானனாகிவிண்ணின்
முட்டவொள்ளொளிகான்மோலிமுதிர்ந்தபேருருவுகொண்டு
சட்டவல்லரக்கன்றன்னைத்தடங்கைப்பந்தாடினனே. (கஅ)

அண்டமூம்பொதிர்க்கும்வண்ணமணிமுடிமுடிகடாக்க
விண்டலமுருவச்சென்றுமீண்டடித்துணையானீர்சூழ்
மண்டலம்பொதிர்ப்பவீழ்ந்துமறிந்தும்வல்லுடலிற்சாலக்
கொண்டபல்லென்புநெக்குக்குலைதரமறுகினனே. (ககூ)

பொய்தவிரடியார்செய்யும்புன்மையும்பொறுப்பாயோலங்
கைதவமனத்தார்செய்யுங்கடப்பாடும்வெறுப்பாயோலஞ்
செய்தவென்பிழையுங்காத்துத்திருவருள்செறிப்பாயோலம்
வெய்தருள்புரியாயாகின்விளிகுவேனேலமென்றான். (உ0)

கடைமடைதிறந்தாலன்னகருணைகட்கடையிற்காட்டி
யிடையுடலொழியாவண்ணமெம்பிரானுய்யவிட்டா
னுடையவன்பாதப்போதிலுறுமலராதிகொண்டு
தடையறுமன்பிற்பூசைசமைத்தனனரக்கர்கோமான். (உக)

என்னுடை மத்தகத்திலிருங்கையிற்றூக்கியாங்கு
நின்னுடை மத்தகத்தின் ஞேரேலெனப்புடைக்கவென்றான்
பொன்னுடையவனுங்காணுப்பூரணனவன்றன்கையாற்
றன்னுடை மத்தகத்திற்றூக்கினனுதிரஞ்சோர. (உஉ)

இம்முறையாவராகவிருங்கையான் மத்தகத்தி
னம்மெதிர்புடைத்துச்செல்லுநன்மையையுடையராயிற்
கொம்மெனவவர்க்குத்துன்பக்கோளெலாமகற்றிச்செல்வம்
விம்முறக்கொடுத்துமென்றுவிநாயகரருளிப்போனார். (உங)

அராவணிசடையெம்மண்ணலருளியவரங்கள்கொண்டே
யிராவணனிலங்கையெய்தியின்புறவாழ்ந்தானிப்பா
லிராவணக்கடலையுண்டவிருடிபூசித்தவாறும்
பராவணவுரைப்பக்கேட்டியெனச்சொலும்பதுமச்செல்வன். (உச

இராவணன் பூசித்தபடலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - உகூ0கூ.



## சுஎ - வது அகத்தியர் பூசித்தபடலம்.



தாணுவால்வரஞ்சார்ந்தசூரனுற் - பேணுவானகம்பெயர்ந்தவச்சிரன்
பூணுமாதொடுபோந்துமண்ணின்மேல் - வேணுமாநகர்மேவிவைகினன். (க)

தண்ணிலாமுடிச்சடையிற்கங்கையா - யண்ணலாரடியலர்சொரிந்திட
வண்ணநந்தனவனமுநாணுமா - றெண்ணிலாமலரிலையுநட்டனன். (உ)

அலரினோடுபாசடையுங்கொய்தடி - மலரின்வைகலுமலரினற்சொரிந்
திலகுபூசனையியற்றியும்பரா - ருலகமாள்பவனுவந்துவாழுநாள். (ங)

சூருறுத்துமச்சூரனாணையாற் - காருறுத்துநீர்கதுவலின்மையாற்
சீருறுத்தியதேமலர்ப்பொழில் - போருறுத்தவர்புரங்கள்போன்றவே. (ச)

என்செய்வாமெனவிறைவனேங்கலு-மின்செய்வான்மொழிவிமலனாணையாற்
கொன்செய்மாநிதிகுறுகுமஞ்சலை-நின்செய்பூசனைநிரப்பவென்றதே. (ரு)

இந்திரன்மகிழ்ந்திருக்கும்வேலையில் - வந்துதோன்றினன்மறுவிலாத
னந்தமாதவனடியிறைஞ்சுமெய்-யுந்துமன்பினலுரைக்கும்வேந்தனே. (சு)

கரந்துவைகுநான்காழிநாதனை - யரந்தைதீர்தரவருச்சித்துய்வதற்
குரந்தழைத்தவுய்யானம்வைத்துளேன்-சுரந்துவான்மழைசொரிதலற்றதே.

கணவனீங்கியகற்பினாரென - மணமரும்பியமலரரும்பொடு
துணர்தளிர்க்குலஞ்சோர்ந்துவாடின வுணவுநீர்பெறுமுபாயங்கூறென்றான்.

ஆடகத்தவானரசன்வேண்டலு - மாடகத்தியாழ்மலர்க்கரத்தினன்
றோடகத்தபூந்துடவையுய்யுமா - நாடகத்தொடுநன்றுகூறுவான். (கூ)

வேறு.

அந்திவான்மதிசடைக்கணிந்தம்பலத்தாடு
மெந்தைநாயகன்கயிலையிலிருந்தகாவிரியா
மூந்தியாற்றினையுதவிடக்குண்டிகையேற்று
வந்துசையமால்வரையிருந்தனன்குறுமுனிவன். (க0)

தீந்தமிழ்க்குறுமுனிவரன்றெய்வதக்கரகத்
தேந்துவானதியிக்குறிணிணர்த்தலர்ந்துய்யும்
பூந்தண்வார்பொழிலன்னதுபுரிதரவல்லான்
சாந்தயோகினருளத்தமர்தந்திமாமுகனே. (கக)

ஒன்றையாக்கிடவொன்றினையழிக்கவொன்றனைவிட்
டொன்றைவேறுறவுயர்த்தவும்வல்லவனுவனே
யொன்றுமேனையோர்க்கரியவாதலினுவனடியே
யொன்றுகாதலின்வழிபடுகெனவுரைத்தொழிந்தான். (௧௨)

பாயிரங்குநீர்ச்சடைமுடிப்பரமனைச்சேய்க்குத்
தாயிரங்கியாங்கடியர்பாற்றழைத்தபேரருளாற்
போயிரங்கிடர்போக்கிடும்புழைக்கைமாமுகனை
யாயிரங்கணன்பினூர்பூசையாற்றினனால். (௧௩)

எம்பிரானெதிர்நின்றடியிறைஞ்சியேத்தெடுத்த
வும்பர்கோனிடையொள்ளியதிருவருள்வழங்கி
நம்பியாதரவாலுளநாடியபொருளைக்
கம்பியாதுரையென்றனன்காவலனுரைப்பான். (௧௪)

பிணரினீள்பெரும்புழைக்கரக்களிற்றினைப்பிடிநேர்
வணரினீள்குழன்மலைமகள்வெருவமுன்னுரித்தாற்
றிணரினீண்மலரிடப்பொழிலியற்றினனதுதா
னுணரினீண்டுணர்பவபுனலின்றியேயுணங்கும். (௧௫)

சையமால்வரைத்தமிழ்முனிசார்ந்தனனவன்செங்
கையினேந்தியகுண்டிகைக்காவிரிநதியை
வையமேத்தவிங்குறும்வகைவழங்குதியென்று
னையனாருளாலதுபுரிதுமென்றகன்றார். (௧௬)

கொடியுருக்கொடுகுன்றிடைப்படர்ந்துகுண்டிகையி
னடிமிதித்திருந்தகத்தியன்விளைவறியாமே
கடிமலர்க்கையிற்கடிந்திடக்கரகநீர்கவிழ்த்துப்
படியின்மாமறைச்சிறுவெனநின்றனன்பகவன். (௧௭)

கும்பமாமுனிநோக்கினன்கொடியுருக்கொண்டு
வம்புநீடியகரகநீர்கவிழ்த்தனன்மற்றுப்
பம்புவேதியனெனவெதிர்பயின்றனனிவன்றான்
வெம்புதானவனோபிறனோவெனவெகுண்டு. (௧௮)

இவன்வலித்திறமுழுவதுமறிதுமென்றெண்ணி
யவனிருந்தலையோச்சுவானங்குலிமடித்துத்
தவவிருங்கையுமோங்கியேயண்மையிற்சார்ந்தா
னுவமையில்லவனஞ்சினன்போன்றொழிகின்றான். (௧௯)

எட்டுவானெனக்கிட்டுவனிருடிகையகத்துப்
பட்டிடான்மிகச்சேணிடைப்படர்குவனிவ்வா
றொட்டுதோறும்விட்டகன்றுலகெலாந்திரிந்தான்
சட்டமாதவனுளத்தொடுந்தாள்களுந்தளர்ந்தான். (௨௦)

அற்றசீரடியார்க்கலாலகப்படாவிறைவன்
முற்றுமாதவக்குறுமுனிமுழுவதுந்தளர்ந்த
பெற்றியோர்ந்தனன்சிறுவனுமுருவினிற்பெயர்வுற்
றொற்றைவார்மருப்பிபமுகத்தொருவனாய்நின்றான். (௨௧)

குட்டவோங்குதன்கரங்களைக்கொண்டுதன்முடியி
னட்டுசோரியிற்சேப்புறவழுந்துறப்புடைப்ப
முட்டிலாதமெய்யன்புடைமுனிவனைநோக்கி
யிட்டமாயதிச்செயலினியில்லென்றனிறைவன். (௨௨)

மடத்திற்றீர்ந்தமெய்ம்முனிவநின் மனத்துறுவிழைவெம்
மிடத்திற்கோடியென் றலுமிறையவன் பணிந்தியம்பு
நடத்திஞயகனளித்தருணறும்புனன் முழுதுங்
கடத்திற்றீர்தரக்கவிழ்த்தனை கடவுளரேமே. (உ௩)

முனைவனேவலாற்பொதியமால்வரையினைமுதல்வ
துனையநாடியேசெல்கின்றேனச்சுடர்வரையி
லனையநர்தனையாட்டியாராதனைபுரிய
வினையகாவிரிநதியெனக்கீகவென்றிரந்தான். (உ௪)

செந்தமிழ்க்கொருமுதல்வனேதேவர்கள்வேந்தன்
வந்திறைக்கலர்வனம்வகுத்தானறலின்றி
வெந்துநின்றதவ்விரிபொழில்காத்திடவேண்டி
யுந்திதன்னையிங்கொழுகுறக்கவிழ்த்தனமுணராய். (உ௫)

நினதுகுண்டிகைவயிற்றுறையுநிரப்புதமென்னு
வனகனவ்வயினொழுகியவாற்றிரும்புனலின்
றனதிருங்கையினள்ளியத்தடங்கடத்தமைவன்
மனமகிழ்ச்சியின்வழிதரமடுத்தருளினனால். (உ௬)

மற்றும்வேண்டியவரங்களும்வள்ளலாரருளிப்
பற்றலார்புரமழித்தருள்பரமனூர்பயிலுங்
கற்றைநீளொளிக்கயிலையையடுத்தனர்முனியும்
பெற்றதீர்த்தமோடெய்திவாழ்ந்தனன்பெரும்பொதியம். (உ௭)

காவிரிப்பெருநதிப்புனல்கணேசர்தம்மருளான்
மாவிரைத்தெழுமலர்முதல்வளமெலாமுந்திப்
பூவிரைப்பொழில்புகுந்துவான்புரவலன்மகிழத்
தாவிரைப்பருத்தொடுகடல்புகுந்ததுமேனாள். (உ௮)

இறைவிநாயகனேவலாலெய்துமப்பொன்னி
முறைவழாவகைகாலத்தின்முன்னுவதெனினங்
கிறையுமாரருணின்மலக்கணேசனாருளுங்
குறையுமோவவன்குரைகழல்கூடுமெய்யினர்க்கே. (உ௯)

குறியமாதவன்பூசித்தசெயல்குறித்துரைத்தா
நெறியினீடியகாசிபனிகழ்தரவுயிர்த்த
மறிதராதமெய்யன்புடையாரெலாம்வழுத்துஞ்
செறிவுமோரெனவியாதனுக்குரைக்குந்தேமலரோன். (௩0)

அகத்தியர்பூசித்த படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௬௩௬.



## ௬௮ - வது காசிபர்முதலியோரனுட்டித்தபடலம்.



முன்னொருபிரளயமுடிந்தசெவ்வியின்
மன்னவேழ்மைந்தரைமனதிற்றோற்றினே
னன்னவர்தங்களுளறிவுமேன்மையுந்
துன்னினன்காசிபனென்னுந்தோன்றலே. (௧)

உணர்பவருணர்வினுளுணர்வதாகிய
கணபதிக்குரியவேகாக்கரந்தனைத்
தணவரும்பத்திமைதழைத்தகாசிபற்
கணவுறுமுறைமையாலருளினல்கினேன். (உ)

கணித்திடுமுறைமையுங்காட்டிநஞ்சுமிழ்
பணித்தொடைமிலைச்சியபரமன்றாளிணைக்
கணித்துறுபத்தியினமர்ந்திட்டைம்பொறி
தணித்துயர்தவத்திடைச்சாரச்செப்பினேன். (௩)

ஆங்கவனருளினாலாருயிர்த்தொகை
பாங்குறப்படையெனப்பணித்துவிட்டனன்
றாங்கியின்னருளினைத்தக்ககாசிப
னீங்கினனருந்தவநெடிதுழந்தனன். (௪)

இமையவராண்டோராயிரமிறந்தபி
னமைவனுக்கருள்செயவன்பின்மெய்த்தவர்
தமையருங்கதியிடைச்சார்த்தும்போரு
ளுமைமகனுகுவையூர்ந்தங்கெய்தினான். (௫)

தோட்டியும்பாசமுந்தோட்டுக்கஞ்சமுங்
கோட்டியதெனவளைகோடுங்கொண்டொளிர்
சேட்டொளிக்கரங்களுந்திவண்முத்தாரமும்
பாட்டளினுமிர்மதம்பாய்புழைக்கையும். (௬)

கீற்றிளம்பிறையொளிர்கின்றமோலியும்
வீற்றொளிக்குழைகளும்விளங்கிளங்கதிர்
பாற்றுமெய்யொளியும்பல்வனப்புமுன்னுறத்
தோற்றியசுமுகனைத்துணையநோக்கினான். (௭)

பணிந்தனனெழுந்தனன்பரிவிற்சூழ்ந்தனன்
றணிந்தவுள்ளகத்தொடுதணிவிலாப்புக
ழணிந்தனனாடினனழுதுநக்கனன்
றிணிந்ததோளிணையெழீஇச்செங்கைகூப்பினான். (௮)

பண்டைநான்மறைகளும்பரசிக்காணொணா
வண்டர்நாயகரருள்கூர்ந்துநின்னுள
கொண்டகாதலைக்குறித்துரைக்கவென்றனர்
மண்டுமாதவமுனிவணங்கிக்கூறுவான். (௯)

நசிவறுமுயிர்த்தொகைநானிங்காக்குமா
றுசிவறுவரங்கொடுத்தொருவநீயென்பாற்
கசியபநந்தனனென்றுகாதலின்
வசியொருமகனெனவருகவென்றனன். (௧௦)

அவ்வரமவர்க்களித்தமலநாயகன்
செவ்வியவடியவர்சிந்தையெய்தினான்
கவ்வியவன்புடைக்காசிபப்பெயர்
வவ்வியமுனிவரன்மனையின்மீண்டனன். (௧௧)

வேறு.

கவினிற்சிறந்துமனைக்குரியகாதன்மடவார்பதினல்வர்
குவிமென்முலையுமுறையாகக்கூடிவாழுங்காலத்தி
லவியுணமரர்தயித்தியர்முன்னாசரமுமசரமுந்தாஞ்
சவியொண்மணிப்பூணினரவர்கள்சடரம்வாய்ப்பப்பிறந்தனவால். (௧௨)

கோதிற்றவிர்ந்தோன்சித்தாரிகோட்டமமைத்துத்தனமிரணஞ்
சோதித்தேகாக்கரநான்குதுகளிலைந்தாறெட்டீரா
றேதற்கமைந்தபதினாறீரொன்பானாதிபலமனுவு
நீதிச்சுரராதியர்க்கெல்லாநேரேயுபதேசஞ்செய்தான். (௧௩)

விண்ணோர்முதலாமனைவோரும்வெவ்வேறுளத்திற்றியானித்திட்
டுண்ணாதுறங்காதமரர்களாண்டோராயிரஞ்சென்றிடக்கணித்தார்
தண்ணார்மதியமுடிக்கணிந்ததந்திமுகவனவர்க்கவர்க
ளெண்ணாநின்றவுருவோடுமெதிரேகாட்சிகொடுத்தருள்வார். (௧௪)

மடங்கல்வெரிநிற்சிலர்முன்னுமயில்வெந்நிடத்திற்சிலர்முன்னு
முடங்குமெயிற்றுப்பெருச்சாளிமுதுகிற்சிறப்பச்சிலர்முன்னு
மடங்கலறியாப்பெருவென்றிவாமான்புறத்திற்சிலர்முன்னுங்
கடங்கள்கவிழ்க்குங்கரடமுகக்கடவுட்பெருமானெதிர்நின்றான். (௧௫)

பருதியனந்தமுதித்தனையபரவுந்தேசிற்சிலர்முன்னுங்
குருவெண்மதியமனந்தமெனக்கொழிக்குமொளியிற்சிலர்முன்னுந்
திருவித்துருமமணிமருட்டுஞ்செய்யவுருவிற்சிலர்முன்னும்
பொருவல்வினையைப்பொருதழிக்கும்புகைவானிறத்திற்சிலர்முன்னும். (௧௬)

இருகைத்தலத்திற்சிலர்முன்னுமெழினாற்கரத்திற்சிலர்முன்னு
மிருமுக்கரத்திற்சிலர்முன்னுமெட்டுப்புயத்திற்சிலர்முன்னு
மொருபத்தகங்கைசிலர்முன்னுமொருபன்னிருகைசிலர்முன்னு
மொருபத்தெண்கைசிலர்முன்னுமோராயிரங்கைசிலர்முன்னும். (௧௭)

வாலப்பருவஞ்சிலர்முன்னும்வயங்குந்தருணஞ்சிலர்முன்னுங்
கோலக்கிழவுசிலர்முன்னுங்காட்டிக்குறையாவருள்விழியிற்
சாலப்பெருகநின்றருளுந்தலைவனாரையனைவோருங்
காலப்பருதிகண்டலர்ந்தகமலம்போற்கண்டுளமகிழ்ந்து. (௧௮)

வல்லையெழுந்தங்கடியற்றமரம்போல்வீழ்ந்தார்சிலர்சில்லோ
ரொல்லுநிலத்தினெட்டுறுப்புமோரைந்துறுப்புமுறப்பணிந்தார்
மெல்லவலஞ்சூழ்ந்தனைவோரும்விழிநீர்பெருக்கியெதிரேநின்
றல்லலனைத்தும்புறங்காண்பாராடிப்புகழ்கள்பாடுவார். (௧௯)

பந்தமகற்றுமனந்தகுணப்பரப்புமெவன்பாலுதிக்குமோ
வெந்தவுலகுமெவனிடத்திலீண்டியிருந்துகரக்குமோ
சந்தமறையாகமங்கலைகளனைத்துமெவன்பாற்றகவருமோ
வந்தவிறையாங்கணபதியையன்புகூரத்தொழுகின்றாம். (௨0)

உலகமுழுதுநீக்கமறவொன்றாய்நிற்கும்பொருளெவனவ்
வுலகிற்பிறங்கும்விகாரங்களுறாதமலமொளியாவ
னுலகம்புரியும்வினைப்பயனையூட்டுங்களைகணெவனந்த
வுலகமுதலைக்கணபதியையுவந்துசரணமடைகின்றாம். (௨௧)

இடர்கண்முழுதுமெவனருளாலெரிவீழும்பஞ்செனமாயுந்
தொடருமுயிர்களெவனருளாற்சுரர்வாழ்பதியுமுறச்செய்யுங்
கடவுண்முதலோர்க்கூறின்றிக்கருமமெவனான்முடிவுறுமத்
தடவுமருப்புக்கணபதிபொற்சரணஞ்சரணமடைகின்றாம். (௨௨)

மூர்த்தியாகித்தலமாகிமுந்நீர்கங்கைமுதலான
தீர்த்தமாகியறிந்தறியாத்திறத்தினானுமுயிர்க்குநல
மார்த்திநாளுமறியாமையகற்றியறிவிப்பானெவனப்
போர்த்தகருணைக்கணபதியைப்புகழ்ந்துசரணமடைகின்றாம். (௨௩)

செய்யும்வினையின்முதல்யாவன்செய்யப்படுமப்பொருள்யாவ
னையமின்றியுளதாகுமந்தக்கருமப்பயன்யாவ
னுய்யும்வினையின்பயன்விளைவினூட்டிவிடுப்பானெவனந்தப்
பொய்யிலிறையைக்கணபதியைப்புரிந்துசரணமடைகின்றாம். (௨௪)

வேதமளந்துமறிவரியவிகிர்தன்யாவன்விழுத்தகைய
வேதமுடிவினடநவிலும்விகிர்தன்யாவன்விளங்குபர
நாதமுடிவில்வீற்றிருக்குநாதனெவனெண்குணனெவனப்
போதமுதலைக்கணபதியைப்புகழ்ந்துசரணமடைகின்றாம். (உ௫)

மண்ணினேரைங்குணமாகிவதிவானெவனீரிடைநான்காய்
நண்ணியமர்வானெவன்றீயின்மூன்றாய்நவில்வானெவன்வளியி
னெண்ணுமிரண்டுகுணமாகியியைவானெவன்வானிடையொன்றா
மண்ணலெவனக்கணபதியையன்பிற்சரணமடைகின்றாம். (உ௬)

பாசவறிவிற்பசுவறிவிற்பற்றற்கரியபரன்யாவன்
பாசவறிவும்பசுவறிவும்பயிலப்பணிக்குமரன்யாவன்
பாசவறிவும்பசுவறிவும்பாற்றிமேலாமறிவான
தேசனெவனக்கணபதியைத்திகழச்சரணமடைகின்றாம். (உ௭)

எங்கள்குலமும்வருபிறப்புமியைந்தவுயிரும்வளர்குணமுந்
தங்குந்தருமந்தவந்தானந்தயங்கும்விரதங்கலையனைத்தும்
பங்கமகலப்பெருந்தூய்மைபடைத்தேமடியேமெனப்பாச
வெங்கையிறைவர்வரமுதவியவர்கட்கிதுவுமருள்செய்வார். (உ௮)

இந்தநமதுதோத்திரத்தையாவன்மூன்றுதினமும்மைச்
சந்திகளிற்றோத்திரஞ்செயினுஞ்சகலகருமசித்திபெறுஞ்
சிந்தைமகிழச்சுகம்பெறுமெண்டினமுச்சரிக்கின்சதுர்த்தியிடைப்
பந்தமகலவோரெண்காற்படிக்கிலட்டசித்தியுறும். (உ௯)

திங்களிரண்டுதினந்தோறுந்திகழவொருபான்முறையோதிற்
றங்குமரசவசியமாந்தயங்கவிருபத்தொருமுறைமை
பொங்குமுழுவலாற்கிளப்பிற்பொருவின்மைந்தர்விழுக்கல்வி
துங்கவெறுக்கைமுதற்பலவுந்தோன்றுமெனச்செப்பினர்மறைந்தார். (௩0)

இறைவன்மறையவனைவோருமெய்ஞ்ஞமுளத்துப்பேரன்பான்
முறையிற்கோயில்வெவ்வேறுமுடித்திட்டவற்றுட்டத்தமக்கு
நிறையவரங்கள்கொடுத்தருளநேரேசின்றதிருவுருவை
மறையின்வழியாற்றாபித்துவழிபாடாற்றிப்பெயரிடுவார். (௩௧)

முனிவிலமரர்சுமுகரெனமுனிவரேகதந்தரெனப்
புனிதமுறுங்கந்திருவர்கள்கிம்புருடர்கபிலரெனக்குய்ய
ரினிமையுறுஞ்சாரணர்சித்தரிவர்கள்கெசநற்கன்னரென
மனிதரிலம்போதரரென்னமருவும்விருகம்விகடரென. (௩௨)

விலங்கன்மரம்விக்கினராசர்வியாளங்கணநாயகர்திக்கி
னிலங்குவோர்தூமிரகேதுவெழிலார்நதியாதிகடீர்த்த
மலங்குங்கணத்தியக்கர்பயிராதிகிருமிகீடங்க
டிலங்கும்பாலசந்திரர்மற்றுயிரின்றொகுதிகசானனரே. (௩௩)

எனவேபெயரிட்டனைவோருமேத்தியிறைஞ்சித்தத்தமது
மனமார்விருப்பினுறைபதியின்மருவிவாழ்ந்தாரிப்பெயர்கண்
முனமார்கலியைக்கடைந்தெடுத்தமுதிர்வான்சுவையினமிர்தேபோற்
சனமார்பெயராயிரந்தம்முட்கருத்தாற்றெரிந்துகொண்டனவாம். (௩௪)

பெயராயிரமுமெடுத்தோதிற்பெருகும்பயனிப்பன்னிரண்டு
பெயர்மாத்திரையால்வருமென்னிற்பெயர்த்தும்பெருமையேசுவதென்
பெயரீராறுங்களிற்றுமுகப்பெருமானடியைப்பூசித்துப்
பெயராவன்பின்யாவர்களும்பேணுங்கருமந்தொறுமுரைப்பார். (௩௫)

எல்லாப்பயனுமெளிதளிக்குமியல்பாணிந்தப்பெயர்தம்மை
நல்லாகமத்தின்வழிநடக்குநலியாச்சைவரேயன்றி
யல்லாச்சவுரர்சாத்தர்வயிணவர்கண்முதலாமதத்தோருஞ்
சொல்லாநின்றுபயன்பெறுவர்துதிக்கையானேத்துதியாரார். (௩௬)

கோடியாகங்கன்னியரைக்கொடுத்தல்கோடிதவந்தானங்
கோடிதீர்த்தந்தலமூர்த்திகோடிமாசைத்துலாபாரங்
கோடியானைகிருச்சிரமென்றிவற்றாற்கொள்ளப்படும்பயனிற்
கோடியாகும்பயனதிகங்குலவும்விடியற்கூறுநர்க்கே. (௩௭)

ஈதுசுரர்கண்முதலானோரெவரும்பூசைபுரிந்தபடி
கோதிலாதாயறிகென்னக்கூறுங்கமலன்முகநோக்கி
யாதுபெயராயிரமவற்றின்பயன்யாதிவையுமுரையென்னப்
போதினிருந்தோன்வியாதமுனிபுந்திமகிழத்தெருட்டுவான். (௩௮)

காசிபர்முதலியோரனுட்டித்தபடல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உ௬௭௭.



## ௬௬ - வது சகத்திரநாமப்படலம்.



ஓங்காரமானமகாகணபதியெம்பெருமாற்குரியசகத்திரநாமமாமனுவாமிவைக்கு, நீங்காதமுனிவரன்றான்கணேசமுனிதெய்வநிகரின்மகாகணுதிபதிசந்தசுபல்விதமே, பாங்கானபீசமும்பசுத்திதுண்டம்பகர்தருகீலகஞ்சுவாகாசகலவிடருந், தாங்காதுரைக்கமகாகணபதிக்குண்மகிழ்ச்சிதழைவிக்கும்பொருட்டவற்றைச்சாற்றுவதாமுனியே. (௧)

ஓங்கணேசுரன்கணக்கிரீடன்கணநாதனுயர்கணுதிபனேகதமிட்டிரனின்னருளே, தாங்கியவக்கிரதுண்டன்வளர்கசவத்திரனேதக்கமகோதரனிலம்போதரன்றாம்ரவன்னன், றூங்குகரவிகடன்விக்கினநாதன்சுமுகன்றுன்முகன்புத்தன்விக்னராசன்கசானனனே, திங்கறுக்கும்வீமன்பிரமோதனுமோதன்றிகழ்சுரானந்தன்மதோற்கடனேயேரம்பன். (௨)

சம்புசம்பரனிலம்பகன்ஏன்மாபலனந்தனனிலம்படன் றனஞ்சயன்மேகநாதன், வெம்புமகநாசன்விநாயகன்விரூபாக்கன்வீரன்சூரன்கணுத்தியக்கன்வரப்ரத, னம்புசித்திபுத்திகிப்பிரப்பிரசாதகனேநவின்மகாகணபதிருத்திரப்பிரியன்பீமன், வம்பிலுமாபுத்திரனீசானபுத்திரன்குமாரகுருமூடிகவாகனன்சித்திப்ரியன். (௩)

சித்திபதிசித்தன்சித்திவிநாயகன்சாகலனேசிங்கவாகனன்மோகினிப்பிரியனவிக்கி, னத்துவகரன்சயன்றுற்சயனதுற்சயனேநவிற்றுங்கண்டகிராசபுத்திரனேவிசுவ, கத்தன்விச்சுவவந்தியன்விசுவமுகனேகவியிடபன்கவிதுனிக்கிரணிபிரமணியன், றத்துபிரமணப்பதியேகூர்மாண்டசாமசம்பூதிகிதிபதிபூபதிபுவனபதியே. (௪)

பூதபதியவ்வியயன்மிதன்சம்மிதனேபூடதந்தபீதுாகிதிப்பிரியன்பதிப்பிரியன், பாதகத்தியாற்சிதக்கிதன்சேட்டராசன்பயிலுமிரண்மயபுராந்தத்தன்பிரசமன, ஞேதுகாரகதத்வஞ்சசிந்துசித்திராங்கனுமாங்கசேளிகுதுகிசுமதாகுலபாலகனே, நாதபின்னமகாம்பரன்றுற்சொப்பனநாசனனேநாதப்பிரதிட்டிதன்சத்யோசாதன்வரதன். (௫)

குண்டலிவிப்பிராசநூபுரனுரண்ய கிரீடிகுணிசொன்னமுஞ்சிமேகவிபீதாம்பரனே, கண்டதரன்வைமுக்யகதைதைத்யசெல்வன்கசகன்னன்வியசன்

விறற்புஜசொரூபன்சூர்ய, மண்டலமத்தியன்சமனன்சுரபீதிகிருதுவனமாலிமதாபகன்பத்ரன்பாலசந்த்ரன், கண்டவைசாகசமத்திதன்புருடன்சலிலன்கஞதிராசன்சொன்னநேத்திராதிடாயன். (௬)

தீவகன்யோகாதிபன்வாக்கோசரனீராஞ்சன் றிரன்சுகர்னன்சுபானனுமாங்கமலசன்சர்வான்மன், றேவதாதாகவுரிதேசோபுசர்வதேவாத்துமன்கவுரிசுகாவகாயன்றருமன், றேவதேவேசுரன்சிவாக்ரோசகாரிவிபசித்துதிகழ்மிருத்துஞ்சயன்ருமவத்ரன்மகாநாதன், ருவுதயித்தியவிமர்த்தனன்பிரமமூர்த்தன்சகச்சென்மன்ககுச்சுருதிபிராணன்கிரீந்திரனே. (௭)

சம்புகோபகாசியபயப்ரதாயன்கரதன்றருமிட்டன்மிருகபதித்துவசன்வளரோமன்,சம்புபத்திரோற்பவன்மர்த்தியகாயாயனிச்சாசத்திபவன்வரகவதனன்வாணிநாவன், சம்புதேசன்வியாக்கிராசினும்பரனேசமப்பிரதன்பத்தநிற்பரன்காசிபன்சீர், பம்புபிரமாண்டகும்பசித்தோமாபாலன்பலிகிரகக்குத்தசனன்கணகாயன்சேதன். (௮)

கிரிவருண்மன்மந்த்ராயலயோன்மேடநிமேடாக்கினியருக்கசோமதிருக்கன்வன்னிதாமன், பிரமவித்தியாமதோதகன்சற்பாங்குளிகன்பிரதாபிசத்திசிரோருகன்சிருட்டிலிங்க, னிருதையாணலநிச்சலன்பிரமநீசனிருதயபத்மகன்னிகாசாலன்ருன்மிகனே, பிரதமன்குலாசலாஞ்சசோமாற்ககண்டன்பீனவட்சன்வாசவநாசிகன்கூடன்யெலஸ்வன். (௯)

புருவமத்தியசமத்திதன்பீனகந்தன்பூடிதாசனன்வியற்கேளிசரோவரனே, பிருதுவிநற்கடியனேதாரகாரகனேபேசுபிரசாவாரிநிவாரிதனேகற்பத், துருமவனுசிரயனதீனதபுசனேயந்த்ரன்றுங்கசவ்வியதந்தன்லிபிபதுமாசனனே, யரதனமண்டபமத்தியத்தன்றீவிரனேயரதனசிங்காதனுசிரியனேதாரன். (௧௦)

சற்பகோடீரகடகன்போகதன்சிந்தாமணிநிதிப்பதிருத்திரசிரோதரனே, சற்பவாரன்சற்பதத்தியானநிகளன்சர்வவிலக்கணவிலக்கியன்கம்புகண்டன், சற்பக்கிரைவேயபாசுரன்சுவேதன்சர்வாவயவசம்பூரணன்றிருதாலயனே, சற்பவெக்கிஞேபவீதன்கடிசூத்திரனேசர்வாபரணபூடனுட்டியன்மஞ்சரியே. (௧௧)

சர்வமங்களமாங்கலியனிலம்போட்டன்சகாமகாயனிபீடனிலம்பநாசிகனே, சர்வகாரணகாரணன்மகானுசனேசர்வசோபாசமன்விகன்பிரகற்புசனே,சர்வசத்தியம்புசாயனன்கதாதரனேசாரங்கியுன்னதப்பிரமதன்பீசபூரி, சர்வதேவகரன்சிரோத்திருதபதன்சுதந்துசமோதகனேநந்தாநந்திதயீடஸ்ரீயே.

சுவேதாம்பரதரனக்கினிவாமரதனேசுவாலினிமவுலிலாளிதன்விசுவபிருது, சுவேதமாலியாவிபூடணனிரங்குசனே சூர்ப்பகன்னனத்தநேத்திரத்திரியன்பாசி, சுவேதாதபத்திரருசிரன்சித்தேசன்சுக்கிலாங்கன்றம்பாகாரகும்பாக்கிரனே, சுவேதச்சாமரவிசிதன்றிருதோற்பலனேசூதகலிகாத்திருதுநிபீடமத்தகனே. (௧௩)

சூலிபூசுவதந்தபிருதுவேயுலகசுபதனரதனமவுலிதந்துவருத்தனனே, சீலியிக்குசாபதரன்கற்பவல்லிதரனேதீவிரசன்யனன்னிம்மசரணன்சுவாலா, மாலிபூரணரத்தினுபிவருடகனேவசியேககரன்ஞானமுத்திரையன்விதிகா, வாலிமசீவராகவாமாங்கன்சொன்னகண்டிவசுதாராமதன்பிரசுபாங்கதன்கம்புகந்த்ரன். (௧௪)

சக்கரபாணிரமாரமேசபூர்வாங்கன்சரோசதிருக்கிரதிகந்தற்பபச்சிமனே, தக்கனேமாமயேச்சுரன்விதிரத்தாகுசமத்திதமகாவிருத்திபூரணபாத்திரியே, யக்கமலாதரன்குடாரன்பூடாரத்தனுமோதாமோதசனன்கதலிகாசிரையன், விக்கினமத்தியாசிருதபதன்வருணப்பிரியன்விலாகினீகிருதவுல்லாசன்சுமங்களனே. (கரு)

தத்தசவுமுக்கியசுமுகனேபிரவத்தனன்கரத்தாமிரபலன்மாசங்கநிதிப்பிரபு, நித்தியன்சொசிடகெசவிருதையாசிரியனிகழ்கிருதசவுமுகதுன்முகன்சவுண்டிமதனு, வத்தியாசிருதாங்கனீசானமூர்த்தன்வச்சிராதியத்திரபரிவாரன்பதியே, நித்தியவதஞ்சிதன்மெய்ஞ்ஞானியிச்சாதாரணீடேவிதனெக்கியக்கிரியாதாரனிலளிதனே. (கசு)

காமன்பரிசயன்விசயாவகாயனசன்வினியன்காந்தனேசயனசையாற்சிதபதாம்புசனே, காமினிபாலகன்றயித்திரேந்திரச்சிகியேகணசண்டசமாசிரையன்பவனதரிசனனே, காமினிகேளிலாலிதன்வலிதரச்சிரையன்கவுரிநந்தனன்பிரகற்பதுமநிதிப்பிரபு, வாமைரமைசேட்டைமனோரமன்வீதசோகன்வாசத்திதன்வாகீசன்சீநிகேதனனே. (கஎ)

சர்வசற்குருசஞ்சேவியன்கணநாயகனேசவுந்தரியமண்டிதனயிராவதாதி, சர்வவாரணனனந்தானந்தசுகதன்சீர்சரசுவதியாசிரையனளினிகாமுகனே,சர்வகாளிகசஞ்சித்தன்குருகுத்பபதன்சதோநித்திரமதத்திரவனத்திரேச,சர்வபிருதனபாயனும்பீசோத்துங்கசத்திமதனாமுத்திரிதபதாம்புயனே.

நாதன்விக்கினவிருதுதிவ்வியாத்திரனேநமத்துவசுமதீமவுளிகணேசன்றிவ்வியனே, பாதன்மதகூர்நிதலோசனன்சுமங்களனேபகர்சுபகாசமுசிரிதன்சுப்பிரமோதப்பிர, மோதனனேதிராவிணீசத்திசமவிருதன்மொழிபிரத்தியுக்கிரபவனன்றிகம்பரனே, சாதவிசுவாதிபீசச்சகதசுவாகாசத்திசுகீநீலகணுச்சிட்டோச்சிட்டகணகன். (கக)

அமுதசந்திரமோலியனுவிலனச்சுதனேயப்பிரதற்கியனமுத்தவச்சரனட்சயனே, யமுதாந்திகிறதாவாசனசாப்யாயனகோரனனுமயோமயாயனனுர்த்யாயனனுகார, னமிதமானசனனந்தத்திருட்டியத்விதாயனமேயசித்தியவ்வியக்கிராயனமேயாய,னமிதபானன்னவிதுமாக்கினிபலக்கினன்னவ்வியத்தவிலக்கணனன்னப்ரசித்தன். (உ0)

ஆதாராதேயவற்சிதனசராப்யாயனுகுமகாரதனிடாயாமனிடாதாமனுதாரபீடனிந்துமண்டலமத்தியகனப்பிரதியதனிதணிந்தீவரதளசியாமனுதாரனிகரமுத்திராவிவர்ச்சிதனேயப்பிரமேயாயனிந்திரகோபசமானனுசாரபூரனிக்குச்சாகரமத்யத்தனுகுகேதனனிந்துச்சாயைநிபத்துதியே. ()

இக்குபாணவிலாலசன்னுடுபமவுலியிடணத்திரையகற்பாந்தனுத்துங்க, னிக்குசாபாத்திரேகச்செல்வனுக்ரனிந்திரநீலநிபத்துதியுபேந்திரனே, யிக்குவாகுவின்குலவிக்கினவிமோசகனேயிச்சிதார்த்தப்பிரதாயகாயனூர்ச்சுவத, னிக்குசாரப்பிரியனுன்னதானனனேயிந்திரையாசிரையனுத்தாரகப்பிரபு. ()

ஈசானனுதாரத்திரிதசாக்கிரணியேயிருக்கெசுருசாமநயனன்னுட்ணமலத,னீசானப்பிரியனூகாமோகவிவற்சிதனேயிருத்திபுத்திசமரியகனேடதிநற்பதியே, யீசானமவுலிலுத்தசத்திசுரத்துவிடனிருசார்ச்சிதைகசுலபனேசத்தியான, னீசானவரனிரணத்திரையவிமோசகனேயேகபாதக்கிருதாமனனேயோங்காரன். (உ௩)

ஐசுரியநிதியுலுத்தவிக்கினசுபத்தனௌதாரியநிதியௌதத்தியதயிரியனே, யைசுரியனுலூதாவிப்போடநாசனனேயௌநந்தியநிடபதியோங்காரவாச்சியனே, யையிகாமுண்மிகாப்பிரியனங்குசனேயங்குசாசுரநாகன்லுத்தசீலுத்த, னைராவதச்சமோன்மேடாயனைராவதநிபானனேகாரபீடமத்தியனே. (உ௪)

வேறு.

நச்செசிதாகிலதயித்திரியஸ்ரீயே-பொச்சமகலெசிதாகிலசமுத்திதனே
யெச்சமறுமங்குசாசுரசமுத்திதனே-யச்சமத்தவிசற்கபதபரிகீர்த்திதனே. ()

வேறு.

கருமகருத்தன்கமண்டலதரன்கற்பன்கபர்த்திகளபானனன்காருண்யதேகன், கருமசாட்சிகபிலன்கதகன்கூர்மாண்டகணநாயகன்கடிசூத்திரப்பிருது, கருமாகன்மப்பலப்பிரதன்கட்டுவொங்கன்கல்வாட்சிருங்கநிலையன்கண்டப்பிரியன்கருவன், கதாந்தத்தன்கனின்மலன்கருணுசிரையன்கதம்பகோலாகுலதன்கட்கிகலாநிதியே. (உ௬)

சத்தியபத்தியசுதாரணவன்குருகெம்யன்கணுட்டியன்கீர்வாணபூர்வகன்குய்யன்கீதன்,கத்தியன்குய்யாகமநிரூபிதன்கண்டன்ககனுனந்தன்குரோற்குருகுடாசயனே,கற்சிகுய்யசாராதன்குடாத்தித்தன்கானன்கடகும்பனங்காரவாகாரசுண்டப்பிருது,கற்கரிகாமாலிங்ககாரன்கடோதரனேகாதநாதப்பிரியனங்காரவாச்சியனே. (உ௭)

சண்டன்சந்தோதுல்லியக்கியன்சந்தன்சலக்கண்டவுல்லாசத்துவாரன்சகதீசன், சண்டேசன்சரவணலாலசன்சந்தோமயனேசாரசாபிதாசிந்தாமணிசகத்தியோனி, சண்டசண்டன்சந்தவிக்கிரகன்சகச்சாட்சிசங்காரிப்பிரமாரகுலனசனப்பிரபு சண்டேசவிக்கிரமன்சிக்குவாசித்திசகன்மயன்சேப்பியன்சேப்பானசெபனே. (உ௮)

இடங்காரவாச்சியனுடுண்டிவிநாயகனேயிணகாரவாச்சியன்வாணிதன்சகாய,னிடங்காரன்வீணுநாதப்பிரமோதகனேயிடிண்டிமுண்டனிடக்காணிநாதமுதிதன்சீ,ரிடங்காரகுலநூபுரப்பாதனிடைகரிடாமானிடாகினிக்கீச்சுரனிடம்ப, னிடங்காரபல்லவநத்ததிதசருவமந்திரசுசித்திதனிடிண்டிமப்பிரியன். (உ௯)

தாரகாந்தாசமுத்தானன்றண்டபிருதுதத்துவப்பிரகிருதிதத்துவன்ருனு, தாரகாந்தகன்ருணுப்பிரியனேதாதாதக்கவெக்கியப்பிரசமனன்றன்பந்து, தாரகன்ருனந்தமோதையன்றயாவான்றயித்தியவாரணதாரணன்றிவ்யவிபவன், ருவரசங்கமன்றண்டநாயகன்றனதன்றந்தப்பிரபின்னேபமுகன்ருன்யபதியே. (௩0)

தியானிதத்துவபதநிரூபிதன்ருதாதெமிட்டிராலக்கினத்திபகடன்றியாயனன், றியானபராயணன்றரணிதரனுதப்பிரியன்றியாதபிரமாண்டமேகலனந்திநாதன், றியானகாலச்சொருபனின்மலனிட்களனேதேவாரிதமனுதமத்தியப்பிரதிட்டன், றியானேகப்பிரகடநித்தியாநித்தியன்றியானபிருந்தேநிராமயன்றமநித்தியனே. (௩௧)

பரமவியோமன்பதுமப்பிரசன்னவதனன்பரானந்தன்பிரமாணப்பிரத்தியாதீதன், பரமான்மன்பிரணதாக்கியானநாசனனேபராபரன்பிராணூர்த்திநிவாரணன்பிரமன், பரமபதன்புராணபுருடோத்தமன்பற்கன்பசுபாசவிமோசகன்பணிபதிகுண்டலனே, பரந்தாமன்பசுபதிபூரணுனந்தன்பாணுற்சிதாங்கிரியுகளன்பணிப்பிரியன். (௩௨)

பிரமவார்சிதபாதன்பணியத்தனவ்வியன்பிதாபாலகேளிகுதூகலிபயாவகனே, பிரமபரன்புருடசெபமத்தலக்குமிகன்பிரமவிற்பிரியன்பகவற்பத்திசுலபன், பிரமணியன்பூதாலயன்போகதாதாபிரகற்பதிபூதிவர்த்தனன்பத்திரனே, பிரமசாரீபுரூஉமத்தியகோசரனேபிரகத்தானபூதிதன்போதமூர்த்தி. (௫௩)

மகாபலனெக்கியனெக்கியபதியெக்கியகோவத்தனமந்திரன்மேகலாதிசன்யாசகனே, மகாவீரியன்மதிரெட்சணன்மந்தகதிமான்மதமத்தனெக்கியபலப்பிரதன்யெசக்கரனே, மகாப்பிராணன்யோகசெம்மியனிரசன்மந்திரபதியாசகப்பிரியன்ரசப்பிரியன், மகானனனிராவணாற்சிதனிரஞ்சகனேமந்திரிமதோன்னதனிராச்சியசுகப்பிரதன். (௫௪)

இலக்கணசம்பூரிதன்வரேணியன்வந்தியனேயிராச்சியரட்சாகரனிரத்தினகருப்ப, னிலக்கியிரமியன்வன்னிவதனன்வச்சிரனேயிலட்டுகப்பிரியன்வேதாந்தகோசரனே, யிலக்கபதிவிசுவதோமுகன்விசுவசட்சுவிலாபகிட்டிஞுபவிசுருதன்விபுவிதாதா, விலக்கியனிலாசியப்பிரியன்வச்சிரநேதாயிலக்கத்தனிலாசியபரன்வாமதேவன். (௫௫)

சத்திகணேச்சுரனேவச்சிரநிவாரணனேசமுசாரவைத்தியன்விகர்த்தன்விசுவேசன், சத்தியசங்கற்பன்சிந்தூரிதமாகும்பன்சம்புசத்திகணேசன்விசுவாதாரன்சுகியே, யத்திகுலாதீச்சுவரன்விவச்சுவத்தாரகனேயவனனேசகசத்துவியத்திகாரணனே, யத்ததன்சடாதரன்சுசம்வேத்தியனஞ்சனதப்பிரியனவ்வியகவ்வியபுத்தனவ்யன். (௫௬)

சருவபேட்சாபேட்சகன்சுதந்தரனேசட்டிருதுவின்குசுமசிராகிசுலக்கணனே, சருவக்கினன்சிருட்டிதிதிலயக்கிரீடன்சடக்கரனிருலோகமந்திரமத்தியகன், சருவசத்திவிருதுசுரபஞ்சனபேதன்சமப்பிராகன்கமர்பராபராயணனே, சருவவிரசியகரன்கேத்திரபத்தாசமுத்திரமதனன்கிப்பிரகெமதரனே. (௫௭)

புத்திமுத்திபலப்பிரதன்கேத்திராதிபனேபுட்பகவிமானிமதத்துவஞ்சிவிபவதனே, புத்திரபவுத்திரதரன்சீசேககாரிபுகல்கொணீசரத்துருமன்றுக்கன்சௌபாக்ய,வத்தனன்கோமானந்தனபிருப்பியகரனேமறைச்சாமமாணரதன்சீப்பிரதனரிடன், வித்தியாப்பிரதன்றருமப்பிரதன்வீரவீரன்விசயப்பிரதகன்கருப்பதோடகனே. (௫௮)

பந்தமோக்கன்றவுற்பாக்கியநாசனனேபாரபிசாரசமனன்பகர்காமதாதா, யிந்திரவிகவிசிவன்புதன்பவுமன்மந்தனிராகுதுட்டசித்தப்பிரசாதனன்முக்கியனே, மந்திரதந்திரப்பிரதிவாதிமுகத்தம்பன்வருடன்மகாலயன்கற்பன்யுகனயனன்மாசன், சந்திபகலிராவகன்னிசிபக்கமிராசிதாரைதினந்திதியோகங்கரணமிலக்கினமே. (௫௯)

ஓரையமுசங்கடிமுகூர்த்தங்கலைகாட்டமொளிதத்தரட்சணன்களசுருதிநிமிட, மேருதுருவன்சத்தரிஷிகாலச்சக்கிரமவிசுவத்தாவரசங்கமன்சிருஷ்ட்டிதிதிசங், 'காரம்பூவாபமக்கினிமருத்துவியோமங்காலமகங்கிருதிபிரகிருதிபுமான்பிரம, ஞாணவுருத்திரன்சிவனீசன்சத்திநாதம்விந்துசதாசிவன்றிரிதசன்பிதிரன். (௬0)

சித்தனியக்கன்னரக்கன்கின்னரன்சாத்தியன்வித்தியாதரன்பூதன்மனிதன்பசுக்கஞ்ச, பத்திரம்பற்பதம்நீள்சரிதுபவோற்பவன்பூதபவியன்பாதஞ்சலஞ்சாங்கியம்யோகம்புராண, மெய்ச்சுருதிமிருதிவேதாங்கஞ்சதாசார

மீமாஞ்சநியாயவித்தரமாயுள்வேதங், கைத்தனுவேதங்காந்தருவங்காவியநா
டகம்வைகானசம்பாகவதமேமானுடமே. (சுக)

பாஞ்சராத்திரமாருகதஞ்சயினமேகாபாலம்வயிரவங்காளாமுகஞ்சாத்
தஞ்சவுர, மாஞ்சைவம்பாசுபதம்பவுத்தம்வைநாயகமேயானசத்தத்துவியத்
தம்மவ்வியத்தம், போந்தச்சேதனமசேதனம்பந்தமோக்கம்போகம்யோகஞ்
சத்தியமணுமகத்துசுவத்தி, வாய்ந்தவும்படுசுவதாசுவாகாசௌஷ்ட்டுவஷ
ட்டுவௌஷ்ட்நெமஞானம்விஞ்ஞானம். (சஉ)

ஏகமுறுபோதனுபோதனுனந்தனேகனேகாக்கரமந்திராதார, னேக
வீரன்னேகாக்கரபராயணனேயேககந்தியேகானேகச்சொருபதிருக்கு,சோ
கமறுதுவிருபன்றுவிமுக்கோபன்றுவிரதன்றுவியாககதன்றுவிமாதுருவே,சே
கிறுவிவதனன்றுவயாதீகன்றுவந்துகினன்றிரிதரமாதிரிகரன்றிரிகுணத்தும
னே. (சங)

சதுர்த்திரிலோகாதிசத்திபீச்சுரன்றிரேதாதருந்திரிலோசனன்றிரிவற்
கப்பலதாயகனே, சதுர்விதவசோவிருத்திபரிவிருத்திப்பிரவத்தகன்சதுரா
ன்மகன்சதுர்ப்பாகுசதுர்த்தந்தன், சதுர்வன்னமயோபாயன்சதுர்த்திசம்ப
வனேசதுர்வன்ஞச்சிரமாசிரயன்சதுர்முகனே, சதுர்த்திபூசனப்பிரதன்சது
ர்ப்பாதநிருபன்சதுவிதிதிவ்வியமோக்கவரப்பிரதாயகனே. (சச)

பஞ்சகரன்பஞ்சாக்கரான்மன்பஞ்சதாலன்பஞ்சவன்னன்பஞ்சப்பிரா
ணமாதிருகன், பஞ்சபாணன்பஞ்சபாணநிவாரிதனேபஞ்சகிருத்தியன்பஞ்
சாக்கரப்பராயணனே, பஞ்சசிவான்மகன்பஞ்சபதுமமயபூர்த்திபஞ்சபட்சப்
பிரியன்பஞ்சாசியனன்பஞ்சாதாரன், தஞ்சமுறுசடங்கத்துவாந்தவித்துவமு
சிசடங்குலமகாவிருதன்சட்கோணபீடன். (சரு)

சட்குணன்சடுவெயிரிவற்கவித்துவஞ்சிசட்கருமன்சட்சக்கரப்பரிவாரித
னே,சட்கிரந்திபேதகன்சண்முகப்பிராதாசடூர்மிபயநாசன்சட்கருமதுரகன்
சட்டிரசாசிரயன்சட்சக்கரதாமன்சட்குணன்சண்முகன்சத்தபாதாளசரணன்,
நட்பமுறுசத்தத்தீபோருமண்டலனேசத்தரிஷிகணவந்திதன்சத்தவேது. ()

சத்தசத்திவரப்பிரதன்சத்தசுராசிரையன்சத்தாத்திகேளிகாசாரன்சத்
தகிரியன், சத்தசந்தோநிதிசத்தசுவலோகமகுடன்சத்தச்சந்தாமோகவதன்
சத்தச்சுரனே, சத்தமாதிருநிடேவிதன்சத்தசந்தோமுகப்பிரபுசத்தாங்கார
ச்சியசுகத, னட்டவைசுரியவிவத்திதனட்டசாத்திசமானஸ்ரீயட்டாங்கயோ
கபலப்பிருது. (சஎ)

அவமறுக்குமட்டமூர்த்திதயேமூர்த்தியளிமூரலுமட்டபத்திராம்புசா
சிரய, னவிலட்டப்பிரகிருதிகாரணனேநரநாராயணத்துதியனவநாதமகா
நாத, னவநாதசாத்தியாபிநவநாதவிபூடிதநவரத்னவிசித்ரங்கனவத்துவார
நிடேவித, னவசத்திசிவோத்திருதனவத்துவாரபுராவர்த்தநவநித்தியானுசா
சிதனவதுற்காநிடேவிதன். (சஅ)

தசாசியாத்தியேயவிக்கிரகன்றசப்பிராணன்றசாக்கரமகாமந்திரன்ற
சான்மகனே, தசாசியன்றசதிக்குப்பதிவந்திதன்சீர்த்தசபுசன்றசேந்திரியநி
யாமகனேயேகா, தசாதிபிருத்திரந்துதனேகாதசாக்கரன்றுவாதசோர்த்த
ண்டோர்த்தண்டன்றுவாதசாந்தநிகேதனன்றுவா, தசாதித்தியதேசசன்று
வாதசத்துவாதசாட்டாதிதோர்த்தாண்டாத்திரநிகேதனனே. (சகூ)

* திதித்ததிரியோதசாபிதாபின் ஞவிசுவதேவாதிதேவன்சதுத்தசேந்திரியவரதன், சதுர்த்தசசகப்பதிசதுர்த்தசசகதன்சதுர்த்தசமனுத்துத்யன்சதுர்த்தசேந்திரனே, சதுர்த்தசாகெடிவியாட்டியன்சாமபஞ்சதசிபஞ்சதச்சிவதவமுசுநிருமலனே, கதிர்ச்சோடசேந்துகளான்மகன்சோடசேந்துகளாவாசனேசோடசாதாரநிலையன், றதைச்சோடசச்சுரமாதிருகன்கலையின்சத்ததசீசத்ததசசத்ததசாக்கரனே. (௫௦)

அட்டாதசோடதிசிருட்டியனேயட்டாதசாதிப்பதியட்டாதசப்புராணகிருதே, யட்டாதசவிசாதிக்கிருதேயட்டாதசவிதவிமிருதன், றட்டாதவேகவிஞ்சபுமானேகவிஞ்சத்தியங்குளிபல்லவன்சதுவிம்சதிதத்துவான்மன், விட்டாரும்பஞ்சவிஞ்சாக்கியபுருடன்சத்தவிஞ்சதியோகன்சத்தவிஞ்சதிதாரேயன். (௫௧)

துவாத்திரிஞ்சப்பயிரவாதீசன்சதுர்த்திரிஞ்சமகாவிருதன்சடுத்திரிஞ்சசத்துவசம்பூதி, குவாலட்டத்திரிஞ்சகலாதனுவனேநவவேகோன்பஞ்சாசத்துமருதுதுவற்கநிற்களனே, தவாதபஞ்சாதசக்கரசேணிபஞ்சாசதுருத்திரவந்திதசச்சிதானந்த, னவாவில்பஞ்சாசதுவீண்டுசெத்தீசனுலரிக்கும்பஞ்சாசகன்மாதிருகாலையனே. (௫௨)

திதித்துவளர்துவிபஞ்சாசதுத்துவிபசேணிதிரிசந்தியாக்கரசமுசிரையநாதன், சதுச்சட்டிமகாசித்தயோகினிப்பிருந்தவந்திதன்சதுச்சட்டியருத்தநிருத, சதுச்சட்டிகலாநிதிப்பிரபுவேயட்டசட்டிமகாதீர்த்தகேத்திரவயிரவேசன், சதுர்நவதிமந்திரான்மனசண்ணவத்தியாதிகப்பிரபுசதானந்தன்சதத்திருதிபவனே. (௫௩)

சகத்திலுயர்சததாராவராயுதன்சதபத்திராயதெட்சணன்சதானிகன்சதமகனே, சகத்திரபத்திரநிலையன்சகத்திரபணியாரன் சகத்திரசீரிடாபுருடன்சகத்திரபாதன், சகத்திராக்கன்சகத்திரநாமசமத்துதியன்சகத்திராக்கப்புருகூதமலாபகனே, பகைத்தவிடமுமிழ்ந்தசகத்திரபணிப்பிருதுப்பணிராசகிருதாசனப்பிரியவரசன் (௫௪)

துதிவளரட்டாசீதிசகத்திரமாவிருடிசுரமகாவிருடிகணதோத்திரபாடிதனே, சதுர்மருவுமிலக்காதாரப்பிரியனிலக்காதாரமனோமயன்சதுவிலக்கசம்பிறிதி, சதுவிலக்கப்பிரகாசன்சதுர்சீதியிலக்காஞஞ்சீவாஞந்தேகசமுத்திதனே, குதிகளெழிற்கோடிசூரியப்பிருதிகாசன்குளிர்தூங்குகோடிசீதாஞ்சுநிருமலனே. (௫௫)

மனந்தளர்வறுஞ்சிவோற்பவாதியட்டகோடிவைநாயகதுரந்தரமகாதேவன், வனந்தழையவளர்சத்தகோடிமகாமந்திரமந்திரிதாவயவதுருதிமனுதீதன்; றினிந்ததிரியத்ததிரிஞ்சககோடிசூரசேணிபிரணதபதாம்புயவாசிரேட்டன், னனந்தசத்திச்சிவத்தியானனேயனந்ததேவதாசேவியனனந்தஸ்ரீயனந்தன். (௫௬)

வேறு.

அனந்தமுனிசமுத்துதனனந்தமுனிசமுத்தித
னனந்தநாமார்த்தகனனந்தசவுக்கியகர
னனந்தவானந்தமயனனந்தவானந்தபர
னனந்தவானந்தவரனனந்தவானந்தசுகன். (௫௭)

---

* இவ்விருத்தம் பிரதிகடோறு மிவ்வாறே யிருத்தலானும், இதிலோரடியை நீக்கின் சகத்திரநாமங் குறைதலானும், இஃது ஐந்தடியான் மிகுத்து வந்த தெனக்கொள்ளுத லமைவுடைத்தென யூகிக்கின்றாம்.

வேறு.

ஓதியநாலாறுபெயர்தலைப்பெய்தசகத்திரமுமும்பர்போற்ற
னாதிபரமானவிநாயகர்க்குரியவாமிவற்றைநவிலாசார
நீதியொடுநியமமொடும்வைகறையில்யாரொருவர்நிகழ்த்தினாலுங்
கோதில்பயனவர்க்கிம்மைமறுமையெலாங்குடங்கையினாமலகமாமால். (ருஅ)

ஆயுளாரோக்கியமைசுரியந்தயிரியஞ்சௌரியம்பல்கீர்த்தி
யாயுமேதைதமைதெளிவுகாந்திசௌபாக்கியமுமன்றேமேவுந்
தூயதாட்சணியதயைகமஞ்சத்திதருமமொடுதொகுசீலம்மேர்ச்
சேயும்வான்பிரமதேசுதாரங்காம்பிரங்குலமுமெழிலார்சீலம். (ருகூ)

ஆனசபாபாண்டிதம்பூச்சிதந்தவுத்தியம்வீரியந்தாவாத
ஞானம்விஞ்ஞானமாத்திகந்திரநல்லறமாதிநான்குங்கூடு
மானவேலரசரவர்மனைவியர்மைந்தர்களமைச்சர்வசியமாவ
ரீனமுறுமிடாகினிசாகினியாகக்கிரகமுதலெனைத்துந்தீரும். (சுo)

உலகாட்சிதரும்பகைதீக்கனாக்கலகந்தூற்கருமமூலவாப்பாவக்
கொலையாதிதீமையிடர்வறுமையெலாமெரியுறுவைக்குப்பையஞா
னலமாருமட்டமாசித்திதிரிகாலமுணர்ஞானம்வாய்மை
விலகாதவொழுக்கமுறுகொடைகல்வியாதிநலமேவாநிற்கும். (சுக)

குட்டம்விசூசிகைசயந்தான்பிரமேகங்கயநோயுங்குன்மம்விக்கல்
மட்டிகமச்சரங்காசஞ்சுவாசங்குதாவருத்தமகோதரநோய்சூலை
கட்டம்வலிசுரமூலம்பித்தங்கண்டமாலைவீக்கங்கபமாசோப
மொட்டும்விரோசிகம்வாதமுறுசன்னிவிடமாதியுறுநோய்தீரும். (சுஉ)

சூத்திரர்கண்மடமாதர்பதிதர்படித்தாலுடனேதூயராகி
வாய்த்தபெருஞ்சுகம்பெறுவர்பல்குமிட்டகாமியத்தைமதித்தோரோதி
னீத்தரிட்டமறுமையினுங்கதிருலகமுதலாகநீலோகத்
தார்த்தபெரும்பயனுகர்ந்துமேலானசிவலோகமடைவினெய்தி. (சுங)

நந்திமுதல்கணத்தலைவர்வியந்திடப்பட்டிமயவரைநங்கையோடு
மந்திநிறச்சடைப்பெருமான்மகன்மைகொளநெடுங்காலமாங்குவாழ்ந்து
தந்திமுகன்றிருவருளானெடும்புவியிற்காமமெலாந்தையத்தோன்றிச்
சிந்தைமகிழ்திருப்பணிகள்பலசெய்துஞானியராய்ச்சிவத்தைச்சார்வார். (சுச)

கருமபோகத்தைவெறுத்தவரோதிற்பந்தமெலாங்கழன்றானந்தம்
பெருகுபோகக்கடலின்மூழ்குவர்கள்பிறைமருப்புப்பெரியபண்டி
யொருவனார்க்குரியசதுர்த்தியிற்பூசைபுரிந்திவற்றையோதிற்சொன்ன
பொருவிலாப்பெரும்பயனிற்சதமடங்குபயனதிகம்புணருமன்றே. (சுரு)

ஓதுதலேயோதுவித்தல்கேட்டல்கேட்பித்தலுறவெழுதல்பூசை
யாதரவிற்செயல்செபித்தலாதியுளொன்றனையேனுமன்பாற்செய்யின்
மேதகமுன்மொழிந்தபயன்மேவுமினிப்பலவிரித்துவிளம்புமாறெ
னேதமறத்திரிகாலமியம்பமாட்டானொருகாலேனுஞ்சொல்க. (சுசு)

தோத்திரநித்தலுமொருகான்மாட்டாதான்வருசதுர்த்திதோறுமேவு
மார்த்தியொடுஞ்செய்திடுகவதுவுமாட்டான்பிறனுக்கருத்தநல்கிச்
சீர்த்தருமாசெய்விக்கதிரவியமில்லான்சகத்திரத்தின்மேலாய்க்
கீர்த்திபெறும்பெயரிருபத்தொன்றவற்றையேனுமுறக்கிளக்கமாதோ. (சுஎ)

வேறு.

கணபதியேரம்பனமோகன்றரணீதரனேகலாதரனேகசிபநந்தனவிநா
யகன்மா, கணபதிகிப்பிரப்பிரசாதனாசாபூரகன்வரதன்செயனமுதமந்திர

னேயிலக்க, கணபதியேவர்ச்சித்தன்பீசவிநாயகன்மங்கலவிநாயகனுடுண்டி
விநாயகனேபிரிய, கணபதியேசித்தவிநாயகன்சிந்தாமணியேகாமர்மகோற்
கடனென்னக்கரைந்தவிவையவையாம். (சுஅ)

இந்தவிருபத்தொருமந்திரமேனுமுன்னரிமையவராதியர்வெவ்வேறெடு
த்தியம்பப்பட்ட, வந்தயகாமந்திரம்பன்னிரண்டேனுநித்தமறையுணர்க்குச்
சகத்திரநாமப்பயனேயடுக்குந், தொந்தமுறவிருவகைமந்திரமியம்பினவர்க்
குத்தொகுப்பினெண்மடங்கதிகஞ்சுரக்குமுனிவரனே,பந்தமுறும்பிணியாள
ராதியர்களிவையும்பன்னரிதேலிங்கிவற்றுளொன்றேனும்பகர்க. (சுகூ)

விரதநியமத்தொடுஞ்சகத்திரநாமத்தைவிநாயகனுர்சதுர்த்தியினிற்ெறு
டங்கிமதிநான்கு, பரவலுறுவார்க்கிறந்தபவமிருபத்தொன்றிற்பயின்றிடுமிப்
பவத்தின்மேல்வரும்பவத்தினீங்கா, துரனெடுதுன்னுறுதீமைமூவகையுநீக்கி
யுன்னலுறநன்மையெலாமுன்னியவாறுதவிச், சுரர்கணறுமொறுப்பமறுமை
யிற்சிவலோகத்திற்றெருக்ககணமுதன்மையுந்தோலாதளிப்பர்சுமுகர். (எO)

தேவர்தொழுதெழுங்கருணைச்செல்வனேபோற்றிசிறந்தொளிருமங்கல
சொரூபனேபோற்றி, யோவறுசித்திகளனைத்துமுதவுவோய்போற்றியொலி
கெழுகிண்கிணிபாதசாலநூபுரங்கண், மேவியொளிர்சரணனேபோற்றிமத
தாரைவிரவியதிண்கபோலனேபோற்றிநினதருளாற், பாவமொடுபலபிணி
யின்பம்புவறுமைகளும்பலவானவிடர்களையும்பாற்றுகவின்புறவே. (எக)

வேறு.

துன்னுபெயராயிரமுந்துதித்தவருக்குறுபயனு
மின்னபடியெனக்கூறியியம்புமுபாசனைக்காதை
தன்னையெவர்கேட்டாலுந்தகவனுட்டித்தவர்க்கெய்து
மன்னுபயனுறுமென்றான்மலராளிவியாதனுக்கே. (எஉ)

கழலணிந்தவிறற்சோமகாந்தனேயவரவர்கள்
விழைவினெடுமனுட்டித்தவியத்தகாதைகள்புகன்றாம்
பழையதிருவிளையாடற்பண்பினையுங்கேளென்று
பிழைதபுமாதவத்துயர்ந்தபிருகுமுனிவரனவில்வான். (எங)

சகத்திரநாமப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ஙOசஎ.



உபாசனகாண்டம் முற்றுப்பெற்றது.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# விநாயகபுராணம்.

## இரண்டாவது லீலாகாண்டம்.

### வக்கிரதுண்டர்திருவவதாரப்படலம்.

திங்களும்பனிநீர்க்கங்கையுமணிந்தசெஞ்சடைவிநாயகப்பெருமான்
பொங்கருள்வழங்குங்காதைகளினும்புகலெனவியாதனங்கிரப்பக்
கொங்குமிழ்ந்தலர்ந்தமுள்ளரைக்கமலக்குடிபுகுங்குண்டிகைக்கரத்தோன்
தங்கியவிறைவன்றிருவிளையாடற்றனைமுறைசாற்றுதல்வலித்தான். (௧)

கடங்கவிழ்கரடக்களிற்றுமாமுகவன்கருணையாலுகந்தொறுங்கடல்சூழ்
இடங்கொளுமுலகில்வேறுவேருருவமெடுத்தருண்மறைநெறியொழுகா
மடங்கிளர்மனத்துக்கயவரைப்புரட்டிவரந்தருந்திருவிளையாடல்
அடங்கியபொறியின்மாதவமியற்றுமமைவனேயளவிலவாகும். (௨)

களகளமுழங்குமழையெனமதநீர்கான்றொளிர்கபோலனேபோல
அளவிடற்கரியதாயினுமன்னோனாடியதிருவிளையாட்டுள்
இளநகைமடந்தைபாகனாரயில்வேலேந்தலுக்கெடுத்துமுன்னுரைத்த
வளமலிவிளையாட்டாறிரண்டவைதாம்வரன்முறையுரைத்திடப்படுமால். (௩)

வக்கிரதுண்டர்வயங்கியசிந்தாமணிவளர்கசானனரருள்செய்
விக்கினராசர்விறன்மயூரேசர்விளங்கியபாலசந்திரர்சீர்
தொக்கதூமிரகேதுப்பெயரிறைவர்துலங்கியகணேசரென்வினைதீர்
மெய்க்கணபதியேமகோற்கடர்துண்டிவிநாயகர்வல்லபைகணேசர். (௪)

அத்தகுவிளையாட்டாறிரண்டினையுமாற்றியதிருவவதாரம்
இத்தகுபெயர்ப்பன்னிரண்டினால்வெவ்வேறியம்பிடப்பட்டனவாகும்
உத்தமவிவற்றுள்வக்கிரதுண்டருஞற்றியதிருவிளையாடல்
முத்தொழின்மூவர்தமையுயிர்த்தளித்தமுறைமைமுன்மொழிந்தனங்கண்டாய்.

வக்கிரதுண்டர்திருவவதாரப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௫.

### சிந்தாமணிவிநாயகர்திருவவதாரப்படலம்.

இரந்தவர்வறுமைபிணிமுதலானவிடரெலாமிமைக்குமுன்னறுத்து
வரந்தருஞ்சிந்தாமணிவிநாயகனார்மரபினித்தெரிக்குதுங்கேண்மோ
அரந்தையைநீக்கிநால்வகைப்பொருளுமளித்திடுந்தமிழ்வளர்நாட்டுள்
உரந்தருமபிசித்தெனவொருவேந்தனுலகெலாமாண்டினிதிருந்தான். (௧)

கள்ளவிழ்மலர்த்தார்மானவேல்வலத்துக்காவலன்கற்பினுட்சிறந்த
தெள்ளொளிவதனக்குணபதியென்னுந்தெரிவையோடளவளாய்வாழ்நாள்
பிள்ளையின்மையினாலமைச்சர்பாலுலகம்பேணரசாட்சியைநிறுவித்
தள்ளுமெல்லிடையின்மடவரலோடுஞ்சார்ந்தனன்றடநெடுங்கானம். (௨)

நெடில்படுகானிற்றவவனமொன்றுநேரெதிர்கண்டதிற்புகுந்து
படியகமுழுதுஞ்செய்தமாதவங்கள்படிவமொன்றெடுத்திருந்ததுபோற்
கடிகமழ்நீறுமக்கமாலிகையுங்கவின்பெறவணிந்தமெய்க்கோல
வடிவொடுமிருந்தவைசம்பாயனனைமலர்விழிகளிப்புறக்கண்டான். (௩)

அடியறவெறிந்துசாய்த்தநீள்பனைபோலடித்தலமுடித்தலைதீட்டிப்
படிமிசைக்கிடந்தான்முனிவரனந்தப்பார்த்திபன்றனையெதிர்நோக்கி
நெடிதுகண்ணோடியெழுந்திருநீயார்நீயிவணுற்றகாரணமென்
முடிவுறக்கூறென்றருளினன்வேந்தன்மொழிந்திலனெழுந்திலன்மாதோ. ()

சரணமேசரணமெனவெதிர்கிடந்ததராபதிகருத்தினைத்தவமே
யரணமென்றாற்றும்வைசம்பாயனர்தமகத்துறுதியானத்தாலறிந்து
தரணிமன்னவனேயுனக்கருந்திறல்சேர்தனையனுண்டாகுகவென்றான்
இரணியம்வறியோனெய்தியாங்குவகையீண்டவந்தெழுந்துமொழியும். ()

அராவிடர்நுழையமயிலினமகவுமணிவரைக்கயிலைநாயகனைப்
பராவிடந்தவத்துப்பெரியவசிறியேன்பயிறொறுமமிழ்தெனவினிக்கும்
திராவிடதேயத்தரசுசெய்தாணைசெலுத்தபிசித்தெனும்பெயரேன்
விராவிடர்நீக்குமைந்தனின்மையினான்மேவினேனினதுபொற்சரணம். (௬)

மறுவறநோற்றமாதவர்கிளக்குமறைமொழிகனவிலும்பிழையா
துறுவரமைந்தனுறுகவென்றடியேற்குரைத்தனையுரைத்தவாறடியேன்
பெறுவழியாதுபேசுகவென்றான்பெரிதுளமிரங்கியம்முனிவன்
சிறுமைவிட்டகலச்சிவபிரான்பஞ்சாக்கரத்தினைச்செவிமடுத்துரைப்பான். ()

வேறு.

துங்கவெண்டிரைக்கடலினீணிதிதோய்தருஞ்
சங்கமத்தின்மேல்புறத்திலன்னமுஞ்சங்கமுங்
கொங்குயிர்த்தபன்மலருங்கொண்டெழில்கூர்ந்துநீர்
பொங்கியோர்மடுப்பொழிலடுத்துறப்பொலிந்ததே. (௮)

காவன்மன்னவவாங்குச்சென்றுநின்கற்பினாள்
ஏவல்செய்திடவிருந்திருந்தவந்திங்கணான்
கோவிலாதுசெய்தஞ்செழுத்தெணியோமமுந்
தாவிலாதுசெய்துனதிரும்பதிசார்மதி. (௯)

கணபதிப்பெருமானையீன்றமுக்கண்ணனார்!
அணவுமின்னருளாலுனக்கருமகன்வரும்
தணவெனப்பெருமுனிவனோதலுந்தாழ்ந்தவன்
குணவதிப்பெயராளொடும்வழிக்கொண்டனன். (௧௦)

அந்தவார்மடுப்பாங்கடுத்தபிசித்தெனு
மைந்துகொண்டதோண்மன்னர்மன்னவன்மற்றவன்
முந்தவேயடுத்தரியமாதவமுயங்குறும்
கந்தமென்மலர்ச்சேக்கையானைநேர்கண்டனன். (௧௧)

பொற்றதாமரையானிருங்கழல்போற்றுபு
மற்றைநாண்முதலாகத்தானுமொர்மருங்கிடை
உற்றிருந்தவத்தோடுமஞ்செழுத்தோதினான்
கற்றைவார்குழன்மாதுகாதலிற்பணிசெய்தாள். (௧௨)

சுந்தரந்திகழ்குணவதிப்பெயர்த்தோகையும்
கந்தமென்குழல்வாணியுங்கலந்தளவளாய்க்
கந்தமூலமுங்கனிவருக்கமுங்கைக்கொடு
தந்தநாயகர்தமக்கிரும்பணிசெய்யுநாள். (கங)

ஒருதினந்தனிலொளிரும்வெண்மலர்வாழ்க்கையாள்
கருகுகூந்தலாற்கவரிமாவினைவென்றவள்
பெருகுபேரெழினுதலினாற்பிறைவென்றவள்
தருணமல்கியசெவ்வியாளிதுதனைச்செய்தாள். (கச)

திகழ்ந்தமுத்தவெண்முறுவல்வாணகைசிறிதெழ
முகிழ்ந்தபூண்முலைவிம்மமொய்குழல்சோர்தர
நெகிழ்ந்துமேகலைநிலத்தில்வீழ்ந்திடஞெரேலென
மகிழ்ந்துசிந்தையின்மலரவன்மடிவைகினாள். (கரு)

வேறு.

மடித்தலத்தணங்குசென்றுவைகலும்யோகநீங்கப்
பொடித்தனவுரோமபந்திபுந்திவேள்கணைகள்பாய்ந்த
முடித்தலைநான்குபெற்றமூதுலகீன்றதாதை
பிடித்திடற்கரியகாமப்பித்தெழவையமுற்றான். (கசு)

இவளுரோகணியோவிந்திராணியோவிரதிமாதோ
துவளுமோகினியோகஞ்சத்தோகையோமாயன்மாயை
திவளவந்திட்டதொன்றோதிலோத்தமையணங்கோவைய
மவளெனுமரம்பைதானோயார்கொலோவென்றையுற்றான். (கஎ)

இருந்தவண்முகத்தைநோக்கியேந்திளங்குவவுக்கொங்கை
முருந்துறழ்முறுவற்செய்வாய்முகில்புரைகூந்தல்வேய்த்தோள்
திருந்தியதொடிக்கைப்பூந்தாட்செல்வநம்வாணியோவென்
றருந்துவான்போலக்கண்ணாலவயவமுழுதும்பார்த்தான். (கஅ)

இலவிதழமுதந்துய்ப்பயான்முனம்யான்முனென்று
குலமறைவாய்களார்வங்கொண்டெழுந்தனபூண்கொங்கைத்
தலநுதலோதியல்குற்றைவரத்தழுவவேழ்கை
நலமுறவெழுந்தவோர்கைநற்கலைநீத்ததன்றே. (ககூ)

அரைக்கலையவிழ்த்தவன்பனகத்துறுதுணிவுநோக்கி
விரைக்குழல்வாணிவல்லேவெருவினண்மடியினீங்கித்
தரைக்கணேநின்றுமீச்செறன்னுளக்காமங்காத்துத்
திரைக்கும்வத்திரநீசூழ்ந்துன்சிந்தையைக்காக்கவென்றாள். (உ௦)

நங்கைநீயுரைத்தவாறேநற்கலைபின்னேசூழ்வல்
இங்குயிர்போகாமுன்னேயிருஞ்சுகங்கொடுக்கவென்றான்
அங்கநான்மறைகடெள்ளியகிலமுமுயிர்த்துமேன்மை
தங்கியதெய்வவொண்கேழ்த்தாமரைத்தவிசினானே. (உக)

அல்லியங்கூந்தற்செவ்வாயணங்கினளிதனைச்சொல்வாள்
தொல்லைநம்பாவத்தீமைதொகுபயனிறைவாலிங்கு
மெல்லவந்தடுத்ததன்றிவேறிலையீது கண்டாய்
கல்வியுமறிவுமேனைக்கடப்பாடுமினியென்னாகும். (உஉ)

ஆற்றுறுதவந்தானெவ்வாறரும்பயனளிக்குமிந்தப்
போற்றறுதவத்தாலெய்தும்புண்ணியம்வேண்டாவென்னில்
தோற்றறுதவத்தினுடைப்பட்டமுச்சுடர்க்கணீசன்
கூற்றுயிர்குடித்ததாளான்கொம்மெனச்சபிப்பான்றிண்ணம். (உங)

அடுத்தவித்தவந்தான்முற்றுமளவுநீயெனக்குத்தந்தை
தொடுத்திடுங்காதனண்பதொழுத்தையேன்மகளேயென்னு
வெடுத்தசூளுறவுங்காட்டியினியனகிளந்தாள்வேதன்
கடுத்தலைக்கொண்டாலன்னகாமத்திற்றணியானாகி. (௨௪)

வலிதினிற்புணருமாறுவலித்தனனதனைத்தேர்ந்த
ஒலிகெழுநாவின்மங்கையொழிந்தந்தமடுவினோர்சார்
நலிவறுதேவரோடுநண்ணிமாதவங்களாற்றுங்
கலிகெழுகழற்கால்விண்ணின்காவலன்மருங்குச்சார்ந்தாள். (௨௫)

கதுமெனவெழுந்துதீந்தேன்கமழ்ந்தளிவரிப்பண்பாடும்
பதுமனும்விடாதுபின்னேபாவையைத்தொடர்ந்தாங்குற்றான்
புதுமையொன்றுளதென்றெண்ணிப்புரவலன்றவிசுநல்கி
மதுமலர்பதத்திற்பெய்துவணங்கினனிருந்தானோர்சார். (௨௬)

நாணொடுமிடைந்தசிந்தைநாமகண்முகமுநோக்கி
மாணொளிசாம்பிநின்றமலரவன்முகமுநோக்கி
ஏணொடுநின்றவானோரெம்பிரானிலகுசெம்பொற்
பூணொளிர்முலையாளோடுபோந்ததிங்கெவற்றிற்கென்றார். (௨௭)

தாமரைக்கிழவனென்றுஞ்சாற்றிலனிருப்பநின்ற
ஏமருமமரர்தம்முளியம்புவார்தவமேற்கொண்டு
சேமவுண்டிகளிற்பன்னாடீர்ந்திடுமியோகத்தார்க்கும்
காமவெங்கடலைச்சற்றுங்கடப்பதுகூடாதென்றார். (௨௮)

குழுமியவமரர்தம்முட்கூறியமாற்றங்கேட்டு
விழுமியவெண்கட்செல்வன்விசையொடங்கெழுந்தான்செல்ல
ஒழுகியதுலையுறாதவீரியமொழுகுமந்தச்
செழுவியமடுவுண்மேல்பாற்றுறையிடைச்சென்றுதோய்ந்தான். (௨௯)

தீர்த்தநீராடித்தூய்மைதிகழ்ந்தவனிருக்கைபுக்கான்
கூர்த்தபூரணைவந்தெய்தக்குணவதியோடுமன்னன்
ஆர்த்தவாரிதிசென்றாடியையெனமீண்டுபோங்காற்
கார்த்தபூங்குழலினாட்குக்கதுவியதுலவாத்தாகம். (௩௦)

மைவளம்பழுத்தகண்ணாண்மடுவிடையிறங்கியந்த
மெய்வளர்துறைநீரள்ளிமென்கையாற்பருகியிட்டாள்
தெய்வதயோகந்தன்னாற்சிந்துமிந்திரியமன்னாள்
ஐவளர்வயிற்றுட்புக்கங்கருங்கருவாயிற்றன்றே. (௩௧)

முதியபேரறிவிற்சான்றமுனிவரன்வகுத்துக்கூறும்
மதியொருநான்குஞ்செல்லவயங்கியதருப்பணாதி
விதியுளியியற்றிப்பின்புமெல்லியலோடும்வேந்தன்
துதிவளர்தனதுமூதூர்தொன்றுபோலெய்திவாழ்ந்தான். (௩௨)

வேறு.

அன்பாற்றேவர்கடனாதியபிசித்தினிதுதினமாற்ற
ஒன்பான்மதியநிறைந்ததன்பினுதரத்தமர்ந்தகருநிரம்ப
இன்பார்தரவேகுணவதியென்றியம்பும்பெயராண்மகவுயிர்த்தாள்
நன்பார்வியப்பவவ்வேந்தனயந்துசாதவினைமுடித்தான். (௩௩)

தந்தைதருமம்பலவாற்றித்தகுஞ்சூதகம்விட்டொழிந்ததன்பின்
அந்தண்மறையோர்தமைக்கூவியறையும்பெயர்யாதெனவினவ
மைந்தன்பிறந்ததிதிவாரமற்றுமிகவாய்ந்தெவரானுஞ்
சிந்தைமகிழ்ந்துமதிக்குமிகுதிறத்தைநாடிக்கணனென்றார். (௩௪)

நீண்டவுருவுமேகத்தினிறமும்வெருக்குவிழிவிழியும்
மாண்டவரையினகன்மார்புமருவிவேறோரிமையம்போற்
காண்டலுறுமக்கணன்றெருவிற்கலந்துவிளையாட்டயர்பருவம்
பூண்டபொழுதேயரைக்கணத்திற்போய்மீள்குவன்யோசனைநூறு. (௫௫)

முழுவெண்மதியமொருநாளைமுந்நீர்க்கடலின்முகட்டெழுந்து
விழுமநெடுவானிடைவந்துமேவக்கண்டக்கணனென்பான்
கழுமுமிளமைப்பருவத்தாற்கடுகவெழுந்துகரம்பற்றித்
தொழுதுவணங்கிநயமொழியைச்சோமனுரைப்பவிடுத்திட்டான். (௫௬)

மதங்கண்மூன்றுஞ்சலசலெனமண்ணிற்பொழியவொருவேழங்
கதங்கொண்டெழுந்துவெளின்முருக்கிக்காவற்பாகர்தமையடர்த்துப்
பதங்கைமருப்புவாலிவற்றாற்பாழிவயவர்பலர்வீய
அதங்கொண்டணிகொணகர்வாயிலடைத்துநின்றதொருதினமே. (௫௭)

சூலப்படையானன்றுரித்ததோலாமதத்துப்பெருங்களிறே
சீலப்பரமன்றென்கூடல்சிதைப்பவமணர்படைத்துகைத்த
கோலப்பகடோவெனநகரங்குழைந்துநடுங்கவதுகேட்டு
வாலப்பருவத்துறுங்கணனம்மதமால்யானைமருங்கடுத்தான். (௫௮)

சீறியெதிர்ந்தவடல்வேழஞ்சிறுவன்கரத்தாற்கவுட்புடைத்தான்
கீறிநெடுமத்தகத்தோடுகிளருங்கொடிற்றினிழிகுருதி
ஊறியிழியுமதத்தோடுமொன்றாய்விரவியிந்திரவில்
வீறிவரைமேற்கிடந்ததெனவிளங்கவுடைந்ததக்களிறே. (௫௯)

வேறு.

வயதினிற்சிறியனேனும்வலியுறுதருமந்தானம்
வியவுறுமொழுக்காசாரம்விருந்தினர்தம்மையோம்பல்
நயனமூன்றுடையான்பூசைநலத்தகுஞானஞ்சீலம்
பயனுறுகுணங்களேனைப்பண்பினும்பெரியனானான். (௬௦)

கந்தடுகளிற்றைவென்றகணனெனுஞ்சிறுவனோர்நாட்
டந்தையைவணங்கியன்னான்றகவிடைகொடுப்பக்கொண்டு
பைந்துணர்க்கானிற்சென்றுபலமலரணிந்துபூநீர்ச்
சுந்தரத்தடாகமொன்றுதோன்றவச்சூழலுற்றான். (௬௧)

நித்தலுநீறுபூசிநிகரில்கண்மணிகடாங்கி
அத்தனைக்கமலத்தானுமலர்ந்தவுன்மத்தத்தானும்
பத்தியிற்பூசையாற்றிப்பழங்கிழங்காதிதம்மால்
மெத்தியவிருந்துமோம்பிவிளங்குமந்திரங்கணித்தான். (௬௨)

அயுதவாண்டெழுத்தைந்தெண்ணியருந்தவமியற்றிப்போக்கிப்
பயிலொருதாளினின்றுபசும்புனன்முப்பதாண்டும்
இயல்வளியொருபானாண்டுமினிதுதுய்த்தொருபானாண்டங்
குயிர்வளருணவொன்றின்றியுக்கிரத்தவஞ்செய்தானே. (௬௩)

அன்றவனிருந்துநோற்குமருந்தவச்சூழலெல்லை
தென்றலேயன்றியேனைத்தீவளிசார்ந்ததில்லை
என்றுமிக்கழற்றிற்றில்லையிமமிகச்சொரிந்ததில்லை
கன்றுறுசாதிபேதவயிரமுங்கதித்ததில்லை. (௬௪)

ஆற்றுமாதவத்தினின்றுமழலெழுந்தந்தரத்தை
நீற்றலுமாற்றாராகிநேர்ந்தவிண்ணவர்களின்னான்
மாற்றருந்துறக்கமாதிவாழ்வினுள்யாதைவேட்டோ
போற்றுகின்றனனோன்பென்றுபுந்தியிற்றேர்ந்துந்தேறார். (௬௫)

கயிலையங்கிரியைவல்லேககனமேயாருச்சென்று
மயிலிளஞ்சாயல்வேய்த்தோண்மாதொருபாகயான
அயில்பெறுசூலத்தண்ணலடிமலர்முடியிற்சூட்டிப்
பயிலுறும்வேதமோதிப்பண்பொடுமிதனைச்சொன்னார். (௪௬)

பையரவணிந்தவெண்டோட்பரமனேயொருவன்காணின்
மெய்யவிர்நீறுபூசிவிளங்கியவக்கமாலை
கையினிற்பிடித்துநின்பொற்கழலிணைகருத்திலுன்னிப்
பொய்யறுதவங்கள்சாலப்பொற்புறப்புரிகின்றானால். (௪௭)

அத்தவனுருவினின்றுமருந்தவக்கனலிநீடிப்
பைத்தவிண்ணுலகினெங்கள்படியங்கள்வெதுப்பநொந்தே
இத்தலைநின்னைச்சார்ந்தேமெம்பிரான்கருணைநோக்கம்
வைத்தடியேங்கடம்மைவழாவகைகாக்கவென்றார். (௪௮)

அணங்குதலொழிமினென்றேயமரருக்கபயநல்கி
இணங்கியகுவவுக்கொங்கையேழையோடிமிலேறூர்ந்து
கணங்கிளர்ந்துடனகுபோதக்கணனெதிர்சென்றுநின்றார்
துணங்கைகொண்டலகைசூழுஞ்சுடுவனத்தாடும்பெம்மான். (௪௯)

வார்ப்பெருமுரசும்வானோர்வயக்கியசாந்தயர்ந்த
வார்ப்புமெண்டிசையும்போர்ப்பவருந்தவத்தைந்தும்வென்று
சீர்ப்பநின்றவன்கண்விண்டுதேவர்கடேவைநோக்கிக்
கார்ப்பெருவரவுகண்டகளிமயிற்குலத்தையொத்தான். (௫௦)

வீழ்ந்திடவருத்தமெல்லாம்விமலனார்பாதப்போதிற்
றாழ்ந்தெழுந்தாடியங்கைத்தட்டமுமிட்டுமுக்காற்
சூழ்ந்தெதிர்நின்றுகண்களுளிப்பவாயுரைதள்ளாட
வாழ்ந்தமெய்யன்புபொங்கவணக்கமோடேத்தலுற்றான். (௫௧)

தாங்குசாத்துவிதமாகிச்சகலமும்புரவாநின்றாய்
வீங்கிராசதத்தினின்றுவியத்தகப்படையாநின்றாய்
தூங்குதாமதத்தினின்றுதுரிசறத்துடையாநின்றாய்
ஈங்குநானுய்யும்வண்ணமினிதருள்சுரக்கவென்றான். (௫௨)

வம்பவிழ்கடுக்கைவேணிவள்ளலார்கருணைகூர்ந்து
நம்பியவரங்கள்யாவைநவிற்றுதிதருதுமென்றார்
உம்பருக்கதிதலொண்ணுவுனதடிபத்திநல்கிக்
கம்பமில்வாழ்வுநல்கென்றிரந்தனன்கணனென்றுள்ளான். (௫௩)

வேறு.

தமதுபதத்திலார்வமுமுச்சகமும்புரக்கும்பெருந்திருவு
மமரரயன்மாலாதியராலழியாவாயுண்முதற்பலவும்
விமலரருளிமறைந்தேகிவெள்ளிவரையினினிதிருந்தார்
கமலன்முதலோரழுக்கறுப்பக்கணனும்வரங்கொண்டேடுத்தான். (௫௪)

கோதிறவத்தாலீன்றெடுத்தகுரவர்பாற்சென்றடிவணங்கி
யாதிபகவன்கொடுத்தவரமனைத்துமுறையேகிளந்திருந்தான்
நீதிபுரியுமபிசித்துநெடிதுமகிழ்ந்துமைந்தனுக்குச்
சாதியரையர்குலத்தொருமான்றன்னைவதுவையாற்புணர்த்தான். (௫௫)

சிலநாள்செல்லவமைச்சர்களோச்சேரவழைத்துத்தன்மைந்தற்
குலகாளுரிமைமுடிசூட்டியுதவித்தானுமனைமாதும்
புலவோரறியாவுமைபாகர்பொற்றாட்கமலமலர்ப்பூசை
விலகாவன்பிற்றினம்புரிந்துவிண்ணோர்வியப்பவினிதிருந்தான். (௫௬)

ஆற்றன்மிகுந்தகணன்றந்தையளித்தவுலகமுறைசெலுத்தி
வேற்றுப்புவியுந்தாட்படுப்பவிழைந்துநால்வரமைச்சரொடுந்
தோற்றுந்தனக்குப்புத்திரராஞ்சூலபாணிசுலபனொடுங்
காற்றின்விரையும்பெருஞ்சேனைகாவலாளர்தம்மோடும். (௫௭)

நூற்றைம்பதுநூற்றைம்பதியோசனைநாற்புறத்தும்பரப்புடைத்தாய்த்
தோற்றமுறுநாற்படையோடுந்துனையவெழுந்துபுறஞ்சென்று
கூற்றநடுங்கிவிழிபுதைப்பக்குறுகாராவிகுடித்தடுத்துச்
சீற்றந்தணிந்துபணிந்தவர்பாற்றிறைகள்வாங்கிமுழுதாண்டான். (௫௮)

கொற்றமதிவெண்குடைநிழற்கீழ்க்குறையாதவனிமுழுதடக்கி
மற்றையுலகுந்தாட்படுப்பவலித்துவானூடினிதேகிப்
பொற்றநெடுங்கற்பகவனத்தைப்போக்கின்றாகவளைந்ததனு
ளுற்றமகவான்பரிபற்றியுவந்தங்கதன்மேலிவர்ந்திட்டான். (௫௯)

ஆதர்விரைந்துசுதன்மையினைத்துன்னிமகவான்சுடர்க்கழற்பொற்
பாதம்வணங்கிக்கணனென்னும்பாராள்வேந்தன்படையோடுஞ்
சீதமலிநந்தனவனத்தைச்சென்றுவளைந்தாங்கிருந்தநம
தேதமகலுச்சைச்சிரவமெளிதிற்கவர்ந்துமேற்கொண்டான். (௬௦)

வேறு.

கேட்டுவானவர்நாட்டுவேந்தன்கிளர்ந்தெழுந்துவெகுண்டுநாற்
கோட்டுவேழமிவர்ந்தலர்ந்தகுடங்கைவச்சிரமேந்துபு
நீட்டுவார்கொடியாடுகோவிலினீள்கடைத்தலைநீங்கினான்
சேட்டுவான்படையானதேவர்திரண்டுவந்தெதிர்கூடினார். (௬௧)

பணைமுழங்கினவார்கொடித்திரள்பம்பிவான்வெளிதூர்த்தன
இணையில்வீரர்களேந்தியாடியவெஃகின்வாள்கண்மிளிர்ந்தன
துணையிலாக்கவிகைக்குலந்தொகுபிச்சமெங்குந்துவன்றின
புணையின்வேழமியங்கவார்கலிபோன்றுசேனைநடந்ததே. (௬௨)

புறநகர்த்தலையேகுறும்புருகூதனேரெதிர்தோற்றிய
மறமிகுந்தகைவார்சிலைக்கணைவவ்விவாம்பரிமேலமர்
திறமிகுந்தவனாற்றனோக்கியித்தீரனோடமராற்றுதற்
கறமிகுந்திலமென்றுதன்னுளடங்கியிம்மொழிபேசுவான். (௬௩)

குணவதிக்கொருமைந்தனாகியகொற்றவாகுணக்குன்றமே
கணனெனும்பெயர்க்கேற்பநன்குமதித்திடப்படுகாட்சியோய்
அணவுமென்பரியீகவென்றனனைதுநக்கெதிர்சேர்கணன்
தணவறுங்கரிமாவுமென்வயிற்சார்ந்திடத்தகுமென்றனன். (௬௪)

மறுத்தமண்ணுலகாளுமன்னவர்மன்னன்வாய்மொழிகேட்டலும்
பொறுத்திடாதுவளைந்துதேவர்கள்போர்தொடங்கினரன்னவன்
வெறுத்தசேனையின்காவலாளருள்வெய்யவீரனொருத்தனேர்ந்
தறுத்துநேர்ந்தபடைக்கலஞ்சுரரணிகமோடமுடுக்கினான். (௬௫)

ஒருபடைத்தலைவற்கிரும்படையானவும்பர்களோடலுந்
திருகுவெஞ்சினமீக்கொடிந்திரன்றிண்வயக்களிறுந்துபு
பெருகொளிக்குலிசத்தடித்தனன்பெரிதுமூர்ச்சனையாய்த்தெளிந்
தருவிழும்மதயானைமேலரிதூண்டினான்கணனென்பவன். (௬௬)

நீண்டவாளின்வலாரிவச்சிரநீணிலத்திடைவீழ்த்தினான்
ஆண்டகைப்புருகூதனெய்ப்பையறிந்துசென்றயிராவதம்
மூண்டசீற்றமொடார்த்துடன்றதுமுற்றியத்தையும்வீழ்த்தினான்
மாண்டவாண்மையின்மிக்கவவ்விருவோருமல்லுவயக்கினார். (௬௭)

மல்லுப்போர்விளையாடுமேல்வையில்வன்கணன்பலபேய்விறல்
சொல்லிப்பாடித்துணங்கையாடச்சுடர்ந்தநீண்முடிச்சென்னியின்
இல்லிப்பானைமுகந்தநீரினெழுந்திரத்தமருங்குகச்
செல்லுப்பாய்பரிமாவினூர்தருதேவர்வேந்தனைக்குட்டினான். (சுஅ)

மயங்கிவீழ்ந்துகிடந்தெழுந்துறுமானமுள்ளமலைத்திடக்
கயங்குமானனத்தோடுநாணிக்கவிழ்ந்தசென்னியனாகிய
வயங்கொள்வச்சிரபாணியைக்கணன்வல்லைநோக்கியஞ்சாதிநீ
நயங்கொள்விண்ணுலகாட்சியின்றுநயந்துனக்களித்தேனென்றான். (சுகூ)

அந்தமில்வளமாங்கெமக்குளவந்தரத்தனம்வேண்டிலேம்
இந்திராவெமதாணைதாங்கிலையேலிறுத்துமெனப்பதம்
தந்தனன் மகவான்றனக்கதுகேட்டுமோல்சதுர்மாமுகன்
வந்துகையுறைவைத்துநன்மொழியால்வணங்கினர்போயினார். (எ௦)

ஆதிரைப்பெருமானளித்தவரத்தினாணருளேவல்பெற்
றோதிரத்தினவாதனச்சுதன்மைக்குநாயகனேங்கினான்
மாதிரத்தமரேனையோரையும்வல்லவென்றுதன்முத்திரை
மோதிரச்சுவடேற்றிறைஞ்சமுடித்துமண்ணுலகெய்தினான். (எக)

அந்தரத்திலமையார்கள்கையுறையாகநல்குமரும்பொரு
டந்தைதாயெதிர்வைத்திறைஞ்சித்தழைத்தசிந்தையினாலிருந்
திந்திரனயன்விண்டுமாதிரர்யாரையும்புறங்கண்டதும்
வந்ததுங்கிளர்ந்தாரணத்தின்வழாதுநீதிநடத்தினான். (எஉ)

வேறு.

இணர்மல்கியகற்பகநாட்டிமையாருமேத்தக்
குணமல்கியநற்றருமாதிகுறித்தியற்றி
வணர்மல்கியமாதர்பல்லோரைமணந்துகூடிக்
கணனென்பவன்பன்னெடுநாள்களிப்புற்றுவாழ்ந்தான். (எ௩)

வாழும்பலநாளினுளோர்தினம்வார்வனத்துச்
சூழும்பெருங்காவலர்போந்துமுன்றுன்னித்தாழ்ந்து
கூழுங்குடியுங்குலையாதுவளர்க்கும்வேந்தே
வீழும்பலமான்கணமிகுந்திடர்மிக்கதென்றார். (எச)

வேட்டைக்கெழுவாமெனமன்னன்விளம்பியிட்டான்
கேட்டுப்பிரியாதவமைச்சர்கள்கேண்மைகுன்றா
நாட்டத்தினராம்படைவீரர்கண்ஞாளிபற்றும்
ஈட்டத்தினராம்வலையாளர்கள்யாருந்தொக்கார். (எரு)

நீலத்துகில்கைக்கொடுடுத்துநிலாவமீது
நீலத்தனநச்சுறவீக்கிநிகழ்ந்தகோதை
நீலத்திலணிந்துகுப்பாயநீலத்தினிட்டு
நீலத்திலணிந்தனனீடலைச்சுற்றுமாதோ. (எசு)

நிரைபைங்கதிர்நீலமணிக்குடைமேனிழற்ற
வரைவெல்புயநீலவரிச்சிலைதாங்கமன்னன்
விரைசெல்கதிநீலவயப்பரிமீதிவர்ந்து
தரைவந்திடுகாலனெனத்ததைகான்புகுந்தான். (எஎ)

வேறு.

வெற்றிமன்னனேகுகின்றவேலைதன்னின்முன்னமே
ஒற்றர்நான்குதிக்குமோடியொற்றிமானினங்கடாம்
செற்றிநின்றசூழல்வந்துசெப்பமள்ளரத்தலை
முற்றியெங்குமோடியெறிந்துமூரிவாரொழுக்கினர். (எஅ)

வலைகள்சூழ்ந்தமைத்தகானின்மன்னனெய்திநின்றனன்
அலைமுகத்தனாளியேவியார்ந்தபம்பைகொட்டினார்
கொலைமுகத்தமள்ளருங்குரைத்தெருக்கினார்புதல்
சிலைவளைத்துவீரர்வாளிதேர்ந்துவேட்டையாடினார். (எகூ)

அரியினங்களாளிபன்றியானசல்லியங்கணீள்
கரியினங்களொட்டகங்கள்கவையமானினஞ்சசம்
எரிவிழிக்குமரையினங்களீண்டும்வேங்கையாதிகள்
நெரிவனத்திலெங்கணுநிரந்தெழுந்துபாய்ந்தவே. (அ0)

மள்ளர்மேலெதிர்ந்துசில்லமானினங்கண்மாய்ந்தன
உள்ளருந்திறத்தினொன்றையொன்றுவவ்விமாய்ந்தன
விள்ளுருவலைக்கணூடுவீழ்ந்துசில்லமாய்ந்தன
வள்ளெயிற்றுவாயினாயடர்ந்துசில்லமாய்ந்தன. (அக)

வாளினானும்வேலினானும்வாளியானும்வெய்யசூர்
ஞாளியானும்வேறுவேறுநாடுபல்விதத்தினும்
தாளில்யாத்தபூங்கழற்றறுகண்மன்னன்கானிடை
ஆளியாதியானமாவடர்த்துமீண்டுபோதுவான். (அஉ)

வேறு.

நீர்நசையெழுந்துவாட்டநெறிகளுங்காணாகிச்
சீர்நவிலமைச்சரோடுஞ்சேனைகாவலர்களோடும்
கார்நவில்கானத்தூடுகண்ணிணைசாம்பிச்செல்வான்
ஏர்நவிறக்கம்போலுமிருந்தவக்கானென்றுற்றான். (அங)

மல்லிகைமுல்லையாதிமலர்க்கொடிபடர்ந்துதென்றல்
மெல்லவந்துலாவவெங்கும்விரைகமழ்சோலையெய்திச்
செல்லருந்தவத்துமேலோர்சிந்தைபோற்றெளிந்ததெண்ணீர்
புல்லியநதியுங்கண்டுபொருவருமகிழ்ச்சிபூத்தான். (அச)

தண்புனநதியிற்றோய்ந்துதளர்வுசற்றொழிந்தாங்குள்ள
ஒண்பழங்கந்தமூலமுழையர்கைந்நீட்டத்துய்த்துத்
திண்பசிசிறிதுநீங்கித்தென்றன்மெய்யேற்றுச்சீத
வண்புயறவழுஞ்சோலைவளநிழலிருந்தான்மன்னன். (அரு)

அயர்வுயிர்த்தரசன்வைகுமமையத்திலந்தச்சூழல்
பயிறருகபிலன்பாங்கர்ப்பணிசெயுமொருமாணக்கன்
செயிரறுநதிநீராடச்சேர்ந்தவன்கண்டுசென்று
மயரறுகுரவன்பாதம்வந்தித்துவணங்கிச்சொன்னான். (அசு)

இறைவனேநதிக்குச்சென்றேனெய்த்தொருவேந்தனங்கு
நிறைதருபடையினோடுநெடுநிழற்சோலையுட்புக்
குறைவதுசெய்தான்கண்டேனுரைக்கவிங்குற்றேனென்றான்
மறைமொழிகபிலமேலோன்மன்னனைக்கொணர்கவென்றான். (அஎ)

கேட்டமாணக்கனோடிக்கேழ்கிளர்தளிர்ப்பூஞ்சோலை
மாட்டிருந்திளைப்புநீங்குமானவேற்கணன்முன்செல்லத்
தீட்டியபுகழானந்தத்திருமுனிபாதந்தாழ்ந்து
கோட்டமிலாதாயிங்குக்குறுகியதென்னையென்றான். (அஅ)

இரும்புவிகாக்குஞ்செங்கோலிறைவநீயடுத்ததோர்ந்து
பெரும்புகழ்க்கபிலனென்னும்பிழையிலான்றன்பானின்னை
வரும்படிசெய்தியென்றான்வந்துளேனெனமாணக்கன்
அரும்பியமகிழ்ச்சியோடுமரசனங்கெழுந்துசென்றான். (அகூ)

தூங்குவீங்கிருள்கால்சீக்குந் துணிகதிர்ப்பரிதிபோல
ஓங்குநீளொளிசெய்சிந்தாமணிவரையுறழுமார்பிற்
றாங்கியாங்கிருந் துநோற்குந் தவமுனிக்கபிலன்றாளின்
வீங்குபேரன்பாற்சென்றவேந்தன்வீழ்ந்தெழுந் துநின்றான். (௯0)

நின்றவற்கிருக்கைநல்கிநெடுந்தவக்கபிலனென்பான்
வன்றிறலரசநீயார்வந்ததிங்கெவற்றுக்கோது
கென்றனனிருபன்சொல்வானெனைக்கணனென்பார்கானில்
வன்றிறல்வேட்டையாடிவழிதப்பியீங்குப்போந்தேன். (௯௧)

திப்பியநதிநீராடித்தீங்கனிக்கந்தமூலத்
துப்பினிதயின்றுசற்றேதயருறுமெய்ப்புநீங்கி
ஒப்பினின்கருணையான்முன்னுற்றடிவணக்கஞ்செய்யும்
அப்பெரும்பயனும்பண்டையறங்களாற்பெற்றேனென்றான். (௯௨)

வசையறுமுனிவன்சொல்வான்மன்னவவீங்குவந்தார்
அசைவுறுபசியினோடுமெகன்றவரில்லைநீயும்
நசையுறுமுண்டிதுய்த்துன்னகர்வயினேகுவாயென்
றிசைவுசெய்வித்தப்பின்னரிரும்படைமுழுதுங்கூவி. (௯௩)

மாதவக்கோலமின்றென்மாதவனிவனேயென்று
தீதறவுலகமெண்ணத்திகழ்சிந்தாமணிகைவாங்கி
ஆதனத்திருத்திப்பூசையாற்றியிங்கடுத்தார்க்கெல்லாம்
மேதகுவிருந்துசெய்யவேண்டுமென்றிரந்தானன்றே. (௯௪)

அணிமிகுநகரொன்றாக்கியளவிலாக்கிரகந்தோற்றிப்
பணிபுரிவார்கள்செம்பொற்பாத்திரம்பலவேறான
தணிவறுமுண்டிமற்றுஞ்சடுதியிற்சமைத்துச்சிந்தா
மணிவிருந்தயர்ந்ததென்பமன்னனோடடுத்தார்க்கெல்லாம். (௯௫)

அடிசில்கைதொட்டவேந்தனருந்தவன்முன்னரேகி
யடிதொழுதிருந்துசொல்வானடிகளேசிருட்டியாதிப்
படியுறுதொழிலும்வேண்டிற்பழுதறநெஞ்சுதன்னால்
நொடிசெயுமுன்னராக்குநோன்மையிற்பெரியோய்நீயே. (௯௬)

அனையபாற்கொடைமைவல்லவவிர்மணியெற்றிற்கெந்தாய்
தனையனானினக்கென்பாங்கர்த்தருகவென்றிரந்தான்கேட்ட
முனைவரன்சொல்வானிந்தமொய்யொளிமணிநமக்கிங்
கினைவதில்லாதவாவியினுமிகச்சிறந்ததாகும். (௯௭)

இம்மணியொழியவேறேயாதுநீவேண்டினாலுங்
கைம்மலைக்கவுளிற்றாக்கிக்கடிநகர்காத்தசெம்மால்
செம்மையிற்றருதுங்கொண்டுசென்மதியென்றான்மன்னன்
விம்முறுவிழைவுதீரான்வேறுபாடுளத்திற்கொண்டான். (௯௮)

பகலிடைவேதன்பாங்கர்ப்பாறுமிந்திரியம்பின்பு
பகலிடைவயிற்றிற்றங்கிப்பரிணமித்திட்டதீங்கால்
தகலுறுமரசனாயுந்தயித்தியக்குணமும்வந்து
தொகலுறுநீராலந்தச்சுடர்மணிபறித்துக்கொண்டான். (௯௯)

முனிவரன்வெகுண்டுசொல்வான்மூடனேயுலகமூன்றும்
நணியரசியற்றுகின்றாய்நமதுகைப்பொருளும்வவ்வித்
துனியெமக்குறுத்தாய்நின்னைத்தொடுகடலுலகில்வல்லே
புனிதமெய்க்கடவுடோன்றிப்புரட்டுதல்வேண்டுங்கண்டாய். (௧00)

பதிதனேயென் முனிங்கேபயின் றினியிருந்தாயாகிற்
கொதிதழற்சாபத்தாலேகொம்மெனநீறுசெய்வேன்
வதியிடஞ்சேறியென்றான் மன்னவனுளத்துளஞ்சிக்
கதிர்மணிகொடாதுமிக்ககாதலாற்கொண்டுசென்றான். (௧0௧)

முளையெனமுனிவன்சாபமுறைமையின்வளராநிற்ப
வளைகடலனையதானைமன்னவனகரைச்சார்ந்து
விளைவினையீன்றதந்தைவியன்செவியேறச்செப்பிக்
களைகணுயுலகங்காக்குங்காவலனிருத்தல்செய்தான். (௧0௨)

விம்மிதம்வேறுவேறுவிளைத்தும்பல்விடங்கடீர்த்துஞ்
செம்மலஞ்சித்திபெற்றுந்திகழ்சிந்தாமணியினனும்
மும்மைவையகமுங்கீர்த்திமுற்றிடக்கணன்மேம்பட்டான்
அம்மணியிழந்தபாம்பினவிர்மணியிழந்தமுயோன். (௧0௩)

நெட்டுயிர்ப்பெறிந்துநீங்காநிறைபெருந்துயரின்மூழ்கிப்
பட்டினியுற்றுத்துஞ்சான்பாதகக்கணனெவ்வாறு
நட்டமுற்றிடுவனென்றுநாடியன்னவற்குக்கேடு
சட்டவெய்திடுகவென்றுதவம்பெரிதாற்றினனே. (௧0௪)

சீடர்களோடுமந்தத்திருமுனிநெடிதுகாலம்
வீடலிலாதவன்பின்மெய்த்தவம்விளைத்துச்செல்ல
நாடருவிண்டுமாயைநாற்றிசைமேல்கீழாகி
நீடழற்சுடருமூடிநின்றதுகண்ணிற்காண. (௧0௫)

பார்த்திடுமுனியிதென்னபண்பெனவயிர்ப்பநன்றே
சார்த்திடுமாயாசத்திசாருகாசினியாய்ச்சொல்வாள்
சீர்த்தகுமுனிவரேறேசிவபிரான்வரத்தான்மும்மை
மூர்த்திகளானுஞ்சாவாமுதன்மையன்கணனுந்தீயோன். (௧0௬)

மிக்கமுத்தொழிலுமாற்றும்விநாயகனுருவங்கொண்டால்
அக்கணமுனிவரேறேயக்கணற்கழிவுண்டாகும்
இக்கணமவனைநோக்கியியற்றுகவழிபாடென்றுள்
தொக்கமெய்த்தவத்தானம்மாசொல்வழிபாடுமென்றான். (௧0௭)

வேறு.

பாங்கானபெருந்தவஞ்செய்மாதவனேயீங்கென்னுற்பகரப்பட்ட
நீங்காததேவரவர்திருப்பெயரேமந்திரமாநீகைப்பற்றி
ஓங்காரப்பல்லவமுநமோந்தமுஞ்சேர்த்தீரொன்பானிலக்கமோதி
ஆங்காகுந்தருப்பணமுமோமமுமந்தணர்க்குணவுமடைவினுற்ற. (௧0௮)

செய்யதீவளர்வேள்விக்குண்டத்தினிடைநான்குதிணிபொற்றோளுங்
கையின்மோதகங்கமலங்காமர்மழுப்பலமலர்சேர்கண்ணிதாங்கி
வெய்யசீரணிபலவுமணிந்துதேசொளிவிரவுமெய்யனாகி
ஐயனோர்மடங்கன்மிசைச்சித்திபுத்தியொடும்வருமென்றருளித்தீர்ந்தாள். ()

இழந்தமணியப்பொழுதேபெற்றவன்போன்றிருங்கபிலனெழுந்துதுள்ளிப்
பழந்துயரமுழுவதுநீத்தருண்மனுவைமுறைப்படியேபகர்ந்துநோன்பும்
உழந்துதருப்பணமாதியுஞற்றினனந்தத்திலோமகுண்டக்
கிழந்தகுதீயிடைநின்றுமெழுந்தருளினன்மறைகள்கிளந்துங்காணன். (௧௧0)

மணிமுடியுங்குண்டலமுமங்கதமுமணிமுத்தவடமுந்தேசார்
அணிவளருந்திருவுருவுமருட்கருணைவிழிமூன்றுமங்கைநான்கும்
திணிபடுநெஞ்சமுங்கரைக்குஞ்சேவடியுஞ்சித்திபுத்திசேர்ந்தபாலுந்
துணிமடங்கல்வாகனமுமிறைவனுருவனைத்தினையுந்துயோன்கண்டான் ()

சத்திமொழிந்தனவனைத்துஞ்சத்தியஞ்சத்தியமென்றுதரையின்மீது
பத்தியொடும்விழுந்தெழுந்துமயிர்பொடிப்பவுளமுருகப்பாணிகூப்பி
அத்தவடியேன்குலமாதிகளனைத்துந்தூய்மையினையடைந்தநின்பால்
உத்தமமாகியபத்தியுதவியுயர்முத்தியுமுற்றருள்கவென்றான். (௧௧௨)

பெருங்கருணையூற்றெடுப்பத்திருமலர்க்கணெதிர்வழங்கிப்பெருமான்சொல்வார்
இருங்கபிலமாதவனேயெண்ணிறந்தபவந்தோறுமியற்றுகின்ற
நெருங்கியபல்பெருந்தவத்தாலெய்தலுறும்பயனனைத்துநிமிடப்போதில்
ஒருங்கடுத்தவிப்பிறப்பினுனக்கெமதுதிருவருளாலுற்றமாதோ. (௧௧௩)

நீடுலகிற்றேவர்முனிவரர்பெரியோர்மலந்தீர்க்கநிகழ்வேதத்திற்
கூடுமகமாதிபலகருமமெலாமேன்மேலுங்கூர்ப்பத்தீமை
நாடுகணதயித்தியனையிறப்பவுயிரனைத்தினுக்குநன்மைசெய்யப்
பீடுறுநின்மனையிடைவந்தவதரித்தாநணியறிகபிழையிலாதாய். (௧௧௪)

இப்பொழுதேகணனுடலையெருவைநரிகழுகிவற்றுக்கிரையதாக்கி
யொப்பறுசிந்தாமணியையுன்கரத்திற்றருதுமெனவுரைத்தார்நாதர்
செப்பமுறும்பெருந்தவத்துக்கபிலமுனிபெருமகிழ்விற்சிறந்தானன்றே
துப்புடையகணனிரவிற்றுயில்கின்றான்கனுக்கண்டுதுயினீத்திட்டான். ()

வேறு.

கண்டதன்கனவினைக்கரையத்தூதராற்
றிண்டிறற்றந்தையைத்திகழமைச்சரை
வண்டிறன்மைந்தரைவரவழைத்தனன்
விண்டகண்வழியிடைத்துடைத்துமேயினார். (௧௧௬)

அனைவருமவரவரமருமெல்லையிற்
புனைகழற்காலினன்புடையிருந்தனர்
கனைதுயர்க்கவலையாற்கணனென்பான்றலை
தனையிறக்கிட்டவர்தம்மைப்பார்த்திலன். (௧௧௭)

உரையிலன்மலர்முகத்தொளியும்வாடினன்
அரையனுட்குறிப்பினையறிந்துதாங்களும்
வரைநிகர்தோளினர்மவுனங்கொண்டனர்
புரையறுதந்தைமுன்புகறல்மேயினான். (௧௧௮)

மலர்முகம்வாடினைமவுனமாயினை
நிலவுமிப்பெருந்துயர்நிகழ்தற்காரணம்
விலகுதலிலாவகைவிளம்புவாயென
நலமுறவினயினன்கணனவிற்றிலன். (௧௧௯)

விச்சுவசித்துமுன்னனமேலையோர்
நச்சியபெரும்புகழ்நாதவீன்றருள்
அச்சனுக்கெதிர்மொழியறைதராததோர்
இச்செயன்மேவியதென்கொலென்றனர். (௧௨௦)

அதற்கும்வாய்திறந்திலனபிசித்தென்பவன்
இதற்கெதுசெய்துமென்றெண்ணிப்பொள்ளெனப்
புதற்குமேலாகியபுந்திபெற்றுள
சுதற்கருகினிதுறத்துன்னிச்சொல்லுவான். (௧௨௧)

தெள்ளியவமரரைத்தெவ்வர்தங்களை
உள்ளுமுன்வென்றிகொண்டுயர்ந்ததேசுடை
வள்ளலுக்கித்தினமலிசிந்தாகுலம்
நள்ளுவதாகியநவையுமென்கொலாம். (௧௨௨)

அதுதனைமறைத்துவைத்தவதென்கொலோ
கதுவவல்லதுகதுவாதுபோகுமோ
எதுவருமாயினுமினைதற்பாலரோ
முதுமறைநூல்வழிமுறைமைசெய்பவர். (க௨௩)

இன்னணநீயுமிவ்விடுக்கணெய்திடின்
என்னராகார்களிங்கேனையோரெலாம்
ஒன்னலார்க்கிதுவலியுறுத்துநீரதே
அன்னதாற்றுயரினையறைகவென்றனன். (க௨௪)

கவலையிலழுந்தியகணன்விளம்புவான்
தவலரும்பெரும்புகழ்த்தாதையீதுகேள்
குவலயவாழ்வினிக்கூடுறாமைகண்
டவலமுற்றனனஃதடைவினோதுகேன். (க௨௫)

மருவுமென்கனவிடைமற்றுஞ்சேனையோ
டருமறைக்கபிலனுமருகுபோதரச்
செருமிகுபடைக்கலஞ்செறிந்தநாற்கரத்
தொருவன்வந்தடுத்தனனூழித்தீயென. (க௨௬)

விழுங்கினனம்முடைவெறுத்தசேனையைச்
செழுங்கனன்மழுவினைச்செலுத்தினனது
அழுங்கவென்சிரத்தினையறுத்துத்தள்ளிய
தொழுங்கியகனவும்விட்டொழிந்ததெந்தையே. (க௨௭)

விழித்தனனக்கணுவீங்குழுக்கமும்
செழித்தவெண்வலிகளுந்தேசும்யாவையும்
அழித்ததுநினைதொறுமகநடுங்குவ
திழித்ததுவரத்தையுமினியென்செய்குவேன். (க௨௮)

கனவியகனவினைக்கட்டுரைக்கவே
அனகநின்னையுமயிலனையசாயலார்
மனமெனவிருண்டவிவ்வைகறைப்பொழு
தெனதெதிர்வரும்படியியம்பிவிட்டனன். (க௨௯)

என்றலும்பிரமதனென்னுஞ்சூழ்ச்சியான்
நன்றுநன்றுலகெலாநடுங்கப்போரினால்
வென்றிகொண்டசுரனாய்மேவுநின்னையும்
ஒன்றியதச்சமென்றுரைப்பதோவென்றான். (க௩0)

வேறு.

கிரந்தனெனுமந்திரிகேட்டுக்கிளப்பானிலத்தினுட்கிடந்த
உரந்தங்கியவித்தறல்கலப்பினுடனேமுளைத்துமரமாகும்
பரந்தகருத்தாலொருவர்புரிபாவவினையும்புண்ணியமுங்
கரந்துபயனுங்காலத்துக்கதித்துப்பெரிதாய்த்தடித்திடுமே. (க௩க)

உடலம்வெறுத்துச்சுகமுழுதுமொழித்துத்தவமேபுரிந்துதம
தடர்வல்வினையைத்துமித்தவர்களறைந்தமொழிகளவ்வவ்வ
படரும்பயனைப்பயந்தன்றிப்பாறாவரசனிவன்கபிலர்
சுடருமணியையகாரணத்தாற்றொல்லைநாளிற்கவர்ந்திட்டான். (க௩௨)

இந்தமுறைமையெவ்விடத்தும்யான்கண்டிலன்கேட்டிலனன்றே
அந்தமுனிவன்கொடுஞ்சாபமறைந்தானதுநீங்காதின்று
வந்ததாகுமெனவிரித்தான்மருங்கேயமர்விச்சுவசித்து
வெந்தவுளத்தோடவனையெதிர்விழித்துநோக்கியிதுசொன்னான். (க௩௩)

தங்குமவைக்கேற்றவையறிந்துசாற்றுன்சாமிகாரியங்கள்
அங்கணறியான்பிறரையுயர்வாகப்புகழ்வான்கோளுரைப்பான்
சிங்கவருந்தன்கேடறியான்சிறப்பத்தன்னைத்தான்புகழ்வான்
இங்கணுரைத்தோர்பவம்வீணேயென்றங்கவனைத்தடுத்துரைப்பான். (௧௩௪)

யாவர்யாவையியம்பிடினுமியம்பியொழிகயானிதமே
காவலோயேநினக்குரைப்பல்கைக்கொண்டிடுகவலிபெரியை
தேவர்முதலோர்தமைவென்றதிறத்தைமிகுஞ்சேனையையுடையை
மேவலாரையுடையையலைவிளியாவரமுமிகவுடையை. (௧௩௫)

மைந்தான்மிகுந்துநினையழிப்பார்வளர்மூன்றுலகத்தினுமில்லை
எந்தாயதனுலூறுனக்குண்டென்றுநினைக்கவேண்டாநின்
சிந்தாகுலத்தைவிட்டொழிந்துதிருச்சார்கபிலமுனிவனுயிர்
நந்தாதழிக்குமொருசூழ்ச்சிநாடாயென்றுவிதந்துரைத்தான். (௧௩௬)

கெடுமூழ்பயக்குங்காலத்துக்கேடாமுணர்வேநல்லதுபோற்
படுமாதலினுலாயாதுபகர்விச்சுவசித்துரைகேளா
வடுமூழடுத்தகணன்மகிழ்வுற்றருமாதவனைக்கொல்வதற்கு
நெடுவான்படைகளிப்பொழுதேநில்லாதெழுகவெனக்கிளர்ந்தான். (௧௩௭)

அறஞ்சாலரசனபிசித்தங்கதனைக்கேட்டுவிழிசேப்பத்
திறஞ்சான்மைந்தன்முகநோக்கிச்செப்புவானென்செய்கின்றாய்
நிறஞ்சான்மணிமோலியினமரர்நிகரின்முனிவரிவர்க்கெல்லாம்
மறஞ்சால்பகையாயினையதனுல்வந்தகனவும்பொய்யாதால். (௧௩௮)

நல்லகனவுநல்கனவேநாட்டுநெல்லதல்லாத
தல்லல்விளைக்குமாதலினுலரியமுனிமேற்படையெடுத்துச்
செல்லன்முறையன்றாழிபொருஞ்சேனையமைச்சர்வீரரினும்
வெல்லன்முடியாதுய்யுநெறிவிளம்பக்கேட்டிசிறுபிள்ளாய். (௧௩௯)

முன்னேமணியைக்கொடுத்தேவிமுனிவன்முனியாவகைநீயும்
பின்னேயேகிப்பணிந்தேத்திப்பிழையைத்தீர்த்துக்கொள்ளென்றான்
கன்னேரனையதிருக்குளத்துக்கணன்கேட்டதனையெந்தாயே
நின்னேரரசினிருப்பினுநானின்சொற்கேட்கப்படுவேதல. (௧௪௦)

மானங்கெடாதகாரியத்தைவகுத்துச்சிறியோர்மொழிந்தாலும்
மானங்கெடாமைவேண்டுநரால்வழாதுதழுவப்படுமதுவே
மானங்கெடுங்காரியம்பெரியோர்வாஞ்சையுடனேதினுமதுவே
மானங்கெடுமென்றபிசித்தைமறுத்துக்கூறிப்படையெடுத்தான். (௧௪௧)

விண்ணோர்பெருமான்றன்பாங்கர்மேவுவான்கொலெனநடுங்க
வெண்மாதிரத்தோரவ்வாறேயெண்ணியொளிக்குமிடநோக்கத்
தண்ணார்மணிச்சூட்டரவரசன்சாலநடுங்கக்கணனென்பான்
பண்ணார்பதினோரக்கோணிப்படையோடடுத்தானுச்சிரமம். (௧௪௨)

தெள்ளுமுனிவனப்பொழுதுதீர்த்தமாடிநீறணிந்து
விள்ளுமலராதிகள்பலவுமிதப்பவீட்டிவிநாயகர்க்குப்
பள்ளியெழுச்சித்திருப்பூசைபண்ணுநின்றானவணிடத்துக்
கள்ளமகன்றமாணுக்கர்கடுகவோடியுரைசெய்வார். (௧௪௩)

சிந்தாமணியைமுன்கவர்ந்துசென்றகொடியோன்படையோடும்
வந்தானவனுக்கினிநல்லவாழ்க்கையில்லையவன்றன்னை
எந்தாயிறப்பவகையறச்சூழ்ந்திடுதல்வேண்டுமெனுமளவிற்
சந்தாரகலக்கணன்முன்னைத்தவத்தாற்கணேசர்தமைப்பார்த்தான். (௧௪௪)

தூயமுனிவனெதிர்நின்றுதுகடீரன்பாற்பூசிப்ப
நேயமகளிரிருவர்களுநீங்காதிருபாலினுமிருப்ப
ஆயகனவிற்கண்டவுருவனைத்துந்தோன்றக்கண்டவனம்
மாயவுருவமிவன்படையான்மாயாதிராதென்றுளந்துணிந்தான். (௧௪௫)

நறைமென்மலர்கொண்டாயிரம்பேர்நவின்றுமுடியினிலவணிந்த
விறைவன்பதத்திலருச்சிக்குமிருடிகணனையெதிர்நோக்கி
நிறைவித்துரியபூசனையைநிமலனெதிரேவீழ்ந்தெழுந்து
மறைகடுதித்துக்கரங்கூப்பிவளர்மென்மொழியால்வரமிரப்பான். (௧௪௬)

விண்ணோர்தமக்குமுனிவரர்க்கும்விரிநீருலகமினிதாண்ட
மண்ணோர்தமக்குமிடையூறுவைகளுறுஞ்செய்தெள்ளளவுங்
கண்ணோடாதவிவ்வசுரக்கணன்பானின்றுமெனைமொழிகள்
பண்ணோடியன்றசித்திபுத்திபாகாகாக்கவென்றிரந்தான். (௧௪௭)

வேறு.

விடங்கொதித்தெழுந்ததென்னமேவுமொன்னலார்களை
அடங்கவுண்டுதேக்கவுள்ளழன்றுமுக்கணாயகன்
மடங்கலூர்ந்துசெல்லுமாமதித்தனன்மதிப்பறிந்
திடங்கலந்தசித்திதாழ்ந்தெழுந்துநின்றிதோதினாள். (௧௪௮)

முடிவிலாதஞானவின்பமுத்தனேயெதிர்ந்துளார்க்
கடியனேனிருப்பநீயடுக்குமாறுவேண்டுமோ
படியிலாவருட்கணல்குபம்புகின்றசேனையைக்
கடிதுவென்றுமீண்டுநின்கழற்கணெய்துவேனென்றாள். (௧௪௯)

சத்தியெண்ணிலாதவுஞ்சமைத்தமைத்தொடுக்குமச்
சித்திபத்தியோடிரந்துசெப்பவொப்பிலாதவன்
புத்தியின்மதித்தவாறுபோந்தடர்த்துவம்மெனக்
கைத்தலத்துமேவினான்களித்தசித்தியேகினாள். (௧௫0)

ஆழியொன்றுநாயகர்க்கடுத்ததம்பிதாடொழும்
வாழியன்பன்கைக்கடங்குமாண்பதென்னின்மற்றிவட்
கூழிமல்குவேலையுமுருத்தெழுந்தசேனையும்
பாழியங்கையள்ளவும்படாததன்னமாகுமே. (௧௫௧)

தமியளாகிநேரெதிர்ந்தசத்தியூக்கநோக்கியே
எமியனாகிநின்றவேந்தனேழைவந்தெதிர்க்குமே
துமிலவாகவம்புரிந்துதொக்கவீரர்யாரையுந்
துமிசெய்வாளினேற்கெனத்துனைந்துபோர்க்கெழுந்தனன். (௧௫௨)

வலனுயர்ந்ததாதைபோர்வலிப்பமைந்தராகிய
சலபன்சூலபாணியோடுசூழ்ந்துதாளிறைஞ்சிநின்
றுலகிலெம்மையொத்தவீரரொருவரில்லையிவளையுங்
குலவுமேனையோரையுங்குமைத்துமீடுமென்றனர். (௧௫௩)

மைந்தர்வீரர்தம்மைநோக்கிமன்னனின்றுகாறுநான்
மைந்துகொண்டுதேவருமதிக்கவைகினேனினிச்
சிந்திமாற்றலாரைநீர்திரும்பினென்முன்வம்மினெ
ணந்தின்வாரலீரெனநவின்றுபோர்க்கணேவினான். (௧௫௪)

சேனையோடுமைந்தருந்திரண்டவீரர்யாவரும்
ஊனையுண்டவத்திரத்தினாக்கிநேர்தனோக்கிய
மானைவென்றுவேலையின்மலைத்துவேலடர்த்தகண்
டேனைவென்றசொல்லியெண்ணில்சேனைநேர்படைத்தனள். (௧௫௫)

வேறு.

பத்திருங்கரத்தனசிலவைங்கரம்படைத்தனசிலமேரு
ஒத்தமார்புயமுடையனசிலபதமூன்றுடையனசில்ல
வைத்தநான்குகாலுடையனசிலவளராறுகாலினசில்ல
மெய்த்தநான்முகமுடையனசிலவிளங்கைம்முகத்தனசில்ல. (கடு௬)

ஆறிரட்டியமுகத்தனசிலவொளியழலுமிழ்விழிமூன்றின்
வீறிசின்றனசிலவிழியேழொடுவிளங்கினசிலவாகி
மாறிலாதமர்வாள்சிலைகப்பணம்வச்சிரமழுத்தண்டஞ்
சீறிமேல்விடும்பிண்டிபாலந்திரிசூலமாதிகளேந்தி. (கடு௭)

அருளுநாயகியடிபணிந்தப்பெருங்கணமெலாமருள்பெற்றங்
குருளிஞேடிரதங்களும்வேழமுமுளையணிபரிமாவும்
வெருளவேறுபுபேரிகைமுரசமாதிகள்வியன்கடலேழும்
மருளவார்த்திடக்குடைகொடிமிடைதரவலித்தனபோர்க்கம்ம. (கடு௮)

ஒருத்தியாயெதிர்போந்தனளொடிக்குமுனுலகெலாம்வயிற்றெவ்வொன்
றிருத்தவல்லபூதங்களெண்ணிறந்தனவீன்றனளுறப்போடுஞ்
செருத்தவாதுசெய்திவளைநாம்வெல்லினுஞ்செங்களத்தியாம்வீழ்ந்து
வருத்தமெய்தினுங்கீர்த்தியேயெனப்படைவகுத்துநேர்ந்தனர்மாற்றூர். ()

விளங்குவிச்சுவசித்துநாற்பதனொடுவெய்யபோர்க்குணவானுள்
களங்குறுதமாபுயனொடுகிரந்தன்முக்சண்ணனோடுபோர்க்குத்
துளங்குறுப்பிரமதனறுபதனொடுசூலபாணியன்வீர
வளங்கொளாறிருமுகனொடுசுலபன்வண்சித்தியினொடுமேற்றூர். (கசு0)

ஏனைவீரர்களிருதிறத்தவர்களுமினமறிந்தமர்செய்தார்
யானைவீழ்ந்தனபுரவிகள்வீழ்ந்தனவிரதமும்பலவீழ்ந்த
வானைமேவினசிலருயிர்சிலருடல்வாளியாதிகள்போழச்
சோனைமாரியிற்சொரிந்தநெய்த்தோர்நதிதொடுகடல்புகப்பாய்ந்த. (கசுக)

குடருமீரலுநரம்புமங்கமுங்கொழுங்குருதியும்வளர்தோலுந்
தொடருமூளையும்வழுக்கும்வண்ணிணங்களுந்தொகுமயிர்களும்வெவ்வே
றடரநின்றவச்செங்களமுடலினையகமதிப்போர்தம்மை
உடலமின்னவையலதிலையெனவுணர்த்துவதுபோன்றதுமாதோ. (கசுஉ)

முரண்டவாவவைவஞ்சினங்கூறுபுமுறைமுறைபடைதூண்டி
யிரண்டுசேனையும்பொருதுழித்தன்படையெய்ப்புறவதுநோக்கித்
திரண்டமாற்றலன்படையொருங்கழிதரச்சித்தியென்பவள்வல்லே
அரண்டவாதவோர்வீரனைவேறுறவதிசயமுறத்தந்தாள். (கசுங)

இலக்கம்வாளிகளிலக்கம்வார்சிலைத்திாளிலக்கங்கேடகம்வைவாள்
இலக்கமேனையபடைகளும்வேறுவேறிலக்கமங்குறவேந்தி
இலக்கம்வீரரையொருநொடியளவையினிறுத்திடுதிறத்தானே
இலக்கனென்றொருபெயர்புனைந்தெதிர்த்தனனெதிர்த்தவன்படைமீதே.()

ஒருவனுகிநின்றெவ்வொருபடைவகைக்கவ்வவப்படையேந்தி
மருவலார்கள்வெவ்வேறொருங்கிலக்கர்கண்மலைதரவவர்க்கெல்லாம்
கருவிவானெனச்சொரிந்துயிர்மடித்துயர்கணணிறுமாப்போடப்
பொருதபேரமைச்சரைப்புறங்கண்டவன்புத்திரர்தமைக்கொண்டான். ()

தேரினேடுகைப்பற்றியவவர்தமைச்சிக்கெனக்கொடுபோந்து
காரினேடெதிர்கரதலவிலக்கனக்கணேசர்சன்னிதியுற்றுப்
பாரினேடுவிண்பணிசெயுமலர்ப்பதம்பணிந்தெழுந்திவரெந்தாய்
தாரினேடெதிர்கணனுடைமைந்தர்நின்சரணஞ்சார்ந்தனனென்றான். ()

இறைவநின்னருளாலெதிர்ந்தவரெலாமிறந்தனர்சிலரஞ்சிப்
பறைதலுற்றனர்கணனொருவனுமெதிர்படர்ந்திலனிருக்கின்றான்
முறைசெய்நின்கையாலவிந்தவர்முத்தியின்முற்றினரதனாலம்
மிறைசெய்வேந்தையுநின்கையாலிறுத்துமெய்வீட்டினுற்றிடல்வேண்டும். ()

சூலபாணியுஞ்சுலபனுமெனுமிவர்சுத்தவீரர்களென்றோ
டேலவேநெடும்பொழுதமராடிமற்றென்கையிலகப்பட்டார்
சீலமாரிவர்க்கவனரசாட்சியுஞ்சேர்த்தருள்செயல்வேண்டும்
கோலமார்குணக்குன்றமேயெனவுங்கூறினன்றிறலாளன். (௧௬அ)

வரிந்தபூங்கழல்விநாயகர்வாக்கருள்வழங்கிவைகினர்போரில்
இரிந்தமந்திரத்தலைவர்கள்கணன்புடையெய்தினரவர்தம்முட்
டெரிந்தசூழ்ச்சியிற்கிரந்தன்மன்னவனெதிர்சென்றுமைந்தர்கள்சென்றார்
புரிந்தகாரியந்தெரியுமோவெனவுரைபுகன்றிடுமமையத்தில். (௧௬௯)

ஓடிவந்தொருதூதுவன்வியரெழவொளிமுகம்வேறாக
வாடிநின்றிருவிழிபுனலுகச்சொல்வான்மன்னவநின்மைந்தர்
நாடியம்பெருந்தானைமுன்னானநால்வகைப்பெருங்கடலோடு
கூடியந்தணன்சேனையைக்கொன்றிறக்குவித்திடும்பொழுதானே. (௧௭0)

எண்ணிறந்தகையுடையனுயவைதொறுமேந்தியபடையோடும்
நண்ணினானொருவீரனம்படையெலாநடுங்கமற்றவன்போரின்
அண்ணினனதுகண்டுளேனம்படையமர்புரிந்தமைகாணேன்
மண்ணிலேபிணமாய்விழக்கண்டனன்வகுப்பதென்னவன்போரை. (௧௭௧)

எதிர்ந்துமந்திரத்தலைவர்கள்படைக்கலமெடுக்குமுன்படையொவ்வொன்
றதிர்ந்தபூங்கழல்வீரனேர்விடுத்தவராற்றலையழிவிப்பப்
பிதிர்ந்துநீங்கினர்சிறிதுபோராற்றியபெருந்திறனின்மைந்தர்
முதிர்ந்தவெந்துயர்மூழ்கிடத்தேரொடுமுற்றினன்கைக்கொண்டான். (௧௭௨)

தன்னிரும்படைநாப்பணேயவரொடுசார்ந்தனன்விறல்வீரன்
பின்னரன்னவரென்னராயினர்கொலோபெருமநாடிலனென்றான்
அன்னவெஞ்சொல்செஞ்செவிநுழையாமுனமடுக்கல்வீழ்ந்தெனமன்னன்
பொன்னெடுந்தனித்தேரினின்றவனிமேற்புரண்டுவீழ்ந்தனனம்மா. (௧௭௩)

கடங்கவிழ்த்திடுங்குஞ்சரக்குழாத்தினைக்காணுமுனடுஞ்சீற்ற
மடங்கறன்குழவியைச்சரபங்கொளமறுகினுலெனவீழ்ந்த
அடங்கருந்திறற்கணனநிவழிந்துயிர்ப்பதுவுமற்றனனோக்கி
உடங்கிருந்தவர்தெளித்திடத்தெளிந்தவனுறப்புலம்புவன்மாதோ. (௧௭௪)

வேறு.

ஆவாசூலபாணியரும்போர்ச்சுலபாநீர்
ஆவாவெங்கேசென்றனிரெனைவந்தடையீரோ
ஆவாதேவர்தானவராதியனைவோரை
ஆவாவென்றீரின்றொருவன்கையகப்பட்டீர். (௧௭௫)

செத்தேனல்லேனுவியுயங்கச்சிவணிற்றுச்
செத்தேனாக்கந்தேசொளியாண்மைதிகழ்வீரம்
செத்தேனும்மாற்சீர்கொளுநந்தங்குலமின்றே
செத்தேனந்தோநின்றசாளுந்திறமென்றான். (௧௭௬)

என்றிவ்வாறுநன்றுபுலம்புமிறைதேறத்
துன்றுஞ்சூழ்ச்சிவல்லவரண்மிச்சொலலுற்றார்
ஒன்றுஞ்செல்வவாருயிர்போதலுறுமேனுங்
குன்றம்போலநின்றயர்கில்லார்குணமுள்ளார். (௧௭௭)

வேறு.

இருவருமிருவரேயென்றெவர்களுமெண்ணச்சென்றன்
னருமைமைந்தர்கள்போராற்றியவிலகவந்தமாட
மருவலன்சேனைவீரர்வல்லுயிர்தின்றுதாமுங்
கருமமுமன்னதாகக்கையகப்பட்டாரன்றே. (கஎஅ)

காரணமதனைநாடிக்கண்பிசைந்தழுதுசுத்த
வீரனுயிருக்குநீயுமெலிந்திடினினியென்னாகுஞ்
சேரவேநாமமல்லோமுஞ்சென்றிலக்கனையுமன்னான்
சாருமாறுற்றுநின்றதவனையுமொருங்குகொன்று. (கஎகூ)

இருவருந்தப்பிவைகினிம்மெனக்கொண்டுமீண்டு
வருகுவமென்றுசொல்லமன்னவனிரதமூர்ந்தான்
அருவியமதமால்யானையமைச்சர்களேறிச்சென்றார்
பொருவிடைதப்பியுய்ந்தபொருநருமொருங்குபோந்தார். (கஅ௦)

இலக்கனெவ்விடத்துளானென்றெனைவருநாடிச்செல்வார்
விலக்கருமதுகைசான்றவிநாயகரெதிரேசார்ந்தார்
மலக்குறும்பகழ்ந்தயோகமாதவர்மதிக்குமெட்டாத்
துலக்குறுமிறைவர்மேனிதொல்லைமாதவத்தாற்கண்டார். (கஅக)

சித்திவாமத்தும்புத்திதிகழ்வலப்புறத்துங்கையாற்
பத்தியாற்றழுவிச்சிங்கமுதுகின்மேற்பயின்றுகையின்
வைத்தமோதகந்துய்க்கின்றவரதனைக்கண்டோரிந்த
வித்தகன்போலவேறுகண்டிலேமெனவியந்தார். (கஅஉ)

அதிசயமெய்திநின்றவரசனெம்பெருமான்முன்னர்த்
துதிசெயுங்கபிலஞானதூத்தவமுனியைநோக்கிக்
கதிரவனெதிரேநின்றுகாந்தமங்கியைக்கான்றென்ன
முதிர்சினக்கனலைக்கொட்டுமுகத்தினனாகிச்சொல்வான். (கஅ௩)

கருடனைநாகங்கூடிக்காயுமோகபிலாநீயிப்
புருடனைத்தாபித்தாயிப்புலவனைவிரையநம்பால்
இருடகவிடுவிடாயேலழலுமிழ்கணையொன்றானே
தெருடகநினையுஞ்சார்ந்ததேவையுங்கணத்திற்கொல்வேன். (கஅச)

இருணிறக்கடல்சூழ்வைப்பினிருடியரானாரெல்லாங்
கருணையராகிக்காமமாதிகளாறுநீங்கி
யருணவிலிறைவன்பாதமடைவர்நீயவற்றின்வேறாப்
பொருணனிவிழைந்தெவ்வாறுபுங்கவனானாய்சொல்லாய். (கஅ௫)

அன்றினர்யாவராகவவர்க்கெலாமரிட்டஞ்செய்ய
மன்றநான்றோன்றிநின்றேன்மற்றெனக்கரிட்டநும்மால்
ஒன்றுமோதுங்களாலேநீங்களேயுறக்கெட்டீர்கள்
என்றனன்கபிலன்கேளாவெரிவிழித்திதனைச்சொன்னான். (கஅசு)

சாகரமனையபாவந்தமக்கெலாமன்றநீயே
ஆகரமாகிவிண்ணோராதியர்தம்மைத்தாழ்த்திச்
சூகரம்போலமையற்றோய்யல்வீழுன்னைக்கொல்ல
மாகருமறியாவீசன்விநாயகர்வடிவாய்வந்தார். (கஅஎ)

வேறு.

குரைக்குநாய்கடியாதெனக்கூறுவர்கடைவாய்
துரைக்குமாறுகற்றனவெலாநொடித்திசெங்குருதி
திரைக்கவீழ்நுமரோடுசெங்களத்திடைநீயும்
இரைக்கும்வேலையோலேழையரழவினியிறந்தாய். (கஅஅ)

கவிழுமேல்வையிற்கலனெனக்கமழிழுதொழிய
வவியுமேல்வையில்விளக்கெனத்தள்ளிணையரச
நவியமேந்தியநம்பிரானுனவிச்சுமுகர்
சவிவண்பாதமிப்போதுந்தாழ்ந்துய்யலாமென்றார். (௪அ௯)

கேட்டமன்னவன்கிரிபொருஞ்சிலைக்கரங்குனித்து
நாட்டநின்றெரியுகவொருகணைவிநாயகனர்
சேட்டிருந்தனிநுதலினுமிரண்டுதிண்புயத்தும்
தோட்டலர்ப்பதத்திரண்டுநேர்தொடுத்துநின்றார்த்தான். (௪௯0)

விட்டவாளிகள்குறித்திடுமிலக்கத்தின்மேவிப்
பட்டுநீறினபராபரன்விநாயகப்பெருமான்
இட்டவாதனம்விட்டெழுந்திலனிருந்தாங்கே
அட்டுவாவெனவிட்டனனவிர்மழுப்படையை. (௪௯௧)

கரிந்தபன்னிருகதிர்களெண்டிசையொளிகலந்த
பொரிந்ததிண்வரைபொடிந்ததுநிலங்கடல்வறந்த
நெரிந்ததண்டமுநீறினவுலகெலாமோடி
அரிந்துதள்ளியதடல்கெழுகணன்முடியதுவே. (௪௯௨)

பரசுமீண்டதுபண்டுபோலுலகெலாம்படைத்திட்
டரசவன்னமாட்டயருங்கங்காநதியாடிப்
பிரசமென்மலர்க்கொன்றையான்பிறங்கொளிக்கரத்து
விரசிநின்றதுமிடைந்தவிண்ணவர்கள்பூமாரி. (௪௯௩)

ஐந்திருங்கணைதொடுத்தரிமகனருட்சுமுகன்
தந்தைமுன்னவிந்தானயன்றனையனுங்கணனும்
எந்தைமெய்யிலங்கணைதொடுத்திறந்தனனீட்டும்
ஐந்துந்தங்களைக்கொன்றிடுமெறப்பகைபோலும். (௪௯௪)

உலர்ந்ததேவர்களுறங்கவோங்கியகணனுனை
புலர்ந்துநீங்குறவிளங்கியபுண்ணியமுதல்வன்
மலர்ந்ததாடொழவருகுவானென்னவைகிருளும்
புலர்ந்துநீங்குறப்புணரியிற்பூத்தனன்கதிரோன். (௪௯௫)

முற்றுசேனையுங்கணனுமோர்முகூர்த்தத்திறெருங்கே
யற்றவாறுகேட்டகிலமுமதிசயமடைந்த
கொற்றவான்மழுக்கணனுயிர்குடித்துழியிரிந்த
பெற்றியோரெலாம்பெருமைசேரபிசித்தையடைந்தார். (௪௯௬)

சுரந்தசேனையொடெழுந்துபோயடுத்ததுதொடங்கிப்
பரந்தபேரொளிக்கணனுயிர்பாறியதுணையும்
உரந்தவாவமைச்சர்கள்வகுத்துரைத்திடக்கேளா
வரந்தைபோர்த்திடவபிசித்துக்கிளையொடுமழுதான். (௪௯௭)

வேறு.

நள்ளாருயிர்க்குநமனமனடித்துணைகள்
விள்ளாதவர்க்குவிரிந்தகடல்வாய்ச்சுதைமன்
எள்ளாதசீர்த்திக்கிடுகெலமன்செங்களத்துப்
புள்ளார்நரியார்புரட்டியிடப்பட்டதுவே. (௪௯அ)

மாதவத்தால்வந்தமகனேகுலத்தைமுதிர்
பாதவத்தின்வீழ்போற்பரிப்பாயெனவிருந்தேன்
ஆதவத்தானேடிகலியையோவென்கண்ணெதிரே
நீதலத்தின்வீழ்ந்தென்னைநெஞ்சுருகவைத்தனையே. (௪௯௯)

முன்னேயிதம்போன் முடிந்துமுடிவெய்தும்
பின்னேயகிதம்பிழையாதுவந்தடுப்பச்
சொன்னுருரையேதுணையாகக்கொண்டெழுந்தங்
கொன்ஞர்நகைப்பவொருகணத்திற்பட்டனையே. (உ௦௦)

வேறு.

அழுமபிசித்தினைக்கிரந்தனண்மியே
விழுமியதுரைப்பனிவிலாவிக்கின்றது
பழுதரியவரழும்பைங்கணீர்கள்செத்
தெழுமவர்முகத்தில்வீழ்த்திடுதலுண்மையால். (உ௦௧)

அனித்தமெய்தியவுடற்கவலித்தென்பயன்
இனித்தகப்புரிகடனியற்றுவாயெனப்
பனித்தகண்டுடைத்தவன்பாங்கிஞரையுந்
தனித்தமன்னவனெடுசொரக்கொண்டுபோய். (உ௦உ)

அஞ்சியவரசர்களடிகடைவர
விஞ்சியவமரர்கள்வீணைதைவரப்
பஞ்சணையமளியிற்பள்ளிமேவிய
மஞ்சனைச்செங்களமாட்டுக்காட்டிஞன். (உ௦௩)

அரம்பையரெதிரெதிராடுமுன்னெலாம்
சுரம்பயில்பேய்க்கணந்துணங்கையாடின
பரம்புசாந்தாற்றிகள்பயின்மெய்ப்புட்குழாத்
துரம்பயில்சிறகரின்வளியுலாவின. (உ௦௪)

நாற்றியபூந்தொடைநறுவிதானமும்
வீற்றெளிமணிவியன்குடையுமேதகத்
தோற்றியமணிநிழற்றூரமாயிடைப்
பாற்றினப்பந்தரினிழல்பரந்ததே. (உ௦௫)

கவரிகளிரட்டியகாமர்பாங்கெலாம்
இவர்நரிநாயின்வாலிரட்டிநின்றவே
உவரறச்சாந்தணியொளிர்ந்தமெய்யெலாந்
துவர்நிறக்குருதிநீர்தோய்ந்துநின்றதே. (உ௦௬)

மல்லிகைமுல்லைகால்வாங்கிமெத்திய
மெல்லியவமளியில்வீற்றிருந்திடும்
நல்லிசைமணியுருநவைபரற்குழாம்
புல்லியவன்களம்பொறுத்துநின்றதே. (உ௦௭)

பேரிகைகுடமுழாப்பிறங்குதண்ணுமை
வாரியன்முரசமுமற்றுநாய்க்குரல்
ஓரியின்குரலுறுபேயின்வெங்குரல்
சாரினப்புட்குரலாய்த்தழைத்தவே. (உ௦அ)

வளரபிசித்தெனுமன்னனின்னணம்
அளவறுவீரமுமனைத்துநீங்குபு
கிளர்பிணக்குவாலிடைக்கிடந்தமைந்தனை
உளநனிபதைப்புறவுற்றுநோக்கிஞன். (உ௦௯)

சந்தனக்குறடகிற்குறடுதோம்பல
விந்தனமாகவிட்டெடுத்துமேலுறீஇச்
சுந்தரமகளிர்கள்சூட்டுமாலையாற்
சூந்தெரிமாலையையூழிற்சூட்டிஞன். (உ௧௦)

அயிற்றலைப்படையமரருந்தேவரும்
பயிற்றியவயிற்றெரிபாற்றக்கட்டைமேல்
துயிற்றிமைந்தனுக்கெரிசூழவிட்டவன்
வயிற்றெரிதாங்கித்தன்மனையிற்சென்றனன். (௨௧௧)

அற்றைநாளொழிதரவபிசித்தென்பவன்
கற்றசூழ்ச்சியரொடுங்கலந்துதன்மகன்
பற்றுமாமணிகரம்பரித்துமாதவன்
உற்றவாச்சிரமத்தையுய்த்தற்கெய்தினான். (௨௧௨)

குமுதவாய்மிழற்றியகுதலைமென்மொழி
அமுதுறழ்மாதரோடாங்குவைகிய
சுமுகன்முன்வைத்தனன்சுடர்ச்சிந்தாமணி
சமுகநின்றவர்வியப்பெய்தத்தாழ்ந்தனன். (௨௧௩)

கடவுளர்வழிபடுங்கபிலமாதவன்
தடமலர்த்தாள்களுந்தாழ்ந்தெழுந்தனன்
அடன்மழுவொருகரத்தணிந்துவைகிய
குடவயிற்றிறைவனைக்குறித்திதோதினான். (௨௧௪)

வேறு.

சொல்லாய்ப்பொருளாயனைத்துமாய்த்துலங்காநின்றவொருமுதலே
எல்லாவுயிருநும்வயத்தவிதனையறியமாட்டாது
பொல்லாக்குணத்தாற்கணனன்புபுரியாதவமானத்திசலி
ஒல்லான்போன்றுமழுப்படையாலுலந்துமேலாங்கதியடைந்தான். (௨௧௫)

அலகினெடும்புண்ணியவயத்தாலடுப்பநுயர்மானிடப்பிறவி
குலவுமதனைப்பெற்றவர்நின்குரைபூங்கழற்றாள்வணங்காரேல்
பலனென்பெறுவர்பண்ணவரும்பரமாநினைச்சூழ்ந்திலராயின்
கலதியுடையராய்க்கீழாய்க்கவிழ்வரிதுசத்தியமாமே. (௨௧௬)

தருதாரணமேதியானமேசமாதியேயின்றிவைமருவி
வருமாதவர்களிருதயத்தின்வயங்காநின்றபரம்பொருளே
ஒருவாவிருவர்க்கறியாதாய்மூவராயுமொளிர்பவனே
பெருநான்மறைக்குமெட்டாதபெருமான்பேரானந்தமே. (௨௧௭)

சரியைகிரியைவளர்யோகந்தக்கஞானமெனநின்ற
உரியபணிகளியற்றுநருக்குவப்புற்றவ்வப்பயன்களையே
விரியவுதவும்பெருங்கருணைவிமலநீயிங்கவதரித்துத்
தெரியவெதிர்நின்றனையதனாற்றேவாநின்னைச்சரணடைந்தேன். (௨௧௮)

கருணைபுரிந்துபவந்தோறுங்களித்துப்புரிபுண்ணியத்தானின்
அருணகமலமலர்ப்பதத்தையடுத்துவணங்கியருள்பெற்ற
தருணமுடையசுலபனையுஞ்சமர்வேற்சூலபாணியையும்
வருணமொழுக்கங்கொளக்கணன்முன்மருவுமிறைமைதனில்வைத்து. (௨௧௯)

எண்ணித்துணியுங்காரியத்திலெவருநிகராக்கிராந்தனையே
நண்ணுமமைச்சனெனவமைத்துநகையாருடற்றுங்கலிநீக்கி
மண்ணிலடியேர்க்குயர்ஞானவயிராக்கியசெல்வமுங்கொடுக்கக்
கண்ணுமடியென்கருத்திதுவாங்கடவுளருள்யாதோவென்றான். (௨௨0)

நந்தாவாய்மையபிசித்துநவிலக்கேட்டுமனமகிழ்ந்து
வந்தாதரவிற்பணிந்தகணன்மைந்தர்தம்மைவிடுத்தருளிச்
சிந்தாமணியைக்கபிலமுனிசெங்கைத்தலத்திலெடுத்தளித்தார்
கொந்தாரிதழிமலரலங்கற்கோடீரத்தின்மிலைத்தவரே. (௨௨௧)

அறிவிற்சிறந்தோனெதிர்வணங்கியங்கையேற்றக்கணனுயிரை
மறிவித்தடியேற்குயர்சிந்தாமணியைவழங்குங்காரணத்தாற்
செறியுமுலகிலடிகளுக்குச்சிந்தாமணியென்றொருநாமம்
பறியவினைகள்யாவர்களும்பன்னல்வேண்டும்பரம்பொருளே. (உஉ௩)

இந்தமணியையெம்பெருமானெழிலாருருவிற்றரிக்கவென
அந்தமணியைவணங்கியெதிரளித்தானபிசித்தென்பவனும்
முந்துமிறையவர்கைக்கொள்கமுனிவன்மகிழவென்றிரந்தான்
றந்தவிறைவன்கரம்வாங்கித்தனதுகளத்திற்றரித்திட்டான். (உஉ௩)

அன்பர்வழங்குமுடல்பொருள்களாவியனைத்துங்கைக்கொண்டே
இன்பம்வழங்குஞ்சிவபெருமானிருடிதருஞ்சிந்தாமணியைத்
தன்பொற்களத்திற்றரித்தலொடுந்தைவிண்ணமரர்மலர்தூர்த்தார்
துன்பமகலவந்தரதுந்துமியோரைந்தும்வழங்கினவே. (உஉ௪)

சிந்தாமணியைத்தரித்தலினுற்சிந்தாமணிநாயகரென்று
சந்தாக்கபிலர்மனையிலவதரித்தநலத்தாற்கபிலரென்றும்
மைந்தாருடம்போடொத்தமலர்முகத்தின்வரலாற்சுமுகரென்றும்
எந்தாயெனவாண்பெண்ணுய்வேறிருப்பார்க்கணிந்தார்திருநாமம். (உஉ௫)

வள்ளலருள்பெற்றபிசித்துவயங்குந்தனதூர்ப்புகுந்தறத்தின்
உள்ளமிகுந்தபவுத்திரருக்குலகாளரசுபகிர்ந்தளித்துப்
பள்ளநெடுநீர்வியனுலகும்படர்வானுலகுமதித்தேத்தத்
தெள்ளுமறையின்முறையொழுக்கந்திறம்பானினிதுவாழ்ந்திருந்தான். ()

கபிலங்கருமைபசுமைசுதைகவுரவுருவிற்பலவுயிர்க்கும்
கபிலையிளங்கன்றினுக்கிரங்குங்காட்சிகடுப்பக்கருணைபுரி
கபிலர்வரங்கள்பற்பலவுங்கரிசுதீர்ந்தமாதவத்துக்
கபிலர்க்கருளிமறைந்தனரக்கபிலர்த்தியானத்துறப்பிணித்தார். (உஉ௭)

வையமுழுதுமிடர்நீங்கவழுத்துங்கபிலர்திருமனையிற்
செய்யதழல்வேள்வியிலெழுந்தசெயலாலணிந்தபெயர்மூன்றும்
பையநவில்வாரிடர்பிணிகள்பாவமுழுதும்பறிபோக
வையமறவாழ்ந்திறுதியினுமமரராய்ப்பின்வீடணைவார். (உஉ௮)

இறைவன்கபிலன்சுமுகனெனக்கினிமையருள்சிந்தாமணிதான்
நிறையவிளையாடியவிந்தநிகரில்சரிதங்கேட்டவரும்
குறைவில்சரிதங்கேட்டவர்க்குக்கூறும்பயனேபெறுவரென
உறையுமலர்ச்சேக்கையனுரைத்தானுயர்மாதவத்துவியாதனுக்கே. (உஉ௯)

கமலனடியைவியாதமுனிகையாற்றொழுதுமறையறியா
வமலனருள்சேர்கபிலமுனியான்றகுணமுமவன்றனக்கு
விமலவிசும்பின்வளர்சிந்தாமணிமேவியதும்விளம்பென்றான்
சமலமொடுவெல்வினையிரியத்தண்டாமரையான்சாற்றுவான். (உ௩0)

வேறு.

பொறிகளைந்தையுந்தன்வயமாக்கியபுனிதன்
செறிதவங்களுக்காகரமாதருசெல்வன்
நெறியின்முத்தழனித்தலுமோம்பியெவ்வுயிர்க்கும்
மறிவிலாததண்ணளிக்கொடைவழங்கிடும்வரதன். (௩௩க)

ஆற்றும்யோகத்தினலரும்பரப்பிரமத்தை
யேற்றபோதெலாந்தன்வயமாக்கிடுமியல்பன்
போற்றுகின்றதன்னிச்சையாற்புவனமூன்றினையும்
பாற்றியாக்கினன்களித்திடவல்லவப்பண்பன். (உ௩உ)

தெரியுமாதவர்குழாத்தினுட்டிலகம்போற்சிறந்த
பெரியமாதவன்பேசியகபிலன்பெற்றிமையை
வரியவோதுவார்யாவரம்மெய்த்தவன்றனக்கங்
கரியதானசிந்தாமணியடுத்ததுங்கேளாய். (௨௩௩)

தொல்லைநாளினுளொருதினந்தூத்தவனிருக்கும்
நல்லசூழலினிலத்ததிசயநோக்கி
வில்லுலாமணிமோலியின்விண்ணவர்வேந்தன்
செல்லுவான்பசிதாகநோயொடுஞ்சென்றுசார்ந்தான். (௨௩௪)

கம்புளோதிமமகன்றில்போதாக்கருந்தாராப்
பம்புபூணிகணேமியங்குருகுபல்கரண்டம்
வெம்பிமீனெறிபறவைநாஞவிதப்புள்ளும்
நம்பிவாழ்தருநறும்புனற்றடமொருபாலாம். (௨௩௫)

ஆரந்தேக்ககிலசோகுநாகஞ்சணிநாளி
கேரம்பூகதமிலவங்கங்கீசகந்தேவ
தாரந்தாடிமங்குங்குமந்தமரத்தைசிந்து
வாரம்போதியாதிகண்மிடைபொழிலொருமாடாம். (௨௩௬)

முல்லைமல்லிகைமயிலைமாதவிகருமுகைகள்
வில்லநந்தியாவட்டம்பாதிரிவெட்சிகோங்கம்
குல்லைகூதளங்கணவிரங்கொன்றைபூங்குருந்தம்
நல்லசண்பகமுறுநறுவனமொருசாராம். (௨௩௭)

ஆம்பலுற்பலமரவிந்தமிவ்விருவகையும்
ஓம்பிநெய்தலுமனிச்சமுமுடன்றழீஇச்சிறந்த
தேம்புனற்றடவோடையுஞ்சிலம்புதண்வனத்தில்
ஆம்பல்பண்டமுமலைத்தெழுமாறுமோர்பாங்காம். (௨௩௮)

சாதிவேற்றுமையான்மிகச்சார்ந்திடும்பகையை
மோதிமாதவர்போலவேமுழங்கொலிவேங்கை
கோதிலாதகண்டீரவம்யாளிகுஞ்சரங்கள்
ஆதிவாழ்தரும்பொதும்பருமாங்கொருபுறத்தாம். (௨௩௯)

வேதசாத்திரபுராணத்தின்முழக்கமும்வீணை
நாதரானவிச்சாதரர்கின்னரர்நவிலுங்
கீதவோசையுங்கிளிகுயில்பூவையாதிகளின்
சீதவோசையுஞ்செறிவனவொருபுடையாகும். (௨௪0)

வளங்களின்னணமல்குமாச்சிரமத்தைநோக்கி
உளங்குளிர்ந்துதன்பரியினின்றுய்யெனவிழிந்து
களங்கமற்றநீர்நதியிடைக்காதலிற்றேய்ந்தான்
துளங்குமெய்யிடையாயிரங்கண்ணுடைத்தோன்றல். (௨௪௧)

உடங்குவந்திடுந்தேவரையுந்திமாட்டிருவி
இடங்கொளெங்குமாணுக்கர்மாதவங்கள்செய்திருப்ப
அடங்கவைம்பொறியோகுசெய்கபிலனையடுத்துக்
குடங்கைகூப்பினனிறைஞ்சினன்குடந்தமுற்றனனால். (௨௪௨)

வேறு.

அருந்தவன்யோகத்தினறிந்துயோகொரீஇ
வருந்தனியிந்திரன்வதனநோக்குபு
திருந்தலர்க்கேறனுய்திகழும்பொன்னகர்
இருந்தநீயிங்குவந்திட்டதென்னென்றான். (௨௪௩)

இந்திரனோடுவானிறைவவீசனைச்
சுந்தரவரியையாலயத்தைத்தோமிலா
வந்தணர்தமையச்சுவத்தமங்கியை
முந்துறக்கண்டுதொழாதுமுன்னினேன். (௨௪௪)

உயர்ந்தவனாயினுமொருவமற்றவன்
வயந்தகுபெருந்திருமாயுமென்றுநூல்
இயம்பலின்முனிவரரெழில்கொள்பாதங்கள்
நயந்தகப்போற்றநானிலத்தில்வந்தநான். (௨௪௫)

அந்தணாநினதடியடைவிற்போற்றிட
வந்துளேன்வந்தகாரியமுடிந்தது
எந்தைநின்றெரிசனமெய்தலாற்பசி
உந்தியதாகமுமொருங்குநீங்கின. (௨௪௬)

இனியமராபதிக்கேகுவேனெனத்
தனிவருமிந்திரன்சாற்றக்கேட்டலும்
முனிவரன்மொழிகுவான்முடிகொள்வேந்தனே
பனிமுருக்கிரவிவான்பகலினுற்றதே. (௨௪௭)

ஈங்குவந்தவர்தமையிளைப்பினோடயல்
நீங்கவிட்டிலமிகநிகழ்த்தும்வேள்வியிற்
றீங்கறவரப்பிராத்திக்கப்பட்டநீ
ஓங்குபுண்ணியத்தின்வாளாங்குற்றாயரோ. (௨௪௮)

சற்றிருந்தளியனேன்றருவதையனே
வெற்றதண்புனலதாய்விடினுங்கைக்கொள்க
உற்றவும்பரையுமீங்குறுவிப்பேனென
அற்றமில்வலாரியையாங்கிருத்தினான். (௨௪௯)

விடுத்தனன்கீடரைவிண்ணுளாரையிங்
கடுத்திடப்புரிமினென்றவர்களோடினார்
மடுத்தலையிருந்தவானவரைவம்மினென்
றெடுத்தனரவர்களுமினிதுபோந்தனர். (௨௫௦)

குறுகியவமரர்கள்குழைந்தவுள்ளராய்
முறுகியபெருந்தவமுனியைத்தாழ்ந்தனர்
இறுகியவன்பினாலிருடிவேணியில்
அறுகியலிறைவனையகத்துளெண்ணினான். (௨௫௧)

மெய்வளர்முனிவரர்மிக்கபத்தியாற்
பைவளர்பாம்பணிபரமர்கண்ணருள்
பெய்வதுசெய்தனர்பிறங்கப்பல்வகைத்
தெய்வதவுண்டியுந்திகழ்ந்துதோன்றின. (௨௫௨)

உண்டனரிந்திரனோடுதேவர்கள்
அண்டர்வைப்பினுநுகர்ந்தறிதராச்சுவை
கொண்டவுண்டியின்பெருங்குணங்கொண்டாடினர்
கண்டனர்முனிவரன்கதித்தமேன்மையே. (௨௫௩)

நன்றுறுதவத்தினானற்குணத்தினாற்
குன்றுறழ்முனிவர்க்குக்குறியெதிர்ப்பைநாம்
இன்றுசெய்வதுதகவென்றுநாடினான்
ஒன்றுறவழைத்தனனுலவைவேந்தனை. (௨௫௪)

நமதுபண்டாரத்தினகைச்சிந்தாமணி
அமர்வதுபாம்பணையமர்ந்தநாயகர்
தமதுகையான்முனந்தரப்பட்டுள்ளதை
எமதருளாற்புகுந்தெடுத்துவாவென்றான். (உ௪௫)

தனதுடற்கற்றைநாட்சமீரணன்றக
மனமுறுவேகத்தைவழங்கியாங்குப்போய்
இனனொளிமழுங்கியவெழிற்சிந்தாமணி
கனமுகைப்பவன்மலர்க்கரம்வந்தீந்தனன். (உ௪௬)

பணிவொடும்ந்திரன்படர்ந்துமாதவன்
அணிவளர்சேவடிக்கடுப்பத்தெய்வத
மணியினைவைத்தெதிர்வணங்கிமற்றவன்
தணிவினல்லருள்கொடுதுறக்கஞ்சார்ந்தனன். (உ௪௭)

வளத்துயர்கபிலனும்வளர்சிந்தாமணி
களத்திடையணிந்தனன்கருதினார்களை
அளத்துறுதரும்பெனவாக்குமீசனை
உளத்திடைப்பதிப்பவர்க்கியாதுறுததே. (உ௪௮)

இட்டமெலாந்தருமெழிற்சிந்தாமணி
முட்டறுமாதவமுனிவரற்குமுன்
ஒட்டியவாறிஃதுரைத்துமிக்கதை
மட்டிலைப்பருகுவார்வளத்தராவரே. (உ௪௯)

இரண்டெனப்படுமவதாரமேத்தினும்
குரண்டவெள்ளிறகொடுகோலக்கங்கையுந்
திரண்டசெஞ்சடையணிதேவையுன்னுவோய்
முரண்டபவறியெனமுடித்துமேற்சொல்வான். (உ௫௦)

சிந்தாமணிவிநாயகர் திருவவதாரப்படலமுற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-உ௬௫.



## எ௨ - வது கேசானனர் திருவவதாரப்படலம்.



திருமாலுநான்முகனுமறைகளுநாடுதற்கரியதேவரான
பெருவாய்மைவிநாயகனாரலகிலுயிர்வருத்தமெலாம்பேணவுள்ளத்
தொருவாதகருணைகொடுசுவேச்சையினாற்கெசானனராயுற்றப்பேரும்
வெருவாதகெசானனரென்றுயர்வாகக்கொண்டருண்மெய்ம்மூர்த்திதன்னை.

மங்காமற்பலவுலகுந்தரிப்பிக்குந்தாரகத்தைமகத்தைத்துட்ட
சங்காரகாரகத்தைத்தரணிபாரந்தவிர்ப்பதனைக்கன்மங்கள்
பொங்கார்வத்தெவ்விடத்துமிறுவுவதைப்பத்தருக்குப்போகம்வீடு
சிங்காமலருளுவதைச்சாதுக்கடமைப்புரக்குஞ்செல்வவாழ்வை. (உ)

பெரிதானவிக்கினங்களனைத்தினையுங்கெடுப்பதனைப்பேசப்பேச
உரிதாகுமூன்றாவவதாரந்தனையினிநானுரைக்கலுற்றேன்
அரிதாமென்றுலகமெலாமெடுத்தேத்தும்வியாதமுனியகம்வெள்ளாது
தெரிதாகமுடையவர்களொருவர்கொணர்ந்தருணறுநீர்தெவ்வுமாபோல். ()

மட்டாருநறுங்கமலவானவன்முன்னொருகற்பமருவும்போது
முட்டாதபெருவளங்கண்முகிழ்த்திடுஞ்சத்தியவுலகின்முறையின்வாழ்வான்
கொட்டாவிவிட்டனன்மற்றதினின்றுமொருபுருடன்குருத்தானன்றே
யெட்டாசைபுவிதுறக்கம்பாதலமென்றவற்றிரத்தமெழிலிபெய்த. (௩)

செம்பரத்தம்பூவனையநிறத்தினனையிருதிசையுஞ்சென்றுவீசும்
வெம்பரத்திண்வடிவினியன்மணத்தினன்விண்ணோங்குபெருமெய்யன்றீயன்
பம்பரத்தின்வாயினிடர்க்கணைமாரனனையவெழிற்பண்பனன்னோன்
அம்பரத்திற்சிரம்பத்திற்றோன்றுதலாற்சிரம்பனெனவறையப்பட்டான். (௫)

கரம்பயிலுங்குண்டிகையானுரம்பயிலுந்தாமரையான்கண்முனின்ற
சிரம்பனைநீயாரென்னவினவுதலுமுளச்செருக்கிற்சிரம்பனின்றன்
வரம்பயிலுமானனத்திற்பிறந்தனனினக்குமகனறிவிலாத
உரம்பயிலுநீயுமறிந்திலைகொலெனவுரைத்திடமும்பெயருங்கேட்டான். (௬)

பந்தாரும்பவளவிரற்பாரதியைநாவிருத்தும்பதுமன்காயத்
தந்தூரதேயத்துமிருள்பருகும்புத்திரற்கார்வத்தாற்சொல்வான்
சிந்தூரநிறனுகியிருத்தலினுலெனக்கினியசெல்வமைந்தா
சிந்தூரனெனப்படுகதிரிபுவனத்துனக்கினியதேயங்கொள்க. (௭)

உலகமெலாமுனதுவசப்படுகவிண்டுமுதலியவும்பர்களாலென்று
நிலவலுறுமச்சமுனக்கின்றாகநீவெகுண்டுநீண்டகையாற்
குலவியெவர்களைத்தழுவிக்கொள்ளினுமன்னவர்வெந்துகுருநீறாகப்
புலவர்களத்திரங்கொடியசத்திரத்துமுனக்கிறுதிபொருந்தாதாக. (௮)

புத்திரனேயிவையனைத்தும்வரமாகக்கொள்கவெனப்புகன்றான்வேதன்
அத்தனையும்வரமாகக்கைக்கொண்டுசிந்தூரனயனைநோக்கி
மெத்தியநற்றவந்தானம்விரதமகந்தருமமிவைவிளைத்தலின்றி
உத்தமனேவரமனைத்துங்கொடுத்தனையென்றுவந்தருள்பெற்றெழிந்தானங்கு

வேறு.

பூதலநோக்கிச்செல்லும்பொருவில்சிந்தூரனென்பான்
மாதவந்தருமந்தானமற்றொன்றுஞ்செய்யாதேற்குப்
போதமர்கடவுடந்தபுகழ்வரம்பொய்யோமெய்யோ
சோதனைசெய்யல்வேண்டுமெனவுளந்துணிந்துமீண்டான். (௧௦)

சுரந்தநீர்க்கடல்களேழுந்தளும்பிடவண்டம்விள்ளப்
பரந்தமூவுலகுமஞ்சப்பறவையுமுடுவுஞ்சிந்தக்
கரந்திடுவயிற்றுட்சூலுங்கரைந்திடத்தருக்கள்சாய
வரந்தரும்பிரமன்பாலேவந்தட்டகாசஞ்செய்தான் (௧௧)

தன்னிருகரத்தாற்கட்டச்சார்ந்தனன்பிரமனஞ்சித்
துன்னியவவற்குச்சொல்வான்றுட்டனென்றறியாதுன்னை
மன்னுபுத்திரவார்வத்தால்வரம்பலகொடுத்தேனந்தோ
என்னையேதழுவிக்கொல்லவெண்ணினையாதலாலே. (௧௨)

வெய்யவநின்னைக்கொல்லவிநாயகரென்னுந்தேவர்
ஒய்யெனவவதாரஞ்செய்துறுவரென்றுரைத்துச்சொன்னான்
மையலிற்படுஞ்சிந்தூரன்மற்றுமோரட்டகாசம்
செய்யவுண்ணடுங்கிமாழ்கித்திசைமுகனிரியல்போனான். (௧௩)

நெட்டுயிர்ப்பெறியவோடிநீண்டவைகுந்தத்தெய்தி
உட்டுளையெயிற்றுநாகத்துறங்குதன்றாதைதாளிற்
கட்டுளிசிந்தத்தாழ்ந்தகமலக்கண்ணன்
இட்டொருதவிசுதன்னையிருந்தபின்வினவுகின்றான். (௧௪)

இருதயந்துடியாநிற்பவெழுந்துநெட்டுயிர்ப்புவீங்க
உருவமுங்கம்பமெய்தவுளனெடுமுகனும்வாட
வருவதற்கியாதுநீங்குவந்ததிங்குரைக்கவென்றான்
திருமலர்வாழ்க்கையாளன்றிருமகண்மணாளற்கோதும். (௧௫)

ஆவித்தேனதனில்வந்தானவனேயேமைந்தனகப்
பாவித்தேன்வரங்களீந்தேன்படர்ந்தவனேயேகொல்ல
மேவித்தேருததுன்பம்விளேத்தனனேடிவந்தேன்
போவித்தேயவனேயென்னேப்புரந்தருளென்றிரந்தான். (கசு)

எய்ந்தபைந்துளவமாலேயேந்தல்கேட்டினேந்துசொல்வான்
ஆய்ந்துதேருமலொன்றையாக்கிடினவர்க்கேகேடு
வாய்ந்திடுமாய்தலின்றிவரங்களைக்கொடுத்துவிட்டாய்
தேய்ந்திடானினியுன்னுலுந்திறஞ்செயென்னுலுமன்னன். (கஎ)

ஊழையார்விலக்கவல்லாரும்பர்களாதியோர்க்கும்
பீழையேபெருக்கிவிட்டாய்பெருமறைநீதிமுடித்
தாழைவீழாமலிட்டாய்சகலதுட்டரையுங்கொல்லும்
ஏழையோர்பாகர்தம்மாலிவன்கெடல்வேண்டுமென்றான். (கஅ)

இருவரும்பேசாநின்றவேல்லையிற்பிரமன்றன்னே
ஒருவுருவினேயேபோலவுடன்றொடர்ந்தெழுசிந்தூரன்
௬ருவிமாயவனேயண்மித்தொக்கபோர்க்கெழுகவின்றேல்
அருகுறுமிவனேடுன்னேயடலேசெய்திடுவெனென்றான். (கக)

கொடுங்கொலேயவுணன்கூறக்குருதிதோய்திகிரிச்செம்மல்
நடுங்கினனுள்ளமந்தநடுக்கந்தோற்றுமற்காத்தந்
கொடுங்கியின்மொழியாலன்றற்குறுவித்துச்சாந்தமெல்ல
விடுக்கருமத்தைநாடிவினேயமோடிதனேச்சொன்னன். (உ0)

மலேயொடுமலேபோராற்றின்மானமும்புகழுமுண்டாம்
அலேபுனற்கரையோடோங்கலமர்செயின்வீரமோவால்
இலேயொன்றுதாங்குநொய்ம்மையெய்தினேனிதுவேயன்றி
நிலேசெய்சாத்துவிகத்தாகுங்காவலினிலேத்துளேனன். (உக)

வண்டுபோயேறத்தாங்காவள்ளிதழ்க்கமலமொன்று
விண்டிடாதெற்றைநாளுமேதகத்தாங்கப்பட்ட
அண்டனும்பிரமன்றனுமறவுமெல்லியனீதன்றிக்
கொண்டுநூலோதிவையங்குயிற்றுவதொன்றேகற்றான். (உஉ)

ஆதலானுங்கணின்னேடுசெமர்விளேக்கமாட்டேம்
நாதனுயுலகமெல்லாநசிப்பிக்குமொருவனுள்ளான்
ஓதருவலிமிக்குள்ளாருலப்பிலர்தம்மைக்கொன்றான்
தீதறிந்திருவேங்கொண்டசெருக்கையும்பலகாற்சாய்த்தான். (உ௩)

வரைகளிற்சிறந்தமேருவரையவனங்கைவார்வில்
வரையெலாமொருங்குதொக்கும்வலிகெழுமவன்றேனோரா
வரைவுசெய்மனேயின்மாதும்வரைக்கெலாமிறைவன்குட்டன்
வரையவனிருக்கையானவைப்புநீயறிதிமன்னே. (உ௪)

ஆற்றலிற்பெரியனுகியனேவர்க்குமிறைவனுன
நீற்றணிமேனியானேநேர்ந்துபோராற்றிவீரந்
தோற்றுதியாயினுன்னேத்தொல்லேவையகங்கண்மூன்றும்
ஏற்றமாவுரைக்குமின்றேலெண்மையேயுரைக்குமென்றான். (உ௫)

ஒப்பிலாவிறைவன்றன்னேயுறுசமர்க்கிலக்கமாக்கித்
தப்பியநெடியமாயன்றன்மொழியமுதமாந்தித்
துப்புயர்சீற்றமார்சிந்தூரனங்ககல்வுற்றூழிச்
செப்பருவானேறென்னச்செருக்கினுற்றெழித்துப்பாய்ந்தான். (உசு)

கண்ணனுங்கமலம்வாழெண்கண்ணனுங்காதுபொத்தி
மண்ணியல்பாவைதிண்ணென்மரத்தியல்பாவையென்ன
நண்ணினரமரரெல்லாநல்லுணர்வழிந்துவீழ்ந்தார்
எண்ணுமற்றுயிர்கள்பட்டதியாவரேயியம்பவல்லார். (உஅ)

கயிலையிலெழுந்துபாய்ந்தகடுகொலையவுணன்றன்னை
எயிலழித்தவர்யோகத்திலிருத்தலாலறியகில்லார்
அயலுறுகணங்கள்சில்லவயர்ந்தனசிலவோட்டந்த
குயின்மொழியுமையாளுக்கிக்குழைந்தனளுள்ளமெல்லாம். (உ௯)

வேறு.

மறைகூவியறியாதபெருமானைநடநவிலும்வரதன்றன்னை
யறைகூவிப்பொரவடுத்தசிந்தூரனெனுமவுணனமலன்பால்வாழ்
முறைகூவிமதிவணங்குமுகத்தாளைநோக்கியிவண்முதிர்ந்ததேசின்
நிறைகூவினிலையிவளைக்கோடுமெனக்கொடும்பாவிநேரேபுக்கான். (௩௰)

வெருகடுப்பப்பஞ்சரத்துக்கிளிபோலவுளம்வெருவிவிமலச்செல்வி
யருகிருந்தநாயகனைமுகநோக்கிமுனிவரர்களமராதி
யுருகுளத்தின்வழிபாடுசெயவவர்க்குநாற்பொருளுமுதவுவாய்க்குப்
பெருகுதியானத்தினுறும்பொருளிலையேயாதலினுற்பிழையிலாதாய். (௩0)

நண்ணுதுநண்ணுகின்றதியானத்தைவிடுத்தெழுந்துநலியவென்னை
யெண்ணுதமருங்கடுக்குமிணையில்வலியானெதிருன்னெறுழைக்காட்டாய்
விண்ணுடர்பணிகேட்கும்வித்தகாவடிபிழைக்கும்வெய்யோர்தம்மைக்
கண்ணுனுநகையானுங்கையானுங்காலானுங்கடந்தோயென்றாள். (௩௧)

வேறு.

விழித்துக்கண்ணினைவிமலனார்வேங்கையாதனத்தை
ஒழித்துச்செங்கையிற்றுடியுமொண்சூலமுமெடுத்துத்
தெழித்துப்புல்லமேல்கொண்டுநேர்சென்றனரவனும்
அழித்துச்செல்வனென்றங்கையாற்றழுவமுன்னடுத்தான் (௩௨)

இருவர்மத்தியிலிமைக்குமுன்விநாயகரெழில்சேர்
ஒருபிராமணனெனப்பலவணியுருக்கதிர்ப்ப
மருவிநின்றிதுமொழிவர்நும்வலியினையறிவாம்
கருவியத்திரத்தாற்கடும்போரினைப்புரிமின். (௩௩)

இந்தவெல்லையினிறந்துசென்றொருவரையொருவர்
பந்தஞ்செய்வதுநினையற்கவெனப்பகர்ந்திடையே
சந்தமென்மலர்த்தனிக்கையிற்பரசினைநிறுவி
அந்தமில்சமராடல்பார்த்தருகுறவிருந்தார். (௩௪)

மறைவலாளனுய்வந்தருள்விநாயகர்வகுத்த
நிறைசொலாதரித்திருவருநெடுஞ்சமர்நேர்ந்து
குறைவிலாதசத்திரங்களத்திரங்களுங்கொண்டு
முறையினுல்வழங்கினரதைமுனைகெடத்தடுத்தார். (௩௫)

எண்ணில்காலங்களிருவருமின்னனநெடும்போர்
பண்ணுமேல்வையிற்படையின்வெல்லுவதரிதாமென்
றெண்ணிமூன்றுகண்ணிறைவனையிருகையாற்றழுவ
நண்ணினுனவையேயுருவானசிந்தூரன். (௩௬)

ஊக்கமோடிறைமேலெழுந்தோடியவவுணன்
றேக்குசேர்வலிசிந்தவாங்கிடைநின்றபரசு
தாக்கமீண்டனன்றனைமறையவனெனச்சார்ந்த
காக்குநாயகர்கண்டிதுகட்டுரைத்திட்டார். (௩௭)

காலத்தாருயிர்காலினுற்குடித்தகண்ணுதலார்
சூலத்தாலினியுனைச்சுண்ணமாக்குவர்துய்த்த
ஆலத்தாற்கெதிர்ந்தாருயிர்பிழைத்துவானுலகில்
ஞாலத்தாருளரிரிமதியெனநவிற்றினரால். (௩௮)

இறுதியேவருமீங்கினியிருந்தனமாயின்
மறுவிலாதநான்மறையவன்வகுத்தவாய்ச்சொல்லே
உறுதியாமெனவுளத்திடைத்தெளிந்துசிந்தூரன்
கறுவுதீர்ந்திருங்காசினிநோக்குபுசென்றான். (௩௯)

விடையினுயகனமரினையொழிந்துவீற்றிருந்தான்
படையையாள்விழிப்பனிமொழிப்பார்ப்பதிமடந்தை
இடையினுங்குறும்வேதியன்முகமெதிர்நோக்கி
யடையலான்றனையொழித்தநீயாருரையென்றாள் (௪0)

உரையினுலுணர்த்திலனுருவாற்றெரித்திடுவான்
விரையமேவியவுருவினைவிடுத்துநாற்றோளும்
புரையிலாமடங்கலும்புணர்சித்திபுத்திகளும்
நிரைசெய்நீடணிவடிவமுநேரெதிர்காட்டி. (௪௧)

புவனகாரணியாகியபூவைநின்றன்னைப்
பவனவேகமோடடுத்தெடுத்திடப்படர்ந்தொழிந்த
அவனைவாட்டநின்னகட்டின்வந்தவதரித்திடுவன்
சிவனைநீங்கருந்தேவிநீசிந்தையின்மறவேல். (௪௨)

இனியெவர்க்குநீயஞ்சலையிருமதியென்று
புனிதநன்மொழிபுகன்றனர்பொள்ளெனமறைந்தார்
கனியைவென்றசொற்கருங்கயனெடியகண்வேய்த்தோட்
பனிமலர்க்குழற்பார்ப்பதிபரிவுதீர்ந்திருந்தாள். (௪௩)

தறுகண்மேயசிந்தூரனுற்றழுவிடப்பட்டு
நிறுவுசோலைகாளாறுநீள்வனநகரூர்கள்
மறுவில்வீரர்களந்தணர்பெரியவர்மற்றும்
இறுதியாங்கடைநாளெனவெங்குநீறினவே. (௪௪)

அறந்தவாதநான்மறைநெறியருந்தவமாதி
இறந்தவிந்திரன்முதலியவிமையவர்பலரும்
சிறந்தவுண்டியாகியபுரோடாசந்தீர்தலினுற்
பிறந்தவெம்பசிவாட்டிடப்பெரிதுமாழ்கினரால். (௪௫)

பரந்தபூதலமுழுவதும்பாழ்படுத்தியபின்
நிரந்தவானமும்பாழ்செயநேர்ந்தனன்கொடியோன்
அரந்தைதாங்கியவமரர்களயனிடத்தோடிச்
சுரந்தகாதலிற்பணிந்துதந்துயரெடுத்துரைத்தார். (௪௬)

வெறிகுலாவியபங்கயச்சேக்கைவீற்றிருக்கும்
அறிவன்யாதுசெய்வாமெனவகத்திடைநாடி
நெறியிதாமெனத்தெளிந்துநின்மலவிநாயகரைச்
செறியும்வானவர்திரளொடும்வழுத்துதல்செய்வான். (௪௭)

வேறு.

யாவனொருவனயனெடுமாலகிலாண்டமுமீன்றெடுக்கின்றான்
யாவனொருவன்குணமாயுமியம்புமூவருருவாயும்
மேவுகுணாதீதனுமாயும்விளங்காநின்றானத்தகைய
தேவன்கமலத்தாளிணைக்குச்சிறியேம்வணக்கஞ்செய்கின்றேம். (௪௮)

பூதமைந்துமிருசுடரும்புகழ்சேர்துறக்கமுடுதிசைவெற்
போதுநதிகுய்யகரியக்கருரகரரக்கர்மனிதர்கள்கோக்
காதுவிருகங்களுஞ்செந்துக்களுநானுபூதமுமூவே
ழாதனிலைதலழிதலெவனருள்வானவற்குப்பணிகின்றோம். (௪௯)

உலகமுழுதுந்தனதுதரத்துறைவித்திருக்கின்றான்யாவன்
இலகுமணுதிசித்தாந்தமாகியிருக்கின்றான்யாவன்
உலவில்பலவேறுமுருவமுடையான்யாவன்மலமணுகா
வலகிலறிவன்யாவனவனடித்தாமரைக்குப்பணிகின்றோம். (௫௦)

யாவனொருவனடியாரையெய்த்தவிடத்திற்புரக்கின்றான்
யாவனொருவன்றயித்தியராலினைவானவரையளிக்கின்றான்
யாவனொருவன்வழிபடுவாரிடருக்கிடரைப்புரிகின்றான்
யாவனிகரிலாவிறைவனவன்பொற்றாள்கள்பணிகின்றோம். (௫௧)

முந்துமறையோர்குலங்கெடவுமொய்த்ததருமாதிகள்கெடவும்
வெந்துசிறியோம்பெருந்துயரில்விழவுந்தீங்குபுரிகின்ற
அந்தநெடியகொடும்பாவியானநிகரில்சிந்தூரன்
எந்தவிதநும்முடையருளாலிறைவாநிருமித்திடப்பட்டான். (௫௨)

வேதப்பனுவனுதருக்கும்விழுத்தீனருக்குநாதரென
ஓதப்படுகின்றீரதனுலோதேவேசாமாதேவா
காதப்படருஞ்சிந்தூரன்காழ்த்தவுயிரைக்கொன்றெம்மை
ஏதப்படாமைக்காத்தருள்கவென்றுதுதிகண்முழக்கினர். (௫௩)

வழுத்துமரியபொருள்செவியின்மடுத்துவிமலவிநாயகனார்
பழுத்தவுழுவலமரரெதிர்படர்ந்துகாட்சிகொடுத்தருளி
விழுத்துமனத்துக்கவலையவர்விழுந்துவணங்கியெதிர்நிற்ப
முழுத்தகருணைவிழிநோக்கமுறையின்வழங்கிமொழிகின்றார். (௫௪)

நல்லவமரர்காணீவிர்நவின்றேத்திரத்தையாரொருவர்
சொல்லிவிடினுஞ்சதுர்த்தியிடைத்தொக்கவவர்நோய்வறுமையிடர்
அல்லன்முழுதுமறுத்திட்டமனைத்துங்கொடுப்பாம்வைகறோறும்
மெல்லவுரைப்பார்க்கொருஞான்றுமேவாதுக்கங்கணவினுமே. (௫௫)

கதித்தவொளிவெண்டரளநகைக்கவுரிவயிற்றிற்புத்திரனாய்
உதித்துவளர்சிந்தூரனுயிரொழித்துப்புவனமூன்றினையுந்
திதித்துமெனமற்றவர்தமக்குச்செப்பிமறைந்துகருவானார்
மதித்துமலையான்மகடனக்குமகிழ்நர்பாதந்தொழுதுரைத்தாள். (௫௬)

கருப்பந்திகழ்ந்ததெனதகட்டிற்கண்மூன்றுடையபெருமானே
உருப்பந்தவிரச்சீதளமிக்கோங்குபொழிலினறுநிழலும்
விருப்பந்திசமூம்பலவளனும்விழுநீர்ப்பொய்கைநதிபலவும்
இருப்பவிளங்குமொருசூழலிடத்திலெனைச்சேர்த்துகவெனலும். (௫௭)

வேறு

அரியயனுக்கரியபிரானம்மொழிகேட்டகமகிழ்ந்து
தெரியிழைமாதுமையோடுதிரளிமிலின்விடையேறி
உரியகணம்புடைசூழவும்பர்தொழச்சென்றடுத்தான்
பரியலிகானனமென்னும்பயில்பெருநந்தனவனமே. (௫௮)

வேறு.

சோதிமாமரமசோகுகடம்புகூதநாகம்வழைபாங்கர்குருந்து
சாதியாரமகில்குங்குமம்வேங்கைசண்பகஞ்சரளம்வன்னிபலாசு
போதிகோளியிலவங்கநரந்தம்புன்னைபாடலமந்தாரமுருக்குக்
கோதிலாவிதழிதாதகிவஞ்சிகூதளங்குரவுகோங்குமராவம். (௫௯)

இல்லம்வெள்ளில்கடுநெல்லிவருக்கையிலவுதான்றிவகுளங்குழைமுன்னம்
வில்லமாதளைவெட்பாலைகுறிஞ்சிவெட்சிநொச்சிகருப்பூரவரம்பை
மல்லலங்கமுகுதெங்குகிரந்துமயிலைமாதவிகண்மல்லிகைமவ்வல்
முல்லைபித்திகைநறைக்கொடியேலமுற்றவானுநீழல்செய்வதுசோலை. (௬௦)

கந்தமல்கியவிந்தீவரமாம்பல்கமலமுற்பலமனிச்சமலர்ந்து
சுந்தரந்திகழுமோதிமமாதிதூயபுட்குலமணைத்தொளிர்பொய்கை
அந்தமில்பெருவளத்தமரோடையார்த்துவெண்டிரைபரப்பிநுரைத்துக்
கொந்துகொண்டமலருந்தியொழுங்குங்குடிஞையாதிகளுமல்கினவாங்கே.

கலைமதிச்சிலைபளிக்கறைசோதிகான்மணிச்செய்வரைவெண்மணலெக்கர்
நிலைபெறக்குயில்புறாக்கிளிபூவைநீண்டதோகைமயில்கின்னரம்வண்டும்
உலைவிலாதுபயில்கீதகிரம்பவுழுவைவாரணமடங்கனிலாவத்
துலைவில்பல்வளனுநீடுறமந்தச்சூழலுப்பணிளிதெய்தினனுதன். (௬௨)

கற்பகத்தருமுன்னாகியவைந்துகாமருந்தருவனேகநெருங்கப்
பற்பலாயிரநிதிப்பணிலங்கள்பதுமமல்குபுனல்வாவிவளைப்பப்
பொற்புமல்கியசிந்தாமணிதம்மாற்பொருவிலாதுவகைசெய்துமுடித்த
அற்புதத்தினமர்மண்டபநாப்பணணங்கினோடும்விடைநீத்தமர்வுற்றான். ()

நீடிநின்றபொழிறேனொடுதாதுகிரந்திறைப்பமலையச்சிறுதென்றல்
கூடிவந்துதிருமேனியின்மெல்லக்குலவவம்மையொடமர்ந்தபிரான்முன்
ஆடினார்சிலர்கடாழ்ந்தனர்சில்லோரங்கைகூப்பியெதிர்நின்றனர்சில்லோர்
பாடினார்கள்சிலர்சூழ்ந்தனர்சில்லோர்பணிவிடைத்திறமியற்றினர்சில்லோர்.

ஆங்குநாயகரமர்ந்தனர்யோகத்தம்மைபாங்கியர்களோடுநடந்து
வீங்குசீதமணலெக்கரிவர்ந்தும்விழுப்பளிக்கறையிவர்ந்துநறுந்தேன்
தூங்குமென்றருவினீழலிருந்துந்துலங்குசெய்வரையிவர்ந்துவதிந்துந்
தேங்குபொய்கைநதியோடைமருங்குசேர்ந்துமின்பவிளையாட்டயர்கின்றாள்.

இந்தவாறுமலைமாதுமைநங்கையின்பமல்கவிளையாட்டயர்நாளில்
அந்திவான்மதிமிலைந்தபிரான்மெய்யன்பனாகியகயாசுரனென்பான்
வந்துமல்கியவிசித்திரமானமண்டபத்தினையடுத்துமுகத்துத்
தந்தமொன்றுகொடுமுட்டியெடுத்துத்தள்ளினான்றரைகுழிந்திடமாதோ. ()

இன்னணம்பகருமேல்வைவியாதனிடையிலொன்றெதிர்வினவுதலுற்றான்
கன்னிபாகனடிபோற்றுறுமன்பன்கயமுகத்தவுணனாகியதென்னே
அன்னவன்கயவர்போன்மதியாமேயாண்டவன்வதியுமண்டபமுட்டி
வன்னிலத்திலிடவேண்டுவதென்னேவழங்குகென்னமலரோன்வகுத்தோதும்.

வேறு.

பண்டையோருகத்தின்மன்னன்பயின்மறைநான்குமோதி
மண்டியபொருளுந்தேர்ந்தான்மயேச்சுரனென்னும்பேரான்
கொண்டமூவறுபுராணங்கோதறக்கேட்டுவல்லான்
மிண்டறுநீதியோடுவியனுலகனைத்துங்காத்தான். (௬அ)

தருமங்களனைத்துந்தேர்ந்துதருமமேபுரியுநீரான்
கருவினையறுக்கும்பூதிகண்மணியணிந்துமுக்கண்
ஒருமுதலிருதாண்மூன்றுபோதுமுண்ணயந்தபூசை
பெருகியவன்பிற்செய்வான்பேணுமெண்செல்வமுள்ளான். (௬௯)

இலக்கணம்வழாதமுப்பத்திரண்டவயவமும்வாய்ந்தான்
மலக்குறும்பகழ்ந்துஞானவாய்மையுமகத்துட்கொண்டான்
அலக்கணையறியாவந்தவரசன்வாழ்ந்திருக்குநாளில்
விலக்கருஞ்சூழ்ச்சிசான்றவியாழவிண்ணவனுங்குற்றான். (எ௦)

விண்ணவர்குரவன்றன்னைவிரைந்தெதிர்கொண்டுபோந்து
வண்ணமென்றவசினேற்றிமருவுபாத்தியமேயாதி
திண்ணியவன்பினல்கிச்செயிரறுபூசைமுற்றப்
பண்ணிமுன்வணங்கிநின்றுபழிச்சினன்மயேச்சுரன்றான். (௭௧)

கடவுளர்குரவன்மன்னன்கருத்தினைமகிழ்ந்துசொல்வான்
அடல்கெழுவேலோயுன்றனாண்மையும்புகழுநீதி
உடனரசாளுமாண்புமூக்கமுந்தருமதான
நடவுமப்பண்புங்கேட்டுநானுனைக்காணப்போந்தேன். (௭௨)

கேட்டமைசிறியவாகக்கிளர்ந்தநின்குணங்களெல்லாம்
நாட்டமுன்னதிகமாகநன்றுறக்கண்டேனென்முன்
கோட்டியநினதுசென்னிகோதறுமுனிவர்தேவர்
வாட்டமில்பெரியோராலும்வணங்கிடப்படுவதென்றான். (௭௩)

உலகமூன்றிடத்துந்தன்னையொப்பவரில்லாவேந்தன்
அலகிலாமகிழ்ச்சிபூப்பவாண்டளப்பானைநோக்கிப்
புலவருக்கறிவுநல்கும்புண்ணியாநினதுவார்த்தை
நலமுறப்பயப்பதென்றுநவிற்றெனக்குரவன்சொல்வான். (௭௪)

எப்பொழுதரசநீபோயிபத்திடைத்தோன்றுகின்றாய்
அப்பொழுதெனதுவார்த்தையசத்தியமாவதின்றி
ஒப்பறுபயனைநல்குமுற்றவப்பொழுதுநீயும்
மைப்படிகளனான்முத்திமருவுவையென்றுபோனான். (௭௫)

பின்பொருகாலந்தன்னிற்பெருந்திறன்மயேச்சுரன்றான்
தன்பெருநாடுகாப்பான்றங்கியநகரநீங்கி
மன்பெருஞ்சேனைசூழவழியிடைச்செல்லும்போது
முன்புறமகதிவீணைமுனிவரன்போந்தானன்றே. (௭௬)

அணங்கறுவியாழப்புத்தேளருள்வரமடுத்தலானே
கணங்கெழுசேனைதம்மாற்கட்புலனுறாமையானே
வணங்கிலன்மகதிவீணைமாதவன்றன்னைக்கோமான்
குணங்கெழுமுனிவன்றேர்ந்துகோபத்தாலிதனைச்சொன்னான். (௭௭)

காட்டகஞ்சரியாநின்றகளிறெனவணக்கமின்மை
நாட்டினைநகைகான்மோலிநண்ணியநினதுசென்னிக்
கேட்டையிலாதாயற்றாலிப்பவமொழிந்தபின்றைக்
கோட்டுடையிபக்குழாத்துட்குஞ்சரமுகனாய்த்தோன்றி. (௭௮)

கயாசுரனென்னுநாமங்கைக்கொண்டுவாழ்ந்தந்தத்தில்
தயாநிறையுமையாள்பாகன்றணிப்பருங்கருணைதன்னால்
உயாவறக்கயிலாயத்திலுறுவையென்றுரைத்துப்போனான்
நியாயமேநடவுஞ்செங்கோனிருபன்மற்றதனைக்கேட்டான். (௭௯)

ஆவவென்சொல்கேன்விண்ணோர்க்காரியன்மொழிந்தவாறும்
தேவர்கண்முனிவன்சொன்னசெய்தியுமொத்தவாவென்
றோவறமகிழ்ச்சிபூப்பவுலப்பிலாச்சரியமெய்திக்
காவலனாயேபின்னுங்காலமெண்ணிலாதவாழ்ந்தான். (௮௰)

உரியதன்வாணாண்முற்றுமுலப்புறமுடிந்தபின்றைப்
பரியலிகானந்தன்னிற்பயில்கரேணுவின்பாற்றங்கிக்
கரிமுகனாகித்தோன்றிக்கயாசுரனெனும்பேர்தாங்கி
விரியமுற்பவத்துஞானமெய்யன்பனாகிவாழ்ந்தான். (௮௧)

ஆதியில்வியாழப்புத்தேளருந்தவன்மொழிந்ததுந்தன்
சாதியுங்கினைந்துசாமிதன்னையுங்கினைந்துசெம்பொன்
சோதிமண்டபத்தைமுட்டித்தள்ளினன்றுரிசுமுற்றுங்
காதியவியாதவந்தக்கயாசுரன்சரிதமீதால். (அ௨)

இனியவன்சென்னிவிண்ணோர்க்கிரும்பெருங்குரவனுன
புனிதன்முன்னுரைத்தவாறேபூசுரர்பெரியோர்தேவர்
முனிவரரெவருந்தாழமுதன்மைபெற்றிருந்தவாறு
நனியறிந்திடுகவென்றுநவிற்றுவன்வாணிகேள்வன். (அ௩)

வேறு.

கரக்கரிமுகத்தவன்காதலன்பரைப்
புரக்குமங்கணனமர்பொருவின்மண்டபம்
இரக்கமிலாதவனென்னத்தள்ளலும்
அரக்கருமமரராதியருமஞ்சினர். (அ௪)

பாங்கியர்தம்மொடுபெயிலும்பார்ப்பதி
ஓங்கியயோகமருன்றன்பாலடுத்
தீங்கொருகயாசுரனெய்திமண்டப
நீங்குறத்தள்ளினனிலத்திலென்றனள். (அ௫)

அண்ணலார்வெகுண்டவன்மீதுசூலத்தை
நண்ணுறவிடுத்தனர்நறியமாமதந்
திண்ணியவுடலெலாஞ்செறியச்சோர்ந்துகண்
மண்ணிடைவீழ்பவன்மனுவைச்செப்பினுன். (அ௬)

வேறு.

சிவாயநமவென்றுரைத்தமொழிசென்றுசெவியினேறுதலும்
தவாதகருணைச்சிவபெருமான்றயவுகூர்ந்துகரடமத
வுவாவின்முகத்தானமைப்பேணுமுளத்தானென்பதறியாமை
அவாவின்மணிமண்டபந்தள்ளவடர்த்தாமந்தோவெனவிரங்கி. (அ௭)

அத்திமுகவன்முகநோக்கியகத்துள்வேட்டவரங்கேண்மோ
பத்திமிகுந்தோய்தருதுமெனப்பயின்றசாதிநினைத்தவனும்
மத்தமதமால்களிற்றுமுகன்வணங்கிமொழிவான்மாசற்ற
முத்திமுதலேயடியேற்குமூவாமுத்திகொடுத்தருள்க. (அ௮)

இன்றுதமியேற்கடுத்தசெயலிமையோர்குருநாரதர்தம்மால்
அன்றுமொழியப்பட்டதுவேயடிகள்கரத்தாலடிபடவும்
ஒன்றுமுடையான்றிருப்பாதமுவந்துசேவைசெய்திடவும்
நன்றுகிடைத்தவெனமொழிந்தானங்கைபாகரதுகேட்டு. (அ௯)

கயிலைவரையிற்சுருபமொடுகலந்துவாழமுத்தினைப்
பயிலுமவனுக்களித்தருளிப்பசுந்தோலினையுஞ்சிரத்தினையும்
உயிரிற்கவர்ந்துதோலையரையுடுத்திப்பத்தவாஞ்சையினுல்
செயிரில்சிரத்தையினிதிருத்தித்திருந்துபூசைசெய்கின்ருர். (௯0)

அருத்திமிகுந்தகயாசுரன்மெய்யாக்கையுரியையணிதலினுன்
கிருத்திவாசனெனுநாமங்கெழுவிற்றிறைவற்கப்பெயர்தான்
வருத்தமுறுத்துஞ்சமுசாரவாஞ்சையானபெரும்பிணிக்கு
விருத்துமருந்தாய்மெய்ஞ்ஞானவீட்டுநெறியைவிளைத்திடுமே. (௯௧)

வெள்ளமதத்துமுகத்தவுணன்மேவார்போன்றுவிழைந்தடுத்துத்
தள்ளியிறுத்தமண்டபத்தைச்சார்ந்துகூடிக்கணங்களெலாம்
நள்ளவெடுத்துச்சமைத்திட்டார்நங்கையுடனேநம்பெருமான்
உள்ளமகிழ்ந்துபண்டுபோலுலவாவிளையாட்டயர்ந்திருந்தார். (௯௨)

பருக்கைமதமானுரியுடுத்துப்பகவருமையாளொடுவனத்தில்
இருக்குமளவிற்சிந்தூரனெல்லாவுலகுஞ்சென்றுதழீஇக்
கருக்கியொழித்துத்தன்மனையிற்காமரவையினிருக்கின்றான்
செருக்குமிகுந்தவுளத்திருக்காற்செப்பினான்மற்றொருவார்த்தை. (௯௩)

ஏயேயயனுமரியரனுமெனக்குப்புறந்தந்திறந்திரணம்
ஆயேயொழிந்தாரிந்திரனோடமரராக்கர்தயித்தியர்கள்
போயேமறைந்தார்வீரரெலாம்பொன்றினார்களென்கரத்தாற்
றீயேதமியேனுலகனைத்துஞ்செறிபஞ்சயிரேயெனக்கிளப்ப. (௯௪)

எழுவாயிறுவாய்நடுவானவிறைவனருளாலொருவாக்குச்
செழுவானிடத்தேயெழுந்ததவன்செவியிற்கேட்பச்சிந்தூரா
இழுதாய்தன்னைப்புகழ்ந்தவனுக்கிறுதியுடனேயுறுமொக்கல்
அழுதாவாவென்றிடவுனக்குமழிவெய்துதலாற்புகழ்கின்றாய். (௯௫)

நிலையாவுடலைநிலையாகநினைத்துத்தருக்காலென்மொழிந்தாய்
தலையாமறிவனினைக்கொல்லத்தாக்காயணியின்றிருவயிற்றின்
உலையாக்கருவாய்வளர்கின்றானேவோநினதுபெயர்தானும்
இலையாய்முடியுஞ்சிறுவரையினெனவான்வாக்குத்திகழ்தலொடும். (௯௬)

காதலுடற்கேயமைத்ததறுகண்ணனதுகேட்டுளங்கலங்கிச்
சாதலுறினெவ்வாறென்றுதளர்ந்துபின்னரிவ்வார்த்தை
ஓதல்புரிந்தார்யாரவரையுற்றுப்பிடிமினடிமினெனத்
தூதர்பலரைவிடவவர்கடேருவிக்காணாதெதிரடுத்தார். (௯௭)

என்னையிறப்பவளர்கருவையின்னேயிறுத்துமலைமாது
தன்னைத்துயர்வித்திடுவெலெனத்தறுகண்மிகுந்தசிந்தூரன்
மன்னியிருந்தவவைநீங்கிவல்லேகயிலைபுகுந்துதுரீஇத்
துன்னிவரைகள்கடறிசைகள்சுலவித்துருவிக்காணான். (௯௮)

வனங்கடோறும்புரைகிளைத்துவருவான்றேவர்முனிவர்கண
வினங்கள்பயிலும்பரியலிகானனத்தையடுத்தங்கிருந்திடக்கண்
டனங்கனழியவிழித்தபிரானரியயோகத்தினிதிருப்பக்
கனங்கொள்குழலாள்கருவம்மாகலந்ததுயிற்செவ்வியையறிந்தான். (௯௯)

செவ்வியிதுவேயெனத்தெளிந்துதீயோன்வளியாயுலகீன்ற
அவ்வைவயிற்றிற்சென்றுவளரமலக்கருவைச்சேதித்து
வெவ்விச்சிரத்தைவெளிக்கொண்டுவளரும்விந்தவரையடுத்தங்
கெவ்வமகற்றுநருமதைப்பாங்கிட்டுத்தனதுமனைபுக்கான். (௧௦௦)

அண்டர்பெருமான்முடிவீழவந்தவரையினிடங்குழிந்த
குண்டமதனைக்கணேசர்திருக்குண்டமென்பரத்தலையின்
மண்டியெழுந்தகறையாறாய்வழங்கிற்றதற்குத்திருநாமம்
விண்டார்சோணநதியென்றுவினைதீர்த்திட்டந்தருமதுவே. (௧௦௧)

பாங்கரிருந்தசிலையனைத்தும்பயிலுங்கணேசகுண்டமடுத்
தோங்குகணேசர்திருவுருவாயுலகமுழுதும்பூசிப்ப
வீங்குபயனைக்கொடுக்கின்றவியாதமுனிவவச்சுயம்பைத்
தாங்கியெவர்பூசித்திடினுஞ்சார்வர்நான்குபொருளுமே. (௧௦௨)

இன்னசெயலைமூன்றவிழியீசனறியானுமையறியாள்
மன்னுகருவாய்வளர்கின்றவரதன்மறஞ்செய்சிந்தூரன்
என்னுமிவர்களறிந்ததலாலெவருமறியாரிவன்செயலை
உன்னுதிறத்தாரெவர்சென்னியொழிந்தும்வளர்ந்ததறுகுலே. (௧௦௩)

ஒன்பான் மதியுநிறைந்தொழியவொருபான் மதியிற்சிவபெருமான்
அன்பாலுமையாண்முகநோக்கியகட்டுக்கருப்பநிரம்பியதால்
இன்பார்வெள்ளிவரையகத்தேயினிநாஞ்சேறுமெனவியம்பித்
தன்பாலவளைத்தழீஇக்கொண்டுதவளவிடையூர்ந்தாங்கடுத்தான். (௧0௪)

வேறு

யோகமுற்றவர்க்கியோகியாயிருந்தருள்புரிந்தும்
போகமுற்றவர்தமக்கருள்போகியாய்ப்புணர்ந்தும்
ஏகர்பங்கமரிறைவியுமிருநிலத்தவர்போல்
ஆகநொந்திடவருமகப்பயப்பவளானாள். (௧0௫)

வித்தகந்திகழ்விநாயகர்விளங்கியஞானச்
சத்தியுத்தராய்ச்சித்தியெட்டையுந்தரித்தவராய்ச்
சித்திபுத்திகள்சமேதராய்ச்சிங்கவாகனராய்ப்
பத்திரும்புயத்தொடும்படையொடுமவதரித்தார். (௧0௬)

காதரங்களைக்களையுந்தேசுருவமுங்கழலா
மாதரங்கமுமற்றுளவனப்புநேர்நோக்கி
ஆதரங்கொடுவிநாயகரன்றருளியவா
றீதரங்கவந்தனரெனச்சிவைமகிழ்பூத்தாள். (௧0௭)

முன்னுமீறுமிலாதவன்முதலிலாமுதல்வன்
என்னையாளுடைவிநாயகனிமையவர்பெருமான்
தன்னையீன்றதாக்காயணிமலர்முகநோக்கி
அன்னையேயுனக்கன்றுநான்விளம்பியவாறே. (௧0௮)

கொடியனானசிந்தூரனைக்கொல்லவுங்குழையா
தடியராஞ்சுரரருந்தவராதியோர்தங்கள்
படியிலாவிடர்பாற்றவும்பணிநினக்கியற்றி
நெடியவோகையைநிகழ்த்தவுநின்வயிற்பிறந்தேன். (௧0௯)

கருணைநாயகிகண்டுகொளெனக்கனிவொடும்
அருளியங்ஙனேமறைந்தனரதுதெரிந்தமலை
தெருளிலாமனந்திகைத்தனடெருமரப்பின்னர்
மருளிலாதவன்வதனமில்லாமன்முன்னிருந்தான். (௧௧0)

காவிநேர்விழிக்கவுரிகான்முளையினைநோக்கி
ஆவிசோர்ந்தனணிலமிசைவீழ்ந்தனளவசம்
மேவிமாழ்கினள்விம்மிநெட்டுயிர்த்தனள்விழியிற்
பாவியேனிதுபார்ப்பதோவெனப்பதைபதைத்தாள். (௧௧௧)

புத்திரன்றனையாவரேபோதந்துபுரைதீர்
வத்திரந்தனைமாற்றியேகொணர்ந்துமுன்வைத்தார்
எத்திறத்தினும்பாக்கியமெய்தினேனின்பம்
மெத்துபுத்திரனலதுமேவிலேனென்றாள். (௧௧௨)

இப்பதத்தினீங்கிருந்தருளீச்சுரன்றானும்
எப்புறத்திடையேகினனீதுசொப்பனமோ
ஒப்பின்மாயையோமோகனமோவொன்றுமன்றே
செப்புமென்மகற்கிஃதுகொலோதிகழ்வதென்றழுதாள். (௧௧௩)

அன்றுநேர்ந்தசிந்தூரனாலடலையாயினக்கால்
இன்றுநாமிதுகாணவேண்டுவதில்லையன்றே
நின்றதீயனையெற்றுக்குநீக்கினாரோவோ
என்றுதேம்பினள்கவலையுற்றிரங்கினளம்மா. (௧௧௪)

உவளகத்தினின்றுமையவளின்னவாறுயங்கத்
தவளவல்லரித்தவிசின்மேற்சபையின்வீற்றிருந்த
குவளையொத்தமைக்களத்தவர்கொம்மெனவேகி
அவளையுற்றுறுசெயலெலாம்வினாயறிந்தனரால். (௧௧௫)

முழுதுந்தேர்ந்தருண்முதல்வனார்முடிவதையறிந்தும்
பழுதுமேனியிற்காட்டியபரிவுறுமைந்தன்
விழுமிதாகியவறிவினைவியனுலகறிந்து
தொழுதுமேம்படக்காட்டுவார்துயருவார்போன்றார். (௧௧௬)

சகத்துளாரெனத்தழைமகிழ்முகத்திடைத்தவிர்ந்திட்
டகத்துளோகையையயலறியாவகைமறைத்து
முகத்தினீங்கியமூதறிவுடையமைந்தனைச்சீர்
தொகத்தம்பாணியாலெடுத்திருந்தொடையில்வைத்திருந்தார். ()

புராணர்சிந்தனைபுந்திகூரியநந்தியறிந்து
பராவியொய்யெனவிடைகொண்டெணிவிசும்பேகி
விராவுசாறுகொண்டயனரிவிண்ணவர்மேவ
ஊராவுமோகையினிருந்தவிந்திரனவையுற்றான். (௧௧௮)

இந்திராதியரனைவருமெதிர்சென்றுவணங்கி
அந்திலாதனத்திருத்தியர்ச்சனைபுரிந்தடிகேள்
வந்தவாறுசெவ்வாய்மலர்ந்தருளுகவென்றார்
நந்திநாயகனன்னவர்க்கின்னதுநவில்வான். (௧௧௯)

வெள்ளிமால்வரைவீற்றிருந்தருளியவிமலர்
தெள்ளுசீர்மனையகத்தொருதிப்பியமான
பிள்ளையானனமின்றியேபிறந்ததீச்சுரரும்
உள்ளமாழ்கினர்நீயிராங்குறுமின்களென்றான். (௧௨௦)

தரங்கநீர்க்கடற்பாயலான்சதுமுகன்முதலோர்
இரங்கினார்கண்முன்றாமெலாமேத்திடத்தோன்றி
வரங்களீந்தவர்வந்தனரெனமதித்தறியார்
உரங்கொளூர்தியராய்க்கயிலாயமுற்றடுத்தார். (௧௨௧)

நந்திநாயகன்முந்துறநடந்துசென்றுரைப்ப
வந்திவானிறத்தவர்மகன்றன்னையாங்கிருத்தி
வந்துவேறுமண்டபத்தொளிர்மணித்தவிசிருந்தார்
சிந்தையார்வமொடனைவருஞ்சென்றுதாழ்ந்தெழுந்தார். (௧௨௨)

அருவிபாய்மதமுகத்தயிராவதப்பாகன்
பொருவிலாமலரோன்முகம்பொருக்கெனநோக்கி
உருவின்மாதுமையாளுவளகத்துறுமகவை
மருவியீங்கெனவுரைத்தனனவன்மருவித்தான். (௧௨௩)

மேவருட்பிரான்றிருமுன்னர்விளங்கியமகனைத்
தேவருட்சிலர்நோக்கியிச்சிறுவனைக்கொடுபோய்ப்
பூவருட்டலைக்கடலிடைப்போடுகவென்றார்
தீவருட்டுகண்ணாலயன்றேவரைப்பார்த்தான். (௧௨௪)

ஒடுங்கியஞ்சினரும்பரார்பின்னரோதிமத்தோன்
நடுங்கியுள்ளுறநாதனேயெனத்துணிநலத்தால்
நெடுங்கைபத்தினுநிகரிலாப்படைகலந்தாங்கு
விடுங்கதிர்த்திருவனைநோக்கினன்விள்வான். (௧௨௫)

வேறு.

அனுதிநிதனராயுலகுக்கருளுங்கருத்தாவாய்ப்பாவம்
இனுதவிடர்தீர்த்தருளிறையாயேகானேகசொரூபனாய்
மனுதிதனக்குமெட்டாதலைத்துவானநீயிவ்வா
றனுதுசிரத்தொடுறுதிங்கேயொழிந்துவருங்காரணமென்னே. (௧௨௬)

பெருமந்தணத்தைவெளிப்படுத்திப்பெரிதுங்கவலைக்கடன்மூழ்கித்
தெருமந்தழியுமடியோமைத்தெளித்துமகிழ்செய்வித்திடுக
தருமந்தவாதுகாக்கவருந்தலைவாவென்றான்பிரணவமாந்
திருமந்திரமெய்விநாயகர்சீர்தெரியாமாயனிதைச்சொன்னான். (௧௨௭)

சிறந்தவுறுப்பாகியசென்னிதீரவுலகில்யாங்கேனும்
பிறந்தும்பிள்ளைவளர்ந்ததுவோபிரமாவென்றானதைக்கேளா
வியந்தவிதழ்மென்மலர்ச்சேக்கைவேதனரியைவெருண்டுமுதல்
இறந்தமொழியாலென்மொழிந்தாயெனவாயடக்கிமேலுரைப்பான். ()

வாராய்நெடியதிருமாலேவளராணவத்தாற்கோட்பட்டுத்
தீராமயக்கமிகவுடையசிறியோம்போலவுடல்கருவி
ஆராவிடத்திலறியாதவறிவனல்லனிவனெங்கும்
பேராவறிவாயனைத்தினையும்பிறழாதறியும்பெருமானே. (௧௨௯)

தொல்லைமகவான்முதலானசுரர்கள்சிதலாய்நாணரிப்ப
வில்லினினதுமுடியறலும்விளிந்தாயன்றேயதுவெனவும்
மல்லலுலகிற்றலையிறந்தார்வாழாரன்றேயதுவெனவும்
சொல்லப்படுமோவுலகனைத்துந்தோற்றியழிக்குஞ்சுடரினையே. (௧௩0)

பரந்தமாயையிரண்டானும்பலதத்துவமுமுறத்தோற்றி
நிரந்தவுயிரினறியாமைநீக்கத்தனுவாதிகளுதவிப்
புரந்தங்குடனாயிருந்தறிவுபொற்பவளர்க்குமறிவனுக்கு
வரந்தங்குருவினுறுப்பொன்றுமருவாதிருந்துங்குறையென்னே. ()

உருவமாதிவேண்டுமெனுமூழும்வேண்டாவெனுமூழும்
பொருவிலாதவிவர்க்கில்லைப்புரைதீர்த்தருளுமிவனியல்பை
மருவுமிமையார்களுமறியார்மாலேநீயுமறிந்திலாய்
குருவினருமைபருவமுறாக்கோழையறியுமோவென்றான். (௧௩௨)

சொல்லானைமைந்தநாவகத்தான்சொருபம்விளங்கவோதுதலும்
எல்லாமறிந்தவிநாயகனாரிறையாகியதம்மியல்விளங்கப்
புல்லாவிரண்டுசெவியானும்பொற்பக்கேட்டில்லாவாயால்
நல்லாதரவினெல்லோருநயப்பப்பிரமற்குரைத்தருள்வார். (௧௩௩)

வேறு.

பண்டுநாஞ்சிருட்டிதந்தபாணியிலெவ்வாறன்னால்
கண்டிடப்பட்டோமந்தக்கடைப்பிடிபிறழ்தராமே
தொண்டைவாயுமையாள்பாங்கர்த்தோற்றியவிற்றைஞான்றும்
விண்டிடாவறிவோய்நின்னான்மேதகக்காணப்பட்டாம். (௧௩௪)

வேறு.

இவ்வாறாகிவருவதெவனென்னினியம்பவினிக்கேண்மோ
ஒவ்வாதுடற்றுஞ்சிந்தூரனுயிரைக்கொலவுமுமதுயிரை
வவ்வாநின்றவிடரகற்றிமறையினெறிகள்வழங்கிடவுஞ்
செவ்வாயுமையாள்பணிசெயவுமென்றார்சிறந்தவிநாயகனார். (௧௩௫)

மும்மையுலகுங்காத்தருளமுதல்வநீவந்தவதரித்தாற்
செம்மைவளர்நின்சொருபத்தைத்தெரித்துத்தேவர்மனத்தகத்து
விம்முமயக்கந்தீர்த்தின்பம்விளைக்கவேண்டுமெனவமரர்
தம்முளுயர்ந்தகுருமொழியத்தலைவரதுகேட்டருள்செய்வார். (௧௩௬)

வேறு.

வானவர்குரவமுன்னேமயேச்சுரனென்னுமன்னன்
ஈனமில்பத்தியோடுன்னைதிருநப்பணிந்தகாலத்
தூனமில்வரமுன்னாலேயுவன்றலைக்கெய்தப்பட்ட
தானவச்செம்மல்பின்னரடற்கரிமுகவனாகி. (௧௫௭)

இறையவர்திருக்கைசூலத்தெற்றிடப்பட்டமீளா
நிறைபரமுத்தனாகிநீடுமானந்தமுற்றான்
குறையறுமனையான்சென்னிகுழகனார்கரத்தால்வேத
மறைதருமுறையிற்பூசையாற்றிடப்பட்டுவைகும். (௧௫௮)

அதுநெடுந்துளைக்கையோடுமழகிதாய்நன்றாய்வைகும்
அதுவலாலில்லைநுங்களகமெலாமெமதுமெய்யை
இதுவென்கொலென்றுவெவ்வேறெண்ணுறுமெண்ணந்தீரக்
கதுவியவெமதுமெய்யிற்கலப்பிக்கப்படுவதென்றார். (௧௫௯)

காலமும்மையுமோராங்குக்கண்டருள்கடவுளென்னான்
மாலறத்தெளிந்தசிந்தைமயேச்சுரன்பொருட்டியாதொன்
றாலவனுரைக்கப்பட்டததுவிப்போதிங்குநம்மாற்
சாலவுமறியப்பட்டதென்றுதாழ்ந்தெழுந்துபொன்னோன். (௧௬௦)

விச்சுவரூபியாயும்விச்சுவேச்சுரனேயாயும்
நச்சுவார்க்கிடர்கடீர்க்குநாதனேயடியேனின்றன்
மெய்ச்சொருபத்தைக்காணும்விரகிலேனாவென்று
பொச்சமிலன்புபொங்கப்போற்றினனனையகாலை. (௧௬௧)

மகதியாழ்முனிவன்றாழ்ந்துவந்தித்துமொழிவானிந்தச்
சகமெலாங்காக்கவேழத்தலையினைத்தலையாக்கொள்ள
அகனுறுவிழைவானிங்கேயவதரித்ததுமெய்யாகும்
முகனிடையொழிந்ததாகமொய்யுருக்காட்டிற்றன்றே. (௧௬௨)

யாவராலொழிக்கப்பட்டதியம்பியையத்தினீக்கி
மேவரத்தெளிக்கவேண்டும்விழுத்தகுபொருளேசெல்வத்
தேவர்கடேவதேவேசிற்பராவென்றுபோற்ற
மூவர்கண்முதல்வனன்னான்மொழியமுதருந்திச்சொல்வான். (௧௬௩)

நாரணியுளத்திற்றாழ்ந்தநாரதமுனியேகேளாய்
பூரணிபுவனமீன்றபுராதனிபெத்தமுத்திக்
காரணிகடுக்கைவேணிக்கண்ணுதற்பெருமான்பாகத்
தாரணியகட்டிற்சூலாயமர்ந்தவெண்மதியந்தன்னில். (௧௬௪)

வடிபுகழ்வியாழமீந்தவரமயேச்சுரற்குமுற்றக்
கடியொளிவிரிக்குமிந்தக்காமருமெய்யினீங்கு
முடிவிழுந்துழிக்கல்லெல்லாமுடிவினம்மூர்த்தியாகிப்
படியவர்பூசைகொண்டுபயன்மிகக்கொடுத்துநிற்ப. (௧௬௫)

மக்களேநரகர்தேவர்மற்றுயிருள்ளவில்லை
தொக்கபல்பொருளினானுந்தொலைவில்சிந்தூரன்றன்னைப்
புக்குயிர்சவட்டவேழப்புகர்முகநம்பாலெய்த
இக்கவினுருவிற்சென்னியிகப்பதுகருதினாமே. (௧௬௬)

உருக்கிளருமையாணல்லவுதரத்திற்கருவாஞ்செய்கை
தருக்குசிந்தூரன்பாங்கர்த்தழைத்தவாகாயவாக்காற்
பொருக்கெனவறிவித்தாமப்புரைவினாருவாய்ப்புக்குக்
கருக்கொலைபுரிந்துசென்னிகைக்கொண்டுமீண்டுசென்றான். (௧௬௭)

காழ்த்தசிந்தூரன் றன்னைக்கயமுகமெய்திவல்லே
தாழ்த்துதுமென்றானையன்றவமுனிகேட்டுத்தாழ்ந்து
வாழ்த்தியக்கயத்தின்சென்னிமற்றடியேங்கள்சென்னி
வீழ்த்தநின்னுருவிற்சேர்க்குமிடலிலேமாதலாலே. (௪௪௮)

ஆக்குதலளித்தல்போக்கலனைத்திற்கும்வல்லைநீயே
மேக்குறக்களிற்றின்சென்னிவிரவுமாகொள்கவென்றான்
வாக்குரைகேட்டுமுன்னமயேச்சுரவேழச்சென்னி
பாக்கியமெவருமெய்தப்பரித்தனன்பரமானந்தன். (௧௪௯)

வேறு.

மணிமகரகுண்டலமுங்கிரீடமுநாற்புயமும்வளர்விழிகண்மூன்றும்
துணிகதிர்விட்டெறிக்குமணிநித்திலமாலையுஞ்சுடர்பொற்றொடியும்வாமத்
தணிவளர்சித்தியும்வலத்திற்புத்தியுமாயமர்ந்தகசானனரைநோக்கிப்
பிணிமுழுதுமொழிந்தமரரனைவர்களும்பேரின்பக்கடலிற்றாழ்ந்தார். (௧௫௦)

முனிவரமரர்களெவரும்பின்புமலர்ச்சேவடியின்முறையிற்றாழ்ந்து
நனியருளவெழுந்தருளுநாதகயானனரென்னுநாமங்கொள்க
மனிதரமரர்களெவருஞ்சகலவினையினுமும்மைவழிபாடாற்றப்
புனிதமுறவவ்வினையினெழுந்தருளியினிதருளைப்புரிகவென்றார். (௧௫௧)

அப்பொழுதுதுக்கத்தினீங்கிமகிழ்பார்ப்பதியோடமலர்தாமுஞ்
செப்பலுறுங்காமத்தைக்கொடுப்பவர்சித்தியைக்கொடுப்பார்திகழமுத்தி
வெப்பமறக்கொடுப்பவர்விக்கினராசர்விக்கினநாயகரென்றோதி
யொப்பரியதம்மகனார்முதுக்குறைவுநோக்கியுளத்துவகைகூர்ந்தார். (௧௫௨)

உலகமெலாம்விகடரெனவுரைத்திடப்பட்டனரந்தவுவாவின்சென்னி
இலகவணிந்தவருமைநீராஞ்சனஞ்செய்திவர்தமக்கிங்கினியபூசை
அலகிலறிவானந்தப்பெருமானேயியற்றுகெனவவருந்தேவி
விலகருநற்பணிபுரியப்பூசித்தாரகிலமுமெய்விழுப்பமெய்த. (௧௫௩)

இந்திரன்மாலயனமரிருடியர்யாவரும்வரங்களியம்பிப்பெற்றுத்
தந்தமிடங்களிற்சார்ந்தாரிவ்வாறுதலைவரவதரித்தவைகல்
பந்தமறுமாவணித்திங்களின்வளருஞ்சதுர்த்தியெனப்பகர்வரற்றால்
அந்தமதிச்சதுர்த்தியிற்பூசிப்பவருக்குறுபயனாரளக்கவல்லார். (௧௫௪)

ஈண்டுலகமனைத்தானும்பூசிக்கப்படுமிறையேயினிதுபூசை
வேண்டியியற்றிடுநாளாய்விநாயகனாரவதரிப்பவிழுப்பமெய்தி
மாண்டபெருமேன்மையினாலம்மதியிற்சதுர்த்தியதுவருடந்தோறும்
பூண்டவிநாயகர்பூசைபுரிவதற்குமுக்கியமாய்ப்பொலிந்ததன்றே. (௧௫௫)

விகடரெனுங்கசானனர்தாங்கயிலையிடைவீற்றிருப்பவீணைச்செல்வன்
பகடுபலமுழங்குகடைவாய்தலுடைச்சிந்தூரன்பயிலுஞ்சூழல்
அகடுறச்சென்றவன்கொடுத்தவிசிலிருந்தவனையெதிர்நோக்கியண்ட
முகடுரிஞ்சுமொளியோயைநிகர்ப்பவர்மூன்றுலகத்துமில்லையென்றான். ()

மறமிகுந்தசிந்தூரன்மகிழ்ந்துமுனிவரன்மலர்ந்தவதனநோக்கி
அறமிகுந்ததவமுனியேயிதுவரையினுண்டாகாவருமைத்தாகித்
திறமிகுந்தநூதனமாயற்புதமாய்த்திகழ்ந்ததொருசரிதமுண்டேல்
நிறமிகுந்தநின்கனிவாய்மலர்த்துகெனவீணைமுனிநிகழ்த்தலுற்றான். (௧௫௭)

இயல்பாகவெவ்விடத்துந்திரிகின்றேனிவ்விடத்துமெய்தலுற்றேன்
செயல்யாதுநின்னிடத்தில்வேண்டிலன்றிப்பியமாகத்திகழ்ந்ததொன்றுண்
டயராதுகேளுரைப்பல்சிவனுடையகிரகத்திலமலைதன்பா
லுயர்வானதலையில்லாவொருபிள்ளையுலகுதொழவுதித்ததன்றே. (௧௫௮)

மின்னிமைக்குநெடுஞ்சடையின்விளங்குமதிக்கீற்றணிந்தவிமலர்முன்னே
மன்னிபத்தின்றலையொன்றுபூசித்துவைத்திருந்தார்வந்தமைந்தன்
பொன்னிமையவரைமாதுபுலம்பொழியவத்தலையைப்புகன்றுதானே
தன்னிடைவந்திடத்தரித்தான்பெருவலியன்பேரறிவன்றனையாரொப்பார்.

காரணம்யாதோவறியேன்கவந்தமெனப்பிறந்தவன்பின்கடங்களூற்றும்
வாரணத்தின்முடிதரித்துவயங்குவதென்றான்கேட்டுவளர்சிந்தூரன்
றாரணியின்மிசைவிழுந்துமூர்ச்சைதெளிந்தெழுந்துள்ளந்தளர்ந்துசோகாந்
தோரணிவான்வாக்குரைத்ததாதலினனிவனெனக்குப்பகையேயென்றான்.()

வேறு.

நல்லநாரதமுனிநவிலக்கேண்மதி
சொல்லியகயமுகத்தோன்றலாருயிர்
கொல்லுதல்வேண்டுங்கொல்லாதுவிட்டிடிற்
கொல்லுவனவனெனைக்கூறலுண்மையே. (கசுக)

இற்றைஞான்றேயவனிருக்குஞ்சூழலை
முற்றுவன்மூன்றுகண்முதல்வன்காப்பினும்
பற்றுவனழிக்குவன்பத்துத்திக்கினும்
வெற்றிகொள்பேரொளிவிரிப்பனென்றனன். (கசுஉ)

முனிவரன்கேட்டுளமுகிழ்த்திலான்முகத்
தினியனுயூக்கமங்கெய்தித்தானவ
னனியமர்க்கேகுதனுடிச்சொல்லுவான்
புனிதனேயுனக்கிதம்புகலப்போந்துளேன். (கசுரு)

பிரமனுனனத்திடைப்பிறந்துமற்றவன்
வரமெலாந்தரவொருவருத்தமின்றியே
விரவிநான்முகனையும்வெருவச்செய்துநல்
லுரனுளாய்க்குரைப்பதெனுறுகவென்றனன். (கசுச)

நாரதமுனியவனயப்பக்கூறிப்போய்ச்
சீரமர்கயிலையிற்றேவிமுன்னர்நின்
றேரமர்நின்மகற்கிகலிக்கொல்லச்சிந்
தூரன்வந்தனனெனச்சொல்லிநீங்கினன். (கசுரு)

வேறு.

தகைமுனிநீங்குமுன்னர்த்தழல்விழிதெறுழ்ச்சிந்தூரன்
வகையெழிற்கயிலைசார்ந்துவானுடுமண்ணுமஞ்ச
மிகையுருமேற்றினார்த்துவெடிபடுசொல்லினலென்
பகையெனப்போந்தானிங்குப்படர்கெனப்பகர்ந்துபின்னும். (கசுசு)

சிங்கவல்லேறுபோலச்சிந்தூரமுகனைக்கொல்ல
விங்குவந்திட்டேனென்முனிமையவராதியோருட்
டங்கியவீரரில்லைத்தயங்கியசராசரத்தைப்
பொங்கெரிவாயினூட்டிப்பொடிபடுத்திட்டேனென்றான். (கசுஎ)

வந்தறைகூவுகின்றவலியசிந்தூரன்முன்னர்ச்
சிந்துரமுகவன்தோன்றிச்செப்புவானின்னைக்கொல்லும்
வெந்திறல்வீரன்யானேவிண்டுநான்முகவன்போல
வெந்தமைநினையேனின்றனெறுழ்வலிநீங்குறாதே. (கசுஅ)

அழித்தனமெதிர்ந்ததேவரவுணர்களரக்கர்தம்மைக்
கழித்தனம்வருணைநான்குங்காய்ந்தனநதிகளாதி
யொழித்தனமலையுட்பல்லவுலைத்தனவுலகமென்று
தெழித்திறுமாக்கலந்தச்செய்கையுநமதேகண்டாய். (கசுகு)

தானவநின்னின்மாயாசகத்தையுமொடுக்கிநின்றற்
போனவையகமுமொக்கப்பூத்தளித்திடுவெனின்முன்
வானவராதியோர்க்குமறலியாநினையவ்வாறு
நானழித்திடவும்வல்லேனன்றுநீபாராயென்றான். (கள0)

அவ்வுரைகேட்டலோடுமேடல்கெழுவலிச்சிந்தூரன்
றெவ்வெனமனத்துட்கொண்டுசிறுவனென்றெள்ளிச்சொல்வா
னவ்வையின்முலைப்பாலுண்டங்கவள்விழிகளிப்பமுன்றி
லெவ்வமில்லாமலாடவேகுகவென்றுநக்கான். (களக)

முறுவலித்தவுணனெள்ளிமொழிதலுங்கணேசர்கேளாக்
கறுவொடுமுரைப்பார்மூடாகனையிருட்பிழம்புதன்னைச்
சிறுதிரிவிளக்கங்கொல்லுஞ்சிற்றுளிமலையைத்தாக்கு
முறுவலிமதவேழத்தையொறுக்குமங்குசந்தான்கண்டாய். (களஉ)

பாலனுமிவனென்றென்னைப்படர்ந்தவமதித்துச்சொன்னாய்
காலனாய்நின்னைக்கொல்லுங்காளையென்றிதியென்னாக்
கோலமார்சென்னியண்டகோளகையளப்பநீண்டு
சாலமாதிரங்கடோள்கடைதயப்பேருருவங்கொண்டான். (களங)

முடிகளாயிரங்கண்காதுமுகங்களாயிரம்வெவ்வேறங்
கடிகளாயிரமற்றங்கமவையுமாயிரங்களாகப்
படியிலாவுருவுகொண்டபணைக்கைம்மாமுகத்தெம்மண்ண
னெடியவாறுதிமுற்றுநிமிடத்திலொடுக்கினானே. (களச)

மடங்கன்முன்வேழம்போன்றும்வன்சிறைச்சிம்புண்முன்னர்
மடங்கல்வல்லேறுபோன்றும்வள்ளுகிர்க்கலுழன்முன்னர்ப்
படங்கிளரரவுபோன்றும்பயந்ததானவனைநோக்கி
யடங்கியதுலகங்கண்டாயாக்குதுங்காண்டியென்றார். (களரு)

தண்ணியமுகத்திற்றேளிற்றயங்கியகுறங்கிற்றாளி
னண்ணுநான்மறையோர்வேந்தர்நாய்கர்சூத்திரரையீன்று
கண்ணிடைக்கதிர்வெய்யோனைக்கருத்தினின்மதியந்தன்னைத்
திண்ணியபிராணன்றன்னைச்செவியிடைத்திகழக்கண்டான். (களசு)

அங்கிநாசியின்வானுந்தியதிற்றுறக்கங்கள்சென்னி
தங்குபாதத்திற்பூமிதடந்திக்கும்விதிக்குங்காதிற்
பங்கம்வீழ்வனமேழ்வேலைபயிலுமேழ்பொழிற்பாதாளந்
துங்கவேழ்முனிவராதித்தொல்லுலகனைத்துங்கண்டான். (களஎ)

நடுங்குசிந்தூரன்றன்னைநகையொடுமெதிரேநோக்கி
யொடுங்கியவுலகமீளவுயிர்த்தனங்கண்டாயென்று
நெடுங்கையினவனையள்ளிஞெரேலெனக்குழைத்துத்தானம்
படுங்களிமத்தகத்திற்பரிவொடும்பூசிக்கொண்டார். (களஅ)

திக்கெலாங்கமழும்வாசந்திகழ்ந்தவண்பயன்சிந்தூரன்
றொக்கசீராக்கையைங்கைத்தோன்றலார்மத்தகத்துத்
தக்கசாந்தாகப்பெற்றுத்தயங்கியதனையாணுவி
புக்குநாயகர்பாதத்திற்புணர்ந்ததுபேரானந்தம். (களகூ)

அற்றமிறவங்கள்பண்டேயாற்றிமேலானதோற்ற
முற்றவர்மறையிற்றப்பியுயிர்க்கிடர்புரிந்துநாளுங்
குற்றமேபுரிந்தாரேனுங்கோதறுகதியிற்சேர்வர்
ற்றுசிந்தூரனைங்கைப்பரற்கணியானநீரால். (கஅ0)

வானதுந்துமிகளார்த்தமலர்மழைபொழிந்தார்வானோர்
கானமிக்கியம்பினூர்கள்கந்திருவத்தர்வேத
மீனமில்முனிவரோதியிறைஞ்சினர்முன்புபோல
ஞானவித்தகன்வைகுற்றானயந்தனவுலகமெல்லாம். (௧௮௧)

உருத்திரன்றிருமாலாதியும்பர்களெவருமீண்டி
யருத்தியினங்கைப்புத்தேளடிமலர்பூசைசெய்தார்
மருத்தருகடுக்கைவேணிவள்ளலார்வானோர்வேண்டத்
திருத்தகவெவர்க்குமேலாமுதன்மையிற்றிருந்தவைத்தார். (௧௮௨)

திருமலர்வாழ்க்கையாளன்றிகழ்கமண்டலதீர்த்தத்தாற்
பொருவில்பாத்தியமேயாதிபொற்புறவியற்றிப்பூசை
மருவுறப்புரிந்துசெந்தாமரைமலர்க்கரத்தினீந்தான்
வருணனும்பூசையாற்றிவல்லெறுழ்ப்பாசமீந்தான். (௧௮௩)

முறிவளர்கற்பநாட்டுமொய்த்தவுய்யானம்பூத்த
வெறிகமழ்கமலவாசம்வீசுகல்லாரங்கொய்து
செறிதரவிரவிக்கட்டுந்தெரியலையணிந்துவேந்தன்
பொறிமகிழ்நிருத்தகீதம்புரிவித்துப்போற்றிவாழ்ந்தான். (௧௮௪)

சிவபிரான்சூலமீந்தார்செறிந்துபூசித்துவெவ்வே
றவரவர்தங்கள்கையில்லகப்பட்டபொருள்களல்கி
யிவர்மனத்தோடுந்தாழவிவ்வகைப்பூசைகொண்டங்
குவமையில்லாதநாதனெய்யெனமறைந்தானன்றே. (௧௮௫)

இக்கதைகருப்பமாதரீனமாட்டார்களாகி
மிக்ககடுளையுமேல்லைவிளம்பிடினெளிதிற்பிள்ளை
துக்கம்விட்டகலத்தோன்றுந்தோன்றியபிள்ளைதானுந்
தக்கநற்குணத்ததாகித்தளர்வறவளருமாதோ. (௧௮௬)

யாத்திரையானவேலையியம்பிடின்விசையமுண்டாம்
வேத்தவையாதியோரைவெல்லுறமேவுமெல்லைத்
தோத்திரம்புரியிற்றோல்விதோல்வியாமிதனின்வேறு
சாத்திரமோதுவாருந்தன்னைமுன்மொழிதல்செய்வார். (௧௮௭)

கருவினைமயக்கந்தீர்க்குங்கசானனரவதாரத்தோ
டருள்விளையாடல்சொற்றாமருந்தவவியாதவையம்
வெருளிடர்முழுதுந்தீர்க்கும்விக்கினராசனென்னுந்
திருவவதாரங்கேளாயெனத்திசைமுகவன்சொல்வான். (௧௮௮)

கேசானனர்திருவவதாரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௫௩.



## ௭௩ வது - விக்கினராசர்திருவவதாரப்படலம்.

வெள்ளிமால்வரைவிமலனூர்திருவுளமகிழ
வள்ளுநீறுடன்முழுவதுமணிந்ததேபோல
வெள்ளுருவிமத்தால்விளரிமையத்திளிருந்தான்
றெள்ளுமாதவர்திலகமாகியசவுபரியே. (௧)

தவத்தின்மேம்படுமுளத்தினன்றத்துவமுழுதோர்ந்
தவத்தைநீக்கியவறிவினன்வேதசாத்திரங்க
ளுவத்ததோடும்வந்திறைஞ்சியபக்குவர்க்குதவி
பவத்தினீங்குறும்பரிசினன்பற்றினைவிடுத்தோன். (௨)

எச்சமைந்தையுநிச்சலுமியற்றிடுமியல்பன்
பச்சிளங்கொடிபாகனார்பதமலரன்றி
நச்சிடாதவனல்லருளெனுங்குளிர்பெரியோன்
வெச்செனுந்தழற்சாபமும்விளைக்குமேதகையோன். (௩)

மறுவில்கற்புடையவண்மனோமயையெனும்பெயரா
ளுறுவனப்பினற்பணிவிடையுவந்துசெய்திடுநா
ணறுவிரைப்புனலன்முனியாடிடச்சென்றா
னிறுமருங்கினளிருந்தனளாச்சிரமத்தின். (௪)

கருணைநாயகனாகியவிநாயகர்கழலின்
மருவநாடொறும்பூசனைவழாதுசெய்திடுகந்
திருவர்நாயகன்கிரவுஞ்சனெனும்பெயர்திகழ்ந்தோ
னிருவியோமத்தினேகுவானெதிருறக்கண்டான். (௫)

எந்திரத்தூறுகயிறிரிந்தாங்குரனிரிய
வந்தரத்தினின்றிழிந்தனனாச்சிரமத்தின்
முந்திரத்தலுஞ்செய்திலன்முடுகியவிழைவாற்
சுந்தரத்தவடொடிக்கரம்பிடித்தனன்றுளங்க. (௬)

பூனைவாய்ப்படுங்கிளியெனப்பூண்டபெண்மையினான்
மானைநேர்விழிமனோமயைமனந்தளர்ந்துடனே
யானைமேலெழுமடங்கல்போலெறுழ்வலிக்கற்பாற்
கோனைநோக்கியுட்கொதித்தெழுகோபத்தான்மொழிவாள். (௭)

பிராணநாயகனாஞ்சவுபரியெனும்பெரியோ
னிராதவேலைபார்த்தென்கரம்பிடித்திருங்கலவி
விராவவீர்த்தனைவிடுகரம்விடுத்திலையாயிற்
பராகமாக்குவன்பாவிநின்றனையெனும்பதத்தில். (௮)

கொங்கரும்பியமலத்தடங்குடைந்துதன்னியல்பாற்
புக்கவன்சவுபரியெனும்புண்ணியன்போந்தான்
மங்கைமுன்கரம்வலிதினிற்பற்றுகாந்திருவத்
துங்கமன்னனாங்கிரவுஞ்சன்றொழிலினைக்கண்டான். (௯)

கண்டகண்ணிணைநெருப்புகக்கனியிதழ்துடிப்பப்
புண்டரந்திகழ்நெற்றிமேற்புருவங்கள்புரளத்
தொண்டைமெல்லிதழ்மனோமயைதுளக்கமுந்துயரும்
விண்டொழிந்திடக்கிரவுஞ்சவேந்தனைவெகுண்டான். (௧0)

மூர்க்கனேயபராதமில்லாதமொய்குழலை
யீர்க்கவேண்டுவதென்கரந்தீர்த்தகாரணத்தாற்
பார்க்குளேகரந்தகழ்ந்துமண்பறித்துறவீர்த்துக்
கூர்க்குமாகுவாய்க்கொட்புறுவாயெனச்சபித்தான். (௧௧)

அடியனேன்கிரவுஞ்சனென்றறைந்திடும்வேந்தன்
படியிலாவிவள்வனப்பினைப்பார்த்துறுவிழைவாற்
றொடிவிராவியமுன்கரந்தொட்டதேயல்லாற்
கொடியபாதகம்புரிந்திலேன்கோதறுதவத்தோய். (௧௨)

தொட்டதீப்பிழைபொறுத்தெனைத்தொடாவகையதனை
யிட்டசாபத்தினோடுந்தவிர்த்தினிதருள்புரிந்து
சட்டவோம்புகதமியனேன்சரணமென்றுன்னைக்
கிட்டினேன்றுணைவேறிலையெனக்கிளந்திரந்தான். (௧௩)

விருப்பனோடுறவெறுப்பிவைதனக்கெனவிளையாப்
பொருப்பினோடுறழ்மாதவச்சவுபரிபுகல்வா
னெருப்பின்சூடுதான்குளிரினுநீருறுகுளிர்தா
னுருப்பமாயினுமுரைத்தவென்மொழிபிழையாதால். (௧௪)

அடைக்கலம்புகுந்தாயதனாற்கிரவுஞ்சா
கடைக்கணித்திதுமொழிகுதுங்கருத்துறக்கோடி
விடைக்குநாயகர்மைந்தராய்விநாயகர்வினைக
டுடைக்கும்பார்சுவர்கிரகத்திற்றோன்றுவர்கண்டாய். (௧௫)

அவதரித்திடுமவர்க்குநீயாகுவாகனமா
யுவணமுற்றவனாதியோர்க்குறுதபோகமுமுற்
றெவருமவந்தடிபணிந்திடுமுதன்மையுமெய்தித்
தவலரும்பரமுத்தியுஞ்சார்குவையென்றான். (௧௬)

மேருமால்வரைவேறுமொன்றெனக்கிரவுஞ்ச
னூருமாகுவாயுயர்ந்தனனுன்னுவாருளத்திற்
சாருநாயகர்பார்சுவர்தனையனாய்த்தோன்றி
யாருமாகுவையூருமாறினியறைகுதுமே. (௧௭)

வேறு.

துறக்கமொருகுடைநிழலிற்சுகம்பெருக்கியினிதாளு
மறக்குலிசப்படையாளிவானவாதியர்சூழ
நிறக்குமணியாதனத்தினீடிருக்குமமையத்திற்
சிறக்குமிசையாழேந்துந்தேவமுனிசென்றடுத்தான். (௧௮)

தூரத்தேவரவறிந்துசுடர்மணியாதனத்திருந்து
வாரத்தேவர்கள்சூழவல்லையெதிர்கொண்டேகிச்
சாரத்தேசவிர்தவிசிற்றகவிருத்திப்பூசித்தங்
காரத்தேமொழித்துதிகளறைந்தனனாகண்டலனே. (௧௯)

தொக்கவரைசிறகரிந்தசுடர்வயிரப்படைவேந்தன்
மிக்கவுளப்பத்தியொடுவிளைத்திடுபூசனைநோக்கி
தக்கமுனிமகிழ்கூர்ந்துசாற்றுவானிந்திரனே
புக்கபுவியிடத்திலொருபுதுமையைக்கண்டிண்டடுத்தேன். (௨௰)

தாவறுமவ்வதிசயத்தைத்தகவொடுநான்மொழியுங்காற்
றேவருக்குநினக்குமிதஞ்செய்வதுதேவேந்திரனே
யாவததுவெனிற்கேளாயேமவதியெனுநகர
மேவரியவிமையவரைவிந்தவரையிடையுளதால். (௨௧)

வயம்புணருமந்நகரின்மன்னனபிநந்தனனென்
றியம்புபெயரான்வேள்வியியற்றியிடத்தொடங்கினான்
சயம்புணருநினைவரியான்றான்றுறக்கங்கொளக்குறித்தா
னயம்புணராவிருத்துக்கணண்ணினர்களவன்றனக்கே. (௨௨)

வள்ளாருந்தொடைவேற்கைமன்னன்மணிமுடியுருளத்
தள்ளாமலிருந்துவிடிற்சதமகனேமுதற்றினத்தே
யெள்ளாதநினதுபதமிழக்குமிடர்நினக்குண்டா
முள்ளாயென்றுரைத்தொழிந்தானும்பர்கள்கோனிதுநினைந்தான். (௨௩)

வேதத்திற்சுருதியினன்மிருதியினிற்சவுதத்திற்
கோதற்றசுமார்த்தத்திற்குயிற்றுபலகருமத்துந்
தீதற்றவவியெமக்குந்திங்களுக்கும்பிரமனுக்கு
மேதத்தினகலமுனமீந்திடுகவெனும்விதியே. (௨௪)

அப்படியேயனைவோருமவிப்பாகங்கொடுத்துவர
விப்பொழுதம்முறையின் றியியற்றுமபிநந்தனனைக்
கைப்படையாற்றெறத்தக்கான் கலக்கியுலகத்தையெலாந்
துப்பழிக்கும்பெருங்காலரூபியெனவேதுணிந்தான். (௨௫)

கண்ணியபோதெதிர்வந்துகாலரூபியுநின்றுன்
றிண்ணியவெற்பிறகரிந்தோன்சிறப்பவவன்முகநோக்கி
யெண்ணிலுருவெடுத்தொருநீயிரும்புவியிற்சென்றுமகம்
பண்ணுமபிநந்தனனைப்பாழ்படுத்துவேள்வியொடும். (௨௬)

இரும்புவியில்யார்வேள்வியியற்றிடினுமதுதனையுந்
துரும்புறச்செற்றிடுகவெனச்சொல்லிவிடைகொடுத்திட்டான்
கரும்புருவநுதலேறக்காலரூபியும்வெகுளி
யரும்பிடவிக்கினரூபமனேகமெடுத்தேகினுன். (௨௭)

வேறு.

மண்டியகோரமாய்மகஞ்செய்வேள்வியின்
மிண்டிருத்துக்கனைவேந்தனோடிறக்
கண்டனன்வேள்வியிற்கலந்துளாரெலாந்
தெண்டனிட்டிரிதரத்தெழித்துத்தாக்கினுன். (௨௮)

அவிசொரிபொருளெலாமள்ளியுண்டனன்
சவியழற்குண்டமுந்தகர்த்துமற்றதிற்
புவிபடுபுழுதியைப்பொழிந்தவித்தனன்
கவினிழன் மண்டபங்களைன்றுதள்ளினுன். (௨௯)

பாத்திரமனைத்தையும்பராசஞ்செய்தனன்
றீத்திரளெனவவன்றிசைகடோறுஞ்சென்
றேத்திடும்வேள்வியையாரியற்றினு
நாத்திசெய்தெங்கணுநவைசெய்கின்றனன். (௩௦)

அருவெனச்சிலர்தமையார்த்துத்தாக்குவ
னுருவெனச்சிலர்தமையுருத்துவீட்டுவ
னொருகணத்தெங்கணுமுழிதந்தாரணப்
பெருநெறிவழக்கெலாம்பேதுசெய்தனன். (௩௧)

இன்னணம்விக்கினமியற்றிநித்தலும்
பன்னருமுனிவரர்பலருமோருழித்
துன்னினருலகெலாந்தோற்றிக்காத்திடு
முன்னவன்றனைத்துதிமொழிதன்மேயினுர். (௩௨)

எண்ணிலாருயிர்களினிதையபங்கய
நண்ணுநாயகவுயிர்நவிற்றுகன்மத்தி
னண்ணுசான்றுகியவமலவெங்கள்பாற்
றிண்ணியவிக்கினந்தீர்த்தல்வேண்டுமே. (௩௩)

பல்வகைப்பூதமும்படைக்கும்பண்ணவ
நில்வகையனைத்தையுநிறுத்துநிர்க்குண
கொல்வகைசெய்தருள்கூட்டுங்கொற்றவ
புல்வகைவிக்கினம்புரட்டல்வேண்டுமே. (௩௪)

அங்கமேயுபாங்கமென்றவத்திணேடுறுந்
துங்கநான்மறைகளுஞ்சுவசமாகிய
வங்கணவடியரேமாவிநுங்கிய
பொங்கியவிக்கினம்போக்கல்வேண்டுமே. (௩௫)

எத்தகையோர்களும்யாசிக்கப்படு
மத்தகைவித்தகவகிலலோகமுங்
கைத்திடும்விக்கினகாலரூபியாற்
பைத்தபல்பீடையும்பயமுமெய்தினேம். (௩௬)

எங்களையவற்றினின்றெடுத்துக்காத்தருள்
சங்கரசயம்புவேதத்துவாவெனப்
பொங்கியவன்பொடுபுந்திநைந்துநின்
றங்கிருந்தோத்திரமறைந்திதோதுவார். (௩௭)

வேறு.

சத்தியீனராயனுதராய்த்தக்கநித்தியநை
மித்தியக்கருமங்களினீனராய்வேறாய்ப்
பொத்துமாசிலையடைந்துபோகங்களுமிழந்தே
அத்தனேயுனைச்சரணடைந்தேமெனவறைந்தார். (௩௯)

விளங்குவிச்சுவரூபியாய்வியாபகமாகிக்
களங்கமீர்த்தருளீசராம்விநாயகர்கலங்கித்
துளங்குமாதவர்தமக்கருள்சுரந்ததிரிசிய
வளங்கொண்மேனியோடெதிருறநின்றிதுவகுத்தார். (௩௮)

நிறையுமாதவத்தந்தணீர்நீவிர்நும்மனத்தி
னுறையும்வேதனையொடுபயமொழிமின்களினீநா
மிறையெலாம்புரிவிக்கினன்றனையடக்கிடவு
மறையினீதிகள்வழாவகைவளர்த்திடும்பொருட்டும். (௪0)

அடியர்சாதுக்கள்வேண்டியதருள்செயும்பொருட்டு
முடிவிலாதுமூன்றலகமுங்காத்திடும்பொருட்டு
நெடியமாதவநிரப்பியவரேணியன்மனையிற்
படியிலாவவதாரஞ்செய்வாமெனப்பகர்ந்தார். (௪௧)

உருவுகாணலராயினுமுரைத்தவாய்மொழியாற்
பெருகுமோகையராய்ப்பெருமாதவரெல்லா
மொருவுறுதவிக்கினங்களையொழித்தவர்போன்று
கருணைநாயகனருளையேகடைப்பிடித்திருந்தார். (௪௨)

தொல்லையேபெருந்தவமெலாந்துரிசறமுடித்தோன்
வல்லதேவரும்வழிபடும்யோக்கியமுடையா
னல்லகீர்த்தியன்வரேணியனெனுநராதிபன்ற
னில்லின்மாதராள்புட்பகையொடுமினிதமர்நாள். (௪௩)

மக்கட்பேற்றினைமதித்துறுதானதன்மங்கண்
மிக்குப்புட்பகையொடுதினம்விளைத்தனன்வருங்காற்
றெக்குப்பூதலந்தொழப்படும்புட்பகைவயிற்றின்
முக்கட்டேவனதருளினாற்கருமுகிழ்த்ததுவே. (௪௪)

திங்களொன்பதுஞ்சென்றபின்றிகழொருதினத்தின்
மங்கைபுட்பகைவயிறுளைந்தொருமகவீன்று
ளங்கிருந்தவரறிதராவகையதைமறைத்துத்
தங்கல்செய்தனர்மகவெனத்தனிவிநாயகரே. (௪௫)

அழகுமல்கியவுருவமுமட்றகரிமுகமுந்
தழலுமிழ்ந்திடுமழுமுதற்றரித்தநாற்கரமும்
புழைநெடுங்கையும்பொலிந்தபேரகடுமுன்றோற்றி
மழவெனக்கிடந்தருளியவரதனைநோக்கி. (௪௬)

பாங்கிருந்தவர்பலருமுட்பயத்தினாலிரிந்தார்
தேங்குகங்குலான்மனைப்புறஞ்செல்லுதற்கஞ்சி
யோங்குபுட்பகையுடலுறுவருத்தமெண்மடங்கு
தாங்கியுள்ளுறுவருத்தமுந்தனியிருந்தழுதாள். (௪௭)

பிள்ளைப்பேறுறப்பெருந்தவமாற்றினேன்மீளத்
தள்ளிப்போடவுந்தவம்புரிதக்கதோர்மகவை
நள்ளச்செய்ததுந்தெய்வமென்றாலின்றிநான்செய்
கொள்ளத்தக்கதியாதெனக்குரல்வெளிப்படுத்தாள். (௪௮)

கரேணுவன்னவள்கவன்றழுதரற்றுதல்கேளாப்
பரேணுடைப்புயத்தாரம்பாயிருள்புடைவிலக்க
வரேணியன்புகுந்தண்டகோடிகளெலாம்வகுத்திட்
டிரேணுவாக்கிடுமேந்தலையெதிருறக்கண்டான். (௪௯)

அண்டர்போற்றிடும்பார்சுவரருந்தவம்வாய்ப்பக்
கண்டபார்த்திபனுலகெலாங்கதுவிடர்காற்றக்
கொண்டநாயகன்கோமளத்திருவுருவத்தை
விண்டிடாவிடர்விளைப்பதாக்கருதிமெய்பனித்தான். (௫௦)

வீரவீரர்கள்பலர்தமைவிளித்தனனுடனே
கோரராகியவீரர்கள்குறுகிமுன்றாழ
வாரமாகியநீவிரென்மகவையிவ்விரவே
தீரவார்மடுக்கரையிட்டுத்திரும்புமினென்றான். (௫௧)

ஆணைநீங்குதற்கஞ்சியவடல்வலிவீரர்
கோணைமேனியின்குஞ்சரமுகத்திளங்கன்றைத்
தூணைநேர்தருதோள்களிற்சுடர்தரவேந்திப்
பூணையெந்தியமார்புறத்தழீஇக்கொடுபோந்தார். (௫௨)

ஓங்குமாதவப்பார்சுவருறையுமாச்சிரமப்
பாங்குநீடியபசும்புனன்மடுக்கரைப்படர்ந்து
தாங்குநாதனைத்தழைமுரித்திட்டதிற்கிடத்தி
நீங்கிவாள்வயவீரர்கணெடுநகர்புகுந்தார். (௫௩)

வண்ணமாமறைச்சிரத்தினுமாதவருளத்து
நண்ணுமாலயருளத்தினுநண்ணுதற்கரிய
வண்ணலார்தமையேந்தியவீரருமடையும்
பண்ணுமாதவம்யாவதோபகுப்பரிதம்மா. (௫௪)

கருணைநாயகன்குருவெனக்கடைக்கணித்தருளி
வருவனாயினும்பருவமில்லார்மருவார்கள்
பொருவிலாதவன்புத்திரனாய்மனைப்பிறந்துந்
தெருளிலாமையின்வரேணியன்றீரவிட்டனனே. (௫௫)

மடுக்கவின்கரைவள்ளலைத்தாங்குமாதவத்தாற்
றொடுக்குமன்புடைக்கபிலனாச்சிரமுஞ்சூழ்வெள்ளி
யடுக்கலும்பொருமதனொடுசெத்தியவுலகும்
படுக்கும்விண்டுவின்வேலையுநிகருமோபார்க்கில். (௫௬)

மரகதத்தலத்தராவுமிழ்மணிபொரமாய
னானிருத்தியகவுத்துவமுறழநீலுவரி
யிரவியொப்பவுமிறைதழையிடத்துறலீகை
யரதனத்தனத்துரம்பயிலழகுகாட்டியதே. (௫௭)

குஞ்சரம்புலிகோள்பயில்விலங்கினம்பலவு
மஞ்சன்மெய்யினைக்காண்டலுமலமுழுதொழிய
நெஞ்சின்மெய்யறிவெழுதரநீங்கிலவாகித்
துஞ்சலுந்தமதிரைகளுந்துறந்துகாத்தனவே. (௫௮)

எம்பிரான்றனதுருவெளியிலகுறவிடுத்தான்
வெம்புகோடிசூரியரொளியெனவெயில்விரிந்த
வும்பராரதிசயமுறவோங்கிருளுடைந்த
தம்புராசியுமடங்கியதாற்றுபேரொலியே. (௫௯)

இரவொழிந்ததென்றிரைகடேர்விலங்கினமீண்டு
கரவொடும்பயிறத்தமதிடங்களிற்கலந்த
விரவுபைம்பொழிற்சோலையின்மேவுபுள்ளினங்கள்
பரவைவையகத்திரைகொளத்திசைதொறும்பரந்த. (௬௦)

திங்கடாரகையொளியறமழுங்கினதெளிநீர்ப்
பங்கயங்கள்வாய்மலர்ந்தனபரந்தவாய்க்குமுதம்
பொங்குதேசறக்குவிந்தனபுணருமாதர்களை
யங்கைநீத்தகன்மனையினீங்கினர்களாடவரே. (௬௧)

அரியமெய்த்தவப்பார்சுவரமளியினீங்கி
யுரியசந்திசெய்காலந்தப்பியதெனவுளைந்து
பரிசெய்தண்டமுங்கரகமும்பாணியினெடுத்து
விரிசெழும்புனன்மடுவி ை விரைந்துசென்றடுத்தார். (௬௨)

பச்சிளந்தழைமீமிசைப்படுத்தொளிர்கின்ற
முச்சகந்தொழுமுதல்வனைமுன்னுறக்கண்டான்
பொச்சமின்றியுள்ளகத்தெழும்பொங்குகாதலினா
னச்சியின்புறப்பாடினனாடினனக்கான். (௬௩)

அடுத்துமைந்தனையவையவமுழுவதுநோக்கி
மடுத்தவன்புறுமகிழ்ச்சியான்மாதவனினைவான்
றொடுத்தவையகந்தனக்கிடர்தொகுப்பதேபோன்றிங்
கெடுத்தவிவ்வுருவிருப்பினுமிடர்கெடுப்பதுவே. (௬௪)

நமதுமாதவப்பயத்தினானன்மறைக்கெட்டா
விமலனேநமக்கருளவிவ்வாறுமேவினனிவ்
வமலமேன்மையையறிந்திடாதியாவரோவிடுத்தார்
விமலமாஞ்சுகமனமுதன்மூன்றுநீடினவே. (௬௫)

இவனையிவ்வயினீன்றவர்விடுத்ததுநான்முன்
றவநிரப்பியதவப்பயனல்லதையில்லை
யுவமையற்றவிவ்வொருவனையீன்றவர்க்கொப்புப்
புவனமூன்றினும்புலவர்களிடத்தினுமில்லையே. (௬௬)

இப்பெரும்பெயர்க்கடவுளையீன்றவர்தாமே
செப்பருந்தவந்தானங்கள்செயிராறுவிரத
மொப்பினற்றொழிலனைத்தையுமுறமுடித்தவரென்
றப்பெருந்தவனண்ணலையங்கையினெடுத்தான். (௬௭)

கருணைமல்கியகடவுள்போய்க்காதரமிரித்த
தெருணிறைந்தவன்றிருமனைச்சேருமுன்றானு
மிருணலிந்தருள்பதந்தொழவெய்துவான்போல
வருணன்முந்துறத்தோன்றுவானாயினனலரி. (௬௮)

குழந்தையாய்வரும்பரனுருக்கோமளத்தேசா
லிழந்ததாரிருளென்றுபின்னறிந்தனனிருடி
யுழந்தமாதவப்பயனன்றியூங்குறுபயனும்
பழந்தவாதுபால்விழுந்தெனப்பற்றினுமென்றான். (௬௯)

திருந்துதன்மனைச்சிறவரைச்செம்மலைக்கொடுபோ
யிருந்தவீரியவச்சலையெனுமனையாளை
வருந்தலின்றிநாம்பெற்றவிம்மகவினைத்தாங்கென்
றருந்தவப்பெருங்குணத்தவனன்பினாலறைந்தான். (௭௦)

கற்புமல்கியவீரியவச்சலைகடிது
பொற்பமுன்றிலிற்போந்துபுத்திரனெழினோக்கா
வற்புதத்தனளாய்முகமலர்ந்திடமுலைதோள்
விற்பிறங்குகண்டுடிப்பமுன்வணங்கிவிள்ளுவளால். (௭௧)

திப்பியங்களைச்செய்யுமிச்செம்மலார்தம்மை
யெப்புறத்தினின்றினிதுறக்கொண்டுவந்தனையா
லிப்பெருங்களிற்றானனத்தேந்தலாருருவ
மொப்பிறந்தொளிர்விநாயகருருவமேபோலும். (௭௨)

எண்ணிலாக்கமுமெய்துகாரணத்ததுமிதுவே
பண்ணுமாதவப்பயனெனப்படுவதுமிதுவே
நண்ணும்யோகியர்தியானிக்குநலத்ததுமிதுவே
வண்ணமார்சுடரொளிகளைவளர்ப்பதுமிதுவே. (௭௩)

விரவுகின்றவேதாந்தத்தின்விளம்புவதிதுவே
பரவிடும்பரப்பிரமமென்றுரைப்பதுமிதுவே
பரமமாகியவெளியெனப்படுவதுமிதுவே
யுரன்மிகுந்தவவெனமொழிந்தொளிர்கரத்தேற்றாள். (௭௪)

காந்தளங்கரத்துளநெகிழ்கனிவொடுமேற்பச்
சாந்தமென்முலைசுரந்துபாறரையகம்பாய்ந்த
வேந்துமைந்தனார்செய்யவாயினிதுறவூட்டி
வாய்ந்தவன்பினால்வீரியவச்சலைவளர்த்தாள். (௭௫)

விரும்பிமைந்தனைப்பெறவருந்தவமிகச்செய்த
சுரும்புண்பூங்குழற்புட்பகைதுறந்தனளிருப்ப
விரும்பலின்றிவாழ்வீரியவச்சலைவளர்த்தா
ளரும்புபுண்ணியத்திறத்தையாரளவிடவல்லார். (௭௬)

வேறு.

எம்பிரானிரண்டாந்திங்களெனவளர்கின்றகாலை
யும்பராரெடுத்துமேன்மையுற்றபார்சுவர்தம்வைப்பிற்
றம்பிரான்பத்திசான்றசவுபரிசபிக்கப்பட்ட
நம்புகாந்தருவனானமூடிகநண்ணிற்றன்றே. (௭௭)

மலைகளையகழ்ந்துசாய்த்தும்வார்சுவரகழ்ந்துசாய்த்து
நிலைமரமகழ்ந்துசாய்த்துநீண்டவேதிகைகுண்டங்க
ளிலைவுறவகழ்ந்தும்வைகுமுள்ளகமகழ்ந்துஞ்சூழுங்
கலையொடுபுத்தகங்கள்கறித்தும்பாழாக்கிற்றம்மா. (௭௮)

என்செய்வாமிதற்குநாமென்றிரங்குபார்சுவரைநோக்கிக்
கொன்செய்தவாகுதன்னைக்கூன்கையாற்புடைத்துவல்லே
வன்செயன்மாற்றுகின்றமதிதளரேலென்றோதி
மின்செய்தபாசந்தன்னைவிநாயகரதன்மேல்விட்டார். (௭௯)

கிழித்ததுபுவியையாகுகிளர்ந்தபாதலங்களேழு
மழித்ததாடகர்வாழ்வைப்பையலைத்ததுவளர்கூர்மாண்டர்
செழித்தவைப்புலைத்ததங்கிச்சிவபிரானுலகுமுற்றக்
குழித்ததங்குடன்போய்ப்பாசங்கொம்மெனப்பற்றிற்றன்றே. (௮௦)

வினையெனயாங்குயாங்குமேவினும்விடாதுபின்னே
துனையொடுசென்றுபற்றுஞ்சுடரொளிப்பாசமந்தக்
கனைகுரன்மூடிகத்தைக்கதழ்வொடுமீர்த்துச்சென்று
முனைவனதடியிற்றாழ்ந்துமுன்னுறநின்றதாலோ. (௮௧)

முன்றலைநிற்றலோடுமுதல்வனார்முகத்தினேரே
தன்றலையெடுத்துநோக்கித்தகும்பெருச்சாளிகூறு
மென்றனைக்கொடியனாகவெண்ணிநீயிறுத்தலெந்தாய்
நின்றனையடுத்தநாயேனீர்மையையுரைப்பக்கேளாய். (௮௨)

கிளர்ந்தகாந்திருவமன்னன்கிரவுஞ்சனென்னும்பேரன்
வளர்ந்தகுவனப்புச்சான்றமனோமயைதனைக்காமுற்றே
னுளந்தழன்றனையாளன்பனுரைத்தனனாகுவாகத்
தளர்ந்தவன்சரணஞ்சார்ந்தேன்றவமுனிகருணைகூர்ந்து. (௮௩)

பலமுனிவர்களின்மேலாம்பார்சுவர்மனையிற்றோன்றும்
விலகருங்கருணைசான்றவிநாயகர்க்கூர்தியாகி
யிலகியமுதன்மையாதியெய்துவையென்றுசொன்னா
னலமுறக்காக்கவென்னைநாதனேயெனக்கூறிற்றே. (௮௪)

கடவுள்பெருமான்கேட்டுக்கருணையோடுரைத்தல்செய்வார்
மடனறுமாகுவேநின்மரபுமுன்னறிந்தேநாமு
மடர்வதுசெய்யாவண்ணமார்த்துனைக்கொணருமாறு
படர்தருபாசந்தன்னைவிடுத்தனம்பரிவுகொள்ளேல். (௮௫)

என்றுநம்மிடத்திற்றீராதெறுழ்கொளுமூர்தியாகி
நன்றுறவிருத்தியென்றுநலத்தகுபார்வைநல்கி
யன்றதன்முதுகிலேறியையிருதிசையுஞ்செல்ல
வொன்றரைக்கணத்தினுந்தியுற்றுமீண்டிருந்தாரன்றே. (௮௬)

பிள்ளைமைப்பருவந்தன்னிற்பெருமிடன்மூடிகத்தை
நள்ளுறவடக்கிநின்றநாதனைவணங்கியன்பைப்
பள்ளமென்புனலிற்பாய்த்திப்பார்சுவமுனிவனந்த
வள்ளல்பாற்சுவத்தின்வைகிமற்றிதுமொழியலுற்றான். (௮௭)

அடல்கெழுகாலரூபியானவிக்கினனால்விண்ணுங்
கடல்கெழுபுவியுஞ்சாலக்கலங்கியதவனைக்கொன்று
தொடல்கெழுவேதநீதிதோற்றுகவென்றிரந்தான்
மிடல்கெழுபுலத்துநாதன்வேட்டவாபுரிதுமென்றான். (௮௮)

திகழுநித்தியங்கணைமித்தியங்கள்காமியங்களென்னு
மகமுதலனைத்துந்தீரவசிட்டனாதியரும்வேள்வி
யகனுறுபாகமாதியறுதலில்வறியராகிச்
சுகமுறுமகவானாதிச்சுரர்களுமொருங்குதொக்கார். (௮௯)

முள்ளரைக்கமலச்சேக்கைமுதல்வனைவணங்கிநின்று
விள்ளருங்கொடுமைசான்றவிக்கினன்றன்னைக்கொல்லுந்
தள்ளருமதகையாதுசாற்றெனவிரத்தலோடுந்
தொள்ளையிலாதநெஞ்சிற்சூழ்ந்துநான்முகவன்சொன்னான். (௯௦)

அனுதியாயமலானந்தவறிவனுய்நின்றசோதி
விஞயகனகிலங்காக்கவிழைந்துபார்சுவர்பாற்றேன்றித்
தனுதருள்வழங்கநின்றான்றனைச்சரணடைந்துபூசித்
தினுதவல்லிடும்பைமுற்றுமிரித்தின்பமார்கவென்ருன். (௯௧)

உய்ந்தனமுய்ந்தோமென்றுவந்தனர்வழிக்கொண்டேகிப்
பைந்தழைக்கானஞ்சூழ்ந்தபார்சுவரிருக்கைசார்ந்தார்
வந்தமாதவர்களோடுவானவர்வரவுகேட்டுச்
சிந்தையின்மகிழ்ச்சியோடத்திருமுனிதவிசுநல்கி. (௯௨)

இருந்தபின்னவரைநோக்கியென்குலமெனதுகல்வி
யருந்தவமனைத்துந்தூய்மையடைந்தனவென்றுசாலத்
திருந்தியமுகமன்கூறத்தேவர்களோடுமேலா
மிருந்தவவசிட்டனுதியிருடியர்புகழ்ந்துசொல்வார். (௯௩)

எங்களைப்பாவைபோலவிடைவிடாதியக்குநிற்கு
மங்கணனினக்குமைந்தனுயவதரித்தானந்த
மங்களவுருவன்றன்னைவழிபடும்பொருட்டுமெய்மை
சிங்கிடாநினதுபாதந்தெரிசிக்கும்பொருட்டும்போந்தாம். (௯௪)

நம்பிநின்சேவைமுன்னர்நலத்தகக்கிடைக்கப்பெற்றே
மெம்பிரான்சேவைமற்றிங்கெய்திடவேண்டுமென்று
மூம்பரார்முதலோர்முன்னரொய்யெனவாகுலூர்ந்து
தம்பிரானின்றுனேக்கிச்சகலருமெழுந்துதாழ்ந்தார். (௯௫)

விக்கினனிடரிற்பட்டுமெலிந்தழிகின்றயாங்க
டொக்கலர்த்தேவன்பாங்கர்த்துன்னினமனையான்றேர்ந்து
திக்கினும்விளங்குசீர்த்தித்தேவநின்பாங்கர்விட்டான்
புக்கனமிடர்கடீர்த்துப்புரிந்தெமைக்காக்கவென்றூர். (௯௬)

அன்னவர்க்கபயநல்கியவர்புறஞ்சூழ்ந்துசெல்லத்
தன்னுறுமூடிகத்தைத்தம்பிரான்செலுத்தியந்தக்
கொன்னும்விக்கினனுராமங்குறுகிவானவரைநோக்கிப்
பன்னருநமதுவீரம்பார்மின்களென்றுகூறி. (௯௭)

செங்கையங்குசத்தைநோக்கிச்சென்றுநீகணத்தில்வீரந்
தங்குவிக்கினனைப்பற்றிச்சார்மதியென்றுகூறி
யங்கதுதன்னைவிட்டானதுவுலகஞ்சவேகித்
துங்கவிக்கினனைச்சூழ்ந்துதுவக்கியீர்த்தெதிருய்த்தன்றே. (௯௮)

வேறு.

விண்முட்டியசடைமுடியுங்கடைவயின்மிளிரும்பிறைநிகரெயிறுந்திண்
மண்முட்டியபலவுயிரும்வெருவுறுவடிவுங்கடவுளர்முனிவோர்க
ளெண்முட்டியபெருவலியுந்திகழ்தரவெதிர்நின்றவன்முகநோக்குற்றுன்
கண்முட்டியநுதல்விழியான்கலவியகதழ்மூடிகமிசையுறநின்றே. (௯௯)

விமலன்றழலெழவிழிநோக்கிடுதலும்விடுவானலனிவன்வலிசிந்தச்
சமரம்புரிகுதுமெனவிக்கினனுறுசலமாயலேதகுதிசைபோர்ப்ப
வமரும்புவியுலகமிழக்கடவுளரணியாருலகமுமமிழச்சீர்
கமலன்பதியொடுநெடுமாலுலகமுங்கவிழப்பெருகுபுநிமிர்கின்ருன். (௧௦௦)

விண்ணோர்வெருவினரினியெங்கிடமெனமெலிவுற்றனருறுதவர்நோக்கி
நண்ணுதவன்வலியிதுவேயெனவிளநகைகொண்டமலனவ்வறலுண்ண
வெண்ணுவொருகரமெதிர்நீட்டினனவனினியுய்குதுவெனவதுமாறிக்
கண்ணார்தருமழகமைவெய்தியவொருககமாயொருமரமிசைநின்றே. (௧௦௧)

மலைநுண்பொடிபடவெழுவாரிதிகளுமறுகச்சிறகரடிக்கொண்டு
நிலையுந்திசைகளினமருங்கிரிகளினெடுமெத்தகமறவளைவாயி
னுலைசெய்திடுகதிர்மதிவிண்ணுலகமுழுதிரப்பெருகியகுரல்காட்டி
யலையுஞ்சிறகரினுலகம்பொதிதரவமலன்கமலமென்மலர்விட்டான். (௪0௨)

ஈசன்கரம்விடுவாசங்கமழ்மலரேகப்பறவையினுருமாறி
நாசம்புரிதருகடைநாளனலெனநள்ளாதவனுருவேறாகித்
தேசந்திரைகடறிசைவிண்ணுலகொடுசிதையச்சுடுதலுமவைநோக்கிப்
பாசங்கரமணிபவன்மாற்றினனதுபடர்வான்மழையெனவுருவாகி. (௪௩0)

மாறுவலிகொடுபொருவிக்கினனழல்வடிவஞ்சிதைதலுமிறுநாளிற்
சூறுவளியெனவேறாய்மிகுமழைசொரியுங்குயினுருவறவீச
வீறுகியவிவன்வலிசிந்துதுமெனமேகத்துருவனைவிடுநாதன்
கூறுகியபலவரையாய்வளிவிசைகொள்ளாவகைவளிதிமிர்வுற்றான். (௪0௪)

குமைமாருதவலியுறவிக்கினன்பலகுலிசப்படையெனவுருவேறா
யிமையாரிறைதொடுசதகோடியுமரியிடியிற்பொடிபடமிகல்காட்டி
யமையாப்பலவரையவைநுண்பொடிபடவணுகிப்பொரவரையுருமாறி
யுமையாண்மகனொருகதிர்வேல்புதிதுசெய்தூடல்விக்கினனுயிருணவிட்டான்.

ஒளியெண்டிசையினும்விரவப்பரிதியினொளிமங்கிடவிடுசுடர்வைவேல்
வளியின்படைமிகுவிசையாலெதிர்தலும்வயிரப்படையெனவமர்செய்த
வளியில்லவனுளம்வெருவிப்பொரவருமயிலைத்தெறுவலியிலனாகி
வெளியேதனதியலுருவாய்மூடிகவிமலன்சரண்சரணடைவுற்றான். (௪0௬)

வேறு.

சாந்தனுய்ச்சிரத்திற்கூப்பியகரனுய்ச்சரணம்வந்தடுத்தனனடியேன்
காந்தெரியயில்வேல்போழ்ந்திடாதென்னைக்காப்பதுன்கடனெனப்பணிந்தான்
மாந்துவானெழுந்தவெகுளியைத்தணித்துமகோற்கடர்கண்ணருள்வழங்கிச்
சீந்துவேல்வாளாமீளுமாபணித்தான்சேர்ந்துவிக்கினன்றுதிசெய்வான். ()

அருணிதியானவிநாயகபாசபாணிமாதேவநாயடியேன்
மருளினனினக்குப்புரியபராதமற்றினிப்பொறுத்தருண்முன்னர்த்
தருநிதிக்கரையனழைத்தெனையேவச்சார்ந்துநானனேகவிக்கினமா
யுருவுகளெடுத்துப்பெருவலித்திறத்தாலுலகெலாம்பீழையிற்படுத்தேன். ()

குறிகுணங்கடந்தபுராணமுத்தொழிலுங்குயிற்றிடுங்காரணமுதலே
யறிவினையிழந்துமிகுந்தமோகத்தாலடிகளோடமரெதிர்ந்திழைத்த
வெறியனென்றனையுமடியரோடொன்றாய்விரவுறவாண்டருள்புரிக
செறிதரும்பிரமசொரூபனேயெங்குந்திகழ்நிராகாரணேயென்றான். (௪0௯)

கொடுமைகள்பலவும்பிரிந்தனரேனுங்குரைகழலடைந்தவர்தம்மை
விடுவதுபுரியாக்கருணையேவிருதாவிளக்கியவிநாயகப்பெருமான்
கெடுதிகள்பலவுமுலகினிற்புரிந்துகெழுதகவடைக்கலம்புகுந்த
தொடுகயிற்கழற்கால்விக்கினனுளத்துத்துளக்கறக்கருணையின்மொழிவார். ()

புரிந்தநின்கொடுமைத்திறத்தினைநோக்கிப்பொங்கியவெகுளியானின்னை
யரிந்திடநினைந்தாமடைக்கலம்புகுந்தாயாதலினளித்திடப்பட்டாய்
விரிந்தவையகத்திலினியெமக்குவகைமேவிடநன்மொழிவிளைத்தி
பரிந்தெமைநினைப்பார்பணிகுவார்புகழ்வார்பாலொருகாலுநண்ணுதி. ()

வணங்குதல்புரியார்புகழ்தரார்நினையார்மலிந்தநஞ்சரித்திரங்கேளார்
குணங்கொளுமடியார்க்கிடர்களைப்புரிவார்குற்றமுங்கூறுவாரவரோ
டிணங்குறுவார்களிவர்முதலானவிழுதையர்தமக்கெலாமென்று
மணங்குசெய்தவர்பாற்பலவுருவாகியரசுவீற்றிருமதிகண்டாய். (௧௧௨)

அருத்தியினுமிங்கருளியமுறையேயறிந்துநீநடந்தனையாயிற்
றிருத்தகவாழ்ந்தாயன்றெனிற்செத்தாய்தெளிமதியெனவரங்கொடுப்பக்
கருத்தினுண்மகிழ்ந்துவிக்கினன்வணங்கிக்கற்பனைகடந்திடல்புரியேன்
பொருத்துமென்பெயரும்பூணுகவென்றான்புண்ணியன்புரிந்தருள்புரிவான். ()

தக்கவையகங்கண்முழுதுநின்பெயர்முன்சார்த்திநந்தமையெந்தஞான்றும்
விக்கினராசனெனமொழிந்திடுகவிக்கினராசனென்பவர்க்குத்
தொக்கவிக்கினங்களறுமொருகாலுஞ்சூழ்ந்தவையடர்தராவென்றார்
விக்கினன்மகிழ்ந்துவிநாயகர்பூசைவிளைத்தவரேவலினின்றான். (௧௧௪)

வானிடையமரர்மலர்மழைபொழிந்தார்வானவர்மாதவர்முதலோர்
தேனிடையறாதமலர்கொடுபூசைசெய்தனர்வரேணியன்கேட்டுக்
கானிடையறாதகருங்குழற்காதற்புட்பகைதன்னொடுமடுத்திட்
டேனிடையறாதபவமறவணங்கியுறுவரம்பெற்றனன்மீண்டான். (௧௧௫)

முனிவர்வானவர்களனைவரும்வணங்கிமுன்னியவரமெலாங்கொடுபோந்
தினியராய்த்தத்தமிடங்களில்வாழ்ந்தாரேறும்வலிவிக்கினன்பின்னர்ப்
புனிதபார்சுவநந்தனர்தமைவணங்காப்பூரியரிழுதையர்தம்பா
ணனிவிராயிருப்பச்சென்றனனிறைவர்நண்ணினார்பார்சுவர்கிரகம். (௧௧௬)

அடிபணிந்தேத்தும்பார்சுவமுனிக்குமம்மையாய்வளர்த்தவடனக்கும்
படியறுகருணைவழங்கிநல்வரங்கள்பண்பொடுமளித்தெனையாண்டு
நெடியவனறியாமலர்ப்பதங்கொடுத்தநின்மலவிநாயகரென்று
முடிவிலதாகுஞ்சிவபுரமடுத்துமுழுதுலகின்புறவிருந்தார். (௧௧௭)

கொக்கினதிறகுமலைத்தவர்குமரனாகியவிநாயகருலகில்
விக்கினராசராகியமுறைமைவிரித்தனம்வியாதமாதவனே
விக்கினராசராகியவாறேவியன்மயூரேசராயுலகிற்
புக்கினவசுரர்தமைத்தெறுங்கதையும்போற்றெனப்புகுலுவான்பிரமன். ()

விக்கினராசர்திருவவதாரப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - ௩௭௬.



## ௭௪ வது - மயூரேசர்திருவவதாரப்படலம்.

கறங்குதிரைப்பெருங்கடலிற்கதிர்மணிச்சூட்டரவணையி
லுறங்குபுயனிறக்கடவுளுந்தியின்முன்னொருகற்பத்
தறங்குலவுநான்முகத்தோனாணத்தாலறிவரிய
பிறங்குமொளிச்சிவபெருமான்பேரருளால்வந்துதித்தான். (௧)

எழுதாதமறைபலவுமீண்டுபலசாத்திரமுந்
தொழுதார்வத்தொடுங்கேட்குந்துகளில்புராணமுமனைத்துங்
கழுதாடவுடனாடுங்கண்ணுதலார்வகுத்தருள
முழுதார்வத்தொடுங்கேட்டுமுறையினுலகினைப்படைத்தான். (௨)

அத்தனருண்மறையாதியவைமூன்றும்பொறித்தமைத்த
புத்தகநித்தலும்பூசைபுரிநியதிக்கடன்பூண்டா
னித்தகையினயனிருப்பவிவன்வகுத்தசுராசுரர்
மைத்தவறிவாலொருகான்மறமிகுந்துசமர்விளைத்தார் (௩)

நெடுங்காலம்பொருமமரர்நெடிதுதமதுளத்திடைச்சூழ்ந்
தொடுங்காதமறைமனுவையுறுபடைகளெனச்சமைத்தங்
கடுங்காதலொடும்பிரமவத்திரமுமுடன்கூட்டி
நடுங்காதநிசாசரர்கணலியவிடுத்தொளிவிரித்தார். (௪)

வேறு

மானமிழந்துபடையிழந்துவலிகளிழந்துகளமிழந்து
போனவவுணர்பரிபவமும்பொருதவுளமுமுயிர்வாட்ட
வீனமிழந்தவானவரையெந்நாளுடையக்காண்டுமென
வானவுளத்துமறமூளவமர்ந்தார்சிலநாளொழிந்தனவே. (௫)

வேறு

சங்குறழ்வடிவினன்றானவன்பெயர்சங்காசுரனெனப்படுதறுகணன்வ
லியிற், றங்கநண்ணினனிவனிளையவன்கமலாசுரனெனும்பெயரினன்றோ
ல்வியில்வரத்தா, னங்கவன்வலியினும்பதின்மடங்கதிகமார்ந்தவன்மாயைக
ளனைத்தினும்வல்லா, னிங்கிவனெனையவனாயினுந்தமையனேவலினிகந்தொ
ருகருமமுமிசையான். (௬)

இருவருமிகலிலரியைதருமுயிருமிதையமுமெனவமர்செயலினையறியா
ப், பொருவிடைமுதுகிடுமவுணர்களவர்பாற்புக்கனர்தொழுதனர்புரிவொடு
மொழிவா, ரொருகுலநீயிரும்யாங்களுமெங்கட்குற்றிடுமிழிவயர்வும்மனவ
ன்றே, செருவிடையமரர்களைமைநலிந்தனரத்தேவரைமுழுவதுந்தெறுவது
புரிமின். (௭)

அத்தகுதேவர்கள்படைக்கலமாயதாரணமந்திரமதுபொறித்தமைத்த
புத்தகநான்முகனிடத்துளததனைப்பொருளெனமுந்துறவவ்வுமினென்றார்
கொத்தொடுமவுணர்கள்கூறியகேளாக்குடவளைவடிவினனிளவலைநோக்கி
யித்தினமத்தகுபுத்தகமிங்ஙனெய்துவியென்றனனிளவலுமெழுந்தான். (௮)

ஆற்றலின்மிகுகமலாசுரனருவாயண்ணினனான்முகனமர்ந்தவைப்பிடத்தி
லேற்றமர்நாயகன்றிருவுருவெண்ணியிருந்தனனெண்கணன்யோகநித்திரையிற்
போற்றுறுமவனெதிர்வைகியமறையின்புத்தகமங்கையின்வவ்வுபுமீண்டு
சாற்றியதமையன்முன்வைத்தனனவனுந்தகவதுதனையொருகாவலினிட்டான்.

தொன்னலமுறுமறைமுழுவதுஞ்சங்காசுரனிடுகாவலிற்கடலினுளிருப்ப
மன்னியமறைநெறிவழக்கமிலாமையவையகமூன்றினும்வறுமையுமிடரும்
பன்னருநோய்களுமிக்கனநெடுநாட்பங்கயன்யோகதுபயின்றனன்விழித்தான்
முன்னமர்திருமறைப்புத்தகங்காணான்முதுதுயருழந்தனனென்செயவல்லான்.

முருகனையருளியகுருபரனருளான்முன்னெமக்குதவியதிருமறையொ
ழியிற், கருதவதென்னுயிர்வாழ்வதுமென்னென்கடைப்பிடியென்னுலகளி
த்திடுமுறையென், னிருவிழியறவிருப்பினுமறையொழியவிருப்பதுமெய்திடு
மேயெனநினையாப், பருவரல்கொடுவிரைவொடுவளைகடலிற்பள்ளிகொண்
மாயவன்பாங்குறச்சென்றான். (௧௧)

விழித்திலன்மாயவனதனைநோக்கிமீண்டனனண்ணியவடியவர்மல
நோய், கழித்தருடருங்கயிலாயவெற்பெய்திக்கவுரியொடணையமர்கண்ணு
தலார்தஞ், செழித்தமென்மலர்ப்பதமும்முறைவணங்கிச்செழுந்துதிபலமொ
ழிந்தன்பொடுமாட, வழித்துலகனைத்தையுமாக்குபுநிறுவுமங்கணர்வந்தமை
யறையெனவறைவான். (௧௨)

வேறு.

உமையொருபாகநான்யோகநித்திரை
யமைதருசெவ்வியினடற்சங்காசுர
னிமைவிழிப்பதன்முனமிருந்தமாமறை
தமையெலாங்கொடுகடறனிற்புக்கானரோ. (௧௩)

மைக்கடல்விழிவளர்வாளராவணைச்
சக்கரச்செங்கையான்சாரடுத்துளேன்
மிக்கவன்றுயிலினைவிரவிநிற்றலிற்
புக்கனனின்பதம்புராணநாயகா. (௧௪)

தானவனுவியைச்சாய்த்துப்பொள்ளென
வீனமின்மறையினையெடுத்துமாதவர்
வானவர்துயர்கெடவழங்குகென்றனன்
ஞானவித்தகரெதிர்நவிற்றலுற்றனர். (௧௫)

கடல்வளர்நித்திரைகண்ணனீத்தபின்
குடவளையொருவனைக்கொன்றுநீங்கிய
திடமுறுமறைகளைச்சேரக்கொண்டுவந்
திடனுறுமுலகினிலீவனென்றனன். (௧௬)

ஈர்ந்ததண்மதியணியிறைவர்வாய்மொழி
சார்ந்தனசெவிகளிற்றளர்ந்துநான்முகன்
சோர்ந்தனனிலமிசைத்துளங்கித்துன்பமிக்
கார்ந்தனனெழுந்தயர்வுயிர்த்துக்கூறுவான். (௧௭)

வேலையிற்றுயில்பவர்விழிப்பதென்றுநற்
பாலமிக்குடையவப்பணிலத்தானவன்
ஆலையிற்கரும்பெனவழிவதென்றுயர்
நூலவையகமெலாநுவல்வதென்றுகொல். (௧௮)

திருத்தகுமுனிவரர்தேவர்யாவருங்
கருத்துறுபெருந்துயர்கடப்பதென்றுகொ
லருத்தியினவரவர்க்கமைத்தகன்மங்கள்
பொருத்துநால்வருணமும்புரிவதென்றுகொல். (௧௯)

கச்சமிலருளினற்களைகணுகிய
வச்சநீயருளியவாரணங்களு
நிச்சலும்வழிபடுநியதிதப்பிய
வெச்சனென்கவலையுமிறுவதென்றுகொல். (௨௦)

அருள்செயவேண்டுமென்றழுதுநைந்துளம்
வெருவுறுவேதனைவிமலனுக்குபு
கருணையின்மலர்விழிகாட்டியஞ்சலை
தெரிமதியிதுவெனச்செப்பன்மேயினன். (௨௧)

வேறு.

சங்காசுரனுக்கிளையவன்முன்றறுகட்கமலாசுரனென்பா
னங்காந்துலகமுழுதுண்ணுமாற்றலுடையான்மாயையினன்
மங்காவரத்தான்முனிவர்சுரர்மற்றைப்பெரியோர்தமக்கிகலிச்
சிங்காவிடும்பைசெயுங்கொடியான்றீயும்வெருவுஞ்சீற்றத்தான். (௨௨)

வருத்தல்சிறந்தவுருத்திரர்கள்வளராயிரவர்கூடிடினும்
பருத்தபுயத்துநாரணர்கள்பதினாயிரவர்கூடிடினும்
விருத்தரானநான்முகவர்வெவ்வேறிலக்கர்கூடிடினும்
ஒருத்தனனவவனுயிரையுலைத்தலரிதாமெஞ்ஞான்றும். (௨௩)

அனையானுயிரோடிருப்பளவிலாழிப்படையேந்தியமாற்குங்
கனைவார்கழற்சங்காசுரனைக்கடத்தலரிதாமிடரான
வினையாவையுந்தீர்த்தருள்கொழிக்கும்விமலனும்விக்கினராசன்
றனையாதரவிற்சரணடைதிதண்டாமரைவாழ்சதுமுகத்தோய். (௨௪)

மறைநீதிகளையிப்பொழுதேவையமுழுதுமிகவழங்கிக்
குறையாவலியாலெதிர்ந்துசமர்குயிற்றங்கமலாசுரனுயிரைப்
பொறையாகியவல்லுடனின்றும்போக்கியுலகந்தனையின்பத்
துறைவார்கடலிற்படிவிக்குந்தூநீர்க்கரகத்தந்தணனே. (௨௫)

நியதிகொடுநீதினம்பூசைநிகழ்த்துமறையுஞ்சங்கவுருக்
கயவன்றனைப்பின்புயர்நெடுமால்கடந்துகொடுவந்தனக்களிப்பா
னயர்விஜெழிதியெனவருளவமலன்மொழியாரமிழ்தருந்தி
யியவுவெனும்விக்கினராசனிணைத்தாண்மலர்கள்பூசிப்பான். (௨௬)

விதுவார்சடிலத்தணிந்தருளும்விமலனுருவம்பூசித்துப்
பதுமாசனனுயினிதிருந்துபயிலோரெழுத்தாகியமனுவைக்
கதுவாதரவிற்பலவெண்ணிக்கவினவுளத்திற்றியானித்தான்
முதுமாமறைகள்கொளக்குறித்தமுகநான்குடையவந்தணனே. (௨௭)

வேறு.

பரசொடுகமலம்பாசமங்குசம்பாணியேந்தி
விரவியசித்திபுத்திவிளங்கியபாகராகி
வரமருள்விழிகண்மூன்றும்வயங்கிடமடங்கலூர்ந்து
சுரர்தொழுதேத்துமைங்கைத்தோன்றலாரெதிரேநின்றார். (௨௮)

கண்டனனெழுந்துநெஞ்சங்கரைந்துகக்கண்ணீர்வாரத்
தண்டெனவிழுந்துதேவன்றனையிடைக்கிடப்பநோக்கி
யண்டருக்கரியபெம்மானுரருள்பெரிதுங்கூர்ந்து
முண்டகக்கரத்தாலன்னுன்முன்கைதொட்டெழுப்பிச்சொல்வார். ()

சாற்றுதற்கரியவேதஞ்சாத்திரம்புராணமூன்றுந்
தோற்றுநம்முகத்தெஞ்ஞான்றுஞ்சுடருநேத்திரங்களாகு
மேற்றமல்கியவம்மூன்றுமிறந்தவென்றினையல்வல்லே
தேற்றமல்கிடவையத்துமுன்புபோற்றிகழச்செய்வாம். (௩0)

பண்ணவர்தமக்கும்யோகம்பயின்முனிவரர்க்குமேனை
மண்ணவர்தமக்கும்யார்க்குமல்கியதுக்கந்தீர
வெண்ணுறுபுவியினின்றேயேகுதுங்கமலனென்னுந்
திண்ணியவசுரனுவிதீர்க்குதுமொல்லைகண்டாய். (௩௧)

பங்கயப்பெயரினுற்குப்பந்துவாய்வலிமேம்பட்ட
சங்கவண்வடிவினுனைச்சார்ந்தநித்திரையந்தத்திற்
பொங்குநம்மருளானீலப்புயல்வண்ணன்புரட்டும்வேத
தங்குநின்னவலநீங்கித்தழையெனவருளிநாதன். (௩௨)

வேறு.

முப்புரியினூலுரமுயங்குமொருகாளை
விப்பிரவுருக்கொடுவிளங்குமறையாதி
செப்பரியகோசமவைசேமமுறயாத்திட்
டொப்பரியதோளினிடையொன்றவிசைவித்தான். (௩௩)

ஓதலுறுசீடர்களொராயிரவர்சூழ
வாதவரனேகர்களடர்ந்துவருவார்போன்
மாதரொளிபம்பநெடுவானிடையிருந்தும்
பூதலமருங்குபுகுவார்வருதலுற்றார். (௩௪)

சுந்தரநல்லாச்சிரமந்தொக்கமுனிவோர்க
ளந்தண்மறையாளரனைவோருமொளிதோற்ற
விந்தவொளியெந்தவொளியீங்குவருகின்ற
துய்ந்தனமெனப்பெரிதுமும்பர்விழியுய்த்தார். (௩௫)

வேறு.

தீம்புனலாடுதல்சந்திசெபமோமமறையோதறேவபூசை
யோம்புமதிதியர்பூசையுற்றிடும்வைசுவதேவமுரைக்கப்பட்ட
வாம்புனிதநித்தியகன்மங்களிருநான்குமறவகத்தின்மூழ்கிக்
கூம்பலுறுவிடருழக்குமுனிவர்குழாத்திடையடுத்தார்கோலநாதர். (௩௬)

மழைபொழியவேனிலின்முன்வாடியபைங்கூழ்போலமறையினீங்கி
விழைவிலராய்த்துயர்கூரும்விரதமுனிவரர்மகிழ்ந்துவேதவோசை
தழைதரமாணுக்கரொடுசார்ந்தகுலவேதியனைத்தாளிற்றாழ்ந்து
குழையவுளமெழுந்தாடிக்கும்பிட்டுத்தட்டமிட்டுக்கூறலுற்றார். (௩௭)

தேசாருந்திருமேனிமறைமுதலேசிறியேங்கடவத்தின்பேறே
கூசாமற்றினமிடரைக்குயிற்றுகமலாசுரனாற்குழைந்தெல்லோமு
மாசாரமிழந்துமிகவழுக்கடைந்தேமுமைக்காணுமரியபேற்றான்
மாசாரும்பேரிடருமபாக்கியமுமிப்பொழுதேமாற்றினேமால். (௩௮)

தொண்டுபுரிபெருந்தவத்தோமாதலினுனுமைக்காணுந்தொடர்புபெற்றே
மண்டர்தொழுங்குருமுதலேயடியேங்களெளிதுய்யவடுத்தீரிங்குப்
பண்டுவேதிபதியாதுவந்தருளும்பரிசியாதுபகருகென்றார்
மண்டியபொற்சடைமறைத்துமறையவராய்வந்தவர்தாம்வகுக்கலுற்றார். (௩௯)

அவ்வியகவ்வியமுலகிலறவொழியசித்தியமேயாதியான
செவ்வியமூவகைத்தொழிலுஞ்சிதையவறவீரந்தச்செயலைநோக்கி
யெவ்வகைவித்தையும்பொறித்தபுத்தகங்கள்கொடுவந்தோமிவற்றையேற்றுப்
பவ்வநெடும்புவியிடத்திற்கிரியையெலாமுன்போலப்பயிற்றுமின்கள். (௪0)

மல்லாலனெனவெம்மைநூல்களெலாமெடுத்துரைக்கும்வையமூன்றி
னெல்லாருமப்பெயரேயியம்புவர்களெமக்கிருக்கையீந்தெல்லீரும்
பொல்லாதமனக்கவலைபோக்கியினிப்பேரின்பம்புணர்மினென்றார்
சொல்லாருங்கவுதமராதியர்கேட்டுமகிழ்தூங்கிச்சொல்லலுற்றார். (௪௧)

யாமிரந்துகொளத்தக்கவரமடுத்தவிறைவரேயீந்தாரென்று
தாமினிதுகளிகூர்ந்துதக்கவிடமவர்க்கருளித்தளர்வுதீர்ந்தார்
தோமிலிவரன்றுமறைசொன்னவரேயெனச்சிலர்கடுதித்துவாழ்ந்தார்
சாமியருளெனச்சிலர்கள்சதுமறையுமுறையானேசாற்றக்கேட்டார். (௪௨)

எத்துமறைப்பொருளுண்மைசிலர்கேட்டங்கையத்தையிரித்தல்செய்தார்
சாத்திரங்கள்சிலர்கேட்டுமெய்ப்பொருளினுண்மையினைச்சாலக்கண்டா
ராத்தனுரைப்புராணங்கள்சிலர்கேட்டுப்பேரின்பமகத்துப்பூத்தார்
தோத்திரஞ்செய்திறைஞ்சினர்க்குக்கேட்டவர்கள்சிலர்தாமுஞ்சொல்லலுற்றார்.

கறையறுமாதவமுனிவரவ்வாறுமல்லாலர்கழலிற்றாழ்ந்து
மறைமுதனூலனைத்தினையும்வரன்முறையாற்கேட்டுணர்ந்துமாணுக்கர்க்குக்
குறையறத்தாமோதுவித்துங்குவலயமெலாம்பரப்பிக்கோதிற்றீர்ந்து
நிறைகருமமுன்போலநிச்சலுநிச்சலும்புரிந்துநீடுவாழ்ந்தார். (௪௪)

பொறிவரிவண்டினம்புரளும்பொகுட்டலர்த்தாமரைச்சேக்கைப்புலவன்முன்ன
ரறிவனருளியமறைநூலருச்சிக்குநியதிமுட்டாதடுத்திடாத
சிறியகவலையையுடையானுயினுமாமறையொழுக்கஞ்செழித்துநின்ற
நெறியதனாற்பேரின்பக்கடலாழ்ந்துவிநாயகரைநினைந்துவாழ்ந்தான். (௪௫)

தெய்வமறைநெறியொழுக்கமுலகமெலாமிவ்வாறுசெறியநோக்கி
யுய்வகையெண்ணுதகமலாசுரன்சங்காசுரனையுற்றுச்சொல்வான்
மெய்வளர்மாமறையாதிநூலையெல்லாம்யாங்கவர்ந்தும்வீணேயன்றே
கொய்வளமல்கியசுந்தராச்சிரமத்தொருமறையோன்கொண்டுவந்தான். (௪௬)

அருணனெனுங்கடவுதிப்பவப்பொழுதெயிருண்மூழுதுமகன்றுலென்னத்
தெருணனிமல்கியமுனிவராச்சிரமம்மறையோன்சேர்தலோடு
வருணமொடாச்சிரமநிலைவழுவின்றிவளர்ந்தனமாமகங்களாதிப்
பொருணிமிரவானவர்களவிப்பாகங்கைக்கொண்டுபூரித்தாரால். (௪௭)

விண்ணவர்களினிநம்மையென்மதிப்பார்விரதியரென்மதிப்பாரேனை
மண்ணவர்களென்மதிப்பார்சிறியோருநகைவிளைக்கும்வடுவேபெற்றாந்
திண்ணமுறவொருசெயலைச்செய்யாமலிருப்பதுவேசிறப்பாஞ்செய்து
நண்ணியதுபிழைத்தக்காலதுபோலத்துயருண்டோநம்பவென்றான். (௪௮)

விளம்புமுறைசெவிமடுத்துவிளங்கநகைத்திருவிழியும்வேறுகாட்ட
வுளம்பதைப்பவளைப்பெயரான்றம்பியைப்பார்த்துயர்வயிரமொழித்தவாய்த
மிளம்புலிறுப்பதுமரிதோவிந்திரன்மாலயனெவருமெம்மைநேரார்
களம்பயிலுமறையவனோநிகர்கொன்றுநூலையெலாங்கவர்கவென்றான். (௪௯)

வேறு.

மூத்தவனீதுவிளம்பலுமொய்யெறுழ்சேர்கமலாசுரன்
றீத்திரண்முளிவனமுண்ணியசெல்வதுபோலவெழுந்தன
னேத்தியவியவரைநோக்கிநம்மீரிருபடையுமமர்க்கெழ
மாத்தடமுரசமெருக்கியவள்ளுவர்க்கோதுகவென்றனன். (௫0)

வள்ளுவன்வியவருரைப்படிவார்முரசாரவுரப்பினான்
றுள்ளுறுவாசியும்வேழமுந்துரகதமூட்டியதேர்களுங்
கள்ளவிழ்வாகைமலர்த்தொடைகமழ்தரப்பன்முறைசூடிய
வெள்ளலிலாவயவீரருமெண்ணிலர்கோயின்முன்றொக்கனர். (௫௧)

நிணங்கமழ்வேற்கமலாசுரனீர்படிந்துண்டணிதாங்கினான்
மணங்கமழ்தும்பைமிலைத்தனன்மன்னியகோயின்முன்வந்தனன்
கணங்கிளர்வீரர்தமக்கெலாங்காய்பரிகரியிரதங்களு
மணங்குசெய்படைகலனுதியுமருளினன்வாசியிவர்ந்தனன். (௫௨)

சங்கமுரான்றனபேரிகைதண்ணுமையாதியியம்பின
மங்கலகீதமெழுந்தனமாகதர்விருதுமுழக்கினர்
தொங்கலும்பிச்சமுங்கொடிகளுந்துவன்றினதூதர்முன்னோடினார்
பொங்கியவெகுளியன்சேனையம்புணரியின்வடவையிற்போந்தனன். (௫௩)

சுந்தரவாச்சிரமத்தினைச்சூழுறமுற்றினனப்பொழு
தந்தரநின்றொருவாக்கவணமர்தருமுனிவர்கள்செவிபுகச்
சிந்தையின்முனிவுகொடுங்களைத்திகழுமல்லாலனோடுண்ணிய
வந்தனனெறுழ்க்கமலாசுரன்மதித்திடுவீரென்றெழுந்ததே. (௫௪)

அஞ்சினமுனிவரரவ்வயினமருமல்லாலனையண்மினர்
செஞ்சரணங்கள்பணிந்தனர்செங்கைகுவித்தனர்செப்புவா
ரெஞ்சலுறாதுலகங்களினிடர்புரியுங்கமலாசுர
னஞ்செனநங்களினுயிருணநண்ணினனீரிருபடையோடும். (௫௫)

எவர்கமலாசுரனாலுறுமிரும்பயனெங்களினீக்குவ
ரெவர்களையினிச்சரணெய்துவமிரியவும்வழியிலையென்செய்கே
மெவரசுரனதுயிருண்பவரெனவிழிநுண்டுளிசிந்திட
வெவர்களுநொந்துபுலம்பினாரினையலிரென்றிறைநுவலுவார். (௫௬)

அனைவருமெனதுபினிருமினேவசுரனைவலியுளனென்னலிர்
கனைகடலெனவெலிகுழுமினுங்கதிருமிழ்மணியரவொன்றுறிற்
றனையவைவெல்லவும்வல்லவோதமியுறுமறையவனுமென
வெனையினிநினையலிரெனதுதோளெறுழ்வலிநனியறிவீரென. (௫௭)

நினைத்தனர்நினையுமுன்மாயையினீடிருஞ்சேனைகடோன்றின
முனைத்தெழுசத்திரவத்திரமொய்படைதாங்கியகையின
கனைத்தொளிர்கழலணிகாலினகாற்றுகளாற்கடறூர்ப்பன
வளைத்துளவண்டமும்பொடிசெயுமாண்மையுமூக்கமுமுடையன. (௫௮)

பல்லியமெண்ணிலியம்பினபடர்கொடிவானின்மிடைந்தன
நல்லிசைவிருதுமுழங்கினநகுசதிர்முத்துவடங்களின்
வில்லுமிழ்கவிகையும்பிச்சமும்வெயிலவன்வெயிலறமல்கின
கல்லெனவெழுமொலிகடையுகக்கடலொலியவிதரநிலவின. (௫௯)

வேறுபல்லுருவொடுமின்னணமேவியநால்வகைச்சேனையும்
பாறுபல்கோடிகள்படர்நிணப்படையொடுமிறைவனதடிபணிந்
தேறுமெய்யன்பொடுநின்றெமக்கிடுபணியெதுவதுவிதுவெனக்
கூறுகவென்றனநோக்கியகோதறுமுனிவர்மகிழ்ந்தனர். (௬0)

விரதியரேத்துமல்லாலரும்வேறுருக்கொண்டனரொருபது
கரமலர்களும்வலக்கைகளிற்கமலமும்பரசுநற்பாசமு
முரணுறுதோட்டியுங்கதையுமற்றுறுமிடக்கைகளில்வாளுநீள்
வரமலிசூலமுநேமியும்வண்டமருகமுந்தோமரமுமே. (௬௧)

பருத்துறுநீடிருமேனியும்பணிமதிமிளிர்மணிமோலியு
முருத்தகுமுச்சுடர்விழிகளுமொளியுமிழ்பல்வகையணியுமென்
கருத்துறுபதமிசைகட்டியகழலுமுன்றோற்றியநாதனார்
திருத்தகுதிருவிளையாடலைத்தேவருநோக்கிமகிழ்ந்தனர். (௬௨)

வேறு.

இதமருளிறைவனாரியல்புதேர்ந்துபோ
யதனெனுந்தூதுவனழலுந்தண்ணெனுங்
கதமலிவிழிக்கமலாசுரன்றன
பதமலர்தொழுதனன்பகரலுற்றனன். (௬௩)

மறையவனானமல்லாலலையனே
நிறையநாற்படைகளுநிருமித்திட்டன
னறைதருபல்படையங்கைதாங்கினான்
றுறைகெழுசமர்புரிசோடைகொண்டனன். (௬௪)

வெல்லுநரவன்றனைவிண்ணுளாருளு
மில்லைமற்றவன்படைத்திட்டசேனையுண்
மெல்லியனுமொருவீரன்றாக்கினும்
வல்லநம்படையெலாமடிவபோலுமே (௬௫)

இப்பொழுதவன்படைத்திட்டசேனைநின்
கைப்படையாலொருகாலத்தெய்ப்பினு
மப்பனேமறுவலுமாக்கிப்போர்செயுந்
துப்பினனனைத்தையுஞ்சூழ்கவென்றனன். (௬௬)

ஒற்றியுள்ளனவெலாமுரிமைதன்னொடு
சொற்றதூதுவனுரைசூழ்ந்துபார்த்தில
னிற்றிடுமுழையாரிகக்கவல்லவர்
பற்றுதன்னாக்கமேபாரித்தோதுவான். (௬௭)

இந்திரன்மாலயனீசனாருமென்
முந்துறநின்றிலார்முட்டிவாங்குறு
மந்தணனேநிகரழலம்பொன்றினாற்
சிந்துறவவன்றனைத்தெறுவன்காணனா. (௬௮)

சேர்ந்துகண்ணெருப்புகச்சினந்துவையமு
மாந்துவானெனமறமானங்கொண்டுபோர்
நீந்துவாசியின்வெரினெளியவேறினா
னேந்துபோர்த்தலைவர்களிறைஞ்சிமுந்தினார். (௬௯)

இயவொலியெரிமணியிரதக்காலொலி
கயவொலிபரியினங்கனைக்கும்பேரொலி
வயவர்களார்ப்பொலிமயங்கியெங்கணும்
வியனெடுங்கடலெனமிக்குநீண்டவே. (௭0)

வெந்திறற்றானவர்வெகுண்டெதிர்த்தலு
மந்தணன்சேனையுமழன்றெதிர்த்தன
பந்தமல்கியபெரும்பாவத்தோடெதிர்
மைந்துறுபுண்ணியவகுப்புப்போன்றவே. (௭௧)

வேறு.

இரதமோடிரதமேழுபரிபத்தினோடிபம்
பரவுவாசியொடுவாசிபடைவீரவருட்
கரவுவாளினொடுவான்கதையினோடுகதைக
ளரவவில்லொடவைவேலொடவையார்ந்துபொருத. (௭௨)

சிறகெழுந்திடவரைத்திரள்சிறந்தகளியால்
உறவினொடிகலுஞற்றுகயவோர்களுறழப்
பறவையொத்தபரிபூட்டிரதநேர்ந்தவைகடா
மறமிகுந்தபலமாதிரமுமண்டிலமிடும். (௭௩)

தங்குபல்வரைமுழைக்கணமர்பலசகுனமு
மிங்குமங்குமிரைதேரியவிரிந்தலைவபோற்
றுங்கவீரர்கள்வழங்குகணைதோமரமயில்
செங்கனற்றிகிரியாதிபலதேருநுழைவ. (௭௪)

கொண்டன்மல்கிமழைகொட்டவனற்குன்றினெடுகும்
விண்டுதண்மரம்விளங்குகுவடிற்றுகுவபோன்
மண்டிருங்கொடிமதிக்குடைகொடிஞ்சிபலவுந்
திண்டிறப்படைபொரப்பெரியதேரின்விழுவ. (௭௫)

அருவிபாய்மலைகளென்னவமராடுசிலதேர்
கருவிபோழவிழுகாவலருடற்கணிமிருங்
குருதிபாய்தரவிளங்கினகொழுங்கறைநிலத்
துருளின்வாயெழவுழன்றுசுழல்கின்றசிலதேர். (௭௬)

பொரவழைத்தவர்களோடுபொரநேர்குறுகுவா
ரிரதமிற்றபிணமங்கிடைகிடந்திடறலா
லரவமல்குறவிலங்கவகநொந்தெதிர்வரு
முரமிகுத்தவரழைப்பமகிழ்வோடுலுவார். (௭௭)

பூட்டுவாம்பரிபுரட்டியமர்பாகர்தலைகள்
வீட்டிநேர்படைவிலக்கிவரிவில்லொடணிகை
யோட்டியூரிரதமோடுடல்கிடப்பவுயிர்வான்
கூட்டினாரிரதமூர்ந்தவிருகூற்றினர்களும். (௭௮)

ஆறிரட்டியுறுகோடியழலாதவர்தமுள்
வேறுபட்டமரின்வென்றவர்கள்விண்கதிகொளத்
தேறிமுட்டியமர்செய்வதுகடுப்பவுறுசொற்
கூறிவட்டவெளியூடுமமர்கொள்வசிலதேர். (௭௯)

அந்தரத்தமர்செய்வாரினடல்வெய்யவர்சிலர்
மைந்தவிந்துயிரவிந்தும்வளர்தேரொடுநிலம்
வந்துவீழ்தொறும்வயக்கரிகளாதிமடியாத்
தந்தமாருயிரொடன்னவுயிர்சாரவிடுவார். (௮0)

ஏறுதேரழியவேறுமொருதேரினுழுவை
யேறுபோலினிதுபாய்ந்தமரெதிர்ந்துபொருவார்
வீறுசேமவிரதங்களும்விழக்குழகன
தூறுருவிரதநின்றமருடற்றுவர்சிலர். (௮௧)

வேறு.

வெய்யகுராலானுமதமிக்கொழுகலானு
நெய்யணிபடைக்கலநிழற்றொளியினானு
மையன்மதமாக்கடவிவன்சமர்செய்வீரர்
பெய்யுமுகிலிந்திரர்பிணங்கினரொடொத்தார். (௮௨)

தண்டமொடுவார்தொடர்தளைக்கொடுபுடைத்தும்
புண்டிகழ்மருப்புடல்புகப்பெரிதுபாய்ந்து
மண்டிபமுடற்றவதன்மேலமருமன்ன
ரெண்டகவெறிந்துமினிதெய்துமமர்செய்தார். (௮௩)

உய்ந்தகயவீரரையுமொண்களிறுமாய்க்கும்
வந்துபொருவீரர்மதமாவினையும்வேழ
வெந்திறலின்வீரர்பயில்வேல்பலவெறிந்து
தந்தமொடுவார்கைதலைவீழ்த்தழிவுசெய்வார். (௮௪)

கிழிக்குமிரதத்தலைவரைக்கிளர்கரத்தா
விழிக்குமிபவீரரையடர்ந்தெறுழ்மருப்பாற்
கழிக்குமயவீரர்களைக்காற்றிரளின்வாலா
லிழிக்குமறமள்ளர்களையெற்றுமதவேழம். (௮௫)

ஓடிரதமோடுகளிறூர்ந்துசிலவீர
ராடியநெடுஞ்சமரடுக்கலிறகன்று
நீடியகளிற்றினொடுநேர்ந்துகுலிசத்தாற்
சாடியவலாரிதொழிலின்றகுதிகாட்டும். (௮௬)

இயக்குமிரதத்தினையெதிர்ந்திகலின்மூட்டிப்
புயக்கவலியின்றிமதம்பொங்குவிறல்வேழம்
வியக்கவொரரக்கன்வளர்வெள்ளிவரையூன்ற
வுயக்கமுடனோலிடுதலொப்புறமுழங்கும். (௮௭)

தன்றுணையதாகியசமீரமொடுகூடி
வென்றிபுனையங்கியினைமூண்டதிறமொப்பக்
கொன்றலதுமீட்சிகுறியாத்துரகவீரர்
துன்றியகளந்திரைதுழாவுகடல்போன்ற. (௮௮)

கந்துகமறங்கொடுகதழ்ந்துகுதிகொண்டு
முந்துபரிவீரருடன்மொய்த்ததனதாளி
னிந்தநிலனிற்படவெழுந்துயரென்றூழி
னந்தவயமான்மிசையதாகவமர்செய்யும். (௮௯)

மத்தகமிசைக்குரமழுத்தவடிபாய்மா
வித்தகர்வைவேலினுடல்விட்டிபம்விடுத்தோர்
குத்துமுலையானவிருகோட்டிளையவேழ
நித்தலுமணைத்துநெடுவானிடைநிலைத்தார். (௯௦)

பாய்ந்தபரிமாவினுடன்பாழியிரதத்திற்
சாய்ந்தவர்தழற்கதிர்தனதிரதமேறி
வாய்ந்தவரமாதர்வளரல்குலிரதத்தி
னேய்ந்துமுலையானையையிருங்கையின்வளைத்தார். (௯௧)

வேறு.

வையமட்டுமெதமால்களிறடர்த்தும்வயமா
நையவேலினிலெறிந்துநகுதானைமறவர்
வெய்யவாளமரின்வீழ்ந்துவெளிமாதர்நயனச்
செய்யவாளிகொடுவென்றனர்கள்சித்தசனமர். (௯௨)

வேறு.

இளையாரையுமுதியாரையுமேறுண்டவர்தமையு
மிளையாமதவேழத்தையுமிவுளித்திரளினையும்
வளையார்கரமடவார்பெயர்மருவுற்றவர்தமையும்
வளையாதயிலுழல்வோர்நிகர்வயவோரொடுபொருதார் (௯௩)

கேளாகியதோலிற்கிளருருவத்தினைமறையா
வாளாலமர்புரிவாரிடம்வலமாயலமருவார்
சூளாமணிமுடியின்முடிதோண்மார்பிடைதுடைக
டாளாதிகணினைவார்குறிதகவுற்றிடவெறிவார். (௯௪)

வரிவார்சிலைமறவோர்சிலர்வருவாளிகள்வீழ்த்துந்
தெரியாதெதிர்மலைவார்வளர்சிலைதூணிகள்வீழ்த்தும்
பெரிதாகியதிணிதோண்முடிபீடாரரம்வீழ்த்து
முரிதாகியவுயிர்வானுறவொழியாதமர்செய்தார். (௯௫)

தண்டங்கொடுநிணமூளைகடசைமச்சைகள்சிதற
மண்டுங்கறையொழுகச்சிரமருமம்புயமெறிவார்
துண்டம்படவளர்கையொடுதுடையிற்றகவெறிவா
ரண்டந்தமதிட்டாம்வகையன்புற்றசின்மறவோர். (௯௬)

சிலர்கப்பணம்விடுவார்சிலர்திகிரிப்படைவிடுவார்
சிலர்வெண்மழுவிடுவார்சிலர்திரள்பாசமதெறிவார்
சிலரீட்டியினெதிர்வார்சிலர்திகழ்குந்தமொடெதிர்வார்
சிலர்கைச்சுரிகையினேர்குவர்சிலர்மல்லொடுபொருதார். (௯௭)

வேறு.

தகரொடுதகரெதிர்தாக்கினாலென
முகமுகஞ்சிதர்படமுட்டினார்சில
ரகமலியுவகையினழுந்தப்புல்லுறீஇத்
தகநெடும்புவிமிசைச்சாய்ந்துளார்சிலர். (௯௮)

முட்டியின்முறைமுறைகுத்தினார்சிலர்
கட்டியகையொடுகாறடுத்தனர்
கிட்டினர்செயல்களற்றொட்டிநின்றனர்
சுட்டியபெயர்தரவிட்டழித்தனர். (௯௯)

உரப்பியுநெருப்பெழவுருத்துநோக்கியுங்
கரப்பறவூக்கியுங்கனன்றுபோக்கியும்
பரப்பொளியெயிறிதழ்பதியவூன்றியு
நிரப்பியும்வஞ்சினநேர்ந்துளார்சிலர். (௧௦௦)

வில்லினிற்றூக்கியும்வெய்யநேமிபோற்
புல்லியசங்கினைப்பொருக்கென்றேச்சியுஞ்
சொல்லிசைப்படையெலாந்தொலையமெய்யுறு
வல்லயில்பறித்தும்வன்சமர்செய்தார்சிலர். (௧௦௧)

நாக்கடைநவ்விமுனண்ணினார்சிலர்
தூக்கிவன்னிலத்திடைச்சோரவெற்றியும்
தாக்கியுங்கவுளறத்தலைதிருக்கியு
மாக்கழற்சவட்டியுமலைந்திட்டார்சிலர். (௧௦௨)

கிட்டுதற்கருமையிற்கேழ்த்தவாளியா
லட்டொளிவேலினாலமர்ப்பவன்னவை
பட்டநெட்டுடன்மடற்பனைகள்போலவு
நெட்டையெய்போலவுநின்றவெண்ணிலா. (௧௦௩)

வாளினான்முடியறமறமருவுட
றோளினால்வாளினைச்சுழற்றிநேர்ந்தவ
ராளியோன்மறிதரவாகத்தோச்சுபு
தாளினானடிப்பனசகத்திரங்களே. (௧௦௪)

இற்றனமுடித்தலையிறந்ததோட்டுணை
யற்றனமணியுரமறுந்தவார்தொடை
யுற்றனபிடர்வெளியுதிரம்பாய்ந்தன
பற்றியவிருவகைப்படையின்வீரர்க்கே. (௧௦௫)

இலவெனமுருக்கெனவிணர்ப்பலாசெனக்
குலவினர்படைக்கலங்குளித்தவீரர்க
ணிலமிசையவற்றிடைநீங்கிவீழ்பழ
மலரெனநிணத்திரண்மலிந்தவெங்கணும். (௧௦௬)

வேகமள்ளர்கள்சினவிழிகள்சேத்தலிற்
றேகநின்றிழிகறைதேங்கிச்சேர்ந்தன
காகமுநாகமுங்கழுதுமன்றெனி
லாகுமோசெங்களமமர்க்குஞ்சூழலே. (௧௦௭)

வேறு.

கூம்புயர்கலங்கள்போலக்கொடியுயரிரதநெய்த்தோ
ராம்பெருநதியிற்சாலமிதந்தனவடர்பைம்பாசி
தாம்பயில்குன்றம்போலத்தந்திகளாழ்ந்தநீர்நா
யேம்பலுற்றெழுவபோலவிவுளியார்ந்தெழுந்தமாதோ. (௧௦௮)

பிணக்குவைவரையிற்றாழும்பெரும்புண்ணீரருவியாறு
யுணக்கருவதனங்கைகாலொளிர்விழிகமலமாவெண்
ணிணக்குவைநுரைகளாகநெடுங்குடர்பாசியாகக்
கணக்கரும்பேய்கடோயக்கதழ்ந்துபோய்க்கடலிற்பாய்ந்த. (௧௦௯)

மண்ணையின்சிறுசிறார்கள்வட்டமாமிதவையேறித்
திண்ணியவீட்டிக்கோலேசெலுத்திடுங்கோலாக்கொண்டு
கண்ணியகுருதியாறுகடந்திபக்கோடுகொட்டித்
தண்ணியகுடர்சூழ்ந்தியாத்துத்தனிவிளையாடல்செய்தார். (௧௧௦)

அழிமதக்களிநல்யானையடர்பழுவெலும்புவில்லாக்
கழிநரம்பெடுத்துவீக்கிக்காளையர்முதுகினென்பு
செழிகணையாகக்கோத்துச்செருவிளையாடாநின்றார்
குழிவிழியுயர்ந்தநாசிக்கொடியபேய்ச்சிறார்கடாமும். (௧௧௧)

வேறு.

பாற்றினப்பந்தரினிழலிற்குருதியினாற்றுகளவித்துப்பருக்கைமாவா
னாற்றிசையும்பெருவேலிகோலியழற்றவிசினிடைநண்ணிச்சில்பேய்
வீற்றிருப்பக்கரிக்காதின்விசிறியரிவாற்கவரிவீசிச்சில்பேய்
சாற்றியிடத்தோத்திரங்கள்சார்ந்துசிலபேய்துணங்கைதழுவாநின்ற. (௧௧௨)

முன்றிலகன்றறியாதமுதுபேய்க்குச்சிலபேய்கண்மூளைச்சோறு
மென்றசைமுன்னானவுபகரணமும்வன்கரிக்காதின்மிதப்பவிட்டுத்
துன்றுகுடராற்பிணித்துத்துதிக்கையிடைமுகந்தீர்த்தந்தோளிற்காவி
நன்றுபெயர்தரும்விழவேநாற்றிசையுஞ்சிறந்தனவந்நாமச்சூழல். (௧௧௩)

செங்களமின்னணஞ்சிறப்பச்செருப்புரியுமமையத்திற்றேவர்வாசப்
பங்கயன்மாலறியாதமல்லாலர்தமதுபடைபாழிமீக்கொண்
டெங்கணுமல்கியகமலாசுரன்படைவென்கொடுத்திரியவிறுத்தல்செய்த
தங்கதுகண்டுடைபடையையங்கையமைத்தவுணர்கள்கோனமரின்மூண்டான்.

சடைமுடியும்வக்கிரதந்தமுந்திரிதாடியும்பெருத்துத்தகநீண்மெய்யுங்
கடையுகத்துக்கனலனையசீற்றமுங்கால்புறங்கொடுக்குங்கவனமாவு
முடையகமலாசுரன்போர்க்குருத்தெழலுஞ்சிலர்நோக்கியூக்கமாய்ந்தார்
படைசிலர்கையிடைவீழ்த்தார்பறைந்தனர்சில்லோர்சிலரேபண்பினேற்றார்.

வேறு.

வருகமலப்பெயரவுணனிறங்கிளர்வடிபடைகைத்திரிய
வுருவவயப்பரியொருமுறைமண்டிலமுற்றதுமுற்றிமிகப்
பொருமிறைவன்படைவயவர்கருந்தலைபுவியினுருண்டனவாற்
குருதிமிமிர்ந்ததுகுடர்களலைந்தனகொழுநிணமல்கினவே. (௧௧௬)

அரியெனும்வண்டுபென்மலரினெழுந்துறுமதுவெனவல்லசுர
னரியுமெதிர்ந்தமர்புரியிரதங்களிறடல்கெழுவெம்புரவி
வரிகழன்மள்ளர்களெனுமிவர்தங்களைமண்டியுழக்கவவர்
நெரிதருசெவ்வியினிறைவனறிந்தெதிர்சென்றனனெய்தியரோ. (௧௧௭)

முன்னவன்முன்னலுமுன்னவனைப்புறமொய்த்தநெடுந்திறலோர்
துன்னியிரும்படைதுன்னருவண்மைதுலங்கவுணர்குதவ
வன்னவனுள்ளமழன்றுபளிங்குமுனன்பினளித்தமனுப்
பன்னினனூற்றினெடெட்டுருநீடியபன்னகம்விட்டனனே. (௧௧அ)

நஞ்சுபிலிற்றுமெயிற்றினராவுருநண்ணியனந்தமென
வெஞ்சலுறாதவராப்படைதேவனிரும்படைமேலடரா
விஞ்சுமுயிர்ப்பினுநஞ்சுமிழ்வெப்பினும்வீரியபற்களினு
மஞ்சவிழித்திடுபார்வையினுங்குரலார்ப்பினுமாய்வுசெய. (௧௧௯)

முக்கணராத்தொடைமுன்னவனேக்கிமுகிழ்த்திளமென்முறுவல்
சக்கரமங்கைமலர்க்கணிருந்ததுதன்னைவிடுத்தருளப்
புக்கஃதாயிரமாயிரமாய்ப்புரையோன்படைமுற்றுமறுத்
தக்கணமானவராவுமறுத்திறையங்கையின்மீண்டதுவே. (௧௨0)

அண்டருமஞ்சொருதண்டமெடுத்தவுணர்க்கிறைமேலணவத்
தொண்டருளத்தின்மலர்ப்பதம்வைத்தருள்சுந்தரனும்பெரிய
தண்டமெடுத்திவனூற்றலினெல்லைதனைத்தெரிகிற்றுமென
மண்டிநெடும்பொழுதாடமரேற்றுமகிழ்ந்தினிதாடினரே. (௧௨௧)

ஆர்த்தமர்வென்றிதனூதெனவண்ணலகன்மணிமார்பிடையே
வார்த்தநெடுங்கதைவிட்டனனஞ்சிமருண்டனர்வானவர்க
டேர்த்தனகைத்தொருசெங்கையமர்ந்தசெழுங்கதைமெய்ம்முழுதும்
வேர்த்தசுரேசனடுங்கவிடுத்துவிழுத்துகளாக்கினனே. (௧௨௨)

மாயவனங்கைபரித்திடுநேமியும்வாய்புதைத்தேவல்செயுங்
காயழனேமிவிடுத்தனனொட்டியகண்ணறுதானவனே
பாயநெடும்புவியோடுபிணங்கள்பதைப்பவெழுந்ததுநேர்
மேயதுநாதன்கரத்தமர்சக்கரமேவிவிழுங்கியதே. (௧௨௩)

வடவைநெடுங்கனலைத்திரள்செய்துவடித்ததெனக்கிளரு
மடல்கெழுசத்திவிடுத்தனன்விண்ணவராண்மையடக்கவுணன்
மிடல்கெழுதானவராண்மையடக்கியவித்தகனங்குசநேர்
தொடரவிடுத்தனனூற்றதனைத்துணிசெய்துமறிந்ததுவே. (௧௨௪)

செங்கனல்சிந்தவிழித்துமழுப்படைதீயவன்விட்டனனத்
தங்கமழுப்படைவேலையெழுஞ்சுடுகெஞ்சென‍மேலடரத்
திங்களிளங்கதிர்தங்குபொலஞ்சடிலச்சிவனார்மகனா
ரங்கைமழுப்படைவிட்டனர்நுண்டுகளாக்கியடுத்ததுவே. (௧௨௫)

பாசம்விடுத்தனன்மாசுகலந்துயர்பாதகனன்னதனை
யீசனடுப்பவறுத்தனனின்னணமேவியவெப்படையுந்
தேசவிரையிருகையின்விநாயகன்சிந்தலுநோக்கியவ
னேசலுறுவிமையார்கள்படைக்கலமேவமதித்தனனே. (௧௨௬)

வேறு.

வருணப்படைதொட்டான்வினைமலிதானவர்தலைவன்
பெருகுற்றிடுபுனலாயதுபெரிதெண்டிசைபோர்ப்பக்
கருணைப்பரன்கனலிப்படைகடிதேவினனதனைப்
பொருதட்டவுணனையுண்ணியபுக்குற்றதுமாதோ. (௧௨௭)

எங்குந்தழன்மயமாய்வருமெரியின்படைமீது
வெங்கட்டகுவர்க்கோன்வளிவேகப்படைவிட்டா
னங்கிப்படையுண்டெண்ணிலவசலக்குவடுதிர
மங்குற்கணமறியத்திசைமறுகப்புகுந்ததுவே. (௧௨௮)

அரவத்தொடையணியும்புயனரவப்படைவிட்டான்
பரவிப்பலபணியாயதுபடர்காலினைநுங்கி
யிரவத்திருளுருவத்தவனெதிர்நண்ணியதனையா
னூரனுற்றிடுகருடப்படையுறவூக்கினனதன்மேல். (௧௨௯)

வளைவாயுடையவுணன்பெருவடிவம்பலவாகி
யிளையாதெதிர்கருடப்படையெதிர்பன்னகமுழுது
முளையாவுயிரறவுண்டுமுன்னுறலுங்கலைமதியின்
முளைவார்சடையிறைவன்விடைமொய்யார்படைதொட்டான். (௧௩௦)

நந்திப்படையெதிரச்செழுநாசிப்பெருவளியாற்
சந்தச்சிறகொடியத்தடவளைவாய்க்குருகெல்லாஞ்
சிந்தத்தகுவர்க்கோன்றிகழ்மறலிப்படைவிட்டா
னந்தப்படைகண்டஞ்சியதயனார்படைவிட்டான். (௧௩௧)

பிரமப்படையதும்புடைபெயரப்பெருமாயன்
வரமெய்ப்படைதொட்டானதுமடியாதெதிரோடி
நரசிங்கமதுருவாயமர்நனியாடுதெனூக்கிச்
சரபப்படைதொட்டான்மறைதனைநல்கியதலைவன். (௧௩௨)

சிம்புட்படைசிங்கப்படைசென்றட்டெதிருறலும்
வெம்பித்தறுகணன்மூன்றுகண்விமலன்படைவிட்டான்
நம்பன்படைவரலுந்தெறுநாமச்சரபமுமீண்
டும்பர்க்கறிவரியானிடையுறநண்ணியதம்மா. (௧௩௩)

எண்டோளிறைபடையைத்தனியிறையுந்தொழுதய்த்தான்
கண்டார்வெருவுறவன்னதுகடவுட்படைசூழத்
தண்டாதுபல்கூளிப்படைதழலாதிகடோற்றிக்
கொண்டாடமர்புரிவுற்றதுகுறுகப்படையுடனே. (௧௩௪)

வரைசிந்தினதரைவிண்டனவறளுற்றனகடல்க
ணிரையுற்றபல்லுலகங்களுநீறாயினவவையின்
னுரைமல்கியவுலகாதியையொழிதானவரொழிய
விரையப்புதிதுண்டாக்குபுமீண்டுற்றனவவர்பால். (௧௩௫)

இறைவன்படைமேலாம்படையிலையன்னதும்விட்டா
மறைவல்லவனதுவுங்கெடயற்றப்படைதொட்டா
னிறையும்பெருவலியானிவனீங்குந்திறனில்லென்
றறையுங்கழலவுணன்களமகலப்புரமுற்ரூன். (௧௩௬)

மல்லாலருமவன்மாயையின்மறைந்தேகியதறிந்து
புல்லாதவனினிவந்திடுபொழுதெய்துதுமென்ன
வெல்லாமுனிவரும்வைகியவெழிலாச்சிரமத்தி
னல்லர்டவர்புடைசூழ்தரநணுகுற்றனரன்றே. (௧௩௭)

வேறு.

அந்தணனாகப்போந்தவண்ணலார்க்குருவமான
கொந்தொளியிரவித்தேவுங்கொடியவல்லவுணராற்று
மைந்துடைப்போரினீந்திவானெனுங்களத்தினீங்கிச்
செந்துவர்படர்ந்தமேலைத்திரைகடல்குளித்ததன்றே. (௧௩௮)

பெருந்திறலவுணர்தங்கள்பேருடல்வண்ணம்போன்றுந்
திருந்தலர்வஞ்சம்போன்றுஞ்செய்திடும்பாவம்போன்று
மிருந்தையின்பராகம்போன்றுமிருங்கரும்புகையேபோன்றும்
பொருந்திருண்மாலைக்காலம்புக்கதுபுவனமெங்கும். (௧௩௯)

மாலையோடடுத்துத்தாழ்ந்ததம்பியின்வதனநோக்கி
வேலையூடிருந்தசங்காசுரனவன்விளம்பலுற்ரூன்
காலைவாய்க்கண்டாற்போலக்காணவேவந்தாயில்லை
யாலைவாய்க்கரும்புபோலவகனெலாநைந்தாயன்றே. (௧௪௦)

மறங்கொடுவந்தோரெல்லாம்மலர்புறங்கொடுப்பக்கண்டாய்
புறங்கொடுத்தடுத்தலாண்மைபுல்லுமெவ்வீரர்மாட்டுத்
திறங்கிளருடலஞ்சாவாத்திண்வரமுடையையஞ்சின்
கறங்குதண்கடல்சூழ்வையங்கல்லெனச்சிரித்திடாதோ. (௧௪௧)

நொறில்படுகினதுமெய்யினுண்டுளிக்கறைமண்வீழிற்
செறிதுளிதோறுநின்போற்றிறல்கெழுவீரர்தோன்று
நெறிமிகவுடையைநின்னைநெடுநிலத்திழிப்பார்யாவ
ரறிவினுளயர்த்திநின்றணுண்மையையமர்வீக்கத்தால். (௧௪௨)

நினக்குளவரமென்பாங்கர்நின்றதேலெதிர்ந்தமாற்ரூன்
றனக்குயிர்கொடுத்துமீளுந்தன்மையுமுண்டாங்கொல்லோ
மனக்கவலையைநீமாற்றிவைகறையீங்குநின்ற
வினைக்கருஞ்சேனையோடுமேகுதிபோருக்கென்ரூன். (௧௪௩)

அடிகளிங்குரைத்தவாறேயமர்செயச்செல்வலென்று
தொடிபொலிதடக்கைகூப்பித்தொழுங்கமலாசுரன்ரூன்
விடியலின்வரவுநோக்கிவிழிதுயின்றிலன்மற்றிப்பா
னெடியவனறியாநாதனிலைமையுமுரைப்பக்கேளாய். (௧௪௪)

கார்வளர்மாலைதன்னிற்காதலர்வரவுநோக்குஞ்
சீர்வளர்மடவார்போலச்செருக்களத்திசையேநோக்கு
நார்வளர்முனிவர்முன்னர்நம்பிரானண்ணலோடு
மார்வமிக்குடையராகியவரெழுந்திறைஞ்சிநின்ரூர். (௧௪௫)

கரிசறுதவங்கள்சான்றகவுதமராதியான
வரியமாதவரைநோக்கியகிலமுநொடியினீற்றும்
பெரியமல்லாலரென்னும்பிஞ்ஞகர்குய்யந்தாங்கி
யுரிமையின்மனஞ்சோதிப்பவொருமொழியுரைக்கலுற்ரூர். (௧௪௬)

நலிவுசெய்தகிலமெல்லாநண்ணியவனசப்பேரான்
வலியினிற்பெரியன்கண்டீர்வகுத்துநாம்புரியாநின்ற
வொலிகெழுபோருக்கெல்லாமுடைந்திலன்சமப்போர்செய்தான்
கலிகெழுநமதுசேனைமுழுவதுங்காதினானே. (௧௪௭)

இலகியசுத்தவீரனெனப்படுமவனையொப்பா
ருலகமூன்றிடத்துமில்லையெனவுரைத்தருளக்கேட்டுக்
கலவியவன்புபொங்கக்கவுதமனென்னுந்தூயோ
னலகில்பேரறிவன்செய்யவடிமலர்வணங்கிச்சொல்வான். (௧௪௮)

எம்பிரான்படைகளெல்லாமிறந்தனவெனவல்லாத
வும்பரார்முதலோர்போலவுரைப்பதெனினதுநோக்கா
லிம்பரார்மகிழவெல்லாமீண்டினநினதுபாங்கே
பம்பியவாறேமீண்டுமொடுங்கினபரமானந்தா. (௧௪௯)

இன்னுநின்புருவங்கோடினீண்டுவவேண்டுஞ்சேனை
யன்னதன்றாயினென்னையருளினாற்பணித்தான்மாய்ந்த
நன்னர்நம்படையையெல்லாநலத்தகவெழுப்பிவேண்டுங்
கொன்னெடும்படையும்வேறுகுயிற்றுவலடியேனென்றான். (௧௫0)

வள்ளலாரதனைக்கேட்டுவறிதிளமுறுவறோற்றித்
தெள்ளியமுனிவர்தங்கள்செவிபுகவிளங்கச்சொல்வா
ருள்ளதேயுரைத்தாய்நந்தமுறுவலியாதிமுற்றும்
பள்ளநீருலகில்யாரும்பார்த்திடத்தோற்றினேமால். (௧௫௧)

கோதறுநினக்குமேலாங்குறுமுனிதனக்குநோற்றுக்
காதரமிரித்தகாட்சிக்கசியபன்றனக்குமேனைத்
தீதறுமுனிவர்தம்மிற்சிறந்தவர்தமக்குநந்த
மேதகுமருளாலாக்கலாதிமேவினவேயானும். (௧௫௨)

ஏகனென்றியம்பப்பட்டவிறைவனாகியநாமேமுன்
சோகமுற்றழுந்தநந்தந்தொகுபடையெழுப்பிக்கொண்டு
காகமுநரியுமொய்த்தகளத்திடையவுணன்றன்னை
மாகமும்புவியுமேத்தவாட்டுதுமென்றுகூறி. (௧௫௩)

விளங்கியவமுதசஞ்சீவினியெனுமந்திரத்தை
யுளங்கொளப்புகுந்துதெண்ணீரொண்கரத்தள்ளித்தூவித்
துளங்கிமாய்சேனையெல்லாந்துகளறவெழுப்பிவேறும்
வளங்கொணூற்படைகள்யாருமகிழ்கொளப்படைத்துப்பின்னும். ()

உறுவரார்முகத்தைநோக்கியுறுவலியசுரன்றன்னைத்
தெறுதகுசூழ்ச்சியாதுசெப்புகவென்றார்கேட்ட
மறுவறுமுனிவரெல்லாம்வரதநீமுழுதுந்தேர்வை
சிறுவரேம்யாதுதேர்ந்தேஞ்செப்புதற்கடிகளென்றார். (௧௫௫)

கட்டுரைத்திடுவார்தம்முட்கார்க்கியமுனிவன்சொல்வான்
மட்டவிழ்கொன்றைமாலைவள்ளனின்னருளால்யாமு
முட்டறக்காலமூன்றின்முகிழ்த்திடுசெய்தியெல்லா
மொட்டிநன்றறியுஞானமுற்றனமாதலானும். (௧௫௬)

நாதவிங்கெம்மைநோக்கிநவிற்றுகசூழ்ச்சியென்ன
வோதலினானுநாயேனுரைக்குவனுவந்துகேண்மோ
பாதகனவுணனைப்படர்குவன்களத்தன்னானை
வீதல்செய்திடுதற்கூர்திமேல்கொளவேண்டுமற்றால். (௧௫௭)

இன்றொருவேள்விசாங்கவுபாங்கமோடியற்றியிட்டான்
மன்றவவ்வேள்விதன்னின்மயிலொன்றுமலைபோற்றோன்றி
நின்றிடுமதனையூர்ந்து நபலனுவியுண்ண
வென்றிகொளிறைவநாளைவிழுக்களஞ்சேறியென்றான். (௧௫௮)

கார்க்கியமுனிவன்கூறக்கருணையெம்பெருமான்கேளா
வோர்க்குநின்னுளமுநந்தமுளமுமொன்றுனவாற்று
லார்க்குநல்லவியின்வேள்வியாற்றுதுமதற்கெல்லீருஞ்
சேர்க்கும்வண்பொருள்களீட்டித்திருப்பணிசெய்கவென்றான். ()

மண்டபநூலினூற்றால்வகுத்தனர்சில்லோர்சில்லோர்
குண்டமண்டலங்களாதிகுயிற்றனர்சில்லோர்வேள்விக்
கெண்டகவிதித்தவெல்லாப்பொருள்களுமீட்டியிட்டா
ரண்டர்கள்பெருமானுருமழலினைவளர்ப்பாராகி (௧௬௦)

சித்திபுத்திகளைச்சாரச்சிந்தையினினைந்தாரந்த
வுத்தமமடந்தைமார்களோய்யெனமருங்குபோந்தார்
பத்தினிமாதரோடும்படர்பெருந்தீர்த்தமாடி
வித்தகதீக்கையுற்றுவேள்விமண்டபத்தைச்சார்ந்தார். (௧௬௧)

வேள்வியுந்தானேவேள்விவினைமுதற்பொருளுந்தானே
வேள்வியின்பயனுந்தானேவேள்வியின்பயனைநல்கு
மாள்வினைமுதலுந்தானேயாமெனவகிலந்தேற
வாள்விடுமழலின்வேள்விவகுத்தனராகமத்தால். (௧௬௨)

பொங்கழலவிகளட்டுப்பூரணாகுதியுஞ்செய்தா
ரங்கதிற்கலாபத்தோடுமணிமயிலொன்றுதோன்றித்
திங்களுமுடுவுஞ்சிந்தத்திசைக்கரியெட்டுமஞ்ச
வெங்கணுஞ்செவிடுகொள்ளவிசைத்ததுகேகாவென்று. (௧௬௩)

பாதலத்துரகரோடுபடர்விசும்பிரண்டுகோள்க
ளோதலையுற்றுவையநுங்கிடரகற்றவந்த
நாதனுக்கூர்தியாகுநன்மையாலினையமஞ்ஞை
யேதமிங்கெமக்குச்செய்யாதெனத்தெளிந்துவந்தமாதோ. (௧௬௪)

மண்டலத்தடிகண்மாறிமாறிவைத்திடுந்தோறந்தத்
திண்டரைபரிக்குஞ்சேடன்சிரமெலாநெரியவேலை
கொண்டதம்வரம்பினீங்கக்குன்றுகணடுங்கவாடுங்
கண்டிகழ்கலாபமஞ்ஞைகாதலினிவர்ந்தார்நாதர். (௧௬௫)

கருவிகளைந்தும்வானிற்கறங்கினவமரர்சிந்து
மருமலர்மழையான்மண்ணுமறைந்ததுமுனிவரெல்லா
மருண்மயூரேசரென்னவறைந்தனரமலனுரும்
பெருகியகருணைநாட்டம்பெரிதவர்க்கருளினாரே. (௧௬௬)

வருமயூரேசரென்னவழுத்தினர்மதித்தோரெல்லா
மொருவிவல்லிடர்கண்முற்றுமோங்கியசெல்வம்பெற்றுத்
தருவெனவழங்கிவேதசாத்திரசம்பத்தோடு
மிருநிலத்திருந்துபின்னரெய்தருமுத்திசேர்வார். (௧௬௭)

பிணிமுகத்திவர்ந்தநாதன்பேரெழில்கண்டுபோற்றத்
தணிவறுங்காதலோடுசார்குவான்போலவெய்யோ
னணிமணித்தேர்கடாவியாழியினெழுந்தான்முன்போற்
கணிதமில்சேனையோடுகளத்திடையவுணன்போந்தான். (௧௬௮)

பின்மயூரேசர்தேவர்பெருந்தவமுனிவர்க்கெல்லா
நன்மையைக்கொடுத்துச்சார்ந்தநற்கமலாசுரர்க்கு
வன்மலமகற்றிமுத்திவழங்கவுமுளத்திலெண்ணிக்
கொன்மயிலோடுமுன்போற்கொலைக்களஞ்செலவெழுந்தார். ()

எழுந்தருடலைவர்பாதமெதிருறவணங்கிநின்று
செழுந்துவர்ப்பவளச்செவ்வாய்ச்சிற்றிடைப்புத்தியென்பா
ளுழுந்துகண்ணடியினின்றுமுருளுமுன்சேனையெல்லாம்
விழுந்திடநிலத்தில்வென்றுமீள்குவனருள்கவென்றாள். (௧௭0)

சுந்தரமிகுந்தாளாகிச்சுடர்மணியணிந்தாளாகி
யெந்தநல்வடிவும்வேண்டினெடுத்திடவல்லாளாகி
யுந்துதேசுடையளாகியுரிமையுமுடையளாகிப்
புந்திகூர்ந்தவளுமானபுத்திகூறியசொற்கேட்டு. (௧௭௧)

மாமயிலேறியானவன்கதாயுதரிசைந்து
நாமவன்படைகளுன்குநாடியகருமசித்தி
யாமணியுருவுநல்கியருட்பெருவிழியானோக்கிப்
பூமலிகுழலினாளைப்போர்க்குவிட்டிருந்தாரன்றே. (௧௭௨)

பாங்கியர்தாமுந்தானும்படரொளிவிமானத்தேறித்
தேங்கியகடலேபோலுஞ்சேனைகண்மருங்குசூழ
வீங்கியவுருமுக்காட்டும்விசிமுரசாதியார்ப்ப
வோங்கியதுவசமாடவொய்யெனக்களத்துச்சென்றாள். (௧௭௩)

தூதுவரடுத்துச்சங்காசுரனிளவலைமுன்றாழ்ந்து
மூதுரைமறைகள்சாலமொழிந்தமல்லாலனில்லின்
மாதுவந்தனள்போராற்றமாதெனவவளையெண்ணேல்
காதுவளுலகமுற்றுங்காணவும்வல்லளென்றார். (௧௭௪)

வெருவருஞ்சேனைமாண்பும்வீரமோடடுத்தபுத்தி
யுருகெழுவனப்புசான்றவூக்கமுமெதிரேநோக்கிப்
பெருமகிழ்வுடையனாகிப்பிறங்கியவசுரர்கோமா
னருகுறுந்தலைவர்தம்மையணிவகுத்தேகவிட்டான். (௧௭௫)

போரளாவியவேல்வாட்கட்புத்திதானவன்பானின்ற
சூரராண்மையினைநோக்கித்துண்ணெனநொடிக்குமுன்னர்க்
கோரராயண்டகோடிகுமைக்குமாற்றலின்மேம்பட்ட
வீரரானவர்பல்லோரைமேதகப்படைத்துவிட்டாள். (௧௭௬)

கருநிறத்தவுணன்சேனைகருவிகளனைத்துங்கொண்டு
பொருதனபுத்திபின்றபோர்த்திறல்வீரரிந்தச்
செருவினர்தமக்குமாய்தஞ்செலுத்துதல்வேண்டுமேயென்
றொருவினர்கருவிதங்களுருவினுலுடற்றப்புக்கார். (௧௭௭)

வேறு.

வரையொடுவரைக்கடவுளர்பலர்வருகுவதெனவிரத
நிரையொடுநிரைபடுகரியொடுநேர்ந்தனர்சிலரவுணர்
திரையொடுவெருவடவைகளெனச்சிலர்பரியவுணர்கணோர்ந்
துரையொடுபொருதனர்விடமெனவொழியவுணருநேர்ந்தார். ()

முடியினுமழலழல்சிதறிடமுனியிருவிழியினுங்கைப்
பிடியினுமுயிரினுமுகிரினும்பிறையெயிற்றினுநீண்ட
வடியினுமிருதுடையினுமுரமதனினும்புயத்தினுமெய்
வடிவினுமமர்நடவினரருள்வடிவுகொண்மகள்வீரர். (௧௭௯)

வழங்கியபடையுடனுறுமுனம்வண்கையினவைபிடியாத்
தழங்கினரெதிர்வழங்குனர்சிலர்தரையிடுகுநர்சிலர்கள்
விழுங்குனர்சிலர்விளிக்குநர்சிலர்விழுத்துகள்படவுடலேற்
றெழுங்குறநடமிடுகுநர்சிலருயரியகணவீரர். (௧அ௦)

நெட்டுடலிபமத்தகமறநெடுகுகைகரம்பிடியா
முட்டுவித்துயிர்முனிந்தனர்சிலர்முதிர்மணியிரதங்கள்
பட்டனர்சிலரவைகொடுபரியவைகொடுசிலரட்டார்
கட்டியகழலவர்களையவர்களினழித்தனர்சிலரால். (௧அ௧)

விண்ணிடையெழவுந்துவர்சிலர்வியனுறுபடைநான்கு
மண்ணிடைவிழவூக்குவர்சிலர்மண்ணிடைவிழுவித்தே
நண்ணடிகொடுசவட்டுநர்சிலர்நனிபலதலைதிருகி
யண்ணலினவைதொடைப்படவுரமணிகுவர்சிலர்பூதர். (௧அ௨)

காரினமுழங்குவதெனவிகல்கரியினநனிபிளிற
வீரியவரியெனவொருகையின்விரைகமழ்கவுளெறியா
வாரியவுலவைகளொருகையின்வாங்குவர்சிலர்சிலர்மண்
சோரிகளுகவீரரைமடிதுணைக்கரநனிபிழிவார். (௧அ௩)

இத்திறமமர்புத்தியினருளெய்தினர்புரிகாலை
மைத்தமெய்யவுணர்கண்மறமிகவளர்தரவெழுமழுவாள்
வைத்தபல்லயில்கதைசிலைவளைமற்றுளபடைகளினு
மெத்திசையினுநிணமுகவுடலிறவமர்நடவினரால். (௧அ௪)

இருபடையினுமளவிலருயிரெய்தினர்நெடுவான்
மருளுருவினள்வயவர்கள்வலியழிதரவிரிவுற்று
றொருவருநிகரரியவள்படையுடைதலும்விழிசேப்ப
வெருவுறநனிசினவினளதின்மேவினனொருவீரன். (௧அ௫)

வேறு.

முடிநெடுவான்முட்டமொய்ம்புமாதிரங்களீண்டப்
படிமுழுதெடுத்துமாந்தும்படர்பெருஞ்சீற்றத்தோடும்
வடிநெடும்படைகளோடும்வந்தெழுவீரவீர
னடிமலர்வணங்கிப்போற்றியன்னையைவினவலுற்றான். (௧அ௬)

என்னையீன்றெடுத்ததாயேயெந்தையார்யாங்கணுள்ளா
னன்னவனியல்புமன்னானிடத்தையுமறைகவென்றான்
கன்னியாயுலகமுற்றுங்கடிகையினுக்கிக்காத்துப்
பின்னருமொடுக்குமாண்மைப்பிராட்டிதன்மகற்குச்சொல்வாள். ()

மைந்தனேயுரைப்பக்கேளாய்மாதவர்பலரும்வைகுஞ்
சுந்தராச்சிரமமென்றோர்சூழலிங்கடுப்பவுண்டா
லந்தவாச்சிரமக்கீழ்சாரமரர்கண்முனிவர்போற்ற
நுந்தைவீற்றிருக்கின்றானோர்நொறில்வளர்மயிலின்மீது. (௧அ௮)

திருவுருத்தேசுநோக்கிச்செங்கதிரொளிமையாக்கு
மொருபுடைசித்தியென்னுமொண்டொடிமடந்தைவைகும்
பொருவறுமனையாண்முன்பூத்தபுன்னகையிற்றோன்றும்
வெருளறுகாட்சிசான்றவிசையனுமிடப்பால்வைகும். (௧அ௯)

ஐயிருகரமுமந்தக்கரங்களினட்விற்சான்ற
வெய்யவையிரட்டியானவிழுப்படைக்கலமுஞ்சேர்க்கு
மையறக்காண்டியென்றுவகுத்தனளன்னைகேட்டு
வையகமுய்யவந்தவமைந்தனுங்கேகினானே. (௧௯௦)

அடியறுமரம்போற்றந்தையலர்புரைபதத்தின்முன்ன
நெடிதுவீழ்ந்தெழுதலின்றிநிலத்திடைக்கிடப்பநோக்கி
முடிவறுமகிழ்ச்சிபொங்கமுனிவரர்குழாத்தைநோக்கி
மிடியிடரொருங்குநீத்தவிநாயகரருளிச்செய்வார். (௧௯௧)

துங்கமாதவத்தீரிந்தத்தோன்றனம்புதல்வன்கண்டீ
ரிங்கிவன்றன்னுங்கட்கிலாபங்களனைத்துமெய்து
மங்கதுதன்னாலிந்தவாடவற்கிலாபனென்ன
வெங்கணுமெந்தனான்றுயிரும்பெயர்நடக்கவென்றார். (௧௯௨)

இருடியர்கேட்டெல்லோருமிலாபனென்றியம்பித்தாழ்ந்தார்
பெருகியகருணைநாதர்பின்புதன்மகனார்தம்மை
யிருநிலத்தெழுப்பிவன்போர்க்கேகுமாகடைக்கணித்தா
ரருட்டலைக்கொண்டிலாபனமர்க்களங்குறுகினானே. (௧௯௩)

குறிப்பறிந்தமர்க்குச்செல்லுங்கொற்றவேற்குமரனூற்ற
னெறிப்படக்காண்டுமென்றுநிமலரும்பின்னேசென்றார்
செறிப்புறுமைம்பத்தாறுயிரர்செருத்தலைவர்சூழ
நொறிற்படையிடையேநின்றவிலாபனைநோக்கித்தீயோன். (௧௯௪)

எற்றுக்குவாளாவாவியிழக்கவிங்கடுத்தாய்விட்டேன்
பற்றுதற்புத்திவிட்டுப்பாழியிற்செல்கவென்றான்
மற்றவனுரைக்குமுன்னம்வலிமலியிலாபன்சீறி
யிற்றிடவவுணர்சேனையிடைப்புகுந்துழக்கலுற்றான். (௧௯௫)

வேறு.

வரிசிலைகுனிதரவளிருபுருவமுமணிநுதன்மிசைவளையத்
தரியலர்குழுவிடையொருமுறைசுழலுபுசரமழைபொழிதொறுநீள்
கரிபரியிரதமும்விழுவனவயவர்கள்கரமுடிபுயமவுலி
யிரிவனவுரமரையிறுவனகுடர்நிணமிகுவனவளவிலவே. (௧௯௬)

கடவுளர்பணிபுரியிறையவனொருமகன்கரதலம்விடுபகழி
யடர்படையவுணர்களுடலமுமவர்விடுமயில்வளர்படைபலவுந்
தடநெடுநிலம்விழவடுவனசிலசிலதரைகிழிதரவுருவி
விடவரவுலகுறுவனசிலதிசைதிசைவிலகுவசிலசிலவே. (௧௯௭)

கடவுளரனைவருமிடரினியொழிவனகதுவுவசுகநமையென்
றடர்மகிழ்வுறவிறையவன்மகன்விடுகணையவுணர்கள்கரமுடிதோள்
வடவரைமுதலியவரைகடலிரவிவெண்மதியுலகவைமுதலா
மிடமகலுலகுதொறிடுவனபலமுறையெளிதுறவுடன்கொடுபோய். ()

வயவவுணர்கள்கடவுளரெனவுயர்கதிமருவுறவுடல்கடியுஞ்
சயமலிகணபதிமகன்விடுபகழிகடகுவர்கண்மனைவியரும்
வியனரமகளிர்களெனவவருறுமிடம்விரவுறவவர்மனைவாய்ப்
பெயரெழுதியவிரலணியொடுகரமுடிபெரிதிடுவனபலவே. (௧௯௯)

இரைநனிபலமுறைநிணமிறையவன்மகனெறுழ்பில்விடுதலினால்
வரையுறையலகையுமரிபுலிமுதலவுமருவியவிடமொழியா
விரைகமழ்வனமுறைகழுகுகண்முதலவும்வியனெடுபணைநரிநீள்
குரைஞமலியும்வளைகடனிலமருவியகொடிகளுமனையனவே. (௨௦௦)

வேறு.

இன்னவாறுவிநாயகனீன்றகுமைந்தன்மாக்கள
முன்னியாடல்புரிந்தனன்மொய்ம்புளார்பலர்மாய்ந்தனர்
கன்னியாண்மையினார்சிலர்கதுவுமாருயிர்சோர்ந்தன
ருன்னியாருயிர்காக்குமாறோடினார்சிலர்தானவர். (௨௦௧)

படையழிந்திடநேர்வரும்பாழியங்கமலாசுரன்
கடையுகக்கனலஞ்சிகைகாட்டுமானனநோக்குபு
விடையுயர்த்தவன்மகன்மகன்விளங்கநக்கெனதாண்மையை
யிடையறத்தெரிந்தாய்கொலோவென்றுபின்னிதுவுஞ்சொல்வான்.

மைந்துளாயெனநின்னையான்மதித்துவிட்டுளனென்றுநீ
சிந்தைசெய்கலையெந்தைதோட்டினவடங்கிடநாடியே
நந்தவிட்டுளனின்றுகொணுனைகொல்வளர்படைவிடச்
சுந்தரந்திகழ்நினதுடனொலைவதெந்தையினறிமதி. (௨0௩)

என்னொடும்பொரவல்லையேலெற்றிருஞ்சமராடுதி
யென்னலுங்கமலாசுரனிவனையத்திரசத்திர
மென்னவற்றினும்வெல்லலுமிறுத்தலும்மரிதாமென
முன்னியாவருநீக்கருமோகவான்படைதூண்டினான். (௨0௪)

எற்றிருஞ்சமராடுறுமிலாபன்மாட்டுறவஞ்சியவ்
வாற்றலம்படையேனையோரானவீரர்தமக்கெலா
மாற்றருந்தனியறிவெலாமாற்றிவன்பெருங்கேவலத்
துற்றமுற்றிடுநாளெனவுறங்குவித்துடனின்றதே. (௨0௫)

வேறு.

எண்குணச்செல்வனுமவ்வயினிலாபனைச்சோதிக்கவெண்ணுபு
திண்படையாற்றனதறிவெலாந்தீர்ந்தவன்போல்விளையாட்டினாற்
கண்படைகொண்டனனிலாபனக்காரியமொன்றுமறிந்திலன்
வண்படைசேர்கமலாசுரவன்கணனோடமரேற்றலின். (௨0௬)

ஏறுபெரும்படைமாய்ந்ததுமிலாபனொருத்தனுமோகமே
வீறுபடைக்கழிவின்மையும்வெய்யவனோக்கிவியந்திவன்
மாறுபடும்வலிகாற்றுதும்வண்சமரிற்றனியாமெனத்
தேறுபுசத்திரவத்திரச்செறிபடையோடமரேற்றனன். (௨0௭)

வாளிவழங்கியிலாபனைமறைக்குவன்வண்கமலாசுர
னாளியன்னானும்பல்லம்பினாலன்னவனம்பையறுத்தவன்
றோளினுமார்பினுந்தாளினுந்தொடையினுங்கோல்கடுறுத்துவன்
மீளிலாராயயிலாதியும்விடுத்துவிலக்குவரிருவரும். (௨0௮)

விண்ணிடைச்சென்றமராடுவர்வேலையிற்சென்றமராடுவர்
திண்ணியபாதலமுழுவதுஞ்சேர்ந்தமராடுவரெண்டிசை
நண்ணியபோரொடுமெய்துவர்நவிற்றியபோர்கணடாத்துவர்
பண்ணவர்படையுநடாத்துவர்பங்கமில்லாததிறத்தரே. (௨0௯)

தேவர்கடேவனிரும்படைதிண்படைமோகமறைத்தவி
னேவினவண்சமர்நேரமருனாற்றுநரின்மையினுள்ளுயிர்
தாவினவொழிதரநின்றிடுந்தானவப்படையுமுறங்கின
சேவகராமிருவோருமேசேர்ந்தமராடினரென்பவே. (௨௧0)

செருவிருவோருமிவ்வாறறுதிங்களிராப்பகல்செய்தனர்
கருதலனுங்கமலாசுரன்கையிணைநொந்துகருத்துநொந்
திருபதநொந்துடன்முற்றுநொந்தெய்த்தினிப்போயிளைப்பாறியே
யொருவரும்போர்க்குறுவாமெனவுன்னியுடைந்தொளித்தானரோ.

புறங்கொடுத்தோடியபுல்லியன்போர்க்குறினாவியோடன்னவன்
றிறங்கெடுப்பாமெனவெண்ணுபுசெருக்களநீங்குமிலாபனங்
குறங்கியதன்படையோடுமற்றொருபுடைமுனிவர்சூழாத்துட
னறங்கிளர்தந்தையுறங்கியவதிசயமுந்தகநோக்கினான். (௨௧௨)

வேறு.

அதிசயமென்னேயீதோரதிசயமிருந்தவாறு
கதிசெயுமுயிர்கட்கெல்லாங்காழ்மலமோகங்காற்றி
மதிசெயலனைத்துநல்கும்வரதனுமேனையோர்போற்
பதிசெயும்படையினுற்கண்படுக்குமேயாவாவென்றான். (௨௧௩)

மருந்திதுதனக்குக்கண்டேன்வருந்துவதில்லையென்று
விருந்துகண்டவர்போலோகைவிராய்விநாயகர்நாமத்தைத்
திருந்தநூற்றெட்டுவெட்டஞ்செய்துநீரள்ளிவீசிப்
பொருந்தவன்னுமமெல்லோர்செவியினும்புகுமாசொன்னான். (௨௧௪)

உபாயமோரிரண்டினுனுமுறக்கியபடைவிட்டோடச்
சபாவலங்காரமானதம்பிரான்றவிரவேனை
யபாயமில்லாதவீரருந்தவரவர்களெல்லாஞ்
சுபாவமாயுறங்கினர்போலெழுந்தனர்சோர்பினீங்கி (௨௧௫)

இலாபன்மற்றதனைநோக்கியிருடியர்ப்பார்த்துச்சொல்வான்
கலாபமாமயிலானிங்கேகண்படைகொள்ளுங்காட்சி
கிலாவியபடையாலென்னினீள்படையுடைந்துபோயுஞ்
சுலாவுமென்னெஞ்சமோகைதன்னுறவிழித்தானில்லை. (௨௧௬)

ஆதலாலவுணன்விட்டவரும்படைமோகமென்றே
நாதனர்தமக்குமோகநண்ணுவதுளதாங்கொல்லோ
வேதமேதோவென்பாங்கரிருத்தலாலெழாதமோகஞ்
சோதனையாகக்கொண்டான்றென்முனிவீர்கள்காண்மின். (௨௧௭)

என்னையுநமையுமெல்லாச்சகத்தையுமோகிப்பிக்கு
மன்னவன்றன்பாற்சார்தற்கஞ்சுமோகாத்திரத்தாற்
றுன்னுநித்திரைகொண்டான்போற்றோற்றிமூவிரண்டுதிங்க
ளின்னிலையிருந்தானென்றுலென்னினியுரைக்குமாறே. (௨௧௮)

பொருவருமுதன்மைசான்றபூரணன்கடைக்கணல்குந்
திருவருள்கொண்டுமோகத்திண்படைபொடித்தல்செய்தேன்
பெருவலிப்படையைவிட்டபெற்றியான்றனையுந்தீராச்
செருமிகவிழைத்துக்காணுத்தேயத்திலிரித்துவிட்டேன். (௨௧௯)

நுங்களைப்பிழைத்தமோகநொறிற்படைதொலைத்ததந்தோ
நங்களையாளுமிந்தநாதனோர்நாமமென்று
லங்கவன்மோகங்கொண்டதறியினோர்விளையாட்டன்றே
யிங்கிதுகாண்பலென்னவிலாபனோர்சூழ்ச்சிசெய்தான். (௨௨௦)

சுந்தரவுடலைமாய்ப்பத்துணிந்தவீரரைநேர்நோக்கிச்
செந்தழல்வளர்க்கவென்றான்செப்புமுன்வளர்த்தார்பின்பு
தந்தையையுலவாவின்பத்தலைவனையுளத்துளெண்ணி
வெந்திறல்வினைகடீர்க்கும்விநாயகநாமஞ்செப்பி. (௨௨௧)

மும்முறைவலமாய்ப்போந்துமுழங்கெரிபாயும்போது
விம்மிதவுறக்கங்கொண்டவித்தகர்வஞ்சநீக்கித்
தம்மகன்பத்திநோக்கித்தழலிடைவீழேலென்னுச்
செம்மலரங்கைகாட்டித்திருமுகமலர்ந்துசொல்வார். (௨௨௨)

பத்தியிற்பெரியோய்நின்றன்படர்மனஞ்சோதித்திட்டா
முத்தமவரங்கேளென்றுருவந்தெதிர்வணங்கிமைந்த
னத்தனேநினதுகாட்சியடியனேன்மனமுங்கண்ணுங்
கைத்தலக்கனிபோனுளுங்கைக்கொளவேண்டுமென்றான். (௨௨௩)

முவ்வுலகிறைஞ்சியேத்துமுதல்வனார்கருணை தன்னா
லவ்வரமகற்குநல்கியடுபடைத்தலைவரான
செவ்வியவீரர்க்கெல்லாந்திருவருட்பார்வைகாட்டி
வெவ்வினைதெறுமென்சொல்லால்வியப்பவாதரவுசொன்னார். (௨௨௪)

துந்துமியைந்தும்வானிற்றுகளறவியம்பாநின்ற
வந்தரர்நெருங்கிப்பைந்தேனலர்மழைசொரிந்தாரெங்கு
மந்தமாருதம்வீசிற்றுமலிபுனறெளிந்தநாதர்
சுந்தரவடியிற்றாழ்ந்து துதித்தனர்முனிவரெல்லாம். (௨௨௫)

எம்பிரான்செயலீதாகவிரிந்துபோமசுரர்கோமான்
பம்புநால்வகையினுண்டிபலரொடுமிசைந்துதேறல்
வெம்புநீர்மிதப்பமாந்திமெய்யுறுவருத்தநீங்கி
நம்புநாற்படையினோடுநண்ணினன்களத்திலம்மா. (௨௨௬)

தரைநெளிப்பரப்பமுற்றுந்தானவச்சேனையான
கரையழிகடலைநீற்றக்கதித்தெழுவடவைபோல
விரைசெறிகொன்றைமாலைவிநாயகர்தும்பைசூடி
வரையெனவயிர்க்குநீலமயிலிவர்ந்தூர்ந்தாரன்றே. (௨௨௭)

மரகதவிலங்கற்பூத்தமாணிக்கக்குவட்டின்மீது
விரவியதிங்கள்போலவெண்குடைநிழற்றப்பாங்கர்ப்
பரவியவருவியென்னப்படரொளிக்கவரிதுள்ளப்
புரவியலருவியோதைபொரவிருதெழுந்ததம்மா. (௨௨௮)

ஆர்த்தனபணிலந்தாரையார்த்தனமுருடுபேரி
போர்த்தனவமரர்சிந்தும்பூமலர்மண்ணும்விண்ணுங்
கூர்த்தனமருங்குசேனைகொடிதுவன்றினவேரம்பன்
வேர்த்துளமருளவொன்னார்வியன்கணத்தடுத்துநின்றான். (௨௨௯)

கண்டனனவுணர்கோமான்கனன்றெழுசீற்றமுள்ளே
கொண்டனனுரைக்கலுற்றான்குருவிமேல்கொண்டகாளா
யண்டமுமுடைக்குந்திண்டோளாண்மையேனொடுபோராற்ற
நுண்டலைப்பறவையூர்ந்தோநோன்மையைச்சாரவல்லாய். (௨௩0)

மோகவான்படையைத்தொட்டுமுன்பமர்புரிந்தோர்தம்மை
வேகமாறிடவேகட்டிவீழ்த்தினன்பலரைக்கொன்றே
னேகனாய்நினையுமென்கையெஃகினாற்பிளப்பெனன்றே
சோகம்வானவர்களெய்தச்சுண்ணஞ்செய்திடுவேன்கையால். (௨௩௧)

இன்னுமென்னாற்றல்சற்றுமெண்ணினையல்லையூக்க
மன்னினையாகில்வல்லேவண்சமர்புரிகவென்றான்
துன்னியமதத்தாற்கூறுந்துன்னலன்முகத்தைநோக்கித்
தன்னிகரில்லாநாதன்றண்ணியவருளாற்சொல்வான். (௨௩௨)

திருவிளையாடலாகத்தேவாதியரையோம்ப
வருநமதவதாரத்தின்வாய்மைநீசிறிதுந்தேரா
யருளிலிநின்னைப்போல்வாரநேகரைக்கொன்றாஞ்சாட்சி
தெருளுகந்தொறும்வெவ்வேறுசெப்பிடப்படுமென்நாமம். (௨௩௩)

வக்கிரதுண்டனென்றும்வயங்கியசுமுகனென்றுங்
கைக்கனிபோல்வானல்குங்கசானனனென்றுந்தாவா
விக்கினராசனென்றுமேவியவிநாயகன்யா
னிக்களத்துன்னைக்கொல்லவெறுழ்மயூரேசனானேன். (௨௩௪)

முட்டியமுதனுட்போரின் முகம்புறக்கிட்டுப்போனுய்
துட்டருக்கரசநந்தந்தோன் றலஞ்சிறுவன்ருக்க
விட்டிருங்களத்தையின் றமீளவந்தாய்க்கும்வாயே
னெட்டிநம்வலியையின்னுமுணர்மதியென்றேசென்றான். (௨௩௫)

வேறு.

காமர்தண்டினுற்கலவமாமயிலொடுமடுத்து
நாமவன்படையசுரனைத்தாக்கினர்நாத
ரேமமல்கியமுசலத்தாலிவுளியொடெதிர்ந்து
தாமமல்குரத்தோச்சினன்சாமியைத்தகுவன். (௨௩௬)

மருமத்தோச்சியவிருப்புநெட்டுலக்கைவண்பொடியாய்க்
கருமத்தோரிடைவறமைபோன்றதுகடல்கலக்கும்
பருமத்தோவெனுந்தொளினுன்பார்த்ததிசயித்தான்
றருமத்தோன்றல்பின்ருேமரந்தகுவன்மேல்விட்டான். (௨௩௭)

கேடகத்தினுங்கிளர்பலபடையினுந்தனது
பீடகத்திலைப்பிளக்குமாறெடுத்ததோமரத்தின்
பாடகற்றினன்பாழியந்தகுவன்பாங்கிருந்தோர்
நாடகத்தொடுமார்த்தனர்நரலைவேறென்ன. (௨௩௮)

சூலங்கொண்டமர்தொடங்கினரிறைவர்துன்னலனுஞ்
சூலங்கொண்டுபோராடினன்றுறக்கமோடகன்ற
ஞாலங்கொண்டவல்விடர்தபுநாதனுர்நெடும்போ
தாலங்கண்டனவவுணனேடமர்செயும்பொழுதே. (௨௩௯)

எண்ணில்வாளிகள்சிலைகுனித்திமைக்குமுன்றொடுத்து
நண்ணலார்பெருஞ்சேனைமேனடவினரந்த
வண்ணவாளியொன்றனந்தமாய்வன்னிகான்றேகி
விண்ணுளார்வியப்புறப்படைமுழுவதும்விளித்த. (௨௪௦)

முற்றுதன்படைமுழுவதுமுடிந்தமைநோக்கிப்
பற்றலன்பொருதிறைவர்தம்பாலயரொருவி
யற்றமின்றிமுற்றியவமலேசர்சேனையின்மே
லுற்றழக்கினன்றடக்கைவாளொளிபெறவீசி. (௨௪௧)

வாளின்வீசியுங்கதைதடிவனைமழுவெறிந்தும்
வாளியெண்ணிலதூர்த்தும்வார்சூலத்தைவிடுத்து
மாளியேறிபக்கூட்டத்திறுட்டயர்ந்தாங்குத்
தோளினுற்றலைக்காட்டினனவுணர்கள்சூரன். (௨௪௨)

தாளிழந்தனர்சிலர்சிலர்தலையிழந்தனர்க
டோளிழந்தனர்சிலர்சிலர்தொடையிழந்தனர்க
ணளிழந்தனர்சிலர்சிலர்நலனிழந்தனர்போர்க்
கோளிழந்தனர்சிலர்சிலர்குடரிழந்தனரால். (௨௪௩)

கவந்தமெண்ணிலவாடினகறைப்பெருநீத்த
நிவந்ததெங்கணுநெடுஞ்சிறையெருவையாதிகளு
முவந்துவானிடைப்பரந்தனவூளைவாய்நரிநாய்
சவந்தின்பேய்க்கணந்ததைந்தனசமர்க்களமுழுதும். (௨௪௪)

மூத்துத்தோள்வலியவுணர்கோன்முனைசெயப்பொருது
காத்துத்தூசியினின்றவிலாபன்காயுழுவைப்
போத்துப்போலெழுந்தொருகையின்முட்டியாற்புடைத்துக்
கூத்துப்பாய்பரிகுமைத்தவனுடலுககுறித்தான். (௨௪௫)

பரியிறத்தலும்பாதகத்தவுணனுள்பரிந்து
விரிநெடுங்கடலனையவிச்சேனையைவேறற்
குரியதந்திரம்யாதெனத்தன்னுளேயுசாவி
யரிதுகண்டுகூத்தாடினனந்தரத்தெழுந்தான். (௨௪௬)

மாயையாற்றனதுருவந்தோன்றுவகைமறைத்துப்
பாயசீர்த்தியின்பார்க்கவன்பகர்ந்தமந்திரத்தை
நேயமோடுறச்செபித்துநீள்வலியும்பெற்றுருத்துத்
தூயநாயகன்சேனைமேற்றொடுத்தனன்படைகள். (௨௪௭)

பருவகாலத்துப்படர்முகிற்பெருமழைபோலக்
கருவியீண்டலிற்கங்குல்போலிருண்டதெவ்விடனும்
வெருவினார்சிலருறுப்பிலார்சிலர்சிலர்விளிந்தா
ருருகினார்சிலரோடினார்சிலர்சிலர்சோர்ந்தார். (௨௪௮)

எங்கணாயகன்சேனையினழிவெதிர்நோக்கி
யங்குசீற்றமோடருள்செய்வார்புத்திகெட்டவனே
தங்குமாற்றலோடெதிர்நின்றுசமர்க்கவல்லாயே
லங்கண்வான்மிசைமறைந்துகொல்லமரியற்றுவதே. (௨௪௯)

என்றவிப்பொழுதேயுனைமூன்றுதுண்டாக்கித்
தேன்றதும்பியவாகைசூடுவனெனச்செப்பி
யான்றவங்கையிற்பாசத்தைவிடுத்தனரதுவிற்
கான்றவெய்யவனொளிகெடக்கதழ்ந்துசென்றதுவே. (௨௫௦)

மந்திரப்பெருவலியையுமாயையுந்தொலைத்திட்
டந்தரத்தினின்றவன்றனையார்த்துடனீர்த்து
வந்துதந்தது மணிமுடிவான்முகடளப்பச்
சுந்தரப்பொலங்கிரிபொருந்தோகைநின்றவன்முன். (௨௫௧)

வலியிழப்பினும்வயவர்கள்வண்கதிகுறித்தே
யொலிசமத்துயிர்விடுவர்களுனக்கதுவில்லை
யலியையொத்தனைவஞ்சனையாலமர்புரிந்தாய்
நலிவின்றுய்தியேனமைப்பணியென்றனர்நாதர். (௨௫௨)

கேட்டவண்மொழிசெவிபுகுமுனஞ்சினங்கிளர
வோட்டைநெஞ்சினனொருகதைசுழற்றியாணுதலி
னாட்டமுற்றவர்மார்புறவெறிந்தனனாதர்
சேட்டிருங்கதையாலதுதனைச்சிதர்படுத்து. (௨௫௩)

ஊக்கமிக்கவன்மருமமுங்கிழிபடவுருத்துத்
தாக்கினார்வரையருவிபோற்றரையிடைநெய்த்தோர்
தேக்கினனவண்சிந்துநெய்த்தோர்துளிதோறுந்
தூக்குவீரர்களவனெனத்தோன்றினரநேகர். (௨௫௪)

வேறு.

வரையெனநெடுகியவுருவினர்சிலையில்வளர்குவடுறழ்புயவலியினர்மலையு
நுரையறவிளைதருவயிரமதனையநோன்மைகொளிருதயமுரணினர்கிரியி
னிரைபடுகருமுகினிகர்தருகவயநிலவியமார்பினர்நெடியவெள்ளருவி
புரையமென்மலர்பலதொடரியதும்பைபூண்டவர்குருதியின்வருபெருவபவர்.

விலங்கலின்வதியுறுமடங்கல்கள் புலிவல்விலங்குகளரவிவைமுதலிய
போல, வலங்கிளர்பகைவர்களுயிர்பிழையாதுமாந்துபல்படைக்கலந்தாங்
கியவவர்தாம், துலங்கியவுருமெனவார்த்தனர்கடல்போர்சூழ்ந்தனர்வடவை
யஞ்சுடரெனவெகுளா, விலங்கியநிரையெனநிரைநிரைபடைகளெண்ணில
வழங்கினரிறையவன்மீது. (௨௫௫)

தேவர்களஞ்சினர்முனிவர்களினியென்செய்குதுமொருகமலாசுரன்மி
றைசெய், தாவருமிடர்களுக்காற்றிலமவனோர்தானவரளவிலர்தோன்றினரி
ன்னு, மாவர்களெவனமுய்குதமென்றாயனரியிந்திரன்வடவரைமறைந்
தார், மூவர்களிறையவர்மயிலவர்க்கிதுவோமுடித்திடலரிதெனமுகமலர்ந்
திருந்தார். (௨௫௭)

வேறு.

தேவராதியாஞ்சுகின்றமைசிந்தைசெய்துவிநாயகர்
பாவமேயெனவந்துசூழ்ந்துபடைக்கலஞ்சொரிதானவக்
காவலோரெனுமாழிமல்விரைக்காலின்மாக்கலனேருற
வேவலாற்றுகலாவமஞ்ஞையையேகுமாறுமுடுக்கினார். (௨௫௮)

கொள்ளிவட்டங்கறங்குமோலைகுலாலர்சக்கரஞ்சூறைநன்
றுள்ளுருச்சுழல்வண்டுநீர்ச்சுழியொப்பமாதிரமெட்டினும்
வள்ளலூர்மயில்நொடிக்குமுன்பலவட்டம்வட்டணையிட்டது
தெள்ளியோருளமேயொருங்குதிரண்டதன்னகலாவியே. (௨௫௯)

மண்கிழிந்ததுமாதிரக்கரிவாளராக்களயர்ந்தன
விண்கிழிந்ததுமேருவாதியவெற்பசைந்தனநோக்கினார்
கண்கிழிந்ததுவேலையேழுங்கலங்கியொன்றவிராவின
வெண்கிழிந்ததுவீரருள்ளமெழுஞ்சிறைப்படர்காற்றினால். (௨௬௦)

வட்டமிட்டிடுமஞ்ஞைமீதமர்வள்ளலார்சிலைவாளிக
டொட்டிரண்டுகரம்விடச்சுடர்சூலமாதிகளேனைய
வெட்டிருங்கையும்விட்டிடச்சமரேற்றழித்தனர்வீரரை
முட்டுமெத்தகுவோர்கறைக்கணுமொய்ம்புளார்பலர்தோன்றினார். ()

நல்லநெஞ்சினர்நன்னெறிக்கணயர்ந்தளித்திடுமோர்பொரு
ளெல்லையிற்பலவாகவீண்டுவதென்னவேபெருமான்படை
புல்லநின்றிடுமொவ்வொருத்தர்புலாற்புனற்கணனேகர்க
ளொல்லைவந்தெழுமாறிலாபனுணர்ந்துதாயரையுன்னினான். (௨௬௨)

புதல்வனெண்ணமறிந்துசித்தியும்புத்தியுங்களநண்ணினார்
மதமயிற்பெருவாகனத்தொடுவள்ளல்போர்புரிகின்றதுங்
கதமிகுங்கமலாசுரன்பெறுகாழ்வரத்தையுநோக்கினா
ருதவினார்நவகோடிபூதமுறுத்தினார்பகையோர்கண்மேல். (௨௬௩)

வேறு.

அண்டமும்வயிற்றுளாக்குமடல்கெழுபூதம்யாவுந்
திண்டிறலவுணர்மீதுசென்றனநெய்ததோர்வெள்ள
மண்டனில்விழாமல்வெள்ளின்மதகரிவிழுங்குமாபோ
லுண்டனநிலத்தின்வீழ்ந்தவுதிரநக்கினதாலத்தால். (௨௬௪)

நீடியதகுவர்தம்மைநெடுவயிறாரவுண்டு
பாடினசிலபூதங்கள்பகையினியிலையென்றே
யாடினசிலபூதங்களார்த்தனசிலபூதங்க
டேடினசிலபூதங்கடெவ்வினுமுளவோவென்றே. (௨௬௫)

வரத்தையுமறுத்தான்வீரர்வாழ்க்கையுமறுத்தான்தாவா
வுரத்தையுமறுத்தான்மேலாமொளியையுமறுத்தான்றனஞ்
சிரத்தையுமறுத்தலின்றித்தீர்தராவென்றுதீயோன்
கரத்தமர்படைகளோடுமொருத்தனேகளத்தினின்றான். (௨௬௬)

பண்டுசெய்தவத்தாற்செல்வம்பரித்தவாறறத்தின்மார்க்கங்
கொண்டிடினென்றும்வாழ்வர்குற்றங்கள்புரியினாக்கம்
விண்டுளமழிவரென்றுவிளம்புமோர்சான்றுபோன்ற
தெண்டகுதகுவர்கோமானேகனாய்க்களத்துநிற்றல். (௨௬௭)

மூலவாணவமுன்மூன்றுமுடியமெய்ஞ்ஞானஞ்சார்தற்
பாலனும்பருவத்தான்போற்பயின்றதொல்வரமுஞ்சார்ந்த
கோலநாற்படையுநீக்கக்கோலக்களந்தனியேநின்றான்
சீலமாரிறைவர்மீதுசிலைவளைத்தம்புதூர்த்தான். (௨௬௮)

நாந்தகம்வீசித்தம்மேனண்ணியசரங்கள்வீழ்த்திட்
டேந்தியதிரிசூலத்தாலெற்றினர்களமேலொன்று
மாந்தனியரைமேலொன்றுமரைக்குக்கீழொன்றுமாக
மோந்ததச்சூலந்தீயோன்மூன்றுதுண்டாயினனே. (௨௬௯)

ஒழுகியவீமையாற்றினுத்தரத்திசையும்வானு
முழுகுகிட்டினைதென்பாலுமொழிந்தவற்றிடையுஞ்சால
வெழுகுலவரைகளென்னவிற்றனமூன்றுதுண்டுங்
கழுகொடுநரிநாய்தின்னக்கடலெனக்கலித்துவீழ்ந்த. (௨௭௦)

வேறு.

ஏனுறுபொன்முடித்தலைதானிராசசதனத்துமெழில்
பேணுமமரர்மேலுடலம்பிரவாளநகரத்தும்
பூணுடன்மற்றதுபுரிந்தபோர்க்களத்தும்விழவன்னோன்
மாணுயிர்போயெம்பெருமான்மலரடிக்கீழ்விழுந்ததே. (௨௭௧)

வழங்குபடையருச்சனையாமறத்தின்மொழிமந்திரமார்
தழங்குசமர்த்தொழில்பணியாத்தகக்கொண்டுகொடியனென
முழங்குகமலாசுரற்குமுத்திகொடுத்தனனென்றாற்
பழங்கணறுத்தெமைப்புரக்கும்பரிவரிதோவிநாயகர்க்கே. (௨௭௨)

வாளேந்திப்பூதரொடுவயவரிமையவர்மோலி
தாளேந்துவிநாயகனார்சந்நிதியாடினர்குரவை
யாளேந்துங்களம்பாடியண்ணலார்பின்னின்று
தோளேந்துங்குடரலகைத்தொகுதிகளாடினதுணங்கை. (௨௭௩)

அந்தரதுந்துபியைந்துமார்த்தனவாரணமுழக்கி
வந்தடியிற்றாழ்ந்தனர்கண்மாதவர்கள்வானவர்கள்
சிந்தியமந்தாரத்தின்செழுமலர்வான்வெளிதூர்த்த
முந்தியவல்லிடர்முழுதுமுடிந்தனமூன்றுலகத்தும். (௨௭௪)

முருகுவிரிபசுந்துளவமுகுந்தன்முதலியதேவ
ருருகியமெய்யன்பினொடுமுவகையொடுமெதிர்பணிந்தார்
பெருகுகமண்டலநீராற்பேணுபலபொருள்களினாற்
றிருகுவினைத்தொடர்நீங்கத்திசைமுகத்தோன்பூசித்தான். (௨௭௫)

பூசிக்கும்பொழுதெண்கட்புலவன்கமண்டலஞ்சாய்ந்து
வாசிக்கும்புனலொழுகமழுத்ததனைக்கொளமுயன்ற
நேசிக்கும்பிரமனிலைநோக்கிவரமேவருமே
யாசிக்குமயூரேசரெழிற்கரத்தாற்றடுத்தருளி. (௨௭௬)

கைத்தலத்தாலதிலள்ளிக்கமண்டலத்தைநிறைத்திட்டார்
மெத்தியவன்பொடும்பிரமன்வியந்தடியிற்பணிந்தெழுந்தான்
பைத்தபுவிவிழுந்தபுனல்பரந்துபெருநதியாகித்
தத்துதிரைக்கருங்கடலிற்றலைமயங்கிற்றமரர்தொழ. (௨௭௭)

தெள்ளுமணிபலவரன்றித்தெழிக்குங்கமண்டலநதியிற்
கள்ளுயிர்க்குமலர்த்தீர்த்தங்கவுதமராதியர்படிந்து
நள்ளுதருப்பணமாதிநவையறச்செய்தெம்பெருமா
னுள்ளுவப்பவவர்பதத்தினூறுமறையாற்பூசித்தார். (௨௭௮)

அவரவர்கள்வேட்டவரமளித்தருளிமயூரேசர்
தவமுனிவரமரரிவர்தங்களைப்பார்த்தருள்செய்வார்
நவமுறுமிந்நதிதீர்த்தநமக்கினியதாதலினு
லுவகையொடுமிங்கிருத்துமொருகாலுமொழியாமே. (உஎகூ)

விழுமியபன்னதியுள்ளுமேலானபெருமையெலாந்
தழுவியதிந்நதியினிற்றகப்படிந்தோரிம்மையிடை
முழுதுலகுமரசாளுமுதன்மையராய்மறுமையிடைத்
தொழுமரியாதியர்கதியிற்றுன்னுவர்பின்வீடுறுவார். (உஅ0)

தருவளர்பைங்கொடியேனுந்தண்ணியவிந்நதிபடியிற்
பெருமைபெறுகதியடையும்பேணுமினென்றருளினுர்
மருமலரோன்றிருக்கோயில்வகுத்தமைத்தானதுதன்னி
லருள்வழங்குமயூரேசரமரர்தொழவீற்றிருந்தார். (உஅக)

வேறு.

அணிகெழுகிழக்குத்திக்கினிற்றிருமாலலர்மகளொடுமினிதிருந்தான்
றணிவறுமகிழ்வினன்னவர்க்கெதிரேசத்தியாசிரையைவீற்றிருந்தாள்
பிணிதபுதெனுதிசையுமாமயேசர்பெட்புடனிருந்தனரவர்முன்
மணிவடஞ்சுமந்தகுவிமுலைவிரைசைவைகினள்வையகம்போற்ற. (உஅஉ)

குடதிசையிரதியொடுமலர்க்கணைகள்குடங்கைசேர்மன்மதனிருத்தான்
றொடர்புறுமவன்முன்றுலங்குமாற்சாலதுதிசையென்பவளிருந்தாள்
வடதிசைவராகரூபிமண்மடந்தைதன்னெடுமருவினனவர்முன்
றிடனுறுமுத்திவழங்கிடுமுத்தாதேவிநன்றிருந்தனள்மாதோ. (உஅ௩)

முரிதிரைசுருட்டுங்கமண்டலநதியின்முன்னுறவொருமுறைதோய்ந்தங்
கரியயன்முதலாமபாருக்கீசராமயூரேசரைத்தெரிசித்
துரிமையின்மீட்டும்படிந்துபூருவமுன்னுரைத்தவத்துவாரதேவர்களை
விரியுறுமன்பாற்பூசனைபுரிந்துவிமலர்பூசனைசெயுமுறையால். (உஅச)

இம்முறையொருநாடன்னினுற்காலமினிதுறப்பட்டினியுற்று
விம்முபத்திமையால்விநாயகர்பூசைவிளைப்பவன்வறியனேயானுங்
கொம்மெனவளக்கைக்கொற்றவன்வெறுக்கைகூடவெப்போகமுநுகர்வன்
தெம்முனைகடப்பன்வலியிலாதவனுஞ்சிறுவனிலான்மகப்பெறுவான். (உஅரு)

வெய்யநோயாளிவிழுப்பிணிநீங்கிமேதகுசுகமெலாம்பெறுவன்
மையறுகீர்த்திவலியொளியாதிவளமெலாமடவனும்பெறுவ
னுய்யவேண்டுநர்க்குவையமுன்றிடத்துமொளிகெழுகலவமாமயிலூ
ரையன்வீற்றிருக்குமித்தலம்போலவருள்புரிதலமொன்றுமிலையே. (உஅகூ)

வரிகழற்கமலாசுரனுடன்மூன்றுய்மண்ணிடைவிழுந்தகாரணத்தாற்
றெரிபுகழ்கொழிக்குமித்தலந்தன்னைத்திரிசந்திக்ஷேத்திரமென்பர்
பரிவினெவ்வுயிருங்காத்திடும்பொருட்டுப்பரசணிகரத்தரித்தலம்போற்
பிரிவிலிராசசதனத்தும்பிரவாளத்தினும்பெட்பொடுமிருந்தார். (உஅஎ)

இக்கதைகேட்டோரெழுதினோர்படித்தோரியம்பினோரியம்பினோர்தமக்குத்
தக்கனகொடுத்தோரிவரெலாமிம்மைச்சகலபாக்கியங்களுமெய்தித்
தொக்கமண்வாழ்க்கையிற்றுழிச்சுரராய்த்தொலைவிலாப்போகங்கணுகர்ந்து
முக்கொடுமலமுமுதலொடுமுருக்கிமுன்னுவர்விநாயகர்பதத்தில். (உஅஅ)

வருமயூரேசர்திருவவதாரம்வகுத்தனமற்றுமோருகத்திற்
கருணையங்கடவுள்சிந்துவையிறப்பக்கவுரிபாற்றிருவவதார
வுருவுகொண்டொழுகுகலாபமாமயிலொன்றூர்ந்தனரத்தகுகதையுந்
தெருளுறவுரைத்துங்கேட்டியாலென்றுதிசைமுகன்வியாதனுக்குரைப்பான்.

ழந்தியமயூரேசர்திருவவதாரப்படலம்முற்றிற்று. ஆகத் திருவிருத்தம்-அகூ௰.



## ௭௫ வது - பிந்தியமயூரேசர்திருவவதாரப்படலம்.

பைதலம்பாவைநல்லார்பயில்பொழின்மருங்குசூழ்ந்த
மைதலதேயந்தன்னின்மதுகரமூரன்றுசூழுங்
கைதலம்புன்னைவேலிக்கண்ணகனகரம்வைகி
யைதலருலகங்காக்குமரசனற்குணமேம்பட்டான். (௧)

சக்கரபாணியென்னச்சாற்றியற்பெயரான்றெய்வ
சக்கரபாணியொத்ததன்மையான்றிசைதோறேகச்
சக்கரமுருட்டுஞ்சீரான்றரியலர்க்கடந்ததோளான்
சக்கரவர்த்தியென்னத்தருமத்தினிலைபெற்றுள்ளான். (௨)

பொக்கமிலமைச்சர்தர்மபுத்தியேசாம்பனென்னத்
தக்கவரிருவரன்பிற்சார்ந்ததன்மனையினில்லா
ளுக்கிரையெனுநாமத்தாளுவளொடுகலந்துவாழ்நாண்
மக்களைப்பெறுதலில்லாவறுமையொன்றுற்றான்மன்னன். (௩)

தருமங்கடவந்தானங்கடக்கநல்விரதம்வேள்விக்
கருமங்களனைத்துஞ்செய்தான்கருமனைவயிற்றினீடி
வருமங்கநிறைந்துபூவில்வந்தபிள்ளிருத்தலின்றி
யுருமங்கிப்போகக்கண்டானொழிதராக்கவலைபூண்டான். (௪)

பிறந்துபன்முறையுஞ்சான்றபிள்ளைகளிருத்தலின்றி
யிறந்திடலாற்றானாகியினைபவனகரின்மேலாய்ச்
சிறந்தவர்தம்மைக்கூவித்திகழ்தரவிருத்திப்பின்ன
ரறந்தழையமைச்சர்தங்களானனநோக்கிச்சொல்வான். (௫)

புத்திரனில்லாதாரைப்புரையறுகதியேலாதென்
றுத்திரநூல்களெல்லாமுரைத்தலாற்றவங்கள்செய்தேன்
கைத்திரவலருக்கீந்தேன்கடவுளர்க்குவகைசெய்தேன்
வத்திரமாதிதானம்வழங்கினேனெவையுஞ்செய்தேன். (௬)

தொல்லையாதரித்தபாவத்தொடர்பினாற்பிறந்துமக்க
ளில்லையாயொழிதல்கண்டீரினிவனத்தெய்திநோற்று
நல்லவான்கதியிற்சேரநற்றுணையீட்டல்வேண்டு
மல்லறுத்தெம்போல்வையமாளுமினென்றுகூறி. (௭)

மல்குபண்டாரஞ்சேனைவளநகர்நாடுமற்று
நல்கிமந்திரிகள்பாங்கர்நறுமலர்க்கானிற்செல்லப்
புல்கியமனையாளோடும்புறப்படும்பொழுதுபோந்தா
னல்கியசவுனகப்பேரருந்தவமுனிவனாங்கே. (௮)

திர்த்தயாத்திரையிற்செல்லுந்திருத்தகுமுனிவன்றன்பா
லார்த்தியினடைதலோடுமகத்துறுமகிழ்ச்சிபொங்கப்
பார்த்திபனெதிரேசென்றுபதமலர்பணிந்துபோற்றி
யேர்த்தவல்லரிமான்பீடத்திருத்தினன்பூசித்தானே. (௯)

கையிணைமார்பிற்பின்னிக்காதலினெதிரேநின்ற
மெய்யணிவேந்தன்றன்னைவிழுத்தவமுனிவனோக்கி
வெய்யதண்வனத்திற்செல்லவிழைந்தனைபண்டுபோல
வையகங்காத்திநல்லமகனுனக்குதிப்பனென்றான். (௧௦)

ஏந்திலைவேலோன்மீளவிறைஞ்சிநின்றிறைவயாங்கள்
சாந்திகடருமந்தானந்தக்கனபலவுஞ்செய்தும்
வாய்ந்திலமக்கட்பேறுவந்ததுமூப்புமெங்கட்
காந்தனிவழியுண்டாயினதையினியறைகவென்றான். (௧௧)

மறையொருவடிவாய்மும்மைமதிலொருங்கெய்தவேக
விறையவர்க்கிடமாய்வைகுமிரவியின்விரதந்தன்னு
னிறைதருபாவமெல்லாநீங்கும்புத்திரருண்டாவ
ரறைகுவனதனைக்கேளென்றருளுவன்முனிவர்கோமான். (கஉ)

இரதசத்தமியின்முன்னரெழில்பெறத்தொடங்கிமன்னு
வரதனக்கலயந்தாபித்தாடகத்தகட்டில்வெய்யோன்
பரவுமெந்திரத்தைக்கீறிப்பதித்தவக்கலயமீது
விரவுறவைத்துப்பூசைவிளைத்திடல்வேண்டுங்கண்டாய். (கங)

சிவந்தசந்தனஞ்செம்போதுசிவந்தபூந்துகில்செஞ்சோறு
சிவந்தபாத்திரங்கண்மற்றுஞ்சிவந்தனகொண்டுவில்லா
நிவந்தபொன்வரையைவாங்குநிமலனைத்தியானித்தன்னு
னுவந்திடப்பூசையாற்றியுணவுகளிஙிதங்கூட்டி. (கச)

பன்னிருமுறைவெவ்வேறுபாத்தியமாதிநல்கிப்
பன்னிருமுறைசூழ்போந்துபன்னிருமுறையிற்றாழ்ந்து
பன்னிரண்டிரட்டியோடுபகரறுநாளுண்விட்டுப்
பன்னிருமனுவுமெண்ணிப்படர்பொறியைந்துமோம்பி. (கரு)

இடர்கெடுநமக்காரங்களிலக்கம்வேதியராற்செய்வித்
தடர்தருமிலக்கரானவந்தணர்க்குணவுநல்கித்
தொடர்தரும்விரதந்தன்னைத்துகளறமுடித்தியென்னுப்
படர்தருதுறவின்மேலான்பரிந்துமந்திரமுஞ்சொன்னான். (கசு)

உறுவரனுரைத்தவெல்லாமுட்கொண்டுமகிழ்ந்துவேந்தன்
முறுகியவன்பினோடுமொய்யொளிமணியும்பொன்னு
நறுவிரைப்பொருளுந்தூசுநல்லனவெதிரேவைத்துப்
பெறுகவென்றிரந்துதாழ்ந்துபெருந்துதிபேசிநின்றான். (கஎ)

பற்றறுமுனிவனோக்கிப்படர்மரத்துரியுநீறும்
பொற்றகண்மணியுந்தாங்கும்புனிதரேமிவற்றைக்கொள்ளே
மெற்றவெண்டரங்கதீர்த்தயாத்திரையேகுகின்றே
முற்றனைக்கண்டுபன்னுளொழிதலிற்காணப்போந்தேம். (கஅ)

இனிவழிப்போதுநாமென்றெழுந்துயர்முனிவன்சென்றான்
கனிமொழிமனையாளோடுகாவலன்கவலைநீங்கிப்
புனிதனுய்ப்பொறிகளோம்பிப்புரையறுவிரதந்தன்னை
முனிவரன்மொழிந்தவாறேமுற்றுறத்தொடங்கிச்செய்தான். (கக)

உறுமிருபத்தொன்பானுளுக்கிரைகனவிற்சென்று
மறுவறுகதிரின்செய்யமண்டிலத்துறையுநாதன்
பெறுமவள்கணவன்போலும்பெட்புறவடிவிற்புல்லிச்
சிறுவயிற்றரியமென்சூல்சிவணுதல்செய்துபோனான். (உ0)

மன்னவன்மலடனனவாய்மையைமதித்துத்தேவ
னன்னவனுருவாய்ப்புல்லியகன்றமையறியாளாகித்
தன்னுடைக்கணவன்றானேதழுவினனென்றுநெஞ்சத்
துன்னினளிருந்தாளில்லாளொழிந்தவவ்விரவுமாதோ. (உக)

காலையிற்கிழவன்றன்னைக்காதலினோக்கியார்வம்
வேலையிற்பெருகுமேனும்விரதங்கைக்கொண்டுநோற்கு
மாலையாமாதர்தம்மைமணந்திடிற்பயன்களெல்லா
மாலையிற்கரும்பன்றேவென்றசதியாடினண்மெய்கூறி. (உஉ)

கள்ளமொன்றறியாவேந்தன்காதலிமுகத்தைப்பாரா
வெள்ளியிங்கென்னையிவ்வாறியம்புதற்கேதுவென்னே
யுள்ளவாறுரையாயென்னவுக்கிரையெனதுகொங்கை
நள்ளினையேயேயென்றுணராதிபன்மதியிற்றேர்ந்து (உ௩)

கடவுளேநமக்குநல்லகான்முளைகொடுப்பவந்துன்
றடமுலைதழுவிப்புல்லித்தணந்ததாமையமில்லை
மடமொழிமாதேயுன்றன்வயிற்றிடைக்கருப்பமுற்ற
திடரினியொழிகவேட்டவிரும்பொருணுகர்கென்றோதி. (உ௪)

அற்றைநாட்பூசையாதியனைத்தையுமடைவிற்செய்து
முற்றுவித்தெழுந்தபின்னர்மொய்த்ததன்றமர்களோடும்
பிற்றைநாளுண்டுபூசிப்பெருமகிழ்வொடும்வைகுற்றான்
பொற்றொடிவயிற்றின்மென்சூல்பூரித்துவளர்ந்ததன்றே. (உ௫)

மதிதொறுங்கருப்பநீடிவளர்தலுமாதர்நல்லாள்
கொதிதழற்குதித்தாள்போன்றுகூர்ந்தமெய்வெப்பாற்றாது
புதியசந்தனமென்சேற்றும்பொழிபனிநீர்முற்றத்து
நதிதவழ்பொதும்பருள்ளுநண்ணினள்பொழுதுபோக்கும். (உ௬)

பைந்தளிரியன்மென்மாதுபத்தெனுமதியிலோர்நாட்
சுந்தரமகளிர்சூழச்சோலையிலிருந்துநீங்கிச்
சிந்துவின்கரைக்கட்செல்லுஞ்செவ்வியின்வயிறுநொந்து
மைந்தனைவிரைவினீன்றாள்வானவர்க்கிடருமீன்றாள். (உ௭)

வேறு.

செய்யசடையும்விழிமூன்றுந்திகழ்சூற்படைசக்கரந்தரித்த
கையுமொளிவிட்டெறிக்கின்றகாமருருவுங்கடல்கலங்கும்
வெய்யகுரலுமெதிர்தோன்றவிளங்குகுழந்தைதனைப்பயந்து
நையுமிடைப்பாங்கியரிரிந்தார்நற்றாய்வருத்தத்தாலயர்ந்தாள். (உ௮)

வணர்மென்குழலாளயர்வொழித்துவருகவெனக்கொண்டந்தணன்போற்
புணரியிறைவன்புத்திரனைப்பூங்கையேந்திமன்னவன்மு
னணவியிவன்சிந்துவிற்பிறந்தானதனாலிவனைச்சிந்துவென
வுணர்வின்மகிழ்வாற்கூறுகவென்றுரைத்துவிடுத்துமீண்டொழிந்தான். (உ௯)

தரையாளரசனகமகிழ்ந்துசாதகன்மமவையாற்றி
வரையாதெவர்க்குமெய்ப்பொருளும்வழங்கிச்சிந்துவெனுநாம
முரையாவிருந்தான்சிந்துவெனுமொருவன்மதிபோல்வளர்ந்தெழுந்து
விரையார்சோலைநதியாதிவிளையாட்டயரும்பருவத்தில். (௩0)

துள்ளியெழுந்துவானிலவைத்துளங்கப்பிழிந்துஞ்சுதைநுகர்ந்தும்
வெள்ளையிபத்தைக்கவுட்புடைத்தும்வெரிநினிவர்ந்துவிட்டொழிந்தும்
பள்ளவுவரிபாய்ந்தலைத்தும்பயின்மாதிரத்தின்கரியங்கை
யள்ளியெறிந்தும்வரைநடுங்கவடியினலைத்துங்குறும்புசெய்தான். (௩௧)

இளையான்விளையாடியதிறத்தையிலங்குமொளிச்சுக்கிரனுக்கிக்
கிளையாரவுணர்குலமிவனாற்கிளர்ந்துவளருமெனக்குறித்துத்
திளையாதரவினொடுமெடுத்துச்சிறுவன்றனக்குமந்திரங்க
ளுளையாவலியாதிகள்பெறுமாறுபதேசித்தின்னதுஞ்சொன்னான். (௩௨)

திங்கட்கொழுந்துமிளிர்சடிலத்தேவனடித்தாமரைமதித்துத்
துங்கத்தவஞ்செய்துறுதவத்தாற்சுரரையடக்கியவுணர்கிளை
பொங்கப்புரந்துமூன்றுலகும்போற்றிநினதுபணிசெய்து
தங்கத்தலைவனாதியெனச்சாற்றித்தனதுபதிபுகுந்தான். (௩௩)

வேறு

சென்றுபடியப்படுங்தெய்வத்தீர்த்தமுயலாததனியல்பா
யொன்றுமிடத்தில்வந்தாடப்பெற்றாற்போலவுபதேச
நன்றுபெறுமிச்சிறுன்பின்புநயந்தகுரவர்விடைபெற்றுத்
துன்றும்வனத்தினிடையேகித்தூயதவத்திலினிதிருந்தான். (௩௪)

வலக்காற்பெரியவிரனிலத்தின்வதியவூன்றியிடப்பதத்தை
வலக்கான்முழந்தாண்மிசையிருத்திமார்பிற்கரங்களுறக்கூப்பி
யிலக்காயிறைவன்பதமுளத்திலெண்ணியிரவிதனை நோக்கிப்
புலக்காதலினைப்புறம்போக்கிப்புரிந்தானிரண்டாயிரவருடம். (௩௫)

அரியதவத்துக்கொழுங்கனல்சென்றண்டமுழுதுஞ்சுடக்கிரணம்
விரியுங்கதிர்மண்டிலத்துறையும்விமலனிரங்கியெதிர்போந்தான்
கரியமிடறுஞ்செழுஞ்சடையுங்கனற்கண்ணுதலுமுருவனைத்துந்
தெரியவெதிர்நின்றவர்தம்மைச்சிந்துவணங்கித்துதிசெய்தான் (௩௬)

வேறு.

வண்புற்றினரவணிந்தார்வேட்டவரம்யாதுரையாய்வழங்கவென்றார்
பண்புற்றவுளத்தொடவன்பகருவான்பெருங்கருணைப்பரமானந்தா
வெண்பத்துநான்குநாறாயிரமென்றியம்புபலயோனியானு
நண்புற்றவெனதுடலநாசமின்றாய்நெடுங்காலம்நலக்கவேண்டும் (௩௭)

ஒருகுடைக்கீழ்மூன்றுலகுமரசுபுரிந்தரியயன்முனும்பர்தம்மைக்
கருநிறத்துத்தானவரைக்காசினியிற்காவலராதியரையெல்லாம்
பெருமைதரவணக்கியவர்பணிதினமுங்கொளல்வேண்டும்பெரிதன்புன்பான்
மருவுதலும்வேண்டுமிவைவழங்குகவென்றானிறைவர்மதித்துச்சொல்வார் ()

அகிலகாரணரானவிநாயகர்வந்தவதரித்தாலன்றியுன்னை
யிகலினுலுயிர்மடிப்பாரிலையியம்பும்வரங்களெலாமீந்தாமென்று
துகிலுமாரமுமதளுஞ்சுடர்மணிநாகமுமணிந்தார்சொல்லிப்போனு
ருகலுறாவரத்தோடுஞ்சிந்துவுங்கண்டகநகரமுவந்துபுக்கான் (௩௯)

மிக்கவலியான்வரத்தான்மேம்படுதன்வைமந்தனுக்குவேந்தன்றானுண்
மைக்கடல்சூழ்புவியுலகம்வழங்கினனதுகொண்டுமறவேற்சிந்து
தக்கருணமித்திரனைகவுத்துவனேயெனுமமைச்சர்தங்களோடு தான்
தொக்கபடையெடுத்திறைஞ்சாவரசர்களைப்போர்த்திறத்தாற்சுராச்செய்

வணங்கரசர்திறைவாங்கிவணங்காதாருயிர்வாங்கிமண்மேலானை
யிணங்கவிறுத்தெழுந்துகதம்பாசுரன்சம்பாசுரனல்லிமையாரோடு
பிணங்குகணலாசுரன்கொலாசுரனாதியர்தம்மைப்பேணிக்கொண்டு
கணங்கிளர்தன்னுற்படைக்குக்காவலாய்நிருமித்துக்களிப்புச்செய்தான். ()

அடங்காதுசெங்களத்திலடுத்தசும்பனிசும்பனடல்சான்றகாலன்
மடங்காததிறலுடையபிரசண்டன்விருத்திரன்மற்றசுரர்தம்மை
விடங்காலும்படைக்கலத்தானெடிதசமர்விளையாடிமிலேக்காற்றி
யுடங்காகும்படிதழுவிக்கொண்டவர்க்குஞ்சிறப்புதவியுவகைசெய்தான். ()

வயந்தகுசண்டாசுரனைநெடுங்காலமமராற்றிவதைத்தவ்வீரன்
பயந்ததிறற்பிரபலாசுரன்வணங்கவவன்றனக்குப்படைகளுடு
வியந்திடுபேரதிகாரமுதற்பலவுங்கொடுத்துமிகுவெற்றிகொண்டு
நயந்தவுணர்சேனைகளுமுடன்வரச்சென்றடுத்தனன்பொன்னகரமாதோ.()

வேறு

தேவர்சூழ்தரமடங்கலாதனமிசைசிறப்பவீற்றிருந்தாளுங்
காவலோன்புடைவிரைந்துபோய்த்தூதவர்கழல்பணிந்தெதிர்நின்று
பாவகாரியராகியவவுணர்கள்படையொடுமமராற்ற
மூவராற்றலுமெண்ணுறாச்சிந்துவேமுற்றினனீங்கென்றான். (௪௪)

ஆயிரங்கணுஞ்சிவப்புறவெஞ்சினவங்கியுள்ளகமூள
மாயிருங்கடம்பொழியயிராவதமலைத்தலைமேலேறித்
தூயவிண்ணவர்படைபுடைசூழ்தரத்தொடிக்கைவச்சிரந்தாங்கிப்
பாயசிந்துவின்படையெதிர்நடந்தனன்பருப்பதச்சிறகீர்ந்தோன். (௪௫)

இருவர்சேனையும்வேறுவேறணிவகுத்தினத்துடன்போர்செய்தார்
குருதிவாட்படையோடுவாம்புரவிமேல்கொண்டசிந்துவினோடு
மருவுபாய்மதக்களிற்றிறையேற்றனமர்நணிபுரிகாலைக்
கருதலான்சிரத்தெற்றினனிந்திரன்கையில்வச்சிரந்தன்னால். (௪௬)

எற்றுவச்சிரநுண்டுகளாய்விழவெரிவிழித்தெறழ்ச்சிந்து
கொற்றமல்குறப்பொள்ளெனக்குதிரையைக்குறுகவுய்த்தடல்வேழ
நெற்றிவிண்டுநெய்த்தோருகப்புடைத்ததினின்றவிந்திரன்காலைப்
பற்றிவன்னிலத்திடைமோதுவான்பரிவுறவட்டித்தான். (௪௭)

அந்தவேலையிற்சூக்குமவடிவுகொண்டமரர்கோனவுணேசன்
பந்தநீங்குபுவைகுந்தநகரிடைப்படர்ந்துநாரணன்றன்னை
யெந்தைநீசரணெனவடுத்திரந்தனனெதிரிலாவொளிமிக்க
சிந்துவானுந்தன்னாணையிற்றிகழ்தரச்செலுத்தினனரசாட்சி. (௪௮)

சிறந்தவிண்ணிடையிருந்துசிலபகல்செலச்சிந்துவென்பவனங்கண்
மறந்தயங்கியசும்பனைநிசும்பனைமற்றுந்தானவர்தம்மை
யிறந்தவெஞ்சினப்படையொடுமிருத்திவானிடனகன்றராக்கூட்டம்
விறந்தவைப்பையுமடுத்தவைபணிதரமீண்டனன்புவிமீதில். (௪௯)

நாகமென்பதுநிகர்தராக்கண்டகநகரிடைச்சபைநண்ணி
யேகவெண்குடைநிழல்செயவனைவருமெய்திவந்தனைசெய்ய
வேகவன்படைவீரரொடுளவளாய்வியனுலகனைவையோம்பிப்
போகமென்பனவெனைத்துளவனைத்தையும்புசித்துவாழ்ந்திருக்கின்றான். ()

பூதலத்திவணின்னணமிருந்துழிப்புரவலன்றனக்காக
மாதலத்தினையுண்டவன்படையொடுவெளர்கருடனையூர்ந்து
போதலர்த்திவண்டுதிடாக்கற்பகப்பொதும்பர்நாட்டிவன்சூழ்ந்து
சாதலைத்துணிந்தமர்க்கெழுமவுணர்கடங்களோடமரேற்றான். (௫௧)

வேறு.

சும்பனுடன்விண்டுவிருத்திரனுடனிந்திரன்றோலாவாற்றற்
கம்பனுடனக்கினிகாலாசுரனோடியமன்கனலாசுரனோடு
வெம்புதிறனிருதிபிரசண்டனுடன்வருணன்மிகுநிசும்பனோடு
நம்புவளிபிரபலனோடுளகையர்கோன்கதம்பனொடுநவிலீசானன். (௫௨)

முண்டனொடுசந்திரன்சம்பாசுரனொடலர்வாளிமுடுக்குமாரன்
சண்டனொடுவிஞ்சையர்கள்கோனுடனசுவனிகள்சமரினாரு
மிண்டுபவுமாசுரனொடழகியகார்திருவரிவர்வேறுவேறு
மண்டினரேனையதருவரோடுநிலமகனுதிவானோரேற்றார். (௫௩)

சிறந்தவயிலாலெறிந்துநாந்தகத்தாற்றுழாவியுநேர்சென்றுதண்டா
னிறந்தழைசெந்நீரொழுகவெற்றியுங்குத்தியுநெடியகுந்தந்தன்னான்
மறந்தழைசக்கரம்விடுத்துங்கணைதொடுத்தும்பாசத்தான்மறுகயாத்தும்
பிறந்தபெருஞ்சினத்தோடுநெடுங்காலமமர்புரிந்தார்பெயர்தலின்றி. (௫௪)

தன்படையாகியவவுணர்தமக்குமமரர்கடமக்குஞ்சமரமூண்ட
கொன்பகைகேட்டலுஞ்சிந்துகொதித்தெழுந்துவிண்ணவரைக்குறும்புசெய்யா
தன்பினொடுவிடுத்தபிழையாலிதுவந்தடுத்ததவர்தம்மையெல்லாம்
வன்பெரியசிறையிடுவெலெனமதித்துப்படையோடும்வானிற்பாய்ந்தான். ()

ஏற்றிடலுந்தன்படையையெதிர்நோக்கிநீயிரமரிழைத்தல்சாலு
மாற்றுமின்மாற்றுமினென்றுகையமைத்துக்கருடன்மிசைவந்துநின்ற
வாற்றலரிதனைநோக்கியறைகுவானினிநினக்காமாண்மையெல்லாந்
தோற்றுதியானில்லாதசெவ்வியறிந்திரும்போரைத்தொடங்கும்பேதாய். ()

முக்காலச்செயலனைத்துமறிதருஞானமுமுலகமுழுதுங்காக்கு
மிக்கானதொழிலுமுளாயென்னோடுபகைத்தமர்ப்பின்விடாததன்பந்
தொக்காருமென்பதனையறியாமையென்னினிநீதொகுபோராற்றத்
தக்காயேலனைவரோடுந்தனியேற்றவென்னோடும்போர்தகச்செய்யென்றான்.

என்றுமொழிவழங்குமுனமேற்றெழுந்தமாயனுடனிமையாரெல்லா
மொன்றியொருங்கிரும்படைகள்வழங்கினர்கள்சிந்துவென்பானுருத்துச்சீறித்
தன்றனிக்கைபிடித்தபெருந்தண்டுகொடுதேவர்குழாந்தகரமோதி
வென்றிமிகுமிந்திரன்முனெண்மரையுஞ்சோகமுறவிரைந்துதாக்கி. (௫அ)

நெடியதிருமால்கடவுங்கலுழனொருபாற்சிறகைநிலத்திற்சாய்த்தான்
கடியவிழ்பைந்துளவணிந்தோன்கனன்றுதனொருகைவளர்கதையாலன்னான்
முடிகெழுசென்னியிற்புடைத்தான்முரிந்தொழியக்கதையொருகைமுளரிதாங்கும்
வடிமணிச்சக்கரம்விடுத்தான்சிந்துவுந்தன்கரத்திருந்தவளையைவிட்டான். ()

வேறு.

இரண்டுநேமியுமெதிர்த்தழல்விடமிவைசான்று
திரண்டவான்முதலுலகெலாஞ்சிதைப்பதுநோக்கி
முரண்டவாவிருவோரும்விட்டனர்முதிருலகஞ்
சரண்டனாலளந்துயர்ந்தவன்றன்னுளேநினைவான். (௬௦)

மிக்கநம்படைபலவுளுமிக்கதுசுடர்கால்
சக்கரப்படையதற்கெதிர்சக்கரந்தருவன்
கைக்கணுள்ளதுகண்ணுதல்சூலமேகடுக்கு
மக்கணற்கொடுஞ்சூலமொன்றதிகமாங்குளதே. (௬௧)

ஆதலாலிவன்றனையமரால்வெல்லலரிது
சாதலோவிலைசூழ்ச்சியாற்றணித்துநாந்தப்பிப்
போதலேதுணிவெனமிகப்புந்தியிற்றுணிந்து
காதலாலிதங்காட்டுவான்போற்கரந்துரைப்பான். (௬௨)

மைந்தராண்மையெலாமரைக்கணத்திடைமாயச்
சிந்துமாண்மையினானுநின்பெயர்சிறந்ததுமற்
றெந்தவைப்பினுநினக்கெதிரியாருளரில்லை
சிந்தைமெச்சினேன்வேட்டதென்வரஞ்செப்புகென்றான். (௬௩)

தரங்கவார்கடற்பாயலான்றன்கருத்தறிந்து
குரங்குபூமயிர்ச்சுவற்பரிக்கொற்றவன்மொழிவான்
வரங்களீவதுமெய்யெனிற்கொடுவெதுவோவென்
றிரங்கனீயெளிதாம்வரமேயிரக்குவன்யான். (௬௪)

எமதுகண்டகநகர்ப்புறத்தெம்பணிதாங்கி
யமரர்தம்மொடுமிருமதியளித்திடாயாகிற்
சமர்புரிந்துனைவென்றுசெய்தக்கதுமதவே
பமரமென்பசுந்துழாயணிபண்ணவவென்றான். (௬௫)

மூன்றுகண்களுஞ்சடிலமுமுத்தலைவேலு
மான்றலாலரன்போலுமச்சிந்துசொற்கேளா
மான்றுமாலவன்றான்செயனுஞ்செயன்மாண்பாஞ்
சான்றதாநமதுரையுமென்றதுதந்தேனென்றான் (௬௬)

சொல்லுமுன்னவன்றானவர்தொகையினையேவி
வல்லவைம்படைமாயனைவலாரியையேனை
யெல்லையில்பெருங்கடவுளர்யாரையும்வளைத்தா
னல்லிமென்மலராளையுமாள்விட்டுப்பிடித்தான். (௬௭)

போரின்வந்தவர்தமையன்றிப்புரந்தொறும்வாழுஞ்
சீரின்மல்குதேவர்களைச்சிக்கயாப்புறுத்தா
னேரின்மல்குவைகுந்தமேமுதலிமையவர்க
ளூரின்வைகுவராக்கினனுற்றதானவரை. (௬௮)

விண்ணினின்றுவான்முரசொடுவிருதெழுந்தார்ப்ப
மண்ணின்வந்தனனுடன்கொடுவந்தவானவரை
யெண்ணுகண்டகநகர்ப்புறத்திடமெலாமிருத்தி
நண்ணுமையிருதிசையினுநாட்டினன்காவல். (௬௯)

அந்தரத்தவர்க்கவரவரன்புசெய்திறைஞ்ச
மந்திரங்களைவடிவொடுங்களைந்துமாமடுவிற்
சிந்துவிற்படவிடுமின்கடேவரைத்தொழுவோ
ரெந்தவைப்பிடையிருப்பினுமிறுமின்களென்றான். (௭0)

எனதுமிக்கெழில்வடிவினையிடந்தொறுமியற்றி
மனநயப்பொடுபூசனைபுரியவான்முரசு
தனிலியம்புமினென்றுதன்னேவலர்க்குரைத்தா
னனைநெடும்புவியிடத்தவரவைநடத்தினரால். (௭௧)

வேதநீதிகளிறந்தனவிழுத்தகுநூலின்
போதநீங்கினர்யாவரும்புவனங்களெங்கு
மேதம்யாவையுமீண்டினவீண்டறிவுடையோர்
நாதனேதுணையெனவுளநைந்தொளித்திருந்தார். (௭௨)

நிலத்திலின்னணந்தேவரைநிறுவிமாமறையி
னலத்தைமுற்றுநாட்டாதவச்சிந்துவென்பான்றன்
குலத்தின்மன்றல்செய்குளிர்மொழித்துக்கையென்பவளைக்
கலத்தல்செய்திருமைந்தரைக்காலத்தாற்பயந்தான். (௭௩)

தந்தைதாயொடுதனையர்களொடுமளவளாவி
வந்துதாழ்தருந்தகுவராதியர்தமைவளர்த்திட்
டிந்திராதியரிடர்க்கடன்மூழ்கிடவிரங்காச்
சிந்துநாடொறுங்கொடியகோல்செலுத்திவாழ்ந்திருந்தான். (௭௪)

சிந்துதானவன்கொடியகோல்செலுத்துபுநெடுநா
ளந்தில்வாழ்ந்துழியவன்சிறைப்பட்டவானவர்க
ணொந்துமேதகுங்குரவனைநொறிற்படைக்காவன்
மைந்தர்தேர்வுறுவகையடிவணங்கியீதுரைப்பார். (௭௫)

முன்னரேபெருந்தானவன்முற்றியபோரின்
மன்னனோடுநாமிருந்தவாறிருந்திடின்மறித்திவ்
வின்னலார்தராமிருஞ்சுகமார்தராமேனும்
பொன்னினாயகன்றனைநம்பிப்புக்கனஞ்சிறையில். (௭௬)

வேறு.

அல்லலார்ந்தவிச்சிறையினின்றகன்றுநாமென்று
நல்லவான்சுகம்பெறுகுதுமென்றுநைந்தழலும்
வல்லவானவர்குரவன்றன்மனத்திடைதேர்ந்து
மெல்லயாவருமின்புறும்விளைவெடுத்துரைப்பான். (௭௭)

இடரெலாங்கெடுத்தெமக்கருள்கொடுப்பவரென்றுங்
கடவுளீரொருவிநாயகரக்கணபதியை
மடவராகியதானவர்வலியறவுளத்திற்
றொடருமார்வமொடருச்சித்துச்சூழ்மின்களென்றான். (எஅ)

வேட்டவானவர்விநாயகர்களுருவுளத்தி
னூட்டிநாடொறும்பூசனைநலத்தகபுரிந்தார்
மூட்டுசேர்க்குரவனுமுகுந்தனுமுளரியனுஞ்
சேட்டராமுனிவோர்களுஞ்சிந்தனைசெய்தார். (எகூ)

திங்கள்சூடியவிநாயகசதுர்த்தியுஞ்சேர
வங்கண்வானவரைவருமவ்விரதத்தைத்
தங்களார்வத்தாலந்தரியாகமாச்சமைத்தா
ரங்கணுயகராகியவிநாயகரிரங்கி. (அ0)

மடங்கலூர்தியுமையிருபுயமும்வண்கரத்தி
லடங்குமையிரண்டாய்தமுமலர்ந்ததேசொளியு
மூடங்குமேவியசித்திபுத்தியுமுருவனைத்து
மிடங்கொள்வானவர்மனந்தொறுங்காட்டியீதறைவார். (அக)

பிழைபெருக்கியகணன்முதலோருடல்பிளந்து
தழையநல்லருண்முன்புதந்தனமதுபோல
விழையமூவிருகரஞ்சசிநிறமிவைவிளங்க
மழைவிராவியமலைமகண்மருங்கவதரித்து. (அஉ)

நீலமாமயிலூர்ந்துநீடியசிந்துவென்பான்
காலன்வாய்ப்புகவவனுடல்களம்படக்கொன்று
சீலமார்ந்தநுங்களைச்சிறைவிடுத்தருள்செய்வாஞ்
சாலவோகையிற்றங்குவீரெனச்சொலிமறைந்தான். (அ௩)

ஆளுநாயகனுரைத்தமையனைவருமுசாவி
மூளுமோகையின்முற்றியசிறையினின்றன்றே
மீளும்வாழ்க்கைபெற்றாரெனவிம்மிதமெய்தி
நாளுநாயகன்பதத்தையேநாடினரிருந்தார். (அச)

தேவர்நாயகராகியவிநாயகர்சிலம்பின்
பாவைபாலொருபாலனுய்வரும்படிபடிமே
லோவிலாவிடர்புரிந்தசிந்துவின்றிறமுரைத்தாம்
பூவின்மேலவர்புரியவதாரமும்புகல்வாம். (அரு)

மயூரேசர்திருவவதாரம்.

வேறு

சிந்துவின்கொடுமைக்கஞ்சித்திரிசந்தியென்னும்வைப்பிற்
கந்தமைந்தவித்தமேன்மைக்கவுதமமுனிவராதி
யந்தணர்தோற்றுவண்ணமருந்தவமாதியாற்றிச்
சந்திரனணிந்தவெண்டோட்டலைவரைத்தியானித்தாரால். (அசு)

பட்டினியாகவெண்ணில்பகலவரரிதுநோற்பக்
கட்டியசடையாருள்ளங்கனிந்திடப்பாகநீங்கா
மட்டுகுமலர்மென்கூந்தன்மாதொடும்விடைமேலேறிச்
சிட்டவன்பூதராதித்திரள்புடைசூழச்சென்றார். (அஎ)

கொழுந்திளந்திங்கள்வேய்ந்தகுழகனுரெய்தவுள்ள
மழுந்தியகவலையாழியதிலெழவிருக்கைநின்று
மெழுந்தனர்கண்ணீர்வாரவிருகரங்குவித்துமுன்னர்
விழுந்தனர்சூழ்ந்துவேதம்விளம்பினர்முனிவரெல்லாம். (அஅ)

மங்கையோர்பங்கரந்தமாதவர்முகத்தைநோக்கி
யிங்குநுங்களுக்குவேட்டதியாதுசொல்வீர்களென்றா
ரங்கணரருளலோடுமடியரேமுய்ந்தோமென்று
பொங்கியவன்பின்மீட்டுமபொலங்கழல்வணங்கிச்சொல்வார். (அகூ)

மேழகமருப்பிற்சிந்தைவெய்யசொற்சிந்துதன்னாற்
காழகமனத்துத்தீயோர்களுலினருலகமெல்லாஞ்
சூழகமறுக்கும்வேதர்தொன்னெறிமுழுதுமாய்ந்த
வாழகந்தளரத்தேவர்மாதவர்சிறையிற்பட்டார். (கூ0)

அடியரேஞ்சிலரேயிங்கேயவன்கையிலகப்படாமல்
முடிவிலாவேதநூலின்முறைபுரிந்திருக்கின்றாமக்
கொடியனைக்கொல்லல்வேண்டுங்கொன்றிடக்காலமின்றேற்
கடிதராதெம்மையீங்குகடவுளீரிருத்தல்வேண்டும். (கூக)

எம்பிரானினிதுவைகினெளியரேமச்சமின்றி
யும்பராலறியொணாதவுமதடிப்பூசையாற்றி
நம்புநூல்வேதநீதிநடந்துதீவினைசேராம
லிம்பரின்வாழ்வேமின்றேலினிவிதியிழப்போமென்றார். (கூஉ)

பத்தருக்கெளியரானபகவனார்முனிவர்தங்கள்
புத்தியின்விரைவுநோக்கிப்புரையெலாங்கடந்தவன்றோர்
சித்தமேபோலத்தூய்தாய்த்தெளிந்துதண்ணென்றநீருந்
தொத்தலர்பொழிலுஞ்சூழ்ந்தசூழலின்வனப்புநோக்கி. (கூங)

சந்தவண்மறைகடேர்ந்ததாபதர்மகிழத்தேவர்க்
கந்தணானமுக்கணங்கணன்கருணைகூர்ந்து
சுந்தரவுமையினோடுந்தொக்கபல்கணங்களோடுஞ்
சிந்தைவைக்கொல்லுங்காலுஞ்சிவணுதுமிங்கேயென்றான். (கூச)

ஒருங்குபன்முனிவரெல்லாமுவந்தனர்மருங்குநின்ற
பெருங்கணத்தலைவர்வல்லேபிறங்கொளிக்கோவிலொன்று
நெருங்கினர்மலர்மென்கூந்தனிமலையோடிறைவர்வைக
விருங்கதிர்மணியாற்பொன்னாலிழைத்தனர்கைலையென்ன. (கூரு)

அம்பலத்தாடுமையரம்மையோடாங்குச்செய்த
செம்பொனாலயத்துள்வைகித்திருத்தகுமுனிவர்போற்ற
நம்பியகருணைநாட்டநல்கிவாழ்ந்திருக்குநாளிற்
பம்புபல்லுயிரும்யோகம்படர்தரயோகமுற்றார். (கூசு)

விண்ணவர்க்கமுதரென்னும்விழுப்பெயர்நிறுத்தநீல
வண்ணமென்மிடற்றுநாதர்மாதவர்போலயோக
நண்ணியங்கிருப்பநோக்கிநங்கைபார்ப்பதிமுன்றாழ்ந்து
பண்ணமரினியசொல்லாற்பண்பொடும்வினாவலுற்றாள். (கூஎ)

வேறு.

அலரின்மேவியநான்முகனாரணனாதியோர்.
பலருநாளுந்தியானம்புரிந்துபராவுபு
நலம்விராவியநின்னருளாற்பொருணான்கையு
மிலமெனாவகையெய்துகின்றாரிதுவுண்மையே. (கூஅ)

அனையநீயவர்போல்விழிமூடியகத்திடை
நினையவேறொருதெய்வமுமுண்டுகொனின்மலா
நனையபூந்தருநல்லசிந்தாமணிநாடினோ
ரினைவுறாதுகொடுக்குமவர்க்கிடுவாரெவர். (கூகூ)

இருவர்தம்மையுமீண்டியவையகம்யாவையு
மொருவிமீட்டவர்தம்மொடுமோங்குலகத்தினைத்
தருமுருத்திரனீயவர்தம்மையுங்காத்திடுங்
குருவனீவளர்யோகங்குறித்தகுறிப்பெவன். (௧௦௦)

ஐயநீங்கவடியனுக்கோதுகவென்றனை
டையலின்னணந்தாழ்ந்துவினவலுந்தாழ்சடைச்
செய்யமேனியர்செங்கையினங்கிதிகழ்ந்தவர்
வையமுய்யமறைப்பொருள்வாய்மைவகுப்பரால். (௧௦௧)

வேறு.

துத்தியராவணைக்கடவுடோட்டலர்த்தாமரைக்கடவுள்
கொத்தலர்கற்பகக்கடவுள்கோதிலிவராதிகளா
லெத்திறநாந்தியானிக்கப்படுகின்றேமத்திறமே
யுத்தமியெம்மானினைக்கப்படுவெதுமொன்றுண்டதுகேள். (௧௦௨)

ஏகமாயநேகமுமாயீண்டியமாயையிற்படர்ந்து
சோகமாதிகள்விரவித்துளங்காதபேரறிவாய்த்
தேகமாதிகளுன்குஞ்செறிதருமாயையினியக்கிப்
பாகமாருயிர்க்களித்தும்விகாரத்திற்படாததுவாய். (௧௦௩)

பந்தமுமுத்தியுஞ்சாலப்பரப்புவதாயநாதியதா
யந்தமுமாதியுமிலதாயநாதியேமுத்தியதாய்
முந்தருவாயருவுருவாமுகிழுருவாயவையலதாய்ச்
சிந்தைமுதன்மூன்றினுக்குஞ்சேர்வரிதாயுளததுவாய். (௧௦௪)

நித்தியமாய்நின்மலமாய்நிர்க்குணமாய்நிராமயமா
யத்துவிதமாயென்றுமானந்தமயமாகு
முத்தமமாகியபொருளேயுளத்திடையான்றியானித்துப்
பத்திசெயப்படும்பொருளப்பரம்பொருண்மேற்பொருளில்லை. (௧௦௫)

அப்பொருடான்மனவாக்குக்காயத்தாலறிவரிய
மெய்ப்பொருளாதலினென்னைவிரவுசுந்தரவடிவா
யெப்பொழுதுங்கொண்டருளியிறைஞ்சுநர்கள்பூசனைகொண்
டொப்பரியவரமனைத்துமுதவுமொளிநுதற்பாவாய். (௧௦௬)

இந்தமொழிமந்தணமாமெவர்க்குமுரைத்திடப்படாச்
சிந்தையுளோம்புகவென்றார்தேவியெதிர்மீட்டிறைஞ்சி
யந்தவொருபொருடன்னையடியேற்குங்காட்டென்றுண்
மந்திரமுங்கோயில்கொளும்வள்ளலாரிதுவகுத்தார். (௧௦௭)

காவிநிகர்கருங்கண்ணாய்கடவுளர்கள்சிறைவிடுப்ப
வாவிதொறுநிறைந்தருளுமப்பொருளேயினிநின்பான்
மேவியொருபுத்திரனாய்வினையாடிவளர்ந்துகொடுந்
தீவினைசெய்சிந்துவுயிர்தெறும்விழியிற்காணுதியால். (௧௦௮)

அப்பொருணின்பான்மகனாயவதரிக்கும்படிநீயு
மிப்புவியிற்புரிதக்கவிருங்கருமமொன்றுளது
செப்பருமந்திரமொன்றுசெப்புதுங்கேட்டதுதன்னைத்
தப்பறவாறிருவருடஞ்சாதியெனவதுமொழிந்து. (௧௦௯)

மந்திரத்தையநுட்டிக்குமரபும்வகுத்தருளினார்
சுந்தரிநாயகர்மொழிந்ததுளக்கமிலேகாக்கரத்தை
யந்திலமர்மயூரேசராலயத்தின்முன்னிருந்து
சிந்தைவிழைவொடுங்கணித்துத்திருத்தகுமாதவம்புரிந்தாள். (௧௧௦)

ஈராறுவருடமுமங்கினிதொழியப்பார்ப்பதிமுன்
பாராதிதத்துவங்கள்பலவுமிகந்தெவ்விடத்து
நீராருநிழல்போலநீக்கமறநின்றருளும்
பேரானந்தப்பொருளேபிறங்குருக்கொண்டெதிர்நின்றார். (௧௧௧)

உருத்திரனானநடுவுமொளிர்பிரமமுகம்வலமுந்
திருத்துணைவன்முகமிடமுந்திரிசூலமழுக்கரமு
முருத்தகுகண்மணிமாலையொண்சங்குசக்கரமுந்
தரித்தருளுங்கரமாறுந்தவளவிடைவாகனமும். (௧௧௨)

கீற்றிளவெண்மதிபுனைந்தகேழ்கிளர்செஞ்சடைக்காடும்
போற்றியவேழ்விழிமலரும்புரையறுகற்பூரமெனத்
தோற்றுதிருவுருநிறமுந்துலங்கவெதிர்நின்றருளு
மாற்றருஞ்சீர்விநாயகரைவணங்கிவழுத்தினளுமையாள். (௧௧௩)

வேட்டவரம்யாதென்றுவிநாயகனார்வாய்மலர்ந்து
கேட்டருளவுமைமாதுகிளர்கருணையாலடியே
னாட்டமுறவெஞ்ஞான்றுநன்றுதரிசனங்கொடுத்து
வாட்டமறுத்தருளுமென்றாண்மற்றவர்தாமுரைசெய்வார். (௧௧௪)

சிந்துதயித்தியனுயிரைச்செகுத்தெம்மைவழிபட்ட
வந்தரர்க்குச்சிறைநீக்கியரும்பதங்களவர்க்களிப்ப
வந்துநினக்கொருசேயாய்வளர்குதுமென்றருள்செய்து
முந்துறையுமயூரேசமூர்த்தியிற்புக்கமர்ந்தனரால் (௧௧௫)

வீசுமொளித்திருமேனிவிநாயகனாரெதிர்நின்று
பேசுமருளனைத்தினையும்பிஞ்ஞகனார்க்குரைசெய்து
காசுதிகழகலல்குற்கவுரிமகிழ்ந்திருந்திடுநாண்
மாசுதவிர்விநாயகனார்மகிழ்சதுர்த்திவந்தடைய. (௧௧௬)

கொங்கவிழ்பூந்தொடையாதிகொண்டணிந்தமண்டபத்தி
லங்கரனார்திருவுருவமழகுறமண்ணாலியற்றித்
தங்குவிதியாற்பூசைதகவியற்றிப்போற்றிசைப்ப
வங்கதினின்றேரம்பரதிசயிப்பவெளிவந்தார். (௧௧௭)

பெருஞ்சோதிமயமாகிப்பிறங்கிறைவரெதிர்நிற்பக்
கருஞ்சோதிவிழிகூசிக்கவுரியுளம்வெருவுற்றாள்
வருஞ்சோதிவிநாயகர்பின்மலர்விழிவாய்செவியனந்தந்
தருஞ்சோதிமுகமனந்தந்தாள்கையனந்தமுமானார். (௧௧௮)

வணங்கிமலைமடமாதுவழுந்தியடிகேளுயிரின்
குணங்குறிகள்கடந்தகுணக்குன்றமேயிவ்வுருவி
னிணங்குறினீயெளியேனுக்கிணங்குமோவெனக்கிணங்க
வணங்கறுபாலகன்வடிவாயடுத்தருள்வாயென்றிரந்தாள். (௧௧௯)

திங்களவையொன்பஃதுஞ்சென்றுபிறந்திடுமழவாய்த்
தங்கிமலர்க்கரமாறுந்தயங்குமொளிவிழிமூன்றும்
பொங்கொளிநித்திலக்கோவைபுணர்மார்புமணிகிளரு
மங்கமுமுன்னுறத்தோன்றியமர்ந்தனரென்னுளத்தமர்ந்தார். (௧௨௦)

குருக்கத்திநிறங்கவற்றுங்கோமளமெய்யுருவானைப்
பெருக்கத்துமதிதழுவிப்பெயருமொருபூங்கொடிபோ
லுருக்கத்திற்காத்தேந்தியுற்றிறைபாற்கொடுத்தலரைக்
கருக்கத்தத்திடைவாங்கிக்கமழ்ந்தநறும்புனலாட்டி. (௧௨௧)

சவட்டியவுணரையெல்லாஞ்சகம்புரப்பவந்தவரைக்
குவட்டினுயர்மேருவரைக்கொழித்திழியுமருவியென
வுவட்டுமிருமுலைச்செழும்பாலூட்டினனுயகர்க்குழலைச்
சுவட்டணிதந்துலகமெலாந்தொழுநிற்குமாரணங்கே. (௧௨௨)

ஆசின்றியியம்பினவாலந்தரதுந்துபியைந்து
மாசின்றிவிளங்கியதுவான்முழுதுநீர்தெளிந்த
கூசின்றியிளந்தென்றல்குளிர்மணத்தின்வந்தசைந்த
தேசின்றியிமையார்களெழில்வலத்தோள்விழிதுடித்த. (௧௨௩)

குருதிமழைமிகப்பொழிந்தகொடியவன்கண்டகநகரிற்
பருவுறவஞ்சிறைக்கூகைபகற்பொழுதுமாமனையிற்
குருமணிக்கோபுரத்தலையிற்குழறியதுதிறற்சிந்து
செருமலியுமிடத்தோளுஞ்செங்கண்ணுந்துடித்தனவால். (௧௨௪)

இவ்வகையுற்பனங்காட்டவிடருழக்குமிமையார்சு
டெவ்வெனமெல்கியவுள்ளந்தழைத்தனர்களெறுழ்ச்சிந்து
வெவ்வமுறுத்துற்பனத்தினியனோக்கியுலகத்திற்
செவ்விதிற்சென்றதிசயங்கடேர்தரத்தூதரைவிடுத்தான். (௧௨௫)

வற்றன்மரங்களுந்தளிர்த்தவறந்தகறவையுங்கறந்த
வுற்றவிவையெதிர்நோக்கியுலகினுள்ளோரனைவர்களும்
பொற்றநலமுறுங்காலம்புல்லியதுபோலுமென
வற்றமுளத்திடைநீங்கியதிசயித்துமகிழ்ந்திருந்தார். (௧௨௬)

தூரிசில்கவுதமராதித்தொல்லைமுனிவோர்பலரும்
வரிசையொடுஞ்சென்றணர்மலரடிவந்தனைபுரிந்திட்
டரிசிதறும்விழியுமையாளங்கைமகவினைத்தொழுது
கரிசறுமென்றேதேர்ந்துகணேசரெனப்பெயரிட்டார். (௧௨௭)

விண்ணவர்கடொழுகுலமாய்வேதத்தினுட்பயனாய்க்
கண்ணினவரிடர்துமிக்குங்களைகணேயெனதுளமு
நண்ணியிரும்பணிகொள்ளுநாயகமாகியவிறைவர்
மண்ணவர்கண்மகப்போலமலைமகள்பால்வளர்கின்றார். (௧௨௮)

கிருச்சமதனெனுமுனிவன்கேண்மையொடும்வந்தடுத்துத்
திருச்சிறந்தகணேசரிருசேவடிகளுறவணங்கி
வுருச்சிறந்தவொளிவளர்பீதாம்பரமொன்றுவந்துதவி
மருச்செழுந்தண்வனத்திடைத்தன்வைப்பினுக்கேகினன்மீண்டு. ()

ஆங்காங்குத்தவம்புரியுமருந்தவரெல்லாமண்மி
யோங்காரப்பொருளானவொருமகவைத்தொழுதகன்றார்
பாங்கானமயூரேசர்பார்ப்பதிபாற்பிறந்துதித்து
வோங்காரத்துயர்கவசமொருமுனிவசெப்பினனதுகேள். (௧௩௦)

வேறு.

மாதவமரீசியென்பான்வந்தருட்கணேசர்செய்ய
பாதபங்கயங்கடாழ்ந்துபரிவொடுமீளவங்கண்
மேதகுமுனிவர்சூழ்ந்துவியத்தகப்பணிந்தெம்பாங்க
ரேதமெய்தாமற்சூட்சியியம்புகவெனமரீசி. (௧௩௧)

விக்கினமனைத்துந்தீர்க்கும்விக்கினராசனுன
வக்கணபதியேயிங்கணடுக்கலின்மகள்பாற்சேயாய்ப்
புக்கனனென்றானும்மைப்புல்லுமோவேதமந்த
மிக்கவன்கவசந்தன்னைக்கேண்மின்களென்றுவிள்வான். (௧௩௨)

வேறு.

முந்துகிரேதாயுகத்திற்றசபுசந்தேசுருவூர்திமூரிச்சிங்க
முந்துதிரேதாயுகத்திலாறுபுயஞ்சிவன்னமூர்திமஞ்ஞை
பிந்துதுவாபரயுகத்திஞற்புயஞ்செந்நிறமூர்திபிறங்குமாகு
நந்துகலியுகத்திலிருபுயந்தூமநடத்துபாய்மா. (கநங)

கிளந்தமுறைவிநாயகனையுளத்திருத்தித்தியானித்துக்கிளர்ந்தன்பாற்பின்
வளந்தழையுங்கவசத்தையுரைப்பவர்க்குப்பிணிவறுமைமண்ணைபூத
முளந்தளருந்துயர்கலையுறுபாவமுற்றபலவுமுடனேதீரு
மளந்தறியாப்பெருஞ்செல்வமாயுண்மனைமகவாதியனைத்துஞ்சாரும். (கநச)

மொழிதருமிக்கவசத்தைக்கசியபர்முன்முற்கலர்க்குமொழிந்தாரந்தக்
கழிபெருமாதவர்வணங்குமாண்டவியர்தமக்குரைத்தார்கரிசுதீர்ந்த
வழிவருமாண்டவியரெனக்குரைத்தனரம்மரபுநிலைவழாதவண்ணங்
கொழிதவத்துமுனிவரர்காளுங்களுக்குநாமிங்கேகூறுகின்றோம். (கநரு)

விநாயகர்கவசம்.

வளர்சிகையைப்பராபரமாய்வயங்குவிநாயகர்காக்கவாய்ந்தசென்னி
யளவுபடாவதிகசவுந்தரதேகமகோற்கடர்தாமமர்ந்துகாக்க
விளரறநெற்றியையென்றும்விளங்கியகாசியர்காக்கப்புருவந்தம்மைத்
தளர்வின்மகோதரர்காக்கத்தடவிழிகள்பாலசந்திரனர்காக்க. (கநசு)

கவின்வளருமதரங்கசமுகர்காக்கதாலங்கணக்கிரீடர்காக்க
நவில்சிபுகங்கிரிசைசுதர்காக்கநனிவாக்கைவிநாயகர்தாங்காக்க
வவிர்நகைதுன்முகர்காக்கவளரெழிற்செஞ்செவிபாசபாணிகாக்க
தவிர்தலுறாதிளங்கொடிபோல்வளர்மணிநாசியைச்சிந்திதார்த்தன்காக்க. ()

காமருபூமுகந்தன்னைக்குணேசர்நனிகாக்ககளங்கணேசர்காக்க
வாமமுறுமிருதோளும்வயங்கு கந்தபூர்வசர்தாமகிழ்ந்துகாக்க
வேமமுறுமணிமுலைவிக்கினவிநாசர்காக்கவிதையந்தன்னைத்
தோமகலுங்கணநாதர்காக்கவகட்டினைத்துலங்கேரம்பர்காக்க. (கநஅ)

பக்கமிரண்டையுந்தாராதார்காக்கபிருட்டத்தைப்பாவநீக்கும்
விக்கினகரர்காக்கவிளங்கிலிங்கம்வியாளபூடணர்தாங்காக்க
தக்ககுய்யந்தன்னைவக்கிரதுண்டர்காக்கசகனத்தையல்ல
லுக்ககணபர்காக்கவூருவைமங்களமூர்த்தியுவந்துகாக்க. (கநகூ)

தாழ்முழந்தாண்மகாபுத்திகாக்கவிருபதமேகதந்தர்காக்க
வாழ்கரங்கிப்பிரப்பிரசாதனர்காக்கமுன்கையைவணங்குவார்நோ
யாழ்தரச்செய்யாசாபூரகர்காக்கவிரல்பதுமவத்தர்காக்க
கேழ்கிளருநகங்கள்விநாயகர்காக்ககிழக்கினிற்புத்தீசர்காக்க. (கசo)

அக்கினியில்சித்தீசர்காக்கவுமாபுத்திரர்தென்றிசைகாக்க
மிக்கநிருதியிற்கணேசுரர்காக்கவிக்கினவாத்தர்மேற்கென்னுந்
திக்கதனிற்காக்கவாயுவிற்கசகன்னர்காக்கதிகழுதீசி
தக்கநிதிபர்காக்கவடகிழக்கிலீசநந்தனரேகாக்க. (கசக)

ஏகதந்தர்பகன்முழுதுங்காக்கவிரவினுஞ்சந்தியிரண்டன்மாட்டு
மோகையின்விக்கினகிருதுகாக்கவிராக்கதர்பூதமுறுவேதாள
மோகினிப்பேயிவையாதியுயிர்த்திறத்தால்வருந்துயருமுடிவிலாத
வேகமுறும்பிணிபலவும்விலக்குபுபாசாங்குசர்தாம்விரைந்துகாக்க. (கசஉ)

மதிஞானந்தவந்தானமானமொழிபுகழ்குலம்வண்சரீரமுற்றும்
பதிவானதனதானியங்கிருக[illegible]பரிணட்பாதி
கதியாவுங்கலந்துசர்வாயுதர்காக்கக்காமர்பவுத்திரமுன்றன
விதியாருஞ்சுற்றமெலாமயூரேசரெஞ்ஞான்றும்விரும்பிக்காக்க. (கசந)

வென்றிசிவிதங்கபிலர்காக்ககரியாதியெலாம்விகடர்காக்க
வென்றிவ்வாறிதுதனைமுக்காலமுமோதிடினும்பாலிடையூறின்று
மொன்றுறுமுனிவரர்களறிமின்கள்யாமொருவரோதினுலு
மன்றவராங்கவர்தேகம்பிணியறவச்சிரதேகமாகிமன்னும். (௧௪௪)

யாத்திரையிற்றோத்திரஞ்செய்தாற்சகலவிக்கினமுமிரியல்போக
மூத்தபயன்கைகூடுஞ்சமரின்மொழிந்திடில்வெயமுற்றுநாளு
மேத்தியிருமுறையிருபத்தொருநாள்வந்தித்திடின்மாரணமீண்டேத
நீத்திடுமுச்சாடனமாகருடணந்தம்பனமாதிநிலைபெறெய்தும். (௧௪௫)

நித்தலுமூவேழுமுறைசெபித்திடிற்காராக்கிருகநீங்குமன்னர்
பொத்துமுளநிட்டூரம்போமரையன்றனைக்காணும்போதுமுக்காற்
பத்தியினோதிடினவன்றன்வசப்படுவனிதைத்தாணிப்பனைமெல்லேட்டில்
வைத்தெழுதிப்படிப்பினுங்கேட்பினும்பூசைவயக்கினும்வல்லிடருந்தீரும் ()

அன்புறுதியாசாரமுடையார்க்கிக்கவசத்தையறைகவல்லார்க்
கென்பெறினுமுரையற்கவெனக்கிளந்துமரீசிதனதிருக்கையுற்றான்
பின்புதவமுனிவரதைப்பேணினர்கள்கவசநவில்பெற்றியீதாந்
துன்பமறவருநாதர்விளையாட்டையினித்தொகுத்துச்சொல்லுவாமால். ()

திருவிளையாடல்.

சிந்துவிடுத்ததூதுவர்கடிசையோரெட்டும்பாதலமுங்
கொந்துவிரியுங்கற்பகப்பூங்கோணநாடுமெவ்விடனு
முந்துமனவேகமுந்தணியவுற்றுப்புதுமைகாணலராய்
வந்துவளர்தண்டகவனத்தில்வளருந்திரிசந்தியையடுத்தார். (௧௪௮)

அற்றமகன்றமறையொழுக்குமான்றமுனிவர்தவப்பெருக்கு
முற்றுமுணர்ந்தாருமையோடுமன்னியமர்ந்தவருட்டருக்கும்
வெற்றிவிளங்கமகப்பயந்தவிமலையுளத்துப்பெருவியப்பு
மொற்றிவிரைந்துபோய்ச்சிந்துவொளிர்தாள்வணங்கியுரைசெய்வார்.

எங்குமடுத்தோம்புதுமையொன்றுமெய்தக்கண்டிலேமெந்தாய்
தங்கிவளர்தண்டகவனத்திற்றலமாந்திரிசந்தியின்வேணிக்
கங்கையணிந்தாருமையோடுகலந்துவாழமுனிவரர்க
ளங்கணனந்தர்குழீஇத்தவங்களாற்றித்தருக்கியிருக்கின்றார். (௧௫௦)

ஈண்டுமுனிவர்பலருள்ளுமெண்பத்தெண்ணாயிரமுனிவர்
வேண்டினுலகமூன்றினையும்வீட்டிமீட்டும்படைத்தளிக்கு
மாண்டதிறத்தின்வல்லவர்கள்வகுப்பதரிதாமவர்பெருமை
யாண்டசிவனேயடுத்திருப்பினவர்தம்பெருமைக்களவுண்டோ. (௧௫௧)

இதுவேபுதுமையெனநினையேலின்னும்புதுமையொன்றுளது
மதுவார்மலர்மென்குழலுமையாள்மாண்டதவத்தாலொருமைந்தன்
விதுவாரத்தின்விநாயகர்க்குவியப்பாஞ்சதுர்த்திவிசாகமிவை
கதுவாநிற்பச்சிங்கவிலக்கினத்தினொருநற்பிறந்தானே. (௧௫௨)

வெள்ளைநிறமும்புயமாறும்விழிகண்மூன்றும்பெருவலியுந்
தெள்ளுமொளிநித்திலவடமுஞ்சிறந்தவுருவுமருவிவளர்
வள்ளலவர்க்குமுனிவரர்கள்வகுத்துக்கணேசரெனுநாமம்
பிள்ளையெனவெண்ணிலர்வணக்கம்பேணுநின்றார்முப்பொழுதும். ()

பட்டாங்குரைப்பத்தூதுவர்கள்பலவுங்கேட்டுவலிசிந்து
கெட்டேனெனதாருயிர்கெடுப்பக்கேடிலாதவிநாயகனே
யொட்டானெனப்பார்ப்பதியாங்கருதித்தானெனவுன்னலும்வானின்
முட்டாதொருவாக்குனைவல்லேமுடிப்பானவனேயென்றதுவே. ()

மாறுயெனக்கிங்குரைத்தாரைவல்லேபிடிமினடிமின்கள்
கீறுவுடலைப்பருந்தினெதிர்கெழுமவெறிமினெனச்சினந்து
தேறுவுளத்துச்சிந்துசொலத்திறல்சால்வயவர்சிலர்தேடிக்
கூறுநின்றுமறைந்தாரைக்குறுகிக்கண்டிலேமென்றார். (௧௫௫)

ஆற்றுவுளத்தோடெறுழ்ச்சிந்துவழல்கொப்புளிப்பச்சினந்தெனக்கு
மாற்றானும்பிள்ளையையின்றேவவ்விவருவேனெனவெழுந்தான்
றேற்றுநிற்கும்வலியமைச்சர்சென்றுமலர்த்தாளுறவணங்கிப்
போற்றுநின்றுமனங்குளிர்ப்பப்புரைதீர்மொழியாற்புகலுவார். (௧௫௬)

திருமான்முதலாந்தேவரையுந்தெய்வமுனிவர்பலர்தமையு
மொருவாச்சிறையிலுறுத்தியநீயுந்திக்கொடிவாடாமகவைக்
கருதாநுகநீனேந்தேகல்கடனோவறம்பாராவிடினும்
பெருவானொளியும்பெரும்புகழும்பெருமைமுழுதுமொருங்கறுமே. ()

நமதுபடைக்காவலர்வெளியேநண்ணலுறினுமிழிவாகும்
விமலன்மகனைப்பெருவலியைமேவாரானுங்கொளலரிதாஞ்
சமரின்மிகுந்துமாயையினுந்தணியாவவுணர்கரந்தேகி
யமருமயலாரறியாமையடர்த்துவரலேமுறையென்றார். (௧௫௮)

எந்தமுறைமைபுரிந்தேனுமெனக்குப்பகையாகியவுமையாண்
மைந்தனுயிரைச்சிந்துகெனமன்னனவுணர்தமைக்கூவிச்
சந்தமணிப்பூண்கரியிரதந்தாவுபரிமான்படைபலவுஞ்
சிந்துமழையிற்கொடுத்துவப்புச்செய்துவிடுத்துவீற்றிருந்தான். (௧௫௯)

வேறு.

கொடியபாதகமுழுதுருக்கொண்டகொள்கையினர்
கெடியமாயவனுதியோரஞ்சுகீர்மையினர்
படியிலாத்திறத்தாரவர்பலரும்வெவ்வேறு
முடியவேதினங்கணேசர்பான்முற்றினர்முறையால். (௧௬௦)

கிருத்திராசுரன்கழுகுருவாய்க்கிளர்சிறகின்
மருத்தினல்வரைதுளங்கநீண்மரந்தரைவீழப்
பெருத்தமேகங்கடுய்யெனப்பெயர்தரப்பூழி
யுருத்தயானையும்பொத்திடவும்பரிற்படர்ந்தான். (௧௬௧)

கோட்டுமென்மலர்க்குழலுமைதுலங்குமுன்றிலினீ
ராட்டிவைத்திடுமண்ணலையைதெனப்பாய்ந்து
சேட்டுவன்னியைமின்மினியெனச்சென்றுகுருவி
கூட்டின்வைத்திடவெடுத்தெனக்கொண்டெழுந்தனனே. (௧௬௨)

வெருவிநின்றனர்முனிவரர்விறற்கணநாத
ருருமெனக்கனன்றும்பரிற்பாய்ந்தனர்மீட்பப்
பொருவில்புண்ணியனதற்குமுன்புள்ளிருங்களத்தை
யொருகரத்தினினெரித்துமீண்டுமைமடியிருந்தான். (௧௬௩)

கழுகின்வல்லுருக்கழிதரக்கிருத்திராசுரன்செத்
தொழுகுசெம்புனலோடுவீழ்ந்தனனிலமீது
தழுகொழுங்கொடிமரம்பத்தியோசனைதகர்ந்த
முழுகிநின்றனவுலஞ்சிலைமுடுகுநெய்த்தோரின். (௧௬௪)

மூன்றுநாளையிற்குழவிமூவாப்பெருமாயை
சான்றதானவனுயிரினைச்சாடியதோவென்
றான்றமாதவரதிசயமுற்றனர்நோக்கி
மான்றுதானவர்மதியினுள்ளச்சமுற்றொழிந்தார். (௧௬௫)

ஆறெட்டியயோசனையுயர்ந்திமெவுணர்
வேறிரண்டெனுந்திங்களினிருவர்கண்மேவிச்
சீறுமாகுவாய்க்கலாங்கொடுசென்றமேல்வீழ்ந்தார்
கூறுநாயகர்பூஞையாய்க்கறித்துயிர்குடித்தார். (௧௬௬)

இரண்டுதிங்களிற்கேமனுங்குசலனுமெய்திப்
புரண்டசெய்திகேட்டுள்ளகம்பொறாதுமும்மதியின்
முரண்டுழாவியகுரூரன்மூவைந்திய்யாசனையான்
றிரண்டசாவலைப்பூசையாய்க்கடந்துமுன்சென்றான். (௧௬௭)

நாதர்பூஞையாய்நண்ணியவசுரனையறிந்து
வேதநான்கையுநினைத்தனர்விரைந்தவைநாயாய்க்
காதமேழுறக்கடிப்பொடுபுகுபுகடித்துப்
போதன்மேயினபுகழ்நதனர்கண்டவரெல்லாம். (௧௬௮)

திங்கணான்கினிற்பலாசுரன்முனிவர்தஞ்சிறாஅ
யங்கணுற்றுநாமல்விளையாடுவோமென்றா
னெங்கணுயகரறிந்ததுபுரிந்துயிரிழுத்தார்
மங்கவீழ்ந்தனனிருபதியோசனைமண்மேல். (௧௬௯)

ஐந்துதிங்களில்வியோமனென்றுரைபெறுமசுரன்
மைந்துகொண்டதேமாவெனவளர்ந்துவான்கங்கை
யுந்திபூடுசெம்பவளம்போலொளிர்தளிர்பரப்பி
முந்துவையகமுழுவதுநிழற்றிநின்றனனால். (௧௭0)

தூங்குமென்கனிகாய்வடுதுன்னிடநோக்கி
யாங்குவைகியமுனிச்சிறார்சிலரடுத்தன்பால்
வாங்கிமென்றுதின்றங்கணேயாருயிர்மாய்ந்தா
ரோங்குமின்னலுற்றழுதனருறுவரர்மடவார். (௧௭௧)

அக்கணத்திடையவ்வயினடுத்தநங்கணேசர்
கொக்குமிக்கதன்பாரையிற்கொழுஞ்சுவைப்பிரசந்
தொக்கபல்லிறற்கோடரந்தோறறலுமதனிற்
புக்குநின்றனர்பொந்துவாய்மூடியதன்றே. (௧௭௨)

பாணியாறுடைக்கடவுளார்படிவமும்வெளியே
காணிலேமிதுமரபன்றுகைதவவுருவம்
பேணியாரையுங்கொலவரும்பெரியகூற்றென்றே
யேணிலாதவராயிரிந்தாரிருடியரே. (௧௭௩)

ஆயகாலையிலதன்வயிற்றிருந்தவாறமலர்
காயபூஞ்சினைக்கவிழிணர்மரத்தினையலைத்துப்
பாயபூமியில்விழுதரப்படுத்துவார்தூணின்
மேயமானிடமடங்கல்போல்வெளியின்வந்தனரால். (௧௭௪)

மாய்ந்தமாதவச்சிறாரையுமெழுப்பினர்முனிவ
ராய்ந்துமேலைநாளாயிரத்தெட்டெனுமண்ட
மேந்துதோளுடைமாவினையிறுத்தவன்றமையற்
கேய்ந்தமாவிஃதிறுத்தலோவரிதெனவிசைத்தார். (௧௭௫)

எருமைநாடொறுநூறுதின்பவளிதுதன்றூற்
பெருமையார்சதமயிடபக்கணியெனும்பெயராண்
மருவிமாவெனமாய்ந்தவன்பின்வருமாது
பொருவிலாவயிராணிதனுருக்கொடுபோந்தாள். (௧௭௬)

தாழ்ந்துபார்ப்பதிதனக்குமுன்னின்றுவாசவனில்
வாழ்ந்துளேனவனவுணன்வன்சிறையிடைநெடுநா
ளாழ்ந்துளானதனுனிணையடுத்துளேனென்னைச்
சூழ்ந்ததுன்பறக்காவெனச்சொல்லிமிக்கழுதாள். (௧௭௭)

கருணைநாயகிமெய்யெனக்கருதியீதுரைப்பா
டருணமல்கியசசியெனுமாதுகேளிருளை
யருணனுண்டெனவவுணரையறுபுயனறுத்துப்
பொருணயந்தவிண்ணவர்க்கருள்புரியுஞ்சிலபொழுதில். (௧௭௮)

இந்திரன்சிறைநீங்கிடுமளவுமிங்கிருநீ
சிந்தையின்னலைவிடுகெனச்செப்பியூண்டுகில்பூண்
டந்தளித்தனடகுவர்மாதிருந்துசோர்பதத்தி
னந்தின்மைந்தனையங்கையோடந்தரத்தெழுந்தாள். (௧௭௯)

எழுந்ததாக்கணங்கொக்கலையிருந்தருள்கணேசர்
செழுந்திண்டோளிடைத்துயல்வருஞ்செஞ்செவிகரத்தா
லழுந்தவன்மையிற்பற்றிமற்றவளகனிலமேல்
விழுந்துநீறிடாவிருத்தினர்மேவினருமைபால். (௧௮0)

மேதிதின்பவளாறெனுந்திங்களின்விளியக்
காதிவெல்வலென்றேகமடாசுரனதுவா
யோதிமென்மெலப்பெயர்ந்தெனவூர்ந்துசென்றடுத்தான்
சோதிவித்தகனுட்டயர்சூழலேழ்மதியில் (௧௮௧)

கடல்கலக்கியசக்கரமேந்தியகமடத்
துடல்கலக்கியதாளினுலெலாய்யெனச்சவட்டி
மிடல்கலக்கியகமடத்தைவிளித்துமெல்லிழையார்
மடல்கலக்குமிக்கழகுடைக்கணேசர்வைகினரால். (௧௮௨)

எட்டுத்திங்களிற்கணேசரோடெழில்வனமடுத்து
மட்டுத்தொங்கலின்குழலுமையெக்கரின்வதிந்தாண்
மொட்டுத்தங்கியசினைமலர்முருகுவார்மதுவுந்
தொட்டுத்தென்றல்வந்தசைதரத்தோழியரோடும். (௧௮௩)

பொற்பவைகியாட்டயர்தருபொழுதந்தப்பொழிலிற்
கற்பனென்றொருதானவன்வலியினுற்கனக
வெற்பைவென்றவன்வேகத்தாலிரவியேழ்வென்றோன்
சிற்பமல்கியவிவுளிமாவெனவெதிர்சென்றான் (௧௮௪)

அப்புற்றேறியசடையவர்மைந்தனுரடுத்துக்
குப்புற்றேறினர்செலுத்தினர்கொண்டதுநாகர்
வைப்புற்றேழ்கடற்றீவொடுமொதிரம்வான
மொப்புற்றேறுநரில்லெனவுற்றுமீண்டதுவே. (௧௮௫)

சோலைவாய்விரவலுங்கதித்துரகதம்விடுத்திட்
டாலைபாயுளத்தம்மைபாலடுத்தனர்கணேசர்
வேலைவாய்நுரையெனக்கடைவாய்விலாழியதாய்
வாலையாட்டுமொகுடரற்றுமறிந்துமாய்ந்ததுவே. (௧௮௬)

இருபத்தைந்தியோசனையுறுமெல்லைதன்னியல்பா
முருவத்தோடும்வீழ்ந்திறந்தனனுற்றவத்தகுவன்
கருவித்தேம்பொழிலூடவன்கதறிவீழ்காட்சி
வெருவிப்போயொருமலைகடல்விழுதல்போன்றதுவே. (௧௮௭)

துந்துபிக்குரலுடைமையிற்றுந்துபியென்னு
மைந்துடைக்கொடுந்தானவனென்பதாமதியிற்
சந்தமைக்கருவிடஞ்சம்புகனியெனச்சமைத்து
வந்தருட்கணேசரையழைத்தனன்மறைச்சிறுன்போல. (கஅஅ)

செம்மையில்லவன்சிந்தனையறிந்தருட்கணேச
ரம்மைநல்கியவமிழ்தமோதகங்கொடுபோகித்
தம்மெனக்கனியனைத்தையுந்தலையசைத்துண்டார்
விம்மிருஞ்சுவைமோதகமவனுணவீசி. (கஅகூ)

மோதகஞ்சுதையாகியுமூரியவல்விடமாய்ப்
பாதகன்றனைக்கொன்றதுபலவிடமாயு
நாதனுக்கமுதாயதுநல்லதுந்தீயோர்க்
கேதமுற்றிடுந்தீதுநன்றாமியல்பினர்க்கே. (ககூ0)

விண்ணைமுட்டியசிரத்தினன்விண்டுவாதியர்த
மெண்ணைமுட்டியவலியினனசகரனென்பான்
மண்ணைமுட்டியசேடனேயெனமலைப்பாம்பாய்ப்
பண்ணைமுட்டியவனம்படர்ந்தான்மதிபத்தில். (ககூக)

அற்றைஞான்றினுமுமைவிளையாடவவ்வனத்தி
லுற்றுவீற்றிருந்திடச்சிறுரோடும்வேறெய்தி
யெற்றைஞான்றினுமிடர்தபுங்கணேசராட்டயர்ந்தார்
பற்றிவாய்மடுத்திட்டனன்பாந்தளாய்ப்படர்ந்தோன். (ககூஉ)

இராகுவெண்மதியுண்டெனவெடுத்துவாய்மடுத்த
வராவயிற்றிடையடங்குமோவாக்கைகீண்டெழுந்தான்
தராதலந்தரித்திடுமராவகட்டசைத்தவன்மெய்
விராவுசோரியால்விலங்கன்மேலெழுங்கதிரொத்தான். (ககூ௩)

நூறியோசனைநொறில்வரையெனவவன்கிடந்தா
னூறியாறுபோலோடியதுதிரநீர்வெள்ளந்
தேறிநீரினுலாட்டினுள்சிறுவனைக்கொண்டு
மாறிலாததன்கோயிலிற்படர்ந்தனண்மலைமான். (ககூ௪)

பத்தினேடொருதிங்களிற்பார்ப்பதிமலர்ப்பூங்
கொத்தின்வார்குழன்முனிவரர்கோதையரோடும்
பைத்தசோலையிற்பண்டுபோற்படர்ந்துவீற்றிருந்தங்
கத்தனுகியகணேசனையாடலின்விடுத்தாள் (ககூ௫)

ஒருத்திதன்மடித்தலத்திடையோடினனிருந்து
மொருத்திவேண்டிடவுவந்துவாய்முத்தநன்றளித்து
மொருத்திமார்புறத்தழுவியுமொருத்திதோளிவர்ந்து
மொருத்திபூணணிசிதறியுமொருத்தியையடித்தும். (ககூ௬)

ஓடிப்போயொருநெடுமரமூலத்தினெளித்து
நாடிப்பாவையர்தங்களைநணுகிமுன்பிடித்துங்
கூடிப்பாவையர்விழிகளைக்குடங்கையிற்புதைத்து
மூடிப்பார்வையைமாதாரர்விடநகைமுகிழ்த்தும். (ககூஎ)

ஆடல்பற்பலவரிவையர்குழாத்திடைப்புரிந்து
வாடல்வெண்டலைமிலைத்தவர்மைந்தனுங்கிருப்பக்
கூடலன்விடப்படுஞ்சமலாசுரன்குறுகி
நீடல்வன்சிறைச்சாபமாய்நெடுவிசும்பெழுந்தான். (ககூஅ)

சிறகடிக்கொளுந்தொறும்வரைத்திரள்குவடுருளப்
பறவைதுய்யெனச்சிதர்படப்பாதவம்வீழ
வறனெடுங்கடற்றிரையெழுந்தவனியையலைப்ப
மறமிகுந்தவன்வருதல்கண்டிரிந்தனர்மடவார். (௧௯௯)

எட்டுக்காலொடுமிரண்டுவன்றலையொடுமெரிகால்
வட்டக்கண்ணொடும்வளைபிறையெயிற்றொடுந்தழங்கிக்
கிட்டிக்கொண்டவச்சிம்புளின்கிளர்ச்சியையஞ்சி
விட்டுக்கண்ணுதற்குரைத்திடவோடினள்விமலை. (௨௦௦)

நரமடங்கலைத்தாக்கியநாலிருபுயத்துச்
சரபனல்கியபிள்ளைதானவனெனுஞ்சரப
வரவையஞ்சுமோவளர்ந்ததன்கால்களைப்பற்றிப்
பரவுவச்சிரப்பாறையிற்படவெறிந்ததுவே. (௨௦௧)

சிம்புடன்னுருவானவன்சிதர்ந்துருவழிந்தான்
சிம்புடன்னுருவாயரிச்சினந்தனன்றந்தை
சிம்புடன்னுருச்சிந்தினன்சிறுவனிங்கிவனே
சிம்புட்சிம்புளென்றருந்தவர்செப்பினர்பணிந்தார். (௨௦௨)

விரவுபன்னிருதிங்களில்வீமனென்றசுரன்
பரவுவிச்சுவகன்மனுப்படிவம்வேறெடுத்துத்
தரணியஞ்சுறுஞ்சலாசுரன்சிலாசுரனிவரை
யரவவொண்சிலம்பாக்கியங்கைக்கொடுபோந்தான். (௨௦௩)

செண்ணவன்சிலம்பினைத்திருவடிகளின்வைத்து
வண்ணவஞ்சனையாலெதிர்வணங்கினன்ஞானக்
கண்ணனன்னவன்கைதவமறிந்துதன்னுளத்தி
னெண்ணம்வேறறவின்சொலான்மகிழ்வித்தபின்னர். (௨௦௪)

சிலம்புதெய்வதமறையடிக்கொண்டுதிண்மேருச்
சிலம்பையங்கையின்வாங்கினார்சிறுவனையந்தச்
சிலம்புசெய்வதெனவற்றினைச்சீறடியணிந்து
சிலம்பநின்றெழுந்தாடினன்றேவர்கடலைவன். (௨௦௫)

பூதமாடினபுவனங்களாடினபொருப்போ
டோதமாடினவுயிர்த்தொகையாடினபூத
நாதராடினர்முனிவராடினர்நான்கு
வேதமாடினவிமலனுமாடினனம்மா (௨௦௬)

நிருத்தமெய்தலுஞ்சிலம்புருவாநிசிசரர்கள்
வருத்தமெய்தினர்வள்ளலாருதறினர்பதத்தைப்
பொருத்தமத்துணைநீங்கிப்போய்வீமனைப்புரட்டிப்
பருத்தகுன்றெனப்படிவிழுந்தனர்பழவுருவின். (௨௦௭)

சுலாவுமூவருமாய்ந்தமைதூத்தவர்நோக்கி
நிலாவணிந்தவர்மைந்தனைநிருத்தநாயகனைக்
குலாவுமன்பொடுபணிந்தனர்கும்பிடினவனை
யுலாவுறுநலமிம்மையுமம்மையுமுறுமே. (௨௦௮)

ஆவியென்பவன்புத்திரனாவிசனென்னுந்
தாவில்வெஞ்சமர்த்திறத்தினன்றகுசிருரோடு
மேவியுத்தமக்கணேசனுட்டயர்வெறியனைத்தி
னேவின்மும்மதக்களிற்றினுற்றனனந்தமதியின். (௨௦௯)

குத்திநீள்வரைக்கோட்டுமெண்கொள்ளுங்கோட்டோடு
மத்திமேற்செலவஞ்சியசிறுரைக்கையமைத்து
மெத்துவான்வலிமடங்கல்போல்விநாயகர்பாய்ந்து
கைத்தழீஇயவங்குசவரியாற்கவுட்புடைத்தான். (உகo)

வெருவிப்பின்னடிவைத்திடும்வேழத்தின்மருப்பை
யருவிப்பைங்கடமாகம்பாய்தரக்கரம்பற்றி
யிருவிப்புட்காப்பிடியினுக்கிடங்கொடாதெழுந்து
மருவிப்பண்பொடுபிடர்த்தலைக்கடாவினர்வலித்து. (உகக)

ஒளிறுகாற்பெருவிரலிணைக்கழுத்தடியுறுத்தப்
பிளிறுமோடுமெண்டிசையினும்பெயர்தருமீளும்
வெளிறுறுவலிவிநாயகரிருத்தலும்வீழ்ந்து
களிறுமாய்ந்ததுவேனிலினிடிக்குரல்காட்டி. (உகஉ)

உமைநடுங்குறமேல்வருமும்பலையடர்த்த
விமையவில்லினன்மைந்தனுகலினிருங்களிற்றைச்
சுமையெனம்புவியலமரத்தொலைத்தவீழ்த்தனனென்
றமைவர்கைதொழுதாடினர்பாடினர்துதிகள். (உகங)

ஆண்டிரண்டினிற்கூடனென்பவனருஞ்சிறுர்க
ளீண்டவெம்பிராளுட்டயரிடத்தொருதடத்திற்
றீண்டுதற்கருநஞ்சினைச்செறிதரக்கலந்து
நீண்டவிண்ணிடையுருக்கரந்திருந்தனனெடிது. (உகச)

தடத்திற்றேய்ந்தெழுங்காலினுற்றருக்களுமெரிந்த
மடத்தினலதிலாட்டயர்வண்சிறுராவி
படத்தனுதிடவிழியினுற்பார்த்தனர்கணேசர்
விடத்தினீங்கினர்வியன்றடமமுதமாகியதே. (உகரு)

நெற்றிக்கண்ணினுநோக்கினர்நெடுவிசும்பிருந்த
வெற்றிக்கூடன்வெந்துக்கனன்வெண்பொடியெனவே
பற்றிக்காமனையெரித்தவர்பயத்தருள்கணேச
ருற்றுத்தீயினையெரித்ததுமொருவியப்பன்றே. (உகசு)

மும்மையாண்டினின்முனிச்சிறுரொடும்புறவனம்போ
யெம்மையாண்டவரிருபதியோசனையகன்று
விம்முதேமலரணிந்திடும்வியன்றடமொன்றி
லம்மெனீர்படிந்தாடினரலர்பறித்தெறிந்து (உகஎ)

விகிர்தனென்றொருதானவன்மகரமாய்மேவ
மகரமொன்றனைக்கடலின்முன்வலையிடைப்படுத்தோன்
மகனறிந்ததைவண்கையினிறுகுறப்பற்றித்
தகரவன்கரையெற்றினன்றானவன்மடிந்தான். (உகஅ)

ஆங்குநீங்கித்தன்னுச்சிரமத்தைநோக்கிப்
பாங்கினேகுழிப்படர்தருநெறியிடைவிலங்கி
யோங்கலாய்ப்பலவளர்த்தொடுமும்பர்நாடளந்து
வீங்கினின்றனனிடும்பனென்றுரைத்திடும்வெய்யோன். (உகக)

மிக்கமாயையின்கிரவுஞ்சவிலங்கலைத்துளைத்த
செக்சர்வேற்கரச்சிறுவன்முன்றேன்றியசிறுவன்
றக்கநெட்டுயிர்ப்பெறிந்தனன்றானவனுடலம்
பக்கொழிந்ததுகுறைவாய்ப்பஞ்சியேயென்ன. (உஉo)

வருடநான்கினின் மலைமகள்வார்புனலாடிப்
பொருவிலாச்சிவலிங்கபூசனைபுரிபொழுதிற்
றெருவிளுட்டயர்ந்தேகியசெம்மலாரோடிப்
பெருகுபான்முலையுண்ணுவான்பெட்பொடுமடுத்தார். (௨௨௧)

அடுத்திடேல்சிவபூசனையாம்வணையென்னுத்
தடுத்துளாளுமைதடுப்பருந்தலைமையைத்தெரிப்பார்
மடுத்ததாய்மனப்பாவனைவரதனுருருவே
யெடுத்துநேரெதிர்நின்றனரென்னையாள்கணேசர். (௨௨௨)

காளகண்டமுங்காமருமுகங்களோரைந்துந்
தோளிரட்டியுமனைத்துளவுருவமுந்தோற்றி
யாளுமெய்யருட்சதாசிவராமெனநின்றார்
தாளிறைஞ்சியென்பிழைபொறுவென்றனடையல். (௨௨௩)

பெற்றதாயுளப்பரிவினைநோக்கியபெருமா
னிற்றைநாண்முதற்றடுத்திடலின்றியேமுலைப்பா
லுற்றபோதெலாந்தருவைகொலெனவுரைத்தருளிப்
பொற்றகான்முளையாகியேபருகினர்பொழிபால். (௨௨௪)

அன்னைதன்மடித்தலத்திடையமர்ந்துபாலருந்தி
மன்னுசெவ்வியிற்கருத்தமனென்னும்வாளவுணன்
றன்னும்விஞ்சையின்வல்லவன்போலமுன்றோன்றிப்
பன்னுபற்பலவிஞ்சைகள்பயிற்றினன்வியப்ப. (௨௨௫)

அருந்தவத்தினர்சிறுரையங்காந்துவாய்மடுத்து
பொருந்துகாதுகண்மூக்கினில்வெளிக்கொளப்பூத்தான்
றிருந்துகாதுகண்மூக்கினிற்செலுத்திவாய்தன்னுல்
வருந்தலின்றியேயுமிழ்ந்தனன்மலைமகள்காண. (௨௨௬)

சிறுரைப்போலவுட்செலுத்துபுவெளியிடைமீட்டு
மிறுதுநல்குவலெனக்கணேசனையுளத்திட்டங்
குறுதெழுந்தனறெய்யெனவுமைமுகத்தெழுந்து
பொறுததானவன்கவுட்புடைத்துருட்டினன்புனிதன். (௨௨௭)

அண்டகோடியுமகட்டிடையடக்கியவமலன்
மிண்டுதானவன்வியன்வயிற்றடங்குமோவென்னக்
கண்டமாதவர்கைதொழுதாடினர்களித்தார்
வண்டுவார்குழலன்னையுமதிமுகமலர்ந்தாள். (௨௨௮)

நெடுங்கழுத்தலாய்நிகழ்ந்தவைந்தாமெனுமாண்டி
னடுங்கொலைத்தொழிலோடுகட்காசுரனடுப்பக்
கொடுங்கைமுட்டியகரத்தினுற்கொம்மெனக்கொன்று
னடுங்கலின்றிவையகமெலாங்காத்திடுநாதன். (௨௨௯)

சாயைபற்றுதல்வல்லசாயாசுரனடுத்துச்
சாயையில்லவர்சிறைவிடச்சார்ந்தருள்கணேசன்
சாயைபற்றினனழலுறுபஞ்சியினவிந்தான்
சாயைதன்னையும்பற்றுவரியாவர்தத்துவன்பால். (௨௩௦)

முஞ்சிசுற்றியவரைமறைச்சிறார்கண்மொய்குழாத்துச்
சஞ்சலப்பெயர்தானவன்றனுமோர்சிறுனய்
மஞ்சர்தன்னெடுபந்தடித்துடைந்துவென்வழங்கி
விஞ்சியும்பரினெழுந்தனனிருத்தினன்விமலன். (௨௩௧)

மனைதொறுங்குறும்பியற்றலுமாதவர்பற்றி
யனைமுனுய்த்தவள்சிறையிடக்கண்டனர்மீண்டவ்
வினையிலந்தணர்மனைதொறுங்குறும்புசெய்திருக்கு
முனைவன்செய்தியையறிந்தனரஞ்சினர்மொழிவார். (௨௩௨)

ஏகனாகியுமனேகனாகியுமெங்குமாயும்
போகயோகங்கள்வழங்குபுண்ணியனெனநின்னை
மோகமூழ்கினோமின்றறிந்தனமினிக்கருணை
யீகயாம்புரிபூசனைகொண்டெனவியம்பி. (௧௩௩)

செப்புபூசனைமனைதொறுஞ்சிறப்புறச்செயவங்
கப்பமோதகமாதிசிற்றுண்டியுமளித்தா
ரொப்பிலாதவனுவந்துசிற்றுண்டிகண்மகார்க்கு
வைப்பினீமின்களதுநமக்கினிதெனவகுத்தான் (௨௩௪)

அற்றைநாண்முதற்கணேசருக்களித்தசிற்றுண்டி
பற்றினோடவர்சிறாருக்குப்பகர்ந்தனரெவரு
மிற்றைஞான்றினும்விநாயகர்க்கினிதுறவூட்டு
முற்றதீஞ்சுவையுண்டிமுன்வழங்குவர்சிறார்க்கு. (௨௩௫)

விரவுமாறெனுமாயுளின்விச்சுவகன்ம
னரவமாலையினம்பனோடன்னையையடுத்துப்
பரவியேரம்பன்பதமலர்பணிந்துமுன்வைத்தான்
பரசும்பாசமுந்தோட்டியும்பங்கயமலரும். (௨௩௬)

படைகள்யாவெனவினாயினன்படைக்கலமுழுது
முடையநாயகனாகியவொருபெருங்கணேசன்
றொடைசெய்நாயகற்கெதிருறமறுவலுந்தொழுது
விடைசெய்வான்வரும்விச்சுவகன்மனும்விரகன். (௨௩௭)

தனியனேனுயிர்த்தெடுத்தபெண்சமுஞையென்பவளைப்
புனிதமன்றலாற்புணர்த்தினேன்சூரியற்கவன்மெய்
நனிவெதுப்பலிற்சாயையைநங்கைதன்போல
வினிதிருத்தினண்மீண்டுவந்தென்மனையிருந்தாள். (௨௩௮)

பருதிவானவன்பின்னுறப்படர்ந்தனன்பாவை
வெருவிமாவெனவனத்திடைமேவினளடியேன்
கருவிவாயவனுருவினைக்கடைந்தனன்சாந்த
மருவிமாவெனத்தானுமம்மாதினைமணந்தான். (௨௩௯)

இன்பமல்குமச்சுவனிதேவர்களவர்க்கெழுந்தார்
பின்புபண்டையவுருவினைப்பேணினர்வாழ்ந்தார்
துன்பறுக்குமச்சுடருருக்கடைந்துகுபொடியை
வன்பின்மல்குமிப்படையொடுசூலமும்வகுத்தேன். (௨௪௦)

சூலமீசனார்க்களித்தனன்றொக்கநாற்படையு
மூலகாரணமானநின்முன்னுறவைத்தேன்
சாலநாயினேனுய்யுமாதரித்தருளென்றான்
கோலமார்தருகுடங்கையினணிந்தனனிறைவன். (௨௪௧)

உலகினுள்ளவர்தமக்குபகாரத்தின்பொருட்டிங்
கிலகுவன்படைதரித்தனமெனமகிழ்ந்துரைத்துப்
பலவரங்களுங்கொடுத்தனர்கணேசர்பண்பொடுந்தாழ்ந்
தலகிலற்புதமனத்தனயகன்றனன்யவனன். (௨௪௨)

விருகனென்றொருதானவன்வெருவுசெந்நாயா
யருகுசென்றனனர்றைஞான்றுயதஞ்சிரிப்பா
னொருகரத்தமரங்குசமெறிந்தவனுயிரை
யொருவினன்றமியேனுளத்துயரையுமொழிப்போன். (உசரு)

கதியவேழெனும்வயதினிற்கசியபரோடு
மதிதிவந்தடிவணங்கினடவத்தினலவட்குப்
பொதியுளப்பெருங்கருணையாற்புத்திரனுய்நல்
விதியளிப்பவர்வேண்டியவரங்களைக்கொடுத்தார். (உசச)

விருந்தெனப்புகுந்தவர்க்குறுவரங்களைவீசி
யிருந்தசெவ்வியிலெறுழ்க்கிறுதாந்தனென்பவனு
மருந்திறற்பெருங்காளனுமாளியாயடுத்தார்
பெருந்துதிக்கரமிரண்டையும்பிரான்கரம்பிடித்து. (உசஎ)

விட்டுவிட்டறப்பின்னர்முன்விரைவொடுமீர்த்து
மூட்டுவித்திரண்டுயிரையுமுடித்தனர்முதல்வர்
துட்டர்தங்களையின்னணந்தொலைப்புழிமஞ்ஞை
யெட்டெனும்பிராயத்திடையோட்டியதிசைப்பாம். (உசசு)

பயிலூர்தல்.

கரிசறுதவமாற்றுங்கசியபனெனும்பெயரான்
பரிவுசெய்மனைமாதர்பலருளுமெழில்வாய்ந்த
விரிமலர்த்தொடைக்கூந்தல்வினதையென்பவளில்லின்
புரிவொடுமொருவைகல்புக்கனள்கத்துருவே. (உசஎ)

முந்தொருசூளுறவால்முனிவொடுநெடுங்காலம்
வெந்துயர்சிறையிட்டவிளைவினையுளத்தெண்ணி
வந்தனையோவென்றுவாய்திறந்துபசாரந்
தந்திலளெதுமலர்போற்றங்கினளெழில்வினதை. (உசஅ)

அன்னைதனுட்கோளையறிதருசடாயென்பான்
றன்னியகத்துருவின்றோட்டலர்நறுங்கூந்தற்
பின்னலும்வேய்மென்றோட்பெய்தொளிர்தானையையு
மின்னலுற்றிடப்பற்றியீர்த்தமுன்றிலினுய்த்து. (உசகூ)

பன்னருநெடுங்காலம்பயந்தவென்னம்மனையை
யின்னலஞ்சிறைவைத்தவிரக்கமிலாப்பாவி
யின்னுமென்செய்பாக்கிநகெய்தினைபோபோவென்
றன்னைதன்மாற்றுளையவ்வயினீக்கினனே. (உருo)

பரிபவவுளத்தோடுபனிமலர்முகம்வாடித்
தெரியிழைகத்துருதன்செல்வமைந்தர்கள்வாழும்
விரிதருபாதலத்தின்மேவினளடிதாழ்ந்து
புரிவொடுமுயர்சேடன்புகுந்தமைவிளவுவனுல். (உருக)

தேவர்கடானவர்கடிரளனைத்தையுநல்கு
மேலருகசியபனுர்விழைவுறுமனைமாதாய்த்
தாவறுநிலந்தாங்குந்தமியனையுள்ளிட்ட
வேவறுமுரகர்களையுயிர்த்தருணற்றாய்நீ (உருஉ)

பருவரலொடுதனியேபாதலம்வந்ததெவ
னருளுதியெனலோடும்முழுதாசத்துருசொல்வா
ளொருதினம்வினதையின்பாலுற்றுளனவளெள்ள
வெருவிலன்சடாயென்பான்மெலிவெனக்காற்றினனல். (உருரு)

தாயெனமதியாதுதளர்வுசெய்சடாயுவையிங்
கேயெனப்பலரெள்ளவிருஞ்சிறையிடுவித்தாற்
றேயெனதுயிர்நிற்குமன்றெனிற்சிந்துவது
வாயெனவுரைசெய்துமறுகினளுள்ளத்தே. (௨௫௪)

அழிவுசெய்துயர்காட்டுமாக்கையுமவள்சொன்ன
மொழிகளும்விழிகளினுன்முற்றுறவறிசேடன்
கழிபெருஞ்சினமல்கக்கடல்விடமெனச்சீறி
யொழிவுசெய்தவனுயிரையுழவலென்றெழுந்திட்டான். (௧௫௫)

அடல்கெழுவாசுகிமுன்னாகியவெண்மர்களு
முடல்சினச்சேடனைமுன்னுற்றடிபணிந்தேத்திப்
படர்குதும்யாமென்றுபன்னகப்படையோடுந்
தடநெடும்பிலவழியிற்சார்ந்துமண்வந்தனரால். (௨௫௬)

சூழ்ந்தனர்வினதையுறைதொன்மனையதுகண்டு
வாழ்ந்திடுஞ்சம்பாதிமன்னியசடாயுமறத்
தாழ்ந்திடுமுளச்சேனனவொருமூவர்களும்
வீழ்ந்தனுரகர்கண்மேல்விளைத்தனர்போரம்மா. (௨௫௭)

வார்சிறகடியானும்வளர்தருமூக்கானுங்
கூர்தருமுகிரானுங்கொலைசெயப்புள்வேந்த
ரூர்தருமுரகர்சிலருயிர்மடிந்தனர்சிலர்கள்
பார்தருபிலத்தூடுபடர்ந்தனர்பயந்தம்மா (௨௫௮)

நண்ணியதம்படைஞர்நலிவினையெதிர்நோக்கித்
திண்ணியவாசுகிமுன்றிசைப்பெருநாகரெலாம்
வண்ணவெஞ்சினமூளவலிந்தமராரிதாற்றித்
துண்ணெனமூவரையுந்தொடிக்கையிற்பற்றினரால். (௨௫௯)

அறைதரும்பாதலத்தினைதெனக்கொடுபோந்து
சிறையினர்மூவரையுஞ்சிறையிடைப்புகுவித்தார்
கறைகெழுவேற்றடங்கட்கத்துருமகிழ்கூர்ந்தாள்
பிறைநுதல்வினதையெனும்பெண்கொடிதுயர்கூர்ந்தாள். (௨௬௦)

கொண்கனைநணுகுற்றுக்குழைவொடுமடிபோற்றிப்
பண்கனிமொழிதன்னுற்பட்டசெய்திகள்கூறித்
திண்குருகானார்தஞ்சிறையினிவிடுபாக்கு
வண்குலவழியுறுமோர்மைந்தனைத்தருகென்றாள். (௨௬௧)

வேறு.

கஞ்சனைநிகர்த்தவக்கசியபன்சொலு
மஞ்சலைமாதராயருஞ்சிறைப்படு
மஞ்சரைமீட்பநின்வயிற்றொரண்டநாம்
விஞ்சுறத்தோற்றுதும்விழைந்துகூடியே. (௨௬௨)

ஓங்கியமுட்டையையுடைக்கவல்லவன்
வீங்கியவமரருளில்லைவிண்ணவர்
தாங்கியபடையுளுமில்லைதையலாய்
காங்கயன்முன்வருங்கணேசனல்லதே. (௨௬௩)

உத்தமனவன்கரத்துடைக்கப்பட்டநாள்
வித்தகமயிலதில்விளங்கித்தோன்றிடு
மத்தகமயிலையவ்வமலனூர்ந்துநின்
புத்திரர்சிறையினிப்போக்குங்காணென. (௨௬௪)

கற்புடைவினதையின் கதிர்த்தபூண்முலை
யற்பொடுந்தோய்ந்தன னரியமாதவ
னூற்பவமாயதொண் முட்டையூங்கதைப்
பொற்புறநாடொறும்போற்றிவைகினாள். (உ௬௫)

வினதையின்னணம்விளங்கண்டமோம்புபு
தனதுறையகத்திடைத்தயங்குநாளையி
லனகன்மூவிருகரத்தமலனுடுவான்
வனமதிலேகினன் மகார்கள்சூழவே. (உ௬௬)

வேறு.

கருநிறத்தானவனரத்தக்கண்ணனெனச்சொல்பெயருடையா
னொருவன்றலையுமிருசிறையுமொளிர்மும்முகமுஞ்செவிநான்கு
மருவிவளருமருப்பைந்தும்வால்களாறுமெழுகண்ணும்
பொருவிலடிகளெட்டுமுடைப்புள்ளின்வடிவாயாங்குற்றான். (உ௬௭)

சற்றேநடப்பான்சற்றிருப்பான்சற்றேபடுப்பான்சற்றெழுவா
னுற்றோடுவன்சற்றிவ்வாறேயுலாவக்கண்டுமுனிச்சிறுவ
ரெற்றேயீதோரதிசயமாயெய்திற்றீதோர்புள்ளென்றார்
பற்றாவிறைவனதைப்பற்றப்படர்ந்தான்மகாருமுடன்படர்ந்தார். ()

அடுப்பான்போலச்சேயிடைச்சென்றகலுற்றகலுங்கானுந்
தொடுப்பாகியபல்வரைக்குலமுந்தொலையக்கடந்தானவ்வசுரன்
விடுப்பானலனெம்மிறையவனுமேவிவெகுளிதோற்றுதலும்
படுப்பான்பாசந்தனைவிடுதார்பற்றியவனைப்படுத்ததுவே. (உ௬௯)

மறிந்துவிழுந்ததானவனைமகார்களோடிக்கரதலத்தா
லெறிந்துமுதைத்துஞ்சினந்தணிந்தாரினிதங்கிருந்தவினதையென்பா
ளறிந்துதனதுமுட்டையைவைத்தடிகள்வணங்கியெதிர்நின்றாள்
செறிந்தகருணைப்பெருமானைச்செயலோர்ந்துகிராலதைக்கீண்டான். ()

சிறந்துபரிதிமண்டிலத்தைச்சென்னியுரிஞ்சவதினின்று
பிறந்ததொருதெய்வதமஞ்ஞைபெருமானுவந்துகடைக்கணித்திட்
டிறந்துதகுவர்குலமொழியவிட்டர்கண்முழுதும்புறம்போக்கி
யுறந்தவிமையார்களிதூங்கவுறுதியாகமேல்கொண்டான். (உ௭௧)

வீழிநிகர்த்தசெவ்வதரவினதைமுகத்தையெதிர்நோக்கி
வாழிநினக்குவேட்டதெவன்வரங்கேளென்றனவள்வணங்கி
யூழிமுதல்வபாதலத்திலுறுவெஞ்சிறைமைந்தரைமீட்டுன்
கேழில்பதத்திலன்பெனக்குஞ்செழுவித்தருள்கவென்றிரந்தாள். ()

இரந்தவரங்கள்கொடுத்தருளியெழிலார்தோகைமயில்கடவிப்
பரந்துமுனிவர்போற்றிசைப்பப்பயிலாச்சிரமத்தினிதடுத்துக்
கரந்தையணிந்தபிரானுடுகௌரிபாதம்பணிந்தேத்திச்
சுரந்தமகிழ்வால்வீற்றிருந்தார்தோலாமதுகைவிநாயகனார். (உ௭௩)

அன்றுமுதலாக்கணேசர்தமையமரர்முனிவரனைவோரும்
வென்றிவிளங்குமயூரேசரென்றுவிளம்பிவியந்தனர்க
ளின்றுமவரைமயூரேசரென்பார்க்கிடரெல்லாநீங்கு
மொன்றுநலமெல்லாமடுக்குமுண்மையிதற்கோரையமில்லை. (உ௭௪)

வேறு.

ஒன்பதாமாண்டிடையொருதினந்தனின்
முன்புபோல்வனத்திடைமுன்னியாடுவா
னன்பராமகார்புறமடுப்பவண்ணலார்
வன்பறுமயில்கடாய்வல்லையேகினார். (உ௭௫)

யோசனையிந்தகன்றெழுருதேமலர்
வாசனைகமழ்ந்தொருமடிச்சிறப்பினு
லீசனைநேசமோடிறைஞ்சிசித்தலும்
பூசனைசெய்பவர்வாழ்க்கைபோன்றதே. (உஎசு)

அத்தடநோக்கினரமலநாயகர்
புத்தியின்மகிழ்வொடுபுக்குத்தோய்ந்தன
ருத்தமவாசுகியுயிர்த்தகன்னியும்
பைத்தகன்னியரொடுபடியப்போந்தனள். (உஎஎ)

கண்டனடிருவுருக்கவினைமோகமுட்
கொண்டனள்வணங்கினள்கும்பிட்டென்னையா
ளண்டனேயாரைநீயறைகுவாயென
விண்டனள்குறுநகைமிளிரச்செய்யவாய். (உஎஅ)

எறுழ்மயூரேசரென்றெம்மைச்செப்பியே
பெறுவர்வேண்டியவரம்பெருநிலத்தவ
ருறமயேச்சுரனுமைக்குகந்தபுத்திரன்
மறுவிலாயறியெனவரதர்கூறினர். (உஎகூ)

மணிகிடந்தொளிர்முடிவாசுகிக்கொரு
தணிவறுமகிழ்வுசெய்தனையளாயினே
னணிவளரடியனேனகத்தினண்ணியென்
பணிவிடைகொள்கெனப்பகர்ந்திட்டாளவள். (உஅ0)

கோமளவினைதைக்குக்கொடுத்தநல்வரந்
தோமறமுடிப்பதுதுணிந்துதோன்றலா
ரேமருநும்பதிக்கெய்துவாமெனக்
காமர்கன்னியரொடுகெடிதங்கேகினர். (உஅக)

வளமனையெய்தலுமாதுநாதரை
யிளகுமுட்பாக்கியமேவலாற்றிட
வுளமலிவிழைவினுலொளிர்பொற்பீடமேற்
றளர்வறவிருத்தினடாழ்ந்துபூசித்தாள். (உஅஉ)

விசித்திரத்துகில்கலன்விளங்குபேரெழில்
வசித்தொளிர்திருவுருவணிந்துவான்சுவை
நசித்திடாவமிழ்தமுநண்ணவுய்த்திது
பசித்திராதுண்கெனப்பரிவினூட்டினள். (உஅங)

எத்தரும்பத்தியாலிரங்குமேகலை
பூத்தொடைக்குழலினள்பொலிந்தபூசைகொண்
டாத்தனுங்கணேசரங்ககன்றுவாசுகி
வேத்தவைக்களத்தினைவிரைந்துசென்றனர். (உஅச)

எழுந்திலன்வணங்கிலனினியகூறிலன்
றழுந்திருமம்மரிற்றங்கினன்றனைத்
தொழுந்தகையானவர்துன்னிப்பேரொளி
கொழுந்தெழுமணிமுடிபறித்துக்கொண்டனர். (உஅரு)

மயங்கினனிலமிசைமறுகிவீழ்ந்துமிக்
குயங்கினன்வாசுகியுழையுளாருளங்
கயங்கினர்கணேசர்சம்பாதிமூவரை
யியங்கருஞ்சிறையின்மீட்டினிதுமீளுவார். (உஅசு)

மயக்கறவந்தெதிர் மலைந்தவாசுகி
வியக்கவன் னவளைமெல்விரலொன்றுலொழிஇப்
புயக்குவடொளிர்தருபூணதாக்கினூர்
நயக்கமண் ணுலகினை நண்ணவெண்ணினூர். (உ௮எ)

ஆயிடைநிகழ்ந்தமையறிந்துசேடனம்
மாயிரவலியினிவயக்குவாமெனப்
பாயினபன்னகப்படைகள்சூழ்தர
மேயினனமரினைவிலகவின்றியே. (உ௮௮)

நோக்கினர்கணேசர்முன்னுவன்றபூமடு
மாக்கரைநிறுவியமயிலையெண்ணினூர்
தாக்குமப்பிணிமுகந்தழங்கியொய்யெனப்
போக்கரும்பாதலநோக்கிப்புக்கதே. (உ௮௯)

மறமலிமயிலவண்மருவுமுன்னமே
சிறகடிவளியினூற்சிதைந்தசில்லரா
வுறவிகல்கடந்தவருழைவந்தண்ணிய
விறகுளமயிற்குபதேசித்திட்டனர். (உ௯0)

சுற்றியபன்னகத்தொகையில்வீரரை
முற்றுறவுண்டுபோர்மூண்டசேடனைப்
பற்றுபுவருகெனப்பகர்ந்துவிட்டனர்
கொற்றமல்கியமயில்கொதித்துச்சென்றதே. (உ௯௧)

கொத்தியுமலகினூற்சிறகுகொண்டுமேன்
மொத்தியுங்கூருகிர்மூரிக்கால்படத்
தத்தியும்பலவராச்சாடிப்போர்க்கெதிர்
வித்தகச்சேடன்மேல்விரைந்துசென்றதே. (உ௯உ)

நடுப்படுமுடலிடைநடுங்கச்சேடனை
வடுப்படக்கொத்திவாய்வவ்விமுன்னுற
வடுப்பமர்றவனைத்தம்மரையினூதனூர்
விடுப்பருநாணெனவிளங்கச்சூழ்ந்தனர். (உ௯௩)

இரிந்தபன்னுகமுமெய்நுத்தாழ்ந்தன
பரிந்தவைதம்மையும்பரித்தவங்கதம்
புரிந்தவண்குழைபுனையாரமாதியாத்
தெரிந்துதம்முருவெலாஞ்சிவனுவித்தனர். (உ௯௪)

தந்தையார்ச்சித்தசேதருமமன்னதை
மைந்தரார்ச்சித்தலும்வழக்கமாதலா
லந்திவாணிறத்தவரணிந்தவாளரா
வெந்தையாரணிதலுமேற்றதாகுமே. (உ௯௫)

வாசுகிமகண்முதலானமாதர்க்கு
வீசுபுவேண்டியவரஞ்சம்பாதிமுன்
பேசுறுமூவரும்பேணிப்பின்வரத்
தேசுமிழ்மயில்கடாய்ப்புவியிற்சென்றனர். (உ௯௬)

எம்பிரான்பாதலத்தேகுஞ்செவ்வியின்
வம்பறுமடுவின்வைகியசிறுரெலாந்
தம்பிரானெவ்வுழிச்சார்ந்தளானெனப்
பம்புகானகமெலாம்படர்ந்துதேடினூர். (உ௯எ)

கொட்புறமெல்லையிற்கோரனென்றொரு
திட்பமெய்தியநிசாசரன்சிறார்களைப்
புட்பகமாயவர்புகல்கணேசனார்
நட்பினராமெனநன்றுண்டானரோ.　　(௨௯௮)

இவ்வழிகணேசனுமெய்துமின்னினி
யெவ்வமிலவனையுமெடுத்துண்பாமென
வவ்வயிற்கொக்குருவானவண்ணமே
தெவ்வுறுவானவன்றிருந்தவைகினான்.　　(௨௯௯)

உரகர்களுலகினின்றுற்றுநாயகன்
வரவறிந்தெழுந்துவாய்பிளந்துநண்ணினா
னரவணிசேவகனவனையங்கையிற்
பரசினாலிருதுணிபடுத்துநோக்கினான்.　　(௩௦௦)

நோக்கலுந்தானவனெறிவ்வயிற்றின்முன்
னூக்கியமுனிச்சிறாரவிபெற்றுவன்
றாக்கம்விட்டாரெனத்துனைந்தெழுந்துதண்
டேக்கமலப்பதஞ்சென்றுதாழ்ந்தனர்.　　(௩௦௧)

தொக்கபல்லண்டமுந்துளங்கத்தோற்றிய
கொக்கினையிறுத்தன்சோலவார்சிறை
செக்கரஞ்சடையிடைச்செருகினார்மகற்
கிக்குரண்டத்தினையெறிதல்வெற்றியோ.　　(௩௦௨)

மகாரொடுமவ்வனம்வல்லைநீங்கிப்போய்
விகாதம்வையகத்திடைவிளைப்பமேவிய
வகாதமாகியபுனலாற்றைவேணியி
னுகாதுவைத்தவனொடுமுமையைத்தாழ்ந்தனன்.　　(௩௦௩)

மூந்துசம்பாதிமுன்மூவருந்தொழு
தெந்தைதன்னேவலாலெய்தியன்னையைத்
தந்தையைவணங்கினர்தளர்வகன்றனர்
சிந்தையின்மகிழ்ந்தனர்திகழ்ந்துவாழ்ந்தனர்.　　(௩௦௪)

பத்தெனுமாண்டினிற்பாசவங்குச
வத்தனுற்றொழியடற்கராளனென்
றொத்திடும்பெயரினானேங்கற்பன்றியாய்த்
தொத்தழல்விழியுகத்துளைந்துநேர்ந்தனன்　　(௩௦௫)

ஒருபதத்திருபதத்துலகமூன்றையு
மருவுறவளந்தவல்வராகம்வென்றவன்
றருமகனஞ்சுமோசார்ந்தபன்றியை
வெருவுறவடர்த்தனன்வீசிப்பாசமே.　　(௩௦௬)

வலனுயர்பன்றியைமடித்தவெல்லையிற்
கலனொடுவிகாரனுங்காட்டுமேதியாய்
விலகிவந்தேற்றனர்மேதிவென்றவள்
குலமகனவரையுங்கொன்றுபோயினான்.　　(௩௦௭)

வேறு.

கரைந்தவப்பத்தாமாண்டிற்கமண்டலநதியிற்சால
விரைந்தெழுதீர்த்தமாடியிருந்தவெம்பிரானையம்மர்
வரைந்தமெய்ப்பராசரப்பேர்மாதவன்வந்துபோற்றி
விரைந்துபல்வரமுங்கொண்டுவிரவினன்முனிக்குழாத்துள்.　　(௩௦௮)

வேறு.

அற்றைநாட்கார்க்கியவருந்தவத்தனு
முற்றுநாயகன்பதமுவந்துதாழ்ந்தெனைப்
பற்றுமாணவமறப்பரமஞானத்தை
முற்றவோதுகவெனமொழிந்துநின்றனன். (௩௦௧)

அன்னவன்றனக்குளமிரங்கியவ்வயின்
மன்னியதன்னுடைமந்திரத்தினுட்
டுன்னுமுப்பொருண்மையுஞ்சொல்லிவைகினு
னென்னையுமாளுடையிறைவனென்பவே. (௩௧௦)

வேறு.

ஊர்த்தகேசனெனுமவுணனுழுவையாகிப்புறநின்ற
சீர்த்தமகார்கடமையுண்டுதெய்வக்கோயிலுண்ணுழைந்தா
னார்த்துத்தழன்றுமயூரேசரவன்வார்நாசிசெவியரிந்து
சூர்த்தவெயிறுந்தகாத்திவைநின்றோன்றற்கறிவியெனவிடுத்தார். ()

வேறு.

அகிலமுநடுங்கமுன்னரடுத்தவேங்கையை
யுகிரினல்வகிர்ந்தவனுயிர்த்தமைந்தர்முன்
புகின்வரியுடற்பெரும்புலிக்குவெற்றியுந்
தகுவதோவவலமேசார்வதல்லதே. (௩௧௨)

கொடுவரியுழுவையாற்கோட்பட்டாரையு
நடுவனென்பவனையுநண்ணித்தம்மென
நெடுமயிலேறினனீண்டபாசத்தை
விடுவதுசெய்தனன்விரைந்ததன்னதே. (௩௧௩)

சென்றதசிறார்களைச்சேரக்கைகொடு
வென்றியங்காலனைவீங்குதோளினை
யொன்றுறயாத்துடன்கொண்டுமுன்னுறீஇ
நின்றதுபாசநீடியமனேதுவான். (௩௧௪)

அடியனேனினைக்கபராதஞ்செய்கிலேன்
கொடியவல்லசுரனாற்கொல்லப்பட்டவிவ்
வடிவுடைமைந்தரென்வைப்பின்வந்தனர்
நெடியவனறிகிலாநிமலநாதரே. (௩௧௫)

காலவெல்லையிற்பெருங்கடவுளாணையுஞ்
சாலவல்லுடலிடைத்தணப்பித்தேகுறுஞ்
சீலமுறுமதருட்டிறத்தினல்லதே
யேலுறுசுதந்தரமெனக்குண்டாவதோ. (௩௧௬)

அணங்குசெய்தடர்த்திடேலடிகளோர்பிழை
யிணங்கியீதாயினுமென்னையேன்றெதிர்
வணங்கினனிரங்கிநம்வள்ளல்சுட்டிய
நிணங்கிளர்பாசத்தைநீக்கிக்கூறுவார். (௩௧௭)

இன்றுதொட்டெமக்கடியாரைப்பற்றிடி
னின்றிடுநினக்கதிகாரமாக்கையோ
டொன்றியவாழ்க்கையுமொழியுங்காணெனத்
தென்றிசைக்கடவுளைச்செப்பிப்போக்கினார். (௩௧௮)

தப்பினேனுயிரெனச்சமன்விரைந்துதன்
வைப்பினையடுத்தனன்வரதன்கார்க்கிய
வொப்பிலாமுனிவனுக்குண்மையோதியங்
கப்பனோடம்மைவாழகத்தைநண்ணினான். (௩௧௯)

வேறு.

எயிற்றொழுக்குங்காதுமிழுந்திடுமூர்த்தகேசத்
தயித்தியன்சிந்துவென்னுந்தலைவனையடுத்திவ்வாறு
செயிர்த்தனன்கணேசனென்றுசெப்பிடுமளவிற்சார்ந்த
வுயிர்த்துணையானதூதரொண்கழல்பணிந்துசொல்வார். (௩௨௦)

இறைவநீவிடுக்கப்பட்டாரேகராய்ப்பலராய்நாளுங்
குறைவறுமாயைசெய்துங்குழகனார்மகனைவெல்லு
நிறைவிலையென்றுமாய்ந்தார்நீட்டியாதினியன்னானை
மிறைபுரிபடையினைவிம்வறலேதருமமென்றார். (௩௨௧)

வேறு.

அண்டரைச்சிறையில்வைத்தமர்ந்ததீயவன்
கொண்டவெஞ்சினத்தொடுகொதித்துப்போர்க்குநம்
மண்டியபடையெலாம்வருகவல்லையென்
றெண்டவிசெழுந்தனனுழையரஞ்சவே. (௩௨௨)

சூழ்ச்சிசெய்யமைச்சர்களொழுதுசொல்லுவார்
தாழ்ச்சியிங்கடுத்ததென்றலைவவைகுக
வாழ்ச்சியில்லாவகைமாயனாதியோர்
வீழ்ச்சியுற்றனர்சிறைவீட்டினாமிட. (௩௨௩)

மூவகையுலகினுமுதல்வநின்னுடை
மேவருமாணையேவிரவியின்றது
மாவளர்வனத்திடைவதிகணேசனங்
காவலுக்கூறுகள்கண்டதில்லையே. (௩௨௪)

விளைவினாலவனைநாமேலானென
விளைமையினாருயிரிறப்பமுன்னுறத்
திளைவயவீரரைச்செலுத்தினாமவ
னாளைதரவவர்களையொறுத்தலைசெய்தனன். (௩௨௫)

மண்ணொடுவிண்ணையுமறிக்குமாண்மைய
ரெண்ணிலர்தம்மையுமேற்றொருத்தனே
கண்ணினுமுயிர்ப்பினுங்கால்கைதம்மினுந்
திண்ணியபடையினுஞ்சினந்திறுத்தனன். (௩௨௬)

ஒருவராயிருப்பினுமுருவஞ்சீர்த்திடும்
பருவமேவரச்சிறுபாலராயினும்
பொருவிலாவாற்றலைப்புணர்ந்துளாரெனின்
மருவுசூழ்ச்சியினொடுமலைதல்வேண்டுமே. (௩௨௭)

இருங்கனலாசரனென்னுந்தானவ
னெருங்குபன்மையையுநிகழ்த்தவல்லவன்
பொருங்களத்தருவாம்பூண்டசூரனின்
மருங்கமர்சமபலம்வாய்த்துளான்றனை. (௩௨௮)

முந்துறப்படையொடுமுற்றிப்போர்செய
விந்திடத்தகற்றுதியேந்தலபோரினால்
வந்ததுகண்டுபின்வலித்தஞ்செய்வதை
யெந்தையென்றியம்பினாரிறைவனன்றெனா. (௩௨௯)

மந்திரமுற்றுமுன்மருங்குநண்ணிய
வந்தவெங்கனற்பெயரவுணற்கானைதேர்
சுந்தரவாசியுந்துகிலுமுற்றவுஞ்
சிந்தையின்மகிழ்கொளச்சேர்த்துச்செப்புவான். (௩௩௦)

சிறுவனுய்வயதுதன்னிற்செருவினிற்பெரியனாகி
யறுகணிசடையான்மைந்தனடுத்தநம்மவரையெல்லா
மிறுவதுபுரிந்துகானத்திருக்கின்றானவனைமுற்றி
மறுவறுபோரால்வென்றுவருமதியொல்லையென்றான். (௩௩௧)

இதுவரையென்னையேவாதிருந்ததெனினியன்னானைக்
கதுமெனக்கோறலொன்றோகைக்கொளலொன்றோசெய்வல்
மதுவளர்தாராயென்றுவன்னிபின்பெயரான்கூறிக்
குதுகலத்தோடுமன்னன்கோயிலின்புறம்புபோந்தான். (௩௩௨)

கவனவாம்புரவிபூட்டுங்கதிர்மணித்தேர்க்குழாமும்
பவனவேகத்திற்செல்லும்பாய்பரிமாவுந்தானைப்
புவனம்வார்ந்தாறுகாட்டும்போர்க்கரியினமுநாட்பின்
நவநவமாகப்போர்செய்படைஞருநண்ணினரால். (௩௩௩)

வில்லுமிழ்கவிகைபிச்சம்வியன்கொடிமிடைந்துசெல்லப்
பல்லியமியம்பாநிற்பப்பன்னிரண்டக்குரோணி
நல்லிசைப்படைகள்சூழநகைமணித்தேரினேறிச்
சொல்லியகனலின்பேரான்றுன்னினடுபோர்க்கம்மா. (௩௩௪)

திரிசந்தித்தலத்திற்சென்றுதிசையிருநான்குஞ்சூழ்ந்தா
னரிசந்தித்திடக்கண்டஞ்சுமடல்கெழுவேழம்போலத்
துரிசந்தித்திடநோற்றுள்ளத்துறவர்களஞ்சியோடி
வரிசந்திக்கழலின்முக்கண்மகேசனைச்சரணஞ்சார்ந்தார். (௩௩௫)

வேறு.

தறுகணன்கனலாசுரனெனும்பெயரான்றருங்கமலாசுரனையா
னெறுழ்வலிச்சிந்துவிடுதலிற்போந்தானிடரெலாமுலகமூன்றிடத்து
நிறுவியதிவனேயலதுவேறில்லைநின்மலாவிவன்றனைவல்லே
யிறுவதுபுரிந்திங்கெளியரேந்துயருமிறுத்தருளென்றுதோத்திரித்தார். ( )

வெருவலீர்நீவிரெனவவர்க்கருளிவிறன்மயூரேசரைக்கூவிச்
செருவலிக்கனலாசுரனமர்க்கடுத்தான்சென்றவனுருயிர்பருகி
வருகவென்றங்கைச்சூலமுங்கொடுத்துமலைமகண்மணாளனார்விடுத்தார்
பெருவலிக்கணேசரடித்துணைவணங்கிப்பிணிமுகமூர்ந்துபோர்க்கெழுந்தார்.

படைகளுல்வகையுந்தமதருளுருவிற்பன்முறையீன்றுடன்கொண்டு
புடையலர்பரந்ததானவன்படையிற்புக்கனர்புகழ்மயூரேசர்
விடையின்மேலுமையுந்தானுமாய்ப்பூதர்மிடைதரவந்தரத்தெனையு
முடையவனெழுந்துமகன்புரிபோரினுறுமுறைநோக்கினரிருந்தார். (௩௩௮)

மிக்கிருபடையுங்கைகலந்தமர்செய்வேலையிற்கணேசனார்பாங்கர்
தொக்கவன்படைகள்வெஞ்சினமூண்டுதன்னலன்படையெலாமழித்துத்
தக்கநல்வாகைதோற்றினதழலின்றானவனோக்கியுள்பொறாது
புக்கெறுழ்ப்பூதப்படையிடைத்தனதுபுயவலிதோற்றினன்பெரிதும். (௩௩௯)

எற்றியுஞ்சிலரைக்குத்தியுஞ்சிலரையெறிந்துமோதியுஞ்சிலர்சிலரைப்
பற்றியுஞ்சிலரைக்கட்டியுஞ்சிலரைப்பார்விழத்தள்ளியுஞ்சிலரை
முற்றியுஞ்சிலரைக்குட்டியுஞ்சிலரைமுழங்கியுஞ்சிலரைமத்திகையா
லொற்றியுஞ்சிலரைநோக்கியுஞ்சிலரையுயிர்த்துஞ்சிற்சிலர்தமைக்கொன்றான்.

வேறு.

ஆடுதலற்றபூதர்கைநெடும்போராடினகவந்தம்வஞ்சினங்கள்
பாடுதலற்றவீரர்வாயன்றிப்பாடினவலகையின்குழாங்கள்
ஓடுதலற்றவிரதங்கள்பிணத்தாலோடினகுருதியின்வெள்ளங்
கூடுதலற்றவயவர்தோள்விசையங்கூடினநாய்நரிகழுகு. (௩௪௧)

சாரதப்படைகளின்னணந்தளர்ந்ததனிமயிலூர்ந்தருடலைவர்
பாரவில்வளைத்துக்கணைபலதொடுத்துப்படைக்கலமுழுவதும்பொடித்துத்
தேரணிமுடியுங்கவயமுமறுத்தார்சினந்தொருகுதிரையிற்றாவி
வீரமிக்குடையபன்னகப்படையைவிடுத்தனன்செங்கனற்பெயரோன். ()

காருடப்படையைவிடுத்தனர்கணேசர்கதழ்ந்தெதிர்பன்னகப்படையைப்
பாருறப்படுத்திமேற்செலத்தகுவன்படையெதிர்விடுத்திடவிடுத்தான்
சீருடைப்புனிதர்கணைதொடுத்தெடுத்தசெங்கையிற்படையினையறுத்தார்
தாருடைப்பரியைமேற்செலுங்கருடத்தனிப்படையட்டுமீண்டதுவே. (௫௪௩)

சத்திரத்தானுமத்திரத்தானுஞ்சமர்புரிந்திவன்றனைவேற
லெத்திறத்தானுமில்லையென்றெண்ணியெழுந்துவானிடைக்கனற்பெயரோன்
முத்திறவுலகும்வெருக்கொளமாயைமுறைமுறைபுரிந்தனனவற்றை
யத்தனங்கறிந்துதனதொருகரத்தினமர்ந்தபாசத்தினைவிடுத்தார். (௫௪௪)

வார்ந்தொளிர்பாசமளவிலாமாயாவடிவுகொண்டேகியன்னவன்செய்
யார்ந்தவன்மாயாவுருவமுந்துமித்ததன்னவன்தனித்துவாளேந்தி
நேர்ந்துவாட்போர்க்குவருகெனநிமலனுஞ்செங்கைவாளேந்தி
யோர்ந்தவனெறிந்தவாளெறிவிலக்கியொருபுயந்துணித்துமண்வீழ்த்தான்.

சிந்தியகுருதித்துளிதொறுமந்தசெங்கனற்பெயரவன்போல
வந்துபல்வீரரெழுந்தனர்நீலமயிலிவரண்ணலார்நோக்கி
யுந்தொளிநுதற்கண்சிறிதுறத்திறந்தாரொழுகுநெய்த்தோரொடுமதனில்
வெந்திறலோடுமெழுந்தனர்வீரர்வெந்துவெண்சாம்பராயினரே. (௫௪௬)

கருத்திடையாய்ந்துகனற்பெயர்த்தகுவன்கரிசறுமந்திரமோதி
யுருத்திரப்படையைத்தொடுத்தனனதுதானுலகெலாமழித்துமேற்படர
வருத்தமொன்றின்றிமாமயிலூர்திவருகவென்றங்கையிலேற்றுத்
திருத்தகுதூணிசெறித்தனன்வெகுண்டுதீயவன்றண்டுகொண்டெதிர்ந்தான்.

கைத்தலையிருந்தமுத்தலைச்சூலங்கணேசரங்கெதிருறநோக்கி
யித்தயித்தியனையிமைக்குமுனீற்றியெம்மிடைவருகெனவிடுத்தா
னத்தகுசூலமவனுடனீற்றியந்தரக்கங்கைபுக்காடி
யுத்தமன்கரத்தின்மீண்டும்வந்திருந்ததுலகெலாமுளமகிழ்சிறப்ப. (௫௪௮)

செங்களத்தவிந்ததிறல்கெழுபூதத்திரளெலாமெழுப்பினர்கொண்டு
கொங்கவிழ்வாகைமிலைத்தருள்கணேசர்கொம்மெனவிருக்கையையடுத்தா
ரங்கணர்மகிழ்ந்துதழீஇக்கொடுவரிசையளித்தனர்முனிவரர்வணங்கித்
தங்களுக்கினியவரங்கள்கொண்டுள்ளத்தளர்வகன்றிருந்தனர்மாதோ. ()

தோகைமாமயிலையூர்ந்துதீப்பெயர்கொள்சூரனைப்போர்புரிந்தழித்து
வாகைவேய்ந்திடர்தீர்த்தருண்மயூரேசர்வரமிருடியர்தமக்கருளி
யோகையோடிருப்பத்தூதவரோடியுரைதருமாறமெய்வேர்ப்பச்
சாகையேயனையகனற்பெயர்த்தகுவன்சாய்ந்தமைசிந்துவுக்குரைத்தார். ()

சினையொழிமரம்போலாகியசிந்துசிந்தையிற்பெருந்துயர்கூர்ந்து
கனைகழற்கனலாசுரனிகர்வீரற்காணுதுமோவெனக்கரைந்து
வினையினியாதுபுரிவதென்றெண்ணிவிறற்படையெழுதல்செய்யாமே
வனைபுகழ்க்கணேசன்வலியினையடக்குமரபுளதென்றுளந்துணிந்தான். ()

வேறு.

உலகினுக்குபகாரஞ்செய்தேவர்கள்
பலரும்நம்வழிப்பட்டனரன்னவ
ரிலகுசெய்தியின்றுய்விடின்மாற்றலன்
வலனெவ்வாறுமருவுவனென்றவன். (௫.௫௨)

பருதிவானவன் றன்முகம்பார்த்துநீ
மருவலான்வதிகின்றவனத்திடைப்
பொருவிலாதநின்பூங்கதிர்நீட்டுத
லொருவிடாயெனவோதியொழித்தனன். (௩௫௩)

சந்திரன் றனிமாமுகநோக்கிநீ
மைந்தன்மாமயிலேறிவனத்திடை
யெந்தநாளுமிருங்கொடியாதியை
நந்துவிக்குநடைமொழியென்றனன். (௩௫௪)

அங்கிநாயகனுனைநோக்குபு
கங்கைமைந்தன்கலந்தவனத்திடைத்
தங்கநின்னுறுப்பானதழலெலா
மிங்கணேகரந்தெய்துகென்றேவினுன். (௩௫௫)

இந்திரன் றனையெய்தவிளித்துநீ
கந்தரத்திடைக்கணேசர்கடத்திடைச்
சிந்துமேந்துதெண்ணீர்பொழியாவகை
யந்தின்மாற்றுதியென்றறைந்தேவினுன். (௩௫௬)

வருணனைப்புடைவம்மெனக்கூவிநீ
யிருணயந்தகளத்தரவேய்ந்தவர்
தருவிநாயகர்தங்கியகானிடை
மருவுநீர்தனைவாங்குதியென்றனன். (௩௫௭)

உலவைவானவனெண்முகநோக்கிநீ
கலவமாமயிலானமர்கானிடை
விலகிவீசலொழியெனவிட்டனன்
பலருமஞ்சியன்னுன்பணிசெய்தனர். (௩௫௮)

வேறு.

இரவியுமதியுமின்றியெழில்வளிவீசலன்றி
விரவுசெங்கனலுமின்றிவெறிகமழ்புனலுமின்றிப்
பரவியகானமெல்லாம்பயப்படாதிருப்பநோக்கி
மரவுரியுடையோரெல்லாமயிலிறைமருங்குசார்ந்தார். (௨௫௯)

அண்ணலேகதிரோனுதியாற்றுறுந்தொழிலுளொன்று
நண்ணிலதாதலாலேநலத்தகுகருமம்யாதும்
பண்ணுதற்கிடனின்றென்னப்பகர்ந்தனர்பகவன்கேளா
திண்ணியசிந்துசெய்தசெயலிதுவென்றுநாடி. (௩௬0)

விழியொருமூன்றினுனும்வியத்தகநெறித்துப்பார்த்தான்
பொழியருள்வலக்கணின்றும்புரவியேழுடையோன்காற்றுச்
சுழிபுனலுமிழுமேகந்தோன்றினவிடக்கணின்றும்
வழிசுதைத்திங்கடோன்றிவளர்த்ததுபைங்கூழெல்லாம். (௩௬௧)

நெற்றிவாள்விழியிற்றோன்றிநிகழுதராங்கியாதிப்
பற்றுதீயனைத்துமெங்கும்பயின்றனமுனிவரோகை
யுற்றுநாட்கடன்களாதியுஞற்றியுட்கவலைத்துன்ப
முற்றுநீத்தின்பவெள்ளமுழுகினரிருந்தார்பின்பு. (௩௬௨)

இத்தனைதீங்குநம்பாலிழைக்குமோசிந்துவென்ன
வத்தனங்கழன்றுவெற்பினணங்கொடுமிருந்ததாதை
சித்திரப்பாதந்தாழ்ந்துதிருமுன்னர்நிற்பவந்த
வுத்தமன்குறிப்புநோக்கியொளிர்முகமலர்ந்துசொல்வான். (௩௬௩)

தீயனபலவுஞ்செய்யுஞ்சிந் துவையடர்த்துவல்லே
தூயவிண்ணவரையெல்லாந் துயருறுசிறையினீக்கிப்
பாயதத்தமதுவைப்பிற்பயிலுறவிடுகென்றேவிக்
காயழல்விழியபூதங்கணநாதர்தமையுந்தந்தார். (ருசுச)

வேறு.

கந்தன்வீரபத்திரனந்தியிலம்பகன்னனிரணியகருப்பன்சோமன்புட்ப, தந்தபிரமதன்பிருங்கியிரத்தலோசனன்ருவானலன்பஞ்சானன்சங்கனவிட்டன்சமல, னுந்துசாமளன்பூதராசனிவர்முதலாமுறுபடைவீரருமெழுகோடி சாரதரு, முந்தனளித்திடக்கொண்டுமீட்டுமடிவணங்கிமுறைமையினுன்மயிலூர்திகோயில்புறத்தடுத்தான். (ருசுரு)

சேயிலைவேல்வலந்தரித்தகந்தர்முதலானதிறல்வீரர்பூதரொடுசேர்ந்து பதம்வணங்க, மேயினவத்தலைவரெலாம்விமானமிசையேறவிளம்பிமயில்வாகனமுந்தானுமுனிமகாரு, மாயிருமேருவைநிகர்த்தவிமானமிசையேறிவார் கவரிபுடையிரட்டமதிக்கவிகைநிழற்ற,வாயிரம்வெள்வளைபானுகம்பனெடுத் திசைப்பவாழியெனவியமியம்பவமலன்வழிக்கொண்டான். (ருசுசு)

வார்ந்தகொடித்திரளானுமார்ப்பொலியினானும்வயங்குவிமானங்கள்பலவழங்குதலினானு, மார்ந்தபலகானமும்பல்புணரியும்பல்வரையுமாங்கவொருங்கெழுந்ததெனவமலன்படைச்சாத்துச், சார்ந்திடலுஞ்சிந்துவினேவலினெறியினிடையேதக்கபெருங்காவலுறுந்தயித்தியர்களிலக்கர், நேர்ந்தனர்முன்புகும்பூதர்சிலருதைத்துத்துகைத்துநீறுக்கிநடந்தனர்கள்கண்டகமாநகரே.

கண்டகமாநகரம்யோசனையொன்றினெல்லைக்கணநாதர்கணங்களொடுகதுவிவரப்போந்த, வண்டர்களுயகரிருந்தாரயினெடுவேற்கரத்தனுந்தியருமொருங்கிருந்தாரமலரதன்பின்னர்,விண்டமனுநீதியினோர்தூதினைமுன்விடுத்துமேவானேற்பொருதழித்துமவனைநாமென்று,கொண்டருளிச்சுட்சிகிரம்பியபுட்பதந்தற்கூவியவன்முகநோக்கிக்குளிர்மொழியினுரைப்பார். (ருசுஅ)

வேறு.

தூதுதீயவனிடத்துநாமுன்னுறவிடுத்திட்
டோதுவாய்மையைக்கைக்கொளாதொழிந்திடிற்பொருது
காதுவாங்கணநாதருள்யாவனேதூது
போதுவான்புகலென்றனர்கேட்டவன்புகல்வான் (ருசுகூ)

இறைவநீயவதாரஞ்செய்திட்டநாண்முதலாய்
முறையினுடொறுநின்கையான்முடித்திடப்படனே
ரறையினுயிரமேலுளரவரலாலாண்மை
நிறையும்வீரனுநெஞ்சமரிழைத்துயிர்நீத்தான். (ருஎO)

அனைத்துநாடொறுமறிந்துமத்தீயவனந்தோ
முனைத்தநாதநின்மொய்ம்பினையிற்றைநாள்காறு
மெனைத்துந்தேர்ந்திலன்றூதுவிட்டிசைப்பினுநீதி
நினைத்துமார்க்கத்தின்வரானவனிறைந்தபுல்லறிவால். (ருஎக)

அல்லதூஉம்வலிதாழ்ந்தவராற்றன்மேம்பட்ட
வல்லவேந்தர்பாற்றூதினைமாண்புறவிடுத்து
நல்லவார்த்தைபொன்னுதியினட்புறல்விதியா
மெல்லியாரைமேம்பட்டவர்தகர்த்தலேவிதியாம். (ருஎஉ)

மாறிலாப்பெருங்கருணையாற்றூதினைவாய்மைப்
பேறிலானுழைவிடுத்துழிப்பேணிலானுயிற்
சீறியாங்கவனுயிரினைச்சென்றதூதுவனே
வீறிலாவகைகழித்துமீண்டிவணுறல்வேண்டும். (ருஎரு)

ஆற்றல்சான்றவச்சிந்துவையடர்த்தொளியெங்குந்
தோற்றவல்லவன்சுடரொளிவேல்வலத்திறையே
போற்றுநாதவப்புண்ணியனிளையனுதலினாற்
சாற்றுதூதெனப்போவதுதக்கதொன்றன்றே. (௩௭௪)

வீரபத்திரன்றனையுறவிடுத்திடின்விதிதீர்
கோரன்வைகியவிடத்தினைக்குறுகுமுன்கண்ட
சூரர்தம்மையுமூரையுஞ்சுட்டுநீறாக
நேரவெல்குவன்சிந்தையினினைந்தமைமுடியா. (௩௭௫)

பூதராசன்செந்தழற்குணவாக்குவன்புரத்தை
நாதனேயடியேனவனன்கிளையலற
வேதம்யாவையும்புரிகுவேனிரத்தலோசனன்று
ணுதகாதெனவாண்சிறைபெண்சிறைபிடிப்பான். (௩௭௬)

அரத்தலோசனன்பிரமதன்பிருங்கிமற்றடியேன்
வரத்தின்மேம்படும்பூதராசன்வலிநந்தி
யுரைத்தமூவிருதிறத்தருமுறுசமர்க்கன்றி
நிரைத்துவாய்மொழித்தூதினைநிகழ்த்துதற்கிசையார். (௩௭௭)

அடிகளேவலைத்தணப்புறாதடுப்பினுமறைந்த
முடிவிலாற்றலின்மூவிருதிறத்தினர்தம்மு
ணெடியவாற்றலினந்தியேநிகழ்த்தியவண்ணம்
படியிலாவுளப்பாங்கொடுபடர்ந்துமீண்டுறுவான். (௩௭௮)

தகுவர்தங்களைக்காணுமுன்பிரமதன்றழன்று
புகுவனன்னவர்தங்களைப்பொருக்கெனவிழுங்க
நெகுமன்பின்றிவாழ்நிசாசரர்குலமெலாநீறா
யுகுவதாகியசூழ்ச்சியேயுளங்கொளும்பிருங்கி. (௩௭௯)

ஆதலாற்பெருவலியுடைநந்தியேயவன்பாற்
போதல்வல்லவன்புகலவும்வல்லவன்புணர்ப்பாற்
சாதன்மூற்றுறப்புரியினுந்தளர்வுறாததையுங்
காதவல்லவன்கண்டருள்கணேசவென்றுரைத்தான். (௩௮௦)

தாழ்ந்துபுட்பதந்தன்சொலத்தனிமயூரேசர்
சூழ்ந்துதக்கதேசொற்றனையெனமகிழ்ந்தருளி
யாழ்ந்தவாகமமருமறையாதிகளுணர்ந்து
வாழ்ந்தநந்தியைவருகெனக்கூவினர்வகுப்பார். (௩௮௧)

வெம்புதானவனுகியசிந்துபான்மேவி
யெம்பிரானருள்வரத்தொடுமிருந்திடவேண்டி
னும்பரார்சிறைவிடுதியாருயிர்தபவேண்டின்
பம்புபோர்க்குறுவாயெனப்பகர்ந்துவாவென்றார். (௩௮௨)

பணிந்துநந்திதன்மனத்திடைப்பனிமதிக்கீற்றோன்
றணிந்தநாதனையம்மையோடிருத்தியாங்ககன்று
துணிந்துகுக்குமவுருக்கொடுதுன்னிவேத்தவையிற்
றணிந்திடாவெழிற்றவிசொன்றுமனத்தினாற்சமைத்து. (௩௮௩)

சிந்துவைகியவாதனத்தொளியுமத்தீயோன்
மைந்தின்வைகியவொளியுமையாப்பமுன்வயங்குஞ்
சந்தமென்மணிப்பீடத்திற்றங்கிவீற்றிருந்தா
னந்தியென்றுலகேத்தியநாயகன்றூதன். (௩௮௪)

ஊக்கமிக்கபல்காவலுமொருவிநம்முன்னே
தாக்குவல்லரியேறெனச்சார்ந்தனனென்று
நோக்கிவெஞ்சினத்தொடுநொறிற்சிந்துநீயாரே
யாக்கம்யாதுவேட்டடுத்தனையெனநந்தியறைவான். (௩௮௫)

அந்தமாதியுமில்லவனுமயூரேச
னுந்துதாதனுலகினுள்ளாரெலாமென்னை
நந்தியென்பர்கணுனையடுத்தகாரியமுஞ்
சிந்துருவகைகேண்மதிசிந்துவின்பெயரோய். (௩௮௬)

திருவுளாருழைத்தெள்ளியவறிவுறுதென்னு
மருளுறுமொழிப்பொருளைநின்மாட்டுநின்னேவ
லொருவுறுதமந்திரிகள்பாங்கினுமுறக்கண்டாந்
தெருளுமாறஃதியாதெனிற்செப்புதுங்கேளாய். (௩௮௭)

அரியமாதவமாற்றிநீயழிதராவரமும்
பெரியயோகமும்பெற்றனைபெற்றநீயந்தோ
வுரியமாமறைநெறியினிலொழுகியன்னவற்றை
யிரிதராதுகாத்தென்றும்வாழ்ந்திருப்பவெண்ணிலையால். (௩௮௮)

கொடியகோல்செலுத்திடுநினைக்கோணலினீக்கி
நெடிதுவாழுமாறுனக்கிதநிகழ்த்துதற்றேற்றார்
முடிவிலாதநின்றிருவெலாமுகந்துணர்குரிய
படியிலாவமைச்செனுநுகம்பரித்தபாவிகளும். (௩௮௯)

இறந்தகாரியங்கிடக்கமன்னவவினியேனுஞ்
சிறந்ததேவரைமுனிவரைச்சிறையினின்றகற்றி
யறந்தவாவருமறைநெறியாதரித்தொழுகி
விறந்தவாழ்க்கையோடேழியும்வியத்தகவிருத்தி. (௩௯0)

எம்பிரான்றிருவருளினலிதுசொலவிடுத்தான்
கம்பமால்கரிமன்னவிக்கருத்துனக்கின்றி
யும்பரார்நகைசெய்திடவுலைவதுகருத்தேற்
பம்புநால்வகைப்படையொடும்படுகளம்படர்தி. (௩௯௧)

இந்தமாநகர்தனக்கியோசனையெல்லையின்று
வந்துவைகினர்வளர்மயூரேசர்காணென்றார்
நந்தியீதுரைசெய்தலுநக்கழல்விழித்துச்
சிந்துவாகியதறுகணன்றெழித்திதுசொல்வான். (௩௯௨)

சிறுவனுனவுன்னிறையவன்சிந்தையேபோல
வுறுவனுனவுன்னுள்ளமுமுறுவதோர்ந்திலதா
லிறுதன்மாலையர்சிலர்தமையிறுத்தலேமதித்து
மறுவிலேனையும்வதைப்பதாவந்துரைத்தனையே. (௩௯௩)

கடங்களூற்றியகரிமுதன்மிருகங்கள் காயு
மடங்கலாயினுஞ்சிம்புள்முன்மாட்டுவதென்னே
யிடங்கள்வாய்த்துழித்தேரையாகிகடமையிறக்கும்
படங்கொணாகமாயினும்படர்கருடன்முனென்னும். (௩௯௪)

வாண்மலர்க்கையிற்பிடித்திடவகையறியானை
யாண்மைமுற்றியவெம்மையுமழிப்பவனாகத்
தாண்மைமுற்றுறச்சாற்றினையீதுசாற்றியநின்
னேண்மைசிந்துவென்றூதெனவிறுத்திலேனென்றான். (௩௯௫)

தீதுமேவியசிந்துசெப்பியமொழிகேளாக்
கோதுதீர்ந்தவன்கொதித்துரைப்பான்மயூரேசர்
தூதுபோயுரைத்தனுகெனச்சொல்லியவானை
பாதுகாப்பதுவேண்டியேபருகிலேனுன்னை. (௩௯௬)

இசைந்திடாவிடினிறுவெனவிறையியம்பினனே
லசைந்தநின்னையுமவையுளார்பலரையுமங்கைப்
பிசைந்துசந்தனச்செச்சையாப்பெரும்புயத்தணிந்து
தசைந்தவல்லுடற்சேனையுந்தழற்றுவேன்கண்டாய். (௩௯௭)

பிள்ளையாம்பருவத்தினன்பெருவலியிலனென்
றெள்ளினாய்மயிலூர்தியைவியம்பியவானை
தள்ளரு துணைச்சார்ந்தவெண்வலியினாலந்த
வள்ளலார்பெருவலியையுமதியெனவுயிர்த்தான். (௩௯௮)

உயிர்த்தகாற்றினான்மண்டபத்துத்திரமொடிந்த
வயிர்த்துளாருருமோவெனவயலுளார்பலரும்
வியர்த்துளார்சிலர்விழுந்தனர்சிலர்சிலர்விளிந்தார்
செயிர்த்தசிந்துவோர்முகுர்த்தமுட்டிகைப்பொடுமிருந்தான். (௩௯௯)

வேண்டின்யாவையும்விதிக்கவும்விலக்கவும்வல்ல
மாண்டகேள்வியினந்திதான்வைகுமாதனத்தை
யாண்டுமாற்றினனைதெனவெழுந்துவானெறியின்
மீண்டுபோந்துதாழ்ந்துரைத்தனன்விநாயகர்க்கெல்லாம். (௪௦௦)

வேறு.

நாதர்கேட்டுநகைத்திருப்பநயந்துபாங்கரிருந்திடும்
பூதராசனும்புட்பதந்தனும்பூதர்கோடியர்பாலுறப்
பாதமேத்திநடந்துசிந்துபயின்றுவாழ்நெடுமாநகர்க்
கேதநீங்கவெடுத்தசெம்பொனெயிற்புறத்தினிறுத்தனர். (௪௦௧)

சிங்கமாமுகன்யாளிமாமுகன்சீறுவேங்கைமுகத்தவன்
றுங்கவேழமுகத்தவன்றுலையாதவாற்றலர்நால்வரு
மங்கணாற்பதுகோடிவீரரினான்றநான்குபுறத்தினுந்
தங்கினாரொடுபோர்புரிந்துதகர்த்திமைக்குமுன்மீண்டனர். (௪௦௨)

நந்திநாசியுயிர்ப்பினானணிநாடுமுள்ளந்திகைத்தயர்
சிந்துபின்புதெளிந்தமைச்சர்கள்சேனைகாவலராதியோர்
வந்திறைஞ்சிவினாவினார்க்குமயூரநாதர்தம்மேவலான்
முந்திருந்தொருதூதுரைத்துமுடித்தவண்ணமுரைத்தனன். (௪௦௩)

அரைக்கணத்திடையொன்னலார்களையாவியுண்பினலான்மிக
விரைக்குமாளிழுதாதியோடுவிராவுமுண்டியுமுண்கிலே
னிரைக்குநாற்பெருஞ்சேனையுங்கடிதெய்துசென்னவிசைத்தன
னுரைக்குமுன்வியவோர்களோடியுரப்பிவித்தனர்முரசமே. (௪௦௪)

முரசெருக்கலுமுண்டியையிடைநீத்துமொய்குழன்மாதரின்
விரசியாடலிடைக்கணீத்துவிரோதநீத்துநடத்தொடு
பரசுபாடல்கணீத்தும்வெய்துபல்வீரரும்படைநான்கொடு
மரசவீதியில்வந்துதொக்கனராழிபோலொலிமிக்கதே. (௪௦௫)

மரணமேதெனக்கில்லையென்றுமதித்துமாற்றலர்யாரையுந்
திரணமாகவடர்த்துவைகியசிந்துவென்பவன்மெய்யிடை
யரணம்வீசினன்மோலியாதியணிந்தனன்கழல்கட்டினா
னிரணவேன்முதலானவாய்தமெடுத்துவல்லையெழுந்தனன். (௪௦௬)

அன்னசெவ்வியில்வல்லதூதரடுத்திறைஞ்சிமயூரனான்
முன்னர்வந்துபெயர்ந்ததூதின்முகத்தைநோக்கலுமோரிரு
நன்னர்வீரர்கள்கோடிபூதரினண்ணிநம்புரிசைப்புறந்
துன்னுகாவலர்யாரையுந்துகளாக்கியேகினரென்றனர். (௪௱௭)

காய்ந்தபால்கனலாதொருங்கனலூடுபொங்கியெழுந்தன
வாய்ந்தவெஞ்சினமூளமன்னன்மதிற்புறத்திடைமுன்புபோ
லேய்ந்துகாத்திடவேறுவீரரையேவியோங்குதனில்லினும்
மாய்ந்தபோர்த்திறலாளர்தம்மையமைத்திருங்கடையெய்தினான். (௪௱௮)

தேரளித்தனனோர்சிலர்க்குச்சிலர்க்கிபம்பரிவீசினா
னாரளித்தனனோர்சிலர்க்குடைபூண்சிலர்க்குநல்கினான்
பேரளித்தனனோர்சிலர்க்குப்பிறங்குவீரருக்கின்னணஞ்
சீரளித்தபின்றேரிலேறினன்றேவரைச்சிறைவைத்தவன். (௪௱௯)

சங்குபீலிகடாரைபேரிதடாரிதண்ணுமையாதிகள்
பொங்குமேழ்கடல்போலியம்பினபோதவார்கொடிபிச்சம்வெண்
டிங்களங்குடையாலவட்டந்திகழ்ந்தசாமரைதுள்ளின
மங்களந்திகழ்மாதராடினர்மன்னன்றேர்வழிகொண்டதே. (௪௱௰)

சேமவாணிரதங்கள்பாற்செறியச்செறிந்தவவற்றய
னாமவீரர்கடேர்கண்மொய்ப்பமைநாகமந்தவையத்தய
லேமமார்ந்துநடப்பவந்தவிபத்தயற்பரிமாவுறக்
காமர்வாசிமருங்குதானைகலாவமன்னவனேகலும். (௪௱௰௧)

கொடியபாதகனானசிந்துகுலத்தொடுங்கணநாதனான்
மடியுநாளுமடுத்ததென்றுவழாததன்னினமாகிய
நெடியவானுலகங்களுக்குநிகழ்த்தவோங்கியதென்னமண்
பொடியதாய்த்திசைநாலிரட்டியும்போர்த்துவானினெழுந்ததே. (௪௱௰௨)

நகரநீங்கியடுப்பநோக்கியநாரதப்பெயர்மாதவன்
புகலிராதவிநாயகன்பதம்போற்றிவெந்திறற்சிந்துவே
மகரவேலைகளொத்தசேனைமருங்குமொய்ப்பவந்தானிதோ
விகலிலாயறிவாயெனக்கடிதேகநாதனெழுந்தனன். (௪௱௰௩)

நந்திதாழ்ந்துமகத்தினும்பர்கணாளறுத்தவொருத்தனு
மெந்தைநின்கழல்பேணும்யானுமற்றேனையோருமிளைத்திடிற்
கந்தருங்களிமஞ்ஞையூருங்கணேசனுங்கியநீயுமச்
சிந்துவோடமரேற்குமாதிருவுள்ளஞ்செய்வதெனச்சொன்னான். (௪௱௰௪)

வந்துசிந்துவின்முன்னர்போர்செயவாஞ்சைமிக்குளதாலெமக்
கந்தவெந்திறலானைநாமமராற்றிவீட்டுதுமையனே
கந்தனேமுதலானநீயிர்கனன்றுமற்றைமறத்தினர்
மைந்துகாற்றுமினென்றுமாமயிலேறினான்மறைகூறினான். (௪௱௰௫)

வருங்கனற்பெயரானைமுன்புமடிப்பவாக்கியசேனையுங்
கருங்கழற்குமரேசனாதியருங்கணங்களுமென்றுமிக்
கொருங்குவைகுமுனிச்சிறார்களுமோங்குதத்தமதூர்தியிற்
பெருங்களிப்பொடுமேறியெங்கள்பிரான்மருங்குதைந்தனர். (௪௱௰௬)

உய்யுமார்க்கமுணர்ந்திடாதுறுதீங்குநாளுமுஞற்றிய
வெய்யசிந்துவினாணையாகியவெப்பின்மூழ்கிவெதும்பிய
வையகங்கள்குளிர்ந்துமல்குறவந்தெழுந்தொளிர்திங்கள்போ
லையனீண்முடிமேனிழற்றியதார்ந்தநித்திலவெண்குடை. (௪௱௰௭)

தோற்றமல்கியகீர்த்திதானனிதுன்னிவாழிடமாவன
வேற்றமல்கியமேலுங்கீழுமெலாமெனக்குறிப்பான்மிகச்
சாற்றுகின்றனபோல்விநாயகர்சன்னிதிக்கணெழுந்துதாழ்ந்
தாற்றன்மல்கியவீரர்போற்றவலங்குசாமரைதுள்ளின. (௪௧௮)

கருணைநாயகனுதலாற்கருதார்கண்மேலெழுவெஞ்சினப்
பெருநெருப்புநிலாதிடைப்பெயர்பெற்றிகூடலுமெய்துமென்
றருகுறுதருமல்குமாருசகாயமாகியகாலினைப்
பொருதவிப்பனபோன்றதேசுபுணர்ந்தகால்செய்வட்டங்களே. (௪௧௯)

கவசமோடுருசத்தியங்கடவிர்ந்துநெஞ்சினுடற்கணே
கவசமிட்டநிசாசரர்க்கொருகாவலாகியசிந்துவுந்
திவசமொன்றினிரண்டினிற்சிதையுந்திகழ்ந்துலகங்கணஞ்
சுவசமெய்துவவென்றுதுள்ளுவபோன்றவார்துவசங்களே. (௪௨௦)

இளையனென்றிகழ்சிந்துவும்பரனேயெனத்தெளிவெய்துறக்
களைகணாய்முதன்மூவருக்கருள்காட்டுநாயகன்வந்தன
னுளையமுன்கணனுதியோருயிருண்டசேவகன்வந்தனன்
விளையுமோகையன்வந்துளானெனவிருதியம்பினர்பூதரே. (௪௨௧)

எட்டுமாதிரவாழ்க்கையாளருமீண்டுவிண்ணினுளார்களு
முட்டிலாதமர்பாதலத்தருமொய்த்தவல்லலைவீட்டுமி
னிட்டநாயகன்காக்கவந்தனனென்றுசாலவிசைத்தெனக்
கட்டுவார்முரசாதியோதைகலாவியெங்குநிவந்ததே. (௪௨௨)

நாதனின்னசிறப்பொடேகலுநண்ணுகின்றபெரும்படைப்
பாதமொன்றவெழுந்ததூளிபடர்ந்தவிண்ணுலகெங்கணும்
பூதலத்துருவானதானவர்புண்ணியன்படைவீரர்தான்
மோதவல்வினைவிட்டுவான்கதிமுன்னுகின்றதுபோலவே. (௪௨௩)

கிட்டுமுன்னிருசேனையுங்கிளர்சேனையின்னியவோதையும்
விட்டெழுந்திடுதூளியும்விரையப்புகுந்தமர்தம்முளே
முட்டினுலெனவேகமானமுடிதளக்கினுள்வெஞ்சினக்
குட்டங்காட்டுவபோன்றுகிட்டுகொடிக்குழாத்தினுடக்கமே. (௪௨௪)

வேறு.

மித்திரனென்னுஞ்சிந்துவினமைச்சன்விளங்கிரண்டாயிரவெள்ள
வுத்தமவீரர்தற்புடைசூழவுற்றனனவனொடுவரையை
வைத்தவேற்படையாற்றுளைத்தவன்றன்பின்வருநவவீரருமிலக்கக்
கொத்தினர்தாமும்பூதர்கோடியருங்குழுமுறச்சென்றமரேற்றார். (௪௨௫)

மந்திரியானகவுத்துவனிரண்டாயிரப்பெருவயப்படைசூழ
முந்தினனவனைப்பூதர்கோடியரின்முன்னியவீரபத்திரனேர்ந்
தந்தில்வெஞ்சமரமாற்றினனவன்போலடுபடைதற்புறஞ்சூழ
வந்திடும்வீரராசனைக்கொடியவயவரினடுத்தனனந்தி. (௪௨௬)

தனித்தனிகோடிபூதரிற்புட்பதந்தனேதகும்பூதராசன்
மூளைத்திடும்விகடன்சபலனென்றிவர்கண்மொழிந்திடுமுறைப்படியெதிர்ந்த
சினப்பெருந்துவசன்றிகழுமாகாயன்றிறல்கெழுதூர்த்தன்சார்த்தூலன்
வினைத்திறத்திவரோடேற்றனரிவ்வாறனைவரும்வேறுவேறுற்றார். (௪௨௭)

இரணியகருப்பன்சாமளனிரத்தலோசனன்சோமனற்பிருங்கி
யரன்பிரமதன்பஞ்சானனிலம்பகன்னன்றுவானலனுதி
வரமிகுதலைவர்முனிச்சிறார்தாமுன்வகுத்திடுஞ்சேனையுஞ்சூழ
வுரமிகுமயூரநாதர்சிந்துவினேடுருத்தெதிர்ந்தமர்த்தனரம்மா. (௪௨௮)

கரியொடுகரியும்பரியொடுபரியுங்கதிர்மணித்தேரொடுதேரும்
வரிகழல்வயவரொடுவெயர்களுமறமிகுந்தமர்புரிகாலை
விரிதருமிரண்டுபடைகளுமநேகம்விளிந்தனவேறுவேறெதிர்ந்த
தெரிபடைத்தலைவர்புரியமர்த்திறத்துட்சிறிதினிதெடுத்தியம்புதுமால். ()

வேறு.

கூர்த்தவேற்படைக்குமரவேள்சேனையிற்கொடியமித்திரன்சேனை
யார்த்தவெஞ்சமரநெடும்பொழுதாற்றுழியடல்கெழுநவவீரர்
போர்த்திறத்தினுன்மித்திரன்சேனையைப்பொழிகறைநிலம்போர்ப்பச்
சீர்த்தசென்னிகடிசைதொறுமுருளமேற்சென்றழித்தனரம்மா. (௫0)

அத்திரத்தொடுமெதிர்ந்ததன்சேனைகளழிதலுமதுநோனு
மித்திரன்கனற்றறுமுகன்சேனையுள்விரைந்துசென்றுறுபூதக்
கொத்தைவென்றெதிரிலக்கரையிரித்தனன்கொம்மெனநவவீரர்
தத்துவெம்பரித்தேர்கடாயவனொடுதனித்தனிபோர்செய்தார். (௫௧)

வீரதீரனுயிரங்கணை தூண்டிவார்வில்லினைமுறித்திட்டான்
கோரனுகியமித்திரனொருகதைகொம்மெனநேரோச்சிப்
பாரவான்சிலைவேறுகைப்பற்றினன்பருத்தவக்கதைவீர
தீரனேர்விடுகதையையுஞ்சிதைத்தவன்செம்மலுஞ்சிதைத்தன்றே. (௫௨)

வெற்றிமல்கியதிவாகரனெனும்பெயர்வீரன்வாளிகளேவிப்
பொற்றதேரினைத்தகர்த்தனன்மித்திரன்புலவுவேலொன்றேவி
யுற்றவேறொருசகடத்திற்பாய்ந்தனனுேச்சியவேலோடி
நெற்றிமூழ்கலுமயர்ந்தனனெடுமொழித்திவாகரனெனும்வீரன். (௫௩)

வெய்யனுகியவீரராக்கதன்கணைவிடுத்துவெஞ்சிலையோடு
மெய்யின்மாடியநூறினன்மித்திரன்வெகுண்டவன்றனுவோடு
வையநூறிவேறிரதம்பாய்ந்தாருமுன்வச்சிரமேலேவிப்
பொய்யிலாண்மையைமாற்றினன்வேறொருபொருசிலைகைக்கொண்டான்.

புரந்தரப்பெயர்வீரன்பலசிலீமுகம்பொழிந்துதேர்ப்பரிப்பாக
னரந்தையுற்றிடவமர்த்தனனவன்விடுமயிற்கணையவைதள்ளிப்
பரந்தவெஞ்சினமித்திரன்பரியொடுபாகனும்வேறுக்கி
யுரந்துளைத்தனன்புரந்தரன்பின்னிடவொழுகுவெங்கணைபத்தால். (௫௫)

அந்தகப்பெயர்வீரனீராயிரமம்புமாரியிற்றூவிச்
சந்தவெண்குடையறுத்துவெள்வளையொலிதழங்கவாய்வைத்தார்த்தான்
மைந்துமிக்கமித்திரனவன்கவயமும்வையமுந்துகளாக்கி
நொந்துபின்னிடப்புயங்களினேயினனுெறில்படுகணைநூறு. (௫௬)

வரகிலாவியவீரகேசரியெனும்வயவன்பன்முறையம்பா
லிரதமோடவன்கைச்சிலையறுத்தறுத்திடர்மிகவுறச்செய்
தூரகிலாவியமித்திரனயன்படையொய்யெனவிடுத்தானப்
பிரமன்மாப்படையெதிர்படைவிடுக்குமுன்பிளந்தனனவன்மார்பம்.(௫௭)

பகழியெண்ணிலசொரிந்துமயேந்திரன்படர்கொடிசிலைநூறிப்
புகரில்வேறொருசிலையெடுத்திடுமுனம்பொலஞ்சகட்டையுமாய்த்தான்
நிகரில்மித்திரன்வேறொருதேரிடைநெரேலெனப்பாய்ந்தனனுன்
முகனுமார்பமும்புயமுமுப்பதுகணைமுடுக்கியாண்மையைச்சாய்த்தான். ()

வஞ்சினங்கொடுவீரமாமயேச்சுரன்வாளியைந்துகளேவி
வஞ்சனம்புபெய்தூணியுஞ்சிலையையுமடித்தொருநெடுஞ்சூல
நெஞ்சின்மூழ்குறவழுத்தினன்மித்திரனெடுங்கையினதுவாங்கித்
துஞ்சவன்னவன்மார்புறவிடுத்தொளிதோற்றினன்கணத்தம்மா. (௫௯)

அறத்தின்மேம்படுவீரவாகுப்பெயரமரன்பன்முறைவெம்போர்த்
திறத்தின்மேம்படுமித்திரன்றேர்சிலைதிகழ்மணிமுடிநூறி
கிறத்திஞலிருபகழியுநெற்றியினீண்டபத்திரமூன்று
மறத்தின்மேம்படுபுயத்திடையிவ்விருவாளியுந்தொடுத்தார்த்தான். (௪௪0)

சோர்ந்துமித்திரனெழுந்திவனுற்றலைத்தொலைப்பதெவ்வாறுமென்
றோர்ந்துமந்திரங்கணித்துமோகப்படையுறுத்தினனதுநோக்கிச்
சார்ந்தவீரவாகுப்பெயர்வானவன்றடுத்திடப்படைவேறு
நேர்ந்தெடுக்குமுன்கலந்தவன்றீவினைநிலைகலக்கியதன்றே. (௪௪௧)

பொருதுவீரர்கடொலைதலுமுருகவேள்பொருக்கெனவெதிரேகி
யுருவவார்சிலைவளைத்தொருபதுகணையுந்திமித்திரனெய்த
குருதிவாளிதேர்பாகயங்கவயம்வில்கொடிகுடைமுடிதூணி
வெருவுமாறுருங்கறுத்தவனெற்றியின்விசிகமூன்றுறுத்தாஞல். (௪௪௨)

பாய்ந்தகோலிஞன்மித்திரனென்பவன்பாரிடைவிழுந்தாவி
மாய்ந்துளானெனநெடும்பொழுதவசமாய்வருந்தியபின்புள்ளத்
தோய்ந்தவோர்ச்சிவந்தெழுதலுமெழுந்துவேறுருளியந்தேரேறிக்
காய்ந்துவாளிகள்சோனையின்வழங்கினன்காந்தள்வேய்ந்தவன்மீது. (௪௪௩)

அடையலான்பொழிசரமழையனைத்தையுமறுமுகப்பெருமாஞேர்
தொடையில்வாளிகள்பலதொடுத்தறுத்தவன்றூண்டுபொற்றேரோடு
புடைவிராவியசேமத்தேரனைத்தையும்பொடித்தனனவன்றெய்வப்
படையெலாமுறைதொடுத்தனன்றனித்தனிபணிவிசும்பிடைநின்று. (௪௪௪)

தொடுத்தவான்படைமுழுவதுமென்னையாள்சுப்பிரமணியன்பா
லடுத்துமென்மலர்மாலையாய்த்தாமரையடிமிசைவிழநோக்கிக்
கடுத்துமித்திரன்வாள்கொடுபாகனைக்காய்ந்திடமேற்சென்று
னடுத்தவச்சிரத்தறுமுகனடித்தவனின்னுயிர்விசும்புய்த்தான். (௪௪௫)

கடற்குவன்கரையனையமித்திரனுயிர்கழிதலுங்கருதாரை
யுடற்றவல்லகந்தாசுரனென்பவனுருத்தெழுந்தெதிரெய்தித்
தொடற்பெரும்படையாலிவனுற்றலைத்தொலைப்பதிங்கரிதாமென்
றடற்பெருந்தனிமாயைகளளவிலவாற்றினன்விசும்பூடே. (௪௪௬)

ஞானநாயகஞகியகுமரவேணசையிலான்புரிகின்ற
வானமாயைகளனைத்தையுங்கடந்துதனணிமணிப்பொலந்திண்டேர்
வானநேருறச்செலுத்தியன்னவன்முடிவண்கையிற்புடைத்திட்டான்
ஞனமாருயிரெய்தவத்தானவன்றரையிடைவிழுந்தாஞல். (௪௪௭)

மாயைவல்லகந்தாசுரனழிதலுமறங்கொள்சேனனும்வென்றி
மேயபல்படைக்குரோதனுமாயிரவெள்ளநாற்றியசேனை
பாயவையகநெளிதரப்பரப்பினர்படர்ந்துவெற்புரமாய்த்த
சேயைமுற்றினர்சரமழைசொரிந்தனர்திசையெலாமிருண்மூட. (௪௪௮)

பூதரஞ்சினரிலக்கர்களஞ்சினர்புழுங்கினர்நவவீரர்
வேதனைச்சிறையிட்டவன்குறுநகைவிளைத்துவில்லினைவாங்கிப்
போதமற்றவர்பொழிகணைமாரியைப்பூதலமிசைத்தள்ளி
யேதம்வையகமறக்கணையொருபஃதெடுத்தொருதொடைசெய்தான். (௪௪௯)

அத்தனேவியவையிருகணைகளுமழலுமிழ்ந்தோரொன்று
பத்துநூறுறுசகத்திரமயுதம்பத்துநூறயுதங்கள்
வைத்தமேலுளவளவைகள்பலவுமாய்வரிசையின்விரிந்தேகி
மொய்த்தசேனைநாலாயிரவெள்ளமுமுடித்தனகணத்தம்மா. (௪௫0)

சேனைமாய்தலுஞ்சேனனுங்குரோதனுஞ்சினந்துசக்கரஞ்சூல
மானவேல்கதையாதியின்மலைத்தனர்வாரணக்கொடியான்றன்
கூனல்வார்சிலைவாளியாலவையெலாங்குமைத்துநீள்பாசத்தைத்
தானடாவினனிருவராருயிரையுஞ்சாடியததுமாதோ. (௪௫௧)

மந்திரத்திறத்துயர்ந்தமித்திரனுமற்றவனுடன்வந்தோரும்
வெந்திறற்சமர்புரிந்துதன்கரத்தினால்விளிந்தும்வேறுளரேயோ
வந்தெதிர்ப்பவரென்றுஞ்செங்களத்திடைவைகினன்முருகேச
னந்தில்வெற்றியம்பணிலங்கண்முழக்கினரடல்கெழுகணவீரர். (௪௫௨)

வேறு.

கவுத்துவனென்றெடுத்தியம்புமமைச்சனொடுசெங்களத்துக்கறுத்துநேர்ந்த
பவுத்திரனாகியவீரபத்திரன்னவன்சேனைபலவுங்கொன்று
சவத்தினுயர்மலைசெய்துகுருதியின்வார்நதியாக்கித்தழங்கவார்த்திட்
டுவத்தலுறக்கவுத்துவன்கண்டூழியந்தீயெனப்பூதர்க்குலைவுசெய்தான். (௪௫௩)

சாரதர்மேலடர்ந்துகவுத்துவன்சொரியுஞ்சரமாரிதன்னைவீர
வீரனொருசிலைவாங்கிவிசிகமெதிர்தொடுத்தறுத்துவிசிகமொன்றாற்
றேரறுத்தனனவன்வேறுதேரிடைப்பாய்ந்திடவதையுஞ்சிதைத்தானன்னான்
பாரநெடுங்கதைவிடுத்துவேறொருதேரிடைப்பாய்ந்துபடைகைக்கொண்டான்.

அண்டர்தருக்கினையழித்தவயவீரபத்திரனமைச்சன்விட்ட
தண்டினையாயிரங்கணையாற்றூளாக்கிநூறுகணைசாரவேவி
மிண்டுகவுத்துவன்செலுத்துமிரதமொடுசேமமெனமிடையுந்தேரு
நுண்டுகள்செய்தானன்னானெழுந்துபாய்ந்தனனொறில்சால்வீரன்றேரில். ()

பாய்ந்தவன்வாளோச்சுதலும்பத்திரனவ்வாளினொடுபாணிவீழ
வாய்ந்தசுரிகையினறுத்துக்கவுட்புடைத்தான்மலைபோலமறிந்துமண்வீழ்ந்
தாய்ந்தகவுத்துவன்மாய்ந்தானதுநோக்கித்தமனெனுமாடல்வல்லான்
காய்ந்தமூவாயிரம்வெள்ளஞ்சேனைபுடைநெருங்கக்கதழ்ந்துநேர்ந்தான். ()

வந்தெதிர்ந்தசேனைகளையெதிர்நோக்கிவயவீரன்மறமீக்கொண்டு
முந்தமரர்தமைவெளவிக்களத்தடர்த்ததிறமேய்ப்பமுடுக்கிச்சென்று
சந்தமணித்தேரெடுத்துத்தேரெறிந்துதந்தியினாற்றந்திசாடிக்
கந்துகத்தாற்கந்துகத்தைப்புடைத்துழுவையுழைக்குலத்திற்கலந்தாலொத்தான்.

கரத்தெடுத்துச்சிலர்களையெண்மாதிரத்துந்தீவினுமேழ்கடலின்மாட்டும்
வரைத்தலத்துமந்தரத்துமெறிந்தெறிந்துஞ்சிலரைமலரடியிற்றேய்த்துஞ்
சிரித்துமுரப்பியும்விழித்துஞ்சிலரையிறுத்துறுபடையாற்சிலரைக்கொன்று
மிரைத்தவெலிக்குழுவிடைச்செலெரிமணிச்சூட்டரவென்னவிலகினானால். ()

அடுத்துழக்குமிராசாளிக்குருகொன்றிற்கொக்கினங்களவிந்தாலென்னத்
தொடுத்துழக்குஞ்சயவீரபத்திரனாற்சேனையெலாந்தொலையநோக்கி
மடுத்தபெருஞ்சினங்கடவுதமனெனும்படைத்தலைவன்வல்லைநேர்போ
யெடுத்தபெருஞ்சிலைவணக்கிநாணெறிந்துபகழிமழையீண்டப்பெய்தான். ()

கையேந்துமொருதண்டிற்கணைமாரிதனைவிலக்கிக்கதழ்ந்துவீரன்
பொய்யேந்துமனத்தவுணன்றனைத்தேரோடெடுத்தும்பர்போகவோச்சி
யையேந்துமவன்சேமத்தேர்களையுமொருங்குடைத்தானாதிசேடன்
பையேந்துநிலத்திடைக்குப்புற்றவன்வாளுருவியெதிர்படர்ந்துசொன்னான்.

வாளமரில்வல்லையெனில்வருகவெனக்கனன்றுரைப்பவல்லவீரன்
றாளமருங்கழல்கலிப்பவாளுருவிவிளையாடித்தமனன்கொற்றத்
தோளலங்கலொடுநிலத்துவிழவறுத்துத்தாளிரண்டுந்துணித்துவாழு
நாளறச்சென்னியையெறிந்துநரலையிடைப்படவிடுத்துநக்குநின்றான். (௪௬௧)

நந்தியொடுமெதிர்வீரராசனடர்பூதர்களைநலியநோக்கி
நந்திவெகுண்டவன்சேனைமுழுதழித்தன்னவன்சிலைக்கைநாடியீர்ந்தான்
நந்திலவன்மற்றையொருகரத்திடைவாளேந்தியருணந்திதேரின்
மைந்தொடுபாய்ந்துரத்தெறிந்தானந்திசுரிகையினவனைமடித்துவீழ்த்தான்.

இவ்வாறுபோர்புரிந்துபுட்பதந்தன்றுவசனுயிரிறுத்தானேந்து
செவ்வாய்மைபெறுபூதராசன்மாகாயனைப்போர்செய்துமாய்த்தா
னவ்வாளினெதிர்விகடன்றூர்த்தனைச்சாய்த்தனன்சபலனடுசோர்த்தூலன்
கைவாளினொடும்வீழக்கறுத்தனனின்னணங்கணநாதர்கள்வென்றாரால். ()

வேறுவேறமரேற்றவிசாகன்முதலெழுவோர்தம்வென்றிதன்னைக்
கூறினுமினிமயூரேசர்வருசிந்துவொடுகுறித்துப்போர்செய்
வீறுகூறுதுமிரண்டுகோடியபூதரும்விளங்குமுனிச்சீருரு
மீறிலான்படைத்தபெருஞ்சேனைகளும்பகைப்படையோடெதிர்ந்தாரன்றே.

வேறு.

நேர்ந்தவிருபடையுள்ளுநெடுந்தேருங்கடகரியும்
வார்ந்தவுளைச்சுவற்பரியுமள்ளர்களுங்கைகலந்து
சார்ந்தயினேர்வந்துழியுந்தடங்கணிமையாமடத்தோ
டோர்ந்தொழித்தஞ்சினர்தம்மையுருத்தவரைப்பொருதழித்தார். ()

கையேறுபடைவழக்கங்கருதுவதல்லாற்றங்கண்
மெய்யேறும்படையறியார்வெய்யபோர்விளையாடி
வையேறும்படைகாத்துமாண்டுழித்தம்மெய்யேறு
நொய்யேறுபடைபறித்துநொந்துமுயிர்சிலர்விடுத்தார். (சசரு)

இழைத்தபெருவஞ்சினத்தையினிதுமுடிப்பாரொருசார்
தழைத்திடுவஞ்சினமுடிப்பச்சார்ந்துமடிவாரொருசார்
மழைத்தடந்தோளொடுசென்னிமண்விழச்செஞ்சோற்றுநிலைப்
பிழைத்திலமென்றுநேர்போற்பெயர்ந்தெழுந்தாடுநரொருசார். ()

அட்டையாடலும்வயவராடலும்பெயரடல்களு
மொட்டறுச்செங்களத்திலுலைந்தவர்கள்விசும்பேகி
மட்டுவார்மலர்க்கூந்தல்வானரமங்கையர்கச்சிற்
கட்டுபூண்முலைக்களிறுங்கண்ணம்பும்பொரப்பொருதார். (சசஅ)

ஒருவரொருவரைக்குந்தத்துரத்தழுந்தவெதிர்குத்தி
யிருவருமாருயிர்நீங்கவெண்ணிலர்நின்றார்களத்துப்
பெருவிசும்பினிருவோரும்பிழையாதுசென்றுங்கு
மொருவிலார்வெஞ்சமர்மாதர்க்குற்றபெருங்காதலினால். (சசகூ)

மண்மகளையுடறழுவவண்சமரினிறந்தவர்போய்
விண்மகளிர்தமைத்தழுவும்வியன்களத்துச்சிலரிறந்தோர்
திண்மையுறும்பிணமணையாச்செருவீரங்குன்றுமை
யொண்மையொடுஞ்சார்ந்திருந்தாருறுபோர்காண்பவர்போல.(சஎ0)

தகுநெடும்போரிடையிளைத்துத்தமைப்பேணவிடைநாடிப்
புகுநர்களாங்கெதிரமரிற்பொன்றினர்கள்பிணவணையின்
னகுமுகத்திற்சார்ந்திருப்பநக்கனரென்றுளநாணி
மிகுவயவர்தமைநாடிமீண்டமர்செய்தார்சில்லோர். (சஎக)

காதலிளையாரெதிர்ந்துகலவிபுரிகாலத்திற்
பாதமலருதைகளுக்கும்பாணியினலோச்சுதற்குஞ்
சீதளவாய்க்கவ்வுதற்குஞ்சிந்தைமகிழ்வார்போல
நோதலறியார்கள்சிலர்கனெறிற்படைமெய்போழ்போதும். (சஎஉ)

வேறு.

செங்களத்தின்னணமிருவகைச்சேனையுமமர்செய்திறப்புழி
யெங்களையாண்டவிநாயகரெழிற்படைதாங்கியவீரருட்
டங்கிரணியகருப்பன்வருதகுவர்களிறைபடைத்தலைவருள்
வெங்கடுவனையகோலாசுரன்விளிதரவாண்மைவிளக்கினன். (௪௭௩)

சாமளனெதிர்கதம்பாசுரன்றனையறுத்தானரனென்பவ
னுமவிலேந்துகலாசுரனுளறுத்தான்பிரசண்டனைச்
சோமனழித்தனன்பிரபலாசுரனையிரத்தலோசனன்வென்றான்
காமரிலம்பகன்னன்பெருங்கதமலிசண்டனைமாய்த்தனன். (௪௭௪)

மிண்டெங்காசுரனுவியைவீட்டினன்சங்கன்பவுமனைத்
தண்டினதுக்கிமடித்தனன்றுவில்பிருங்கிதாவானலன்
முண்டனைவீத்தனன்கண்டனைமுடித்தனன்பஞ்சானனன்வலி
கொண்டவரின்னணம்விளிதலுங்கூடினர்பூதர்கள்சிந்துவை. (௪௭௫)

சூலம்வழங்கினரோர்சிலர்தோமரம்விட்டனரோர்சிலர்
வேலவையோச்சினரோர்சிலர்விசிகந்தொடுத்தனரோர்சிலர்
காலழனேமிமழுப்பெருங்கதைமுதலுந்தினரோர்சிலர்
மூலமுமுடிவுமிலாதவன்மொய்யருடாங்கியசாரதர். (௪௭௬)

தன்பெருஞ்சேனையிற்றூர்புனைதலைவரொருங்குமடிந்ததும்
வன்பெரும்பூதர்குழாங்கொடுவந்தமராடலுநோக்குபு
மின்படநக்குயர்சிந்துகைவில்லினைவாங்கிப்பொருக்கென
கொன்பகழிகள்பலதொடைதொறுங்கொடுத்துவிடுத்தமராடினன். (௪௭௭)

திக்கிருநான்கொடுவிண்ணமுஞ்சேரமறைந்ததுவாளியாற்
புக்கவைபோழ்தலின்முற்றியபூதர்கடாள்களுந்தோள்களும்
பக்கமுமார்புங்கவான்களும்பலவகையங்கமும்வீழ்ந்திட
மைக்கடல்சூழ்ந்தநெடும்புவிமறைந்ததுபோர்த்திறமிக்கதே. (௪௭௮)

வேறு.

வஞ்சகன்விடுவாளியான்மலைதரும்பெரும்பூதர்க
ளஞ்சினர்சிலர்நல்வலியற்றனர்சிலராடம
ரெஞ்சினர்சிலரோவென்வேங்கினர்சிலருயிரறத்
துஞ்சினர்சிலர்பின்கொடுதொலைந்தனர்சிலரென்பவே. (௪௭௯)

வேறு.

பஞ்சானனன்பூதப்படைபரிவுற்றமைநோக்கி
யஞ்சாதமர்வீரென்றுதனங்கைத்தலமமையா
னெஞ்சானதுமறமூழ்கநெடுந்தேரெதிருந்தி
நஞ்சாமெனவழல்சிந்துவைநண்ணிச்சமர்செய்தான். (௪௮௦)

சேரானெனவருசிந்துவின்சிலைநின்றெழுகணையை
யீராயிரநெடுவாளிகளெய்தங்கிடைவீழ்வித்
தோராயிரங்கணைதேர்ந்தவனுடல்போர்த்திடவிட்டான்
பாராதியினிடர்சிந்திடப்பஞ்சானனனென்பான். (௪௮௧)

எதிருங்கணையவையாயிரவேலாலறுத்தவுணர்
பதியையிருகணையேவுறப்பஞ்சானனனிரத
முதிர்நுண்பொடிசெய்தானவனொருதேருறப்பாய்ந்து
சதவெங்கணையாற்சிந்துவின்றருபாகனைவீழ்த்தான். (௪௮௨)

வேறேயொருவலவன்றனைவிரைவிற்றகநிறுவி
யேறேயெனவெதிர்சிந்துவொரெரிவச்சிரவாளி
நீறேய்தருபஞ்சானனனெற்றித்தலமுய்த்தா
னூறேயெனக்கறைசோர்தரவழிந்தான்மதியனையான். (௪௮௩)

தாவானலனதுகண்டெதிர்சார்ந்தேவுரனூறுய்த்
தோவாவலியுறுசிந்துவினெண்கைச்சிலைவீழ்த்தான்
வாவாவெனவவன்வேறொருவார்வில்வளைவித்துத்
தேவாகியதாவானலன்றேரைத்தகர்செய்தான். (௪௮௪)

விடையேறுறழ்தாவானலன்வேறேயொருதேரி
னடைவானெதிர்குப்புற்றனனவ்வேலையின்மிறையே
யுடையான்றனதங்கைத்தலமுடன்றான்றியசூலப்
படையேவினனதுபோயுரம்பாயத்தளர்வுற்றான். (௪௮௫)

பிருங்கிப்பெயரழலன்றழல்பெய்யும்விழியோடு
நெருங்கிச்சரமோராயிரநேரேயெழுவித்து
வருங்கொற்றவன்முடியும்பெருவரிவில்லொடுதேரு
மொருங்கட்டனன்வளைவாயின்வைத்தொலிதோற்றினனன்றே. ()

நாணிற்பொலியுள்ளத்தொடுநவையேபுரிசிந்து
சேணிற்பொலிவேறேயொருதேருற்றெதிரூர்ந்தங்
கேணிற்பொலிபிருங்கிப்பெயரிறைவன்சிலைதள்ளி
மாணிற்பொலிகணைபத்தவன்மருமத்துறவிட்டான். (௪௮௭)

மதிசோர்ந்துயிர்பிருங்கிப்பெயர்வானோனறிவெய்தி
நுதிகூரியவயிரக்கணைநூறெய்தெதிர்சிந்து
கதிர்மாமணிவரைமார்பகங்கலவப்புகுவித்தா
னுதிராயினவவன்வல்லுரமுற்றக்கணைபலவும். (௪௮௮)

செங்கட்டகுவர்கணாயகன்சிறிதேமுறுவலியா
வங்கைப்படுதண்டோச்சினனதுசென்றுபிருங்கி
பங்கப்படவெதிரோச்சியபருவன்கதைசிந்தித்
துங்கக்கணநாதன்வலிதொலைவித்ததையன்றே. (௪௮௯)

சங்கன்சினமிககொண்டெதிர்சார்ந்தாடல்செய்சிந்து
செங்கைத்தவரொடுசாலிகைசிந்திக்கொடிவீழ்த்தான்
வெங்கட்கொலையவுணர்க்கிறைவேறோர்தவர்வாங்கிப்
புங்கக்கணையெட்டாலவன்பொற்றேர்பொடிசெய்தான். (௪௯௦)

மற்றோர்பெருவையத்திடைவாவித்திகழ்சங்கன்
பற்றான்கவிகையைவாளிகள்பத்தானிலத்திட்டுப்
பொற்றேரினையைம்பான்கணைபோக்கிப்பொடிசெய்தான்
செற்றான்மழுவோச்சிப்படர்தேர்வேறுறப்பாய்ந்தான். (௪௯௧)

மருமம்புகவருமெண்மழுமடியக்கதையூக்கித்
தருமந்தழைசங்கன்முனைதகுவாளியொன்றேவிக்
கருமஞ்சிலைக்கொடியோனுதல்கதுவிக்கதிர்கொட்டு
முருவங்கிளர்மணியோடையையுதிர்செய்துறவார்த்தான். (௪௯௨)

உள்ளத்திடைவெள்கித்தகுவரையோம்பியவரச
னள்ளிப்பிசைகுவன்போன்மறமார்ந்தோடுபுசங்கன்
மள்ளுப்புயமிடைபோழ்தரமணிவேனுழைவித்தான்
றள்ளிச்சுரிகையிற்சிந்துவைச்சங்கன்றலம்வீழ்த்தான். (௪௯௩)

உடைவாளதுகவயந்தபவுய்ந்தேனெனமீண்டு
படையாலுயரவுணர்க்கிறைபடருந்தனதிரதத்
திடைமேவினனதுகண்டெதிரேகிச்சமர்செய்தா
னடையானவிலம்பத்தொடுமறையப்படுகென்னன். (௪௯௪)

வேறு.

இலம்பகன்னனெய்யும்வாளியெண்ணிலாதவற்றையுஞ்
சலம்புனைந்தசிந்துதள்ளித்தஃகவாளியைந்துதொட்
டுலம்புனைந்ததோளிலம்பகன்னனெண்பொன்வையமேல்
வலம்புனைந்திருந்தபாகன்மார்பமூழ்கவிட்டனன். (௪௯௫)

வேறுபாகமைத்திலம்பகன்னன்வெய்யவாளிக
ணூறுதூண்டிநோன்மைசான்றுநூழிலாடுசிந்துவி
னேறுதேரிருந்தபாகனுவிவிண்ணிலேற்றினு
ணூறுறுதசிந்துவேறுபாகுதேருறுத்தியே. (௪௯௬)

மொட்டுவாளிநூறுதொட்டுமொய்யிலம்பகன்னன்கைத்
தொட்டவில்லும்வையமுந்துணித்துடைத்துரப்பினுன்
வட்டவாழியொன்றுவிட்டுமற்றொர்வையம்வாவுபு
கட்டுநாரிவார்வில்வேறுகைத்தலத்தெடுத்தனன், (௪௯௭)

விடுத்தவாழிபோந்துசிந்துமெய்யணிந்தசாலிகை
படுத்ததன்னவன்வெகுண்டுபைம்பொன்வையநூறினுன்
கடுத்திலம்பகன்னன்வேறுகாமர்தேரின்வாவினு
னடுத்தவையமுந்தகர்த்தறுத்தனன்கைவில்லையும். (௪௯௮)

வெஞ்சினஞ்சிறந்திலம்பகன்னன்வேகமோடுபோய்
வஞ்சகன்பகட்டுரத்துமாட்டினுன்சுரிகையை
நெஞ்சினிட்டகைச்சுரிகைநீண்டகூர்முரிந்ததங்
கஞ்சுறுதசிந்தவன்றனுண்மைவாளினீக்கினுன், (௪௯௯)

உரத்தினீங்கிலம்பகன்னனெல்லைமீண்டுபோந்தன
னரத்தலோசனன்விரைந்தடுத்துருத்தொராயிரஞ்
சரத்தினுலெதிர்ந்தசிந்துசார்ந்தபொற்சகட்டையுங்
கரத்திலேந்துவில்லையுங்கணத்தினீறுசெய்தனன். (௫௦௦)

பாய்ந்துவேறுதேரிடைப்பயின்றுசிந்துவேறுவில்
லாய்ந்தெடுக்குமுன்னர்வாளியாயிரங்கடாவுபு
காய்ந்தரத்தலோசனன்கவின்றவந்தவையமும்
வாய்ந்தசேமவையமுற்றும்வல்லைநூறியார்த்தனன். (௫௦௧)

படித்தலத்தினுய்யெனப்படர்ந்துசேர்ந்துசிந்துத
னடித்தலத்துதைத்துவையமட்டுருத்தகங்கையிற்
பிடித்ததண்டினெற்றினுன்பிறங்கரத்தலோசன்
றுடித்துளைந்துசோர்ந்தனன்றளர்ந்துசிந்துமீண்டனன். (௫௦௨)

வேறு.

மீண்டவன்கவனப்பாய்மான்வெரிந்தலையிவர்ந்தானுக
நீண்டபல்லிரதத்தோடுநிலைநெளிபடைகளெல்லா
மாண்டமையோர்ந்துதூதர்வளநகரிருந்தமைந்தர்க்
கீண்டியபடையுந்தேருமிறந்தனவிறைபாலென்றார். (௫௦௩)

மைந்தர்களேவமைந்துவளர்விருபாக்கனென்னும்
வெந்திறற்றலைவனீராயிரமென்னும்வெள்ளஞ்சேனை
பந்தமிலிரதமோராயிரங்கொடுபவனவேகம்
பிந்திடமுந்திச்சிந்துபெய்கழலடியிற்றாழ்ந்தான். (௫௦௪)

வந்தவன்றன்னைநோக்கிமருங்குநீவாளாநிற்றி
யந்தமிலமரின்குட்டமளக்குவல்யானேயென்று
சிந்துரன்றுரைத்துநிற்குஞ்செவ்வியிற்றேரையுந்தி
யந்திநேரடுத்துக்காய்ந்தானுடலின்வல்லசோமன். (௫௦௫)

வேறு.

நாமநெடுங்கணையெண்ணிலசோமனடத்தநகைத்தவுணர்
கோமகனுகியசிந்துவொராயிரங்கோலினறுத்துவளர்
தாமவயிற்கணையைந்துதெரிந்துதடம்புயமேற்றினனச்
சோமனிணைந்தமர்நீத்தனன்கண்டுதுணைந்தரனேற்றனனுல். (ருoசு)

வெங்கணையொன்றுதொடுத்திகல்சிந்துவின்மின்னுமிழ்பொன்முடியைத்
தங்கரன்மண்ணில்விழுத்தினன்வேறுதரித்தொளிர்பொன்மவுலி
யங்கவனையிருவாளிதொடுத்தரனங்கைவரிச்சிலையுந்
துங்கநெடுஞ்சகடத்தமர்பாகனுஞ்சோரமடித்தனனே. (ருoஎ)

பாகனைவேறுநிறுத்திவிறற்சிலைபாணியின்வேறுகொடு
வேகமொடுங்கணையாறுதொடுத்துவிளங்கரன்சிந்துமணி
யாகமணிந்தொளிருங்கவசத்துடனங்கைவரிச்சிலையும்
போகவறுத்தனன்சிந்துவெகுண்டுபுகுத்தினனேமியினை. (ருoஅ)

விண்டெரித்ததழற்றிகிரிப்படைவென்னிடமுன்பொருது
கண்டவெறுழ்த்திகிரிப்படைநேர்வரல்கண்டரனங்கையிடை
கொண்டிடுவச்சிரம்விட்டதினுற்றல்குமைத்தவன்மார்புறவோர்
தண்டமெடுத்துவிடுத்தனனன்னதுசார்ந்ததுமாமலைபோல். (ருoகூ)

நேர்படவந்தவயப்பெருவன்கதைநீறுபடத்தருவ
னேர்படுதன்கையயக்கதையோச்சியிறுத்தொருதெய்வதமாகக்
கூர்படுவேலைவிடுத்தனன்கண்டரன்கொம்மெனநேர்கடவும்
வார்பகழித்திரள்யாவையுமட்டவன்மார்புநுழைந்ததுவே. (ருகo)

வேல்படுபுண்ணெடுசாய்ந்தரன்மாழ்கினன்வெற்றிமிகுஞ்சமரின்
சால்புறுசாமளனேற்றழல்கால்கணைசார்ந்ததின்னேரயுதங்
கோல்பதினுயிரஞ்சிந்துவிடுத்தெதிர்கோல்களறுத்தவனூர்
கால்படுவையமுஞ்சேமவையங்களுங்காய்ந்தனனூறம்பால். (ருகக)

கைக்கதைகொண்டுநடந்தொருசாமளன்கால்விசைகொண்டபரி
மெய்க்கணதுக்கினன்சிந்துவெகுண்டுவிளங்கியமுத்தலைவேல்
புக்குருவக்கடிதெற்றினனெற்றியிற்பொன்றினன்சாமளனேரந்
தக்கணமுன்னரடுத்தமரேற்றனனுடகச்சூற்பெயரான். (ருகஉ)

வேறு.

ஐந்துவாளியாலிரணியகருப்பனுங்கவுண
னுந்துவாம்பரியுருட்டினனுருமெனவுருத்துச்
சிந்துபார்மிசைவிரைந்துபோய்த்தேரொடுமவனை
யந்தரத்தெறிந்தாடல்வெம்புரவிவேறிவர்ந்தான். (ருகஙு)

இரதமண்ணில்வீழ்ந்துடைதரவிரணியகருப்ப
னிரதம்வேறிவர்ந்திருபதுதழற்கணைதூண்டி
விரவலான்விடும்வாளிகள்விலக்கியன்னவன்கை
யரவவார்சிலையறுத்தனனழற்சரமொன்றால். (ருகச)

சீற்றமிக்குயர்சிந்துவேறொருசிலைவாங்கிக்
கூற்றமஞ்சுறுமிரணியகருப்பன்கூவிரியு
மாற்றன்மிக்குடைப்பாகனையட்டெழுகணைக
டேற்றமிக்கவனுதலிடையழுத்தினன்றெழித்தான். (ருகரு)

சோகமுற்றறிவுற்றபின்சூழ்கணநாதன்
வேகமுற்றெதிரோடிப்போய்வெய்யமுத்தலைவே
லாகமுற்றுறவழுத்தினனதுமுனைமடிந்த
தோகைமுற்றியசிந்துவச்சிரத்துரத்தெறிந்தான். (ருகசு)

எறிந்தவச்சிரமார்பிணைப்பிளத்தலுமினைந்து
மறிந்துநீங்கினனிரணியகருப்பன்வல்லமரிற்
செறிந்தவீரர்களின்னணமாண்மையிற்சிதைந்த
தறிந்துமுந்துறக்கடவினனணிமயிலிறைவன். (ருகள)

அண்டர்யாரையுஞ்சிறையிடைப்படுத்தறனல்லா
மிண்டுநீர்மையேபுரிதரும்வெய்யகோற்சிந்து
தொண்டரானவர்தமக்கலாற்றோற்றுறாவிறையைப்
பண்டைமாதவப்பயத்தினுற்பார்த்திதுமொழிவான். (ருகஅ)

தேவர்யாரையுஞ்சிறையிடைப்படுத்துளேன்சிறந்த
மூவரானழியாவரமுற்றுறப்பெற்றே
னுவவீண்டுநின்கண்ணெதிராற்றல்சால்சேனைக்
காவலாளர்கள்யாரையுங்காய்ந்துளேன்கணத்தில். (ருகசு)

சிறுவனீயொருசிறுமயில்கடவிவந்தனையென்
னுறுவில்வாளியொன்றாலுயிருலப்பைநீயுய்தி
பெறுதல்வேண்டுமேல்விடுத்தனன்பெயர்ந்துபோய்க்குரவர்க்
கிறுவுறாமனத்தோகைசெய்திருமதியென்றான். (ரு௨0)

முழுதுணர்ந்தருணாயகன்மொழிந்தமைகேளா
விழுதையாகியசிந்துவைப்பார்த்திமையவரை
வழுவிலாச்சிறையிட்டநின்வலியுநின்வரமுங்
கெழுவுகைத்திறத்தறிகுதுங்கிளவல்வேறென்றான். (ரு௨க)

அருளினாயகனருளினான்மொழிந்தமைகேளா
மருளின்மூழ்கியசிந்துதிண்வார்சிலைகுனித்துக்
கருவிமாமழையெனக்கணைவழங்கினனந்த
வுருவவாளிகட்கிடுமுறைபோன்றவேழுலகும். (ரு௨௨)

வரைகள்போழ்வனவானுலகழிப்பனமணிநீர்த்
திரைகள்கீள்வனதிசைக்கரிபொதிர்ப்பனசெங்கா
ணிரைகள்கீழ்வனநீணிலங்கிழிப்பனவவுணர்க்
கரையனாகியசிந்துவினடுசிலைவிசிகம். (ரு௨௩)

காரடுத்தலும்புற்றெழூமீயலேலகடுப்பப்
போரடுத்தலுஞ்சிந்துவின்பொருசிலைப்பகழி
யூரடுத்தபாராதியெங்கணுமூராய்கிமிரச்
சீரடுத்தருள்விநாயகர்திண்சிலைகுனித்தார். (ரு௨௪)

வார்ந்தநாணினைத்தைவந்துமணிவிரற்றெறிப்ப
வார்ந்தவாணிடியெனவொலியார்ப்பவந்நாணிற்
சார்ந்தகாற்றினாற்சராசரமலைந்தனதருவன்
கூர்ந்துமேல்விடுவாளியுட்சிலைகுமைந்தனவே. (ரு௨ரு)

நெட்டிருங்கணைநின்மலனேர்பலதூண்டித்
தொட்டசிந்துவின்கணையெலாங்கணத்திடைத்தொலைத்தங்
கெட்டழற்கணையாலவனுதலுரமிருதோ
ளொட்டிருந்தொடைதாளிவையொருங்குறத்துளைத்தான். (ரு௨சு)

வல்லைவாம்பரிநீங்கிநீண்மணியிரதத்தைப்
புல்லிமூர்ச்சையாய்க்கிடந்தனன்புரைபடுசிந்து
வல்லன்மூழ்கியவரசனைக்காத்தயனின்ற
நல்லசேவகனும்விருபாக்கன்போர்நயந்தான். (ரு௨எ)

ஞானநாயகனருள்கொடுநனிமுனிச்சிறுர்கண்
மானமேல்கொடுபோரெலாம்வகைவகைபுரிந்திட்
டீனமேவுறுதெதிரிரண்டாயிரவெள்ளஞ்
சேனையோடவனுவியைச்செருக்களத்தவித்தார். (ருஉஅ)

தமியனுய்த்தனித்தேர்மிசைதளர்ந்தவன்றெளிந்தே
யெமியனுகியவீரனுமிரும்படையனைத்துந்
துமியமாதவர்தோன்றல்கள்பொருதமையெண்ணி
யுமிழ்செழுங்கதிரிரவியின்படையுறவிடுத்தான். (ருஉகூ)

அண்டர்நாயகனதுதெரிந்தேவினன்சூல
மெண்டிசாமுகநடுங்குறவேகியப்படையை
யுண்டுசென்றவனெளிமணிமுடிநிலத்துருட்டிக்
குண்டலந்திகழ்செவிகளைக்கொய்துமீண்டதுவே. (ருநo)

அல்லலோடுறுநாணுளமலைத்திடச்சிந்து
மெல்லநீளிரதத்தினைவிடுத்துமென்றுகிலா
னெல்லுமாறுசென்னியைமறைத்தூரறியாமை
யில்லினேகினனிருந்தனனொருமருங்கம்மா. (ருநக)

சாய்ந்துசிந்துதன்னூர்வயிற்சார்ந்தமையறிந்து
மாய்ந்தபூதரைத்தலைவரைவரும்வகையெழுப்பி
யாய்ந்தநாயகன்பாசறையடுத்தினிதிருந்தான்
காய்ந்தசேய்முதற்றலைவருங்களந்துறந்தடுத்தார். (ருநஉ)

வெய்யபோரிடைவேண்டியசிந்துவுக்குறுதி
செய்யுமாற்றரிலாதுநஞ்செழும்படைவீழ்ந்த
தையவோவினிநாமும்வாழேமெனவலரி
மையளாவியகுடகடற்பாய்ந்துமாய்ந்ததுவே. (ருநந)

தோற்றுமம்மரிற்றளேந்தசிந்துவின்மனம்போல
வாற்றன்மல்கியகாரிருளடர்ந்ததுபகையை
மாற்றுவள்ளலார்திருவுள்ளமென்னவானகத்திற்
போற்றிருங்கலைப்பொழிகதிர்திங்கள்பூத்ததுவே. (ருநச)

இறைகொள்பாசறையிடமெலாமிருங்கணநாதர்
முறையினுதனைமுடித்தலைமுன்னுறவணக்கி
யறையுமாரணத்துதிகளுமாடலுமலிந்த
நிறையவானருளவர்க்கெலாநிரப்பினனிமலன். (ருநரு)

பிணங்கள்மல்கியகளமெலாம்பேய்கிணந்தின்று
துணங்கையாடலுஞ்சோர்ந்தவருயிரினைக்காப்ப
மணங்கொடுபேமுந்தீபமுமூறீஇமணிதுளக்கி
யிணங்குவார்புரியார்ப்புமிக்கீண்டினமுறையால். (ருநசு)

சிறந்தகண்டகநகர்ச்செழுவீதிகடோறு
முறந்தமாளிகைதொறுமுறைமாதர்கள்களத்தி
லிறந்தவாடவரின்முகங்கண்டிலேமென்று
பிறந்தபேரிடரழுகையேபிறங்கினபெரிதும். (ருநஎ)

வேறு.

மடிபொலியுளத்தொடுவெருந்திவைகிய
முடிபொலிசிந்துபான்முன்னியில்லவ
டொடிபொலிமுன்கையிற்றுற்கையென்பவ
ளடிபணிந்தெழுந்துநின்றறைதன்மேயினுள். (ருநஅ)

வள்ளலேயமரரைச்சிறையின் மாட்டினே
யொள்ளியவுலகெலாமொற்றைவெண்குடைத்
தள்ளருநீழலிற்றங்கவைத்தனை
யள்ளொலியவுணரையடக்கிக்கொண்டனை. (ருகூ)

அயனரியரனிவர்க்கழிவுறாதநல்
வியனுறுவரங்களுமேவினின்றனை
சயமுறுமனையையுந்தளர்வதென்கொலோ
நயனுறுநாயகநவில்கவென்றனள். (ருசo)

இன்னுயிர்நாயகியிறைஞ்சிநெஞ்சழி
யின்னலினவலுமிளகிமன்னர்கண்
மன்னவன்விழியினீர்வாரநெட்டுயிர்த்
தன்னவள்விழியுநீரரும்பக்கூறுவான். (ருசக)

தையலாயிங்குநீசாற்றும்யாவையு
மெய்யெனைமுடித்திடவிமலன்பாங்கரிவ்
வையகவைப்பிடைவந்துதோன்றினன்
கையிருமூன்றுடுகவினவோர்சிறான். (ருசஉ)

பயந்தநாளேயவன்பகையென்றோர்ந்துநான்
வயந்தருவீரரைவைகல்வைகலும்
வியந்துறவிடுத்துளேன்மேயினரெலாஞ்
சயந்தழையவன்கையாற்சாடப்பட்டனர். (ருசங)

கனற்பெயரவுணனைக்கடல்கொலோவெனு
மினப்பெருஞ்சேனையோடேவினேனவன்
மனப்பெருமாயைவண்சமர்நன்றாற்றுபு
சனப்பெரும்படையொடுதளர்ந்துமாய்ந்தனன். (ருசச)

இரவிவெண்மதிகனலெவையுமன்னவன்
விரவிவாழ்வனத்திடைமேவுறுவகை
கரவுறச்செய்தனன்கணத்தில்வேறுசெய்
தரவிரியல்குலாயமர்க்குமேவினன். (ருசரு)

விண்ணவர்தமைச்சிறைவிடுக்கவென்றொரு
திண்ணியதூதனைச்செலுத்தினனவ
னெண்ணியோர்சிறுவனென்றிகழ்ந்தபுத்தியா
னண்ணினேன்படையொடுஞாட்பின்மாதராய். (ருசசு)

இருவர்மந்திரிகளுமெண்ணில்வீரரும்
பொருவறுசேனையும்புழுதியாயின
செருமிகக்கடந்துநான்சிறுவன்கையினன்
மருவிருசெவியொடுமானநீங்கினேன். (ருசஎ)

உறுசிறைப்பட்டுழியும்பரார்களு
முறுவலித்திடப்பெருமுதன்மைகுன்றினேன்
சிறுவனுயமர்த்திறத்துயர்ந்தசெம்மலுக்
கிறுவதுசெயலரிதென்செய்கேனென்றான். (ருசஅ)

உள்ளனயாவையுமுளைந்துகூறலு
மள்ளிலைவேல்வலத்தரையனுனனந்
தெள்ளிதினேக்குபுதேவிதுற்கைதா
னெள்ளியவமிழ்தெனவுரைக்கலுற்றனள். (ருசகூ)

மகமுதற்றொழில்களான்வானுளோர்தமக்
ககமகிழ்செய்திமெரையர்தங்குலத்
திகழ்வறத்தோற்றியவிறைவபண்ணவர்
தகவுறுபூசனைசமைக்கற்பாலையே. (ருரு0)

அந்தரர்க்கிடர்புரியரட்டர்தங்களை
வெந்திறலவுணரைவிளிக்கற்பாலைநீ
சுந்தரத்தேவரைத்துயரவைத்தனை
மைந்துறுமவுணரைவாழவைத்தனை. (ருருக)

செய்தவத்தீங்கினுற்செம்மலேநினை
யெய்துவல்விடரெலாமேவிற்றிற்றைநா
ளேதுவிண்ணவர்சிறையகற்றின்வாழலாம்
பொய்தவிரறுபுயப்புதல்வனுலென்றாள். (ருருஉ)

வண்மையினில்லவள்வகுத்துக்கூறலுந்
திண்மதிச்சிந்துதான்றெளிந்துசெப்புவா
னுண்மையேயாயினுமுரைத்தநின்மொழி
பெண்மையிற்சிறந்துளாய்பேசக்கேண்மதி. (ருருங)

வீரருமமைச்சரும்வெய்யசேனையும்
போரிடையவிந்தபின்புலவரைச்சிறை
தீரநாம்விடுத்திடிற்சிரிப்பன்றேநெடும்
பாரவர்தமக்குமப்பண்ணவர்க்குமே. (ருருச)

சிறைவிடுத்தமரரைத்தேகத்தோடுமெண்
ணுறைவதினின்னும்போருழக்கிமாமயி
லிறையவன்படையினுலிறப்பினெற்றைக்கு
நிறைபுகழொடுகெதிநிலவிநிற்குமே. (ருருரு)

ஆதலாற்றேவரையகற்றுமாறிலை
மாதராய்போவெனமறுத்துரைத்தனன்
காதனுயகியுளங்கவன்றுநீங்கினு
ளேதமாகியவிராப்பொழுதுநீங்கிற்றே. (ருருசு)

வானிடையென்னெடுவைகலும்பொருந்
தானவர்குழாத்தையுஞ்சாடுநீயென
ஞானவித்தகற்குரைநவிற்றப்போந்தென
வானவெய்யவன்கடலகட்டிற்றேன்றினுன். (ருருஎ)

வேறு.

காலையிற்புரிநாட்கடன்கழித்தொளிகலந்த
மாலைவெண்குடைநீழலின்மணித்தவிசிவர்ந்த
வேலையின்பெயர்வேந்தன்வீற்றிருந்தனனந்த
வேலையன்னவன்மைத்துனரிருவர்மேவினரால். (ருருஅ)

பணிந்துநின்றவக்கலனெடுவிகலனைப்பார்த்தா
னணிந்தவேவினீராடமர்க்கேகுதுநீயிர்
துணிந்தபூதரினிடர்தொடராவகைநகரைத்
திணிந்ததோள்வலத்தோம்புமினென்றுசெப்பினனுல். (ருருகூ)

கேட்டமைத்துனரிருவருங்கேண்மையிற்றொழுதங்
கீட்டமல்கியபகைஞரையாங்கள்போயிறுத்தும்
நாட்டநல்கெனவிரந்தனர்நரலையின்பெயரான்
வாட்டமின்றியன்னவர்க்கதுவழங்கினனெழுந்தார். (ருசு0)

திறங்கொள்சேனைநாலாயிரவெள்ளஞ்சேர்ந்தடுப்பப்
பிறங்குசிந்துவின்மைத்துநர்பெருங்களஞ்சார்ந்தா
ரறங்கொணாரதர்கணேசர்தமடிபணிந்தமர்க்கு
மறங்கொள்வீரர்களிருவர்வந்தனரெனவகுத்தார். (ருசுக)

புடையிருந்திடுநந்தியும்புட்பதந்தனும்வேற்
படையணிந்தருள்கந்தரும்வீரபத்திரரும்
விடைமயிற்பரிவிநாயகர்தரக்கொடுவிரைவின்
மிடைதருங்கணமுடன்செலவெங்களத்தெதிர்ந்தார். (ருசுஉ)

இரண்டுசேனையுநெடும்பொழுதெதிர்ந்துழிநிலத்திற்
புரண்டவேழங்கள்பொடிந்தனவிரதம்பொன்றினமா
திரண்டவீரர்கண்மடிந்தனர்சிலர்சிலர்மான
முரண்டழாதுடைந்தனர்முதிர்தானவர்படையுள். (ருசுங)

சேனைமாய்தலுஞ்சினஞ்செறிவிகலனுங்கலனுந்
தானைவீரர்கள்சாய்தராவண்ணமுன்னெய்தி
யூனைவேட்டிணுமொளிறுகைப்படைத்திறங்காட்டி
யானைமேலெழுமடங்கல்போற்பூதரையிறுத்தார். (ருசுச)

பாரிடம்பலபாரிடம்வீழ்வதுநோக்கித்
தாரிடம்படத்தாங்குறுநந்திமுன்சார்ந்து
சீரிடம்படுசிலையின்வாய்ச்சிலீமுகந்தொடுத்துப்
போரிடம்படுமிருவகைப்படையையும்பொடித்தான். (ருசுரு)

கூற்றுமஞ்சுறுமிருவருங்கொடுமரம்வணக்கி
யாற்றனந்திகைச்சிலையினையறுத்தனரன்னோன்
மாற்றருந்திறற்சுரிகையினிருவர்வார்தவரும்
பாற்றிவையமுமுடைத்தனன்பாய்ந்துவன்கோட்டால். (ருசுசு)

பாசமற்றுயாருள்பெறுநந்தியைப்பகைஞர்
பாசம்விட்டிறப்பிணித்திரும்படைநடுவுய்த்தார்
நாசமில்லவனகப்படுநவையினோனாது
பூசன்மல்குவேற்புட்பதந்தன்பொருவேற்று. (ருசுஎ)

பிணித்தபாசத்தினந்தியைப்பெயர்த்தவர்வில்லுந்
துணித்துமார்பிடையெவ்வெழுவாளிகடுறுத்தான்
மணித்தமோலியர்மான்றுபின்வச்சிரத்தாற்ற
றணித்துமாற்றினர்தாக்கியபுட்பதந்தனையே. (ருசுஅ)

கலதிவாட்படைவீரபத்திரன்கனன்றெதிர்த்து
விலகுறுவிறல்விகலனைவியன்மலர்ச்செழுங்கை
நிலவுவார்விரன்முடக்குபுநெடுஞ்சிரம்புடைத்தா
னலகையாட்டயர்களத்திடையவிந்தனனனையான். (ருசுகூ)

காந்தள்வேய்ந்தருள்கந்தவேள்காய்ந்துறுகலனைச்
சேந்தபாணியிற்பிடித்தனன்றிரித்திருநிலத்தில்
வீந்துபோம்படிமோதினன்வெள்வளைபிடித்தா
னேந்துதோளிரண்டாயிரம்படைத்திடுமெறுழோன். (ருஎ0)

காதுகாவலரிருவருங்களத்திடைப்படலுந்
தீதுசேரவுணப்படைதிசைதொறுமிரிந்த
தோதுவேளமர்க்குறுவரைநோக்கியங்கிருந்தான்
றாதுசார்ந்தவசயஞ்சொலச்சோர்ந்தனன்சிந்து. (ருஎக)

சிந்துவானவன்றுயரெனுஞ்சிந்துவினழுந்தி
மந்தவேலையிற்றன்மனையதன்மனையென்னு
மைந்தர்சார்ந்தடிவணங்கியாமிருப்பமாற்றலர்க்கிங்
கெந்தைமாழ்குவதென்னெனவிதுவுஞ்சொல்வாபால். (௫௭௨)

எங்கண்மாதுலர்க்கிறுதியையிசைத்தகந்தனையுந்
துங்கவீரபத்திரனையுந்தொலைத்துமாமயின்மேற்
றங்கும்வானவர்தலைவனைத்தடங்கையிற்பற்றி
யிங்குமேவுதும்விடையருளெங்களுக்கென்றார். (௫௭௩)

ஊக்கமிக்கதன்மைந்தர்களுரைத்தமைகேளாத்
தேக்குசிந்தையின்றுயரொலாஞ்சிந்துபுசிந்து
தாக்கவல்லபல்படையொடுஞ்சார்மின்களென்றா
ணுக்கமுற்றவர்போன்றவரமர்செயவெழுந்தார். (௫௭௪)

வேறு.

விளங்குமெண்ணுயிரவெள்ளஞ்சேனைமண்
டுளங்குறப்புடைவரத்தொலைவில்பல்படை
வளங்கொடுமானமுமறலுஞ்சீற்றமு
முளங்கொடுசெங்களத்தொல்லையெய்தினார். (௫௭௫)

முருகவேள்புடையமர்மொய்ம்பின்வீரர்கள்
பெருகுவேலைகளெனப்பிறங்குசேனையைப்
பருகுவாரெனநடுப்படர்ந்துவெஞ்சினந்
திருகியாடமரினைச்செய்திட்டாரரோ. (௫௭௬)

உடைந்தனவிரதங்களுலைந்தவேழங்க
ளிடைந்தனபரிக்குலமிறந்ததானைக
ளடைந்தனநாய்நரியலகைவிண்ணவர்
கடைந்தவேலையிற்படைகலங்கிற்றென்பவே. (௫௭௭)

தன்மனுமதன்மனுந்தளர்ந்ததம்படைப்
புன்மைகண்டொய்யெனப்பொலந்திண்டேர்கடாய்
வின்மலிசரமழைவிண்ணும்போர்த்திடப்
பன்முறைதொடுத்தனர்பாழிவீரர்மேல். (௫௭௮)

இலக்கருமெறுழ்வலிவீரர்தாங்களு
மலக்கணுற்றனராறுமாமுகன்
கலக்கியவிருவர்தங்கமழ்ந்தகுஞ்சியு
நலக்குங்கைப்பற்றிநானிலத்தின்மோதினான். (௫௭௯)

அடல்வலிசிந்துவினரியமைந்தர்க
டடநெடுவானகஞ்சாரச்சென்றன
ரிடவிடக்களனொழிந்திறைவன்பாங்கர்போ
யுடனிருந்தனர்குகனுதியும்பாரார். (௫௮0)

உரமலிமைந்தர்களுலந்தசெய்தியை
விரவியதூதர்கள்விளம்பக்கேட்டுவிண்
பரவியவுருமொலிபயப்பமாமணி
யரவெனச்சிந்துதன்னகத்தின்மாழ்கினான். (௫௮௧)

இழுதெனவுருகியுள்ளினைந்துசிந்துவங்
கழுதலுஞ்சுற்றமுமழுதன்மேயின
தொழுதகுபுரோகிதன்றுனைந்துமுன்புபோய்ப்
பழுதறவவன்றனைப்பண்பிற்றேற்றுவான். (௫௮௨)

தேவரைச்சிறையிடைத்தேம்பவைத்தனை
மூவரினழிவுறுமுதன்மையெய்தினை
காவலபகைஞர்கைகலந்தசெவ்வியி
னவதோவிரங்குவதனைத்துமாயினும். (௫அ௩)

நித்தியரெனநெடும்புகழின்வைகிய
வுத்தமவியாதனுதியர்க்குமும்பர்க்குங்
கைத்திடுங்காலற்குங்கமலன்மாயற்கும்
பொத்துடலழிவதோர்பொழுதுமுண்டுகொண். (௫அ௪)

ஒருவனுக்களவறுபிறப்புண்டாகையா
லிருமுதுகுரவர்களெண்ணிறந்துளா
ரருமைசெய்மைந்தருமனேகர்பாங்குற
மருவுசுற்றமும்பலமன்னவாகையால். (௫அ௫)

தந்தையாரன்னையார்தனையரார்மகிழ்
சிந்தைசேர்சுற்றமார்திரணம்பற்பல
வந்தொருகாற்றினோர்மருங்குகூடுறும்
பிந்தொருகாற்றினாற்பிரிந்துபோகுமே. (௫அ௬)

செறிபலபுலத்தினுஞ்சென்றமேய்ந்திடு
பறவைகளிரவினோர்பாலடுத்திடு
மறுவறுவிடியலின்மாதிரந்தொறும்
பிறிவறுவாழ்க்கையிப்பெற்றியன்றுகொல். (௫அஎ)

அழிவனவாழ்க்கையென்றறிந்துநெஞ்சிடைக்
கழிதுயருறுதிநீகவலைசார்தொறு
மொழிவறுவலிதபுமூக்கந்தேய்தொறும்
பழிபடப்பகைஞர்தம்பாழிவீங்குமே. (௫அஅ)

மருவலர்வலிமிகமருவுங்கேடெலாம்
பெருகியகேட்டினாற்பெற்றசீர்த்தியு
மொருவுறுமாதலாலொன்னலார்த்தெறக்
கருதுவதேகடனாகுமென்றனன் (௫அ௯)

புத்தியிற்கூர்த்திடும்புரோகிதன்மொழி
பத்தியினுட்கொடுபரிவுதீர்ந்தெழுந்
தெத்திசையோர்களுமிறைஞ்சுசிந்துதான்
வித்தகவடிசில்கண்மிசைந்துசெல்லுவான். (௫௯0)

அவிர்மணிமுடிமுதலணிந்துமெய்யிடைச்
சவிமணிச்சாலிகைதாங்கிவாளொடு
புவிபுகழ்படைக்கலம்பொற்பக்கைக்கொடு
குவிதலைக்கூவிரிகொம்மென்றேறினான். (௫௯௧)

நால்வகைச்சேனையுநரலும்வேலைபோற்
பால்வரப்பறந்தலைப்படர்ந்துநின்றனன்
மால்வளர்சிந்துவின்வரவுதேர்ந்துபோர்க்
கேல்வகைவிநாயகரெழுதன்மேயினார். (௫௯௨)

ஞாங்கர்கைத்தலத்தமர்நம்பிதாள்பணிந்
தாங்கமர்க்கடியனேனடுப்பலெம்பிரா
னீங்கிருந்தருண்மதியென்றிரந்தவன்
றூங்கியவிழியருடரக்கொண்டேகினான். (௫௯௩)

வே று.

அந்தரர்தம்மைவேள்வியங்களத்திலலேத்தருள்வீரபத்திரனு
நந்தியும்புட்பதந்தனுமேன்மைநண்ணியபிருங்கியும்வீர
முந்தியபூதராசனுமோங்குமிரணியகருப்பனுமுலவா
மைந்துறுவீரர்பலரும்வன்பூதகணங்களுமருங்குடன்போந்தார். (௫௯௪)

சிந்துவென்றுரைக்குமவுணர்கோன்செம்பொற்றேர்வயவீரர்தற்சூழக்
கந்தனேடெதிர்த்தான்வாரணவீரர்காய்ந்தடுவீரபத்திரனே
நந்தியேயென்னுமிருவரோடெதிர்த்தார்நற்பரிவீரர்கள்புட்ப
தந்தன்மெய்ப்பிருங்கிதம்மொடுமெதிர்த்தார்தானைமற்றிருவரோடெதிர்த்த.

தானையுட்புகுந்துபூதராசனுஞ்சேர்தகுமிரணியகருப்பனுந்தா
நானிலத்திறங்கிக்கதைதடிநேமிநாந்தகமாதிவெம்படையால்
வானவர்படையாற்பலசமர்புரிந்துமல்லமராடியுங்களத்தை
யூனுகுபிணத்தான்மறைத்தணியிரதத்துகந்திருந்தயர்வுயிர்த்தனரால். ()

சலமிகுபடைக்கைப்பிருங்கியும்புட்பதந்தனும்வாம்பரியிவர்ந்து
வலமிடந்திரியவுகைத்துவேற்படையால்வாளினுல்வளேயினுற்கயிற்ரு
லிலகுகப்பணத்தாலிவுளியங்குழாத்தையெறிந்தெறிந்திருநிலத்துருட்டி
மலர்தருவாகையணிந்துதேரிவர்ந்துவருபடைநோக்கியங்கிருந்தார். (௫௯௭)

வீரபத்திரருநந்தியும்வேழவிறற்பெருங்குழுவிடையடுத்துப்
பேருருக்கொண்டுகாலினுலுதைத்தும்பெருங்கையினெற்றியுமெடுத்துப்
பாரிடைத்தடிந்துங்கடன்மலேதிசைவான்படமிகவெறிந்துந்திண்முகத்து
வாருநெட்டிலவைபறித்தும்வென்றாரும்வையமேலிவர்ந்தயர்வுயிர்த்தார். ()

உந்துதேர்வீரர்கடலெனச்சூழவுருத்துவந்தெதிர்த்தசிந்துவினே
டந்திலோரிலக்கத்தொன்பதின்மர்களுமருகுறவமரிடைமீண்ட
கந்தர்தேர்வீரர்பலரையுங்கொன்றுகருமுரணவுணர்கோனுருஞ்
சுந்தரமானவிரதமுஞ்சேமச்சுடர்மணியிரதமுமிறுத்தார். (௫௯௯)

மடம்படுசிந்துமனத்தினுட்கனன்றுமற்றிவன்றனேயுகம்போல
விடம்படுநிலத்தினிறுத்துதும்யாமென்றெறுழ்வலித்தண்டமொன்றெடுத்துக்
கடம்பணிமுருகனுருங்கூவிரத்துக்கதிர்மணிக்கொடிஞ்சியினுயர்ந்து
நடம்புரிகுரத்துக்குரங்குளேப்புரவிநான்குபூணிரதமேல்விடுத்தான். (௬00)

அண்டர்கள்சேனுபதிகணேபத்தாலடுத்தவார்தண்டினேப்பொடித்துக்
கொண்டமெய்க்கவயங்குரூஉமணிமோலிகுடங்கையிற்குனிசிலேபிறவுந்
திண்டரையிடத்துவிழச்சிலபகழிசெலுத்தியச்சிந்துவின்வறுமை
கண்டொளிவாடுமுகத்தினேநோக்கிக்கருணேயிற்கட்டுரைத்திடுவான். (௬0௧)

கணக்கறுசேனேகாவலரமைச்சர்கலனெடுவிகலனின்மைந்தர்
பிணக்குவைக்களத்துமடிந்தனர்நீயும்பின்கொடுத்திரிந்தனேநென்ன
லுணக்கியவுளத்துநிராயுதனுகியொருவனுயின்றெதிர்கின்ருய்
வணக்கமுற்றுய்தியெய்துமாறின்னுமதித்திலேமதியிலாதவனே. (௬0௨)

இமையவர்சிறையுமுனிவரர்குறையுமிருநிலயாதிமூவுலகுந்
தமையடுநினதுகொடியபோர்த்திறமுந்தறுகணினுயிரையுமொருங்கே
யமைதருமெனதுகைப்படையொன்ருலறுத்திடுதனேயமர்செயவிடுத்த
வெமையனுக்குவப்புசெய்குவலறத்தையெண்ணியேயதுபுரிந்திலெனல். ()

இன்றுபோய்நாளேவாவெனவிடுத்தானெனறுழ்ப்புயச்சிந்துவுண்ணுணி
நின்றிலனேகிநெடுநகர்ப்புகுந்துநிரைமணிமாளிகையிருந்தான்
குன்றுவேற்படையாற்றுளேத்தருள்கொற்றக்குமரவேள்வீரர்கண்மருங்கு
துன்றுறவடுத்துவிநாயகர்பாதத்துணேமலர்தொழுதுடனிருந்தான். (௬0௪)

வேறு.

மண்ணிடைநெடும்போர்செய்துமலையுரங்கிழித்தவேற்கை
யண்ணலைமுதலாவுள்ளோரயர்வுயிர்த்திருப்பத்தானும்
விண்ணிடையவுணர்போரின்மேவியவெப்புத்தீர
நண்ணினன்குடபாலோங்கனுளினையாக்குந்தேவன். (சு0ரு)

தனதுபகாரங்கொண்டுசெரித்திடுமவுணர்கூளி
யினமலிகளத்திற்பட்டார்க்கினைந்தவர்தம்மைக்காண
வனகனெங்கரன்றன்னுணைக்கஞ்சுபுபையப்பையத்
தினகரற்குடைந்துபோனசெறியிருள்பரந்ததன்றே. (சு0சு)

வெஞ்சமருழந்தோர்க்கெல்லாம்விநாயகன்வழங்காநிற்குந்
தஞ்சமில்லாதவின்பத்தனியருட்குளிரைவௌவு
நெஞ்சினனுகிப்போந்தானிகர்ப்பவெண்டிங்கட்செல்வன்
மஞ்சணிநெடியவானின்வந்தனனிருள்கால்சீத்து. (சு0எ)

அற்றைநாளிரவினுகையவரவர்க்கருளிச்செய்து
கொற்றமாமயூரநாதர்குலவுபாசறைக்கண்வைகப்
பொற்றமாளிகையின்முன்போற்புலம்பொடுசென்றசிந்து
பற்றுளார்க்கின்னனல்கிப்பருவரலுற்றான்றானும். (சு0அ)

வீங்கியவெற்றிச்சிந்துவிளிந்திடுங்காலம்வந்த
தாங்கவன்றன்னைச்சீறுமமையத்திற்கணேசர்கண்க
டாங்கியவெகுளிவெம்மைதகக்கவர்வாமென்றுற்றாங்
கோங்கியகுணபாற்குன்றினுதித்தனன்பருதிச்செம்மல். (சு0கூ)

நாட்கடன்கழித்தெல்லாருநயப்புறுங்காலைதன்னிற்
றோட்கடைக்கிடந்தவீணைச்சுரர்முனிகணேசர்செய்ய
தாட்கமலங்கடாழ்ந்துதடங்கரங்குவித்துநின்று
மீட்கவொண்ணுதவன்பின்விதப்புறவிதனைச்சொன்னன். (சுக0)

நொடிக்குமுனண்டத்தோடுநுவல்பலவுலகுநோக்காற்
பொடிக்கும்வல்லமையுள்ளாயும்போர்பலநாள்களாற்றி
நடிக்குமிச்செய்தியென்னேநாழிகையொன்றாமுன்
முடிக்குமாறுளத்திற்கோடிமுறைபிறழ்பகையையென்றான். (சுகக)

புலவர்கண்முனியைநோக்கிப்பொறிமயில்கடவுநாத
னலர்புகழ்க்கந்தனென்னலாற்றுபோர்க்கழிந்துநாணிக்
குலவுதன்மனையுட்புக்கான்கொலைக்களமடுப்பினன்றே
யிலகியபோர்க்குச்சென்றெற்கிறுப்பதுகூடுமென்றான். (சுகஉ)

புடையிருந்ததனைக்கேட்டபோர்வலிப்பிருங்கியென்பா
னுடையவன்பாதம்போற்றியொட்டலனுனசிந்து
படையொடுகளத்திற்போர்க்குப்படருமாசெய்வலென்று
விடைகொடுபூதர்சூழவியனகர்நோக்கிச்சென்றான். (சுகங)

புறநகர்க்காவல்வைகும்பொருநரைமுழுதுங்கொன்று
பறவையும்படரமாட்டாப்பலபொறிநாஞ்சினெச்சி
யுறவரும்பொருளிற்சேர்த்தவுண்ணகர்புக்குநேர்ந்த
மறமிகுதறுகண்மூலப்படையொடுமலைத்தல்செய்தான். (சுகச)

பாறுவான்பந்தர்செய்யப்பலசமர்புரியுந்தீயோர்
நூறுகோடியருமாளநொடிக்குமுன்னூழிலாடி
யூறுசேராதசெம்பொனொளிமணிமாடமெல்லா
நீறுகாண்பாக்குநேர்ந்தானிகரிலாப்பிருங்கியென்பான். (சுகரு)

கூளியினினமுந்தானுங்கூடங்கள்பெயர்த்துமாட
மாளிகைதகர்த்துமாடமாளிகைபெயர்த்துவீசி
நீளிருந்துவிசாய்த்துநீண்டகோபுரத்தார்பித்தி
தூளிகள்போர்ப்பச்சாய்த்துந்தொன்னகர்க்கழிவுசெய்தான். (௬௧௬)

காலினலுதைத்துச்சிந்துகனகமாளிகையைத்தள்ளி
வாலியவுவளகத்தின்வல்விரைந்தடுத்துக்கற்பி
னுலியமனையைப்பற்றியவனைதிருய்த்துவாசஞ்
சாலிணர்மலர்மென்கூந்தறனைச்சுரிகையினீர்ந்திட்டான். (௬௧௭)

வெஞ்சினங்கனன்றுமூளவிறற்பெருஞ்சிந்துவென்பா
னஞ்செனவுருத்துவல்லேநாகபாசத்தைவிட்டா
னஞ்சிறைக்கருடன்விட்டானூற்றல்சால்பிருங்கியிவ்வா
றெஞ்சுதலின்றிப்பல்போரிழைத்தனர்சிறிதுபோது. (௬௧௮)

விடுத்திடும்படைகள்பல்போர்விளைத்துழிப்பிருங்கியென்பா
னடுத்தடற்சிந்துமோலியவனியில்வீழத்தாளொன்
றெடுத்துதைத்தந்தரத்தினிம்மெனவெழுந்துமீண்டு
தொடுத்தமெய்யன்பிற்றாழ்ந்துசுமுகர்பாலிருந்தானன்றே. (௬௧௯)

மானமுள்ளலைப்பச்சிந்துமன்னவன்முளிந்தபுல்லின்
கானகமழிப்பநேர்ந்தகனலெனவீரம்பொங்கி
யானினிவெல்லலொன்றங்கிறத்தலொன்றன்றியில்லென்
றூனவெஞ்சினத்திறேடுமைதெனக்களத்திற்புக்கான். (௬௨௦)

செய்யவேற்காளைவேண்டாதிறல்கெழுவீரன்வேண்டா
வெய்யபோராற்றுமேனைவீரரும்வருதல்வேண்டா
பொய்யறுபோர்க்குமஞ்ஞைப்போத்தினன்வருகவென்று
வையெனத்தூதன்றலவனறைகூவிநின்றான். (௬௨௧)

வேண்டுவார்வேண்டப்பட்டவிழுப்பொருள்கொடுக்குநாத
னண்டகைசிந்துமன்னனறைந்தமைக்கிசைந்துவல்லே
காண்டகுகலவப்பேழ்வாய்க்காமருபறவைமஞ்ஞை
தூண்டிவெங்களத்திற்சென்றான்றன்னலன்மகிழ்ந்துநேர்ந்தான். ()

பிறந்தபோதுடனேதோன்றிப்பிறங்குசக்கரத்தைநோக்கிச்
சிறந்தவந்தனைகள்செய்துசெலுத்தினன்புவனமூன்று
மிறந்திடத்தழல்கான்றேகிற்றெம்பிரானதற்குவேறு
மறந்தழைபடைதூண்டாதுவறியன்போல்வாளாகின்றான். (௬௨௩)

முடிவிலாமுதல்வன்றன்னைமூரியம்படைகட்கெல்லாம்
படியிலாகரமாய்நின்றபராபரப்பொருளானனை
நெடியவனறியாத்தேவைநேமியென்செய்யுமுக்கா
லடிமலர்வலஞ்செய்தன்பருச்சனைமலர்போன்றன்றே. (௬௨௪)

சக்கரமடியில்வீழ்ந்துசயங்கெடநோக்கிநாணி
முக்கணுஞ்சடையுமேலாமுதன்மையுமுடையசிந்து
கைக்கண்முன்பிறந்தபோதேகலந்துடன்வந்தசூலம்
புக்குயிர்குடிக்கவென்றுபுகன்றுதாழ்ந்தேவினனே. (௬௨௫)

ஆலமுங்கனலும்வேல்வாளயின்முதற்படையும்வீரச்
சீலமுங்குறிக்கும்பூத்ததிரளுமற்றெல்லாங்கான்று
சூலமங்கடுப்பநோக்கிச்சுமுகர்கைப்பரசைவிட்டார்
ஞாலமுங்கலங்கத்தானுநண்ணியதெல்லாங்கான்று (௬௨௬)

வந்தெதிர்சூலந்தன்னைவண்டுகளாக்கித்துள்ளிச்
சிந்துவின் மருமம்போழ்ந்துசிறைவிரிகலாவமஞ்ஞை
யெந்தைசெங்கரத்தின்முன்போலெய்திவீற்றிருந்ததின்ப
சுந்தரந்திகழ்ந்துசெந்தீச்சுடர்விம்பரசுமாதோ. (௬௨௭)

அந்தரர்மிடைந்துதற்பத்தலர்மழையொழிந்தார்வான
துந்துமியியம்பாநின்றதொல்லைமாதவர்கடாழ்ந்து
மந்திரமறைகடம்மால்வழுத்தினர்கந்தராதி
நந்தொளிர்வீரரெல்லாநனிமகிழ்சிறந்துதாழ்ந்தார். (௬௨௮)

வெம்பியகளத்துச்சிந்துவிளிந்தமையறிந்துகோட்டத்
தும்பர்கண்மருங்குகாவலுற்றவரிரிந்தார்வானுள்
சும்பனேநிசும்பன்வீரஞ்சூழ்விருத்திரன்போர்வல்ல
சம்பரனாதியோருந்தனித்தனியிரியல்போனார். (௬௨௯)

ஆருண்மயூரநாதரரிக்கொருசரபமான
வீரபத்திரனைநோக்கிவிண்ணவர்தம்மையிங்குச்
சாரவேகொணர்கவென்றார்தாழ்ந்தவனேகத்தீயோர்
கோரவன்சிறையிற்றீர்ந்ததேவர்முன்குறுகினாரே. (௬௩0)

வந்தடிபணிந்துபோற்றும்வானவர்தம்மைக்கொண்டு
முந்தியமயூரநாதர்முன்னுறச்சென்றான்வீரன்
சிந்தையிற்கவலைநீங்கித்தேவர்கள்பணிந்துநின்றங்
கந்தமிலாதான்றன்மையாதரித்தேத்தினாரே. (௬௩௧)

மல்கியகருணைநாட்டம்வழங்குபுகருணைநாத
ரல்கியசிந்துதன்னாலருஞ்சிறைப்பட்டீரெல்லாம்
புல்கியநமதுவைப்பிற்புக்குவாழ்ந்திருமினென்று
நல்கினர்வரங்களந்தநலத்தகுசெவ்விதன்னில். (௬௩௨)

பூதர்கண்மருங்குசூழப்பூவையுந்தானுமெண்டோ
ளுதர்வெள்விடையிற்றோன்றிநல்லருட்பார்வைநல்கி
மேதகுகணேசர்தம்மைவெற்றிவேற்குமரன்றன்னைக்
காதலினணைத்தெல்லோர்க்குங்காட்சிதந்தருளினாரே. (௬௩௩)

அனைவரும்பாதப்போதையன்பொடுவணங்கிப்போற்றி
நினைதரும்வரங்களந்தநின்மலனிடத்துப்பெற்றார்
புனைமலர்க்கூந்தற்செவ்வாய்ப்புனிதையொடீசர்பின்னர்க்
கனையொளிக்கயிலாயத்தைக்கலந்துவாழ்ந்திருந்தாரன்றே. (௬௩௪)

சக்கரபாணியென்னுந்தழலுமிழ்வேற்கைமன்னன்
றுக்கமுற்றழுதுபின்னர்த்தொகுபிணக்களத்தினாவி
யுக்கதன்மகன்முன்றோரையொள்ளெரிவாயிற்பெய்து
புக்கருண்மயூரநாதர்பொன்னடிவணங்கினானே. (௬௩௫)

ஊற்றியபசுந்தேன்வாகையொண்மலர்மாலைவேய்ந்த
வீற்றொளிமயூரநாதர்விளங்குதம்மடிகடாழ்ந்து
போற்றுமன்னவனைநோக்கிப்புந்தியுள்விழைந்தயாவை
சாற்றுகதருதுமென்றார்தமக்குறவிகலுமில்லார் (௬௩௬)

தொழுத்தையேனினதுபாதந்தொழுதங்கண்ணாரக்கண்டும்
வழுத்தியுமுய்ந்தேனாயேன்மைந்தனும்பகைத்துநின்றாண்
டழுத்தபேரின்பமானமுத்தியையடைந்தான்வேறு
விழுத்தகுவரங்கள்யாவைவேண்டுவவில்லையேனும். (௬௩௭)

அடியனேன் மனையிலிந்தவமரர்களோடுமெய்திக்
கடிதராதென துபூசைகைக்கொள்கவென்றுமீட்டும்
படிமிசைபணிந்தானன்ஞன்பரிவினைநோக்கியென்று
முடிவிலானதற்குநேர்ந்துமுதுநகர்நோக்கிச்சென்ருன். (௬௩௮)

முன்னரேமன்னர்மன்னன்மொழிந்திடப்பட்டுச்சேர்த்தி
மன்னுநாகரிகரெல்லாம்வளநகரலங்கரித்துத்
துன்னுகையுறைகளேந்தித்துனைந்தெதிர்போந்துதாழ்ந்தா
ரின்னருள்வாக்குநல்கியெம்பிரானகருட்புக்கான். (௬௩௯)

மங்கலவியங்கள்விம்மமாதர்கணடனஞ்செய்யப்
புங்கவர்முனிவர்சூழப்புரையறுவீதியேகித்
திங்கள்செங்கதிர்தோய்மாடஞ்செறியரண்மனையுட்புக்குத்
தங்கியமடங்கற்றிண்காற்றவிசின்வீற்றிருந்தாரன்றே. (௬௪0)

சேவலங்கொடியோனுதிதேவர்கள்புடைவைகுற்ருர்
காவலன்மகிழ்ந்துதெய்வக்கற்பகமாதிநல்கும்
பூவலராதிகொண்டுபுடையுளார்பரிவாரங்க
ளாவகைபூசையாற்றியடிகளைப்பூசைசெய்தான். (௬௪௧)

வேறு.

மடங்கல்வாகனமுஞ்சித்திபுத்திகளுமலர்க்கரம்பத்துமக்கரத்தின்
விடங்கலுழ்படைகள்பத்துந்தேசுருவும்விளங்குறத்தோற்றினர்மஞ்ஞைத்
தடங்குருகிவர்ந்துதயித்தியர்பலரைத்தாக்கியவிநாயகர்நோக்கி
மடங்கருமகிழ்வோடற்புதமெய்தியனைவருஞ்சயசயவென்ருர். (௬௪௨)

அண்டர்கள்சிறைநீத்தருண்மயூரேசராழிகையேந்திரேனுமங்
கொண்டமன்னவனைநோக்கிநின்மைந்தன்கொடியகோல்செலுத்தினனவனை
மண்டுசெங்களத்திற்கொன்றனஞ்செங்கோல்வளரநீவையகங்காத்து
விண்டுடலிறுங்கானமதடிமலரைமேவுகவெனச்சொலியெழுந்தார். (௬௪௩)

துறக்கமுநிகராக்கண்டகநகரந்துறந்துடன்ருேடருநாகரிகர்
மறக்குறும்பறுக்குஞ்சக்கரபாணியிவர்நகர்மருவுமாறிருத்திச்
சிறக்கநாற்பயனுஞ்சேர்ந்தவர்க்களிக்குந்திரிசந்தியானவைப்பிடத்தைப்
பிறக்கமுற்றிடுமுட்கருணையினடுத்துப்பெரிதுவாழ்ந்திருத்தன்மேயினரால்.

ஆரணற்கன்றுசிறையினைக்கொடுத்தவறுமுகனுதிவீரர்களு
நாரணர்முதலாம்வானவர்பலருநவையறுமுனிவர்கள்குழாமும்
பூரணப்பொருளைப்புண்ணியமுதலைப்போற்றினர்க்கிடர்கெடுத்தருளும்
சீரணிகருணைச்செம்மலைத்தேவதேவனைப்பூசனைபுரிந்தார். (௬௪௫)

பணங்கிளரரவப்பள்ளியான்முதலாம்பண்ணவரெம்பிரானேவ
விணங்கியதத்தமுலகினிலெய்தியின்பமுற்றிருந்தனர்பூத
கணங்களுங்கந்தராதியோர்பலருங்கைகடவாதுடனிருப்ப
வணங்கினரோடுசிலபகலங்ஙனமர்ந்தனன்விநாயகப்பெருமான். (௬௪௬)

கலவமாமயிலைக்கந்தனுக்கருளிக்கதுவ்யவின்றுதொட்டுனையெவ்
வுலகமுமயூரத்துவசனென்றுரைக்கவெனவுரைத்தவன்முதலோரை
நிலவுறுதத்தமிருக்கையினேவிநிமிர்ந்ததன்பரிசனத்தோடுங்
குலமுனிச்சிருர்கடம்மொடுமெய்திக்கோலமார்தனதுலகிருந்தான். (௬௪௭)

என்னையாளுடையானருடலைகொண்டங்கிருந்துவாழ்சக்கரபாணி
மன்னவன்செங்கோலோச்சநான்மறையும்வழங்கினவையகமூன்று
மின்னலிற்றீர்ந்துவாழ்ந்தனவவியூணிமையவர்பெற்றுளமகிழ்ந்தார்
நன்னராலயங்கண்முன்புபோலோங்கிநலத்தகுபூசைகொண்டனவே. ()

பிந்தியமயூரேசர்திருவவதாரப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருகஙு.



## எசூ வது - பாலசந்திரர்திருவவதாரப்படலம்.



எம்பிரானுமையாளிடத்தவதரித்திட்டிறைமைபூண்சிந்துவைத்தாக்கி
யும்பரார்சிறையைநீக்கியதுரைத்தாமுயர்தவவியாதமாமுனியே
நம்புமூவிரண்டாந்திருவவதாரநயத்தகுபாலசந்திரனு
மிம்பர்வாழந்தத்திருவவதாரம்யாதெனினியம்புதுங்கேளாய். (க)

விறன்மிகுகனலாசுரனுயிர்வாட்டவிப்பிரச்சிறுனெனத்தோன்றி
யறன்மிகுதேவர்பூசைகொண்டருளுமவ்வவதாரமாமதனை
யுறமுனமுரைத்தாமறிமதியேழென்றுரைத்திடுந்திருவவதாரம்
பிறவிவிட்டோடக்கேளினியென்றுபேசுவன்கமலநான்முகத்தோன். (உ)

பாலசந்திரர்திருவவதாரப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருகரு.



## எஎ வது - தூமகேதுதிருவவதாரப்படலம்.



கந்தமலர்ப்பொழில்சூழ்ந்துநிறைந்தகயந்துண்டி
சந்தமணிப்பணிலங்கண்முரன்றுதவழ்ந்தூரு
மந்தண்வயற்பணைமல்கிவளங்களுறுத்தேயம்
விந்தியமென்றிசையாலும்வியப்பவிளங்கிற்றால். (க)

கூழ்மலியத்தகுதேயம்விளக்கியகொள்கைத்தாய்
வாழ்மகிபானிதியென்றொருமாநகர்வைகிற்றவ்
வூழ்மலரோடையுடுத்தபதிக்கணுறைந்துள்ளான்
சூழ்மதியாலுயர்மன்னவன்றாமனெனும்பேரான். (உ)

தானவரிற்றலையானவன்றாளவர்தாவாத
வானவரஞ்சுறுமாண்மையன்மெய்முடிவார்கேச
மூனமில்பல்லிவைசாமநிறத்தினனெண்பூண்மூன்
ஞானவணித்திரளாரவணிந்தமர்காட்சியான். (௩)

பொன்னணியோடைநுதற்கணணிந்தபுழைக்கைமா
துன்னலர்நெஞ்சுதுளங்கமிகச்சுலவும்பாய்மா
வுன்னுமுனெண்டிசையோடிமறிந்துலவுந்திண்டேர்
மன்னியதானையுமெண்ணிலவீட்டியவாழ்க்கையான். (ச)

கொங்குகமழ்ந்துகமழ்ந்தொளிர்கொன்றையாற்
கெங்குமிலாததோரன்புநிறைக்குமியற்கையான்
சங்கரனுக்கடியாரவர்வேண்டினதானல்கி
யங்கவர்பூசையுமாற்றியுவப்புறுமார்வத்தான். (ரு)

இருக்கினுநிற்கினுமேகினுமுண்ணினுமெப்போது
முருக்கமொடீசனடிக்கணுருக்கியவுள்ளத்தா
னெருக்கியநல்குரவாற்றளர்வார்க்குநெடும்போகந்
தருக்குலமாதிதருக்கறவீசுந்தடக்கையான் (௬)

எண்ணறுபுண்ணியமும்புரிநீர்மையினெல்லோரும்
புண்ணியமேயுருவானவனென்னும்புகழ்ச்சீரான்
றண்ணளியாற்றனதின்னுயிர்போற்றரைகாப்புற்றான்
றிண்ணியமேருவரைக்கெதிராகியசெல்வத்தான். (௭)

வேறு.

அன்னமன்னவனுக்கமைச்சர்களெண்மரவரறிவுயர்சிந்தாமணியே
தன்மைசேர்தருமமூர்த்திசம்பாதிதாவறுவிபுலனிட்காமன்
மின்னியபுகழ்சேர்புத்திமானன்றவித்தருமன்றிறலோட்ட
னென்னுமிப்பெயரையுடையராயிறைவனிதையமொன்பானெனவியைந்தார்

தூமனென்றுரைத்தவத்தகுமன்னன்றுணைவியர்சுமகியேசுகரி
காமருசாயற்சுப்புருசுமனோகரிசுநேத்திரியெனவைவர்
தோமறுமைந்தர்தாமகிபாலன்றுலக்கமினந்தனன்புலவோர்
தாமகிழ்வீரபத்திரனொளிசேர்தனரதனென்னுநால்வர்களே. (௯)

மைந்தர்களமைச்சர்சேனைகாவலர்கண்மற்றையபரிசனந்தமக்குஞ்
சுந்தரமிகுந்ததனதுமாளிகைபோற்றுலங்குபொன்மாளிகையாதி
தந்திரும்போகமிந்திரன்போலத்தகநுகர்ந்தளகையரிறைபோ
லந்தமில்வெறுக்கையுடனரசியற்றியசுரர்கோன்வாழ்தினத்தொருநாள். (௧௦)

அந்தரத்தோங்கிச்சீதளக்கிரணவம்புலிதவழ்தொறும்புனல்கால்
சந்திரகாந்தமணிந்திமவரையைத்தகையரசவையிடையிருந்து
பைந்தொடிமகளீர்பாடல்கேட்டாடல்பார்த்தயற்புலத்துமன்னவர்கள்
வந்தடிவணங்கித்திறையிடக்கருணைவழங்கினனத்தகுபொழுதின். (௧௧)

மறைமுழுதோதியங்கமாறுணர்ந்துமற்றையநூலெலாந்தெளிந்து
நிறைதருமுளத்தன்கோடிசூரியர்போனிகழ்ந்தபேரொளியினன்கண்டக்
கறையினர்பாதத்தொழும்பினன்பிறவிக்கரிசறும்பிருகுமாதவத்தோன்
குறையறப்பணிகள்புரியுமாணுக்கர்குழுவொடுமெவ்வயினடுத்தான். (௧௨)

முனிவர்கள்பெருமான்முன்னைமாதவத்தான்முற்றினனெனவுளமகிழ்ந்து
கனிவொடுமெதிர்போயுடன்கொடுமீண்டுகாமருதவிசிடையிருத்திப்
புனிதமென்மலர்களாதிகைக்கொண்டுபூசனைபுரிந்துதோத்திரங்க
ளினிமையினியம்பிமுன்னுறவணங்கியெழுந்துநின்றேந்திலைவேலான். (௧௩)

வேறு.

எத்தரும்புகழெம்பெருமானிவண்
மூத்ததண்ணருளால்வந்துமுற்றலாற்
கோத்திரங்குலங்கோதினொழிந்தன
வாத்தனேயென்றறைந்திதுவுஞ்சொல்வான். (௧௪)

அடிகணின்வரவாலடிநாயினேன்
முடிவிலாநலமுற்றும்புணர்ந்துளேன்
கொடியனேனிடைக்கொள்வதுவிண்ணமு
நொடியினுக்குநுமக்கிலையாயினும். (௧௫)

காரணங்கருதாதொருபாங்கினுஞ்
சேரவெண்ணுஞ்செயலிலர்நும்மனோர்
வாரமோடடிகேளிங்குவந்தமை
யோரநன்றினிதோதுகவென்றனன். (௧௬)

தவத்தின்மிக்கவன்சாற்றுவன்வேந்தனே
யவத்தினீங்கியறங்கள்வளர்த்துயர்
சிவத்தைக்காழுறுஞ்செம்மையையாதலி
னுவத்தலோடுனைக்காணியவுற்றுளேன். (கஎ)

ஈதுகாரணமல்லதின்னுமையை
மோதுகாவலவேறில்லைமுன்னுக
போதுவாமினிநாமெனப்பூபதி
யோதுவானுயர்தாபதன்கேட்கவே. (கஅ)

தருவதாற்றிலராய்ச்சகமும்மையுந்
தருவரென்றுயர்ப்பாரெனத்தாழ்த்திடுந்
தருவர்தங்குலஞ்சார்ந்துபிறந்தொரு
தருவனுகியதன்மையனுயினேன். (கக)

அன்னதானவனுனவெனக்கெழின்
மன்னுசெல்வமுமண்ணரசாட்சியுங்
கன்னன்மென்மொழிக்காரிகைமாதரு
நன்னர்மைந்தருநாடரும்போகமும். (உ0)

மேவலர்க்கிடையாப்பெருவீரமும்
நாவலர்க்குநன்றுமதிப்பாவனுந்
தேவருக்கறியாச்சிவன்பத்தியு
மாவதன்னவனன்பர்கட்காற்றலும். (உக)

தரையுளார்கணற்றுயினுஞ்சூழ்வதும்
வரைவுறுதுமதிப்பருங்காலங்கள்
புரைவதின்றிப்புணர்ந்தனவென்கொலாங்
கரைதல்வேண்டுமெனக்கரங்கூப்பினுன். (உஉ)

அரியமாதவனுன்றகருணையா
லுரியதூமனேயோகையினேக்குபு
பரியபுண்ணியம்பேணினையம்மையிற்
றெரிதியென்றிதுசெப்புதன்மேயினுன். (உங)

வேறு.

தருவர்சிகாமணியாகித்தரையளிக்குநீமுன்னர்
விருதியெனுமன்னவனுய்வேதவேதாந்தங்க
டோகுபெருநூலனைத்தினையுஞ்சூழ்ந்துணர்ந்தாயதற்கேற்ப
வுகுதலிலாமனுநீதியுளமகிழநடாத்தினையால். (உச)

விண்ணவராதியர்தமக்குவியத்தகுபூசனையாற்றி
யெண்ணமுறுமெழுதீவுமிலங்குமொருகுடைநிழற்ற
நண்ணரியபெரும்போகநண்ணியுமுட்டருக்காது
கண்ணுதலையடியாரைக்காதலிற்பூசனைபுரிந்தாய். (உரு)

கருமமெலாமிகச்செய்தாய்கடன்மூன்றுந்தகக்கழித்தாய்
தருமமெலாமுறச்செய்தாய்தானங்கள்பலசெய்தாய்
இருமையுநின்வயமாகவின்னணம்வாழ்ந்திருந்திடுநாண்
மருவுறுதொண்ணூற்றென்பான்மகஞ்செய்துமுடித்தனையால். (உசா)

சதமாகுமகந்தொடங்கித்தகப்புரியுமமையத்தி
விதமாகுமுறைமைதனக்கிழக்குமெனமனத்தெண்ணிக்
கதமாகும்வச்சிரக்கைக்காவலனவ்வுயர்வேள்வி
சுதமாகும்வகைசாலச்சூழ்கின்றனவ்வெல்லை. (உஎ)

தந்திரியினிசையெழுப்புந்தவமுனிநாரதனடுப்ப
விந்திரனெண்ணியகருமமினிதுமுடித்தாமென்று
சிந்தைமகிழ்ச்சியனாகிச்சென்றெதிர்கொண்டணையிருத்தி
யந்தமில்பூசனையாற்றியருந்துதிசெய்திதுசொன்னான். (௨௮)

பகுதிபெறுமறையாதிப்பனுவனெறியிற்சிறிதும்
விகுதியுறாதவனெவரும்விளம்புபெயர்மாத்திரையே
விகுதியெனத்தரித்துள்ளான்வெவ்வினையின்விகுதியதாய்ப்
பகுதிபெறுமறிவாலப்பகர்பெயர்க்கும்பொருளானான். (௨௯)

அன்னவன்வான்பரிமேதமாற்றினன்றொண்ணூற்றொன்பா
னின்னபொழுதெஞ்சியதுமினிதியற்றாநின்றனனாற்
றன்னைமறுத்திடவெனக்குத்தக்கவலியின்றதனா
னின்னருளாலதுமறித்துநெடுந்துறக்கந்தாவென்றான். (௩0)

தூமனேநீயெந்தத்தொல்பவஞ்செய்தீவினையோ
தாமறாதடுத்தலினாற்றகவுணர்ந்தநாரதனு
நாமவேற்புருகூதனலிவகற்றற்குளமிசைந்தன்
றேமமார்மகச்சாலையொருமறையோனெனப்புகுந்தான். (௩௧)

தண்டேன்றித்தலைநடுங்கத்தசைதிரைந்தகரங்குலைப்பக்
கண்டோர்கண்மனந்துவளக்காறுவளவுடைசழங்கப்
பண்டோரையெரித்தவர்தம்பதமுரைத்துச்சுற்றமெலாம்
விண்டான்போலடுத்தமுதுவிப்பிரனையெதிர்கொண்டாய். (௩௨)

ஆதனத்திற்றகவிருத்தியருக்கியமாதிகளுதவி
மாதனம்பெற்றவர்போலமகிழ்ந்ததுகேளடியேன்பாற்
போதல்புரிந்ததற்கேதுபுகலென்றாய்பூசுரனு
மேதமறுமகத்தடுத்தவிமையவர்மாதவன்மொழிவான். (௩௩)

மன்னவர்கண்மன்னவநின்மாட்டொருகாரியம்விழைந்தே
னன்னதுதானென்னதெனவசமுறக்கேட்குவையாயின்
நின்னுடையமனைமாதைநினைந்தடுத்தேன்நீதருதி
யென்னலுநீயதற்கிசையாதெதிர்நோக்கியிதுசொன்னாய் (௩௪)

ஆத்தனருளான்மொழிந்தவாரணவாகமமென்னு
மூத்தபனுவலின்விதித்தமுறைபுரியினவர்க்கென்று
மேத்தரும்புண்ணியப்புகழென்றிவையுளவாம்விலக்கியன
நீத்தல்புரியாதியற்றினெடும்பழிபாவமுந்தொடுமே. (௩௫)

ஒருபொருளையொருவருழையுவந்துகொடுப்பதுமன்ற
விருமையினுமிதமாவதீண்டுவதுகுறித்தன்றே
யிருமையினுமகிதமுறவீகுநருமேற்பவரும்
பொருவரியதுட்டர்களேபுகுவரவரேநிரையம். (௩௬)

ஆதலினாலெனக்குரியவரும்பெருங்கற்பினடவிர
மேதகுமெய்ப்பொருளாகவிழைந்திரப்பிற்றருகின்றா
மேதமறுபூசுரனேயெனமறுத்துநீமொழியக்
காதன்மிகுகாமுகன்போற்கரவடப்பூசுரன்மொழிவான். (௩௭)

வேறு.

இரவைத்தணிப்போய்சிவசன்மனெனும்பேருடையேனிதுகாறும்
பிரமசரியங்காத்திருந்தேன்பேணுநிலைநான்கினுட்சிறந்த
கிருகநிலையையிப்பொழுதுகெழுவவிழைந்தெனதுள்ளம்
விரவென்விழைவைத்தணிப்பயர்கள்வியனீருலகில்வேறில்லை. (௩௮)

இரப்பாரிடத்திலிரக்கமுமெப்பொருளுமளிக்கும்பெருங்கொடையும்
பரப்பார்புவியிலுடையைமகம்பயிற்றுபதத்தினெப்பொருளுங்
கரப்பாதரியாதளிக்கமறைகரைதலானீகொடுப்பையெனச்
சுரப்பாகியநற்குணம்வனப்புத்தொகுநின்மனையாடனையிரந்தேன். (௩௯)

ஆராவிழைவோடடுத்திரந்தவதிதிவறியனாயேகப்
பாராரறிந்தோர்நீயிரந்தபாரிதனைநல்காவகையே
தேராவுரைத்துவாளாங்குதீரவிடுத்தாயெனையென்றான்
வாராய்மறையோயெனநீயுமறித்துவேறுவகுத்துரைத்தாய். (௪௦)

இடமார்புவியுமெனக்குரியவில்லாளாகுமத்தகைய
திடமார்மனைவிதனைக்கொடுத்துஞ்செங்கையேற்கவிசையாயேன்
மடமான்விழிக்கன்னியர்பலரைவரைந்துதருதுமேற்றவர்க
ளுடனாய்க்கிரகநிலைபுரியென்றுரைப்பமறையோன்வேறுரைப்பான். (௪௧)

வேட்டபொழுதின்வேட்டனவேமேவினவைதாழ்ந்தனவேனும்
வாட்டமகற்றிப்பெருமகிழ்ச்சிவளர்க்குமறுத்தீர்ந்தவர்தமக்கும்
வேட்டபொழுதின்வேட்டவற்றின்வேறொன்றுயர்ந்ததுற்றிடினும்
வாட்டந்தணவாச்சிறிதேனுமகிழ்ச்சிவளராதறிமன்னா. (௪௨)

விழையும்வனப்பாற்றிருவாதிமிளிர்பூண்மகளிர்புறங்கண்டு
தழையுமினியகுணத்துயர்ந்துதகவாழ்தருநின்மனையாட்கே
குழையுமுளத்தேற்கிருநிலமுங்கோலம்பொலிந்தகன்னியரு
மிழையும்பொருளுமற்றவையுமீயினவைதாமெவன்செய்யும். (௪௩)

கொடுப்பதுளதேனின்மனையைக்கொடுக்கவலையேலில்லையென
விடுப்பினடுத்தநெறிவாளாமீண்டுபோவலெனக்கிளந்தான்
றொடுப்பிற்சிறந்தபனவனுக்குத்தூமாநீயன்றறநெறியைக்
கெடுப்பதுதவேனிருந்துண்டுகேண்மைபுரிந்துபோவென்றாய். (௪௪)

மண்ணின்மறையோனெனப்போந்துமகவான்கருத்தின்வழிநின்ற
விண்ணின்மறையோனாகியகைவீணைமுனிவெண்ணகையரும்பத்
தண்ணெனருள்சேர்வழிசிவப்புத்தரிப்பக்கறுப்புள்ளகந்தழுவ
வண்ணம்பசந்தநினையன்றுமறுகநோக்கிச்சபித்திட்டான். (௪௫)

வருணநிலையைவிடமுத்திவழங்கவல்லதொன்றுமிலை
வருணநிலைபற்றினர்க்கொன்றின்வாஞ்சையில்லைவாஞ்சையினர்.
வருணநிலைபற்றாதவரேவாஞ்சையதனான்முதலான
வருணநிலையேற்கிரண்டானவருணநிலையைவழங்கிலையால். (௪௬)

நல்லவருணநிலையின்றிநாடிப்புரியுங்கருமமெலா
மல்லல்விளைக்குமவுணர்தொழிலாகுமுயர்வேள்வியைப்புரிந்து
மொல்லுமவுணர்தந்தொழிலேயுடையையதனால்வரும்பிறப்பிற்
செல்லல்விளைக்குமவுணர்குலச்செம்மலாகத்தோன்றுதியால். (௪௭)

இரக்கஞ்சிறிதுமில்லாமலிரந்ததுதவாப்பெரும்பிழையா
லிரக்கலுறுவார்களினானும்யாதுமிரக்கப்படாயாவை
கரக்குந்தொழிலாலவமானங்கலந்ததெனக்கிங்கெனச்சீறிப்
புரக்கும்வேள்விக்குண்டமுதற்பொருளையழித்துப்புறம்போந்தான். (௪௮)

மகவான்புணர்ப்பான்மாடகத்தின்மகதியாழோன்மறையவனா
யுகவேள்வியினையழித்தானென்றுணர்ந்துநீபின்முன்போலப்
புகவானருளும்விடமிடற்றுப்புனிதர்பூசைமுதற்பலவு
மிகவாதியற்றியம்மையிடையிருந்தாயதனாலிப்பிறப்பில். (௪௯)

மாற்றுமதுகைத்தவமுனிவன்வகுத்தசாபத்தாற்றீமை
பாற்றுவவுணர்குலம்பிறந்துபண்டுபுரிந்தநல்வினையா
லூற்றுமெனவெவ்வகைப்பொருளுமோவாதீண்டநன்மையெலாந்
தோற்றுநின்றுயெனத்தெளித்துத்தகடீர்பிருகுமுனிபோனன். (ருO)

பிருகுமுனிவன்கருணையினற்பேசுமறையையுட்கொண்டு
தருமமனைத்துமுன்போலத்தழுவித்தூமன்வாழ்நாளிற்
கருதுமடியாரிடர்கடியுங்கணேசர்தூமகேதுவெனப்
பொருவிலவதாரஞ்செய்துபுரிந்தவிளையாட்டினிப்புகல்வாம். (ருக)

வேறு.

அவ்வாறுயர்தூமனிருந்துலகமாளும்பதியாமகிபாதினியிற்
செவ்வாய்மையினல்வதிமன்னர்குலதிலகன்மறையாதிதெளிந்துயிரோ
டொவ்வாதவினைப்பகையுந்தனுவோடொவ்வாவிகல்வேந்தர்மறப்பகையு
மெவ்வாயுநிலைத்தலிலாமையுமறுத்திசையீட்டியவாண்மையினனொருவன். ()

அளவாதபெரும்பொருளான்பனுவலறையும்பலநன்மையுமான்றவனல்
வளமாநகர்மாதவனென்றுமிகவழங்கும்பெயரான்மனைமாதுநலா
ளிளகாததொர்கற்புடையாள்சுமுதையென்பாளிவரன்றிலெனப்பிரியார்
தளராதறமாதிபுரிந்திமையார்தகவின்னலமார்ந்துதழைத்தனரால். (ருந)

பெருகாதரவான்மனைவாழ்க்கையினைப்பேணும்பொழுதின்மகவிலனு
யுருகார்வமொடோங்கியமாதவன்மிக்குயர்மாதவர்நல்குரவோரிவர்பாற்
பொருளாதியளித்தருமாதவமும்பொற்பப்பலநாள்கள்புரிந்துநலந்
தருகாதலனின்மையினன்மனையாடனைநோக்கிவெகுண்டிதுசாற்றினனே.

வேறு.

இளமையும்வனப்பும்பல்வேறெழில்வளரணியுங்கோல
வளமையுஞ்சிருங்காரத்தின்வண்மையும்வெறுக்கைமற்று
முளமிகவிழைவவெல்லாமுற்றுமென்பயத்தவாகுங்
களமறுகதியிற்சேர்க்குங்கான்முளைபயவாக்காலே. (ருரு)

வந்தியென்றுலகமெல்லாம்வைகலுமிழிக்கப்பட்டுஞ்
சிந்தையினுணுக்கொள்ளாய்தெரியிழைமடந்தையாக
விந்தவையகத்திலெற்றுக்கெய்தினையேயேயுன்றன்
சந்திரவதனநோக்கத்தழல்கின்றதெனதுநெஞ்சம். (ருசு)

காட்டிலேசெல்கொணுதோகாழ்வயிராக்கியத்தை
யீட்டலொண்ணுதோவல்லேயின்னுயிர்விடவொண்ணுதோ.
நாட்டிலேயெற்றுக்கிந்தநவையுடனுங்கினுயென்
னாட்டமுன்வருதல்வேண்டாநடமதிபுறத்திலென்றான் (ருஎ)

உன்னருந்தெய்வமுண்டென்றுரைப்பர்களந்தத்தெய்வ
மென்னிடத்தில்லைப்பண்டையீட்டுமெய்பாவத்தானே
கொன்னருந்தவந்தானங்கள்குயிற்றியுமகப்பேறில்லென்
றின்னல்செய்மனத்தினேடுமிறையவன்வெகுண்டுகூற. (ருஅ)

கமுகிளங்கழுத்தைவென்றகந்தரக்கருங்கண்வேய்ந்தோட்
குமுதம்வென்றொளிர்ந்தசெவ்வாய்க்குளிர்மணிமுத்தமூர
லமுதுறழ்பனிமென்றீஞ்சொலரிக்குரற்சிலம்பின்பாதச்
சுமுதையென்பவண்மூர்ச்சித்துத்தொணிலமீதுவீழ்ந்தாள். (ருகூ)

மான்றவுட்சோகநீங்கிவருந்தியசுமுதைதன்னை
யீன்றவர்தம்மைமேலாமிமையவர்தம்மைநொந்தே
யூன்றியகவலைநீங்காதுழந்தினித்தவநன்றென்று
கான்றபைந்தேறற்பல்வீக்கரும்பெருங்கானஞ்சார்ந்தாள். (சுO)

ஒருத்தருஞ்சலித்தலின் றியுமுவைவன் கரடியாதி
பெருத்ததோரரியகானிற்பேணுறுபயஞ்சற்றின்றி
வருத்திமெல்லியல்சோரக்கைவளர்பரந்தாமன்றன்னைக்
கருத்துறவிருத்தியந்தக்காரிகைதவஞ்செய்தாளால். (சுக)

உலைவுசெய்பசிதாகங்கட்குலைவுசெயூண்களுடா
ளலைவுசெய்துயிலைநீத்தாளார்வம்வேறொன்றினில்லாள்
சிலையெனவசையாளாகிச்செறிந்தவன்மீகமுட
மலைவறப்பன்னீராண்டுமாதவம்புரிந்தகாலை. (சுஉ)

சங்குசக்கரங்கோதண்டந்தாரைவாள்கதைகைதாங்கிப்
பொங்கொளிமணியின்மோலிபொழிகதிர்க்கதைபூணுதி
தங்கியவுருவத்தோடுந்தக்சநாரணனேபோல
வங்கருட்கணேசர்போந்தாரனைத்துந்தாமானமாண்பால். (சுங)

அடுத்தனரீங்குநாராயணரெனவான்றகற்புத்
தொடுத்தவுள்ளத்தளானசுமுதைவல்லெழுந்துகண்ணீர்
விடுத்திருகைகளுச்சிமீமிசைக்குவித்துத்தாழ்ந்து
படுத்திருந்துக்கமெல்லாம்பாங்குநின்றிதனைச்சொன்னாள். (சுச)

வீங்கியசமுசாரத்தின்வேலையினின்றுமென்னை
யோங்கியகதிகளானவுறுகரைமீதுசேர்த்துப்
பாங்குசெய்மகப்பேறில்லாப்பரிவினாற்கணவன்சீறப்
வீங்குவந்திருந்துநும்மையெண்ணிமாதவஞ்செய்தேனல். (சுரு)

மிருகமும்பாவியென்றேமென்றெனைத்தின்றதில்லைப்
பெருகியதவத்தையீங்குபேணுநாளளவுமென்றுந்
திருகுதலில்லாச்சிந்தைத்தேவனேதெரிந்தேனல்லே
னுருகியவடியேற்கொல்லையுதவுகவருளையென்றாள். (சுசு)

அரங்களிற்றேயாச்கூர்மையாழிகையேந்தினார்தாம்
வரங்களென்வெட்டாயோதுவழங்குதுமென்றார்கேட்ட
விரங்குமேகலையாண்மீட்டுமிணையடிவணங்கிநேர்நின்
றுரங்கொளுமிறையோய்நின்னையொத்தமைந்தனைத்தாவென்றாள்.

நின்னைநேர்மகனையிந்தநிலத்திடையடியேனெய்தத்
துன்னியவரந்தந்தாயேற்றுனிவொடுமென்னைநீத்த
மன்னவன்முகமுன்சென்றுவாழ்குவென்வழங்காயாகி
லுன்னெதிரிங்கேயாவியொழிக்குவன்மன்றவென்றாள். (சுஅ)

உறுதியின்மொழியைக்கேட்டவும்பருக்கிறைவன்பத்திக்
கிறுதியிலாளைநோக்கியென்னையேமகனும்வண்ணம்
பெறுகுவையஞ்சேலென்னாப்பிறங்குதன்கரத்தையன்னா
ணறுவிரைக்குழன்மென்சென்னிநலத்தகவைத்துப்போந்தான். ()

எய்தரும்வரம்பெற்றோகையெய்தியசுமுதைநீருண்
மைதவழ்மாடவீதிமாநகரதனைச்சாரப்
பொய்தவிர்மனத்துளெண்ணிப்பொருக்கெனமீண்டாளாங்கு
வெய்துசெல்வழிகாணுதுவிம்மின்ளவலங்கூர்ந்தாள். (எ0)

வளர்சமுசாரக்காட்டில்வாதனைமிருகந்தாக்க
வளவளாய்நெருங்குஞ்சுற்றமானவார்வல்லிதட்ப
விளங்கியசுகவெண்டேரையிரும்புனலென்றுதாவு
முளமெனுமுழைக்கட்டாங்கயோகமேமேகமாகும். (எக)

அத்தகுயோகமேகமையெனப்பொழியுநீராம்
வத்துவையெளிதின்வல்லேமனமுதன்மூன்றினுனும்
கைத்தலக்கனிபோற்பெற்றுங்கருத்திருத்தாதுவிட்ட
பித்தினேற்காறுகாட்டும்பெற்றியர்யாவரென்றாள். (எஉ)

உன்னுறிற்றுன்னியுன்னுவிடிலறவொழிந்துநிற்கு
முன்னவனருளேயிங்குமுன்னுறநடப்பதென்று
தன்னுளத்தினிதுமுன்னித்தவைவனத்தூடுசென்றாள்
அன்னவனருளானங்கையணிநகரெதிரேகண்டாள். (எங)

ஒளிமயமாகிச்சாருமொண்டொடிமாதைச்சேய்க்கட்
களிநகர்மாந்தர்நோக்கிக்கதிர்கள்பன்னிரண்டுமேயோ
தெளிமதிக்காந்தியேயோபிரளயத்தீயின்றேசோ
விளிவிலதாகியீங்குமேவுதேசெனவையுற்றார். (எச)

தூயநல்வரங்கள்பெற்றுச்சுமுதையேயடுத்தாளீங்கென்
றாயவுள்ளகத்திற்றேறியனைவருமெதிர்போய்த்தாழ்ந்து
நாயகியாங்கள்செய்தநற்றவப்பயத்தான்வாழ்க்கை
மேயவிந்நகரின்மீண்டுமேயினைவாழியென்றார். (எரு)

முகமன்மிக்குரைத்துச்செம்பொன்முடிகெழுவேந்தனுன
புகழ்பெறுகணவனன்றுபொலிந்தவனென்றுகூறி
யகமலியுவகைகாட்டுமணிநகர்மாந்தரோடு
தகவுரைத்தடுக்குமெல்லைதராபதிவரவுகேட்டான். (எசு)

கெடுங்கலம்பெற்றார்போலக்கிளர்பெருமகிழ்ச்சிபூத்துக்
கொடுங்களிறுரித்தார்தம்மைக்குலவுமந்தணரைப்பூசித்
தொடுங்கலிலாதகாந்தியுமிழணியாதிநல்கிப்
படுங்களிநகரைநான்குபடையொடுமெதிர்விட்டானே. (எஎ)

மணிநகர்மாந்தர்சேனைமகிட்சியினெதிர்கொண்டேகி
யணிகலமாதிநல்கியவிர்மணிச்சிவிகையேற்றித்
தணிவில்பல்வரிசையோடுதெனிநகர்வீதிசூழ்ந்து
பிணிதபுமரசன்கோயிற்பிறைநுதலாளையுய்த்தார். (எஅ)

விடைகொடுநாகரீகர்விழுப்படைச்சேனையாள
ரிடையறுவளஞ்சேர்தத்தமில்லினையடுத்தார்பின்னர்த்
தொடைபடுபடைக்கட்செவ்வாய்ச்சுமுதைதன்கணவற்றாழ்ந்து
மடையுடைத்தெழுந்தவன்புமகிழ்ச்சியுந்தோன்றநின்றாள். (எகூ)

வினவியதலைவனுள்ளம்விழைதகவெறுத்தவன்னாட்
கனகவில்லத்துநீங்கிக்கானகமடுத்தவாறுந்
தனமெனத்தவஞ்செய்வீறுந்தானொருமகனும்வண்ண
மனகனங்குரைத்தபேறுமனைத்தையுமுறையிற்சொன்னாள். (அ0)

தன்னுளப்பரிவுநீங்கித்தையலாள்குளிர்ப்பச்சொல்லி
யின்னலநுகர்ந்துவாழ்ந்தாளெவருமாதவனென்றேது
மன்னவனனையான்கற்பின்மடவரற்சுமுதைபாங்கர்
முன்னவனருளாற்றங்கிமுதிர்ந்ததுகருப்பமம்மா. (அக)

செழுவியசுமுதையென்பாடிருவயிற்றெழிற்குச்சாய்ந்தும்
விழுமியமாலையென்போன்மேவிலதெனுஞ்செம்மாப்பும்
வழுவுறவீரந்தீர்ந்துவாடுமெல்லிலையாவின்றும்
பழுமரமெனவைகிற்றப்பாவைசூலுறுநாளாதி. (அஉ)

புத்திரனுருவங்காணப்புகன்றழலுமிழுமென்று
மூத்தமனுருவுநோக்கியுறுதவமுழந்தகண்கள்
புத்திரனளித்தவன்பன்புத்திலையயின்னும்வாட்ட
லொத்ததன்றென்றுள்ளிட்டாலொத்தனகுழிந்துகாட்டி. (அ௩)

அண்ணல்செம்புகழைக்காட்சியளித்தவன்றெடுத்துக்கூறும்
புண்ணியப்பொலிவாற்றுனும்புகழொடுமொளிர்ந்தாலென்ன
வண்ணவித்துருமம்வாட்டிவயங்கியகனிமென்செவ்வாய்
நண்ணியவதரம்வெண்மைநன்னிறம்படைத்ததன்றே. (அ௪)

சந்தனமலர்பூணுடைசாலவும்பண்டுபோலப்
பைந்தொடியணியாத்தாழ்வைப்படர்ந்துளப்பயத்தினீடிச்
சுந்தரங்கரிந்தாலென்னத்துணைமுலைதலைக்கணீலத்
துந்தொளிபடைத்தமைந்தனுறுகரியினிதுகாட்டி. (அ௫)

நல்லிசைத்தேவதேவனுண்மலர்ப்பாதநாடிப்
புல்லியசுகத்தைவிட்டோர்பொருவருஞ்சுகத்தைமன்ற
வொல்லுவதுண்மையாமென்றுணர்த்துமோர்சான்றதாக
மெல்லுணவொழிந்துநோற்றவுதரஞ்சான்றதுமிக்கோங்கி. (அ௬)

பரிவுசெய்பகையாய்நாளும்பார்த்தவரில்லையென்ன
நெரிவுசெய்முலைகடன்னைநீட்டியாதிறைஞ்சுங்கால
முரிமையினடுத்ததென்னுமோகையாற்றழைத்தாலென்ன
விரியொளிமின்னைவென்றமெல்லிடைவீங்கிற்றன்றே. (அ௭)

செய்யபொற்பாதகஞ்சந்திருமலர்மாதுசேர்ந்த
வையனுளமர்ந்தயோகமழிந்துதீதாகாவண்ணம்
பெய்யுமொள்ளரியிற்சீர்த்துப்பிறங்குநூபுரங்களாதி
பையவேமிழற்றமெல்லப்படர்நடைபயின்றமாதோ. (அஅ)

உண்ணுவதல்லாதொன்றையுண்ணுவதுவப்பாலன்றி
யெண்ணம்வேறொன்றிறனுமிசைதராதென்பதோர்ந்து
மண்ணினைவிழைந்துண்டார்க்குமண்ணையுங்கொடுத்துமென்ன
வண்ணமென்புகையேறுண்டமண்ணுணும்வயாமிக்கன்றே. (அ௯)

இன்னணஞ்சுமுதையாகவிருங்கருவளருநாளி
லன்னநன்னகரின்வைகியகன்புவிகாக்குந்தூமன்
றுன்னியவிசையம்வேண்டித்தொகுபடையமைச்சர்மைந்த
ரென்னருமருங்குசூழவெழுந்தனன்வழிக்கொண்டானே. (௯0)

நெறியிடைச்செல்லும்போதுநீண்டவான்வாக்குத்தூம
னறியவொன்றெழுந்ததெற்றுக்கயற்புலப்பகையைச்சாய்க்கச்
செறிபடையோடுஞ்சேறிதிருமறுமார்பனுன்னை
யெறியநற்சுமுதைபாங்கரெய்தினன்கருவாயன்றே. (௯௧)

அம்மொழிகேட்டலோடுமாவிசோர்ந்தெழுந்ததூமன்
விம்மிநெட்டுயிர்த்துமீண்டுவியனகர்புகுந்துசெந்தீத்
தூம்முவேலமைச்சர்மைந்தர்சூழ்தரமனையுட்புக்குச்
செம்மனந்திருகியென்னைசெய்துமென்றெண்ணுநின்றான். (௯௨)

இழந்தனமின்றேவையமிழந்தனமின்றேகாவ
லிழந்தனமின்றேசெல்வமிழந்தனமின்றேயாவி
யிழந்தனமின்றேயெல்லாமெனமதித்தெண்ணந்தானு
மிழந்திடவமைச்சர்தம்முளியம்புவன்றருமமூர்த்தி. (௯௩)

வேறு.

மறைநீதிகளின்வழுவாதமன்னுவவனிமுழுதாளு
மிறைவாநாசமொருவனிடையெய்தினதையிந்திரனாக
வுறைதேங்கமலத்தவனாகவுவணமுயர்த்தோன்றானாக
நிறைசீர்ப்பரமனேயாகவொருவராலுநீப்பரிதாம். (௯௪)

அடுத்தவெறுக்கைப்பெருஞ்சுபமுமவ்வாறகற்றல்கூடாது
தொடுத்ததவத்தாலுனக்குள்ளசுகம்யாவர்களாற்றொலைவெய்து
மடுத்தகவலையொழிநினக்குமரணமில்லைச்சுமுதையின்பா
லுடுத்தகனகவுடையான்வந்துதிக்கின்வணங்குவாமென்றான். (௯௫)

நல்லஞானசீலத்தினமுவாத்தருமமூர்த்தியது
சொல்லவாங்குக்கேட்டிருந்ததோலாமதுகைச்சூட்சியினன்
வெல்லுமாண்மைமிகவல்லவிபுலனவனைவெகுண்டொழித்துச்
செல்லன்மூழ்குமன்னன்முகந்திருந்தநோக்கியுரைசெய்வான். (௯௬)

ஒன்றியுயர்ந்தபராக்கிரமமுடையமகனைமாவீர
னென்றுமொழிவரதனாலேயெல்லாச்சுபமுமினிநீண்டு
மன்றியெதிர்க்குமாவீரரானவரசர்வேட்டையின்மா
கொன்றுபகையுந்தெறலவர்க்குக்கோணைத்தருமாமதனால். (௯௭)

நினக்குப்பகையாய்ச்சுமுதையின்பானீடிவளரும்பெருங்கருப்பந்
தனக்குப்பகையாய்நீயதனைச்சாடிற்பாவமிலைமன்னு
மனக்கண்மிகுவஞ்சனைமாயன்மாயையறியப்படாதருளை
யுனக்குவழங்குமீசனடியுன்னிக்கருவைச்சிதையென்றான். (௯௮)

வெய்யகொலைக்குப்பயந்தானவ்விபுலன்மொழிகொள்ளாதுள்ள
னையுங்கவலையொடுமிருப்பநாடியறிந்தசம்பாதி
யையவரசன்கவலையிடையாழ்ந்தானென்னப்புத்திமான்
றெய்யலனைந்தவவனறிவைச்சுடுவென்றுரைத்துமருங்கடுத்தான். ()

கலைகணுகியுலகளிக்குங்காவலிறைவரவுணர்குல
முலையைத்தெறுமாதவன்சுமுதையுதரநீங்கினப்பொழுதே
விளைவதிம்மையல்லாதுவிளையாதின்பமெத்திறத்து
முளையிற்செற்றுண்மரங்களைகமுடியாவாழ்க்கைவேண்டுதியேல். ()

மடமான்மகளீருயிர்கோறன்மரபன்றிழிவுமறன்கடையு
முடனுமதனாற்சுமுதைவயிற்றுறுகான்முளையேபகையாகிப்
படர்கூர்வினையைப்புரிவததைப்பாழ்ப்பித்திடனன்றன்றவள்பா
லிடர்சேர்த்துதலன்னவள்பகையென்றெண்ணப்படுவாளல்லவே. ()

செய்யத்தகுவதின்னினியேசெய்துமுடிக்கவெனச்சொன்னான்
வையம்புகழும்புத்திமான்வகுப்பத்தூமன்மைந்தர்களும்
வெய்யபகையைக்கடியாதுவேந்துக்குய்தியிலையென்றார்
மையன்முழுகுமன்னவனுண்மனையிற்புகுந்துசூழ்ந்திருந்தான். ()

ஒற்றைத்திகிரிதிசைகோறுமுருட்டியிரவைக்கடிந்தொளிகள்
பெற்றுத்தனக்குநிகர்தூமன்பிறழமதித்தேயறந்திரிய
வற்றைப்பொழுதங்கறிந்துசுடரவனுக்குதவிசெய்வதுபோன்
முற்றக்கெடுப்பநினைந்துகுடமுந்நீருடுத்துமறைந்ததுவே. (௧0௩)

தீங்குநினைத்ததூமன்மிகச்செலுத்துந்திகிரியத்தினமே
நீங்கிமறைந்தாலெனக்கதிரோனெனுவானகன்றுகடற்குளிப்ப
வாங்குமிருந்தபாவமவனகத்தைவளைத்தன்னவனுலக
மோங்கிவளைத்தாலென்னத்தமூக்கங்காட்டிச்செறிந்ததுவே. (௧0௪)

களவிற்குறிஞ்சியுரிப்பொருளைக்கைக்கொள்கூதிர்ப்பெரும்பொழுதவ்
விளகுமரசன்சூழ்ச்சியினையெய்தும்பருவமப்பருவத்
துளமிக்குகந்தன்பர்கண்மனையாளுழைச்செல்சிறியபொழுதடுப்ப
விளரிலாவித்துருமனைக்கூய்வெளிற்றுமதிமன்னவன்புகல்வான். ()

வீரர்குழுவுள்வீரனெனவிளம்பும்வீரவீரனுநீ
வாரமிகுந்தார்குழுவினுளென்மாட்டுமிகும்வாரத்தினைநீ
யாரமணிந்தமுலைச்சுமுதையன்னாள்கணவன்கருமூன்றுஞ்
சேரவறுத்திப்பழியுலகந்தெரியாவாறுதிருப்பென்றான். (௧௦௬)

பொல்லாவினையினேவிடினும்புரப்பார்கருத்தின்வழியன்றி
நில்லார்வினைஞராதலினானிகழ்வித்துருமனதற்கிசைவுற்
றல்லார்பாதியிரவகத்திலைநூற்றுவராண்மையில்விஞ்சும்
வல்லார்தமைக்கூய்ச்சிலர்சிலராய்வருகயான்செலிடத்தென்றான். ()

கோமானுளமேபோலிருண்டகோணையிருளுமாதவற்குந்
தூமாண்குழலிசுமுதையெனுந்தோகைதனக்குமடர்துயிலுந்
தாமாதரித்தவினைக்குதவத்தகுவித்துருமன்வீரரிவ
ரேமாந்துறங்குநகரறியாதியல்பிற்சுமுதைமனையடுத்தார். (௧௦௮)

கபாடமொருநால்வரிற்பெயர்த்துக்கான்மண்ணிடுதரேற்றும
லுபாயமொடுமணமனைப்புக்கங்குறங்குஞ்சுமுதைமாதவனை
யபாயம்புரியக்கட்டிலொடுமகத்தினகற்றிவித்துருமன்
சுபாவமாகவளர்வனத்தைத்துன்னியொருசார்வைத்திட்டான். ()

ஓவாத்துயிலின்மயங்குநரையொறுத்தல்கொடிதேயதுதனினு
மூவாப்பழிசேர்மகளிருயிர்முடித்தல்கொடிதேயதுதனினுந்
தாவாக்கருவின்மகளிர்களைச்சாடல்கொடிதேயிறையாணை
யாவாபெரிதேயென்செய்கேனெனவித்துருமனகத்தழிந்தான். ()

வேறு.

அத்தகுசெவ்வியினலர்முலைச்சுமுதைகண்
பொத்தியதுயிலறப்பொருக்கெனவிழித்தன
ளெத்திசையினும்வனமெதிருறநோக்கினண்
மெத்தியபயத்தொடும்வேறுவேறெண்ணுவாள். (௧௧௧)

என்னகாரணங்கொலோவெழின்மனைத்துஞ்சினு
மின்னகானத்திடையிருந்துயினீங்கினாந்
துன்னியவிச்செயல்சொற்பனமேகொலோ
மன்னுறவுள்ளதோமாயையோவறிகிலோம். (௧௧௨)

நம்முடைநாயகன்நயத்தகுசத்தியம்
விம்மியநிறையினன்வீரன்வல்லவன்பொறி
தம்மைவென்றவன்பிறர்தகுபொருள்விழைகலாச்
செம்மனத்தவனறந்திரிகலானவனையும். (௧௧௩)

படர்பெருங்கானிடைப்பன்னெடுநாளுற
விடலருமாதவமேதகவாற்றுபு
தொடர்வரும்பின்னைகோன்றொடர்ந்தருள்வரத்தினா
லிடர்தபுங்கருவினையெய்தியவென்னையும். (௧௧௪)

தொலைத்திடயாவனோதுட்டனுற்றெழின்மனை
நிலைத்தகித்திரையிடைநீக்கியிக்கானக
மலைத்திடவைத்தனன்வல்வினையின்னண
மலைத்திடினென்செய்கேமாவவென்றெண்ணினாள். (௧௧௫)

அழுந்தியதுயரொடுமங்கையாலன்பனார்
செழுந்திருவுருவிடைச்சின்முறைதட்டியே
யெழுந்திருமெழுந்திருமென்னைவான்காட்டிடை
விழுந்தும்வன்றுயிலினைவிடுத்திலீரென்றனள். (௧௧௬)

தூக்கமங்கொழிதரத்தண்ணெனவேயெழுந்
தூக்கமிக்குள்ளகத்துற்றமாதவனிரு
டேக்கியகானகந்திசைதொறுநோக்குழி
வீக்கியதானையின்வித்துருமன்சொல்வான். (௧௧௭)

அரசனேயெங்கள்கோனமர்குறித்தேகுழித்
துரிசின்மாதவனிடைத்தூமனேயுனைக்கொலக்
கரிசுதீர்பெருவலிக்கான்முளைவருமெனப்
பரசுவாண்வாக்கதுபரிவுறப்பகர்ந்ததே. (௧௧௮)

அந்தவான்வாக்கினாலவுணர்கோன்றேர்ந்தெனை
நுந்தமைக்கொல்லியநுவன்றுவிட்டானிவண்
வந்தகாரியமிதுவளர்பழிபாவமுஞ்
சிந்தையினெண்ணுபுசிறிதுதாழ்த்தேனென்றான். (௧௧௯)

சோர்ந்துமண்வீழ்ந்தனள்சுமுதையச்சோகம்பின்
றீர்ந்தனளையனேதிருமறுமார்பனே
யார்ந்தபல்லுயிரையுமளிப்பவனேயுனைச்
சார்ந்துளோர்க்கித்துயர்சாருமோவென்றனள். (௧௨௦)

தீட்டரும்பெரும்புகழ்த்தேவனையுள்ளுற
நாட்டியின்னனபலநவின்றுபின்றங்களை
வீட்டமுன்னின்றவவ்வித்துருமற்கற
வாட்டமுற்றிடுமலர்வதனமோடுரைசெய்வாள். (௧௨௧)

இறக்குமாறிசைந்துதன்னின்னுயிரீந்தனன்
சிறக்குமாத்ததீசிவிண்டிரிதருகின்றன்
னிறக்கும்வெங்கதிரவனித்தலுமாகையால்
பிறர்க்குபகாரமேபேணுவார்நல்லரே. (௧௨௨)

நல்லைநீயாதலானண்ணியதுயிலிடைக்
கொல்லலாகாதெனக்குழைவொடுந்தாழ்த்தனை
வல்லவாமுழுவதும்வதைசெயாதெங்களை
யொல்லுமாறொழிப்பையேலுன்னையொப்பாரிலை. (௧௨௩)

ஆகையாலுங்கள்கோனையமெய்தாவகை
யோகையேயெய்துமாறோர்ந்துரையல்லையே
லீகையில்லாதவரிரும்புகழ்போலுனை
வீகைசெய்வேனெனவித்துருமன்சொல்வான். (௧௨௫)

மல்லலங்கற்பினான்மாதுநீயென்னுயிர்
கொல்லினுமென்குலங்குலைவதின்றாகுமெப்
புல்லியகுலத்தொடும்பூபதிவீட்டுவ
னொல்லவனாணையேயொழிப்பரிதென்றனன். (௧௨௬)

நலிமொழிகேட்டுளநடுங்கியசுமுதைபின்
வலியுறுவரதனைமதித்தனளன்னவ
னொலியருளாற்பலரொண்டிறல்வீரர்கண்
மலிதழற்படையொடுவந்தெதிர்தோன்றினார். (௧௨௭)

முற்றியவீரரின்மொய்யமராற்றின
ரிற்றனரவரெலாமெய்துவித்தருமனு
மற்றமெய்தியதெனவஞ்சினனிரிந்தனன்
பற்றுறுதூமனைப்பணிந்துநின்றானரோ. (கஉஅ)

கனைகழற்சேவடிகைதொழுதணிமுடி
புனைதரும்வீரனைப்புகழ்பெறுதூமனென்
வினைமுடித்தாய்கொலோவீணின்வந்தாய்கொலோ
வினைதலில்லாவகையியம்பெனவினவினான். (கஉகூ)

பூண்மலிமார்பலாற்புறங்கொடாதொன்னலர்
வீண்மலிமுதுகையும்வெய்துகாண்பானெதிர்
வாண்முகம்புலர்தரமனக்களிப்பயலெழ
வாண்மையிற்குறையநின்றறைவன்வித்தருமனே. (கநo)

எம்பிரானருளியவிடையிருளுடுபோ
யும்பருமறிவுறுவுள்ளுறுவிரகொடு
நம்புமஞ்சமத்தொடுநங்கையோடரசனைப்
பம்பியநெடுவனம்பையவேயுய்த்தனம். (கநக)

அரவகலல்குலாளவ்வயிற்கண்விழித்
துரகமெல்லணையினாளொளிபதம்பரசினாள்
விரவியபடையொடும்வீரர்கடோன்றினார்
பரவுநம்படையெலாம்பாழ்படநூறினார். (கநஉ)

பொருதுகானங்ஙனேபொன்றுவென்முற்றிய
பெருவினையொருவரும்பேசுவாரின்மையின்
மருவுமென்மானமுமாற்றியிங்கெய்தினே
னருள்வளர்தெய்வமுண்டவர்களுக்கென்றனன். (கநந)

கேட்டலும்வெஞ்சினங்கெழுமியபார்த்திபன்
கோட்டமில்வீரனைக்கொன்றுவாளாலுளத்
தீட்டியதுயரொடுமிருந்தனன்புத்திமா
னோட்டைபோமறிவொடுமுற்றிதுமொழிகுவான். (கந௪)

வேறு.

கவலையுமுழப்பரோகாவல்வேந்தர்க
ளவலமிக்குறுதொறுமாண்மைதேய்ந்திடுந்
தவலுறுபகைவலிதழைத்துமேவிடுஞ்
சவலையென்றுலகமுஞ்சாற்றிநிற்குமே. (கநரு)

நின்குடைநீழலினிலவுறுவிடம்
வன்குவலையத்திலைவனத்திற்சென்றவர்
நன்குநின்கையகநண்ணினார்களே
யென்குழைந்தினைவகையிறுக்குமாறுகேள். (கநசு)

மன்னனைச்சுமுதையைவதைக்கச்சூழ்வது
பன்னரும்பாவமும்பழியுமாமது
முன்னியமனப்படிமுடிவுறுமையா
னன்னவர்தமைக்கொலையகற்றல்வேண்டுமே. (கநஎ)

மைந்தனைக்கொல்வதேமதித்துமாயையின்
வெந்திறற்படைகளின்மிக்கவீரரா
,யந்தமிலாவிரகடுத்தநால்வரை
யிந்திடத்தொய்யெனவெய்தக்கூவுதி. (கநஅ)

உருவயலவர்விழியுரூதுநீவிர்க
ளிருள்பொதிகானகத்தெய்தியன்னவள்
கருவினையுயிர்த்திடுங்காலத்தாலதைப்
பருவரக்கொல்கெனப்பகர்ந்துபோக்குதி. (கஙகூ)

ஏவியவண்ணமேயிழைத்துநால்வரும்
பாவியவொளிகொடுபடர்வர்மீண்டிவண்
மேவியபின்பகைவிளைவதில்லென
வோவியமனையநோயுளத்தினீக்கினுன். (கச0)

புத்திமானுரைத்தபின்புத்திகெட்டவ
னத்திறமமைச்சர்களானநீவிரே
யெத்திறத்தானுஞ்செய்திடுமினென்றன
னுத்திறமேயவரோர்ந்துசெய்தனர். (கசக)

நூல்வளரமைச்சர்கஞேடிக்கப்பட்டொரு
நால்வர்கள்கானகநண்ணினுர்கடம்
பால்வளர்திசைதொறும்படர்ந்துகுக்கிவாழ்
மால்வருகாலமேமதித்துவைகினுர். (கசஉ)

கொடியவன்செயலிதுவாகக்கோதிலா
வடிவினள்சுமுதையின்வருத்தமாற்றிய
படியிலாவீரர்கள்பலரும்பொள்ளென
நெடியவான்மறைந்தனர்நீங்கிப்போதலும். (கசஙு)

பரிபவப்பட்டவர்படர்ந்துகூறிட
வரிகழற்றாமனுமன்னனின்னமு
முரியதன்சேனையையுறத்துமேயெனத்
தெரியிழைமாதொடுதெருமந்தானவன். (கசச)

வழுவையினினங்களுமடங்கலீட்டமு
முழுவையுமடுத்திடினுறுத்தும்யாமெனச்
செழுவியவாளுறைதீர்த்துத்தாங்கினுன்
முழுவலிமாதவன்மொய்த்தகங்குல்வாய். (கசரு)

மாதவன்வயிற்றிடைவைகப்பட்டவம்
மாதவனென்றுலகேத்தும்வாய்மையின்
மாதவனிருவருமறுக்கந்தீர்தர
மாதவர்புகழ்கதிர்வந்ததார்கலி. (கசசு)

கூதிரிஞகியகுளிரின்வீக்கமுந்
தீதினையுறுத்தியசெறிந்தகங்குலு
மோதிவெய்யவன்வெளிமுகட்டிற்சேறலுங்
கோதிலரிருவருங்குழைவுநீங்கினுர். (கசஎ)

வெறிவளர்வனத்திடைவேறிடத்தினை
யுறுவதுபுரிந்துகாயாதியுண்டனர்
பெறுதினந்தொறுமிடம்வேறுவேணுபு
துறவினர்வாழ்க்கையைத்துன்னினுனரோ. (கசஅ)

கருவினையுயிர்த்திடுங்காலமண்மையின்
மருவியதன்றுமாலாகிநல்வர
மருளியவிநாயகரடுத்துக்காத்திட
வொருமகவாயவருழைநின்றுரரோ. (கசகூ)

வேறு.

செய்யவுருவும்வெண்ணிறத்திற்சிறந்தமுகமும்புயநான்கும்
பெய்யுமொளியுமுக்கண்ணும்பிறைசேர்முடியுங்குண்டலமும்
வெய்யமழுப்பங்கயமாலைவியன்மோதகமுங்கண்டவர்க
ளுய்யும்வனப்பினுறுப்பனைத்துமொளிரக்கணேசரெதிர்தோன்ற. ()

நோக்கிமகிழ்ந்துசுமுதையொடுநோன்மைசான்றமாதவனுந்
தேக்குமுளத்தினன்பினராய்ச்செல்லலொழிந்துமகிழ்வெய்தி
யீக்கண்முரலும்பசுந்தேறலிருலையழிப்பாரலதுயர்ந்த
மாக்கள்பயிலாவிவ்வனத்தின்மகவினடுத்தாயாரென்றார். (௧௫௧)

வளங்கொள்பாலசந்திரன்போன்மருவுமடியார்க்கொளிபெருக்கிக்
களங்கொளிரவைத்தணித்தலினாற்காமருலகமூன்றிடத்தும்
விளங்கும்பாலசந்திரனென்றுரைக்கப்படுமவ்விநாயகனார்
துளங்குமவர்களுள்ளகத்துத்துயரந்தீரவருள்செய்வார். (௧௫௨)

தொன்றுவனத்தினரியதவந்தொகுத்தகாலந்தனிற்சுமுதாய்
நன்றுவரந்தந்திடநீயுணுநாராயணனாகி
மன்றநினதுதுயர்களைந்தாமன்னன்பயத்தால்வனத்தலையு
மின்றுமுனதுதுயர்களையவீங்குமகவாய்நினையடுத்தாம். (௧௫௩)

யாவரொருவர்பேரன்பால்யாதோர்தெய்வம்வழிபடினும்
பூவரளகத்தாயவர்க்குப்புத்தேளாகிவரங்கொடுக்குந்
தேவனெவனோவவன்யாமேசேர்ந்தாநுமக்குநாதனெனப்
பாவமிதுவாயினுநம்மைப்பயந்தோராகக்கைக்கொண்டாம். (௧௫௪)

மாலாவறிவிற்றவம்புரிந்தவனத்திற்சுமுதாய்நீவிழைவான்
மாலாமுருவினெனைநோக்கிமகவொன்றெனைப்போற்றருகென்றாய்
மேலாகியநாம்வருதுமெனவிதித்தாமந்தவரங்காப்பத்
தோலாமகனாயிருவேமுந்தோன்றவேண்டுமுறையானே. (௧௫௫)

கருவாய்வயிற்றிற்றரிப்பமலர்க்கண்ணற்கருளிச்சுவேச்சையினா
லொருசேயாகிவந்தனமிதுண்மையாகுமினித்தூமன்
பொருமாறடுப்பனவனுடலைப்புரட்டிக்கருவிற்பிள்ளையையும்
வெருவாநின்றநுங்களையும்விளியாதளித்தும்விளங்கிழையே. (௧௫௬)

பாதியிரவினுமைக்கொல்லப்படர்கான்கொணர்ந்தவித்துரும
னாதிவயவருயிர்பருகியழியாதுமைக்காத்திடும்வீரர்
கோதில்குணத்துச்சுமுதாய்நங்கோணையருளினாற்றோன்றுந்
தீதில்கணநாதர்களேயச்செயிர்தீர்திறமுந்தெரிவாயால். (௧௫௭)

கருடக்கொடியோன்கருவயிற்றிற்கழன்றுவளர்ந்துநின்னொடுநின்
புருடற்குவகைவளர்த்துலகம்போற்றத்தூமன்றனித்திகிரி
யுருடிக்கனைத்துமொருகுடைக்கீழோங்கப்புரப்பன்றுதியர்கை
வருடக்குழையுமடியாய்பின்வருகநீவிரெமதுலகம். (௧௫௮)

வேறு.

பாலனும்பொழுதேமதிபரித்தவனென்றும்
பாலவான்மதிமிலைத்தவனென்றும்பாய்மலத்தைப்
பாலவெண்மதிபோற்றெறும்பண்பினனென்றும்
பாலசந்திரனென்றுநம்பெயர்க்குரைபகர்வார். (௧௫௯)

இந்தவன்பெயரெமக்குமிக்கினிமையாற்சுமுதா
யெந்தவின்னல்வந்தெய்திலுமிதுமொழிவாயேற்
சிந்துமவ்விடர்தெளிமதியென்றனர்தெரிவை
யந்திலையமுற்றனளவருளியமொழியின். (௧௬௦)

அறிவியாதுலகத்துளவனைத்தையுந்தாமே
யறியுநாயகரன்னையாங்கயிர்த்தமையறிந்து
சிறியனும்பருவத்தொடுசிவணவாய்திறந்து
பிறிவிலாதெதிரிருந்துகாட்டினர்பெருந்தகைமை. (௧௬௧)

திறந்தவாயிடைத்தேவர்வாசவன்றிகழ்வசுக்கள்
சிறந்தவேழிருமனுக்கள்கந்தருவர்களியக்க
ரறந்தவாமுனிவரருரகர்களவர்முதலாப்
பிறந்துசேர்பெறுமுயர்திணையாம்பெரும்பொருளும். (௧௬௨)

எழிரட்டியவுலகெழுமலைநதிகான
மாழிவன்மிருகாதிகளாமஃறிணையு
மூழின்மன்னுறக்கண்டனளுளத்திடையையம்
வாழிவிட்டனள்விம்மிதமலிந்தனள்சுமுதை. (௧௬௩)

எட்டுக்கண்ணனுந்தாமரைக்கண்ணனுமெழின்மெய்
யொட்டுக்கண்ணனுமும்பராதியருமுள்ளெய்த
முட்டுக்கண்வெளியாயருள்முதல்வராமுடியின்
மட்டுக்கண்மலிமாலைசூழ்மகளிவனென்றாள். (௧௬௪)

ஐயநீங்குமுனணியுரத்தமர்பயோதரங்கள்
பெய்யும்வான்வளர்பயோதரமெனப்பெருகிடப்பா
லையுநூலிடைச்சுமுதையென்பாள்விநாயகனைக்
கையிலேந்திவண்கவான்படுத்தூட்டினள்கனிவாய். (௧௬௫)

மருங்குமாயையின்மறைந்துவைகுற்றநால்வர்களும்
வருங்கணேசனார்வலியினைமதித்துளம்வெருவி
யொருங்குநீங்கினரோடினரொன்னலார்முடிக
ணெருங்குதாளிணைத்தாமனைநீளிடைப்பணிந்தார். (௧௬௬)

போந்துமாற்றலர்புறங்கண்டுதிறைகொண்டுமீண்டுஞ்
சாந்தமேவுறுத்தழற்சினவேந்தனேசுமுதை
யேந்துசூல்வயிற்றிருந்ததுபிறந்திலதின்னு
மாந்தர்நீர்மையிலாவொருமகனெதிர்பிறந்தான். (௧௬௭)

அழுதபிள்ளையின்வன்குரற்கேயடியேங்கண்
முழுதுநொந்திருநிலத்திடைமூர்ச்சித்துவிழுந்தாம்
பழுதிலாதவதெளிந்தபின்பயின்றவச்செய்தி
தொழுதுசெப்புவான்றுன்னினனினதடியென்றார். (௧௬௮)

செல்லன்மூழ்கியமனத்தொடுந்தெருமந்துமூர்ச்சித்
தொல்லைவீழ்ந்தனன்றாமனுங்குற்றமைச்சர்கடாம்
வல்லவாறெலாந்தேற்றினர்மற்றவன்றெளிந்து
நல்லசேனைகளெழுகபோர்நவிற்றுதற்கென்றான். (௧௬௯)

ஆண்மைமுற்றியமைந்தருமமைச்சருமடுபோர்த்
தாண்மைமுற்றியசேனையுந்தற்புறஞ்சூழக்
கேண்மைமுற்றியவியமுதல்வரிசைகள்கிளர
வேண்மைமுற்றியவிரதமேலிவர்ந்தனனடந்தான். (௧௭௦)

ஊழ்த்தமாமலர்வனத்தினையுற்றதைவளைந்து
கேழ்த்தபூண்முலைச்சுமுதைவாழிடத்தினைக்கிட்டிக்
காழ்த்ததீச்சினமூளவெங்கார்முகத்தம்பு
வீழ்த்தினனெதிர்விளங்கியபாலசந்திரன்மேல். (௧௭௧)

காரின்மல்கியபெயலெனக்கணைத்திரடெய்வச்
சீரின்மல்கியபாலசந்திரனுருசெறிய
வாரின்மல்கியபூண்முலையோடுமாதவனும்
வேரின்மல்கியமெய்யராய்வெருவினர்பெரிதும். (கஎ௨)

வெருவலீரெனவிருமுதகுரவரைவிளம்பிப்
பொருவிலாதவன்வாயினாற்புகையினையுயிர்த்தா
னுருவமேதினிபிளந்துறுசேனையுந்தானு
மருவுபாதலம்விழுந்துயிர்மாய்ந்தனன்றாமன். (கஎ௩)

பாரிசாதத்தின்பனிமலர்பண்ணவர்சொரிந்தார்
வேரிமாமலராதியால்விழுத்தவமுனிவர்
சீரிதாகியதிருவடிபூசனைபுரிந்தார்
பாரியோடுமாதவனுளப்பரிவினைநீத்தான். (கஎ௪)

நாமவான்படையமைச்சர்மைந்தர்களொடுநண்ணுந்
தூமனாருயிர்தூமத்தாற்றொலைத்துயர்வெற்றி
வாமமார்கொடிநாட்டலின்வள்ளலார்தமக்குத்
தூமகேதுவென்றொருபெயர்துலங்கியதெங்கும். (கஎ௫)

வாட்டமின்றிவாழ்தூமனுமன்னவன்கேடு
காட்டலுற்றவுற்பாதமாய்க்கதித்திடலானு
நாட்டமெப்பெயர்சிறந்ததுநறையுமிழிதழி
பாட்டளித்தொடைவேய்ந்தருள்பாலசந்திரற்கே. (கஎ௬)

நிறைந்தபேரருட்டூமகேதுப்பெயர்நிமலன்
பறைந்ததீவினைமாதவனாதியோர்பார்ப்ப
மறைந்துநீங்கிமும்மலத்தையும்வென்றவர்மனமே
யுறைந்துவாழ்தருங்கோயிலாக்கொண்டுவந்தனரால். (கஎஎ)

நெஞ்சினார்வமோடிக்கதைநினைப்பவர்கேட்போ
ரெஞ்சுறாதுறப்படிப்பவரிவர்முதலெவரும்
வஞ்சமாதிவல்வினைப்பெருவல்லியினகன்று
துஞ்சுறாதபேரானந்தவெள்ளத்துட்டிளைவார். (கஎஅ)

பின்புபேரெழிற்சுமுதையும்பிறங்குமாதவனு
முன்புபோனகரடுத்தனர்முடிவிலாவலம்பெற்
றின்பமார்ந்தனரின்னணஞ்சிலபொழுதேக
வன்புநீடியமைந்தனையுயிர்த்தனள்சுமுதை. (கஎ௯)

தந்தையாகியமாதவன்றனையனைத்தன்பால்
வந்தமாமகன்றனக்குமங்கலத்தொழின்மல்க
முந்துமாரணமொழிப்படிச்சாதகமுதலா
வந்திலாற்றுபல்கருமமுமாக்கினனாளும். (கஅ0)

தருமமாதிகண்மாதவன்றழைதரப்புரிய
வருமைமாதவத்தான்மகப்பயந்தவாரணங்கு
பெருகுமோகையளாய்ப்பிறைபோன்மகவளர
வுருவமாட்டியொண்பான்முதலூட்டினள்வளர்த்தாள். (கஅக)

வள்ளலாகியநாரணன்மன்னன்மாதவற்குந்
துள்ளுசேல்விழிச்சுமுதைக்குந்தொன்றுதொட்டடுத்த
பிள்ளைவாஞ்சையைமுடித்துளப்பெருங்களிபெருக்கி
மெள்ளவேவளர்ந்தெழுந்தனன்வெவ்வினைவீழ. (கஅ௨)

கருணைநாயகன் றூமனைக்கடிந்தபின் றூமன்
பொருவிலாணைசெல்புவியெலாம்புரிந்தமாதவன்பின்
றருணமேவியதனையன்பாலரசினையளித்து
மருவினான்மனைமாதொடுமீற்றில்வான்வீடு (௧௮௩)

தூமனாகியமன்னவன்சுடர்விடுவிளக்காக்
காமமாதருமாதவன்கரிசுதீர்காலை
வேமமார்சுடர்ப்பந்தமாயிருநிலங்காத்துத்
தாமவார்குழன்மாதரார்தம்மொடும்வாழ்ந்தான். (௧௮௪)

புகையைவாயினாலுமிழ்ந்துபோர்த்திறத்தினில்வல்ல
பகைவனாகியதூமனைப்பாதலத்துகுத்துத்
தொகைசெய்நானிலங்காத்தருடூமகேதுவின்றன்
வகைசெய்மாண்புகழ்யாவரேமுழுவதும்வகுப்பார். (௧௮௫)

சட்டவேழெனுந்திருவவதாரஞ்சாற்றினமே
லெட்டதாமவதாரஞ்சாற்றுதுமினிக்கேளென்
றொட்டுமோர்வமோடொழுகுதேன்வாரிசத்தொருத்த
னட்டகேண்மையின்வியாதனைப்பார்த்தனனவில்வான். (௧௮௬)

**தூமகேதுவிநாயகர்திருவவதாரப்படலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் - ௧௬௯௯.



## ௭௮ - வது கணேசர்திருவவதாரப்படலம்.

வலிமிகுந்திடும்பெலியெனுந்தானவன்வரத்தா
லொலிதிறன்மதின்மூன்றொடுமுலகெலாமழிப்ப
மெலியுமந்தரர்தமக்கெலாமிகவுளமிரங்கிப்
பலியிரந்துசெல்பரமனார்மாதவம்பயின்றார், (௧)

ஈசரானனத்தைந்துமாமுகத்தொடுமெழுந்து
நேசமோடவர்க்கிரும்புரநீறுசெய்வரங்கள்
வீசியாவருங்கணேசரென்றகத்துறுவிழைவாற்
பேசமேலைநாள்விளங்கினன்விநாயகப்பெருமான். (௨)

அன்பனேயவன்சரித்திரமுன்னமேயறைந்தா
மொன்பதாமவதாரமேலுரைத்திடக்கேளென்
றின்பமார்தரவியாதனுக்கெடுத்தினிதுரைப்பான்
றுன்பநீங்குறவுலகெலாந்தோற்றியதொல்லோன். (௩)

**கணேசர்திருவவதாரப்படலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் - ௧௭0௨.



## ௭௯ - வது கணபதிதிருவவதாரப்படலம்.

வெண்டாமரைக்கணுலகுயிர்த்தவிதியும்வெள்ளைப்பாற்கடலிற்
தண்டாமரைக்கட்டிதியரியுந்தண்டாதிருப்பவுயர்வெண்மை
கொண்டாருயிர்களிளைப்பாறக்குமைக்குமுதல்வன்றனைத்தாங்கிக்
கண்டார்பிறவிக்கடல்காணுக்கதியிற்சிறந்ததிருக்கயிலை. (௧)

தவளமதியும்வெண்புனலுந்தவளப்பொடியும்வெள்விடையுந்
தவளவயிராவணக்களிறுந்தழுவும்பெருமான்சாத்துவிதத்
தவளக்குணத்தினுருக்கொண்டதலைவற்கிசையும்படிதானுந்
தவளவடிவாகியவந்தத்தம்பிரான்வைகியகயிலை. (௨)

எண்ணமுதன்மூன்றினுந்தன்னையிறைஞ்சுந்திருமாலினைத்தாங்கும்
வண்ணநாலையொடுமற்றைமணிவாருதிகளேழுங்கடைநா
ளண்ணும்வயிற்றினுள்ளடங்கலடாதென்றெழுந்தேயக்நாளிற்
றிண்ணமுறுமச்சிலம்பண்டமுகட்டினளவுஞ்சென்றொளிரும். (௩)

தெளியுமடியார்க்கிரும்போகத்திறத்தையருளைத்தனைவழங்கி
யளிசெய்யிறைவன்பெருங்கீர்த்தியாக்கையவனைத்தணியாது
விளியில்விழைவிற்சுமந்தவன்போல்விளியாத்தகைமைபெற்றதென
வொளிர்வெண்கிரணக்கயிலாயமூழிதொறுநின்றினிதோங்கும். (௪)

கடைநாள்வேலையேழுமுடன்கலப்பவியல்வேறுமால்கண்
படையாரிடத்தையவனுந்திப்பதுமனனவயனிடத்தை
யுடையாவுறுதியொடுநகைக்குமொளியேபோலுமுருத்திரனுக்
கிடையாத்தலமாயோரியல்பினிருக்குங்கயிலையுமிழொளியே. (௫)

ஆத்தனுருவங்கொண்டமையாலடுத்தோர்தமையும்பெரியரென
வேத்தநலமேவிளக்கின்றியிடமுமாகியவற்றாங்கின்
மூத்துமடியாமெனக்கயிலைமூரிச்சிலம்பாயுருக்கொண்டு
சாத்துவிதமோகையினுர்த்தநகையுமருவித்தழங்கொலியே. (௬)

இறைவனுறைந்ததாயினுமோரேந்தல்வருத்தப்பொருளீந்த
துறைபொற்சிலம்புமந்தரநஞ்சுவாவைக்கலக்கியமருக்கு
நிறையக்கொடுத்ததெனவெள்ளிசிரப்பும்வரங்களடுத்தோர்க்கு
மறையின்முடிக்குமெட்டாதவள்ளன்முடிவாழ்கயிலாயம். (௭)

உள்ளும்புறமுமொருதன்மையுடைமையானுமறவுந்தி
வள்ளல்கமலத்தாண்முடியின்மருவப்படுஞ்செய்கையினானுந்
தெள்ளுங்கலைஞரெடுத்தேத்துஞ்சிறப்பினானுங்கயிலாய
மெள்ளும்வினைதீர்ந்துயர்ஞானமெய்துமடியார்போன்றதுவே. (௮)

இறைவனடித்தாமரைப்பூசையியற்றித்திருமான்முதலோர்க
ணிறையும்வளத்துவைகுந்தமாதிநீடுகதிகள்பெறி
னறையுமமலன்பொன்னிமையவடுக்கன்மகளோடெஞ்ஞான்று
முறையுங்கயிலையணிவளங்களும்பரானுஞ்சொலப்படுமோ. (௯)

வேறு.

மலர்வருக்கமெல்லாமலர்ந்திருப்பதுமணியின்
குலவருக்கமெல்லாங்குழுக்கொள்வதுந்தீர்த்த
நலவருக்கமெல்லாநயந்தமர்வதுநாளும்
பலவருக்கமெல்லாம்பயந்தளிப்பதுங்கயிலை. (௧௦)

குன்றமன்னதிற்குலவிவாழ்கோடிமாமிருகந்
துன்றுபுள்ளினமாதியுட்சூழினெவ்வொன்றே
நன்றுகற்பகந்தேனுநன்னிதிசிந்தாமணியு
மென்றுநல்குவவிவைதருபொருள்களுமீவ. (௧௧)

பெரியமாதவம்பவந்தொறும்பேணியெப்பொருளுந்
தெரியும்யோகியர்க்கல்லதச்செழுங்கயிலாயத்
துரியபூமுதலானவையாயுறைவாழ்வு
மரியதாகுமற்றேனையாருயிர்க்கெலாமம்மா. (௧௨)

பற்றுநீத்துமைபாகர்பாற்பற்றுடையவர்க்கே
யுற்றவாழிடமாமுயர்கயிலைமற்றையர்க்கு
முற்றவேண்டியதளித்தயன்மூடுகுவதன்றி
யெற்றைநாளுமன்னவர்க்கிடமாம்வகையின்றே. (௧௩)

அனையபேரெழிற்கயிலையிலடுக்கலுக்கரையன்
றனையையாகியவுமையொடுஞ்சார்வறச்சார்ந்து
நினையுமாதவர்க்கருள்செய்துநெடுங்கதியுதவ
வனையுமாமதிக்கண்ணியான்வதிந்தருணாளில். (௧௪)

குளிர்ந்துதாமரைக்குலந்தபுங்கொடும்பனிப்பருவம்
விளிந்துபோதலுமுந்தியவேனின்மேவியது
முளிந்துபூளையின்விழித்தழலாலுருமுடிந்து
மளிந்தகாமனேயளிப்பவனணிவிழாச்சிறப்ப. (௧௫)

கோடைபின்னிடக்கொண்டன்மேவியததுலையப்
பீடைமல்கியகூதிர்மேவியததைப்பெயர்த்து
வாடைவந்ததுவாடையைமாய்ப்பதேசயமென்
றோடையாதிகளணிபெறவுற்றதுதென்றல். (௧௬)

இறந்துபோகியவிருதுவின்கால்படுமிலைப்பூச்
சிறந்தவல்லவென்றெய்திளவேனிறென்காலால்
விறந்தகானகமாதியைவிதித்தவைவீழ்த்து
நிறந்தவாத்தளிராதிகணிரப்பன்மேயினதால். (௧௭)

இனியவேபுரிவார்க்குநல்குரவுவந்தெய்தி
னனிநிலாததுநசிப்பதுநவிற்றுவவிலைதீர்
புனிதமென்கொடிதருவிவைபொருக்கெனத்தளிர்த்துப்
பனிவிராவியமுலைகமலர்பலகனிதோற்றி. (௧௮)

மிக்கதண்குணத்தொடுகொடைமேவினர்தம்பாற்
புக்குறுதவரிலையெனும்பொருள்விளக்கினவாற்
றொக்கமென்சிறைத்தும்பிதேன்மிஞிறொடுசுரும்புந்
தக்கபல்வகைப்பறவையுஞ்சினைதொறுந்ததைந்த. (௧௯)

சார்ந்ததொன்றினாற்றன்குணங்காட்டுவதன்றி
யார்ந்தமாமணங்கமழ்ந்துகாட்டாவகண்புவிக்கு
வார்ந்தசோலையுமற்றவுஞ்செய்நன்றிமதித்துச்
சேர்ந்தவாசனையூட்டுவதெனமுதல்சிந்தி. (௨0)

சுருங்குறுச்சுவைநீரினாற்சுவையுறத்தம்மை
நெருங்கியோம்பியபூந்தடமாதியினிரப்பை
மருங்குமேவியதாழ்பொழில்வைகலைம்பொழுது
மொருங்குநீப்பனபோன்றவற்றாடுகுப்பனதேன். (௨௧)

துட்டரானவர்நன்றியேதுறுத்தவர்மாட்டுங்
கட்டமேதருங்காரியஞ்செய்வதுகடுப்ப
முட்டுறாதுதீம்புனலினைமுழுதுமுண்டெழுந்த
வெட்டியாதிகள்கைத்தகாயாதியாங்கிறைப்ப. (௨௨)

எட்டியாதியிற்கவர்ந்தவுமேனைநன்மரத்தின்
மொட்டுவாய்விழமலரிடைமுகந்தவுங்கூட்டி
யிட்டமாதியதேனெனவீட்டும்வண்டினங்க
ளொட்டுவாரிருவோரையுமுயர்த்துதேசிகன்போல். (௨௩)

பரந்தபூத்தொறுஞ்சிறிதுதேன்பற்றியோர்பாங்கிற்
சுரந்துதேங்குறவிறால்பலதொடுத்திடும்பிரசங்
கரந்தநூலிடைப்பொருள்களைக்கண்டெடுத்தினிப்ப
வரந்தைதீர்தரத்தொடுக்குநாவலர்களையனைய. (௨௪)

வருந்தியீட்டுவவீக்குலமாயினும்வானோர்
திருந்துசேவடிக்காமலரினத்தையுஞ்சிதைத்துப்
பொருந்துதீங்கினாலவற்றினையலைப்பதேபுகழென்
றிருந்தவீயறவிறால்பலவழிப்பர்கள்சில்லோர். (௨௫)

செய்யுமாசினர்தமைச்சினந்திரும்பொருடெவ்வல்
வெய்யவேலினாற்கறமதுபோல்விடிந்திடுமுன்
பையவீயினமூறுசெயீயலைபசுந்தேன்
வையமேவினார்நீத்திலர்வானவரேபோல். (௨௬)

தோகைமஞ்ஞைகள்சோலையினீங்குழியன்றி
யாகுமப்பருவத்தினுக்கயர்வுறுபொழிலிற்
கோகிலங்களுநீங்குழியல்லதுகூவா
மேகமொப்பவப்பொதும்பர்கள்வீசுதேன்மழையால். (௨௭)

வரிப்புறத்தணிலாதிமாங்கனிமுதனுகர்ந்து
தெரிப்பதூயவுண்டியர்தமைத்தீவிதல்லனவுந்
தரிப்பதாகியவிழைவினாற்சார்ந்துதேர்மந்தி
விரிப்பதாழ்ந்தவுண்டியமிகமிசைகுவார்தம்மை. (௨௮)

கணவனானசெங்கதிரவன்ஞாதியாமதியா
லணவுமீர்ம்பனிப்பருவத்தினழிந்தவையொழிய
மணம்விராவியதாமரைவரிச்சிறைத்தும்பிக்
கணம்விராவிடமலர்ந்தனகயந்தொறுங்கவின்று. (௨௯)

கயிரவத்தடமாதிகள்கமழ்புனறெளிந்து
பயில்வனப்பொடுசிறந்தனபுரந்தநீணதிக
ளயிர்வரித்தறல்வார்த்துமென்புனலகத்தொழுக
வெயிலின்வெப்பினையகற்றுவவிழைந்தபல்லுயிர்க்கும். (௩௦)

சிறந்தபூம்புனலருவிவார்செழுவரைமலைக
ளிறந்தகாரிடைப்பருகியவிரும்புனலுமிழ்வ
வறந்தகாலம்வந்தடுப்பினும்வள்ளியோர்தம்பா
லுறந்தவான்பொருள்கரந்திடாதுதவுதல்கடுப்ப. (௩௧)

இன்னதாமிளவேனில்வந்தெய்துழியிமையார்
துன்னியேத்திடுங்கயிலைநாயகர்சுடரிமயக்
கன்னியோடுபொற்கோயிலைக்கதுமெனநீங்கி
வன்னமாமலர்மல்குமுய்யானத்தையடுத்தார். (௩௨)

கொன்றைகூவிளங்கோங்குமந்தாரம்பாடலங்கண்
மன்றலார்ந்தபுன்னாகஞ்சண்பகம்வழைவகுளந்
துன்றசோகமாதிகடுவன்றியதுணர்வனத்தை
நன்றுநோக்கியாங்கிருந்தமண்டபத்தைநண்ணினரால். (௩௩)

ஓவியந்திகழத்தகுமண்டபத்துற்ற
வாவியன்னதன்னாயகனோடினிதலர்ந்த
காவியன்னவான்மதர்விழிக்கயிரவச்செவ்வாய்த்
தேவியங்குளவனப்பெலாஞ்சிறப்பநோக்கினளால். (௩௪)

பித்திதன்னிடைப்பேரழகெறித்திடப்பொறித்த
சத்தகோடிமந்திரமவைதமக்கெலாமுன்னர்
வைத்தமாமனுப்பிரணவநோக்கினளதனி
லத்திபெண்ணொடாண்டோன்றிநின்றாற்றினகலவி. (௩௫)

எம்பிரானிதுவென்னெனவினவினளிறைவி
தம்பிரான்கலியாணிநின்சம்பந்தமாகி
நம்புவையகந்தனக்குபகாரமாய்நண்ணும்
பம்புகின்றதண்கருணையென்றறியெனப்பகர்ந்து. (௩௬)

கடிவிராவியமதம்பொழிகளிற்றினையந்த
வடிகளுக்கிநின்றனருளத்தார்வமோடம்மை
பிடியைநோக்கிநின்றனளவைபேணியகலவி
முடிவின்மேதகத்தோன்றினார்மொய்விநாயகரே. (௩௭)

ஊழியாகியகாலத்திலுதித்திடுமொற்றை
யாழியாதவர்கோடியோர்குழுவியதனைய
வாழிதேசுருவயங்கவந்தருள்விநாயகர்தாம்
வீழிவாயுமையாளொடும்விமலரைப்பணிந்தார். (௩௮)

அந்திவான்மதிமிலைத்தருளமலனுமடுக்கல்
வந்ததேவியுமுச்சிமோந்தெடுத்தொருமகனைச்
சந்தவான்மடித்தலத்திடையிருத்தினர்பின்ன
ரெந்தைநாயகர்விநாயகர்க்கிதுமொழிகுவால். (௩௯)

என்னின்வேறுமாகாமலென்பிள்ளையாயிருக்கு
நின்னையாவர்கணினைந்தடிவணங்குகின்றார்க
ளன்னர்பாலிடையூறுகளனைத்தையுமறுத்து
மன்னுகாமங்களனைத்தையும்வழங்குகவிரைவின். (௪0)

வேறு.

கணங்களுக்கெல்லாமுதன்மையாம்பதியாய்க்கருணைசெய்திடுகவெம்மருளா
லிணங்குமிச்செயலாற்கணபதியென்னயாவருமியம்புகநின்னை
யணங்கறவெவருமெந்தக்காரியத்துமன்புடன்முன்னுறநாளும்
வணங்குகயாவராயினுநின்னைவணங்குறார்க்கிடர்களேபுரிக. (௪௧)

தானவரேறாய்க்கோரனுய்த்தறுகண்டழைவறத்தழைத்தநெஞ்சினனாய்
வானவர்தமக்குத்துன்பமேபுரியுமறங்கெழுகெசமுகன்றன்னை
யீனமில்களத்துக்கொன்றரியாதியிமையவர்துயர்ப்பெருங்கடறூர்த்
தானமில்கருணைபுரிந்தவர்தம்மையோம்புகவென்றுரைத்தருளி. (௪௨)

செறியொளிமணிகள்கரைத்திலேகித்தசித்திரமண்டபநீங்கி
வெறிகமழ்பொதும்பர்விடுத்துமைபாகர்விநாயகர்தமைக்கொண்டுபோகி
யறிவர்களிறைஞ்சுமத்தருகயிலையாலயக்கோபுரவாய்த
னெறியுளியிருப்பவிருத்தியுள்புக்கார்நேரிழைமலைமகளோடும். (௪௩)

நந்திமுன்னனகணங்களுநெடியநாரணன்முதலிமையாரும்
வந்தருள்கொழிக்கும்விநாயகர்பதத்தைவணங்கியேத்தெடுத்தவரருளாற்
றந்தமக்குரியபேரதிகாரந்தகவுறச்செய்திடப்போந்தா
ரந்தவேலையினுட்கோயிலிற்புகுந்தாரளவளாய்மகிழ்ச்சியினிருந்தார். (௪௪)

வேறு.

திருவுளமகிழ்ச்சிபொங்கச்சேர்ந்தளவளாவிவைகுங்
கருமிடற்றிறைவரென்றுங்கன்னியாமுமையைநோக்கி
யிருதிறத்தேழுஞ்சூதிங்கிழைத்துநீதோற்றாயாகிற்
றருகநின்னணியாந்தோற்பின்றருதுமெம்மணியையென்றார். (௪௫)

அமைபொருபெருந்தோள்வீங்குமருப்பிளங்கொங்கைச்செவ்வா
யுமையவளதற்குநேர்திட்டுவணமேக்குயர்த்தோனங்க
ணிமையவர்பெருமான்பாதமேத்துவான்புகுதவந்தத்
தமையனைநோக்கியீங்குச்சாட்சிசொல்லுகநீயென்றாள். (சசு)

சுந்தரன்முதலாவுள்ளதொல்பரிசனங்கள்கொண்டு
வந்துமுன்சூதுவைப்பவாரணத்துரிவைபோர்த்தா
ரிந்திரைமணாளன்றன்னையினிதுறநோக்கியிந்தச்
சந்தநன்மணிச்சூதெல்லாந்தருமுறைவைப்பாயென்றார். (சஎ)

தீதுசெய்துட்டராவிசெகுத்திடுந்திகிரிச்செம்மல்
சூதுறுகருவிமுற்றுந்தொடிக்கையினெடுத்துவைத்து
மாதுமையிறைவரோடுமகிழ்ந்தினிதாடுமாட்டஞ்
சாதுளந்தழையநோக்கிமருங்குறத்தங்கினானே. (சஅ)

உமையவள்வென்றாளாகவும்பர்கள்பெருமானந்த
வமைவினைக்குறித்தோதேறேமங்கலாய்வென்றாநின்மெய்ச்
சுமையெனப்படும்பூணுதிசுடர்மணிமுழுதும்வாங்கித்
நமதெதிர்வைக்கவென்றார்நகைத்துமைமாதுசொல்வாள். (சகு)

அற்றமின்மறைகளெல்லாமருளியதிருவாக்காலே
யெற்றுக்குநாணிலாமலின்னனமொழியலுற்றீர்
வெற்றியென்பாலதன்றோவிமலரேநுமதுமெய்யின்
முற்றியவணிகள்வாங்கிமுன்னுறவைக்கவென்றாள். (ருo)

நெய்க்குழற்றிருவைமார்பிணிறுவியமாலைநோக்கிப்
பொய்க்கரிபோகுமாறுபுருவத்தினெறிப்பாலேவி
மெய்க்கரிக்கருள்வார்நாமேவென்றனமென்றார்மாயன்
மொய்க்குறிப்பறிந்துநின்னைமுன்னவன்வென்றானென்றான். (ருக)

அன்றினார்புரங்கணீற்றுமடிகளால்வெல்லப்பட்டாய்
மன்றலங்குழலாயற்றால்வயங்குநின்னணிகளெல்லா
நன்றுறநம்பனார்க்குநல்குதல்வேண்டாமேயோ
வென்றுபொய்க்கரியேசாலவியம்பினான்வருவதோரான். (ருஉ)

மறுவறுமுருத்திராணிமாயனையுருத்துநோக்கிப்
பெறுவதென்குறித்துப்பேதாய்பிணக்கறக்கண்ணிற்கண்டு
முறுசெயலுரைத்தலின்றியுறாதபொய்க்கரியேசொன்னா
யிறுவிழிமலைப்பாம்பாகியின்னலேயுழக்கவென்றாள். (ருங)

உலகினையளிக்குமாயனுருத்திரன்சார்புபெற்றும்
பலனில்பொய்க்கரியாற்சாலப்பருவருஞ்சாபம்பெற்றா
னிலமிசைப்பொய்ச்சான்றோதிநித்தலும்வாழ்வார்க்கெய்து
மலகில்வெந்நிரையத்துன்பமளக்குநர்யாவரம்மா. (ருச)

நவின்றவன்சாபங்கேட்டுநெடுநெடுங்குற்றுநெஞ்சங்
கவன்றுலகளிக்குந்தேவன்கண்ணுதற்பெருமான்பாதந்
துவன்றுமெய்யன்பிற்றாழ்ந்துதொகுபிழைபொறுத்துத்தேவி
நுவன்றவெஞ்சாபத்தீர்வுநுவலுகென்றிரந்துநின்றான். (ருரு)

அவரவர்க்குள்ளகன்மமவரவர்க்கறிந்துகூட்டித்
தவநுகர்வித்துத்தீர்க்குந்தம்பிரானருளிச்செய்வார்
பவமறுவடதீபத்திற்படர்ந்ததெமதடியைநெஞ்சத்
திவருறவிருத்தியங்கேயிருமதியிருந்தாயாகின். (ருசு)

மூவ்வகையுலகத்தார்க்குமுனிதுயர்பெரிதுமாக்கு
மவ்வியஞ்சான்றநெஞ்சத்தாம்பன்மாமுகனைக்கொன்று
செவ்வியகணேசனந்தத்தீபத்தின்வழிமீண்டெய்து
மவ்விநாயகனைக்காணினுமிதுபோதியென்றார். (நுஎ)

ஓங்கியவடதீபத்தையுற்றவனுயர்ந்தவாலிற்
றூங்கியபராரைதன்னிற்றக்கயோசனையேழெல்லை
வீங்கியவிருளதாகிவெய்யதாய்கின்றபொந்தி
னீங்கியவிழிப்பாம்பாகிநெடியமாலுறைந்திட்டானே. (நுஅ)

வெருவருபாந்தளாகமேவுதன்னுருவுநோக்கி
யருவருப்புடையனாகியம்பிகைபாகர்செய்ய
மருமலர்ப்பதமுமாம்பல்வதனமொடமர்ந்தநாதன்
றிருமலர்ப்பதமுமுன்னிச்செயிரறுதவஞ்செய்தானால். (நுகூ)

நாரணன்செயலிதாகநான்மருப்பேந்தும்வெள்ளை
வாரணன்முதலாந்தேவர்மறங்கிளரவுணற்கஞ்சிச்
சீரணிகைலாயத்தைச்சேர்ந்துபல்பொருளுங்கொண்டு
காரணங்கடந்தமுக்கட்கணபதிபூசைசெய்தார். (சு0)

ஏத்தரும்பூசையாற்றியெழின்மறைப்பொருள்கள்கொண்டு
தோத்திரஞ்செய்துமுன்னர்த்தொழுதெழுஞ்சுரரைநோக்கி
மூத்தவன்புடையீர்காதன்மொழிமின்கடருதுமென்று
ராத்தனுயுலகமெல்லாமளித்தருள்வழங்கேரம்பர். (சுக)

வருத்தியமதமால்யானைவதனனுமசுரனாவி
யுருத்தழித்தடியேம்பாங்கருறுதுயர்முழுதுநீக்கித்
திருத்தகக்காக்கவென்றுதேவர்களிரந்தார்யார்க்குங்
கருத்தனுங்கணேசரன்னோர்கருத்தினைமுடிக்கநேர்ந்தார். (சுஉ)

வேறு.

வாலுளைமடங்கலணைமீமிசையிருந்தருளும்வள்ளலதுநீங்கிமலைபோற்
சாலவுயர்தேகமுடையானசலனென்றுபெயர்தாங்கினவன்பூதர்தலைவன்
சீலமிகுகின்றவவன்கந்தரமிவர்ந்தனர்தெழித்தனவியங்கள்பலவுங்
கோலமலிவெண்குடைநிழற்றியதெழுந்தனகொடித்திரளசைந்தகவரி. (சுங)

ஊழின்வளரங்கியுமிழ்கண்ணினரிடிக்குலமுலப்பவுரையாடுமொழியார்
பாழிதிமிர்தோளிலயிலாதியபடைத்திரள்பரித்தவர்கள்பாரிடர்பலர்
வாழிகடல்போன்மெனமருங்குமிடையக்கருணைவள்ளலவர்சென்றணவினார்
வேழமுகனுமசுரன்மேவியரசாட்சிபுரிமேதகுமதங்கநகரை. (சுச)

யோகியர்கண்ஞானவிழியாலறியினல்லதுதன்னுண்மைபிறராலறியொணுத்
தேகியமர்செய்யநகரின்புறமடுத்தமைதெரிந்துகயமாமுகவனும்
வாகினியொராயிரமருங்குறமதிக்கவிகைவார்கொடிகளாதிமிடையப்
போகிமுதலானசுரரஞ்சுபடையேந்தியெதிர்போந்தமர்துடங்கினனரோ.()

வேறு.

செறிந்தபூதர்கடாக்கலுஞ்செருப்புரியவுணர்
மறிந்ததோளினர்மடிந்ததாளினர்படையோடு
பறிந்தபாணியர்பாரில்வீழ்படையினர்வீர
முறிந்தநெஞ்சினராய்த்திசைதொறுமுதுகிட்டார். (சுசு)

உடைந்தசேனையைநோக்கியவவுணர்கோனுளத்தி
லடைந்தசீற்றமோடடுசிலைக்கணைமழைபொழிந்து
மிடைந்தபூதரைக்கொன்றுயர்விநாயகர்முன்ன
ரிடைந்திடாமறந்தோன்றுமாறெய்திவீதுரைப்பான். (சுஎ)

சிறுவனென்னொடுபகைத்தெவர்தேகமொடிருந்தார்
மறுவிலாதநீயெற்றுக்குவானவர்க்காக
விறுதல்வேட்டனைவிடுத்தனனேகுபோர்விழையி
னுறுபடைத்திறங்கற்றதைக்காட்டுதியொல்லை. (௬௮)

நின்றநின்னைமுன்கொன்றுபினெடியவானவரைக்
கொன்றுவாகையேசூடுவன்கொன்றைமாலிகையா
னன்றுநல்கியவரத்தினையறிந்தனையல்லை
யென்றுசெப்பினன்கேட்டருளேரம்பரிசைப்பார். (௬௯)

கருணைநாயகனாகியகண்ணுதற்பெருமா
னருளினாலுனையழித்திமையாரையந்தரத்தி
னிருவுவேனிதுசத்தியமென்னைவீண்பொழுதில்
வெருவுறாதமர்புரிவையேல்விரைமதியென்றார். (௭௦)

முழுவலிக்கயமுகமுடையவுணர்கோன்முனிந்து
விழுமமேபுரிகொடுமரமேருவின்வளைத்துத்
தொழுதியம்புகள்சொரிந்தனன்சொரிகணையோடு
புழுதியாக்கினன்கதையினாற்பொருசிலையிறைவன். (௭௧)

வேறுவன்சிலைவாங்குபுவிசிகங்கடொகுத்தான்
மாறுமல்கியகயாசுரன்மலையுமச்சிலையு
மீறுகண்டனனெறுழ்வலிமுசலத்தாலெற்றிப்
பேறுகண்டவர்தமக்கெலாமருள்செயும்பெருமான். (௭௨)

தண்டமொன்றுகொண்டவுணர்கோன்றம்பிராற்கடுப்ப
மண்டிநின்றுவானவர்படைமுழுவதுமனுக்கள்
விண்டுபன்முறைவிடுத்தனன்மேவியன்னவைதா
மண்டர்நாயகனடிபணிந்தருகுநின்றனவே. (௭௩)

அய்யன்சேவடிக்கமரர்கள்படைவணங்குதலும்
வெய்யதானவன்வியந்தபின்னருஞ்சமர்விளைத்தான்
கையிலேந்தியதண்டினைக்கதையினாற்பொடித்துப்
பொய்யன்மார்பத்துந்தாக்கினன்புலவர்கள்பெருமான். (௭௪)

சிறிதுபோதுளம்வருந்தியதெருமரலோடு
மறுவிலாதவனின்றனனத்தகுசணத்திற்
பிறிவிலாதுகைப்பிடித்தருண்மழுவினாற்பெரியோ
னெறியிலாதவன்சேனையைநீறுசெய்தனனே. (௭௫)

மம்மர்நீங்கினான்மடிந்ததன்சேனையைநோக்கி
யம்மவோசிறுவரையினற்படையெலாமழித்தான்
செம்மலேயலாற்சிறுவனோவிவனெனத்தெளிந்து
விம்முமானமேலுந்திடமீட்டுமொற்றினன்போர். (௭௬)

பெற்றநல்வரத்தினைக்குறித்திமையவர்பெருமா
னொற்றைவெண்மருப்பயினுதியொடித்தெதிர்விடுத்தா
ருற்றவெய்யவனுரங்கிழித்துயிருண்டுபோகி
முற்றுசுத்தநீர்க்கடலிடைமுழுகிமீண்டதுவே. (௭௭)

பகையடுத்துழிப்பாதத்தினான்றியுமுதைத்து
நகைவிளைத்துநல்லுகிரினாற்கிள்ளியும்பார்த்துந்
தொகைநலம்புரிபராபரன்றோன்றல்வெண்கோட்டாற்
புகையுயிர்த்ததானவனுயிரழித்ததும்புகழோ. (௭௮)

மீண்டுவந்ததும்வலப்புறக்கோட்டினைவிளக்கம்
பூண்டகைத்தலத்திருத்தினர்புண்ணியமுதல்வர்
மாண்டவிண்ணவர்மலர்மழைபொழிந்தனர்முனிவ
ரீண்டுமாமறையெடுத்தெடுத்திறைஞ்சினர்முறையால். (எசு)

செம்பொன்மால்வரையடியொடும்விழுந்தமைசிவண
வும்பரார்க்கறிவரியவனுலவையாலுலப்புற்
றிம்பர்மாநிலம்வீழ்ந்திடுமெறுழ்வலியவுணன்
வம்பறுதவன்மூடிகமாயினன்மாதோ. (அ0)

வட்டமாய்ச்சிவந்தழலுமிழ்விழியுமாதிரங்க
ளெட்டும்விட்டுநீள்வாலும்வாய்க்கடைவளையெயிறுஞ்
சட்டநீண்டுறப்பருத்துவல்லென்றதாழ்முகமு
முட்டிலாதுடன்முழுவதுமொய்த்தெழுமயிரும். (அக)

பறித்துமாமலைதருவிவைசாய்க்குநாற்பதமுஞ்
செறித்தவானுலகழித்திடுஞ்சேண்டொடுமுதுகுங்
குறித்துநோக்கினோஞ்சுழுங்கோரமுமுடைத்தாய்
மறித்துநீடுபல்லண்டமுமாய்ப்பமுன்னியதே. (அஉ)

வெருவிவானவர்முனிவரரிரிந்தனர்வெய்ய
வுருவினேர்வருமூடிகத்தூக்கமங்கொழியக்
கருணைநாயகன்கதுமெனப்பிடித்துமேலிவர்ந்தா
னிருமைஞானமுமெய்திமேலாயிருந்ததுவே. (அங)

சித்தர்சாரணர்தேவர்மாதவரெலாஞ்செறிந்தங்
கத்தனூர்தமையாகுவோடருச்சனைபுரிந்தார்
மெத்துசோரியினவுணர்கோன்விழுந்தசெங்களத்தை
யித்தராதலமாரத்தமயமெனவிசைக்கும். (அச)

அந்தவெல்லையிற்சிவலிங்கப்பதிட்டையொன்றுற்றி
யெந்தைநாயகராகியகணபதியென்பார்
கந்தமாதியாற்கணபதீச்சுரரெனுநாமந்
தந்துபூசனைபுரிந்தனர்சகமெலாமுய்ய. (அரு)

செறிந்தசேனையோடவுணர்கோன்செருக்களத்தவிந்த
தறிந்துசூழ்ந்தசுரேந்திரனடர்சிறைப்புள்ளாய்ப்
பறிந்துமேருவின்குகையினைப்பற்றினன்கரந்து
மறிந்துபோய்விசும்படைந்தனன்மன்னுசுக்கிரனும். (அசு)

விடைவிநாயகர்கொடுப்பவான்மேவினரமர
ருடையநாயகருறுபெருவரிசையோடெழுந்து
படைகள்சூழ்தரவாகுவைப்பையெனக்கடவி
நடையின்மேவினர்நண்ணினர்நலவடதீபம். (அஎ)

எல்லையெம்பிரானெய்தலுமிருண்டகண்ணோடு
மல்லன்முற்றியவடிக்கன்மாசுணமெனவாங்குப்
புல்லுமச்சுதன்பொருக்கெனவவ்வுருநீங்கி
நல்லமுன்னுருப்பெற்றுமுன்னண்ணுபுபணிந்தான். (அஅ)

அட்டமூர்த்தியுமாகியவமலனேதெய்வ
மட்டுவார்குழன்மலைமகள்வருத்தசாபத்தா
லொட்டுமாசுணவுருவமுமுருக்குமும்மலமும்
விட்டுளேனிவண்மேவியவடிகளாலென்றான். (அகூ)

தேங்குதேமலராதிகள்செறிதரக்கொண்டு
பாங்கினாலிறைபூசனை பாந்தமோடியற்றி
யோங்குமாமறைத்துதிபலவுவந்தெடுத்துரைத்துத்
தாங்குகாதலிற்றட்டமிட்டாடினன்சால (௯0)

இற்றைநாளெனுமார்கழிச்சட்டியினெளியேற்
குற்றநீகலமுதவியசிறப்பினாலிதனின்
மற்றுமாண்டுகடொறுநினைவழிபடுவார்கட்
கற்றநீக்கிவேண்டியபொருளளித்தருளென்றான். (௯௧)

உரைத்தநல்வரமுதவிமாயனையுடன்கொண்டு
நிரைத்தபல்லளத்தோங்கியநெடுங்கயிலாய
மிரைத்துமுற்றியசேனையோடிம்மெனவடுத்து
விரைத்தகொன்றையார்பதம்பணிந்தனர்விநாயகரே. (௯௨)

விளங்குமெல்லிழைவிமலைதன்பாதமும்வணங்கி
யுளங்கொளன்பொடுமீண்டுமுன்போலவானுயர்ந்த
வளங்கொள்கோபுரவாய்தலின்மடங்கலாதனத்திற்
களங்கநீத்தவர்கருத்தமர்கணேசனாரமர்ந்தார். (௯௩)

எண்ணுவாருளக்கோயில்கொண்டருளுமேரம்பர்
வண்ணமாமலர்ச்சேவடிப்பூசனைவயக்கிப்
பண்ணினோடருமறைப்பொருள்பலவெடுத்தியம்பிக்
கண்ணனாதியோர்பணிந்திதுகட்டுரைத்திடுவார். (௯௪)

கொடியதானவன்முன்னர்யாங்குட்டணமாதி
படியின்மீமிசைபுரிந்தவன்பணிமிகப்புரிந்தா
முடிவிலாதவவ்வணக்கநின்முன்னினிப்புரிதுங்
கடிதராதவைவணக்கமாக்கைக்கொளல்வேண்டும். (௯௫)

எவருமித்தகுவணக்கநின்னை திருநவியற்றி
யவமெலாமறுத்தரும்பொருள்பெறல்வேண்டு
முவமையில்லவவெனவுரைத்தோம்புமவ்வணக்கந்
தவவிழைத்தனர்பெற்றனர்தக்கநல்வரங்கள். (௯௬)

மேயபூதர்கடமக்கெலாமிக்கருள்வழங்கி
மாயனாதியர்விடைகொளமலர்விழியுதவித்
தாயனானினிதிருந்தனன்றனதருள்வழுத்திப்
பேயனாகியவடியனும்பெற்றனன்மேன்மை (௯௭)

என்னநான்முகனியம்பலும்வியாதமாதவத்தோ
னன்றுதாழ்ந்துநின்றாம்பன்மாமுகத்தவன்யாரே
நன்றுதான்பெறும்வரமெவைநவிற்றுதியென்றான்
மன்றன்மாமலரோனவற்கெதிர்மொழிவழங்கும். (௯௮)

வேறு.

பண்டொருகாலத்துப்பாகசாதனனெழி
லண்டர்கள்புடைவரவடுத்தசுரேந்திரன்
மிண்டுளத்தருக்கறவெய்யபோராற்றிவென்
கண்டுமீண்டும்பரிற்காவல்செய்திருந்தனன். (௯௯)

இந்திரன்றனைவெலவெங்குலத்தாற்றல்சான்
மைந்தர்களொருவருமைவிலரேயென
நொந்தசுரேந்திரனுனித்தறிதன்குல
மந்திரிபதமலர்வணங்கிநின்றுரைசெய்வான். (௧00)

குரவனேயசுரர்கள்குலத்திடையிப்பொழு
தரவமல்கியகழலணிதரும்வீரருள்
வரமலியிந்திரன்வலிதெறுவாரிலை
யுரமலிந்தனனவனுடற்றலேமேயினன். (கoக)

நின்னருட்சூட்சியானிலைபெறுமென்குல
மின்னலுற்றழிவதோவெம்பிரானினியது
வுன்னருவளத்தொடுமோங்குமாறடியனேன்
மன்னுறச்செய்வகைவகுத்துரையென்றனன். (கo௨)

ஒள்ளியவறிவினுளோர்ந்துமேல்வருவதை
வெள்ளியென்பானவன்வியப்புறவுரைசெய்வான்
றெள்ளியவசிட்டனுந்திருமுனிமரபிடை
யுள்ளவன்மாகதனென்றொருமாதவன். (கo௩)

முத்தியையினிதுறமுன்னிநீள்கானிடைப்
பத்தியினருந்தவம்பயிற்றுபுவைகினு
னத்தவன்றனைவசமாக்கியோர்கன்னியை
மெத்திணைவிழைச்சினைவிளைக்குமாபணிமதி. (கo௪)

அன்னவள்வயிற்றினின்றமரர்கோன்வலிகெட
மன்னுநுங்குலமெலாம்வைகலும்வளம்பெறக்
கொன்னிபமுகத்தொருகுமரன்வந்திடுவனி
னின்னலுந்தபுமினியேகெனவிட்டனன். (கo௫)

ஈண்டியதுயரெலாமின்றுநீத்தேனென
வாண்டருள்குரவனையன்பொடுபோற்றுபு
மீண்டசுரேந்திரன்மிக்கெழுமகிழ்ச்சியின்
மாண்டதன்பதிவயின்வல்விரைந்தேகினான். (கo௬)

மிக்கநல்லெழிலுடைவிபுதையென்றொருமக
டக்கதன்குலத்திடைச்சார்ந்தமர்கன்னிபாற்
புக்கனன்றன்குறைபுகன்றனனவளிசைந்
தக்கணந்தவமுனியருகடுத்தாளரோ. (கoஎ)

வேறு.

அரியமெய்த்தவத்திடையார்ந்தசிந்தையின்
பெரியவன்பெற்றியைப்பெரிதுநோக்கினு
ளரிமகளாயடுத்தாலுமின்னவ
னுரிமைசெய்யானெனவுளத்திலெண்ணுவாள். (கo௮)

நான்வலிந்தணைவனேனுஞசெய்திடும்
வான்வளர்தவத்தினைமாற்றிமாதவன்
றன்வயமாகுறுன்றளர்ந்தநங்குலக்
கோன்வளர்மகிழ்ச்சியுங்கொள்ளவேண்டுமே. (கoகூ)

எண்ணியதெய்துநரிருந்தவத்தரே
திண்ணியவருந்தவச்செம்மனம்வயத்
தண்ணுதலருந்தவத்தன்றியின்றெனக்
கண்ணினள்கடந்தனள்கவலைவேலையே. (ககo)

மாகதனெனக்கொருமணாளனுகென
வேகவுள்ளத்தளாயீண்டும்வன்பசி
தாகமும்பொறுத்தொருசாரிருந்தெழிற்
றேகமும்வருந்துறச்செய்திட்டாடவம். (ககக)

மன்றலங்கூந்தலாள்வருக்குமாதவந்
தொன்றுசெயூழொடுமொத்துத்தன்னலா
லொன்றியதவத்தினின்றுள்ளநீங்கிட
நன்றுறுமுனிவரனயனம்விண்டனன். (கக௨)

ஆங்கொருமதகரியடுத்துப்பெண்ணொடு
நீங்கருங்கலவியைநிகழ்த்தக்கண்டனன்
றூங்கினன்மனத்திடைத்தக்ககாமநோய்
வீங்கினன்விளிகலாவிரகதாபமே. (ககங)

கருப்புவில்வாங்கியகாமன்வாளிக
ளுருப்பவுள்ளகந்தளர்ந்துயங்குமாதவன்
விருப்பினையறிந்தனள்விபுதையங்ஙனே
தருப்பொலிகொம்பெனமுன்னர்ச்சார்ந்தனள். (ககச)

இறும்பின்மூள்கனல்வளியெய்தயாவையுந்
தெறும்படியெழுவதுசிவணவுள்ளகத்
துறும்பெருங்காமமொண்டொடியைக்காண்டலுங்
குறும்புமிக்கிழைத்ததுகோதிலானுக்கே. (ககரு)

கன்னியோபிறன்மனைக்காதன்மங்கையோ
நின்னியல்யாதெனைநீயடுத்திடு
முன்னம்யாதுரையெனமுனிவிளுவலு
நன்னயமொழியினனங்கைகூறுவாள். (ககசா)

கன்னியேயடியனேன்கருணைமாதவ
நின்மனையாளெனநினக்குத்தொண்டுசெய்
நன்மையைவேண்டிநற்றவம்புரிந்துளே
னென்னியல்பொடுவரவினிதுதேரென்றாள். (ககஎ)

அருந்தவனருந்தவமான்றவாயிலாய்த்
திருந்திருவேமையுஞ்சேர்த்ததாலினி
வருந்துவதிலைப்பிடிவடிவங்கொள்கெனக்
கருந்தடங்கண்ணினள்கரேணுவாயினள். (ககஅ)

வேறு.

வெளிறறியாதசிந்தைவிழுத்தவனூறிற்பட்டுக்
களிறெனத்தோன்றிக்காதற்கலவிசெய்தொழியவாங்கே
யொளிறிருமருப்புநால்வாயுததியுண்டெழுந்தகொண்டற்
பிளிறொலிக்குரலினும்பன்முகத்தவன்பிறந்தானன்றே. (கககூ)

மடங்கலின்குருளைதாய்வன்வயிற்றினின்றுதிக்கும்போதே
கடங்கலுழ்கடவேழக்கணந்தபவெழுவதேபோ
லிடங்கொளும்புவியின்வந்தவிபமுகத்தவுணன்வையை
மடங்கலும்வாரியுண்ணுமறத்தொழில்கைக்கொண்டானே. (க௨0)

விதிர்த்தனன்பலகையொள்வாள்வெற்பினந்தாளினெற்றி
யுதிர்த்தனன்பூமியாகவோச்சியொண்கரத்தாலண்டம்
பொதிர்த்தனன்புணரியேழும்புக்கனன்கலக்கிவீரங்
கதிர்த்தனன்றிசைகள்பத்துங்கறங்கெனச்சுற்றினனே. (க௨க)

பிடித்தகைப்படையினேடும்பிடியெனநின்றபாவை
பொடித்தமெய்மயிர்கடோறும்பொலிந்தெரிதழற்கட்குஞ்சி
மடித்திதழ்தின்னும்பேழ்வாய்வயப்பெருவீரர்பல்லோர்
படித்தலம்வானுமஞ்சிப்பருவரத்தோன்றியார்த்தார். (க௨௨)

பார்த்தனன்மைந்தர்கோரப்படிவமெய்த்தவனுமஞ்சி
வேர்த்தனனஞ்சுகான்றவேலையுநல்லதென்ன
வார்த்தினனுலகுக்கெல்லாமழிதராத்துன்பமென்று
போர்த்தவுட்டெயரத்தியாற்புழுங்கியாற்றாதுனைந்தான். (௧௨௩)

மெல்லவேயறிவிற்றேறிமின்னிடைமாதைநோக்கிப்
புல்லியகுலம்விளைவிப்பொருக்கெனவவளைநீக்கிச்
சொல்லருந்தவத்தின்முன்போற்றாமுனியிருந்தானெண்ணம்
வல்லைமுற்றினமென்றந்தமாதுதன்பதியைச்சார்ந்தாள். (௧௨௪)

முட்டிருகோட்டுவேழமுகத்தவனெடுமுட்டின்றி
யொட்டியதறுகண்வீரருலகெலாந்திரிந்துமக்க
ளட்டொளிமோலித்தேவரனைத்தையுங்கொன்றுதின்று
கட்டழனுதவினாற்குக்கையிளைப்பாற்றல்செய்தார். (௧௨௫)

தருமங்கடானமீகைதண்ணருள்சீலம்வேதக்
கருமங்களாதியெந்தக்கருமமுமழிப்பத்தீயோர்
திருமங்கைபூமுன்னுனதிரிபுவனத்துந்தீர்ந்தே
யுருமங்கிமலர்ந்தசெம்பூவொன்றுமேயிடமாக்கொண்டாள். (௧௨௬)

சிறுவரைப்பொழுதினந்தத்தீயர்களிமையமேரு
வுறுவரையனையபீழையுயிர்களுக்கிழைத்துவைய
மிறுவரைநாளுமீதோவெனத்திரிந்துழலாநிற்ப
மறுவரையுறுதிகூறவந்தனன்மழைக்கோளோனே. (௧௨௭)

தங்குரைவிரிக்குமுன்னர்ச்சாடிவாய்மடுப்பனேவென்
றங்கெழுமச்சநெஞ்சத்தரும்பமுன்போந்தான்முன்னர்
நுங்குலத்தவர்கள்போற்றுநூலறிகுரவன்யானே
யிங்குனக்குறுதிகூறவெய்தினேன்மைந்தவென்றான். (௧௨௮)

மந்திரத்தலைவனுயுமறுவறுகுரவனுயு
முந்தியவமரரென்னமொழிந்திடுமேவுணர்க்காக்க
நந்தலேகுறிக்குந்தேவனவின்மொழிகேட்டவேழச்
சுந்தரமுகவன்றாழ்ந்துசொல்லினிச்சொல்வதென்றான். (௧௨௯)

வகைபடச்சூழ்ந்துவெள்ளிவானவனுரைப்பான்சீத
நகைமணிக்கோட்டுநால்வாய்நாகத்தின்முகங்கொண்டாய்க்குந்
தகைவளரவுணச்சாதித்தலைவர்களெவர்க்குமன்ற
பகைமுகையவிழுங்கற்பப்பசுந்தொடைவலாரிகண்டாய். (௧௩௰)

வரிகழற்கடவுட்கோமான்மற்றுநின்செய்திகேட்டு
விரிகடற்சேனையோடுமேவுறினென்னசெய்வா
யுரியநல்வரங்களாதியுற்றிலையதனுன்முக்கட்
பெரியவன்பாதமெண்ணிப்பேணுகதவத்தைப்பிள்ளாய். (௧௩௧)

கண்ணுதலருளுண்டாயிற்கடவுளரேவல்கேட்பா
ரெண்ணியவெண்ணியாங்கேயெய்துமெஞ்ஞான்றுமாக்கை
திண்ணியதாகிவைகுஞ்சிறுமைகளனைத்துந்தீருங்
கண்ணுவதினிவேறில்லைக்கடுகிடுதவத்துக்கென்றான். (௧௩௨)

இதந்தனக்குரைத்தவாசானிணையடிபணிந்துபோற்றி
மதந்தவழ்முகத்துச்செம்மன்மாதவத்தூக்கங்கொண்டு
கதந்தவழ்தம்பிமாராங்காளையர்சூழச்சென்றற்
புதந்தகுமேருப்பாங்கர்ப்பொருவருந்தவஞ்செய்தானே. (௧௩௩)

சகத்திரவருடம்வீழ்ந்தசருகினை நுகர்ந்துபின்னர்ச்
சகத்திரவருடந்தூநீர் தன்னையேபருகிப்பின்னர்ச்
சகத்திரவருடங்காற்றுத்தனை நுகர்ந்தொன்றுமின்றிச்
சகத்திரவருடம்யோகத்தண்ணமிழ்தருந்தினனே. (கடு௪)

நீற்றொளிபழுத்தமேனிநின்மலர்கருணைகூர்ந்து
தோற்றினரெதிரேநோற்குந்தோன்முகத்தவுணன்றாழ்ந்து
போற்றினனிறைவர்யாதுபுந்தியில்விழைந்தாய்வல்லே
சாற்றுதிதருதுமென்னத்தடங்கரங்குவித்துச்சொல்வான். (கடுரு)

வேறு.

உவணமுயர்த்தோனாதியுயர்திணையாலுருப்பெரிய
கவளமதகரியாதிகளாலுமெறும்பீறாகப்
பவமுறுபல்லஃறிணையாற்பகழிமுதற்படைகளினு
லுவமையிலாயெனக்கிறுதியொருநாளுமுறாதொழிக. (கடுசு)

வரமுதவுந்தேவர்முதல்வையகத்தாரெவர்களும்வந்
திரவுபகலெனதேவலியற்றிவழிபடவடியே
னரசுபுரிந்திடவேண்டுமடிகளருளாலிறுதி
விரைவினுமேலாயிருத்தல்வேண்டுமெனவிரந்திட்டான். (கடுஎ)

வேட்டவரங்கொடுத்தருளிவிமலர்கைலையையடைந்தா
ரீட்டமுறுந்தம்பியரோடிபமுகத்தோன்றவம்புரிந்த
கோட்டுயர்மேருவைநீத்தான்குறுகியசுரேந்திரனுந்
தீட்டுபுகழ்ச்சுக்கிரனுஞ்சென்றுமகிழ்ச்சியிற்கலந்தார். (கடுஅ)

மயனடுத்துப்பெருவளங்கண்மல்குமொருநகரிழைத்துப்
பெயர்மதங்கநகரென்றுபேசினனப்பதியமர்ந்து
கயமுகவன்மூன்றுலகங்கதுவுகொடுங்கோலோச்சிச்
சயமுறுவானவர்முதலோர்தாள்பணியவரசளித்தான். (கடுகூ)

நிதிகளுஞ்சிந்தாமணியுநெடுந்தருவுந்தேனுவுங்கற்
கதிருமிழுமணிமோலிக்கடவுளருமேனையரு
முதிர்பயமுள்ளகமலைப்பமுட்டாதுதினமேகி
யதிர்கழற்கால்பணிந்தேவலாற்றியிறுமாப்பழிந்தார். (க௬0)

சுக்கிரனுமவுணர்குலஞ்சூழுமவுணேந்திரனு
மொக்குமமைச்சர்களாகியுடங்கிருந்தார்தன்குலத்துந்
தக்கசுரர்தங்குலத்துஞ்சாருரகர்தங்குலத்து
மிக்கவெழிலார்பலவைவேட்டனன்மாமுகத்தவுணன். (க௬க)

அடுங்காலனுயிர்குடித்தவமலனருளியவரத்தா
னெடுங்காதநலைசிறப்பநிசாசரர்க்குப்பதியான
கொடுங்கோலன்றனையொருநாட்குரைகழற்றாளிணையிறைஞ்ச
வொடுங்கார்வத்தொடுமெடுத்தவும்பர்களைப்பார்த்துரைத்தான். ()

முட்டிபிடித்திருகரத்துமுடித்தலையின்மும்முறையே
குட்டியிருகையுமாறிக்குழைக்காதுதமைப்பற்றிச்
சட்டவிருந்தெழுந்திடுமின்றகும்வணக்கமெமக்கிதுவே
யொட்டுவதென்றான்றினமும்பர்களுமதுபுரிந்தார். (க௬௩)

தயாவகத்திற்சிறிதுமுறான்றகுமமரரேவல்கொளுங்
கயாசுரன்றோற்றமும்வரமுங்கட்டுரைத்தாமவன்றன்னை
வியாதமுனியேகருணைவிநாயகனார்பொருதழித்த
வுயர்வுறுகாதையுமுன்னருரைத்தனமென்றான்பிரமன். (க௬௪)

கணபதியென்றுலகேத்துங்கண்ணுதலாவதாரங்
குணமுறக்கேட்டனையன்றேகோதின்மகோற்கடரென்ன
வணவலுறுமையிரண்டாமவதாரங்கேளென்ன
மணமலிபங்கயத்தொடையன்மார்பன்வியாதனுக்குரைப்பான். ()

கணபதிதிருவவதாரப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - கஅசச.

## அ○ - வது மகோற்கடர்திருவவதாரப்படலம்.

பங்கயத்தடமும்பலபண்ணையுங்
கொங்குயிர்த்தகுளிர்பொழிற்சோலையு
மெங்குமல்கவெழில்வளமிக்குள
தங்கமென்றறையப்படுந்தேயமே. (க)

புலங்கொளத்தகுபுண்ணியநாட்டிடை
யிலங்குங்காத்திரமென்றொருமாநகர்
நலங்கொளங்நகர்நண்ணியவாழ்க்கையான்
றுலங்குமந்தணர்தொல்குலச்சார்பினுன். (உ)

ஏகனுலியம்பப்படுவேதமு
மாகமாதியுமாய்ந்துதெளிந்தவன்
போகமாதிப்பொருள்விழையாமையே
மாகர்போற்றமகம்புரிகின்றவன். (ங)

பூதிகண்மணிபூசியணிந்துகொண்
டாதிவந்தனையாற்றுமெய்ப்பத்தியான்
பேதியாதபெயரிரவுத்திர
கேதுவென்றுகிளந்திடப்பட்டோன். (ச)

தனக்குவாய்த்தவள்சாரதையென்பவ
ளினக்கனப்பெயலீட்டுமெய்க்கற்பினுள்
புனக்கிளிக்கிடர்பூட்டும்வனப்பினுண்
மனக்கிணங்கிவழிபடவாழுநாள். (ரு)

வேறு.

அரட்டுவல்வினைகள்காட்டுமாணவமலத்தைநாளும்
புரட்டுநன்னெறியினிற்கும்பூசுரனவனுக்கந்தப்
பரட்டடிமறையத்தூசுபண்பொடுமுடுப்பாள்பாங்க
ரிரட்டைமைந்தர்களோராங்கேயெய்தினர்கருப்பமுற்றி. (சு)

மைந்தர்களிருவர்மாட்டும்வகுக்குநல்வினைகளாற்றி
யந்தமில்கணிதர்க்கூவியடுத்தநாளாதியாய்ந்து
தந்தைபின்னவர்க்குத்தேவாந்தகனராந்தகனென்றிட்டான்
சுந்தரமறைகளோதுந்தொல்விதிபுரிந்துநாமம். (எ)

கடவுளர்பூசையாதிகடைப்பிடியாகக்கொண்டு
மடமறுகுரவனுளும்வகுத்திடவருந்தியீன்ற
தடமணிக்குவவுக்கொங்கைசாரதைமாட்டியூட்டி
யிடர்தபுத்தார்வந்தோன்றவினிதுறவளர்த்தல்செய்தாள். (அ)

கொழுந்திளந்திங்கள்போலுங்குமாருஞ்சின்னுளிட்ட
செழுந்துகிற்கிடக்கும்போதேதெவ்வுவாரெனவிண்பார்த்து
விழுந்தனைகவிழ்ந்துசின்னுள்விளங்குபாதலங்கொள்வார்போ
லழுந்தொலிப்புணரிசூழ்ந்தவசன்புவிநோக்கினுரே. (கூ)

இருந்தனரறங்களெல்லாமிரிந்திடவெழுந்தார்யார்க்கும்
வருந்தல்செய்மறங்களெல்லாம்வளர்ந்தெழநடந்தார்நல்லோர்ப்
பொருந்தியசெம்மையெல்லாம்புறங்கொண்டுநடப்பவீதித்
திருந்துமாட்டயர்ந்தாரெங்குஞ்செயிர்விளையாடமாதோ. (கο)

எள்ளருவீமகாயமெய்திருமைந்தர்தாமும்
பிள்ளைமைப்பருவத்தானேபெயர்த்தடியிடும்போதெல்லாந்
தள்ளருமதுகைச்சேடன்றரையொடுநெளியநின்று
ஞெள்ளியமுடிகடாக்கியுடுக்களுமுதிராநின்ற. (கக)

பிராயமாறடுப்பத்தந்தைபேணுபநயனமாற்றிப்
பராவுறுமறைகளாதிபலவுநன்றோதுவித்தான்
விராவியவிழைவாலன்னோர்விரிவுறத்தெளிந்தீன்றானும்
பொராவகைகலையின்செல்வம்பொலிந்தனர்வைகுநாளின். (கஉ)

இன்னிசைமுரலும்வீணையேந்தியமுனிவன்போதத்
துன்னினரடியிற்றாழ்ந்துதொழுதுமெல்லணையிலேற்றி
நன்னயமொழியாலேத்திநலத்தகுகுரவரானோர்
பின்னர்மைந்தரைத்தாழ்வித்துப்பெருகியவன்பிற்சொல்வார். (கங)

நாரணன்முதலோர்க்கெட்டாநம்பனார்நளினபாதந்
தாரணைசெய்தசிந்தைத்தவப்பெருமுனிவரேறே
பூரணவாயுள்செல்வம்புத்திரற்கெய்துமாறிங்
காரணமனையவாக்காலருளுகவென்றிரந்தார். (கச)

அடித்தலத்தினிதுவீழ்ந்தவார்வமைந்தரையத்தூயோன்
மடித்தலத்திருத்தியுச்சிமோந்துடல்வருடிக்கையாற்
படித்தலத்துய்த்துத்தெண்ணீர்படிவித்துத்தீக்கைசால
முடித்தெழுத்தைந்துமோதிகணித்திடுமுறையுங்கூறி. (கரு)

இம்மனுக்கணித்தல்செய்ம்மினெறிதிரைக்கங்கைவேணிச்
செம்மலினருளானின்னல்சேர்தராசித்தியெல்லா
நும்மைவந்தடுக்குந்தேவர்நும்மடிசார்வதன்றித்
தம்மடிநீயிர்சாராத்தகவுறுமென்றுபோனான். (கசு)

எத்திரவியமுமற்றுமிருந்தவத்தீட்டவெண்ணிப்
புத்திரரிருவர்தாமும்பூத்தவர்க்கறிவித்தன்னா
ருத்திரங்கொடுப்பவாங்கியொய்யெனநீங்கிச்சென்று
பத்திரமிடைந்தகோட்டுப்பசும்பொழிற்கானம்புக்கார். (கஎ)

நெடிபடுவனத்தினுப்பணைமேம்புனற்றடாகமொன்று
கடிமலரணிந்துகம்புகம்புளாதிகளுமோம்பி
முடிவறுவளத்தின்வைகமுன்னுவாரெதிரேநோக்கி
மடிவறுதவத்தையந்தவைப்பிருந்தாற்றினரால். (கஅ)

நெருங்கிளஞ்சோலைசூழ்ந்துநிறைந்தவச்செழுநீர்ப்பொய்கை
மருங்கமர்கோயிலுள்ளான்மன்னியசிவலிங்கத்தி
லொருங்கியவன்பானுளமொளிர்முகமைந்துகொண்ட
கருங்களத்திறைவர்பூசைதன்னையுங்கண்டுவந்தார். (ககூ)

மாயிரும்புவியினோர்தாள்வளர்பெருவிரலையூன்றி
மேயினபொறிகளைந்தும்விழுப்புலத்துறாமற்காத்துக்
காயிருந்தழனுற்பாலுங்கதுவறவிடையேநின்று
பாயினகிரணவென்றூழ்பார்த்தருந்தவஞ்சாதித்தார். (உο)

ஒருபொழுதன்னவுண்டியொராயிரமாண்டவ்வாறு
மருவியகந்தமூலம்வளரிலைகனிகாய்தூநீர்
சருகுமென்காலுமுண்டுதகுநிராகாரமாயு
மருமையினவர்களீரையாயிரமாண்டுநோற்ப. (உக)

அருட்பெருங்கடலாயுள்ளானன்னவர்க்கருளிச்செய்யத்
தெருட்பெருங்கணங்கள்சூழத்தேவர்கண்முனிவர்போற்ற
மருட்பெருமலத்தைத்தேய்க்குமாதுமையிடத்தளாக
வெருட்பெருங்கோட்டுப்பைங்கண்விடைமிசையெதிரேநின்றார். ()

கட்டழகெறிக்குநீலகண்டமும்வதனமைந்தும்
விட்டொளிதருமூவைந்துவிழிகளுங்கரங்கள்பத்தும்
வட்டவண்சடையிற்கீற்றுமதியமுமற்றுந்தங்க
ளுட்டகத்தியானித்தாங்கேயுற்றநாதரைநேர்கண்டார். (உ௩)

வாருறுபனையேபோலமலரடித்தலத்தினேரே
பாருறவிழுந்தெழுந்துபன்முறைசூழ்ந்துநின்று
நீருறுகண்ணராகிநெக்குநெக்குருகிச்சாலச்
சீருறுசாமவேதச்செழுந்துதிபாடினாரே. (உ௪)

வரம்பிலன்புடையார்தம்மைமடைதிறந்தொழுகுமின்ப
நிரம்பியகருணைவெள்ளநீடியவிழியானோக்கிப்
பரம்பரனீயிர்வேட்டபயனுறுவரமியாதென்ன
வுரம்பயின்மனத்திற்றெள்ளியிருவருமுரைக்கலுற்றார். (உ௫)

இருவகைப்பொழுதினானுமிருவகைத்திணையினானு
மிருவகைப்படையினானுமெங்களுக்கிறின்றாக
வொருவனேவிண்டுவேதனும்பர்முன்னானோரெல்லா
மருவியெம்மேவல்கேட்கும்வாழ்க்கையுண்டாகவென்றார். (உ௬)

வெறிவளர்கொன்றைவேய்ந்தவிமலனாரவரைநோக்கி
நெறியருள்கணேசர்கையாலல்லதுநீயிரென்று
மறிவதுபெறுதலில்லைமற்றையவரமுந்தந்தா
மறிமினென்றருளித்தெய்வப்படைகளுமளித்துப்போனார். (உ௭)

கருதியவரங்கள்பெற்றுக்கரையறுமகிழ்ச்சிபெற்றோ
ரிருவருநகரினெய்தியிருமுதுகுரவர்ப்போற்றிப்
பெருவரம்பெற்றதோதிப்பெட்பொடுஞ்சிலநாள்வைகி
யுருவமுச்சகமுங்கொண்மாருளத்திடையூக்கங்கொண்டார். (உ அ)

வேறு.

தாவாவளத்துத்திதிவாரந்தக்கநாளுநல்லனவாய்
மேவாநின்றவொருதினத்தவிடியற்புரியுங்கடன்முடித்து
மாவானறுநெய்கண்ணடியுநோக்கிமறையோர்க்கினிதளித்துத்
தேவாந்தகன்பினராந்தகன்றன்வதனநோக்கிச்செப்புவான். (உ௯)

எம்பியினிநீபாதலமுமெறிநீர்ப்புவியுந்தாட்படுத்து
வம்பிலரசுபுரிமதிநான்வானாடனைத்துந்தாட்படுத்திட்
டும்பர்பணிகொண்டிடுவலெனவுரைத்துக்குரவர்விடைபெற்றுக்
கொம்பினிடையம்பிகைபாகர்குரைபூங்கழற்றாணினைந்தெழுந்தான். (௩0)

தனியேநெடுவானிடையேகிச்சார்ந்துதுறக்கப்புறநகரிற்
கனியேய்கற்பநறும்பொழிலைக்கரத்தாற்காலாலெறிந்துதைத்து
நனிபாழ்படுத்தானதுநோக்கிநாகத்திறைக்குச்சிலரோடி
யினியோரவுணன்றருவனத்தையிறுக்கின்றானென்றுரைசெய்தார். (௩௧)

வானைத்தடந்தோளினிதேந்துமகவான்கேட்டுமறமிகுந்து
சேனைத்தலைவர்தமைக்கூவித்தீயோனொருவன்கற்பகப்பூங்
கானைத்தெறுகின்றானவனைக்கைக்கொண்டிங்குவருமின்கள்
யானைத்தடந்தாட்படுத்துமெனவிசைத்தானவருமேகினர். (௩௨)

செழிவான்வனத்தையழிக்கின்றதேவாந்தகனைப்படைத்தலைவ
ரழியாமதுகைப்படையோடுமாற்றவளைந்துசமர்விளைத்தார்
கழிபேராற்றற்றானவனுங்கனன்றுசமரேற்றருவிமதம்
பொழிமானினத்துத்தனிமடங்கல்புகுந்தாலெனப்புக்குழக்கினன். (௩௩)

பெரியவிமானத்தாலவற்றைப்பேணுமிரதத்தாலவற்றைக்
கரியினாலன்னவைதம்மைக்கவனப்புரவியாலவற்றை
யுரியதானையாலவற்றையொண்கைத்தலத்தாலெடுத்தெறிந்து
நெரியவடியினாலுதைத்துநெருப்பின்விழித்துநெட்டுயிர்த்தும். (௩௪)

ஆர்த்துநகைத்துங்குனித்தும்வலியணிதோள்பெயர்த்துமுலாய்நிமிர்ந்தும்
கூர்த்தவமரர்படைமுழுதுங்கொன்றுகுவித்தானதுதெரிந்து
கார்த்தமழைவாகனமூருங்கண்ணாயிரத்தோன்மறங்கடவச்
சீர்த்தவயிராபதத்தேறிச்சேனையொடும்போய்க்களத்தடுத்தான். (௩௫)

முற்றாவிளமென்முலைமாதர்முயங்கவலிதினடுத்தாங்கே
வற்றாவன்பின்காளையர்க்குவளரும்பெரியகாமமென
வுற்றாடமரினெதிர்நின்றவும்பர்க்கிறையைநோக்குதலும்
பற்றாநின்றசினக்கனலிபடரவவுணனிடங்கழித்தான். (௩௬)

பருவில்வளைத்துக்கணையொன்றுபத்துநூறாயிரமேலு
மருவத்தொடுத்துக்கணமொன்றின்மகவானுடன்வந்தமரேற்ற
கருவியமரர்தனைக்கொன்றான்கண்டுவெலாரிகளிறுந்தி
யுருவக்குலிசத்தாலவுணனுரத்தினிடிபோலோச்சினன். (௩௭)

ஆம்பன்மலர்த்தாள்பாறைமிசையறைந்தாங்கெறிவச்சிரஞ்சிதற
வாம்பல்குனிந்துபாய்ந்தலவையகன்றமார்பினழுத்துமுன
மாம்பல்பலவாமெனுந்தானையமரர்கோனைவச்சிரம்போ
லாம்பல்கழலக்கவுட்புடைத்தானவுணனிலம்வீழ்ந்தவன்சோர்ந்தான். (௩௮)

சோர்ந்தமகவானுணர்வெய்தித்துண்ணென்றெழுந்துகரந்தோடிச்
சார்ந்துகனகவரைமுழையிற்றவத்தினிருந்தான்வானோரு
மார்ந்தவன்பின்புலோமிசையுமஞ்சியவரும்போயந்த
வார்ந்தமலையிற்கவன்றிருந்தார்வானுடனைத்துங்கலங்கினவே, (௩௯)

வெற்றிமுரசமிகமுழக்கிவென்றிவளர்தேவாந்தகன்பின்
பொற்றகளிற்றினுலாப்போந்துபொலிந்தசுதன்மையரியணையி
னொற்றைமதிவெண்குடைநிழற்றவொளிர்சாமரைகண்மருங்கிரட்டப்
பற்றுமிமையார்பணிந்தேத்தப்பண்போடரசுவீற்றிருந்தான். (௪0)

கண்ணாயிரத்தான்காவலினுங்காவல்புரிந்துநுமைக்காப்பே
னண்ணாதெனவேயெனையுன்னிநலிதலொழிமினெனமுரசின்
விண்ணாடனைத்துங்களிதூங்கவிளம்பியடுத்தவிமையார்க்குத்
தண்ணாதளிசெய்தடாதவர்க்குத்தழல்போன்மறஞ்செய்திருந்தானே. (௪௧)

படைகொண்டெதிர்ந்துபொருதுடைந்துபறைந்தசுரரேதுயர்கூர
நடைகொண்டிருந்தகுடியினரைநாளும்புரந்துமகிழ்பெருக்கிப்
புடைகொண்டொழுகுமவுணரையும்போற்றியதிகாரமுங்கொடுத்து
விடைகொண்டிருந்தகொடியார்தமெய்ம்மைவரத்தைவிளக்கினன். (௪௨)

அஞர்த்திண்படையேந்தியதேவாந்தகன்மாலயனோடுருஞ்சமரை
யுஞற்றிப்புகுந்தானதுமுன்னருணர்ந்துகரந்தாரவர்வளங்கள்
கஞற்றுமிருவருலகினையுங்காக்கவவுணர்தமைநிறுவி
மிஞிற்றுக்கணஞ்சேராக்கற்பவியன்பொன்னுலகமீண்டடுத்தான். (௪௩)

துறக்கவரைப்பேதனக்கிடமாய்ச்சூழ்ந்துதேவாந்தகனரசு
சிறக்கப்புரிந்தங்கினிதிருந்தான்றிறஞ்சால்கருத்துநராந்தகனு
நிறக்குங்கதிர்வேலொடுமெதிர்ந்தநிருபர்தமையனுலகிற்
பிறக்கும்படிசெய்திறைஞ்சுநரைப்பேணியவனிதாட்படுத்தான். (௪௪)

வென்றிவளருமவுணரெலாமேவிவணங்கவுடன்கொண்டு
பின்றைநெடும்பாதலத்தடுத்தான்பிறங்குமவுணர்மாயையினு
லொன்றுங்கருடன்வடிவினராயுரகக்குழுவையெடுத்துண்டார்
நன்றுவணங்கியுயர்சேடனல்லபொருள்கள்பலகொடுத்தான். (௪௫)

இறுத்தபொருள்கடனையெடுத்தலின்றிவளர்சேடனைச்சிறையி
லுறுத்திச்சூறையாட்டயர்ந்தவ்வுலகாளுதற்கோரவுணனைத்தா
னிறுத்திப்புவியின்மீண்டடுத்துநிறைமாதவத்தோராதியரைக்
கறுத்துச்சுரர்கட்கவியுணவுகாட்டாதவர்க்குச்சிறைவைத்தான். (௪௬)

வையமுழுதுமிவ்வாறுவயஞ்செய்தாளுமிருவருக்கும்
பொய்யிலிரவுத்திரகேதுபுந்திமகிழ்ந்துதன்குலத்தி
னையுமிடையார்தமைமன்றனலத்தாற்புணர்த்தானவர்ப்புணர்ந்து
வெய்யகுமரர்தமைப்பயந்துமிக்கபோகத்தொடும்வாழ்ந்தார். (௪௭)

கொடுங்கோலவுணர்கிளைதுவன்றக்குழைந்துசுரர்கள்கிளைமெலிய
நெடுங்காலங்களிவரசுநிகழ்த்தத்திதியுள்ளகமகிழ்ந்தாள்
படுங்காரியத்தையறிந்ததிதிபரிவுகூர்ந்துதனதுள்ள
மொடுங்காநின்றுகசியபரையுற்றுவணங்கியுரைசெய்வாள். (௪௮)

வேறு.

என்னுடையநாயகனேநின்கருணையாலடியேனீன்றுவைத்த
பொன்னுலகிந்திரனாதியமரரெலாந்துயர்கூரப்புன்மைசெய்து
மன்னியதேவாந்தகனைநராந்தகனைகொன்றும்பர்வருத்தந்தீர்ப்பக்
கொன்னும்வலியுடையவொருகுமரனையின்றென்பாங்கர்க்கொடுக்கவென்றாள். (௪௯)

இரந்தெதிர்நின்றவண்முகத்தையிருடியெனுங்கசியபர்தாமினிதுநோக்கி
வரந்தமக்குமுன்கொடுத்தவிநாயகர்தந்திருவருளுமதித்துச்சொல்வா
ருரந்தகுதேவாந்தகனுநராந்தகனுமொருவரினுமுலையாப்பேறு
பரந்தபெரும்புனல்காத்தபடர்சடையார்திருவருளாற்பற்றினூரால். (௫௦)

வனிதையர்கடிலதமெனவயங்குமணங்கேயதனுன்மலஞ்சேராவி
புனிதமுறவைந்தொழிலும்புரிபவராய்ப்பரப்பிரமப்பொருளாயென்றுந்
தனிமுதல்வராய்மேலாந்தத்துவராய்நித்தியராய்சார்ந்தோர்க்கெல்லா
மினிமைமிகுபதமருளும்பசுபதியாயிருக்கின்றவீசர்தாமே. (௫௧)

அல்லன்மிகுந்துயர்க்கடலினழுந்தியிடுநம்போல்வார்க்கவற்றினீக்கி
மல்லனெடுங்கரையருளிவேட்டவரங்கொடுத்தருளவரம்பிலாத
நல்லபெருங்கருணையினல்விநாயகரென்றொருபெரியநாமந்தாங்கிப்
புல்லுயிருங்கதிசேரக்கெஜானனராயிருக்கின்றார்பூவையன்னாய். (௫௨)

அந்தவெழிற்கணபதியேநமக்கொருபுத்திரனாகவடுப்பினல்லாற்
சிந்தையின்மன்னியநினதுதெருமரலைத்தீர்த்துவகைசெறிக்கவல்லா
ரெந்தவுலகந்தனினுமில்லையினிமேற்றவங்களீண்டவாற்றி
வந்துபிறப்பினுமொருவராலவர்கண்மாய்ப்பரியர்வளர்பூங்கோதாய். (௫௩)

'அருமறையாகமமளவையாதிகளாலறிவரியவமலர்தாமே
யொருமதலையாய்நமக்கிங்குறுமாறுமுரைப்பவினியுவந்துகேளாய்
மருவலுறுவார்மருவமதிக்குமனமவருளத்தைமருவிக்கொள்ளுங்
கருணைமிகும்பெருந்தலைவராதலினாலவர்மலர்த்தாட்கமலம்பேணி. (ருச)

எந்தைபிரான்மந்திரமுங்கணித்திரும்பூசனைசெயினவ்விறைவர்சேயாய்
வந்தருளுவாரிந்தவழிபாட்டைநீபுரிதிமடநல்லாயென்
றைந்தெழுத்தைப்பிரணவபல்லவத்தொடுநமோந்தமுறவமைத்துக்கூறிப்
புந்தியுறுபாவனையுரியாசமுமற்றனைத்தினையும்புகன்றான்றே. (ருரு)

கேட்டருமாதவன்கொடுத்தகணேசரவர்திருநாமமனுவைநன்று
கேட்டவள்வானமுதுமிகப்பசித்தவன்பெற்றாங்குவகைகிளர்ந்துபொங்க
வாட்டமனைத்தையுந்தணித்துவிடைகொண்டுபுறத்தேகிவனத்துநண்ணி
யாட்டுவிக்கும்பொறியடக்கியனுட்டிப்பினொடுங்கணித்தாளாண்டுநூறு. ()

வாடிமாதவம்புரியுமடவரலுக்குளமிரங்கிவரதராங்குக்
கோடிசூரியருதையங்குருட்டிருளாம்பேரொளியுங்குளிர்ந்தமுத்த
நீடிவார்மாலிகையுந்தசபுயமுநிலவியகத்தூரிப்பொட்டுஞ்
சூடிவேணியினொளிருமிளமதியுமடங்கலுமுன்றோற்றினின்றார். (ருஎ)

திண்மையாகியதவங்கள்புரிகின்றமாததிதிதேவனிற்பப்
பெண்மையான்மிகப்பயந்துவிழித்தவிழியினைமீட்டும்பெரிதுமூடி
யெண்மையேற்கினிச்சாந்தவுருவினையாய்க்காட்சிதரலென்றாள்கேட்ட
வுண்மைநாயகன்மகிழ்ந்தவுளத்தோடுஞ்சாந்தவுருவுடையனானன். (ருஅ)

கண்ணாரத்திருவுருவின்வனப்பனைத்துமெதிர்நோக்கிக்களித்துத்தெய்வப்
பெண்ணனவதிதியடிபணிந்தெழுந்துவலஞ்சூழ்ந்துபெரிதுமேத்தித்
தண்ணார்வெண்மதிமிலைத்ததயாநிதியைக்கலாநிதியைச்சார்ந்தோர்க்கன்றி
நண்ணுதபொறியிலர்க்குளிடர்துமியாநாயகத்தைநயந்துசொல்வாள். (ருகூ)

ஒழுக்கநெறிபிழையாதமறையவரும்பர்கண்முதலோரொடுங்கவென்று
மிழுக்குநெறிபிழையாதவரக்கர்தயித்தியர்முதலோரீண்டவுள்ளத்
தழுக்கினரசாட்சிபுரிநராந்தகன்றேவாந்தகனையடர்த்துத்துன்ப
முழுக்கவொழித்திடவெனக்குநீயொருபுத்திரனாகமுகிழ்க்கவென்றாள். (சூ0)

மதிமிலைத்தகணேசரவள்வேட்டவரங்கொடுத்தருளிமறைந்தாரிப்பா
லதிதிதனதிரும்பதியினடுத்துரியகணவனடியன்பிற்றாழ்ந்து
பதியெவர்க்குமானபராபரன்கொடுத்தவரம்பகர்ந்துபாரின்வான
நிதிவரப்பெற்றவர்போன்றுநித்தலும்பூசனைபுரிந்துநினைந்துவந்தாள். (சூக)

வேறு

அன்னணமதிதியங்கமர்ந்துவைகுநாண்
மன்னியமறைநெறிவழுக்கப்பூமக
டுன்னியதுட்டரைச்சுமத்தலாற்றல
ளின்னலுற்றெய்தினளேமமால்வரை. (சூஉ)

வடவரைவிடர்களேமனைகளாம்வகை
கடவுளர்குழுவொடுங்கரந்துவைகிய
வடர்செழுந்தகட்டிதழம்புயத்தனைத்
துடர்பெரும்பத்தியாற்றுன்னித்தாழ்ந்தனள். (சூரு)

மறைவழியொழுகுநர்மாட்டுறுதறச்
சிறையிலார்த்தார்க்குந்தென்றிசையினந்தகன்
முறையொடுமுரணுதன்முடிக்குமந்தக
ரிறைமைகொண்டிருத்தலிற்றுட்டரீண்டினர். (சூச)

துட்டர்கடமையினிச்சுமத்தலாற்றிலே
னட்டவர்தமையெனையளிப்பினல்லதை
யெட்டனைப்பொழுதும்வாழ்ந்திருக்கிலேன்றுயர்
பட்டிரும்பாதலம்பாறிவீழ்குவேன். (௬௫)

காசினிமகளிதுகரையநான்முகத்
தேசினனவடெருமரலினீங்கிய
வீசினன்விழியருள்வெருவனீயெனப்
பேசினன்விநாயகர்பாதம்பேணினன். (௬௬)

சுரரொடுபூசனைதொடுத்துமெய்ப்பொருள்
விரவியதோத்திரம்விளம்பிநான்முகன்
பரவுழிக்கசியபன்பாலனுய்வரும்
வரதனென்றெருமொழிவானிற்பூத்ததே. (௬௭)

கேட்டியேவிநாயகன்கிளைத்ததுட்டரை
வீட்டியவருமெனவிண்மொழிந்ததை
யீட்டுயிர்த்தொகைசுமந்திருத்திசில்பகல்
வாட்டநன்றறுமெனமாதைப்போக்கினன். (௬௮)

மண்மகணன்றெனவணங்கிநீங்கினு
ளெண்மலர்க்கண்ணினனீண்டுந்தேவரோ
டுண்மலிதரத்தவமுனுற்றிவைகினன்
றண்மதிமிலைத்தவர்சரணநாடியே. (௬௯)

நித்தலும்வழிபடுநியமம்பூண்டம
ருத்தமியதிதியாங்கொருதினந்தனி
லத்தனைத்தனதுளத்தாக்கிப்போற்றவவ்
வித்தகவிநாயகன்வெளிநின்றனரோ. (௭0)

வேறு.

முடிகளாயிரம்வாணுதலாயிரமுகங்களாயிரமேதங்
கடிகணுயிரஞ்செவிகளாயிரங்கனிவாய்களாயிரந்தோள்கை
யடிகளாயிரந்துடைகளாயிரநாசிகளாயிரமணிமுற்றும்
படியுமேனையவடிவமும்வேறுவேறுயிரம்படத்தோற்றி. (௭௧)

சேந்தகைதொறும்படையுங்கத்தூரியுந்திலதமும்வரைமார்பி
னேந்துகின்றசிக்தாமணிமாலையோடிணங்கியபணிப்பூணும்
வாய்ந்தமெய்யுருச்சோதியுஞ்சிங்கவாகனமுமற்றணியுங்கொண்
டாய்ந்தவெண்மதிக்கண்ணியார்நின்றமையதிதிகண்ணுறக்கண்டாள். (௭௨)

விரைந்திருக்கைநின்றெழுந்தனள்பணிந்தனள்மேன்மேல்வலஞ்சூழ்ந்தாள்
கரைந்துநெஞ்சுகப்பழிச்சினளவரவர்கண்டபல்கருமங்கள்
வரைந்துமெய்ப்பயன்வழங்கருள்வள்ளலேவரமுனமடியேற்கு
நிரைந்ததுன்பறவளித்தியன்றேயதுநீயினிமுடியென்றாள். (௭௩)

கொடுத்தமெய்வரமுடிக்கவேயித்தகுகோலமெய்யுருவோடு
மடுத்துளாமெனவமலனுர்கூறினுரதிதிகேட்டடிகேளோர்
தொடுத்தவிப்பெருவடிவொடுமெனக்கொருதோன்றலாய்வந்தாயே
லெடுத்தென்கைகளாலெம்மனம்வளர்க்குவலியைந்திடாதுலகோர்க்கும். ()

உலகத்தாரவர்போலவேயடியனுமுனைக்கரதலத்தேந்தி
யிலகத்தேம்புனலாட்டிமென்குங்குமமெழுதியமுலைக்கச்சு
விலகத்தீம்பயமூட்டுபுவளர்த்திடமெல்லுருமழவாகிக்
கலகத்தாலுயரவுணர்கள்குலமறக்கருணையின்வளர்கென்றாள். (௭௫)

கற்றைவார்குழலதிதிமெய்க்காதலைக்கரிசறநிறைவிப்பா
னற்றைநாட்பிறந்திடுமெழப்போன்மழவாயதுதனக்கேற்பப்
பற்றிலாதவராழுதனரவர்திருப்பவளவாயிசைகேட்ட
வற்றலாகியமரங்களுந்தளிர்த்தனமலடியுங்கருவானாள். (எசு)

மந்தமாருதந்தவழ்ந்ததுமறுவின்றிவயங்கியதகல்வானஞ்
சந்தவேள்வியந்தழல்வலஞ்சுழித்ததுதண்புனறெளிவுற்ற
தந்தில்வானவர்வலப்புறத்தோளொடுமலர்விழிதுடித்திட்ட
முந்துதானவர்க்குறத்துடித்தனவிடமொய்ம்பொடுவிழியம்மா. (எஎ)

திங்களொன்பதும்வயிற்றிடைத்தாங்கியேதிருத்தகவுயிர்த்தாள்போற்
றங்குமைந்தனையார்வமுமகிழ்ச்சியுந்தலைக்கொளக்கரத்தேந்திக்
கொங்கைவிம்மிநின்றூறுபாலூட்டினள்குறையெலாந்தவிர்த்திட்டா
ளங்கண்வையகமதிதியென்றேத்தியவமரர்கணற்றாயே. (எஅ)

மாதவம்புரிகசியபமுனிவரன்மகிழ்ந்துதன்மகனார்க்குச்
சாதகன்மநன்றிழைத்தரியாதியோர்தமக்கெலாமேலான
நாதனென்றுபின்மகோற்கடரெனும்பெயர்நாட்டினனுயிர்க்கெல்லாங்
காதரம்புகாமகோற்கடர்வளர்ந்தனர்கலையிளம்பிறைபோல. (எகு)

வேறு.

கரத்திடைவீணையேந்துங்கடவுளர்முனிவன்கூற
வரத்துயர்வசிட்டர்வாமதேவருமற்றுளோரும்
பரத்தினையுற்றார்போலப்படர்பெருமகிழ்ச்சிபொங்கச்
சிரத்தையிற்காணப்போந்தார்திங்களோரிரண்டின்மாதோ. (அ0)

வரவெதிரேற்றுநின்றுகசியபர்மகிழ்ச்சிபூப்ப
விரவினரளவளாவிமேவியமுனிவரெல்லாம்
வரமருளிறைவரானமகோற்கடர்பாதந்தாழ்ந்தார்
கரவறுவசிட்டர்பின்னர்கசியபற்குரைக்கலுற்றார். (அக)

இலக்கணமுழுதும்வாய்ந்தவிலக்கவையவமெண்ணுன்கு
மலக்குறும்பறுக்குமிந்தமகோற்கடர்க்கதனுலிந்த
விலக்கருமதுகைமைந்தன்விச்சுவாதிகனேயாகுங்
கலக்கஞருழக்குநம்மினொருவனுக்கருதொணாதே. (அஉ)

வேறு.

கோட்டம்புரியுங்கோலினரைக்கோணையவுணர்குலத்தோடு
வாட்டம்புரிந்துசுரர்முனிவர்மகிழமறையின்முறையுலகி
னூட்டநினக்குமகனாகயந்தோரவதாரஞ்செய்தார்
தீட்டற்கரியபெரும்புகழோய்தேவியொடுநீபுரிதவத்தால். (அங)

தேவாந்தகனுநராந்தகனுந்தெவ்வென்றறிந்தேயிவர்தமக்கிங்
கோவாதிடரேபுரிவார்களுலகுக்குறும்விக்கினமுழுதுங்
காவாநிற்குமிவரையதுகதுவாதேனுநீமுயற்சி
அவாதிவரையோம்புகமுச்சகமுமோம்பல்குறித்தென்றான். (அச)

சார்ந்தவசிட்டர்முதலோர்க்குத்தக்கசிறப்பால்விருந்தியற்றி
யார்ந்தபெருமைக்கசியபர்தாமாங்கக்களித்தாரவரெல்லாங்
கூர்ந்தவிழைவால்விடைபெற்றுக்குறுகினார்தத்தமதிருக்கை
யீர்ந்தண்கருணைமகோற்கடருமினிதுநாளும்வளர்கின்றார். (அரு)

வேறு.

அண்ணலார்தமக்கங்காயுளாண்டொன்றுமுற்றாமுன்ன
நண்ணியவாலமன்னநராந்தகனரசுசெய்யுங்
கண்ணகனகரினெய்த்தோர்பொழிந்ததுகறுத்துமேகம்
விண்ணிடைவான்மீனுதிவிகற்பமுந்தோன்றாநின்ற. (அசு)

நகந்தனைமருட்டுநெஞ்சினராந்தகன்கணிதர்க்கூவி
நிகழ்ந்தனவுற்பாதங்கணீயிருமறிதிரென்றே
திகழ்ந்தனவிவற்றிற்கேதுசெப்புகவென்றான்மம்மர்
கதழ்ந்ததம்மனத்துத்தெள்ளியவரவற்குரைக்கலுற்றார். (௮௭)

உள்ளவாறுரைப்போமென்றாலுள்ளகம்வெருவாநின்ற
வள்ளலேநினக்குக்கோபம்வருமெனவெண்ணியென்றார்
தெள்ளுநீரறிந்தீருள்ளசெய்தியேகூறுகென்ன
நள்ளலார்க்கிடியேறென்னநராந்தகன்பணிவிற்சொன்னான். (௮௮)

கணிதர்களுரைப்பார்நோற்றகசியபர்மருங்குநம்மைப்
பிணிசெயும்பிள்ளையொன்றுபிறந்தினிவளராநின்ற
தணிசெயவ்வேதுத்தன்னாலழிவுதப்பாதுகாட்டுந்
தணிவிலுற்பாதமெல்லாந்தழைத்தனவீங்கென்றாரே. (௮௯)

(திருவிளையாடல்)

நல்லனபுரிந்துவாழாநராந்தகனினைப்பானும்போய்
மெல்லினமகவைக்கோறல்வீரமன்றிதுவாழப்
புல்லலுமரியதாகும்புகலெதுவென்றுதெள்ளிக்
கொல்லியவிரைசையென்னுமரக்கியைக்கூவிவிட்டான். (௯௦)

கருகியநிறமுஞ்செங்கேழ்கனலுமிழ்விழியுஞ்செய்ய
வுருகெழுமயிரும்பத்தியோசனையுயர்ந்தவாக்கை
மருவியவயுதவேழவலியும்வாங்கெயிறுங்கொண்ட
வருளறுமரக்கிசென்றாளருந்தவமாதுபோல. (௯௧)

கமழ்புனலாடச்சென்றான்கசியபனதியாங்கு
விமலனுக்கினியபூசைவிளைத்திடும்பணியினின்றா
டமரினுள்ளவள்போற்சார்ந்ததறுகணிதனிமைகண்டே
யமலனையெடுத்துவாய்ப்பெய்தகட்டிடைப்புகுத்திமீண்டாள். (௯௨)

விழுங்கிடப்பட்டபிள்ளைமேவியங்கிருந்தவாறே
செழுங்கனனுதற்கண்சற்றேதிறந்தனர்வடவைதாக்க
வெழுங்கருவெப்பஞ்சாயவீண்டியதாகநோயா
லொழுங்கியவோடையாதியொண்புனன்முழுதுமுண்டாள். (௯௩)

பொங்கியமடுநீராதிபுலரவாய்மடுத்துந்தாக
மங்குதலின்மையாலம்மடமைசேரரக்கிவானிற்
கங்கையுமுண்ணவெண்ணியெழுந்தனள்கருணைநாத
ரெங்கினிப்போவதென்றங்கிருத்தினர்சிறுமென்றாளால். (௯௪)

இராவணனெடுக்கப்பட்டவிருங்கயிலாயவெற்புப்
பராபரன்பதத்தாலூன்றப்பதைப்பறவிருந்தாலென்ன
வராவகட்டசைத்தநாதனடித்தலத்தூன்றலோடுந்
தராதலத்திருந்தாண்மும்மைச்சகமும்வாய்மடுக்கத்தக்காள். (௯௫)

ஊன்றுதாள்விரலினெற்றியொள்ளுகிருதரம்போழ
மான்றுயிரேகவீழ்ந்தமாதராளகத்தினின்று
நான்றவாய்மடுத்தவேழநங்கையோர்பாகர்கீறித்
தோன்றினாலென்னவெங்கள்சுமுகனார்வெளிக்கொண்டாரே. (௯௬)

ஆயவப்பொழுதுநாதற்காற்றுமெய்ப்பணிகண்முற்றித்
தாயவணோக்கிக்காணாடளர்ந்துதன்கணவனோடு
காயழற்சுரமுங்கானுங்கடுவெளிபிறவுந்தேடி
மாயவல்லரக்கிமார்பின்வதிமகனாரைக்கண்டாள். (௯௭)

அஞ்சினண்முன்னர்ப்பின்னரதிசயத்துடனேயோகை
நெஞ்சுறக்கொண்டாள்வல்லேநின்மலமகனைக்கொண்டு
மஞ்சனமாட்டிமெய்யின் மருவியசோரிமண்ணி
விஞ்செழின்மனையிற்புக்குவிளைத்தனள்சாந்தியாதி. (௯௮)

கொடுமைமிக்குடையாளேனுங்கொல்லவாய்மடுத்தாளேனு
நெடுகுடலரக்கிமூவாநிருமலனுருவங்கண்ணிற்
படுதலினானுஞ்சாலப்பரிசித்தலானுமன்றே
யடுமலமூன்றுநீங்கவருட்பெருவீடுசேர்ந்தாள். (௯௯)

வேறு.

விரைவசமடிந்தமையறிந்துவேந்தனழைத்தினிதேவ
வுரைசெயுமீராண்டிடையேவுதத்தன்றுந்துபியிருவர்
வரைசெய்மணிதிணிதோளார்மாயையினின்மிகப்பெரியார்
தரைசெய்மறப்பயனனையார்தத்தைகளாய்ச்சார்ந்தனரால். (௧௦௦)

கிள்ளையெனவடுத்தவர்கள்கிளரெழிலாச்சிரமத்துக்
கள்ளொழுகுமரத்திருப்பார்கண்ணசன்முன்றிலினணைவார்
மெள்ளவெயிலுணங்கலுறும்விரீகியினைக்கொறித்திடுவார்
தள்ளரியவிழைவரும்பத்தணவாதுசரித்தனரால். (௧௦௧)

மட்டொழுகுமலர்க்கூந்தன்மாததிதிமடியிருந்து
கொட்டுமுலைப்பாலருந்துங்கோலமகோற்கடரறிந்து
பட்டிமையினடுத்தவிவர்பாழியுயிர்குடித்துமென
வுட்டகக்கொண்டனையைப்பார்த்துறுகிளியைத்தருகென்றார். (௧௦௨)

பறப்பனவெங்கையகத்துப்படுங்கொலோவெனமறுத்தா
ளிறப்பவுயர்மாதவத்தாலினிதுவளர்த்திடுநற்றாய்
சிறப்பமடித்தலமிருந்தார்சேணிடைக்குப்புற்றெழுந்து
மறப்பருந்தின்வடிவாகிவந்தகிளிமேற்படர்ந்தார். (௧௦௩)

அழகியகிள்ளைகளிரியவவற்றையுடன்றொடர்ந்துயிரிற்
பழகியநாயகர்சிறகைப்பறித்தெறிந்துசெவியினிக்கு
மழலைமொழிதடுமாறவள்ளுகிரால்வளைவாயா
லுழலுமுடல்பிளந்துநிலத்துகுத்துமுன்போன்மகவானார். (௧௦௪)

கிளிப்பரிபூட்டியவிரதங்கேண்மையினூர்ந்துலகனைத்துங்
களிப்பவமராலடக்குங்காளையைமாய்த்தான்முன்ன
ரளிப்பவருதிருமகனாரடர்சிறைக்கிள்ளையைத்தொடர்ந்து
விளிப்பதுமோர்புகழ்கொலெனவிம்மிதமுற்றாளதிதி. (௧௦௫)

மாந்தர்கள்வானவரவுணர்வல்லரக்கர்முதலெவருஞ்
சேந்ததிருவடிவணங்கித்தெருமருதந்துயர்களையுங்
காந்துநுதல்விழியார்க்குக்கசியபனென்பான்பூத
சாந்திபுரிந்தெழுமகிழ்ச்சிதலைக்கொள்ளவினிதிருந்தான். (௧௦௬)

துந்துபியுமுதத்தனுந்தோலாதமறத்தினராய்
வந்தனராயினுஞ்சற்றுமறைநெறிசெய்யாரேனு
மெந்தைபிரான்றாக்குதலாலிறந்தனராதலிற்பழைய
பந்தமும்விட்டானந்தப்பரவைபடிந்தாடினார். (௧௦௭)

வேறு.

மூன்றதாகியபிராயத்தின்முன்னவன்முகங்க
ளீன்றநான்மறைவிதிப்படியெழில்வளர்சவுள
மான்றயோகியரறிவையுங்கடந்தவர்க்காற்றிச்
சான்றமாதவக்கசியபன்றழைத்தனன்மகிழ்ச்சி. (௧௦௮)

ஆங்குவாழொருநாள்விதிபாதம்வந்தடுப்பத்
தேங்குநீர்படிந்தாடுவாள்சிறுவனைக்கொண்டு
பாங்குநீள்பொழில்சூழ்ந்தலர்பங்கயமாதி
தாங்குமோர்தடந்தீர்த்தத்தைச்சார்ந்தனளதிதி. (௧0௯)

கதியெலாந்தருமைந்தனைக்கமழ்புனற்சோம
வதியெனும்பெருந்தீர்த்தத்தின்வன்கரையிருத்தி
யதிதிதண்புனலாடினளவளறியாமே
துதிபெருந்தடத்திறங்கினன்றுளைந்தனன்சுமுகன். (௧௧0)

குதலைமென்மொழிச்செய்யவாய்க்குறுநடைப்பதத்து
மதலைதன்னையையிரண்டெனும்யோசனைவடிவின்
முதலையொன்றெடுத்தேகலுமுன்னுறக்கண்டோர்
விதலையுற்றனராவவென்றிரங்கினர்மெலிந்தார். (௧௧௧)

சிஞ்சுமாரமைந்தனைக்கொடுசெல்வதுநோக்கி
வஞ்சிநேரெழிலதிதிவாயளவுநீரிறங்கி
யஞ்சினுளதுசெவ்வியினடுத்தமாணுக்க
ரெஞ்சுறுமனவலியினனீந்தினரிருநீர். (௧௧௨)

நீந்தினர்தனைநெருங்கவொட்டாதுவன்மீன
மேந்துமைந்தனோடிடம்வலந்திரிந்துமேலெழுந்து
காந்துகண்ணிணைநெருப்புகக்கனன்றுமிழ்நீரிற்
போந்தொளித்ததுபுக்கதையாவரேதெறுவார். (௧௧௩)

முன்னரேநறுந்தீம்புனன்முழுகியாச்சிரமந்
தன்னின்மாதவத்திருந்திடுந்தாபதற்குரைப்ப
வன்னசீடர்களோடினரத்தருபதத்தி
னென்னையாளுடையானதனோடுமேலெழுந்தான். (௧௧௪)

புட்குழாமெழுந்திரியமென்பூவினந்துவளத்
தட்கும்வார்கரைப்புறத்தினுந்தவழ்ந்தலைவழியப்
பெட்குநாயகன்பெருந்திறன்முதலையேகலமாக்
சொட்கவூர்ந்தனர்சிறுவரையிழைத்தனர்குறும்பு. (௧௧௫)

துன்பநீரிடைத்துளைந்தசெஞ்சேல்பொருநெடுங்க
ணின்பநீரிடைத்துளையுமாறெதிருறநோக்கி
யன்பின்மேதகுமதிதியிவ்வாடன்மற்றமையும்
வன்பின்மேதகுமுதலையைமாய்த்தருளென்றாள். (௧௧௬)

குரைபுனற்றடங்கொட்புறமகோற்கடர்குறித்துக்
கரையினெற்றினர்விழுந்துடல்சிதர்ந்ததுகராமே
விரையவங்கதிற்றோன்றியோர்மேதகுபுருடன்
றரையினின்றெதிர்வணங்கியன்பொடுமொழிசாற்றும். (௧௧எ)

தலைவசித்திரகந்தருவன்றமியேன்மு
னலையினல்லெழிற்கந்தருவருக்கொருவேந்தாய்
நிலையுநாளையினிகழ்த்தினேன்வதுவையொன்றதற்குக்
கலையெலாந்தெரிபிருகுவுங்காதலினடுத்தான். (௧௧அ)

பொற்றவும்பர்களாதியோர்பொலிந்தமண்டபத்திற்
பற்றுமன்றலின்சோடையிற்பயின்றநான்படர்ந்த
வற்றமற்றவப்பிருகுமாதவனெதிரடுத்து
முற்றவந்தனையாதிகண்முடித்திடாதிருந்தேன். (௧௧௯)

வணக்கமின்மையையறிந்தவன்லதுவைசெய்மகிழ்வி
லிணக்கமின்றியேமுழுகியபெற்றியாலினிநீ
மணக்குமென்மலர்ப்புனலின்வன்மீனமாய்முழுகென்
றுணக்கினுனொருசாபமிட்டுயர்ந்தவெண்வாழ்க்கை. (௧௨0)

பயந்துநாயினேன்பின்பவன்பதமலர்பணிந்து
நயந்துநின்றுசெய்பிழையினைக்குறித்துநீநவிற்றுஞ்
சயந்தவாப்பெருஞ்சாபத்தைத்தணித்தருளென்ன
வியந்துவையகந்தொழப்படுமெய்த்தவனுரைத்தான். (௧௨௧)

அரட்டிழைத்திடுந்தீயவரணிமுடிகளத்திற்
புரட்டவிக்கினராசனேபோந்துறைகூகை
யிரட்டுவன்குரலெழுவனத்திருந்தருந்தவங்கள்
திரட்டுமுத்தமக்கசியபன்செம்மலாய்வருவான். (௧௨௨)

அட்டமூர்த்தமுமாகியவவன்கரமலர்மெய்ப்
பட்டபோதுநின்சாபமும்பாறுமென்றியம்பி
விட்டதீவினைப்பிருகுமாதவன்விரைந்தகன்முன்
கட்டனேற்குநின்கண்ணருள்கிடைத்தநித்தினத்தில். (௧௨௩)

குழுமுதேமலர்பறிப்பவுங்குளிர்ந்தறத்தெளிந்த
விழுமநீரினிதாட்டவுமேவுவார்க்கெல்லாங்
கழுமலேபுரிகராவுருகணத்திடைநீக்கி
வழுமராவகையென்னையிவ்வண்ணஞ்செய்தனையால். (௧௨௪)

செறிகுளிர்ப்பெயன்மழைக்கெழிறிகழ்ந்தவிவ்வுலகாற்
குறியெதிர்ப்பையுண்டாயினுங்கோதறுமென்று
லறிவனுக்கெதிராற்றுகைமாறிலையென்று
பிறிவிலன்பொடுபேசினன்பேசுமப்பதத்தில். (௧௨௫)

கந்தரத்தினைக்கவற்றுகைக்கணபதியருளா
லந்தரத்தினின்றவிரொளிவிமானம்வந்தடுப்ப
வெந்தரத்தினுமருளினையெனப்பினும்வணங்கிச்
சுந்தரத்துயர்சித்திரன்றுன்னினன்கதியில். (௧௨௬)

வேறு.

ஆகாயநிவந்தொளிருங்கயிலாயனொருவருக்குமடக்கிக்கோட
லாகாதவிடமயின்றவமலனடிதொழுமார்வத்தாங்குச்செல்வா
ராகானவாகனத்தான்றலைமகனுப்பெற்றவருந்தவன்வாழ்வைப்பி
ஞகாவுமூகூவுந்தம்புருவுநான்கென்னுமாண்டிற்புக்கார். (௧௨௭)

காழ்த்ததவக்கசியபனும்வரவேற்றுக்கலந்துமகிழ்ந்திருந்தபின்றை
வீழ்த்தவினையீங்குவிருந்துநுகர்ந்தேகுமெனவிளம்பயாழால்
வாழ்த்தலுறுமூவர்களுமதற்கிசைந்துநீராடிவருத்துச்சந்தி
யூழ்த்தமலராதிகொடுபூசைபுரிந்திருந்துளத்திற்றியானித்தாரால். (௧௨௮)

வியானசமானனையந்தமேவுவளியாதியெலாம்விளங்கக்கண்டோர்
தியானவுளத்தினரானசெவ்வியிலாட்டயர்ந்ததனிற்றீர்ந்துசார்ந்த
கயானனத்தைமறைத்தமகோற்கடரிரவிகணபதிமால்கவுரிதேவர்
மயானநடம்புரியிறைவன்வடிவைந்துமெதிர்கண்டுமறையச்செய்தார். ()

ஒழிந்துதியானத்தையவரெஞ்சியபூசையுமுடிப்பவுற்றபோது
பொழிந்தமதுப்பூங்கொன்றையிறைவர்முதலைவருமுன்புல்லக்காணு
ரழிந்தவுளத்தினராகிக்கசியபனைக்கூயெமக்கான்மார்த்தமாக
மொழிந்திடுமைவரையுமெவரோகரந்தாரெமதுயிரைமுடித்துமென்றார். ()

விருந்தெனவந்தவர்பூசைவிளைத்தணவுநுகர்ந்துபுறமேவாமுன்னர்
வருந்தலுறவந்ததுநந்தீவினையேயெனவதிதிமனுளன்மாழ்கித்
திருந்தியதன்மாணுக்கர்தமைக்கூவிக்கடவுளரைத்தெவ்வினீரேற்
பொருந்தவவர்தமைக்கொடுமின்கொடாதொழியினுமைப்பூழிபுரிவனென்றான்.

எதிர்வணங்கிமாணுக்கரெம்பெருமானினதருளாலிதமேயாற்றிக்
கதியடையவடுத்தேங்கள்பிறர்க்குரியகடவுளரைக்கவர்வேங்கொல்லோ
வதிதருநும்மகனுரைவினுயறிதல்வேண்டுமெனவகுத்தார்நூலின்
விதியறியுமுனிவரனுமகோற்கடரைத்தரீஇயிவண்மேவிக்கவென்றார்.(கஙஉ)

துருவியிடந்தொறுங்காணுரவிசொரிந்துதழல்வளர்க்குந்தூயவில்லி
னுருமுழுதுந்தவளவொளியுமிழ்தரவெண்ணீறணிந்தங்குற்றுவைகும்
பெருமறைக்குமெட்டாதமகோற்கடரைப்போதந்துபிதாமுன்விட்டார்
கருவினையின்கால்சாயக்கசியபன்மெய்ப்பணிபுரியுங்கடன்மைபூண்டார். ()

முனிவனொருவளாரெடுத்துமுனிபவன்போலெதிர்நோக்கிமூவருற்றிங்
கினிமையுறப்பூசனைசெய்திருந்தசிவலிங்கமுதலெனைத்துநீயே
நனிகவர்ந்தாயாங்கொளித்தாய்நவிற்றுகெனமகோற்கடர்தாநகைத்துவல்லே
புனிதமுறுந்தனதுகனிவாய்காட்டியீங்கொளித்தேன்பொற்பவென்றார். ()

திறந்தகனிவாயகத்துட்சிலம்புயிர்த்ததேவியொடுஞ்சிவனுரோடு
நிறந்திகழுங்கயிலையுமாதவனொடுவைகுந்தமுநீண்மலராேனாடு
மறந்திகழ்சத்தியவுலகும்வலாரியொடுபொன்னுலகுமவுணர்வைப்பு
மறந்திகழ்நச்சரவுலகுமியக்கருலகமுமனிதர்வாழுமண்ணும். (கஙடு)

மதிதவழும்பலவரையும்வனமுநதிகளும்புணரிவகுப்பும்போது
பொதியவிழுந்தருநிலமும்பறவைபயினிலமுமெனப்புகலீரேழு
பதியுமிருநாற்றிசைப்பாலருங்கவின்றபாதலமும்பத்துத்திக்கு
முதிர்பொருள்களனைத்துமெதிர்தோன்றிடக்கண்டானதிதிமுன்கைதொட்டான்

நொந்திருந்தவாகாவுமூகூவுந்தம்புருவுநோக்கிநோக்கி
யந்தமில்விம்மிதராகிமகோற்கடர்தமடிமலர்மேலாரவீழ்ந்து
கந்தமலர்முதற்பலவுங்கைக்கொண்டுபூசித்தார்கருணைநாதர்
கந்திருவரவர்மகிழத்தமதுருவிலைந்துருவுங்கண்டிந்தாரால். (கஙஎ)

இழந்தமதியாலெளியேமெனைத்துலகுந்தம்வாயிற்காட்டினுரைக்
குழந்தையெனநினைத்தனமென்றுளநாணிப்பூசனையின்குறையுந்தீர்த்துப்
பழந்தகுதீம்பால்விழுந்தாலனையராய்விருந்துண்டுபெயின்றுகேண்மை
யுழந்தகசியபன்விடைகொண்டோங்குகயிலாயவரையுற்றாரன்றே. (கஙஅ)

வேறு.

ஐந்தெனுமாண்டினிலமார்களவுணர்களாதியோர்
வந்திடக்கூவிமாதவம்புரிகசியபன்மகோற்கடர்க்
கந்தின்மாமறைவழியுபநயனத்தினையாற்றினன்
மந்திரவரிசிகவேினர்மாதவர்யாவரும். (கஙக)

புராந்தகன்மதலையாகியமகோற்கடனுயிர்பொன்றுமா
நராந்தகனேவலானண்ணினாரவுணர்களவர்கண்
மராந்தருவெய்தமாலாதியோரஞ்சுவன்றெழிலினர்
சுராந்தகனனையமெய்வலியினர்மாயைகடுறுமினர். (கசo)

பிங்களன்விகிர்தனேசபலனேவிசாலன்பிங்காக்கனென்
றிங்குயர்பெயர்களையெய்தியவிவர்கடாமெழில்விபூதி
தங்குகண்மணியிவைதரித்தணிகமண்டலந்தண்டினேடுந்
துங்கநன்முனிவர்போற்றுங்களுமரிசிமேற்றாவினர். (கசக)

தாவியவரிசியினேற்றியசுரர்களத்திரங்கடா
மேவியமகோற்கடர்மீதுறவஞ்சிமெய்யுருக்கொடு
மூவியனுலகமுங்காணமுன்றாழ்ந்தனமுதிர்ந்தசீர்
பாவியவிநாயகரறிந்தவைமுழுவதும்பற்றினர். (கசஉ)

கைதவத்தார்க்கெலாங்கைதவராங்கணக்கிரீடினர்
பொய்தவவேடமெய்பூண்டவர்தங்கண்மேற்பொள்ளென
வைதவிரரிசியைந்தேவினரவைகளத்திரங்களா
மைதவழ்மலைநிகரசுரர்களாவியைமாய்த்தவே. (கசங)

நோக்கினரனைவருமாமறைத்துதிபலநுவன்றனர்
தேக்கினர்சிந்தையிற்றெள்ளுமானந்தமாந்தேங்கட
லூக்கியவுபநயனத்துளவிதியெலாமொழிந்தபின்
றாக்கியபெரும்புகழ்ச்சுரர்கள்செய்தமையினிச்சொல்லுவாம். (கசச)

வேறு.

விண்ணுடவரனைவோர்களும்வேறேருருழிமருவி
நண்ணுதவருயிருண்ணியநண்ணும்பெருமான்பா
லண்ணுதனபொருளெங்கணுமண்ணுதனவேனுந்
திண்ணுதரமுறநாமிதுசெய்வாமெனச்சூழ்ந்தார். (கசரு)

கதிரும்பலமணியாலிருள்கடியுங்கமண்டலமும்
பொதிமெல்லிதழ்வீழக்கடிபொங்குந்திருமலரும்
விதியென்பவன்விமலன்கரமேவித்தனன்பிரம
பதியென்றொருபெயரிட்டனன்பதமென்மலர்தாழ்ந்தான். ()

மதிமிக்குயர்மதுசூதனன்வளருங்களியினனுய்ப்
பிதிரும்பெருகொளிமல்கியபீதாம்பரம்வெகுளி
முதிருஞ்சமர்நேமிப்படைமுன்வைத்தனன்விண்டு
பதியென்றொருபெயரிட்டனன்பரிவுள்ளகநீத்தான். (கசஎ)

மனநன்றுறுபிரகற்பதிவழிபட்டனன்பரத
னெனவிட்டனனொருபேரரதனமாலிகையீந்து
தனதன்பதமலரேந்துபுதகுகாசிபனுன
பனவற்கொருபெயரிட்டனன்பரானந்தனென்றுறவே. (கசஅ)

ஏறும்மல்கியபாசந்தனையீந்தேவருணன்பேர்
சறுவப்பிரியத்தேவெனத்தகவிட்டனன்றாணு
மறுவற்றபினாகந்திரிசூலந்துடிமழுவு
மறுகொன்றியசடைவெண்மதியதுவும்வழங்கினனே. (கசகூ)

வேறு.

அழிபுனல்சடையிலேற்றவரன்விருப்பாக்கனென்று
மெழில்வளர்பரசுபாணியென்றும்வீட்டின்பந்தாளைத்
தழியினர்க்கருளும்பாலசந்திரனென்றுமென்று
மொழிவறவழங்கும்வண்ணமுரைத்தனன்பெயருமாதோ. (கருo)

சங்கரியுலகமூன்றுந்தாடொழுந்தனையனர்க்குச்
சிங்கவாகனத்தைநல்கிச்சிங்கவாகனனென்றோர்பேர்
பொங்கியமகிழ்விற்கூறிப்புல்லியதுட்டர்தம்மைச்
சங்கரிநீயென்றுசீர்வாதமுஞ்சாற்றினளே. (கருக)

மடங்கருஞ்சீற்றத்துப்பின்வைகுகொற்றவைவாளொன்று
தடங்கரங்கொடுத்துக்கட்கதரனென்றுண்மறையோனுய்ச்சென்
றடங்கரும்புணரிமுத்துமாலையையணிந்துமும்மை
யிடங்களுமகிழமாலாதரனெனவிசைத்ததன்றே. (கருஉ)

வேறு.

பணிராசன்மகோற்கடரைப்பயிலுமணையாய்ப்பரித்துப்
பணிராசவரசனெனவொருநாமம்பகர்ந்திட்டான்
றணியாதவிறலியமன்றண்டமதுகொடுத்திறைஞ்சிப்
பிணிதீரத்தண்டதரனெனுநாமம்பேசினான். (கடுங)

தழற்கடவுடரிக்குமொருசத்திதனைக்கொடுத்திறைஞ்சித்
தழற்கணுதன்மறைத்தவர்க்குத்தனஞ்சயனென்றறைந்தனனன்
றுழக்கும்வலிகொடுத்திறைஞ்சியுலவைபிரபஞ்சனென்
றிழக்கலரும்பெயரிட்டதெவ்வுலகுமெடுத்தேத்த. (கடு௪)

வேறு.

அடைக்கலம்புகுந்தவிண்ணோராக்கையுமுளமும்வாக்கும்
படைக்கலம்பிறவுநல்லபயனொடுபெயிலாநிற்பக்
கொடைக்குமுந்துறுங்கைச்செம்மலவரவர்கொடுத்தவீர
முடைக்கரும்படையும்பேரும்வணக்கமுமுவந்துகொண்டார். (கடுரு)

அந்தரர்பலருமிவ்வாறடுத்துவந்தனைகள்செய்ய
விந்திரன்யாதுஞ்செய்யாதிழுதையாய்த்தருக்கிநின்றான்
வெந்திறலும்பரார்க்கும்வேந்தன்யானென்னையாரும்
வந்தனைபுரிவதன்றிவழிபடேனொருவர்மாட்டும். (கடுசு)

வெள்ளநீர்முழுதுந்தாழும்வேலையுங்குளம்பினுகும்
பள்ளநீர்விழையுங்கொல்லோபசும்புல்லைப்பசிக்குத்தின்னத்
தள்ளருமதுகைச்சிங்கந்தன்னுளத்தெண்ணுமேயென்
றுள்ளுறுதருக்கைநோக்கியுயர்கசியபனன்றோதும். (கடுஎ)

முறுக்கவிழ்மலர்ப்பூங்கற்பமுருகுசூழ்துறக்கமன்னு
மறக்கதுவியவொட்டார்தம்வாளமர்க்குடைந்துமாழ்கி
வெறுக்கைகளொழிந்தஞான்றும்விழுமியவறிவுநெஞ்சி
னிறுக்கவுமிழந்தபோகமேவவுநினைந்தாயல்லை. (கடுஅ)

தறுகண்மிக்குடையதேவாந்தகன்நராந்தகனைக்கொன்று
மறுகுமுச்சகமும்பேணிமறைநெறியொழுக்கமெங்கு
நிறுவிநின்னையுங்காப்பாடிகரிலீச்சுரனேயீங்குச்
சிறுவனாய்நின்றனன்றன்றிருவிளையாடல்காணாய். (கடுகூ)

ஒற்றையாண்டொழியுமுன்னரொழித்தனன்விரசையாவி
பற்றியவிரண்டாமாண்டிற்படர்ந்தவுதத்தனைநீதி
யற்றதுந்துபியைமாய்த்தானடுத்தமூவாண்டிற்சாபஞ்
செற்றனன்சித்திரப்பேர்திகழ்ந்தகந்தருவற்கம்மா. (கசுo)

ஆண்டுநான்கியலுங்காலத்தடுத்தவாகாமுன்மூவர்க்
கீண்டியபஞ்சமூர்த்தியெழிலுருக்கரந்துதோற்றி
மாண்டகக்கொடுத்தானைந்தாம்வருடத்திலவுணரைவர்
நீண்டமண்விழுந்துசாவநிகழ்த்தினனீயுங்கண்டாய். (கசுக)

சிறுவனாயீங்குநின்றான்சிறுவிளையாட்டீதானா
லுறுவனாயினான்செய்யுமுறுவிளையாட்டைச்சற்று
மறுவறுதவத்தினோருமதிக்கவல்லவரோநன்மை
பெறுவதுகருதிநீயும்பேணவன்பூசையென்றான். (கசுஉ)

அத்தனைத்தனையுமீன்றவருந்தவனுரைத்தவெல்லாம்
புத்தியென்றுள்ளங்கொள்ளான்புரவலன்சோதிப்பானாய்ப்
பைத்தெழுகாற்றைக்கூவிப்படர்ந்துநின்பாழிதோற்றி
யுத்தமன்வலியைக்காற்றென்றுரைத்துமேலேவினானே. (கசுங)

அண்டர்கள்பெருமானுண்மையறிந்துங்காலிறைவன்றேரு
விண்டலவேந்தன்றேறமிண்டிமேலெழுந்துசென்று
சண்டமாய்ச்சுழன்றுதாக்கித்தனிவருங்கடைநாளோவென்
றெண்டிசையவருமேங்கவெறுழெலாந்தோற்றினனே. (கசுச)

இடிந்தனவண்டப்பித்தியிறந்தனகடலின்வேலை
பொடிந்தனவரைகள்வீழ்ந்துபுரண்டனதருவுமாவும்
படிந்தனகனகநாமெம்பாரெனப்புழுதிக்குப்பை
முடிந்தனவளவில்சீவன்முதல்வன்மேலெறியுங்காற்றால். (கசுரு)

சகமெலாமலையத்தேவாந்தகநராந்தகனுநோக்கி
யிகலொடுமொருவரானுமெய்தருநமதுகாப்பிற்
புகவதிகாரம்யாதுபுறங்கொடுத்திரிந்தகாற்றுக்
ககனுறத்தேர்மினென்றேயறைந்துவொற்றரைவிட்டாரால். (கசுசு)

ஒற்றர்போயொற்றுமுன்னேயுடனிருந்தறிந்ததூதர்
தற்றுவண்மடிமுன்னேடித்தாள்பணிந்தொட்டாளுக
வுற்றகாசிபனைவெல்லவும்பர்கோனேவல்பூண்டு
முற்றினன்பவனனென்றுமொழிந்திடமகிழ்ச்சிபூத்தார். (கசுஎ)

இளக்கமிலாதநெஞ்சினெறுழெலாந்தழுவியேற்றும்
விளக்கமுற்றியவேரம்பன்மெய்ம்மயிர்ச்செறிவினென்றுந்
துளக்குதலின்றிக்காற்றுத்துளங்கியதரசன்பின்னு
மளக்கவங்கியைக்கூய்விட்டானதுவதனெடுநேர்ந்தன்றே. (கசுஅ)

பிரளயத்தெழுவதொத்துப்பிறங்கொளியங்கிமுன்னீர்க்
கரளமுங்கண்கள்பொத்தக்கடுமைகொண்டுகளுமீனம்
புரளவேழ்கடலும்வற்றப்போர்த்தொழில்விளைத்தலோடுந்
தரளவெண்முறுவல்சற்றேதம்பிரான்காட்டினாரால். (கசுகூ)

குறுநகைக்காற்றுதைக்கொழுங்கனற்றேவன்சாய்ந்தா
னறுகணிசடிலத்தண்ணலடல்கெழுகுலிசவெள்வேல்
பெறுகரத்தமரனுள்ளப்பேதமைத்தருக்குமுற்றும்
வெறுவியதாகும்வண்ணம்விச்சுவரூபங்கொண்டார். (கஎ0)

வேறு.

முடித்தலையனந்தநாசிகளனந்தமுகமலரனந்தங்கண்ணனந்தம்
வடித்தகுண்டலத்தின்காதுகளனந்தமலர்ந்தவாயனந்தந்தோளனந்தந்
தொடித்தடங்கரங்களனந்தமோதிரங்கள்சுடர்விரலனந்தமார்பனந்த
மடித்தலமனந்தமவையவமனைத்துமனந்தமாயனைத்துமாய்நின்றார். (கஎக)

பாதலமேழுமுருவியப்புறத்துப்படர்ந்தனசேவடித்துணைகண்
மீதலமேழுமுருவியப்புறத்துமிளிர்ந்ததுமணிமுடிச்சென்னி
மாதிரமெட்டுங்கடந்தனசெவிகண்மயிர்தொறுமிலங்கினவண்ட
மாதவரநேகரொருங்குதித்தென்னவவிரொளிபிறங்கியதுருவின். (கஎஉ)

நாரணரநேகராரணரநேகர்நான்மருப்பேந்தியமுகத்து
வாரணரநேகர்வானவரநேகர்மாதவமுனிவரரநேகர்
தாரணவியவாள்விஞ்சையர்முதலோர்தனித்தனியநேகர்சேவிப்பப்
பூரணனெடுத்தவிச்சுவரூபம்புலோமிசைமணாளனேர்கண்டான். (கஎங)

எம்பிரானுருவில்வளருரோமத்தினிலகுமோரண்டத்தினுழைந்தான்
பம்பியவீரேழுலகமுமவற்றுட்பயின்றநாரணனயன்மகவா
னும்பராதியருமுலப்பில்பல்லுயிருமுதுமரப்பழத்தின்வித்தெனவும்
வம்புநீள்வாகைஞெமிர்ந்தநெற்றெனவுமலிவனவனைத்துநேர்கண்டான். ()

திருக்கிளர்மகவான்பலபலவுலகுஞ்செம்மலாருருவினைக்குதலும்
பொருக்கெனப்பண்டைப்புல்லறிவொழியப்புனிதமெய்யறிவினனாகித்
தருக்கினைவிடுத்துவெளிக்கொளமுயன்றான்றன்னமும்வன்மையின்மையினா
லுருக்கியுள்ளகத்தையிருந்தவாறிருந்தேயொருவனார்சேவடிதுதிப்பான். ()

வேறு.

தினந்தொறும்வையகமிறைஞ்சத்திகழ்தேவதேவமாதேவநின்னை
யனந்தசத்திமானென்றும்விசுவாத்துமாவென்றுமனந்தானந்த
மனந்தூயவடியார்க்குமாறாதுவழங்குமொருவள்ளலென்று
மினந்தூய்மையில்லாதசிறியேனுமிப்பொழுதிங்கறிந்தேனெந்தாய். (௧௭௬)

விச்சுவவந்தியரென்றுங்கணேசரென்றும்விச்சுமாபீசரென்றும்
விச்சுவாதிகரென்றும்பரேசரென்றும்விச்சுவாதீதரென்றும்
நிச்சலுநித்தியரென்றுநிகழ்சச்சிதானந்தசொரூபரென்று
முச்சகநாயகரென்றுமீசரென்றுமுமையடியேன்முழுப்பக்கண்டேன். ()

சர்வவியாபகரென்றுஞ்சுகதுக்கஞ்சகலருக்குந்தருவாரென்றுஞ்
சர்வவித்தைகளுக்குமாகரரென்றுஞ்சர்வான்மசொரூபரென்றுஞ்
சர்வபொருள்களுக்குமிருப்பிடமென்றுந்தகுசர்வேசானரென்றுஞ்
சர்வான்மஞானத்திலாபாசரென்றுமுமைச்சரணஞ்சார்ந்தேன். (௧௭௮)

ஐந்தொழிற்காரணரென்றுங்காரணாதீதரென்றுமரன்மால்வேதன்
றந்தலைவரென்றுந்தாபரசங்கமத்தினிச்சைதன்னைநாடி
நந்தலுறவழங்குமொருநாதரென்றும்விஞ்ஞானசொரூபரென்றும்
புந்தியுரைகடந்தபூரணரென்றுமறிந்தும்மைப்புகழாநின்றேன். (௧௭௯)

சிறுவனெனநினைமுன்னர்நினைத்தபெரும்பிழைபொறுத்துச்சிறியேன்பாங்கர்
முறுகுபெருங்கருணைவிழுக்கடைவழங்கியெனைவிடுத்துமுன்போற்சாந்த
முறுநினதுதெரிசனந்தந்தருளென்றுபணிந்திரப்பவுவந்துநாதர்
மறுகுமவன்றனைவெளியின்விடுத்துமுன்போன்மகோற்கடராம்வடிவாய்நின்றார்.

வேறு.

இந்திரன்பின்புவிண்ணோரினமலர்சொரியப்பஞ்ச
துந்துமிமுழங்கத்தெய்வத்தோகையர்நடனஞ்செய்ய
வந்துகந்திருவர்பாடமாதவர்மறைகளோத
முந்துறவியற்றியேகமுதல்வனைப்பூசைசெய்தான். (௧௮௧)

திருவடிக்குரியவானதிருப்பணிபலவுஞ்செய்ய
விருவரைவிடுத்துச்செந்தேனிறைக்குங்கற்பகமும்வெம்போர்
மருவுமங்குசமுந்தோலாவச்சிரப்படையுநல்கி
மிருதியுமறியாதார்க்குவிநாயகனெனும்பேரிட்டான். (௧௮௨)

மடங்கலினூர்திபெற்றமகோற்கடர்புலவர்கோமாற்
கடங்கலர்போர்க்கஞ்சாதவாண்மையுமளித்தன்னான்செய்
மடங்கருந்துதியையாவர்வழுத்தினுஞ்செல்வமெல்லா
முடங்குறும்வரமுநல்கியுவப்பொடுவிடையுமீந்தார். (௧௮௩)

கொடுத்தருள்விடைபெற்றும்பர்கொற்றவன்வணங்கிமேரு
வடுத்தனனேனைவிண்ணோராதியர்தாமுநெஞ்சிற்
றொடுத்தமெய்யன்பிற்றாழ்ந்துதுன்னினர்தத்தம்வைப்பிற்
கடுத்தவழ்படையிவ்வாறுகைக்கொண்டாராறுமாண்டில். (௧௮௪)

அங்குசம்பரசுபாசமருங்கமண்டலம்வார்தண்டம்
பங்கயமான்றோல்பீதாம்பரமுத்தமாலைகீற்றுத்
திங்கள்கத்தூரிப்பொட்டுத்தருப்பையுந்திகழக்கொண்டு
சிங்கவல்லூர்தியூர்ந்துதிருவிளையாடல்செய்தார். (௧௮௫)

அச்சுதனுலகோர்நாளுமம்புயனுலகோர்நாளுங்
கச்சமில்வளங்கள்சான்றகடவுளருலகோர்நாளு
நச்செயிற்றுரகர்வைகுநனந்தலையுலகோர்நாளும்
பொச்சமிறிசையோர்நாளும்பூதலமருங்கோர்நாளும். (கஅசு)

விரைகமழ்வனமோர்நாளும்விண்டொடுவரையோர்நாளுந்
திரைதவழ்கடலோர்நாளுந்திகழ்ந்தொளிர்தீவோர்நாளும்
வரையறச்சென்றுசென்றுமகோற்கடர்விளையாட்டெய்தும்
புரையறுநாளிற்காசிபுகுந்தவாபுகலலுற்றும்.

(கஅஎ)

வேறு.

மின்னிப்பொலிந்தமழையினங்களெய்ப்பாறமேவுஞ்சோலை
தன்னிற்கமஞ்சூலிளம்பெடையைநெஞ்சந்தழைப்பவைத்துத்
துன்னிக்கயத்திலிரைதேர்ந்தளித்துவக்குந்தூவியன்னங்
கன்னிச்செழும்புனற்கங்காநதியினுட்டயருங்காசிமன்னன். (கஅஅ)

வென்றிமிகுந்தநராந்தகற்குநல்வசனமேவச்செப்பி
யொன்றும்புவியினரசாட்சிசெய்துவந்துவாழுநாளின்
மன்றன்மகற்குமுடிப்பப்புரோகிதனுய்வைகாசிற்குந்
துன்றும்பெருங்கீர்த்திக்கசியபனைத்தான்கொணரச்சூழ்ந்துசென்றான். ()

தூய்மைமலிந்ததுளங்காதவாச்சிரமந்துன்னியங்கு
வாய்மைவளர்தவத்துவைகியதேசிகனைவந்தித்திட்டான்
பாய்மைநெடும்புணரிப்பார்புரக்குமன்னவனைப்பார்த்தாசான்றன்
சேய்மைவிழைவாற்றவிசளித்துவந்ததெவன்செப்புகென்றான். (ககூ0)

வேறு.

கங்கைநதிசூழ்காசிநகர்காவலாளனுரைசெய்வா
னெங்களிறைவாவொருவதுவையியற்றமுயன்றேனவ்வதுவை
யங்கணடிகளெய்தாமையமையாதடியேனழைப்பதற்குத்
தங்கும்புனிதமுடையனலன்சார்தனினக்கேகடனென்றான். (ககூக)

தக்கமுனிவனருள்கூர்ந்துசார்ந்தவரசன்முகநோக்கி
மிக்கசாதுன்மாசியநல்விரதந்தொடங்கினேனதனு
லக்கண்வருதலெனக்கொவ்வாததிதிமைந்தன்மகோற்கடனே
புக்குமுடிக்கவல்லனெனப்புகன்றுமகனார்தமைக்கூவி. (ககூஉ)

வாளைச்சுறவுக்கயலுகளவயங்குநாளந்துளங்குதலாற்
காளைச்சுரும்பர்முகரேன்னக்கலைந்துமீட்டுமடுத்திருக்கு
நாளைச்சுகந்தமலர்வாவிநகரிற்சிறந்தகாசியில்வாழ்
கோளைச்சினவுமன்னவனூர்குளிர்பூம்பதங்கடொழவகுத்தான். (ககூங)

வந்தநினக்குமாணுக்கன்மகிழக்காட்சிகொடுத்துடன்போ
யந்தண்வயல்சூழ்காசிநகரடுத்துவதுவையினிதியற்றிப்
பிந்தைமீண்டுவருகவெனப்பேசினனம்மொழிகேளா
வெந்தைவருங்காரியநாடியிசைந்தான்காசிநகர்க்கேக. (ககூச)

அண்டரினமுங்குடிகொள்ளுமழகார்காசிநகர்காவல்
கொண்டவரசன்விருந்துண்டுகோலமுனிவன்விடைபெற்று
வண்டுமருவுமலர்க்கூந்தலதிதிபாதமலர்பணிந்தான்
றொடைநிகர்த்தசெங்கனிவாய்த்தோகையனையாளவற்குரைப்பாள். ()

சிறுவனிவனெச்செயலிடத்துந்தேராதெழுவான்பயமறியா
னுறுபல்லிடருமுற்பாதம்பலவுமுளவாமவைகாத்து
மறுவிலாதாயழைத்தேகும்வாஞ்சைபோலக்கொணர்ந்தீங்கு
நிறுவல்வேண்டுமெனக்கிளந்துநிமலன்றனைக்தைத்தலத்தளித்தாள். ()

மறையாலயனலரியானுமற்றோரானுந்தொடர்வரிய
நிறைவான்பொருளாமகோற்கடரைநெடியதவத்தாலதிதியெனும்
பிறைவாணுதலாள்பிடித்தளிப்பப்பொருங்காதலினற்பணிந்தேத்தான்
முறையாலரசுபுரிமன்னன்முத்திக்கருகனதலினல். (கசுஎ)

வழங்குமதிதிவிடைபெற்றமன்னன்மகிழ்ச்சிதலைசிறப்பப்
பழங்கணறுக்குமகோற்கடர்தம்பாதமலரும்பணிந்தேத்தித்
தழங்குமணித்தேரிடையேற்றிச்சகலவரிசையொடுங்கொண்டு
முழங்குநதிசூழவிமுத்தமூதூர்நோக்கிச்செல்கின்றான். (கசு௮)

வரையிற்சிறந்தகண்டகமால்வரையின்பாங்கர்ச்சென்றடுத்தா
னுரையிற்சிறந்தமகோற்கடரோடுயர்ந்தகாசிநகர்வேந்தன்
றரையிற்சிறந்தவவ்விலங்கற்சாரவரியதவத்திருந்தான்
சுரையிற்சிறவாவுள்ளகத்தான்றூமவிழியனெனும்பெயரான். (கசுசு)

சிறந்தயிரவுத்திரற்கிளையான்றேவாந்தகற்குநராந்தகற்கும்
பிறந்தபிறப்பாற்றந்தையெனும்பெருமையுடையானயிடினு
மறந்துமவர்கள்பணிபிழையான்மறமிக்குடையானவன்படைவேட்
டுறந்தகிரணப்பருதியையுள்ளுறுத்தான்பதினுயிரமாண்டு. (௨00)

துலங்கும்புகையைநுகர்ந்தந்தத்தூமவிழியானருந்தவத்தா
விலங்கும்பதினுயிரமாண்டுமிறப்பவிருந்தகடைநாளு
நலங்கொள்காசிநகர்மன்னனண்ணுந்தினமாயிருந்தததி
னலங்கும்படைவானிருந்தாங்கேயலரியவனுக்குறவிடுத்தான். (௨0க)

விண்ணமுழுதுமொளிபரப்பிவெய்யோன்கதிர்மண்டிலநின்று
மண்ணிளிறங்குமத்திரத்தைமருங்கேசாருமகோற்கடர்கண்
டெண்ணமிகுந்தவிதனற்றலெனைத்துமறிவாமெனமதித்து
நண்ணுமிரதமொழிந்தெழுந்துநளிர்வான்பாய்ந்துகைக்கொண்டார். ()

கருடனரவைப்பிடித்தாங்குகதிரத்திரத்தைக்கைக்கொண்ட
புருடர்பெருமானுகியநம்புனிதர்தேரின்மீண்டடுத்து
வருடத்தழனற்புறத்துமிடைவானிற்பருதிநோக்கியவுட்
குருடன்றூமவிழியானைக்குறித்துப்படையைநேர்விடுத்தார். (௨0௩)

பாயவொளியின்படையேகிப்பதசுன்முடியையுருட்டியது
தீயர்புரியுந்தவமவர்க்கேதீமையுடனேகொடுப்பதுமுண்
டாயநெடுநாள்புரிதவத்துக்கலரிக்கடவுண்மகிழ்ந்தளித்த
தூயபடையேதூமவிழித்தோன்றலுயிரைத்தொலைத்தலினல். (௨0ச)

அய்யன்கரத்தாலடிபட்டவரியதவத்துத்தூமாக்கன்
வெய்யவுருவமைந்நூற்றுவில்லினளவைவிழுந்தன்று
மையன்முழுதுந்தபுங்கங்கைவாரணசியிருந்தரசு
செய்யுமரசனதிசயமுட்டிலைத்தும்பயத்தாலிதுகினைந்தான். (௨0௫)

வேறு.

வலிநமக்கின்மையாலேவைகலுநராந்தகன்றன்
கலிவறுமேவலாற்றிநாடுகொத்திந்நாள்காறு
மொலிகெழுபுகழினேடுமுறுசுகம்பெற்றுவாழ்ந்தாங்
கலிகெழுகடல்சூழ்வைப்பிற்கண்டவர்வியப்பமாதோ. (௨0௬)

இன்றொருவதுவையாற்றவிவனையீங்கழைத்துவந்த
நன்றியால்வாழ்க்கையோடுநவையினங்குலமுமின்றே
பொன்றியதாகுமின்னன்புரோகிதன்மைந்தனன்னன்
வென்றியினுலகமூன்றுமடக்கியாள்வேந்தனுமே. (௨0எ)

இத்தகுசிறியோன்சார்பையெண்ணுதலின்றிப்பற்றி
யத்தகுபெரியோன்சார்பையறத்துறந்தனமாவாவென்
றெத்தகுபொருளுமெண்ணியினைந்துமிக்கயருமன்னன்
னைத்தவுட்குறிப்பைவல்லேமகோற்கடரறிந்துகொண்டார். (௨௦௮)

அப்பொழுதவிதூமாக்கனளித்திடுமிருவர்மைந்தர்
செப்பருமதூகைசான்றசெகனனேமனுவேயென்னு
மிப்பெருங்கொடியோர்தந்தையிரும்பணிபுரிந்தாங்குள்ளார்
முப்புரிமார்பிற்றாங்குமுனிச்சிறான்முன்போய்ச்சொல்வார். (௨௦௯)

பிழைசிறிதேனுநின்பாற்பெருக்கிலனரியநோன்பே
விழைதகுமெந்தையாவிவீட்டினையறிவிலாய்நின்
தழைதருவலிபின்காண்டுந்தருக்கலையென்றுபின்னர்க்
குழைதருமுளத்துக்காசிக்கொற்றவர்க்குரைக்கலுற்றார். (௨௧௦)

பொங்கியவாடிக்காற்றிற்பூளைபோலற்றைஞான்றே
யெங்கணுநிலைத்தலின்றியிடருழப்பாயைவாழ்விற்
றங்கநன்றியற்றுமெங்கடந்தைக்குக்கைமாறந்தோ
விங்குறுசிறுவன்றன்னாலியற்றினையுயிரைவீட்டி. (௨௧௧)

முந்துறநன்றியொன்றைமுடித்தவர்க்கதையெண்ணாது
பிந்துறநன்றியல்லாப்பெற்றியைமுடித்ததீயோர்க்
கந்தமுநீட்டியாதென்றகிலமுமறியவின்னே
சிந்துதுநும்மையென்றுதெழித்துமேலெழுந்தார்தீயோர். (௨௧௨)

வெருவியவுள்ளத்தோடுவேந்தனங்கவர்க்குச்சொல்வா
னொருவரையொருவரன்றியொருவர்வேறொவ்வாவாற்ற
விருவருங்கேண்மினுங்கட்கிடர்செயச்சிறுவற்கொண்டு
வருகிலன்வதுவைக்காகவம்மெனவழைத்துவந்தேன். (௨௧௩)

அச்சமும்பயனுஞ்சற்றுமறிதராவிளமைசான்ற
விச்சிறுபிள்ளைசெய்தவிரும்பிழைபொறுக்கல்வேண்டு
நச்செனவழன்றுநீயிர்நலிந்திடினென்னசெய்கே
முச்சகம்பரந்தகீர்த்திமுதன்மையீரென்றிரந்தான். (௨௧௪)

பருவரலுழந்துகாசிப்பார்த்திபன்மருவார்க்கேண்மை
மருவியசெயலைநோக்கிமகோற்கடர்பயந்தார்போன்றாங்
கொருதிருவிளையாட்டாகவுரைக்குவர்மன்னாவென்னை
யிருமுதுகுரவர்பாங்கரிராவகைக்கொண்டுபோந்தாய். (௨௧௫)

ஏதிலர்காதப்புக்கவிடத்துநீயெதிர்போராற்றிக்
காதியன்னவரையென்னைக்காப்பதுபுரிதலின்றி
நீதிநன்மொழிகள்சொற்றிநின்னொடுமென்னைவல்லே
மோதியல்லாதுசெல்லார்மூர்க்கர்களாகையாலே. (௨௧௬)

மைந்துளவரசன்சீறின்வாழ்வுநின்னுயிருமாயு
மெந்தைசற்றுள்ளங்கோடினிம்மையிற்றவந்தானங்க
ளெந்தநற்குணமுஞ்சாடியெய்துறுமறுமைவாழ்வுஞ்
சிந்தியேழ்பிறப்பின்காறுஞ்செயிரையேவிளைக்குமோராய். (௨௧௭)

அந்தணனானவெந்தையருள்சிறிதுண்டாமாயின்
வெந்திறலரசர்தம்மால்விளைத்திடுமிடர்களில்லை
சந்திரன்மருங்குவைகுந்தனிக்கலைமானைப்பற்ற
லுந்தியசீற்றத்துப்பினுழுவைக்குக்கூடுங்கொல்லோ. (௨௧௮)

பெருகியகருணைநாதன்பெட்பொடுமினையபேசி
யிருதலைக்கொள்ளியுற்றவெறும்பதுபோலமன்ன
னொருதலைப்படாதங்கிங்குழழிதருகாட்சிநோக்கி
யிருதிறத்தசுரர்மேலுமீண்டநெட்டுயிர்ப்புவிட்டான். (உ௧௯)

நந்திதன்னுயிர்ப்புமுன்னர்நளிர்சிறைக்கலுழன்றன்னை
யந்தரத்தலைத்ததேபோலவுணரைவாரிக்கொண்டு
நந்தியவுயிர்ப்புச்சென்றுநராந்தகன்சபையிலுய்த்த
துந்தியவுயிர்போயன்னோரோங்கல்போல்விழுந்தாரன்றே. (உ௨0)

பொடிந்தனவுத்திரங்கள்போழ்ந்தனவயிரத்தூண்க
ளிடிந்தனமணிச்செய்பித்தியெழுந்ததுதூளிதேசின்
முடிந்தவப்பேரத்தாணியின்னணமுடியவஞ்சிக்
கடிந்திருந்தவிசையோடிக்கரந்தனனராந்தகன்றான். (உ௨௧)

தனித்துவளகத்தின்வைகித்தளர்ந்திதுவென்கொனீயிர்
நுனித்தறிந்துறுமினென்றுநோக்கினன்றூதர்தம்மை
மனித்தருக்கியமனென்னுமன்னவன்றூதர்தேர்ந்து
பனித்திடுமுளத்தின்மீண்டுபதந்தொழுதுரைக்கலுற்றார். (உ௨௨)

வதுவையொன்றுற்றக்காசிமன்னவன்குரவன்மைந்தன்
விதுவெனவளர்கின்றானைவியனெறிக்கொண்டுமீண்டான்
கதுமெனச்சிறுவன்றூமக்கண்ணனைநுந்தைநோற்கும்
புதுமைகண்டவனைக்கொன்றுபுரட்டினன்வரையின்பாங்கர். (உ௨௩)

புத்திரர்பணிசெய்தங்கணிருந்தவர்புக்குப்போர்நேர்ந்
துத்திரஞ்சிலவேசொன்னாருருசிறுவனுருத்தானில்லை
யத்திரசத்திரங்களங்கையிற்றொட்டானில்லை
நித்திரையுறவன்னோரைநெட்டுயிர்ப்பாலீங்கிட்டான். (உ௨௪)

அவையழிந்ததுவேயன்றியவையிடையிருந்தார்சில்லோர்
துவையலாயினர்கள்சில்லோர்தோண்முதலுறுப்புத்தீர்ந்தார்
நவையிலராகிச்சில்லோர்நழுவினரிரிந்தார்வீரக்
குவைபடுமுளத்தாராக்கைகொம்மெனவிழுதலானே. (உ௨௫)

காசியைநோக்கியந்தக்காவலன்சிறுவனோடு
தேசிகவிரதமூர்ந்துசெல்கின்றானெறியினென்று
பேசினரதனைக்கேட்டுப்பிறங்கெயிறிலங்கநக்கு
நாசிநெட்டுயிர்ப்பின்வீஙகநராந்தகன்வெகுளிகொண்டான். (உ௨௬)

பப்புநீர்நிலையினீங்கிப்படர்பெருமுதலைபோல
வப்பெருமுனிவன்பாளின்றகன்றிவணடுத்துச்செல்லு
முப்புரிநூல்சேர்மார்பின்முனிச்சிறான்றன்னையிந்த
வைப்பகன்றேகுமுன்னர்மாய்த்தலேதுணிவென்றோர்ந்தான். ()

வேறு.

நோன்மையின்மிகுந்தவைந்நூற்றுமள்ளர்கள்
கூன்மலிசிலையினர்கொற்றமிக்கவர்
தேன்மலிவாகையயேசெருகுங்குஞ்சியர்
வான்மலியவுணரைவல்லைக்கூவினான். (உ௨௮)

கசியபன்மைந்தனைக்காசிவேந்தொடு
நசிவறப்பற்றுபுநம்முன்றம்மினோ
நொசிவறுவீரத்தினும்மொடேற்றிடிற்
பசிபறவைகளறப்படுமினென்றனன். (உ௨௯)

முடித்தனம்பணியெனமொய்ம்பின்வீரர்க
ளடித்துணைவணங்கினரைதுநீங்கினர்
கொடித்தனித்தேரினைக்குறுகிமுற்றினு
ரிடித்தெழுமேகம்வானிரவிசூழ்ந்தெண. (உரு0)

முற்றியவீரர்கண்முழங்கியங்கையிற்
பற்றிடவண்மையிற்படர்தலுற்றனர்
வெற்றியம்படைகரம்விரவத்தொட்டில
ரற்றமின்மகோற்கடரார்த்துநின்றனர். (உருக)

பேரிகைமுழக்கியபிறங்குமோசையா
லாரிடருழந்துவீழசுணமாவெனப்
பாரிடைவீரர்கள்பதைத்துவீழ்ந்தனர்
தேரினைச்செலுத்தினன்சிறந்தவேந்தனே. (உருஉ)

ஆதர்களோடினர்தொழுதுபோற்றினர்
நாதனுய்வைகியநராந்தகற்கெதி
ரோதன்மேயினர்நமக்குரியவீரர்கள்
காதரமெனக்கடுந்தேரைச்சூழ்ந்தனர். (உருரு)

ஊழிநாளுருமெனவொருவரும்பொராப்
பாழியாமகோற்கடப்பனவரார்த்தனர்
காழிலாவுளத்தராய்க்கலங்கிநம்மவர்
வாழிவாளரவெனமண்ணின்மாய்ந்தனர். (உருச)

உருவினிற்சிறியனென்றுன்னித்தேவர்க
டிருவனைப்பகைத்திடிற்செயிரெலாம்வரு
மருவியவலியினைமதித்துப்பூசனை
பெருமசெய்திடின்வரும்பெருமையென்றனர். (உருரு)

காய்ந்தசெப்பூசியைக்காதினேற்றியாங்
காய்ந்தருந்தூதுவரறையக்கேட்டலுந்
தேய்ந்திடுநராந்தகன்றீயிற்சேர்ந்தனன்
வாய்ந்ததன்மதியினுல்வகுத்தன்மேயினுன். (உருசு)

வேறு.

கூடிவெங்களத்திடைக்குறுகிலாரைவாளினு
னீடிநின்றவானகர்நிறுவும்வீரரேயென
நாடிநின்றபேதமைநமக்குநீங்கநுங்களைப்
பேடியென்றுகாட்டினீர்பெரிதுந்தேறிநிற்பவே. (உருஎ)

நீறுதுன்றுமேனியார்நிலாவணிந்தவேணியார்
வீறுதுன்றுசேவடிமிக்குளத்திலெண்ணுபு
பேறுதுன்றுமால்வரம்பெற்றுமாயனுதியோர்க்
கூறுதுன்றவென்றனுள்ளமூக்கஞ்சற்றுநோக்கிலீர். (உருஅ)

நெருநல்வந்தவிளமையானீடுகல்விகற்றிலான்
பொருபடைத்திறம்மிலான்புனிதமாதவத்தினுற்
பெருவரங்கள்பெற்றிலான்பேணும்வீரர்தமையிலா
னொருவனுனபையலையோங்கும்வீரனென்றனீர். (உருகூ)

கருப்பையொன்றகழ்ந்திருங்காசினிக்கணமர்பெரும்
பருப்பதத்தைவீழ்த்துமோபதங்கம்வேலைவாய்வளர்
நெருப்பையுற்றவிக்குமோநேர்ந்தெனைச்சிறுன்கொலோ
செருப்புரிந்தழித்திடுஞ்செம்மலென்றுசீறினுன். (உசு0)

கூறிநின்றதூதரைக்கொன்றுவேறுதூதரைத்
தேறிவைத்துமாயையிற்சிறந்தவீரர்சிலர்தமக்
கீறிலாச்சிறப்பளித்திருடிமைந்தன்மன்னனை
யூறிலாதுபற்றியிங்குறுத்துமின்களென்றனன். (௨௪௧)

கையகப்படாரெனிற்கரந்துமாயையாற்றியும்
வெய்யபோர்நடத்தியும்வென்றுவம்மினென்றுமங்
குய்யுமாறுதேர்கிலானுரைப்பவீரரோமெனச்
செய்யபாதந்தாழ்ந்தெழுந்துசென்னெறிக்கணேகினர். (௨௪௨)

வேறு.

செல்லலுறும்வயவீரர்சிந்தையிற்றுணிகின்றார்
மல்லலம்போர்வல்லமகோற்கடர்விழிநேர்போய்
வெல்லுதலரிதாகுமாதலின்வெவ்வேறு
புல்லுறுமாயையினுற்புகுந்துவென்றிடல்வேண்டும். (௨௪௩)

எத்திறஞ்செய்தேனுமிருடிமைந்தனைக்கோவைக்
கைத்தலமுறப்பற்றல்காய்ந்துயிரறக்கோற
லத்திறமிரண்டினுளொன்றுற்றிநம்மன்னனுக்கு
மெத்தியமகிழ்செய்வாமெனவிரைந்தனர்சென்றார். (௨௪௪)

விலங்கலுநெடுங்கானும்விரவுபன்னெறியுநீந்தி
வலங்கிளர்மணித்திண்டோண்மகோற்கடரொடுமென்ன
னலங்குதண்புனற்கங்கையாறொருபால்சூழ்ந்
திலங்கியநகரக்காசியெல்லையினெய்தினனால். (௨௪௫)

நகரணிபுரிவித்துநல்லிசையமைச்சர்களும்
புகரறுநகரவரும்புகழ்மிகுமாதவரும்
பகர்பலவரிசையொடுபடர்ந்தெதிர்கொண்டிறைஞ்ச
வகநகர்புகுகின்றாரருண்மிகுமகோற்கடர்தாம். (௨௪௬)

சந்தனம்புதுப்பனிநீர்தமனியப்பொடிமலர்கள்
கொந்தொளிமணிபலவுங்குலவியபேரழகா
லிந்திரதிருவிலெனவிலகியவீதியிடை
மைந்தனையெதிர்காணவருபவரளவிலரே. (௨௪௭)

வேறு.

வரையினின்றிடும்வரையரமாதரேபோல
நிரைசெய்மாடமேனின்றுயர்கற்புடைமகளீர்
கரையநெஞ்சகங்கதிர்முலைசுரந்துபால்பாய
விரையநோக்கினர்புத்திரர்மேலுறும்விழைவால். (௨௪௮)

மலைமுழைத்தலைமாசறவைகிமாதவஞ்செய்
கலைமுழுச்செழுமதியெனக்கவின்றசாளரத்தி
னிலைமுகப்பசும்பூணினர்சிலரினிதெய்திக்
கொலைமுகப்படைவிழித்துணைகுளிர்ப்பநேர்பார்த்தார். (௨௪௯)

பாதிமெய்யுருக்கதவிடைமறைதரப்பயின்று
சோதிவெண்ணகைமாதரார்சிலர்கண்டுதொழுதார்
கோதில்பாங்கியருருவினின்மறைந்தனர்குழைந்து
பூதிநல்குவார்திருவுருப்போற்றினர்சில்லோர். (௨௫௦)

வள்ளவாய்ச்செழும்பாலினைவளைக்கையினூட்டுங்
கிள்ளையோடெதிரோடியகெண்டையங்கண்ணார்
பிள்ளையார்திருவழகினைப்பெட்புறநோக்கி
விள்ளுறாததுதெனவந்தக்கிளியினைவிடுப்பார். (௨௫௧)

எழுதவட்டிகைவிடுத்தெதிர்போந்தெழினோக்கித்
தொழுதமீண்டவர்தொடுத்துமுன்னெழுதியவுருவ
முழுதுந்தீட்டுவார்முன்னிமுன்னுருவொடுமொருப்
பழுதிலாமகோற்கடருருபதிதரவரைந்தார். (உ௩உ)

ஒருகணஞ்சனந்தீட்டினருவந்தெழுந்தோடிக்
கருணைவள்ளலைக்கண்டுமீண்டடுத்தபின்மற்றை
யொருகண்டீட்டியுமொருகண்மையினர்களேயாஞ
ருவிகொண்டுமுன்னெழுதுமஞ்சனமழிதலினல். (உ௩௩)

அண்ணலார்தமைக்கண்டுமெய்யணியெலாந்தொலைய
நண்ணினர்கள்பின்னிலம்பகநகிற்றுணையணிந்தார்
தண்ணருமணியாரம்வானுதலிடைத்தரித்தார்
வண்ணவேய்ப்புயத்தொற்றினர்மணிப்பரியாகம். (உ௩௪)

வாழிவீதியின்மகோற்கடரெழில்கண்டுமீண்ட
வீழிவாயொருமாதராள்வியன்மணித்தேரி
னுழிவாயெழும்பூழியுமார்ந்ததென்றுடலிற்
பூழிநீரினன்மண்ணுருள்போற்றுதல்புரிந்தாள். (உ௩௫)

உள்ளவன்பினையுரைத்திருவிழியும்வால்வளைக
டள்ளிமுன்கையுஞ்சரிந்திருங்குழலும்வம்பிளகி
விள்ளநித்திலமுலைகளும்விளங்குமேகலைமண்
கொள்ளவல்குலுங்காட்டினளொருபசுங்கொடிக்கே. (உ௩௬)

வேதமெய்நெறிப்பிழைத்தவர்வியனெயிலழித்த
மாதர்பங்குடைவள்ளலோமாயனேவயனே
காதன்மல்கியதேரொடுங்கதிர்மணிவீதிப்
போதன்மல்கியபுண்ணியனெனச்சிலர்புகன்றார். (உ௩௭)

ஒருவனேயுலகத்தினெவ்வொருத்தற்குவெவ்வே
றருமைமைந்தனுயப்பனுயநுசனுய்முன்னுய்
மருகனுய்மருமானுமாய்மைத்துனனுகிப்
பொருவின்மாதுலனுகியும்பொலிவதுபோல. (உ௩௮)

அரியென்பார்க்கவனுயயனென்பவர்க்கவனுய்ப்
பரனென்பார்க்கவனுயெவரெங்ஙனம்படர்ந்தார்
தெரியவன்னவர்க்கத்தருதெய்வமாய்நிறமா
யுரியவாயுளாய்வடிவமாயுலாத்தருமேல்வை. (உ௩௯)

வெய்யதானவர்தந்துரன்விகண்டனென்றிருவ
ரையனேரெதிரத்தருகாசியிலமர்ந்த
பொய்யிலாதநற்புரோகிதன்புத்திரரென்ன
மையன்மாயையினுருக்கொடுவெல்விரைந்தடுத்தார். (உ௪0)

உழுவலன்பினர்போல்வருமோரிருவரையும்
வழுவிலாதெதிர்கொள்பவர்போன்மகோற்கடர்தா
மெழுமணிப்பொலந்தேரினின்றிருநிலங்குதித்துத்
தழுவவன்னவரவர்தமையுடன்றழுவினரால். (உ௪௧)

மழைத்தடம்புயத்திறுக்குபுமகோற்கடர்வீதி
யுழைத்தகைத்தவல்லவுணருள்ளாக்கமும்வலியுந்
தழைத்தவஞ்சமுமாயையுந்தனுவையுமொருங்கே
குழைத்துவிட்டனரனிச்சமென்குளிர்மலர்போல. (உ௪உ )

காசியுள்ளவரனைவருங்கண்டுகைதொழுதார்
காசிபன்கதிர்மணிப்பொலந்தேரிடைக்கலந்து
காசிலாக்கவின்வீதியிற்சென்றனர்பலகாழ்க்
காசினல்குலார்கண்ணுடுகெருத்துடன்செல்ல. (௨௬௩)

பண்டைவானவர்பதைப்புறும்பதங்கனென்பவனு
மண்டுமோயையின்விதுலனென்பவனும்வல்விரைந்து
சண்டமாருதவுருக்கொடுதெருகிரைசாயக்
கொண்டல்கீழுகக்குரைப்பொடுங்குறுகுதலுற்றார். (௨௬௪)

மாடமாளிகைகோபுரம்வாரணப்பித்தி
கூடமாதிகளகழ்ந்துசெல்வீதியிற்குவித்துப்
பீடருமணித்தேரினைப்பெயர்த்துறமறித்துச்
சாடமேவினர்நகரெலாந்தளர்ந்ததென்செய்யும். (௨௬௫)

வந்ததானவர்வஞ்சனைமகோற்கடரறிந்து
வுந்திமேல்வளர்நாகத்தைவிடுத்தனருலகஞ்
சிந்திமேலடர்வளியுருச்சீறிவாய்மடுத்த
தந்தின்மானவேலவுணர்தம்முருவொடுநின்றார். (௨௬௬)

புலத்தின்மேதகுமகோற்கடர்பொள்ளெனவவனித்
தலத்திற்பாய்ந்தவர்தாழ்சிகையிரண்டையுந்தமது
வலத்தின்மேதகுமொருகையிற்பற்றிவட்டித்து
நிலத்திற்சாலிபோன்மோதிநீணகர்ப்புறத்தெறிந்தார். (௨௬௭)

சிதர்ந்துமாளிகையாதிகடெருவிடையடைத்துப்
பதர்ந்தராதலமிடாவகைக்கிடந்தமைபார்த்தார்
கதழ்ந்துவீதிவிட்டவையெலாங்கவின்றமுன்னுருவா
யிதந்தழாலுறவிருந்தனதிப்பியமெய்த. (௨௬௮)

மறுவிலாவவிமுத்தமாண்மன்னவனேக்கிச்
சிறுவனுமெனவெண்ணினமிவனையென்செய்தா
நிறுவுகாரியத்தாலிவனிமலனேயென்று
முறுகுகாதலின்வலம்வந்துமுறைமுறைப்பணிந்தான். (௨௬௯)

ஆடலம்பரித்தேர்கடாயாடகமணிகண்
மாடலந்துவந்திரந்தவர்க்களித்திடுமன்னன்
றேடலர்ந்ததார்தோரணமாதிகடுறுமிப்
பீடலங்குதன்கோயின்முன்பெட்பொடுமடுத்தான். (௨௭௦)

கறையிலாமுனிவரன்மகன்கதிர்மணிக்கோயி
லுறையவுட்புகும்வேலையிலுலைக்குதுமென்னக்
குறைவில்வஞ்சனையாலுயர்கூடனென்றொருவன்
னறையுமத்தலைவாய்தலினடைகலாய்க்கிடந்தான். (௨௭௧)

பதிதன்செய்கையையறிந்துபார்த்திபன்முகநோக்கி
யதிதிபுத்திரரைங்கையார்க்காயிரந்தாழை
முதிர்செழுங்கனிதகர்ப்பதுமுன்னினமென்றார்
பொதியினக்கணங்கொணர்ந்தனர்புடையிருந்தவரே. (௨௭௨)

நாளிகேரத்தின்மந்திரநறும்புனறாவிக்
கோளினீங்கியமகோற்கடர்குழுவினைப்பார்த்திட்
டாளியேறெனவனைவருமயன்றருங்கனிக
ளேியாகவிச்சிலையிடையெறிகெனச்சொன்னார். (௨௭௩)

ஒவ்வொருத்தரங்கொவ்வொருகனிகரமெடுத்துக்
கவ்வைமல்குறக்காட்டியசிலைமிசைதகர்த்தா
ரெவ்வமின்றியத்திரங்களாயிரங்கனிபலவுந்
தெவ்வன்கல்லுருவத்தையுஞ்சிதர்த்தனவம்மா. (௨௭௪)

உரைசெய்கூடன்வன்சிலையுருவொழியமுன்னுருக்கொண்
டரையனெஞ்சமுமஞ்சுறவாங்குளார்தம்மை
வரைசெய்தோள்களாலள்ளிவாய்மடுத்திடமுயன்றான்
விரையநாயகன்பரசினைவிடுத்துயிர்விளித்தான். (௨௭௫)

விளிந்தபின்னரும்வியனகரஞ்சநீள்புருவ
நெளிந்துநெற்றியினிமிர்தரநிமலனார்பார்த்தார்
பிளந்ததொண்டரைபெயர்ந்தவன்பாதலத்துக்கா
ணளந்துகாணருமகிழ்ச்சியினழுந்தியதகிலம். (௨௭௬)

ஆடுநீள்கொடித்தேரினின்றமலனாரிறங்கிப்
பாடுசேர்நிலத்தெய்தலும்பாவையரடுத்து
நீடுகாதலினரக்குநீர்சுழற்றிநீங்கினர்பின்
கூடுபூந்துகில்கோமகன்சுழற்றினனெறிந்தான். (௨௭௭)

ஈட்டமல்கியசனங்களைவிலக்குவித்தேந்த
னீட்டுமுன்கையைநின்மலர்தங்கையாற்பற்றிச்
சேட்டமல்கியபாதுகைதிருவடிதொடக்கி
நாட்டமல்கியவன்புடைக்கோயிலணண்ணினரால். (௨௭௮)

அரதனத்திறலிழைத்தொளியசும்புமண்டபத்தின்
சரதவன்பர்களுளம்பொருமடங்கலாதனத்தில்
வரதர்வைகினர்வணங்கினரனைவருமெதிரே
பரதநற்றொழில்விளைத்தனர்பாவையர்பலரே. (௨௭௯)

வணங்கினார்க்கெலாமகோற்கடர்திருவருள்வழங்கி
யுணங்குறாமகிழ்வாற்புறத்தொழிதரவிடுத்தா
ரிணங்குகாதலின்மன்னவனிருஞ்சனம்விலக்கி
யணங்குநேர்மனைமாதராதியர்தமையழைத்தான். (௨௮0)

வந்துமன்னவன்மனைவியர்மக்களாதியருஞ்
சிந்தையன்பொடுந்தெரிசனஞ்செய்தனர்பின்பு
கந்தமல்கியவறுசுவையடிசில்கைதொட்டான்
சுந்தரந்திகழ்திருவுருச்சுமுகர்தம்மோடும். (௨௮௧)

அந்திவந்துழியலங்கரித்தமளியிட்டமைத்த
சுந்தரந்திகழ்பள்ளியிற்சுமுகர்வீற்றிருந்தார்
வந்தெழூஉம்படைக்காவலர்வாய்தல்காத்திருப்பப்
புந்திமல்கியவிழைவினூற்பூபதியமைத்தான். (௨௮௨)

பாகசாதனன்பணிவிடைபுரியமுன்விடுத்த
பாகமேவியதோழர்களிருவரும்பசுஞ்சொற்
பாகதாமெனுஞ்சித்திபுத்திகள்பயின்றிருக்கும்
பாகர்யாங்குறவிருந்தனர்பணிபுரிந்திரவும். (௨௮௩)

பிறங்குவையகம்விழித்திடவிழித்தருள்பெருமா
னுறங்குலுற்றமவ்வையகமுறுஞ்சுகமடைய
திறங்கிளர்ந்துபூவணைமிசைநித்திரைகொண்டார்
மறங்கொள்வேற்படைமன்னனுமலர்விழிபடுத்தான். (௨௮௪)

வாரணசியின் மன்னவன் மனை புகுங்காறுங்
கோரராவியைக்குமைத்தமைகூறினம்பின்னர்த்
தீரராகியமகோற்கடர்சிலரவுணர்களை
வீரமேம்படவழித்தமையினிவிளம்புதுமே. (உஅஞ)

வேறு.

வைகறைமலர்விழிமலர்த்திக்காலையிற்
செய்கடனுலகெலாஞ்செய்யத்தாமுமோ
ருய்கதிநாடுவார்போன்றுஞற்றினார்
பொய்கழியன்பர்பாற்புகுமகோற்கடர். (உஅசு)

இளம்பருவத்தினுக்கியையவெம்பிரான்
வளம்பயின்வீதியின்மகாரொடாடலை
யுளம்பயின்மகிழ்ச்சியினுறச்செய்கின்றனர்
களம்பயில்வினைகள்கண்டோர்கடக்கவே. (உஅஎ)

வேறு.

வல்வினைநீக்கியாளுமகோற்கடர்காசிமன்ன
னில்லிடைவந்துளாரென்றியம்பிடக்கேட்டலோடு
நல்லிசைத்தருமதத்தனகைமலர்முகத்தனுகி
வெல்லருங்கழற்கால்வேந்தன்வியன்மணிக்கோயில்சார்ந்தான். (உஅஅ)

புண்ணியமுருக்கொண்டன்னபுரோகிதனடுத்தானென்று
தண்ணியகவிகைவேந்தன்சார்ந்தெதிர்கொண்டுதாழ்ந்து
வண்ணமென்றவிசுநல்கிமலரடிபூசையாற்றி
நண்ணியதெற்றுக்கென்னநவிற்றுவன்றருமதத்தன் (உஅகூ)

அகனிலமுழுதுமுய்யவடுத்தவர்தம்மைநீயிந்
நகர்முழுதுய்யக்கொண்டுநண்ணினைபயன்கனுன்கும்
புகழொடுபெற்ருய்நின்போற்புனிதர்களுளரோவென்று
முகமனன்கியம்பிப்பின்புமுன்னியவிழைவுசொல்வான். (உகூ0)

அத்தகுமகோற்கடர்க்கென்னகட்டின்வந்துதித்துநின்ற
வுத்தமவனப்புச்சான்றவொள்ளிழைமகளீர்தம்மைத்
தொத்தழல்சான்றதாகத்தோயமோடளிப்பநேர்ந்தே
னித்தகுகாரியத்தையினிதுநீமுடிக்கவென்ருன். (உகூக)

கொற்றவனதனைக்கேட்டுக்குரவனுர்மகார்க்குமுன்னர்ப்
பற்றுருவதுவையாற்றல்பண்பதுதானேவந்து
முற்றுறின்விடுக்கலாமோமுடிப்பதேகருமமென்று
தெற்றெனமனத்துட்கொண்டுதிருமணஞ்செய்வாமென்ருன். (உகூஉ)

மருதுடன்பட்டமன்னன்மனத்தினையறிந்துவாய்மை
யருதசீர்த்தருமதத்தனுங்கொழிந்தம்பொன்வீதிச்
சிறுருடனுடல்செய்யுந்தேவனைச்செங்கையெட்டு
மிறுலெனக்கண்டுகிட்டியெழிற்கரம்பற்றிச்சொல்வான். (உகூங)

கட்டழகுடையபிள்ளாய்கசியபனெனக்குநண்ப
னெட்டியிருவேமுக்குமொன்றுமற்றுடலேவேறு
முட்டறுதவத்தாலந்தமுனிவன்பால்வந்தநின்னைப்
பெட்டவுள்விழைவாற்காணப்பெரிதுமிங்கடுத்தேன்கண்டாய். (உகூச)

இனியெனதில்லந்தூய்மையெய்தவங்கின்றேயெய்தி
வனிதையரிருவர்தம்மைமன்றல்செய்தளித்துங்கொண்மோ
புனிதனேயென்றுகூறிப்பொங்கொளிச்சிவிகையேற்றித்
துனிவில்பல்வரிசையோடுஞ்சுமுகரைக்கொண்டுசென்ருன். (உகூரு)

பைத்தபொன்வீதியூடபடர்பெருமாயைதன்னாற்
கத்தவவுருவமாகிக்காமனுங்குரோதன்றானுந்
தத்தமுட்பொருவார்போன்றுதயங்கியெண்டிசையும்பூழ்தி
பொத்திமேனிவப்பவல்லேபுனிதனையடுத்தாரன்றே. (உகூ௬)

விலக்கவும்விலகலின்றிமேல்வருமவுணர்செய்தி
கலக்கமிலறிவிற்றெள்ளிக்கையிலோர்திரணங்கிள்ளி
யிலக்கம்வேசரியாய்வந்தவிருவருமாகவிட்டா
ரலக்கணையடியார்க்கெல்லாமறுத்தருள்கொடுக்குநாதர். (உகூ௭)

துணிபடுத்தெதிரேவிட்டதுரும்பவையிரண்டும்பூக்குங்
கணியையுமுணர்த்துநாமக்கடுங்கொலைமிருகமாகித்
தணிவில்வஞ்சனையாற்சார்ந்ததானவக்கரங்கள்பற்றிப்
பிணியுறவனத்திற்கொண்டுபெயர்ந்தனகணத்தினம்மா. (உகூ௮)

படரெரிவிளக்கெண்ணுதுபதங்கம்வீழ்ந்தவிதலேபோற்
கடவுளர்பெருமானுண்மைகருதலராகிநண்ணி
யடர்பெருமாயைவல்லவவுணர்களவிதனுக்கி
யிடர்தபுதருமதத்தனிறைஞ்சிநின்றிதனைச்சொன்னான். (உகூ௯)

நெருநலின்காறுநீசெய்கின்மலவிளையாட்டெல்லா
மிருசெவிகுளிர்ப்பக்கேட்டேயிணையறுமகிழ்ச்சிபூத்தேன்
மருவியவிற்றைஞான்றுமலர்விழிகுளிர்ப்பக்கண்டு
பொருவறுபேரானந்தப்புணரியின்முழுதுந்தோய்ந்தேன். (௩௦௦)

மண்டனின்மானைக்காட்டிமானினைப்பிடிப்பார்போலப்
பண்டையமறையுந்தேருப்பரம்பொருளானநீயிங்
கெண்டகுகதியினெம்மையிணக்கவெம்போலத்தோன்றி
யுண்டுடுத்துறங்கலாதியுற்றனையுனையார்தேர்வார். (௩௦க)

கண்டெனவிவ்வாறேத்திக்கலந்துடன்செல்லவாங்கே
குண்டனென்றசுரன்வேகக்குஞ்சரமாகத்தோன்றி
வண்டினம்புரளுமும்மைமதசலமொழுகமாந்தர்
விண்டனரிரியல்போகவீதியுட்புகுந்தானன்றே. (௩௦௨)

வேறு.

தடுக்கமுற்றியவீரர்கள்பலர்தமைச்சவட்டி
யடுக்கிநின்றபன்மாளிகையடியொடுந்தள்ளித்
தொடுக்கமுன்புறத்துறுத்தமென்பிடியினந்தனையு
முடுக்கிநின்றதுமொய்வலியசுரனுங்களிறு. (௩௦௩)

வளைநெடுங்கடல்கலக்கியமந்தரநிகர்ப்ப
வுளையநன்னகர்கலக்கிபமுருத்துவந்தடுப்ப
விளையுமன்பினற்றருமதத்தன்விரைந்துவந்தெடுத்தான்
களைகணுகியமகோற்கடர்தமைக்கரந்தேக. (௩௦௪)

எடுத்தகையினைமகோற்கடரிம்மெனத்தள்ளித்
தொடுத்துவந்தவர்துளக்கறத்தொடிக்கரமமைத்துப்
படுத்தபன்மணிச்சிவிகைநின்றிருநிலம்பாய்ந்து
விடுத்தவச்சத்திறனல்வரும்வேழமேலடுத்தார். (௩௦௫)

கிட்டிவேழத்தின்மத்தகத்திடைக்கிளர்கிரணங்
கொட்டுபன்மணிக்குழைகரங்கொண்டுறவெறிந்து
வட்டமிட்டதின்வாலினைமலர்க்கரத்தீர்த்து
முட்டிமுன்புறத்திருங்கரம்பற்றினனீர்த்தும். (௩௦௬)

அடிகளூடுறப்பாய்ந்துஞ்சேணகன்றுமண்மையினிற்
பிடிகொடாவகைநண்ணியும்பெயர்ந்துகுப்புற்று
நெடியமத்தகமிதித்துநீள்பிடர்த்தலையிருந்து
வடிமருப்புடைக்களிற்றினையூர்ந்தனன்மறுகில். (௫௦௭)

அண்டர்தம்பிரான்கடவியவடுசினக்களிறு
செண்டுகொண்டுநால்வீதியுஞ்சென்றுளந்தளர்ந்து
மண்டலத்தின்வீழ்ந்திறந்ததுமகோற்கடர்நீங்கிக்
கொண்டவோகையிற்சிவிகைமேற்கொண்டனர்நடந்தார். (௫௦௮)

தருமதத்தன்பொன்மனையகஞ்சார்ந்தனரவனு
மிருவியாதனத்திணையடிபூசனைபுரிந்தான்
மருவிவைகுழிமாய்ந்ததுமாக்கனின்மனையாள்
பொருவிலாற்றலள்சிரம்பையென்பாள்மறம்பூண்டாள். (௫௦௯)

அருளுமென்னுயிர்த்தலைவனையழித்தகாதகனைக்
கருதுவஞ்சனையாலுயிர்காதுவலென்னாத்
தருமதத்தனுக்கொக்கல்போற்றழைத்தமாயையினா
லொருமடக்கொடியாய்விடத்தயிலங்கொண்டுற்றாள். (௫௧௦)

வணங்கிநின்றனளமிழ்தெனத்துதித்தனள்வள்ளான்
மணங்கிளர்ந்தவித்தயிலநானிளக்கெனவகுத்தேன்
பிணங்கலின்றியான்பூசுகதில்லெனப்பெரிது
மிணங்கவோதினள்குய்யமோர்ந்தெம்பிரானிசைந்தான். (௫௧௧)

வேறுமென்றவிசிருத்தினள்விரைகமழ்குஞ்சி
கூறுசெய்துநெய்கொண்டுரைத்தனள்குரூஉச்சுடர்வெண்
ணீறுதுன்றியவுருவெலாநிரப்பினடேய்த்தா
ளேறுவன்கொடியேற்றியவிறைவனூர்மகற்கே. (௫௧௨)

மறுவில்விண்ணவராதியோர்மறுகமுன்னெழுந்த
முறுகுவெங்கனனஞ்சினைமுழுவதுமயின்று
மிறுதியில்லவர்மகற்குநஞ்சேறுமோவதுதா
னறுதிசெய்ததுசிரம்பையின்வாழ்க்கைநாளினையே. (௫௧௩)

கேடொருத்தர்பாற்கெழுமுவித்திடுங்கேழிலர்க்கே
கேடொருத்தாரலின்றியேகிளர்ந்துதான்செய்யுங்
கேடொறுத்திடப்படுமெனக்கிளப்பதுதான்செய்
கேடொறுத்திடச்சிரம்பையென்பாள்கெடுங்கேடே. (௫௧௪)

வேறு.

அனைவருமதனைநோக்கியானந்தக்கடலாடுற்றார்
வினைதபுமிறைவனாரும்வெறிப்புனலாடினார்பின்
மனையலங்கரித்துத்தன்மதத்தனுண்மகிழ்ச்சியோடு
கனைகழலரசன்சாரக்கடிவினைதொடங்கினானே. (௫௧௫)

அத்தனார்வேறுவைகியணிகலமணிந்துகொண்டார்
சித்திபுத்தியுநீராடித்திருமணக்கோலங்கொண்டார்
பத்தியிற்றருமதத்தன்பாணியினறுநீர்வாக்கித்
தொத்தழன்முன்னரீந்தான்சுமுகர்க்குத்தோகைமாரை. (௫௧௬)

தீம்புனலோடுபெண்டேதேவியராகிநின்ற
காம்புறழ்தோளினாரைக்கைத்தலத்தேற்றநாத
ரோம்புசெங்கனலிற்செய்யத்தகும்வினையூழிற்செய்து
தாம்பயின்றிருந்தார்மும்மைச்சகங்களுமின்பமார. (௫௧௭)

இன்னணமியம்புமேல்வையிருந்தவவியாதன்ருழ்வுற்
றின்னகைச்சித்திபுத்தியென்பவர்யாவர்பத்தி
மன்னியதருமதத்தன்யாவனீவருக்கவென்ருன்
கன்னியங்கமலவாழ்க்கைக்கடவுள்கேட்டுவெந்துகூறும். (௩௧௮)

மறைமுடிவின்னுந்தேருவக்கிரதுண்டர்சால
மிறைபுரிவாரைத்தாக்கும்விக்கினராசர்பின்னர்
முறைசெய்காசிபராஞ்செய்கைமுன்னரேமதித்துப்போற்ற
வறைதருதருமதத்தனுயினன்மலரின்மேலான். (௩௧௯)

அத்தனுர்சத்தியாகியவரையெஞ்ஞான்றுநீங்காச்
சித்திபுத்திகளேமுன்போற்றிருமணமிறைவராற்றிப்
பத்தியிற்கரங்கள்பற்றப்படர்ந்தயனுனதன்ம
தத்தனில்லகத்துப்பன்டைப்பெயரொடுஞ்சார்ந்தாரன்றே. (௩௨௦)

ஆதலிற்சுமுகர்மன்றலாற்றினரவர்கடம்மைத்
தீதறுவியாசவென்றுசெப்பிமேற்கதைகளெல்லாம்
வேதனங்குரைப்பான்மன்றல்விதிப்படிமுடித்தபின்றை
நாதனைவணங்கிமன்னன்றன்மனைநண்ணுகென்ருன். (௩௨௧)

மாதர்களிருவரோடுமெடங்கல்வாகனத்தையூர்ந்து
காதலின்மன்னன்பின்னர்க்கவனவாம்பரியிற்செல்லக்
கோதறுநகரிலுள்ளார்கும்பிட்டுமெறுகுமொய்ப்ப
மேதகுவரிசையோடுமேவினர்கோயினுதர். (௩௨௨)

காவியங்கருங்கட்செவ்வாய்க்கதிர்மணிமூத்தமூரற்
றேவியர்தம்மையந்தப்புரத்தினிற்றிகழவைத்துப்
பாவியபேரத்தாணிப்பைம்பொனுதனத்தினேறிப்
பூவியன்மாந்தர்போற்றப்புனிதர்வீற்றிருந்தாரன்றே, (௩௨௩)

ஒருங்கவணிருந்தமன்னனுசாத்துணையமைச்சராதிப்
பெருங்குணத்தவரைநோக்கிப்பேணுமென்மைந்தன்மன்றற்
கிருங்குணத்துயர்ந்தவாசானிவர்தமைத்தந்தானென்று
மருங்குவீற்றிருந்தஞானவள்ளலைச்சுட்டிச்சொன்னுன். (௩௨௪)

கேள்வியாற்கல்விதம்மாற்கிளர்ந்துசூழுணர்வாற்சான்ற
வாள்வினையாலுமிக்கவமைச்சர்கள்வணங்கிச்சொல்வார்
தாள்வினைமிக்கதேவாந்தகநராந்தகற்குநந்த
மூள்வினையறுக்குமிந்தமுதல்வனுற்பகைமையானேம். (௨௩௫)

படையொடுமவர்களீங்குபடர்ந்திவர்கையான்முத்தி
யடைவதுசெய்தபின்றையல்லதுநமதுமன்ற
றடையறமுடிவதில்லைச்சாரொருபக்கந்திங்க
ளிடையொழிகாறும்வாளாங்கிருத்தலேவேண்டுமென்முர். (௩௨௬)

அங்ஙனமாகவென்றேயரசனுள்ளமைந்துநின்ரு
னுங்ஙனமிருந்தநாதரோரிருபகைவர்தாமு
மிங்ஙனம்விரைவினெய்தியெங்கையின்மடிவதன்றி
யெங்ஙனம்போகவல்லாரெனநகைத்தியம்பினரே. (௩௨௭)

மந்திரத்தலைவராதியனைவரும்வணங்கிப்பின்னர்த்
தந்தமதிருக்கைபுக்கார்தரணியுங்கடலிற்புக்க
தந்தியிற்கடன்களாற்றியண்ணலார்மாதரோடு
கந்தமென்மலர்ப்பொற்சேக்கைகண்படைகொண்டாரன்றே. ()

வேறு.

அற்றைநாளிரவில்விதாரணன்சுவாலாமுகனடல்வியாக்கிரமுகவன்
வெற்றிசேரிவர்கணகரிணையழிப்பமேவினன்விதாரணன்காற்றாய்
முற்றினன்சுவாலாமுகனழலுருவாய்மூண்டனன்கோபுரவாய்தற்
பற்றிவாய்பிளந்தான்புறத்திரிவாரைப்பற்றிடவியாக்கிரமுகவன். (௫௨௧)

எரிந்தனமாடமிளகியோடினமிக்கெழில்வளருலோகங்கள்பலவும்
பொரிந்தனமணிகள்பொடிந்தனசிலைகள்புகையினான்மறைந்ததுநெடுவான்
கரிந்தனதருக்கள்விழித்தனர்பலருங்கலங்கினர்புகுமிடநாடித்
திரிந்தனர்செல்லுமிடந்தொறுஞ்செந்தீச்செறிதலிற்றெருமரலுற்றார். ()

கந்தணைகளிற்றைப்பிடியொடும்விடுத்துக்காற்றனைபரிந்தனர்சில்லோர்
பந்தியிற்றுரகம்விடுத்தனர்சில்லோர்பசுத்தொழுவகற்றினர்சில்லோர்
முந்துறுகன்றைமுடுக்கினர்சில்லோர்முதியரைப்பாலரைமகவை
யொந்திடத்துய்த்துமென்றனர்சில்லோரெரியிடைப்பட்டனர்சில்லோர். ()

புறத்தினிற்சிறந்தவியாக்கிரமுகவன்வகுத்தகீழதரமண்ணிடத்து
நிறத்தினிற்சிறந்தமேலுதடண்டநிலத்தினுநிலைத்திடவிருந்து
புறத்திடையிரிவார்தங்களையெல்லாம்பொள்ளெனவயிற்றிடைப்படுத்தான்
அறத்தினிற்சிறந்தவவிமுத்தமிவ்வாறழிந்ததுமூவர்தானவரால். (௫௫௨)

முழங்குதீக்குரைப்புஞ்சண்டமாருதத்தின்முழக்கமுங்கரிபரியாதி
தழங்குவல்லொலியுஞ்சனப்பெருங்குரலுந்தலைமயக்குற்றுவிண்ணிவந்த
வழங்குறுதூதர்நோக்குபுவிரைந்துமன்னவன்றுயிலெடுப்பினர்கள்
பழங்கணையறுக்குமகோற்கடர்தம்மைப்பார்த்திபன்பொற்றுயிலெடுத்தான்.

விழித்துநின்றுறங்கும்விநாயகர்வல்லேவெளிக்கொண்டுவேந்தனைத்தேற்றிச்
செழித்தபொற்கிரணக்குண்டிகைப்புனலைச்செங்கையினள்ளுபுதூவிச்
சுழித்தெழுங்கொழுந்தினங்கியைச்சூறாவளியொடுந்தொலைத்துநீள்வாய்தல்
வழித்தலைமறத்துவைகியவேங்கைவதனனைமருங்குறவடுத்தார். (௫௫௪)

புண்ணிடையறாதபரசுகையேந்துபூரணர்பேருருக்கொண்டு
மண்ணிடைக்கிடந்தபுலிமுகனதரமலரடியிரண்டினுமிதித்து
விண்ணிடைநிவந்தவுதட்டினைக்கரத்தால்விலங்குறப்பற்றுபுகிழித்து
எண்ணிடையறாதவன்பர்கள்போற்றவிருநிலத்திட்டனரம்மா. (௫௫௫)

வழிந்துகுகருணைமலர்க்கணானோக்கிமகோற்கடர்மாய்ந்தபல்லுயிரோ
டழிந்தமாநகரைப்பண்டுபோலாக்கியரசன்வாழ்கோயிலையடுத்தார்
பொழிந்துதேமலர்க்கண்மன்னவனிறைஞ்சிப்புரையறுமறைபலதுதித்துக்
கழிந்ததென்கவலைமுத்தொழினின்பாற்கண்டனெனொருபதத்தென்றான். ()

முற்றியவவுணர்வஞ்சனைக்கறுப்புமொய்த்தமெய்நிறப்பெருங்கறுப்பு
மற்றமைநோக்கியண்ணலார்தம்மையஞ்சுபுகறுத்தவானிருளு
மிற்றதுகாசிப்புத்தெழிலானோக்கவெண்ணிவந்தெய்துவான்போலக்
கற்றைவெண்கதிர்கால்வெய்யவன்கீழ்பாற்கடலிடைத்தோன்றினன்மாதோ.

வேறு.

காலையாற்றுங்கடன்கள்கழித்தபின்
மாலைவேற்கைமணிமுடிமன்னவ
னூலைநேரிடைநூற்றனவார்குழற்
சேலைநேர்விழித்தேவிக்கியம்புவான். (௫௫௮)

வாமமேனிமகோற்கடரென்பவர்
காமராச்சிரமத்தைக்கடந்திடை
நாமமாக்கணலிவனத்தெய்துழி
தூமவாள்விழியானைத்தொலைத்தனர். (௫௫௯)

இருவரன்னவன்மைந்தர்கடம்மையு
மொருகணத்தினுயிர்ப்பினழித்தனர்
கருவிமள்ளரைநூற்றுவர்கண்ணுற
வுருவினார்த்தவராவியுமோட்டினர். (௩௪0)

இந்தமாநகரெய்தியபின்னிவண்
வந்தவஞ்சகர்மாணுறுமாவியைச்
சிந்திநின்றமையாவருஞ்செப்பிடப்
புந்தியோகையிற்கேட்டனைபூங்குழாய். (௩௪௧)

இன்னுநம்மிடையெவ்விடரெய்தினு
மன்னவூறுமகற்றிடவல்லவர்
முன்னர்நாந்தவமுற்றும்பயத்தினான்
மன்னுமின்னவரைப்பெறுமாண்பினேம். (௩௪௨)

திருந்தவின்னும்பணிவிடைசெய்துமேற்
பொருந்துவாம்பொருணன்கையுமென்றனன்
முருந்துமூரலள்கேட்டுமொய்யன்பினால்
விருந்துசாலச்சமைத்தனள்வீறவே. (௩௪௪)

செய்யகோலினன்றீந்தயிலந்தன
கையினள்ளுபுகாசிபனுகிய
வையன்மெய்யிலணிந்தருவாசநீர்
பையவாட்டியொற்றுடைபணித்தனன். (௩௪௫)

புதியபூண்குழைபொன்முடியங்கதங்
கதிர்செய்யாழிகடகங்களாதியு
மெதிரிலாவிழைவாலணிந்தேத்தினான்
முதிருநீர்ப்புவியாளுமுறைமையான். (௩௪௬)

வேந்தன்றேவிவிரைந்தடிதாழ்ந்தனள்
காந்தனோர்கைகவின்பெறக்கூப்பின
ளேந்தலேயின்னடிசின்மிசைதரப்
போந்தருட்கண்புரிமதியென்றனள். (௩௪௭)

மன்னனைக்கொடுவெள்ளலுள்ளெய்தினர்
நன்னராதனநண்ணினர்மன்னவன்
றன்னதாவியன்னாள்சதுருண்டிக
ளென்னவும்பரிமாறியிறைஞ்சினாள். (௩௪௮)

காதலோடுகலந்தமுதுண்ணுழி
நாதனுரையுநாதர்பரிகலத்
தேதநீங்கவிருந்தபொருளையுங்
கோதைவேலவனுக்குபுகூறுவான். (௩௪௯)

அண்ணலேயடியேனின்றணிந்திட
நண்ணுகின்றநகைமணியன்றியு
மெண்ணிலாவணிவேறுமிருந்தன
வண்ணமார்நின்வடிவத்தினென்கொலோ. (௩௪௯)

அடியனேன்மனையட்டிட்டதன்றியும்
படியிலாச்சுவைப்பல்வகையுண்டிகள்
கடிதராக்கதிர்மாமணிப்பாத்திரத்
தடிகண்முன்னரமைந்தமையென்கொலோ. (௩௫0)

அற்புதத்தனவாமிச்செயலினைப்
பொற்புறத்தமியேற்குப்புகலெனக்
கற்பகத்தைவெல்காவலன்சாற்றலு
மற்புயத்துமகோற்கடர்கூறுவார். (ருக)

வேறு.

வேந்தர்கள்வேந்தனேவேறுநம்முடற்
காந்திகொளணிபலகலந்தகாட்சியும்
வாய்ந்தவேறுண்டிகண்மருவுபெற்றியு
நாந்தகவுரைக்குதுநயந்துகேண்மதி. (ருஉ)

தண்டகவனத்திடைத்தயங்கிநாளுநந்
தொண்டுசெய்திடும்புருசுண்டியென்றொரு
மண்டியமாதவன்வயங்கினனவ
னண்டரும்வழிபடுமரியகாட்சியான். (ருங)

அனையவனிற்றைநாளரசர்க்கேறனாய்
தனைநிகர்விநாயகசதுர்த்தியாதலா
லெனைநனிபூசனையியற்றியிவ்வெலா
நினைவரும்பத்தியினிரப்பினனரோ. (ருச)

பத்தியின்விழைவினாற்பகர்ந்தயாவையு
மித்தலைவந்தெமக்கினியவாயின
வத்தவன்பெருமையாரறியவல்லவ
ருத்தமவரசனேயுணர்தியென்றனர். (ருரு)

கள்ளவிழ்தாரினன்களித்துநாதனை
ரொள்ளியதிருமுகநோக்கியோதுவான்
வள்ளலேயத்தகுமாதவன்பதந்
தள்ளரும்பத்தியிற்றொழவீழ்ந்துளேன். (ருசு)

ஈங்கழைத்தவர்தமக்கினியநன்பொருள்
பாங்குறப்புரிவதும்படர்ந்துளேனெனத்
தாங்கியவன்பினாற்சாற்றக்கேட்டரு
ளோங்கியமகோற்கடருவந்துகூறுவார். (ருஎ)

பரந்ததண்டகவனம்படர்ந்துமன்னநீ
யரந்தைகளனுக்கியவரியமாதவன்
வரந்தழைசேவடிவணங்கியேற்றிநின்
றிரந்துநின்விழைவினையினிதுபோற்றுதி. (ருஅ)

மன்றலின்பொருட்டுநாம்வந்துநின்மனை
யொன்றியதுரைத்துநாம்வரவுரைத்தன
மென்றுமங்கவர்க்குறவியம்பிக்கொண்டுவா
துன்றியதவப்புருசுண்டிதன்னையே. (ருகூ)

பாணியாதேகுதியென்னப்பார்த்திபன்
சேணிலாவியபுகழ்த்தேவன்சேவடி
மாணிலாவியமுடிவயங்கத்தீட்டினா
னேணிலாவியபரியிரதமேறினான். (ருகூ)

புள்ளியற்பரிமணிப்பொலந்திண்டேரினை
யுள்ளகவேகமுமொழியத்தூண்டினான்
வெள்ளிடைநதிபலவிலங்கல்கானும்பின்
றள்ளினன்றண்டகவனத்தைச்சார்ந்தனன். (சுக)

மூவர்களுலகமுமொருங்குமுற்றியாங்
காவயிற்சிறந்தவாச்சிரமத்தெய்தினான்
றேவரும்வழிபடுஞ்செல்வத்தாபதன்
பூவடிவணங்கினன்போற்றினின்றனன். (௩௬௨)

போற்றினான்முகன்புருசுண்டிநோக்கிந
லாற்றல்சான்மன்னநீயாரிங்கெய்துதற்
கேற்றமாகாரியம்யாதியம்பென
மாற்றருமகிழ்ச்சியின்மன்னனோதுவான். (௩௬௩)

வாரணவாசியாண்மன்னனாயினே
னேரணிமுனிவரவீங்குநான்வருங்
காரணங்கேண்மதிகாமரென்மனைச்
சீரணிவிநாயகர்சேர்ந்துவைகினார். (௩௬௪)

நெருநலினறுசுவைநிறைந்தவுண்டிகள்
கருணையிற்கைக்கொளுங்காலத்தப்பிரா
னொருவநின்னியல்பினையுணர்த்தியுன்னைத்த
னருகுறத்தருகெனவருளியேவினான். (௩௬௫)

வந்தகாரியமிதுவருகவென்றனன்
கந்தமெனிற்றினான்களித்துமாதவ
னந்தில்வாழ்விநாயகரார்விளம்பெனப்
புந்தியின்மகிழ்வொடுபுகலும்வேந்தனே. (௩௬௬)

விசிகழற்கழலுடைவிநாயகப்பிரான்
கசியபர்புத்திரர்காசிவைப்பிடை
வசிதருமென்மகன்மன்றற்கெய்தினார்
நசிவிலாயறியெனநவிற்றுமாதவன். (௩௬௭)

விண்ணவர்முனிவரர்வேறுளாரெலா
நண்ணியகசியபர்நல்லவைப்பொரீஇ
யண்ணனின்மனையகமமர்ந்ததுண்மையேல்
வண்ணமல்கியவவன்மரபியாதென்றான். (௩௬௮)

வேறு.

மறையினாலயனான்மாயனால்வடிவால்வாக்கினான்மனத்தினான்மற்றுங்
குறைவிலாவளவாலறிவரிதாகுங்கூறியவிநாயகரியற்கை
நிறைபொருளானவவரியலதுவாய்நிற்பினுநெடியமாதவத்தோ
யறைதருமவர்தமருளினாலடியேனறிந்தவாறியம்புதுமறிமோ. (௩௬௯)

பராபரமாகிநித்தியமாகிப்பகாரும்வியாபகமாகி
விராவியசச்சிதானந்தமாகிவிளங்கியவிநாயகர்தாமே
தராதலத்தரட்டர்தமைத்தெறவதிதிதனையரென்றவதரித்தாரென்
றொராவருமெய்யன்புடையவர்பலருமுரைத்திடக்கேட்டுளேன்பெரியோய்.

அடியனேன்கண்ணாற்காணவல்லவுணராற்றல்சான்றவர்பலர்தம்மைப்
பொடிபடுத்தகற்றியிடர்களைவிலக்கிப்புரந்தனராருயிர்த்தொகுதி
படியிலாவிறைவர்பண்பினுளடியேன்பயின்றறிந்ததுமிதுவேயா
முடிவிலாத்தவத்துமுனிவனேயென்றுமொழிந்தனன்முறைபுரியரசன். ()

முனிவரன்மகிழ்ந்துமுழங்குநீருலகமுறைபுரிமன்னனைநோக்கி
யினிதிருந்திருகண்மூடுபுசற்றேயிருந்துபின்றிறவெனவியம்பிப்
பனிமலர்க்கண்கள்பார்த்திபன்மூடிப்பயிலமற்றன்னவன்சிரத்திற்
றனிமலர்க்கரமொன்றிருத்தினன்விடுத்தான்றராபதிமலர்விழிதிறந்தான்.()

விழித்தவன்வனமும்வனத்தமர்ந்திருக்குமெய்த்தவன்றன்னையுங்காணான்
செழித்தபல்வளஞ்சேர்காசியுந்தனதுதிருமனையிடத்தமர்ந்திருக்குங்
கொழித்தமெய்ப்புகழ்சேர்விநாயகர்தமையுங்கொம்மெனக்கண்டதிசயித்துச்
சுழித்தலைப்பட்டபிறவிவாரிதியைத்தூர்த்தவன்போன்மகிழ்பூத்தான். ()

மலரடிவணங்கிமகோற்கடர்முன்னர்மகிழ்வொடுநின்றுதானேகி
யலர்நிறைவனத்தையடுத்ததுமுனிவனடிமலர்பணிந்ததுமன்னு
னலமுறநோக்கிவினையதுமதற்குநலத்தகவிறுத்ததும்பின்னர்ப்
பலர்புகழ்முனிவன்செய்ததுமெல்லாம்பண்பொடுநவின்றனன்மாதோ. ()

குறுநகைமுகிழ்த்துமகோற்கடர்மன்னன்குளிர்முகத்திங்களைநோக்கி
மறுவலுநீபோய்க்கசானனரொன்னவருத்துரைவருகுவனென்று
ரறுதியில்கருணையமலனார்கிளந்தவவ்வுரைகேட்குமுனரச
னறுவிரைக்கானநலத்தகவிருந்தநற்றவன்முன்னுறநின்றான். (௩௭௫)

களித்திறும்பூதுபூத்தவனாகிக்கரிசறுமாதவனுலக
மளித்தருள்கொழிக்குமன்னனைமீளவடுத்ததென்னுரையெனவினவித்
தெளித்தருள்முதல்வர்கசானனரன்புதிருந்தியநும்மையாங்கணுக
விளித்தனரறிகவென்றனர்கேட்டமெய்த்தவன்பரவசனாகி (௩௭௬)

மெய்ம்மயிர்பொடிப்பவிழியினீர்வாரவிழுந்திடைநிலத்திடைப்புரண்டு
பொய்ம்மலியுலகமறந்தநெஞ்சுருகிப்பொருமிநின்றலறியிவ்வாறு
கைமலிபத்திக்கடலிடைமுழுகிக்களித்தபினரசனையுடன்கொண்
டைமலியடியொன்றிடையில்வைத்தொருதாளவிமுத்தநகரிடைவைத்தான்.

அதிசயம்பலவுமுடனிருந்தறிந்தவரசனப்பெருந்தவமுனியைக்
கதிர்மணியிழைத்தமனையகங்கொடுபோய்க்கவின்றவாதனத்திடையிருத்தி
விதியுளிபூசைபுரிந்துபன்மணியும்விசித்திரப்பட்டும்பேரணியு
முலிரழகெறிக்கும்விம்மிதப்பொருளுமுன்னுறவைத்தடிபணிந்தான். (௩௭௮)

வழிபடுமரசன்மலர்முகநோக்கிமாதவன்கசானனரெந்த
வுழியிருக்கின்றாருரையெனும்பதத்திலொளிர்மணிவீதியிற்சென்று
கழிபெருமகிழ்வாற்சிறாருடனாடிக்கசானனரெதிருறப்போந்தார்
செழிமகிழ்ச்சியினாலவர்தமைவேந்தன்றேவனாரிவரெனத்தெரித்தான். ()

கொற்றவன்றெரிப்பநோக்கியமுனிவன்கோலங்கண்முன்புபோலின்றிப்
பற்றிருகரமுமானிடமுகமும்பலவும்வேறாதலைமதித்துப்
பெற்றியாதாங்கொற்கசானனரென்றுபெரிதுளத்தயிர்த்தனனதனைத்
தெற்றெனவறிந்துமகோற்கடர்பண்டைத்திருவுருக்காட்டினரம்மா. (௩௮௦)

பத்திருங்கரமுமையிருபடையும்பனிமதிமவுலியும்பாங்கர்ச்
சித்திபுத்திகளுஞ்சிங்கவாகனமுஞ்சிந்தூரமுகமுமோர்மருப்புந்
தத்தொலிச்சதங்கைதழுவியபதமுஞ்சகலமும்புருசுண்டியென்பான்
பொத்துதன்னுளத்திற்கண்டிடுமாறேபுறத்தினுங்கண்டதிசயித்தான். ()

மண்ணிடைவிழுந்துபுரண்டெழுந்தாடிவலம்புரிந்தாரணம்பகர்ந்து
கண்ணிடையறாதுபெரும்புனலொழுகக்கரைந்துநெஞ்சுருகிநின்றலறிப்
பண்ணிடையறாதபணிமொழிமடவார்பாகனேநினையவமதியா
லெண்ணியபிழையைப்பொறுத்தருளென்றானிறைவனார்கருணைசெய்தருள்வார்.

தவமுனிவரனேயெவரெவரெந்தத்தனுவொடுமெமைநினைக்கின்றா
ரவரவர்க்கந்தவுருவுகொண்டருளுமருளினேமரட்டரைச்சவட்டி
யிவரிமையாரையளித்திடும்பொருட்டேயிப்பொழுததிதிநான்முனைபா
யுவமையிலாதமகோற்கடரென்னவுற்றிவணிருந்தனங்கண்டாய். (௩௭௩)

அய்யமுற்றெம்மையவமதித்தலினலருந்தவமுனிவனேயிக்கு
வையகமூன்றுமறிதராப்பண்டைவடிவுநின்விழியெதிர்தெரித்தாஞ்
செய்யவன்புடையோய்வேட்டனவரங்கள்செப்புதிதருகுதுமென்றார்
ருய்யமுன்னின்றார்தமைப்பணிந்திருடியுயர்வரமிரப்பவனுனன். (௩௮௪)

செவ்வியபொருளேநின்னையெவ்வுருவாய்த்தியானஞ்செய்திடினுமென்விழிமுன்
னவ்வுருவாகத்தெரிசனமருளியலர்க்தநின்செய்யதாண்மலரி
னெவ்வமில்லாதபத்தியெஞ்ஞான்றுமீவதும்வேண்டுமெற்றடியேன்
கவ்வியமடத்தாற்பிழைபுரிந்திடினுங்கறுத்திடாதளிப்பதுவேண்டும். (௩௮௫)

எண்ணியவடியார்க்காசைகளனைத்துமினிதுறநிரப்புகாரணத்தா
லண்ணலேயாசாபூரகரெனும்பேரணிந்திடல்வேண்டுமென்றிரந்தான்
கண்ணனுமறியாமகோற்கடரிரங்கிக்கரைந்தபல்வரங்களுங்கொடுத்து
நண்ணறுசுவையினல்வகையுண்டிநயந்துடன்மிசைந்துவீற்றிருந்தார். (௩௮௬)

செய்யகோல்செலுத்துமன்னவனிந்தத்திவ்வியதெரிசனம்பெற்று
முய்யலாமார்க்கமிதனின்வேறுகவுண்டுகொலோவெனப்பணிந்தான்
பொய்யெலாங்கழியநககருளாரெவரும்புக்கிருவோரையும்வணங்கிப்
பையவேவேட்டவரம்பலகொண்டுபெயின்றனர்தத்தமதுறையுள். (௩௮௭)

உடையநாயகன்பாற்புறவிடைகொண்டங்கொழிந்துபோய்த்தண்டகவனத்தி
னிடைவிராவியதன்னுச்சிரமத்தினிருந்தனன்புருசுண்டியென்பான்
றடையிலாதெவருமின்பமீதூரச்சார்ந்திடுமத்தினமொழிந்த
தடையுநாட்காலைப்பரிசனஞ்சூழவரசன்வீற்றிருந்தனன்றவிசில். (௩௮௮)

வேறு.

வேண்டியமாயைவல்லான்மேகனென்றுரைக்குந்தீயோன்
காண்டகுகணிதனுகிக்கைவலத்தக்கமாலை
பூண்டிடக்கரத்திற்சான்றபுத்தகம்பிடித்துச்சென்று
நீண்டவன்போலவைகுநிருபனையடுத்துநின்றான். (௩௮௯)

கொற்றவன்வணக்கஞ்செய்துகோலமார்தவிசுநல்கி
யுற்றநீயாரேகையினுறைந்தபுத்தகம்யாதென்ன
பற்றெறுவினவிநின்றான்பட்டிமைக்கணிதனெண்ண
முற்றியதென்றுவேந்தன்முகத்தினைநோக்கிச்சொல்வான். (௩௯௦)

வயங்குகந்திருவர்வைப்பின்மன்னிவாழ்கணிதன்யானே
யியங்கியகணிதநூலேயென்கரத்திருந்தகோசம்
பயன்குறித்தெனக்குநின்பாற்படர்ந்திலனுலகுக்கெல்லாம்
பயன்படல்குறித்தேயீங்குப்படர்ந்துளேனறிகமன்னு. (௩௯௧)

இதந்தமக்கீட்டுவோர்களீண்டியவுலகுக்கெல்லா
மிதந்தகப்புரிவாரன்றியேனையோரல்லர்கண்டா
யிதம்புவியாளுமன்னற்கெய்துதலின்றிவையத்
திதம்பிறவாமையுண்மையாதலாலிகல்வேன்மன்னு. (௩௯௨)

நினக்கிதமெடுத்துச்சொல்கேனீவிழைந்தாக்கிக்கேளா
யெனக்குமுக்காலஞானமெங்கணுநிகழுஞ்செய்கை
மனப்பொருவருத்தமின்றிவகுத்தறிந்திடும்பேறுண்டு
தனக்கொருகரியாச்சென்றவருகுவசாற்றுவேன்முன். (௩௯௩)

மின்னுகச்சோதமென்றுவிளங்கியஞெகிழிகொண்டு
தன்னுறுகூட்டுள்வைத்துத்தளர்ந்தழிகுருவிபோல
மன்னவமுனிச்சிறுனைவலிந்துநீகொணர்ந்துசேர்த்த
வின்னகர்வைத்தாயற்றலிடர்பலவுழந்தாய்மெய்யே. (௩௯௪)

விக்கினராசனந்தமெய்த்தவச்சிறுனென்றோர்தி
விக்கினமின்னுமெண்ணிலாதனவிரைந்துமேவும்
விக்கினமில்லாய்க்கன்ஞன்விரவியீங்கிருக்குங்காறும்
விக்கினமொழிவதில்லைவியோமத்திற்காற்றேபோல. (௩௯௫)

பண்டைநீபுரிந்தநல்லூழ்ப்பயிர்சியாலிநாள்காறு
மண்டுவிக்கினங்களெல்லாமாய்ந்தனவினிமேலீங்கு
மிண்டுவிக்கினங்கள்மன்றவிழுப்பயன்விளைத்தலன்றிக்
கண்டிடின்வாளாதேகுங்கடனிலைவேந்தர்வேந்தே. (௩௯௬)

நெடியவிந்நகரினின்றுநின்மலன்முனிச்சிறுனை
நெடிபடுவனத்திலின்னேநீக்குவையாயினின்பாற்
கொடியவனுகிவெப்பங்கூர்நராந்தகனுநின்போற்
படியறுநட்புநல்கும்பயமில்லைபின்புமன்னு. (௩௯௭)

அன்றியுமுரைப்பக்கேளாயசுத்தனேயகூசிசால
வொன்றியகபடன்யாருமுரையதிசூரன்றன்னி
னன்றுறமிக்கானென்னுமைவருளொருவனட்பு
மன்றவுண்டாயின்மாற்றுரின்றியும்வல்லைக்கேடாம். (௩௯௮)

ஐவருளிருடிமைந்தனரசனேநின்னின்மிக்கா
னெய்வளர்படையச்சேனைநீந்சுதிசூரன்கண்டா
யுய்வதுவேண்டினன்னுறவொழித்திடலேவேண்டு
மெய்வகையுரைத்தேனன்றிப்பொய்வகைவிளம்பிலேனே. (௩௯௯)

அறிந்தவரறியாதாரையறிவிக்கத்தருமநீதி
செறிந்தமன்னூலுஞ்செப்புந்தெம்முனைமுழுதும்வேலா
லெறிந்திடுமன்னுவெல்லாமினிதுறத்தெரிந்தேயானு
மறிந்துநீமாயாவண்ணம்வகுத்தனன்வையமுய்ய. (௪00)

பட்டிமைக்கணிதன்கூறப்பார்த்திபனன்னுஞ்செய்திக்
கொட்டினுன்போன்றுநெஞ்சத்தொட்டிலனுகிச்சொல்வான்
மூட்டறுசோதிடத்தின்மொழிந்தவையெல்லாமெய்யே
கட்டுபுநீயேகானிற்காளையைவிடுவென்றோதி. (௪0௧)

உழையரைநோக்கியிந்தவுயர்ந்தவற்ககன்றவீதி
விழைதகவிளையாட்டெய்தும்வித்தகன்றன்னைக்காட்டித்
தழைநகருள்ளார்யாவர்சார்ந்திவன்கொண்டுபோங்காற்
பிழைபுரிந்திடினுநீக்கிப்பெயர்தலேசெய்மினென்றான். (௪0௨)

கைபுதைவாயிற்றூதர்கணிதனையுடன்கொண்டேகி
மெய்புதைபுழுதியோடுவீதியில்விளையாட்டெய்து
மைபுதைநெஞ்சினனையடுத்தெதிர்காட்டிவிட்டார்
பொய்புதைகணிதன்வஞ்சம்பூரணரறிந்துசொல்வார். (௪0௩)

அணிவளர்கோயிலெய்தியரசனுக்கிதஞ்சொல்கின்றான்
கணிதனென்றுரைத்தாரந்தக்கணிதனுநீயோவென்று
மணிநகையிலங்கநக்குவாய்மலர்மலர்த்தினூரத்
தணிவறுவஞ்சனுள்ளந்தளர்ந்தவன்யானேயென்றான். (௪0௪)

இந்நகர்க்கிடுக்கண்யாவையெய்திடநின்றவேறே
யென்னிடையிடர்கள்யாவையெய்துவகணிதரேறே
கொன்னுநின்மதியிற்றேறிக்கூறுகவென்றார்தேவ
ரன்னவன்வஞ்சநெஞ்சுமாக்கையுநடுங்கினனே. (௪0௫)

படுங்கிழப்பருவத்தானும்பயில்பெருவாதரோக
மொடுங்குதலின்றிச்சாலவுலைத்தலினானுமாக்கை
நடுங்குவதென்றச்சத்தானடுங்கலைவேறுக்காட்டிக்
கடுங்கொலைவஞ்சநெஞ்சன்காரியமெடுத்துச்சொல்வான். (௪௦௬)

நலத்தினுயர்ந்தவிந்தநகரினிமுனிச்சிறானே
வலத்தினுயர்ந்தகோட்டுமலையினாலிருட்டுத்தன்னாற்
சலத்தினாலழிவதுண்மையிவற்றிடைத்தப்புமேனும்
புலத்தினாற்கடக்கலாற்றாப்புரைபலவின்னுமாமே. (௪௦௭)

மருவியநின்பாலூறுவருவனவகுத்துங்கேளாய்
பெருகுநீர்கிணற்றிற்றுஞ்சும்பெற்றியையதற்குத்தப்பின்
வெருவுநஞ்சுணவிற்சாவைவிடத்தினுக்குய்தியாயிற்
பருவறுமூறுமேலும்பலவுளபாலனேபார். (௪௦௮)

தினமொருநான்கினுள்ளேசேர்வனவிடர்களெல்லாந்
தினமொருநான்குமென்பின்செறிவனத்தெய்திவைகி
ணனகனேயிடர்களோம்பியழைத்துவந்துன்னைமுன்போ
லினமலியிந்தவைப்பினிருத்துவன்மைந்தவென்றான். (௪௦௯)

நல்லைநீயுள்ளவாறேநவிற்றினையுரைத்தவாறே
யொல்லுவலென்றுசாலவுவப்பவர்போலத்தேவர்
வில்லுமிழ்முத்தமாலைவிளங்குதன்களத்தின்வாங்கிக்
கல்லுறழ்மனத்துவஞ்சன்களத்தினிதணிந்தாரன்றே. (௪௧௦)

புனைகதிர்முத்தமாலைபொங்கெரியுமிழ்ந்துகாய
வனைகழலவுணன்வெந்துவயங்குவெண்பூதியானா
ணனைவருநோக்கிப்போற்றியதிசயமுற்றார்தப்பா
வினைகளும்விபரீதங்களாந்தனிமுதல்வர்வேண்டின். (௪௧௧)

வேறு.

வந்துரைத்தகணிதனுயிர்மாய்ந்தொழிந்தபின்கூபன்
கந்தரனென்றிவரிருவர்காமர்புறநகரடுத்தா
ரந்திலிருவருமுறையேயருங்கிணறுந்தவளையுமாய்ச்
சுந்தரமல்குறக்காட்டித்தொண்டுளபோற்காட்டினார். (௪௧௨)

இறான்மலியும்பசுமலர்க்கோட்டிணர்ப்பொதும்பர்புறநகர்வாய்ச்
சிறார்களொடுமகோற்கடர்தாஞ்சென்றுவிளையாட்டயர்வா
ரறாதபெரும்புனலினொடுமொழ்ந்தகன்றதனிக்கிணற்றை
மறாதவிழைவுளமீர்ப்பமருங்கடுத்துநோக்கினரால். (௪௧௩)

மகாருமவருடனவற்றின்வனப்பினிதுநோக்கினவ
ருகாதவிழைவினராகியொருவரொருவரைநோக்கி
யகாதமுறுகிணற்றளவையறிதுமெனத்தனித்தனிப்புக்
கிகாவுளமுமிகத்துருவியெல்லைதெரியாதெழுந்தார். (௪௧௪)

அளவையறிந்திக்கிணற்றினடிபரப்புமணலள்ளி
வளர்கரத்திற்காட்டுதியேல்வல்லையெனமகாருரைப்ப
விளமையுருவினுக்கேற்பவெம்பெருமானதற்கிசைந்து
தளர்வறத்தண்ணீர்ப்பாய்ந்துதாழ்ந்தனரக்கிணற்றூடு. (௪௧௫)

விரையமகோற்கடர்பாயவிரிந்ததிருங்கடலென்ன
வுரையினொடுவிளங்குகிணறுதனிடைவாழ்மண்டூகம்
வரையெனவோங்கியதவர்தாம்வல்லையதனளவறிந்து
நுரைகுமிழியெழவடிமண்ணொண்டுமலர்க்கரத்தெழுந்தார். (௪௧௬)

தொடித்தடங்கைத்தலத்துமணமுெக்கசிறுரெதிர்வீசிப்
படித்தலத்தில்விரிந்தபுனற்பரப்பின்விளையாட்டயர்ந்தா
ரடித்தலத்தைமண்கேமகன்வாயிற்பிடித்தழுத்திக்
கடித்ததததனொருகாலேக்கைப்பற்றிக்கரையெறிந்தார். (சகஎ)

விரிந்தபுனற்கிணற்றுருவும்வீங்குதவளையினுருவு
நெரிந்தனவங்கேயவுணர்நிசவுருவாயிருவோரும்
பரிந்துயிர்போய்ப்படித்தலத்துபருப்பதம்போல்விழுந்தனர்க
டெரிந்தரசனுதியர்கள்சிந்தைமகிழ்கூர்ந்தனரால். (சகஅ)

விடுத்தபெரும்படைத்தலைவர்வேறடுத்துஞ்சேர்ந்தடுத்துந்
தொடுத்தபெருமாயையெல்லாமவர்களொடுதூளாகக்
கெடுத்தமகோற்கடராற்றல்கேட்டுநெராந்தகன்வெகுண்டு
மடுத்தவுளக்கவலையொடுமெறுகுவானிது துணிந்தான். (சகக)

வேறு.

தந்தைக்கிளையான்பதங்கனெனச்சாற்றும்பெயரான்புத்திரருண்
மைந்துமிகுமம்பாசுரனேவலிகேழந்தகாசுரனை
யுந்துமொளித்துங்காசுரனையொருங்குவிளித்துச்சிறப்புதவி
நொந்தவுளத்திற்பெருங்கவலேமுகத்திற்றேன்றநுவல்கின்றுன். (சஉ0)

வேறு.

வெள்ளணியணிந்தஞான்றேவிண்ணவர்துயரத்தாழ
வெள்ளருமதுகைசான்றவெண்டிசைக்களிறும்வென்றீர்
முள்ளெயிற்றிரண்டுதோன்றுமுன்னம்பாதலங்களேழுங்
கொள்ளைகொண்டாங்குள்ளாரைக்கொடுஞ்சிறையிட்டுவைத்தீர். (சஉக)

கள்ளவிழ்மலர்மென்கூந்தற்காரிகைமடவார்வீழாப்
பிள்ளைமைப்பருவத்தானேபெருந்திறல்பலவுஞ்செய்தீ
ரள்ளெழிற்றருணத்தோடுமருங்கலைபலதேர்காலத்
துள்ளுறினுமக்குமுற்றுவொண்பொருளுலகத்தின்றே. (சஉஉ)

தருப்பையுமிலையுங்காய்ந்தசமிதையுங்கானிற்கொண்டு
கருப்படமூத்தீவேட்குங்கசியபனெனப்பேர்போய
திருப்பொலிமுனிச்சிறுன்போய்ச்செழும்புனல்வாரணுசி
யிருப்பவனுன்றன்னையிறுத்திவண்வருமினென்றுன். (சஉஙு)

தமையனைநோக்கியந்தத்தானவர்விழைந்துசொல்வா
ரெமையனுயிருத்தலானுமெங்களைக்காத்தலானு
மிமைவிழிகாக்குமாபோல்யாங்களேநாடிமுன்ன
ரமைவுறச்செய்யத்தக்ககருமமேயறைந்தாயன்றே. (சஉச)

அன்றியுநினக்குப்பின்னையடியரேங்களுக்குத்தாதை
யென்றியஞ்சூறையாகிமேவிடநெருநல்வல்லே
கொன்றனன்முனிச்சிறுனக்கொடும்பகைமுடிக்குநாளு
மின்றலாலில்லையென்றேயெழுந்தனரேகினுரே. (சஉ௫)

பருதியுமொளிப்பக்காசிப்பதியுடனுலகமெல்லா
மருவுநண்பகலேயந்தகாசுரன்மாறுத்திண்மை
யிருளெனமறைத்தானிந்துவுடுவிவையில்லாவந்தக்
கருகிருளிரவிற்கூகைக்கணங்களுங்காட்சியற்ற. (சஉசு)

இரவியுமதியுமாயுமிறுதிநாளடுத்ததேயோ
பரன்விழிமீட்டுந்தேவிபாணியாற்புதைத்திட்டாளோ
வரமலிவிந்தமீட்டும்வளர்ந்ததோயாதோவல்லே
யிரவுவந்தடுத்தவாறென்றெனைவருமினைதலுற்றார். (சஉஎ)

அந்தணரரசர்நாய்கரடுத்தசூத்திருஞ்செய்யுந்
தந்தனவினைமுற்றுமைதளர்ந்துளம்வெருவினார்கண்
மந்தர்கள்சோம்பலேரவலாளர்கண்மறுகலின்றி
நந்தியவிரவைமெச்சிநலத்தகவுறங்கினாரே. (௪௨௮)

காமுகர்கவலையின்றிக்காரிகைமடநல்லார்பா
லேமுறுகலவியாற்றியின்பவெள்ளத்துட்டாழ்ந்தார்
தோமுறலஞ்சித்துஞ்சமேற்றுகையர்கலவிசெய்யார்
தீமுதல்விளக்கமில்லிற்செறித்தனர்சிலர்வைகுற்றார். (௪௨௯)

வினைவயிற்சென்றமாந்தர்மீண்டுதம்பதிசேராமற்
கனையிருட்பகையிற்பட்டுக்கவன்றிருந்தனராங்காங்கே
துனையமுனிரையிற்சென்றபறவையாதியுந்துன்புற்ற
நனைமலர்ப்பொதும்பராதியிருக்கைகளுடாவாகி. (௪௩௰)

கங்குலிவ்வாறுமன்னக்கடுங்கொலைமாயைவல்ல
துங்கனொன்றுரைக்குந்தீயோன்றன்னகர்க்காசிதன்னை
யெங்கணும்வழிகளின்றியேகமாய்வளைத்துக்கொண்டான்
பங்கமில்பறம்பாய்பத்தியோசனைப்பரப்பினம்மா. (௪௩௧)

சோதிமாமரங்களானுஞ்சோதிவல்லிகளினானுஞ்
சோதியார்திரணத்தானுஞ்சோதிவான்மணிகளானுஞ்
சோதியேயுருக்கொண்டென்னத்துலங்கியதிமையரானுஞ்
சோதியாவளமைசான்றதூங்குவீங்கருவிக்குன்றம். (௪௩௨)

அம்மவீதென்கொலோமுன்னறிந்திலநகரின்பாங்கர்ச்
செம்மணியாதிபம்பச்சேண்டொடநிவந்தவேங்கை
கைம்மலையாதியோடுகவின்றதோர்குன்றமென்னா
விம்மிதம்பயப்பதேனும்வெருவினர்நோக்கினாரே. (௪௩௩)

பொருப்பெனத்துங்கன்சூழ்ந்துபுறநகர்க்கிடப்பவந்தப்
பருப்பதந்தவழுமேகமாகியம்பாசுரன்று
னெருப்பெனமின்னுக்கான்றுநெடுவிசும்பெழுந்துமூடி
யுருப்பொலியுருமுத்தோற்றியுகுமழைத்தாரைகான்றான். (௪௩௪)

வீரையேவிசும்பிற்போந்துவியனதிக்குலத்தையெல்லாந்
தாரையாயொழுக்கியாங்குத்ததைந்துவீழ்தாரைக்கூட்டம்
பாரையுங்குழித்தநீண்டபன்மணிமாடஞ்சாய்த்த
வூரையுமழித்தவெள்ளமுராய்கிமிர்ந்தெழுந்ததெங்கும் (௪௩௫)

விட்டொளிபரப்புநேமிவெற்பினுள்ளிடத்தையீற்றி
னட்டெழுகடலுமொன்றாயந்தரத்தெழுமாபோல
வட்டமாமலையாய்த்துங்கன்வளைந்திடப்பட்டகாசி
கொட்டியமேகவெள்ளங்குமைத்துமேலெழுதலோடும். (௪௩௬)

அத்தனாரறிந்துதாமோரடர்சிறைப்பறவையாகிப்
பத்தியோசனைவிண்ணோங்கிப்படர்ந்தவெண்டிசையுஞ்சாகை
மெத்துறப்பரப்பியெண்ணில்வீழ்நிலங்கிழியவூன்றுந்
தொத்திலையாலமொன்றுதோற்றியன்னதன்மேல்வைகி. (௪௩௭)

சிறகினையலைத்தாரந்தச்சிறகினின்றெழுந்தகாற்றான்
மறமலிமேகந்துய்யாய்மாதிரத்தொதுங்கிற்றூர்சூழ்
திறமலிசிலம்புசாலச்சிதர்ந்ததுபார்வைத்தீயா
னிறமலிபிருணீங்கிற்றுநெடும்புனல்வறந்ததம்மா. (௪௩௮)

வருகுருகிறகர்க்காற்றுன் மாயைகளுலேந்தவின்னுங்
குருகுறுவலியைக்காண்டுமெனக்குறித்தெழுந்தன்றேரு
ளொருவனற்கண்ணியானுனொருவன்வேருலமானு
னொருவன்வேட்டுவனுயாலத்துறைகுருகோட்டினுனே. (சஙகூ)

வேடனேயலகிற்றூக்கிவேறுறுமாலிற்பாய்ந்து
கூடியகண்ணியோடக்கோளியுங்காலிற்றூக்கிப்
பீடியகிமலப்புள்ளுப்பெரிதும்விண்ணிவந்துபோகி
நீடியதவலோகத்தினின்றுமண்விடுத்ததன்றே. (சச0)

அந்தகன்றுங்கனம்பாசுரனிவராவிமூன்றும்
பந்தம்விட்டகலநாதர்பாதமேபற்றுநின்ற
வெந்திறன்மாயைநீங்கவீங்கியவுடலமூன்றும்
வந்துயிர்த்தெடுத்தநற்றுய்வளர்மனைமுன்றில்வீழ்ந்த. (சசக)

நுறுங்கியவாக்கையோடுநோன்றலேக்கிடந்தார்தம்மை
யிறுங்கொடிநுசுப்பிற்பாங்கியெதிருறநோக்கியோடிப்
பெறுங்களியோடுவைகும்பிரமரைக்கம்மாவாவி
யறுங்கொடியோர்கண்மூவரங்கணத்துக்காரென்றுள். (சசஉ)

விரிச்சிநன்றெழுந்ததில்லேவிழியிடமாடிற்றில்லே
வரிச்சிலேமைந்தராவிமாய்ந்துவீழ்ந்தனர்கொலென்று
நெரித்தகையினளாயோடிநீளொளிமணிச்செய்முற்றந்
தரித்தமுப்பிணமுநோக்கித்தனேயரென்றுவிசோர்ந்தாள். (சசங)

சோர்ந்தவளுயிர்த்துப்பின்னர்த்தொடிக்கரமெறிந்துகூந்தல்
வார்ந்துமண்வருடவைகிவண்டலேயசைத்தலந்தாள்
சார்ந்துடனவலித்தாவித்தையலர்தம்முட்டேறி
யோர்ந்தவடேறும்வண்ணமுரைத்தனர்பழமைநாடி. (சசச)

வஞ்சியர்தேற்றத்தேறும்பிரமரைவன்னியஞ்சும்
வெஞ்சினங்கொண்டுமைந்தராவியைவிளித்தான்றன்னேத்
துஞ்சுவித்திடர்செய்யேனேற்குழெரிமுன்னர்வேட்ட
மஞ்சனேப்பிழைத்துச்செல்லுமாதுநானுகவென்றுள். (சசரு)

கொன்றிடப்பட்டாரோடுகொன்றவன்றனேயுங்கூட்டி
நன்றெரிபடுப்பேனந்தநாள்வருங்காறுநந்தம்
வென்றியந்தனேயராக்கைவெறிவளர்தயிலத்திட்டிங்
கொன்றுறக்காமினென்றுசிலர்தமையுறுத்தினுளே. (சசசு)

தூதர்கள்சிலரைக்கூவிச்சுந்தரமைந்தராவி
போதலேச்செய்தான்யாவன்புகுந்தறிந்துறுவீரென்று
மேதகுசிறப்புநல்கிவிடுத்தனள்சிலரைக்கூவி
நாதனும்பதங்கற்கீதுநவிற்றுகென்றேவினுளே. (சசஎ)

இருதிறத்தவரும்போந்தாரிவர்செயலின்னதாகக்
குருகுருவானூர்பின்புகோலமெய்யுருவங்கொண்டு
திருநகராக்கிச்சாலசெத்தவாருயிருநல்கி
நிருபனேத்தெடுப்பவன்னுனெடுமனேயிருந்துவாழ்ந்தார். (சசஅ)

நண்ணலர்க்கிடியேறன்னநராந்தகனரசாண்மன்ற
மண்ணியதூதர்முன்னேயவிமுத்தமடுத்துமாய்ந்த
திண்ணியபதங்கன்செய்திதேர்ந்துமீண்டேவிநின்ற
வண்ணமென்கூந்தலாட்குவயிற்றெரிதழுவச்சொன்னூர். (சசகூ)

கேட்டலுமாவிசோர்ந்துகேதமாங்கடலின்மூழ்கி
நாட்டங்கள்புனலறாமனல்லொளிமுழுதஞ்சாம்பச்
சேட்டணிசிதர்ந்துமைந்தரன்றியேசிறியேனாவி
வாட்டினரோசெந்தீமுன்வரைந்தவர்தாமுமென்றாள். (௪௫௦)

பிரமரையவலத்தாழ்ந்துபேதுறுமளவிற்காசிப்
புரமடுத்தொற்றிமீண்டபுலனறிதூதர்தாழ்ந்து
வரமலிமுனிவன்மைந்தன்மைந்தரைக்கொன்றான்முன்னே
விரவுநின்கணவனாதியோரையும்விளித்தானென்றார். (௪௫௧)

நன்றுநன்றவுணராற்றலின்னணநசிக்குமேயென்
றொன்றியமானந்தாங்குமுளத்தளாயவுணர்கோதை
யின்றவனுயிரையானேயெய்திவாய்மடுப்பலென்னா
வன்றெழின்மிகுந்தகீர்த்தியதிதிபோலுருக்கொண்டாளே. (௪௫௨)

தீத்தொழிலவுணர்சில்லோர்சேடராய்மருங்குசூழப்
பார்த்தருங்கொலைசூழ்மாதர்பாங்கியராகிமொய்ப்ப
வேத்துநல்லமுதினானுமிடைந்தறாவிடவூண்கொண்டு
நீத்தவருளமும்வீழநெறிச்சென்றுகாசிபுக்காள். (௪௫௩)

வேறு

அதிதிவந்தனளென்றணிமாநகர்ப்
பதியுமாடவர்பாவையர்யாவரு
மதியினோகைமலிதரத்தாழ்ந்தனர்
புதியபூவிரைபூங்கனிவீசினார். (௪௫௪)

தண்ணென்மென்புனறாள்சொரிந்தார்சிலர்
சுண்ணம்வீசித்தொழுதகன்றார்சிலர்
கண்ணிதாரொடுகைக்கொடுத்தார்சிலர்
நண்ணுபாகடைநன்களித்தார்சிலர். (௪௫௫)

பூணும்பூந்துகிலும்பொழிந்தார்சிலர்
மாணும்பொன்னுமணியுமுய்த்தார்சிலர்
காணுங்காட்சிகிடைத்ததென்றார்சிலர்
பாணும்பின்னிடப்பாட்டயர்ந்தார்சிலர். (௪௫௬)

ஆடினார்சிலராங்கவண்மாடுறக்
கூடினார்சிலர்கொற்றவற்கோதிய
வோடினார்சிலருண்ணயந்தார்சிலர்
நாடினார்சிலர்நாடிக்கண்டார்சிலர். (௪௫௭)

ஈண்டியமாநகரின்னணம்போற்றிட
வாண்டுக்கைதவத்தண்ணலனியமாதரா
ணீண்டகோயின்ஞெரேலெனப்புக்கனள்
பூண்டவந்தப்புரத்தினைநண்ணினாள். (௪௫௮)

வாயிலோதலுமன்னவன்கற்பக
மேயினாள்விழைவோடெதிர்கொண்டன
டாயினல்லவள்சார்ந்தனைவம்மெனக்
கூயினாள்கொடுத்தாள்பொலன்சேக்கையே. (௪௫௯)

அருத்தியோடடிப்பூசனையாற்றினண்
வருத்தந்தீர்த்தனண்மாதவளின்றிநீ
யொருத்தியீங்குறுகாரணம்யாதென்றாள்
கருத்தொவ்வாதவள்கட்டுரைப்பாளரோ. (௪௬௦)

வேறு.

கணவன்பிரியவிருந்தாலுங்கனிவாய்ச்சிறுவர்பிரியவொரு
கணமுமிருக்கமாட்டார்கள்காதல்சிறந்தமடவார்கள்
வணர்மென்குழலாய்மகோற்கடரைக்காணாதிருக்கமாட்டாம
லணவினேனினிக்குறுவரனையருங்கானகத்தின்விடுத்தென்றாள். (௪௬௧)

மன்னன்மனைவியதுகேட்டுமணிவீதிகளில்விளையாட
முன்னஞ்சிறானையழைத்துவரமொழிந்துவிடுத்தானொருதூது
பின்னரரையன்றனைக்கொணரப்பேசிவிடுத்தானொருதூது
நன்னர்மகிழ்விற்றூதுவர்களிருவர்மாட்டுநண்ணினரால். (௪௬௨)

வேந்தன்மகிழ்ந்துவிரைந்தேகிவிரைமென்மலர்களடிதூவிக்
காந்துமணிகள்கலன்றூசுகனியாதியகையுறைவைத்துப்
பூந்தண்குழலாயெனைப்பொருளாப்புகன்றீங்கடுத்தாயோவென்று
சாந்தமொழியாற்பலதுதித்துத்தாழ்ந்துவணங்கியிதுசொன்னான். (௪௬௩)

அன்னாய்சிலநாளிங்கிருமோவடியேன்சிறுவன்வரைவாற்றிப்
பின்னானினையுமகோற்கடராம்பெருமான்றனையும்பேர்தந்து
மன்னானின்றகசியபர்பால்வதியவிடுத்துமீள்வலெனத்
தன்னாதரவினெடுத்துரைத்தான்றையலதுகேட்டுரைசெய்வாள். (௪௬௪)

இமைக்கும்பொழுதும்பிரியாதவென்னைமருட்டிவிநாயகனார்
தமைக்கொண்டகன்றாய்கன்றகன்றதலையீற்றாவிற்றளர்வுற்றேன்
குமைக்குமயிலோயினிக்கணமுங்குமரற்பிரிந்துமுனியேவ
லமைக்கும்வலியிலேன்முனியுமமையாவெனைவிட்டரைக்கணமும். (௪௬௫)

அரையாவதனாலிப்பொழுதேயழைத்துச்சிறானைக்கூட்டாயென்
றுரையாடளவின்மகோற்கடரங்குற்றார்கரவாமுள்ளகத்தின்
வரையாவசுரர்மடமாதுமைந்தாவருகவெனத்தழுவி
விரைவாலெடுத்துமடித்தலத்தின்வியப்பவிருத்திக்கொண்டாளே. (௪௬௬)

எம்மாதிரமும்பணிபுரியுமிறைவரவள்வஞ்சனைநாடி
யம்மாவெனக்கென்கொடுவந்தாயளியாயெனச்செவ்வாய்மலர்ந்தார்
தெம்மாணுளத்தான்பாங்கியர்கள்செங்கைக்கொணர்ந்தசிற்றுண்டி
கைமாமலர்க்கணிரப்பினாள்கணேசர்விரைந்துநனிநுகர்ந்தார். (௪௬௭)

நஞ்சுபொதிந்தசிற்றுண்டிநாதர்நுகரத்தானவர்கள்
வஞ்சிதனக்குமுடன்வந்தமாணாக்கருக்கும்பாங்கியர்க்கு
நெஞ்சுதுளங்கவிடவேகநெடிதுதலைக்கொண்டேறவவ
ரெஞ்சலுறாதவுயிர்சுத்தியெய்திக்கதிசேர்ந்தனமன்னோ. (௪௬௮)

மடவோர்தாங்களுய்வதற்குவகுக்குந்தொழிலன்னவர்தமையே
யிடராயழித்துவிடறிண்ணமிறைவர்க்கமைத்தசிற்றுண்டி
விடமேயமைத்தபிரமரையைவிளித்ததாங்கன்னவரியற்கை
யுடலோடவணித்தலம்வீழ்ந்தாரோர்ந்தார்நோக்கியனைவோரும். (௪௬௯)

கள்ளமிகுந்தமனத்தடுத்தகருந்தானவர்கள்வஞ்சனைகள்
வள்ளல்கடந்தவிளையாட்டுட்சிலவேவகுத்தாமகோற்கடர்தா
நள்ளுநகரின்மனைதோறுநண்ணியநேகராயிருந்து
மெள்ளவிருந்துநுகர்ந்திட்டவிளையாட்டினைச்செப்புதுங்கேண்மோ. (௪௭௦)

வேறு.

வாரணவாசியின்மருவினாரெலாம்
போரணவியகரப்பூபதிக்குமுன்
சீரணவியவொருதினத்திற்சென்றனர்
நீரணவியவுளநெகிழக்கூறுவார். (௪௭௧)

அகனிலமுழுவதுமாங்கவாழிய
தகவருமகோற்கடர்தம்மைமன்னவிந்
நகர்நனியுய்ந்திடநண்ணுவித்தனை
யிகலில்கைமாறுனக்கில்லையெங்கள்பால். (சஎ௨)

விளித்திடுந்தீவினைவேறுபோக்கியுங்
களித்திடுநல்வினைகலப்பச்சார்த்தியு
மளித்திடன்மன்கடனுதலுண்மையாற்
றெளித்தநின்கடனையேசெய்திட்டாயரோ. (சஎ௩)

என்னுறுபுண்ணியமின்னவாறெலா
நண்ணுவித்தளித்தனையேனுநாதவிங்
கண்ணுமோர்குறையுளததுமற்றியாதெனி
லுண்ணயந்துரைக்குதுமுவந்துகேட்டியால். (சஎச)

இயலுறுமெங்களில்லகமுஞ்செல்வமும்
பயனுறமகோற்கடர்க்கமுதபண்ணுகே
நயனொடுவிடுகெனநவின்றிரந்தனர்
சயமலிகொற்றவன்றங்கட்கோதுவான். (சஎரு)

திருநகரிதனிடைச்சிவணுநாளெலா
மருகிருந்தூட்டிநானுர்வதல்லதை
யொருதினமாயினுமுயர்ந்ததேவனை
யொருவுதல்வேண்டிலேனுரைத்ததன்றியும். (சஎசா)

அவர்வழியன்புசெய்திடுவதல்லதை
யவரைநம்வழிவரவறையலாகுமோ
வவர்குறிப்புங்கள்பாலாகுமாயினு
மவர்தனிநீயிர்களநேகராதலால். (சஎஎ)

மனைதொறுமொவ்வொருவைகலெய்தினும்
வினையிலீர்பலவருடங்கள்வேண்டுமே
நினைமினோவென்றுரைநிகழ்த்துசெவ்வியிற்
றனைநிகரில்லவனுங்குச்சார்ந்தனன். (சஎஅ)

அனைவருங்குழுமியிங்காய்வதென்னென
வினையிலர்வினையினர்விரைந்துதாள்பணிந்
தெனைவருநுமக்கமுதிடுதல்வேண்டினேம்
வனைகழற்றுளினன்மாட்டுக்கூறினேம். (சஎகூ)

மன்னவனிசைந்திலனென்றுமற்றவன்
சொன்னவையவரெலாந்தொடுத்துச்சொற்றனர்
பன்னரும்பெரும்புகழ்ப்பரமன்யாவரு
நன்னயப்புறும்வகைநாடிச்சொல்லுவார். (சஅo)

கொற்றவேந்தனுஞ்சுவைகொழிக்குமுண்டிகண்
முற்றுறப்பண்டுபோன்முறையினுக்குக
வுற்றநாகரிகருமுறையுமிற்றொறு
மற்றமில்போனகமடுக்கவென்றனர். (சஅக)

இறையவனருடலையினிதுகொண்டுபோ
யுறையுளுமுன்றிலுமொழுகுவீதியு
நிறைகவின்படுத்தனர்நிகரிலுண்டிகண்
முறையுளியமைத்தனர்முற்றினோரெலாம். (சஅ௨)

கலிபுனற்கங்கைசூழ்காசியுள்ளவ
ரொலிபுகழ்மகோற்கடர்க்குணவுசெய்திடு
மலிபெருமகிழ்ச்சியின்மன்னுசெவ்வியி
னலிவறச்சுக்கிலனென்னுநாமத்தான். (௪௮௩)

நித்தியவறுமையனிகரில்கற்பினாள்
வித்துருமப்பெயர்மேவுமாதரா
ளொத்திருவருந்தினமுண்டியென்றன
பத்தியினதிதியர்பாக்குநல்குவார். (௪௮௪)

கடிஞையுந்தண்டமுங்கையிலேந்துபு
படியறுசுக்கிலன்பண்டுபோற்பலிக்
கடியிணைவருந்துறவகந்தொறெய்தியும்
பிடியளவரிசியும்பெய்குவாரிலை. (௪௮௫)

சுக்கிலன்றன்மனைதன்னிக்கற்புடை
மைக்குழல்வித்துருமையைக்கூவினான்
மிக்கவித்தினத்திடைவிலக்கிலையமுங்
கைக்கொளமுற்றவங்கண்டிலேமென்றான். (௪௮௬)

இற்றைநாளேற்றிடுமையமுட்டினு
முற்றியகற்பினாய்முன்னினாள்களி
னுற்றிடும்பலிகளினுண்டிங்கெஞ்சிய
புற்றவிடாயினும்பொருந்தவட்டிடாய். (௪௮௭)

தொல்லையிப்பதியவர்சுமுகர்க்கித்தின
நல்லுணவூட்டுவார்நயந்துநின்றன
ரெல்லையில்கற்பினாயாமூட்டுபு
செல்லலம்பிறவியைச்சிதைத்துமென்றனன். (௪௮௮)

அடிகளிந்நகரவராக்கமிக்கவர்
படியறுசுமுகனிப்பதியினிற்சொறுங்
கடிதலிலாவகைக்கலத்தனீதியே
மிடியரேங்குடிலினுமேவுமோவென்றாள். (௪௮௯)

கடையரேமாட்டுமெய்க்கருணையுண்டெனி
லுடையவன்வருமினியுணவுசெய்யென
நடையுயர்சுக்கிலனவின்றுவன்னியி
னடையறுகெடுத்தனனாய்ந்துவைத்தனன். (௪௯0)

துலங்கியகங்கையிற்றோய்ந்துசுக்கிலன்
மலங்கெடப்பூசனைவகுத்தன்மேயினா
னிலங்குபெய்வளையினாளிருந்தபுல்லினை
நலங்கிளரமுதெனநன்றட்டாளரோ. (௪௯௧)

ஊரவர்விருந்திடுமுவகைமிக்குழி
நாரதருரைத்திடநன்றறிந்துமெய்ச்
சீரமர்சனகராதியர்கள்சேர்ந்தனர்
பாரகமளிக்கும்பார்த்திபன்பொற்கோயிலின். (௪௯௨)

இறையவன்வல்விரைந்தெதிர்கொண்டேகினான்
மறைமுனிவரர்வருகென்றுகொண்டுபோய்
நிறைமணியாதனநிலவவைத்தனன்
குறைவறுபூசனைகுயிற்றிச்சொல்லுவான். (௪௯௩)

வேறு.

கற்பகஞ்சுரபிசிந்தாமணிகதிர்நிதியுமற்றும்
பொற்புறுகடைக்கணேக்காற்போற்றுவார்க்கருளவல்லீ
ரற்பனேனிடத்திற்போந்தவருள்வகைதெரிக்கவென்னுப்
பற்பலதுதித்துமன்னன்பரவலும்பனவர்சொல்வார். (சகச)

தருவனேயாய்தியானசமாதியாற்பெறும்பேருன
பொருளுருவத்திஞேடுன்பொற்பமர்மனேயில்வந்து
மருவியதென்றுகேட்டுவணங்கவுமாங்குத்தொண்டு
கருதியமன்னுநின்னேக்காணவும்வந்தோமென்ருர். (சகரு)

இன்னணமுரைக்குமெல்லேயெம்பிரானினிதுபோந்தார்
துன்னியசனகராதிதூய்த்தவமுனிவரெல்லா
முன்னுறவணங்கியேத்திமுதல்வனுரருள்கைக்கொண்டு
பின்னர்விண்ணப்பஞ்செய்தார்பேணுதம்பதிதாஞ்சார. (சகசு)

திருந்தியசுமுகர்கேட்டுச்செம்மைசேரரசனில்லின்
விருந்துடன்மிசைந்துபின்னமேகனும்வரைப்புக்கென்று
ரருந்தவரிசைந்துகங்கையாடுதற்கெழுந்தார்செல்வம்
பொருந்தியநகரினுள்ளார்போனகமுழுதுமட்டார். (சகஎ)

சுந்தரமிகுந்தநாதர்சுக்கிலன்பத்திதோற்ற
முந்துறவவன்புற்கூரைமுன்றிலிற்சென்றுநின்ருர்
வந்ததென்செல்வமென்றுவறியவன்மகிழ்ச்சிபூத்துக்
கந்தமென்புனல்கைக்கொண்டுகழலிணேவிளக்கிஞனே. (சகஅ)

சிதலேயாற்றின்னப்பட்டசெதுமனேத்தவிசினேற்றிப்
பதமலர்குளிர்ப்பவன்னிப்பச்சிலேயறுகாற்பூசை
யிதமுறப்புரிந்துபோற்றியிரவிவெங்கிரணம்பாயப்
புதவுகண்டறியாவில்லிற்புகுவித்துவதிவித்தானே. (சகக)

இல்லின்வித்துருமையென்பாளிணேயடிவணங்கிப்போற்றிப்
புல்லரிசமைத்தசோறுபாளிதம்புரையிலப்ப
நல்லமோதகங்களாதிநலத்தகமுன்னரிட்டு
வல்லவவிந்தவூணுமகிழ்ந்துகைக்கொள்கவென்ருள். (ருoo)

இட்டபல்லூணவுங்கைதொட்டெம்பிரான்மலர்க்கைபூசி
யொட்டியதருப்பைச்சேக்கையுவந்துவீற்றிருந்தாராகப்
பெட்டமெய்யன்பிஞேடுபிரானிளேப்பாறுங்காறும்
வட்டவண்விசிறிகொண்டுமறையவன்பணிசெய்தானே. (ருoக)

துரிசறப்பணிசெய்கின்றசுக்கிலன்முகத்தைநோக்கி
யரியயற்கரியநாதரருளுவாரதிதிபூசை
புரிவதினின்னேயொப்பார்புவனத்திலில்லேயுண்டி
யுரிமையினயின்றுபின்னிங்குறுகநின்மனேயோடென்ருன். (ருoஉ)

பனவன்வித்துருமையோடுபரிகலசேடமுண்டு
மனமகிழ்சிறப்பப்போந்துவணங்கினன்வணங்குமுன்ன
ரனகனுரணங்கனுன்குமளந்தளந்தின்னுங்காணு
தனதுதொல்லுருவந்தன்னேத்தயங்குறக்காட்டிஞனே. (ருoரு)

ஐயிருபுயமுஞ்சான்றவாளிவாகனமுமின்பஞ்
செய்யுநல்வனப்புவாய்ந்தசித்திபுத்திகளுந்தானம்
பெய்யுமானனமுமாகப்பெருகொளிகாட்சிதந்த
வையனேமீட்டுந்தாழ்ந்தாரதிதிபூசனேயின்மிக்கார். (ருoச)

வக்கிரதுண்டர்வேட்டவரங்களைக்கேட்கவென்றார்
சுக்கிலன்மனைவியோடுதொழுதுநின்பதத்திலன்புந்
தக்கமெய்ஞ்ஞானவீடுந்தந்தருளிறைவவென்றான்
விக்கினராசரந்தவிழுத்தகவரங்கணல்கி. (௫௦௫)

இந்திரனளகைக்கோமானிவர்களுமழுக்காறெய்த
வெந்தநல்வளமுமீண்டவெதிரிலாச்செல்வநல்கிச்
சுந்தரச்சுமுகராகத்தொல்லுருமாறியேகிக்
கந்தடுகளிநல்யானைக்காவலன்மனைவைகுற்றார். (௫௦௬)

அலைவளர்கங்கையாடியருந்தவர்பலருஞ்சார்ந்தார்
கொலைமுகவேலினானுமமுதணக்கூவிநின்றா
னலைவறுநகரத்தாருமொருங்குவந்தழைத்துநின்றா
ரிலைவிரித்திடுமின்வந்தாமென்றனரிவரும்போனார் (௫௦௭)

அழைத்தவர்சாருமுன்னரவரவர்மனைகடோறுந்
தழைத்தமெய்க்கருணைநாதர்சார்ந்துவீற்றிருந்தார்கண்டு
பிழைத்தனமடியேமென்றுபெருநயப்போடுதாழ்ந்து
குழைத்தவுள்ளன்புதோன்றக்கொழுஞ்சுவையூட்டப்புக்கார். (௫௦௮)

மாதவர்தங்களோடுமன்னவனோடுமன்னன்
காதலினொக்கலோடுங்கலந்துகாவலனில்லத்து
ளோதனமாதிமுன்போலுவந்தினிதயின்றாரேனை
மேதகுமனைகடோறும்விருந்தொருங்கயின்றாரம்மா. (௫௦௯)

ஓருழித்தயிலஞ்சென்னியுரைத்துநீராடாநின்றா
ரோருழிச்சந்திசெய்வாரோருழித்தியானஞ்செய்வா
ரோருழியடிசிலுண்பாரோருழிபாடல்கேட்பா
ரோருழியாடல்காண்பாரொருபதத்திறைவனாரே. (௫௧௦)

வேறுவேறிவ்வாறாகவேண்டியவிளையாட்டாடிப்
பேறுநாகரிகர்க்கெல்லாம்பெருக்கினர்கருணைநாத
ரூறுமானந்தந்தேக்குமாடலினுவப்புநோக்கிக்
கூறுமாதவருமின்பக்கொழுங்கடல்குளித்தாரன்றே. (௫௧௧)

வழிவருநாளாலந்தமாதவர்கோயிலொன்று
பழிதபுநூலினாக்கிக்கணேசரைப்பதிட்டைசெய்து
வொழிவறுதங்கணாமமவர்தமக்குறுத்தியாங்குக்
கழிபுனற்றடங்கணேசகுண்டமென்றொன்றுகண்டார். (௫௧௨)

அப்புனற்றீர்த்தமாடியமலனார்க்காட்டிப்பூசை
செப்பியவிதியாற்செய்யச்செம்மலார்மடங்கலூர்ந்து
மைப்பெருவிழியாரோடுமலர்க்கரம்பத்துந்தோற்றி
யொப்பறுகாட்சிதந்தாருறுவரர்பணிந்துநின்றார். (௫௧௩)

பொக்கமிறவத்தினானும்பொருவறுயோகத்தானுந்
தக்கமெய்ஞ்ஞானத்தானுஞ்சகலநற்குணத்தினானு
மிக்கவராகவென்றுவிழுத்தகுவரங்கணல்கி
யக்கணமறைந்தாராங்கணமைத்ததம்முருவத்தையர். (௫௧௪)

நற்றவமுனிவரானநால்வருஞ்சிலநாளங்குப்
பற்றியவனப்பின்வைகிப்பதிட்டைசெய்தமைத்தசெக்கர்க்
கற்றையஞ்சடையினானைக்கணபதிதன்னைப்பூசை
முற்றுறப்புரிந்துதங்கண்மொய்யொளியுலகஞ்சார்ந்தார். (௫௧௫)

சனகன்முன்னல்வரங்குத்தாபித்துப்பூசைசெய்த
வனகனைமுனிவர்தேவரங்நகர்வாழுமாந்த
ரெனைவரும்பூசையாற்றியின்னலும்பிணியுநீக்கி
முனைவனாருள்கைக்கொண்டுமுன்னியவரங்கள்பெற்றார். (ருகஅ)

மல்லலங்காசிவைப்பின்மகோற்கடர்மனைகடோறும்
பல்லுருக்காட்டியாடுமாடலைப்பகர்ந்தாமிப்பா
னல்லவர்க்கிடுக்கண்செய்யுநராந்தகனொடும்போராற்றிச்
சொல்லருஞ்சுமுகர்வாகைத்தொடைபுனைந்ததுசொல்வாமால். (ருகO)

வேறு.

விடுத்தவயவர்கடம்மைமகோற்கடர்மீளாதவகைவிளித்துநிற்பத்
தொடுத்தசினந்தலைக்கொண்டநராந்தகனென்னேவிடுத்ததோலாச்சூரர்
படுத்தனரோமகோற்கடரையன்றியவர்கொலைபுரியப்பட்டார்கொல்லோ
வடுத்திலரென்றயிர்த்திருவர்தூதர்களையறிந்துவரவாங்குவிட்டான். (சகஅ)

சூலனெனச்சபலனெனச்சூழ்ந்தழைக்கும்பெயருடையதூதரேகிக்
கோலமிகுகாசிநகர்மானிடராய்க்கரந்தடுத்துக்குழகன்மைந்தர்
சீலமிகவிளையாடித்தகுவர்தமைச்சினந்திறுத்தசெயல்களொற்றிச்
சாலமனைவீதியிடைவிளையாடுமவர்தம்மைச்சார்ந்துகண்டார். (ருகக)

செவ்வியெளியவனாகிச்சிறார்களுடன்விளையாடுஞ்செயன்மிக்கானை
வவ்வியழித்தெமைவிடுத்தநராந்தகற்குப்பெருமகிழ்ச்சிவளர்ப்பாநாமென்
றவ்வியமிக்கவர்தங்களியற்கையுருவெடுத்தமலரிரண்டுகையுங்
கவ்விஞர்கவ்வியகரத்தைக்கடுகமறித்திறையவர்தங்கரத்தாற்பற்றி. (ருஉO)

பேருருக்கொண்டவரைநிலத்தெறியமுயன்றாரந்தப்பெற்றிநோக்கிக்
காருருக்கொண்டனையநிறத்தானவர்கள்கழலிறைஞ்சிக்கணேசயாங்கள்
போருருக்கொண்டனையநராந்தகன்விடுத்ததூதரெனப்புகன்றார்கேட்டு
நீருருக்கொண்டனையகுளிர்ப்பெருங்கருணையாரவரைநிறுத்திச்சொல்வார்.

பட்டிமையாலெமையடுத்தநுமரையெலாங்கொன்றெருவைப்பருந்துக்கீந்தா
மொட்டிவருவாரின்னுமுளராயினவர்தமையுமொறுக்கநின்று
மெட்டனைநல்லறிவுமிலாநராந்தகன்றேவாந்தகனையெய்திநீயிர்
முட்டறவிந்நாள்காறுமுடிந்ததுமேன்முடிபயனுமுன்னிச்சொன்மின். ()

முடிந்ததுமண்ணுலகமெலாமொழியுமினிமுடிவதனைமொழியக்கேண்மின்
படிந்தபெருஞ்செல்வமெனுங்கடலினொடுமுயிர்வாழும்பரிசுவேண்டின்
கடிந்துகொடுங்கோன்மறையினெறிவளர்த்துக்கடவுளர்க்குத்துறக்கநல்கி
விடிந்ததுதீவினையிருளின்றெனவுலகஞ்சொலச்செங்கோன்மேவச்சொன்மின்.

செல்வமொடுமுயிரிறப்பவேண்டினரேலித்தினமேசேனையோடு
கல்வளருஞ்செங்களத்துவரச்சொன்மினிதுகரையவேட்டேநும்மை
நில்வகைசெய்தனம்போமினெனவிடுத்தார்நிசாசரர்கணீங்கியோடிக்
கொல்வலியினராந்தகனைக்கும்பிட்டுக்கழல்வணங்கிக்கூறலுற்றார். (கூஉச)

முன்னின்றுமகோற்கடரைப்போர்புரிந்துவெல்லுதன்முற்றாரென்றோர்ந்து
மின்னென்றுகூரிலைவேன்மீளியர்கள்வெவ்வேறுகரந்துசென்று
பொன்னென்றிவிளையாடுங்காசியெனும்பெரும்பதியிற்பொன்றினார்கள்
கொன்னென்றுமவர்தம்முட்சிலர்திறத்தையீங்கெடுத்துக்கூறக்கேண்மோ.()

தந்தரனும்விகண்டனுமங்நகர்ப்புரோகிதன்றனையராய்ச்சாவுற்றார்
வெந்திறல்சேர்பதங்கனொடுவிதலனிவர்வளியாகிவீசிமாய்ந்தார்
முந்துபிரபலனனகூடனொருசிலையாகிமுடிந்தான்கோர
முந்துகரமாய்க்காமன்குரோதனிவருருத்தேகியுலந்தாரன்றே. (ருஉசு)

குண்டணிபமாயிறந் தான்சிரம்பைவிட தயிலமவன்கோலமெய்யிற்
றண்டளிர்க்கையாலுரைத்துத்தானிறந்நாள்சுவாலைமுகன்றழலாய்க்காய்ந்தான்
மிண்டுபெருங்காற்ருகிவிதாரணன்செற்ருன்புலியின்முகத்தான்மேவி
யுண்டனனேடினர்தம்மையிவர்களையுமுயிரொழித்தானுலவாத்தோன்றல்.

கணிதனுருவாய்மேகனிறந்தனன்கந்தரன்றவளையாகக்கூபன்
மணியிழைத்தகூபமதாய்மறிந்தனரம்பாசுரன்ருன்மழைக்காற்ருனன்
றுணிகதிர்க்குழுடையாதவிருளானனந்தகனற்றுங்கன்சாலப்
பிணியுறுத்துமலையானுனிவர்களையுந்தருகாகிப்பெயர்த்துக்கொன்ருன். ()

பிரமரையென்பாளதிதியாயிறந்தாளிவ்வாறேபெருமசென்ற
வுரமலியும்வயவரெலாமுலைந்தனர்கள்யாமுமடுத்துடலப்புக்கு
விரவுவலியிழந்திறைஞ்சநும்மிறைவருயிர்வாழவேண்டிற்செங்கோற்
புரவலராகுகவன்றேற்போர்க்குறுகவெனவெம்மைப்புகலவிட்டான்.(௩உசு)

படையொன்றுமிலன்வீரர்மருங்கிலன்சேனைகளில்லன்பதியிற்பாங்கிற்
றடையின்றித்தனிச்சென்றுவிளையாடுகின்றநேர்தரியலாரை
யிடையின்றியொருகணத்திலிறக்கின்ருனிறுப்பதிஞேரெய்ப்புமில்லான்
ஞெடையொன்றுமயிற்படையோயவனியற்கையிதுவென்றுதொகுத்துச்சொன்னூர்.

சுற்றமுஞ்சூருஞ்சென்றுசிறுவனொருவனுக்குடைந்துதொலைந்துபோன
வற்றமுளத்தினையீர்ப்பவடர்ந்தெழுந்தபொருமையினலழன்றுதன்பாற்
பற்றுமிகுமமைச்சர்களையழைத்தினிப்பாலனைக்காசிப்பதியிற்சென்று
முற்றியமர்புரிந்தழித்துநமதுபடையெழுகவெனமுழங்கிச்சொன்னன். ()

வினையிதுசெய்வாமென்றுதொழுதமைச்சர்புறத்தேகிவியவர்க்கூவிக்
கனைகழற்காற்ருனைமுதனுற்படையுங்கணத்தீங்குக்கதுவுமாறு
துனையமுரசினிற்சாற்றவள்ளுவனுக்கோதுகெனச்சொன்னுரேகி
யனையவர்வள்ளுவற்குரைப்பவவன்முரசங்களிறேற்றியறைந்தானன்றே. ()

படைமுழுதுங்கோயிலெதிர்வந்தீண்டநராந்தகன்பல்படையுந்தாங்கி
யடையலர்நெஞ்சகம்பனிப்பப்புறத்தேகியயில்சிலைவாளாய்தமாதி
யுடையமணிப்பொலந்திண்டேர்பலசூழவோரிரதத்துகந்துகொற்றக்
குடைநிழற்றக்கவரிமுதலியவியங்கவியமியம்பக்கொண்டான்மார்க்கம். ()

எழுகடலுமொருங்குபொருங்காசியிடையுயிரவித்துருவமுத்தி
தழுவலுறவடுப்பதுபோற்றறைந்தபெருஞ்சேனையொடேந்தழங்கச்சார்ந்து
வழுவறுவாரணவாசிவளைத்தனனத்தொழினிகழ்முன்மருங்கூரெல்லாங்
குழூவியமள்ளர்களலைத்துத்தழல்கொளுவிப்பெருங்கொள்ளைகொண்டாரன்றே.

குவிமுத்தக்காசிரைதேர்பன்றிமழவினுக்கிரும்பால்கொடுத்தநாத
ரவிமுத்தநகர்முழுதும்படையினெடுநராந்தகன்போராற்றச்சூழ்ந்தான்
புவிமுத்தங்கொண்டணைக்கும்புயத்துநெடியோன்சமழ்ப்பப்புவனங்காக்குஞ்
சவிமுத்தமணியுரத்தாயநிகவெனத்தூதுவர்கள்சார்ந்துசொன்னூர். (௩௩௩)

வேறு.

ஒற்றிவந்துரைத்ததூதுவர்மொழிகேட்டொலிபுனற்கங்கைசூழ்காசிக்
கொற்றவனமைச்சர்தங்களைக்கூவிக்கொடியவனராந்தகனடுத்தான்
வெற்றிகொணமதுபடையெழுபாக்குவிளம்புமினெனவெகுண்டுரைத்தான்
முற்றறிவுணர்வின்மந்திரத்தலைவர்முன்னுறவணங்கினர்மொழிவார்.(௩௩௬)

வேறு.

பொன்னுறுமதியைவென்றபுந்தியைசினக்குச்சூழ்ச்சி
தன்னமும்பிறர்கள்கூறுந்தகுதியின்றேனுநீதி
மன்னவர்க்கமைச்சர்கூறமனுநெறிவகுத்தலாலே
நின்னிடையதனைப்பற்றியாஞ்சிலநிகழ்த்துவாமால். (௩௩எ)

வேற்றுமன்னவர்கள்போர்க்குமேவுறினுலகாள்வேந்த
ரேற்றவரெளியராயினெதிர்ந்தழித்திடலுமொத்த
வாற்றலராயிற்சார்ந்தவருந்தனைதனைப்பேதித்துப்
போற்றுறுமுறையில்வெம்போர்புரிந்தழித்தலுமாண்பாகும். (ருகூஅ)

வலியினராயிற்கன்னிவத்திரஞ்செம்பொனாதி
கலியறக்கொடுத்துமோகைக்கவுறவிருந்துசெய்து
நலிவறத்துதித்துஞ்சாலநட்புறனீதியாகு
மெலிவினையுடையம்யாமேமிகுவலியுடையன்மாற்றான். (ருகூகூ)

நரலையேபோலும்வந்தநாரந்தகன்சேனைநம்பால்
விரவியசேனைசாலின்மேவியவுதகம்போலு
மரவவண்கழலான்வீரமாதித்தன்கிரணம்போலும்
பரவியநமதுவீரம்பயிலுங்கச்சோதம்போலும் (ருசுo)

அடியரேமுரைத்தவார்த்தையடிகணெஞ்சகத்துமுண்டு
கொடியவான்படையினோடுங்குலாவியதீயோனம்மைக்
கடிதராவண்ணமன்னன்கழலையேசரணஞ்சார்தன்
முடிவெனமதித்தவ்வாறேமுடிப்பதுகருமமென்றார். (ருசுக)

புடையிருந்தினிதுகேட்டபுரோகிதராதியோரு
முடையவவமைச்சரிங்கணுரைத்ததேகருமமென்றார்
மடைதிறந்தனையபத்திமகோற்கடர்பதத்தில்வைத்த
கொடையுயர்தடக்கைமன்னன்குறுநகைகொண்டுசொல்வான். ()

சூழ்ச்சியினிகரிலாததொன்மநுநீதிநூலின்
வீழ்ச்சியில்லாதகேள்விவினையினீர்நராந்தகற்குத்
தாழ்ச்சியையுடையம்யாமேசார்ந்தெமைக்காக்கவிங்கு
வாழ்ச்சிசெய்யிறைவர்தாமும்வலியினிற்றாழ்ந்துளாரோ. (ருசுங)

சார்ந்திடுமிவனைத்தேவாந்தகனையுங்கொன்றுவென்றி
யார்ந்தருணமக்குநல்கவமலனார்நின்றார்நம்பாற்
சேர்ந்திடும்வீரம்வாளாசிதைதராவண்ணமுன்னர்க்
கூர்ந்தமர்புரிதும்வல்லேகொடும்படையெழுகவென்றான். (ருசுச)

தள்ளருமதுகைசான்றதம்பிரானிற்குஞ்செய்தி
யுள்ளலம்பொச்சாப்பெய்துமுளத்தினிவ்வாறுசொற்றும்
வள்ளலேபொறுக்கவென்றுவணங்கியங்கமைச்சர்சேனை
விள்ளருங்கோயின்முன்னர்மேவுமாபணித்திட்டாரே. (ருசுரு)

கணபதிபூசையாற்றிக்காசிநாடாளுமன்ன
னுணவுகைதொட்டுப்பூசிபுடம்பிடைக்கவயம்வீக்கித்
தணவரும்படைகடாங்கித்தகுபரிசனங்கள்சூழப்
பணவமாதிகண்மிக்கார்ப்பப்படர்ந்தனன்போத்தாணி. (ருசுசு)

கூளியம்படைகள்போற்றுங்கொற்றவைநடிக்குமார்பின்
மீளிகடம்மைக்கூவிவியனிலங்களிறுபாய்மா
வாளிரும்படையுமற்றும்வழங்கிநீண்முழையினின்று
மாளியொன்றெழுந்தாலென்னவவிர்மணிவாயினீத்தான். (ருசுஎ)

மங்கலவாழ்த்துவிம்மவால்வளைநரலவட்டத்
தொங்கல்வெண்கவிகைவார்ந்ததுவசஞ்சாமரைகண்மொய்ப்பப்
பொங்கொளியிரதத்தேறிப்புடைபலவிரதஞ்சூழ
வெங்கணுஞ்சேனைமொய்ப்பவேகினனமர்செய்சூழல். (ருசுஅ)

வேறு

வெம்பியபறந்தலையின்மேவுமிருவோரும்
பம்பைபணைபேரிமுதற்பல்லியமியம்பத்
தும்பைமலர்வேய்ந்துதொழுதெய்வதம்வணங்கி
யும்பரும்வியப்பநனியொள்ளமர்செய்கின்றார். (௫௪௯)

இரதமொடுநீளிரதமீண்டுகரியோடு
கரிபரியினோடுபரிபூட்டியகழற்கா
லரவமலிதானையொடுதானையமரேற்ற
பரவுமொலியோடுகதிபற்றுதல்குறித்தே. (௫௫0)

தங்களினமீதுபிறர்தங்களினமீதென்
றங்கணறியாமையிருசேனையுமமர்த்த
பொங்கிநெடுவான்றிசைகள்போர்த்ததிருந்தூளி
செங்குருதிவீழ்ந்துதிகழ்தூளியதுமாய்த்த. (௫௫௧)

தேருலையவீரர்சிலர்திண்களிறுபாய்ந்தா
ரூருமதமாவுலையவொண்பரிகள்பாய்ந்தார்
நேருபரிமானொழியநீண்டநிலநின்றார்
சாருநிலமன்றியொருசார்புமிலையார்க்கும். (௫௫௨)

வாளொழியவீரர்சிலர்வார்கணைதொடுத்தார்
வாளியறவீரர்சிலர்வேலொடுமலைத்தார்
வேலொழியவீரர்சிலர்சூலமதுவிட்டார்
சூலமறவீரர்சிலர்தூண்டினர்கணேமி. (௫௫௩)

மழுத்துமியவார்ந்தவெழுவோடமர்மலைத்தா
ரெழுத்துமியநீண்டகதையேந்தியமர்செய்தார்
முழுத்தகதைநீறமுசலத்தினொடுநேர்ந்தார்
விழுத்தமுசலத்தினர்கள்வேறிகல்விளைத்தார். (௫௫௪)

அற்றனமுடித்தலைகளாடினகவந்த
மிற்றனவுடற்றிரள்களெங்குநிணமொய்த்த
முற்றினபருந்தெருவைமூரிநரிநாய்பேய்
பற்றினவிறந்தவுயிர்பண்ணவர்துறக்கம். (௫௫௫)

நீடியமுடித்தலையினீங்குபுகவந்த
மாடினவர்விண்ணுலகடுத்தணையிருந்து
கோடியநுதற்கொடியனாரெதிர்குயிற்றும்
பீடியலுமாடலவைபெட்பினொடுகண்டார். (௫௫௬)

மூண்டவிருசேனைகளுமுற்றமர்செய்காலை
நீண்டபுகழ்காசிநிருபன்றிறலமைச்சர்
மாண்டவலிமிக்குமலிதானவரைமாய்த்தா
ராண்டுயிரினின்றவர்களாசைதொறிரிந்தார். (௫௫௭)

வேறு.

பீழைதாங்கியவுளத்தொடும்பெயர்ந்ததன்படையைக்
கூழைதாங்கியநராந்தகன்கொம்மெனநோக்கி
யேழையீர்பயந்திரியன்மினென்றுரையமைத்திட்
டுழையேநிகர்படையொடுமுருத்தமரேற்றான். (௫௫௮)

பின்னரேகடைக்கூழைதாங்கியபெருவேந்தன்
பொன்னைநேர்வரும்புத்திசேரமைச்சரோடமர்க்குத்
தன்னைநேர்வருநராந்தகன்சார்ந்தமையறிந்து
முன்னரேபொலந்தேரினைமுடுக்கினனொடிப்பின். (௫௫௯)

அரையர்தம்பிரானவுணர்கடம்பிரானிவர்கள்
கரையில்வெஞ்சினங்கடவவாடமர்புரிகாலை
விரையவண்சிலையறுப்பர்கள்வியன்மணிப்பொலந்தேர்
நிரையறுப்பர்கள்பாகரைநிலத்திடைச்சாய்ப்பார். (௫௬0)

பூட்டும்வாம்பரித்திரள்களைப்புரட்டுவர்தேர்மே
னீட்டுவார்கொடிசாடுவார்நிலாவிரிகவிகை
வீட்டுவாருடல்வீக்கியசாலிகைவீழ்ப்பார்
சேட்டுமாமணிமுடிகளைச்சிதைப்பர்கடெழிப்பார். (௫௬௧)

இன்னவாறமராடுழிநராந்தகனென்பான்
றன்னுசேனையுணூழிலாட்டயர்ந்துதண்ணெனவே
மன்னனோடவன்புத்திரரமைச்சரைவளைத்துத்
தன்னதாணையிலிட்டனன்றழக்கினர்முரசம். (௫௬௨)

வெற்றிமாமுரசறைதலும்வேறுவேறமரி
னுற்றகாவலரனைவருமொய்யெனவடுத்துப்
பற்றினோடுதம்மிறையவன்பதமலர்பணிந்தார்
கொற்றமேவியநராந்தகன்கூறுவானவர்க்கே (௫௬௩)

வந்தகாரியம்பலித்ததுமன்னனைவென்று
மந்தமானவன்றோற்றலாலவன்கொணர்ந்தீங்குத்
தந்தமாதவச்சிறுவனையும்வென்றனந்தகைசான்
றெந்தஞான்றும்வாழ்காசியும்வென்றனமென்றான். (௫௬௪)

மன்னர்மன்னனைமுன்கொடுவளநகர்புகுத
முன்னினானவுணர்கள்பிரான்முடிந்தமைமுழுதும்
பன்னினார்சிலர்தூதர்போய்ப்பார்த்திபன்மனையாட்
கன்னமாதராளம்பையென்பாளகந்தளர்ந்தாள் (௫௬௫)

கந்தைவென்றெழுகடாக்களிறனையகாவலனார்
மைந்துமைந்தர்களாண்மையுமமைச்சர்கள்வலியு
முந்திரும்படைத்தலைவர்கள்வீரமுமுடிய
விந்தவல்லிடர்வருவதோவெயக்கெனவினைந்தாள். (௫௬௬)

கம்பநாமுறவந்தபல்லிடரெலாங்கடந்த
நம்பிரானிரும்போர்க்குமுன்னடக்குமேனண்ணு
னிம்பர்மேம்படுமன்னனைவெல்லுமேயெனநொந்
தம்பைமேவினண்மகோற்கடரடியிணைதொழுதாள். (௫௬௭)

செறிந்தபூங்கொடிதிருவடிவணங்கியகுறிப்பை
யறிந்துநாயகரஞ்சலையகன்மனைபோதி
யெறிந்துமாற்றலன்சேனையையிடரெலாமுலகிற்
பறிந்துபாழ்படவருளுதுமெனப்பகர்ந்தெழுந்தார் (௫௬௮)

பகவன்போர்க்கிருஞ்சினத்தொடுபடர்தருகாலை
முகனிலாயிரம்வீரர்கடோன்றிமுன்னின்று
ரகமுறுவவர்க்கானனமைந்துபத்தொருநூ
றிகவிலாயிரமிருங்கரமுகத்தினுக்கிரட்டி. (௫௬௯)

சென்னியாயிரம்யோசனைசிரத்தினினூற்றி
மன்னுதாளிணையளவைமற்றவையவத்தளவை
சொன்னமானுருவளவினுக்கேற்புறத்தோற்றிப்
பன்னுநீள்படையனைத்தையும்பரித்தவரவரே. (௫௭0)

திருகிவார்முகத்துரோமமுஞ்சேர்ந்தகண்மூன்று
முருவவேணியும்வீழ்ந்ததாடியுமுடையவராய்
மருவுவீரருட்குரூரனென்பவன்வலிமிகுந்தான்
கருணைநாயகன்கழல்பணிந்தெழுந்துகட்டுரைப்பான் (௫௭௧)

மிக்கவெம்பசிவாட்டுவதெனைவிமலேச
பக்கணந்தரவேண்டுமென்றிரந்தனன்பகவன்
றொக்குமுன்வருநராந்தகன்சேனையைச்சுட்டி
யிக்கணெய்துமிப்படையினையெடுத்துவாயிடுதி. (௫௭௨)

கலந்துசேனையினூடுறுங்காசிமன்னவனை
வலந்தவாவவன்மைந்தரையமைச்சரைவவ்வி
நலந்தழாலுறுமெமதுமுன்னண்ணுதிபசிதா
னுலந்திடாதெனிலூட்டுதுமின்னமுமென்றார். (௫௭௩)

நன்றுநன்றெனக்குரூரனுநடந்தனனேனைத்
துன்றுவீரருமவன்புறஞ்சூழ்ந்துடனடந்தார்
வென்றியம்பெருஞ்சேனையுண்மேவினன்குரூர
னென்றுதன்கணவீரரையொருசிறையிருத்தி. (௫௭௪)

ஆர்த்துச்சிற்சிலராவியையழித்தனன்விழியாற்
பார்த்துச்சிற்சிலராவியைப்பாற்றினன்கரத்தா
லீர்த்துச்சிற்சிலராவியையிறுத்தனனெடுந்தாள்
சேர்த்துச்சிற்சிலராவியைத்தீர்த்தனன்திறலோன். (௫௭௫)

நிலத்தின்மோதினன்சிலர்தம்மைநீண்மணித்தேரின்
றலத்தின்மோதினன்சிலர்தமைத்தறுகண்மால்வேழக்
குலத்தின்மோதினன்சிலர்தமைக்கொய்யுளைப்பரியின்
வலத்தின்மோதினன்சிலர்தமைவல்லுயிர்மாய. (௫௭௬)

திரியுமாழியங்தேரினைத்தேரினாற்சிதர்த்தான்
கரியைநீள்கரக்கரியினாலெறிந்தறக்கவிழ்த்தான்
பரியைமேல்வரும்பரியினாலெறிந்துயிர்படுத்தா
னரியவாயினுமடுத்தனனீண்டநாற்படையும். (௫௭௭)

குழுக்கொள்சேனையையின்னணமாய்த்தனன்குரூரன்
வழுக்கினாலுயர்நராந்தகன்மற்றதுநோக்கிச்
செழுக்கைவார்சிலைவணக்கிநாணேற்றினன்றெறித்த
முழுக்கவாளிகள்சொரிந்தனனிறுதிநாண்முகில்போல். (௫௭௮)

வச்சிரப்பெரும்பாறையின்மழைநெடுந்தாரை
நச்சிரும்புனல்சிதர்ந்தெனநராந்தகன்றொடுத்த
வெச்செனுந்தழல்வாளிகள்வினைபுரிகுரூர
னச்சிறுத்திலமுனைதகர்ந்தவனிமேல்விழுந்த. (௫௭௯)

புகழிலார்தமைப்புலவர்களுலகுகொள்ளாமை
யிகழுமாறுபோலெரிவிழிக்குரூரன்மெய்யெய்த
பகழியாவையுமேற்றிடாப்பரிசினைநோக்கி
யகழ்கவாருயிரெனவயில்விடுத்தனனவுணன். (௫௮௦)

உலகமூன்றையுமொருங்குணுஞ்சீற்றமோடடுத்த
விலகுவேலினைத்தடுத்திலனெறுழ்வலிக்குரூர
னிலவுநாசியினெட்டுயிர்ப்பெறிந்தனன்சண்ட
வுலவைவாய்ப்படும்பூளைபோலொதுங்கியததுவே. (௫௮௧)

வடாதுவெற்பெனவயங்கியவண்கதையெடுத்துக்
கெடாதசீற்றமோடுகைத்தனன்கெடுந்தொழிலவுணன்
றடாதமார்பகங்காட்டினன்சமர்மிகுகுரூரன்
விடாதுதாக்கிவிண்டதுசிலைவீசுமாம்பியைப்போல். (ருஅ௨)

முசலமொன்றனையோச்சினன்மூர்க்கனுமவுணன்
னசலமன்னதன்றோளுறவதனைப்பற்றிக்
குசலநெஞ்சினன்விடுத்தனன்கொழுநனைச்சேர்ந்தோர்
பசலையென்னவேயுடைந்ததுபாதகனிரதம். (ருஅ௩)

கோலமல்கியவேறொருதேரினைக்கூட்டிச்
சூலமொன்றினைத்தூண்டினன்றுட்டர்களிறைவன்
சீலமிக்கவன்செங்கையின்விடலினுற்றெறித்தான்
ஞாலம்விண்டதுநடந்ததுபாதலநோக்கி. (ருஅ௪)

வடித்தசக்கரமொன்றனைவிடுத்தனன்மானம்
பிடித்ததானவர்கோமகன்பிறங்கியவதனை
முடித்ததும்பையின்மிக்கவன்முன்கரநீட்டிப்
படித்தலத்திடைவிழாவகைபரித்தனன்றொடிபோல். (ருஅரு)

இனிச்சிறந்ததொன்றில்லெனவெரியுமிழ்ந்திலகுந்
தனிச்செழும்பெருமழுவினைத்தானவன்விடுத்தான்
பனிச்சுவைதக்கலைமதிபுனைபரமனார்மருமா
னனிச்சமென்மலரெனவதையங்கையாற்குழைத்தான். (ருஅசு)

விட்டபல்வகைப்படைகளும்விளங்கியகுரூர
னட்டுநிற்றலும்பொருதவனழன்றுதேர்கடவி
முட்டியங்கையின்வாளினுலெறிந்தனன்மொய்ம்பிற்
பட்டுவிண்டிருதுணியெனப்பாரில்வீழ்ந்ததுவே. (ருஅஎ)

மீளுமுன்னர்க்குரூரன்வெய்யவன்மணித்தேரைத்
தாளினெற்றினனதுசதங்காவதமுருண்டு
தூளிபட்டதுநரோந்தகன்றனைந்துமண்குதித்துக்
கோளின்முட்டியகூவிரச்சகடம்வேறிவர்ந்தான். (ருஅஅ)

சீற்றமேம்படுமிவன்வலிதேவர்கள்படையாற்
காற்றுவேனெனக்கனன்றுதானவன்கடற்கிறைவ
னூற்றன்மாப்படைதொட்டனனங்கையிற்குரூர
னேற்றுவாய்மடுத்துண்டனனிரும்புனல்போல. (ருஅகூ)

வணங்கிமாருதப்படையினைத்தொடுத்தனன்மாற்று
னணங்குகாற்றுருவாயதுநேர்ந்தமருடற்றக்
கணங்கள்போற்றிடுங்குரூரன்கைத்தலத்திடையேந்தி
யுணங்கவாயிலிட்டுண்டனனுரகமேபோல. (ருகூ0)

சிறுநாகபாசந்தினகரன்படைசெந்தே
னூறுதாமரையான்படைநாரணன்படையும்
வேறுவேறுதூண்டினனவுணர்களிறைவிண்ணோன்
மாறுதூண்டிலனவற்றையும்வாங்கிவாய்மடுத்தான். (ருகூக)

தடையினின்றிடாப்பாசுபாதாத்திரந்தன்னை
யடைவின்வந்தனைசெய்துகையெடுத்தனனவுணன்
றொடைசெய்முன்னவன்றேரினைத்துண்ணெனவடுத்துக்
கொடைமிகுங்கரத்தெடுத்துவிண்ணெறிந்தனன்குரூரன். (ருகூ௨)

விண்ணெழுந்துசெனராந்தகனிரதமீளாமுன்
மண்ணிருந்தமன்னவனைமன்னவன்றனையர்களை
யெண்ணமைச்சரைவருகவென்றினிதுகொண்டேகி
யண்ணல்சந்நிதிவிடுத்தடிவணங்கினனறவோன். (௫௯௩)

வேந்தனாதியர்தாங்களும்வியன்பதம்பணிந்தார்
சார்ந்துபோற்றியகுரூரனாதியர்தமக்கெல்லா
மார்ந்தபேரருள்வழங்கியங்கமலனாரடுபோர்
நேர்ந்ததானவர்தலைவனைநெருக்கவேநின்றார். (௫௯௪)

அந்தரத்தெழுமிரதமேழுலகமுமளந்து
வந்துமண்ணிடைமறிந்துநுண்டுகளெனமாய்ந்த
தெந்திரப்பொலந்தேரொடுமிருநிலம்விழுந்த
சுந்தரப்பொலம்பூணினான்சோகமுற்றெழுந்தான். (௫௯௫)

உருவினாற்பருவத்தினாலுறவரன்மகனார்
பெருமையெண்ணிலஞ்சிறுவனென்றேபெரிதிகழ்ந்தா
மொருவனின்றனனொளிமுகத்துயிர்த்தனன்பலரை
மருவுமன்னவர்தம்முளோர்வயவன்வந்தெதிர்த்தான். (௫௯௬)

எதிர்த்தவீரனும்படைக்கலந்தொட்டிலனிகலி
யதிர்த்தலாதியிற்சேனைகளழித்தனன்மலையும்
பொதிர்த்துநீளுமென்கைப்படைபோக்கியத்திரமு
முதிர்த்தகட்டிபோலுண்டெனதாற்றலுமுலைத்தான். (௫௯௭)

தமியனாகியமைந்தனேயிதுசெயிற்றலைவ
னெமியனாயமரேற்றாடினன்படாம்யாமே
யமிழ்தர்யாவருமஞ்சமாயையினமராற்றித்
துமிசெய்வாமினிச்சிறானையென்றவுணர்கோன்றுணிந்தான். (௫௯௮)

கருவிமேகமாய்க்கதளூறைசிதறினன்றீயோன்
பெருகுகாலுருவாயதைப்பெயர்த்தனன்பெருமான்
வெருவுதீயுருவாயமர்விளைத்தனன்வெய்யோ
னுருவநீர்வடிவாயதையொழித்தனனுரவோன். (௫௯௯)

மடங்கலாயினனராந்தகனதுதனைவள்ளன்
முடங்குவாலெயிற்றிருஞ்சிறைச்சரபமாய்முடித்தா
னிடங்கொள்வையகத்தின்னணந்தீயவன்பின்னுந்
தொடங்குமாயைகளனைத்தையுந்தொலைத்தனர்சுமுகர். (௬௦௦)

எடுத்தவன்பெருமாயையுமெம்பிரானதுவே
தொடுத்தறுத்தலுநராந்தகன்றுணிந்தனனிவனைப்
படுத்துவெல்லுதல்படாதுமூத்தவனிருத்தலினால்
விடுத்திரும்பகைகலத்தலுமேவுறாநமக்கே. (௬௦௧)

பட்டகாரியமனைத்தையும்பகர்ந்திடத்தூது
விட்டுமூத்தவனிங்குறுமளவுமீளாமே
யொட்டலானொடும்பொருதுமென்றுளந்தெளிந்ததன்பின்
வட்டவான்புகச்செலுத்தினன்வல்லதூதுவரை. (௬௦௨)

ஏதுமெய்துமெய்தாதவிண்ணுலகினைநோக்கித்
தூதரோடினர்துலங்குதேவாந்தகற்குரைப்பத்
தீதறுதவனாகியநராந்தகன்சினந்து
நாதனாரொடுபோர்செயநண்ணினனம்மா. (௬௦௩)

வேறு.

பாரமானமேருவன்னபாழிவில்வளைத்ததிற்
கோரமானவாளிகோடிகோடிதூண்டியார்த்தனன்
றீரனானதானவன்சினந்துதேவதேவனும்
வீரமார்ந்தவில்வளைத்துவெய்யவாளிதூவினன். (ருOரு)

ஏற்றிதானவன்றொடுத்தவேவனைத்துமெம்பிரான்
மாற்றிவஞ்சன்வையம்வார்பதாகைவாவுமான்குடை
யாற்றல்சான்றபாகன்வில்லொடாவநாழிநீண்முடி
போற்றுகஞ்சுகங்குதம்பைபூண்களாதிநூறினன். (ருOசு)

வாளியொன்றொடொன்றுதொட்டுவானவர்க்குநாயகன்
கோளனைத்தையும்புரிந்தகொற்றமுற்றுதானவன்
றோளிரண்டுமீர்ந்துதந்தைசூழலொன்றும்விண்ணக
ராளுமண்ணன்முன்னரொன்றுமாகவீழ்த்தினனரோ. (ருOஎ)

இற்றதோளிரண்டுமெங்ஙனேயெழுந்தொளிர்ந்தன
வெற்றிமேவுதானவன்வியந்தனுயுண்முற்றுமென்
பொற்றதோள்சிரங்களைப்புரட்டினுங்கதித்தெழும்
வெற்றிகொள்ளவல்லையல்லைவிண்டுபோதியென்றனன். (ருOஅ)

போதியென்றிகழ்ந்துரைத்தபொக்கமிக்கதீயனை
நாதனேக்கியீசனீந்தநல்வரத்தினெல்லையுந்
தீர்தலுற்றதாலினிச்செருச்செயாண்மையுளவரை
யோதுசொல்லின்வென்றிமேவுமோவெனக்கிளந்துபின். (ருOகூ)

அனுதியேமலங்கணீத்தவண்ணலானபண்ணவன்
றனுதுகைத்தலத்தினற்றரப்பரிந்துகொண்டதோர்
பினுகாரியேற்றிமூன்றுபேர்மதில்வெறுக்கையுங்
கனுவெனப்படுத்தகோல்கடுத்தவாளிதூண்டினன். (ருOகூ)

தூண்டுவாளிசென்னியைத்துணித்துயிர்த்ததந்தைவாழ்
மாண்டமுன்றிலிட்டுமீண்டுவள்ளல்செங்கைவைகிய
தாண்டிமைக்குமுன்னரந்தவாடவர்க்குநீண்முடி
மீண்டெழுந்ததன்னவன்விளைத்தமாதவத்தினல். (ருகO)

பூசலாற்றவண்ணலார்புறத்துநின்றவீரர்கள்
காசிமன்னனுதியோர்கள்கண்டிறந்தநீண்முடி
யீசனூர்வரத்தினலெழுந்துநிற்பினின்னவ
னசமெய்தலெங்ஙனென்றுநன்றுளத்தழுங்கினர். (ருகக)

ஆக்கவல்லசெம்மலாயளிக்கவல்லமூர்த்தியாய்ப்
போக்கவல்லநாதனைப்பொருந்திநிற்குநாயகர்
மாக்கடற்பரந்தவையம்வானமெங்குநல்லொளி
தேக்கவேமதித்தவன்சிரத்தைமீட்டும்வீட்டுவார். (ருகஉ)

வேறு.

பகழியொன்றேவிநாதர்பாதகற்செழுந்துநின்ற
விகவருந்தலையும்வீட்டியினிதரசாளுந்தேவாந்
தகனுறைசபையிலிட்டார்தலையதுமுளைக்குந்தோறும்
புகழ்பெறவிலக்கம்வட்டம்பொருதறுத்திறுத்தாரன்றே. (ருகங)

ஆதவனுலகமாதியரிபயிலுலகீறான
மேதகுமுலகந்தோறும்விரிந்தமாதிரங்கடோறும்
பூதலவரைகடோறும்புணரிகடோறுமெங்கும்
பாதகன்றலைகள்வீழ்ந்துபருவரவுருளாநின்ற. (ருகச)

கைத்தலவீரங்காட்டிக்கணேசர்பினவுணர்கோமா
னெத்திறத்துயிர்களானு மிரும்படையாதியானுஞ்
செத்திடலின்மைதேர்ந்துசெறிந்தபல்லுலகுந்தாமா
மத்தகுவடிவுதோற்றியற்புதந்திகழநின்றார். (சுகஙி)

நாயகனுருவநோக்கிநராந்தகனிவன்போரஞ்சி
மாயையினுருவுகொண்டான் மற்றிவன்றன்னைநாமு
மாயையினுருவுகொண்டேமாட்டுதறக்கதென்று
பாயவையகத்திற்றானும்பருத்தபேருருவுகொண்டான். (சுகசு)

மாற்றலனெண்ணநோக்கிமகோற்கடரவன்றன்மார்பங்
கீற்றுறக்காலின்வார்ந்தகேழ்விரலுகிராற்கீண்டு
பாற்றியொள்ளுயிரையாக்கைபடிமிசைசாய்த்துத்தேய்த்தார்
போற்றிவிண்ணவர்கள்கற்பப்புதுமலர்மாரிதூர்த்தார். (சுகஎ)

வருபடைவீரர்காசிமன்னவனுதியோர்கள்
பெருமகிழ்வுடையராகிப்பிரானடிவணங்கியிந்த
வுருவினைக்காணச்சற்றுமுரமிலரென்றாரன்னோர்
பருவரலொழியநாதர்முன்புபோற்பாலரானார். (சுகஅ)

செங்களத்தினிதுநீங்கிச்சேனைகண்மருங்குசூழ
வெங்கணாயகனார்காசியிருநகர்புகுந்தார்தீயோன்
மங்கியதேனைத்திக்கின்வாழ்பவர்க்குரைப்பான்போல
வெங்கதிர்ச்செல்வன்மேலைவிலங்கலின்கோடுசென்றான். (சுகக)

நன்மையேயில்லாநெஞ்சினராந்தகன்றனக்குத்தேக
மின்மையதாக்கிமுத்தியெம்பிரானினிதுநல்குந்
தன்மையையுரைத்தாந்தேவாந்தகனையுமடுபோராற்றிப்
புன்மையினகற்றிவீட்டிற்புகுத்தியமுறையுஞ்சொல்வாம். (சுஉ0)

தருவளருலகிற்றேவாந்தகன்றனக்கெதிரேவீழ்ந்த
விருணிறக்குஞ்சிச்சென்னியிளவலதென்றுநாடி
யுருகினனுங்குக்கண்டோருற்றிந்தமுடிபோற்சென்னி
குருதியொடலகந்தோறும்விழுவனகோமானென்றார். (சுஉக)

இரணமேற்றம்பிசென்னியெண்ணிலகாண்டலாலே
மரணமங்கவனுக்கில்லைமற்றவனேடுஞாட்பின்
முரணினைவிளைக்கவல்லான்முனிச்சிறுவனன்றியில்லைத்
தரணியினுமும்போதுமென்றனன்றகுவர்கோமான். (சுஉஉ)

நாடியபோரின்முன்னர்நராந்தகன்விட்டதூதர்
நீடியதுறக்கத்தெய்திநிருபனைவணங்கிச்சொல்வார்
மாடியந்தானைமன்னமாதவச்சிறானைக்காசி
கூடியமன்னன்மன்றல்குயிற்றுதற்கழைத்துச்சென்றான். (சுஉங)

வழியிடைச்செல்லும்போதுவள்ளலேநுந்தைதம்பி
கழிபெருந்தவநகளாற்றக்கண்டுயிரழித்தானுக்குத்
தொழில்புரிமைந்தரேற்பவவரையுந்தொலைத்தானந்தப்
பழிதபநாடிநுமபிபலர்தமைச்சிறான்மேல்விட்டான். (சுஉச)

விட்டவர்செய்தமாயைவஞ்சனைவிழுப்போரெல்லா
மட்டவருயிருமுண்டானுதலானும்பிசென்று
மட்டவிழ்தும்பைவேய்ந்துமலைக்கின்றானெய்ப்புத்தோன்றி
யொட்டலனுயிரையுண்ணவுனைவரச்சொன்னானென்றார். (சுஉரு)

நன்றெனநகைத்துமன்னனம்படையெழுகவின்னே
யென்றனனனையபோதினீன்றவன்முன்றில்வீழ்ந்த
வன்றலைநோக்கிமைந்தன்மறிந்தனனென்றல　து
பின்றனிச்சிவிகையேற்றிப்பெயர்ந்துமுன்வைத்துச்சொல்வான். ()

மைந்தனேநும்பிகாசிமன்னனோடமர்க்குச்சென்று
னந்திடத்திறந்தான்போலுமவன்றலைமுன்றில்வீழ
விந்திடத்துய்த்தேன்கண்டாயினிச்செய்கசெய்வதென்று
புந்திநைந்துருகிக்கண்ணீர்பொழிந்துளம்விம்மினனே. (சுஉஎ)

எம்பியின்சென்னியொன்றேயிடந்தொறுஞ்சென்னிசாலப்
பம்பிடக்காண்டலாலேபரமனார்வரத்தின்பேற்று
னம்பியன்னவர்க்குச்சாவுநண்ணிலதெந்தாயானு
மும்பரைவிட்டுப்போர்க்கங்குறுவலென்றுரைத்தான்மூத்தான். ()

வேறு.

தனையனுரைத்தமைகேட்டுத்தந்தைதனதிடஞ்சார்ந்தான்
வினைவலித்தசெயலறிந்துமிக்கபெருநாற்படையுங்
கனைகடலிற்றொகத்தேவாந்தகன்கண்டுசிறப்பருளி
யனையபடைபுறஞ்சூழவவனியைநோக்குபுநடந்தான். (சுஉக)

இடைநெறியினராந்தகன்வீழ்ந்திறந்தமைதூதுவர்சொல்ல
வடையலரைப்புறங்கண்டவவுணன்றேவாந்தகன்றன்
கடையுகத்துக்கடல்போலக்கதித்தபெருந்துயர்மூழ்கிப்
புடையிருந்தார்நனிதேற்றப்பொருமலொழிந்துளந்தேறி. (சுரு0)

எம்பிநராந்தகனுயிரையிறுத்தவனையிறுத்தொளிக
ளம்பரமுமெண்டிசையுமார்த்திடினல்லான்மறந்தும்
வம்பவிழுந்தொடைசாந்தம்வயங்கணியாதிகளணியேன்
வெம்புபசிகெடவூணுமிசைகலேனெனக்கரைந்தான். (கூஉக)

உருமினொடுமின்னொடுமொலிந்தபெருமழையேழு
மிருநிலத்திலிறங்குவபோலியமியம்பப்படைக்கலத்தின்
பெருகொளிவல்லிருள்சீப்பப்பேணுபடையொடும்போந்து
முருகுவிரிபொழிற்காசிமுற்றினன்றேவாந்தகனே. (சுருஉ)

தம்பிமகோற்கடரோடுசமர்த்தசமர்ச்சுவையறிந்த
வெம்புகதிர்த்தினகரனும்வேலையிடைவந்தெழுந்தா
னும்பர்களந்தகனனைவொருதமயன்களத்தியற்றும்
பம்புபெருஞ்சமர்ச்சுவையும்பார்ப்பமுயன்றவன்போல. (சுருரு)

எழுகடல்போற்புறநகரினிறுத்துலம்பும்பெருஞ்சேனை
முழுதுமறிந்தொருதூதன்முழங்குபுகழ்க்காசிநகர்
விழுமியமன்னனையடுத்துவிண்ணவராந்தகன்போந்தான்
கழுமலறுமவன்சேனைகணிப்பரிதாமெனப்பகர்ந்தான். (சுருச)

சாற்றுமுறைகேட்டுள்ளந்தடுமாறமன்னவன்பின்
றேற்றமுடையவனுகிச்செம்மலாரடிபணிந்து
போற்றிநெடுவோனின்றும்போந்தனன்றேவாந்தகனே
கூற்றெனவன்னவனுயிரைக்குடித்தெனைக்காத்தருளென்றான். (சுருசு)

அஞ்சலைநீயெனவரசற்கருள்செய்துமகோற்கடர்தாம்
வஞ்சகநெஞ்சம்பனிப்பவயங்கியபேருருக்கொண்டு
குஞ்சநிகர்கரநான்குங்காட்டியவற்றிடைப்பகழி
விஞ்சுமொளிவாள்பரசுவியத்தகுபாசமுந்தரித்தார். (சுருச)

சிங்கவாகனமுதுகிற்சித்திபுத்தியோடிவர்ந்து
திங்கள்வான்குடைநிழற்றச்சேண்வெளிவார்கொடிதூர்ப்ப
வெங்கும்பூதர்கணமிடையவிருபுடைசாமரையிரட்டத்
துங்கவார்முரசாதிதுவைப்பவெழுந்தருளினார். (௬௩௭)

அந்தரமேநெறியாகவணிநகரங்கடந்துபோய்
வந்துபுறஞ்சூழ்ந்தபெருமறப்படையையெதிர்நோக்கிச்
சுந்தரஞ்சேரிடப்புறத்துத்தோகையினைமுகநோக்கி
யிந்தவயப்படையழியவிரும்படைநீயாக்கென்றார். (௬௩௮)

திருவருள்சென்னியிற்றாங்கிச்சித்தியவள்வலங்கொண்டு
மருமலர்த்தாமரைப்பதத்துவணங்கிமனத்திடைநின்று
முருவவணிமாவாதியொளிவளரெண்சித்தியொடு
பொருதிறற்சேனைகணான்கும்படைத்தனைத்தும்பூத்தனளால். (௬௩௯)

ஊக்கத்தின்மிகப்பெரியவும்பர்கள்சேனையைநோக்கித்
தாக்கற்குப்புறஞ்சூழ்ந்ததானவர்கோனுரைசெய்வான்
மாக்கொற்றபடைத்தலைவீர்வம்மின்கள்பகைச்சேனை
தேக்குற்றவெழுகடல்போற்சேர்ந்தனவீங்கடுத்ததன்பின். (௬௪0)

விம்மிதமாகியவிந்தவிழுப்படையொடமராற்றி
நம்முடலமிறந்தாலுநாமங்களிறவாத
வும்மையும்பேரொளியுமுறுமுலையாதுவென்றனமே
லம்மவவைபெறுவதற்கோரையமிலையேயதனால். (௬௪௧)

வேறுவேறணிவகுத்துமேவலான்பெருஞ்சேனை
நூறுவீரெனவிதந்துநுவன்றனன்றேவாந்தகன்றான்
கூறுவாய்மொழிகேட்டுக்கோணைவலிப்படைத்தலைவர்
பாறுசேர்செங்களத்திற்பலவணியாயமரேற்றார். (௬௪௨)

உம்பர்கள்போர்த்திறனோக்கவுயர்வானத்திடைமிடைந்தார்
பம்பைமுதலியவியங்கள்பரவையெனவியம்பினவெண்
டும்பைமலர்த்தொடைசூடித்தொக்கவணிமாமுதலாம்
வம்பலர்மென்கூந்தலருமணிவகுத்துமறமேற்றார். (௬௪௩)

வேறு.

அணிமாவுடனேகத்தமனேற்றமர்த்தான்மகிமாவுடனெவர்க்கும்
பணியாவிலக்கச்சேனையனாய்ப்பகைமைபுரியேக்குமனுருத்தான்
றணியாவிலகிமாவோடுதாலசங்கனிகலேற்றான்
றிணிதோட்கிரிமாவொடுமேற்றான்றீர்க்கதந்தனெனுந்தலைவன். (௬௪௪)

தோலாப்பிரத்தியொடுகண்டாசுரனும்பிராகாமியையடுத்துக்
காலாந்தகனுங்கனன்றிரத்தகேசிவசித்துவத்தினொடு
மேலாமீசத்துவத்தொடுபோர்மிகுந்துற்சயனுமமரேற்றார்
மாலாவேனைச்சேனைகளும்வழுத்திரினத்தோடன்றனவே. (௬௪௫)

படைகள்பலவும்வழங்குவார்படையாற்படைகள்விலக்குவார்
குடையைநெடியகொடித்திரணக்கோலவூர்திதமையடுவார்
மிடையுங்கிரணமுடிகவயம்விசித்தமணிக்கச்சிவைதெறுவா
ரடைவஞ்சினமுநெடுமொழியுமறைவாரமரினிருவோரும் (௬௪௬)

அழைத்தசூரரொடும்பொருவாரறைந்தசமரேமிகவிளைப்பா
ரிழைத்தமொழிகண்முடித்தன்றியினியவுயிர்தாங்காரிறைவர்
தழைத்தவிழிநீருகப்பொருதுசாவார்தமக்குச்சார்வுறினும்
பிழைத்தமறம்வேண்டாரென்றும்பிழையாமறஞ்செய்வீரர்களே. (௬௪௭)

இரதத்தலைவர்பலர்வீந்தாரிபத்துத்தலைவர்பலர்வீந்தார்
புரவித்தலைவர்பலர்வீந்தார்பொருவேற்றானைபலர்வீந்தார்
பரதத்தலைவர்களும்வியப்பப்பலவாடினபேயொடுகவந்த
மரவப்புனலுந்தியின்குருதியலைவாய்கிழித்துச்சிவந்ததே. (சுசஅ)

வேறு.

எருவைபருந்திவைதாங்களினிதுபயில்சுரத்தணங்கு
மருவுகளத்தினுஞ்சார்தல்வழக்கென்றுதுணிந்தனபோற்
பொருதிறநோக்குபுவைகும்புத்தேளிர்மனங்கவல
விருவிசும்பினிடமெல்லாமீண்டியுழிதந்தனவே. (சுசகூ)

வேறு.

துணங்கையலகைபுரிகளத்துத்தொக்குநரிநாய்விருந்தயரப்
பிணங்கள்பிறங்கச்சமர்பெரிதும்பேணிப்புரியுமமையத்தி
னிணங்கொள்படைத்தானவன்சேனைநிமலன்சேனையாலழிந்த
வணங்குமிடையார்படைத்தலைவர்வலியோடாவிமாய்த்தனரால். (சுருo)

வேறு.

கத்தமனைச்சிலைபிடித்துக்கனன்றுதிரித்தவனியிடை
மொத்தியணிமாவென்னுமுகிண்முலைப்பூண்மாதடர்த்தாள்
வைத்தமணிவேலோச்சிமணிமாவென்பாள்கவயம்
பொத்துடலெக்குமனுயிரைப்போக்கியணிந்தாள்வாகை. (சுருக)

வாளினுலெறிந்திலகிமாவென்னுங்குழற்கோதை
தாளினார்கழல்கலிக்குந்தாலசங்கனுயிர்மாய்த்தாள்
கேளிர்நேர்சூலத்தாற்கிரிமாவென்பவள்கிளர்புத்
தேளிரோகையிற்றிளைப்பத்தீர்க்கதந்தன்றனையிறுத்தாள். (சுருஉ)

மாணுறுகண்டாசுரனைமலர்க்கரத்தாற்புடைத்தெழில்வார்
பேணுறுபூணிளங்கொங்கைப்பிராத்தியழித்தாள்வெகுளி
பூணரத்தகேசனொடுபொருதுவசித்துவமாது
வேணுறுசக்கரத்தவனையிறுத்தொளிதோற்றினளம்மா. (சுருங)

ஏந்தியவீசத்துவமென்றியம்பியகோற்றொடிமாது
தூத்தகுவாளிகடொடுத்துத்துற்சயனுவியையுண்டாள்
காத்தபிராகாமியமாங்காரிகையோடமரேற்ற
சாத்துதொடைவேற்காலாந்தகன்வலியின்மேம்பட்டான். (சுருச)

நிறங்கிளர்பொற்றேரினொடுநீண்டசிலைதூளாகப்
பிறங்குவலியிழந்தபிராகாமியத்தின்பேதொழிப்ப
மறங்கிளரும்வசித்துவந்தான்வல்லையெதிர்போந்தமர்த்துத்
திறங்கிளர்காலாந்தகன்வன்சிரந்திருகிக்கடற்படுத்தாள். (சுருரு)

தழல்விழிக்குந்திறற்காலாந்தகன்விளிந்தசெயனேக்கி
முழவதிர்சேனைகளோடுமுசலனும்பல்லனுமேற்றா
ரழலெனக்கண்ணிணைசேப்பவழன்றுவசித்துவமாது
பழகியகைச்சிலைவளைத்துப்பகழிபலதூர்த்தனளால். (சுருசு)

இருவரொடும்வந்தெதிர்த்தவிருஞ்சேனையிடைச்சிலசெங்
குருதியருவியிற்பாயக்குழைந்துநிலத்திடைச்சோர்ந்த
வுருவமுடிபுயங்கழற்காலுரந்துணியச்சிலமறிந்த
வெருவியிரிந்தனசிலவம்மெல்லிழைமான்பொருகணையால். (சுருஎ)

சேனைமுழுவதுமுலைந்தசெயனேக்கிச்சினங்கடவ
மோனையெனநின்றபெருமுசலனும்பல்லனுஞ்சிலையிற்
சோனைமழையெனப்பகழிதூண்டியமர்பெரிதாற்ற
மானைநிகர்மழைமதர்க்கண்வசித்துவமாதுளந்தளர்ந்தாள். (சுருஅ)

துப்பதரவசித்துவமான்சோர்வறிந்தவணிமாவங்
கொப்பரியதுணையாகியொருங்குசமர்மிகப்புரிந்தாள்
செப்பருமாதர்களிருவர்சேர்ந்துசமர்புரிந்துழியும்
வெப்புடையவீரரவர்வினைத்திறத்திற்றாழ்ந்திலரால். (௬௫௯)

மலைகுலையும்வயப்பெருந்தோண்மள்ளர்வழங்கியபடையாற்
சிலைகுலையுந்தனமாதர்செம்பொன்மணித்தேர்குலையத்
தலைகுலையமுலைகுலையத்தயங்கியபூங்கலைகுலைய
நிலைகுலையுமுளத்தினராய்நெட்டுயிர்த்துவெயர்த்தனரால். (௬௬0)

பீடழிந்தசெயனோக்கப்பிரத்தியுமீசத்துவமு
மாடணுகிமுசலனொடுமறந்தணியாப்பல்லனொடு
நீடமர்செய்தவருயிரைநெடுவிசும்பேற்றினரிவ்வா
றுடமர்செய்தலைவரெல்லாமழிந்தனரெண்மரினம்மா. (௬௬௧)

தன்னுடையபெருஞ்சேனைதாரணியினுடல்கிடத்தி
மின்னிடைவானிடைமுழுதுமேவியதுதேர்ந்தவுண
னின்னதற்கஞ்சுவதில்லையெனவெள்ளிதனைநினைந்தா
னன்னதுவந்திறந்தபடையனைத்தினையுமெழுப்பியதே. (௬௭௨)

வேறு.

அழிதருசேனைகளார்த்தெழுந்தமை
விழியினீசத்துவம்விளங்கநோக்கினாள்
பொழிசினமீக்கொளப்புருவங்கோட்டினாள்
செழிசினத்தொருமகள்சிறப்பத்தோன்றினாள். (௬௬௩)

துள்ளியவெகுளியிற்றோன்றுமாதராள்
வெள்ளியைவிழுங்கினள்விசும்பிற்சென்றன
டெள்ளுமீசத்துவஞ்சினந்தீயினால்
விள்ளரும்பெரும்படைமீட்டுமாய்ந்ததே. (௬௬௪)

விளங்கியதன்படைமீட்டுமாய்ந்ததுந்
துளங்கிடையொருமகடுய்த்துவெள்ளியைக்
களங்கமில்வானிடைக்கரந்துசென்றது
முளங்கொடுதானவனுருத்தெழுந்தனன். (௬௬௫)

கொலைமுகக்கூற்றெனக்குறுகிச்செங்கையிற்
சிலைவளைத்துறுவளிசெறிந்தசிந்துவி
னலையெனநிரைதிரையம்புதூவினா
னிலைமுகப்பூண்முலையெண்மர்சேனைமேல். (௬௬௬)

விரைகமழ்தும்பையின்விளங்குதம்புயம்
புரைதராதெனத்தொழிலபுரிந்துகாட்டியாங்
குரைவளர்பூதர்களுடன்றுடற்பல
வரைபெயர்த்தவுணர்கோன்மார்பினேச்சினான். (௬௬௭)

இகந்திடம்பட்டனமேனும்பூதராற்
றிகழ்ந்ததானவனுடல்சிதர்த்திட்டாயினு
முகந்திடுவாமெனவோச்சும்வெற்பின
முகந்தவன்மார்பின்மண்ணுதிர்ந்தமுற்றுமே. (௬௬௮)

வெள்ளிலங்களியினைவெற்பினேச்சியாங்
கள்ளிமேலெறிந்திடுமடுக்கறாள்பட
வொள்ளியசாரதருவந்தபொள்ளெனத்
தெள்ளியபடைக்கலச்செருச்செய்தாரரோ. (௬௬௯)

வழங்கியபடைக்கெதிர்வழங்கிப்பல்படை
தழங்கியசாரதர்தங்கள்மெய்யெலாங்
கழங்குறுகளியெனக்கணைகளேற்றினன்
முழங்கியபேரொலிமூர்க்கனென்பவே. (சஎ0)

சாரதர்மனவலிதளர்ந்துநின்றனர்
வாரணிமுலையணிமாமுனெண்மருந்
தேரவனெதிருறச்செலுத்திவேறுவே
றோரணிபோர்பலவியற்றினாரரோ. (சஎக)

வையமேனின்றவெண்மாதர்தம்மையும்
வையமேநிறுத்தினன்மறங்கொடானவ
னையெனப்பாய்ந்தணிமாவன்ஞான்புயங்
கையணிவாளினற்கனன்றுவீசினள். (சஎஉ)

பாழிவாளிருதுணிபட்டுவீழ்ந்ததங்
கூழிவாய்நெருப்பெனவுருத்துத்தானவன்
வாழிவாளெதிரவண்மார்பிலோச்சினன்
வீழ்வாயவளதைப்பறித்துவீசினள். (சஎக)

பொன்னணிமுடிமணிபொடிந்துதூளியாய்த்
துன்னலின்மெய்யெலாந்துதையவோச்சுவாள்
சென்னியிற்பட்டெனச்சின்னபின்னமாய்
மன்னியநிலத்திடைவயங்கவுக்கதே. (சஎ௪)

முரிபுருவத்தினண்மூக்கைக்கொய்துமென்
றெரியுகுவிழியினன்சுரிகையேந்தினன்
றெரியிழைமாதுதன்செங்கைதாங்கிய
சுரிகையினெறிந்ததைத்துணித்துமீண்டனள். (சஎ௫)

இளமதிநிகர்நுதலேந்துபூண்முலை
வளர்மகிமாவெனுமாதுசெங்கையிற்
றளர்வறவேந்தியசக்கரத்தினாற்
களமலிதானவன்கவிகைவீழ்த்தினள். (சஎ௬)

வலத்துயர்தானவன்மானமேற்கொடு
நிலத்திடைக்குதித்தனனேர்ந்ததண்டினு
லலத்தகச்சீறடியவரெல்லாரையுஞ்
சலத்துயர்வெகுளியாற்றாக்கினனரோ. (சஎஎ)

கால்பொரவிளங்கொடிகதழ்ந்துசாய்ந்தெனச்
சால்பொருவியவுளத்தகுவற்காற்றிலர்
நூல்பொருமிடைக்கொடிநுடங்கநொந்துளம்
பால்பொருமொழியவர்பலருநீங்கினர். (சஎஅ)

சித்திநாலிருவருஞ்செருவினீங்கிய
தத்தையோர்ந்துள்ளகத்தரும்புமானத்தாற்
புத்திநாயகனடிபோற்றித்தாவொரு
சத்தியானனத்திடைசாரத்தோற்றினள். (சஎகு)

வேறு.

மலைநிகர்முலையுந்தோள்களுங்கராளவதனமும்வான்றொடுமுடியு
நிலவுமெண்டிசையுஞ்சுலவுசெஞ்சடையுநெருப்புமிழ்செய்யவாள்விழியுங்
கொலைகெழுபடைகடாங்கியகரமுங்குவலயத்திடுந்தொறுஞ்சேடன்
றலைகளாயிரமுநெரிதருபதமுந்தயங்குமச்சத்திமுன்பணிந்தாள். (சஅ0)

பணிந்ததன் மகளைப்புத்திமானேக்கிப்பறந்தலையுழக்குபுவாகை
யணிந்தபின்வருகவென்றனளவளுமதற்குடனிசைந்தனளேகித்
திணிந்ததோளவுணச்சேனையிற்பாய்ந்துசெங்கணலுயிர்ப்பினற்றுளாற்
றணிந்தகைத்தலத்தால்வாயினற்படையாற்சாடினளொருநொடிப்பொழுதின்.

அழுங்கியதனதுசேனையைநோக்கியவுணர்கோன்கொடுமரம்வாங்கி
யொழுங்கியபகழியளவிலதொடுத்தானெண்டொடியஃதெலாம்வாயால்
விழுங்குபுசென்றசுராந்தகன்றனையும்வெய்துகையெடுத்தனள்விழுங்கிச்
செழுங்களத்தொழிந்துபுத்தியையடுப்பச்சென்றனள்செல்லுறுநெறிக்கண்.

வரத்தினனலியாச்சுராந்தகன்சூக்கவடிவெடுத்தவள்வயினெழியக்
கரத்தல்செய்வாயால்வெளிக்கொடுபோகிக்காத்திரமெனப்படுந்தனது
புரத்தினையடுத்தான்பூவையுமீன்றபுத்தியையடுத்துமென்பதத்திற்
சிரத்தினைவணக்கிப்புகழ்பலவோதித்திருந்தமுன்னின்றிதுசொன்னள்.

அன்னைநீயருளிச்செய்தவாறேகியளவறுசேனையுமழித்துத்
துன்னலனசுராந்தகன்றனையுந்துனையவாய்மடுத்தகட்டிடையே
மன்னுறவிடுத்தேன்சூக்குமவடிவாய்மற்றவன்வெளிக்கொடுபோந்தா
னின்னும்வந்திரும்போரியற்றிடிற்றப்பாதிறுப்பலென்றியம்பினளிருந்தாள்.

காத்திரபுரத்திலடுத்தவன்றந்தைகழலிணைவணங்கிமுன்னின்று
தோத்திரஞ்செய்துதோல்வியைக்கிளந்துதுன்னலான்றனையினிப்பொருதோர்
மாத்திரைப்பொழுதின்வெல்வதுவேண்டுமற்றதற்குபாயஞ்சொலென்றான்
சாத்திரமுணர்ந்ததாதைகேட்டுன்னித்தனயனுக்கிதம்பெறச்சொல்வான்.

மந்திரமொன்றுகிளக்குதுங்கேட்டுமைந்தனேவழுவறக்கணித்துச்
செந்தழல்வேள்விபுரிமதியதனிற்செறியுளைச்சுவற்பரிமாவொன்
றிந்திரன்முதலாமமரர்மாதவர்களெனைவருநடுங்கிடத்தோன்று
மந்தவெம்புரவிமேல்கொடுபெரும்போராற்றுதிவெல்வையென்றுரைத்து.

வழுவறுபீசங்கூடியவகோரமந்திரஞ்செவியுறக்கிளந்து
விழுமியமனுவைக்கணித்திடுமுறையும்விரித்தனன்வியப்பொடுகேட்டான்
செழுவியதேவாந்தகனதுகண்டுதினகரன்வெருவினன்போல
வொழுகொளிக்கிரணமுழுவதுஞ்சுருக்கியொலிகடற்புக்கொளித்தனனல்.

அற்றைநாளிரவிற்சுராந்தகனந்தமந்திரங்கணித்தறுகோண
முற்றுறக்குண்டமிட்டொளிர்செந்தீமுறையுளிவளர்ததிரும்பொருள்கள்
பற்றொருடுமெடுத்துமடுத்தனனதனிற்பருத்தமைநாகமேல்யாப்ப
வெற்றிசெய்கருமைக்குதிரையொன்றெழுந்துவிளங்கியதுலகெலாநடுங்க.

கையினலோச்சியண்டமும்பொதிர்க்குங்காழ்வலிவீரருமநேகர்
வெய்யவான்படைகளேந்துகைத்தலராய்விளங்குமத்தழலிடையெழுந்தார்
உய்யலாமார்க்கம்வேறுமுண்டோவென்றுவந்துதேவாந்தகனென்பான்
பொய்யெலாங்கழியப்பூரணகுதியும்புரிந்துவேள்வியைமுடித்திட்டான்.

வென்றிமிக்குளதாய்வேள்வியினெழுந்தவிலாழிவாய்ப்பரியினைநோக்க
வொன்றியவிழைவாலேழெனும்புரவியொளிமணித்தேரொடும்போந்தாங்
கென்றுநீள்புணரிமுகட்டின்வந்தெழுந்ததிலகிடநாட்கடனவுண
னன்றுசெய்துவப்பநான்மறையோர்க்குநால்வகையுண்டியுங்கொடுத்தான்.

சிலவான்வரைப்பிற்பாதலமருங்கிற்றிகழ்ந்தமண்வைப்பினெண்டிசையின்
மூலமாயிருந்தபடையெலாங்கவிமுடிகுழைபூண்முதலணியுங்
கோலமாரிரதங்கரிபரிபடையுங்கொடுத்துடன்கொண்டழற்பிறந்த
நீலவாம்பரியினிவர்ந்துமுன்போலநெடுங்களத்தெய்தினனவுணன். (௬௯௧)

ஒருநலிற்கதிரோனீங்கியமாலைநேர்ந்தசெங்களத்தினின்றேகித்
திருநகரடுத்துக்கண்படைகொண்டுதினகரனுதயமாம்விடியற்
கருணைநாயகருநாட்கடன்கழிப்பிக்கணிப்பறுசேனையோடெழுந்து
பொருகளமடுத்தார்குரூரன்முன்போர்க்குப்புக்கனனணிவகுத்தம்மா. ()

சித்தியெண்மர்களும்புத்தியீன்றெடுத்ததிகழ்பவுத்தேவியுஞ்சித்தி
சத்திபாலெழுந்தசேனையுந்தலைவன்றந்திடும்பூதரும்பலரும்
வைத்தகைப்படையோடணிவகுத்தெதிர்ப்பமாற்றலன்சேனையும்வெவ்வே
றுத்தபல்லணியாயெதிர்த்தனநெடும்போரோங்கினவிருதிறத்தவர்க்கும்.()

வேறு.

இரதமொடிரதமிவுளியொடிவுளியுமிபத்துடனிபமுமிசை
விரவியவயவரின்வயவருநேர்ந்துகைவேல்கொடுசமர்செய்வார்
சரமழைபொழிகுவர்நாந்தகம்வீசுவர்சக்கரமெதிருய்ப்பார்
பரசவையெறிகுவர்பாசமிக்கோச்சுவர்பல்படையுந்தொடுவார் (சுகச)

மின்னொடுபுரைவனவிதிர்த்திடுவாளயில்வெடிகுரலுருமோடு
தன்னொடுபுரைவனவோதுவில்லிந்திரதனுவொடுபுரைவனமெய்ச்
செந்நிறநீருகுவனமழைபுரைவனசேனைகள்முகில்புரைவ
வந்நிலையிடுபடைதொடவிழுகவிகைகளாம்பிகள்புரைவனவே. (சுகரு)

பொதியுடலொடுமறுகுடரினமொழுகுசெம்புனலொடுமலைவனநல்
விதியொடுமறுதலைமணிபடுமுடியொடுவியத்தகவுருள்வனவிண்
மதிபுரைகுடையொடுகொடியினமிடையறமாதிரமேற்பெயர்வ
துதியொடுமலகைகணடமிடுவனபலதொகுவனநரியொடுநாய். (சுகசு)

மண்ணிடையயில்பொருபுண்படுதமதுடல்வைத்தெழுவயவரெலாம்
விண்ணிடையிரவிமெய்புண்படவதனிடைவியனுடல்வழியேகி
நண்ணியதமதுதெய்வதவுருவெழிலினைநாடரமகளிர்களைத்
திண்ணியமதன்விடுகணைபொருபுண்படுசிந்தையராகினரே. (சுகஎ)

விரவியதமதுயிரமரர்களெழிலுருவிரவிவிண்ணுலகமதி
னரமகளிர்கணலமிரவொடுபகனுகரதிசயமதுதெரியாப்
பரவியமகிழ்வொடுநடமிடல்புரைவனபடைபடுமுடியினொடு
சிரமறநிலையுறுகுறையுடலாடுவசெங்களமழகுறவே. (சுகஅ)

தேரினையிரதமுமட்டனகரிகளைத்தின்கரிகளுமட்ட
போரினவிவுளியையிவுளியுமட்டவபொருதெழுதானைகளை
யேரிவர்தானையுமட்டனவினமெனவெண்ணுவதில்லாமே
பாரிடையிகலுறுபகையுறினினமெனப்பார்ப்பதுமுளதாமோ. (சுகசு)

வேறு.

இன்னவாறுசெங்களமதுபொலிதரவிருஞ்சமர்புரிகாலைத்
தன்னைநேர்வருங்குரூரனேவியபடைதாக்கலின்வலிசிந்தித்
துன்னுதானவப்படைமுழுதுடைந்தனசுராந்தகனதுநோக்கி
மன்னுவார்சிலைவணக்கிவாளிகள்பலமழையெனச்சொரிந்தார்த்தான்.

இரதமட்டனவிரதமூர்வீரர்களின்னுயிர்முழுதட்ட
கரிகளட்டனகரிகளூர்வீரர்கள்கதிர்மணிமுடியட்ட
பரிகளட்டனபரிகளூர்வீரர்கள்பலவுறுப்பையுமட்ட
வுரியதானையுமட்டனசுராந்தகனுந்தியகணைமாரி. (எ0க)

சேனைமாய்ந்தனசித்திநாலிருவருஞ்செருத்திறத்தினிற்றீர்ந்தார்
மானைநேர்விழியாள்பவுத்தேவியும்வருந்தினண்மலைத்தாங்கு
தநுனைகாவலனுகியகுரூரன்முன்சார்ந்துதானவர்போற்றுங்
கோனைநேர்ந்தமராடினன்வரைபொருங்கொடுமரங்குனித்தெய்து. ()

வரைகிழித்தனவானகங்கிழித்தன மாதிரங்கிழித்திட்ட
தரைகிழித்தனசாகரங்கிழித்தன தருவர்கோன்மேம்பாட்டா
னுரைகிழித்தன மகோற்கடர்திருமுகத்தொய்யெனவெளிக்கொண்ட
புரைகிழித்தமெய்க்குரூரன்கைச்சிலைமுகில்பொழிதருகணைமாரி. ()

வேறு.

வலியின்மேம்படுசுராந்தகன்வழங்கியவாளி
நலியயாவையுமாற்றியோர்கணையினைநடவி
மெலிவிலாவவன்கைச்சிலைவீழ்த்தனன்குரூரன்
கலியன்றொன்றொருசிலைகொடுகணைபலதொடுத்தான். (எ0ச)

மீட்டுமேல்வரும்விசிகங்கள்விலக்கியகுரூரன்
சேட்டுவாளிகண்மூன்றுநேர்செலுத்துபுதீயோன்
சூட்டுமாலிகைச்சுடர்கொழிதூமணிமௌலி
யோட்டுவார்செவிக்குண்டலமிரண்டையுமுகுத்தான். (எ0ரு)

மணியிழந்தபைநாகமேயெனமருவாதா
னணியிழந்தமைநாணினன்சினமுகத்தோங்கத்
துணிவிழந்திலன்றொடுத்தனன்வியாக்கிரப்படையைத்
தணிவிழந்ததுசார்ந்தது தக்கபல்லுருவாய். (எ0சு)

அரக்கெறிந்தசெந்தாமரையனையகட்குரூரன்
கரக்குன்றத்திரங்கடாயினன்கதழ்ந்ததுபலவாய்த்
தரக்கனத்தையுந்தாட்கிழித்தெறிந்துசற்றேனு
மிரக்கமில்லவனுயிருணவெழுந்ததுமாதோ. (எ0எ)

கடங்களூற்றியமுகத்தொடுங்கதழ்ந்திபமடுப்ப
மடங்கன்மாப்படைதொடுத்தனன்வாளவர்பகைஞன்
றடக்கைவேழங்களனைத்தையுஞ்சடுதியிற்சாடி
விடங்கொணுக்கொடுங்குரூரனைமேவியததுவே. (எ0அ)

சிம்புண்மாப்படைதொடுத்தனன்றேவரைப்புரப்போன்
வெம்பிமேல்வருங்கேசரிப்படையினைவிளித்து
வும்பரார்தமைத்தேய்த்தவனுழைப்புகுந்ததுமன்
கம்பியாதவனப்படையேகடிதுகைத்தான். (எ0கூ)

வார்ந்தவன்சிறையான்மிகவெறிந்தும்வள்ளுகிராற்
சார்ந்துகீறியுந்தடவுவாயலகினாற்பொதிர்த்து
நேர்ந்திரும்படையிரண்டுநீங்லகெலாமழிப்ப
வோர்ந்துமீட்டனர்விடுத்தவரொய்யெனத்தம்பால். (எக0)

உருவவாளினுலோச்சுவான்குரூரன்முன்னுற்றான்
வெருவினன்பொரத்தானவன்விண்ணிடைக்கரந்தான்
பொருவிலாவிவனேநமைப்புரட்டுவான்போலுஞ்
செருவின்மேம்படலாயினனெனவுளந்திகைத்தான். (எகக)

ஏகவானையிற்சுராந்தகனெடும்பொழுதெண்ணி
மோகமாப்படைசேனையைமுற்றுறவிடுத்தான்
வேகமாகியகாந்தருவப்படைவிழுப்போர்த்
தாகமேவியகுரூரன்முன்சார்தரவிடுத்தான். (எகஉ)

பயிலுநாற்பெருஞ்சேனையுமோகமாய்ப்படையாற்
றுயில்விராவினகாந்திருவப்படைதுன்னிச்
செயிரிலாதகந்திருவர்கள்பலரெனத்திகழ்ந்தங்
கயிர்தராவகைப்பாடலாடல்களமைத்ததுவே. (எகங)

போர்க்குடைந்தவன் மீட்டுறப்பொருதுமென்றலகை
யார்க்கும்வன்களத்தமர்ந்தருள்குரூரனப்படைதான்
தேர்க்குமுன்செயுஞ்செயலினையுள்ளதாச்சேர்த்துப்
பார்க்கவுந்தகக்கேட்கவும்பற்றினமனமே. (எகச)

வென்றிவாய்ந்ததுநமக்கெனவிண்ணவர்காலன்
சென்றுபோர்க்களத்திடைத்திரிகோணகுண்டமுமிட்
டன்றொராயிரமவுணரையறுத்தவர்தசையுந்
துன்றுமாயிரங்குடத்துறுசோரியுமீட்டி. (எகரு)

பஞ்சசன்மவாதனத்திடைப்பண்பொடுமிருந்து
விஞ்சுமுக்கிரவேள்வியொன்றாற்றினன்விரைவில்
வஞ்சன்முன்னரவ்வன்னியிலொருமகட்பூத
மஞ்சமுச்சகத்துயிரெலாமார்த்தெழுந்ததுவே. (எகசு)

வட்டமாய்ப்பெருத்தகன்றகண்களுமதிக்கீற்றி
னொட்டுபற்களுமோங்கனேர்முலையுமாகாய
முட்டுகேசமுமுழைபொருவாயும்பேருருவு
நெட்டுயிர்ப்புநீள்சீற்றமுமுடையவப்பூதம். (எகஎ)

தன்னைத்தோற்றியசுராந்தகன்றனையெதிர்நோக்கி
வன்னித்தீயெனவாட்டுவெதிரும்பசியதனை
மன்னர்க்கேதனையாயினிமாற்றுகவெனலு
முன்னர்ச்சோர்ந்தவான்சேனையையுணவவன்மொழிந்தான். ()

தொடுத்தமோகவான்படையினாற்சோர்ந்தசேனைகளை
யெடுத்துவாய்ப்பெயச்சென்றதங்கிரும்பெரும்பூத
மடுத்தபோர்க்களச்செயலெலாந்திருவுளத்தறிந்தார்
மடுத்தகாதலினடியவர்க்கருள்புரிவரதர். (எகக)

கண்டைவான்படைக்கப்படைதொடுத்தனர்கண்டை
மண்டுசேனையிலனந்தமாய்ப்படர்தலுமோகம்
விண்டசேனையதேகலுங்குரூரன்முன்விநோதங்
கொண்டகாந்தருவப்படைகுலைந்துநீங்கியதே. (எஉ0)

பட்டிமைக்கொருபிறப்பிடமாகியபதக
னொட்டிமுற்றுவித்திடும்புணர்ப்புணர்ந்துபின்குரூர
னட்டிமைக்குமுன்வாவெனவமர்பவுத்தேவி
முட்டிமைத்தமெய்ப்பூதத்தின்மொய்யமர்விளைத்தாள். (எஉக)

சண்டமாருதமிரண்டெதிர்த்தாலெனத்தழங்கி
யண்டம்யாவையுஞ்சுற்றினரலைகடற்சுழன்று
ரொண்டராதலஞ்சுலாவினருரகர்கள்வாழ்க்கை
கொண்டபாதலங்குலாவினர்கொதித்தமராடி. (எஉஉ)

உலகமெங்கணுமமர்புரிந்துழிதருவேலை
கலதியேபுரிபூதத்தைக்கைத்தலம்பற்றி
யிலகுசீர்ப்பவுத்தேயியங்கெடுத்துமண்கிடத்தி
யலறவோரடிமிதித்துமற்றடியினைக்கிழித்தாள் (எஉங)

கிழித்தகீற்றினுளொன்றனைக்கீழ்க்கடலெறிந்தாள்
கொழித்துவெள்வளைத்திரைதவழ்குடகடர்பரப்பிற்
றெழித்துவீசினளொன்றனைச்செருக்களநீங்கி
விழித்துமேதகுவரமருள்புத்தியைச்சார்ந்தாள். (எஉச)

ஆற்றன்மேம்படுபூதத்தினழிவினைநோக்கிக்
கூற்றநேர்வருஞ்சுராந்தகன்கூவிரிசடவி
யேற்றமாகியசிலைவளைத்தெறுழ்க்கணைதொடுத்தான்
மாற்றிவாளிகள்குரூரனும்வழங்கினன்விசிகம். (எஉரு)

புங்கவாளியிலிருவரும்பொருதழியவுணன்
றுங்கவானிரதத்தினைத்தூட்படுத்தார்த்தா
னெங்கணுயகனேவியவீரன்வேறிரதந்
தங்கினூறினன்குரூரன்பொற்றேர்தகுவனுமே. (எஉசு)

வேறு.

பன்முறைவாம்பரிவையமறுப்பர்கள்பாகனைவீட்டுவர்கள்
வன்மையினேந்தியகைச்சிலைநூறுவர்வார்கொடிவீழ்த்துவர்கள்
பொன்முடிதள்ளுவர்சாலிகைதாழ்த்துவர்போக்குவர்வெண்கவிகை
யின்னணமாகவிருஞ்சமராடினரெய்திருவோர்களுமே. (எஉஎ)

மீதலமேழினுமெய்துவரெட்டெனும்வேலையுமெய்துவர்கள்
கோதறுநேமிநெடுங்கிரியாகியகுன்றினுமெய்துவர்கள்
பாதலமேழினுமெய்துவராடகர்பற்றினுமப்புறமார்
மேதகுவைப்பினுமெய்துவர்மீளுவர்வெஞ்சமராற்றினரே. (எஉஅ)

தொக்கசிலைச்சமராடொழியன்னவர்சூழ்ந்திடையேயிடையே
சக்கரமுந்துவர்பரசும்விடுப்பர்கடண்டமுகைப்பர்மிக
நக்கயில்வேலெறிவார்கதையோச்சுவர்நாந்தகம்வீசுவர்கண்
முக்குடுமிப்பெருவேல்கணடத்திமுடுக்குவர்தோமரமே. (எஉகூ)

நீடமரின்னணமாடியபோதநிசாசரன்வையமிசைப்
பீடமர்வெய்தியபாய்ந்துகுரூரன்பிடித்தகைவச்சிரத்தாற்
பாடமர்மார்பிடையெற்றினன்மீண்டனன்பண்ணவர்தம்பகைஞன்
சேடமராண்மைகுறைந்துவிழுந்துதிகைத்துயிர்சோர்ந்தனனே. (எஙo)

உயங்கிமயங்கியசோகமொழிந்துணர்வெய்தியெழுந்தவுண
ணியங்குகுரூரன்வயப்பரிவையமதெய்துபுகைக்கதையாற்
புயங்களிலெற்றினனன்னவனுவிபுலர்ந்துமயங்கியது
தயங்கியசேனையுலைந்திரியச்சமராடினன்பின்றகுவன். (எஙக)

வேறு.

சூரனுங்குரூரனுவிசோர்ந்துதேரின்வீழ்ந்ததும்
வீரரோடுசேனையாவும்வெய்யவற்குடைந்தது
நாரணுதியோர்களுமொனுதநாதனுடுபு
சீருறுதகூவிரத்ததேர்கடாய்முன்னின்றனன். (எஙஉ)

தேவர்காலனனவீரன்சீற்றமிக்குரைக்குவன்
றூவுறுதமாதவந்தழாதவெம்பியாவியைத்
தூவுறுதனாட்பிடைந்தொலைத்துளாயதைக்குறித்
தேவராலும்வெல்லொணுவெனக்குமாறுபட்டனை. (எஙங)

விண்ணுளாரும்விண்டுவும்விரைத்தகஞ்சமேவுமெண்
கண்ணனுநெற்றிமுற்றுகண்ணினனும்யாவரு
மெண்ணிலாதநாளொருங்கெழுந்துபோர்நடத்தினு
மண்ணலானவென்னைவென்றகன்றுபோவதில்லையே. (எஙச)

இன்றுநின்றன்வீரர்யாருமென்முனின்றுபோரினல்
வென்றிகொண்டிலார்களந்தவீணர்போலநீயுமே
மன்றமாய்குவாயலாதுவாகைசூடுவாயலை
யொன்றுறுதவாழுமாறுபுந்திசெய்யினீதுகேள். (எஙரு)

உய்யநின்னைவிட்டுளேனொருத்தனேநிலத்திடைக்
கையிலேந்துவன்படைக்கணத்தையிட்டுப்போந்துநின்
னையநம்மைதுன்புறாதடுத்துவாழ்தியென்றனன்
வையம்யாவுமுய்யவந்தவள்ளல்கேட்டுரைப்பரால். (௭௩௬)

வேறு.

வானிலமுழுதுந்துன்பம்வளர்த்தபுல்லறிவோய்நீயு
நானிலமுழுதுந்துன்பநாட்டுநின்னிளவற்றனு
மூனமில்வயிற்றார்சூலாயுற்றநாளாதியாக
வினையினொருநல்காறுஞ்சகோதரமென்னவாழ்ந்திர். (௭௩௭)

அத்தகுமிருவீருள்ளுமொருத்தனையமரனாக்கி
வைத்தனந்துறக்கவைப்பின்மருங்குமுன்போலவாங்கு
வித்தகமானசேனைமேவிடவைத்தாமேனா
மொத்திடுசகோதரத்தினொழிதுயரெயர்க்குமுண்டே. (௭௩௮)

ஆதலாலவற்குநீயேயருந்துணையாகுமாறு
மேதமில்களத்திற்பட்டங்கெய்தியநினதுசேனை
காதலினினையேவேந்தாக்கைக்கொளுமாறுமின்னே
மேதகநினையுந்தேவனுக்குவல்வெருவலென்றார். (௭௩௯)

வேறு

என்றுநாதரியம்பவெஞ்சினமீண்டுதேவர்களந்தகன்
வென்றிவார்சிலைகோட்டியம்புவிடாதுபற்பலதூண்டினான்
றன்றுவாளியறுத்திருங்கணையோரிரண்டுதொடுத்தவ
னொன்றுதூணியும்வில்லுமட்டனரும்பர்போற்றுமகோற்கடர். (௭௪0)

வேறுகார்முகம்வாங்கியாயிரம்வெய்யவாளிமகோற்கட
ரேறுதேர்மிசையுந்தினானிமையார்களந்தகனன்னவை
மாறுமாறுவிலக்கிமுக்கணைவல்லையேவிவையம்பரி
தேறுபாகுமொருங்கறுத்தனர்தேவர்போற்றும்விநாயகர். (௭௪௧)

விண்ணுளார்பகையானபாதகன்வேறுதேரினியர்ந்தனன்
வண்ணமார்பதினாயிரங்கணைவாங்கிவிட்டனனன்னவை
யண்ணலார்பலவாளிதூண்டியறுத்தொருங்கவன்மேவுதே
ரெண்ணிலாதனசேமவையமுமேந்துவில்லொடுநூறினார். (௭௪௨)

குரங்குளைப்பரியேறியூர்ந்துகொடிஞ்சிவானிரதத்தமர்
வரங்கொணாயகர்மார்பிலேச்சினன்வாளினாலவுணர்க்கிறை
கரங்கொள்வாளொடுசெந்துசங்கடிதேநிலத்தின்மறிந்துக
வரங்கொல்கூர்மழுவாற்றுணித்தனரந்தரர்க்கிடர்தீர்ப்பவர். (௭௪௩)

அந்தரத்தினெழுந்ததேவர்களந்தகன்வருணப்படை
முந்தவுந்தினனேனைவானவர்மூரிமாப்படையுந்தக
வுந்தினானவையாவும்யாவருமுய்யவந்தமகோற்கடர்
சிந்தினார்மிகுதேவர்தம்படைதேர்ந்துவேறுசெலுத்தியே. (௭௪௪)

உருத்திரப்படைதூண்டினானுரமிக்கதானவர்கோமக
னுருத்திரப்படையேசெலுத்தினரும்பர்தம்பெருமானுநே
ருருத்தெழுந்தவையோரிரண்டுமுராயமர்த்தலகேளழியு
முருத்தவச்சிதர்செய்யமீட்டனருந்தினாரிருவோருமே. (௭௪௫)

அழித்தவையகமீளவாக்கியலங்குமப்படைவிட்டவர்
செழித்தகைத்தலமுற்றபின்செயிரார்ந்ததானவன்வெஞ்சினங்
கொழித்தமாயைகளெண்ணிலாதகுயிற்றினானவையாவையு
மொழித்துநின்றனர்ஞானமாப்படையுந்தியெங்கள்விநாயகர். (௭௪௬)

கடிதராதமரின்னவாறுகலந்தொர்வைகலெல்லாஞ்செய்தார்
விடியலாகியகாலையெய்தவிளங்குமெங்கண்மகோற்கடர்
முடிவிலாதவன்பெற்றநல்வரமுன்னியானைமுகங்கொடு
தொடிவிராவியகையினாற்சுடர்கோட்டொன்றுதுணித்தனர். (௭௰௭)

முரித்தகங்கைபிடித்தகொம்பினைமொய்ம்புமிக்கசுராந்தக
னிரித்துமென்றெதிர்பாய்ந்தடுத்தனனெம்பிரான்சிரத்தெற்றினான்
பரித்தசென்னியொராயிரஞ்சிதர்பட்ட.தன்னவன்மாய்ந்தனன்
மரித்ததன்னவனோடுமுச்சகமல்கிகின்றவிடுக்கணே. (௭௰௮)

வேறு.

அழிந்ததகுவர்தம்பெருமானுவிதேசின்மயமாகி
யிழிந்தமலத்திற்றணந்திறைவனிணைத்தாண்மலரினடங்கியது
பொழிந்தகடவுளினமலர்கள்பொற்பவியங்களியம்பியளா
வழிந்தமகிழ்ச்சியுளத்தினராய்வாழ்ந்தார்வையத்தனைவோரும். (௭௰௯)

அறங்கள்வளரமறந்தளரவமர்செய்களத்தினன்றெடுத்த
பிறங்குகளிற்றின்முகமாறிப்பெருமான்முன்போலினிதிருந்தார்
திறங்கொள்காசிநகர்மன்னன்றேவர்முனிவரனைவோரு
நிறங்கொண்மலர்ச்சேவடிபணிந்துநீண்டமறையாற்பழிச்சினரால். ()

வெற்றிமுரசஞ்செறிந்தார்ப்பவீரர்பலருமெழுந்தார்ப்பக்
கொற்றமடங்கலுகைத்திருபாற்கோதைமாதரொடுமேனை
யற்றமகன்றவொன்பதின்மரான்றகுரூரன்முதல்வீரர்
பற்றின்மருங்குமிகச்சூழப்படர்ந்தார்காசிநகரிறைவர். (௭௫௧)

மன்னனெடுங்கோயிலையடுத்துமணியாதனத்தில்வீற்றிருந்தா
ரின்னதறிகசுராந்தகனையிறுத்ததினிமன்றலைமுடித்து
முன்னிமுனிபாற்றமதுலகமுற்றியிறைவர்வேந்தனுக்கங்
கின்னறவிர்முத்தியையளித்தவிதுவுந்தொடுத்துமொழிந்திடக்கேள்.

பொன்னினிழைத்தமணிக்கோயிற்புலவர்பெருமான்வீற்றிருந்த
பின்னரரசன்பணிந்தெழுந்தெம்பெருமானமராடலைநோக்கத்
துன்னுமமரர்முதலானதொகையோர்சினதின்னருளாற்செய்
நன்னர்வதுவைக்கிருந்தேகநவிற்றல்வேண்டுமவர்க்கென்றான். (௭௫௩)

வேந்தன்விழைவைமுடித்தருளவிமலாதுசெய்தனர்வேந்தன்
வாய்ந்தவிறைவரருள்பெற்றுமன்றன்முடங்கல்பலவேவி
யாய்ந்தவதுவைப்பொருள்வினைகளனைத்துமாக்குவீரெனநன்
றோர்ந்தவமைச்சர்தமக்கியம்பியும்பர்முதலோர்க்குபசரித்தான்.(௭௫௪)

வேறு.

மங்கலமுடங்கலேற்றுமறுபுலத்தரசர்தாமு
மெங்குளசுற்றத்தாருமெனைவருமவந்துதொக்கா
ரங்குளமுயற்சிமுற்றவமைத்தனரமைச்சரிப்பாற்
புங்கவர்போற்றுநாதர்புரோகிதராகினாரே. (௭௫௫)

புகராறுமுகுர்த்தநாடிப்பொற்பவங்குரமுன்னாகத்
தகவினைதொடங்கிமன்னன்றனையனுக்கொத்தமாட்சி
மகததேயத்துமன்னன்மகளினைக்கொடுப்பப்பின்னுந்
துகளறவோமமாதிதொன்மறைவழியிற்செய்தார். (௭௫௬)

மன்றலுக்கவதிசெய்தவைகலோரைந்துஞ்செல்லப்
பின்றையைம்படைகையேந்திபிரமனேமுதலாந்தேவர்
துன்றியமுனிவரேனைத்தொகையினரெவருந்தத்த
மொன்றியவரைப்பினெய்தவுகந்தருள்வழங்கினாரே. (௭௫௭)

துன்னியகளத்தினீசத்துவமெனுந்தோகையின்ற
கன்னியையடுப்பக்கூவிக்கனன்றுவாய்மடுத்தவெள்ளி
தன்னையிங்குமிழ்கவென்றுசாற்றிமண்ணிடத்திற்கான்ற
பின்னரன்னதுவும்விண்ணிற்பெயர்தரவேவினுரே. (எருஅ)

விழுமியவிடைபெற்றேகும்விண்ணவராதியோரை
யுழுவலிற்பணிந்துநின்றுமொளிறுவேற்றடக்கைமன்னன்
ருெழுதெழுமந்தவேந்தன்றுலங்கொளிமுகத்தைநோக்கிக்
குழுமியதேவராதியனைவருங்கூறலுற்ருர். (எருகூ)

துக்கசாகரத்தின்மூழ்கித்துணையிழந்திருந்தயாங்க
டக்கபேரின்பத்தாழச்சாமியையீண்டுத்தந்து
தொக்கதானவரையெல்லாந்தொலைத்தெங்கள்பகையுஞ்சாய்த்த
மிக்கநற்குணத்துளாய்க்குவிளம்புகைமாறுமுண்டோ. (எசுO)

வள்ளலைவழிபாடாற்றும்வாய்மையானினைக்கண்டோருந்
தள்ளரும்பயன்கணுன்குஞ்சார்குவரென்ருனீவீ
ழொள்ளியபொருளின்றேனுமுன்னிடைவிழைவால்யாங்க
ணள்ளுறவழங்குகின்றநல்வரங்கொள்கவென்று. (எசுக)

தத்தமதாற்றற்கேற்பத்தனித்தனிவரங்கணல்கி
வித்தகவுலகிற்சென்ருர்விநாயகர்வேந்தைநோக்கி
யித்தினமிறக்குமுன்னரிருமுதுகுரவர்ப்பாங்கர்ப்
பத்தியிற்படர்தல்வேண்டும்பண்ணுகவிரதமென்ருர். (எசுஉ)

அம்மொழிகேட்டலோமொன்பிரிகன்றின்மன்னன்
விம்மினனறிவுசோர்ந்துவிழுந்தனனுணர்ச்சியெய்திச்
செம்மலையழைத்தஞான்றுதெரியிழையதிதிவல்லே
தம்மெனமொழிந்ததெண்ணித்தளர்வரிதகன்றுய்ந்தானே. (எசுங)

சித்திபுத்திகண்முன்னனதெரியிழைமாதராருங்
கொத்துறுமவுணர்ச்சாய்த்தகுரூரனையுள்ளிட்டோருந்
தத்தமதிரதமூர்ந்துசார்தரக்காசிவேந்த
னுத்தமனிரதம்பண்ணியூர்ந்திடுவேலவனுனன். (எசுச)

ஆரியந்துவையாநிற்பத்தோகையர்பாடியாடச்
சீரியகவிகைபிச்சந்திரள்கொடியாலவட்டம்
போரியல்பூதர்பற்றப்புகழ்கள்மாகதர்கள்கூற
வாரியலுருளித்திண்டேரமலருமேறினுரே (எசுரு)

பொலிந்தவுண்ணகரநீங்கிப்புறநகர்செல்லும்போது
மெலிந்தவுள்ளத்தராகிவியநகர்மாந்தரெல்லா
மொலிந்தமெய்யன்புதள்ளவோடினர்தேரைச்சூழ்ந்து
மலிந்தகண்ணருவிபாயமறுகினர்பிரிதலின்றி (எசுசு)

தணவருநகரத்தாரைத்தம்பிரான்றேற்றிநோக்கிக்
கணபதியென்னப்பட்டகாமருநமதுமூர்த்தி
யணவுபொன்னுதிதம்மாலமைத்தகந்தோறும்வைத்துப்
புணர்பதப்பூசையாற்றிப்புலம்பினித்தவிர்திரென்ருர். (எசுஎ)

எம்பிரானருளிச்செய்தவின்னருடலையிற்ருங்கிப்
பம்புநாகரிகரெல்லாம்படர்ந்தனர்நகரநோக்கி
நம்பியாட்டயர்ந்துநாளுநண்ணியசிருர்கடாழ்ந்து
கம்பமுற்றிரங்கிக்கண்ணீர்கவிழ்த்துநின்றிதனைச்சொன்னுர். (எசுஅ)

கருணையங்கடலேயெங்கள்கண்ணுறுமணியேநீபுன்
பருவருமலங்கடீர்க்கும்பரம்பரனாகிநின்ற
பெருமிதப்பொருண்மைக்கேற்றபெற்றியிளிருந்திடாது
மருளுமெஞ்சிறுமைக்கேற்பமண்ணிடைப்பாலனானாய். (எசுகூ)

வியக்கொள்வான்போன்றுஞ்சாலவியக்கொளப்படுவான்போன்று
நயங்கிளர்தோழன்போன்றுநல்குவான்போன்றுநல்கும்
பயன்களையேற்பான்போன்றும்பருவரவடிப்பான்போன்று
மியங்கடிபடுவான்போன்றுமெங்களிலொருவனானாய். (எஎ0)

அடிசில்களுடன்கைதொட்டுமணியுடனணிந்துநாளும்
படியமர்விளையாட்டெல்லாம்பயின்றுடனிருந்துமின்று
கடிதலிற்பெருநீரற்றகயலினம்போன்றுயாங்கண்
முடிவதுசரதமற்றுன்முன்னுதுநின்றேடென்றார். (எஎக)

சிங்கியமகிழ்விற்கூறுஞ்சிறார்முகமினிதுநோக்கி
நுங்களைத்தணவோநுங்கணுனித்தறிபுந்திதன்னிற்
றங்குவோமிடருண்டாயிற்றகநினைமின்கள்யாமே
யங்கதுதீர்த்தும்போமென்றமலனாரவரைநீத்தார். (எஎஉ)

புறநகர்நின்றுநாதர்பூபதியிரதந்தூண்டச்
செறிபணைமருதவைப்புத்தீர்ந்தருங்கானத்தேகி
யறிவனச்சிரமஞ்சாரவதற்குமுனறிந்தின்றோர்க
ணிறைதருகாதல்பொங்கவெனரேலெனவெதிரேபோந்தார். (எஎஙு)

இருமுதுகுரவர்வந்தாரெனமகிழ்ந்திறைவர்தாமும்
பெருநிலத்திறங்கிச்சென்றார்பேணியவிழைவாற்றாதை
மருவுறத்தழுவிக்கொண்டுவிடுத்தனர்மருங்குநின்ற
கருணைநற்றாயுஞ்சாலத்தழுவினள்கவலைநீத்தாள். (எஎச)

மனமகிழ்சிறப்பநாதர்மருங்குளார்தமக்குமேற்ப
வினைமலியுபசாரங்களியற்றினரவருமந்த
வனகர்பாலுபசாரங்களாற்றினாரிருவர்தாளுங்
கனமுறழ்கொடைக்கைவேந்தன்கைதொழுதிறைஞ்சிச்சொல்வான்.

என்னையாளுடையீர்நுங்களெழிற்பெருங்கருணைநோக்கான்
மன்னுபூபாரநீங்கிமன்றலுமுடிந்ததீங்குச்
சொன்னநும்மொழியின்வண்ணந்தோன்றலைவிரைவிற்றாராத்
தன்மையென்னென்றுகேட்பிற்சாற்றுகேனதனுக்கேது. (எஎசு)

ஈங்கிருந்தெழுந்துசெல்லுமியவையுளற்றைஞான்றே
தாங்குபல்படைஞர்தம்மைச்சாடினர்வழிநாளாதித்
தீங்கறமூன்றுநாள்கள்சித்திபுத்திகளின்மன்றல்
பாங்குறமுடித்துச்சேர்ந்தார்பதியவரிறும்பூதெய்த. (எஎஎ)

ஐந்தெனுநாளின்மூவரவுணர்காவலரைத்தேய்த்தார்
வெந்திறற்கணிதன்றன்னைவீட்டினராறுநாளிற்
கந்தரக்கூபர்தம்மைக்கடிந்தனரேழாநாளிற்
சிந்தினரெட்டினம்பாசுரன்முதற்றெவ்வர்தம்மை. (எஎஅ)

ஒன்பதிற்கொன்றாரம்பாசுரன்றனையுயிர்த்ததாயை
யின்புறநகரினுள்ளாரிடும்விருந்தயர்ந்தார்பத்தின்
றுன்புறப்பத்தோடொன்றினராந்தகன்றலையச்செய்தார்
பின்பிருநாளிற்றேவாந்தகனொடுபெரும்போர்செய்தார். (எஎகூ)

ஏழிருநாளிற்காலைச்சுராந்தகற்கிறுதிசெய்தார்
வாழிமேலைந்துநாள்கண்மன்றலைமுடித்தார்பின்னர்ச்
சூழிருபஃதென்றேதுமிற்றைநாட்டுன்னிநின்று
றூழியுமழிவுறாதவுத்தமர்நும்பாலென்றான். (௭௮0)

மன்னவன்வைகல்வைகன்மகோற்கடர்புரிந்தவாட
றன்னமுமொழியாதோதத்தழைத்தவுள்ளத்தானார்
துன்னியகுரவர்பின்னர்த்தூயவில்லகத்தில்யாரு
முன்னினரளவளாவிமுறைமையினிருந்தாரன்றே. (௭௮௧)

வழிவருநாளின்மன்னன்மகோற்கடர்முதலானோரைக்
கழிபெரும்பத்தியோடுகழலிணைபணிந்துபோற்றிச்
செழிபலவரமுங்கொண்டுசிந்தையாங்கிருத்தித்தீர்ந்து
பொழின்மருங்குடுத்தகாசிப்புரத்திணையடுத்துவாழ்ந்தான். (௭௮௨)

சிலபகல்கழிந்தபின்றைத்தேவர்கடேவனாளுங்
கலதிசெய்பொறியைவென்றகசியபாதிதியென்னு
மிலகியபுகழினாரையெதிர்முகத்தினிதுநோக்கிக்
குலவியகருணைநோக்கிற்கொழித்தெழக்கூறலுற்றார். (௭௮௩)

அருந்தவநெடிதுகாலமாற்றுபுநம்மைநோக்கி
வருந்தலினும்பாற்காதன்மகனெனவந்துநன்மை
பொருந்தலர்ச்செகுத்துவிண்ணம்புலவருக்களித்துமண்மேற்
றிருந்தியவேதநீதிசெழித்திடச்செய்தாமன்றே. (௭௮௪)

இனிநமதுலகஞ்சாரவெய்துதுமென்றார்கேட்ட
முனிவனுமதிதிமாதுமுகுர்த்தமொன்றவசமெய்திப்
பணிவருங்கண்ணராகிப்பரமனேயினிமேலென்று
புனிதநின்னுருவங்காண்போமெனமிகப்புலம்பினாரே. (௭௮௫)

புலம்பியகுரவர்தம்மைப்புராதனரினிதுதேற்றி
யிலம்பகமணிந்தநெற்றியிமவரைப்பிராட்டிபாங்க
ரலம்புகிண்கிணிக்கான்மைந்தனாகுதுமங்குக்காண்மி
னலம்புனையுளத்தீரென்றுநவிற்றினர்மறைந்துபோந்தார். (௭௮௬)

மருங்குறைசித்திபுத்திமாதரைமுதலாவுள்ள
வருங்கிளைதம்மோடெய்தவானந்தபவனமென்னு
நெருங்கியவளத்திற்சான்றநின்மலவுலகம்புக்குப்
பெருங்களிதழைப்பவாழ்ந்தார்பேசுவார்பிறவிநீப்பார். (௭௮௭)

வேறு.

கதிவளர்கசியபமுனியுங்காதல்செய்
யதிதியுந்திருவுருவமைத்துச்செம்பொனான்
மதிதவழ்கோயிலொன்றாக்கிவைத்ததில்
விதியுளிபூசனைவிளைத்துவந்தனர். (௭௮௮)

வாரணவாசியின்வதிகின்றாரெலாங்
காரணனுரைத்தமைகடைப்பிடித்துமிக்
கோரணிமனைதொறுமிருத்திமூர்த்தியை
யாரணவிதிப்படியருச்சித்தாரரோ. (௭௮௯)

அன்னதுகண்டகன்புவியினேனைய
நன்னகர்மாந்தருநயந்தில்லந்தொறுந்
தன்னிகரில்லவனுருவந்தாபியாப்
பன்னரும்பூசனைபயிற்றுகின்றனர். (௭௯0)

காசியையடுத்தபின்காசிமன்னவன்
றேசிகன்மகனெனத்தேவதேவனார்
பூசியுண்டுடுத்தெழில்புனைந்துநன்மனை
யேசிலுட்கருணையினிருந்ததெண்ணினான். (எகூக)

மனமதுபொறிவழிவழங்கலின்றியே
தினமருந்தவம்புரிசிறந்தயோகரும்
கனவினுங்காணருங்கணத்தியக்கரை
நனவிடைப்பெற்றநானழுவினேனென்றான். (எகூஉ)

விண்மணியிழந்திருள்விரிந்தவையமுங்
கண்மணியிழந்திடர்கலந்தகண்களுந்
தூண்மணியிழந்துளந்தளர்ந்தநாகமு
முண்மணியிழந்தவென்னொடுமொவ்வாதென்றான். (எகூங)

பல்வகையின்னணம்படர்ந்துகண்டவர்
கல்வகைநெஞ்சமுங்கரையத்தன்னுள
மொல்வகையழன்மெழுகொத்துக்கட்புன
லில்வகையின்றிமுன்னெடுக்கவேங்கினான். (எகூச)

வைகலுமன்னவன்மகோற்கடர்க்குறு
நைகரமில்லதோரன்பினண்ணுபு
செய்கடன்மறந்துளந்திகைத்தசெவ்வியிற்
பொய்கழிமுற்கலமுனிவன்போந்தனன். (எகூரு)

எத்தகைவடிவமுமிறைமகோற்கட
ருத்தமவடிவமாயுணருங்கொற்றவ
னத்தவன்றனையுமக்கணேசனேயெனப்
பத்தியினெதிர்கொடுபணிந்துபோற்றினான். (எகூசு)

நன்றுறுமடிகளேநாதர்தாளிணை
யென்றுநான்காண்குவனியம்புகென்றன
னொன்றியமுனிவரனுவந்தையாயிரந்
துன்றுறுமாண்டுகெடொலையக்காண்பையால். (எகூஎ)

அத்தனைநாளுமிங்கரசுசெய்திரு
வித்தகவிநாயகர்விமானமீற்றினி
லுத்தமநின்னுழையுறுவிப்பாரிது
சத்தியமறியெனச்சாற்றிநீங்கினான். (எகூஅ)

மாதவனீங்கலுமழையைநோக்கிய
சாதகமெனத்தரையாளுமன்னவன்
போதனதடிமலர்புந்திநாடுபு
காதலிற்பூசையுங்கண்டுவந்தனன். (எகூகூ)

அறையுமையாயிரவாண்டுநீங்கலுஞ்
சிறையினின்றகன்றவன்போன்றுசிந்தையி
னிறைதருமகிழ்ச்சியினிருபன்வையக
முறைசெயமைந்தனைமோலிசூட்டினான். (அ00)

வழிவருமடியவர்மதியினிற்பவ
ரெழில்படர்விமானமொன்றேவினாரது
பொழில்வளர்நகரிடைப்புக்குநின்றது
விழியெதிர்கண்டனன்வேந்தர்வேந்தனே. (அ0க)

ஆடினுன்றட்டமிட்டமலன்சேவடி
பாடினுன்பலமுறைப்பணிந்தெழுந்தன
னீடினுன்மகிழ்ச்சியினீள்விமானமேற்
கூடினன துதகக்கொண்டெழுந்ததே. (அ0உ)

குய்யகவுலகமுன்னுகக்கோதறு
மையர்களுலகெலாமடைவினேக்குபு
கையணிமழுவினருலகங்கண்ணுறீஇ
மெய்யணியுளத்தவன்மேக்குச்சென்றனன். (அ0ங)

வேறு.

விளங்கியவண்டப்பித்திமீமிசையினிதுவைகும்
வளங்கெழுகந்தர்வைப்புமன்னியகவுரிவைப்புந்
துளங்கலில்வனப்புநோக்கித்துன்னினுர்கிழக்குநோக்காக்
களங்கமில்சிவலோகத்தைக்கண்டதிற்புகுந்தானன்றே. (அ0ச)

பன்மணியிழைத்தகோயிற்பரிசனம்பாங்குசூழ
வின்மணித்தவிசின்வைகும்விநாயகர்திருமுன்னேகி
நன்மையிற்பலகாற்ருழ்ந்துநாத்தழும்பேறவாழ்த்திப்
புன்மையினீக்கியென்னேப்புரந்தருளிறைவவென்ருன். (அ0ரு)

துலங்கியவளர்தானுகத்திரும்பினேயாக்குமாபோன்
மலங்களேத்துமித்துத்தன்னே மருவினுர்தாமேயாக
விலங்கருள்புரியுநாதனிறைஞ்சியமன்னற்கென்றுங்
கலங்கலிலறிவுநல்கியுடங்கமர்காட்சியீந்தான். (அ0சு)

நித்தியநிமலானந்தநிறைவதாய்ப்பிறிதலில்லா
முத்தியைக்காசிமன்னன்முன்னவனருளாற்பெற்றுக்
கத்தன்மெய்ப்பாதப்போதேகண்டுகொண்டிருந்தானன்று
ளுத்தமத்தவத்தையாரேயிற்றெனவுரைக்கவல்லார். (அ0எ)

எனவுரைசெய்தலோகமெதிரறுவியாசனென்பான்
வனசமென்மலரினுனே மலரடிவணங்கிச்சொல்வா
னனகனுகியகணேசனுனந்தபவனமென்னுந்
தனதுலகடைந்தானென்றுசாற்றினேமுன்னரன்றே. (அ0அ)

ஈங்கிவனருளாற்காசியேந்திலேவேற்கைமன்ன
னேங்கியசிவலோகத்தினுற்றவன்பாதசேவை
நீங்கலனுனென்றுநிகழ்த்தினேயதனுனெஞ்சந்
தாங்கியதையமந்தவையத்தைத்தவிர்க்கவென்ருன். (அ0க)

நன்றுநீவினுவிநின்ருய்நயத்தககேட்டியென்று
மன்றலங்கமலவாழ்க்கைமறையவனுரைப்பானந்த
வென்றியஞ்சிவலோகத்தின்விளங்குமீச்சுரனேவையத்
தொன்றுமுத்தொழிற்குமூவராகியேயுற்ருற்போல. (அக0)

விக்கினமுழுதுநீக்கிவேண்டியவரங்கணல்கி
மக்கள்விண்ணவர்கள்யாரும்வழிபடுதெய்வமாகி
யெக்கடவுளர்க்குமுன்னர்ப்பூசனேயேற்பாராகி
மிக்கவரின்மைதோன்றவிநாயகரெனும்பேர்தாங்கி. (அகக)

இம்மையுமறுமைவீடுமெளிதினிலருளவேறே
விம்மொளியுருவங்கொண்டான்வியாசனேவிளம்புமீச
னென்னுமத்திருமேனிக்கும்விநாயகனென்னயாரும்
பன்னுமித்திருமேனிக்கும்பார்த்திடிற்சற்றேவேறு. (அகஉ)

திருவுருவிரண்டன் மாட்டுஞ்சிவணியவத்துவொன்றே
வுருவவையிரண்டுஞ்சாலவொத்தமையுரைப்பக்கேளா
யருள்பொழிவதனமைந்துமையிருகரமுமூவைந்
திருளறுவிழியுந்திங்களிலங்குவார்சடையும்பாம்பும். (அகரு)

ஆக்குதலளித்தல்போக்கலானமுத்தொழிலுநாளுந்
தாக்கமர்புரியவல்லசாரதப்படையுமொய்த்து
மாக்குலமுரலுங்கொன்றைவன்னிபாசறுகுமற்றுந்
தேக்கொளிவேணிச்சென்னிச்சிறப்புறவணியுஞ்சீரும். (அகச)

ஒத்தனகண்டாயந்தவுருவிரண்டினுக்குமன்ற
வத்துவொன்றுதலாலேமருவிவாழுலகுமொன்றே
யத்தகுமுலகந்தானேயானந்தபவனமென்றும்
பத்தியினுணர்ந்தோரெல்லாம்பகர்சிவலோகமென்றும். (அகரு)

வளர்சிவலோகமென்றும்வழங்கியததனுன்முத்தி
வள்மருள்கணேசர்வைகும்வைப்புமவ்வுலகேயாகுந்
தளர்வறவவர்பாலன்புதழைத்தமெய்யடியார்தாமு
முளமகிழ்சிறப்பவெய்துமுலகமுமதுவேயாமால் (அகசு)

ஆதலான்மலேவேயில்லேயநிமகோற்கடர்தஞ்செய்கை
யோதினமவரேமீளவுமையிடைத்தோன்றிநன்மை
மேதகவருளுடுண்டிவிநாயகரானவாறுங்
காதலிற்கேட்டியென்றுகட்டுரைத்திடுவென்வேதன். (அகஎ)

மகோற்கடர்திருவவதாரப்படலம்முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உசுசுச.



## அக - வது உடுண்டிவிநாயகர் திருவவதாரப்படலம்.



காரணியுமலர்ச்சோலேக்கைவர்த்ததேயத்தி
லேரணிபன்மகமென்னுமிரும்பதியின்வாழ்க்கையுளான்
பேரணியினுஞ்சிறந்தபிரமசுரனெனுமசுரன்
றூரணிசெஞ்சடைப்பெருமான்றுள்கருதித்தவமுயன்றுன். (க)

கலேவளேத்தசெஞ்சடையிற்கதிர்நகைக்கங்கையைக்கரந்த
மலேவளேத்தசிலேக்கரத்தார்வந்தெதிர்நின்றனராகக்
கொலேவளேத்தமனத்தவுணன்கொம்மெனவங்கெழுந்திருந்து
தலேவளேத்தமறைமொழிந்துசயசயவென்றேத்தெடுத்தான். (உ)

வேட்டவரம்யாதென்றுவிமலனுர்வாய்மலர்ந்தார்
கேட்டவுணன்மீட்டிறைஞ்சிக்கேழ்த்தவென்கையெவர்முடியிற்
றீட்டினுமன்னவர்வெந்துசெழும்பொடியாகுகவென்றுன்
நாட்டநுதற்கரந்தவர்தாநகைத்தவனுக்கதுகொடுத்தார். (ங)

அப்பொழுதேசோதிப்பவமலர்திருமுடிமீதே
துப்புடையபிரமசுரன்றெடிக்கரம்வைப்பானடுத்தா
னெப்பரியவரங்கொடுத்தவொருதாமேயழித்துவிடல்
செப்பமலவெனவிறைவர்செறிந்தவியாபகரானுர். (ச)

கட்புலனுக்கெதிர்நின்றகண்ணுதலார்மறைதலொடு
விட்புலம்பாதலமவனிவேலேவரைதிசையெங்கும்
கொட்புறலுற்றுன்றுருவிக்கோகனகமலர்மாது
நட்புறுந்தண்மலர்த்துளவநாரணனன்னதையறிந்தான். (ரு)

விச்சுவரூபனையிந்தவெய்யவன்காண்பானல்ல
னச்சிவனாலழியாதவழிதக்கவரம்பெற்றான்
முச்சகமுமினிநீறாய்முடிப்பனொருவஞ்சனையா
னச்சியுயிர்குடித்துமெனநலத்தகுமோகினியானான். (௬)

புவியொடுவானகநடுங்கும்போரவுணன்முகத்தெதிர்போ
யவிழ்மலர்மென்குழலலைத்துமரும்புமிளநகைவிடுத்துங்
குவிமுலையொன்றினைத்தெரித்துங்கொடிமருங்கிற்கலையுறுத்துங்
கவிழ்சிறுகணோக்களித்துங்கவின்றனளம்மோகினியே. (௭)

தோகையெனவேபிரமசுரன்விழைந்துமருங்கடுத்து
வாகைபுனைசேயிலைவேன்மருட்டியகட்பசுங்கிளியே
ஈகைமணிமுதலெவையுமீகுவனின்னுளமிரங்கி
நீகையிணையாற்றழுவிநிறைசுகந்தாவெனக்கென்றான். (௮)

நாடகமாதரிற்சிறந்தநங்கைதமியேன்மன்னு
வாடரங்கினெனக்கெதிர்நின்றவிநயங்கள்செய்தபடி
பாடகங்கோணாதியற்றும்பண்பினரைச்சேர்வதல்லாற்
பீடகம்வாடினுமென்றும்பிறர்தமைச்சேரேனென்றாள். (௯)

மைவண்ணன்கைதவத்தின்வகுத்ததுகேட்டவ்வசுர
னெவ்வண்ணமவிநயநீயியற்றிடினுமடமாதே
யவ்வண்ணமெதிர்புரிவனதுபுரிந்தபின்னெனக்குன்
செவ்வண்ணவிதழமுதந்தேக்குதியென்றுரைசெய்தான். (௧௦)

வேறு.

அன்னதுபுரிந்தாயாயினுடலுக்கிசைவேனென்று
முன்னுறத்தனதுசெங்கைமோகினிமுகிழ்த்துநின்றா
டன்னிருகரங்கள்கூப்பித்தகுவர்கோனெதிரேநின்றான்
பின்னவ்டனதுசென்னிகரமொன்றுபிடித்துவைத்தாள். (௧௧)

வரத்தினைமறந்துபிரமாசுரன்மலர்புரையுந்தன்கைச்
சிரத்தினிற்பிடித்துவைத்தான்சிவபிரானகையான்மும்மைப்
புரத்தவரழிந்தாற்போலப்பொள்ளெனச்சாம்பரானா
னுரத்தினிற்சிறந்தமாயனுவகையங்கடலிற்றாழ்ந்தான். (௧௨)

துட்டர்கள்கடவுட்பாங்கர்த்தொகுவரம்பெற்றாரேனுஞ்
சட்டவவ்வரத்தாற்றாமேசாவதுசரதம்போலு
முட்டறவுலகநீறாமுடித்திடவரத்தைப்பெற்றான்
பட்டனன்பெற்றவந்தப்பாழியம்வரத்தினானே. (௧௩)

அராவணைதுயின்றதேவனணங்குருவானவாறே
விராவியநகரினின்றும்விழைந்திருக்கின்றவாற்றாற்
பராவுநாவலர்களந்தப்பன்மகமென்னும்வைப்பைத்
தராதலம்வியப்பநாளுஞ்சாற்றுவர்முகுந்தையென்றே. (௧௪)

சொல்லியதனதுநாமந்தொடர்மொழியாக்கவேதன்
புல்லியதேவனென்னும்பொருட்படுந்தகுவனீன்ற
வல்லபல்படையான்வீரம்வளர்துராசதனென்றுள்ளா
னெல்லையங்கரநீங்கியுற்றனன்மழைக்கோட்பாங்கர். (௧௫)

போற்றினன்வெள்ளிபாதம்பொழிமழைவிழியினின்று
சாற்றினனறைந்தபன்மாசுரனுயிர்சாய்ந்தவாறு
மீற்றியமாயனாதிதேவரைநெருக்கியானே
வீற்றுவையகங்கண்மூன்றும்வெற்றியோடாள்வனென்றான். (௧௬)

தளரலைமைந்தவென்றுதண்ணியமழைக்கோட்செல்வன்
களமலிமிடற்றுநாதர்கருணைசெய்யெழுத்தோரஞ்சும்
விளரருந்தீக்கையாற்றிவிளம்பினன்பண்பிற்கேட்டுத்
துளவனைநிகர்த்தவாண்மைத்துராசதன்றவத்திற்புக்கான். (௧௭)

ஆயிரவருடமொற்றையடிப்பெருவிரலினுச்சி
பாயினநிலத்திலூன்றிப்பட்டினியுற்றுவெய்யோன்
காயழல்வெப்பங்கூதிர்கடும்பனிவிளைக்குஞ்சீத
மாயினவிடும்பைக்கஞ்சாதறைந்தனனெழுத்தோரைந்தும். (௧௮)

புற்றெழுந்துடலமூடப்புதலொடுமரங்கணீடிச்
செற்றுறவரிதுநோன்பிற்றிகழ்துராசதனைக்காப்பப்
பற்றியவிமயமாதுபாகராய்விடைமேற்கொண்டங்
கற்றவர்க்கற்றநாதரவனெதிர்தோன்றினாரே (௧௯)

நாரணனறியாத்தேவர்நயந்தருள்கடைக்கணோக்காற்
சார்தரப்புற்றைச்சீத்துத்தவத்துறைகருத்தினானை
யாரணமறியார்வந்தாரறியெனத்தெளிப்பவன்னான்
பாரகமுறையிற்றாழ்ந்துபரசினன்மறைகள்கொண்டு. (௨௦)

கைமலருச்சியேறக்கண்ணிணையருவிதூங்க
மெய்மயிர்பொடிப்பவேத்தும்விழுமியமொழிதள்ளாட
நைமனங்கரையநின்றநாமவேற்றருவற்பாரா
நெய்மலிசூலத்தண்ணனீவரங்கேண்மோவென்றார். (௨௧)

அரக்கனீண்முடிகள்பத்துமலறநன்றடர்த்தபாத
ரிரக்கமோடருளிச்செய்தவின்மொழிகேட்டுமீட்டும்
பரக்குமெய்யன்பிற்றாழ்ந்துபலவரமிரக்கலுற்றான்
சுரர்க்கிருங்களையேயானதுராசதனெனுநாமத்தான். (௨௨)

நித்தியப்பொருளாயுள்ளநின்மலாநீயேயாகச்
சத்தியேயாகநும்மாற்றரப்படுந்தனையராகப்
பைத்தபாப்பணையானாகப்பங்கயனாகவெவ்வே
றுத்தபல்லமரராகவுரகர்தானகர்களாக. (௨௩)

நரகர்களாகமாக்களாகநாற்காலியாதி
விரவுபல்லுயிர்களாகவெண்பத்துநான்குநூறா
யிரமெனும்பவங்களின்றியீண்டுலகத்திற்றோற்ற
மரவணிசடையாய்வேறுண்டாயினுமவையேயாக. (௨௪)

பன்முறைநீவிரெல்லாம்பரிவுதீர்ந்தென்னைக்கொல்ல
வன்மையின்முயன்றீரேனுமற்றுநான்மடியாவாறுஞ்
சொன்மலிதேவாயாருந்தொழுதெனதேவல்கேட்ப
நன்மைவையகங்கண்மூன்றுநானரசாளுமாறும். (௨௫)

மல்கியவெறுக்கையீட்டமெம்மரினமுந்தாமே
யல்கியபத்திநாயேற்கடிகள்பாலிருக்குமாறு
நல்குகவரங்களாகநாதனேயென்றான்மாது
புல்கியபாகத்தெங்கள்புண்ணியரருளிச்செய்வார். (௨௬)

பொத்துதேசொளியதாகிப்போக்கொடுவரவில்லாநஞ்
சத்தியேகவுரிபாங்கர்விநாயகரென்னச்சார்ந்து
வைத்துநின்சிரத்திற்றாளையடக்குதல்வாய்மையேனைக்
கொத்துறுவரங்களெல்லாங்கொடுத்தனங்கோடியென்றார். (௨௭)

கராசலங்காத்தமாயனுதியோர்கவலைகூரத்
துராசதன்வரங்கள்பெற்றுத்தொழுமெதழுதுளஞ்செம்மாந்தான்
பராபரன்மறைந்துபோற்றும்பத்தர்களுளத்தில்வாழ்ந்தான்
பராவியமுகுந்தையென்னும்பதியிற்றானவனுஞ்சார்ந்தான். (உஅ)

தொகுவரம்பெற்றுவேந்தாய்துராசதன்வந்தானென்று
தகுவர்கள்வந்துதாழ்ந்தார்தமைத்தமராகக்கொண்டு
நகுகதிர்ப்படைகையேந்துநால்வகைச்சேனைசூழப்
புகுமிடமின்றிமுற்றிப்பொருதனனரசரோடு. (உகூ)

சிலர்பெருமானங்கொண்டுசெருப்பலபுரிந்துமாய்ந்தார்
சிலரமர்க்களத்திற்றோற்றுத்திசைதொறுமிரிந்துபோனார்
சிலரடிவணங்கிப்போற்றித்திறையளப்பவர்களானார்
சிலரவனேவலாற்றிச்சேவகஞ்செய்தார்மன்னர். (௩0)

அவனிமன்னவரையிவ்வாறடக்கியபின்னர்ச்செந்தேன்
றுவலைசெய்கற்பநாட்டிற்றுராசதன்றனைந்துசென்றான்
அவன்வரவறிந்துமுன்னேயாயிரங்கண்ணனீங்கித்
தவமலிகாசிமூதூர்சார்ந்தனன்சுற்றத்தோடு. (௩க)

ஆங்கிருந்தரசுசெய்யென்றவுணருளொருவன்றன்னைப்
பாங்குறவிருத்திமேலாம்பங்கயனுலகஞ்சார்ந்தா
னீங்கியன்னவனுங்காசிநிமலனைச்சரணஞ்சார்ந்தான்
றாங்கவந்நகரைவேறோர்தகுவனைத்தகுவன்வைத்தான். (௩உ)

திருமறுமார்பன்வைப்பிற்சென்றனன்சிறந்தமாலும்
வருவதையோர்ந்துமுன்னேவாரணவாசிசார்ந்தான்
நிருபனுந்தகுவனுங்குநிசாசரனொருவன்றன்னை
யிருவினனிவ்வாறெல்லாவுலகமுங்கைக்கொண்டானே. (௩௩)

ஆணையிற்பிழையாவண்ணமடிப்படுத்துலகமூன்றுந்
தாணையொத்திலகுந்திண்டோட்டுராசதனினிதுமீண்டு
கோணைவன்னெஞ்சிசூழ்ந்தகுலவுதன்பதியில்வாழ்ந்தா
னுணையுற்றமரரெல்லாநகைமுகஞ்சாம்பினரே. (௩ச)

ஒருதினம்பேரத்தாணியொளிர்மணித்தவிசினேறி
மருவுழித்தகுவர்கோமான்வையகமூன்றுநந்த
மொருகுடைநிழற்றச்செய்தாமுறுவதென்னினிமேலென்று
னருகுறவிருந்துகேட்டவமைச்சர்களிதனைச்சொன்னார். (௩ரு)

தேவர்கண்முனிவர்சித்தர்திசைமுகன்றிருமான்மாலா
மேவலம்பிடித்தசூலத்திறையவரெவரும்வைகு
மேவருகாசிதன்னைவென்றபின்றேயெங்குங்
காவலகவிகைநீழல்கதுவியதெனலாமென்றான். (௩௬)

அதுவமைச்சர்களின்வாய்க்கேட்டவுணர்கோன்முழுவதேற்றி
யிதுநமக்கரிதுகொல்லோவெழுகநம்படைகளென்றான்
கதுமெனச்சேனைநான்குங்கடலெனவெழுந்தகாசி
முதுநகரடுத்தான்வைகுமுகுந்தையைநீங்கித்தீயோன். (௩எ)

வேறு.

களங்கமேபுரியவுணர்கள்காவலனடுப்பத்
துளங்கிவானவராதியோர்தொழுதடிசார்ந்தார்
விளங்குகாசியாள்விச்சுவநாதர்தாமவனுக்
குளங்கொள்காதலிற்கொடுத்தருளுயர்வரநினைந்தார். (௩அ)

இன்னும்வந்திலதிவன்றனையடக்குநாளென்று
துன்னிரின்றவர்தமக்கெலாஞ்சோர்வறச்சொல்லி
யன்னவைப்பினையகன்றுகேதாரத்தையடுத்தார்
முன்னியவ்வுழிவைகினர்முகுந்தனுதியரும். (௩௯)

தூயவாரணவாசியிற்றுராசதன்புகுந்து
மாயமாய்ச்சுரராதியோர்மறைந்தனரென்ன
வாயவோகையினப்பதியிருந்தரசியற்றிப்
பாயமூவகையுலகமும்பரித்தனனெடுகோள். (௪0)

காலமெண்ணிலதுராசதன்காவல்செய்திருப்பச்
சீலவிண்ணவர்திகழவிப்பாகமுஞ்சிறந்த
கோலமங்கையர்போகமுங்கூடலின்மையினற்
சாலநொந்தனர்பிரமனைத்தாழ்ந்துசேப்புவரால். (௪௧)

இனையதானவனென்றுகொலழிகுவனிந்த
வினைவலான்றனையாவரேவீட்டுவரிவற்கு
நினைவினுடருநெடுவரங்கொடுத்தவர்யாரே
துனையவோதுகவென்றலுமயன்றெருகுத்துரைப்பான். (௪௨)

உருத்திரன்றிருமாலயனெப்பமுக்குணமா
யிருத்தலின்றியக்குணங்களையென்றுமாண்டருளுங்
கருத்தனுகையாற்குணேசனக்குணவிகாரத்திற்
பொருத்தமின்மையினுகையாற்புகல்குணரகிதன். (௪௩)

களங்கவக்குணங்கடந்திருத்தலிற்குணுதீதன்
வளங்கொளத்தகுமுலகெலாமருவிநிற்றலினல்
விளங்குவிச்சுவவியாபியவ்விசுவத்தையாண்டு
துளங்குறுநலந்தோற்றலின்விச்சுவகருத்தன். (௪௪)

வெய்யனுயுலகழித்தலின்விசுவசங்காரி
பையமெல்லெனப்படுவனபலவற்றின்மேலா
மையனுதலிற்பராபரனுமெனப்பட்ட
செய்யனுகியசிவபிரானெருவனுண்டமரீர். (௪௫)

அன்னவீச்சுரன்றேசுருவாகியசத்தி
கன்னிபார்ப்பதிகாமருமலர்வதனத்தி
லென்னையாளுடைவிநாயகரெனவருங்கால
மின்னலேபுரிதானவனிறுதியாங்காலம். (௪௬)

அறுதியில்வரமவுணனுக்களித்தவரகில
நிறுவும்விச்சுவநாதரேயினிநிலைகலக்கி
யிறுதிசெய்பவனியம்பியவிநாயகனேயா
முறுதிகொண்டுமைமாதினைப்பழிச்சுமினென்றுன் (௪௭)

வேறு.

கமலனுரைத்தமொழிகேட்டுக்கவலைக்கடலின்கரையேறி
யமரரெவரும்பராபரையையகிலமுயிர்த்தகாரணியை
விமலரிடத்திற்பிரியாதவிலங்கன்மகளை மலப்பகையைச்
சமரம்புரிந்துதனித்தின்பந்தருபூரணியைப்பரசுவார். (௪௮)

ஒருத்தியாகியுலகனைத்துமோம்புமருளேயுலகத்தின்
வருத்தமகற்றப்பலவுருவாய்வயங்காநின்றசத்தியே
ருத்தையகன்றவுருவாளேகடவுண்முனிவர்முதலோர்செய்
பருத்தவழிபாட்டினுக்கிரங்கும்பேரானந்தப்பெண்ணமுதே. (௪௯)

குணமேசொரூபமானவளேகுணத்தையாளுங்கோமளமே
குணகாரணமேகுணாதீதக்கொம்பேவேதந்துதிப்பவளே
தணவாதவனிதரிப்பவளேதகுதாபரசங்கமந்தமக்கு
நிணரபதாரமானவளேநீடுநிந்தேவசொரூபியே. (ருo)

அடியார்பீழையறுத்தவர்கட்ககிலப்பொருளுங்கொடுப்பவளே
கொடியார்சுகத்தைக்குமைத்தவர்க்குங்கோதில்கருணைசுரப்பவளே
மிடியால்வருந்துமெமைப்புரப்பவேண்டும்வேண்டுமென்றிரந்தார்
முடியாமுதல்விதுதிக்கிரங்கிமுழுத்தவருளினெதிர்நின்றாள். (ருக)

மணங்கொப்புளிக்குங்கருங்குழலுமதிமென்முகமுமருள்விழியுங்
கணங்கொள்குழைசேர்வடிகாதுங்கதிர்ப்பூண்முலையுந்தொடிக்கரமு
நுணங்குமிடையுமுருவனைத்துநூலைக்கடந்தவியல்பினவ
ரிணங்கும்வடிவினணங்குருவாயெதிர்நின்றவளைவணங்கினார். (ருஉ)

விழைந்தவரம்யாதுதன்னைவிளம்புவீரென்றுமையம்மை
தழைந்தகருணையால்வினவத்தமியேம்பிழைத்தேமெனவிபுதர்
குழைக்தவுளத்தராயவுணன்கொடுமையுரைத்துநிமலையினி
யிழைந்தவெமதுதுயரகற்றியெல்லாவளமுந்தருகென்றார். (ருங)

நெடுமையுலகிற்பலநாளுநிகழ்த்தாநின்றதுராசதன்றன்
கொடுமையறையக்கேட்டலொடுங்கொதித்துவெகுண்டாளுமையம்மை
யடுமைவிழிச்செந்தீமுன்னரவளானனத்திலேகனெனப்
படுமெண்குணத்தான்றேசுருவாய்ப்பயிலுஞ்சத்திதோன்றியதே. (ருச)

காலையிரவிகோடியெனக்கதிர்க்குந்திருமேனியிெனாளியு
மாலைமதிச்செஞ்சடைமுடியும்வடவைநிகர்த்தவுருத்திரமும்
வேலையெனமெய்யடியார்க்குவிரிக்குமருளும்விளங்கியமுந்
நூலையணிந்தமணிமார்புநோன்மைசான்றகரம்பத்தும். (ருரு)

செங்கைத்தலங்கடொறும்படையுந்திவளும்வதனமோரைந்தும்
பொங்குவிரைசேர்கத்தூரித்திலகம்பொறித்தநுதற்பொலிவும்
தங்குமுரகமாலிகையுந்தயங்குமணிமாலையும்விளங்க
வங்கணெழுந்தவிநாயகரையம்மைநோக்கிமகிழ்கூர்ந்தாள். (ருசு)

இடும்பைதெறும்வக்கிரதுண்டரென்னுநாமமிகத்தரித்து
நெடும்பைதிரமும்வியப்பெய்தநீடும்பூசைபுரிந்தேத்தி
யடும்பையரவத்தாருரத்தார்க்கரியூர்தியுமீந்தவுணர்களாற்
கடும்பையிழந்துசுகமிழந்தகடவுளாரைப்புரவென்றாள். (ருஎ)

வேறு.

சக்கரமேந்துநெடியவன்முதலாந்தமனியவுலகவரெவருந்
தொக்கனர்வணங்கித்தொழுதெழுந்தாடித்துலங்கியவிநாயகர்தம்மை
விக்கினராசபத்தருக்குரியவித்தகமனுதிகள்கடந்தோய்
பொக்கமிலாதபுண்ணியமுதல்வபூரணசயசயவென்றார் (ருஅ)

வேறு.

எம்பெருமான்றிருவடிகண்டேத்துதலினடியேமே
பம்புபெரும்பேறுடையேம்பம்புபெரும்பேறுடையே
நம்புபெருந்தூய்மையினேநம்புபெருந்தூய்மையினேம்
வெம்புமிடர்களுந்தீர்ந்தேம்விண்ணமும்பெற்றேமென்றார். (ருகூ)

தேவர்குறிப்பையுமுணர்ந்துசிலம்புயிர்த்தவுமையம்மை
பூவடிவந்தனைபுரிந்துபுழைக்கைமுகத்தெம்பெருமான்
மூவரியவலிமடங்கற்றனியூர்திமேற்கொண்டு
காவலர்கள்புகழ்காசிநகரடுத்தார்பூதரொடு. (சுo)

திறமிகுந்தவிநாயகர்முன்செல்லுதலுமவர்பின்னே
யறமிகுந்தவிசுவேசரம்பிகைமாலயன்றேவர்
மறமிகுந்தபொறிவாட்மொதவராதியர்பலருஞ்
சுறமிகுந்தபுனற்காசித்தொன்னகரமடுத்தனரால். (௬௧)

முன்பயந்துபுறம்போந்தமுக்கணிறைமுதலானோர்
வன்பணிவக்கிரதுண்டவரதர்தமைமுன்னிட்டுப்
பின்னடைந்தாரெனக்கேட்டபெருவெகுளித்துராசதன்றன்
றன்படையையெழுகவெனத்தனிமுரசமறைவித்தான். (௬௨)

அறைமுரசமழைபொழியவகத்துவகைப்பயிர்தழைப்ப
நிறைபெருவெஞ்சினவீரநிகழ்பெருநாற்சேனைகளும்
பொறைமடந்தைபொறையாற்றப்பொலிவினொடும்போந்திறைஞ்ச
விறையவன்றிண்டேர்கடவியெழுந்துபுறநகரடுத்தார். (௬௩)

வீரமலிவெங்களத்துவிசையைநடமாட்டயரச்
சாரதருந்தானவருந்தழங்கியெதிர்ந்தமர்புரிந்தார்
பாரகமெங்கணும்பரந்தபைந்தடியுங்குருதியும்வான்
பேரகமெங்கணும்பரந்தபிறங்குகுரற்பருந்தெருவை. (௬௪)

வேறு.

பூதப்படையால்வலிதேய்ந்துபுறங்கொடுத்த
வேதப்படுந்தானவன்சேனைகளீதறிந்து
கோதைச்சிலைகொண்டுதுராசதன்கோபமூளச்
சாதித்திடுபூதர்கண்மேற்சரந்தூவியார்த்தான். (௬௫)

தொடையொன்றினிலாயிரம்வாளிகடூண்டுதொறுங்
குடையற்றனவார்கொடியற்றனகொண்டுகைக்கும்
படையற்றனவூர்திகளற்றனபாகரற்றார்
நடையற்றனர்நாள்களுமற்றனர்நல்லபூதர். (௬௬)

பலபாரிடம்பாரிடம்வீழ்ந்துபதைப்பவென்று
விலகாதுதுராசதனென்பவன்வேகமொடு
நலமேயருள்வக்கிரதுண்டரைநண்ணினனப்
புலவோரிறையன்னவனுக்கொருபுத்திசொல்வார். (௬௭)

வேறு.

அரியமாதவங்களாற்றியைமுகத்தொருவர்தம்பாற்
பெரியதாஞ்செல்வமாதிபெற்றனையவற்றைப்பேதா
யுரியையாயோம்பல்செய்யாதொருகணத்தொழிக்கவேண்டாந்
தெரியுமாறுனக்கிங்கொன்றுசெப்புதுந்தெரிந்துகேண்மோ. (௬௮)

துறக்கமுன்போலவிண்ணோர்துவன்றினர்வாழச்செய்து
சிறக்குநஞ்சரணஞ்சார்ந்துசெம்மையினிற்றிநிற்பி
னிறக்குமாறின்றியின்னுமிணையிலாப்போகமூழ்கிப்
பிறக்குமானந்தமானபெருங்கடற்றுளைவைகண்டாய். (௬௯)

சொன்னவாறிமையார்க்கந்தத்துறக்கவைப்புதவாயாயி
னன்னதுதமக்குநீதிசெய்துழியனைத்துமெம்மா
லின்னினிநின்னையெய்துமென்றனரெரிதோயூசி
தன்னைமிக்கேற்றியாங்குத்தடஞ்செவிவெதும்பச்சொல்வான். (௭௦)

அழகியதுனதுவார்த்தையரிமுதலானோரெல்லாங்
கழலுறுவலியராயென்கண்ணெதிர்நின்றாரில்லை
மழவினங்கன்றுபோலவளர்பயமறிந்தாயில்லை
பழகியமுதுமையில்லாப்பாலனீயானவாற்றால். (௭௧)

முக்கணெம்பெருமான்பாங்கர்முதுதவமாற்றிப்பெற்ற
தொக்கநல்வரத்தினேனைத்தொலைப்பதுநினக்கெய்தாது
மைக்கடலுலகிற்றப்பிவாழ்தியேல்விடுத்தேனுன்னை
யிக்கணங்குரவர்ப்பாங்கரேகுதிபிள்ளாயென்றான். (எஉ)

சுடுநெருப்பனையராகித்துராசதன்முகத்தைநோக்கி
வடுவறுமிறைவரீந்தவரத்தினாற்றருக்கேலீசர்
கெடுதியில்வரமன்னோரைக்கெழுமினோரெவர்க்குமுண்டு
படுதிநீயென்றுசெப்பிப்பரசொடுங்கணேசர்நேர்ந்தார். (எரு)

சிங்கவாகனத்தைத்தீயோன்தேர்மிசைச்செலுத்திக்கையிற்
றங்கியமழுவான்மார்பிற்றாக்கினர்தருவன்மெய்யி
லங்கஃதூறுசற்றுமாக்கிலதவுணன்வல்லே
மங்குல்வானுருமிற்சீறிவாளினால்வீசினானே. (எச)

வீசியவீரவாளைவெண்மழுப்படையாற்றள்ளித்
தேசியற்கடகக்கையாற்செம்மலார்சினந்துதீயோன்
மாசியனுதலினெற்றிமடங்கலைமீட்டார்நீறு
பூசியநெற்றிவிண்டுபொழிந்ததுகுருதிவெள்ளம். (எடு)

சோர்ந்திருமுகூர்த்தமாவிதுஞ்சினனென்னவீழ்ந்து
கூர்ந்துணர்வுதிப்பத்தீயோன்கொடுஞ்சமராற்றுமாற்றல்
சார்ந்திலனாகிவெள்கிச்சமர்க்களநீங்கிச்செல்வ
மார்ந்ததன்மனையினெய்தியயர்வுயிர்த்திருந்தானன்றே. (எசு)

அழுந்துபட்டொழுகுங்கங்கையாறெனக்குருதிவெள்ள
மெழுந்துபன்முகமாய்ச்செல்லுமிருங்களத்தெதிர்ந்துபூதர்
விழுந்தவர்தமையுமெங்கள்விநாயகரெழுப்பிக்கொண்டு
சொழுந்தெழும்வீரத்தோடுபொசறைகுறுகிவாழ்ந்தார். (எஎ)

தோற்றுளங்கவலைகூர்ந்துதுராசதன்றனைப்பார்த்தன்று
ஞற்றியவொளியாற்றுமையலைகடற்பாய்ந்துமாய்ந்தங்
கேற்றமாவிருளைநீக்கியிரும்பொருள்விளைக்கும்வெய்யோன்
சாற்றுமேழ்புரவிப்பொற்றேர்தன்னொடுகடலிற்றாழ்ந்தான். (எஅ)

விண்ணவருலகமெல்லாம்வெய்யவன்றன்னைத்தாழ்த்திப்
பண்ணவர்க்கருளவந்தபராபரன்கீர்த்தியேபோற்
றண்ணியகலைவெண்டிங்களெழுந்ததுசராசரங்கள்
புண்ணியநீற்றுத்தொண்டர்போன்றவெண்ணிலவின்மூழ்கி. (எகூ)

தோன்றுமக்கங்குற்போதிற்றுராசதனமைச்சனீதி
சான்றவர்தம்மைக்கூவிச்சாற்றுவானமர்க்குவந்த
நான்றவாய்க்களிற்றுச்சென்னிநம்பியைச்சிறுவனாக
மான்றநெஞ்சத்தான்முன்புமதித்துளேனவற்கொப்பில்லை. (அ௦)

ஆற்றலிற்பெரியனென்னுமவன்சிறுபடையனேற்ற
பேற்றிறைபடையாற்சாலப்பெரியரேமெதிரன்றாற்குத்
தோற்றலுங்கூடுமெற்றாற்றொகுபடைமுழுதுங்கொண்டு
வீற்றுறுபோர்க்குநாளைமேவுதுங்களத்திலென்றான். (அக)

அன்னதேபுரிதுநாமென்றமைச்சரப்பொழுதேதூது
மன்னியமேல்கீழெட்டுமொதிரம்வதியுஞ்சேனை
யென்னவும்வருகவீங்கென்றேவினரேவையும்போந்த
துன்னமர்காண்பதேபோற்பரிதியுந்தோன்றிற்றன்றே. (அஉ)

மறுவறுசந்தியாதிவகுத்தெழுந்தவுணர்கோமா
னறுவகைப்படையுஞ்சூழவமைச்சருந்தமரும்யாரு
முறுமுறைமருங்குமொய்ப்பவொய்யெனக்களத்தைச்சார்ந்தான்
றெறுவிழிப்பூதரோடுதேவனுஞாட்பிற்சென்றார். (௮௩)

நெருங்கியதகுவர்கோமானெடும்படைச்செறிவைநோக்கி
யொருங்கொருகணத்தில்யாமேயுலக்குதுமிவற்றையென்று
பெருங்களத்தைம்பத்தாறுபேதமாவுருவுகொண்டார்
மருங்குளதேவர்பூதர்யாவருமருட்கையெய்த. (௮௪)

மடங்கல்வாகனமும்பத்துவாகுவுமயிலுமாறு
தடங்கையுந்தாழ்கைநான்குமாகுவுந்தாவுமானு
மிடங்கொள்கையிரண்டும்வேறும்வேறுவேறெய்தித்தாமே
யடங்கலன்சேனையுட்புக்கமர்விளையாடினாரே. (௮௫)

ஒருவரேபலராய்த்தோற்றியுடன்றமர்விளைத்தலோடு
மிருவிசும்படைந்தார்சில்லோரெழிற்களத்தயர்ந்தார்சில்லோர்
மருவியபாதலத்துமறைந்தனர்சில்லோர்திக்கின்
வெருவிமிக்கிரிந்தார்சில்லோர்வெய்யவன்சேனைவீரர். (௮௬)

வேறு.

இன்னவாறுசேனைகளெனைத்துமாய்தனோக்கிய
வன்னதானவர்க்கிறையழன்றுவன்னிமாப்படை
தன்னையேவினானதுதழற்பிழம்புகான்றுநேர்
துன்னுபூதர்யாவருந்துளங்கமேற்படர்ந்ததே. (௮௭)

அங்கறிந்துபற்சனியாத்திரத்தையங்கையி
னெங்கடம்பிரானெடுத்திம்மெனும்முன்விட்டன
ரெங்குமின்னியப்படையிடித்துநீர்சொரிந்தழ
றுங்கவத்திரத்தினைத்தொலைத்துமேனடந்ததே. (௮௮)

கூற்றமன்னதானவன்குறுகுவான்படைக்கெதிர்
காற்றினத்திரத்தினைக்கனன்றெடுத்துவிட்டன
னேற்றடித்தடித்ததையெட்டுத்திக்கினும்புகப்
பாற்றிவீரமல்கியபாரிடத்தினேர்ந்ததே. (௮௯)

காதுகின்றகாற்படைக்கடைப்பறிந்துநாயகர்
மீதுயர்பருப்பதவெம்படைதொடுத்தன
ரீதுபூமிதொட்டுவானிடங்கண்முற்றுமுட்டுபு
மோதுகாற்படைப்பெருமொய்ம்பினைத்தகர்த்ததே. (௯0)

பார்த்துவெய்யதானவர்பற்றின்முற்றுகொற்றவ
னார்த்துருத்திரப்படையன்பினேத்தியேவினான்
வேர்த்துவெற்பினத்திரம்விள்ளவந்தமாப்படைக்
கார்த்தகாளம்பூதர்தீக்கான்றுருத்தெழுந்ததே. (௯௧)

எம்பிரானுமப்படையெடுத்துரைத்துவிட்டனர்
கம்பமின்றியன்னவைகலந்துதம்முளேற்றன
வம்பரங்குலைந்ததேழாழிமுற்றும்வற்றிய
பம்புபூதலத்தமர்பலவுநீறுபட்டவே (௯௨)

நெடிதிரண்டும்வெஞ்சமர்நிகழ்த்திமாய்ந்தயாவையுங்
கடிதெழுப்பியேவினார்கரத்தின்மீண்டிருந்தன
கொடியனானதானவன்குயிற்றினான்பன்மாயைகள்
படியிலாதநாதனார்பாற்றினாரவற்றையும். (௯௩)

வேறு.

வல்லபோரவையயற்றினும்வக்கிரதுண்ட
ரொல்லையேற்றவைமுழுவதுமொழித்துவேற்றமர்கள்
பல்லவேபுரிதிறத்தினைப்பார்த்தவுணர்கள்கோன்
மெல்லவேதனதகத்திடைமெலிந்திதுநினைவான். (கூச)

பாலனாகியவக்கிரதுண்டன்கைப்படையாற்
சாலநம்படைபடையெலாஞ்சாம்பலாயினவிக்
கோலவீரனைவெல்லுதலொன்றினுங்கூடா
ஞாலமீதினிக்கரப்பதேநன்றெனத்துணிந்தான். (கூரு)

தீயனாகியதுராசதன்சிந்தையையறிந்து
மாயனாதியர்வணங்கியவக்கிரதுண்டர்
தாயனான்கொலீத்தருடனிவரத்தையுமதித்துத்
தூயபேருருவெடுத்தனர்துன்னினாரவனை. (கூசு)

அச்சமூழ்கியுள்ளகந்தளர்ந்தவனெதிர்நிற்ப
வெச்சென்பார்வையைவிடுத்தருள்விழியெதிர்வழங்கி
யுச்சிமேலொருதாளினையூன்றினரிருத்தி
நச்சுகாசியிலோரடிநாட்டினர்நவில்வார் (கூள)

அழிவிலாமையையுடையைநீயாதலினவுண
விழிவிலாதவிந்நகர்க்குணவாய்தலினென்றுங்
கழிதராதுநங்கழலடிக்கீழினிதிருந்து
பழிசெய்பாதகத்துட்டரையடக்கெனப்பணித்தார். (கூஅ)

தொல்லைமாதவமுற்றியதுராசதனென்பான்
நல்லநாயகர்தாடலைநல்கிடப்பெற்றங்
கல்லறீர்ந்துமெய்ஞ்ஞானவானந்தமேமயமாய்ப்
புல்லியோர்புரிதீமையும்போக்கிவைகினனால். (கூகூ)

விரைத்தகற்பகமலர்மழைவிண்ணவர்சொரிந்தா
ரிரைத்தவேலையினியம்பினவியங்களோரைந்து
முரைத்துமாமறைமுனிவரரோகையிற்றிளைத்தார்
கரைத்தநெஞ்சினராயடியார்கழல்பணிந்தார். (க00)

பண்டுபோலுமைமாதொடும்பரமனார்பெருஞ்சீர்
கொண்டகாசியுண்ணகர்வளர்கோயிலைக்குறுகி
யண்டர்யாவரும்போற்றவீற்றிருந்தகமகிழ்ந்தார்
தொண்டரொடொறும்புரிந்துதொல்லுலகெலாமுய்ய. (க0க)

நந்துமூவகையுலகத்துமிடரெலாநசித்த
முந்துமாமறைநீதிகண்முழுவதும்வளர்ந்த
மந்திராகுதிவேள்விகள்வயின்வயின்மலிந்த
விந்திராதியர்க்கிரும்பசியிடரெலாமிரிந்த. (க0உ)

வன்னிபாசறுகிணர்த்தமந்தாரமென்றிவற்ற
னன்னர்மாதவர்வானவர்நயந்துபூசித்தங்
கென்னையாளுடைவிநாயகரின்னருள்பெற்று
மூன்னிவாழ்ந்தனர்தத்தமதிருக்கையின்முறையால். (க0௩)

இனதரீநாற்பொருளையுமெவர்க்குநல்குதலா
லனுதியானவக்கணேசனையனைவருமுடுண்டி
விநாயகப்பிரானென்பரவ்விமலனைப்பணியின்
மனுதிமூன்றினும்வருந்துருவாழ்வுமுற்றுறுமே. (க0௩)

வே று.

உம்பர்முதலோரெடுத்துரைத்தவுண்டிராசனெனும்பெயரி
னம்பன்வதியுங்காசியையுமுடுண்டிநகரமெனநவில்வார்
வெம்புபவந்தீர்த்தருள்கொழிக்கும்விசுவநாதர்மனங்குளிர்ப்ப
வம்பொனகரிலேனைம்பத்தறுவர்தாமும்வீற்றிருந்தார். (க0ரு)

வே று.

விளங்குவிச்சுவநாதனுர்வியத்தகுதிருமுன்
வளங்கொளைம்முகவக்கிரதுண்டர்வைகினராற்
றுளங்குசத்தவாவரணமாக்கோயிலூர்ச்சுற்றி
னுளங்கொள்காதலினைம்பத்தைவர்களும்வந்திருந்தார். (க0சு)

மடவராயினுமவர்தமுளொருவரைவழுத்தி
னிடர்கடீர்ந்துநாற்பொருளையுமெளிதினெய்துவர்க
டொடருங்காதலினவரெலாரையுந்தொழுவோர்க
ணடலைதீர்ந்தவரெய்துறுநலத்தையார்நவில்வார். (க0எ)

பதினொன்றுமவதாரமென்றுரைத்திடப்பட்டா
ரதிபனுந்துராசதன்றனையடக்கியதுரைத்தாந்
திதியின்மாயனுமிடைதிவோதாதன்பாலவரே
துதிசெய்சோதிடனுய்ப்புகுந்ததுமினிச்சொல்வாம். (க0அ)

வே று.

தொல்லையாகியபாற்மமெனத்துலங்குங்கற்பத்தின்
மல்லல்சேர்சுவாயம்புமனுமரணமுற்றதன்பி
னல்லதீர்த்திடுமழைகளறுபதினுயிரவருடஞ்
செல்லுலாய்வழங்காமற்றேயமெலாங்காடான. (க0கூ)

பேருலகமுழுதழிந்தபெற்றிதனக்குளமிரங்குஞ்
சீருறுதண்டாமரைமேற்றிசைமுகத்தோனெதிர்கண்டா
னீருறுமந்தாகினிசூழ்நெடுநகரக்காசியின்வைகி
யாருமருந்தவம்புரியுமரையனிரிபுஞ்சயனை. (கக0)

மருங்கடுத்துப்புரிகின்றமாதவத்தைமிகவியந்து
கருங்கழற்கான்மன்னவனேகாவல்புரிவாரின்றி
யொருங்குபலபொருளினொடுமுலகமழிந்ததுகண்டாய்
பெருங்களியினினிச்செங்கோல்பேணியரசாளென்முன். (ககக)

அனங்கமோகினியைநினக்காதிசேடன்கொடுப்ப
வினங்கிளர்விண்ணவர்கற்பத்திழையாதிமிகக்கொடுப்பார்
மனங்களித்துநீயுயர்ந்துவாழ்குவையாதலினின்னைச்
சினங்கரிசுதீர்ந்தவருந்திவோதாதனெனச்சொல்வார். (ககஉ)

என்றிதவுமொழிந்தருளியிண்டைமலர்வாழ்க்கையினன்
றுன்றுமணிமுடியவற்குச்சூட்டினனெதிர்வணங்கி
யன்றிரிபுஞ்சயனமரரவிமுத்தம்விடுத்தவர்க
ளொன்றுபதமடையினலாலுலகுபுரவேனென்முன். (ககந)

அவ்வாறேபுரிவனெனவம்புயத்தோனதற்கிசைந்து
துவ்வாநஞ்சயின்றவரைத்தொழப்புகுந்தான்றம்மியல்பாற்
செவ்வானநிகர்சடையார்செய்தவமந்தரவரைக்கங்
கொவ்வாதவரங்கொடுப்பவுமையினெடும்வெளிக்கொண்டார். ()

கந்தர்விநாயகர்நந்திகணநாதர்கணமயன்மா
லிந்திரனுதியரெண்மரிலகுபதினொருமூவ
ரிந்தியம்வென்மாதவத்தோரெண்பத்தாறுயிரவர்
வெந்திறல்சேரீரொன்பான்கணமும்வெளிக்கொண்டனரே. (ககரு)

சங்குபேரிகைமுரசுதகுணிச்சமுதற்பலவும்
பொங்குமாகடலென்னப்பூதர்பலர்கொண்டியம்பத்
திங்களோர்குடைகவரிதிகழ்கொடியாதிகண்மிடைய
வெங்கணுயகர்விடைமேலெழுந்தருளியேகினர். (ககசு)

மந்தரமுமாங்கிருந்துமாதவன்செய்மரீசியுமென்
றந்தமிலாவன்பினர்களாங்கெதிர்போந்தடிபணிந்தா
ரெந்தைபிரான்மரீசிமுனியின்முகத்தையெதிர்நோக்கிச்
சிந்தையினீவேட்டவரஞ்செப்புகெனவவன்சொல்வான். (ககள)

வள்ளலேநின்தடியின்மாறுதபேரன்புந்
தெள்ளுசிவலோகத்திற்சிவனுறுவாழ்க்கையுமடியேன்
கொள்ளுகதில்லம்மவெனக்குழைந்திரந்துகொண்டவன்று
ளுள்ளியமானத்திவர்ந்தவ்வுயர்சிவலோகம்புகுந்தான். (ககஅ)

மாதவங்கள்மிகப்புரிந்தமந்தரத்தையெதிர்நோக்கிக்
காதலினீகொளமுயன்றகாரியம்யாதுரையென்று
சீதளசந்திரகலையைச்செஞ்சடிலமிசைமிலைத்தா
ராதரவில்வினுய்கிற்பவவ்விலங்கலிறுத்திடுமால். (ககக)

சீலமலிகாசியைப்போற்றேவர்கணுயகவிந்தக்
கோலமலிகுசத்தீவிற்குடிகொண்டவென்னிடத்துஞ்
சாலமகிழ்ந்திருந்தருளிச்சகலருக்கும்வரங்கொடுத்து
ஞாலமிசைச்சிறப்பெனக்குநல்குகவென்றிரந்ததே. (கஉ0)

வரைவளர்மந்தரம்வணங்கிவரமிரக்குமமையத்தில்
விரைவளர்பூவணைக்கடவுண்மெல்லவடிபணிந்துரைக்கு
மரையர்களாளாமையினுலறுபதினுயிரம்வருடந்
தரைமுழுதுங்காடாகிச்சழங்கியதெம்பெருமானே. (கஉக)

உலகாட்சிசெயப்பணித்தேனோந்திரிபுஞ்சயனையவன்
குலதேவர்காசிநகர்குலவினரசாளும்வகை
யிலதாகுமாதலினுலெயிற்காசியிடத்தமரர்
நிலவாதபடியவர்க்குநீள்வரநல்குகவென்றான். (கஉஉ)

கோடுமலிமந்தரத்தின்கொழுந்தவமுந்தாமரையோன்
பீடுமலியுட்கோளும்பிழையாமையுணர்ந்தருளி
யேடுமலிபூங்கொன்றையெம்பெருமானிதற்கிசைந்து
தோடுமலிகணத்தொடுமத்தொல்வரையில்வீற்றிருந்தார். (கஉங)

எம்பெருமானருள்செய்தவினியவரத்தாற்காசி
யம்பொனகரிடைத்தேவரமர்தலொழிந்தார்சேடன்
வம்பவிழ்மென்குழன்மாதைவழங்கவிமையார்கற்பப்
பைம்பொனிழையாதிகளைப்பணிப்பவுயர்ந்தான்மன்னன். (கஉச)

திசையெட்டும்புகழ்பரவத்திவோதாதனெனுமன்னன்
வசையொட்டாமனுநீதிவழுவாதுகோலோச்சிப்
பசையொட்டுந்தவந்தானமுதலியபல்லறமெல்லா
நசையொட்டுமுளத்தோடுநலத்தகச்செய்துலகாண்டான். (கஉரு)

திங்கடொறுமும்மாரிசெழித்தனதீமைகளொழிய
வெங்கணும்பைங்கூழாதியீண்டினவூர்தொறுங்குடிக
டங்கினவேள்விகளாதிதழைத்தனவானவர்குழுவும்
பொங்குபசிதீர்ந்தின்பப்புணரியின்மூழ்கினமாதோ. (கஉசு)

மிக்கமழைமழையின்மைவெய்யபகைவர்கள்கள்வர்
தொக்கவறுமையர்பிணியோர்துன்மரணம்விதவைமல
டெக்குமிகுபாவவினையிவையனைத்தும்பெயரோடு
முக்கனதக்கனவினையேயோங்கிவளர்ந்தனநாளும். (௧௨௭)

கங்கையிற்றோயாதவரைக்காதலிற்றோய்ந்திடப்பணித்து
மங்கமர்விச்சுவலிங்கமைங்கரத்தோன்குகன்றிருமா
றுங்கவயிரவன்றண்டபாணியிவர்த்தொழாதாரைப்
பங்கமறத்தொழுவித்தும்பயன்விளைத்தான்றிவோதாதன். (௧௨௮)

நெடுங்காலமிவ்வாறுநீதிபுரிதிவோதாதன்
கொடுங்கோன்மையில்லாமற்குலாவியிருந்தானேனும்
விடுங்காசிநகரெய்தும்விழைவினிமையாரெல்லா
நடுங்காதநூலுணர்ச்சிநற்குரவன்பாலடுத்தார். (௧௨௯)

வந்தனைசெய்தெம்பெருமான்வாரணவாசியிலினிநா
மெந்தவிதத்தாலடுப்பாமியம்பென்றான்குருவோர்ந்து
செந்தழலவ்வயினொழியிற்செயலழிந்துமுறைதிறம்பும்
பிந்தையுறலாமென்றுபேருவகையொடுங்கிளந்தான். (௧௩௦)

வலாரியதுகேட்டங்கிவானவனைத்தழல்காசி
யிலாவகைமாற்றுகவினியென்றேவினனக்கணமே
நிலாவியபாவகனதனைநிகழ்த்தினனதுதெரிந்து
குலாவியமாதவர்வேள்விக்குறையினராய்முறையிட்டார். (௧௩௧)

செய்யகோல்கோடாததிவோதாதன்கேட்டுரைப்பா
னையர்காளிதுதேவரனைவருஞ்செய்சூழ்ச்சியதாம்
வெய்யதீயொன்றன்றிமேகம்வளியிருசுடர்கள்
பொய்யிலேனைப்புலவர்போயினுமென்குறையுளதோ. (௧௩௨)

அவரவராயிருந்தியானேயறநெறிகோடாதவகை
தவவளிப்பனீயிரிடஞ்சார்மின்களெனவிடுத்துக்
கவரழலாய்முகிலாகிக்காற்றாகியிருசுடரா
யுவகையின்வேறுருவாயுமுயர்வேந்தேமுறைபுரிந்தான் (௧௩௩)

செங்கோலிற்பிழையாததேர்வேந்தையுடைத்தாயிற்
பொங்கோதப்புவிமாதுபுணராதபொருளுளதோ
வங்கோலக்கனலாதியாயளித்தான்றிவோதாதன்
றங்கோசைவிசும்பினர்கள்சமழ்த்துமுகங்கவிழ்ந்தனரே. (௧௩௪)

அளிப்பவனுந்தானேயாயகிலபொருள்களுமுலகில்
விளைப்பவனுந்தானேயாய்வேந்தனிருந்தானெவருங்
களிப்படைந்தாரெண்பதினாயிரவருடங்கழித்ததற்பி
னொளிப்பிறைசென்னியின்வேய்ந்தவொருவருங்காசியைநினைந்தார்.

மந்தரவெற்பினைவெறுத்துவாரணவாசியைவிழைந்த
வந்தணனார்திவோதாதனரசுபுரிசெங்கோலிற்
பந்தமுறுபீழையியல்பார்த்துவிழுத்தத்தினிநாம்
வந்திருப்பச்செய்மினெனவானவர்கடமைவிடுத்தார். (௧௩௬)

கடவுளர்கள்வேற்றுருவாய்க்காசிநகரினிதெய்தி
மடமகன்றதிவோதாதன்வழங்கியசெங்கோனெறியிற்
படர்பிழைகாணார்வருந்திப்பரமர்பணிமுடியாத
தொடர்பிழைதங்களுக்கறவத்தொன்னகரினேற்றிருந்தார். (௧௩௭)

பண்ணவர்கடம்பெயராற்பதிட்டைபுரிந்தோரிலிங்க
மெண்ணமுறப்பூசனைசெய்திருந்தவஞ்செய்தாங்கிருந்த
வுண்மையுணர்ந்திறையவனூர்யோகினிகடமைவிடுத்தா
ரண்ணியவர்களுநோக்கியமரர்கள்போலாயினர். (கநஅ)

சூரியனையேவினர்சூரியனுமவர்போன்றான்
வேரியந்தாமரையானைவிடுத்தனர்வேதனுமமரர்
நேரியனாயினன்பின்புகிலவுகணநாதர்களைச்
சாரியவிட்டாரவருந்தவம்புரிந்துவைகினரே. (கஉக)

அனைவரையுமிவ்வாறேயமலர்விடுத்தருளினா
ரனைவருஞ்சென்றவிமுத்தத்திருந்தனர்மீண்டாரில்லை
வினைமுடிக்குந்திறம்வல்லான்விநாயகனேயெனத்துணிந்தங்
கினைதலறமனமகிழ்ச்சியெய்தவிடுத்தருளினார். (கசo)

வேறு.

பிணியறுகாட்சிசான்றபேரொளித்தருணம்வாய்ந்த
கணிதனாயொருகைப்போதிற்கவின்றபுத்தகமுந்தாங்கி
மணிகிடந்திமைக்குங்கங்கைமருங்குசூழ்காசியென்னு
மணிகிளர்நகரினெய்தியமர்ந்தனர்துண்டிராசர். (கசக)

கூர்ந்தநித்திரையிற்சென்றுகொடுங்கனவாக்கியந்தச்
சார்ந்தசொப்பனத்தைத்தப்பாநனவிடைத்தயங்கச்சாற்றி
நேர்ந்திடுமிதனுக்கின்னநெடும்பயனென்றுசொல்லி
யார்ந்தவப்பயனுங்கூட்டியநேகரைத்திறம்பச்செய்தார். (கசஉ)

துரிசறுமுற்பாதங்கடோற்றியின்னவற்றாற்றீங்கே
விரிவனவெனப்போதித்தும்விண்ணுறுகோளைமாறாத்
திரிதரச்செய்துங்கோள்கடிரிதலால்வளக்கணுட்டி
விரிவனவெனப்போதித்துஞ்சிலர்தமையேங்கச்செய்தார்; (கசங)

கனவினாலுற்பாதத்தாற்கதுவியகோள்கடம்மான்
மன்றுமக்கழியாநிற்பவளநகரழிதலுண்மை
தனமலிவேறுதேயஞ்சார்மின்களென்றுபோதித்
தினமலிசுற்றத்தோடுஞ்சிலரையங்கிரித்தல்செய்தார். (கசச)

இரிந்தவரொழியநின்றோரிடரினிவருமேயென்று
பரிந்துளக்கவலைகூர்ந்தும்பழிசெயுந்தீங்குசால
விரிந்திடர்மனஞ்சோகாந்தும்விளங்கியவறிவுதேய்ந்து
தெரிந்துசெய்நன்மைதன்னுட்டிறம்பினர்நாள்கடோறும். (கசரு)

பிழைநகருள்ளோரெல்லாம்பேணினர்செய்யச்செய்து
மழைதவழ்மன்னன்கோயின்மருவுமுட்புறத்தையெய்தி
யிழைவளர்மாதரார்க்குமீண்டுமுக்காலத்தானுந்
தழைதருபொருள்களெல்லாஞ்சாற்றினருள்ளவாறே. (கசசு)

வேறு.

ஏதமகன்றமாதரிடையிலங்கிலீலாவதியென்பா
ளுதர்தமக்குப்பூசனைகணன்றுபுரிந்துமன்னவற்கு
வேதமெனவேமொழிபிழையாக்கணிதனீங்குமேவினனென்
றோதவொருதூதினைவிடுத்தாளுணர்ந்துவேந்தன்வருகென்றான். (கசஎ)

அழைத்தவரையன்பாலேகியமலரவனுள்ளகமுழுதுங்
குழைத்துத்துறவுமுடன்றோற்றிக்குளிர்ந்தமுகத்தினெதிர்நின்று
றிழைத்தமணியாதனத்திருத்தியிறைவன்கணிதன்மலகடிக
டழைத்தவுழுவலால்வணங்கிச்சாற்றித்துதியொன்றினைவினவும். (கசஅ)

உறுப்புக்கடுப்பவிதுகாறுமுலகம்புரிந்தேனிப்பொழுது
வெறுப்புத்தோன்றிற்றதுதன்னில்வேதமுதல்வாவினியாட்சி
யிறுப்புற்றிடுங்கொன்முன்போலவிருக்குமேகொலெனவென்றுங்
கறுப்புக்குளம்வையாதபெருங்காவல்வேந்தன்வினாவினான். (க௪க)

வேதநெறியிற்பிழையாதமெய்மைத்தவத்தினார்க்கெல்லா
மேதமகலநல்வினையேயியம்பிக்கொடுப்பதல்லாது
சாதல்கெடுதியிடராதிசார்த்தனினையாப்பெருங்கருணை
நாதரதற்குத்தாமொன்றுநவிற்றாராகியிதுசொன்னார். (க௫௦)

இற்றைத்தினத்துக்காம்பதினேழென்னுந்தினத்திலொருமறையோன்
வெற்றித்தொடைவேற்றடங்கரத்தாய்விழைந்தீங்கடுப்பனவன்விள்வான்
மற்றப்பனவனுரைத்தபடிவழாதுகேளென்றுரைத்தருளி
யற்றைப்பொழுதேயவனைவிடுத்தந்தப்புரத்தினினிதிருந்தார். (க௫க)

கள்ளத்தலைவர்க்கருளாதகணேசர்புரிந்தவிளைவனைத்து
முள்ளத்துணர்ந்துவிசுவேசருவணமுயர்த்தோன்றனைவிடுத்தார்
வள்ளத்தனத்துத்திருமாதுமருங்குகவுந்தியாய்நடப்பப்
பள்ளக்கடலிற்கண்படுத்தோன்பவுத்தனாகிநகரடுத்தான். (க௫௨)

புத்தன்புகுந்தாடவர்க்குரைத்தான்பொருந்திவாழுநம்போல்
வைத்தபசுவைத்தகரினத்தைவதைத்துப்புரியும்வேள்வியினா
மெத்துநரகமேயன்றிவேறுபயனின்றெனவிவ்வா
றொத்தகருமமனைத்தினுக்குமுளதுபோலப்பிழைநாட்டி. (க௫௩)

பிறைசேர்நுதன்மங்கையர்ப்பாங்கர்ப்பேணுங்கவுந்தியடுத்துரைப்பாண்
மறையோன்மைந்தர்காசிபரேமரீசிதக்கன்முதற்பலரே
யிறைசேர்தக்கன்மகளிர்களையெழிற்காசிபனாதியர்மணந்து
முறைசேரமராதியரைமுகிழ்த்தும்பெரியராயிருந்தார். (க௫௪)

நீயிரெவனோவேறுமுறைநியமித்தின்பநுகர்கின்றீ
ராயின்முறைவேண்டாமெனவேயனந்தம்வழுக்களெடுத்துரைத்தாண்
மேயவிருவருரையானும்விழுமநெறியிற்பிறழ்ந்தனர்க
ளாயநகருள்ளார்நாள்கள்பதினாறிவ்வாறொழிந்தனவே. (க௫௫)

பதினேழானதினத்தரசன்பார்ப்பானொருவன்வருவானென்
றதிசூட்சியினானொருகணிதனறைந்தானன்றேயெனநினைத்தான்
மதியாநின்றவப்பொழுதேமறையோனாகிமாமாயன்
விதியாதரவினுலகாளும்வேந்தர்வேந்தன்முன்னடுத்தான். (க௫௬)

தெள்ளித்தெளிந்ததிவோதாதன்சிறந்தமறையோனெனப்போந்த
வள்ளற்கிருக்கையளித்திறைஞ்சிவகுப்பானுவணமுயர்த்தவனென்
றுள்ளத்துணர்ந்தேனினையிந்தவுயர்ந்தகாசிநீபுரிந்த
கள்ளத்தொழிலான்முறைபிறழ்ந்தகணக்குமறிந்தேனறிந்தேனே. (ச௫௭)

பிரிந்ததேவர்சூழ்ச்சியையும்பெரிதுமறிந்தேனெனைச்சட்டை
யுரிந்தவரவேயெனச்செய்யுமுடுண்டிராசன்வல்லமையுந்
தெரிந்தேன்பண்டுபலரிடுக்கண்டேவர்க்கிழைத்துப்பதமிழந்தார்
விரிந்தமடமையால்யானும்விண்ணோர்தமையுமிகந்தேனே. (க௫௮)

பரவுமிமையார்தமையிகந்தபாவமுழுதுந்தீர்ந்தின்பம்
விரவுகதியில்யானெய்தும்விரகேயினிநீவிளம்பென்றா
னரவவணையோனிவனீதியறாதெண்பதினாயிரமாண்டு
புரவுபுரிந்தானிவற்குண்மைபுகறல்வேண்டுமெனவிழைந்து. (க௫௯)

நிசமாகியதன்னுருக்காட்டிநிருபாகாசிநகரினையங்
குசமேந்திழையீன்றவர்தமக்குக்கொடுத்தாயாயினவரருளாற்
றசமாகியபுண்ணியம்புரிந்தோர்தமக்கேயுரியபேரின்ப
வசமாயிருப்பையெனக்கூறிவைகுந்தனதுவரைப்படுத்து. (௧௬0)

ஓங்குமடுக்கன்மந்தரத்தினுலுறையுமிறைவர்தமக்குவலி
வீங்குங்கருடன்றனைத்தூதுவிடுத்தான்றிவோதாதனுமகிழ்ந்து
நீங்கும்விசுவநாதருக்குநிகரில்காசிதனைவிடுத்துத்
தீங்கிலரசுதன்மைந்தன்செகிரினிறுத்தியயர்வுயிர்த்தான். (௧௬௧)

பகருந்தனதுபண்டாரம்பயிலும்பொருளிற்பாதிகொடு
நிகரில்விசுவநாதருக்குநீள்பொற்கோயிலினிதியற்றிப்
புகரில்விழைவாலோரிலிங்கம்பொற்பவிருத்திப்பூசித்தான்
றகவினிறைவர்சிவலிங்கந்தன்னிலவனைக்கரந்தாரே. (௧௬௨)

விடுத்தகருடன்மனவேகம்விலகப்பறந்துபுகுந்ததனை
யுடுத்தபெருமான்றாள்வணங்கியுண்டிராசன்சூழ்ச்சியையுந்
தொடுத்ததுளபமாலிகையான்சூழ்ச்சிதனையும்வகுத்துரைத்தா
னடுத்தகுழுவினெடுமமலரணியார்காசிநகர்புகுந்தார். (௧௬௩)

காசிநகரிலிருந்தருளுங்கணேசர்முதலோரெதிரெய்திக்
கூசிவணங்கவவரையுடன்கொண்டுநடந்துவிசுவேசர்
தேசுமலிந்தமணிக்கோயிற்சிங்கவணையில்வீற்றிருந்தா
ராசிலடியார்முறைமுறையினடித்தாமரைகளிறைஞ்சினார். (௧௬௪)

இழைந்தவிடப்பாலுமையோடுமெங்கள்பெருமான்முகமலர்ந்து
தழைந்தகாசிநகர்வாழ்க்கைதந்தாய்நீயேயெனச்சால
விழைந்துடுண்டிவிநாயகரைவியன்கையணைத்துச்சியைமோந்து
குழைந்துள்ளுருகவருட்கடைக்கண்கொடுத்தார்நின்றமாயனுக்கு. (௧௬௫)

மாசிமதியிற்றேய்பிறையில்வயங்கங்காரவாரத்தி
லாசில்சதுர்த்திமதியுதையத்தருளுடுண்டிவிநாயகரை
யேசிலமரர்முனிவரொடுமிறைவர்பூசையினிதாற்றிக்
காசிநகரையொருநாளுங்கடவாவாழ்க்கைகைக்கொண்டார். (௧௬௬)

பதினென்றனவவதாரம்பகர்ந்தாமினிப்பன்னிரண்டென்னத்
துதிசெய்யவதாரமும்புகல்வாந்தொடுத்தவிழைவாற்கேளென்று
பொதிசெயிதழின்முறுக்கவிழ்த்துப்பொறிவண்டூதுமலர்க்கமலத்
ததிபன்வியாதமுனிவரனுக்கருளினறைதன்மேயினான். (௧௬௭)

உடுண்டிவிநாயகர்திருவவதாரப்படலம்முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - ௨௮௫௧.



## ௮௨ - வது வல்லபைகணேசர்திருவவதாரப்படலம்.



பூமலிகமலப்பொகுட்டினேன்பண்டுபொருவருஞ்சத்தியவுலகிற்
காமருமரீசிமுதற்சிறுவிதிகள்கடவுளர்முனிவரர்பலருந்
தூமதியினராய்மருங்குசூழ்ந்திருப்பத்துலங்கரியாதனத்திருந்தே
னமதுபொழுதின்மைந்தருட்சிறந்தவருந்தவமரீசிதாழ்ந்துரைப்பான். (௧)

முத்தொழினடவுமூவர்கடம்முண்முதல்வனுய்ஞானமேமயனுய்ச்
சத்தியவேதப்பொருளின்வல்லவனுய்ச்சகத்தினுக்கீசனுய்ச்சகல
கத்தனுய்ச்சருவவியாபியாய்மும்மைக்கடவுளார்தமக்குமுத்தொழில்செய்
தத்தனுயகிலசாட்சியுமாகியமர்பவனாருளென்றான். (௨)

பிரமனென்றெவருமுரைத்திடப்பட்டபெயரினேன்கவியெனும்பெயரை
விரவினர்வாழும்விநாயகர்தம்மைமேதகமனத்திடைநினைத்துப்
பரவுறும்பொருணிச்சயத்தினையுணர்ந்துபரவசமாய்விழிபொழியக்
கரவறத்துதிக்குநாத்தழுதழுப்பக்கரைந்துளேன்வினவியமகற்கு. (௩)

மூலவாணவத்தின்செருக்கினாலரியுமுண்டகனெனப்படுமியானுஞ்
சாலவேதருக்கிப்பிரமம்யானென்றுதனித்தனியுரைத்தமர்புரிந்தே
ஞாலமீதந்தப்பொழுதுமற்றெங்கணள்ளிடைக்கொழுந்துவிட்டெரியுங்
கோலமாரங்கியுருவெழுந்தண்டகோடிகண்முழுதுநீண்டதுவே. (௪)

அத்தகுதழலாய்நின்றவர்தாமேயறியினாகாயமத்தியகர்
கத்தர்சர்வேசர்கணேசராதலினாற்காரணர்மூவருட்சிறந்த
வுத்தமராய்நீவினவினகுணங்களொடுங்கலந்திருந்தருண்முதன்மை
வித்தகரவரேயெனச்சொலமரீசிமீட்டுமென்றனையெதிர்வினவும். (௫)

ஆக்கியுமளித்தும்வாழுநுங்களைப்போலழிப்பவனாகியவரன்றா
னேக்குறினும்முளொருவனாயிருக்குநோன்மையனாதலேவேண்டு
மேக்குளகுணங்களுடையனாய்முதன்மைமேவியதென்கொலாமென்று
தேக்கியவன்பின்வினவினனவற்குத்தெளிந்தவாறுண்மையைத்தெளித்தேன்.

என்னையும்விண்டுதன்னையுமாக்கியெங்களுக்காக்கிடவளிக்க
நன்னர்வல்லமையுங்கொடுத்தெமதுளத்தினயந்திருந்தெங்களைத்தொழிலின்
முன்னுறச்செலுத்துகின்றனரன்றிமோகிதமானவெங்களைப்பார்த்
துன்னருந்தயவாலளித்தழிக்கின்றாருருத்திரனெனப்படுமவரே. (௭)

பண்டுநான்மறைகள்புராணங்களனைத்தும்படைத்தெனக்கோதுவித்தனரால்
விண்டதேமலரின்விரையுஞ்செந்தீயின்வெப்பமுமெள்ளிடைநெய்யுங்
கொண்டமாமணியினொளியுங்காட்டத்திற்குலவியவங்கியும்போல
வண்டர்சூழ்ந்தேத்துமவரொருவருமேயாவிகடொறுமிருக்கின்றார். (௮)

அழிப்பவர்தொழின்மையாதலாலவராலழித்திடப்பட்டவெங்களையுஞ்
சுழிப்படுபவத்திற்றோற்றியுந்திதித்துஞ்சுகங்கொடுக்கின்றவரவரே
பழிப்பறுமினையதன்மையாலந்தப்பரமனாரொருவரேயெமக்குங்
கழிப்பருமுதல்வரெனச்சொலக்கேட்டுக்கடாவுவன்மீட்டுமம்மரீசி. (௯)

சகலரும்பிரமமெனச்சொலவந்தத்தானுவானவர்மறைபுராணம்
புகரறப்படைத்துப்புகன்றனரெவரும்புரிந்துநாங்கேட்டனமெனவும்
பகருவதென்கொலெந்தையென்னுளத்துப்பருவரலொழிதரப்பன்னென்
றகநெகிழ்மரீசிவினாயினனவனுக்கதனையுமயிர்தபத்தெரித்தேன். (௧௦)

மாயையைத்தொழிற்செய்தியக்கிடவந்தமாயையிற்கலந்துநிற்றலினான்
மாயையைக்கடந்தவவர்தமைமாயாசொரூபியென்றுரைவழங்குதல்போ
லாயவெப்பொருளும்விரவிநிற்றலினாலத்தகுமொற்றுமைநோக்கி
மேயநல்லுபசாரத்தினாலெவையுமேதகுபிரமமென்றதுவே. (௧௧)

தங்குமொற்றுமையாற்சொன்னதேயன்றிச்சகலரும்பிரமமோவாகார்
மங்குதலின்றிச்சகலமும்பிரமமயமெனுஞ்சுருதியினருத்த
மெங்கணுமெந்தப்பொருளினுமிறைவரியைந்துடன்மன்னுகின்றாரென்
றங்கவர்தன்மையுரைத்ததேயாகுமதுவன்றியொன்றென்றதன்றே. (௧௨)

அன்னதாகையினாற்பிறப்பிறப்பின்றியகிலவாதிக்கமாய்விபுவா
யன்னியமின்றிச்சகலவான்மாவினந்தரியாமியாயிருக்கு
முன்னருமீசர்யாவரோவவரேமுழுதருள்கணேசரன்னவரே
மன்னியசகத்துக்கொருபெருங்கத்தாமற்றுவேறொருவருமலரே. (௧௩)

அவர்பரஞ்சோதிதத்துவாதீதனருவினனன்புநற்குணத்தோன்
சிவன்பரத்தினுக்கும்பரன்வெகுரூபிதிகழ்பரதத்துவனீசன்
தவறினற்குணத்தன்சர்வகல்யாணந்தமக்குமோர்காரணனென்ன
வெவர்களுந்துதிக்கப்படுவரக்கணேசரெங்களைத்தினம்புரக்கின்றார். (௧௪

வெளியெனவவர்தாமனைத்தையும்பொதிந்துவிளங்குகின்றாரவருள்ளே
வெளியிடையனைத்துங்கிடப்பனபோலவினுவினவாருயிரனைத்து
மொளியுறுஞானத்தரவுரியுரித்தாங்குறுசமுசாரத்தினீங்கிக்
களிபெறுமிந்தவியல்பறிந்தவரேகவியுடைக்கழலிணையடைவார். (௧௫)

இத்தகுகவியின்மகத்துவமென்னாலியம்பிடமுடியுமோமுடியா
வுத்தமவேதமானதியாதோரிடத்துபசாரமாவெனையும்
வைத்தநேமியையுஞ்சொல்வதோவந்தவைப்பினுமெதார்த்தமேயாகத்
தத்துவாதீதனானதேவேசன்றன்னையேசொல்வதுகண்டாய். (௧௬)

அன்னியமானபாவனைதன்னாலரிமுதற்றேவரைக்குறித்தும்
மன்னியமுனிவர்தங்களைக்குறித்தும்வகுத்திடுங்கருமங்களெல்லாம்
பன்னருமேகபாவனையதனாற்பரவுதேவேசர்தம்பாங்கர்த்
துன்னுவதலதுவேறொருபாலுந்துன்னுறாதெனச்சொலுஞ்சுருதி. (௧௭)

எங்கள்பாலிருந்துதநுகரணங்களியக்கியொற்றித்துநிற்கையினா
லெங்களையாளுஞ்சம்புவினுடையவெழிற்படைப்பாதிகடமையு
மிங்குவேட்டவர்கட்கருள்வரமாதியியல்புறுமருளையுஞ்சுருதி
யெங்களுக்கியல்பாயுள்ளனவாகவியம்பிடுமுகமனாவொருசார். (௧௮)

மயக்கினாற்சிவனோடொப்பவெங்களையும்வைத்தெவனுரைக்கின்றானவனே
சயக்கொடும்பாவியாய்நரகத்திற்றாழ்குவன்யாவனெங்களையு
மியக்குமீச்சுரனோடொப்பமேலாகவியம்புகின்றானந்தப்பாவி
பயக்குமெத்துயர்க்குமாகரமானபகையெனப்பாவியாநின்றேம். (௧௯)

அதிகபுண்ணியங்களியற்றினோர்க்கின்பமருள்சிவனாங்கணேச்சுரரே
பதியவருள்சேர்நாங்களேபசுக்கள்பன்னியவிதற்கொருசான்று
முதிர்கடலுலகில்விதியினாலெம்மான்முற்றியபூசனைகொண்டு
கதிகொடுத்தநேகங்கணேசமூர்த்திகடாங்கவின்றிருக்கின்றனகாணாய். (௨௦)

அந்தமூர்த்திகளேபுத்திமுத்திகளையாதரித்திரந்தவர்க்கெல்லாஞ்
சிந்துமாமழைபோல்வழங்குகின்றனவச்செய்கையான்மரீசியேநீயும்
பந்தம்வீடிரண்டுந்தமக்குறுக்கணேசர்பதங்களேசரணமாவடைதி
யிந்தவாறெனக்குமயேச்சுரர்தம்மாலியம்பிடப்பட்டதுகண்டாய். (௨௧)

ஆதலான்மோகமளவளாவியவுள்ளகத்தினாற்கணேசரின்மேலாய்
நாதனாருளரென்றெண்ணலையெனமுன்னவிற்றினேனவின்றமைகேட்டுப்
போதமேலானமரீசிநற்செல்வம்புணர்வதுகருதியான்மனத்திற்
காதலாலீன்றமானதசரசின்கரையடுத்தருந்தவம்புரித்தான். (௨௨)

வேறு.

கருவற்றுவிழவடியார்க்கருள்புரியுங்கணேசரையுட்கருதிப்பைங்கார்ப்
பருவத்துச்சலத்திடத்தும்பனிப்பருவந்தனிற்பொழியும்பனியின்மாட்டு
மருவுற்றவேனிலிற்செந்தழலிடையுநின்றுணவுமாற்றியனா
ளிருபத்தோராயிரமாண்டியற்றியதவத்தினுக்கிரங்கியிறைமுன்னின்றார். ()

கிரணமுமிழணிகளினாலலங்கரித்தமுடிகத்திற்கிளர்ந்துதோன்று
மிரணமலிமழுக்கரத்துக்கணேசரைக்கண்டிருடிமகிழ்ந்தெழுந்துசெய்ய
சரணமலர்பணிந்துபலமறைதுதித்தான்விநாயகனார்தயவுகூர்ந்து
மரணமறுவரங்களெவன்வகுத்துரையென்றார்முனிவன்வகுத்துச்சொல்வான்

வேறு.

தேவதேவமாதேவதேவரருச்சித்திடும்பாத
யாவராகச்சரணடையினவர்க்கேகருணைசெயுந்தலைவா
பூவணரியாதியர்துறக்கம்பூவந்தரம்பாதலந்தமக்குங்
காவல்புரியுமதிகாரங்கடையேன்றனக்குத்தரல்வேண்டும். (௨௫)

யாங்குள்ளவருமெனதாணையிகவாதியற்றிவரல்வேண்டும்
யாங்குமடியேற்குனதருளாலிரும்பூசனையுமுறல்வேண்டும்
யாங்குமெனையேயிமையார்களெண்ணியெனைச்சார்ந்திடல்வேண்டும்
யாங்குமடியேற்கோரிடருமெய்தாதிருத்தல்வேண்டுமே. (௨௬)

வேதபாராயணராகிமிகுசற்குணராயறிவினரா
யேதமேதும்புரியாராயிலகாநிற்குமைந்தர்பலர்
நாதநாயேற்குறல்வேண்டுநம்பாவடியேனினையன்றிக்
காதலால்வேறொருதெய்வங்கருதாதிருத்தல்வேண்டுமே. (௨௭)

வள்ளலெனுமெம்பெருமானின்வாமபாகத்திருக்கின்ற
தெள்ளுமருளீச்சுரியானசிவையேயெனக்குப்புத்திரியாய்
நள்ளவேண்டுமவடன்னைநாயேன்வதுவைசெய்தளிப்பக்
கொள்ளவேண்டுநீயென்னைக்குழையாதளிக்கவேண்டுமே. (௨௮)

எனப்பல்வரமுமிரந்தேத்தவெல்லாவரமுங்கொடுத்தருளிச்
சினப்பன்னகபூண்மணிமார்பர்தீர்ந்தார்பின்புமரீசிமகிழ்ந்
தனப்புள்ளூகைக்கும்வேதனெனவறையப்படுமென்றனைநினைத்தான்
வனப்பிற்சிறந்ததவத்தனையன்மதிக்கோட்பாடுமெதித்தேனல். (௨௯)

முத்திவிருப்பஞ்சற்றின்றிமோகம்வளர்க்கும்போகத்தே
புத்தியுறுத்தானவன்கருமப்பொலிவையறிந்தேவிநாயகரு
மத்தையுறுத்தாரதுநுகர்ந்தேயகறல்வேண்டுங்கணேசரருள்
வைத்தல்லதுமுத்திநிலைமருவாதேயென்றுங்கடுத்தேன் (௩0)

வந்துபணிந்தான்மகனவற்குவகுத்தேனுசியவனகரொன்
றெந்தையெனக்குத்திப்பியமாயிழைத்துத்தருகென்றானவனுக்
கந்தவிதமேநகராக்கியதற்குப்பிரமநகரெனும்பேர்
தந்துகொடுத்தேன்மூன்றுலகந்தம்மிற்சிறந்துவிளங்கவே. (௩௧)

தக்கன்றனக்குச்சகோதரமாய்த்தயங்குமரீசியெனுமுனிவன்
றொக்கவளத்தபிரமபுரந்தோலாமகிழ்ச்சியொடுமடுத்து
மிக்கவனப்பினுயர்ந்தகன்றுவிளங்குமணிப்பொற்கோயிலிடைப்
புக்குமடங்கலாதனத்திற்பொற்பவினிதுவீற்றிருந்தான். (௩௨)

வேறு.

பொன்னொடுகூடாநின்றபுலவர்கள்பலரும்வெள்ளி
தன்னொடுகூடாநின்றதானவர்பலரும்வெய்யோன்
முன்னுறுகோளுநாளுமுற்றியெண்டிசைகாப்பாரு
மென்னரும்வணங்கிப்போற்றவினிதரசியற்றுநாளில். (௩௩)

பூவணையிருந்தவென்னுற்பொற்புறக்காணப்பட்ட
தேவவல்லியைவேதத்திற்றிகழ்தருவிதியினுற்றான்
மாவளர்மன்றல்செய்துமைந்தராயிரவர்தம்மை
மேவருமகளிர்தம்மைவியத்தகவுயிர்த்துவாழ்ந்தான். (௩௪)

நல்லிசைமரீசிவாழுநாளையின்முன்னரெல்லாம்
வல்லவன்கொடுத்தமேலாம்வரத்தினுலீசையென்பாள்
வல்லபையானவாறுமாதவடன்னைவேட்டுப்
புல்லியகணேசரங்குப்போந்ததும்புகலக்கேளாய். (௩௫)

தொன்றொருகாலந்தன்னிற்றுலங்கொளியுமிழும்வெள்ளிக்
குன்றிடைவிண்ணவோதிகுழுப்பயின்றேத்தச்சீய
வென்றியந்தவிசின்வைகும்விமலரைவணங்கிவெற்பின்
மன்றலங்கூந்தற்செவ்வாய்மாதொன்றுவினவினாளே. (௩௬)

கடவுளர்தமக்குமேலாங்கடவுளேயடியார்க்கெல்லா
மடமறத்தெரிக்குஞானவள்ளலேயுலகமெல்லாந்
தொடர்வறப்புரந்துநிற்குஞ்சோதியேசொருபானந்தா
விடவியசராசரத்தினியல்பெனக்குரைக்கவென்றாள். (௩௭)

முண்டகமலர்ந்தாலன்னமுகத்தினளாகிச்செவ்வாய்
விண்டெதிர்வினவிநின்றவிளங்கிழைமாதைநோக்கி
யண்டருமயனுமாலுமாரணமனைத்துமின்னுங்
கண்டிடாமுதன்மைநாதர்கருணைகூர்ந்தருளிச்செய்வார். (௩௮)

காரணமூன்றுமின்றிக்காரியவுலகமில்லை
யேரணிகாரணங்களவையெனினிமித்தமென்றாச்
சீரணிதுணைதானென்றாத்திகழுபாதானமென்றாப்
பேரணிமூன்றுமென்றுபேசுவாரறிவுசான்றோர். (௩௯)

இணையறுநிமித்தம்யாமேயிணங்குநஞ்சத்திதானே
துணையுபாதானமாயைதொடிக்கையாயந்தச்சத்தி
யணைதருநீயேயாவையறியெனவுவந்துகேட்டுப்
பணைபொருநெடுந்தோட்செவ்வாய்ப்பார்ப்பதிதருக்கிச்சொல்வாள்.

சத்திநானுதலாலேசருவனேபகவனேநல்
லுத்தமநானேமன்றவுனக்குடலுருவமெல்லா
மெத்தனைவகையிற்றோர்ந்துமெனையன்றியுனக்குவேறி
லத்தவென்னசைவாலெல்லாமசைகின்றவேயென்றாளே. (௪௧)

தருக்கியவுமையாள்வார்த்தைதம்பிரான்கேட்டுச்சொல்வா
ருருக்கியசெம்பொற்சுண்ணமுறழ்சுணங்கணிந்தகொங்கை
மருக்கிளர்மலர்மென்கூந்தன்மாதுகல்லியாணிநின்னாற்
றிருக்கிளர்நமதுபெற்றிசிறிதுங்காணரிதுகண்டாய். (௪௨)

என்முன்னேநாணமின்றியினிதுநிற்புகழ்ந்துசொன்னாய்
பொன்முன்னேகமலம்போலபூத்துநின்றொழிதலாதி
முன்முன்னாய்நின்றவென்னாலல்லதுமுற்றாவையத்
துன்முன்னேதெரித்துமின்னேயுணரெனவுருத்துக்கூறி. (௪௩)

உலகினிலுள்ளசத்தியனைத்தையுமொடுக்கிக்கொண்டா
ரிலகுமுச்சுடருமற்றவிரவொடுபகலுமற்ற
குலவுமெத்தொழிலுமற்றகூர்ந்ததுதிமிரவீக்கங்
கலதிசெய்காலத்தாஞ்சங்காரமேபோன்றதன்றே. (௪௪)

இலவிதழுமையாணோக்கியென்செய்தாமென்செய்தாமென்
றலர்மணத்தருக்குச்சாம்பியச்சமுற்றங்கைகூப்பி
மலரடிவணங்கியீசன்வல்லமையின்றியொன்று
நிலவுதலில்லையென்றுநெஞ்சினுட்டெளிந்துபோற்றும். (௪௫)

வேறு.

சயதேவதேவசயபத்தர்நேசசயவெங்குநின்றதலைவ
சயவாரணங்கள்முறையிட்டுமின்னுமறியாமைநீண்டசரண
சயநாரணற்குமறையோர்க்குமியார்க்குந்தனுவாகிநின்றவிறைவ
சயநாதவின்றுனியல்புள்ளவாறுதமியேனுணர்ந்துதொழுதேன். (௪௬)

வித்தின்றிநாறுவளரப்பணித்துவிமலத்தடைந்தவுயிரின்
கொத்தன்றியேனைவினையிற்படர்ந்துகுழையாவியாவுமலமார்
பெத்தின்றியைந்துதொழிலானுமுத்திபெறவாடுகின்றபெருமை
தத்தின்றியின்றனியல்புள்ளவாறுதமியேனுணர்ந்துதொழுதேன். (௪௭)

அநியாயமானவினையின்சுகங்களடைதோறுமாரநுகர்வுற்
றினியேதுவேறுகதியென்றுதம்முளிறுமாந்திருக்குமவரைத்
துனியாதுழும்மையுருவாயிருந்துதுரிசிற்படுத்துமருவுந்
தனியீசவின்றனியல்புள்ளவாறுதமியேனுணர்ந்துதொழுதேன். (௪௮)

வேறு.

தோத்திரித்தின்னவாறுதொடிக்கரத்துமையாள்போற்றி
யாத்தனேயடியேன்செய்தவபராதம்பொறுத்திங்கென்னைக்
காத்துமுன்போலவெல்லாவுலகமுங்காணத்தோற்றாய்
சாத்தியநினக்காகாததில்லையேதலைவவென்றாள். (௪௯)

மதிமுகத்துமையாள்வேண்டமனமகிழ்கூர்ந்துநாதர்
பதினொருகோடியென்னப்படுமுருத்திரரைமுன்னர்
முதிரறிவோடுந்தோன்றமுன்னினரவர்களெல்லாம்
பொதிதுயர்நீத்தார்போலப்பொள்ளெனவெழுந்திட்டாரே. (௫௦)

ஒற்றுமைமனத்தாலீசரொளிர்பதந்தியானஞ்செய்து
செற்றியசெயல்களெல்லாஞ்சிவன்விளையாட்டென்றுன்னி
யற்றமாருயிர்கட்கெல்லாமறிவினையாக்குமாறு
பற்றினோடுத்தார்கீர்த்திபடரிடைமருதூர்தன்னை (௫௧)

வேறு.

சிவநிசியென்னும்புத்தியினாலேசெறிந்திருள்விரவுமந்நிசியி
லவமறநான்குகாலமும்பூசையாகமவிதிப்படிபுரிந்தார்
தவமகிழ்கூர்ந்துதம்பிரானெதிரேசார்ந்தனர்தண்டுபோல்வணங்கி
யுவகையினெழுந்தோரிருகரங்கூப்பியுருத்திரரனைவருந்துதிப்பார். (௫௨)

வேறு.

போற்றிவிச்சுவரூபனாயிருந்தபூரணனே
போற்றியாவையும்படைத்தளித்தழிக்கும்புண்ணியனே
போற்றியெவ்வகைப்பொருளுக்குஞ்சுதந்தரப்பொருளே
போற்றியெற்றைக்கும்பொன்றுறாத்தனுவுடைமுதலே. (௫௩)

வீரபோற்றிமும்மலத்தையும்வேரொடுகளையுஞ்
சூரபோற்றிதுட்டரையடுஞ்சூலங்கையேந்துந்
தீரபோற்றிநற்றிருவிடைமருதெனச்சிறந்த
வூரபோற்றியெம்முளத்தமரொருவனேபோற்றி. (௫௪)

தொண்டுபோலவெவ்வுலகமுந்தோன்றுதல்வேண்டு
மண்டர்நாயகவென்றுமிக்கன்பொடுமிரந்தார்
கொண்டவோகையினங்ஙனமாகெனக்கூறி
யிண்டைவேணியர்வரமினுங்கேளுங்களென்றார். (௫௫)

பகவனாகியநின்னையாம்பனுவலின்முறையா
லகலிலாவியபத்தியினருச்சித்தபடியே
யுகலிலாதிரவத்தினாற்காலமுமுவந்து
தகவெலாருநின்பூசனைசமைத்திடல்வேண்டும். (௫௬)

இந்தநற்சிவநிசிதனக்கெய்துபுண்ணியங்க
ளந்தவன்பினர்தமக்குமுண்டாவதுவேண்டு
மெந்தையென்றுருத்திரரெலாமிரந்தனரதுவுங்
கொந்தலர்ச்செழுங்கொன்றையார்கொடுத்தனர்மறைந்தார். ()

காலகாலர்கட்டுரைத்தவண்மறையுமுன்னவர்தங்
கோலவாணையான்மாயனுதியர்குறைதீரச்
சாலவாலறிவுடையராயெழுந்தனர்சகத்தி
னீலநீங்கியதொளிர்ந்தனநிகரின்முச்சுடரும். (ருஅ)

மேவலர்புரம்வெந்தழற்கூட்டியதேவ
தேவனுகியசூலபாணியின்செயலறிந்து
பாவநீக்குமப்பதியிடையாவரும்படர்ந்து
சேவலானுகையாதவர்பூசைசெய்தனரால். (ருகூ)

பின்புமாதவனுதியோரனைவரும்பெயர்ந்து
துன்பநீக்கியகயிலையந்தொல்வரையெய்தி
யன்பினுலெதிர்பணிந்தெழுந்தாடினர்பாடி
யென்பெலாநெகவுருகிநின்றிறைவருக்குரைப்பார். (சூ0)

யாங்கள்யாவரும்பன்னெடுங்காலங்களிருளிற்
றூங்கினுமதருளினுற்றெருக்கவவ்விருளி
னீங்கினுமினிசித்தியகருமமாதிகடா
நீங்கலாற்பிழைதீர்கழுவாய்நிகழ்த்தென்றார். (சூக)

உள்ளதன்றியேவாரத்தினெருவர்பால்வேறு
கொள்ளவுய்த்திடாக்குழகனுரவர்தமைநோக்கித்
தள்ளுமெல்லிடைப்பார்ப்பதிதருக்கினுலீது
நள்ளலானுமக்கில்லைநாடிச்செயுங்கழுவாய். (சூஉ)

அவள்செயதக்கதேயாங்கழுவாயினிநீயிர்
துவளலின்றியின்றுதியாத்தொடங்கிநல்வினைக
டிவளவாற்றுமினென்றனர்திருவருள்பெற்றுக்
கவளயானையிற்களித்தவர்கருமங்கள்புரிந்தார். (சூங)

கருணைநாயகர்திருவுளக்கருத்தினையுணர்ந்து
தருணமாகியவனமுலைத்தாழ்குழற்கவுரி
வருணநான்கையும்வளர்ப்பவளெழுந்தெதிர்வணங்கி
வெருணடாவியவுளத்தளாய்ப்பரசிவிள்ளுவளால். (சூச)

கரந்தைவேய்ந்தருள்கதிர்ப்பொலஞ்சடிலநாயகனே
பரந்தபேருலகனைத்தையுநீபடுத்தருளச்
சுரந்துபாவமற்றெனக்கதுதொலைத்திடுங்கழுவா
யரந்தைதீரயானுக்குதலென்கொலோவென்றாள். (சூரு)

வறிதுதோற்றியமுறுவலின்முகத்தராய்மகேசர்
வெறிதுழாவியநறுங்குழல்விமலையைநோக்கிப்
பிறிதராததண்ணருள்விராய்ப்பெருமிதமகிழ்ச்சி
யறிவுநீடியமதுரமென்மொழிகளாலறைவார். (சூசூ)

வேறு.

அன்னமோடப்பொருநடைமெல்லடியாயெமதுமுன்னிருந்து
கின்னைநீயேயுயர்த்திமொழிநிகழ்த்தினுயப்பெரும்பிழையான்
மன்னிநீடுமுலகத்தின்மலிந்ததிருளாதலிற்கருமந்
துன்னுமாவிதமக்கெல்லாந்தொலையவளர்ந்ததிரும்பிழையே. (சூஎ)

எல்லாவுயிர்க்கும்பெருங்கருணையியைந்தவொருதாய்நீயதனு
னல்லாய்நீயேகழுவாயுநாடிப்புரிதன்முறையாகுஞ்
சொல்லாநின்றபேருலகிற்றுளங்கியீன்றுளிளங்குழவி
புல்லாநின்றபெரும்பிணிக்குப்பொல்லாமருந்துநுகர்வதுபோல். (சூஅ)

என்றுமுறையாலெடுத்தியம்பவிறைவியதனுக்குளமிசைந்து
வென்றிவிடையார்திருவடிகண்மீட்டும்பணிந்தெம்பெருமானே
நன்றுகழுவாய்புரியென்றாய்நவிற்றுங்கழுவாயாததனை
யொன்றவியற்றுந்தலம்யாதிங்குரையாயென்றாளவருரைப்பார். (சுகூ)

தண்ணந்தரளமணிகொழித்துத்தரங்கமுலவுங்கருங்கடல்சூழ்
மண்ணிற்சிறந்தவொழுக்கினதாய்வளருந்தருமவுருவினதாய்
நண்ணுநடுவனுடன்பிறந்தநலத்தாலெமுனையெனும்பெயர்த்தாய்க்
கண்ணிவணங்குவார்தமக்குங்கதியைக்கொடுப்பதொருநதியே. (எ0)

அந்தநதியிற்கலித்தெழுந்தவம்போருகமேதலமாகச்
சந்தமணிச்சங்குருவாகித்தவிர்ந்தெமடிகடியாணித்துச்
சிந்தைமகிழ்ச்சியொடுமிருத்திச்சிலநாள்கழியமரீசிமுனி
வந்துவியந்துமருங்கடுப்பவளர்கன்னிகைநீயாகுதியால். (எக)

வேறு.

கன்னிகையானபின்புகருத்திலெம்முருவையெண்ணி
நன்னரேகாக்கரத்தைநாடொறுங்கணித்தல்செய்தி
துன்னியமரீசிநின்னைத்துகளறுமகண்மைகொண்டு
தன்னகர்க்கொடுபோய்ப்பண்பாற்றளர்வறவளர்ப்பான்கண்டாய். ()

பன்னிரண்டாண்டுசென்றபருவத்தினுமங்கெய்தி
நின்னைநல்வதுவையாற்றிநின்குறைமுடித்துமென்றா
ரன்னையக்கணமேநாதரருள்விடைபெற்றுநீங்கி
யின்னலங்கடலைத்தூர்க்குமெமுனையந்தீரஞ்சார்ந்தாள். (எங)

பருதிநாயகற்குத்தோன்றும்பாவையாமெமுனைதன்னை
யொருவுதலிசையாக்காதலுடையனபோலவந்தப்
பெருநதிக்கயத்திற்பூத்துப்பிறங்குபன்மலர்கடம்மு
ளொருமலர்நாப்பட்சங்கவுருவமாய்த்தோன்றினாளே. (எச)

பங்கயமாதர்போற்றும்பார்ப்பதிதனக்குவாழ்க்கை
பங்கயமலரையாக்கிப்பரமற்குவாழ்க்கைநெஞ்சப்
பங்கயமலரேயாக்கிப்பத்தியினித்தமீசர்
பங்கயமலர்த்தாள்போற்றிப்பன்னருந்தவஞ்செய்தாளே. (எரு)

விறந்தபல்பொருளுக்கெல்லாம்விழுமியதருளவெற்பிற்
பிறந்தவளிருந்துநோற்பப்பெருமையையடைந்தசீரா
ணிறந்தழைகமலப்போதுநிகழ்பலமலர்கடம்முட்
சிறந்ததுபோலுமேலாந்தேவரும்விழையுமாறே. (எசா)

இகலுறுமசுத்தமானவிருண்மலந்துவரநீக்கிச்
சகலமுஞ்சுத்திசெய்யுஞ்சங்கரிதன்னைப்போல
வுகலருவடிவுகொண்டவுயர்ச்சியாற்போலுஞ்சங்கந்
தகலுறத்தனைச்சேர்நீரைத்தீர்த்தமாச்சமைக்குமாறே. (எஎ)

சங்கமாய்க்கமலப்போதிற்சயிலமாதிருக்குநாளில்
வெங்கதிர்ப்பெருமான்சென்றான்வியத்தருமகரத்தந்தத்
திங்களின்மகம்வந்தெய்தச்செழும்புனலாடவெண்ணிப்
புங்கவர்தொழுமரீசிபோந்தனனெமுனைமாட்டு. (எஅ)

விருப்பொடுவணங்கிப்போற்றிவியந்துசங்கற்பஞ்செய்து
மருப்பொலிதீர்த்தமாடிவயங்குவெண்ணீறுபூசித்
தருப்பணமாதிசெய்துதகமனுக்கணிக்குங்காலை
யொருப்படுநல்லவூழாலுந்தியின்வனப்புப்பார்த்தான். (எகூ)

அம்பிகைசங்கமாகியமர்ந்தகாரணத்தாலந்த
வம்பவிழ்நதியிற்பூத்தவனசந்தண்பனிக்குச்சற்றும்
வெம்புதலின்றிச்சீர்ப்பவிழுத்தவனதனைநோக்கி
யிம்பரிற்புதுமையீதாமெனவிறும்பூதுகொண்டான். (௮0)

திண்ணியபாவஞ்செய்தோர்செல்வமேபோன்றபாங்கர்
புண்ணுநீர்நிலையிற்பூத்தநளினங்களிவைகடீரப்
நண்ணியம்புரிந்தார்செல்வம்போன்றனவெமுனையென்னும்
வண்ணவார்நதியிற்பூத்தவாரிசம்பலவுமாதோ. (௮௧)

பகைபடுபனிக்குச்சற்றும்பங்கயங்கருகலின்றித்
தகைநலம்படைத்தகாட்சிசங்கரிதன்னையெம்போ
னகையுறச்சார்ந்தார்க்கெல்லாநவைமலப்பகைகள்செய்யு
மிகையிடர்சாராதென்றுமெய்ப்பயன்றெரிப்பபோன்ற. (௮௨)

பூங்குழன்மதர்த்தவாட்கட்புணர்முலையுமையைநன்று
தாங்கியமலரேயன்றித்ததைந்தபன்மலரும்வாட்ட
நீங்கினவவளைநெஞ்சினினைந்துமாலொழிந்துளானைப்
பாங்குறச்சூழ்ந்தார்தாமும்பரிசுத்தராதல்காட்டி. (௮௩)

நித்தியமானஞானநிருமலிதனைப்பெற்றோரே
நித்தியராவரென்னுநிலைமையைத்தெரித்தாங்கந்தச்
சத்தியைத்தரித்தகஞ்சஞ்செம்மலாய்த்தளர்வதின்றிப்
புத்தலராயேயென்றும்பொலிந்ததுபுலவர்போற்ற. (௮௪)

அந்தரிநினைத்தவாறேயகிலமுமாவதன்றிப்
பிந்தொருநிலையாகாதபெற்றியைத்தெரித்தாற்போல
வந்தளியேறத்தாங்காமலரவளிருப்பவென்னுஞ்
சிந்தையின்வழியேதாங்கித்திண்ணிதாய்நிலைத்ததன்றே. (௮௫)

தேம்படுமலர்மென்கூந்தற்றேவிபார்ப்பதியையுள்ளத்
தோம்பியஞானத்தோரேயுறங்குதல்விழித்தலின்றி
யாம்பயனுகர்வரென்னுமரும்பயன்காட்டிற்றென்ப
கூம்புதன்மலர்தலின்றிநின்றவக்குளிர்ந்தகஞ்சம். (௮௬)

கொள்ளுறுநவையின்மிக்ககுணமுளார்பெரியோர்சார்பு
நள்ளுநரென்பதேபோனங்கையைச்சுமந்ததார
முள்ளரையுடையதேனுமுயங்குபுல்லிதழதேனுங்
கள்ளொடுவிரையுந்தாதுங்காமரும்படைத்தகஞ்சம். (௮௭)

தொண்டைவாயுமையைச்சார்ந்ததூயவர்பொறிகடம்மாற்
பண்டுபோலலைப்புணுதபரிசொடும்பயின்றாங்கந்த
முண்டகம்வண்டுந்தேனுஞ்சுரும்புமொய்ஞிமிறுஞ்செந்தே
னுண்டுதாதுழக்கியூறுசெய்திடாவுயர்வுற்றன்றே. (௮௮)

மணங்கிளர்கமலப்போதின்வளையுருவானாளேனுங்
குணங்களையாய்ந்துதேவியெனக்குறித்தார்களில்லை
பணங்கிளராரத்தார்பாற்பாவையாய்ப்பயின்றாளேனு
முணங்கருவாய்மைநாடாதணங்கெனமதித்தோரெல்லாம். (௮௯)

சங்கரர்சார்புபெற்றுத்தகவுயர்ந்தவர்வெண்ணீற்றுப்
பொங்கொளியுருவம்போலப்பொலிந்ததுகங்கைவெற்பின்
மங்கையைமருவிமிக்கமான்மியம்படைத்தன்னுண்மெய்த்
தங்கியவுருவம்பெற்றுத்தயங்கியதெமுனைபோலும். (௯0)

பலருளர்மைந்தரேனும்பார்ப்பதிசார்புபெற்ற
நலமுளானொருவன்றன்னாற்குடிநலநலக்குமாபோன்
மலர்பலபூத்தவேனுமாதுமைதன்னைத்தாங்கு
மலரினாற்சிறந்தகஞ்சமலைதவழெமுனையாறு. (௯௧)

இன்னணஞ்சிறப்புமேன்மையெழில்புகழனைத்தும்பெற்ற
நன்னதிநோக்காநின்றநற்றவமரீசிகண்ணால்
வன்னமென்மலர்மேற்றெய்வவல்லியைக்கண்டான்ஞானந்
தன்னினன்னவடன்னுண்மைத்தகவறிந்திடுதல்போல. (௯௨)

வேறு.

தொல்லைமாதவப்பயனண்ணித்தாதலிற்றூயோன்
செல்லநீர்த்திடுந்தேவியாகியவளைசால
நல்லதாகியவிம்மிதநாட்டலில்விழைந்தம்
மல்லன்மாமணிச்சங்கினைவவ்வுவானடுத்தான். (௯௩)

நச்சுசீர்த்திருமேனியையெடுப்பதுநயந்தவ்
வச்சினோடுறப்பயில்வதுமதைவிடுப்பதுவு
மிச்சையாற்றலதிலையெனயாவருமுணரப்
பச்சைமாதுசங்காய்ப்பயின்றவளுருமறைந்தாள். (௯௪)

தான்விழைந்துழியல்லதுதனைப்பெறமுயன்றோர்
தான்விழைந்துழித்தனைக்கொடாத்தலைமையைத்தெரித்தாங்
கான்விழைந்துகைத்தவரிடத்தமர்ந்தவண்மறைய
வான்விழைந்திடுமரீசியென்னெனமதிமருண்டான். (௯௫)

மூர்த்தியாதியையஉற்றியன்முன்னுறுதடுத்துப்
பார்த்துவாழ்ந்துதோய்ந்தோர்களும்பயன்பெறுமாபோற்
சீர்த்தவால்வளைதனதியறேர்தராதடுத்தோன்
கூர்த்தசீர்பெறக்கன்னிகையாய்க்குறுகியதே. (௯௬)

மாயனாதியர்தமையெலாமகவெனவளர்க்குந்
தாயராம்பெருந்தவத்தினார்வளர்ப்பவோர்மகவாய்த்
தூயமேனியிலணிகிளர்சுந்தரத்தொடுமுன்
மேயபோதவன்விமலனார்வரத்தினைநினைந்தான். (௯௭)

காதரங்களைக்கழித்துயர்கதிநமக்கருளச்
சீதரன்றிசைமுகனிவர்தெரிகலாப்பரையே
யாதரந்தகவடுத்தனளாமெனவறிவன்
மாதரங்கையினெடுத்தனன்மகிழ்ந்திளமகவை. (௯௮)

கரையிலேறினன்காமருதேவவல்லியைப்பார்த்
துரையெலாங்கடந்தொளிர்வனப்புடையவிம்மகளை
விரையவாட்டிநன்றூட்டிமேதகவளரென்று
புரையிலாவவள்கரத்திடைப்பொலிவுறக்கொடுத்தான். (௯௯)

தவத்தின்மேலவர்தமக்குறுப்பொருள்களுமுளவோ
வவத்தினீக்குபேரறிவதாயருமறைக்கெட்டாச்
சிவத்தினீங்குறுச்செல்வியைத்தேவவல்லியுஞ்சார்
பவத்தினீங்கியமரீசியும்பரித்தனர்கரத்தில். (௧00)

செங்கையேந்தியபிராட்டியைமுனிவரன்றேவி
பொங்குவாளரிவிழிப்புதுநீலமாமலரா
லங்கம்யாவையுஞ்சாத்தினளகமகிழ்கூர்ந்து
கொங்கைபீரெழவுச்சிமோந்தூட்டினள்கொழும்பால். (௧0௧)

மடமகன்றவரன்பிஞலின்புறவழங்கு
மூடலும்பல்வகைப்பொருளுமாருயிருமேற்றருளுந்
தொடரருட்பரைதேவவல்லியின்றுணைக்கொங்கைக்
குடநிறைத்தபால்குடித்தனனுலகெலாங்குளிர்ப்ப. (கoஉ)

அகளமேயுருவாகியவவ்வியல்பொழிந்து
சகளமேவடிவாகியதையலைமரீசி
மகளிர்கூட்டமுமைந்தர்கள்குழாமுஞ்சூழ்ந்தேத்தி
யுகளபார்வையினுளிர்வனப்பமிர்தமாந்தினரே. (கoங)

தீர்த்தமாடியசெழும்பயனுகலையெமுனைத்
தீர்த்தமேதரப்பெற்றவன்போற்றிருநடஞ்செய்
தீர்த்தன்பாலமாதேவியைச்செங்கையிற்றாங்குந்
தீர்த்தனேகையிற்சென்றுதன்றிருநகரடைந்தான். (கoச)

நெடியமாநகர்நீணதியிடத்திருந்தடுத்த
தொடிவிராவியமலர்க்கரச்சுந்தரமகவைப்
படியிலாதவுட்காதலிற்பார்த்தெழிற்பரசி
முடிவிலாப்பெருஞ்சுகக்கடன்முழுகியதம்மா. (கoரு)

உருவுமூர்களும்பெயர்களுமுற்றவாருயிர்க்கவ்
வுருவுமூர்களும்பெயர்களுமொழித்திடற்பொருட்டே
யுருவுமூருமுற்றவட்கொருதிருப்பெயர்மரீசி
யுருவநூற்படிவல்லபையென்றுரைத்தனனே. (கoசு)

ஆட்டுவானெனத்தொழிலெலாமமைதரவியற்றிக்
காட்டினுலலதுலகுகைக்கொண்டிடாமையினு
லீட்டமாரிளம்பருவத்தினெழில்விளையாட்டுங்
காட்டினுள்புரிந்தியாவருங்களிப்புறநங்கை. (கoஎ)

நங்கைவல்லபையைந்தெனுமாயுணண்ணியபின்
கங்கைசெஞ்சடைக்கரந்தவர்கடிபுரிந்தருளிப்
பங்கின்வைத்திடவினித்தவம்பண்ணுதுமென்று
தங்குமுள்ளகக்காதலிற்குரவரைச்சார்ந்தாள். (கoஅ)

கருத்தனுர்தமைக்கருதிநோற்றிடத்தவச்சாலை
திருத்துவீரெனச்செப்பினளிருமுதுகுரவ
ரருத்தியோடதுபுரிந்துபாங்கியர்பணிக்கமைத்து
விருத்தர்பேடியர்தங்களைக்காவலின்விடுத்தார். (கoகூ)

முதுக்குறைந்தநல்விருத்தராகியமுனிவரர்கள்
புதுக்கிருந்தவச்சாலையின்புறமெலாநோற்ப
விதுக்குறைந்தவாணுதலினுள்விளைத்தனள்விமலர்
மதுக்கமழ்ந்தபூங்கழலிணைமதித்தருந்தவமே. (கக0)

ஏகவக்கரமனுவினையிரவொடும்பகலும்
பாகமுற்றியவுளத்தளாய்ப்பகர்ந்தருந்தவத்திற்
ருகமுற்றியதனையையைத்தாயெதிர்நோக்கி
மோகமற்றதன்முனிவனைப்பார்த்தொன்றுவினுவும். (ககக)

அண்ணலேநமக்கோகைமிக்கருண்மகளான
வண்ணவார்குழல்வல்லபைக்கிளமையாம்பருவத்
துண்ணலாதிகளொழியமாதவமொழியாமைப்
பண்ணுமார்வமுண்டாயதெப்பான்மையாலென்றாள். (ககஉ)

கடாவிநின்றதன்னில்லவள்கருத்தமைவெய்தக்
கெடாதமெய்த்தவமரீசிகேண்மையின்மிகக்கிளப்பான்
படாமெனக்கரியுரியினைப்போர்த்தவர்பாகம்
விடாதகாதலியாகியவிமலைவல்லபையே. (௧௧௩)

கத்தனேகன்சங்கரனெனக்கரைந்துலகேத்து
மத்தனுகுமைந்தொழிலுக்குமாகரமான
வித்துமாயுலகனைத்துமாய்விளங்குமக்கவுரி
பத்திராஞ்செயப்புத்திரியாயினள்பாவாய். (௧௧௪)

அரியமாதவம்பண்டுநோனுற்றினேனதற்குப்
பெரியவானருளுடையவளாதலிற்பேதா
யுரியளாமகளாயினளுவளுடைப்பெருமை
தெரியலாம்படித்தன்றுபல்செயல்களினுனும். (௧௧௫)

பெருமையாவர்க்குமறிவரும்பெற்றியளான
கருமைவாட்டடங்கண்ணிதன்கணவனுர்பாகத்
தொருமைமேவியவருந்தவமுவந்துசெய்கின்று
ளிருமைவாழ்க்கையுமுயிரெலாமெய்துறும்பொருட்டே. (௧௧௬)

மானைவென்றகண்மாதராய்மகளெனவவளை
யேனைமக்களோடொப்பவெண்ணலையினியென்று
தேனைவென்றமென்சொல்லினுற்றெளித்தனன்றெளிந்து
தானையொன்றுபூண்முலையினுடைழைத்தனளுள்ளம். (௧௧௭)

குரவனின்னணமருமையும்பெருமையுங்குறித்துப்
பரவவல்லபைபன்னிரண்டாயுளின்காறு
மிரவுநண்பகலிரண்டினுமிருந்தவமியற்ற
வரவமெல்லிழையாரகந்தரிப்பரோவடுத்தார். (௧௧௮)

ஆறுசூடியவேணியாதிகடமைமறைத்து
நீறுசேர்திருமேனியார்நிகழ்மறையவனுய்
வீறுசேர்தவச்சாலையைமேவலுங்கண்ட
தேறுவாயில்காப்பாளர்கடேவிபாலுரைத்தார். (௧௧௯)

தேவதேவனுர்க்கன்புசெய்திடுஞ்சிவபத்தர்
மேவினுர்கடைவாய்தலினெனவிளம்புதலும்
பாவைபோந்தனள்பணிந்தனள்பரிந்துடன்கொண்டு
காவலாளருங்கைதொழச்சாலையுட்புகுந்தாள். (௧௨0)

படுத்தவாதனத்திருத்தினள்பாத்தியமாதி
கொடுத்துமேதகுபூசனைகுயிற்றினளுள்ளந்
தொடுத்தகாதலிற்குறுநகைதோற்றிமுன்னின்றிங்
கடுத்தகாரணம்யாதகத்தறைகவென்றிரந்தாள். (௧௨௧)

கரந்தவேடமோடடுத்தருள்கண்ணுதற்பெருமா
னிரந்தமாதராட்கிளநகையெதிருறத்தோற்றி
யரந்தைதீரநின்னங்கையைப்பற்றுவானடுத்தேன்
பரந்தவாஞ்சையீதளித்திடிற்பயன்பெற்றேனென்றுர். (௧௨௨)

உவமையில்லவனுரைத்தசொலுருவவெந்தழலிற்
றவவெதுப்பியவூசிபோற்றடஞ்செவியேறச்
சிவசிவாவிவன்செப்பியதென்கொலாமென்று
கவலையோடவள்கையினுற்காதுபொத்தினளால். (௧௨௩)

நெற்றிமேலிருபுருவமுநெளிந்துபோய்மறிய
வெற்றிவேலெனவெய்திருவிழிகளுஞ்சேப்பப்
பொற்றவாயிதழ்துடிப்பமென்பூங்கரங்குலைப்பக்
கொற்றமேவியதழலெனக்கொதித்தெதிருரைப்பாள். (கஉச)

சகலலோகமும்படைத்தளித்தழித்திடுந்தலைவ
னிகலிலாமலெவ்வரங்களுமளித்திடுமிறைவற்
குகலிலாதமெய்யன்பினேனுண்மையோராதே
புகலலாங்கொலோவிம்மொழிபுத்தியிலாதாய். (கஉரு)

பராபரப்பொருளாகியபகவனையல்லால்
விராவுறேன்கனவாகினும்வேறொருவரையும்
பிராமணாவறிவாயெனப்பேசினளவனு
முராவுவெஞ்சினமுடையவன்போலவொன்றுரைப்பான். (கஉசு)

கலைகளாயினுநுண்ணியகருத்தினரேனு
மலைசெய்வாள்விழிமாதராரறிவுபேதமைத்தே
நிலைபெறாதுநின்வாஞ்சைநேரிழைநினக்கெளிதிற்
றலைவராமவர்சார்வரோவெனத்தடுத்தனனால். (கஉஎ)

நெருப்புந்தண்ணெனவுக்கிரமாநெடுந்தவங்கள்
விருப்பினெண்ணறுகாலங்கள்விளைக்குவலதற்கும்
பருப்பதச்சிலையார்பரிந்தணைதராராயி
னுருப்பவீண்படவென்றுருவத்தையீதுண்மை. (கஉஅ)

புத்திநீயெனக்குரைத்ததீங்கமையும்போவென்றாள்
பித்துளானெனப்பெயர்தராதவனிருத்தலினாற்
சத்தியாகிவல்லபைதான்வெளிக்கொள்ள
வைத்ததாளிணைபெயர்த்தனண்மணிச்சிலம்பரற்ற. (உகூக)

காலையாயிரங்கோடிவெங்கதிரொளித்தேசுங்
கோலமாமயிலூர்தியுங்குடங்கையோர்பத்துஞ்
சீலமார்பலவணிகளுந்திகழ்தரக்காட்டி
மூலகாரணராகியகணேசர்முன்னின்றார். (கஙO)

அந்தணாளராய்வந்ததோருருவினையகற்றி
யெந்தையாரருளிலகுமீசானன்மாலயற்குந்
தந்தையார்தமதியலுருக்காட்டலுந்தழல்போல்
வந்தகோபமங்கொழிந்ததுவல்லபைதனக்கே. (கஙக)

அன்புநாணுமச்சமுமுடனெழுந்தனவரிவை
பின்புகூப்பியகையளாய்ப்பெரிதுளமகிழ்வுற்
றின்பமேயருளிறைவனேயென்பிழைபொறுத்து
நின்பதாம்புயத்தன்பினைநிரப்பெனக்கென்றாள். (கஙஉ)

வேறு.

மெல்லிழையுரைப்பக்கேட்டுவிநாயகரினிதுநோக்கி
வல்லபைமாதேநீசெய்மாதவந்தனக்கிங்கோகை
புல்லினேமென்றாரச்சொற்புகன்றவீசானர்தம்மை
வல்லிமெல்லிடையாண்மீட்டும்வணங்கிநெக்குருகிநின்றாள். (கஙஙு)

உருகிநின்றவளைநோக்கியுயர்வறவுயர்ந்தநன்மை
பெருகியகணேசர்பெட்டபெருவரம்யாதுசொல்லாய்
தருகுதுமென்றார்கேட்டதையனின்வாமபாக
மொருவுதலின்றியென்றுமுடனுறல்வேண்டுமென்றாள். (கஙச)

சுந்தரமாதுவேட்டதுகளறுவரத்தைநாதர்
தந்தனமென்ஞறிந்தத்தகைமையினிவர்கணிற்ப
முந்துறச்சென்றதூதன்முனிவனைவணங்கிச்சாலை
யந்தணன்புகுந்துமாதோடறைந்திருக்கின்றானென்றான். (கருரு)

பூசுரராகிப்போந்தபுண்ணியர்வலனையட்ட
வாசவனென்னுந்தேவன்மருகற்குமூத்தோரேயென்
றேசறுமனத்திற்றெள்ளியிருவர்க்குமரீசியென்பான்
றேசுறுமன்றல்செய்யச்சிந்தனைசெய்திட்டானே. (கருசு)

விழைதருமன்றற்கானவியத்தகுகருமமெல்லா
முழையர்கள்புரியுமாறங்குரைத்தவர்தம்மையேவிக்
குழைவறுதேவராதியனைவருங்குறுகக்கூவித்
தழைதரவவர்க்குச்செய்யத்தக்கனபலவுஞ்செய்தான். (கருஎ)

நிறைகுடந்தூபமாதிநிரப்பிநீள்பந்தர்தோறும்
பிறைதொடக்கொடிகணீட்டிப்பெருங்குலைவாழைநாட்டி
நிறைமணித்தோரணங்கணிரைநிரையாத்தெல்லோருங்
குறைவறநகரமெங்குங்கோடணைபுரியச்செய்தான். (கருஅ)

தொன்றுகண்டறியோமென்றுசுரர்களுமிறும்பூதெய்த
மன்றன்மண்டபங்கோடித்துமற்றுளபொருள்கள்யாவு
நன்றுறவமைத்துவைத்துநற்றவர்முதலோர்சூழத்
தன்றனிமகளார்வைகுஞ்சாலையைமரீசிசார்ந்தான். (கருகூ)

காமருவடிவஞ்சான்றகவியைமுன்கண்டுதாழ்ந்து
தோமறுதவத்திற்சான்றசுந்தரமாதுதன்னோ
டேமமல்கியதன்னில்லத்தினிதுகொண்டேகியந்தப்
பூமலிகொன்றையானைப்பொற்பமண்டபத்துள்வைத்தான். (கசுO)

துவளிடைமாதுதன்னைத்தொகுமணக்கோலங்கொள்ள
வுவளகவரைப்பினுய்த்தாளெண்புனலாடியந்தத்
தவளமென்முறுவனல்லாள்சடைவிடுத்தோதிசேர்த்துத்
திவளணிபலவுந்தாங்கிச்சேர்ந்தனள்கணேசர்பாங்கர். (கசுக)

சிற்பரம்பொருளாயுள்ளதேவனைக்கணேசன்றன்னை
யற்பகத்தோடுநண்ணியடிமலர்முடியிற்சூடிக்
கற்பகமலர்கையேந்திக்காகுத்தன்முதலோர்யாரும்
பொற்புறச்சொரிந்துகீர்த்திபுகன்றுகைகட்டிநின்றார். (கசுஉ)

இலக்குமிவாணியாதியிமையவர்மாதரெல்லா
மலக்கணையகற்றிநன்மையருளும்வல்லபையைநண்ணிக்
கலக்கமிலநிவிற்றாழ்ந்துகமழ்மலர்மாரிபெய்து
விலக்கருமகிழ்ச்சிபூப்பமிடைந்தனரிரண்டுபாலும். (கசுஉ)

கின்னரர்வீணையேந்திக்கிளர்நரம்புளர்ந்துநின்றா
ரன்னமென்னடைப்பூங்கோதையரம்பையாதியர்கள்சார்ந்து
முன்னுறநடித்தாரூழிமுகிலினமுழங்கியாங்குத்
துன்னியவியங்களெல்லாஞ்சுரர்சிலரியம்பினரே. (கசுச)

மறுவறுமுகுர்த்தம்வாய்ப்பவணங்கிடைத்தேவவல்லி
நறுவிரைக்கரகத்தூநீர்நன்மனத்தோடுவார்ப்ப
வுறுவரன்மரீசியென்பான்விநாயகருகளபாத
வெறிமலர்முறுகுமன்பால்விளக்குபூசித்தானே. (கசுரு)

மணிப்புனலோடுசேர்த்தவல்லபைதனையொன்றானுங்
கணிப்பரும்பெருமைசான்றகணேசர்கைத்தலத்தினீந்தான்
றணிப்பருங்கருணைநாதர்தாமகிழ்ந்தவளையேற்றார்
பிணிப்புறுவினையினீங்கியாவரும்பெறும்பேறுற்றார் (கசசு)

பூரணரானமுக்கட்புண்ணியரருள்கைக்கொண்டங்
காரணனெனும்பேர்பெற்றேனவிசொரிந்தங்கிவேட்டே
நாரணன்முதலாந்தேவர்நவின்றனர்வேதநான்குங்
காரணரவரெல்லார்க்குங்கடைக்கணித்தருளினாரே. (கசஎ)

திருமணமின்னவாறுதிகழ்ந்திடுஞ்செவ்விதன்னிற்
குருமலர்க்கமலையோடுகோதண்டபாணிசூழ்ந்து
பெருகொளிக்கணேசர்மாறாப்பேரருள்பெறுதல்வேட்டே
மருவுதன்மகளிரானமாதரைக்கொடுத்திட்டானே. (கசஅ)

வேறு.

தொடிக்கையுடைமோதைபிரமோதையெழிற்சுபகைசுந்தரியேமனோரமையேமங்கலைகேசினியே, துடிக்குநிகரிடைக்கரந்தைசுடர்சாருகாசைசுமத்திமைநந்தினிவளர்காமதையெனுமாதர்களைக், கொடுத்தரியேத்தலுமிந்தப் பன்னிருவர்தமையுங்கோலமலிவல்லபைதன்மன்றலினோடொன்றாய், முடித்தருளிவதுவையுடன்கொண்டுவிநாயகனார்முருந்தன்மிசைப்பெருங்கருணைமுகிழ்த்தருளிமொழிவார். (கசகூ)

வேறு.

பலவவதாரங்கொண்டுபன்னகவணையோய்மும்மை
யுலகமும்புரவாய்நீயென்றுவந்தருள்செய்துபின்னு
நலமலிவரமுண்டாயினவிற்றுதிதருதுமென்றார்
குலவருட்கணேசர்கேட்டகோதண்டபாணிசொல்வான். (கருo)

மும்மலச்சிமிழ்ப்பிற்பட்டுமுதல்வநின்பதங்காணாது
விம்மலுற்றழிகின்றேற்குவிளங்குமெய்ஞ்ஞானங்காட்டிச்
செம்மையினிறுத்தாயென்றான்தேவனார்தீக்கையாற்றி
யுண்மையையுணர்த்தியின்பவுததியிலழுத்தினாரே. (கருக)

அருந்தவமரீசியாதியனைவரும்வேறுவேறு
திருந்தியவரங்கள்வேட்டுச்செம்மலார்கொடுப்பக்கொண்டு
பொருந்தினர்பேரானந்தம்பூரணர்வதுவையோதி
வருந்தாறுதின்றும்பெற்றேன்வரம்பிலானந்தம்யானும். (கருஉ)

வல்லபைமனைவியேனைமாதர்பன்னிருவர்பாங்கர்ப்
புல்லுறக்கணேசர்பின்புபொருவறுதனதுவைப்பாய்
மல்லலினீடியென்றும்வயக்கஞ்சான்மணித்தீபத்தைச்
சொல்லரும்வரிசையோடுதுன்னினரிருந்துவாழ்ந்தார். (கருரு)

மாதவன்முதலானோர்கள்வல்லபேசுரரையேத்திக்
காதலிற்பணிந்துதத்தங்கதிகளினடைந்துவாழ்ந்தா
ராதரம்பெருகமன்றலன்றுகண்டவரந்தத்தி
னேதவல்வினையுநீங்கியின்பபூரணத்தில்வாழ்ந்தார். (கருச)

வேறு.

வேதசாத்திரத்தினானும்வேறுளவளவையானும்
போதமேலானயோகர்புலவருமறியமாட்டா
நாதராயசுரர்தம்மைநலிவுசெய்வல்லபேசர்
காதைவானவராலேத்தப்பட்டதுகரிசுதீர. (கருரு)

செருக்கறுமுனிவரானுஞ்செபித்திடப்பட்டதென்று
மிருக்குமுன்வேதச்சென்னியென்னுமுப்பரிகைதன்னி
லிருப்பதுபாவபந்தமெனைத்துநீக்குவதாமிந்தத்
திருப்பொலியிதிகாசத்தைச்செப்புகபயன்வேட்டோரே. (௧௫௬)

பன்னிரண்டாவதென்னப்படுமவதாரந்தன்னைப்
பன்னிடவறிந்தாயன்றேபரமர்வேலவற்குச்சொன்ன
பன்னிரண்டவதாரத்தின்பரிசுமிங்குரைத்தாமென்று
பன்னலவுலகந்தோற்றும்பண்ணவன்விளம்பினானே. (௧௫௭)

இன்னணமலரின்மேலோனியம்பலும்வியாதனென்பான்
துன்னியவன்பின்மீட்டுந்தொழுதரிபோதஞானந்
தன்னைவல்லபைகணேசர்சாற்றிடப்பெற்றானென்று
யன்னதுந்தமியேன்றேறவருளெனவருள்வன்வேதன். (௧௫௮)

வல்லபைகணேசர்திருவவதாரப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - ௨௬௮௧.



## ௮௩ - வது உபதேசப்படலம்.

காண்டல்கருதலுரைகளினுற்கதுவுமேனையளவையினன்
மாண்டமனமாதிகண்மூன்றான்மறையோன்றிருமாலாதியரால்
வேண்டுமளவுமுயன்றாலுமெய்மைசிறிதுமறிதலுறாப்
பூண்டகருணைவிநாயகர்தம்பொருவில்ஞானம்புகலக்கேள். (௧)

உருவமருவமுபயமெனவுரைக்கப்படுமூவர்கடமக்குங்
கருவிகரணமுதற்பலவுங்கண்டுபுரந்துதுடைத்துமறைத்
தருளுமுதலாயவருளமுமறியாப்பொருளாய்த்தனதருளான்
மருவுமொளியாயெங்குநிறைவாய்மையெதுவோவதுபிரமம். (௨)

அந்தப்பிரமமெரியிரும்பையடுத்தாங்கறிவைத்தொடருருக்கொண்
டிந்தவுலகில்விநாயகரென்றிணையில்பெயர்தனுண்மையினைப்
பந்தமகன்றோர்தெரிந்துகொளப்பரித்துவிளையாட்டயர்ந்திருந்து
மூந்துமலத்தானொருவருமம்முதல்வரியற்கையுணர்ந்திலரால். (௩)

இருளுமொளிரவிருண்டமலமென்றுமறியாமையைக்கொடுத்து
மருவியிருத்தலாற்சனனமரணமானபிரவாக
மொருவர்தமக்குமொழியாதவ்வொருவரானவிநாயகனு
ருளின்வழியேயுயர்யோகமடையினலதுமுனிவரனே. (௪)

ஒன்றேயானபொருளின்கண்யோகமென்னுங்கருத்தில்லை
யொன்றேடொன்றுசேர்ந்துழியேயோகமென்னுங்கருத்துளதா
மொன்றேடொன்றுசேர்ந்தவற்றினொழிந்துநில்லாதவையாகா
தொன்றாநின்றசம்பந்தம்யோகமென்பருணர்ந்தோரே. (௫)

அந்தயோகம்நான்காகுமவைதாமகமேயகப்புறமே
வந்தபுறமேபுறப்புறமேவகுத்தவிவையாமிவையெட்டாம்
பந்தமொடுமுத்தியினுறழப்பகர்துமிவற்றைமுறையானே
சிந்தைமயக்கமறத்தவங்கள்செய்துமுடித்தமாதவனே. (௬)

உயிர்தான்மூலமலத்தினொடுமுற்றபந்தமகமாகுஞ்
செயிர்சேர்மாயைகன்மமொடுசேர்ந்தபந்தமகப்புறமா
மயிலாநின்றதநுகரணப்பந்தம்புறமாம்புறப்புறமா
மயர்சேர்புவனபோகத்தின்மருவாநின்றபந்தமே. (௭)

அதனாற்கணேசர்திருவருளாலடையும்யோகமாவதுதான்
மதமார்மூலமலத்தினொடுமருவுபந்தமன்றுபல
விதமார்மாயைகன்மமொடுமேவுபந்தமன்றேனை
யிதமாரிரண்டுபந்தமுமன்றின்னுமிவற்றுள்விதந்துரைப்பாம். (அ)

வேறு.

இருமுதுகுரவர்பாங்கரீட்டியவினைகடம்மாற்
கருவெனவுறுஞ்சம்பந்தங்காணுறுயோகமன்று
மருமலிகுழலினார்கண்மன்றலும்யோகமன்று
வொருமையின்மாதராசைப்போகமும்யோகமன்று. (௯)

எண்வகைச்செல்வம்வெவ்வேறெய்தலும்யோகமன்று
நண்ணுறுமவையோராங்குநணுகலும்யோகமன்று
திண்ணியபிணிகளாதிச்செயிர்களும்யோகமன்று
மண்முதலுலகமாளும்வாழ்க்கையும்யோகமன்று. (௧௦)

பொறிகளைம்புலனிற்சென்றுபுல்லலும்யோகமன்று
பறிமனமொன்றிற்சென்றுபற்றலும்யோகமன்று
குறியொடுமொருவனட்புகொள்வதும்யோகமன்று
செறிதருஞ்சித்தியெட்டுஞ்சிவணலும்யோகமன்று. (௧௧)

பிறவியான்முறைமையெய்தும்பெற்றியும்யோகமன்று
மறுவறுவருணச்செய்கைமருவலும்யோகமன்று
நெறியினாச்சிரமநான்குநிற்றலும்யோகமன்று
பெறுமதக்கடவுளார்வம்பேணலும்யோகமன்று. (௧௨)

வேறு.

மாணுபிராணாயாமப்பிரதிவாதமந்திரமாகியசத்தலோகயோகம்
பேணலுறுமுயர்யோகமன்றுவிண்ணிற்பிறங்குபலவுலகத்தும்பெட்டயோகங்
காணுறுபந்தமும்யோகமன்றுதிங்கட்கடவுள்கனற்கடவுண்முதற்கடவுளாகிப்
பூணலுறுதெய்வதமும்யோகமன்றுபுகரில்பதமுத்திகளும்யோகமன்று. ()

ஆக்கன்முதலைந்தொழிலும்புரியாநின்றவதிகாரபந்தமுதல்யோகமன்று
போக்கறவிவ்வாறுலகிற்பலவேறாகப்புணர்தருசம்பந்தமெலாம்யோகமன்று
பாக்கியமாகியதவஞ்செய்முனிவரேறேபந்தமுறுஞ்சம்பந்தநான்குஞ்சொற்றா
மேக்குயர்விண்ணவரானுமறியவொண்ணாவீடுறுசம்பந்தமொருநான்கும்விள்வாம்

பக்குவம்புண்ணியமூலபாகஞ்சத்திபதிதலிருவினையொப்புப்பயின்றகாலை, தொக்கமலபந்தமெலாங்கழித்தவான்மாச்சுத்தமாய்ச்சுத்தவவத்தையினிற்சொன்ன, பத்துவிதப்புண்ணியமும்புரிந்துமேலாம்பரத்தினொடுமொன்றாகாதிரண்டுமாகா, தத்துவிதமாயேகமாகியின்பாயபாவமாநிலையகச்சம்பந்தமாகும். (௧௫)

அருணிலையேமுத்தியெனவழுந்திநிற்றலகப்புறச்சம்பந்தமருளுபகாரத்தை, மருளறக்கண்டிடல்புறச்சம்பந்தமந்தவாய்மையருட்டொழிலினைத்தான்செய்யவெண்ணல், பொருவில்பரநானென்றேமருளாற்காண்டல்புறப்புறச்சம்பந்தமிவைநான்கினுள்ளும், மிருளறுமாதவவகச்சம்பந்தமொன்றேயிணையிலுயர்யோகமெனவியம்புநூலே. (௧௬)

வேறு.

சிறந்தயோகநான்குள்ளுஞ்சிறந்தயோகந்தனைப்பெற்றோர்
பிறந்துமிறந்தும்வருகின்றபெரியசமுசாரத்தடையார்
றந்துநினைந்தும்வினையீட்டிமாயாபோகந்தனைநுகரா
ரிறந்தவெனதியானென்னுமிருளிற்படார்களொருகாலும். (௧௭)

உலகிலுறங்கியுலகிறந்தவொருவான்பொருளில்விழித்தந்த
வலகில்பரமானந்தமயமானவமுதப்பெருங்கடலிற்
கலவிமுழுகித்திளைப்பார்கள்கருணைநிறைந்தவுளத்தினராய்
நிலவுமுலகமொருமூன்றுநெடிதுபரிபாலனஞ்செய்வார். (௧௮)

பிழைதீர்தாங்கள்பெறும்பேறுபிறருக்குபதேசித்திடுவார்
விழையார்விழையப்படும்பொருளைவெறுர்கள்வெறுக்கப்படும்பொருளைத்
தழைகாமியமூன்றையுமில்லார்தநுவினடுக்கும்பிராரத்தம்
பழையோன்மணியம்புதுமணியம்பாற்றியாங்குத்தாநுகரார். (௧௯)

வேறு

சகலமுஞ்சொருபமாகையாற்சகலபூதமுஞ்சொருபமேயாக
விகலறக்காண்பார்சீவன்முத்தர்களாயிருப்பர்களுலகினுள்ளவர்க்குப்
புகலனுக்கிரகப்பொருட்டுலகத்திற்புரையறச்சரிப்பர்காமாதி
திகழுமிந்திரியம்வென்றவரோடுஞ்செம்பொனுமொப்பவேகாண்பார். (௨௦)

தக்கயோகத்தால்வசீகரமாயதன்னிடத்தமர்சொருபத்தை
மிக்கபாவனைகள்கடந்தபாவனையால்வேறறக்கண்டுகொண்டிருக்கும்
பொக்கமிலுளத்தையுடையரொன்றானும்புரைபடார்வேறுதான்படார்கள்
பக்குறுபடையாலடிபடாரிழுக்கப்படார்பரிசுத்தமிக்குடையார். (௨௧)

உள்ளவூழ்வினைகளொழிதருங்காறுமுழிதருமுடலிடைவந்து
நள்ளிருவினையின்பயன்களைத்தமக்குநல்லனதீயனபுரிவோர்
கொள்ளவேதாங்கள்பிரமமொன்றனையேகுறிப்பறக்குறித்திருப்பார்க
டெள்ளியவிவரையித்தகுயோகச்செய்தியரேயறிவாரே. (௨௨)

அறிவித்தாலறியுமாருயிர்க்கநாதியாகியவாணவமருளாற்
பிறிவித்தானந்தம்பெருக்கியொன்றாமிப்பிரமமாகியவிநாயகனே
நிறுவித்தாரணியீறானநாதாதிநிலைபெறுதத்துவமற்றாற்
செறிவித்தாருயிர்க்குத்தநுகரணாதிசெயிரிலைந்தொழில்புரிகின்றான். (௨௩)

கரிசிலைந்தொழில்செய்காரணர்தமக்குங்காரணமாயையிற்பலவாய்
விரிதருமுலகில்வியாபியாய்நின்றும்விகாரமாதிகடனக்கில்லான்
றெரிசதாசிவனேதிகழ்பராசத்திசிந்தரமுகவன்மால்கதிரோன்
றுரியவைவர்களாய்ப்பூசைகொள்கின்றானுயிர்க்கெலாநாயகனவனே. (௨௪)

பேறிகழ்வின்பம்பிணிவளர்மூப்புப்பேதுறச்சாதலென்றுரைக்கு
மாறினுமோவாதுயிர்களையெல்லாமமைவுறச்செலுத்தியுந்தனக்குக்
கூறியவிருப்புவெறுப்பினையில்லான்கூடியெவ்வுயிரையுமயக்கும்
வீறியமாயைமயக்கமுமில்லான்விளங்கியவநாதியேயமலன் .(௨௫)

படைகளாற்பிளக்கப்படானழலழற்றப்படான்சலநனைத்திடப்படானக்
கடைவளியுணக்கப்படான்வெளிபோலவகிலமுமிறப்பினுமிறவான்
றடையறவொன்றாவின்னதென்றறியாத்தத்துவன்றகுபிரமாண
வடைவினாலறியாவப்பிரமேயன்விளங்குமெய்ஞ்ஞானியர்க்கறிவோன். (௨௬)

இத்தகுபெருமானிணையடிநிழலினிரண்டறக்கலந்துநானறலே
யுத்தமயோகமென்றுமுன்னுரைத்தயோகமேயோகமவ்வியோகச்
சித்தயோகியரேயோகியரவர்கடெளிந்தவேதாந்தமேமுதலா
மெத்துசாத்திரத்தினிரதமேநுகர்வார்விளங்கியகேட்டலாதிகளால், (௨௭)

பிறங்குமெய்ஞ்ஞானயோகியராமிப்பெற்றியரென்றுமெவ்விடத்து
முறங்கியமகன்கைப்பொருளெனத்தத்தமுறுவருணத்துயர்நிலையி
னறங்கிளர்தன்மந்தாங்களேயொழியினல்லதையகற்றுதல்செய்யார்
மறங்கிளர்மலங்கள்பிறர்க்கறச்செய்வார்வறிதும்யானெனதெனப்புரியார்.()

இதுதெரியாதமூடர்கண்முனியேயிறப்பொடுபிறப்பினைவிளைத்து
முதுதுயர்ப்படுக்குங்கன்மமேவிழைந்துமுற்றுறப்புரிந்துவிண்ணுதிக்
கதுவுபுன்போகஞ்சத்தியமென்றுகளித்தினிதார்ந்துணர்வழிந்து
பதியெனும்பிரமத்தியல்பறியாதுபவந்தொறும்பன்முறைசுழல்வார். (உகூ)

ஆதலிற்பிரமத்தியல்பினையறியவாதரித்தவர்கடத்தமது
மேதகுமொழுக்கம்புரிந்திறைவனுக்குவியத்தகக்கொடுத்திடினதுதா
ஞேதருஞ்சித்தசுத்தியைச்செய்தேயுயர்ந்தஞானத்தினுக்குரிய
வேதுவைத்தோற்றப்பிறப்பிறப்பினைப்பின்னெய்துறாரவர்கண்மாதவனே.()

அந்தநீகருமமாற்றுகமுனியேயறைவருஞ்சிரமத்தி
னந்தபிமானந்தனையொருகாலுநண்ணுதலின்றிவையகத்தோர்
மந்தமாகியபுல்லறிவினைவிடுத்துவழிநடந்துய்ந்திடும்பொருட்டே
யிந்தயோகத்தையெய்தவல்லாதாரியற்றிடும்யோகமுமிசைப்பாம். (ருக)

வேறு.

அட்டமூர்த்தமாயடங்கியவகிலத்துமொன்று
யொட்டிநின்றருள்பிரமத்தையுள்ளவாறுணர்ந்து
முட்டில்வையகத்துறுதொழின்மொழிபிரமத்திற்
பட்டமெய்த்தொழிலெனவதைப்பார்த்தலும்யோகம். (ருஉ)

இந்தயோகத்தையுடையவனின்னலிற்சுகத்தில்
வந்தவோகையில்வெகுளியின்வறுமையின்வாழ்வி
னந்துவான்பொருளிழவினினலிபிணியடைவி
னந்தமேவரும்போகத்தினடைவினிலிறப்பில். (ருரு)

சாரிலாபத்திலலாபத்திற்சயத்தபசயத்திற்
சேருமானத்திலமானத்திற்றெருளினின்மருளிற்
கூரும்யோகத்தின்வியோகத்திற்கோதினிற்குணத்தி
லாருமின்னனபோல்வனவனையவற்றுள்ளும். (ருச)

பல்குபுத்திரர்சத்துருமித்துருபந்து
புல்சுகுர்த்திரும்பசுமனைமுதற்பொருளிடத்தும்
பில்குசெங்கதிர்ச்சூரியன்சந்திரன்பெருநீர்
மல்குசெங்கனல்சிவஞ்சந்திமாயவன்பிரமன். (ருரு)

இந்திரன்முதற்றேவர்களியக்கர்கந்திருவர்
சிந்துமாநதிதீர்த்தங்கேத்திரஞ்செறிமனுட
ரிந்தநல்லிடத்தினுஞ்சமபுத்திவைத்தென்று
மந்தவத்துவைக்காண்குவரகத்தினும்புறத்தும் (ருகூ)

வருணமாச்சிரமத்தினைவழுவறப்புரிந்து
கருணைநாயகனுகியகணேசர்பாலந்தப்
பொருணிலாவுகன்மங்களைப்புகன்றினிதளித்தே
மருணிலாவுமஞ்ஞானத்தின்வந்துறாரவரே (ருஎ)

பாவபுண்ணியப்பயத்தினைப்பரமனுக்களித்த
தேவனற்புதங்கருதியசெல்வரேபொறியின்
மேவலற்றறுபந்தமாகியவினைநீங்கித்
தாவிலின்பமாகியதனிப்பரத்தினைச்சார்வார் (உஅ)

உள்ளமைம்பொறிவழிவிடயத்திடையுறுங்காற்
றெள்ளுகின்றநற்றெய்வவாக்கியமெனுஞானத்
தெள்ளலின்றிநின்றிடவயிராக்கியமீண்டு
நள்ளவன்னதுபிரமத்திற்றிரபுத்திநன்றும் (ருகூ)

இட்டமானவைபோற்றனக்கயுதமேயீட்டி
நட்டமேயுறுமூலத்துப்பொருள்களினசையை
விட்டுமேதகுபிரமத்தின்விரவியொன்றாகப்
பட்டதாகியபுத்தியேதிரபுத்திபார்க்கில் (சo)

அனையதாகலின்வீட்டினையாதரித்தவர்கள்
வினையெலாந்தரும்விடயத்தின்மேவியபொறியை
யினைவுறுவகைமீட்டிரும்பிரமமெஞ்ஞான்று
நினைதல்வேண்டுமெய்த்தவத்திடைநின்றமாமுனியே. (சக)

மீட்டிடாதுதன்மனத்தினைவிழைபொறிவழியே
யீட்டமாகியவிடயத்தினெய்துறவிடுப்பி
ஞட்டமாயதிலழுந்திடுநாடியங்கழுந்திற்
கோட்டமேபுரிகாமமாய்க்குரோதமுமாமே. (சஉ)

அதுவுண்டாகவஞ்ஞானமுண்டாமதனாலே
பதியதாகியபிரமத்திற்படர்நினைவிறக்கு
மிதுவுண்டாகவேபிரமமெய்ஞ்ஞானமின்றாகி
வதியஞ்ஞானியாய்முன்புபோற்பிறப்பிடைவருவான். (சங)

அன்னதாகையான்மனம்பொறிவழிவிடாதடக்க
வென்னையாளுடைக்கணேசனாிருபதத்தென்றுந்
தன்னதார்வமெலாந்தரிப்பித்தலேவேண்டு
மின்னதாம்வழிபாட்டினாலிருஞ்சுகமாமே. (சச)

நதியெலாங்கடலடைவதுபோலநாடோறும்
பதியின்மாட்டுறுங்காமங்களனைத்தையும்பாய்த்து
மதியதேதிரபுத்தியானெனதெனுமயக்க
விதியிலாதமெய்ஞ்ஞானியேவீட்டினையடைவான். (சரு)

பொருவின்மாதவனேயிதுவேபுணர்பிரம
சொருபமாகியபுத்தியச்சொருபமாய்நின்றோன்
கருமம்யாதுமில்லாமலேயிருப்பன்மன்கரும
மருவிநின்றிடுஞ்சுதந்திரன்பிரமத்தைமருவான். (சசு)

மருவுமிந்தியவகுப்பினான்மாதவமுனியே
கருமயோகத்தைக்கரிசறச்செய்ததன்பயனை
யொருவுமார்வத்தையுடையவனேபரன்கமலத்
தருவமெல்லிலைநீரினொட்டான்வினையவனே. (சஎ)

அறிவதாய்நமதறிவுறுப்பிரமத்தையவாவி
நெறியினாற்பலகருமமுநிகழ்பலன்குறியா
துறுதியாற்செயல்கருமயோகங்களிவ்வியோகம்
பிறிவில்சாங்கியயோகத்தைக்காட்டுபெயரும். (சஅ)

வேறு.

தழைதருவேதாயோகஞ்சாங்கியயோகமென்ன
விழைவனவிரண்டினுள்ளும்விளங்கியவேதாவென்னும்
பிழையறுகருமயோகம்பிறங்குசாங்கியயோகத்துக்
குழைவளரேதுவற்றாற்சாங்கியயோகமேலாம். (சகூ)

சாங்கியயோகந்தன்னாற்றனைமறந்திறக்குங்காறு
நீங்குறான்கருமயோகநெறியினையுணர்ந்தோன்கன்மம்
வீங்கியபயனைநாடிவிளைப்பவன்றிருடனந்தத்
தூங்கலேகொடியபாவிதொன்மைதேராதநீரால். (ருo)

மல்கியவுயிர்கட்கெல்லாமகிழ்ச்சிவானவராலாய
தல்கியதேவர்க்கின்பமாயதெச்சங்கடம்மா
லொல்கியவெச்சம்வேதத்துதித்தனவுயர்ந்தவேத
நல்கிடப்பட்டதென்றுநசித்திடாப்பிரமந்தானே. (ருக)

ஆகையாலனையதாகியகம்புறமாஞ்சொரூபத்
தேகமாய்விரவித்துய்க்குமின்பமேயின்பமாகும்
போகமானவைகளெல்லாம்புல்லுருத்துன்பமாகு
மோகையான்மகார்களாடலுயர்ந்தவர்க்கிழிந்தவாபோல். (ருஉ)

வேறு.

உலகர்யோகத்தையொழிந்தியானெனதெனுஞ்செருக்கும்
விலகிமேதகுபிரமத்தின்விரவியொன்றாகிக்
குலவுமானந்தக்கடலிடைக்குளித்தவர்தம்மை
யலகுகாண்பரிதாங்கடலயிரலகிடினும். (ருஙு)

மடமையாற்றனைப்பிரமமென்றெண்ணியமதியோ
னுடன்விராவியபிரமத்தினுண்மையையுணரான்
கடவுளாம்பிரமத்தினுட்டனதியல்கண்டோ
னடலையாகியவெனதுயானென்பதுநவிற்றான். (ருச)

கன்மயோகமும்வியோகமுங்கரைந்தனமவற்று
ணன்மையாவதுவியோகமேநவிற்றியயோகம்
வன்மையாகியபந்தமேவளர்ப்பதுவியோகந்
தன்மையானவிஞ்ஞானமேதருவதுமுனியே. (ருரு)

மதியின்யாதனின்யாதனின்வழுவினேனதனி
னதனினேதலையடைதரானருஞ்சுகமுறுவான்
மதியின்யாதனின்யாதனின்மருவினனவனி
னதினினேதலைமருவுவானடைகுவன்றுன்பம். (ருசு)

சுருதிகன்மங்கடொகுத்திடுமிருதிகன்மங்க
ளொருவுறச்சமதங்களாலுஞற்றியப்பயனை
மருவுறாதநல்வியோகத்தின்வளரும்விஞ்ஞானங்
குருவின்சீரருளால்வருங்கோதறுமுனியே. (ருஎ)

குருவினன்மலந்துமித்துவிஞ்ஞானங்கூடாது
கருமம்யாவையும்பயன்றகக்கருதியேபுரிவார்
பொருவிலாதவிண்ணவர்களாய்ப்போகங்களுகர்ந்து
மருவுபூமியின்மறுவலும்வருவர்நற்சார்பின். (ருஅ)

கன்மநன்றுசெய்ததன்பயன்கருதவதொழிந்து
கன்மநிட்டையையுடையராய்க்கரிசெலாமறுக்குந்
தன்மைநல்கியதவநிட்டையுடையராய்த்தவறு
நன்மைமல்கியஞானநிட்டையைநணுகுவரால். (ருகூ)

ஞானநிட்டையையுடையவர்ஞானமேவடிவ
மானமெய்ப்பெரும்பிரமமேயாவர்பின்பிறவார்
வானமுட்டியதவத்தினேய்வழங்கும்யோகத்தை
யீனம்விட்டுயர்பிரமமாயிரந்தனைகேண்மோ. (சுO)

அறியுநீரதொன்றேயதுபிரமமேயதனை
யறியுஞானமேஞானமாமருந்தவமுனியே
செறிசராசரமாகியதிரளெலாமதுவே
யறிதராவுயிர்ப்பேதமும்பேசியவதுவே. (சுக)

மண்ணிற்கந்தமுநீரினிற்சுவையும்வைகழலி
னண்ணுருபமும்வளியினிற்பரிசமுநவைதீர்
விண்ணிற்சத்தமும்வேறுமவ்வவற்றினீங்காத
வுண்மையாங்குணமனைத்துமபபிரமமேயுரவோய். (௬௨)

இனையதாகியபிரமத்தையிறந்துயிர்போங்கா
ணினையின்வேறருநிலையதுவாகவேநிற்பார்
வினையின்மீட்டுறார்விண்டுவைவேதனையாதி
தனைவிராவினோர்தாங்களுமீள்குவர்சரதம். (௬௩)

தெய்வம்யாதனைச்சேர்ந்தெவர்போற்றினுமந்தத்
தெய்வமாயிருந்தவர்க்கருள்வரங்களைச்செறிக்குந்
தெய்வந்தேர்வரும்பிரமமாகியவிநாயகனே
தெய்வம்யாவையும்வழிபடுந்தேவனுமவனே. (௬௪)

வேறு.

காலம்பிரமபாவனையேகருதல்கரிசிலுபாசனையென்
றாலுமிவற்றினொடுங்கருமமாக்கல்வேண்டுமறிவுடையோர்
காலமிரண்டக்கினிச்சோதிமயமாங்கதிரோன்கதியொன்று
சாலவமிழ்தச்சோதிமயந்தானுந்திங்கட்கதியொன்று. (௬௫)

வெண்மைகருமைபக்கமெனவிளங்குமிவற்றுளடங்கியிடும்
வண்மைவளர்க்கும்பலகாலவகுப்பும்பிரமபாவனைதான்
றிண்மையுலகில்வேறின்றிச்செறிந்தொன்றனைபிரமத்தி
னுண்மையுணர்தல்கருதல்சதசத்தையுள்ளபடிமதித்தல். (௬௬)

இருவேறாகுமுபாசனைதானெழிலார்புறப்பூசனைசாலக்
கருதாநிற்குமகப்பூசையெனவேகரைந்தபுறப்பூசை
மருவார்மலர்மஞ்சனந்தூபமணித்தீபாதித்திரவியங்கொண்
டுருகாநின்றயன்பினொடுமொருங்கோட்டிறையையருச்சித்தல். (௬௭)

அகமாரகப்பூசனைபூதசுத்திபிராணாகருடணஞ்செய்
திகலார்புத்திவியாபாரமிறுத்தூததிரபத்தியிற்குருவின்
முசனல்வருமந்திரங்கணித்துமுதல்வனுருவந்தியானித்து
மிகமாமறையின்றோத்திரங்கள்விளம்பிவணங்கிவழிபடலாம். (௬௮)

புறப்பூசனையத்திரப்பூசைபொருவிலகப்பூசனைதிரமாஞ்
சிறப்பார்முனியேயாதலினாற்சிறந்ததாகுமகப்பூசை
மறப்பேரினைப்பேயிவையொழிந்துவாழவேண்டிற்காலமுத
லுறப்பூதலத்திற்கருமங்களுஞற்றும்பயனைக்கருதாதே. (௬௯)

எச்சமழலோடதிமனுநெய்யீண்டுமவுசுதியாசமுடற்
றுச்சிலறுந்தோத்திரநீத்தொடங்கும்பத்தியுபாசனைக
ணச்சுஞ்சகலதிரவியங்கணவில்காரணங்கள்சதசத்து
வெச்சன்மாணமிர்தமிவையெல்லாம்விளையும்விநாயகனே. (௭0)

அந்தவிறைவன்றிருவுருவிலாற்றுஞ்சரப்பூசனையாக
வெந்தவடிவுளகத்திருத்தியியற்றலசரபூசனையாச்
சிந்தைவிழைவிற்புரிகின்றோன்றிகழ்சண்டாளவிழிகுலத்தில்
வந்துபிறப்புள்ளவனேனுமறையோர்குலத்திலுதித்தவனாம். (௭௧)

பிறப்பிலுயர்ந்தபிராமணனாய்ப்பெரிதுமறைகள்பயின்றுணர்ந்து
சிறப்பவிருந்தானாயிடினுமேதவதேவன்றிருவடியி
லிறப்பயமிலாடியற்றாதானிழிசண்டாளகுலத்தோரு
ளறப்புத்தியையில்லாவிழிஞனவனாயினிதுமெய்யே. (௭௨)

வேறு.

சேத்திரக்கேத்திரக்கிஞ்ஞனென்றிவற்றையாய்ந்தசெம்மையனேவிநா
யகனுக்குரியனவன், சேத்திரமாவதுபூதமைந்துதன்மாத்திரையைந்துகன்ம
விந்திரியமைந்து, வாய்த்திடுஞானேந்திரியமைந்தாங்காரமனம்புத்திசேத
னமென்றிவையெண்மூன்று, மேத்தியசேத்திரக்கிஞன்றானிவற்றையாய்ந்
தவியல்பினனுமென்றறிகமுனிவரேறே. (எங)

தத்துவகாரணமானபிரகிருதிமாயைதான்மூன்றுமவைவகைதனிபாசுரி
ராட்சசியே, முத்திறமாகியவிவைதாஞ்சகலவுயிர்மாட்டுமுயங்குவனவிவற்றி
னுடைபலஞ்சின்னமிவண்டும், பத்திபுரிவியாதமுனியேநினக்குத்தொகுத்து
ப்பகருதங்கேடைவியெனப்பகர்குணந்தான்பரமா, முத்தியிதுக்கேதுவென
விருக்குமொழிந்தவைதாமூடம்வளர்பந்தத்துக்கேதுவாயிருக்கும். (எச)

பலனுரைத்தாமினித்தைவிசின்னமுரைத்திடக்கேள்பரன்மனையைவி
ழையாமைகோளுரையாடாமை, குலவுமுயிர்கொல்லாமைவெகுளாமைநன்
றிகொல்லாமைகருணையுடனிருத்தனெறியொழுக, லிலகுமுடற்காந்தியபை
யம்பொறுமைசீலமினியமொழிகொடைதவந்தானங்களுறுவாய்மை, மலர்த
லைவையகம்பெறினுநடுவுநிலைபிழையாமனவன்மையெவர்களுக்கும்வணக்கமு
றன்முதலாம். (எரு)

ஆசுரியின்சின்னங்களரவமிகவார்த்தையறைதல்பிடித்ததுதீயதாயினு
ஞ்சாதித்து, மாசுபடுமபிமானமஞ்ஞானங்கெறுவம்வளர்கோபமாதிகளாமிரா
ட்சசிக்குச்சின்ன, நேசமொடுமனைஞ்சென்றவழிச்சேறன்மோகநெட்டுமகங்
காரந்தனைமதித்துத்தருக்க, நேசிகனந்தரதேவர்வேதசாத்திரங்கடெளிந்த
பெரியோர்நிந்தையெவர்க்கும்பகையாதல். (எசு)

தன்குருவைவிடுத்தேனையோரைவழிபடுதல்சாதுக்கள்வாக்கியத்தில்வி
சுவாசமின்மை, நன்குதருமாசாரமின்மைபாசண்டர்நவிற்றுநவைவாக்கியத்
தின்விசுவாசமுண்மை, கன்மவியற்றாமைவழிபடற்குரியபெரியோர்கழல்கள்
வணங்காமையுயிர்க்கொலையாவிசாரம், வண்மையொடும்புரிகத்தனுகுதலா
திகளாமாதவனேயினித்தவங்கண்மூன்றுகும்வகுக்கின். (எஎ)

அன்னவைதாங்காயிகமேவாசிகமானதமேயாமென்பாவற்றினுட்காயி
கத்தவந்தானித்த, மன்னியிடுஞ்சுதன்மபரிபாலனஞ்செய்திடுதல்வாசிகமாந்
தவம்பிரியவசனமேயுரைத்து, நன்மைதரும்வேதசாத்திரத்தைவிரையாதுந
வையறப்பாராயணஞ்செய்திடுவதுமானதந்தான், றுன்னியவந்தக்கரணச்சு
த்தியதாய்ப்புலனிற்றுன்னுமற்பொறியைந்துமடக்குவதாமுனியே. (எஅ)

அவைமூன்றுந்தைவிமுதன்மூன்றுனுமும்மூன்றுமவற்றுட்சாத்துவித
மாந்தவநற்கன்ம, நவையில்பயன்கருதாதுசெய்வதிராசதமாய்நண்ணுவதம்பு
கழொன்றேநாடியிருங்கன்மங், தவறறவேபிறரறியப்பிரகாசமாகத்தான்புரி
தல்தாமதமாந்தவம்பிறரைவருத்திக், கவலைபுறுத்திடுந்தவமாமாதலினுற்பின்
னர்க்கரைந்தவிரண்டினுஞ்சனனமரணங்கதுவுறுமே. (எகூ)

இளர்தானமூன்றுருகுங்கேடின்மறைவிதிவாக்கியப்பிரமாணங்களினுற்
பாத்திரத்திற்றேசம், வளர்காலமறிந்தசிரத்தையிற்பிறர்க்குத்தோன்றாமர
பினிரும்பொருள்கொடுத்தெவ்வளவுகொடுத்தோமென், றுளநெகிழக்குறை
யுறுதல்சாத்துவிதத்தானமுபகாரம்புரிந்தவர்கட்குபகாரம்புரிதல், தளராது
வரும்பயனைக்குறித்தொருவர்க்களித்தல் தகவருத்தத்தொடும்புரிதலிராசத
மாந்தானம். (அ0)

காலமொடுதேசங்களின்றியபாத்திரத்திற்காமர்பொருள்பிரறியக்
கொடுத்தளித்தேனென்று, சாலவெடுத்தெடுத்துரைத்துத்தன்னைமேம்படுத்
தருமதமாந்தானமினிஞானமூன்றுகுஞ், சீலமுனியேயழிதன்மாலையவாய்ச்

செறிபலபூதங்களினும்பிரமத்தையொன்றாய்க், கோலமுறநித்தியமாய்க்கா ணலுறுஞானங்கோதற்றசாத்துவிதஞானமெனக்கூறும் (அக)

பற்பலபூதங்களினும்பிரமத்தைவேறுப்பார்த்தலிராசதஞானம்பரம்பிர மந்தன்னை, யுற்பவமாதிகளுடையவுலககாரணமாயுன்னுமற்சாத்தியமாய்ச் சத்தாகமன்ற வற்பவிடயங்களினுளொன்றாகவெண்ணுமஞ்ஞானந்தாமத ஞானங்கன்மமூன்று, பொற்புறநித்தியகன்மமாதிபயனுதிபுந்திசெயாதியற் றுவதுசாத்துவிதகன்மம். (அ௨)

மிக்ககிலேசத்தினுற்பயன்விழைவுதன்னால்வெம்பகையாலாரவாரத் தினுற்பிறவாற்றக்ககருமம்புரிதலிராசதகன்மங்கள்சார்பயனைப்பெறவிழைந் தஞ்ஞானத்தாற்றனக்கே, பொக்கமுறச்செய்துகொளுங்கன்மங்களைத் தம்புரைபடுதாமதகன்மமிவ்வாறுகுலத்தா, லொக்கவனந்தம்பலனைக்குறித் திடைவிடாமலூக்கமொடுபுரிகின்றவிராக்கதகன்மத்தோர். (அ௩)

இருபத்தெண்கோடிநரகத்தினும்வீழ்ந்தின்னலெய்தியபினகன்புவி யிற்பிறவியில்வந்திடுங்காற்குருடுமுதலியவங்கவீனராய்ச்சாதிகுலவீனராய்க் குறளாய்ப்பிறந்துகணேசர், மருமலர்ச்சேவடிப்பத்தியீனராய்மோகவலை யினராய்மூடராய்வழுவினராய்மீட்டுங்,கருதரியபாவங்கள்பலபுரிந்துநாளுங் கடும்பிணிமுண்டுடுத்துக்களித்துமிகத்தருக்கி. (அ௪)

நானேகத்தாநானேபோத்தாவீச்சுரனுநானேநானேசாத்தனறிந்தவ னுனேயென், றுனுதமொழிந்துபெருநரகத்தின்மீட்டுமெழுந்துவர்களினிப் பத்திமூன்றிராக்கதமே,தானுகுங்கன்மமாசுரிகன்மமொழிந்துதைவியெனுங் கன்மத்தையாசிரித்துக்கணேசர், வானேய்பத்திமைபுரிதல்சாத்துவிதபத்தி மற்றையதேவரைப்பணியும்வந்தனையுமதுவே. (அ௫)

இயக்கராக்கரைக்குறித்துப்பத்தியினல்வழிபாடியற்றிலிராசதபத்தி யிதுபவத்தைக்கொடுக்கு நயக்குமறைவிலக்கியகன்மங்களெலாம்புரிந்துநன் றாகத்தனதுடலேபுரந்துயிருக்குயிராம், வியக்குமருட்கணேசரையெண்ணு தலகைபூதம்வேதாளமிவைகுறித்துக்கொலையாதிபுரிந்து, முயக்கமுறும்பத்தி தாமதபத்தியிதுவேமூட்டுவதாமிருபத்தெண்கோடிநரகமுமே. (அ௬)

மொழிந்தவமாதிகளைப்புரிந்திடுங்கர்த்தர்களுமூவாகங்காரத்தைவிட் டவன்சாத்துவிதத், திழைந்தபெருங்கத்தன்சுகதுக்கத்தையுளனுயிரும்பலத் தினுசையைவைத்தவனிராசதனே, கழிந்தவறிவினனுகிப்பிறர்செல்வஞ்சால க்கண்டழுக்காறுடையவன்றாமதகத்தன்முனியே, யழிந்துவிடுஞ்சுகமூன்று துக்கமூன்றாகுமவற்றினையுமொருங்குதொகுத்தறைகுதுநன்றறிமோ. (அஎ)

சாத்துவிதசுகதுக்கமாவனதாந்தொடக்கந்தனில்விடமாய்த்துக்கத்தை த்தணப்பித்தந்தத்தி, லேத்தமுறுமமுதமாமிவைவிரதமாதியயற்றலுறுஞ்ச ன்மார்க்கத்தாமிராசதத்தின், பூத்தலுறுஞ்சுகதுக்கந்தொடக்கத்திலமிழ்தா ய்ப்பொல்லாததுன்பத்தைவளர்த்தேயந்தத்தி, னீத்தலருங்கொடுங்கால கோடிவிடமாகுநிகழ்விடயபோகங்களாலாகுமிவையே. (அஅ)

கடையானமதத்திரஞ்சுகதுக்கந்தொடங்குங்காலமுதலந்தமுறுங்கா முஞ்சுகம்போன்று, துடையாதபெருந்துக்கமாய்விளையுமிவைதாந்துன்மார் க்கத்தாற்பிறனில்விழைதன்முதற்றொழிலா, லடைவாகுமாதலினுற்சாத்து விதமுடையவன்பினனேவிநாயகனுர்சொருபத்தையடைவான், விடையாத சாத்துவிதமேவாதாரெல்லாமிக்கபலநரகினிடைமேவுவர்மாதவனே. (அகூ)

வேறு.

இன்னணந்திருமாற்கந்நாளெம்பிரானுரைத்தலோடுங்
கன்னியந்துளவமாயோன்காதலினெழுந்துதாழ்ந்து
பொன்னவிர்கொன்றைவேணிப்புண்ணியாவடியேனின்பா
லின்னுமொன்றிரக்கலுற்றேனிரங்கெனவிளங்கிவிள்வான். ()

மறைமுதலளவைதம்மால்வகுத்திதுவென்றுகாணு
நிறையுநின்னுண்மையானநிரம்பியகருணைதன்னாற்
குறைவறவுணர்த்தநாயேன்குடங்கையாமலகமென்னக்
கறையறமுழுதுந்தேர்ந்தேன்காதரமுழுதுந்தீர்ந்தேன். (௯௧)

இனியொருகுறையுமில்லேனாயினுமெம்பிரானே
முனிவருட்சீர்த்திவாய்ந்தமுதன்மைசேர்வீணையங்கைப்
புனிதன்முன்னொருநாளென்பாற்பொற்புறவந்தளானின்
றுனிவறும்விசுவரூபஞ்சொற்றனன்சிறிதுகேட்டேன். (௯௨)

அதுதனைக்கண்ணாற்காணவடியனேற்கினிதுகாட்டா
யிதுபொழுசருளாயாயினெளியனேனுய்யேனென்று
கதுமெனமீட்டுந்தாழ்ந்தான்கணேசனார்கருணைகூர்ந்து
மதுமழைபொழிந்தாலென்னவாய்மலர்ந்தருளிச்செய்வார். (௯௩)

கற்பனைகடந்தநந்தங்காமருவிசுவரூப
மற்புதமாகுமந்தவற்புதந்தன்னைச்செந்தீ
விற்பொலியூனக்கண்ணால்விண்டுவேகாணொணாது
சிற்பரஞானக்கண்ணாற்றெளிந்தவர்காணினல்லால். (௯௪)

ஞானவாள்விழியைநின்பானல்குதுங்காண்டியென்று
ஞானவாள்விழியைச்சாலநல்கினர்நவைதீரந்த
ஞானவாள்விழியைக்கொண்டேகாரணனினிதுபார்த்தான்
ஞானநாயகனார்கொண்டநயத்தகுவிசுவரூபம். (௯௫)

முடித்தலையெங்குஞ்சீர்த்தமுகமலரெங்குமின்ன
லிடித்தருள்விழிகளெங்குமிருஞ்செவியெங்குமாய்தம்
பிடித்தகைத்தலங்களெங்கும்பிறங்கிபகவான்களெங்கு
மடித்தலமெங்குமேனையவயவமனைத்துமெங்கும். (௯௬)

கொண்டருளுருவிற்சாலக்குழீஇயவுரோமந்தோறும்
மண்டமுமண்டந்தோறுமமரர்களாதியாக
விண்டிடுஞ்சருக்கமுமேழ்விதங்களுநேரேகாணக்
கண்டுபேரின்பவெள்ளக்கடலிடைப்படிந்தான்மாயன். (௯௭)

விம்மிதம்விளையாநிற்கும்விழுமியவுருவஞ்சாலச்
செம்மலாரருளப்பெற்றேன்சிறியனேனந்தோவென்று
கைம்மலர்முடியிலேறக்கட்புனல்விழியவுள்ளங்
கொம்மெனவுருகிநைந்துகுழையநின்றிதனைச்சொன்னான். (௯௮)

கனைத்துவண்டுளருங்கொன்றைக்கண்ணியநினதுவாக்கா
லனைத்துநம்முருவமென்றேயறைந்தனையதற்கோர்சான்றா
வெனைத்துநின்னுருவமானவியற்கையென்விழியிற்காட்டி
வினைத்தொடக்கறுத்தாய்நாயேனென்னெனவிளம்புகேனே. (௯௯)

அத்தனேயிந்தக்காட்சிபறிந்தவருளரோவென்று
நத்தினன்வினவிநின்றானாதனாரருளிச்செய்வார்
பத்தியையுடையராகிப்பயின்றமெய்யோகஞ்சான்ற
வுத்தமச்சனகராதியுறுதவரநேகர்மாயோய். (௧௦௦)

நம்முடைஞானக்கண்ணாணமதருளுருவங்கண்டு
மும்மலமிரியல்போகமுத்தராயின்பம்பெற்றா
ரம்மையோருகத்தினம்மையருமகவாகப்பெற்ற
ம்மர்தீர்தவத்தானல்லவரேணியனென்னுமன்னன். (௧௦௧)

நமதருட்கீதைகேட்டுநமதுருக்காட்டக்கண்டு
விமலத்தையடைந்தானந்தவெள்ளத் தட்டுளைந்துவாழ்ந்தான்
சமதமமுடையார்க்கிந்தச்சாத்திரஞ்சாற்றலென்ன
வமலனாருளிச்செய்தாராழியான்றெளியமாதோ. (௧௦௨)

அத்தகுகணேசர்கீதையாழியானுணர்ந்துநன்மை
மெத்தியம்மனன்பால்விழைவொடுங்கொடுத்தானந்த
வுத்தமன் மனுவுக்கீந்தானுவனிடமுனிவர்பல்லோர்.
பத்தியிற்கேட்டுப்பாரம்பரையினால்விளக்கினாரே. (௧௦௩)

இயம்பியகணேசகீதையிழுதையார்கேட்டாராயின்
பயந்தருபாவமுற்றும்பாற்றிவான்கதியைச்சார்வர்
நயந்தருசன்மார்க்கத்தார்நன்றுறக்கேட்டாராயிற்
சயம்புவாகியகணேசர்தாளிணைநீழல்சார்வார். (௧௦௪)

வேறு.

தூயராகியவிநாயகர்சொருபமற்றவர்பான்
மாயன்கேட்டவாறுரைத்தனமாதவவறிமோர்
தீயயாவையுஞ்செகுத்தருடேக்கவதார
மாயபன்னிரண்டையுமுறையேயறைந்தனமால். (௧௦௫)

வேறு.

இனிவருங்கலியின்வருணமேநிலையேயிவற்றினுக்கொத்ததன்மங்க
ளனைவரும்பிழைத்துப்பிறன்மனைவிழைதலாதிபாதகமெலாம்புரிந்து
துனிவுசெய்பிணிகள்வறுமைகளாதிதன்பமேயிடைவிடாதுழப்பர்
புனிதநான்மறைகணீதிகண்முழுதும்பொன்றுமப்பொழுதுவான்றேவர். (

முற்றுறுஞ்சுவாகாசுதாவட்காரமுதலியகன்மமின்மையினாற்
றுற்றிடருழந்தகணேசனார்பாதத்துணைமலரகத்துறவிருத்திப்
பற்றுறுவிழைவாலுபாசகராகிப்பபன்பெறத்தோத்திரம்புரிவார்
மற்றவர்க்கிரங்கித்தூம்பிரவண்ணரெனாமகோற்கடர்வருகுவரால். (௧௦௭)

இருகரமலருமொருகையினேந்துமிலங்குவாட்படையுங்கொய்யுளைய
கருநிறப்பரியுமுடையராயந்தக்கணேசர்பல்படைக்கலத்தோடு
பொருதிறற்சேனைநான்கையும்படைத்துப்புவனத்தினுறுமிலேச்சர்களை
யொருவருமொழியாவகையிறுத்தடர்ந்தவுறாகணுமுழுவதுமிறுப்பார். (௧௦௮)

தூம்பிரவண்ணரின்னணம்போந்துதுரிசினர்தமைத்தெறுங்காலந்
தேம்புறுகலியினந்தமேயாகுஞ்செயிறுமுனிவனேயப்பா
லோம்புறுதருமசொரூபமாய்க்கிரேதாயுகமுறுங்கணேசரிவ்வாறு
தாம்பயில்விளையாட்டளவிலமுழுதுஞ்சாற்றநம்மாயுளுமமையா. (௧௦௯)

ஆதலினுரைத்தமான்மியங்கொண்டேயமைதியிப்புராணத்துளொருசார்
மேதகுகணேசர்மூவர்கடமையும்வியத்தகப்படைத்தனரென்றுந்
தீதறவொருசாருருத்திரர்முகத்திற்றிகழ்ந்தனரென்றுமப்பரமன்
காதலினொருசார்பணிந்தனரென்றுங்கணேசர்தாம்பணிந்தனரென்றும்.

ஒருழியுமையாள்வயிற்றினிற்கணேசருதித்தனரென்றுமற்றொருசார்
சீருறுமவடன்முகத்தினிற்பிறப்புத்திகழ்ந்தனரென்றும்வெற்பிறைவி
யேருறவொருசார்பணிந்தனளென்றுமேரம்பரிறைவியையொருசார்
நாருறுமுளத்தாற்பணிந்தனரென்றுநவையறநவிற்றிடப்பட்ட. (௧௧௧)

இன்னணநாலுவிதமுறமலைவாயியம்பிடப்பட்டனவேனு
மன்னவையெல்லாம்யுகங்கள்வேற்றுமையாலரட்டர்கள்வலியின்வேற்றுமையாற்
றுன்னியவடியார்பாகவேற்றுமையாற்றோற்றலின்வியாசமாதவனே
மன்னியகணேசர்தமதியன்முதன்மைமாட்சியிற்றிறம்புதலின்றே. (௧௧௨)

இத்தகுகணேசர்மெய்ச்சரிதத்தினியல்பறியாதவரெல்லாஞ்
சத்தியமேயோவசத்தியமேயோசாற்றியவிவையெனமலைப்பா
ருத்தமகுணத்தோருள்ளனவேயென்றுணர்குவருண்மையெண்ணுதார்
மெத்தியநாலேழ்கோடிவெந்நரகும்வீழ்குவர்பன்முறைமுனியே. (௧௧௩)

அவரவர்கணேசர்தமையுபாசித்தவடைவுமற்றவரவதரித்துத்
தவவிளையாடுமொடலுமுறையேசாற்றினந்தவமுனிவரனே
யுவமையிலந்தக்கணேசரைநீயுமுபாசனைசெய்யெனவுரைத்தான்
பவமெனுங்கடலைக்கடந்தருட்கரையேபற்றியபங்கயச்செல்வன். (௧௧௪)

திருமலர்வாழ்க்கைச்செல்வனைநோக்கிச்செயிரறுமாதவவியாசன்
கருணைசெய்கணேசர்மான்மியஞ்சாலக்கரைந்தளாய்க்கென்னைசெம்மாறிங்
கிருநிலத்தடியேன்செய்திடவல்லெனனத்துதித்தெதிருறவணங்கி
யருள்விடைபெற்றுமந்திரமெண்ணியருந்தவம்புரிதரப்போந்தான். (௧௧௫)

உபதேசப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௧௰௪.



## ௮௪ - வது வியாசர்வரம்பெறுபடலம்.

கந்தமூலங்கனிதுவன்றிக்கமழ்மென்புனலுநறுநிழலு
மெந்தவிடத்துநனிதழுவியிடர்கள்சிறிதுமெய்தாமே
சிந்தைகவருமொருவனத்தைச்சேர்ந்துவியாசமாமுனிவ
னந்தவிருந்தேகாக்கரத்தையநுட்டிப்பொடுமெண்ணுபுநோற்றான். (௧)

செய்யகிரணக்கதிர்கோடிசெறிந்தாலனையதேசுருவுஞ்
செய்யவடியுஞ்செவ்வணியுஞ்செய்யதொடையுஞ்செஞ்சாந்தும்
பெய்யுங்கரடமதயானைப்பிறங்குமுகமுமுடையவரா
யையர்முனிவனெதிர்நின்றாராண்டீராறுகழிந்தன்பின். (௨)

கண்டான்பயந்தேகாக்கரத்தைக்கருத்தினழுந்திவிழிமூடிக்
கொண்டானதனையறிந்திறைவர்கோதின்முனியேயஞ்சலைநீ
தண்டாதுளத்திலெவன்றன்னைச்சாரநினைந்தாயவன்யானே
யொண்டாரணியில்விழைந்தவரமுரையாய்தருதுமெனநவின்றான். (௩)

வல்லையெழுந்துமுனிவணங்கிவலம்வந்திருகைசிரங்குவித்துச்
செல்லலகலவியாசமுனிதேவதேவனுருநோக்கிச்
சொல்லுமொழிதடுமாறத்துணைக்கணுறைப்பமயிர்பொடிப்ப
நல்லதவத்துளகமுருகநயந்துபாடியிதுசொன்னான். (௪)

காரணகாரணமானகடவுளேசிதானந்தக்கண்ணேமன்ற
வாரணமாதிகளறியாவகண்டபரிபூரணமேயடியேற்கின்று
தாரணிநின்பதகமலச்சேவைகொடுத்தருளுதலாற்றமியேனிந்தத்
தாரணியிற்றூய்மையினேன்றூய்மையினதமியேன்செய்தவமுமாதோ. (௫)

இந்தநெடும்புவியிற்றவனையிங்கேயிருந்தசராசரங்களெல்லாம்
பந்தமறுபரிசுத்தமெய்தின்மற்றினியடியேன்பரிவுதீரப்
புந்திமயக்கினைநீக்கினதபதாம்புயத்தன்புபுணர்த்திஞானந்
தந்தொருநீபிரசன்னமாய்த்தமியேனுளப்போதிற்றங்கல்வேண்டும். (௬)

புராணமவைபதினெட்டும்புகலுமொருவல்லமையான்புணர்தல்வேண்டும்
விராவியநின்றோத்திரத்தினெவ்வாறுபேரன்புமேவுமவ்வா
றராவணிந்தசடைமுடியாயடியேற்குச்சத்திபிகவளித்தல்வேண்டும்
பராவியவென்வினையகற்றிமெய்ஞ்ஞானம்பாலித்தல்வேண்டுமென்றான். (௭)

கேட்டருளிவிநாயகனார்கருணையினாலுரைத்தருள்வார்கிளர்ந்தபத்தி
யீட்டமுறுவியாசமுனிபிரந்தவரமுழுதுமுனக்கினிதுண்டாகு
நாட்டியநின்பெயர்க்கேற்பப்பரிசுத்தவுத்தமனாய்நனிமேம்பட்டு
வாட்டமுழுதொழித்தெவர்க்குங்குருவாகிமெய்ஞ்ஞானமல்குவாயால். (௮)

மூவாறுபுராணத்துக்கதிகாரியானதுபோன்முனிவரேறே
தாவாதபெருமைவளருபபுராணஞ்சாற்றுஞ்சத்திதன்னி
லோவாதசிற்பைமனமகங்காரத்தானம்மையுற்றேத்தாது
நீவாதபுராணமவைசொலப்புகுந்தாயதனானின்னினைவுதோற்றும். (௯)

வாக்குமிழந்தாய்பின்புமலரவனம்மான்மியத்தைவகுத்துக்கூறித்
தேக்கவதுகேட்டெம்மையநுட்டித்தாயாதலினாற்செறிந்தபாவம்
போக்கினைமற்றினிநினதுபுந்தியினுமிருந்தனைத்தும்புகலுவாமென்
றூக்கமொடுமுரைத்தருளியவனுளத்தின்வீற்றிருந்தாருலகநாதர். (௧௦)

மிக்கபெருந்தேசினனாய்வியாசமுனியுலகமெலாம்வியக்கப்பட்டுத்
தக்கவனத்திடையங்கணாலயமொன்றியற்றியதிற்றம்பிரானை
முக்கணனையைங்கரனைப்பதிட்டைபுரிந்திருமறையின்முறையிற்பூசை
பொக்கமறச்செய்துரைத்தான்புராணமவைமூவாறும்புலவர்போற்ற. (௧௧)

வியாசர்வரம்பெறுபடலமுற்றும்
ஆக திருவிருத்தம் - ௩௧௧௫.

## ௮௫ - வது சோமகாந்தன்முத்தியடைந்தபடலம்.

மலரவன்பாற்கேட்டுகந்தவிநாயகனார்மான்மியமும்வியாசனென்பான்
குலவுமருட்குரியனாம்வைசம்பாயனன்றனக்குக்கூறினன்பி
னிலவரைப்பினதுமுறையேவிளங்கியதப்புராணத்தைநினக்குச்சொன்னே
னிலகியமெய்யன்புடையசோமகாந்தாவினிநீயநுட்டிப்பாயால். (௧)

என்றுதவப்பிருகுமுனியுரைத்தருளவெழிற்சோமகாந்தனந்த
வொன்றியவாச்சிரமத்தினிருந்துபாராயணமுமுவந்துசெய்து
தன்றிருசீர்ப்பிருகுமுனிதுணையடிப்பூசையும்புரிந்துதொழுதுவந்தா
னன்றுறுமத்திறலவேந்தற்கிவ்வாறேயொருவருடனழுவிற்றன்றே. (௨)

வேறு.

மன்னவன்சோமகாந்தன்வழிபடற்கிரங்கிப்பின்பு
பன்னகமகட்டினார்த்தபராபரன்விமானமுய்த்தா
னன்னதுசோதிவெள்ளமாசைகளெட்டும்போர்ப்பத்
துன்னியகணங்களோடுதுணைந்துமண்ணிழிந்ததன்றே. (௩)

வந்திழிவிமானந்தன்னைமாதவப்பிருகுநோக்கி
வெந்திறற்சோமகாந்தன்வியத்தகவுரைத்தான்மன்னு
சுந்தரவிமானநந்தஞ்சுமுகனார்கருணைகூர்ந்து
தந்தனரிதனிலேறிச்சாரவருலகிலென்றே. (௪)

விற்பொலிதடக்கைவேந்தன்விழுத்தவன்திருமுன்சொல்வா
னிற்குணன்விசுவயோனிநிகழ்குணாதீதனாயிற்
பிற்படுகடையேன்பாங்கர்ப்பெருக்கியகருணைக்கம்மா
வற்பனேன்செய்யுங்கைம்மாறகிலத்திலொன்றுமின்றே. (௫)

அடிகளின்கருணைதன்னாலமலனாரருளும்பெற்றே
செடிகொணோய்முன்னேதீர்ந்தேன்றேவநின்வயத்தேனன்றிப்
படிமிசையெண்ணம்வேறுபற்றிலேனுரைத்தவண்ணங்
கடிதராதியல்வேனென்றுகழலிணைவணங்கிப்போற்றி. (௬)

உழுவலன்புடையனுகியுரோமமெய்பொடிப்பக்கண்ணி
னெழுகுநீரருவிபாயவுள்ளகங்கரையநின்ற
முழுவலிவேந்தைநோக்கிமொய்யொளிவிமானங்கொண்டு
வழுவறமண்ணின்மீதுவருங்கணநாதர்சொல்வார். (எ)

வேந்தனேபுராணங்கேட்டமேன்மையாற்சித்திபுத்தி
காந்தனூர்கருணைகூர்ந்துகரிசில்யோகியர்களெல்லாம்
வாய்ந்தபேரனுட்டிப்பானுமருவருந்தமதுலோகஞ்
சார்ந்துவாழ்ந்திருப்பநின்னைத்தம்மினென்றெம்மைவிட்டார். (அ)

பாக்கியமுடையாருள்ளும்பாக்கியமுடையைநீயே
யோக்கியமுடையாயிந்தவொளிமணிவிமானமீது
நீக்கமிலமைச்சரோடுநேரிழைமனைவியோடுந்
தேக்கியவுவகையுள்ளந்தேனிப்பவேறுகென்றூர். (கூ)

மீட்டுமாதவனைத்தாழ்ந்துவிழுத்தவன்பணிகள்செய்யும்
வாட்டமின்மாணுக்கர்க்கும்வந்தனைபுரிந்துபோற்றிச்
சேட்டொளிவிமானந்தாழ்ந்துதேவனூர்கணத்தைத்தாழ்ந்து
நீட்டியபுகழான்மானஞ்சேர்ந்தனன்மூவரோடும் (க0)

மழுப்படைகையிலேந்திவருங்கணநாதரோடும்
விழுப்பயனரசனேடும்விமானம்விண்ணெழுந்ததாகச்
செழுப்பயன்படைத்ததேவர்புரமெதிர்தெரியக்கண்டு
முழுப்பயன்படைப்பாள்கொண்கன்முன்னின்றுகூதன்மைசொல்வாள்.

மன்னனேயேமகண்டன்வரவுபார்த்திருக்குமன்றே
யன்னவன்றனைக்காணுமலகன்றுநாஞ்செல்வோமாறு
வின்னலுற்றழிவன்மெய்யேயெய்திநாங்காட்சிநல்கிப்
பின்னர்வான்கதியிற்செல்லும்பெற்றியேதக்கதென்றாள். (கஉ)

பார்த்திபற்குரைத்தவார்த்தைபாங்குளகணங்கள்கேட்டு
மூர்த்தியைக்கணேசன்றன்னைமுறையுளியேமகண்டன்
சீர்த்தமெய்யன்பிற்பூசைசெய்பயணணிமைத்தாக
வேர்த்ததம்மனத்திற்றூயேயிரங்கிமற்றிதனைச்சொல்லும். (கங)

நுங்கருத்ததுவேயானுனெறிநின்மணிவிமானந்தன்னைத்
தங்குநும்பதியின்பாங்கர்ச்சார்த்துதுமேமகண்டற்
கங்குளமகிழ்ச்சிசெய்மினம்மையப்பனுமானீர்கள்
பங்கமில்கதியிற்பின்புபடர்குதுமென்றுகூறி. (கச)

பொழிகதிர்விமானந்தேவபுரத்தினுத்தரத்தினுய்த்துக்
கழிபெருமகிழ்ச்சிபூத்துக்காவலனுடங்குவைகும்
பழிதுபுமமைச்சர்தம்மைப்பதியிடைவிடுப்பவன்னோ
ரிழிவருமேமகண்டனிருந்துழியெய்தினூரே. (கரு)

வணங்கினர்வணங்கினூரைமன்னவகுமாரன்கையாற்
குணங்கொடுதொழுதுபாங்கர்க்குறுகிநின்றிருப்பச்செய்துள்
ளிணங்கியகவலையோடென்னிருமுதுகுரவரெங்கே
யுணங்கினரோவுய்ந்தாரோவுரைமின்களமைச்சரென்றான். (கசு)

கவலையிற்றளையேல்வையங்காவல்செய்பிறைவாவாசக்
குவலயம்வென்றவாட்கட்கோற்றொடியம்மையோடு
சவலையிலாதநெஞ்சத்தராபதிதந்தைசெந்தேன்
றுவலைசெய்கானினுய்ந்துசுரரெனவிளங்கினூரே. (கஎ)

உய்ந்தவாறுரைப்பக்கேளாயோங்குமிந்நகரநீங்கி
ணைந்துகானகத்திற்சென்றுநாள்பலகழிக்கும்வேலை
யைந்துவான்பொறியும்வென்றவருந்தவப்பிருகுதன்னால்
வெந்தநோய்முழுதுநீங்கிவிநாயகபுராணங்கேட்டார். (கஅ)

அத்தகுபுராணக்கேள்விக்கைங்கரனிரங்கியுய்த்த
வித்தகவிமானமேறிவிண்ணெழும்போதுமன்னி
யுத்தமநின்னைக்காணவூர்ப்புறந்தடுத்தாராங்கே
வைத்தவென்மன்னுபோதும்வருகெனவழைத்துச்சென்றார். (கசு)

வந்தமந்திரிகளோடும்வைகுமந்திரிகளோடுஞ்
சுந்தரவேமகண்டன்றனைந்தனனேகலோடு
நந்தியகவலைநீங்கிநல்லநாகரிகர்தாமுங்
கந்தடுகளிநல்யானைக்கணமெனவுடன்சென்றாரே. (உ0)

அண்மையினடுத்தமைந்தன்றன்னையவ்விமானம்வைகு
மொண்மையிற்கணங்கணோக்கியுழைவளர்சோமகாந்தன்
றண்மதிமுகமுநோக்கித்தனையனும்வந்தானன்றற்
கெண்மையனுகிச்சாலவிதஞ்சொலிவருகவென்றே. (உக)

சாற்றியகணங்களோடுந்தனிமகிழ்கொண்டுமன்னன்
கோற்றொடிமனைவியோடுங்குவலயத்திறங்கிச்சார்ந்தான்
மாற்றருமதுகைமைந்தன்மலரடிவணங்கிநின்றான்
போற்றியமகனைவேந்தன்புயங்களிற்றழுவிச்சொல்வான். (உஉ)

பிருகுமாதவனால்வெய்யபெரும்பிணிநீங்கியிந்தத்
திருவெலாம்பெற்றேன்மைந்தாதெரிசனநினக்குநல்க
மருவியவிழைவாலீங்குவந்துளேனினியேரம்பர்
நிருமலவுலகஞ்சேர்வேனீயரசாள்கவென்றான். (உ௩)

தந்தையாருரைப்பக்கேட்டுத்தளர்ந்தவுள்ளத்தனுகி
மைந்தனுங்குரைப்பானுங்கள்வரவுபார்த்திருந்தேன்யான்செய்
முந்தனுங்கணேசர்பூசைமுழுப்பயப்பேற்றாலெந்தாய்
சிந்திநோய்தெய்வயாக்கைதிகழ்ந்துநீவருதல்பெற்றேன். (உச)

இனியரைக்கணமுநாயேனெந்தையைப்பிரிந்துவாழேன்
கனிவுடனெனையுநீசெல்கதியினிற்கொண்டுசெல்க
புனிதனேயென்றுனைந்துபுகன்றனனகருள்ளாரு
நனிதுயருழந்துவேந்தனற்பதம்பணிந்துசொல்வார். (உரு)

யாங்களுங்கணேசர்வைப்புக்கெய்துதுமுலகவாழ்வி
னேங்கும்வல்லிடும்பையன்றியென்சுகமிருந்ததெந்தா
யாங்குடன்கொண்டுசெல்லாதகற்றினையாயினுய்யேம்
வீங்கியவுலகவாழ்வின்விழைவெமக்கில்லையென்றார். (உசு)

மைந்தனுநகருள்ளாரும்வகுத்தசொற்கேட்டுமாழ்கி
வெந்திறற்சோமகாந்தன்விநாயகருலகினும்மைத்
தந்திடச்சுவசனல்லேன்றவப்பயன்முற்றுங்காலை
யந்தமெய்க்கதிதானுதனருளினாலடைவதென்றான். (உஎ)

இருவர்சிந்தனையுநோக்கியெழிற்கணநாதர்சொல்வார்
பொருதிறல்வேலோயைங்கைப்பூரணன்பூசையாற்றிப்
பருவநின்மைந்தனூற்றுப்பண்பினிற்சிறந்தானற்றா
லுருவளர்விமானமேறற்குரியவனையமில்லை. (உஅ)

விழைதருநகருள்ளார்க்குவிநாயகபுராணமுற்றுந்
தழைதரவுரைக்குங்காலந்தானிலையாதலாலே
பிழைதபமுழுதுங்கேட்டபெரும்பயனளிப்பதாகிக்
குழைவினையகற்றியின்பங்கொடுப்பதோர்வாய்மையுண்டால். (உகூ)

அன்னதுயாதோவென்னிலரசனேயுரைப்பக்கேளாய்
மன்னவிமுத்தத்தேழாவரணத்துங்கணேசமூர்த்தந்
துன்னியவன்றேயந்தத்தொகைபடுமைம்பத்தாறும்
பன்னுதுங்கேட்கவிந்தப்பதியெனவவற்றைச்சொல்வார். (௩0)

வேறு.

முந்தியவாவரணத்துடுண்டிவிநாயகரேமொழிதுற்கைவிநாயகரேயர்க்கவிநாயகரே, நந்துமருட்பிரசன்னவிநாயகரேயென்றுநவையறுக்கும்வீமவிநாயகர்பிறவிதுமிக்குஞ், சந்திரவிநாயகரென்றறுவருளரிரண்டிற்றருசித்தருபவிநாயகரிலம்போதரரே, யந்தமில்சீர்கூபதந்தர்சலாடர்குலப்பிரீடரருள்சதுர்த்தர்பஞ்சமரேமுண்டவிநாயகரே. (௩க)

இகவில்சமுசிகர்விடங்கர்நிசவிநாயகரேயிராசபுத்திரவிநாயகர்பிரணவரே, பகருமுபதாபரெனும்பதினல்வர்மூன்றிற்பதமருள்வக்கிரதுண்டர்பரவேகதந்தர், திகழுந்திரிமுகர்பஞ்சமுகரெயேரம்பர்செயிர்தபுவிக்கினராசர்வரதவிநாயகர்வென், மகிழ்செயுமோதகப்பிரியரெனுமெண்மர்நான்காவரணத்தேகோபயப்பிரதாசிங்கமுகரே. (௩உ)

வருகூறநிதாடசாகிப்பிரப்பிரதர்வரமருள்சிந்தாமணிதர்தவத்தர்பீசண்டி, முருகிதழிமலரணிந்தமுடிமயூரத்துவரண்டமுண்டரிவரெண்மரேயைந்தின்மணிகரணர், திருகறுமாசரசிருட்டிவிநாயகரேயியக்கசேவிதராகியகெசகர்ணவிநாயகரே, வெருளறுக்குங்கண்டாவிநாயகரேவரங்கள்வீசுசுமங்களரேமந்திரரிவர்களறுவர். (௩௩)

ஆறின்மோதகர்சுமுகர்துன்முகரேகணப்ரபர்விநாயகரேயாக்கினைவிநாயகரே, வீறுவளர்துவாரவிநாயகரவிமுத்தவிநாயகரென்றிவரெண்மரெழிலாருதா, தேறியபாகிரதவிநாயகரேயரிச்சந்திரவிநாயகர்கபர்த்திவிநாயகரேசேர்த்தி, யேறுபேந்துவிநாயகரேசனகவிநாயகரேயிவராறுவரொருங்கைம்பத்தறுவரையுமுணர்க. (௩௪)

வேறு.

என்றிருங்கணங்கள்கூறவெனவருங்கேட்டலோடு
நன்றுறுதிவ்யமேனிநண்ணினரரசனோடு
வென்றிகொள்விமானமேறிவிநாயகருலகமெய்தி
யொன்றியசாமீபத்தையுற்றினிதிருந்தாரம்மா. (௩ரு)

களிமிகுசோமகாந்தன்கணேசர்சாரூபமெய்தி
யொளிமிகுமுலகில்வாழ்ந்தானுயர்ந்தவிப்புராணந்தன்னைத்
தெளிதரப்பத்தியுள்ளந்திகழ்தரக்கேட்டோர்க்கெல்லாம்
வளர்பெருஞ்சனனப்பீழைமரணமென்றிரண்டுமில்லை. (௩சு)

இடரில்லைவறுமையில்லையின்னனோய்சிறிதுமில்லைத்
தொடர்தருதுக்கமில்லைச்சோகமோகங்களில்லை
யடர்தரும்பாவமில்லையரிட்டங்களேதுமில்லைப்
படர்தருபகைகளில்லைபயமில்லையிடையூறில்லை. (௩எ)

மதியினைப்பருதிதன்னைவாளராத்தொடருமெல்வை
பதிகுருகேத்திரத்திற்பசும்பொன்னாயிரமாம்பாரம்
விதியுளிபாத்திரத்தின்வீசியதானபபேறு
முதிர்சினப்பெரும்போராற்றிமுடிந்தவர்பேறுமுண்டாம். (௩அ)

வாழியவெச்சந்தன்னில்வாரணமிறுதியாகத்
தாழறுபொருள்களெல்லாந்தக்கணையோடுந்தானம்
வீழுறுமனத்தினல்கும்விழுத்தருபயனுமோர்கா
லூழுறப்படிக்கின்றார்கட்குறுபயன்சிறிதுமொவ்வா. (௩௯)

கன்னிகாதானங்கோடிகாமர்கோதானங்கோடி
நன்னியமத்தினோடுநல்கியபயனுண்டாகுந்
தன்னதுகரத்தான்முற்றுமெழுதினான்றனக்குச்சாலப்
பொன்னளித்தெழுதுவித்தான்றனக்குமப்புண்ணியமாமே. (௪௦)

எழுதியபுராணம்வைகுமில்லிடைத்திருவோரொட்டுங்
குழுமுபுநடனஞ்செய்யுங்கூளிகள்பிரேதம்பேய்கள்
பழுதுசெய்கின்றபாலகிரகங்களாதிபற்றா
விழுமியகணேசர்தாமேவீற்றிருந்தினிதுகாப்பார். (௪௧)

பூசனையினிதுசெய்வோர்புந்தியினினைப்போராதித்
தேசினர்தம்மைக்காணிற்செயிருறுபதிதர்தாமுந்
தூசினைவிடுத்துச்சுத்தராய்க்கதியடைவரென்றாற்
பூசகராதியோர்க்குப்புணர்பலன்யாவர்சொல்வார். (௪௨)

அவர்களேபிரமனாதியமரரான்முனிவர்தம்மா
லுவகையிற்பூசைசெய்யப்படுவரொண்சித்தியெட்டுந்
தவவுறுமவர்க்கேகற்பத்தருநிதிகாமதேனுக்
கவர்கொடைமணியுமன்னார்கைவசப்பட்டுநிற்கும். (௪௩)

ஆகருடணமேயுச்சாடனமடர்மோகனங்கண்
மாகர்வீழ்தம்பனங்கண்மாரணமிவையுமுண்டாம்
வேகவன்வெகுளியன்னார்விளைத்திடிற்றுறக்கமாதி
போகவைப்பனைத்துமெல்லாப்புவனமுஞ்சாம்பராமே. (௪௪)

ஐங்கரன்றிருமுன்னிந்தப்புராணத்தையன்பிற்கேட்டோர்
துங்கவைம்பாதகங்கடோகையர்தம்மைக்கோவைப்
பங்கமின்மகவைக்கொல்லும்பாதகமாதிநீங்கி
மங்கலவினைகள்வாய்ந்துவான்பெறுவார்கண்மெய்யே. (௪௫)

சூத்திரன்கேட்கிற்பாவந்தொலையமூவர்களுமாவ
னேத்துபூவணிகன்கேட்கினிருவருமாவன்மன்னன்
சாத்திரமறையோனாவன்றருமறையவன்பல்போகங்
காத்திடுமமரராவன்கடவுளர்கணேசாரவார். (௪௬)

கன்மத்தினீனமுற்றகழிதகைவிழைந்துகேட்கிற்
கன்மத்தினதிகாரத்தைக்கைக்கொள்வன்கணேசற்கான
நன்மையசதுர்த்திதன்னினயந்துகேட்டவன்காமங்கள்
பன்முறைபெற்றந்தத்திற்பரகதியினிதுசார்வன். (௪௭)

எவ்வளவிப்புராணத்திருந்தனதோத்திரங்க
ளவ்வளவையுநாடோறுமன்புடன்பழிச்சுகின்றோன்
கவ்வியமலத்தினீங்கிக்கணேசனேயாவனன்னாற்
றிவ்வுலகத்திற்சாதித்திடாதகாரியங்களில்லை. (௪௮)

ஆதிதொட்டந்தங்காறுமன்பினிற்படித்துக்கேட்டுக்
காதலினன்னநல்கிக்காமருசெந்தீவேட்டு
மேதகநகர்சூழ்வித்துவிழாவயர்ந்துவக்கவல்லான்
சீதரன்வணங்கத்தேவதேவசாரூபஞ்சார்வான். (௪௯)

கன்னிகைகேட்டானல்லகணவனையடைவள்வந்தி
நன்னயப்போடுங்கேட்டாலல்வகைமலடுநீங்கி
மன்னுபுத்திரரையீன்றுவாழ்குவள்பொருள்கையில்லான்
பொன்னினைப்பெறுவன்வித்தையில்லவன்புலவனாவான். (ரு0)

எவனெவனெதனைக்காமுற்றிப்புராணத்தைக்கேட்டா
னவனவனதனைக்கைப்பெற்றமலனுருவப்பவாழ்வன்
பவமிலிப்புராணக்கேள்விப்பயத்தினாற்குருடுமூகை
கவலைசெய்செவிடுபங்குமுதலவுங்கழன்றுபோமே. (ருக)

மூவறுபுராணமுற்றுமுறைமையிற்கேட்டுளார்க்கு
மேவருபயன்களிந்தமேதகுபுராணமோர்காற்
றூவறக்கேட்டுளார்க்குச்சாருமெத்தீர்த்தமாட்டு
மோவறத்தோய்ந்துளார்க்கங்குறுபயன்றானுமுண்டாம். (ருஉ)

அயுதமாண்டொற்றைத்தாளினங்குட்டநிலத்திலூன்றிப்
பயிலுமைந்தழலினாப்பட்பண்ணுமெய்த்தவத்தின்பேறு
செயிரிலிப்புராணந்தன்னிற்றிகழுமத்தியாயம்பத்து
மயர்வறவோதுவார்க்குமருவுவதுண்மையாமே. (ருங)

எம்பிரான்சரிதமானவிதுமரணுந்தங்கேட்டுத்
தம்பொருள்வழங்குவோர்கள்சக்கரவர்த்தியாவர்
நம்பியசனனந்தொட்டுநசிப்பதுகாறுங்காசி
பம்பெழினகரின்வைகும்பயன்களுமவர்க்குண்டாமே. (ருச)

ஆயிரமாகமாதமவிர்பிரயாகந்தன்னின்
மாயிருவிதியினாடும்வரமுங்கோமதிதான்சென்று
மேயினசங்கமத்தின்விழைதகக்கோடிதானம்
பாயினபலனுமென்றும்படிப்பவர்தமக்குண்டாமே. (ருரு)

பரவுமிப்புராணந்தன்னைப்படிப்பினும்பயன்கேட்டாலுங்
கரவறப்பூசித்தாலுங்கையினாலெழுதினாலு
மிரவலர்க்கெழுதியன்போடீயினும்படிப்பித்தாலும்
விரவுறக்கேட்பித்தாலும்விழைந்துபூசிப்பித்தாலும். (ருசா)

எழுதுவித்தாலுநன்றாயெழுதுவித்தீவித்தாலும்
பழுதறப்படித்தலாதிபயின்றவர்தமக்குச்செம்பொன்
விழுமியதுகிலுமற்றும்வீசினாமுகமனாதி
தழுவினர்செயினும்பூசைசமைப்பினுமெதுசெய்தாலும். (ருஎ)

இத்தகுபணியுளொன்றையியற்றினர்தாமெல்லாரு
முத்தலைவேலுக்கஞ்சார்மொய்யொளிநேமிக்கஞ்சார்
பைத்தபாசத்துக்கஞ்சார்பருத்ததண்டத்துக்கஞ்சா
ரத்தகுபுராணந்தன்னையறிந்தவாறுரைத்திட்டேனே. (ருஅ)

பூமலிகொன்றைவேணிப்புண்ணியக்கணேசர்சீர்த்தி
தாமலிபுராணஞ்சேடன்சண்முகன்பிரமனாலு
மாமளவறிந்துகூறலாகுமோவிதுவேபோலுந்
தோமறப்பயன்களன்குந்தொகுத்தபண்டாரமம்மா. (ருகூ)

என்றுயர்சூதமேலோனியம்பலுமகிழ்ச்சிபூத்து
நன்றுநைமிசமாம்வைப்பினற்றவமுனிவரெல்லா
மன்றுதொட்டருட்கணேசரகமகிழ்புராணஞ்சால
வொன்றியவன்பிற்போற்றியுவந்துவீற்றிருந்துவாழ்ந்தார். (சா0)

திங்களையணிந்தவைங்கைச்செம்மல்பொற்சரணம்போற்றி
பங்கில்வீற்றிருந்தசித்திபுத்திதம்பதங்கள்போற்றி
யங்கவர்க்கன்புசெய்யுமடியவரடிகள்போற்றி
நங்குருநமச்சிவாயனளினபாதங்கள்போற்றி. (௬௧)

அருள்பொழிகணேசன்செய்யவடிமலர்வாழ்கவன்றன்
பொருவிலிப்புராணமோங்கிப்பொலிகவீதுணர்ந்தெல்லோரு
மருவுகபயன்களுன்குமன்னுகவுலகமெல்லாந்
திருவொடுஞ்சிறக்கவெங்குஞ்செயிரிலாசைவமென்றும். (௬௨)

வேறு.

வரசன்னவீரமுரத்திடைவிளங்கமுடியின்வயங்கவிண்ணோர்
பரசன்னநினதுதிருச்சேவடிநாயேன்சிரத்தும்பதித்தல்செய்யாய்
விரசன்னமலர்த்தடஞ்சூழ்சென்னைநகர்வீற்றிருந்தவிமலவாழ்வே
பிரசன்னவிநாயகனேயடியருளம்பிரியாதபெருமையானே. (௬௩)

திருச்சிற்றம்பலம்.

சோமகாந்தன்முத்தியடைந்தபடலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௧௮.

## லீலாகாண்டம் முற்றிற்று.

ஆகக் காண்டம் ௨-க்கு படலம்-௯௧-க்கு திருவிருத்தம்-௬௨௨௫.



இச்சித்தாரும்படிக்கவிந்நூலருள்
கச்சியப்பன்கழலிணைவாழ்க.

சுபம்! சுபம்!! சுபம்!!!



கணபதிதுணை.

# படல அட்டவணை.

